श्रीः

उभयवेदान्तग्रन्थमाला

श्रीमन्निगमान्त महादेशिक विरचितः

# ॥श्रीमद्रहस्यत्रयसारः॥

श्रीमद्रङ्गरामानुजमुनीन्द्रमहादेशिक दिव्यकटाक्षलम्भितसर्वार्थ

उत्तमूर् तिरुमलै नल्लान् चक्रवर्ति वात्स्य

श्रीमदभिनव देशिक श्रीवीरराघवाचार्यविरचित

सारविस्तराख्य द्रमिडभाषाव्याख्यासमेतः

द्वितीयो भागः

உபயவேதாந்த க்ரந்தமாலை

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்
அருளிய

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

ஸ்ரீமதபிநவதேசிக உத்தமூர்
திருமலை நல்லான் சக்ரவர்த்தி வாத்ஸ்ய
*வீரராகவார்ய மஹாதேசிகனின்*
ஸாரவிஸ்தரம் என்னும் உரையுடன்

(இரண்டாம் பாகம்)

ஸ்வாமி தேசிகனின் 750வது அப்தபூர்த்தி மஹோத்ஸவாங்க வெளியீடு
விளம்பி - மார்கழி - ச்ரவணம் (08.01.2019)

Sri Uttamur Viraraghavachariar Centenary Trust, Chennai

Rs. 500/-

ஸ்ரீ:

உபயவேதாந்த க்ரந்தமாலே

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்

அருளிச் செய்த

# ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்

[இரண்டாம் பாகம்]

ஸ்ரீமதபிநவதேசிக உத்தமூர் திருமலை நல்லான்

சக்ரவர்த்தி வாத்ஸ்ய

*வீரராகவார்ய மஹாதேசிகனின்*

'ஸாரவிஸ்தரம்' என்னும் உரையுடன்

* * * * *

UBHAYA VEDANTA GRANTHAMALA

## SRIMAD VEDANTA DESIKA'S

# SRIMAD RAHASYATRAYA SARA

**(Volume 2)**

with

**Srimad Abhinava Desika**

**Uttamur Tirumalai Nallan Chakravarthi**
**Vatsya Viraraghavacharya's**
**"Sara vistara"** commentary

* * * * *

ஸ்வாமி தேசிகனின் 750வது அப்தபூர்த்தி மஹோத்ஸவாங்க வெளியீடு

விளம்பி மார்கழி ச்ரவணம் (08.01.2019)

ஸ்ரீஉத்தமூர் வீரராகவாசார்யர் ஸெண்டினரி ட்ரஸ்ட், சென்னை

[ ரூ: 500/-

SRIMAD RAHASYATRAYA SARA

Volumes **1** & **2** : Rs. **1,000/-**

First Edition : 1980
Second Edition : 2019



*Copies can be had from*
**SRI UTTAMUR VIRARAGHAVACHARIAR CENTENARY TRUST**
7/19, Nathamuni Street, T. Nagar
Chennai - 600 017. Phone : 28156053

**DHANYAVADAMS**

*Sri Uttamur Viraraghavachariar Centenary Trust, Chennai*

*is grateful to*

*1. Suraiyur Veeravalli Sri Kannan, Bangalore*
*2. Sri K. Badree, Bangalore*
*3. Smt. Rukmani Chakravarthy, Nanganallur*

*for undertaking the sponsorship of this publication .*

*Printed at*
**Thoorigai Prints**
154, F-Block, MS Nagar
Chetpet, Chennai - 31.
Phone: 7708298673

श्रीः
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः
स्थिरीकरणभागे द्वितीये

## सिद्धोपायशोधनाधिकारः

### ஸித்தோபாயசோதநாதிகாரம். 23.

—o—o—

युगपदखिलं प्रत्यक्षेण स्वतः सततं विदन् निरवधिदयादिव्योदन्वान् अशक्यविवर्जितः ।
जलधिसुतया सार्धं देवो जगत् परिपालयन् परमपुरुषस्सिद्धोपायः प्रतीष्टभरस्सताम् ॥

---

ஸ்ரீமதே நிகமாந்த குரவே நம:
ஸித்தோபாயசோதநாதிகாரம்.

உபதிஷ்டமான தத்துவஹித புருஷார்த்தங்களில் ஸித்தோபாயமான தத்துவ விஷயத்திலும் ஸாத்யோபாயமான ப்ரபத்தி விஷயத்திலும் அதனுடைய ப்ரபாவ விஷயத்திலும் சிற்சில சங்கைகளை, இவற்றை யறிந்துள்ள சிலர் கிளப்பி யிருப்பதால் அவற்றைப் பரிஹரிக்காதபோது கீழ்க்கூறியபடி சிலர் இசையாமல் பலன் பெறுமற் போவரென்றுராய்ந்து அந்த சங்கைகளுக்குப் பரிஹாரம் செய்வதற்காக ஸித்தோபாய விஷயமாக முதலதிகாரத்தையும் ஸாத்யோபாய விஷயமாகஇரண்டாவதுஅதிகாரத்தையும் ப்ரபாவ விஷயத்திலே வ்யவஸ்த்தை ரக்ஷையென்று இரு பிரிவாக்கி இரண்டு அதிகாரங்களையும் சேர்த்து ஸ்த்திரீகரண பாகமென்கிற இரண்டாவது பாகத்தை யருளிச்செய்கிறவராய் முதலதிகாரத்தின் அர்த்தத்தை ச்லோகத்தினுல் ஸங்க்ரஹிக்கிருர் युगपदिति. परमपुरुषः—புருஷோத்தமன் सततं—எப்போதும் युगपत्—ஏககாலத்தில் अखिलं—ஒன்றுவிடாமல் எல்லாம், स्वतः—ஸ்வபாவமாகவே—காரணமின்றியே प्रत्यक्षेण विदन्—ப்ரத்யக்ஷமாகவே காண்கிறவனுய்; இது यो वेत्ति युगपत् என்ற நாதமுநிகள் ச்லோகத்தின் அர்த்தம். அது கீழே விவரிக்கப்பட்டுள்ளது. निरवधि—எல்லையற்ற दया—க்ருபைக்கு दिव्य-उदन्वान्—சிறந்த கடலாய், अशक्य विवर्जितः—தன்னுலாகாத விஷயத்தினுல் விடப்பட்டவனுய்—எதையும் தனக்கு சக்யமாக வுடையவனுய் என்றபடி; ஸர்வசக்தனென்றதாயிற்று—जलधिसुतया सार्धं கடலில் தோன்றிய திருமாமகளோடு கூட देवः—ஸ்வாமியாய் லீலாவ்யாபாரமுள்ளவனுய் जगत्—உலகை परिपालयन् நன்கு ரக்ஷிக்கிறவனுமானவன் सतां—நல்லோர்களுக்கு प्रतीष्टभरः—ஸ்வீகரிக்கப்பட்ட பாரத்தை யுடையவனுமாய் सिद्धोपायो भवति ஸித்தோபாயமாகிருன்.

ஸித்தோபாயம் ஸாத்யோபாயமென்கிற பிரிவையே இசையாமல் ஈச்வரனை ஸித்தோபாயமென்று சொல்லலாகாதென்று ஆக்ஷேபிக்கிறவனுக்கு ஸமாதாநம் இவ்வதிகாரத்தில். இவ்வாக்ஷேபத்தில் இதையும் சேர்த்துக் கொள்க உபாயமென்றுல் போதாதா; ஸித்தோபாயமென்பது எதற்காக? ஸாத்யோபாயத்தைவிட வேறு என்று தெரிவிப்பதற்காகவென்னில், ஒரு

வஸ்து இனி ஸாத்யமாயிருந்தால்=ஸாதிக்கவேண்டியதாயிருந்தால் உபாய மாகுமோ? भूतं भव्याय उपदिश्यते-सिद्धं साध्याय उपदिश्यते என்று ஸித்தத்தை உபாய மாகவும்ஸாத்யத்தை फलமாகவுமன்றோசொல்லுவது. ஆனால்உபாயம்எப்போது மிருந்தால் பலனுமெப்போதுமிருக்க வேண்டுமே, அதனால் ஒருவஸ்து முதலில் ஸாத்யமாயிருந்து ஸாதிக்கப்பட்ட பிறகு ஸித்தமாய் உபாயமாகவேண்டும். ஆக ஒன்றே ஸாத்யோபாயமும் ஸித்தோபாயமுமாகும். ஈச்வரன் ஸாத்யனுகா னுகையால் ஸித்தோபாயமாகான். அவன் ஸித்தனானாலும் அவனுடைய குணம் ஸாதிக்கப்பட்டு அந்த குணத்தோடு சேர்ந்து ஸித்தோபாயனென்னில், அவனுக்கு நீங்களிசைந்தவை सर्वज्ञत्व कारुणिकत्व सर्वशक्तित्वादिகள். இவைகள் எப்போதுமே உள. மேலும் இவை ஈச்வரனுக்குச் சொல்லவுமாகா. ஈச் வரனுக்கே அஜ்ஞாநமும் துக்கமும் இருப்பதாகத் தெரிவதால் அவனுக்கு இவை யிருக்கமாட்டா. அவன் ஸர்வஜ்ஞனுயிருந்தால் அவனுக்குச் சேத நனை ரக்ஷிக்கும்படி ஒருவர் தெரிவிப்பதென்? காருண்யமென்பது परदुःख- दुःखित्वமாகையாலே துக்கம் ஸித்தம். அதனாலேயே ஸர்வ சக்தனல்லனென்று தெரிகிறது. சக்தியும் க்ருபையுமிருக்குமானால் எல்லோருக்குமே நன்மையே செய்வானுகையால் இவ்வாறு உலகமிராதே. 'त्वद्ज्ञान शक्ति करुणासु सतीषु नैव पापं पराक्रमितुमर्हति मामकीनम्' என்று எம்பெருமானுடைய ஜ்ஞாநசக்தி கருணைகளுக்கெதிரில் என்னுடைய பாபத்திற்கு பராக்ரமமேது என்றார் அபியுக்தர். உலகில் எங்கும் பாபத்துக்கே பராக்ரமத்தைக் காண்கிறோம். இவ்வளவு துரவஸ்த்தையில் உலகமிருப்பதால் ஜ்ஞாநசக்தி கருணைகள் உள்ள வன் இல்லையென்றே தெரிகிறது. மேலும் அவன் ஒருவனே போதுமா யிருக்கப் பிராட்டி எதற்காக? உபாயத்தின் துணையாகவா? புருஷகார மாகவா? உபாயமாகக் கொண்டால் ஸர்வசக்தித்வம் உபாய ஏகத்வம் இரண்டிற்கும் விருத்தமாகும். புருஷகாரமாகக் கொண்டால் பிராட்டி சொன்னாலொழிய தெரியாதவனுக்கு ஸர்வ ஜ்ஞத்வம் எங்ஙனே? மேலும் ஸ்த்ரீபர்த்தா என்றால் ஈச்வரன் புருஷமூர்த்தியாக வேண்டும். அப்போது சரீரமிருந்தால் புண்யபாபதுக்க காமக்ரோதாதிகளுக்கு இடமாவான். மேலும் அவன் ஸ்வதந்த்ரனா, அஸ்வதந்த்ரனா. ஸர்வசக்தனென்றால் ஸ்வதந்த் ரனே, தன்னிஷ்டப்படி செய்கிறவன் ஸ்வதந்த்ரன், தானே ஸ்வதந்த்ரனைக் காப்பதாகவும், 'இன்றென்னைப் பொருளாக்கி' என்ற பாசுரம் அறிவிக் கிறது. இப்படி இவன் பரந்யாஸத்தை எதிர்பாராதிருக்க ஸாத் யோபாயமே வேண்டாவே—இத்யாதி சங்கைகளின் பரிஹாரத்தைக் கருத் திற் கொண்டு கீழ்க்கூறிய குணங்களையும் பிராட்டியையும் புருஷமூர்த்தி யையும் ஸித்தோபாயத்வத்தையும் ஸாத்யோபாயத்துடன் இந்த ச்லோக த்தில் ப்ராமாணிகமாகக் குறித்தருளினர் இந்த ஸ்த்திரீகரணபாகத்தில் [illegible]ரிக்கப்படும் சங்கைகளெல்லாம் கீழ் அர்த்தாநுசாஸநபாகத்தை யறிந்த [illegible]கதென்பதை யறிவிப்பதற்காக அவ்விரூபத்திரண்டு அதி

அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போந்த க்ஷேத்ரஜ்ஞன் **अवसरप्रतीक्ष**யான பகவத் க்ருபையாலே புரிந்து (பிரிந்து) **समीचीनशास्त्रमुख**த்தாலே **तत्त्वहितपुरुषार्थ-विशेष**ங்களைத் தெளிந்து, முமுக்ஷுவாய், **स्वाधिकारानुरूप**மாயிருப்பதொரு உபாய விசேஷத்தைப் **परिग्रहि**த்துக் **कृतकृत्य**னாய், தன் நிஷ்டையைத் தெளிந்து, அதுக்கு அநுரூபமாக இங்கிருந்த நாள் **यथाशास्त्रं निरपराध**மாகப் பண்ணும் கைங்கர்யரூப புருஷார்த்தமிருக்கும் படியும், **शरीरपातानन्तरं अर्चिरादिगति**யாலே **अप्राकृतदेश**த்திலே சென்றால் இவனுக்கு **अनवच्छिन्नभगवदनुभवपरीवाह**மாக வரும் **परिपूर्णकैङ्कर्यरूपपरमपुरुषार्थसिद्धि** இருக்கும் படியும் சொன்னோம். இவ்வர்த்தங்களில் **ज्ञातव्यतम**மான ஸித்தோபாயத்தைப் பற்றவும், ஸாத்யோபாய விஷயமாகவும் இவ் **उपायप्रभाव** விஷயமாகவும் கர்மவச்யருக்குக் கடுகத் தெளிவு பிறவாமைக்கு ஸ்வதந்த்ரனான ஸர்வேச்வரன், இவர்களுடைய பூர்வாபராதத்தாலே யிட்ட நினைப்பீடுமாறுகைக்கு ப்ரதானகாரணம் மூன்று உண்டு. அவையேவையென்னில்—"**अस्तु मे**" என்றபேக்ஷித்தால், "**अस्तु ते; तथैव सर्वं संपत्स्यते**" என்கிற திருமுகப் பாசுரமும், **सदाचार्यानुग्रह**மும், ஸத்ஸம்ப்ரதாய

---

காரார்த்தத்தையும் முதல் வாக்யத்தினாலே ஸங்க்ரஹிக்கிறார் **அநாதிகாலம்** இத்யாதியால். **போந்த**—வருகின்ற. **க்ஷேத்ரஜ்ஞன்** = பத்த ஜீவன். **அவஸர ப்ரதீக்ஷயான** அஜ்ஞாத ஸுக்ருதாதிகள் பலிக்கும் ஸமயத்தை எதிர்பார்த்திருந்த **புரிந்து**—விவேகியாகி, ராஜகுமாரன் வேடர்குலத்தினின்று போல் ஸம்ஸாரிக் கூட்டத்திலிருந்து விலகி; பிரிந்து என்ற பாடத்திலும் இதே பொருள் ஸமீசீந சாஸ்த்ரம் = சுத்த வ்யாக்யாநங்கள் கூடிய உபநிஷத் ப்ரஹ்ம ஸூத்ர—கீதாதி. தெளிந்து என்றவளவால் பரதேவதாபாரமார்த்யாதிகாரம் வரை சுருக்கப்பட்டது. இப்படி மேலும் கண்டுகொள்வது. **कृतकृत्य**னாய் என்பதற்கு இங்கிருந்த என்றவிடத்தில் இருப்பில் அந்வயம். **अनवच्छिन्न** = அபரிச்சிந்நமான, அளவற்ற; பல சங்கைகள் வருமாகிலும் இங்கு நாலு அதிகாரங்களில் ப்ரதாந சங்கைகளுக்குப் பரிஹாரமென்கிறார் இவ்வர்த்தங்களில் இதி. **ज्ञातव्यतम**மான—மிகவும் தெளிவாக அறியவேண்டியனவான; **கடுக**—விரைவில். தெளிவுக்குக் காரணம்—ஈச்வரனுடைய நினைப்பீடுமாறுகை, மாறுகைக்குக் காரணம் மூன்று, தெளிவு பிறவாமைக்கு அவன் நினைப்பிட்டிருப்பதால் அது மாறுதவரையில் தெளிவு வாராது. நினைப்பீடுமாறுகைக்கு என்றவிடத்தில் நினைப்பு ஈடுமாறுகைக்கு என்று பிரித்து, தெளிவு பிறவாமைக்கு அவன் இட்டிருக்கும் நினைப்பு—அதாவது ஸங்கல்பம் நிவ்ருத்திப்பதற்காக என்று உரைப்பர். நினைப்பு என்பதற்கு நினைவு என்றே பொருளாகும். **நினைப்பிடல்** என்பதற்கு ஆஜ்ஞை செய்தலென்ற பொருளில் ப்ராசீந ப்ரயோகமாகையால் (திருமாலை உரை) நினைப்பீடு—ஆஜ்ஞை அதாவது ஸங்கல்பம். அது மாறுகைக்கு என்றும் பொருள் கொள்ளலாம். **பிறவாமைக்கு இட்ட நினைப்பு** என்று முன்னமே இட்ட என்ற சொல் இருப்பதால் ஈடுமாறுகை யென்று சேர்த்தனர் போலும். **திருமுகப்**

ஸித்தியும். இவற்றில் सदाचार्यानुग्रहத்துக்கு வ்யாஜங்களும் இதின் फलविशेष ங்களும் पराशर.मैत्रेय.संजय.आश्वलायनादिवृत्तान्तங்களிலே கண்டுகொள்வது. ஸத்

---

பாசுரம். திரு= பிராட்டியின், முகம்= திருப்பவளத்தினின்று வந்த பாசுரம்= சொல். எம்பெருமானார் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவ மூலமான கைங்கர்ய ப்ராப்திக்காக சரணாகதி ஸித்திக்க வேண்டுமென்று अस्तु मे என்றவரையில் ப்ரார்த்தித்த போது பிராட்டி யருளிய பாசுரம் अस्तु ते இத்யாதி. உமக்கு மோக்ஷார்த்தமான புஷ்கலமான அழியவாகாத சரணாகதி உண்டாகுக. அதனாலேயே எல்லாம் ஸித்திக்குமென்று அதன் பொருள். புருஷகாரமான பிராட்டியின் இவ்வருள் இராதபோது ப்ரபத்தி யநுஷ்டிக்கவாகாது. இவள் புருஷகாரமாவதற்கு ஸதாசார்யாநுக்ரஹம் வேண்டும். அதற்கும் முன்னாக ஸத்ஸம் ப்ரதாய ஸித்தியினால் சாஸ்த்ர ஜ்ஞாநம் வந்திருந்தாலும் விசேஷமாக ஆசார்யாநுக்ரஹமிராத போது உபாய ப்ரவ்ருத்தி வாராது. ஆனாலும் திருமுகப்பாசுரத்திற்குப் பிறகு ஈச்வரனுடைய நிணட்பீடுமாறல்= அதன் பிறகு இவனுக்கு ஸித்தோபாயாதி விஷயத்தில் தெளிவு என்று சொல்லக் கூடுமோ. ஸ்த்ரீகரணபாகத்தில் சொல்லும் அர்த்தங்களெல்லாம் தெளிந்த பிறகு பிராட்டியை ஸித்தோபாயமாக அறிந்து புருஷகார ப்ரபத்தி செய்த பிறகுதானே திருமுகப்பாசுரம் பெறலாகுமென்னில்—தெளிவு இருவிதம். சாஸ்த்ரார்த்தம் தெளிந்த பிறகும் ஸதாசார்யாநுக்ரஹமிருந்தும் புருஷகார ப்ரபத்தி செய்யாமற் போனால், எம்பெருமானிடம் நெருங்க ஆகாதபடி அவனிடத்தில் சிவதோஷ க்ரஹணம் குணவிக்ரஹாதி விஷயத்தில் சங்கை எல்லாம் நீடிக்கும்படி ஈச்வரன் முன்செய்த நிக்ரஹ ஸங்கல்பத்தை ஒழிக்காமல் வைத்திருப்பான். ஆகையால் ப்ரபத்யநுஷ்டாநத்தில் ப்ரபல ப்ரவ்ருத்திக்குக் காரணமான தெளிவு பிறகேயாகும். மற்ற ஸாதாரணமான தெளிவு முன்னமே யுண்டாகும். உபாய விரோதி நிவ்ருத்தி புருஷகார ப்ரபத்தியால். சாஸ்த்ரார்த்த அஜ்ஞாந நிவ்ருத்தி ஸத்ஸம்ப்ரதாய ஸித்தியால் ஸதாசார்யாநுக்ரஹ விசேஷத்தால் ஜ்ஞாநாதிகளில் அதிக வைசத்யமும் தீவ்ர முமுக்ஷையும் என்றவாறு கொள்வது. திருமுகப்பாசுர விஷயம் கார்யத்திலிருந்தே வ்யக்தமாவதாகையால் இரண்டாவதுக்கே காரணத்தையும் பலத்தையும் அருளுகிறார் இவற்றில் இதி. பராசரர் ஸர்வ ராக்ஷஸ நாசார்த்தமாக ஸத்ரயாகத்தைச் செய்துவரும்போது ஹிதோபதேசம் கேட்டவுடனே சாந்தராய் நிறுத்த, அது கண்டு புலஸ்த்யரும் வஸிஷ்டரும் செய்த அநுக்ரஹத்தால் புராணகர்த்தாவாகும்படியான தெளிவு பெற்றார். மைத்ரேயர் பராசரரிடம் வேதாத்யயநம் முதல் மற்ற ஸர்வசாஸ்த்ரக்ரஹணம் செய்து வேதாந்தார்த்த க்ரஹணத்திற்கும் அவரை யாச்ரயித்ததால் அதன் வைசத்யத்திற்காக அவரைக் குறித்தே பராசரர் புராணம் உபதேசித்தார். ஸஞ்ஜயர் தம்மாசார்யரான வ்யாஸரிடத்தில் விசேஷபக்தியுடன் இருந்தபடியால் ஸ்ரீக்ருஷ்ணனுடைய கீதோபதேச விச்வரூபாதிகள் வ்யாஸ ப்ரஸாத

ஸம்ப்ரதாயஸித்திபாவது— தான் ஸத்த்வோத்தரனாய் सम्यग्ज्ञानனாய் सावधानனாயிருக்கும் அவஸ்த்தையிலே ख्याति.लाभ.पूजानिरपेक्षனாய் कारुण्यपरतन्त्रனான ஸதாசார்யன், ஸர்வருக்கும் ப்ரதமாசார்யனான ஸர்வேச்வரன் முதலாக உபதேச பரம்பரையாலே வந்த தத்த்வஹிதங்களை अनपेक्षितविस्तरமும் अपेक्षित-संकोचமு மில்லாதபடி

"सर्वेषामेव लोकानां पिता माता च माधवः। गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभाः॥"

என்கிற கட்டளையிலே உபதேசிக்கப் பெறுகை. बहुक्लेशமாய் बुद्धिचलन-संभावनையுண்டான சாஸ்த்ரபரிச்ரமத்தில் अनधिकृतருமாய்ப் பரமாஸ்திகருமாயிருப்பார்க்கு இவ்வுபதேசமே ப்ரதானம். மற்றுள்ளார்க்குத் தாங்கள் தெளிகைக்காகவும் குதர்க்கங்களாலே கலங்குவாரைத் தெளிவிக்கைக்காகவும் ஸமீசீந யுக்திகளோடே கேட்க ப்ராப்தம்

"आर्षं धर्मोपदेशं च वेदशास्त्राविरोधिना। यस्तर्केणानुसंधत्ते स धर्मं वेद नेतरः॥"

என்கிறபடியே இவ்வர்த்தங்களை ஸமீசீந தர்க்கங்களாலே தெளியாதவர்கள்

---

த்தாலேயே அவருக்கு ஸ்பஷ்டமாய் அநுபவத்திற்கு வந்தன. ஆச்வலாயனர் சௌநகரின் விசேஷாநுக்ரஹத்தால் ரிக்வேத ப்ரவர்த்தநம் செய்திருப்பதால் அவருடைய க்ரந்தத்திலிருந்து அநுக்ரஹ விசேஷ பலனையறிய வேண்டும். தான் ஸத்த்வோத்தரனாய் இதி. உபதேசம் பெறப் போகும் சிஷ்யனுக்கு சிஷ்ய லக்ஷணப்பூர்த்தியில்லை யானாலும் ஆசார்யனுக்கு முக்யமான அம்சங்களிராமற் போனாலும் உபதேசிக்கப்படும் விஷயம் ஸதாசார்ய பரம்பரையாக இடைவிடாமல் வராமற் போனாலும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தியில்லை. ஒரே ஆசார்யன் ஒரே ஸமயத்தில் அநேக சிஷ்யர்களுக்கு உபதேசிக்கும் போது சிலருக்குப் फल ப்ராப்தியும் சிலருக்கு அதிராமையும் சிஷ்ய குணபூர்த்தி–அபூர்த்திகளைக் கொண்டு தானே சொல்லவேண்டும். முதலிலே ஆசார்யன் விரிவான உபதேசம் செய்வதானால் கலக்கத்திற்கு விசேஷமாக அவகாசமிராது. அவ்வளவு அவகாசம் பெறுவது அரிதாகையாலே அதிக விரிவின்றி உபதேசிப்பதையே ஆசார்யர் விரும்புவர் सर्वेषां என்கிற ஆர. பர்வ 192-56 ச்லோகத்தில் பூர்வார்தத்தாலே தத்த்வமும் சரணமென்று அவனே ஹிதமாவதையும் சரண்யமென்று அவனே ப்ராப்யமாவதையும் ஸங்க்ரஹித்தார். தத்த்வ ஹிதங்களை யென்றே கீழே கூறியதால் புருஷார்த்தம் இங்குக் கூறுமலுமிருக்கலாம். என்கிற கட்டளையிலே= தத்த்வஹித புருஷார்த்தங்களை விசதமாக அறியவேண்டிய ரீதியிலே, अनधिकृतருமாய்—க்லேசத்தை ஸஹிக்கவும் புத்திக்குச் சலனம் வராமல் தடுக்கவும் சாஸ்த்ரத்தில் விசேஷ உழைப்புப் பெறவும் சக்தியில்லாதவராய் என்றபடி, மற்றுள்ளார்க்கு— அதிக்ருதராய் பரமாஸ்திகராய் இருப்பார்க்கு समीचीनतर्कங்களாலே= ஸர்வ ஆக்ஷேப பரிஹாரத்திற்கான நல்ல தர்க்கங்களாலே; தர்க்க ஜ்ஞாநம் ஆவச்யகமென்பதற்கு ப்ரமாணம் आर्षं இதி. மநுஸ்ம்ருதி 12-106. ரிஷிசப்தத்திற்கு வேதம் பொருள். வேதார்த்த

"**काणादशाक्यपाषण्डैस्त्रयीधर्मो विलोपितः**" என்கிறபடியே ஹைதுகராய் வேத விரோதிதர்க்கங்களை யிட்டு **प्रामाणिकार्थ**ங்களை அபஹரிப்பர்கள் இவ் வபஹாரம் **विभूति**யையும் **विभूतिमा**னையும் பற்ற இரண்டு வகையாயிருக்கும். அதில் **विभूतिमा**னை அபஹரிக்கையாவது—**श्रियःपति**யான ஸர்வேச்வரனை யில்லையென்னுதல், வேறொருத்தனை ஈச்வரனாகக் கட்டி ஸர்வேச்வரனை **विभूति** கோடியிலே வைத்தல் செய்கை. விபூதியை அபஹரிக்கையாவது—விபூதியை ஒரு முகத்தாலே இல்லையென்னுதல், **परतन्त्र**மாக்கித் தன்னோடு பிறரோடு புணைப்புதல் செய்கை. இவ் வபஹாரங்களில் ஏதேனுமொன்று

---

த்தையும் தர்மசாஸ்த்ராதி ஸ்ம்ருதிகளிற் சொன்ன அர்த்தத்தையும் வேதமென்கிற முக்ய சாஸ்த்ரத்திற்கு விரோதமிராத தர்க்கத்தைக் கொண்டு அறிகிறவனே வேதார்த்தத்தை யறிவான். அப்படி ஸத்தர்க்கம் கொள்ளாதவன் நன்கு தெளியானென்றது. **काणादेति. अत्रिस्मृति.** கணாதரின் வைசேஷிக சாஸ்த்ரத்தாலும் புத்த சாஸ்த்ர பாசுபத தந்த்ரங்களாலும் வேதார்த்தம் அழிக்கப்பட்டது; அவர்கள் கேவலம் ஹேதுவாதம் செய்து வேதத்திற்கு விரோதியான குதர்க்கங்களைக்கொண்டு தங்கள் மதப்ரசாரம் செய்தனர் ஸத்தர்க்கம் அறியாதார்க்கு அவை ஆகர்ஷகமாகி ப்ராமாணிகார்த்த **बाध**மேற்படுகிறது. அந்த **बाध**மே அபஹாரம். ப்ராமாணிகார்த்தமாவது—சேதநாசேதநங்கள் பகவானுக்கு நியாம்யமாய், ஆளக்கூடியவை யாகையாலே விபூதி யென்னப்படும் அவனே விபூதிமானென்பது. அவற்றில் விசேஷணத்தை மறுத்தாலும் விசேஷ்யத்தை மறுத்தாலும் அஜ்ஞாநமே, விபூதிமானுக்கு விபூதி விசேஷணமாகையாலே அதன் அபஹாரத்தை முன்னே குறித்தார். பிறகு அதை உபபாதநம் செய்யும் போது விபூதிமானை அபஹரிப்பது முதலில் விளக்கப்படுகிறது. ஏனெனில், அதீந்த்ரியமான விபூதிமானை அபஹரிப்பது ஸுலபமாகையாலும் அவனை யபஹரிப்பதே மிகவும் பாதகமாகையாலும் என்றறிக. வேறொருத்தனை = ருத்ராதிகளில் ஒருவனை. கட்டி = கல்பித்து, 'விபூதி கோடியிலே = அவனுடைய ஐச்வர்ய கோடியிலே, ஒரு முகத்தாலே; ஒன்றுமில்லை யென்றான் சூன்யவாதி; மற்ற பௌத்தர் க்ஷணிகமாக வஸ்துவை அங்கீகரித்து வெளி வஸ்து இல்லை, வெளி வஸ்து ப்ரத்யக்ஷமல்ல, ப்ரத்யக்ஷமானாலும் ஸ்த்திரமல்ல, எல்லாம் கல்பநா புத்திக்கே விஷயம் என்றனர். காணாதர் உலகைப்பரமாணு கார்யமாகக் கொண்டு ப்ரக்ருதி கார்யமாகாதென்றனர். பாசுபதர் ருத்ரனை ஸர்வேச்வரனாக்கினர். உண்டாக்கி—விபூதி உண்டென்று ஸ்தாபித்திருந்தும். ஸ்வதந்த்ரமென்னுதல் ஸாங்க்யாதி பக்ஷமாம்; தன்னோடு புணைப்புதல்—தனக்குப் பரதந்த்ரமாகச் சேர்த்துக்கொள்ளுதல்.இது ஹிரண்ய கசிபுவின்கொள்கை பிறரோடு = ஸார்வபௌமனோடு அல்லது தேவதாந்தரத்தோடு சேர்ப்பது. இப்படி யெல்லாம் அபஹாரம் **काणाद** என்கிற ச்லோகத்தில் கூறியபடி ஸத்தர்க்கம் அறியாதார்க்கு நேரும். இந்த விபரீத ஜ்ஞாநம் ஸதாசார்யோபதேசம் பெற்ற

ஸ்வரூபத்தில் **मृदुप्रज्ञனைய்** ஆத்மஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு **विपरीतसंसर्ग**த்தாலே வருமாகில், '**दत्तस्य हरणेन च**" என்கிற அபஹாரத்திலும் கொடியதாய், களவுகொண்டு கொடுத்த த்ரவ்யத்தை மீளக் களவு கொண்டாற்போலேயாம் ஆகையால் பஹுவிதங்களான **व्यामोहकारण**ங்களில் **हैतुकसंसर्ग**ம் போரப் பரிஹரணீயம். இவ்வர்த்தத்தை,

'**पाषण्डिनो विकर्मस्थान् वैडालव्रतिकान् शठान्। हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेत्॥**
"**डम्बिहैतुकपाषण्डिबकवृत्तींश्च वर्जयेत्।**", "**नासद्भिः किंचिदाचरेत्**", "**त्यज दुर्जनसंसर्गम्**"
"**वरं हुतवहज्वालापञ्जरान्तर्व्यवस्थितिः। न शौरिचिन्ताविमुखजनसंवासवैशसम्**"

**इत्यादि**களிலே ப்ரபஞ்சித்தார்கள். இந்த ஹைதுகரோட்டை **संभाषणम् मायया**ऽप-

---

வனுக்கு எப்படி **बाधक**மென்பதை யறிவிக்கிறார் இவ்வபஹாரங்களில் இதி. **ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினவன்**= தனது ஆத்ம ஸ்வரூபம் ஸ்ரீமந் நாராயணனது என்றறிந்து அறிவித்தவன். **दत्तस्य हरणेन**—என்ற தோஷத்தைக் காண்பிப்பதற்காக **समर्पणशब्द** ப்ரயோகம். இது சாண்டில்ய ஸ்ம்ருதி. **दत्तापहारदोष**த்தாலே **नृग**னென்கிற அரசன் க்ருகலாஸமானான் (க்ருகலாஸம்—ஓணான்) **போரப் பரிஹரணீயம்**— பூர்ணமாகப் பரிஹரிக்கப்பட வேண்டும். குதர்க்கவாதிகளோடு ஸம்ஸர்கத்தால் வரும் கேட்டைக் கூறினார். இது ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு **दत्तापहार**மென்கிற பாபத்திற்குக் காரணமென்பதைக்கூறிவிட்டு, இனி ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணாதவனுள்பட எல்லோருக்கும் அஜ்ஞாநாதிகள் மூலமாக **बाधक**மாகின்றதென்று அறிவிக்கப் போகிறாராய் ஹைதுகரோடு ஸம்பந்தம் வேண்டாமென்பதற்கும் பொதுவாக ப்ரமாணங்களைக் காட்டுகிறார் இவ்வர்த்தத்தை இதி. **पाषण्डिन** இதி. வி. பு-3-18-101. புருஷோத்தமனுக்குப் பரத்வத்தை யிசையாதவர் பாஷண்டிகள்; **विकर्मस्थाः**—யஜ்ஞோபவீதாதிகளை விட்டவர். **वैडालव्रतिकाः**— பூனையின் செயலையுடையவர்கள்—வஞ்சகராய் அபஹரித்து உண்பவர்கள். **हैतुकाः**—அது ஏன் இது ஏன் என்று சாஸ்த்ரத்தை நம்பாமல் ஹேதுப்ரச்நம் செய்கிறவர்கள். **बकवृत्तयः**—அறியாமல் நெருங்கினவர்களை அழிப்பவர்கள். இவர்களை வாக்கினால் கூட ஸத்கரிக்கலாகாது **डम्भि**களாவார்— **धर्मध्वज**ர்கள். தார்மிகர் போலே பிறருக்கு நடிப்பவர்கள். **डम्भि** என்கிற ச்லோகம் யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி-1-130. **नासद्भिरिति** ஆரண்யப-அஸத்துக்களோடு சேர்ந்து ஒன்றும் சேய்யேல். அஸத்துக்களாவார் ப்ரஹ்ம ஜ்ஞாநமில்லாதார். **त्यजेति** ஆரண்ய. துர்ஜநர்-ஸத்துக்களுடைய இருப்பையே ஸஹியாதவர்கள். **वर**மிதி. அக்நி ஜ்வாலைகளான கூட்டின் உள்ளே அகப்பட்டிருப்பது கூட ஸம்மதிக்கப்படலாம்; எம்பெருமானை நினைப்பதில் நோக்கற்ற ஜநங்களோடு சேர்ந்து வஸிக்கை யென்ற சித்ரவதை இசையக் கூடியதேயல்ல. இந்த வசநங்கள் பொதுவாக ஆஸ்திகர்களானவர்க்கும் செய்யும் உபதேசமாகும், இதனால் வரும் கேட்டை விளக்குகிறார் இந்த என்று. ஹைதுகரோட்டை—ஹேதுவாதம் செய்பவரோடு. கீழ்க்கூறியவிரல்லோரு

**हृतज्ञाना:**' என்கிறபடியே கண்டு மதிகெட்டானுக்கி, '**चतुर्विधा मम जना भक्ता एव हि ते श्रुता:**' என்று ஈச்வரன் நம்முடையவர்களென்னும் நாலு வகையிலும்கூடாதே ''அளிய நம் பையல்'' என்னுதபடி பண்ணி, ''**न मां दुष्कृतिनो मूढा: प्रपद्यन्ते**'' என்கிற **भगवदभिमानबाह्यवर्ग**த்திலே கோப்புண்ணப் பண்ணும். அசரண்ய சரண்யனை ஸர்வேச்வரனைச் சரணமாகப் பற்றுகிற பரமாஸ்திகனுக்குச் சிலரோடு சேர்த்தியால் **बाह्य**தை வாராதாகிலும், அவனுக்குக் கலக்கங்கள் வரவும், அதுக்கு ஸதாசார்யர்கள் பரிஹாரம் பண்ணவும் காணுநின்றோம். மஹர்ஷிகளும் ''**एकं यदि भवेच्छास्त्रं ज्ञानं निस्संशयं भवेत्। बहुत्वादिह शास्त्राणां ज्ञान-**

---

டனென்றபடி **मायेति. न मां दुष्कृतिन:** என்ற கீதையில் பாபிகளை, பரமாத்ம விஷயத்திலே அஜ்ஞாநிகளென்றும், பரத்வமறிந்து ஸௌலப்யாதிகளை யறியாத **नराधम**ரென்றும், எல்லாம் அறிந்திருந்தும் மாயாவாதிகளின் குதர்க்கத்தினாலே அறிவிழந்தவரென்றும், அறிவு அழியாமலிருந்தும் அஸூயையே உருவான அஸுரர்களென்றும் நான்குவிதமாகப் பிரித்திருக்கிறார். இதில் மூன்றாவது பாபியாகும் நிலை பாவானை யறிந்து இவர்களோடு கலந்திருப்பவருக்கு வந்திடுமென்றறிவிக்கிறார் கண்டுமதிகெட்டானுக்கி இதி. உண்மையைக் கண்ட பிறகும் மாயையினால் மதி யிழந்தவனென்ற வகுப்பிலே சேர்த்துவிடும் அஸத்ஸம்பாஷணமென்றபடி. இவர்கள் புத்தி கெட்டுச் செய்யும் ஆசங்கைகளும் இந்த அதிகார ச்லோகத்தின் உரையில் விரித்துக் கூறப்பெற்றன. **चतुर्विधा** இதி. **चतुर्विधा भजन्ते मां** என்கிற ச்லோகத்திற் சொன்னவரில் சேரவேண்டியிருக்க, அதை யிழந்தது மிகவும் கேடாகும். இங்கெடுத்த **चतुर्विधा** என்ற ச்லோகம் சாந்திபர்வம் 350. 'அளிய நம்பையல் என்னார்' என்றது (திருமாலை 37.) அபராத பரிஹாராதிகாரத்தில் உரைக்கப்பெற்றது. **கோப்பு உண்ணப்பண்ணும்—சேர்க்கை**யைப் பெறச்செய்யும். ஸாமாந்யமான ஆஸ்திகருக்கு இப்பாபத் திரளில் சேர்க்கையில் கேடு நேருமாகிலும் பரமாஸ்திகனைப்பாஹ்யகுத்ருஷ்டி மதவிலக்ஷணமான நமது ஸித்தாந்தத்தை நன்கு தெளிந்திருப்பவனுக்கு—இப்படி பாஹ்யதை வருமோ என்ன, அதற்கு உத்தரம் **अशरण्येति**, அசரண்யர்களுக்கு= ரக்ஷணத்திற்கு ஸமர்த்தன் வேறு ஒருவனுண்டென்று ஒருவரைப்பற்றாதவர்களுக்கு. சரண்யனை—ரக்ஷகனை என்றபடி. வாராதாகிலும் என்ற சொல்லால் இக்காலத்தில் எவ்வளவு படித்தும் ஸேவக வ்ருத்தி மூலமாக தேசாந்தரமும் சென்று பலவிதபாஹ்ய ஸங்கமுள்ளவர்களுக்கு பாஹ்யதையும் நேரலாமென்று குறித்ததாம்—அவ்வளவிராமற் போனாலும் புத்திக்கலக்கம் ஸுலபமாய் வரும். **एकं** இதி. **इतिहास.**.ஸமு–32. உலகில் சாஸ்த்ரம் ஒன்றேயாகில் ஐயமற்ற அறிவு நிலைக்கும். சாஸ்த்ரம் வெகுவாகையால் அறிவு பெறல் மிகவும் அரிதாமென்றதாம். ஸம்சயரூபமான ஜ்ஞாநமிருந்தாலும் பலன் பெறலாமே; உலகில் ஸம்சயப்பட்டே. க்ருஷி முதலானவை செய்து பலன் பெறுவதைப் பலவிடங்களில் காண்கிறோமே யென்ன, உத்தரம் அருளுகிறார்

**तत्त्वं सुदुर्लभम्'** என்றும். "**निस्संशयेषु सर्वेषु नित्यं वसति वै हरिः । ससंशयान् हेतुबलान् नाध्यावसति माधवः ॥**" என்றும் சொன்னார்களிறே. '**न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभा मतिः**" **इत्यादि**களும் **आत्मगुणपरिपूर्णाधिकारिविशेष** விஷயத்திலே யாகக் கடவன. ஆனபின்பு **आरुरुक्षु**க்களுக்குக் கலக்கமுண்டென்னுமிடம்—
"**श्रूयते किल गोविन्दे भक्तिमुद्वहतां नृणाम् । संसारन्यूनताभीताः त्रिदशाः परिपन्थिनः ॥**",
"**सत्यं शतेन विघ्नानां सहस्रेण तथा तपः । विघ्नायुतेन गोविन्दे नृणां भक्तिर्निवार्यते ॥**"

---

**निस्संशयेषु** இதி. **हेतुबलान्**-என்பதற்கு குயுக்தியை **बल**மாகஉடையவர்களை என்று பொருளாம் **माधवः**= திருமால் அவர்களை **न अध्यावसति**-அண்டி நிற்பதில்லை. இருந்தவர் அப்பால்விலகுகிறாரென்றபடி சாஸ்த்ரத்தில் நம்பிக்கையோடு வாக்யத்திற்கு இருவிதமான பொருள் கொண்டு ஒரு பொருளை யாதரித்து ஸம்சயத்தோடு செய்தால் பலன் பெறலாமாகிலும் குதர்க்கவாதம் செய்து சாஸ்த்ரத்திலே அவிச்வாஸமுள்ளவர்களிடம் பகவ**दनुग्रह**மில்லையாம். இப்படி பக்தர்களே வெளிஸம்ஸர்கத்தால் மதிகெட்டிருப்பாராகில் **नाशुभा मतिः** என்று சொன்னது எங்ஙனே கூடுமென்பதற்கு உத்தரம் **न** இதி. கோபமின்மை த்வேஷமின்மை கொடுக்க மனமிராமையின்மை, கெட்ட புத்தியின்மை எல்லாம் உண்டென்பது சில அதிகாரிவிஷயத்திலேயாம். அவ்வசநத்திலேயே **पुण्यानां** என்கிற விசேஷணமிருக்கிறதே, **दुष्कृति**களுக்கன்றோ இவ் விபத்து நேருகிறது. ஆனபின்பு—மஹர்ஷிகளுக்கும் கலக்கம் வருவதாலும் **नक्रोधः** என்ற வர்கயம் பூர்ணாதிகாரி விஷயமாக வேண்டியிருப்பதாலுமென்றபடி. இச்சொல் இவ் வாக்யத்திலிராமலுமிருக்கலாம். ஆருருக்ஷுக்களுக்கு= பூர்ணபக்தி பெறுவதென்ற நிலையேற விரும்புகிறவர்களுக்கு. **श्रूयते** இதி. வி. த. 2. 25. கோவிந்தனிடத்தில் பக்தியை **उद्वहतां**—பாரமாகச் சுமக்கின்ற—இது எப்படி நமக்கு வருமென்ற ப்ரயாஸைப்படுகின்ற மனிதர்களுக்கு, **त्रिदशाः**—தேவதைகள் ஸம்ஸாரத்தில் ஆள் குறையுமென்றஞ்சினவர்களாய் **परिपन्थिनः**—விரோதிகளாகிறார்களென்று **श्रूयते हि**—வேதத்தில் ஓதப்படுகிறதே, அவர்கள் விரோதிகளாகையாவது—**यस्मै देवाः प्रयच्छन्ति पुरुषाय पराभवम् । बुद्धिं तस्यापकर्षन्ति** என்கிறபடி புத்தியைக் கலக்குவதே. **श्रूयते** என்றது **बृहदारण्यकोपनिष**த்தில் 3-4-10. **यथा पशुरेवं स देवानाम्; तस्मादेषां तन्न प्रियं यदेतन् मनुष्या विद्युः** என்றதால். தமக்கு உழைக்கும் மாடு போய்விடுகிறதே என்கிற காரணத்தால் தேவதைகளுக்கு இது (மனிதர் பரமாத்மாவினிடத்தில் பக்தி செய்வது) ப்ரிய மாகிறதில்லை யென்று அதன் பொருள். **सत्यमिति वि. ध. 7-94-नृणां**—மநுஷ்யர்களுக்கு. **सत्यं**—உண்மையைச் சொல்லலென்கிற தர்மமானது நூறு விக்னத்தினாலும், **तपः**-தவமென்கிற தர்மமானது ஆயிரம் விக்னங்களாலும் கோவிந்தனிடத்தில் பக்தியானது பதினாயிரம் விக்னத்தினாலும் விலக்கப்படும். இவ்வளவால் கலங்கும் கீழ் அதிகாரிகளே பெரும்பாலுமாகையால் தெளிவு பெறவேண்டியது அவச்யமே யென்றதாம்.

நாஸ்திக்ய மூலமான கலக்கம் போவதற்குக் கீழே கூறியதே போது

ஹஸ்யாதிகளிலே ப்ரஸித்தம், அதில் முற்பட ஸித்தோபாயத்தைப் பற்ற வரும் கலக்கங்களும், அவற்றின் பரிஹாரங்களும் சொல்லுகிறோம்—

அநாதிகாலம் அநாதரித்த ஈச்வரன் இன்று ஒருத்தனை ஆதரிக்கிறது தன் ஸ்வாதந்த்ர்யமாத்ரத்தாலே யன்றோ? இங்ஙனன்றாகில், "இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தான் அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென் செய்வான்" என்று ஆழ்வார் விண்ணப்பஞ் செய்ய, ஸர்வே ச்வரன் 'சூழ் விசும்பணிமுகில் தூரியம் முழக்கின' விதொழிய வேறொரு உத்தரம் அருளிச்செய்தானோ? ஆகையால் நாம் ஒரு உபாயாநுஷ்டாநம்

---

மென்று ஈச்வரன் ஸித்தோபாயமென்கிற விஷயத்தில் அதிகார ச்லோகத்தில் சொன்ன कारुण्य-सर्वशक्तित्व-स्वामित्वलक्ष्मीपतित्वादि धर्मங்கள் மூலமாக வரும் கலக்கங் களுக்கு மட்டும் பரிஹாரங்களைக் கூறுகிறார். அதில் = ஸம்பாவிதமான கலக்கங் களில். முற்பட—साध्योपाय-तत्प्रभावविषयத்திற்கு முன்பாக. ஸித்தோபாய விஷயமான கலக்கங்கள் ஈச்வரனின் ஸ்வாதந்த்ரய காருண்ய மூலமாகவும் ஸ்வாமித்வ மூலமாகவும் ஸ்ரீபதித்வ மூலமாகவும் மூன்றுவிதமாகும்.

அவற்றில் முதல் சங்கையைக்குறிக்கிறார் அநாதீதி. அநாதரித்த = மோக்ஷ மளிக்காமல் உபேக்ஷித்த. இன்று-இந்த ஜந்மத்தில். ஸ்வாதந்த்ரயமே காரண மென்றிசையாமற்போனால் பூர்வாசார்ய வாக்யவிரோதமும் ப்ரமாண விரோத மும் ஆம். ஸ்வாதந்த்ர்யம் நீங்கலாக வேறு காரணம் கூறலாகாதென்று ஆழ்வா ரே வெளியிட்டிருக்கிறாரென்கிறார் இங்ஙன் இதி. இன்று இத்யாதி. திரு வாய் 10-8-9. இந்த ஜந்மத்திலே என்னை-முன் ஜந்மத்திற் போலவேயிருந்த என்னை. பொருளாக்கி—மயர்வறமதிநலம் பெற்றவனாக்கி, தன்னை என் னுள் வைத்தான்—தானும் என்னை விட்டு விலகாதபடித் தன்னைச் செய்து கொண்டவன், அன்று = இதற்கு முன் ஜந்மங்களிலே என்னை புறம் = வேறு விஷயங்களிலேயே போகப்புணர்த்தது-தீர்க்கமாக மண்டியிருக்கச் செய்தது என செய்வான்—எதை ஸாதிப்பதற்காக; எதற்காக என்று ஆழ்வாரின் கேள்வி. ஸர்வேச்வரனும் ஆழ்வாரிடம் பற்று மிக்குப் பரமபதமழைத்துச் செல்ல நெருங்கியபோது இவர் இவ்வாறு கேட்க அவன் இதற்கு மறுமாற்றம் அளிக்காமல் அழைத்துச்செல்வதற்கு வேண்டும் ஸந்நாஹத்தையேசெய்தான். ஸந்நாஹமாவது வாத்யகோஷமும் வழிடமைத்துச் செல்ல மர்யாதையுடன் மஹான்கள் வருவதும் பிறவும். இதை யறிவிககும் திருவாய்மொழி 10-9. சூழ் இதி சூழ்-எங்கும் பரவிய, விசும்பு-ஆகாசத்திற்கு அணி-அலங்காரமான முகில்-மேகங்கள் தூரியம்-வாத்யததை முழக்கின-ஆழ்வார் புறப்பாட்டிற்காக வாசி த்தன. இது ஒழிய—இது போனற கார்யங்கள் செய்தானே யல்லது, கேட்ட கேளவிக்கு உததரம் அளிக்கவில்லை, அதனால் பரிஹரிக்க முடியாத கேள்வி யென்று தெரிகிறது. கேள்வியின் கருத்தாவது—இப்பிறவியில் எனக்குத் தன் விஷயமான ஜ்ஞாநத்தை யளித்து இப்போதென்னை யழை த்துச் செல்லும் நிலைக்குக் கொணர்ந்தவன் இதற்கு முன்னமேயே இவ்

பண்ணுகை என்னென்பது? "நடுவே வந்துய்யக்கொள்கின்ற நாதன்" என்கிறபடியே 'அருள் புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்து' அவன் தானே ரக்ஷித்தபோது காணுமத்தனை யன்றோ? என்று சிலர் கலங்குவார்கள்.

இவர்களைத் தெளிவிக்கும்படி—ஈச்வரன் ஸ்வதந்த்ரனேயாகிலும் वैषम्य-नैर्घृण्यங்களாகிற தோஷங்கள் தனக்குத் தட்டாமைக்காக இவன்பக்கலிலே ஒரு வ்யாஜத்தை யுண்டாக்கி அத்தை அவலம்பித்துத் தான் ரக்ஷிக்கும்.

---

வாறு செய்திருக்கலாமே. இப்போது தான் நான் இதை அங்கீகரித்தேன் இப்போது தான் வேறு விஷயத்தில் பற்றற்றவனானேன் இத்யாதி காரணங்கள் கூறவாகா. இந்த நிலைகளை யெல்லாம் அவனே முன்னமே பெறுவித்திருக்கலாமே. இப்படி அவன் உபேக்ஷித்திருந்து இன்று ஸ்வீகரித்ததற்கு அவனுடைய ஸ்வாதந்த்ர்யந்தான் காரணமென்றதாம் இப்போது தான் உபாயத்தை யநுஷ்டித்தபடியால் இப்போது ஸ்வீகரித்தேனென்று அவன் சொன்னலாகாதே. அவன் இந்த உபாயாநுஷ்டாநத்தை முன்னமே செய்வித்திருக்கலாமே. அப்படி ஸ்வதந்த்ரனாகில் எப்போதுமே உபேக்ஷிக்கலாமே யென்னில், ஸ்வாதந்த்ர்யத்தோடு காருண்யமுமிருப்பதால் அவனுக்குத் தோன்றும் போது ரக்ஷிக்கிறானத்தனை. இது "நடுவே வந்து உய்யக் கொள்ளுகின்ற நாதன்" 1.7-5 என்கிற பாசுரத்தால் நன்று தெரிகிறது. நடுவேவந்து—நாம் ஸம்ஸார நோக்காயுள்ள போதே திடீரென்று தோன்றி; உய்ய—நாம் உஜ்ஜீவிக்கும்படி கொள்ளுகின்ற= அருள்புரிந்த சிந்தையினால் ஸ்வீகரிக்கின்ற நாதன்—தன் உடைமையைத் தானே காக்கும் ஸ்வாமி, அதனால் உபாயாநுஷ்டாநம் வ்யர்த்தமென்றதாம். வாக்யத்தில் என் எப்பது என்பதற்கு 'உபாயத்தை யநுஷ்டிப்பது எதற்கு' என்று பொருள்.

கேள்விக்குப் பரிஹாரம் கூறுகிறார் இவர்களை யித்யாதியால் ஈச்வர ஸ்வாதந்த்ர்யம் ஜீவனிடத்திலுள்ள வ்யாஜத்தை ஸஹகாரியாகக் கொண்டு மோக்ஷகாரணமா, வ்யாஜ நிரபேக்ஷமாகக் காரணமா என்கிற விவாதத்தில் வ்யாஜ நிரபேக்ஷமாக என்று சொன்னது ஸித்தாந்தமன்று; வ்யாஜ ஸாபேக்ஷமாகவே காரணமென்ற ஸித்தாந்த நிஷ்கர்ஷம் முதலில் செய்கிறார் ஈச்வரன் இத்யாதியால். அதன் பிறகு, அதற்கு ப்ரமாண விரோதம் என்கிற ஆசங்கையை இப்படியானால் இத்யாதியால் கூறிப் பரிஹரிக்கப் போகிறார். இங்குச் சொன்ன ஸித்தாந்த நிஷ்கர்ஷம் 'இன்றென்னை' என்கிற பாட்டின் ஈட்டுக்கும் ஸம்மதமானது ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யம் காருண்யத்துக்கு உட்படாமல் ஜீவர்களை ஸம்ஸாரிகளாக்குகிறது. சில ஸமயம் காருண்யத்தைக் கூட்டிக் கொண்டு ரக்ஷிக்கிறது. அதற்கு ஒரு நியமமில்லை. என்றுசொல்லும் பக்ஷத்தில் ஈச்வரனுக்கு வைஷம்யமும் அதாவது எல்லோரிடமும் ஸமமாக இராமல் சிலருக்கு மட்டும் நன்மைச் செய்கிறதும் சிலரை வருத்துவதால் நைர்க்ருண்யமும் அதாவது தயையின்மையும் வருமே என்று சங்கித்து வ்யாஜஸாபேக்ஷமென்றே ஈட்டிலும் சொல்லியிருக்கிறார்.

இவ்வர்த்தத்தை, "திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்னத் திருமால் வந்தென்னெஞ்சு நிறைய புகுந்தான்" என்று ஆழ்வார் தாமே யருளிச் செய்தார். இந்த வ்யாஜந்தானும் ஈச்வரன்தன்னாலே யாகில், இத்தை முன்பே யுண்டாக்காதே விட்டதென்னென்னில், இவ்வாத்மாக்களுக்கு அநாதியான கர்மப்ரவாஹங்கள் विषमविपाकसमयங்களாய்க்கொண்டு போருகையாலே ஈச்வரன் कर्मानुरूपफलप्रदனல்லாதபோது வைஷம்யதோஷம் வருகையாலே முன்பு இதுக்கு அவஸரமாயிற்றில்லை யென்னுமிடம் न्याय-

---

ஆழ்வார் திருவுள்ளமும் அதுவே என்றுத் திருவாய்மொழியின் முதற் பாசுரத்தினின்றே தெரிகிறது. அங்கே நான் திருமாலிருஞ் சோலைமலை யென்று சொன்னேன். என்ன = இப்படி நான் சொல்ல – தானிருக்குமிடத்தை நான் சொல்ல. இதை வ்யாஜமாக கொண்டு திருமாலானவன் என் நெஞ்சிற் புகுந்து நிறைந்தானென்று அவன் வ்யாஜ ஸாபேக்ஷனவதை அறிவித்திருக்கிறாரே. அந்த வ்யாஜம் நாமே செய்வதா அவன் செய்விப்பதா என்னும்போது, ஸித்தாந்தத்தில் அவன் செய்விக்காமல் ஒன்றும் கிடையாதாகையாலே, செய்விக்குமவன் அந்த வ்யாஜத்தை முன்னமே உண்டாக்கி யிருக்கலாமே என்று கேள்வி எழுகிறது. இதற்கு உத்தரம். உலகில் ஸம்ஸாரிகளுக்குள்ள ஏற்றத்தாழ்வெல்லாம் பூர்வபூர்வ கர்மாநுகுணமென்பதை பௌத்த, ஜைநர்களாகிற பாஹ்யருள்பட நிரீச்வரவாதிகளும், ஸேச்வர வாதிகளும் இசைந்திருக்கின்றனர். அதில் எந்தக் காரணத்தினாலே சிலர்க்கு வைராக்ய மோக்ஷ ப்ரவ்ருத்யாதிகள் சில நாளில் வருகின்றனவோ, அந்தக் காரணம் முன்னமே ஏன் உண்டாகக் கூடாதென்று கேட்டால் கர்மப்ரவாஹத்திற்கு விபாகஸமயம் அதாவது பலிக்க வேண்டும் ஸமயம் விஷமமாகும் = ஏகரூபமாயிராது. அதனால் முன்னமே காரணமுண்டாகவில்லை; கர்மபரிபாகம் இப்போதே ஏற்பட்டதென்று, அவ்வப்போது வரும் கார்யத்தில் காரணகல்பனை செய்ய வேண்டுமென்று நிரீச்வரவாதிகள் சொல்லும் ஸமாதாநம் போலவே ஸேச்வரவாதிகளும் சொல்லவேண்டும். அதாவது இந்த வ்யாஜத்தை முன்னமே ஏன் உண்டாக்கவில்லையென்றால், எந்தக் காரணத்தைக் கொண்டு அதை உண்டாக்க வேண்டுமோ அது ஏற்பட்ட பிறகே என்று ஸமாதாநமாம். இதன் மேல் கேள்வி—கர்மமூலமான அத்ருஷ்டத்தினுடைய ப்ரவாஹதினாலேயே கார்யங்கள் பலவிதமாக உண்டாகலாமாகையால் ஈச்வரனே வேண்டா என்ற நிரீச்வர வாதத்திற்கு, ஈச்வரனை யங்கீகரித்தவர், 'அத்ருஷ்டமானது அசேதநமாகையாலே ப்ரேரகனான சேதனன் இராமல் கார்யம் செய்ய வியலாது. அதற்காக ஈச்வரனை இசைந்து அவன் அந்தந்த வஸ்துஸ்வபாவத்தை யநுஸரித்துக் கார்யம் செய்கிறவன்' என்று உத்தரம்கூறி கர்மாவுக்குப் ப்ராதாந்யமும் ஈச்வரனுக்கு அப்ராதாந்யமும் சொல்வர்—அவ்வாறின்றி நாம் ஈச்வரனுக்கு ஸ்வாதந்த்ர்யத்தை இசைந்த ஸேச்வரவாதிகள்.

विशेष(षा?)दर्शनத்தாலே फलितम् இங்ஙனிசையாதபோது ஸர்வஸித்தாந்திகளு க்கும் இதுக்கு முன்பில்லாத மோக்ஷச்ரத்தாதிகள் இப்போது பிறக்கைக்கு அடி என்னென்றால், உத்தரம் சொல்ல விரகில்லை. अनादिकर्मप्रवाहवैचित्र्यத்தாலே என்னும் உத்தரம் ஈச்வரனை யிசைந்தார்க்கும் இசையாதார்க்கும் துல்யம். ईश्वरस्वातन्त्र्यம் ஒரு வ்யாஜத்தைக் கொண்டு அவன் நினைத்தபோதே ரக்ஷிக் கைக்கும் விலக்கவல்லாரில்லாமைக்கும் உறுப்பாம். இப்படியானல், "இன் றென்னை" என்கிற பாட்டுக்கும் இதுக்கு மூலமான வசனங்களுக்கும் நிர்

---

இப்படியிருக்க ஈச்வரன் அந்த வ்யாஜத்தை முன்னமே உண்டாக்காமை அதற்கான காரணம் அப்போதிராமையாலென்றால், ஸ்வாதந்த்ர்யமில்லை யென்றதாகுமே யென்று கேட்கலாம், ஸ்வாதந்த்ர்யமுண்டு. स्वतन्त्रः कर्ता என்கிறபடி கர்த்தாவாகவிருப்பது ஒரு ஸ்வாதந்த்ர்யம்; அதுபோல் அந்தந்தக் கர்மாவுக்கு அதது பலமாகும்; அந்தந்த வ்யாஜம் வரும் போதே அதை யளிப்பேனென்று ஸ்வதந்தரனாய் அவன் ஏற்படுத்திய படியே அவன் நடக்கிறான். யாரோ சிலர் செய்த ஏற்பாட்டை யநு ஸரித்து அவன் பலனளிப்பவனாயிருந்தாலும், அவன் फल ப்ரதாநம் பண்ணும் போது வேறொருவன் அதைத் தடுக்க முடிந்தாலும் ஸ்வாதந்தர்யத்துக்குக் கேட்டைக் கூறலாம்; அப்படியில்லையே. ஆக வ்யாஜ ஸாபேக்ஷனே யென்றது ஸித்தாந்தம். மூலவாக்யத்தில் कार्यविशेषदर्शनத்தாலே கல்பிதமென்றிருக்கிறது. அதற்கு இப்போது கார்யம் காண்கிறபடியால் இப்போதே யிதற்கும் அவஸரம்—அவகாசம்; முன்பு அவஸரமில்லை யென்று பொருளாம். இதை விட कार्यविशेषादर्शनத்தினலே என்று பாடமிருக்கலாம்.

இங்குப் பாசுர விரோத சங்கை-இப்படியானல் இத்யாதி. பாசுரத்தில்— ஈச்வரனுக்கு ஸ்வாதந்த்ர்ய மிருப்பதால் எதையும் எப்போதும் அளிக்க லாம்; எல்லாம் அவனாலே யாகிறபடியால் எக்காரணத்தையும் எப்போதும் உண்டாக்கலாம்; காரணமில்லை யென்று சொல்லலாகாதென்ற கேள்விக்குத் தக்க பரிஹாரம் ஒன்று எனக்கு அருளும்படி நான் அவனிடம் உணர் த்தல் உற்றேன்= அவனிடம் விஜ்ஞாபநம் செய்ய இழிந்திருக்கிறேனென்று தம் கேள்வியை முடித்திருக்கிறார், அவன் எதையும் இஷ்டப்பட்ட போது செய்யலாமென்று இவர் அருளியதற்கு மூலமான வசநங்களுமுண்டு. नाय- मात्मा प्रवचनेन लभ्यः...यमेवैष वृणुते तेन लभ्यः என்கிற ச்ருதி ப்ரமாணம். அது போல் இந்த விஷய கட்டத்தின் முடிவில் உதாஹரிக்கப் போகிற ईश्वर- प्रेरितो गच्छेत् स्वर्गं वा श्वभ्रमेव वा இத்யாதி வசநங்களும் மூலம். இதற்கு அவன் இவ்வாறு மறுமாற்றமளிக்கலாம், "நீர் எடுத்த ப்ரமாண வசனம் போலே, निमित्तमात्रमेवासौ सृज्यानां सर्गकर्मणि। प्रधानकारणीभूता यतो वै सृज्यशक्तयः என்றாற் போன்ற கர்மப்ராதான்ய வசனங்களுமுள. நிரீச்வரவாதிபக்ஷத்தில் எப்படி கார்யம் காண்கிறதற்கிணங்கக் காரண கல்பனையோ, அப்படி தான் ஸேச் வரவாதிக்கும். ஆக நானும் அஜ்ஞாத ஸுக்ருத. அத்வேஷ—ஆபிமுக்யாதிகளைப்

வாஹமென்னென்னில்–அது சொல்லுகிறோம்—ஈச்வரனுக்கு ஸஹஜங்களான ஸ்வாதந்த்ர்யக்ருபாரூபங்களினுடைய ப்ராதாந்யத்தாலே இவற்றுக்கு வ்யாஜபூதங்களான விசேஷகாரணங்களை அநாதரித்து, 'பண்டு என்னைப் பராங்முகனுக்குகைக்கும் இன்று என்னை அபிமுகனுக்குகைக்கும் உன் ஸ்வாதந்த்ர்யமும் க்ருபையுமொழிய வேறொரு ப்ரதாந காரணம் கண்டிலேன், எனக்குக் காட்டாதே ஸ்வாதந்த்ர்யமுள நீ கண்டதுண்டாகில் அருளிச்செய்யவேணுமென்ன, ஈச்வரன் நிருத்தர

---

படிபடியாக உண்டுபண்ணிக் கொண்டு தானிருக்கிறேன். இதற்கு முன்னமே இதை நான் செய்தால் கர்மாவை மீறியதாகும். கர்மாவை ஏற்படுத்தியதும் அதன்படி நடப்பேனென்றிருப்பதும் எனது ஸ்வாதந்த்ர்யத்தாலேயே" என்றவாறு. இப்படி அவன் சொல்லாமையால் ஈச்வரனுக்கு இம் மறு மாற்றமிஷ்டமன்று; முன் இவர் கேட்டதே தகுமென்றிருந்தான். அதனாலே தான் ஈட்டில், சீயர் பட்டரை, 'இதற்கு ஈச்வரன் சொன்ன உத்தரமென்' என்று கேட்க, அவர், 'இவர்தலையிலே ஒரு பழியை யேறிட்டு நெடு நாளிழந்த நாம் சொல்வதென்' என்று லஜ்ஜாவிஷ்டனாய்க் காலாலே தரையைக் கீறி நிற்கை யத்தனை போக்கி வேறு உத்தரமுண்டோ என்றருளிச்செய்தாரென்றவாறு. இதன் மேல் பாசுர நிர்வாஹம் தொடங்குகிறார் அது சொல்லுகிறோமென்று. ப்ராதாந்யத்தாலே= ப்ராதான்யமிருப்பது காரணமாக; அநாதரித்து= விசேஷகாரணங்கள் உண்மையிலிருந்தாலும் அவை வியாஜந்தானே என்று அவற்றைப் பொருட்படுத்தாமல். இதற்கு என்ன= என்று கேட்க வென்றதோடு அந்வயம்.

இதன் கருத்தாவது—ஈட்டில் பட்டர் அருளியதைக் கூறிய பிறகு இப்படியானால்—இந்த வியாஜத்தை முன்னமே ஈச்வரன் உண்டுபண்ணக் கூடுமானால் அப்படி செய்யாதது அவனுக்கு அவத்யமாகுமே என்று சங்கித்து வேறுவிதமாக நிர்வஹிக்க முயன்றிருப்பதை நன்குக் காணலாம். ஆகையால் ஆழ்வார் கேள்விக்கு மறுமாற்றமுண்டு; சொல்லாமைக்குக் காரணம் வேறென்றதாகிறது. இப் பக்ஷத்தில் ஆழ்வார் இம் மறுமாற்றத்தைத் தாம் அறியாமலிருந்தாரே யென்று அவரிடம் குறை யேற்படுகிறது. இனி இது மோக்ஷம் பெறும் ஸமயந்தானே; ஏன் கவலை? அடுத்த சணத்தில் உமக்கே உண்மை தெரிந்திடுமென்றறிவிப்பதற்கே முகில்தூர்யம் முழக்கினனென்ற வாறு கூறினாலும், ஆழ்வாருக்கு அறியாமையே தேறும். இனி, கேள்வி கேட்ட ஆழ்வார் பரிஹாரமும் அறிந்தேனென்றே அறிவிக்கிறாரென்னலாம், எப்படி யென்னில்—பாசுரத்தில் நான்காமடியில் அந்வயம் வேறு கொள்க. ஒன்றெனக்கு உணர்த்தலருள்செய்ய உற்றேனே என்றவாறு. இக் கேள்விக்கு எனக்கு ஓர் உத்தரம் எம்பெருமான் உணர்த்தல்= அறிவித்தலை அருள் செய்ய, உணர்த்தியருளினதால் நான் உற்றேன்= அதிலீடுபட்டேன்–கேள்வியைப் போக்கிக் கொண்டேன் என்றதாம். உணர்த்தின விதம் எதென்னில்—கீழ்க்காட்டிய மறுமாற்றமே யாகும். இது நிற்க, மூலத்தில் முன்னோரின்

ஞயிருக்கிற விருப்பாலே स्वातन्त्र्य.कृपै களினுடைய प्राधान्यத்தை நாட்டுச்சு

---

யோஜனையைக் கொண்டே கருத்து வேறு உரைக்கப்படுகிறது. அதாவது— கர்மாவுக்கு ப்ராதான்யமா, ஈச்வரனுக்கு ப்ராதான்யமா என்கிற சர்ச்சை ஈச்வரனை யிசையாதார்க்கு இல்லை, ஈச்வரனை யிசைந்த பிறகு அவனுக்கு ஸ்வாதந்த்ர்யத்தை யிசையாமை தகாது. எந்தக் காரணத்தினால் அவன் மோக்ஷமளிக்கிறானோ அதற்கு மோக்ஷ காரணமாகும்படி பெருமையே யில்லை யென்றுமோக்ஷத்தின் பெருமையைக்கண்டால் தெளியலாம் அதனால் அது வியாஜமே. அதுவும் நாமாகச் செய்வதன்று. அவன் அதைக் காரணமாக்கியவன்; அத்துடன் அதை யுண்டுபண்ணுகிறவனும் அவனே. தானே ஒன்றை உண்டு பண்ணிக் காட்டி இது உன்னிடமிருப்பதால் உனக்கு மோக்ஷமென்றான் என்றால் அவனை விட அதற்கு ப்ராதான்யம் வருமோ? அதனால் ஆழ்வார் மற்ற ஹைதுகர் போல் கர்மப்ராதான்யத்தை யநாதரித்து ஸ்வாதந்த்ர்யாதிகளுக்கு ப்ராதான்யாதிகளை யதாசாஸ்த்ரம் இசைந்து இதனையே இப்பாட்டிலறிவிக்கிறார்—அதாவது இன்றென்னைப் பொருளாக்கியவன் அன்றென்னை புறம் போகப் புணர்த்தானே; தான் வைத்த வியாஜமில்லை யென்று கொண்டு தானே. அந்த வியாஜம் அவன் வைத்தது தானே. ஸ்வாதந்த்ர்யமுள்ளவன் அதை யநாதரித்து என்னை அப்போது பொருளாக்க முடியாதா. அப்படிச் செய்யாமை என் செய்வான்—எதை ஸாதிப்பதற்காக என்ன, ஸ்வதந்த்ரனாய் நான் செய்த வரம்பை நான் விடமாட்டேன். அந்தந்த வியாஜம்வரும்போது தான் செய்வேன். இதுவும் எனக்கு ஒரு ஸ்வாதந்த்ர்யமே என்கிறான். இதனால் இப்போதுதான் கர்மப்ரவாஹக்ரமத்திலே தருணம் வாய்த்தபடியால் நான் செய்த கர்மாவிற்காக முன்னே அவன் என்னைப் புறம் புணர்த்தது நியாயமே யென்று தெளிந்தேன். கர்மாவை மறுக்கலாகாது; கர்மப்ராதான்யத்தை யாதரித்தலுமாகாது; குணமே ப்ரதானம். இப்படி நீர் தெளிந்ததே தத்துவமாமென்றே அவன் ஒன்றும் கூறாமே அவர்வார்த்தைக்கு மதிப்பு அளித்து மோக்ஷத்திற்கு விரைந்தானென்றதாயிற்று. பட்டர் அருளிச் செய்ததற்கு நாம் ப்ரபந்த ரக்ஷையில் அறிவித்த கருத்துக் கீழ் வருமாறு— திருவிருத்தம்முதலே நாயிகையின் நிலையிலே இருப்பைப்ரதானமாகக்கொண்ட ஆழ்வார் நாயகனை எம்பெருமான் மிக்க காதலுடன் நெருங்கக் கண்ட போது—வெகுநாள் பிரிந்த வியசனத்தால் அவன்மேல் பழி வைத்துப் பேசினார். காதலியின் பேச்சை மறுத்து, 'எல்லாம் உன்னிடமுள்ள குற்றத்தால்தான்' என்று காதலன் கூற முன் வருவானோ? தான் செய்தது தவறில்லை யென்று தெளிந்திருப்பானாகிலும் அதைச் சொல்லாமல் குற்றமுள்ளவன் போல் நடந்து காதலைப் பயன்படுத்துகின்றவனே ரஸிகனாவான். அந்நிலையிங்கென்று பட்டர் ரஸமாக அருளியதாகுமென்றவாறு. திருவாறாயிரப்படியில் இப்பாட்டிற்கு இவ்வளவு சர்ச்சைக்கிடமான பொருள் கூறிய பிறகு இதை விட்டு, வேறுவிதம் உரைத்ததும் காண்க—

வெளியிடுகிருர். இத்தால்—இச் சேதநனை लीलोपकरणமாக்குகைக்கு ப்ரதாந காரணம் ईश्वरस्वातन्त्र्यं; இதுக்கு ஸஹகாரிகாரணம் प्रवाहानादियान स्वतन्त्रा- प्रातिलघ्नम्. இவனை भोगोपकरणமாக்குகைக்கு ப்ரதாநகாரணம் ஈச்வரனுடைய स्वाभाविककारुण्यं; இதுக்குப் प्रतिबन्धकமான ईश्वरनिग्रहத்தை சமிப்பித்துக் கொண்டு ஸஹகாரிகாரணமென்று பேர் பெற்றது இவனுடைய सुकृतविशेष- द्वारककृपैயடியாக வந்த वशीकरणविशेषங்கள்—என்று ஈச்வரனுடைய ஸ்வபாவத்தையும் वैषम्यनैर्घृण्यங்களில்லாமையையும் बन्धमोक्षादिव्यवस्थैயையும் प्रमाणप्रतिनियत- மானபடியிலே அநுஸந்தித்து. ஸ்வதந்த்ரனுடைய க்ருபையிலே ஊன்றிப் போரவடுக்குமென்று கருத்து. निष्कृपனுடைய स्वातन्त्र्यம் बाधकம். अस्वतन्त्र னுடைய காருண்யம் परர்க்கும் அநுபகாரகமாய்த் தனக்கும் க்லேசாவஹமாயிருக்கும். ஸ்வதந்த்ரனுடைய காருண்யம் நினைத்தது முடிக்கையாலே தனக்கும் அதிரஸமாய் ஆச்ரயிப்பார்க்கெல்லாம் அன்றே अनिष्टनिवृत्तक்கும் इष्टप्राप्ति க்கும் உடலாயிருக்கும். இப்படியாகையாலே அவதாரதசையிலும் व्यसनेषु

---

அதாவது—தன்னை யென்னுள் வைத்து, என்னை விட்டுப் பிரியில் ஒரு நொடிகூடத் தரிக்க மாட்டாதிருக்கும் நீ, அநாதியாய் இவ்வளவு துன்பத்திற்கு ஆளானது எதைச் செய்வதற்காக; எப்படி தரித்திருந்தா யென்று மிகப் பரிவுடன் ஆழ்வார் கேட்டார் இத்யாதி. இங்கு முதல் யோஜனை எல்லோரும் கொண்டதே. ஆழ்வாரிடமும் அஜ்ஞானமில்லை; எம்பெருமானிடமும் குற்றமில்லை யென்பது விளங்கும்படி தக்க கருத்து உரைத்து ஸ்தாபிக்கப் பெற்றது. கீழ் வாக்யத்தில், 'வேறொரு ப்ரதான காரணம் கண்டிலேன்' என்று ப்ரதான பதப்ரயோகத்தின் கருத்தை வெளியிடுகிருர் இத்தால் இதி. இத்தால் என்பதற்கு இப்பாசுரத்தால் என்று பொருள் கூறி கீழே வெளியிடுகிருரென்றதோடு அந்வயம் கூறலாம். மேலே சேர்ப்பது ஸ்வரஸமென்னில், கருத்து என்பதோடு வாக்யம்முடிவதால் அங்கே விளங்கும் என்ற சொல் சேர்த்தோ அடுக்குமென்பதிலோ அந்வயம் கொள்க. இத்தால்— இப்படி உரைத்ததால் அல்லது வெளியிட்டதால். பேர் பெற்றது என்பதற்கு வசீகரண விசேஷங்கள் என்பதோடு அந்வயம். பக்தி ப்ரபத்திகளே வசீகரணங்கள். ஊன்றிப்போரவடுக்கும்= க்ருபையிலே ப்ராதான்யம் வைத்திருக்கத் தகும். க்ருபையுடன் ஸ்வாதந்தர்யமும் நன்மைக்குக் காரணமென்பதை உபபாதிக்கிருர் நிஷ்க்ருபனுடைய இத்யாதியால். 'க்ருபையாவது பரதுக்கதுக்கித்வம் தானே; ஆக ஸ்வதந்த்ரனுக்கும் க்லேசம் ஸித்தமாயிருக்க அஸ்வதந்த்ரனுக்கே க்லேசமென்பதென்' என்ன, ஸ்வதந்தரனுக்கு ஸுகமே யல்லது துக்கமில்லை யென்கிருர் ஸ்வதந்த்ரேதி. அதிரஸமாய்= அதிக போக்யமாய். உடலாயிருக்கும்= காரணமாயிருக்கும். துக்கித்வ மீச்வரனுக்கு ஸ்ரீமத்ராமாயணத்தில் சொல்லப்பட்டதே யென்னவருளிச் செய்கிருர் இப்படி யாகையாலே இதி. व्यसनेष्विति । ரா அ. 2. 40. மனிதர்களுக்கு வ்யஸனங்கள் நேரும்போது ராமன் அவர்களைவிட அதிகமாக துக்கமுடையனுகிருன்

मनुष्याणां भृशं भवति दुःखितः என்றிப்புடையிற் சொல்லுமவையெல்லாம் अनुग्रहविषयமாயிருப்பார் சிலரை ரஞ்ஜிப்பிக்கைக்கும் ஆஸுர ப்ரக்ருதிகளை மோஹிப்பிக்கைக்குமாக வத்தனை, இவ்வர்த்தத்தை.

"कालस्य हि च मृत्योश्च जङ्गमस्थावरस्य च ईशते भगवन् एकः सत्यमेतत् ब्रवीमि ते ॥

---

இங்கே बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते என்று ஸ்ரீராமனுக்குப் பற்பல கல்யாணகுணங்களை வர்ணிக்கும்போது பிறர் துக்கத்தைக் கண்டு துக்கப்படுவதும் ஒருகல்யாணகுணமென்கிறது. க்ருபை கல்யாணகுணமாகும். ஆக இதே கிருபையாமென்று கேள்வியாம். இப்புடையில்-இந்த ப்ரகாரத்தில் पुत्रशून्यं निजस्थानं विललाप पुनः पुनः (ரா. ஆ 60) वृक्षात् वृक्षं प्रधावन् स गिरेश्चाद्रिं वनात् वनम् । बभूव विलपन् रामः शोकपङ्कार्णवाप्लुतः (60. 11.) இத்யாதிகளைக் கொள்வது. பிறர் துக்கத்தாலே துக்கமென்பதென், அவருக்கே ஸீதையை விட்டுப் பிரிந்ததாலான துக்கம் போன்ற பல துக்கமும் சொல்லப்பட்டுள்ளன அவையெல்லாம் அவதாரத்தில் செய்த அபிநயமே; ஸீதையைப் பற்றி ஒன்றும் தெரியவில்லையே யென்றலேகிறரே—அவருக்கு அஜ்ஞானமுண்டா? அது மேலுக்கு அபிநயமே; அது போலென்னில்—அதுபோல் பரதுக்க துக்கித்வமும் அபிநயமே. இது கல்யாண குணமன்றோ என்னில், கல்யாண குணமென்றலென்ன, தனக்கு இஷ்டமான குணமென்னில்-இஷ்டமாயிருந்தால் அநுகூலமே, ப்ரதிகூலமாகாதே, ப்ரதிகூலமாகாத தெங்ஙனே துக்கமாகும். பிறரின் நன்மைக்காகிறபடியால் பிறரிடம் ப்ரீதியால் வந்தபடியால் கல்யாணமென்னில், பிராட்டி அசோக வனம் சென்றதும் பெருமாள் அவளை விட்டுப் பிரிந்திருக்க நினைத்ததும் உலகின் நன்மையில் நோக்கினாலும் நல்லோரிடம் வைத்திருந்த ப்ரீதியினாலுமேயாகையால் அந்த துக்கங்கூட, அன்னம் ஸாதிப்பதுக்குப் பாகதுக்கம் போல் கல்யாணமே. ஆனாலும் எம்பெருமானுக்கு ப்ரதிகூலமாகத் தோன்றுவதொன்று கூடாதாகையால் துக்கத்வம் ஆரோபிதம். அல்லது துக்கமே ஆரோபிதமென்னில்—அது व्यसनेषु मनुष्याणाமென்கிறவிடத்திலும் துல்யம் அபிநயத்திற்குப் பலன் என்னவெனில்—தன்னிடம் அன்புள்ளவர்களுக்குத் தான் அவர்களிடம் வைத்திருக்கும் பரிவு உலக ரீதியில் தெரிவதால் அவர்களுக்குத் தன்னிடம் ப்ரீதி வளரும். விரோதமுள்ளவர்கள் இவன் துக்கத்தைக் கண்டு, துக்கப்படுகின்ற இவனா ஈச்வரன்; இவனை இதற்கு மேல் துக்கதிற்காளாக்க வேண்டுமென்று குதூஹலிப்பார்கள்; அதனால் அவர்களுக்கு மோஹம் பெருகும். இப் பலன்களுக்காக அவன் இவ்வாறு எண்பிக்கிறானென்று ப்ரமாணமே கூறுகின்றது कालस्येत्यादि. भा. उद्यो. 67-13 காலமென்கிற வஸ்துவுக்கும், ம்ருத்யு என்று வேதம் ஓதும் ப்ரகிருதிக்கும், ஜங்கம ஸ்த்தாவர ப்ராணிகளான சேதநர்களுக்கும் பகவான் ஒருவனே ஈச்வரனாகிறான். இது உண்மை நான் சொல்வது இப்படி ஈச்வரனானாலும் பெருமை கொ ட ஸர்வகுணம் கூடிய இந்த ஸர்வஜகத்ப்ரபுவே பெலனற்ற குடியானவன்போல் ஈனச்

ईशन्नपि महायोगी सर्वस्य जगतः प्रभुः । कर्माण्यारभते कर्तुं कीनाश इव दुर्बलः ॥
तेन वञ्चयते लोकान् मायायोगेन केशवः । ये तमेव प्रपद्यन्ते न ते मुह्यन्ति मानवाः ॥",
"कृत्वा भारावतरणं पृथिव्याः पृथुलोचनः । मोहयित्वा जगत् सर्वं गतः स्वं स्थानमुत्तमम् ॥",
"मनुष्यदेहिनां चेष्टामित्येवमनुवर्तते । लीला जगत्पतेस्तस्यच्छन्दतस्संप्रवर्तते ॥"

इत्यादिகளில் மஹர்ஷிகள் அறுதியிட்டார்கள். ஆகையால் अवतारवृत्तान्तங்களிலும் दुःखाभिनयமாத்ரமேயுள்ளது; அதுதானும் க்ருபாமூலம். இது ஸ்வதந்த்ரனை

---

செயல்களைச் செய்கிறன், (மாடு மேய்த்தான், தூதுசென்றன், தேரோட்டினன்) எதற்காகவென்னில். तेन-அவ்விதம் செய்வதால் மஹாயோகியான இவன் மாயாயோகமென்ற ஒரு யோகத்தைக் கொண்டு முழுஜனங்களையும் மயக்குகிறன், கற்றினம் மேய்ப்பவனென்று ஈனமாகப் பலர் பழிக்கும்படியாகிறன். கேசவன்-ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணமாயிருந்தும் அவ்விருமூர்த்திகளுடன்கூடியும் நின்றனே. இச் செயல்களைக் கண்டு அவனிடம் ப்ரபன்னர் மோஹம் பெறமாட்டார். कृत्वेति. பா-மௌஸல 9.34. பூமியின் பாரத்தையிறக்கியபிறகு காலயவநாதிகளை வேறிடம் ஓடுவதுபோன்ற செயலாலும் கம்ஸாதிகளை நேராகவும் அழித்து அகன்ற திருக்கண்களுடன், துஷ்டஜனங்களான உலகத்துக்கு அஜ்ஞாநாதிமோஹத்தையும் நல்லோர்களுக்குத் தன்னிடம் பெரும் வ்யாமோஹத்தையும் விளைவித்துவிட்டுத் தன் இடமான பரமபதம் எழுந்தருளினன். मनुष्येति வி.பு. 6-22-18. ஸங்கல்ப மாத்ரத்தாலே உலகின் ஸருஷ்டி-ஸம்ஹாரங்களைப் பண்ணுகிறவனுக்கு வில் எடுத்து அம்பெறிகின்றது போன்ற லீலைகள் எதற்கு? ஆனாலும் ராஜநீதியால் பற்பலரோடு ஸந்தியும் துர்பலரோடு போரும் நடத்துகிறன். சிலவிடத்தில் அப்பால் ஓடிவிடுகிறன். इत्येवम् இப்படி பலவிதம மானிடதேஹம் கொண்டவரின் செயலைச் செய்கிறன். இவையெல்லாம் லோகநாதனுக்கு அவனிஷ்டப்படியான லீலையாக வசனங்கள் இவையெல்லாம் अभिनयமென்பதற்கு ப்ரமாணமாம். வ்ருத்தாந்தங்களிலும் என்கிற உம்மையானது—வேறு நிலையிற் போல் அவதார நிலையிலும் துக்கம் உண்மையிலில்லை யென்றறிவிப்பதாம். துக்கமிராமலிருக்க துக்கமிருப்பது போல் எண்பிப்பது வஞ்சனை தானே யென்ன, அதில்லை யென்கிறர் அது தானுமிதி. உலகில் கிருபையுள்ளவனுக்குப் பிறர் துக்கத்தைக் காணும் போது துக்கமே யுண்டாகுமாகையால் துக்கத்தைக் கண்டு இவன் கிருபையுள்ளவனென்று பிறர் அறிந்து சிறிது தேர்ச்சி பெறவேணுமென்ற கருத்தாலே அபிநயமென்றபடி. வயது முதிர்ந்து மரித்தவர்கள்விஷயமான வ்யஸனத்தில் துக்காபிநயம் செய்வதால், இது பரிஹரிக்கக் கூடாத விஷயம்; இதில் துக்கப்படுவது தவிர வேறொரு ஜீவநமார்க்கம் செய்ய வியலாது. அதனால் துக்கத்தை விடுங்கோள் என்று உபதேசம் செய்தது போலாகும் விவேகிகளாய் வைராக்யமுள்ளவர் சிலர் துக்காபிநயம் செய்வர். அது பந்துவாயிருப்பதால் வருவதாகும். ஈச்வரன்

தனக்கு லீலையுமாயிருக்கும். கூனர் குறளரைக் கொண்டாடி ரக்ஷிக்கை நிரபேக்ஷரான ராஜாக்களுக்கு லீலையுமாய் க்ருபாகார்யமுமாய்க் காணநின்றோ மிறே. இப்படியாகையாலேயிறே, "उपादत्ते सत्तास्थितिनियमनाद्यैश्चिदचितौ स्वमुद्दिश्य श्रीमान्" என்றது இப்படி परहितव्यापाराश्रयமாகையாலே ஆச்ரிதர்க்கு ரக்ஷகனுமாய் उपायान्तरस्थाननिवेशத்தாலே உபாயமுமாயிருக்கும்; रक्षणव्यापार-फलाश्रयமாகையாலே சேஷியுமாய் அதடியாக ப்ராப்யனுமாயிருக்கும். இப்படியிருக்கை இவனுக்கு स्वरूपप्रयुक्तமென்று धर्मिग्राहकप्रमाणसिद्धम्.

இப்படி ரக்ஷகனான ஈச்வரனுக்கு ப்ரதாநமான ज्ञानशक्तिकरुणैகளில் ज्ञान-शक्तिகள் निग्रहानुग्रहसाधारणங்கள். காருண்யம் அநுக்ரஹத்துக்கு அஸாதா

---

செய்வது, தனக்கு ஸ்வாதந்த்ர்யமிருந்து ஏற்படுத்திய கர்மப்ரவாஹ நியம த்தின் ரக்ஷணமாகிறபடியால் லீலாரஸத்திற்கே காரணம். ஆகையால் துக்கம் உண்டாகாதென்கிறார் இது இதி. க்ருபாகார்யம் லீலையுமாவதற்கு த்ருஷ்டாந்தம் கூனர் இத்யாதி. கூனர் முதலானரை ரக்ஷிப்பது மட்டு மன்றி, அவர்களைக் கொண்டாடுவது லீலையில் நோக்கை யறிவிக்கும். அது போல் துக்காபிநயம் செய்யும் போது, உங்களுக்கும் இப்படி வியஸனம் ஏற்பட்டதே யென்று அவர்களைக் கொண்டாடுவதும் ஜராஸந்த-காலயவ நாதிகள் கர்வமேறிக் கொண்டாட்டம் பெறும்படி நடந்து கொள்வதுமிருப் பதால் லீலாரஸத்தைச் சொல்லவேணும். துக்கித்வம் சொன்னால் அப்போது ரஸாநுபவமில்லையாம். பட்டர் 2 87ல். 'சேதநாசேதநங்கள்விஷயமான ஸ்த்திதிநியமநாதி ஸர்வமும் ஈச்வரன் தன்னை உத்தேசித்து-அதாவது தன் உவப்புக்காக' என்றதால் பிறர்க்கு வ்யஸனத்தை யுண்டுபண்ணுவதும் தன் உவப்புக்கே யாகையால் அதனால் துக்கமுண்டாகிறதென்னல் தகாதென் கிறார் இப்படி யாகையாலே யிறே இதி. இந்த ச்லோகம் கீழே உரைக்கப் பெற்றது—கீழ்த்தொடங்கிய விஷயத்தை இந்த பட்டர் ச்லோகத்தின் உத்த ரார்தத்தின் அர்தத்தோடு சேர்த்து நிகமிக்கிறார் இப்படி परहितेति. க்ருபை யடியாக வந்த வசீகரண விசேஷங்களென்றும், ஸ்வதந்த்ரனுடைய காரு ண்யம் ரக்ஷணத்திற்கு உடலாயிருக்குமென்றும் சொன்னபடி ஈச்வரன் परहितव्यापारம் கொள்பவனாகையாலே என்றபடி. ச்லோகத்தில் தத்த்வ மென்ற பதத்தின் பொருள் ஸ்வரூப ப்ரயுக்தமென்று கூறப்பட்டது. பக்தனைக் குறித்து ஈச்வரனுக்கு ஸித்தோபாயத்வம் ரக்ஷகத்வம் மாத்திரம்; ப்ரபந்நனைக் குறித்து உபாயாந்தரஸ்தாநாபத்தியினாலும் உபாயத்வமாம்.

இனி அதிகாராரம்ப ச்லோகத்திற் கூறிய ஜ்ஞாநசக்தி கருணைகளை ஸித்தோபாயமாகைக்குக் காரணங்களாகக் கூறி அவற்றில் காருண்ய த்திற்கு ப்ராதாந்யத்தை யறிவிக்கிறார் இப்படி ரக்ஷகனான இதி. परदुःख-दुःखित्वத்தை வாஸ்தவமாக ஈச்வரனுக்கிசையவில்லை யாகையால் காருண்ய சப்தத்திற்கு அர்த்தம் வேறென்கிறார் இங்கு இதி. 'ऋषेर्धर्मात्मनस्तस्य कारुण्यं समजायत' என்று க்ரௌஞ்ச பக்ஷியின் தசையைக் கண்ட வால்மீகியின்

ரணம். இங்குக் காருண்யமாவது परहितप्रवणதை. இது विविधचेतनர்களுடைய स्वास्थितिகளுக்கும், அநுகூலவ்ருத்திகளுக்கும், நித்யருடைய நித்யாநுபவத்துக்கும், முக்தருடைய அநாவ்ருத்திக்கும், லீலாவிபூதியில் सामान्यसृष्ट्यादिகளுக்கும், स्वावताररूपैயான சுத்தஸ்ருஷ்டிக்கும், शास्त्रप्रवर्तनத்துக்கும், அதடியாகத் तत्त्वहितविषयமான ज्ञानத்தைப் பிறப்பிக்கைக்கும், மோக்ஷ ச்ரத்தையையுண்டாக்குகைக்கும், இது கொடுக்கைக்கு வ்யாஜமான ஸுக்ருத விசேஷத்துக்கும், अधिकारानुरूपங்களான निग्रहशमनोपायங்களைக் கொடுக்கைக்கும், இவற்றில் करणप्रेरणदशैயில் ஸஹகாரியாய் நிற்கைக்கும், உபாஸகனுக்கு அந்தராயம் வந்தால் प्रतिसमाधानம் பண்ணுவிக்கைக்கும், அகிஞ்சநர்க்கு உபாய ஸ்த்தாநத்திலே நின்று நிரபாயமாக ரக்ஷிக்கைக்கும், இவ்வியாஜங்களைக்கொண்டு ப்ரஸந்நனாய், அநாதிகாலம் பண்ணின அநந்த மஹாபராதங்களை அநாதரித்து அநந்த ஸுகத்திலே विश्रमिக்கும்படி संसारनिवर्तकனாகைக்கும், आर्तप्रपन्नர்க்கு அப்போதே மோக்ஷம் கொடுக்கைக்கும், இருந்த நாள் நிரபராதனாயிருக்க வேணுமென்று பலம் கோல மறந்த दृप्तप्रपन्नனுக்குப் प्रारब्धकर्मवशத்தாலே புகுந்த அபராதத்துக்கு அநுதாபத்தை விளைப்பித்து அதிகாராநுரூபமான ப்ராயச்சித்தவிசேஷத்திலே மூட்டுகைக்கும், அங்ஙன் मृदुप्रकृतिகளல்லாதார்க்கு யமவிஷயகமநமும் கோலின பலத்துக்குப் प्रतिबन्धமும் வராதபடி டண்ணி உபக்லேசங்களாலே சிக்ஷிக்கைக்கும் ப்ரதானமான सामान्यनिदानமாயிருக்கும்.

இப்படிப்பட்ட க்ருபாவிசிஷ்டனான ஈச்வரன், "कृणं धर्मं सनातनम्" என்

---

காருண்யம் சோகமானாலும் இங்குச் சொல்வது அதன்று. परदुःखमूलமான துக்கித்வம் தயையென்றால் ஈச்வரனுக்கு निर्हेतुककृपै என்பது எங்ஙனே? 'என் விஷயத்தில் க்ருபை பண்ணவேண்டும்' என்கிறவிடத்தில் दुःखि என்ற பொருள் எங்ஙனே சேரும்? ரக்ஷணவ்யாபாரமான परदुःखनिराचिकीर्षै தயையென்ற ஸர்வலோகஸர்வசாஸ்த்ரப்ரஸித்தமான பொருளைவிட்டு அப்ரஸித்தமும் அந்யथाஸித்தமுமான दुःखित्वத்தை யிங்குச்சேர்க்கவாகாது நாப ஸஹஸ்ர பாஷ்டக் கருத்து வேறு. ஆனால் க்ருபையானது அநிஷ்ட நிவ்ருத்திக்குப்போலே இஷ்ட ப்ராப்திக்கு உடலாயிருப்பதால் परदुःखनिराचिकीर्षै என்ற பொருளையும் விட்டு परहितप्रावण्यம் कृपैயென்று கொள்ளவேண்டும். இப்போது நித்யஸூரிகள்விஷயத்திற்கும் இது பொதுவாகும். स्वार्थनिरपेक्षा परदुःखासहिष्णुता என்று ஸ்ரீபாஷ்ய ஸூக்தியிலுள்ள स्वार्थनिरपेक्षत्वமென்கிற விசேஷணம் இங்கே प्रवणதை என்பதிலடங்கியிருக்கிறது. இக் காருண்யம் ஸஹஜமாகலாம். சில விஷயத்தில் வ்யாஜஸாபேக்ஷமுமாகலாமென்பதை விரிவாக அறிவிக்கிறார் இது இத்யாதியால். सामान्यसृष्टिயாவது ஸமஷ்டி ஸ்ருஷ்டி. வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குக் கர்மவைஷம்யம் ப்ரதாந காரணமாகும். சுத்த ஸ்ருஷ்டியாவது அப்ராக்ருதவிக்ரஹாதி ஸ்ருஷ்டி. இது நித்யமுக்தாவதாரத்திலுமாம். निदानம் = ஆதிகாரணம். இப்படிப் பட்ட இதி இப்படிப்பட்ட க்ருபை நித்யமாய், ஈச்வரனும் நித்யமாய் விசி

கிறபடியே ஸித்தோபாயம் இவனுக்குப் प्रसादनங்களான भक्तिप्रपत्तिகள் ஸாத்யோபாயங்கள். ஓர் அதிகாரி விசேஷத்துக்குக் कर्तव्यமாக "मामेकं शरणं व्रज" என்று விதிக்கப்படுகிற ப்ரபத்தியை अधिकारिविशेषणமென்று சிலர் சொன்னவிடம் अधिकारिविशेषणத்துக்குச் சொல்லும் லக்ஷணத்தோடு சேராமையாலே அதிவாதம். இங்ஙனல்லாதபோது ஈச்வரன் உபாயமாய் நிற்க उपासनादिशास्त्रार्थங்களும் अधिकारिविशेषणங்களாம். ஆகையால் ப்ரபத்தியுங்கூட உபாயமன்றென்று சிலர் அதிவாதம் பண்ணுகிறதுவும் ஸித்தோபாயத்தினுடைய प्राधान्यமடியாக வித்தனை. அது प्रधानமான படி प्रसादनங்களாலே प्रति-बन्धकமான நிக்ரஹம் शमित्தால் ஸ்வாபாவிகாநுபவத்துக்கு प्रयोजकமாகையாலே. அதெங்ஙனேயென்னில், ரத்நத்துக்கு அழுக்கற்றால் வரும் ஸ்வாபாவிகமான प्रभाविकासமும் அதுக்கு அநுரூபமான भगवत्संकल्पमात्रத்தாலேயானாற்போலே, முக்தனுக்கு வரும் भावविकासादिகளும் அதுக்கு அநுரூப

---

ஷ்டம் நித்யமாயிருப்பதாலே இவனே ஸித்தோபாயமென்றபடி. कृष्णमिति. भा आ. 171-123. ये च वेदविदो विप्राः ये चाध्यात्मविदो जनाः। ते वदन्ति महात्मानं कृष्णं धर्मं सनातनम् ॥ வேதவேதாந்தவேதிகள் க்ருஷ்ணனை ஸித்தோபாயமாகச் சொல்லுகிறார்கள் सिद्ध என்பதற்கு ஸநாதநமென்று பொருள். धर्म—உபாயம். सिद्धपदप्रयोगம் ஸாத்யோபாயமுமிருப்பதால் அதன் வ்யாவ்ருத்திக்காகவாம். ப்ரஸாதநங்களான = இவன் மோக்ஷமளிப்பதற்கு வேண்டுமான ப்ரீதியை உண்டுபண்ணுவதற்கான. ப்ரபத்தியை, ஸாத்யோபாயமன்று; அதிகாரி விசேஷணமே என்று ஏகதேசிகள் சொல்வது பொருந்ாதென்கிறார் ஓரிதி. अतिवादमிதி வேறுபேரினால் செயலில் வைஷம்யமில்லை, ப்ரபத்தியிலடங்கிய ஸ்வரூபஸமர்ப்பணம் சேஷத்வஜ்ஞாநரூபமாய் முன்னமே வேண்டுவதால் அதிகாரிவிசேஷணமாகலாம்; भरஸமர்ப்பணம் அதிகாரிவிசேஷணமாக ப்ரஸக்தியில்லை. ஆகையால் அதிவாதம். இதை ஸாத்யோபாய சோதநாதிகாரத்திலே जितकौस्तुभेत्यादिகாரிகைகளில் காண்க. இனி, 'அதிகாரிவிசேஷண'மென்பதற்கு மேலே செய்யும் உபாயத்திற்குபயோகியான தர்மம் என்ற பொருள் கொள்ளவில்லை; பின் என் எனில்—அதிகாரமாவது फलभोक्तृत्वம். பலத்தை யனுபவிக்கிறவன் அதிகாரி. धनी भुङ्क्ते இத்யாதிகளில் ஸுகாநுபவத்திற்கு धनं प्रयोजकமாவது போல் प्रपन्नः मुच्यते என்று முக்திக்கு ப்ரபத்தி ப்ரயோஜகமாகையால் अधिकारिவிசேஷணமென்கிறோமென்னில்—இது உபாஸநத்திற்கும் துல்யமென்கிறார். இங்ஙனித்யாதியால். பக்தி பரபத்திகள் ப்ரஸாதநங்கள்—ப்ரஸாதத்துக்குக் காரணங்கள். ப்ரஸாதமாவது-தெளிவு. சீற்றமற்றிருக்கை; निग्रहनिवृत्ति. நிக்ரஹமானது அநாதிகர்ம ப்ரவாஹத்தாலேற்பட்டது. அதன் நிவ்ருத்தி ஸாத்யோபாயத்தினால். 'ஜீவனுக்கு பகவதநுபவம் ஸ்வபாவ ஸித்தமாகையாலே ப்ரதிபந்தகம் போனபிறகு அது தானே வரும்; ஈச்வரனை எதற்கு ஸித்தோபாயமென்கிறதென்னில்—ஸ்வாபாவிகமென்றால் ஈசவர ஸங்கல்பமின்றியே வருகிறதென்று பொருளல்ல.

மாய்க்கொண்டு व्यवस्थितமான भगवत्संकल्पமடியாகலாயிருக்கும் இப்படி நித்யர்க்கும். இவ்வர்த்தத்தை, "इच्छात एव तव विश्वपदार्थसत्ता" என்று அபியுக்தர் संप्रतिபத்தார்கள்.

ஆகையால் ஸித்தோபாயம் ப்ரதானமேயாகிலும் तद्वशीकरणार्थமான साध्योपायानुष्ठानத்துக்கு "இன்றென்னை" इत्यादिपूर्वाचार्यवाक्यविरोधமில்லை.

योमे गर्भगतस्यापि वृत्तिं कल्पितवान् प्रभुः । शेषवृत्तिविधानेऽपि किं सुप्तस्सोऽथ वा मृत ॥

इत्यादिகளும் रक्षकान्तरம் தேடாமைக்குச் சொன்னவை யத்தனை; அல்லாதபோது भोजनादिव्यापारங்களும் தவிரவேணும். "स्वयंमृत्पिण्डभूतस्य परतन्त्रस्य देहिनः",

"अज्ञो जन्तुरनीशोऽयमात्मनस्सुखदुःखयोः । ईश्वरप्रेरितो गच्छेत् स्वर्गं वा श्वभ्रमेव वा ॥",

---

மணிக்கு ஒளி ஸ்வாபாவிகமென்றால் மணியினுடைய ஸத்தை தானே அதற்குக் காரணம்; அதுபோல் ஜீவஸத்தை ஜ்ஞாநவிகாஸத்திற்குப் போதாதோ வென்னில்—மணிக்கு ஒளியும் முதலில் ஈச்வரஸங்கல்பத்தாலேற்பட்டதே அது போல் ஜ்ஞாநவிகாஸமும் अपहतपाप्मत्वादिगुणங்களுடைய ஆவிர்பாவமும் ஈச்வர ஸங்கல்பத்தாலேயே வரும். ஞானம் எப்போதுமிருந்தாலும் முக்தனுக்கு அதன் விகாஸம் உண்டாகிறது. அது போலன்றி நித்யருடைய அநாதியான ஞானவிகாஸமும் ஸங்கல்பாதீனமென்கிறார் இப்படி இதி. அநாதியானதற்கு ईश्वरसङ्कल्पाधीनत्वம் எங்ஙனே என்ன, அதற்கு ஸம்ப்ரதாய வசநத்தைக் குறிக்கிறார். इच्छात इति வைகுண்டஸ்தவம் 33 இதன் பொருள் கீழே விளக்கப்பட்டது. ஆக ஸித்தோபாயம் ப்ரதாநமானாலும் நிக்ரஹநிவ்ருத்திக்காக ஸாத்யோபாயம் வேண்டும். பரம்பரயா ஹேதுவான படியாலே அதுவும் உபாயமே,

இன்றென்னை என்ற ஸம்ப்ரதாய ஸ்ரீஸூக்திவிரோத சங்கை பரிஹரிக்கப்பட்டது. இதற்கு மூலமான வசநங்களுக்கும் இதே கருத்தென்கிறார் यो मे இதி. यः—எந்த பகவான் प्रभुः—கர்மபலனளிப்பவனாகையாலே गर्भगतस्यापि—கர்ப்பத்திலிருக்கும்போதுகூட எனக்கு ஜீவநத்தை ஏற்படுத்தினானோ. शेष-மற்ற. वृत्तिविधानेऽपि—ஜீவநங்களை நடத்துவதிலும் அவன் உறங்கிவிட்டானா அல்லது மரித்தானா என்ன என்று ச்லோகத்தின் பொருள். இதனால் நாம் ஒன்றும் செய்ய வேண்டாமென்றதாகாது. प्रभुः என்று கர்மபல ப்ரதாநம் செய்வதைக் கூறுகிறது. ஆகையால் பிறகு வேறொருவனைத் தேடவேண்டா. நாம் செய்யவேண்டியதைச் செய்தால் அவனே நடத்துவானென்றதாம், அல்லாத போது=ஒரு பலனுக்காகவும் ஒரு வ்யாபாரமும் நாம் செய்யவாகாதென்று கொண்டாலென்றபடி. ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்தை ஸ்பஷ்டமாகக் கூறும் ப்ரமாணங்களையும் நிர்வஹிக்கிறார் स्वयमिति. பா. சா 294 ஈச்வர ஸங்கல்பமில்லையென்றால் மண்கட்டி போலாவான் ஜீவன், இப்படியாய் ஈச்வரனுக்கு அதீனமாயும், स्वरक्षणेऽपि अशक्तस्य தன்ரக்ஷணத்திற்கும் சக்தியற்றவனுமான ஸம்ஸாரிஜீவாத்மாவுக்கு पररक्षणे हेतुः कः=பிறரை ரக்ஷிக்கும் ஸாமர்த்தியமேது? अज्ञ इति பா. சா. 12-36. அஜ்ஞாந

"अप्रमेयोऽनियोज्यश्च यत्रकामगमो वशी । मोदते भगवान् भूतैर्बालः क्रीडनकैरिव ॥"

इत्यादिகளில் ஜீவனுடைய पारतन्त्र्यமும், ஈச்வரன் இவனுடைய கர்மாநுகுண மாக நடத்தும் படியும் சொன்ன வித்தனை. இப் பாட்டுக்கும் இவ் வசநங் களுக்கும் இப்படி तात्पर्यமல்லாத போது ஸர்வசாஸ்த்ர விரோதமும் पूर्वापर-विरोधமும் வரும்.

இப்படி ईश्वरस्वातन्त्र्य.सहजकारुण्यங்களடியாக வரும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் சொன்னோம். संबन्धविशेषமடியாக வரும் கலக்கத்துக்குப் பரிஹாரம் சொல்லுகிறோம். ஈச்வரன் சேஷியாயிருக்க, நாம் "गर्भभूतास्तपोधनाः" என்னும் கணக்கிலே स्तनन्धयप्रायராயிருக்க, தாய் முலைப்பாலுக்கு ஆர்த்தனாய் அழுதல்

---

முள்ளவனும், தனக்கு ஸுகத்தையுண்டுபண்ணவோ துக்கத்தை விலக்கவோ ஸாமர்த்யமில்லாதவனுமாகிறான் ஜீவன். ஈச்வரனுடைய ப்ரேரணைக்குட் பட்டு இவன் ஸ்வர்க்கமோ நரகமோ போவதாகும். अप्रमेय இதி பா. ஸபா. 40 78. பகவானானவன் அளவிட வாகாதவனாய் அதாவது பரி பூர்ணனாய், अनियोज्यः—ஒருவருடைய ஆஜ்ஞைக்குட்படாதவனாய்,—यत्रकामगः என்பது ஒரே சொல்—எங்கு இஷ்டமோ அங்குச்செல்லுகிறவனாய். वशी ஸர்வத்தையும் தன் வசமாக்கினவனாய், சிறுவன் விளையாட்டுக்கருவிகளைக் கொண்டு போல், भूतैः—பிரமன்முதல் ஸ்தாவரம் வரையிலான ப்ராணிகளைக் கொண்டு லீலாரஸானுபவம் பெறுகிறான். இவ் வசநங்கள் ஜீவன் பண் ணும் கர்மாவினாலேயே பலனென்பதில்லை-அதை வ்யாஜமாக்கிக்கொண்டு பலனளிப்பவன் ஈச்வரனே என்றதிலே நோக்குள்ளவை. ஸர்வசாஸ்த்ர விரோதமாவது அந்தந்தப் பலனுக்காக அந்தந்தக் கர்மாவை விதிக்கும் சாஸ்த்ர விரோதமாம். பாட்டுக்குப் பூர்வவிரோதம், 'திருமாலிருஞ்சோலைமலை யென்றேன்' என்றது போன்ற விரோதமாம். மேல்பாட்டில் கற்றார் இத்யா தியால் கற்கை முதலானவற்றின் பலனாக துக்க நிவ்ருத்தியைச் சொன்னதும் இத்திருவாய்மொழி ஓதுவது காரணமாகப் பரமபத ப்ராப்தி சொன்னதும் விரோதிக்கும். ஸ்வாதந்த்ர்யமே காரணமாகில் இவை காரணமாகாவே.

எம்பெருமானின் குணமூலமாக வந்த கலக்கம் பரிஹரிக்கப்பட்டது. அவனுக்கும் ஜீவனுக்கு முள்ள சேஷசேஷி பாவமென்கிற ஸம்பந்தம் மூல மாக வந்த கலக்கம் இனிப் பரிஹரிக்கப்படுகிறது. गर्भेति. ரா. அ. 1—20 'न्यस्तदण्डा वयं राजन् जितक्रोधा जितेन्द्रियाः । रक्षितव्यास्त्वया शश्वत् गर्भभूतास्तपोधनाः ஸ்ரீராமரிடம் ரிஷிகளின் விண்ணப்பம் பிறரைத் தண்டிப்பதை விட்டு கோப த்தையும் இந்த்ரியங்களையும் ஜெயித்துத் தவத்தையே தனமாகக்கொண்டுள்ள நாங்கள் வயிற்றிலிருக்கும் குழந்தைகள் போல் எப்பொழுதும் உம்மால் காக்கப்படவேண்டியவர்கள், கர்ப்பதுல்யமாகக்கூறியதாலே ப்ரார்த்தனையை எதிர்பாராமலே காக்கவேண்டுமென்றவித்ததாம். கர்ப்பத்தைக் காப்பதற்குப் பெரும்பாலும் தனிப்பட்ட ப்ரயத்நம் வேண்டியதில்லை. அது வேண்டுமென் பதை யறிவிக்க स्तनन्धयप्राय ரென்றது, தாய் இதி இந்த த்ருஷ்டாந்தம் வசந

செய்யுமளவன்றிக்கே கூலி கொடுப்பாரைப்போலே, நாம் **आत्मसमर्पण**ம் பண்ணுகையும். ரக்ஷிக்கவேணுமென்றபேக்ஷிக்கையும், விச்வஸிக்கையுமென்றாற்போலே சொல்லுகிற இவையெல்லாம் ஸ்வரூபத்துக்குப் பொருந்துமோவென்று சிலர் **सिद्धोपायमुख**த்தாலே **साध्योपायशरीर**த்தை அழிக்கப் பார்ப்பர்கள்

இவர்களை விலக்கும்படி-பரமர்ஷிகளும் பாஷ்யகாராதிகளும் **विश्वासपूर्वक-प्रार्थनात्मनिक्षेपादि**களைத் தாங்களும் அநுஷ்டித்து இதுக்குச் சாஸ்த்ரங்களையும் மூதலிப்பித்துக்கொண்டு உபதேச பரம்பரையும் நடத்திப் போருகையாலே, **शेषित्वादिसंबन्ध**ம் நித்யமேயாகிலும் கர்மவான்களான ஜீவர்கள்விஷயத்தில் ஈச்வரன் ஒரு **साध्योपायविशेष**த்தை முன்னிட்டல்லது ரக்ஷியான் என்று **शास्त्र-निष्ठ**ர்க்குப் **परिग्रहि**க்கவேணும். சாஸ்த்ரத்தைக் கைவிட்டால் இஸ்ஸம்பந்தம் சொல்லுகைக்கு ஈச்வரனையும் கிடையாது ஆனபின்பு ஸம்பந்தமடியாக ஈச்வரன் ரக்ஷிக்க ப்ராப்தன் என்றும், **शेषभूत**னான இவன் தன்னை ரக்ஷித்துக் கொள்ள ப்ராப்தனன்றென்றும் முன்பு சொன்னதுவும் **रक्ष्यरक्षकभाव**த்துக்கு **लोकदृष्टप्रक्रिया**யாலே **औचित्य**ம் சொன்னபடியித்தனை; இவ்வளவே ரக்ஷைக்கு **निरपेक्षकारण**மென்றபடியன்று அப்படிக் கொள்ளில் ஸர்வரும் நித்யமுக்தராகப் **प्रसङ्गि**க்கும். **स्वातन्त्र्य**த்தாலே. நியமம் சொல்லில் முன்பு சொன்னபடியே **वैषम्यनैर्घृण्य**ங்கள் **प्रसङ्गि**க்கும்

---

பூஷணத்தில் 182–183 இலக்கத்தில் உள்ளது; சரமச்லோகாதிகாரத்திலே விசாரிக்கப்படும். அழுதல் செய்யுமளவென்றதால் மோக்ஷம் பெறுதவரையில் நிர்வேதம்மட்டும் வேண்டுமென்றறிவித்ததாம். கூலிகொடுப்பாரை என்றதால் கூலியை வாங்கிக் கொண்டு வேலை செய்கிற நிலையென்கிற தோஷத்தை ஈச்வரனுக்குக் கூறியதாம். ஆத்மநிக்ஷேப என்றும் **उपायत्व-प्रार्थनामतिः** என்றும் **प्रपत्तिर्विश्वासः** என்றும் இந்த உபாயத்தை வசநங்கள் சொல்லுவதால் இம்மூன்றையும் அருளினார். ஸித்தோபாய முகத்தாலே இதி. ஸாத்யோபாயமான ப்ரபத்தியினுடைய அங்காங்கி ஸ்வரூப சோதநத்தாலே வரும் சங்கை அங்குப் பரிஹரிக்கப்படும். இங்கே ஸித்தோபாயத்தைக் கொண்டு வரும் கலக்கத்தைப் பரிஹரிக்கிறார் இவர்களை இதயாதியால் மூதலிப்பித்துக் கொண்டு—ப்ரமாணமாக்கிக் கொண்டு. ஈச்வரனையும் கிடையாது—ஈச்வரன் சாஸ்த்ரைகவேத்யனாகையால் ப்ரபத்தியை விதிக்கிற சாஸ்த்ரம் அப்ரமாணமென்றால் ஈச்வர தத்த்வ ப்ரதிபாதக சாஸ்த்ரமும் அப்ரமாணமாய் ஈச்வர ஸித்தியே இல்லையாமென்றபடி. உபாயத்தால் ரக்ஷிக்கிறானாகில் சேஷசேஷிபாவ ஸம்பந்தத்தை எதற்கு ரக்ஷணத்திற்குக் காரணமாக்குவதென்ன வருளிச்செய்கிறார் ஆனபின்பு இதி. உலகில்சேஷி, சேஷனை ரக்ஷிப்பது ஸம்பந்த ப்ரயுக்தமாகக் காண்கிறபடியால் இங்கும் அதுமூலமாகவே ரக்ஷணம்; வைஷம்யாதிகள் வாராமைக்காக வ்யாஜத்தை ஈச்வரன் ஏற்படுத்தியதென்று அறிவிப்பதிலே நோக்கு.

'ஸர்வருக்கும் மோக்ஷமளிக்கும்படியாமென்ன வொண்ணாது'; ஸம்பந்த

யுக்திமாத்ரத்தால் இவ் வர்த்தங்கள் சொல்லுவார்ககு, 'ஸம்பந்த ஜ்ஞானமே அபேக்ஷிதம், ரக்ஷாபேக்ஷாதிகள் வேண்டா' என்று சொல்ல வொண்ணுது अचिद्द्रव्यங்களும் पशुमृगपक्ष्यादिகளும் स्तनन्धयரும் रक्षापेक्षारहितங்களாறுபோலே संबन्धज्ञानरहितங்களுமாயிருக்க அவற்றை ரக்ஷிக்கக் காணு நின்ருேமிறே. அப்படிக் கண்டோமாகிலும் शास्त्रबलத்தாலே இங்கு ஸம்பந்த ஜ்ஞாநம் அபேக்ஷிதமென்னில், சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே ज्ञानविशेषம் ஸ்வீகரிக்கவேணும். தன்னை ஈச்வரன் ரக்ஷிக்கும்போது ஸம்பந்தத்தோடே கூட விலக்காமையே வேண்டுவதென்னில், அதுவும் अनुपपन्नம். सुषुप्त्याद्यवस्थैகளிலே எல்லார்க்கும் மோக்ஷம் கொடுக்கப் प्रसङ्गிக்கையால். தான் விலக்குகைக்கு யோக்யதையுள்ள அவஸ்த்தையிலே விலக்கா தொழிகையே अपेक्षितமென்னவுமொண்ணுது; விலக்குகைக்கு யோக்யதை யில்லாத அசித்தையும், விலக்குகிற पश्वादिகளையும் पुत्रादिகளையும் ரக்ஷிக்கக் காண்கையால். ஆனபின்பு

"ये नाथवन्तो हि भवन्ति लोके ते नात्मकर्माणि समारभन्ते ।
तेषां हि कार्येषु भवन्ति नाथाः शैब्यादयो राम यथा ययातेः ॥"

என்கிற श्लोकத்திலும் नाथशब्दத்தில் व्युत्पत्तियாலும், निर्भरतैக்கு उपयुक्तமான ஸம்பந்த விசேஷத்தைச் சொல்லுகிற मतुप्प्रत्ययத்தாலும் யாசநமும் आत्मनिक्षेपமும் व्यञ्जितமாயிற்று. அல்லாதபோது अतिप्रसङ्गादिदोषங்கள் வரும். "नाथवन्तः" என்கிறவிடத்தில் இத்தனை விவக்ஷை கொள்ளாதபோது லோக நீதியிலுள்ளதெல்லாம் மோக்ஷசாஸ்த்ரத்தில் ஊஹிக்கை வசநவிருத்தம். 'ஸர்வ ரக்ஷகனுன ஈச்வரன் உண்டாயிருக்க ஸ்வரக்ஷண வ்யாபாரத்தில் நமக்கு அந்வயமில்லை' என்கிற ஆப்தர்பாசுரத்துக்குத் தாத்பர்யம் சொல்லுகிறோம்.

---

ஜ்ஞாநம் மோக்ஷத்திற்குக் காரண மென்போம்' என்னில்—உத்தரம் யுக்திமாத்ரத்தால் இத்யாதியால். रहित-இல்லாத; விலக்காமை अनिवारणம் நாதனுள்ளவர்கள் தம் கார்யத்தைத் தாம் தொடங்கலாகாதென்று வசநமுளதே என்பதற்குப் பரிஹாரம் ஆனபின்பு 'ये नाथ' இத்யாதி. பா. ஆ. 161 2 कार्येषु 'तेषां प्रभवन्ति नाथाः' என்று அங்கே பாடம். शैब्येति—ஸ்வர்கத்தினின்று விழுந்த யயாதிக்கு அவன் தௌஹித்ரர்களான சைப்யாதிகள் நான்குபேர் தங்கள் ஸுக்ருதத்தை யளித்து ஸ்வர்க்கம் செல்ல உதவினர்களென்றது இங்கே த்ருஷ்டாந்தம். இது பலராமனைக் குறித்து ஸாத்யகியின் வார்த்தை. வ்யுத்பத்தியாலுமிதி. नाथ्यत इति नाथः ; ப்ரார்த்திக்கப்படுகிறவனென்று பொருள் ஸம்பந்த விசேஷமாவது ஸ்வீகரிக்கப்பட்டிருக்கை. வசநவிருத்தமிதி. இங்கே ஸம்பவிக்கிறபடியால் வ்யுத்பத்யாதிகளைக் கொண்டு நிர்வஹிததோம், சாஸ்த்ரம் ஒரு விதம் விதித்திருக்குமிடத்தில் லோகரீதியைக் கொண்டு அதற்கு விருத்தமாக ஒன்றையும் கொள்ளலாகாது உலக ரீதியை யநுஸரித்து உடையவன் உடைமையை ரக்ஷித்தாக வேண்டுமென்று நிர்பந்திக்க முடியாதென்று கருத்து, स्वप्रवृत्तिनिवृत्तिயே போதுமென்று

यदर्थं तु कृतो न्यासस्तदर्थं न पुनः क्रिया । पूर्वमप्यपराधीनप्रवृत्तावस्य नान्वयः ॥

**यथाप्रमाणं** **स्वरक्षणभरसमर्पणम्** பண்ணினவனுக்குப் பின்பு **स्वरक्षणार्थव्यापार**த்தில் **प्राप्ति** யில்லை முன்புதானும் **स्वरक्षणार्थ**மாகப் பண்ணின **समर्पणादिव्यापार**மும் **सर्वकर्ता**வான அவன்தானே **बीजाङ्कुरन्याय**த்தாலே அநாதியாகப் **प्रवर्तिप्पित्त** **कर्मप्रवाहविपाकविशेष**த்திலே வந்தவொரு **यादृच्छिकसुकृतादिविशेषकारण**த்தை முன்னிட்டுக்கொண்டு பண்ணுவித்தானுகையால் நாமே நம்மை ரக்ஷித்துக் கொள்ளுகிறோமென்றிருக்கப் **प्राप्ति** யில்லை. ஸர்வரக்ஷகனுக மூலமந்த்ராதிகளிலே சிக்ஷிதனுன இவன் தானே நம்மை ஒருபாயத்திலே **व्यापरिप्पित्तु** அந்த வ்யாபாரத்தாலே ப்ரஸந்நனுய் ரக்ஷிக்கிறுனென்றிருக்கப் **प्राप्त**ம்.

स्वामी स्वशेषं स्ववशं स्वभरत्वेन निर्भरम् । स्वदत्तस्वधिया स्वार्थं स्वस्मिन् न्यस्यति मां स्वयम् ॥

இது **आत्मसमर्पणदशै**யில் **ख्यातिलाभपूजाफलसङ्गकर्तृत्वोपायत्व**ங்களாகிற தூராலற்ற **भगवदनुसन्धान**க் கட்டளை, ஆகையால் தாய் முலைப்பால்போலே வருகிற **ईश्वरप्र-**

---

ஸோமாசியாண்டான் போன்ற ஆப்தர் அருளினுரே என்ன, இதற்கு இரண்டுவிதமான தாத்பர்யம் அருளுகிறுர் காரிகையினுல். **यदर्थं** எந்தப் பலத்திற்காக பரந்யாஸம் செய்யப்பட்டதோ, அதற்காக மீண்டும் ஸ்வ ப்ரவ்ருத்தி கூடாதென்பது ஒரு பொருள். தான் பரந்யாஸம்செய்தாலும்அந்த பரந்யாஸப்ரவ்ருத்தியான து ஸ்வப்ரவ்ருத்தியாகாது. ஈச்வரன் செய்விக்கவந்த ப்ரவ்ருத்தியன்ரே அது. **स्वाधीन**மாகவும் ஸ்வகர்த்ருகமாகவுமான ப்ரவ்ருத்தியிலிருந்து நிவ்ருத்தி. இது இரண்டாவது பொருள். இவ்வர்த்தங்களை விளக்குகிறுர் **यथाप्रमाण**மிதி. இரண்டாவது பொருளை ஸாத்விக த்யாக பூர்வகமாக அநுஷ்டாநத்தைக் காட்டும் தம் காரிகையாலே சுருக்குகிறுர். **स्वामी**தி. **स्वामी** என்பதற்கு **स्वं** சொத்து அது உள்ளவனென்று பொருள். மேலே **स्वपद**ங்களெல்லாம் ஈச்வரனைச் சொல்லும். ஸ்வாமியான எம்பெருமான் **स्वयं**= தானே **मां**—என்னை **स्वशेषं** அவனுக்கு நான் சேஷமாயிருப்பதாலே **स्वार्थं** தனக்காக, **स्ववशं**—நான் அவனுக்குப் பரதந்த்ரனுயிருப்பதாலே அசக்தனென்று தான் அளித்த தன் விஷயமான புத்தியினுலே. **निर्भरम्**—எனக்கு பரமில்லாதபடி. **स्वभरत्वेन**–தனக்கு பரமாக **न्यस्यति**. வைத்துக் கொள்கிறுன். **ख्यातीति**. க்யாதி முதலான பலன்கள் எங்கும் ஆநுஷங்கிகங்களே. அவற்றுக்காக இக் கர்மாக்கள் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பவில்லை. ஆனுலும் அவற்றை ராஜஸ ப்ரக்ருதிகள் அபேக்ஷிப்பார்கள். அவற்றை யடியோடு விடவேண்டும். மோக்ஷத்திற்காகச் செய்யும் ப்ரபத்தியில் மோக்ஷமென்ற பலனுண்டானுலும் அதில் தனக்கு ஸங்கத்தை விடவேண்டும. தன்னை ஸ்வதந்த்ர கர்த்தாவாகவும் நினைக்கலாகாது. ஈச்வரனே உபாயமாக இருக்கத் தன்னையோ ப்ரபத்தியையோ உபாயமாக நினைக்கலுமாகாது. **தூராலற்ற**— தூரற்ற; தூர் சேறு; **दोष**மென்றபடி. பகவதநுஸந்தாநக் கட்டளை. = **फल**. **फलत्व-उपायत्व**ங்களை பகவானிடத்திலேயே அநுஸந்திப்பதென்கிற வ்யவஸ்த்தை, மோக்ஷார்த்த ப்ரபத்தியிலோ பக்தியிலோ இந்த அநுஸந்தாநம்

सादृத்துக்கும் स्तनन्धयனுடைய முலையுண்கிற வ்யாபாரம் போலே இவனுடைய அபேக்ஷாதிகள் இத்தால் ஸித்தோபாய ஸ்வரூபத்துக்குக் கொத்தை வாராது.

(3) இப்படி நாராயணசப்தத்தில் ஸித்தமான குணவிசேஷ-ஸம்பந்தவிசேஷங்களடியாகப் பிறக்கும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் உதாஹரித்தோம் இனி

"लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकः सर्वसिद्धान्ते वेदान्तेऽपि च गीयते ॥"

என்கிறபடியே सपत्नीकனைக்கொண்டு सर्वरक्षणयज्ञदीक्षितனை ஸர்வேச்வரனுக்கு श्रीमत्त्वத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு

---

அவச்யம் வேண்டுமென்று ஸித்தித்தபடியால். 'தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே; ஈச்வரனால் வரும் நன்மை முலைப்பால் போலே' என்கிற பிள்ளான்வாக்யத்திற்கும் இப் பொருளிலேயே நோக்கென்று கொண்டு நிகமநம் செய்கிறார் ஆகையால் இதி. இதன் விரிவு சரமச்லோகாதிகாரத்தில். அழுகல் செய்வதற்கு மேலாகக் குழந்தைக்கு வ்யாபாரமில்லை. என்றதும் தவறென்கிறார் முலையுண்கிற வ்யாபாரம் போலே இதி. கொத்தை வாராது—ஹாநி யில்லை.

மூன் குறித்த மூன்று சங்கைகளில் மூன்றாவது சங்கையை தத்த்வத்ரயாதிகாரத்தில் சொன்னதற்கு மேலாக விரிவாகப் பரிஹரிக்கத் தொடங்குகிறார் இனி இத்யாதியால். लक्ष्म्येति. லக்ஷ்மீதந்த்ரம் 28-14, हृषीकेशः—இந்த்ரியங்களுக்கு ப்ரேரகனான எம்பெருமான் देव्या—ஜகத்வ்யாபார லீலையில் ஸம்பந்தப்பட்டவளாய் कारुण्यरूपया—தயையே வடிவுமான लक्ष्म्या सह—பெரிய பிராட்டியோடுகூட रक्षकः—ஸர்வ ரக்ஷகனை सर्वसिद्धान्ते—பஞ்சராத்ரத்தில் அடங்கிய ஆகமம். மந்தரம்-தந்தரம்-தந்த்ராந்த்ரமென்கிற நாலு ஸித்தாந்தங்களிலும் वेदान्तेऽपि च—ஸகல உபநிஷத்துக்களிலும் गीयते—விளக்கப் பட்டிருக்கிறான் இருவரும் ஜகத்வ்யாபாரத்தில் இழிந்தவரானாலும் பிராட்டி கருணையே வடிவாகையால் புருஷகாராபேக்ஷையிராமலே ரக்ஷிக்கிறாள். सह என்ற சொல் இராமற் போனால் லக்ஷ்மீ புருஷகாரமாயிருக்க, பிரான் ரக்ஷகனாகிறானென்றும் பொருள்படும், सह என்றிருப்பதால் இருவருக்கும் ரக்ஷகத்வம் துல்யமென்று ஸ்பஷ்டமாகிறது. இப்படி ஸஹதர்மசாரிணியோடு சேர்ந்து ரக்ஷகத்வமாகையால் இந்த ரக்ஷணத்தை யஜ்ஞமென்கிறார் யஜ்ஞத்தில் இருவருக்கும் கர்த்ருத்வம்; புருஷனுக்கு மட்டும் कर्तृत्वமென்பது பூர்வமீமாம்ஸையில் நிராகரிக்கப்பட்டது. பத்நீ ஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு= இந்த ஸம்பந்த சப்தத்திற்குப் பொருளென்ன. அது விசேஷணமா, உபலக்ஷணமா? விசேஷணமென்றாலும் அது புருஷகாரத்வம் மட்டுமா உபாயத்வமுமா இத்யாதி கலக்கங்களுக்கென்றபடி. இங்கே மதுப்-ப்ரத்யயம் நித்யயோகத்தைச் சொல்வதென்று எல்லோரும் இசைந்தனர். அதனால் விசேஷணத்வம் ஸித்திக்கலாம், तदस्य अस्ति अस्मिन् इति मतुप् என்று व्याकरणप्रयोगமிருப்பதால் விசேஷணத்வமிராத போது மதுப்பு ப்ரயோகிக்க வாராதென்றது व्युत्पत्तिवादம். ஆனாலும் அது நித்யமென்று தெரிவிப்ப

विरूपகத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம். சிலர் द्वयத்தில் पूर्वखण्डத்தில் श्रीमच्छब्दம் உபலக்ஷண பரமென்றும், उत्तरखण्डத்தில் श्रीमच्छब्दம் விசேஷண பரமென்றும் பிரியச் சொன்னார்கள். இவ்விடத்தில் சப்தம் ஏகரூபமாயிருக்க, सारस्यத்துக்கு बाधकமுமன்றிக்கேயிருக்க, "स्वरूपं स्वातन्त्र्यं भगवत इदम्" इत्यादिகளிலே प्रसिद्धமான கூடஸ்த்த ஸம்ப்ரதாய விருத்தமாகப் பண்ணுகிற இவ் विभागம் அநுபபந்நம். अनन्योपायत्वविरुद्धமான उपायद्वित्वप्रसङ्गம் இவ்விடத்

---

தற்காக நித்யயோகத்திலும் மதுப்புக்கு அநுசாஸநமாம் இப்படி யிருக்க இதில் சிலர் செய்த விவாதத்தை அநுவதிக்கிறார் சிலர் இதி. उपलक्षण-परम्—உபலக்ஷணமாகப் பிராட்டியைச் சொல்வதில் நோக்குள்ளது விசேஷணபரம்—விசேஷணமாகச் சொல்லுவதில் நோக்குளது. பிரிய—ஐகரூப்யமிராதபடி. இவ்விடத்தில் இதி. ஐகரூப்யभंगம், मतुप्स्वारस्यभंगம் கூடஸ்த்த ஸம்ப்ரதாய விரோதம் என மூன்று தோஷம்: கூடஸ்த்தஸம்ப்ரதாயமாவது. नाथयामुनयतिराजसंप्रदायம். அதைத் தெரிவிக்கும் வசநம் स्वरूपमிதி.

ஸ்ரீகுணரத்நகோசம் 28 'स्वरूपं स्वातन्त्र्यं भगवत इदं चन्द्रवदने त्वदाश्लेषोत्कर्षात् भवति खलु निष्कर्षसमये। त्वमासीर्मातः श्रीः कमितुरिदमित्थन्त्वविभवः तदन्तर्भावात् त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि ॥' இதன் பொருளாவது—मातः श्रीः चन्द्रवदने—சந்த்ரனைப் போன்ற முகமுடைய தாயான ஸ்ரீதேவியே; निष्कर्ष समये–விவேசநம் செய்து பார்க்குமளவில் भगवतः—எம்பெருமானுடைய स्वरूपம் பரமாத்மா என்னும் ஸ்வரூபமும் திருமேனியும் स्वातन्त्र्यमिदं இந்த ஸ்வதந்த்ரத்தன்மையும் त्वत्-आश्लेष-उत्कर्षात् खलु—உன்னுடைய ஸம்ச்லேஷத்திற்குள்ள ஏற்றத்தாலன்றோ भवति—ஸத்தையைப் பெறுகிறது. त्वं-நீ कमितुः-காந்தனான பகவானுக்கு इदमित्थन्त्वविभवः-விசேஷ்யத்துக்குச்சிறந்த ப்ரகாரமாயிருக்கிறாய். तदन्तर्भावात्–நீ அவனுக்குப் பத்நியாயிருப்பது போல் ஸ்வரூபநிரூபகமாயிருப்பதனால் त्वां உன்னை श्रुतिः வேதமானது पृथक्—தனியாக नाभिधत्ते—சொல்லுகிறதில்லை. பரமாத்மாவினுடைய ஸ்வருபத்திற்கு सत्यत्वादिகளான பல தர்மங்கள் व्यावर्तकமாயினும் ச்ரீபதித்வமென்கிற ஆகாரந்தான் தேவதாந்தரவ்யாவ்ருத்தியைக் காட்டுகிறது. இது विभवம்—ஏற்றம். ஸகலசேதநாசேதநங்களும் அவனை யாச்ரயித்திருப்பதால் அவனுக்கு ஸ்வாதந்த்ர்யமுளதென்னலாம். ஆனாலும் அவை அவனை யாச்ரயிப்பது அவனாலேயேற்பட்டதே. பிராட்டி சேஷியாயிருந்தும் தானே எம்பெருமானை யாச்ரயித்தாள். இவளும் ஸ்வதந்த்ரையாகநின்றிருந்தால் அவனுக்கு ஸ்வாதந்த்ரயம் அஸாதாரணமாகுமோ? ஸ்வதந்த்ரையாயிருந்தும் ஆச்ரயித்தாளென்கிறவிசேஷத்தினாலே அவனுக்கு ப்ரகார மானாள். धर्मिயை வேறாகவும் ஸ்வரூப நிரூபகதர்மத்தை வேறாகவும் பிரித்துச்சொல்வதில்லை. எம்பெருமானை விட்டுப்பிரியாத இவளோடு சேர்த்தே அவன் எப்போதும் அறியப்படவேண்டியவனாகையால் எப்போதும் விசேஷணமாக அறி ப்படுகிறவளே. ஸ்வரூபநிரூபகம் உபலக்ஷணமாகில் ஸ்வரூபமே அறிப்படமாட்டாதென்றபடி. இவ் विभागம்

தில் बाधकமாளுலோவென்னில். अतः प्रयोजनत्वावच्छेदமான प्राप्यत्वप्रसंगக்காலே

---

பூர்வகண்டத்தில் உபலக்ஷணம், பின்னே விசேஷணமென்று பிரித்தல்,

ஸ்வாரஸ்யத்திற்கு बाधकமுளதென்று சிலரின் ஆக்ஷேபம் ; அதைக் கூறிப் பரிஹரிக்கிறார். अनन्येति. किञ्चिद्दर्शित. एक வஸ்துவுக்கு (ஒன்றோடு சேர்த்து மற்றொன்றை எடுத்து அகற்கு) வேறொன்றோடு ஸம்பந்தத்தைச் சொல்லுமிடத்தில்—அந்த வேறொன்றின் ஸம்பந்தமானது அந்த ஏகவஸ்துவுக்குப் போல் அதில் சேர்க்கப்பட்டதற்கும் தோன்றுவது ஸ்வரஸமாக எல்லோரும் கொண்டது. பரிஜநத்தோடு சேர்ந்த ராஜா பூஜிக்கப்பட்டான் என்றால், உண்ணும் மனிதர் காணப்பட்டான் என்று ப்ரயோகித்தால் ராஜாவுக்குப் போல் பரிஜநத்துக்கும் பூஜிக்கப்படுகையும், மனிதனுக்குப் போல் உண்கை யென்கிற தர்மததிற்கும் காணப்படுகையும் உண்டென்பதே ஸ்வரஸம்; அது போலிங்குமாகும் பூர்வகண்டத்தில் चरणங்களை சரணமென்றது சரணமாகப் பற்றுகிறவன் திருவடிகளைப் பிடிப்பதாலும். திருவடிகளில் கைங்கர்யம் உத்தேச்யமாகையாலும். அதை ப்ரதாநமாகக் கூறினலும் चरणौ என்பது பூர்ணதிவ்யமங்களவிக்ரஹக்கிறகு உபலக்ஷணமாய் நாராயணபதமும் वात्सल्य-स्वामित्वादिகளான பல குணங்களைக் கூறுவதாய் ஸ்ரீதேவி-திவ்யகுண- திவ்யமங்கள விக்ரஹவிசிஷ்டன் சரணம் என்று பொருளாயிற்று இது ஸர்வஸம்மதம். இதில் சரணத்வஸம்பந்தம் நாராயணனுக்குப் போலே ஸ்ரீக்கும் குணங்களுக்கும் விக்ரஹத்திற்கும் ஸ்வரஸமாய் அறியப்படும். இந்த ஸ்வாரஸ்யமானது உத்தர கண்டத்தில் ஸ்ரீமானான நாராயணன்பொருட்டு என்று நாராயணனுக்கு ப்ராப்யத்வம் சொல்லுமிடத்தில் விசேஷணமான ஸ்ரீக்கும் ப்ராப்யத்வம் சொன்னதால் இசையப்பெற்றதே पुत्रेण सह पिता என்றாற் போலே एकक्रियान्वयित्वरूपமான ஸாஹித்யத்தைச் சொல்லு மிடத்தில் விசேஷணத்தில் அது ஸ்பஷ்டமாகவே தெரியும். அவ்வித ஸாஹித்யத்தைச் சொல்லாமல் பொதுவான ஸம்பந்தத்தைச் சொல்லுமிடத்திலும் இப்படி ஸ்வாரஸ்யததைக் கொள்ளுவதே ப்ரக்ருதம். ஆனாலும் रूपवान् रसवान् என்றால் ஸ்வரூபத்தில் ரஸத்தைச் சொல்வது போல் ரூபத்திலும் ரஸமுளதென்று சொல்லவாகாது, அது ப்ரத்யக்ஷ விருத்தம். அது போல் இங்கு बाधकமிராமையால் ச்ரீதேவிக்கும் சரணத்வஸமப்ந்த மிருக்கலாமென்று முன் நாம் சொன்னது அதன் மேல் கேள்வி-ஜீவனுக்கு अनन्योपायत्वம் திருவஷ்டாக்ஷரத்தில் நமஸ்ஸாலேற்பட்டது. मामेकं शरणं व्रज ; तदेकोपायतायाच्ञा இத்யாதியால் அவன் ஒருவனையே உபாயமென்றது. அப்படியிருக்கப் பிராட்டிக்கும் உபாயத்வம் சொன்னால் விரோதம். இந்த தோஷமே விசேஷணமான ச்ரீயினிடத்தில் சரணத்வஸம்பந்தத்திற்கு बाधकமாகுமென்று. இதற்குப்பரிஹாரம் अनन्येति மூலமந்த்ரத்தில் கடைசிபதத்தால் அநந்ய ப்ரயோஜநத்வம் அறிவிக்கப்பட்டது. அதாவது நாராயணன் தவிர வேறொன்றும் ப்ராப்ய மன்று என்றதாம், இது सा एव

उत्तरखण्डத்திலும் विशेषणत्वம் தவிரப் प्रसङ्गிக்கும். ஆனால் இரண்டிடத்திலும் உபலக்ஷணமானாலோ வென்னில், गुणविग्रहव्यापारविशेषங்களும் இரண்டிடத்திலும் உபலக்ஷணங்களாகப் प्रसङ्गிக்கும். உபயுக்தங்களாகையாலே அவை விசேஷணங்களென்னில்- இது पूर्वोत्तरखण्डங்களில் पत्नीसंबन्धத்திலும் துல்யம். உபயோகவிசேஷங்கள் तत्तद्वस्तुக்களுக்கு அநுரூபமான படியிலே ப்ரமாண ஸம்ப்ரதாயங்களாலேகண்டுகொள்வது,वस्त्वनुरूपமாயிறேஉபயோகமிருப்பது

---

गतिः, परायणम्, अहमेव गतिस्तेषाम् இத்யாதிஸித்தம். இது பிராட்டிக்கும் ப்ராப்யத்வமிசைவதற்கு बाधकமாம், விசேஷணத்வம் தவிர ப்ரஸங்கிக்கும் — ச்ரீக்கு விசேஷணத்வ बाधकம் இரண்டிலும் ஸமாநமென்றபடி, இங்கு ஏகாயநன் பிராட்டிக்கு ப்ராப்யத்வத்தையும் இசையாமல் இந்த தோஷத்தில் இஷ்டாபத்தி யென்று கேட்கிறான் ஆனால் இதி. இதற்கு உத்தரம் குண இதி. வாத்ஸல்யாதிகுண, திவ்ய விக்ரஹ-கடாக்ஷாதி வ்யாபாரவானான பகவான் உபாயமென்றால் குணாதிகளை உபலக்ஷணமென்று சொல்லுகிற தில்லையே ; விசேஷணமென்று தானே சொல்லுகிறது. அதுபோல் ச்ரீயும் விசேஷணமாகலாம். எம்பெருமானிடத்திற் போல் நேராக சரணத்வத்தை யிசையாமற் போனாலும் நாராயணன் சரணமாவதற்கு குணாதிகள் வேண்டியிருக்கின்றன;வாத்ஸல்யாதி குணம் இராமலே அவன்உபாயமாகான். அந்தந்த குண ஸ்வரூபத்தை சோதித்தால் அதது எப்படி உபயோகப்படுமென்று தெரியும். விக்ரஹம் ப்ரார்த்நா ப்ரணாமாதிகளுக்கு உபயோகப்படுகிறது. संनिधानादि வ்யாபாரமும் அப்படியே. உத்தர கண்டத்திலும் எம்பெருமான் ப்ராப்யமாவதற்கு= அநுபவரஸாபிவ்ருத்தி–கைங்கர்யாதிகளுக்கு குண விக்ரஹாதிகள் உபயுக்தங்களே, இப்படி பிராட்டிக்கும் ப்ராப்யத்வத்திலும் உபாயத்வத்திலும் உபயோகத்தைச் சொல்லலாம். அடியார்களை 'विश्वक्सेनादिकं सर्वं परिजनं आज्ञापयन्त्या' என்றபடி பகவத் ப்ராப்யதைக்கு அவள் ஆஜ்ஞாபநம் செய்கின்றனளே. அதுபோல் அவளுக்குக் கைங்கர்யம் செய்தால்தான் பகவான் கைங்கர்யத்தை ஸ்வீகரிப்பர். இப்படி பகவத் கைங்கர்யத்திற்கு இவளும் ப்ராப்யமாயிருக்கை உபயோகப்படுகிறது— அதுபோல் பூர்வகண்டத்தில் பகவான் உபாயமாகைக்கு இவளும் உபயோகப்படுகிறாள். சேஷியாய் கைங்சர்ய ப்ரதிஸம்பந்தியாவது போல் ஸமர்ப்பிக்கப்பட்ட ஆத்மாதிகளை ஸ்வீகரிக்கிறவளுமானால்தானே ப்ரபத்தி பூர்த்தி. இருவருக்கும் சேஷமான வஸ்துவை ஒருவர்மட்டும் ஸ்வீகரித்தலாகுமோ? स्वरूप भर.फलங்கள் மூன்றும் ஸமர்பிக்கப்படுகிறபோது மூன்றோடும் ஸம்பந்தம் இருவருக்குமாம். பரம் ஸ்வீகரித்து அவனைப் போலே நிரபேக்ஷரக்ஷகத்வம் பெறுகை लक्ष्म्या सह रक्षकः இத்யாதிஸித்தமாகையாலே அந்த ஸ்வரஸ்யத்திற்கு ஸாதகமே உள்ளது. बाधकத்திற்கு ஏது அவகாசம்? குணவிக்ரஹாதிகள் உபாயத்வோபயுக்தமாவதுமட்டும் இவள் உபாயத்வ உபயுக்தையாவது போல் உபாயத்வமும் பெறலாம்.

उपायोपेयपरமான वाक्यद्वयத்திலும் श्रुतமான இவ் விசேஷணத்தினுடைய உபயோக ப்ரகாரத்தை "வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும்"

---

உபாயத்வ உடயுர்தை யென்பதுமட்டும் கொண்டாலும் உபலக்ஷணத்வம் ஸித்திக்காது; விசேஷணத்வமேயாம். அந்தந்த குணங்களுக்கும் விக்ரஹாதிகளுக்கும் வெவ்வேறு விதமான உபயோகமிருப்பது போல் இவளுக்கும் வேறுவிதமான உபயோகம் பல வுண்டு. அதாவது இவள் சைதந்யமுடையவளாய் ईश्वरीயாய் எம்பெருமானைப் போலே சேஷியாயுமிருப்பதாலே புருஷகாரமாயிருக்கைக்கும், அவனோடு சேர்ந்து ஸ்வரூப भरादि ஸ்வீகாரத்திற்கும் உபயோகப்படுகிறாள். **ப்ரமாண ஸம்ப்ரதாயங்களிலே** என்றதை மேலே விவரிக்கிறார் **உபாயோபேய** இத்யாதியால், இப்ரமாண ஸம்ப்ரதாயங்களுக்கு அநுகூலமான தர்க்கங்களும் மேலே தெரிய வரும். முதலில் ப்ரமாண நிரூபணம். பிறகு ஆளவந்தார் இத்யாதியால் ஸம்ப்ரதாய ப்ரதர்சநம். **வேரி** இதி. திருவாய்—4-6-11. 'மாரி மாறாத' என்று பாட்டின் ஆரம்பம். வேங்கடத்து அண்ணல்விஷயமான இந்த 'வீற்றிருந்து' என்ற திருவாய்மொழி ஓதுவது காரணமாக **வேரிமாறாத**= என்றும் பரிமளம் குன்றாத தாமரைப் பூவின் மேல் நித்யவாஸம் செய்யும் பிராட்டி **வினை**=எல்லாப் பாபங்களையும் **தீர்க்கும்**=போக்குவள். இங்கு வினை யென்ற சொல்லால் உபாயவிரோதிபாபங்களைப் போல் ப்ராப்தி விரோதி பாபங்களையும் கொள்வதே ஸ்வரஸமாகையால் பிராட்டிக்கு உபாயத்வம் தெரிகிறது—उपायत्वமாவது—ப்ராப்திவிரோதிபாபநிவர்த்தகத்வந் தானே. உபாயாநுஷ்டாநத்திற்கு விரோதியான பாபங்களைமட்டும் போக்குகிறாளென்று சொல்வது, இதற்குமேல் பாசுரத்தில் உபாயாநுஷ்டாநத்தைச் சொல்வதாயிருந்தால் தகும். இத்துடன் இத்திருவாய்மொழி முடிகிறபடியால் முழுப்பலனைக் கொள்வதே தகும். இங்கே நஞ்சீயர் ஒன்பதினாயிரப்படியில், பெரியபிராட்டியார் நமக்கும் பூவின்மிசை நங்கைக்குமென்கிற மஹாகுணப்ரதிபாதகமான இப் பத்தையும் கற்றவர்களைத் தனக்கே भरமாகக் கொண்டு ஸமஸ்த துக்கங்களையும் போக்கி ரக்ஷித்தருளும்' என்று உரைத்தனர். இதே பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்தி நாலாயிரப்படியில் சீலகுணத்தின் சிறப்பை வெளியிட்டாரென்றும் ப்ரஸாதாதிசயத்தாலே ஸர்வேச்வரன் பலம் கொடுக்கும் தசையிலே அவனை விலக்கி நானே இதற்குப் பலன் கொடுக்க வேண்டுமென்று.........இத்திருவாய்மொழி கற்றாருடைய பகவதநுபவ விரோதியான ஸகல ப்ரதிபந்தங்களையும் போக்கும்' என்று விவரிக்கப்பெற்றது. **ஈட்டிலும்** இவ்வாறே யுள்ளது இப்படி எல்லோரும் ப்ராப்தி விரோதிபாபங்களையே இவள் போக்குவதாக உரையிட்டிருக்க, அதற்கு முரணாக உபாய விரோதி பாபம் மட்டும் வினையென்ற சொல்லுக்குப் பொருளாக நவீனர் சொல்வது ஸாம்ப்ரதாயிகமாகாது. இப்படி பூர்வாசார்ய வ்யாக்யாநங்களோடு இவர்கள் பக்ஷத்திற்கு விரோதமிருப்

என்றும், "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் கொண்டு நின் கோயில் சீய்த்து" என்றும் நம்மாழ்வார் அருளிச்செய்தார்.

"अलमेषा परित्रातुं राक्षस्यो महतो भयात् "என்றும், "अलमेषा परित्रातुं राघवाद्राक्षसीगणम्" என்றும் ச்ரீவால்மீகிபகவான் शरणागतिसारமான ஆதிகாவ்யத்திலே निबन्धித்தான் 'संसारार्णवतारिणीम्" என்று हिरण्यगर्भकाश्यपादிகளும்

---

பதை யறிவிப்பதற்காகவே இப்பாசுரத்தையே இந்த ஸந்தர்ப்பத்தில் உதாஹரித்ததென்று தெளிக. எம்பெருமானைத் தள்ளி இவள் தனியாக ப்ராப்தி விரோதிபாபநிவ்ருத்தி செய்யவாகுமோ வென்னில்—பிராட்டி சேராமல் எம்பெருமான் மட்டும் பாபநிவிருத்தி செய்யவாகுமோ? இருவரும் பாபநிவ்ருத்தி செய்பவராயிருக்க ஒருவர் மற்றொருவரை எதிர்பார்க்காமலும் செய்வரென்பது மற்றொருவர் இதை விரோதிக்கமாட்டாரென்ற உறுதியைத் தான் குறிக்கும். இருவரும் ஸங்கல்பிப்பவராயிருந்தாலும், நான் செய்கிறேன் என்று ஒருவர் சொன்னாலே போதும். நிவர்த்திப்பிக்கும் சக்தி அப்படி சொல்லுகிறவரிடமிருப்பது வ்யக்தமாகும். பிராட்டி வினை தீர்க்குமென்றதற்கு, பிராட்டி மூலமாகப் பிரான் வினை தீர்க்குமென்றே கருத்தென்னலாகாதென்பதைத் தெளிவிக்க வேறு பாசுரம் மேலே **நின்** இத்யாதி. 9-2-1 **பண்டை நாளாலே** என்று பாசுரத்தொடக்கம். இது கீழே உரைக்கப் பெற்றது, உன்னுடைய க்ருபையினாலும் பிராட்டியின் க்ருபையினாலும் உன் கோயிலில் கைங்கர்யம் செய்து வரும் தொண்டரென்றதால் கைங்கர்யமென்ற பலத்திற்குக் காரணமான அருள் இருவரிடமுமென்பது ஸ்பஷ்டம். **பங்கயத்தாள் திருவருளும்** என்று முதலில் கூறப்பட்டிருந்தால் புருஷகார பூதையின் அருள் என்று கல்ப்பிக்கப் பார்ப்பர். அதனால் எம்பெருமான் திருவுள்ளத்திற்குப் பின்னே இவளருளையும் சேர்த்ததால் அவனருளால் வரும் பலனுக்கே நேராக இவளருளும் காரணமென்றதாயிற்று.

எம்பெருமானிடம் விஜ்ஞாபநம் செய்யாமலே புருஷகாரத்வமின்றி வேறு விதமாகவும் பிராட்டி அபயப்ரதாநம் செய்ய வல்லள் என்பதை ஸ்ரீமத் ராமாயணத்தைக் கொண்டு நிரூபிக்கிறார் **अलमिति.** இவள் அபயப்ரதாநம் செய்தவிடத்தில் ராமனின் நிக்ரஹத்திற்கு அவகாசமே யில்லை என்றதாயிற்று இதை ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் உதாஹரிக்கப்பெற்றதென்ற கருத்தாலே உதாஹரித்தார். **संसारेति.** காச்யப ஸ்ம்ருதி. **सर्वकामप्रदां रम्यां संसारार्णवतारिणीम् । क्षिप्रप्रसादिनीं देवीं शरण्यामनुचिन्तयेत्**—எல்லாப்பலனையும் அளிப்பவளும். ஸம்ஸாரக்கடலைக் கடக்கச் செய்கிறவளும், விரைவில் அனுக்ரஹிக்கிறவளும் ரக்ஷணத்தில் ஸமர்த்தையுமான பிராட்டியை த்யாநிக்க வேண்டும். இங்கே இதர பலங்களைக் குறித்துவிட்டு அது போலே மோக்ஷத்திற்கும் காரணமென்றார். **க்ஷிப்ர ப்ரஸாதிநீம்** என்பதற்கு விரைவில் எம்பெருமான் தெளிவுபெறும்படி செய்கிறவள் என்றே பொருளென்னில், அதனால் புருஷகாரத்வம்சொன்னதால்,**तारिणीम्** என்றவிடத்தில் பரமாத்மாவைப்போல்

சொன்னார்கள். "वाचः परं प्रार्थयिता प्रपद्येन्नियतः श्रियम्" என்று ச்ரீசௌநக பகவான் விதித்தான். आत्मविद्या च देवि त्वं विमुक्तिफलदायिनी"
என்று वसिष्ठपुलस्त्यवरप्रसादलब्ध परदेवतापारमार्थ्यज्ञानமுடைய श्रीपराशरब्रह्मர்ஷி அருளிச் செய்தான். "विमुक्तिफलदायिनी" என்கிற விது आत्मविद्याविशेषणமானாலும் तत्सामानाधिकरण्यத்தாலே அது இவளுடைய विभूतिயாயிற்று श्रियःपतिதானும்
'यामालम्ब्य सुखेनेमं दुस्तरं हि गुणोदधिम्। निस्तरन्त्यचिरेणैव व्यक्तध्यानपरायणाः" ॥

---

உபாயத்வத்தைதானே சொல்லவேண்டும். वाच இதி. वाचः—வாக்குக்கு எட்டாத பரம் பொருளை வேண்டுகிறவன் அவச்யமாக லக்ஷ்மியை சரண மடைய வேண்டுமென்றார் சௌனக ஸம்ஹிதையில். இங்கே பகவத் ப்ர பத்தியை வேண்டுகிறவன் பிராட்டியைப் பற்றவேண்டுமென்று சொல் லாமல் மோக்ஷத்தை ப்ரார்த்திக்கிறவனென்று சொன்னதால், இந்த ஸ்ரீப்ரபத்திக்கு மோக்ஷமே பலனென்று தெரிகிறது. பெருமானையும் ஆச்ர யிக்க வேண்டுமே யென்னில்—அது தெரிந்ததே. அது போல் இவளையும் நியதமாக ஆச்ரயிக்கவேண்டும். வேறு பலன் போல் ஒருவரால் மட்டும் ஆகாதென்றே பொருள் கொள்ளலாம். உபாயத்வித்வம் இவ்விதம் ஸஹ்ய மென்றபடி. ஆத்மவித்யேதி வி. பு. 1-9-20. ஆத்ம வித்யையாவது பர மாத்மவித்யை. பட்டர் ச்ரீகுணரத்ந கோசத்தில் பிராட்டியைப் பற்றிப் பேசியதெல்லாம் ஏதோ ஸ்தோத்ரமே யாகும்; அதை அப்படியே கொள்ள லாகாது-என்று நினைப்பது தவறு. ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும் பிராட்டி யின் ப்ரபாவத்தை ஸ்பஷ்டமாக அருளினார் 'श्रेयःश्रीमान्' என்கிற (619) திருநாம பாஷ்யத்தில் பல வாக்யங்களோடு विमुक्तिफलदायिनी என்றும் உதா ஹரித்தாரே. அங்கே ஆத்ம வித்யைக்கு விசேஷணமாக்காமல் நேராகப் பிராட்டியின் நாமமாகத் திருவுள்ளமிருப்பதால் இவள் மோக்ஷபலம் அளிப்பதென்பது ஸ்பஷ்டம். ஆத்ம வித்யாவிசேஷணமென்கிற பக்ஷத்திலும் இவ்வர்த்தம் ஸித்திக்குமென்பர் மேலே. तत्सामानाधिकरण्यத்தாலே=பிராட் டிக்கு ஆத்ம வித்யாஸாமாநாதிகரண்யத்தாலும் ஆத்ம வித்யைக்கு विमुक्ति-फलदायिनी என்பதோடு ஸாமாநாதிகரண்யத்தாலும்; அது=மோக்ஷ ப்ர தத்வமானது, விபூதியாயிற்று=ஆத்ம வித்யை இவளால் அபிமாநிக்கப் பட்டு இவளுடைய ஐச்வர்யமானால் அதன் மேன்மையான மோக்ஷ ப்ர தத்வமும் இவளது ஐச்வர்யமே யாகும்—இவளால் அதற்கு வந்ததாகும், दायिनी என்று சொன்ன दातृत्वம் சேதநனுக்கே யாகும். அதனால் இவளுடைய தாத்ருத்வம் ஆத்ம வித்யையில் ஏறிடப்பட்டது. ஆத்ம வித்யைக்கே விசே ஷணமாகில் विमुक्तिफलसाधनமென்றே யிருக்கலாம். ஆக ஆத்ம வித்யையை மோக்ஷத்திற்கு ஸாத்யோபாயமாக ஸங்கல்பித்திருப்பவள் இவள் என்றும் தெரிகிறது. ச்ரிய:பதிதானும்=எவன் ஒருவனை உபாயமென்கிறீர்களோ அந்த பகவானே; யாமிதி;ஸாத்வ-ஸம்ஹி. (12-84) व्यक्तध्यानपरायणाः—விசத மான த்யாநத்தைப் பரமோபாயமாகக் கொண்டவர்கள் सुखेन—புருஷகார

என்று ச்ரீஸாத்வத ஸம்ஹிதையிலே **श्रीपतिरूपध्यान**த்திலே அருளிச் செய்தான். **तत्पर**ங்களான சாஸ்த்ரங்கள் நிற்க, இம்மத்யஸ்த்த சாஸ்த்ரங்கள் அதிப்ர பலங்கள். ஆளவந்தாரும், "**जगत् समस्तं यदपाङ्गसंश्रयम्**" என்றும்,

श्रेयो न ह्यरविन्दलोचनमनःकान्ताप्रसादात् ऋते-संसृत्यक्षरवैष्णवाध्वसु नृणां संभाव्यते कर्हिचित्"

என்றும் அருளிச்செய்தார். ச்ரீபாஷ்யகாரரும் ச்ரீவைகுண்டகத்யத்தில்,

"शेषशेषाशनादिकं सर्वं परिजनं भगवतस्तत्तदवस्थोचितपरिचर्यायामाज्ञापयन्त्या"

---

நிரபேக்ஷமாக **यां**—எந்த பிராட்டியை **आलक्ष्य**-த்யாநத்திற்கு விஷயமாக்கி **दुस्तरं** கடக்கவாகாத **इमं गुणोदधिम्** இந்த முக்குணக்கடலை **अचिरेण**—விளம்பமிராமல் **निस्तरन्ति** கடக்கின்றனர். ச்ரீபதிரூபத்யானத்திலே பிராட்டிக்கு விசேஷமாக உருவமைப்பானது, உபாஸனங்களில் விஷயமாகிப் பவக்கடல் கடத்தலுக்குக் காரணமாயிருப்பதால் அவளிடம் பக்தியைக் கொண்டு என்று **आलक्ष्य निस्तरन्ति** என்ற சேர்க்கையால் அறிவிக்கப்படும். இவ்வளவு ஸ்பஷ்டமான வாக்யங்களையும் புருஷகார நிலைமட்டும் கொண்டு க்லேசப்படுத்திப் பொருள் உரைப்பதென்றால் இது வேதசாஸ்த்ர-அவிரோதியான தர்க்கத்தை விட்டுக் குதர்க்கத்தாலே சாஸ்த்ரத்தைக் கலக்கும் குத்ருஷ்டி பக்ஷமாகும் அத்வைதி முதலானரும் தம் மதத்துக்குத் தக்கவாறு எல்லா வசநங்களையுமே நிர்வ ஹித்திருக்கின்றனர். ஸ்வாரஸ்யமில்லை யென்று தானே அவற்றை விடுவது. அது இதற்கும் துல்யம், ச்ரீஸூக்த-லக்ஷ்மீதந்த்ர-ஸஹஸ்ரநாமாதிகளான இவள்விஷயமாகவே வந்த ஸ்பஷ்ட ப்ரமாணங்கள் லக்ஷ்மிக்கு உபாய த்வாதிகளை வ்யக்தமாகச் சொல்லுகின்றன; ஆனாலும். அவளுக்காகவே யன்றி பல விஷயங்களைச்சொல்லவந்த சாஸ்த்ரங்களும் அவளுடைய மஹிமையையும் சொல்வதென்றால் அதற்கு ஏற்றமுண்டு; அதனால் இவற்றை யுதாஹரித் தோமென்கிறார் தத்பரங்களான இதி. ஸம்ப்ரதாய ச்ரீஸூக்திகளை யுதாஹரிக் கிறார் ஆளவந்தாரும் இதி. **जगदिति—स्तोत्ररत्नम्**, 37. **समस्तं**—ஸமஸ்தமான உலகும் எவளுடைய கடாக்ஷத்தை உபஜீவித்திருக்கின்றன. இஷ்ட ப்ராப்தி, அநிஷ்ட நிவ்ருத்தி என்னும் நன்மைகளெல்லாம் இவள் கடாக்ஷித்திருப் பதனாலே என்றபடி. இதன் விவரணமான சதுச்லோகீச்லோகம் **श्रेय** இதி. செந்தாமரைக் கண்ணனுடைய மனத்துக்கு ப்ரியையான பெரியபிராட்டியின் அநுக்ரஹமிராமல் ஐச்வர்யம், கைவல்யம், வைஷ்ணவ மார்க்கமான அர்ச்சி ராதி மார்க்கமூலமான பரமபதம் என்பவற்றில் ஒன்றும் ஒருபொழுதும் ஜீவர்களுக்குக் கிடைக்கமாட்டாது. இதில் ஸந்தேஹிக்கவுமாகாதென்றாரே. **शेष**—ஆதிசேஷன், **शेषाशन**—எம்பெருமான் உண்டு மிகுந்ததை உண்பவர் (விஷ்வக்ஸேநர்) **आज्ञापयन्त्या**—அவர்கள் தாமே ஸர்வஜ்ஞராயிருப்பதால் இங்கு ஆஜ்ஞாபநமாவது அவர்கள் தக்க பணிவிடை செய்ய இச்சிப்பதற்கு (ஸங்கல்ப்பிப்பதற்குக்) காரணமான, ஸங்கல்ப்பமுடையவளாகை. இவள் ஸங்கல்ப்பிக்கிறபடி இவர்கள் அறிந்து ஸங்கல்பித்துச் செய்கிறார்கள். இவளு

என்று भगवत्कैङ्कर्यरूप परमपुरुषार्थம் இவள்नियोगத்தின்படியே நடத்த வேணு மென்று அருளிச்செய்தார். கூரத்தாழ்வானும்,

स्वस्ति श्रीर्दिशतादशेषजगतां सर्गोपसर्गस्थिती: स्वर्गं दुर्गतिमापवर्गिकपदं सर्वं च कुर्वन् हरिः ।

यस्या वीक्ष्य मुखं तदिङ्गितपराधीनो विधत्तेऽखिलं क्रीडेयं खलु नान्यथाऽस्य रसदा स्यादैकरस्यात्तया॥

என்று संग्रहித்த அர்த்தத்தை "देवि त्वन्महिमावधिर्न हरिणा नापि त्वया ज्ञायते" என்று தொடங்கி விஸ்தரித்தார். பட்டரும்,

"ऐश्वर्यमक्षरगतिं परमं पदं वा कस्मैचिदञ्जलिभरं वहते वितीर्य ।

---

டைய ஸங்கல்பமே இங்கு—நியோக மென்னப்படும், நியோகமாவது ஆப்தேச்சை. எல்லாம் இவள்ஸங்கல்ப பாதீநமானால் நரகாதிகளையும் இவளே அனுபவிப்பிக்கிறாளென்னலாகுமேயென்ன அவற்றிலும் இவளுக்கு ஒருவித ஸம்பந்தமுண்டென்றறிவித்துக்கொண்டு மோக்ஷத்திற்கும் இவளுடைய எண்ணமே காரணமென்றறிவிக்கிறார் கூரத்தாழ்வான் இதி. श्रीः—லக்ஷ்மி யானவள் स्वस्ति—மங்களத்தை दिशतात्—அளிக்க வேண்டும். இதற்குக்காரணம் கூறுகிறார்மேலே, अशेषजगतां—எல்லாவுலகங்களுக்கும் सर्ग—ஸ்ருஷ்டியென்ன, उपसर्ग-ப்ரளயமென்ன स्थिति—இருப்பென்ன இவற்றையும், ஸ்வர்க்கத்தையும் நரகத்தையும் आपवर्गिकपदम् மோக்ஷஸ்த்தாநத்தையும் எல்லாவற்றையும் படைக்கும் பகவான் எவளுடைய முகத்தைக் கண்டு எவளுடைய இங்கிதங் களுக்கு வச்யனாய் எல்லாம் செய்கிறானோ; अन्यथा—இப்படியிராமற் போனால் इयं क्रीडा இந்த விளையாட்டானது, तया அவளோடு ऐकरस्यात्—ஏகாபிப்ராய முடையனாயிருக்கையாலே अस्य—இவனுக்கு रसदा-ஆநந்தத்தை விளைவிப்பதாக न स्यात् खलु-ஆகாதன்றோ. ஆக இவள் கொடுப்பவளென்றதாயிற்று. देवि இதி. ச்ரீஸ்தவம் 8.देवि—பிராட்டியே! உன் மஹிமையின் எல்லையானது हरिणा—எம்பெருமானாலே न ज्ञायते—அறியப்படுகிறதில்லை. त्वयाऽपि—உன்னாலும் அறியப்படுகிறதில்லை. அறியப்படவில்லை யென்றால் सर्वज्ञत्वத்திற்கு ஹாநி வருமென்பதில்லை. இருப்பதை அறியாமற்போனால்தானே ஸர்வஜ்ஞத்வ ஹாநியாம். இராதவஸ்துவை அறியாமலிருப்பதே தகும். ஸர்வஜ்ஞனும் ஆகாசத் தாமரையை யறிந்திருக்கிறானா என்று கேட்டால், இல்லை யென்றுதானே சொல்லவேண்டும். ஆக உன் மேன்மைக்கு எல்லையே இல்லையாகையால் இருவரும் அதை யறியாமலிருப்பது தகுமென்றபடி, இதனால் எம்பெருமானின் மஹிமைபோல் பிராட்டியின் மஹிமையும் நிரவதிகமென்று சொல்லியிருப்பதால் அளவிட்டுக் கூறுவது உசிதமாகாது நிக்ரஹிக்கிறவிஷயத்திலும் அவளுக்கு சக்தி பூர்ணமாகையால் மஹிமைக்குக் குறையில்லை तपसश्च अनुपालनात् न त्वा कुर्मि दशग्रीव भस्म என்றபடி அவள் மஹிமையிருந்தும் நிக்ரஹம் செய்வதில்லை. மோக்ஷமளிப்பது மஹாநுக்ரஹமன்றோ; அதை ஏன் விடவேண்டுமென்றதாம். இம் மோக்ஷ ப்ரதாநம் இவளுக்கு பட்டராலும் அருளப் பெற்றதென்கிறார் ஐச்வர்யம் இதி 58. अम्ब—தாயே! ऐश्वर्य—ப்ராக்ருத

अस्मै न किंचिदुचितं कृतमित्यथाम्ब त्वं लज्जसे कथय कोऽयमुदारभावः ॥”

என்று श्रुतिயில் उदारशब्दத்துக்கு வ்யாக்யாநம் பண்ணினார். श्रीसूक्तभाष्यத்தில் பெரியஜீயரும் अपेक्षितार्थங்களெல்லாம் उपपादित्தார்.

---

புருஷார்த்தத்தை. अक्षरगतिं—ஜீவாத்மானுநுபவமாகிற கைவல்யத்தை परमं पदं वा—அல்லது பரமபதத்தை अञ्जलिभरं—அஞ்ஜலி யென்கிற பெரும் சுமையை वहते—சுமக்கின்ற कस्मैचित्-ஒருவனுக்கு वितीर्य—அளித்து விட்டு अथ—பிறகு अस्मै—இவ்வஞ்ஜலி சுமந்தவனுக்கு. उचितं किंचित्—தக்கதொன்றும் न कृतम् इति—அளிக்கப்படவில்லை யென்று त्वं लज्जसे-நீ வெட்கப்படுகிறாய் போலும். कथय—சொல்வாயாக. कः अयं उदारभावः என்ன ஆச்சர்யமானது இவ் ஔதார்யகுணமென்றார். இந்த ச்லோகம் ச்ரீஸூக்தத்தில் चन्द्राम्—என்கிற மந்த்ரத்தில் उदारां என்ற சொல்லுக்கு வ்யாக்யாநமாகும். இங்கே மூன்று பலனைச் சொல்லி कस्मैचित् என்று ஒருவனைக் குறித்ததால் फलसमुच्चयம் தெரிகிறது. ஒன்றோடொன்று சேராத பலன்களுக்கு ஸமுச்சயம் எங்ஙனே என்ற கேள்வி யெழாமைக்காக वाசப்தப்ரயோகம். அதனால் ஒரே ஸமயத்தில் மூன்றில்லை யென்றதாம். முதலில் ஐச்வர்யமளித்தாள்; எல்லா ஐச்வர்யத்தையும் அளித்த பிறகு. இவ்வளவு போதாதென்று கைவல்யமளித்தாள்; அக் கைவல்யமும் அழிந்தது கண்டு மேலே நித்யமான பலன் அளித்த பிறகும் லஜ்ஜை யென்றபடி: ஒவ்வொருவனுக்கு ஒவ்வொரு பலன் கொடுப்பதானால் வெட்கமின்றி வேறு பலனையும் அளிக்கலாமே. அளிக்க முடியாதென்றால் பெரும்பலனையே முதலில் அளிக்கலாமே. இப்படி மேன்மேல் பலனளித்ததைச் சொன்னதால் கைவல்யம் அநித்யமென்றே பட்டர் திருவுள்ளம். இங்கே நமக்கு ப்ரக்ருதமானது ஐச்வர்யாதிகளைப் போல் மோக்ஷ பலனையும் இவள் அளிப்பது ஸ்பஷ்டமென்பதே. சதுர்முகஸ்தாநம போன்ற ஐச்வர்யவிஷயத்திலும், ஈச்வரன் ஒருவனே ப்ரபுவாகையால் அதைப் பிராட்டி யளித்தாலும் अनन्योपायत्वभங்க மாம். அதை யளிக்கலா மாகில் இதையும் அளிக்கலாம்—இது உதாரசப்தவ்யாக்யாநமாகையாலே பிராட்டி மோக்ஷமு மளிப்பவளென்பதற்கு ச்ருதிப்ரமாணமும் குறித்தாயிற்று.

இவ்வர்த்தத்தை ஸ்பஷ்டமாக ச்ரீஸூக்தவ்யாக்யாநத்திலே வரைந்து மற்றும் பல மந்தரங்களிலும் இவ்வளவு மேன்மையைப் பிராட்டிக்குப் பெரியஜீயரும் அருளினரென்கிறார் ஸ்ரீஸூக்தேசி. இங்கே பெரிய ஜீயரும் என்றது நஞ்ஜீயரை என்பர். நஞ்ஜீயர் ச்ரீஸூக்தபாஷ்யம் அருளியிருப்பதால் அது தகுமென்பர். அக் காலத்தில் அவருக்கும் பெரியஜீயர் என்ற ப்ரஸித்தி யிருக்கலாம். சரம ச்லோகாதிகாரத்திலே பெரிய ஜீயரென்று குறிப்பிட்டு श्रीपराशरभट्टार्य என்று தொடங்கி அவர் செய்த ஆஹ்நிகத்தைக் காண்பிப்பர். அப பெரியஜீயர் பட்டருடைய சிஷ்யரான நாராயண முநிகளென்று ச்ரீபாஞ்சராத்ர ரக்ஷையில் மூன்றும் அதிகாரத்தில் தெளிய

இப்படி ஶ்ருதிஸ்ம்ருதிஸம்ப்ரதாயம் நிற்கிற நிலைகளைக்கொண்டு ஶ்ரீமச்சப்தத்தில் சொன்ன விசேஷணத்துக்கு விக்ரஹாதிகளுக்குப்போலே வஸ்துஸ்வரூபமான உபயோக விசேஷங்களை ஸஹ்ருதயர் அறிந்துகொள்வது.

---

வரும். இவ்வதிகாரத்திலே மேலே இப் பிராட்டிவிஷயமாகவே "ஆச்சான் பக்கலிலே கேட்டு நஞ்சீயர் ஸங்க்ரஹித்தார்" என்று அருளப்போவதால் இங்கிவர் நஞ்சீயரைவிட வேறொருவர் என்று சொல்லக் கூடுமாகிலும் இவரும் ச்ரீஸூக்தபாஷ்யம் எழுதியிருக்கலாமாகையாலே நமக்கொரு விரோதமில்லை, இவரும் பட்டர்சிஷ்யரான படியாலே அவருக்குப்பிறகு இவரைக் குறித்தது. எல்லா மென்ற பதத்தினுல் உபாயத்வமுண்டென்பதை என்றதாயிற்று. இதுவிஷயத்திலே ச்ருதிகளாவன ச்ரீஸூக்தாதிகளாம்.

இதன்மேல் கேள்வி—ஸம்ப்ரதாயத்தில் ப்ராப்யத்வம் போலே உபாயத்வமும் ஸம்மதமானுல் அஷ்ட ச்லோகியில் த்வயவ்யாக்யானத்தில் ஈஶானாம் ஜகதாம் என்ற ச்லோகத்தில் முதலில் புருஷகாரமாகைக்கு லக்ஷ்மீப்ரபத்தியை அருளிச்செய்துவிட்டு பகவத்ப்ரபத்தியில் லக்ஷ்மியைச் சேர்க்காமல் எம்பெருமானைமட்டும் கூறி உத்தரகண்டத்தில் ஶ்ரியா ச ஸஹிதாய என்று ப்ராப்யத்தில் மட்டும் லக்ஷ்மியைச் சேர்த்தது விரோதிக்குமே இதனுல் பட்டரின் கருத்து இவ்வாறாக வேண்டும்—அநந்யோபாயத்வம் அநந்யப்ரயோஜநத்வம் என்ற இரண்டும் ப்ராமாணிக மானுலும் த்வயத்தில் பூர்வகண்டத்தில் புருஷகார ப்ரபத்திக்காக ஶ்ரீமத் என்ற ப்ரயோகமென்று நிர்வஹிக்கலா மாகையால் பகவச்சரணாகதியில் ச்ரீக்கு ஸ்தானம் அவச்யமில்லை; உத்தரகண்டத்தில் ச்ரீமத் பதத்திற்கு இப்படி வேறு ப்ரயோஜநமிராமையால் அது வீணாகாமைக்காக—அநந்யப்ரயோஜநத்வத்தை விட்டு ப்ராப்யத்வம் ஸஹிக்க வேண்டிய தாயிற்று. சரணுகதியில் ச்ரீக்கும் ஸ்தானத்தைக் கொண்டால் குணவிக்ரஹங்களுக்குப் போலே அவளுக்கு ஒரு ப்ரயோஜநம் சொல்லவேணும். புருஷகாரத்வமான உபயோகம் முன்னமே முடிந்தது. ப்ரபத்தி காலத்தில் அவனுடைய காருண்யத்தை அபிவ்ருத்தி செய்வதில் உபயோகமென்னில்—அகதிரக்ஷணத்திற்காகவே சரணுகதி விதிக்கப்பட்டதால் உலகிற் போலும் சாஸ்த்ர பலத்தாலேயும் சரணுகதத்ரோஹம் தகாதாகையாலும் வ்ரதம் மம என்று சொன்ன ஸர்வேச்வரனுக்குத் தானே காருண்யாபிவ்ருத்தி வருமாகையால் இவள் எதற்காக? அப்படி இசைந்தால் முன் புருஷகார ப்ரபத்தி எதற்காக? ஆக அவனுக்குப் போலே இவளுக்கும் பரஸ்வீகாரமும் ரக்ஷணஸங்கல்பமுமுண்டென்று உபாயத்வத்தை இசைய வேண்டும். இப்போது அநந்யோபாயத்வத்திற்கு பங்கமே. இப்படி ச்ரீமத்பதம் அந்யதாஸித்தமாகையால் பல வசநங்களில் பிராட்டிக்கு உபாயத்வம் ஏற்பட்டாலும் அது பரம்பரயா உபாயத்வமே என்றவாறு. இக் கேள்வியினுல் ஸித்தித்ததாவது பகவச்சரணுகதியில் லக்ஷ்மி விஷயமாகாள்; விஷயமானுல் விசேஷணமாகவேண்டும்; அப்போது உபாயத்வம் 'ருமென்றதே.

भरस्वीकाररहितं रक्षासङ्कल्पवर्जितम् । गुणादिकमिहेष्टं हि शरण्यस्य विशेषणम् ॥
ऐकरस्यजुषोः शेषिदम्पत्योः सर्वकर्मसु । विशेषणविशेष्यत्वं श्रुतं कस्मान्न रोचते ॥

---

இதைப் பரிஹரிப்பதற்தரக, லக்ஷ்மீவிஷயகமுமாகலாம் விசேஷணமு மாகலாம், उपायद्वित्वம் வந்தாலும் குற்றமில்லை. வராமலுமிருக்கலாம். பட்ட ருடைய வசநமே பட்டார்ய வசநாந்தரதுக்கும் வெகு ப்ரமாண ஸம்ப்ரதாய வசநங்களுக்கும் விரோதமிராதபடி வேறு தாத்பர்யத்தில் வந்ததாய் अन्यथा सिद्धமென்ன வேண்டுமென்ற கருத்தினால் சில காரிகைகளை யருளிச்செய்கிறார். பிராட்டி இங்குவிசேஷணமே, உபாயமே, भरस्वीकार.रक्षासंकल्पங்கள் அவளுக்கு முண்டு என்பதே நாம் நிரூபிப்பது; ஆனாலும் உபாயமென்றால் भरस्वीकारादिகள் வந்திடும், விசேஷணமென்றால் உபாயமாயிடுமென்று நினைப்பது தவறு. இது அநிஷ்டமன்றென்பதோடுவ்யாப்திக்கு भङ्गமும்காண்கிறதென்றுகாரிகாபிப்ரா யம். இது ப்ராஸங்கிகம்.மற்றது மேலே கூறப்பெறும் भरेति. உபாயகார்யமான भरஸ்வீகாரமாவதுभरமான பக்தியின் ஸ்தாநத்தில் இருக்க இசைவது; அதாவது பலனை யபேக்ஷிக்கிறவன் भरத்தை யநுஷடிக்க வேண்டாமென்று அநுமதி யளிக்கை; ரக்ஷணஸங்கல்பமாவது सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்றது. இவ்விரண் டையும் குணவிக்ரஹாதிகள் செய்ய வியலா. ஆயினும் சரணாகதி யநுஷ்டாந த்தில் அவைகள் தோன்றி ஈச்வரனுக்கு விசேஷணமாகை ஸர்வஸம்மதம். அப்படியிருக்கப் பிராட்டியும் அதில்தோன்றி விசேஷணமானாலென்ன? குண விக்ரஹங்களுக்கு சரண்யன் செய்யும் ரக்ஷணத்தில் உபயோகமிருப்பதாலே उपायत्वोपयुक्तங்களாய் விசேஷணமாகக் கூடும்; பிராட்டிக்கு உபயோக மென்ன எனில்-இந்த சங்கையை ஸங்க்ரஹமாகப் பரிஹரிக்கிறார். ऐकरस्य...सर्व-कर्मसु. தாங்கள் செய்யும் எந்தக் கார்யத்திலும் ऐकरस्य जुषोः–பரஸ்பர ஸம்மதி யாலே ஸமாநமாக லீலாரஸ भोगरसங்களைப்பெறுகின்ற शेषिदम्पत्योः–எல்லோ ருக்கும் ஸமமாய் சேஷிகளான இருவர்களில் विशेषणविशेष्यत्वं–ஒருவர் விசே ஷணமாய் ஒருவர் விசேஷ்யமாகை श्रुतं—ஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. कस्मात्—ஏன், न रोचते—ப்ரமாணவச்யருக்கு ப்ரியமாகாமலிருக்கும். ஒவ்வொரு வரும் மற்றவருடைய ப்ரீதிக்கு அநுகூலமாகச் செய்து கூடி ஸந்தோஷி ப்பதால் பிராட்டியின் ஸம்மதியும் ப்ரீதியும் அறிவது ஈச்வரனுக்கு உபாய மாகைக்கு வேண்டியிருப்பதால் குணாதிகளைப் போலே இவளும் விசே ஷணமாகலாம். துல்யமான சேஷித்வமும் துல்யமான ரஸாநுபவமுமிருந் தாலும் दम्पतिயாயிருப்பதால் समप्रधानமாகாமையாலும் விசேஷணமும் விசேஷ்யமுமாய் நிர்தேசிக்கை தகும். இனி அசேதநமான குணாதிகள் விசேஷணமாவது போல் சேதநன் விசேஷணமாகத் தகாது. விசேஷண மாகக்கொள்ளப்படும் சேதநன் விசேஷ்யத்தைப் போலே भरஸ்வீகாராதிரூப உபாயத்வமுள்ளதாகில் ஸமப்ரதாநமாகும். அதனால் उपायद्वित्वं வரும். புருஷ கார மாகைக்காக அநுஸந்திப்ப தென்னில்—முன் செய்த புருஷகாரப்ர

प्रतर्दनादिविद्यासु वेद्येऽपि परमात्मनि । अचेतनवदिच्छामश्चेतनं च विशेषणम् ॥
इत्थं प्रपत्तिविद्यायां तत्तन्मन्त्रानुसारतः । विभुः पत्न्या गुणाद्यैश्च विशिष्टो विषयोऽत्र नः ॥

---

பத்தியாலே அது ஸித்தமாகையால் பகவச்சரணாகதியில் பிராட்டியை அதற்காக விசேஷணமாக்க வேண்டுவதில்லை. ஆக ஈச்வரமாத்ர விஷயமேயாகும் சரணாகதி வித்யை என்பதற்கு ஸமாதாநம் प्रतर्दनेति. ப்ரதர்தந வித்யையில் तं मां आयुः अमृतं इत्युपास्स्व என்றதால் பரமாத்ம விசேஷணமாக அசேதநமான ப்ராணனுக்கும் சேதநனான இந்த்ரனுக்கும் உபாஸநா விஷயத்வமுண்டு. अथर्वशिरஸ்ஸில் சொன்ன ருத்ர வித்யையில் பரமாத்ம விசேஷணமாக ருத்ரனுக்குத் தோற்றமுண்டு. அந்தச் சேதநர்கள் மோக்ஷப்ரதாநஸங்கல்பமுள்ளவருமல்லர்; புருஷகாரத்வாதி–உபயோகமுமில்லை. ஆனாலும் உபாஸநத்தில் தோன்றி விசேஷணமென்னப்படுகிறார்கள். இப்படி உபாயத்வ ஸம்பந்தமிராமற் போனாலும் ஞானத்தில் விசேஷணமாகை சேதநருக்கு உண்டாகையால் உபாயத்வ ஸம்பந்தமிராமையைக்கொண்டு விசேஷணத்வத்தை நிரஸிக்கமுடியாது இத்தமிதி. "उपासाऽविद्यात्" என்று சொன்னபடி பலவித பக்தி வித்யையிற்போல் प्रपत्ति विद्यायां शरणागति என்கிற உபாயமான ஜ்ஞாநத்திலும் तत्तन्मन्त्रानुसारतः–எந்தெந்த மந்த்ரத்தில் எந்தெந்த குணத்தையும் விக்ரஹத்தையும் श्री.भू नीला.शेष.गरुड सुदर्शनादि சேதந வஸ்துவையும் குறித்திருக்கிறதோ அந்தந்த மந்த்ரத்தில் அந்தந்த சேதநாசேதநங்கள் தோன்றுவதால் விசேஷணமேயாகலாம். அதற்கு ப்ரயோஜநமென்னவெனில்—'न हि प्रयोजनानुगुणा प्रमाणप्रवृत्तिः; प्रयोजनं तु प्रमाणानुगुणम्. என்ற ஸமந்வயாதிகரண ஸ்ரீபாஷ்யத்தை நினைக்க; நமக்கு ப்ரயோஜநம் தெரியவில்லையென்று ப்ரமாணத்தைத் திருத்தலாகாது. அப்படியாகில் த்ருணத்தின் दर्शनத்தை காஞ்சநத்தின் தர்சநமாக ஒருவன் கொள்ளுவதாம். ப்ரமாணத்தில் கண்டபடிகொண்டால்தான் விதிப்படி நடப்பதால் ஃபலஸித்தியாம். ஆகையால் இதர மந்த்ர ப்ரபத்தியிற் போலே இந்த த்வய மந்த்ர ப்ரபத்தியில் குணாதிகளும் பிராட்டியும் விஷயமாகலாம். இருவரையும் ஸமப்ரதாநமாகச் சொல்லும் மந்த்ரமாகில் அப்படியே அவர்களை பாவிப்பது. அப்போது உபாயத்வித்வம் வருமேயென்னில், பரஸ்வீகார ரக்ஷண ஸங்கல்பங்கள் எங்கு ப்ராமாணிகமாகலாமோ, அங்கு அவற்றை இசைந்து உபாயத்வித்வம் இஷ்டமென்றே சொல்லவேண்டும். அல்லது அந்த ஸங்கல்பங்களிருந்தாலும் உத்தமசேஷியான ஈச்வர ஸங்கல்பமும் அவச்யமாகையால் அதன் ப்ராதாந்யத்தைக் கொண்டு அநந்யோபாயமென்பதென்னலாம். முக்தனுக்கு சரீரம் கேவல ஈச்வர ஸங்கல்பாதீநமாகும்; சில ஸமயம் ईश्वरसङ्कल्पाधीनस्वसङ्कल्पத்தாலுமாகும். அதனால் स्वसङ्कल्पம் அகாரணமென்றோ உபாயத்வித்வமென்றோ சொல்வதில்லை. ஸங்கல்ப சக்தியில்லாத மற்ற சேதநர் விசேஷ்யமாகத் தோன்றினாலும் உபாயமாகார். பஞ்சாக்நிவித்யையில், விசேஷ்யமாகத் தோன்றும் ஜீவன் உபாயமாகிறதில்லை. ப்ரபத்தி மந்த்ரத்தில்

சொல்லாமற் போனாலும் **सत्यत्वादिस्वरूप निरूपक**தர்மங்கள் போலே பிராட்டியும் **स्वरूपनिरूपक**மாக எல்லா பக்தி யோகங்களிலும் போலே ப்ரபத்திகளிலும் அநுஸந்திக்கப்படுவது ஸித்தமாகையாலும். இங்கே **श्रीमते** என்றதாலும் நாராயணனுக்கு ப்ரகாரமாக ச்ரீயின் அநுஸந்தாநம் அவச்யமாகிறது. உத்தர கண்டத்திற் போலே துல்யமான ப்ரயோஜநம் வரக்கூடுமாகில். அந்த ஸ்வரஸமான அர்த்தத்தை விடாமலிருப்பதே உசிதம்.

இப்படி பிராட்டியும் விஷயமாய் விசேஷணமாகில் பட்டர் அஷ்ட ச்லோகியில் பகவத் சரணாகதியில் பிராட்டியை ஏன் சேர்க்கவில்லை யென்னில்— அது **अन्यथासिद्धम्**. எப்படி யென்னில்—அங்கே **नित्यानपायां श्रियं संश्रित्य** என்று **श्रीप्रपत्ति**யை சரணாகதிகத்யத்திற் போல் அருளிச்செய்திருப்பிரே, அது எப்படி **द्वयमन्त्रार्थ**மாகும்? **श्रीमान्** என்று ச்ரீயைப் புருஷகாரமாகக் கொண்டவனென்று சொல்வதாலும் அதற்காக சரணாகதி இங்கு அர்த்தமாகுமோ. வசநாந்தரத்தாலேற்பட்ட புருஷகார ப்ரபத்தியை **द्वयार्थ**மாகச் சொல்லலாகாது. இனி ச்ரீவிசிஷ்ட நாராயணனை உபாயமாகப் பற்றுகிறேன் என்றதாயிற்று. ச்ரீயின் உபாயத்வமானது ப்ரபத்தி ஸித்திக்காக; நாராயணனின் உபாயத்வமானது மோக்ஷஸித்திக்காக என்னில்—அப்போது மந்த்ரத்தில் ச்ரீக்கு விசேஷணத்வமே சொன்னதாகும். கீழ்ச்சொன்ன ப்ரமாணங்களாலே அவளுக்கும் **भर**ஸ்வீகாராதிகளுண்டாகையால் அவள்விஷயத்தில் பண்ணின ப்ரபத்தி **पुरुषकारत्व.मोक्षोपायत्वोभयसिद्धि**க்காகவென்றும் பிறகு பகவானிடம் ப்ரபத்தி அவனும் மோக்ஷோபாயமாகைக்காக வென்றும் இந்த ச்லோகத்திற்குப் பொருள் கொள்ளலாம். அல்லது புருஷகார ப்ரபத்தி **द्वयार्थ**மாகாதாகையால் அதை விட்டு. அது வசநாந்தர ஸித்தமென்று உபேக்ஷித்து, 'மோக்ஷத்திற்காக இருவரிடம் சரணாகதி பண்ணவேண்டும். அது விசேஷணத்வ ஸ்வபாவத்தாலேற்படுகிறது. ஆக இந்த சரணாகதி ச்ரீஸம்ச்ரயணமும் ஈச்வர ஸம்ச்ரயணமுமாகும்' என்று அறிவிப்பதற்காக **श्रियं संश्रित्य हरेराश्रये** என்றது. விசதமாக்குகைக்காகப் பிரித்து ச்சொன்னபடியாய் **संश्रित्य** என்று உத்தரகாலம் விவக்ஷிதமன்று. இவ்வளவால் **'पद्मायाः तव च चरणौ नः शरणयन्'** என்ற பட்டருடைய லக்ஷ்மீகல்யாணச்லோகார்த்தமே இங்கும் சொன்னதாகும்.

இங்கு இத்யாதி. பிராட்டிக்கு **भर**ஸ்வீகாரரக்ஷணஸங்கல்பங்கள் இருப்பது உசித மென்று **ऐकरस्यजुषोः शेषिदम्पत्योः** என்றவிடத்தில் ஸூசிக்கப்பெற்றது. அதை விவரிப்போம். இருவரும் சேஷியானபடியாலே அங்கு சேஷித்வம் **उभयाधिष्ठानं च एकं शेषित्वं** என்றபடி ஒன்றேயாகையாலே இருவருக்கும் சேர்த்து ஆத்மஸமர்பணம் செய்ய வேண்டும். இங்கு **समर्पितात्मस्वीकार**ம் இருவருக்கும் கார்யமாகும் இப்படியே **फल**மான கைங்கர்யத்திற்கு இலக்காயிருக்கை இருவருக்குமாகையால் **समर्पितफल**ஸ்விகாரமும் இருவரிடமே,

இவ்விரண்டும் பக்தியோகத்திலுமுண்டு. பக்தியோகத்தில் எங்கும் பிராட்டி நியமேந விசேஷணமாக த்யானிக்கப்படுவது ஸர்வஸம்மதம். பக்தியினுடைய கார்யமாவது சேஷி ப்ரஸாதம். அதாவது நிக்ரஹ நிவ்ருத்தி. ஒருவரையும் நிக்ரஹம் செய்யாத லக்ஷ்மியிடம் நிக்ரஹ ப்ரஸக்தி யேதென்னில்— நேராக ஒருவரை நிக்ரஹிக்காமற் போனாலும் பதிமூலமாக நிக்ரஹம் செய்விப்பது அவளுடைய க்ருத்யம். நிக்ரஹிக்க வேண்டியவர்களை நிக்ரஹித்தேயாகவேண்டுமென்கிற எண்ணம் அவளுக்குமுண்டு. ஸீதையின் அவதாரமே ராவண ஸம்ஹாரத்திற்காக. அதற்காக ப்ரேரண வ்யாபாரம் இவளுக்கு ஸுநிச்சிதமாகையால் மோக்ஷோபாயநிஷ்டன்விஷயத்திலே அந்தந்த நிக்ரஹ வ்யாபார நிவ்ருத்தி இவளும் செய்தாகவேண்டும். அதுபோல் எல்லா விதமான ஐச்வர்ய பலன்களையும் இவள் அளிப்பவளாகையால் பக்தனுக்குள்ள ஸஞ்சித புண்யங்களின் பலன்கள் இவள் அளிக்கவேண்டியவையாயிருப்பவற்றை இனி இவனுக்கு அளிப்பதில்லை யென்று அது விஷயத்திலும் நிவ்ருத்தி இவள் செய்யவேண்டும் இப்படி ப்ரீதிகோப நிவ்ருத்திகள் இவளுக்கும் வேண்டி யிருப்பதால் இவற்றைவிட ஈச்வரனுடைய ப்ரீதி கோபங்கள் அதிகமானாலும் இருவருடைய ப்ரீதிகோப நிவ்ருத்தியும் வேண்டியிருப்பதால் ப்ரபந்நருக்கும் இவள் பக்திஸ்தாநத்தில் ஈச்வரனைப் போலிருந்து உபாயமாகை அவச்யமாகிறது. அதனால் இருவரும் அளிக்க வேண்டிய பலனில் பதி அளிப்பதற்கு முன்னே தான் அளிக்க முன் வருகிறாளென்று 'வேரி மாருத' என்ற பாசுரத்தில் நஞ்சீயர் முதலானோர் சொன்னதும் பொருந்தும் சிற்சில அதிகாரிவிஷயத்தில் பிராட்டி ஸங்கல்பமே போதுமென்று அவளிடம் चातुर्यातिशयத்தாலே பெருமாள் நினைப்பராகில், அது தகாதென்று அவனை நாம் சிக்ஷிக்கக்கூடுமோ, யாகத்தில் பத்நியினிடம் அநுமதியைப் பெற்றுப் பதியே दानம் செய்வது போல் இருவரும் पत्नीयजमानौदीक्षित ரானாலும் இவளுடைய அநுமதியின் மேல் ஈச்வரனே அளித்தால் போதாதோ என்னில்—யாகத்தில் இருவரும் தானம் செய்வதே ஸர்வஸம்மதம். சில விஷயத்தில் தனக்குத் தெரியாமையாலும் தான் நெருங்கியிராமையாலும் பத்நி அநுமதி அளிப்பது உண்டாகிலும், அப்படி பிராட்டிக்கு அஜ்ஞாநமும் அசக்தியும் அஸந்நிதாநமும் இராமையாலே அவளே அளிக்கத் தட்டென்? அப்போதும் निग्रहोपायत्वनिवृत्तिயும் புண்யபலாநுபவ ப்ரதாந நிவ்ருத்தியும் இவளுக்கிருந்தாக வேண்டுமே. மற்ற சேதநர்களுக்கு இப்படி ஸஞ்சித கர்ம நிவ்ருத்தி செய்வதிலே ஸம்பந்தமிராமையால் அவர்கள் விசேஷணமானாலும் உபாயமாகார், இதனால் ச்ரீமத் என்பது உபாயத்வ பரமே. இதனால் மற்றொரு சங்கையும் போம், அதாவது—

श्रीசப்தத்தில் श्रीयते = அடையப்படுகிறாளென்கிற வ்யுத்பத்தியால் பிராட்டி விஷயத்தில் புருஷகாரப்ரபத்தி ஸித்திக்கிறது அவள் புருஷகாரமாயிருப்பது श्रुति ப்ரத்யத்தால் அறிவிக்கப்பெற்றது. ஆக இந்த श्रीमच्छब्दத்தைக்கொண்டு

ர-86

கவென்று நினைத்து நிந்தித்ததென்னில் அதுவும் अत्यन्तानुपपन्नम्; எங்ஙனே யென்னில்–अभिचारादिகள் फलविशेषபடியாகவிறே अनर्थहेतुக்களாயிற்று இங்குப் फलம் மோக்ஷமான படியாலே அம்முகத்தால் अनर्थप्रसङ्गமில்லை. पञ्चाग्नि-

---

இவ் வழியைக் காட்டிற்று. இதை யநுஷ்டித்துப் பலன் பெற்றானேயில், சாஸ்த்ரங்களில் மற்ற அம்சங்களிலும் அவனுக்கு நம்பிக்கையுண்டாயிடும். அதுபோல் ஸ்வப்ரயத்நமேயின்றி ஸித்தோபாயத்தாலேயே மோக்ஷம் வருவதாயிருந்தும் தம் ப்ரயத்ந மூல மாகவே பலன் பெறுவதைக் கண்ட அவிவேகிகள் ஏதேனும் வ்யாபாரம் செய்யவேண்டுமென்று நினைத்திருப்பதால், பிள்ளைகளுக்கு ப்ரியமான வஸ்துவிலே மருந்தைக் கலந்து கொடுப்பது போல் அவர்களுக்கிஷ்டமான உபாஸநத்தோடு ஸித்தோபாய ஸ்வரூபத்தையும் கூட்டி உபாஸந உபதேசம் செய்தது ஆக ஸித்தோபாயமே பலத்திற்குக் காரணம். மருந்துடன் கலந்த ப்ரிய வஸ்து ரோகநிவ்ருத்திக்குக் காரணமாகாதது போல் உபாஸநம் காரணமாகாது. விவேசநம் செய்தால் अभिचारத்தைவிட உபாஸநம் கொடியதுமாகும். அது தோல் புரையே போம்; இது மர்மஸ்பர்சி, அபிசாரத்தால் சத்ருவுக்கு தேஹநாசமே யன்றி ஆத்ம ஹாநி யில்லையே. உபாஸநரூப ஸ்வவ்யாபாரமானது அத்யந்த பாரதந்த்ர்ய ரூப ஸ்வரூபநாசகமாகையாலே மிகவும் பாதகமாமே அதனாலேயே உபாஸநத்தைப் பாதகமாகக் கருதி அதை விடும்படி தர்மபுத்ரநுக்குப் பிதா உபதேசம் செய்தானென்று ஆக்ஷேபம். ஏகமாகையாலே இது எலுமிச்சம் பழம்கொண்டு அரசனிடம் அணுகு மவனுக்கு அரசன் ராஜ்யமளித்தால் அதற்கு அப் பழம் ஈடாகுமோ. அது போல் அழியாத பரிபூர்ண ப்ரஹ்மாநுபவத்திற்கு உபாஸநம் ஈடான காரணமாகுமோ. உபேயமான பரப்ரஹ்மத்திற்கு ஈடான உபாயம் அதேயாகும் அதனாலும் உபாஸநம் காரணமாகாது அதனால் தான் ப்ராப்ய ப்ராபக ஐக்யத்தை சாஸ்த்ரம் சொல்லுமென்றபடி. अथ पातकेति வி. த. 64-72. இந்த ச்லோகத்திற்கு இப் பூர்வபக்ஷி கொண்ட பொருளாவது பாரத = யுதிஷ்டிரனே! பாதகமாகையாலே விவேகியாய் அசற் கஞ்சியுள்ள நீ வேறு வ்யாபார மெல்லாம் விட்டு நமக்கெல்லாம் நாராயணனே என்ற பாவத்துடன் வெறுமனே இரு என்றதாம். இந்த ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கக் காரணங்களைக் கூறுகிறார் எங்ஙனே இத்யாதியால். அபிசாரத்தைவிட அதிகமான அநர்த்தம் உபாஸநத்தினால் என்றது தவறு. மோக்ஷத்திற்காக விதிக்கப்பட்ட உபாஸநத்தை நிஷித்தமென்றும் அநர்த்தத்திற்குக் காரணமென்றும் எங்ஙனே கூறுவது? அபிசாரத்துக்கு பலனை அநர்த்தமென்பது கண்கூடு. இங்கு அநர்த்தமென்ன? பாரதந்த்ர்ய ஸ்வரூப நாசம் பலனென்னில், பரதந்த்ரனாகையாலே ஆஜ்ஞா — அநுஜ்ஞா கைங்கர்யங்களைப் போல் செய்கிறானென்று பாரதந்த்ர்ய ரக்ஷணமேயாகும். உபாஸநத்தில் அவன் ஏவியிருக்க அதை யுபேக்ஷிப்பதே ஸ்வாதந்த்ர்யமாய் பாரதந்த்ர்ய நாசகமாகும் शरणं व्रज என்று ஸ்வப்ரவ்ருத்திநிவ்ரு

विषयத்திலே एकफலத்துக்கு गुरुவாயிருப்பதொன்றை உபாயமாகக் காட்டி லகுவாயிருப்பதொன்றிலே ருசியைப் பிறப்பிக்கிறதென்கை विवक्षितविपरीतம். अंशத்திலே अङ्गिफलनिर्देशமாய் स्तुतिमात्रமாயிறே அப்போது फलिப்பது. प्राप्यத்துக்கு இன்னது अनुरूपமென்னுமிடம் शास्त्रवेद्यமாகையாலே யுக்திமாத்ரத்தாலே प्राप्यविरोधம் சொல்லவொண்ணாது. आगमसिद्धங்களில் ஒன்றை விருத்ததர்க்கங்களாலே बाधिக்கில், तुल्यन्यायத்தாலே ஸர்வசாஸ்த்ரங்களும் ப்ரபத்திசாஸ்த்ரந்தானும் ப்ரமாணமன்றிக்கே யொழியும் ''अथ पातकभीतस्त्वम्'' என்கிற

---

த்தியைச் சொல்லியிருக்கிறதே என்னில்—எவனுக்கு உபாஸநத்தை விதித்ததோ அவனுக்கே அதன் த்யாகத்தையும் விதிக்குமோ. गुरु लघु விகல்பம் தகாதே. गुरुவான உபாஸநம் உபாயமன்று; ப்ரபத்தி தான் உபாயம்; இதிலே ருசியை யுண்டுபண்ணுவதற்காக गुरुவை உபாயமாகக் காட்டினது மட்டென்னில்—லகுவிலே ருசி தானே உண்டாகுமாகையால் गुरुவை அதற்கு உபாயமாகக் காட்டுவதெதற்காக? लघुவான உபாயத்தால் லகு பலன் வருவதைக் காட்டி அதுபோல் गुरुவான உபாயத்தால் गुरु பலன் வருமென்றால் உசிதமாகும். ஆகையால் பூர்வபக்ஷியின் சொல் விவக்ஷித விபரீதமாகும்= சொல்லக் கருதியதற்கு மாறாகும். மேலும் இது விவக்ஷித விபரீதமே; உபாஸநத்திற்கு மோக்ஷம் பலனென்றும் ப்ரபத்தி செய்தால்தான் அதென்றும் சொன்னால் அங்கமான ப்ரபத்திக்கு அங்கியான உபாஸநத்தின் பலனைச் சொல்லியதாம். இதனால் உபாஸநம் எங்ஙனே கைக்கூடுமென்று அஞ்சுகிறவனுக்கு, 'அஞ்சவேண்டா அங்கமான ப்ரபத்தி செய்; உபாஸநம் உடனே ஸித்திப்பதால் பலன் நிச்சயம்' என்றதாகும். ஆக உபாஸநம் உபாயமென்றும் ப்ரபத்தி நேர் உபாயமாகாதென்றும் ஸித்திப்பதால் விவக்ஷித விபரீதமே யாகும்.

ப்ராப்யத்துக்கு அநுரூபமாக வேறே ப்ராபகமிருக்க வேண்டுமென்னில்—உபாஸநம் அநுரூபமே; சாஸ்த்ரமூலமாக அறியப்பெற்ற உபாயபலன்களுக்கு ஆநுரூப்யமில்லையென்று யுக்தியால் சொல்லத்தகாதே. ஒரு புரோடாசயாகம் செய்து பல ஆண்டு ஸ்வர்க்கவாஸம் பண்ணுகிறானென்றால், அங்கே ஆநுரூப்யம் இசைவதுபோல் இங்குமாகும். உபாயமே செய்திருக்கச் செய்தே அநுரூபமல்லாமையால் பலனளிக்க இசையாத ஈச்வரன் ஒன்றுமே செய்யாத ப்ரபந்நனுக்குப் பலன் எப்படி யளிப்பான்? ஆக ப்ரபத்திவிதியும் அப்ரமாணமாகும் அதனால்தான் ப்ரபத்தி உபாயமில்லையென்கிறோமென்னில்—இந்த பரந்யாஸமென்கிற लघूपायம் மஹாபுருஷார்த்தமான மோக்ஷத்திற்குக் காரணமான பெரிய காருணயோல்லாஸத்திற்கு ஈடாகுமோ? சாஸ்த்ரம் சொல்லியிருப்பதால் அநுரூபமே யென்னில்—உபாஸநத்திற்கும் இது துல்யம்.

இது போல் பாதகமான பக்தி யோகம் மோக்ஷகாரணமாகாதென்றதும் தவறு; 'अथ पातकभीतः' என்ற விடத்தில் பாதகசப்தத்தாலே உபாஸநத்தை க்ரஹிக்க வேண்டுமென்று எங்கே சொல்லிற்று, உபாஸநம் நிஷித்

விஷயத்திலும் पाषण्डशब्दத்தாலே உபாஸநாதிகளை நிந்திக்கிறதென்பதற்கு[ம்] ப்ரமாணமில்லை. ஆகையால் முமுக்ஷுவுக்கு விஹிதங்களாகையாலே பக்திப்ரபத்திகள் இரண்டும் यथाधिकारம் परिग्राह्यங்கள்.

विहितங்களேயாகிலும் आचार्यैरपरिगृहीतங்களல்லாதபடியாலே अतिथि-सत्कारादिகளிலே விஹிதங்களான गवालम्भादिகள் போலே உபாஸநாதிகள் शिष्टापरिग्रहविरुद्ध(?)ங்களாகையாலே अनादरणीयங்களன்றோ வென்கையும் निरवका-शமன்று; सर्वाचार्यपरिग्रहமில்லாதபோதன்றோ "अस्वर्ग्यं लोकविद्विष्टं धर्ममप्याचरेन्न तु' என்று கழிக்கலாவது. இங்கு "तस्मै नमो मुनिवराय पराशराय" என்னும்படி

---

தமாய் நரகாதி ஹேதுவானால்தானே பாதகமாகும். லோகப்ராப்தமாயிருப்பதை நிஷேதிக்கலாம். சாஸ்த்ரப்ராப்தத்தை நிஷேதிக்கலாகுமோ? அதனால் பாதகபீத: என்பதற்கு அநாதியாய் செய்திருக்கும் கொடிய வினைகளுக்கஞ்சி என்கிற பொருளே ஸ்வரஸமாகும். அவற்றை அநுபவித்தோ, தனித்தனி ப்ராயச்சித்தம் செய்தோ போக்கமுடியாதாகையால் அதற்காக வேறு கார்யங்களும் செய்யாமல் நாராயணபரனானால், பக்தியே எல்லாம் போக்கும்; பக்தி செய்யவாகாதவன் நாராயணனையே ஸித்தோபாயமாகக் கொண்டு ப்ரபந்நனாகவேண்டுமென்று ச்லோகார்த்தமாம்.

இனி பக்தி ப்ரபத்திகள் சாஸ்த்ரவிஹிதங்களென்பதை இசைந்து, ஆனாலும் ஆசார்யர்கள் பரிக்ரஹிக்கவில்லையாகையால் உபாஸநம் அநுஷ்டேயமன்றென்ற வேறுஹேதுவை நிராகரிக்கிறார், आचार्यैरपरिगृहीतங்கள்-ஆசார்யர்களாலே ஆதரத்தோடு பரிக்ரஹிக்கப்பட்டவை அதிதீதி, गवालम्भமாவது वृषभविशसनம் 'तद् यथैवादो मनुष्यराजे आगते उक्षाणं वेहतं वा क्षदन्ते' என்கிற அர்த்தவாதத்தை யநுஸரித்து, महोक्षं वा महाजं वा श्रोत्रियायोपकल्पयेत् என்கிற வாக்யத்தால் गवादिகளை ஹிம்ஸித்து அதிதிகளுக்கு மாம்ஸபோஜநம் செய்விப்பது சாஸ்த்ர ஸம்மதமானாலும் சிஷ்ட பரிக்ரஹமில்லாமையாலே வர்ஜ்யமாகிறது (விடப்படுவது) போல், உபாஸநம் வர்ஜ்யமென்று கருத்து. शिष्टापरिग्रहविरुद्धங்கள் இதி. शिष्टापरिग्रहமில்லாமையாலே ஸ்வரூப விருத்தமென்று உரையிலிருக்கிறது. शिष्टपरिग्रहविधुरங்களென விருக்கலாம். सर्वेति आचार्यपरिगृहीतமென்பதற்கு सर्वाचार्यपरिगृहीतமென்ற பொருள் கொள்ளலாகாது பக்திவித்யைகளில் ஓராசார்யர் ஒரு வித்யையை யநுஷ்டிப்பவரென்று மற்ற வித்யைகளை யநாதரிக்கலாமோ. ஆகையால் ஸர்வாசார்ய பரிக்ரஹமில்லாதபோதுதான் அநாதரணீயமாகும். அதனால்தான் கீதையில் 'लोक-विद्विष्टமென்று லோகபத ப்ரயோகம். தர்மமாயிருந்தாலும் சிஷ்டலோகங்களாலே த்வேஷிக்கப்பட்டிருந்தால் அது ஆமுஷ்மிக फलஸாதநமாகாது— அநுஷ்டிக்கத் தகாது என்றதாம். பக்தி யோகங்கள் பராசராதி மஹர்ஷிகளால் ஆதரிக்கப்பட்டவை. நமக்கு ஆசார்யரான ஆளவந்தாரே அவரை விசேஷித்து ஆதரித்திருக்கிறார். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் வ்யாஸர் பக்திமார்க்கங்களை விசேஷமாக ஆதரித்து விசாரித்திருக்கிறார். பாஷ்யகாரரும்

ஸ்வராந பராசராதிபூர்வாசார்யர்கள் அநுஷ்டிக்கையாலே ஸர்வஶிஷ்டபரிக்ரஹம் சொல்லவொண்ணாது

இப்படி யுகாந்தரங்களில் இவை தர்மங்களானாலும் கலியுகத்தில் யதோக்தமான பரமாத்மோபாஸநாதிகளுக்கு அதிகாரிகள் துர்லபராகையாலே இவை இக்காலத்துக்குப் பொருந்துமவையன்று. ஆகையாலேயன்றோ "கலௌ ஸங்கீர்த்ய கேஶவம்" என்றும்.

"कलेर्दोषनिधे राजन्नस्ति ह्येको महान् गुणः । कीर्तनादेव कृष्णस्य मुक्तबन्धः परं व्रजेत् ।।"

என்றும் சொல்லுகிறது—என்னவொண்ணாது.

"कलौ कृतयुगं तस्य कलिस्तस्य कृते युगे । यस्य चेतसि गोविन्दो हृदये यस्य नाच्युतः ।।"

என்கிறபடியே இக்காலத்திலும் உபாஸநாதிகளுக்கு அதிகாரிகள் ஸம்ப்ரயோ-

---

ஆதரித்து பாஷ்யம் அருளினர். இப்படி யிருக்க ஸர்வாசார்ய பரிக்ருஹீதமல்ல என்னக்கூடுமோ.

இனி இக் காலத்துக்குத் தகாதென்பதை நிராகரிக்கிறார் இப்படி இத்யாதியால் கலௌ ஸங்கீர்த்யேதி. 'த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞை: த்ரேதாயாம் த்வாபரே(அ)ர்ச்சயந் । யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேஶவம்' என்கிற வாக்யத்தால் கலியுகத்தில் த்யாநம் வேண்டாவென்று தெரிகிறதே யென்பது தவறு. த்யாந, யாக, அர்ச்சனைகளால் யுகாந்தரங்களில் பெறப்படும் பலன் நாமஸங்கீர்த்தநத்தாலேயே கலியில்பெரும்பாலும்பெறப்படுமென்று அசக்தாதிகாரி ஆதிக்யத்தாலேசொன்னதாம். அதனல் சக்தாதிகாரி த்யாநாதிகளை விடவேண்டுமென்றதாகாது. அந்தந்த யுகத்தில் அந்தந்த உபாயம் ப்ரசுரமாயிருக்குமென்பதிலேயே நோக்கு. இவ் வசநம் வி,பு. 6-2-18, கலேர்தோஷேதி வசநம் பாகவதம் 11-3-5. அரசனே! தோஷங்களுக்கே யிடமான கலிக்கு ஒரு பெரிய குணமுண்டு க்ருஷ்ண நாம ஸங்கீர்த்தநத்தாலேயே ஸம்ஸாரபந்தம் விடப்பட்டு பரம்பொருளைப் பெறுகிறன். இந்த வசநத்திற்குக் கீர்த்தநமானது கலியில் விரைவில் மோக்ஷோபாயத்தில் மூட்டுமென்ற கருத்தாகும். கலாவிதி—விஷ்ணுதர்மம் 109—57. எவனுடைய மனத்தில் கோவிந்தன் குடிகொண்டிருக்கிறனே அந்த சக்தனுக்குக் கலியிலும் க்ருதயுகம்—அதாவது கலியிலும் க்ருதயுக தர்மத்தைச் செய்யலாம். எவனுக்கு அச்யுதன் ஹ்ருதயத்திலில்லையோ, அந்த நாஸ்திகனுக்கு க்ருதயுகத்திலும் கலியே. அவன் எந்த ஆஸ்திக தர்மத்துக்கும் அநதிகாரீ. இந்த ச்லோகத்தால், எக்காலத்திலும் எவ்வித தர்மாதிகாரிகளும் எத்தகைய வேதபாஹ்யரும் இருக்கிறர்களென்றதாம். கலியிலும் க்ருதயுக தர்மத்தை யநுஷ்டிக்கும் பாஞ்சராத்ரிகர்களை பாரதம் புகழ்கிறது. நாதமுனி முதலான பூர்வாசார்யர்கள் மோக்ஷார்த்தயோகம் அநுஷ்டியாவிடினும் ஸ்வயம்ப்ரயோஜநமாக யோகத்தை யநுஷ்டித்தார்களென்று இசைந்திருக்கிறோம் கீர்த்தநாதேவ என்கிற ஏவகாரத்தால் உபாஸநம் இக் கலியில் கூடாததாகில், ப்ரபத்தியும் வேண்டாமென்றதாகும் ப்ரபத்திக்கு அதிகாரிகள் துர்லபரல்ல வென்னில், துர்லபரென்பதற்கு ப்ரமாணம் காட்டு

ज्ञानयोगनिष्ठரான பூர்வாசார்யர்கள்போலே संभावितரிறே.

இங்ஙனல்லாதபோது संकीर्तनव्यतिरिक्तैயான ப்ரபத்திக்கும்

"किं नु तस्य च मन्त्रस्य कर्मणः कमलासन । न लभ्यतेऽधिकारी वा श्रोतुकामोऽपि वा नरः ॥"

इत्यादिகளிற்படியே महाविश्वासादियुक्तரான அதிகாரிகள் தேட்டமாகையாலே அவ்விடத்திலும் இப் प्रसंगம் வரும்.

ஆனபின்பு உபாஸநாதிகளுக்கு வேறொரு விரோதமில்லாமையாலே यथाशास्त्रம் आतुरादिகளுக்கு अवगाहनादिகள்போலே இவை "अकिञ्चनोऽनन्यगतिः" என்றிருக்கும் அதிகாரிக்கு स्वाधिकारविरुद्धங்கள் என்ன प्राप्तம். இவ்வधिकारविरोधமறியாதே உபாஸநாதிகளிலே प्रवृत्तिக்குமவனைப்பற்ற "नरस्य बुद्धिदौर्बल्यादुपायान्तरमिष्यते" என்றது. ஆகையால் இவ் வுபாஸநாதிகளும் அधिकारத்துக்கு यथाधिकारம் அநுகுணங்கள். அவற்றுக்கு ஸாமர்த்யமில்லாமையாலாதல் विलम्बाक्षमனல்லாமையாலாதல் இப்ப்ரபத்தியை स्वतन्त्रोपायமாகப் பற்றினவனை 'செய்தவேள்

---

கிறார் இங்ஙனிதி. किमिति பௌஷ்கர ஸம்ஹிதை. कमलासन — தாமரைப் பூவை இடமாகவுடைய பிரமனே! किंनु — என்ன காண் இந்த மந்த்ரத்திற்கும் ப்ரபத்தியென்கிற கார்யத்திற்கும் அதிகாரி கிடைக்கமாட்டான்; கேட்பவன் கிடைப்பதும் அரிது என்றதாம். இதனால் ப்ரபத்திக்கும் ப்ரபத்தி மந்த்ரத்திற்கும் அடியோடு அதிகாரியில்லை யென்னலாகுமோ? அது பொலிங்குமென்றபடி. தேட்டம் = கிடைக்கவரிது.

இப்படி உபாயாந்தர த்யாகத்திற்கு ஸ்வரூப விரோதம் ப்ரதாநகாரணமென்கிற வசந பூஷணவாக்யத்தில் ஸ்வரூப விரோதத்தைப் பல விதமாக விகல்பித்து அவற்றை நிரஸித்து அதை நிர்வஹிப்பதற்காகத தாத்பர்யமருளிச் செய்கிறார் ஆன பின்பு இதி ஸ்வரூப விரோதமென்பது स्वाधिकारविरोधமென்றதாம். அஜ்ஞாந அசக்திகளாலே உபாயாந்தர த்யாகம் செய்தவன் ப்ரபந்நனை பிறகும் உபாயாந்தர த்யாகம் செய்தே யிருக்க வேண்டும். பின்னல் உபாயாந்தர த்யாகத்திற்கு அஜ்ஞாந அசக்திகளும் காரணமானலும் स्वाधिकार விரோதம்ப்ரதாநகாரணமாகுமென்க. ப்ரவர்த்திக்குமவனைப்பற்ற = பரவர்த்திக்குமவனைக் கொள்வதற்காக. புத்தி தௌர்பல்யமாவது — தனக்கு பக்தியில் அதிகாரமில்லையாயிருக்க ப்ரபத்தியில் விச்வாஸக் குறைவாம்; பக்தி தவிர வேறு உபாயமில்லை யென்கிற விபரீத புத்தியுமாம் இப்படியாகில் பக்தி முக்யோபாயமென்றும் ப்ரபத்தி गौणोपायமென்றும் தெரியா நிற்க, ப்ரபந்நனை விசேஷமாக ஸ்தோத்ரம் செய்வது எங்ஙனே என்ன அருளுகிறார் அவற்றுக்கு இதி. ஸாமர்த்யமில்லாமையாலதல் இத்யாதி. ஸாமர்த்யமிராமை காரணமாகவோ, விளம்பக்ஷமனல்லாமை காரணமாகவோ என்றுபொருள். இந்த ஸ்தோத்ரம் இரண்டுவிதமாகும்— பல பெரிய கார்யங்களைச் செய்தவனுக்கு ஸமனுகிறுன் लघूपायம் செய்தவன் என்பதாலுமாம்: முக்யோபாயம். செய்தவனைவிடச் சிறந்தவனென்று கொண்டுமாம். முதலம்சத்தை முதல் வாக்யத்தாலருளிச் செய்கிறார். செய்த வேள்வியன இதி. திருவாய்மொழி 5 7-5. எய்தக் கூவுதல் என்கிற பாசுரம்.

விய(ர்)ன்' என்றும் ''कृतकृत्यन्'' என்றும், अनुष्ठितक्रतुशतन्'' என்றும், இவனுக்கு மரணாந்தமாக நடக்கிற வ்யாபாரங்களை अवभृथपर्यन्तक्रतुकलापங்களாக ஸ்துதித்தும், क्रत्वन्तरानुष्ठानம் பண்ணினவனுக்கு மேலுள்ள नित्यनैमित्तिकங்கள்போலே

---

உன்னைப் பெறுமளவுக்குப் பிரயாஸை செய்ய என்னலாகுமோ? எவ்வ தெவ்வத்து எப்படிப்பட்ட விரோதிகளுக்கும் ஆய்= தாய் போலிருப்பவன்; அந்த வேத பாஹ்யர்களிஷ்டப்படி அவர்களுடன் புகுந்து யஜ்ஞாதி வேத மார்க்கங்களை தூஷிப்பவன், அவர்களைப் போலன்றி சாஸ்த்ர விச்வாஸத்துடன் உன்னையே ஸித்தோபாயமாகக் கொண்டு முக்யோபாயங்களை யநுஷ்டிக்க மாட்டாமல் சிரிவர மங்கல நகரிலுள்ள வையத்தேவர் ப்ரபந்நரான படியாலே ''अनुष्ठितक्रतुशतः'' என்றபடி வேள்விகளைச் செய்தவர்களுக்கு ஸமாநமானவர் உனக்குக் கைங்கர்யம் செய்யும்படி நீ விளங்குகின்று யென்றதனின்று ப்ரபத்தியே பல வேள்விகளைச் செய்ததற்கு ஸமாநமென்றது இப்பாட்டில் ஸித்தித்தது. பாட்டில் பன்மையிருப்பினும் ப்ரக்ருதத்திற்கு இணங்க வேள்வியன் என்றதாம். कृतकृत्यन् இதி. अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत्। मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति என்றது ஸாத்யகிதந்த்ரம். अनुष्ठितेति एवं रूपं तमभ्यर्च्य प्रक्षीणाशेषपातकः। अनुष्ठितक्रतुशतो भवत्येव न संशयः॥, अहि.सं 37.69. இங்கே भगवदाराधकன் நூறு க்ரதுக்களை அநுஷ்டித்தவனாகத் துதிக்கப்பட்டான்.

मरणान्तமாக இதி. தைத்திரீயோபநிஷத்து முடிவில் ந்யாஸவித்யையை (ப்ரபத்தியை)யே ஒரு ஸத்ரயாகமென்றும், இதை யநுஷ்டித்தவனுடைய ஆத்ம ஸ்வரூபத்தை யாகம் பண்ணுகிறவனாகவும், श्रद्धையை பத்நியாகவும், சரீரத்தை इध्मமா(ஸமித்தாக)வும் இப்படி இவனுக்கு ஸம்பந்தப்பட்ட ஒவ்வொன்றையும் யஜ்ஞத்துக்கு ஸம்பந்தப்பட்ட வஸ்துவாகவும் கல்பனை செய்து இவனுடைய வாக்கு முதலான இந்த்ரியங்களை ரித்விக்குகளாகவும் இவனுடைய அந்நபாநத்தை ஸோமரஸபாநமாகவும் இவனுடைய முகாதிகளை आहवनीयादि அக்நிகளாகவும் இவன் ஜீவித்திருக்கும் ஸாயங்கால - ப்ராத:கால மத்யான்ன காலங்களை யாகஸவநங்களாகவும். இவனுடைய ஜீவந அஹோராத்ரங்களை दर्शपूर्णमासங்களாகவும் பக்ஷாதிகளை चातुர்மாஸ்யங்களாகவும் இவன் ஜீவித்திருக்கும் வத்ஸரங்களையெல்லாம் ஸத்ரத்தைச் சேர்ந்த ஸோம யாக நாட்களாகவும் இவனுடைய மரணகாலத்தை ஸத்ரயாகத்தின் முடிவிலுள்ள அவப்ருதமாகவும் ஸ்தோத்ரம் செய்து, பரந்யாஸம் செய்தவனுக்கு மரணம் வரையிலுள்ள விருப்பை, தன் காலத்தினிடையில் அக்நிஹோத்ர தர்சபூர்ணமாஸ சாதுர்மாஸ்யாதிகளை யடக்கிக் கொண்ட ஸத்ர யாகமாகச் சொல்லிற்று இது अनुष्ठितक्रतुशतः இத்யாதிகளுக்கு மூலமாகும்.

ப்ரபந்நனும் நித்ய நைமித்திக கர்மாநுஷ்டாநம் இனியும் செய்ய வேண்டியிருப்பதால் இவனை க்ருதக்ருத்யனென்றும், செய்யவேண்டியதொன்றுமில்லை யென்றும் எப்படிச் சொல்வதென்ன அதற்குக் கருத்துரைக்கிறார் क्रत्वन्तरेति பல யாகங்களைச்செய்கிறவர்கள் நித்யநைமித்திகங்களை அவற்

இவனுக்கு स्वतन्त्रविधियாலே वर्णाश्रमादिधर्मங்கள் நடவாநிற்கச்செய்தேயும் अनुष्ठितात्मयागफलத்தைப் பற்றக் कर्तव्यान्तरनिरपेक्षனாகவும் ஆழ்வார்களும் மஹர்ஷிகளும் भगवच्छास्त्रங்களும் வேதங்களும் घोषियாநின்றன. ஆகையால்

"तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः। कर्मिभ्यश्चाधिको योगी तस्मात् योगी भवार्जुन॥

इत्यादिகளாலே प्रवृत्तिधर्मங்களிற்காட்டில் निवृत्तिधर्मங்கள் श्रेष्ठங்களானாற்போலவும், அவைதம்மில் ஆத்மவிஷயமான யோகம் ச்ரேஷ்டமானாற்போலவும், आत्मविषययोगங்களிற்காட்டில் "योगिनामपि सर्वेषाम्" என்கிறபடியே वसुदेवनन्दनविषयமான யோகம் ச்ரேஷ்டமானாற்போலவும், परमात्मविषयविद्या-

---

றிற்கு அங்கமாகாவிட்டாலும் எப்படி செய்கிறார்களோ, அப்படி ப்ரபந்நனும் ப்ரபத்திக்கு அங்கமாகாவிட்டாலும் நித்ய நைமித்திகங்களை ஆச்ரம தர்மமாகச் செய்கின்றவனே. மோக்ஷத்திற்காகக் கர்த்தவ்யம் பூர்ணமானபடியால் அதற்காகச் செய்யவேண்டிய தொன்றுமில்லாதவனாய் ஆச்ரம தர்மமாகவே செய்கிறான். அங்கமாகச் செய்யாமையால் நிரபேக்ஷமென்கிறது, ஆழ்வார்களும் இத்யாதி எழுவாய் உயர்திணையாயிருந்தும் கோஷியா நின்றன. என்ற க்ரியாபதம் மற்ற எழுவாய்களை யநுஸரித்து வந்தது. இனி மஹர்ஷிகளும் என்ற சொல்லுக்கு மேல் தெளிவித்தபடி என்ற பதத்தைச் சேர்க்கவுமாம்.

மற்ற கார்யங்களால் வரும் பலன்கள் ப்ரபத்தியினாலேயே வருவதால் ப்ரபந்நனை வெகு பெரிய கார்யம் செய்தவனாகப் புகழ்ந்தார். பக்தி பர்யந்த கார்யம் செய்தவனைவிடச் சிறந்தவனென்பதையும் உபபாதிக்கிறார் ஆகையால் இத்யாதியால். 'तपस्विभ्यः गी.6.46. योगी-ஜ்ஞாநயோக நிஷ்டன் तपस्विभ्यः- कृच्छ्रादि தர்மங்களைச் செய்கிறவர்களைவிட மேம்பட்டவனாவான் ज्ञानिभ्यः— அநாத்ம விஷய ஜ்ஞாநமுள்ளவர்களைவிட மேம்பட்டவனாவான். कर्मिभ्यः- அச்வமேதாதிகர்ம நிஷ்டர்களைவிட மேம்பட்டவனாவான். ஆகையால் நீ ஜ்ஞாந யோகியாக வேண்டும். योगिनामपि இதி ஜ்ஞாநயோக பக்தியோக நிஷ்டர் நிவ்ருத்தி தர்ம நிஷ்டராவர். மற்ற கர்மங்களைச் செய்கின்ற ஐச்வர்யார்த்திகள் ப்ரவ்ருத்தி தர்மநிஷ்டர். நிவ்ருத்தி தர்மநிஷ்டருக்கு உத்கர்ஷம் நிவ்ருத்தி தர்மம் உத்க்ருஷ்டமானபடியாலாகும். அதனால் இங்கே புருஷனை விட்டு, தர்மவிஷயமாக ச்ரேஷ்டத்வம் சொன்னதாம். ஜீவாத்ம விஷயயோகத்தைவிட பகவந் விஷயமான யோகம் ச்ரேஷ்டம். योगिनामपि. என்கிற கீதைக்கு 6·47. ஸர்வ யோகிகளுக்குள்ளே பகவத்யோகி ச்ரேஷ்டன் என்கிற பொருளைக் கொள்ளாமல் योगिनां—என்பதைப் பஞ்சமியாக மாற்றி ஜ்ஞாநயோகிகளைக் காட்டிலும் என்ற பொருள் கீதாபாஷ்யத்தில் அருளியதாகும். ஜ்ஞாநயோகிகள் நால்வராகப் பிரிக்கப்பட்டிருப்பதால் योगिना-மென்ற பன்மை என்க. अपि सर्वेषமென்றதாலே கீழ்க்கூறிய கர்மி முதலானவர்களைக் கொள்வது அங்கும் सर्वेभ्यः என்று பஞ்சமியின் பொருள். ஆக கர்மி முதலானோரை விடவும் நான்குவித ஜ்ஞாநயோகிகளைவிடவும் வாஸு

விசேஷங்களெல்லாவற்றிலும் न्यासनिक्षेपादिशब्दங்களாலே சொல்லப்பட்ட க்ரியாவிசேஷமே सुकरत्व-सकृत्कर्तव्यत्व-शीघ्रफलप्रदत्वादिகளாலே ச்ரேஷ்டதமம் न्यासविद्यैயிலே ப்ரஸித்தமான இவ்வர்த்தத்தை "तेषां तु तपसां न्यासमतिरिक्तं तपः श्रुतम्",
"सत्कर्मनिरताः शुद्धाः साङ्ख्ययोगविदस्तथा । नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि ॥"

---

தேவயோகி ச்ரேஷ்டனென்றதாம். युक्ततमः என்றவிடத்தில் युक्त என்பதற்கு योगी என்று பொருளல்ல; கர்மிகளை யோகிகளென்று சொல்லவாகாதே. ஸர்வயோகிகளுக்குள் பகவத்யோகி என்று பொருளானாலும் ச்ரேஷ்டனென்றவளவே சொல்ல வேண்டியதாகும். ஆகையால் யுக்த சப்தார்த்திற்கு விவக்ஷையில்லை. அல்லது யுக்த தம:யோக்ய தம: என்று பொருளாகலாம். விரிவு தாத்பர்யசந்த்ரிகையில். ஆகையாலிங்கு योगिनामपि सर्वेषां என்றவிடத்தில் ஸர்வயோகிகளுக்குள் என்று பொருள் கொள்ளவேண்டா. ஸுகரமாய் ஸக்ருத் கர்த்தவ்யமாயிருந்தாலும் உபாஸநவித்யை கொடுக்கும் பலத்தை ந்யாஸவித்யை கொடுக்காதாகில் ச்ரேஷ்டமாகாது; அதனால் அதன் பலத்தைக் கொடுக்கிறதென்பதையும் சேர்த்தார். லகுவாய் அதன் பலத்தைக் கொடுப்பதாலே அதைவிடச் சிறந்தது; அதை சீக்கிரம் கொடுப்பதாலும் ப்ராரப்தகர்ம நிவ்ருத்தியும் செய்யுமாகையாலும் ச்ரேஷ்டதமம் இந்த அதிகபல ப்ரதத்வம் ஆதிபதத்தால் க்ரஹிக்கக் கூடியது.

ந்யாஸவித்யையிலே இதி. तैत्तिरीयத்தின் முடிவிலுள்ள न्यासविद्याविधायकवाक्यसन्दर्भத்தில் என்றதாம். அங்கு सत्यं परं என்கிற அநுவாகத்தில் ஸத்யம், தபஸ்ஸு दमம் சமம் दानம் தர்மம் ப்ரஜநநம் அக்நி, அக்நிஹோத்ரம் யஜ்ஞம் என்கிற உபாயங்களை ப்ரசம்ஸித்து அதன் மேலாக மாநஸமென்கிற பக்தியோகத்தை ப்ரசம்ஸை செய்து மேலே பரந்யாஸத்தை ப்ரஸ்தாவித்து 'तानि वा एतानि अवराणि तपांसि न्यास एव अत्यरेचयत्' என்று ஸத்யாதியாய் மானஸமான பக்தியோகம் வரையிலான தபஸ்ஸுக்களைவிட ந்யாஸம் உயர்ந்ததென்பது ஸ்பஷ்டமாக ஓதப்பெற்றது. இப்படி க்ருஷ்ண யஜுர்வேதோக்தமான அர்த்தத்தை வேதத்தில் சொல்லப்பட்டதென்றே அநுவாதம் செய்தது तेषां என்கிற (அஹி.ஸம், 37-36) வாக்யம். இதை விவரித்தது ஸத்கர்ம இத்யாதி லக்ஷ்மீதந்த்ரம் 17. 62. शुद्धाः—ப்ரவ்ருத்தி தர்மங்களை விட்டவராய் பகவத்ஜ்ஞாநமுடையரான सत्कर्मनिरताः கர்மயோக நிஷ்டரும் सांख्यविदः—ஜ்ஞாநயோகநிஷ்டரும் योगविदः—பக்தியோக நிஷ்டரும் शरणस्थस्य—மோக்ஷத்திற்காக சரணாகதி செய்தவனுடைய கோடியில் ஓரம்சத்திற்கும் ஈடாகமாட்டார்; அதற்குக்காரணம்-ப்ரபன்னர்மோக்ஷபலனை சீக்கிரம் பெறுவதும், ப்ராரப்தகர்மாவை ஒழிப்பதும் ப்ரபத்தியநுஷ்டித்த பிறகு தேஹாவஸாநம் வரையில்எல்லாக் கார்யங்களையும் முக்தர்களைப்போலே ஸ்வயம்ப்ரயோஜநமாகவே செய்வதுமாம். இப்படி பக்தியைவிட ப்ரபத்திக்குச் சிறப்பு இருப்பின் பக்தியோகந்தானே அமுக்ய உபாயமாகும். கௌணோபாயத்தைச் சிறந்ததாகச் சொல்வதுண்டோ? அதனால் பக்தியான ரூ ஸ்வரூப

என்று भगवच्छास्त्रम् उपबृंहित्தது. अवगाहनादिகளில் ஸமர்த்தனல்லாதவனுக்கு "मानसं विष्णुचिन्तनम्" என்று भगवच्चिन्तनத்தை ஸ்நாநமாக விதித்தால் அது ஸ்நாநாந்தரங்கள் பண்ணுகிற ஶுத்தியையும் பண்ணி, பாபாந்தரங்களையும் சமிப்பித்து அப்போதே भगवदनुभवरसத்தையுமுண்டாக்குமா போலே உபாஸநாதிகளில் ஸமர்த்தனல்லாதவனுக்குப் ப்ரபத்தியை विधित्தாலும் இப்

---

விருத்தமென்று சொன்னதுதானே ந்யாயமாகுமென்ன அருளிச்செய்கிறார் அவகாஹநாதிகளில் இத்யாதி. மாநஸம் இதி. यत्तु सातपवर्षेण दिव्यं तत् स्नानमुच्यते । वारुणं तु अवगाहः स्यात् मानसं विष्णुचिन्तनम् என்ற விடத்தில் (गार्ग्यस्मृति) அவகாஹநஸ்நாநம் முதலான முக்ய—கௌண ஸ்நாநங்களைச் சொல்லி முக்யஸ்நாநத்தில் அசக்தனுக்கு மாநஸஸ்நாநமென்று சொல்லியிருந்தும் ஆகாசத்தில் மந்த்ரமூர்த்தியான புண்டரீகாக்ஷனை த்யானம் செய்து அவனுடைய திருவடியினின்று ப்ரவஹிக்கும் கங்கை ப்ரஹ்மரந்த்ரம் வாயிலாக தேஹத்தினுட் புகுந்து உள் வெளி முழுமையும் அழுக்கற்றதாக்குவதாக நினைப்பதாகிய மாநஸத்தை, 'इदं मानसिकं स्नानं मन्त्रात् शतगुणं स्मृतम् என்று ப்ரசம்ஸித்தது. ஆகையால் சில அம்சங்களில் ஏற்ற முமிருக்கலாம்; கௌணமுமாகலாம். மாநஸஸ்நாநத்தில் அதிக பலனிருக்கிறதே யென்று வாருண ஸ்நாநத்தை விடமுடியாது. ப்ரபத்தியில் வரும் அதிகபலனை விரும்பினால் அப் பலனுக்கு பக்தி உபாயமாகாமையால் பக்தியை விட்டும் ப்ரபத்தி செய்யலாம். இப்படி அபேக்ஷிப்பவன் முக்யோபாயரஹிதனே. வாருணத்தையும் செய்து மாநஸத்தையும் செய்வது போல் பக்தியையும் மோக்ஷத்திற்காக அநுஷ்டித்து ப்ரபத்தியையும் அநுஷ்டிப்பதென்பதில்லை. ப்ரபத்தியால் வரும் பலன் பெறும் காலத்திற்குள்ளே பக்தியை யநுஷ்டிக்கவுமாகாது, இப்படி கௌண ஸ்நாநம் முக்ய ஸ்நாந கார்யத்தையும் அதிக கார்யத்தையும் செய்கிறதென்பதைக் காட்டி, ப்ரக்ருதமான ப்ரபத்தியிலும் அதை உபபாதிக்கிறார் உபாஸநாதிகளில் இதி. எம்பெருமானார் அசக்தாதிகாரிகமான ப்ரபத்தியைப் பற்றி, मूलத்தில் உபாஸநகார்யமான மோக்ஷத்தைக் கொடுப்பதென்றும், கீதாபாஷ்யத்தில் உபாஸந விரோதிகளான பாபங்களைப் போக்குவதற்கான மஹாப்ராயச்சித்தங்களில் அசக்தர்களுக்கு ப்ரபத்தி உபாஸநவிரோதி நிவ்ருத்தியைப் பண்ணி உபாஸநத்தை ஸாதிக்குமென்றும் நிரூபித்திருப்பதால் அவை யிரண்டுக்கும் அகிஞ்சநாதிகாரத்வம் இங்குச் சொல்லப்படுகிறது. ஆகையால் உபாஸநாதி என்கிற ஆதிபதத்தினால் உபாயவிரோதி நிவர்த்தக தர்மம் விவக்ஷிதம். அதுபோல் यत् येनकामकामेन என்ற ஸ்வர்க்க புத்ராதி பலன்களுக்கான யாகாதிகளும் आदिपदार्थम्. ஆக உபாஸநாதிகளில் என்பதற்கு गुरूपायங்களில் என்று பொருள். இவ் வாக்யத்தில் அகிஞ்சநோத்தாரகத்வமும் அதிக ப்ரபாவத்வமும் விதேயம். உபாஸநம் கொடுக்கும் பலத்தைக் கொடுப்பதாலும் உபாய விரோதி நிவ்ருத்தி செய்து உபாயங்களைச் செய்விப்பதாலும் அகிஞ்சநோத்தாரகத்வம் ஸித்திக்கிறது. அதிக

ஶக்திதானே அவை கொடுக்கும் ஃபலத்தையும் அவைதம்மையும் கொடுக்க வற்றாய் அகிஞ்சனனுக்கு உத்தாரகமாய் அவன் அபேக்ஷித்த காலத்திலே ஃபலாவிநாபாவத்தையும் உடைத்தாயிருக்கையாலே அதிகப்ரபாவமாயிருக்கும்.

இப்படி இவ் உபாயத்தின் அதிகாரத்திலும் ஸ்வரூபத்திலும் வரும் கலக்கங்கள் ஶமிப்பித்தோம். இனிமேல் பரிகரங்களில் வரும் வ்யாமோஹம் ஶமிப்பிக்கிறோம். இவ் உபாயத்துக்கு ஆநுகூல்யஸங்கல்பாதிகள் வேணுமோ? 'आर्तो वा यदि वा दृप्तः'' என்றும், "मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथञ्चन दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम् ॥"

---

ப்ரபாவம் ப்ராரப்தத்தைப் போக்கி சீக்கிரமாகப் பலத்தை கொடுப்பதால் ஸித்திக்கிறது. அவை என்பதற்கு உபாஸநாதிகளென்று பொருள். அவைதம்மையும் = க்ஷுத்ரோபாயங்களையும் க்ஷுத்ரோபாயாதிகாரி அதன் விரோதிகளை முக்ய வழியால் நிவ்ருத்தி செய்யமாட்டாமல் ப்ரபத்தி செய்தால் அதனால் விரோதி விலகவே க்ஷுத்ரோபாயங்கள் ஸித்திக்கும். கொடுக்கவற்றாய் என்பதற்கு உத்தாரகமாய் என்றவிடத்தில் அந்வயம். இருக்கும் என்றவிடத்தில் அந்வயமில்லை; ஆக இங்குள்ள பதங்களுக்குத் தனித்தனி ப்ரயோஜனம் தேடவேண்டா. அபேக்ஷித்த காலமாவது க்ஷுத்ரோபாயத்தால் வரும் ஃபலகாலத்திற்கு முன் காலம். ஃபலாவிநாபாவமாவது. பலனின் பிரியாமை—பலத்தோடே சேர்ந்திருக்கை. ஆக உபாஸநாதிகள் முக்யாதிகாரிக்கு ஸ்வரூபோசிதமே. அகிஞ்சனனாய் ப்ரபத்தியிலிழிய வேண்டியவனுக்கு அவை ஸ்வாதிகார விருத்தமென்னலாமல்லது வேறு விரோதம் உபாஸனத்திற்கு இல்லை. கத்யவ்யாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை, 'உபாயாந்தரங்கள் ஸ்வரூப நாசகம்; ஸ்வரூபமாவது ஸ்வயம்ப்ரயோஜனமாக அவற்றிலிழிகையே' என்றார். பகவத்பலமாகவே மோக்ஷத்தைக்கொண்டு சக்தர் அனுஷ்டிக்கும் பக்தியை தூஷிக்கலாகாதென்றாராய்க. இப்படி ப்ரபத்தி ஸ்வரூப சோதனமாயிற்று. மேலே மூன்றாவது விஷயம் சொல்லப்போகிறாராய் இரண்டு விஷயம் நிரூபிக்கப்பட்டன என்கிறார் இப்படி இதி. பரிகரங்கள் இதி.முன்னதிகாரத்தில் ஸித்தோபாயமே பலனளிக்க ஸித்தமாயிருக்க ஸாத்யோபாயமெதற்கென்று ஸர்வாம்ச நிவ்ருத்தியை சங்கித்துப் பரிஹரித்தார். இப்போது ஸாத்யோபாய ஸ்வரூபத்தை ஒரு விதத்திலிசைந்து அங்கங்கள் வேண்டா என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் இவ் இத்யாதியால். வேணுமோ இதி. அநுகூலனாயில்லையேல் தோஷம் என்றிருப்பின், அதுவிஷயமான ஸங்கல்பம் வேண்டியதாகும். ப்ராதிகூல்யமிருந்தும் ரக்ஷிப்பதிலே நோக்குத் தெரிவதால் அது வேண்டாமென்றபடி. आर्तो இதி. ரா.யு.-18 28. சத்ரு, சரணாகதனானால் ஆர்த்தனாயிருந்தாலும் த்ருப்தனாயிருந்தாலும். அவனை ப்ராணனை விட்டும் காக்கவேண்டுமென்றது. சத்ருவுக்கு ஆர்த்தியென்றதால் அஞ்சி அநுகூலனாகை தெரியும்; த்ருப்தனென்றதாலே அரிசப்தத்தால் அறிவித்த ப்ராதிகூல்யம் நிலைத்திருக்கை தெரிகிறது. मित्रेति ரா. யு 18-3. மித்ரனெகிற பாவனையோடு

என்றும். "यदि वा रावणः स्वयम्" என்றும் சொல்லுகிற रिपूणामपि वत्सलனான शरण्यன் शरणागतனுடைய தோஷங்களைப் பார்க்குமோ? "अनालोचितविशेषाशेष-लोकशरण्येन्" என்றன்றோ பூர்வர்கள் பாசுரம். ஆகையால் இவை सम्भावित-स्वभावங்களாயித்தனையன்றோவென்று சிலர் சொல்லுவர்கள். இதுக்கு, प्रपत्त्युत्तरकालத்தில் आनुकूल्यादिகள் अनुवृत्तिயாதொழியிலும் प्रतिसमाधानம் பிறந்து प्रपत्तिफलமும் குறைவற்றிருக்குமென்கையிலே தாத்பர்யம் கொள்ளலாம். இங்ஙனல்லாதபோது 'षड्विधा शरणागतिः" என்றும், 'न्यासः पञ्चाङ्गसंयुतः" என்றும். "साङ्गैः पञ्चभिरावृताम्" என்றும், 'அங்காங்கிகளை विभजित்துச் சொல்லுகிற பல ப்ரமாணங்களுக்கும் विरुद्धம்; லோகத்தில் रक्ष्यद्रव्यसमर्पणमर्यादैக்கும் பொருந்தாது' என்றும் இவ்வங்கங்களுடைய लक्षणकरणादिप्रकारங்களும் முன்பே சொன்னோம். ब्रह्मास्त्रமும் साङ्गत्वापेक्षமாயிறே யிருப்பது. ஆகையால்

---

வந்தவனை ஒரு படியும், தோஷமிருக்கு மாகிலும் விடேன். இப்படி ரக்ஷிப்பது ஸத்துக்களுக்கு (நிந்திப்பதற்கு நேர்மாறாகக்) கொண்டாடப் படும் படி யாகும். இங்கே மித்ரபாவனை யென்னும் दोषः स्यात् என்றும் சொன்னதால் ஆநுகூல்ய ஸங்கல்பம் வேண்டாவென்று தெரிகிறது यदि वेति. आनयैनं हरिश्रेष्ठ दत्तमस्याभयं मया என்று உத்தரார்த்தம். अनालोचितेति. சரணாகதிகத்யம். ஆச்ரயிக்கிறவனிடத்தில் மித்ரத்வம் சத்ருத்வம் ஜாதி பேதம் முதலான விசேஷங்களை ஆலோசிக்காமல் எல்லோருக்கும் ரக்ஷகனா கின்றவன் இவன். 'இப்படி வேண்டாமாகில் आनुकूल्यस्य सङ्कल्पः प्रातिकूल्यस्य वर्जनम् என்று எதற்காகப் படித்தது' என்னில்—அதை நிர்வஹிக்கிறார் ஆகை யால் இதி. லோகத்தில் ரக்ஷகனாயிருப்பவன் ஆநுகூல்யாதிகளை ரக்ஷிக்கப்பட வேண்டியவனிடத்தில் பார்த்து ரக்ஷிப்பதே பெரும்பாலுமிருக்கிறது எப்படியிருந்தாலும் ரக்ஷிப்பதென்கிற உதாரஸ்வபாவம் உலகில் கிடைப் பதரிது இப்படி லோகத்திலிருப்பதைக் கண்டு இந்த ரீதி ஈச்வரனிடத் திலும் சரணாகதருக்கு அநேகமாக ஸம்பவிக்குமென்றதே சாஸ்த்ர தாத்பர்யம், ஆகையால் ஸங்கல்ப்பம் வேண்டா என்று சங்கை. திருமாலையுரையில் பெரியவாச்சான்பிள்ளை. सम्भावितस्वभावமென்று சொல்லி யிருப்பதை யநுஸரித் ததாமிது. அங்கங்கள் அவச்யமென்று ப்ரமாண ஸித்தமாகையால் அதற்கு விரோதம் வராதபடி ஆப்தவாக்யத்தை நிர்வஹிக்கிறார் இதுக்கு இதி. ஆநுகூல்ய ஸங்கல்பம் ஸம்பாவித ஸ்வபாவமென்று ஸ்வபாவசப்தப்ரயோக மிருப்பதால் ஸம்பாவிதமென்றிவ்வளவே சொன்னதாகாது. स्व = ஆநுகூல்ய ஸங்கல்ப்பத்தில் விஷயமான ஆநு கூல்யத்தின் பாவம்—இருப்பு பிறகு ஸம்பா விதம் = அநேகமா யிருக்கும். சிறிது லோபமிருந்தாலும் ஹாநியில்லை யென்றதாம். தேசகாலாநுகுணமாக, த்ரௌபதி சரணாகதியைப்போல், சிறிது ஆசார வைகல்யாதி, தத்காலத்திலிருந்தாலும் அது தேசகாலாதீநமாகையால் தோஷமாகாது, விருத்தமென்பதற்கு இப்படி சொல்வதென்று விசேஷ்யம் அத்யாரஹார்யம். முன்பு = பரிகரவிபாகாதிகாரத்தில். साङ्गेति—ப்ரஹ்மாஸ்த்ரம்

"प्रपत्तेः कचिदप्येवं परापेक्षा न विद्यते । सा हि सर्वत्र सर्वेषां सर्वकामफलप्रदा ॥"

என்றதுவும் **धर्मान्तरनैरपेक्ष्य**ம் சொன்னபடி. இப்படியல்லாதபோது இவர்கள் இசைந்த மஹாவிச்வாஸத்தையும் இக் கட்டளையிலே **संभावितस्वभाव**மாக்கலாம்

இவ் **अवसर**த்திலே வேறே சிலர் **आस्तिक**னுக்கு **शास्त्रार्थविश्वास**ம் பிறக்கு மதுக்கு மேற்பட மஹாவிச்வாஸமென்று ஒன்று உண்டோ? ஆகையால் இதுவும் **सर्वशास्त्रार्थसाधारण**மாமத்தனை போக்கி ப்ரபத்திக்கு . விசேஷித்து அங்கமாகவற்றே என்று நினைப்பர்கள். அதுவும்

'न विश्वसेदविश्वस्ते विश्वस्ते नातिविश्वसेत्'

**इत्यादि**களிலே **विश्वासतारतम्य**ம் **प्रसिद्ध**மாகையாலும். இவ்விடத்தில் **अतिशयित-विश्वास**ம் **अङ्ग**மென்கிற வசநத்தாலும் **परिहृत**ம். இப்படி **पुरुषविशेष**ங்களிலே **विश्वासतारतम्य**முண்டென்னுமிடத்தை **श्रीमदष्टाक्षरब्रह्मविद्यै**யிலே

'यस्य यावांश्च विश्वासस्तस्य सिद्धिश्च तावती । एतावानिति नैतस्य प्रभावः परिमीयते ॥'

என்று **श्रीनारदभगवा**ன் அருளிச்செய்தான். **मन्दविश्वास**ரான **प्रपन्नाभास**ரையும்

---

நிரபேக்ஷ மென்றால் அதற்கேற்பட்ட மந்த்ர ப்ரயோகாதி அங்கங்களோடு ப்ரயோகிகப்பட்ட பரஹ்மாஸ்த்ரம் வேறொரு ஸாதநம் துணைபாவதை ஸஹிக்காதென்பதே; அது போல் ப்ரபத்தியும் தன் ப்ரயோகததுக்குட் பட்ட அங்கங்கள் தவிர வேறு வர்ணாச்ரமாதிகளையோ பாராயணாதிதர்மங்களையோ அபேக்ஷிக்காதென்பதாம். **प्रपत्तेरिति** ச்லோகம் ஸநத்குமாரஸம்ஹிதையில். **ऐहिकार्थि**மோ **अदृष्टार्थि**மோ, மோக்ஷார்த்தமோ வேறு **फलार्थि**மோ என்ற ப்ரபத்திக்குத் தன் ப்ரயோகத்தில் அகப்பட்ட அம்சம் தவிர வேறு அபேக்ஷையில்லை. அதனால், தானே செய்ய. வேணடும், பிறர் செய்யக் கூடாதென்பது மில்லை. அது எங்கும்எல்லோருக்கும் இஷ்டமான எப்பலனையும் தருமென்றது.

மஹாவிச்வாஸம்போல் .ஆநுகூல்யஸங்கல்பாதிகளும் வேண்டுமென்று சொன்ன போது மஹாவிச்வாஸமே வேண்டா என்றெழுந்தனர் உவர் சிலர். இதற்கு ஸமாதாநம் இவ்வவகாசத்திலே இதி விச்வாஸமில்லாதபோது அநுஷ்டிக்கமாட்டா ராகையாலே விச்வாஸம் அங்கமே; ப்ரபத்திக்கு அது தனி அங்கமாகாது.மேலும்விச்வாஸமெல்லாம் **एकरूपम्**, அதிலே மஹத்துவம்சொல்ல வாகாதென்று சங்கை. **न विश्वसेदिति**, பாரதம் உத்யோ38-9. 'விச்வாஸமில்லாதவிடத்தில் விச்வாஸம் வைப்பதாகாது அற்பவிச்வாஸ முள்ளவனிடத்தில் அதிகவிச்வா ஸம் வைப்பது தகாது' என்றதால் விச்வாஸத்தில் ஏற்றத் தாழ்வு தெரிகிறது. **यस्येति** நாரதீயகல்பம், 1-16. பலத்தின் அளவானது விச்வாஸத்தினளவுக்கிடாகும். அஷ்டாக்ஷரத்தினுடைய ப்ரபாவம் அளவிடக்கூடியதல்ல; ஆகலால் அதில் அளவிட்ட விச்வாஸம் தகாதென்றார் இப்படி மஹாவிச்வாஸம் ப்ரபத்திக்கு அங்கமென்னலாமோ, விச்வாஸக் குறைவிலும் பலன் தெரிகிறதே என்று சங்கித்து அதற்குத் தாத்பர்யம் சொல்லுகிறார். **मन्देति**. ப்ரபந்நாபாஸரை யென்றதாலே மந்த விச்வாஸத்தோடு செய்த ப்ரபத்தி பூர்ணப்ரபத்தியாகாதென்றறிவிக்கப்படும். அந்த

முடிவிலே **सर्वेश्वरन्** ரக்ஷிக்கும். எங்ஙனே என்னில்.

'सकृदुच्चरितं येन हरिरित्यक्षरद्वयम् । बद्धः परिकरस्तेन मोक्षाय गमनं प्रति ॥'

**इत्यादि**களிலும் இவற்றையடி யொற்றின 'त्वदङ्घ्रिमुद्दिश्य'. 'उदीर्णसंसार' என்கிற ச்லோகங்களிலும், 'மொய்த்த வல்வினையுள் நின்று' इत्यादिகளிலும் **अभिप्रेत**மானபடியே இவன் **फलसिद्धि**க்குக் கோ(ரி)லின காலத்துக்குள்ளே உபாய பூர்த்தியை உண்டாக்கி ரக்ஷிக்குமென்னுமிடத்தை நினைத்து.

'वृथैव भवतो याता भूयसी जन्मसन्ततिः । तस्यामन्यतमं जन्म संचिन्त्य शरणं व्रज ॥'

என்று தேவலனைக் குறித்து ஸ்ரீசாண்டில்ய பகவான் அருளிச் செய்தானிறே.

**'शरण्यं शरणं च त्वामाहुर्दिव्या महर्षयः'** என்றதுவும் மஹர்ஷிகளுக்கே விச்வா

---

விகல ப்ரபத்தி **नेहाभिक्रमनाशोऽस्ति** என்கிற ந்யாயமாய் வீணாகாமல் பூர்ண ப்ரபத்தியை யுண்டாக்கி மோக்ஷப்ரயோஜகமாகும். இதற்கு நாமஸங்கீர்த்தநாதிகளைத்ருஷ்டாந்தமாகக் கூறுகிறார் எங்ஙனே இதி. **सकृदिति.** விஷ்ணு தர்மம் 70-84. எவனால் **हरिः** என்கிற இரண்டு அக்ஷரங்கள் ஒரு தரம் சொல்லப் பட்டனவோ, அவனால் மோக்ஷம் செல்வதற்கு வேண்டுமது ஸாதிக்கப்பட்டது. **त्वदङ्घ्रि**மென்கிற ச்லோகத்தில் ஆளவந்தார் (28) ஒரஞ்ஜலியே அசுபங்களையெல்லாம் போக்கி சுபங்களையெல்லாமளிக்கு மென்றார். **उदीर्ण** (29) என்கிற ச்லோகத்தில் எம்பெருமான் திருவடியிணையில் பற்றுகிற பெருங் கடலின் ஒரு திவலையே ஸம்ஸாரக் காட்டுத்தீயை அணைத்துவிடுமென்றார். மொய்த்த என்ற திருமாலைப்பாசுரம் (4) நெருங்கிச் சேர்ந்த கொடிய வினைக்கூட்டத்தினுள்ளே அகப்பட்டிருந்தே மூன்றெழுத்தான கோவிந்த நாமத்தைச் சொன்னமட்டிலேயே க்ஷத்ரபந்து பரகதி பெற்றானென்றது. இதெல்லாம் பரம்பரயா மோக்ஷ ஸாதநமென்று ஸத்தர்ககப்ரமாணஸித்தம். அது போல் விகல ப்ரபத்தியும் பரம்பரயா மோக்ஷ ஸாதநமாகும். இதற்கும் சாண்டில்ய ஸ்ம்ருதி ப்ரமாணமென்கிறார் **वृथैवेति.** தேவலனே **भवतः**—உனக்கு **जन्मसन्ततिः**—பிறவிகளின் பரம்பரையானது **भूयसी**—மிகவுமதிகமாய் **वृथैव याता**—வீணாகவே போய்விட்டது. இதற்கு முன் ஜந்மங்களில் மோக்ஷார்த்தமாகச் சில தர்மங்களை அரைகுறையாகச்செய்திருந்தால்கூட இவ்வளவு நாளில் மோக்ஷம் சென்றிருக்கலாம். இப்போதாவது **जन्म**—இப்பிறப்பை **तस्याम् अन्यतमं संचिन्त्य**—அந்த வீணான பரம்பரையில் ஒன்றேயென்று நினைத்தும் **शरणं व्रज**—சரணாகதி செய். சரணாகதிமாத்ரத்தாலே மோக்ஷம் வராது. இந்த ஜந்மமும் முன்ஜந்மங்கள் போலவே மோக்ஷஸாதகமாகாமல் வீணேயாகுமென்று நினைப்பதால் விச்வாஸக்குறைவிலும் சரணாகதியைச் செய்துவிடு. அது வீணாகாதென்க. பூர்வார்த்தத்திற்குப் பிறகு **इति सञ्चिन्त्य शरणं व्रज** என்றேயிருந்தால் இவ்வளவுஜன்மம் வீணாயிற்றேயென்ற கவலையுடன் இப்போதாவது சரணாகதி செய் என்றதாகும். அவ்வாறின்றி **तस्यां अन्यतमं सञ्चिन्त्य** என்றிருப்பதால் ஸந்தேஹத்சடன் சரணாகதி தோற்றுமென்று கருத்து. இப்படி மஹாவிச்வாஸம் வேண்டுமாகில் ப்ரபத்தி ஸர்வஸாதாரணமாகாதே,

ஸம் கூடுவது; இவர்கள் வாக்யத்தை யிட்டு மந்தவிச்வாஸரைத் தெளிவிக்க வேணுமென்றபடி. இப்படி விச்வாஸதாரதம்யமுண்டாகையால் யதாஶாஸ்த்ரம் மஹாவிஶ்வாஸம் ப்ரயத்நமாகக் குறையில்லை.

சிலர்க்கு இவற்றில் விச்வாஸம் குலையும் படியும் அதுக்குப் பரிஹாரமும் சொல்லுகிறோம்—பக்திப்ரபத்திகள் புத்திபேதத்தாலே ஐஶ்வர்யமோக்ஷங்களாகிற் விருத்தபலங்களைக் கொடுக்கக் கூடுமோ? விதைக்கிறவனுடைய அபிஸந்திபேதத்தாலே ஒரு

---

ரா. யு. 120-18. பிரமன் ராமனைப் பலவிதமாகப் புகழும்போது ஶரண்யம் ஶரணம் ச த்வாமாஹுர்திவ்யா மஹர்ஷய: திவ்ய மஹர்ஷிகள் உன்னை சரண்யனாகவும் சரணமாகவும் சொல்லுகிறார்களென்றதால் மஹர்ஷிகளுக்குள்ள எண்ணம் அவருக்கே யில்லை யென்று தெரிகிறதே மற்றவருக்கிதில் விச்வாஸமெங்ஙனே என்ன, அதன் கருத்தை வெளியிடுகிறார் ஶரண்யமிதி. முக்யோபாயத்தைச் செய்து அடையவேண்டு மெம்பெருமானை முக்யோபாய ஸ்த்தாநத்தில் நிறுத்தியும் அடையலாமென்று முக்யோபாயமநுஷ்டிக்கும் மஹர்ஷிகளும் திவ்ய புருஷர்களும் சொன்னார்களென்று இந்த அம்சத்தில் பல ஜ்ஞாநிகளுடைய ஸம்மதியை யறிவித்து இதில் அதிக நம்பிக்கையை யுண்டுபண்ணுவதில் பிரமனுக்கு நோக்கு என்றபடி. இந்த கட்டத்தில் மந்த விச்வாஸத்துடன் செய்த ப்ரபத்தி நேராக உபாயமாகாதென்றறிவிக்கப்பட்டது. இதே கருத்து நிர்யாணாதிகாரத்திலும் த்யாதிகாரத்திலும் மந்தவிச்வாஸ விஷயமான வாக்யத்திற்குச் சொல்லலாம். ஆயினும் நிர்யாணாதிகாரத்தில் அபசார-தேவதாந்தரஸ்பர்சங்களிற் போல் மந்தவிச்வாஸ விஷயத்திலும் சிலருக்குப் பலனுண்டு, சிலருக்கில்லை யென்று இரண்டு பக்ஷங்களையும் சேர்ப்பது தகும், இங்ஙனே த்யாதிகாரத்திலுமென்ற விமர்சம் மேலே தெரியவரும்.

இப்படி விச்வாஸம் பிறவாமையை நிராகரித்து விச்வாஸ தாரதம்யம் நிரூபிக்கப்பட்டது. பிறந்த விச்வாஸம் குலைவதும், மீண்டுமுண்டாவதும் மேலே கூறப்படும். பரிகரவிபாகாதிகாரத்தில் சங்காபஞ்சகநிவ்ருத்தியைச் சொன்னது விச்வாஸ மஹத்துவத்தை ஸ்தாபிப்பதற்காக. இங்கே விச்வாஸம் குலைதற்குக் காரணங்கள் பல கூறப்படுகின்றன.

अधिकार्यनपेक्षत्वं अनन्तफलदायिता । अल्पव्याजे च शीघ्रं च विशेषानादरेण च ॥
कथमित्यस्ति चेत् शङ्का विश्वासो न महान् भवेत् । अन्याल्पाङ्गापेक्षणादिशङ्का न न्यासहानये ॥

சங்காபஞ்சகமுண்டாகில் மஹாவிச்வாஸஹாநியாம்; வேறு சங்கைகளால் ப்ரபத்திக்கு ஹாநி வாராதென்னலாம். பக்தி இத்யாதி. 'चतुर्विधा भजन्ते माम्' என்று பக்தி ஸகல புருஷார்த்த ஸாதநமாகச் சொல்லப்பட்டது. அப்படியே ப்ரபத்தியும், 'तावदास्ति तथा वाञ्छा', यत् येन कामकामेन இத்யாதியால், இது புத்திபேதத்தால் கூடுமென்பது ஸித்தாந்தம் புத்திபேதமாவது இந்தப் பலனுக்காக இதைச் செய்கிறேனென்று ஸங்கல்பத்தின் பேதம். இதை யாக்ஷேபிக்கிறான் மேலே. காரணம் கார்யத்தை யுண்டுபண்ணுவது ஸ்வபாவஸித்தம். அது புருஷஸங்கல்பத்தாலே மாறுமோ? அவரைவிதையை

விதை வேறொரு फलத்தைக் கொடுக்கக் கண்டோமோ என்று சிலர் பார்ப் பர்கள். இதுக்குப் परिहारம் — न्यायங்களாலே बाधिக்கவொண்ணுதபடி प्रत्यक्षादि களைப்போலே ஸ்வவிஷயத்தில் प्रमाणமான शास्त्रம் காட்டுகையால் இப்படிக் கூடும். லோகத்திலும் धर्मशीलராய், उदारனை ராஜாவுக்கு விலையாக ஏதேனும் ஒன்றைக்கொடுத்தால்பெறு(ரு)ம் விலைகிடைக்கவும், அதுதன்னையே उदारबुद्धि யாலே கொடுத்தால் வேண்டுவதெல்லாம் கிடைக்கவும் காணநின்றோம்.
இப் भक्तिप्रपत्तिகள் प्रयोजनान्तरपरனுக்குப் प्रवृत्तिधर्मकोटியிலே நிற்கும். भगवच्चरणार्थि களுக்கு निवृत्तिधर्मங்களாம். இவ்வர்த்தம் नित्यनैमित्तिकादिகளிலுமொக்கும்.

இப்படியே, आवृत्यनावृत्यादिகளாலே विषमस्वभावங்களான उपासनप्रपदनங்

---

விதைக்கிறவன் துவரை முளைக்கவேண்டுமென்று ஸங்கல்பித்தால் அது உண்டாகுமோ வென்று கேள்வி. இதற்குப் பரிஹாரம். அந்தந்த விதை அததற்கே காரணமென்று உலகில் வ்யவஸ்த்தையைக் கண்டிருப்பதால் ஸங்கல்பத்தால் அது வேறாகாது. நமக்குத் தோன்றிய படியன்றி பல கார்யத்துக்குக் காரணமாக சாஸ்த்ரத்தைக் காட்டி அங்கே ஸங்கல்ப்பம் துணையென்றால் ப்ரத்யக்ஷ விரோதமிராத போது இதை மறுக்கமுடியாது. ப்ரத்யக்ஷத்திலும் குயவன் மண்ணுண்டையை யெடுத்து அதனின்று தன் ஸங்கல்பாநுகுணமாகக் குடமும் மடக்கும் வேறும் செய்யக் காண்கிறோ மென்றவாறு. அற்பமான ஐச்வர்ய பலனுக்கான பக்தியும் ப்ரபத்தியுமே உயர்ந்த பலனுக்கும் காரணமாகலாமென்பதற்குத் தக்க த்ருஷ்டாந்த மருளி ச்செய்கிறார் லோகத்திலும் இதி. விலையாக—விலைக்காக, மூல்யத்திற்காக என்றபடி. 'இவ்வஸ்து விலையாகுமா' என்கிற உலக வழக்கை யநுஸரித்து இப் ப்ரயோகம். 'விலைபெற' என்ற பொருளிலே நோக்கு. பெறும்விலை யென்று இங்கே வல்லினமான பாடமே பெரும்பாலுமுள்ளது. இடையின மாகில் பிறருக்குக் கொடுத்தால் கிடைக்கும் விலையைவிட அதிகவிலை அரசனி டமென்று பொருளாம். வல்லினமாகில், முக்யபக்ஷமாய் வருமளவு முழுவிலை பெறலாமென்றதாம். விலையென்ற புத்தி யில்லையாகில் அளவற்ற பலன், வேண்டுவதெல்லாம் = உத்யோகம், கிராமம் முதலானவை. மோக்ஷகர்மனை யினால் பக்தி செய்தால் அது உபஹாரபுத்தியாகுமோ; அதவும் விலைக்காகத் தானே என்பதற்கு ஸமாதானம் இப்பக்தி இத்யாதி. விரும்புகிற மோக்ஷ த்தையும். भगवानेव स्वस्मै स्वप्रीतये என்கிறபடி பகவானுக்காகவே அபேக்ஷிக் கிறபடியால் நிவ்ருத்திதர்மமாகிறது. அதனால் அது உபஹார புத்தியாம், இது நிவ்ருத்திதர்மமானாலும் நித்ய நைமித்திகங்கள் ப்ரவ்ருத்தி தர்மந் தானே என்ன, அங்கும் காம்யத்வ நித்யத்வங்கள் போல் ப்ரவ்ருத்தி தர்மத்வமும் நிவ்ருத்திதர்மத்வமுமுண்டென்கிறார் இவ்வர்த்தமிதி

ஆவ்ருத்தி அநாவ்ருத்தி யென்றாற் போல் பேதமிருக்க ஏகரூபமான பலமும், பலத்தில் விளம்ப—அவிளம்பம் भगवदनुभवதாரதம்யம் இருக்க ஏகரூப ப்ரபத்தியும் கூடுமோ என்கிற சங்கையில் கூறுகிறார் இப்படியே

கள் ஏகபலஸாதனமாகக் கூடுமோ வென்னில், இதுக்கு உத்தரமும் அதிகாரிவிஶேஷத் தாலே லோகவேதங்களிற்படியே ஸிரம். முமுக்ஷுக்களாய் ஸ்வதந்த்ரப்ரபத்தி பண்ணினவர் களுக்கு உபாயமும் மோக்ஷமும் ஏகரூபமாயிருக்கச் செய்தேயும், ஸம்ஸாரத்தில் அடி ச்சுட்டால் வரும் த்வரையின் தாரதம்யத்துக்கு ஈடாகத் தந்தம் இச்சையாலே காலம் குறிக்கிறதில் ஏற்றச் சுருக்கத்தாலே பலத்தில் விலம்பாவிலம்பங்கள் கூடும். ஆழ்வார்கள் நாதமுனிகளுள்ளிட்டார்க்கு பகவத்ஸாக்ஷாத்காராதிகள் உண்டா யிருக்க, சிலர்க்கு இவை யின்றிக்கே யொழிகைக்குக் காரணம்–ப்ரபத்திகாலத் தில் பலஸங்கல்பத்தில் வைஷம்யம்; ப்ராக்தநஸுக்ருதவிஶேஷமாகவுமாம். முன்பு கோலி(ரி)ன பலாம்ஶம் ஸக்ருத்ப்ரபத்தியாலே ஸித்தமானாலும், கோலா(ரா)த அம்ஶத்தைப் பற்றப் பின்பு தீவ்ரஸங்கல்பம் பிறந்தார்க்குப் புந:ப்ரபத்தி பண்ணவுமாம்.

வேறே சிலர் ஸ்வார்த்தப்ரபத்திகளிலே சில பலியாதொழியக் கண்டு ஸகலபல ஸாதனமான ப்ரபத்தியிலே அதிஶங்கை பண்ணுவர்கள். அவர்களையும் அல்லாத ஶாஸ்த்ரார்த்தங்களிற் படிகளிலே கர்ம–கர்த்ரு-ஸாதனவைகுண்யத்தை வெளியிட்டுத் தெளிவிக்க வேணும். இங்குக் கர்மவைகுண்யமாவது—மஹாவிச்வாஸாதிகள் குறைகை கர்த்ரு- வைகுண்யமாவது—ப்ரபத்திக்குச் சொன்ன அதிகாரம் ந்யூநமாகை. ஸாதனவைகுண்யமா வது-யதாஶாஸ்த்ரம் ப்ரபத்த்யநுஷ்டானத்துக்கு மூலமான ஸதுபதேஶாதிகளின்றிக்கேயொழிகை; இவ் வைகுண்யங்களற ப்ரபத்தி பண்ணினபோது ஸ்வபலங்களாகக்கோலி(ரி)ன பலங்களும் ஸித்திக்கக் காணுநின்றோம்.

வேறே சிலர் ப்ரபத்திசாஸ்த்ரத்தோடு சாஸ்த்ராந்தரங்களோடு வாசியற ஸர்வஶாஸ்த்ரங்களுக்கும் ப்ரவர்த்தகரான வ்யாஸாதிகள்,

"आलोड्य सर्वशास्त्राणि विचार्य च पुनः पुनः । इदमेकं सुनिष्पन्नं ध्येयो नारायणः सदा ॥"

---

இதி. தேஹாவஸாநத்தில் மோக்ஷம் விரும்பி ப்ரபத்தி செய்த பிறகு ஆர்த்தி யுண்டானல் முன்னே மோக்ஷம் பெறவாகுமோ என்பதற்கு உத்தரம் முன்பு இத்யாதி. அப்யுபகத ப்ராப்த்தத்தில் ஆர்த்தியினல் எவ்வளவு அம்சம் தனக்கு அநிஷ்டமாகிறதோ. அவ்வளவு அம்சத்தை நிவ்ருத்தி செயவதற் காக மீண்டும் ப்ரபத்தி செய்யலாம். வேறேதி. புத்ரகாமேஷ்டி யாகம் செய்தும் சில இடம் புத்ரன் பெறுமையைக் கண்டு ஸ்வர்க்காதி பலத்துக்கான கர்மா வில் அவிச்வாஸம் கூடுமோ? எக்கர்மாவுக்கும் பலஸாதனத்வமுண்டு. சிசித் ஸாதிகளில் போல் சில இடம் பலனில்லையாகிலும் கர்மாவுக்கு யோக்யதை யில்லை யென்ன வொண்ணுது, பலன் வாராமை 'கர்மகர்த்ருஸாதன வைகுண்யத்தாலே என்ருர் ந்யாய ஸூத்ரத்தில். இதை ப்ரக்ருதத்திலே விவரிக்கிருர் இங்கு இத்யாதியால். இங்கு–ப்ரபத்தி ரூபகர்மாவில்; அதிகாரமாவன ஆகிஞ்சந்யம் அநந்யகதிகத்வம், ப்ரபத்தியநுஷ்டாநத்திற்கான ஜ்ஞாந சக்த்யாதி.

புக்தி யோகமே மோக்ஷோபாயம். ப்ரபத்தியே இடையாதென்றவாறு உண்டாம் விச்வாஸக் குறைவை விரித்துரைத்துக் கழிக்கிருர் வேறே சிலர் ப்ர பத்தி இதி. ஆலோட்யேதி பா. ஆநு. 178-11. ஸர்வ சாஸ்த்ரங்களிலும் வாக்யங் களையாராய்ந்து மீண்டும் மீண்டும் அர்த்தசிந்தனை செய்தபிறகேற்பட்ட முடிவு

என்றும், 'हरिरेकः सदा ध्येयो भवद्भिः सत्त्वसंस्थितैः' என்றும், 'स्मर्तव्यः सततं विष्णुः' என்றுமிப்படி நிஷ்கர்ஷியாநிற்க, सकृत्प्रपत्तिमात्रத்தாலே मोक्षம் ஆகக் கூடுமோ? 'मामेव ये प्रपद्यन्ते' इत्यादिகள் अङ्गप्रपत्तिविषयங்களானாற்போலே चरमश्लोकादिகளும் सपरिकरप्रपत्तियை भक्त्यङ्गமாக विधिக்கிறன வாகவேண்டாவோ என்று சொல்லுவர்கள். இதுவும் अनुपपन्नம் —

"शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिताः। तेऽपि मृत्युमतिक्रम्य यान्ति तत् वैष्णवं पदम् ॥" என்றும்

'यत् येन कामकामेन न साध्यं साधनान्तरैः। मुमुक्षुणा यत् साङ्ख्येन, योगेन, न च भक्तितः ॥
प्राप्यते परमं धाम यतो नाऽऽवर्तते यतिः। तेन तेनाऽऽप्यते तत्तत् न्यासेनैव महामुने! ॥
परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः"

என்றும் इत्यादिवचनங்களாலே स्वतन्त्रप्रपत्ति सिद्धिக்கால் இந்நிஷ்டையுடையவனுக்கு श्रीवैकुण्ठगद्यத்திற்படியிலே स्वयंफलமாக 'ध्येयो नारायणः सदा' என்கிற அர்த்தத்தில் தன் விழுக்காடு அந்வயத்துக்கு விரோதமில்லை இது अरोग-

---

என்னவென்றால் நாராயணனை எப்போதும் த்யாநம் செய்யவேண்டும். हरिरिति ஹரிவம்சம் (வி) 132-8. ருத்ரன் உபதேசிப்பதாவது ஸத்த்வகுணத்தில் நிலையுற்ற உங்களால் ஹரி ஒருவனே எப்போதும் த்யாநம் செய்யப்படவேண்டும். -नान्यो जगति देवोऽस्ति विष्णोर्नारायणात् परः என்று உத்தரார்த்தம். स्मर्तव्य இதி. விஷ்ணு எப்போதும் நினைக்கத் தக்கவர். இதன் மேல்பாகம் विस्मर्तव्यो न जातुचित् என்றதென்பர். ஆனாற்போலே இதி. கீதை 7ல் பக்தி யோகத்தை விதிக்குமிடத்தில் प्रपद्यन्ते என்றிருப்பதால் அது அங்கப்ரபத்தியே शरणमिति ब्राह्मपुराणम्. த்யாநயோகத்தை விட்டு உன்னிடம் சரணாகதி செய்பவர் எவரோ, அவரும் ஸம்ஸாரத்தைக் கடந்து விஷ்ணுபதம் பெறுகிறார். यदिति. அஹி. ஸம். 37-25 कामकामेन—மோக்ஷம் நீங்கலாக மற்ற பலனை யபேக்ஷிக்கிற எவனால் வேறு உபாயங்களைக் கொண்டு எது பெறப்படவில்லையோ, யோகிக்கு எங்கிருந்து புநராவ்ருத்தி யில்லையோ, அந்த இடம். மோக்ஷம் விரும்பும் எவனால் கர்மயோகத்தாலும் ஜ்ஞாநயோகத்தாலும் பக்தி யோகத்தாலும்பெறப்படுவதாயில்லையோ, அந்தந்த புருஷனால் அந்தந்தப்பலனானது न्यासத்தாலேயே பெறப்படும், அதனாலேயே புருஷோத்தமனென்கிற பரமாத்மா வசீகரிக்கப்படுகிறான். இவ் வசநங்கள் येन कामकामेन என்கிறதற்கு இணங்க பக்தி யோகமில்லாதவர்களுக்கே ப்ரபத்தியினால் மோக்ஷத்தைக் கூறுவதால் இது ஸ்வதந்த்ர ப்ரபத்தி யாகுமென்றபடி. த்யாநமே செய்யவேண்டுமென்ற வசநவிரோதத்தைப் பரிஹரிக்கிறார். இந்நிஷ்டை இதி. தன் விழுக்காடு அந்வயத்திற்கு = தானாக நேருமளவு ஸம்பந்தத்திற்கு விழுக்காடு = விழுதல். (பாகப்பிரிவினையில் கோலாலளக்கும்போது கோல்முனை எங்கே விழுகிறதோ அதுவரையில் = அந்த விழுக்காட்டிற்கு भाग மென்பர்). ப்ரக்ருதத்தில் ध्येयः— என்றதை பக்தியோக நிஷ்டனுக்குள்ள த்யாநத்தோடு பூர்ணஸாம்யமிராவிட்டாலும் நேருமளவுக்குக் கொள்வதென்று கருத்து. ப்ரபந்நனுடைய த்யாநத்திற்கு ஏற்றமுமுண்டென்கிறார் இது இதி. ஸம்ஸார நிவ்ருத்திக்

னுக்கும் आरोग्यार्थिக்கும் க்ஷீரம் ஸேவ்யமென்றதோடொக்கும். ஸாங்கமான ध्यानविशेषम् सर्वाधिकारமன்றே யாகிலும், भगवद्विषயத்தில் अधिकारानुरूपமாக அறியலாமளவும், "நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" इत्यादिகளிற்படியே अनुसन्धिக்கவும் குறை யில்லை. भाष्यकारரும் இவ் उपायनिष्ठैயைச் சிறிய गद्यத்திலும் பெரிய गद्यத்திலும் அருளிச்செய்து, श्रीवैकुण्ठगद्यத்திலும் இந்निष्ठैயைச் சுருக்கிக் காட்டி, இருந்த நாள் प्राप्यरुचि குலையாதே வளர்ந்து போரும்படிக்கு ஈடான अनुसन्धानविशेषத்தை

'ततश्च प्रत्यहमात्मोज्जीवनायैवमनुस्मरेत्' என்று தொடங்கி அருளிச்செய்தார். இப் प्रपन्नனுக்கு, 'பூசித்தும் போக்கினேன் போது' என்கிற अनन्यप्रयोजनமான पूजाविशेषத்தை 'अथ परमैकान्तिनो भगवदाराधनप्रयोगं वक्ष्ये—भगवत्कैङ्कर्यैकरतिः परमैकान्ती भूत्वा' என்று தொடங்கி நித்யத்திலே 'अत्यर्थप्रियाविरत-विशदतम-प्रत्यक्षरूपानु-

---

கான த்யாநம் ரோக நிவ்ருத்திக்காகப் பால் உண்பது போலாம். ப்ரபத்தியால் ஸம்ஸார நிவ்ருத்தி ஸித்திக்கிறபடியால் இவன் செய்யும் த்யாநம் ஸ்வயம்போக்யமாய் ரோகமற்றவன் பால் உண்பதற்கு ஸமாநமாகும். அத்ரைவர்ணிக ப்ரபந்நனுக்கும் இது கூடுமென்கிறார் ஸாங்கமான இதி. நிரந்தரமிதி. திருச்சந்த விருத்தம் 101. இரந்து என்று பாட்டாரம்பம். உனது பாதபங்கஜத்தை இடைவிடாமல் நான் நினைப்பதானது ஆக-ஸித்திக்கும்படி நீ நினைக்கவேண்டும்=ஸங்கல்பிக்க வேண்டுமென்றதாம். திருமழிசையாழ்வார் ஸங்கர ஜாதியாயிருப்பினும் தமக்கு இந்த த்யாநத்தை விரும்பியதால் இது வேதவிஹித மான பக்தியோகமன்று. த்யாநத்தை வைகுண்ட गद्यத்தில், ஆத்மோஜ்ஜீவநத்திற்காக ப்ரதிதிநம் ஆவ்ருத்தி செய்யென்றும் மிக ப்ரியமாய் தர்சநரூபமான த்யானமென்றும் சொன்னதால் பக்தியோகமே கருதப்பட்டதென்று நினைக்கவேண்டா. மூன்று गद्यங்களிலும் ப்ரபத்தியையே ப்ரஸ்தாவம் செய்திருக்கிறபடியால் அவ்வாறாகாது உஜ்ஜீவநமென்பது மோக்ஷ ப்ராப்தியன்று; இங்கிருந்த நாள் பெறும் உயர்ந்த வாழ்க்கையே இது. இதற்காகவே பூஜைக்கு ப்ராதாந்யம் வைத்து நித்யக்ரந்தமருளிய தென்கிறார் இப்ரபந்நனுக்கு இதி. பூசித்தும் இதி, நான்முகன் திரு 63, கீழே உரைக்கப்பெற்றது अथेति, "பரமைகாந்தியாயிருப்பவன் செய்ய வேண்டும் பகவதாராதந ப்ரகாரத்தைச் சொல்லப்போகிறேன்; வேறு பலன் விரும்பாமல் கைங்கர்யத்திலே ருசியுள்ளவனாய் பரமைகாந்தியா யிருந்து கொண்டு" என்றார். இங்கே कैङ्कर्यैकरतिः என்ற பதத்தால் பக்தியோக நிஷ்டனுக்குப் போல் உபாயகோடியில் சேர்க்கலாகாதென்று தெரிவிப்பதால் மேல் சொல்லும் த்யாநம் பக்தியோகமன்றென்று வ்யக்தம். अत्यर्थेति. சொல்லுக்கடங்காதபடி மிகவும் ப்ரியமாய், இடைவிடாததாய் ஸுஸ்பஷ்டமான பகவத் ஸாக்ஷாத்காரரூபமாம்படி த்யாநம் பண்ணிக்கொண்டிருக்கவேண்டும். அநுஸந்தாந பரிவாஹமான—உள்ளே எழுந்த எம்பெருமானுடைய த்யாநம் மிக்க ப்ரீதிரூபமானபடியால் அந்த ப்ரீதி உள்ளடங்காமை மேல்

ध्यानेन ध्यायन् आसीत' என்றும் அருளிச்செய்தார்

இப்படி अनन्यप्रयोजननिरन्तरभगवदनुसन्धानपरीवाहமான கைங்கர்யத்திலே भगवच्छास्त्रोक्तமுமாய் व्यास-दक्षादि-महर्षिमतங்களோடும் सङ्गतமாய், 'மறந்திகழும்' என்கிற பாட்டிலும் 'இருமுப்பொழுதேத்தி' என்ற பாசுரத்துக்கு விவக்ஷிதமாக आचार्यர்கள் व्याख्यानம் பண்ணின कालविभागத்தை.

'अभिगच्छन् हरिं प्रातः पश्चात् द्रव्याणि चार्जयन् । अर्चयंश्च ततो देवं ततो मन्त्रान् जपन्नपि॥

ध्यायन्नपि परं देवं कालेष्वुक्तेषु पञ्चसु । वर्तमानः सदा चैवं पाञ्चकालिकवर्त्मना ॥

स्वार्जितैः गन्धपुष्पाद्यैः शुभैः शक्त्यनुरूपतः । आराधयन् हरिं भक्त्या गमयिष्यामि वासरान् ॥'

என்று பாஷ்யகாரர் அருளிச்செய்யக் கேட்டு வங்கிபுரத்துநம்பி நித்யத்திலே संग्रहித்தார். இப் படிப் பெரியஜீயருள்ளிட்டார் நித்யங்களிலும் கண்டு

---

வழியும் கைங்கர்யமாக மாறவேண்டும் அவ்வளவு த்யானம் வேண்டுமென்பதால் ध्येयो नारायणो देवम् என்றது சக்த ப்ரபந்நனுக்குமென்று ஸித்திக்கிறது. व्यासेति. வ்யாஸ ஸ்ம்ருதியில் அபிகமந-உபாதாநாதி ரூபமாக பஞ்சகாலங்களென்று ஸ்பஷ்டமாகச் சொல்லாமற் போனாலும் அந்த ரீதியில் அநுஷ்டாந க்ரமம் விசதமாகத் தெரிகிறதென்று ஸ்ரீபாஞ்சராத்ர ரக்ஷையில் நித்யாநுஷ்டாந ஸ்த்தாபநாதிகாரத்தில் விரித்துரைக்கப்பெற்றது. दक्षस्मृतिயில் அஹோராத்ரத்தை எட்டு காலமாகப் பிரித்திருந்தாலும் அங்கும் பஞ்சகால ப்ரக்ரியை தெரிகிறதென்னப்பட்டது. தர்மசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதோடு அபிகமநாதிகளையும் சேர்க்கமுடியுமென்றும் நிரூபிக்கப்பட்டது. குலசேகரபெருமாள் திருமொழி 1-7. பாசுரம் மறமிதி. கொடுமை நிறைந்த மனத்தை யொழித்து வஞ்சகத்தை விட்டு ஐந்து விஷயங்களையும் இந்த்ரியங்களையும் அடக்கிப் பஞ்சகாலங்களில். ஏத்தி— நித்ய கர்மங்களோடு பக்தரானவருக்குக் கதியான அரங்கனைக் காண்டவரை அறிவிக்கும் இப்பாசுரத்திலே. இருமுப்பொழுது என்று அருளினார். இச் சொல்லுக்கு இரு-இரண்டும் மு-மூன்றுமான பொழுது என்றால் பஞ்சகாலங்கள் என்று பெரியவாச்சான் பிள்ளையின் உரை. இவ்வாறு கூறுவிடில். இரு—பெரிய என்று பொருள் கொண்டால் நிஷ்ப்ரயோஜநமாம் இவ்வாறான வ்யாக்யாநத்தை யநுஸரித்து பாஷ்யகாரர் அருளிச்செய்யக் கேட்டு வங்கிபுரத்துநம்பி ஸங்க்ரஹித்தார் என்றிங்குள்ள வாக்யஸந்தர்ப்பத்தால் இங்கு—ஆசார்யர்களென்று ஆளவந்தார் முதலானவரைக் கொள்வது தகும். பாட்டிலும் என்கிற உம்மை ஆசார்யர்கள் என்றதோடு சேரும். ஆக ஆழ்வார்களின் திருவுள்ளம் பஞ்சகால ப்ரக்ரியையில்.

अभिगच्छन् இத்யாதி வங்கீச்வர நித்யகாரிகை. அவர் பாஷ்யகாரருக்கு அந்தரங்க ஸாக்ஷாச் சிஷ்யர். अभिगच्छन्—आर्जयन्, अर्चयन्, जपन्, ध्यायन् என்று பஞ்சகால கார்யம் சொல்லப்பட்டது பெரிய ஜீயர் பட்டரின் சிஷ்யர். இவருடைய நித்ய க்ரந்தம் ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையிலும் உதாஹரிக்கப்பட்டது. சரமச்லோகாதிகாரத்திலும் காண்க. ஸங்க்ரஹம் விஸ்தரமென்பதுமட்டு

கொள்வது. இவற்றிலுள்ள பேதங்கள் அவ்வோ ஸம்ஹிதாவிசேஷங்களிலே சொல்லும் விகல்பங்களாலே ஸங்கதங்கள். இப்படி யாகையாலே,

"न देवलोकाक्रमणम्". "भवांस्तु सह वैदेह्या",

"यत्र कुत्र कुले वासो येषु केषु भवोऽस्तु मे। तत्र दास्यैकभोगे स्यात् सदा सर्वत्र मे रतिः॥

कर्मणा मनसा वाचा शिरसा वा कथञ्चन। त्वां विना नान्यमुद्दिश्य करिष्ये किञ्चिदप्यहम्॥"

"தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்கிறபடியே भगवत्प्रीतिमात्रप्ரயோஜநமான கைங்கர்யத்திலே स्वाचार्योपदिष्टமாயிருப்பதொரு शास्त्रीयप्रक्रियैயைக் கொண்டு यथाकालम् அந்வயிக்க ப்ராப்தம்.

இப்படி नित्यமாக विधिக்கிற भगवदभिगमनादिகளில் लौकायतिकரைப் போலே

---

மின்றி ஒவ்வொருவருடைய நித்யத்திலும் அநுஷ்டாநவைஷம்யம் தெரி கிறதே யென்பதற்கு உத்தரம் இவற்றில் இதி. எல்லோரும் பாஷ்யகார சிஷ்யராயிருந்தாலும் யாஜுஷஸாமாதி வைதிகாநுஷ்டாநம் போல் அவர வர்கள் தங்கள் பித்ருபிதாமஹக்ரமப்ராப்தமான வெவ்வேறு ஸம்ஹிதா நுஷ்டாநத்தையும் சேர்த்திருப்பதால் ஒன்றும் அப்ராமாணிகமாகாது, நமக்கு அது ப்ராப்த மன்றாகில், விருத்த மல்லாததை க்ரஹித்துக் கொண்டு விருத்தமானவற்றில் பாஷ்யகாரர் அருளியதையே கைப்பற்றுவோம். இப் படியாகையாலே = பூர்வாசார்யர்கள் சொன்ன அநுஷ்டாநமெல்லாம் சாஸ் த்ராநுஸாரிஸம்ப்ரதாயப்ராப்தமாகையாலே. இதனால் கைங்கர்யம் யதேச்ஜ சமென்பதில்லை; தன் ப்ரயோஜநத்தை விட்டுப் பரமாத்ம ப்ரயோஜநத்தையே உத்தேசிப்பவர்களுக்கு ப்ரமாணங்களே மூலம். न देवेत्यादि. ரா. அ. 31—5 லக்ஷ்மணன்வார்த்தை நான் மோக்ஷத்தையோ கைவல்யத்தையோ ஐச்வர்யத் தையோ விரும்பேன், त्वया विना என்பதற்கு—அவதாரமூர்த்தியான உம்மை விட்டென்பது பொருள், அல்லது தேவலோகம் செல்வதையும் தேவத்வம் பெறுவதையும் ஸர்வ லோக ஈச்வரனாயிருப்பதையும் வேண்டேன். भवानिति, ரா. அ. 31—25, यत्कुलेति ஜிதந்தே 2—8, எக் குலத்திலாகிலும் வாஸம் இருக்கட்டும், எந்த ப்ராணிகளிடமாவது பிறவி யிருக்கட்டும், உமக்கடிமை யென்கிற போகத்திலேயே எங்கும் எப்பொழுதும் எனக்கு ஆசை வேண்டும், மநோவாக்காயங்களாலாம் செயலையும் தலையாலாம் ப்ரணாமத்தையும் உன்னை விட்டு வேறொருவரை உத்தேசித்து எப்படியும் சிறிதும் செய்யேன். தனக்கே திருவாய் உ-9-4 எனக்கே இது என்று பாசுர ஆரம்பம், உனக்கேநான் ஆட் செய்யவேண்டுமென்று உனக்காகவே ஆம்படி என்னை நீ கொள்வதென்பதே நான் வேண்டுவதாகும். இப்ரமாணங்களால் ஒரு பலனையும் உத்தேசிக்கா மல் ஸ்வயம்ப்ரயோஜநமாகச் செய்வது ஸ்பஷ்டம். இச் சாஸ்த்ரிய செயல் களால் பகவத்ப்ரீதியாகிற இஷ்டப்ராப்தி போல் அநிஷ்டநிவ்ருத்தி யென்கிற பலனும் உண்டென்கிறார்—'இப்படி இத்யாதியால், அநிஷ்டங் களாவன—அந்யாபிகமநாதிகள் என்று மேலே வ்யக்தம், பகவதபிகம நாதிகளில் என்ற பத்ததிற்கு இழிந்தால் என்றதில் அந்வயம், லௌகா

याज्ञिकमनुष्यர்களுக்காகவாதல், सत्त्वज्ञानवैराग्यादिகளில்லாதாரைப்போலே प्रयोजना-न्तरத்துக்காகவாதல், पूर्णोपायரல்லாதாரைப்போலே मोक्षार्थिயாகவாதலன்றிக்கே முக்தரைப் போலே स्वाभिमतத்தை நடத்தவேணுமென்கிற ருசியாலே यथाशास्त्रம் स्वयंप्रयोजनமாக இழிந்தால் இவ் अभिगमनादिகள், अन्याभिगमनமும் अन्यार्थप्रवृत्तिயும் अन्ययजनமும் अन्यशब्दங்களும் अन्यचिन्तैயுமாகிற छिद्रங்கள் புகாமைக்குக் கடகமாயிருக்கும்.

अन्याभिगमनம் ஆகாதென்னுமிடத்தை, ' இனிப்போய் ஒருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயை யழிவுகண்டாய்'' என்று பெரியாழ்வார் அருளிச்செய்தார்.

अन्यार्थप्रवृत्ति ஆகாதென்னுமிடத்தையும் 'கூறைசோறிவைவேண்டுவதில்லை' என்று அருளிச்செய்தார்.

अन्ययजनம் ஆகாதென்னுமிடத்தை 'உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாளவனையல்லால்' என்றும், 'தேவனெம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையுந் தகுமே' என்றும், 'ஈன்றோளிருக்க மணைநீராட்டி' என்றும்,

---

யதிகர்-சார்வாகமதத்தினர், சாஸ்த்ரீயகார்யங்களை க்யாதிலாப பூஜைகளுக்குச் செய்கிற ராஜஸர்கள் ஐஹிகபலனை யுத்தேசிப்பதால் சார்வாகஸமராவர், இது சாஸ்த த்தில் கூறுத பலன், ப்ரயோஜநாந்தரம்—சாஸ்த்ரத்தில் சொன்ன பசு புத்ரஸ்வர்காதி, பூர்ணோபாயரல்லாதார் அந்திம காலம்வரை உபாயாநுஷ்டாநம் செய்யவேண்டியிருக்கும் பக்தியோகநிஷ்டர். அந்யாபிகமநம்—தேவதாந்தரமநுஷ்ய ப்ரபுஸேவநாதிகள். யஜநம்—பூஜை; அந்ய சப்தங்கள்—அந்யஸ்துதி ஸங்கீர்த்தநாதிகள். கடகம் என்பதற்கு கவசம், ப்ராகாரம், காப்பதற்கான ஸைந்யம் என்ற பொருள்களாம், பஞ்சகாலத்தில் சொன்ன ஐந்தும், வேறொன்றும் புகாமைக்குக் காரணமாய் கோட்டையாயிருக்குமென்றபடி, அந்யாபிகமநாதிகள் அநிஷ்டமென்பதற்குப் பாசுரங்களை யுதாஹரிக்கிறார் இனி இதி, பெரியா. திரு. 5-3-3, உனக்குக் கைங்கர்யம் செய்ய இழிந்த பிறகு இதனின்று விலகி வேறொருவனுக்கு வணங்கி அவனில்லத்தில் உட்புக இடமிராமல் கடைவாசலில் நின்றிருக்கை உன்னுடைய பெருமைக்கு அழிவு செய்வதாகும், ராஜமஹிஷி பிச்சை யெடுப்பதற்கு ஸமாநமாம். உனக்கு என்று பாசுராரம்பம், கூறை இதி-பெரியா. திரு 5-1-4 நெடுமையால் என்று பாசுராரம்பம். கூறைசோறு வஸ்த்ரமும் அன்னமும் நான் அபேக்ஷிப்பதில்லை. உன்னித்தூ திருவாய் 4-5-10 உன்னித்து ஆஸ்த்தை வைத்து எம்பெருமானை விட வேறு தெய்வத்தைத் தொழமாட்டாள். தேவன் இதி. திருவாய் 2-2-4, தேவும் என்று பாசுர ஆரம்பம், ஜகத்வ்யாபாரலீலனான ஸர்வேச்வரன் தவிர வேறொருவருக்குப் பூவும் பூசையும் தகா, ஈன்றோள் இதி. திருவாசிரியம் 6, ஒ. ஓ என்று பாசுராரம்பம்; பெற்ற தாயிருக்க, அவளை விட்டு மணைநீராட்டி—மரப்பாச்சிக்கு ஸ்நாநம் செய்வித்து இது தகாதென்றபடி; பெற்ற தாய் ஆராத்யையா

மற்று இங்கோர் புதுத் தெய்வம் கொண்டாடுந் தொண்டீர் பெற்ற தாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ மாட்டாத தகவற்றீரே' என்றுமித்யாதிகளாலே அருளிச்செய்தார்கள். सप्तर्षिसंवादத்திலும்]

'विष्णुं ब्रह्मण्यदेवेशं सर्वलोकनमस्कृतम् । त्रैलोक्यस्थितिसंहारसृष्टिहेतुं निरीश्वरम् ॥

आधातारं विधातारं सन्धातारं जगद्गुरुम् । विहाय स भजत्यन्यं बिसस्तैन्यं करोति यः ॥,'

'विष्णुधर्मपरो न स्यात् विष्णुधर्मपराङ्मुखः । कुधर्मवृत्तशीलस्स्यात् बिसस्तैन्यं करोति यः ॥'

---

யிருக்க அவளை விட்டு அவளைப்போல் ஒரு மரப்பாச்சி செய்து அதற்கு ஆராதநம் தகுமோ; தகாதென்றபடி, அல்லது मातृदेवो भव என்கிற சாஸ்த்ரத்தை மீறி அவளாராதநத்தை ப்ரதாநமாக்காமல் மரம்முதலானவற்றாலான எம்பெருமான் முதலான அர்ச்சாமூர்த்திகளையே ப்ரதாநமாக ஆராதிப்பதும் தகாதென்னலாம். மற்று இதி. பேயிருக்குமென்று பாசுராரம்பம். பெரிய திரு. 6.6. ப்ரளயக்கடல் வெள்ளம் பேய்போலெங்கும் பரவிய காலத்தில் தாயாய் உங்களைத் திருவயிற்றில் வைத்துக் காக்கும் தெய்வமிருக்க இங்கு ஸ்ருஷ்டியிலே புதிது புதிதாக வுண்டாகுமதைத் தெய்வமாகக் கொண்டாடுகின்றவர்களே! பகவத் கைங்கர்யம் செய்யமாட்டாதவராய் பகவத் க்ருபையையிழந்தவர்களே! பெற்ற தாயைவிட்டு மரப்பாச்சிக்கு வெந்நீரால் அபிஷேகம் செய்கிறீர்களோ என்றபடி, ஸப்தரிஷி ஸம்வாதம் இதிஹாஸ ஸமுச்சயத்தில், ஒரு க்ஷாமகாலத்தில் புஷ்கர தீர்த்தத்திலிருக்கும் தாமரைக் கிழங்குகளையே இவர்கள் ஆஹாரமாகக் கொண்டிருந்த போது ஒருநாள் இந்த்ரன் இவர்களுடைய நிலையைப் பரீக்ஷிப்பதற்காக ப்ராஹ்மண வேஷமாய் வந்து ஆஹாரம் வேண்ட, அப்போது அந்த அந்தணனை அங்கேயேயிருக்கச் செய்து ரிஷிகள் ஆராதநத்திற்கு முன் மாத்யான்னிக ஸ்நாநத்திற்காகத் தீர்த்தம் சென்றனர். வந்து திருவாராதநம் தொடங்கி நிவேதந காலத்தில் தாங்கள் சேமித்து வைத்திருந்த தாமரைக்கிழங்குகள் களவு போனதைக் கண்டு ஒருவர்மேல் ஒருவர் ஸந்தேஹப்பட்டபோது எல்லோரும் இல்லையென்று தமது வீரவைஷ்ணவத்வம்தெளிவாம்படி சபதம் செய்தார்கள். அதிற் சேர்ந்தவை विष्णुम् இத்யாதி ச்லோகங்கள். இதனின்று விஷ்ணு பக்தியில்லாதார்க்குச் சோராதிகளுக்குப் போலே மஹாபராதம் தெரிகிறது. இவற்றின் பொருளாவது—வேதப்ராஹ்மண ஹிதமாய், தைவப்ரக்ருதிகளுக்கு ஈச்வரனாய் ஸர்வலோகத்தாலும் நமஸ்கரிக்கப்பட்டு மூவுலகிற்கே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரணமாய், தனக்கு ஈச்வரனில்லாதவனாய் எல்லாம் தரிப்பவனாய் விதிக்கின்றவனாய் பலனளிப்பவனாய் ஜகத்துக்கு அஜ்ஞாநம் போக்குகின்றவனுமான விஷ்ணுவை விட்டு வேறொரு தெய்வத்தை அடையும் தோஷத்தை இத் தாமரைக் கிழங்கைத் திருடியவன் பெறுவானாக-மற்றொரு ச்லோகம்— இக்கிழங்கைத் திருடினவன் வைஷ்ணவ தர்மங்களிலே பற்றற்றவனாய்—வெறுப்புற்றவனாய் ஆபாஸமான தர்மமும் ஆசாரமும் குணமுமுடையனுவான் என்றது. இவை போன்ற வாக்யங்கள் ஆழ்வார்களருளிச்செய்

என்றும்(ம்?) சொல்லப்பட்டது.

**अन्यकीर्तन**ம் ஆகாதென்னுமிடத்தை ‘வாய் அவனை யல்லது வாழ்த்தாது’, ‘சொன்னால் விரோதம்’ **इत्यादि**களிலே அருளிச்செய்தார்கள்.

**अन्यचिन्तन**ம் ஆகாதென்னுமிடத்தை, ‘சிந்தை மற்றொன்றின் திறத்த தல்லாத் தன்மை தேவபிரானறியும்’ என்றும், ‘வருதேவர் மற்றுளரென்று என் மனத்து இறையுங் கருதேன்’ என்றும் அருளிச்செய்தார்.

இஸ் **समाराधनादिक्रम**ங்களில் **अनधिकृत**ர்க்கும் இக் காலங்கள் எல்லாவற்றி லும் தங்களுக்கு **योग्य**மான நித்ய-நைமித்திகங்களாலும் ஸங்கீர்த்தநாதி களாலும் **समाराधनादियोग्य**ரான **परमभागवत**ருக்குப் **परतन्त्र**ராய் **यथाधिकार**ம் வல்ல தேவை செய்தும் இக் கைங்கர்யம் இழவாதொழியலாம். இவ்வர்த்தத்தை

आराधनानां सर्वेषां विष्णोराराधनं परम्। तस्मात् परतरं प्रोक्तं तदीयाराधनं परम् ॥’

---

தவைகளுக்கு ப்ரமாணங்கள். வாய் இதி மு தி 11. எனது வாய் எம்பெரு மானைத் தவிர வேறொருவனைக் கீர்த்தநம் செய்யாது; பூதனையின் விஷத்தை யுண்ட பெருமான் விஷயமே யாகும். சொன்னால்—திருவாய்மொழி 3.9-1. நான் சொல்லுவது உங்களுக்கு விரோதமாகும்; வண்டுகளும் பாடும் திருவேங்கடத்தில் ஆனைபோல் விளங்கும் எம்பெருமானிருக்க எனது இன் கவியை (பூனைபோன்ற) வேறொருவன் விஷயமாக யான் செய்யேனென்றார்.

ஐந்தாவது விஷயம் யோகமாகும். அது விஷயம் குறிக்கிறார் அந்ய சிந்தநமிதி. சிந்தை இதி. திருவாய்மொழி 6-10-10. திருவாறன்விளை யில் நித்யவாஸம் செய்யும் எம்பெருமானை தீர்த்தனுக்கே யாகும் என் சிந்தை; வேறொருவன்விஷயத்தில் ஸம்பந்தப்பட்டதாகாதென்கிற ஸ்வ பாவத்தை தேவதேவன் அறிவான். வருதேவர் இதி பெரியதிரு 8-10 2. கண்ணபுரத்தம்மானே! ப்ரளயத்தில் எல்லாம் தனக்குள்ளடக்கிய உன்னை விட்டு ஸ்ருஷ்டிகாலத்தில்மட்டும் வந்து போகும் தேவர்கள் சிந்திக்கக் கூடியவரல்லர். நான் ஒரு க்ஷணமும் வேறு கருதமாட்டேன்

இப்படிப் பஞ்சகால கார்யமும் நாராயணத்யாநமாகவே அவன் கைங் கர்யமாயிருக்குமென்றதாயிற்று. த்யாநபரீவாஹமான ஆராதநாதி கைங் கர்யம் செய்கின்றவர்களுக்கு அந்யகார்யங்கள் புக அவகாசமில்லையானாலும் ஆராதநாதிகளில் அதிகாரமில்லாத, உபநயனம் பஞ்சஸம்ஸ்காரமெல்லாம் பெறுதவரான, பாலன், வ்ருத்தன், ஆசௌசமுள்ளவன், ஸ்த்ரீ என்றாற் போன்றவர்களுக்கு **अच्छिद्रकैङ्कर्य**மிராதாகையால் அந்யகார்யம் புகுமேயென்ன அருளிச்செய்கிறார் இஸ்ஸமாராதநேதி. நித்ய நைமித்திகங்களென்றது **काल**வ்யதிரிக்த விஷயம். பரமபாகவதரிடம் அந்வயமுமாம். அவர் கார்யத்தில் எல்லாக்காலமும் அந்வயிக்கலாமாகையால் வேறொன்றுக்கு **छिद्र**மிரா தென்றபடி. வல்ல தேவை—முடிந்த ஸேவை—கைங்கர்யம். பாகவதரை பகவத் பக்தரென்கிற காரணத்தினால் ஆராதிக்கிறபடியால் அவரிடத்தில் பகவானுக்கு அதிகப்ரீதியாதலால் பகவத் கைங்கர்யமுமாகிறது **आराधनानामिति**”

என்றும், 'குன்றமெடுத்த பிரானடியாரொடுமொன்றிநின்ற சடகோபனுரை செயல்' என்றும், 'ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரைச் சாத்தியிருப்பார் தவம்' என்றும் அருளிச்செய்தார்கள். இக் கைங்கர்யங்களை அநுஷ்டித்து உகப்பார்க்கும் இது கண்டுகப்பார்க்கும், जगद्व्यापारம் பண்ண வேண்டுவனான ஈश्वरனுக்கும் முக்தருக்கும்போலே, भोगம் ஏகரூபம்.

'धर्मः श्रुतो वा दृष्टो वा स्मृतो वा कथितोऽपि वा। अनुमोदितो वा राजेन्द्र पुनाति पुरुषं सदा॥'

---

பாத்மோத்தரம்—29-81. முன்னமே விவரிக்கப்பட்டது குன்றமிதி. திருவாய்மொழி—7-4-11. கோவர்த்தநமென்கிற மலையை யெடுத்து மஹோபகாரகனான கண்ணனின் தாஸர்களுடன் சேர்ந்துநின்ற ஆழ்வாரின் வாசிக கைங்கர்யமென்று பொருள்—இங்கே ஒன்றி நின்ற என்ற சொல்லால் கோவர்த்தந மலையின் உத்தாரணத்தையும், அங்கிருந்த இடையார்களையும் மனத்தில் கண்டு அவரோடு தாமும் சேர்ந்திருப்பதாக ஆழ்ந்தார் என்பது அறிவிக்கப்படும். இத்துடன் பிரானோடு ஒன்றி நின்ற, என்றதால் பாகவத ப்ராவண்யம் ஆழ்வாருக்குத் தெரிகிறது, ஏத்தி. நான்முகன் திரு=18. மாறாய என்று பாட்டாரம்பம். விரோதியான ஹிரண்யனைப் பிளந்த மிடுக்குடைய நரசிங்கனை ஹிரண்யாதிகளைப் போலாகாமல், மற்று–அவ்வாறின்றி வேறாகி ஸ்தோத்ரம் செய்கின்ற பகவத்பக்தரை, அவர்களை யாச்ரயித்திருக்கின்றவரான பாகவத பக்தர்களுடைய பாகவத கைங்கர்யமாகிய தவமானது வெல்லும்; பாகவதபக்தர் சிறந்தவரென்றபடி.

இப்படி அந்யகார்யத்திற்கு அவகாசமிராமற்போனாலும் பகவத்கைங்கர்யத்தில் அதிகாரமில்லாமல் பாகவதகைங்கர்யம் செய்கிறவர்களுக்கு பகவத்கைங்கர்யம் செய்கிறவர்களுக்குள்ள ஆநந்தமிராதே; அதற்கு மாறாக நமக்கு பகவத்கைங்கர்யம் செய்ய வாய்க்கவில்லை யென்று வருத்தந்தானே உண்டாகுமென்ன அருளிச்செய்கிறார் இக்கைங்கர்யங்களை இதி. விவேகியாய்க் கைங்கர்யம் செய்கின்றவர்கள் தமக்கொரு பலனை நினைக்காமல் பகவானுக்காகவே செய்வர்; அதனால் அந்தக் கைங்கர்யத்தைப் பிறர் செய்தாலும் அதனால் பகவானுக்கு உகப்பைக் கண்டு இஷ்டஸித்தி வந்தபடியால் செய்தவரைப்போல் உகந்தேயிருப்பர். இதற்கு த்ருஷ்டாந்தம்—ஈச்வரன் ஜகத்வ்யாபாரமான ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகிறான்; முக்தர்கள் அவற்றைச் செய்ய அதிகாரிகளல்லர். அவன் இச்சிப்பதையே இவர்கள் இச்சிப்பதால் அவர்களுக்கும் அந்த வ்யாபாரத்தால் ஈச்வரனுக்குப் போல் ஸந்தோஷமுண்டாகிறது; தாம் செய்தாலும் ஈச்வரனுடைய உகப்புக்காகவே செய்யவேண்டும். ஆக அவ் வுகப்பால் செய்பவருக்குப் போல் காண்பவருக்கும் ஒரே ஆநந்தம். இது வரக்கூடுமென்பதற்கு இவ்வுலகிலேயே ப்ரமாணஸித்தமான பாவநத்வத்தை த்ருஷ்டாந்தமாக்குகிறார் धर्म இதி. ஆச்வமேதம் 96—51. பாவநத்வமாவது பரிசுத்தியையுண்டுபண்ணுகை. தர்மமானது ஒருவரால் அநுஷ்டிக்கப்படக் கேட்டாலும் கண்டாலும்

என்கிற **पावनत्वம்**போலே **भोग्यत्वமும்** ஏகரூபமாகக் குறையில்லை.
அப்படியே—'**तस्मात् सप्रणवं शूद्रो मन्त्रनामानि न कीर्तयेत्**' என்று மஹாபாரதத்திலும்,

**'अष्टाक्षरजपः स्त्रीणां प्रकृत्यैव विधीयते ।**

न स्वरः प्रणवोऽङ्गानि नाप्यन्यविधयस्तथा । स्त்रीणां तु शूद्रजातीनां मन्त्रमात्रोक्तिरिष्यते ॥'

---

நினைத்தாலும் சொன்னாலும் கொண்டாடினாலும் புருஷனை எப்போதும் பரிசுத்தமாக்குகிறது. செய்பவனுக்கு தர்மத்தினால் வரும் சுத்தி கேட்பவர் காண்பவரெல்லோருக்கும் வருவதை இசைகிறபோது, அநுபவத்திற்கும் ஒத்திருக்கும் ஏகரூபபோகத்தை யிசையலாமென்றபடி.

இப்படி கைங்கர்யம் இடைவிடாமல் நேர்வதால் அந்யாபிகமநாதி களுக்கு இடமில்லை யென்ற அம்சமிருந்தாலும் த்யாந பரீவாஹமாகக் கைங்கர்யம் செய்கின்றவர்களுக்குப் போல் இவர்களுக்கு த்யாந ஸம்பந்த மில்லையே யெனனில்—ஆனாலும் '**ध्येयो नारायणस्सदा**' என்பது இவர்களையும் கொள்ளும். பக்தி யோகம் மட்டும் த்யாந பதார்த்தமாகில் அது சிலருக்கே கூடுமாகையால் வாக்யம் சிலர் விஷயத்திலே யாகும். பொதுவாக த்யாநத் தைக் கொண்டால் ப்ரபந்நபரமைகாந்திகளுக்குமாகும். த்யாநமென்பது யோக விசேஷத்தினால் இடைவிடாமல் நினைத்து வருவதென்னாமல், பொது வாக ஒரு வஸ்துவை நினைத்த வண்ணமிருப்பதென்றால், ஆஸந விசேஷத்திலு ட்கார்ந்து ப்ரயாஸை மூலம் பெறப்படும் த்யாநம்போலன்றி **ध्यायेत् नारायणं देवं स्नानादिषु च कर्मसु** என்றாற் போலே ஸாதாரணமான தொடர்ந்த நினைவு மட்டுமாவதால் அது பக்த ப்ரபந்ந-த்ரைவர்ணிக அத்ரைவர்ணிக-ஸ்த்ரீ சூத்ராதி ஸர்வஸாதாரணமாகலாமெண்கிறார் அப்படியே இதி. இதற்கு **प्रपत्तिनिष्ठ**ரித்யாதியில் அந்வயம். இந்த அநுஸ்மரண ரஸத்தின் பெருமைக்குச் சில அம்சம் குறைந்த அஷ்டாக்ஷரத்தை த்ருஷ்டாந்தமாக்குகிறார் **तस्मादिति**. அடியும் முனையும் கழிந்த அஷ்டாக்ஷரம்போல் யோகாங்களான பூர்வ**भाग**மும் **आप्रयाणानुवृत्ति**யுமில்லாத அநுஸ்மரணமும், கரும்பின் மத்யபாகம் போல் ஸாரமாகுமென்றபடி, ஆகிறப்போலே என்றவரையில் இந்த த்யாநாம்ச த்திற்குத் திருமந்த்ரம் த்ருஷ்டாந்தமாகக் கூறப்படும். சில அம்சம் கழிந் தாலும் அஷ்டாக்ஷரம் பலனளிக்கு மென்பதற்கு ப்ரமாணங்களும் அதில் ஸ்த்ரீ சூத்ர விஷயத்திலுள்ள வாசியும் தெரிவிக்கப்படுகிறது மேலே. **तस्मात्**—ஆகையினாலே சூத்ரனானவன் என்னுடைய பெயர்களை ப்ரணவத் தோடுகூட கீர்த்தநம் செய்யலாகாதென்றது மஹாபாரதம் ஆச்வமேதம் 118. 16. இதனால் அஷ்டாக்ஷரத்திலுள்ள ப்ரணவம் சூத்ரனுக்கு நிஷித்த மாகிறது. ஆனாலும் அஷ்டாக்ஷர ஜபம் உண்டென்பதற்கு நாரதியகல்ப்பம் ப்ரமாணம். அங்குச் சொன்னதாவது அஷ்டாக்ஷர ஜபம் ஸ்த்ரீகளுக்கு **प्रकृत्या**—ப்ரணவமில்லாமல் விதிக்கப்படுகிறது. ப்ரக்ருதி யென்பதால் வ்யாபக மந்த்ராதிகளில் பொதுவாயுள்ள ப்ரணவம் நீங்கலான அம்சம் கருதப்பெறும்; அல்லது **तस्य प्रकृतिलीनस्य** என்றவிடத்திற் போல் ப்ரணவத்துக்கு மூலமான

என்று नारदीयादिகளிலும், 'नमो नारायणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत्' என்று ஸ்ரீவராஹபுராணத்திலும், 'வாயினால் நமோ நாரணாவென்று மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி' என்றும், 'நாமஞ் சொல்லில் நமோ நாராயணமே' என்றும் சொல்லுகிறபடியே திருமந்த்ரமாகிற எட்டுக்கண்ணான கரும்பிலே வேர்ப் பற்றும் தலையாடையும் கழிந்தால் நடுவுள்ள அம்சம் सर्वोपजीव्यமாயிருப் போலே—प्रपत्तिनिष्ठரெல்லார்க்கும் ஸர்வகாலத்திலும் भगवदनुस्मरणरसத்துக்கும் விரோதமில்லை. सपरिकरமான विलक्षणभक्तियोगமாகில் ஸிலர்க்கு விரோத முள்ளது. क्षणमात्रसाध्यமான प्रपदनம் ஸித்தமானவளவிலும் 'द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता' என்று शरण्यन் அருளிச்செய்தானிறே.

ஆகையால் 'ध्येयो नारायणः सदा' என்றதுவும் यथाधिकारம் சிலர்க்கு உபாயமா

---

அகாரத்தைக் கொள்ளலாம், அகாரத்தோடு சேர்வதே விதிக்கப்படுகிறது बीजमष्टाक्षरस्य यात् तेनाष्टाक्षरतेति. ஆக மூலமந்த்ராதிகாரத்திலெடுத்த नमोनारायणस्य आदिः என்கிற ச்லோகத்தைக் கொள்க. அவர்கள் பண்ணும் ஜபத்தில் உதாத்தாதி ஸ்வரம், ப்ரணவம், அங்கந்யாஸாதிகள், மந்த்ரஸித்திக்கான விதிகள் ஒன்றுமில்லை: த்ரைவர்ணிக ஸ்த்ரீகளுக்கும் சூத்ர ஜாதியருக்கும் மந்த்ரத்தில் எட்டக்ஷரங்கள் மட்டுமே சாஸ்த்ரங்களிசைந்தன. ச்வபாக னுக்கு (நாயின் மாம்ஸமுண்ணும் ஜாதிக்கு), முதலெழுத்தும் கடையிலுள்ள ஆய என்கிற பாகமுமில்லை யென்பதற்கு வராஹபுராணம், கைசிகம், 139-53 ச்லோகத்தையும் காட்டுகிறார். ச்வபாக ஜாதியான நம்பாடுவான், தான் சொல்லக்கூடிய नमोनारायण என்றதை ஜபித்தவனாய்த் திரும்பி வந்தானென்றபடி, வாயினால் இதி. பெரியா—திரு 4-5-2. 'வாயினால்' என்று பாட்டாரம்பம். நமோ நாராயணா என்று வாயினால் சொலலி மத்தகத்து இடை=மஸ்தகமத்யத்தில்—தலையில் அஞ்ஜலி செய்து மரண மடைந்தால், பரமபதமழைத்துச் சென்றவர் இக்கீழ்திக்குக்குப் பிறகு வரவொட்டார். வேறொருவரை ஈடு வைத்தாலுமிசையாரென்றது. நாமமிதி. பெரிய திரு 6·10-1 கிடந்தநம்பி யென்றுற் போன்ற எம்பெரு மானின் நாமங்கள் சொல்ல வேண்டு மென்றால் அவற்றில் சிறந்த மந்த்ரம் நமோ நாராயணமே யென்றபடி, எட்டுக் கண்ணான கரும்பு=கணுக்களெட் டைக்கொண்ட கரும்பு. வேர்பற்று=அடிப்பாகம். தலையாடை=முனையும் இலைகளும். சிலர்க்கு=சக்தாபிஜ்ஞத்ரைவர்ணிகரல்லாதார்க்கு, சரண்யன ருளிச்செய்தான்=गद्यத்தில் பாஷ்யகாரர் செய்த ப்ரார்த்தனைக்கு உத்தரம் கூறும் சரண்யன் வார்த்தையில் அடங்கியது இவ் வாக்யம்.

இவ்வளவு விஸ்தரத்தால் சொன்னதென்ன வெனில்—ध्येयो नारायणः இத்யாதி ஸ்தலத்தில் சொன்ன த்யாநமானது சிலர்க்குமட்டுமான பக்தியோ கமன்று, இது ஸர்வஸாதாரணமான உபதேசமானதால் எவருக்கு எவ்வாறாக த்யாநம் வரக்கூடுமோ அவ்வாறானதைக் கொள்ளவேண்டு மென்பதே என்கிறார் ஆகையால் இதி. கீழெடுத்த एकैकशःமென்கிற வாக்யத்துக்கு நிர்

கவும் சிலர்க்குப் ஃபலமாகவும் கொள்ளுகையால் இது स्वतन्त्रप्रपत्तिக்கு विरुद्धமன்று
இப் ப்ரபத்தி அங்கமான வேஷத்தை भाष्यादिகளிலே उदाहरिத்தருளினர்; स्वतन्त्रமான வேஷத்தை கத்யத்திலே அருளிச்செய்தார். 'क्लेशानां च क्षयकरं योगादन्यन्न विद्यते', 'न कर्मणां क्षयो भूप जन्मनामयुतैरपि । ऋते योगात् कर्मकक्षं योगाग्निः क्षपयेत् परम् ॥' इत्यादिகளும் स्वतन्त्रप्रपत्तिविधिबलத்தாலே अधिकार्यन्तरविषयங்களாகக் கடவன.
இப்படி साध्योपायविषयமாக மற்றும் பிறக்கும் கலக்கங்களுக்குப் பரிஹாரம் நிக்ஷேபரக்ஷையில் கண்டுகொள்வது இஸ் साध्योपायம் இங்கு शोधितமான கட்டளையிலே ரஹஸ்யத்ரயத்தில் यथास्थानம் अनुसन्धेयम்

"வரிக்கின்றனன் பரன் யாவரை" என்று மறையதனில்
விரிக்கின்றதுங் குறியொன்றால் வினையரையாதலி னும்

---

வாஹம் क्लेशानां च இத்யாதியால். न कर्मणामिति. விஷ்ணு த. 102-4. भूप—அரசனே! जन्मनामयुतैरपि பல பதினாயிரம் ஜந்மங்களானாலும் योगात् ऋते· யோகமென்கிற உபாயமிராமல் कर्मणां क्षयः—ஸஞ்சித ஸர்வகர்மநிவ்ருத்தி யானது न—இல்லை; योगाग्निः परं =யோகமாகிற நெருப்பொன்றே कर्मकक्षं—ஸஞ்சிதகர்மங்களாகிற உலர்ந்த புற்கட்டை. क्षपयेत्· அழிக்கவல்லது. அதிகார்யந்தரேதி பக்தியோகாதிகாரி யென்றபடி. ப்ரபத்தியதிகாரியும் யோகஸ்த்தாநத்திலே பகவானை நிறுத்துகிறபடியால் தத்ஸ்தாநபந்நன் மூலமான ஸம்ஸாரநிவ்ருத்தியும் தந்மூலமென்றே சொல்லலாம். அவ்வளவு சோதிக்காமற் போனாலும் விரோதமில்லை யென்றபடி.

இவ் வதிகாரத்தில் ப்ரபத்தியில் அதிகாரம், ஸ்வரூபம், அங்கங்கள் என்ற விஷயங்கள்மட்டும் விசாரிக்கப்பட்டன. நிக்ஷேபரக்ஷையில் ஸ்வரூபம், லக்ஷணம், அநுஷ்டாநம், சாஸ்த்ரவிதி இவைகள் காணுமையாலும், பக்தி தவிர வேறு உபாயத்தை நிஷேதித்திருப்பதாலும், பக்தியும் ப்ரபத்தியுமொன்றே யாகையாலும், ப்ரபத்தி செய்யக் கூடியதன்றாகையாலும், ப்ரஸித்தியிராமையாலும், பக்தி யிராமல் மோக்ஷமென்பது ஸம்ப்ரதாயவிருத்தமாகையாலும் ப்ரபத்தி யென்கிற உபாயம் சொல்ல வாகாதென்று பூர்வபக்ஷம் செய்து விரிவாக உத்தரம் அருளிச்செய்திருக்கிறார். வேண்டுமாகில், அங்கே காணலாமென்கிறார் இப்படி இதி. शोधितமான கட்டளையில்.—கீழே விசாரித்து நிர்ணயிக்கப் பட்ட ரீதியில்.

விதிக்கப்பட்ட உபாயங்களை யெல்லாம் வேத்ததிலேயே கழித்திருப்பதால் ஸாத்யோபாயவிஷயமான ஸ்ம்ருதிபுராணபாஞ்சராத்ராதிகள் விச்வஸிக்கத் தக்கவை யல்ல என்கிற சங்கையைப் பரிஹரித்துக்கொண்டு ஸங்க்ரஹப் பாசுரம் அருளுகிறார். வரிக்கின்றனன் இதி. 'यमेव एष वृणुते-एषः = இப்பரன் यम्—யாவரை वृणुते—தன்னிடம் வரும்படித் தானே வரிக்கிறானோ. என்று கூறி, மறைஅதனில் = உபநிஷத்திலேயே விரிக்கின்றதும் ச்ரவணமநநத்யாநங்களான உபாயங்களைக் கழித்து ஸித்தமான அவனே உபாயமென்றறியும்படி விரித்துச் சொன்னதும் குறி ஒன்றால் = ஒரு ஸாத்யோ

**உரைக்கின்ற நன்னெறி யோரும் படிகளிலோர்ந்துலகம்**
**தரிக்கின்ற தாரகனார் தகவாற் றரிக்கின்றனமே. (31)**

---

பாயமாகிற உபாயத்தால் வினையரை ஆதலில்—கர்மிகளான ஜீவர்களைக் குறிக்காவதாகையால். (தனிவாக்யமாகப் பிரிக்காமல் வினையரையாதலின் என்று ஒரே வாக்யமாக்கலாம்) **நாம்**—கர்மிகளான நாம் **உரைக்கின்ற**= சாஸ்த்ரம் விதித்திருக்கின்ற **நல்நெறி** பக்தி ப்ரபத்தி யென்கிற ச்ரேஷ்டமான உபாயங்களை **ஒரும் படிகளில்**—விசாரிக்கக்கூடிய ப்ரகாரங்களில் ஒன்று விடாமல் **ஓர்ந்து**—விசாரித்து; (அநுஷ்டித்து) **உலகம் தரிக்கின்ற** உலகங்களுக்கு ஆதாரமான, **தாரகனார்**—உத்தாரகனான எம்பெருமானின் **தகவால் தரிக்கின்றனம்**= உயிர் தரித்தவராவோம்.

சாஸ்த்ரத்தில் த்யாநாதிகளை யுபாயமாக விதித்திருந்தாலும் வேதமே '**नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन**' என்று அவற்றைக் கழித்து எம்பெருமான் வரிப்பதாலேயே மோக்ஷமென்று அவனையே உபாயமாகச் சொல்லியிருக்கிறதே யென்று கேள்வியாம். இதற்குப் பரிஹாரம்—இது போலவே **नाहं वेदैर्न तपसा**' என்று உபாயங்களை நிஷேதித்து **भक्त्या त्वनन्यया शक्यः**' என்று பக்தியாகிற ஸாத்யோபாயத்தை உபாயமாக கீதையில் சொல்லியிருப்பது வ்யாக்யானமாய் இவ்வுபநிஷத்திற்கும் அதே பொருள் தேறுவதால் ஸாத்யோபாயத்தை நிஷேத்திக்கலாகாது. ஈச்வரன் ஒரு குறியும் வேண்டாமல் தானே வரிக்கிறானாகில் எல்லோரையும் வரிக்கவேண்டும். வினையரை வரிக்கலாகுமோ வென்னில்—ஒருவரையும் வரிக்கலாகாது. அதனுடைய கருத்தாவது—எவனிடம் ப்ரீதியோ அவனைத் தானே வரிக்கவேண்டும். பக்திக்குக் காரணம் த்யாந ச்ரவணாதிகள் மட்டுமாகா. பூர்ணப்ரீதி யிருக்கவேண்டுமென்றதாம். ஆக ப்ரீதி ரூபாபந்நத்யாநமே வேண்டுமென்றபடி. அதே கீதையில் பக்தியென்னப்படும். இப்படி ஸத்தர்க்கபூர்வகம் ச்ரீபாஷ்யத்திலேயே நிர்ணயித்திருப்பதால் மறையும் மற்ற புராணாதிகளும் ஒருமிடருவதால் ஸாத்யோபாயம் ஸித்திக்கும். அது ஸித்திக்கபோது அகிஞ்சநனுக்கு அதன் ஸ்தாநத்தில் ப்ரபத்தியும் ஸித்திக்கும். இதில் வரும் ஆக்ஷேபங்களுக்கெல்லாம் ஒரும் படிகளில் ஓர்ந்து பரிஹாரம் காணவேணும். ஆகத் தகவு மட்டும் காரணமாகாது. ஸாத்யோபாயத்திற்குப் பிறகே தகவு கார்யம் செய்யுமென்றபடி. சிலர் பக்தியை நிஷேதித்து ப்ரபத்தியை இது விதிக்கிறதென்றும் கூறுவர் அப்போதும் ப்ரபத்தியாவது பெருமானே என்னலாகாது; குறியொன்று அவச்யம் வேண்டும். முமுக்ஷுத்வமும் ஆகிஞ்சந்யமும் போதுமென்னில்—அந்த முமுக்ஷுத்வம் தீவ்ரமானதென்றும் எந்த ஸமயத்தில் மோக்ஷாபேக்ஷையென்றும் தெரிவதற்காக ப்ரார்த்தநா விசேஷமும், ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி நிலையானதென்றறிய **भरन्यासமும்** வேண்டும் பக்திப்ரபத்திகளை மறுக்கலாகாது. (31)

இவ்வதிகாரத்தில்இப்படி ஸாதித்தஸாத்யோபாயத்தைக் குதர்க்கங்களைக்

तत्तद्धैतुकहेतुके कृतधियस्तर्केन्द्रजालक्रमे बिभ्राणाः कथकप्रधानगणने निष्ठां कनिष्ठाश्रयाम् ।
अध्यात्मश्रुतिसंप्रदायकतकैरद्धा विशुद्धाशयाः सिद्धोपायवशीक्रियामिति हि नः साध्यां समध्यापयन् ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे साध्योपायशोधनाधिकारश्चतुर्विंशः ॥ 24
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

கொண்டு கழிக்கலாகாது; இதை ஸ்தாபித்த முன்னோர்கள் ஸ்ரீவிஷ்ணுசித்த-வரதார்ய-வாதிஹம்ஸாம்புவாஹார்யாதிகள் மஹான்கள் ஸத்தர்க்கோபந்யாஸத்திலே முதன்மை பெற்றவராதலின் என்று ச்லோகத்தினால் அருளிச்செய்கிறார் तत्तदिति तत्तत् हैतुक—அந்தந்த யுக்திவாதிகளை हेतु-காரணமாகவுடைய तर्केन्द्रजाल क्रमे—குதர்க்கங்களாகிற இந்த்ர ஜாலங்களின் அடுக்கில் कृतधियः—இந்த்ரஜாலமென்ற தெளிவை யுடையவர்களும், कथकप्रधानगणने—வாதிகளில் முக்யமாயிருப்பவரை எண்ணும் போது कनिष्ठा आश्रयां—சுண்டு விரலாகிய முதல்விரலைச் சார்ந்த निष्ठां—நிலையை बिभ्राणाः—பரிக்கின்றவர்களும்—வாதி ச்ரேஷ்டர்களாக முதன்மையாக எண்ணப்பட்டவர்களுமென்றபடி—अध्यात्मश्रुति—ஜீவாத்ம பரமாத்ம பரமறிந்த விஷயமான வேதங்களின் संप्रदाय—பரம்பரையாக வந்த உபதேசமாகிற कतकैः—தேத்தாங்கொட்டைகளாலே अद्धा—நிச்சயமாக विशुद्ध आशयाः-தெளிந்த மனமுடையருமான ப்ராமாணிகர்கள், इति-இந்த ப்ரகாரம் सिद्धोपायवशीक्रियां—ஸித்தோபாயமான பெருமானை வசப்படுத்தவாம் செயலை साध्यां हि—நமக்கு ஸாதிக்கப்படவேண்டியதாக வன்றோ समध्यापयन्—நன்கு போதித்தார்கள். ஈச்வரன் ப்ரஸன்னனாகாமல் ஸித்தோபாயமாகான்; ப்ரஸாதம் பக்தியாலாகவேண்டும். பக்தி ஸித்திப்பதற்கு ப்ரபத்தி வேண்டும். பக்தி யின்றியே ப்ரபத்தியாலும் ப்ரஸாதம் பெறலாம், எப்படியும் तस्य च वशीकरणं तच्छरणागतिरेव என்று பாஷ்யகாரரும் அருளியதே நிலையென்க

ஸாத்யோபாய சோதநாதிகாரம் முற்றும்.

**ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:**

## ப்ரபாவவ்யவஸ்த்தாதிகாரம்—25

உபாயவிஷயமான விசாரம் முடிந்தது. உபாய ப்ரபாவ விஷயம் மேலே ஸாத்யோபாயத்திற்குள்ள ப்ரபாவத்தை ஆராயும் போது உத்க்ருஷ்ட ஜாதியையும் அது கொடுக்குமென்றுற்போன்ற உபாய ப்ரபாவத்தை யதிகமாக்குவதை விலக்கி அந்த ப்ரபாவத்கிற்கு ஒரு வரம்பு வரையப்படுகிறது இவ்வதிகாரத்தில். மேல் அதிகாரத்தில், 'மேல்ஜாதியை யளிக்கு மென்கிற வார்த்தையை வேறுவிதம் நிர்வஹித்தால் மற்ற ப்ரபாவத்தைச் சொல்லும் வாக்யத்தையும் வேறுவிதம் நிர்வஹிக்கலாம்' என்று இதற்கு சாஸ்த்ர ஸம்மத ப்ரபாவத்தையே சிலர் அழிக்கமுயன்றதால் அதை நிவ்ருத்திசெய்து ரக்ஷிப்பதாம். வ்யவஸ்த்தை செய்வதற்காகச் சில வாக்யங்களுக்கு யதாச்ருதமான

श्रीः

## प्रभावव्यवस्थाधिकारः

### ப்ரபாவவ்யவஸ்த்தாதிகாரம்-25

स्वरूपं यद् यादृग् गुणविभवलीलादि च विभोस्तदाज्ञासेतुश्च श्रुतिभिरवसेयं तदखिलम् ।

तथा तद्भक्तानां तदुपसदनादेश्च महिमा यथाधीतं सद्भिर्यतिपतिमुखैरध्यवसितः ॥

இப்படி த்வயத்தில் த்விதீயாந்தபதங்களாலே ப்ரகாசிதமான ஸித்தோபாயவிஷயமாகவும், ஆக்யாதபதத்தாலே சொல்லப்பட்ட ஸாத்யோபாயவிஷயமாகவும் பிறக்கும் வ்யாகுலங்கள் சமிப்பிக்கும் வழி காட்டினோம். இவ் உபாயப்ரபாவவிஷயமாக ப்ரமாணங்கள் காட்டின வளவுக்கு ஏற நினைத்தும் குறைய நினைத்தும் வரும் கலக்கங்கள் சமிப்பிக்கவேணும்.

---

அர்த்தத்தை விட்டால் மற்ற வாக்யங்களிலும் அவ்வாறு விடலாமே யென்கிற சங்கை வந்தபடியால் மேலே ப்ரபாவரக்ஷாதிகாரம் வேண்டியதாயிற்று. முதல் விஷயமான ச்லோகம் स्वरूपमिति.' विभोः—ஸர்வேச்வரனின் स्वरूपम्—ஆத்ம ஸ்வரூபம் यद्—எதுவோ, यादृक्—எப்படிப்பட்டதோ, அவனுடைய गुणविभव लीलादि च—குணங்களும், விபூதிகளும் ஸ்ருஷ்டி முதலான லீலாவ்யாபாரங்களும் भोग வ்யாபாரங்களும், திருமேனியும் यद् यादृक्—எதுவோ எப்படிப் பட்டதோ, तदाज्ञासेतुश्च—அவனுஜ்ஞை யாம் அணை = வர்ணாச்ரமதர்மவ்யவஸ்த்தையும் எதுவோ எப்படிப்பட்டதோ—तद् अखिलं அதெல்லாம் श्रुतिभिः—வேதங்களைக்கொண்டு अवसेयम्—அறியப்படவேண்டியதாம்; இது தெரிந்தவிஷயம். तथा—அப்படியே तद्भक्तानां—பகவத்பக்தர்களுடையவும் तदुपसदनादेः च—அவனை யாச்ரயிப்பது அவனது பக்தரை யாச்ரயிப்பது முதலானவற்றினுடையவும் महिमा—ப்ரபாவமும் यतिपतिमुखैः—ஸ்ரீபாஷ்யகாரர்முதலான सद्भिः—நல்லோர்களால் यथाधीतं—ஓதியபடியே अध्यवसितः—நிர்ணயிக்கப் பட்டது. பகவானுடைய ஸ்வரூபத்திற்கு ஸ்வரூப நிருபக தர்மங்களும் மற்றவையுமென்றும், பரத்வம் ஸௌலப்யமென்றும் பிரிவும், அவன் குணங்கள் எவை எப்படிப்பட்டவை, நித்யமா அநித்யமா இத்யாதியும் அவனுடைய ஆஜ்ஞாரூபமான வர்ணாச்ரம தர்ம பேதமுமாகியவற்றிற்கு வேதமே ப்ரமாணம்; இவை போலே பக்தர்களுடையவும் அவன்விஷயமான பக்தி ப்ரபத்தி, பாகவதாச்ரயணம் கைங்கர்யம் முதலானவற்றினுடையவும் ப்ரபாவமும் சாஸ்த்ரம் சொல்லியபடியே இசையப்படுமென்று பாஷ்யகாராதிகள் ஸ்தாபித்ததினின்று நன்கு விளங்கும். ஆகையால் ப்ரபாவத்தை சாஸ்த்ர மிசைந்ததற்கு மேலாகச் சொல்லலாகாதென்றபடி.

த்விதீயாந்த பதங்களாலே—चरणौ शरणं இரண்டும் த்விதீயாந்தபதங்கள், த்வயத்திலென்பதற்கு मन्त्ररत्नम् चरमश्लोकமென்கிற ரஹஸ்ய த்வயத்தில் என்ற பொருளானால் मामेकं शरणं என்பதையும் கொள்க. आख्यातपद த்தாலே—प्रपद्ये என்கிற க்ரியாபதத்தாலே. व्याकुलங்கள்—கலக்கங்கள். ஏற= அதிகமாக, நினைத்து= நினைப்பதில். ஏற நினையாமைக்காக ப்ரபாவ

'आस्फोटयन्ति पितरः प्रनृत्यन्ति पितामहाः । वैष्णवो नः कुले जातः स नः सन्तारयिष्यति ॥' என்றும் 'கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழு பிறப்பும் மா சதிரிது பெற்று' என்றும் சொல்லுகிற படியே अनुबन्धिகளுக்கும் உத்தாரகமான प्रभावத்தையுடையனுயிறே இவ்வுபாய நிஷ்டன் இருப்பது. 'यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः' என்று भगवद्ज्ञानமுடையவனுடைய प्रभावம் தேவர்களாலும் परिच्छेदिக்க வொண்ணுதென்றார்களிறே. ஆனாலும் இதுக்கு विरुद्धமல்லாத प्रमाणबलத்தாலே முற்பட जातिव्यवस्थै சொல்லுகிறோம்—

'न शूद्रा भगवद्भक्ता विप्रा भागवताः स्मृताः । सर्ववर्णेषु ते शूद्रा ये ह्यभक्ता जनार्दने ॥'

என்று भगवद्भक्तियாகிற गुणविशेषसद्सद्भावங்களாலே अपकृष्टजातीयரை उत्कृष्टजातीयवाचकशब्दத்தாலே சொல்லியும், उत्कृष्टजातीयரை अपकृष्टजातिवाचकशब्दத்தாலே சொல்லியும் இருந்தது. இதடியாக भगवद्भक्तரெல்லாரும் ஏகஜாதீயரன்றோ என்று मृदुप्रज्ञர்கள் நினைப்பர்கள். இங்ஙனேயாகில், भागवतब्राह्मणன் இன்ன

---

வ்யவஸ்த்தை; குறைய நினையாமைக்காக ப்ரபாவரக்ஷை என்ன ப்ர பாவமிருப்பதென்ன, அதை உதாஹரிக்கிறார் आस्फोटयन्तीति. வரா. புரா. நமது வம்சத்தில் வைஷ்ணவன் பிறந்தான். அவன் நம்மைக் கரையேற்றப் போகிறானென்று பித்ருலோகத்தில் பித்ருக்கள் தங்கள் தோள்களைத் தட்டிக்கொள்கிறார்கள்; பிதாமஹர்கள் கூத்தாடுகிறார்கள். இதை விவரிக்கும் திருவாய்மொழிப் பாசுரம் 2-7-1 எமர்—நமக்குக் கீழ் ஏழ் பிறப்பும்= பின்னால் வரப்போகும் ஏழுஸந்ததியும், மேல்—முன்னே சென்ற ஏழு ஸந்ததியும் கேசவன்தமர்—பகவத்பக்தராவர், மா சதிர் இது—இந்த மஹா சாதுர்யம் நமக்கு வாய்ப்பு—வாய்க்கின்ற ஆ= ப்ரகாரம் அவனுலாம். அநுபந்திகள் = முன்பின் ஸம்பந்தப்பட்டவர்கள் ஆக உபாயநிஷ்டரின் ப்ரபாவமானது எளிதில் ஸம்பந்திஉத்தாரகத்வமென்றதாம். योहीति வநபர்வ 191-20. இப் பரமாத்மாவை எவன் அறிகிறானோ அவனை தேவர்களும் அறியார். பரமாத்ம ஜ்ஞாநமுடையவன் தேவர்களாலும் அளவிடப்படாத ப்ரபாவமுடையவனென்றபடி. இது ஒரம்சத்தில் ஸம்மதம். இத்துடன் சிலர்—'உபாயநிஷ்டனுக்கு சூத்ரத்வாதிஜாதியும் போய் உத்க்ருஷ்ட ஜாதியே வருகிறது; அவன் ஸம்பந்தம் பெற்ற நிஷித்தமான வஸ்துவும் உத்க்ருஷ்டமாய்க் கொள்ளக் கூடியதாகிறது; அவன் விதிநிஷேதங்களுக்கு வச்யனல்லன்' என்றாற் போன்ற சில ப்ரபாவங்களை—சில வாக்யத்தில் மேலோடு பார்த்தால் தோன்றுமவற்றைக்கொள்கிறார்கள். அவை தவிர்க்கப்படுகின்றன.

அவற்றில் ஜாதிவிஷயம் முற்பட नशूद्रा இதி பா. ஆச்வ. 118. பகவானிடத்தில் பக்தியுள்ளவர்கள் முன் சூத்ரர்களாயினும் பக்தியுண்டான பிறகு சூத்ரர்களாகார்; அந்த பாகவதர்கள் ப்ராஹ்மணர்களாகவே நினைக்கப்படுவர். பகவானிடத்தில் எவர் பக்தரல்லரோ அவர்கள் எவ்வர்ணத்தினராயினும் சூத்ரர்களே. அபக்ருஷ்டஜாதி= தாழ்ந்தஜாதி, உத்க்ருஷ்ட= உயர்ந்த; வாசகசப்தம்—அவர்களைச் சொல்லும் சொல். ஏக ஜாதீயர்—ப்ராஹ்மண

படியே வர்திப்பான்; भागवतशूद्रன் இன்னபடியே வர்திப்பானென்று ஆசார நியமங்கள் சொல்லும் ஸர்வசாஸ்த்ரங்களும் விரோதிக்கும்.

केवलब्राह्मणனுக்கும் केवलशूद्रனுக்குமுள்ள எல்லை भागवतब्राह्मणனுக்கும் भागवतशूद्रனுக்கும் கொள்ளவேணுமென்றும், இவர்களை ஸமரென்கிற शास्त्रங்களும் परमपुरुषार्थसाम्यादिகளாலே என்றும் கடாம்பி அப்புள்ளார் அருளிச் செய்தார்.

'குலந்தரும்' என்கிற பாட்டுக்கு வ்யாக்யானம் பண்ணின अभियुक्तரும்— ஜந்மத்தால் वृत्तத்தால் குறைந்நான் ஒருத்தனுக்கு भागवतसंबन्धமுண்டானல்

---

ஜாதியர். ம்ருதுப்ரஜ்ஞர்கள்—அல்பஜ்ஞாநமுடையவர்கள். சாஸ்த்ரங்களுமிதி. சேஷஸம்ஹிதையில் முதலில் த்ரைவர்ணிகபுருஷர்களுக்குப் பஞ்சகால ப்ரக்ரியையை நிரூபித்து, स्त्रीशूद्राणां विधिं वक्ष्ये என்றாரம்பித்து மற்றவருக்கு प्रणवं वर्जयेत् सम्यक् என்று தொடங்கி த்ரைவர்ணிகனுக்குப் போல் விஸ்தார மில்லாமல் சில அம்சங்சங்கள்மட்டும் உபதேசிக்கப்பட்டன. இப்படி பிறவும் காண்க. केवलेति—ஸ்ரீதேசிகனின் ஆசார்யர் அருளிச்செய்ததாவது பாகவதத்வமில்லாத விப்ரர்களுக்கும் சூத்ரர்களுக்கும் உத்கர்ஷ நிகர்ஷங்கள் ஜாதியைக் கொண்டு ஸர்வப்ரஸித்தம். அப்படியிருக்க ஸர்வ வர்ணங்களிலுமுள்ள அபக்தர்கள் சூத்ரர்களென்றது சூத்ரத்வ ஜாதியைக் கொண்டு சொல்லவாகாது. அதனால் ஜாதிமூலமான உத்கர்ஷ நிகர்ஷங்களைக் கொண்டால் பாகவதத்வமுள்ள விப்ரர்களுக்கும் சூத்ரர்களுக்கும் அவை நிற்குமே, கேவல ப்ராஹ்மணனைவிட பாகவதசூத்ரனுக்கு ஏற்றம் வேண்டுமே யென்றே கேட்கலாம். பாகவதத்வமடியான ஏற்றம் இசையப்பெற்றதே யாகும். அந்த பாகவதத்வம் மூலமான மோக்ஷப்ராப்தி, பாரமைகாந்த்யம் முதலான அம்சங்களிலேயே ஸாம்யம். ஆக शूद्राः என்பதற்கு நிக்ருஷ்டரென்றும் विप्राः என்பதற்கு உத்க்ருஷ்டரென்றும் முன்ச்லோகத்தில் பொருள் கொள்ளவேண்டும். இதற்காகவே இங்கு வாக்யத்தில் உத்க்ருஷ்ட அபக்ருஷ்ட பத ப்ரயோகம். கடாம்பி அப்புள்ளார். ஆத்ரேயவம்சத்தாருக்குப் பொதுவாகும் घटाम्बु என்ற பிருதப் பெயர். அப்புள்ளார் (அப்பு உள்ளார்) என்பது இவ்வாசார்யருக்குத் தனி பிருதம். இதையே வாதி ஹம்ஸாம்புவாஹர் ப்ரதிவாதிகளாம் அன்னங்களுக்கு மேகமென்பது. மேகத்தைக்கண்டால் அன்னம்வேறுதேசம் போயிடும் ஜாதிநிலைத்திருக்குமென்பதில் ஏகதேசிகளின் ஸம்மதிக்காகப் பெரியவாச்சான்பிள்ளையின் உரையையும் காட்டுகிறார் குலமிதி பெரியதிருமொழி—1-1 9, நாராயணவென்னும் நாமத்திற்குப் பல பெருமைகள் இதில் சொல்லப்படும். முதலில் குலம்தருமென்றது, ஒருகுலத்தில் பிறந்தவன் நாராயணநாமம் சொல்வதால் வேறு குலத்தைப் பெறலாமென்றால் சூத்ரகுலத்திலிருப்பவன் ப்ராஹ்மண குலத்தைப் பெறுகிறானென்றதாகிறது. அதனால் ஜாதி ஒழியுமென்னுமைக்காகப் பெரியவாச்சான்பிள்ளை யுரைத்தது இவ்வாறு—'ஜன்மத்தால் வ்ருத்ததால்

அவனை இவை யுடையான் ஒருத்தன் தாழ நினைக்கக் கூச வேண்டும்படியாயிற்று भागवत्प्रभावமிருக்கும் படி; ஆனால் அவர்களோடு பெண் கொடுத்துக் கொள்ளுகிறதில்லையே என்னில், அது जातिनिबन्धनம், श्लाघै गुणनिबन्धनै—என்று நிஷ்கர்ஷித்தார்கள். 'குலந்தரும்' என்றதுவும், 'பண்டைக் குலத்தைத் தவிர்ந்து' என்றதுவும் தொண்டக்குலத்தில் உத்கர்ஷம் சொன்ன படி. देवतान्तरादिसंकीर्णकुलமன்றோ யிவனது.

'मा जनिष्ट स नो वंशे जातो वा द्राक् विपद्यताम । आजन्ममरणं यस्य वासुदेवो न दैवतम् ॥'

என்றிறே ஏகாந்திகுலத்திற் பாசுரம். இப்படி வேறொரு குலமானாலும்

---

இத்யாதி. 'குணநிபந்தனை' என்ற வரையில் பெரும்பாலும் அவ்வுரையிலுள்ள சொற்களே. அர்த்தாநுவாதமாகையால் சிறிது சொல்லில் भेदமிருக்கும். இழிகுலத்தாருக்கும் உயர்ந்த குலத்தார்க்குள்ள மதிப்பை யளிக்கும் இம் மந்த்ரம் என்றே அவர் கொண்ட பொருள். வேறு ஜாதி வாராதாகையால் ஜாதியையே தருமென்று சொல்லலாகாது. அதனால் ஜாதி மூலமான கந்யாதாநாதிகளுக்கு ப்ரஸக்தியில்லை யென்றதாயிற்று. குலமென்ற சொல்லுக்கு ஜாதியென்ற பொருளை விட்டு வேறுபொருளையும் கொள்ளலாமென்கிறார் குலம் இதி. தொண்டக்குலத்திலுள்ளீரென்று பக்த ஸமூஹரூபமான குலத்தைச் சொல்லிப் பண்டைகுலத்தை யென்று மேலே சொன்னதால் அதற்கு முன்னிருந்த அவைஷ்ணவ ஸமூஹ ப்ரவேசம் தவிர்ப்பதென்றே பொருள் கூறவேண்டும். அதுபோல் குலந்தருமென்றவிடத்திலும் வைஷ்ணவகோஷ்டீ ப்ரவேசத்தைத் தருமென்றதாம் என்றபடி. பண்டைக் குலத்தைத் தவிர்ந்தென்றது திருப்பல்லாண்டில் அங்கே குலம் ஜாதியன்றென எளிதிலறியலாம்.

வைஷ்ணவர் அவைஷ்ணவரின் ஸமபந்தத்தைத் தம் குலத்திலிசையாரென்பதை வேறொரு ப்ரமாணத்தாலும் அறிவிக்கிறார் मेति. வரா.புரா. यस्य—எந்த ஜீவனுக்கு இப்பிறவியில் ஜந்மம் தொடங்கி மரணம் வரையிலான காலத்திற்குள் வாஸுதேவனே முக்யதேவதை யென்று புத்தி யுண்டாகாதோ அந்தச் சேதநன் நமது வம்சத்தில் मा जनिष्ट—உண்டாகவேண்டாம். जातो वा—உண்டாயிருந்தால் द्राक् விரைவில் विपद्यताम्—ஒழிந்தவனாகுக என்று ஏகாந்திகள் நினைப்பதாம். இதிலிருந்து குல மென்ற சொல்லுக்கு वैष्णवोत्तम-पुरुषपरंपरैயாகிற ஸந்ததி யென்ற பொருளும் கொண்டதாகிறது. இப்படி வேறு இதி. ஸந்ததி யென்னாமல் வேறு குலத்தைக் சொல்வதானாலும் அது ஜாதியே யென்பதில்லை; उत्साद्यन्ते जातिधर्माः कुलधर्माश्च शाश्वताः, देशजाति कुलधर्माः, जातिगोत्र कुलचरण இத்யாதி ஸ்தலங்களில் ஜாதி வேறாய் ஒரு ஜாதியிலுட்பட்டே பல குலங்களிருப்பதாகத் தெரிவதால் பாட்டில் குலசப்தத்திற்கு ஜாதியை விட்டு வேறு பொருள் கொள்வதால் कुलभेदसिद्धिயே; जातिभेदसिद्धि இல்லை ஜாதியைக்கொண்டால் மந்த்ரம் குலத்தையே மாற்றுமென்றால்ப்ராஹ்மணனுக்கு சூத்ரஜாதியளிக்குமென்றும் சொல்லலாமே அப்படி இசையாமை

ஜாதிசப்தமும் குலசப்தமும் भिन्नार्थமாகவும் प्रयुक्तமாகையாலே ஜாதி भेदियாது; குலம் भेदिக்கும். திருஸுரபியானாலும் गोत्वம் கழியாதிறே.

மஹர்ஷிகளும், 'स शूद्र इति मन्तव्य:' इत्यादिகளிற்படியே प्रतिपत्तिविशेषங்களைப் பற்ற उत्कृष्टर்பக்கல் अपकृष्टशब्दமும், अपकृष्टர்பக்கல் उत्कृष्टशब्दமும் प्रयोगिத்தார்களத்தனை. ஆகையால் भगवद्भक्तரல்லாத ब्राह्मणர் சூத்ரர்களைப்போலே अनादरणीयரென்றும், भगवद्भक्तரான சூத்ரர்கள் ब्राह्मणரைப் போலே श्लाघनीयரென்றும் शास्त्रतात्पर्यம். இங்ஙனல்லாதபோது,

'चण्डालमपि वृत्तस्थं तं देवा ब्राह्मणं विदु:', 'चण्डाला: प्रत्यवसिता: परिव्राजकतापसा:',

---

யால் நிக்ருஷ்டத்தை நிவ்ருத்தி செய்து உத்க்ருஷ்டத்தை யளிக்குமென்றே சொல்லவேண்டும் அதில் முறண்படாதவற்றை இந்த ஜந்மத்திலும் முறண்படுவதைஜந்மாந்தரத்திலும்அளிக்குமென்னலுமாம்.செல்வம் தந்திடுமென்ற விடத்திலும் இங்ஙனமே கொள்க. நாராயண நாமம் அதற்காக ஓதியும் ஏழையாயிருக்கின்றனரே இத்யாதியை நமது ப்ரபந்தரக்ஷையில் காண்க. குலம் பேதிக்கும் = ஒரு மதத்திலிருந்தவன் மற்றொரு மதத்திலிழிந்தால் வேறு ஸமூஹத்தில் சேருகிறபடியால் குலம் வேருகிறது. ஒரு வம்சத்தில் பிறந்தவன் வேறு வம்சத்தில் ஸ்வீகரிக்கப்பட்டாலும் குலம் வேருகிறது; ஜாதி வேறில்லை. ஜாதியாவது—வ்யக்தியுள்ளவரை யிருக்கக் கூடிய ஸம்ஸ்தாநம், தேவத்வ மநுஷ்யத்வாதிகளைப்போன்றது. பகவத்ஸம்பந்தம் வந்ததற்காக அது போகாது இதற்கு உதாஹரணம் கூறுகிருர் திருஸுரபி இதி. सुरभि:—காமதேநு—பசு. திருஸுரபி—கோயிற்பசு. गोत्वமென்கிறஜாதி பசுவுக்குக் கோவில் ஸம்பந்தம் வந்ததற்காகப் போகவில்லையே. ஆக. देवत्वमनुष्यत्वादिகளைப் போலே ब्राह्मणत्वादिகளுமென்றபடி குலசப்தத்திற்கு ஜாதியென்ற பொருளைக் கொண்டால் அந்த ஜாதியுள்ளவனுகாதவனை அந்த ஜாதியுள்ளவன் போல் நினைப்பதுமாத்திரம். அதாவது ஜாதிககுத் தக்கபடி உத்க்ருஷ்டனுகவோ நிக்ருஷ்டனுகவோ நினைப்பது அதனுலேயே (பாரமேஷ்ட்யஸம்ஹிதையில்) 'ब्राह्मणस्य न कर्तव्यं तिर्यक्पुण्ड्रस्य धारणम्। स शूद्र इति मन्तव्य: तिर्यक्पुण्ड्रस्य धारणात्॥' என்று मन्तव्यपदप्रयोगம். எனவே உத்க்ருஷ்ட-அபக்ருஷ்டப்ரதிபத்தியைக் கொள்வதற்காக அப் பதப்ரயோகம். அதனுல் ஆதரிக்கத்தக்கவர் உபேக்ஷிக்கத்தக்கவரென்று ஸித்திக்கிறது. இப்போது 'विप्रा भागवता:, अभक्ता: शूद्रा:' என்ற விடத்தில் विप्र शूद्र பதங்களுக்கு முக்யார்த்தம் விடப்படுமே யென்னில்—அதை விடவேண்டு மென்பதற்கு வேறு வாக்யத்தைக் காட்டுகிருர். 'चण्डालमिति. பாரதம் ஆச்வ 116-8. ஸ்வதர்மத்திலிருந்தால் சண்டாளன் கூட ப்ராஹ்மணனென்கிறது. பரமாத்மஸம்பந்தத்தால் தானே ब्राह्मणம் சொல்லுகிறீர்கள். சண்டாள தர்மத்திலிருப்பதற்காக சண்டாளன் சண்டாளனே; ப்ராஹ்மணனுகக் கூடுமோ? ஆகையால் ப்ராஹ்மணன் சுய தர்மத்திலிருப்பதால் நற்கதி யடைவது போல் இவனும் நற்கதியடைகிருனென்பதே இதன்கருத்தாகும். அது போல் மேல்வாக்யத்திலும் प्रत्यवसिता:—

'न तेन वृद्धो भवति येनास्य पलितं शिरः । बालोऽपि यः प्रजानाति तं देवाः स्थविरं विदुः ॥'
என்று இப்புடைகளிலே निन्दाप्रशंसै பண்ணுகிற வாக்யங்களைக்கொண்டு सर्व-मर्यादैகளும் கலங்கும் படியாம். ஆனபின்பு,

प्रतिपत्तिविशेषार्थमन्यत्रान्यत्वकीर्तनम् । विशेषविधिसाकांक्षास्तत्र तत्तत्प्रवृत्तयः ॥
என்று இங்குற்றைக்கும் ஸமாதானம்.

ச்ரீவிதுரரும் स्वजात्यनुरूपமாக विवाहादिகள் பண்ணினார்கள்.

---

ப்ரஷ்டர்களான ஸந்ந்யாஸிகளும் வாநப்ரஸ்த்தர்களும் சண்டாளர்களென்கிறது. மற்றொரு வாக்யம், ஒருவன் தலைநிரைத்ததென்கிற காரணத்தினால் வ்ருத்தனாகான், சிறுவனும் ஜ்ஞாநியானால் வ்ருத்தனாவானென்பர் தேவர்கள் என்னும்; சிறுவனை வ்ருத்தனென்னவாமோ? கிழவனைவ்ருத்தனல்லனென்னக் கூடுமோ. ஆக இச் சொற்கள் கௌரவ-அகௌரவங்களைக் குறிப்பதாகும். இப்புடைகளிலே = இந்த ப்ரகாரங்களிலே. சப்தங்களுக்கு முக்யார்த்தம் கௌணார்த்தமென்று இருவித ப்ரயோகமுண்டு. எங்குமே முக்யமாகத்தான் பொருள் கொள்ளவேண்டுமென்றால், सिंहो माणवकः என்றதால் மாணவனும் சிங்கந்தான் என்றும் வாதித்தால் ஸர்வ வ்யவஸ்த்தையும் கலங்குமென்றபடி. சொன்ன விஷயத்தை ஸங்க்ரஹிக்கிறார் காரிகையால். प्रतिपत्तीति ஒன்றை மற்றொன்றாகச் சொல்வது அதைப்போல் உத்க்ருஷ்டமாகவோ அபக்ருஷ்டமாகவோ அதன் ஸாம்யமுள்ளதாகவோ அறிவதற்கே யாகும். இதற்காக 'ப்ராஹ்மணன் இதைச் செய்யக் கூடாது, இதைச் செய்யவேண்டும்' இத்யாதிவாக்யங்களில் ப்ராஹ்மணாதி சப்தங்களில் முக்யார்த்தத்தை விடுவது அந்யாய்யமாகையால் அந்த விசேஷவிதிகளை யநுஸரித்து அந்தந்தக் கார்ய ப்ரவ்ருத்திகள் கொள்ளத்தக்கவை. ब्राह्मणो न सुरां पिबेत्, अष्टवर्षं ब्राह्मणं उपनयीत என்றவைபோனற வாக்யங்கள் பிறப்பில் ஜாதியென்பதைக்குறிக்கும். இங்குற்றைக்கும் = கீழ்ச்லோகத்தில் ப்ராஹ்மண சண்டாள स्थविर சப்தங்களில் போல் न शूद्राः என்ற ச்லோகத்திலெடுத்த விப்ராதி சப்தப்ரயோகத்திற்குமென்றபடி.

விதுரருக்கு ப்ராஹ்மண்யமிருப்பதால் தானே அவருடைய அந்நத்தை ஸ்ரீக்ருஷ்ணன்முதலானோர் புஜித்தார்கள். அவருக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரமும் இதனால் தானே என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் ச்ரீவிதுரரும் இத்யாதியால். ஸ்வஜாதீதி. अथ पारशवीं कन्यां देवकस्य महीपतेः । रूपयौवनसंपन्नां स शुश्राव आपगासुतः ॥ विवाहं कारयामास विदुरस्य महात्मनः । ஆதிபர்வ 126. த்ருதராஷ்ட்ரருக்கும் பாண்டுவுக்கும் அந்தந்த ஜாதிப்பெண்ணோடு விவாஹம் செய்தாற்போல் விதுரருக்கும் தேவகராஜனுக்கதீனமாகச் சிறந்த பாரசவ கன்னியைக்கேட்டு விவாஹம் செய்வித்தார் பீஷ்மர் என உளது. ப்ராஹ்மணனுக்கு சூத்ர ஸ்த்ரீயினிடம் பிறந்த ஸங்கரஜாதி பாரசவ ஜாதியெனப்படும். ஆகையால் அவருக்கு ப்ராஹ்மண்யமில்லையென்று தெரிகிறது. வ்விவாஹாதிகளென்கிற ஆதிபதத்தினால் नातोऽन्यत् वक्तुमर्हसि என்றபடி மந்த்ராதிகள் நீங்கலாக மற்ற உபதேசம்மாத்திரம் கொள்வது. துர்யோதநன்

'भुक्तवत्सु द्विजाग्र्येषु निषण्णः परमासने । विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च ॥'
என்றிதைக் கேட்டு துர்யோதநன்,
'भीष्मद्रोणावतिक्रम्य मां चैव मधुसूदन । किमर्थं पुण्डरीकाक्ष भुक्तं वृषळभोजनम्' என்று கேட்க,
'द्विषदन्नं न भोक्तव्यं द्विषन्तं नैव भोजयेत् । पाण्डवान् द्विषसे राजन् मम प्राणा हि पाण्डवाः ॥'
என்று உத்தரம் அருளிச்செய்கையாலே ச்ரீவிதுரருக்கு துர்யோதநன் சொன்ன ஜாதிவிசேஷத்தை பகவான் இசைந்தானுயிற்று.

---

விதுரரை சூத்ரனென்ற போது ப்ராஹ்மணனென்று க்ருஷ்ணன் ஸ்தாபிக்கவில்லை; அதனுல் அவருக்கு ப்ராஹ்மண்யம் வரவில்லை யென்று தெரிகிறதென்கிருர் **भुक्तवत्सु** இதி. ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் விதுரர் திருமாளிகையில் புஜித்த பிறகு க்ருஷ்ணபகவான் சிறந்த ஆஸநத்திில் வீற்றிருந்து சுத்தமாயும் மிகவும் போக்யமாயுமிருந்த விதுர அந்நங்களை புஜித்தாரென்பது ச்லோகார்த்தம். **भीष्मेति**. பக்தருடைய அந்நம் இஷ்டமாகில் பீஷ்மரிடம் செல்லத்தகும். ப்ராஹ்மணனுடைய அந்நம் வேண்டியிருந்தால் த்ரோணரிடம் சென்றிருக்கலாம் அரசனை மதிப்பதென்கிற காரணமாகில் என்னை யணுகியிருக்கலாம். எல்லாம் விட்டு சூத்ரனுடைய அந்நத்தை புஜித்தது ஏன் என்று துர்யோதநன் கேள்வி. கண்ணனின் ஸமாதாநம் **द्विषदिति**. த்வேஷமுள்ளவனின் அந்நம் புஜிக்கத்தக்கதன்று, த்வேஷமுள்ளவனுக்கு போஜநமளிக்கவுமாகாது. அரசனே! பாண்டவர்களை நீ த்வேஷிக்கிருய். அவர்கள் ஐவரும் என்னுடைய ஐந்து ப்ராணன்கள். இவ்வாறு கூறினுரே யல்லது விதுரன் ப்ராஹ்மணன்தானே யென்று சொல்லவில்லை இங்கெடுத்த இம் மூன்று ச்லோகங்களும் சேர்ந்து ஓரிடத்திலில்லை. பாரதஸாவித்ரீ என்றதில் மேல் இரண்டு ச்லோகங்களுமுள; முதல் ச்லோகமில்லை. அங்கு **भुक्त** என்றவிடத்தில் **कृतं** என்ற பாடம். உத்யோக பர்வத்தில் துர்யோதந ப்ரச்நத்தில் இந்த ச்லோகமில்லை. உத்தரமான ச்லோகம்மட்டு முள்ளது. முதல்ச்லோகம் உத்யோகபர்வத்தில் காண்கிறது, ஆனுல் **भुक्तवत्सु द्विजाग्र्येषु निषण्णेषु वरासने । शुचिः सुप्रयतोऽश्नीत्वा विदुरोऽन्नमुपाहरत् ॥** என்று ச்லோகத்தின் ஸ்த்திதி. 91-43. 1—அரைச்லோகத்திற்குப் பிறகு **ततोऽनुयायिभिस्सार्धं मरुद्भिरिव वासवः । विदुरान्नानि बुभुजे शुचीनि गुणवन्ति च** என்று உளது, ஆக இங்குள்ளவாறு பூர்வார்த்த உத்தரார்த்த அமைப்பில்லை. உத்யோகடர்வப்படி இந்த போஜநம் துர்யோதநன்கேள்விக்கு முன் நடந்ததல்ல, துர்யோதநனிடம் த்வேஷியந்நம் புஜிக்கலாகாதென்று க்ருஷ்ணன் சொன்னதற்குப் பிறகே இந்த போஜநம் நடந்திருக்கிறது அங்குள்ள க்ரமம் பின்வருமாறு—க்ருஷ்ணபகவான் தூதாக ஹஸ்திநாபுரமெழுந்தருளுவது தெரிந்து பீஷ்மாதி ஸர்வஜந ஸம்மதிக்கு இணங்கி வரும்வழியில் பலவிடங்களில் கிருஷ்ணன் தங்குவதற்காக துர்யோதநன்விசேஷமாக அந்நபாநாதிகளுக்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்திருந்தும். கண்ணன் அவற்றைக் கண்ணெடுத்துப் பார்க்காமல் நேராக வ்ருகஸ்த்தல

ஆனால் ப்ராஹ்மணர்க்கும் க்ஷத்ரியர்க்கும் சூத்ரனுடைய पक्वान्नத்தை भुजिக்கை निषिद्धமன்றோ வென்னில்—'आर्याधिष्ठिता वा शूद्रा अन्नसंस्कर्तारस्स्युः' என்று ஆபஸ்தம்பாதிகள் சொல்லுகிறபடியே யுகாந்தரங்களில் आर्यप्रसन्नரான गुणवच्छूद्रர்கள் ஆர்யர்க்கு अन्नसंस्कारம் பண்ண अनुज्ञातராகையாலே

---

மென்கிற இடம் வந்து சேர்ந்து உதயகாலத்தில் ஸ்நாநாதி சடங்குகளை முடித்துக்கொண்டு நேராக எல்லோராலும் சூழப்பட்டு த்ருதராஷ்ட்ர னுடைய க்ரஹம் சென்று அவனாலே ஸத்கரிக்கப்பட்டு விதுரரோடு அவர் திருமாளிகை சென்று அவரால் அக் காலத்துக்குத் தக்கவாறு ஆராதிக்கபட்டு குந்தியில்லத்திற்கு நடுப்பகலிற்கு மேல் சென்று யோகக்ஷேமங்களைப் பற்றி அவளுடன் பேசி முடிந்தபிறகே துர்யோதநனின் க்ருஹத்திற்கு நேராகச் சென்றார். அங்கு எல்லோரும் நன்கு வரவேற்றனர். அப்போது துர் யோதநன் அந்நபாநாதிகளை யளிக்க இவர் ஸ்வீகரிக்காமலிருக்க, ஏனென்று அவன் கேட்க द्विषदन्न மென்கிற ச்லோக விஷயத்தை சொன்னார், முடிவாக सर्वमेतन्न भोक्तव्यं अन्नं दुष्टाभिसंहितम् । क्षत्तुरेकस्य भोक्तव्यमिति मे धीयते मतिः என்று விதுராந்நத்தை யுண்ணப் போவதாகவே யருளினார். உடனே விதுரக்ருஹம் சென்றார், அங்கே ப்ராஹ்மணர்களுக்கு போஜநம் செய்வித்தபிறகு விதுரர் மிகவும் பரிசுத்தமாய் அந்நங்களைக் கண்ணபிரானுக்கு ஸமர்ப்பிக்க பகவானும் தம் பரிவாரங்களோடு உட்கொண்டார். அங்கே உள்ள ச்லோகம் विदुरान्नानि बुभुजे என்றது. துர்யோதநனன்இல்லத்திற்கு வருவதற்கு முன்னும் விதுரரு டைய க்ருஹத்தில் ஏதோ ஸாதாரணமாக ஆராதநம் நடந்திருக்கிறது. அது விஷயமாக विदुरान्नानि बुभुजे என்று சொல்லலா மென்னில்—அவ்வாறு உத் யோகபர்வத்திலில்லை பாரதஸாவித்ரீயிலேயே மேல் இரண்டு ச்லோ கங்கள் போலே இந்த ச்லோகமும் உத்யோகபர்வத்திற் போல் சிதறியிராமல் பூர்வார்த்த உத்தரார்த்தமாகவே துர்யோதநன் கேள்விக்கு முன்னாக இருந்து இப்போது ப்ரஷ்ட மாயிருக்கலாம், ச்லோகக்ரமத்தில் இந்த ரீதியில் பொருந்தவில்லை யானாலும் விஷயத்தில் விசேஷவேறுபாடில்லை. இது நிற்க.

கண்ணபிரான்மட்டுமன்றி அந்தணர்கள் அனைவரும் அங்கு புஜித் தார்களென்று தெரிகிறது. த்ரைவர்ணிகர்களால் आमं शूद्रस्य पक्वान्नமென்று சூத்ரர்களிடத்தில் பக்வாந்நத்திற்கு ப்ரதியாக ஆமமாகவே க்ரஹிக்க வேண்டும், சமைப்பதற்கு முன்னை நிலைமையில் வஸ்துக்களை க்ரஹிக்கவேண்டு மென்றிருக்க அவரில்லத்திலேயே பாகம் செய்த அந்நத்தை க்ரஹித்த தெங்ஙனே என்கிற கேள்வி நிற்கிறது. இதை எடுத்துக் கழிக்கிறார் ஆனால் இதி...ப்ராஹ்மணர்க்கும் க்ஷத்ரியர்க்குமென்றது இங்கே ப்ராஹ்மணர் களும் பிறகு கண்ணனும் புஜித்ததால். आर्येति ஆபஸ்தம்பஸூத்ரம் 2 2-4. ப்ராஹ்மணர்களுடைய அதிகாரத்திற்குட்பட்டிருந்து சூத்ரர்களும் சமைக்க அதிகாரியாவார்களென்று பொருள். अनुज्ञातர்களாகையாலே= ப்ராஹ்மணாதிகள் புஜிக்குமந்நத்தை சூத்ரர்களும் சமைக்க சாஸ்த்ர

அவ்விடத்தில் निषेधமில்லை. இது, 'शुचिस्तु प्रयतो भूत्वा विदुरोऽन्नमुपाहरत्' என்று ச்ரீவிதுரருடைய குணவிசேஷங்கள் சொல்லுகையாலே ஸூசிதம். ब्रह्मवित्துக்களான இவர் योगप्रभावத்தாலே देहन्यासம் பண்ணின பின்பு, प्राप्तனை

---

மூலமாக ஸம்மதரானபடியாலே; இதனால் பூர்வவர்ணத்தாரின் த்ரவ்யத்தை எடுத்துச் சமைக்கவும் தொடவும் பரிமாறவும் சூத்ரர் அர்ஹரென்றதாமானாலும் சூத்ராந்நமான த்ரவ்யத்தைப் பூர்வர் புஜிக்கலாகுமோ வென்ற கீழ்க் கேள்விக்கு என்ன பரிஹாரமென்னில்—விதுரர் சமையல் செய்தவரேயன்றி த்ரவ்யத்துக்கு ஸ்வாமியல்லரென்று வாக்யதாத்பர்யம். அதன் கருத்தாவது—அபக்வமான பதார்த்தங்களை சூத்ரர்களிடம் பெறலாம். இங்கே முன் நாம் கூறியபடி நடுப்பகலில் விதுர க்ருஹத்தில் கண்ணன் விதுரரால் अतिथि ஸத்காரம் செய்விக்கப்பெற்றாரென்று உத்யோக பர்வத்திலிருப்பதால் அப்போது அபக்வமான த்ரவ்யங்களைக் கண்ணனுக்கு விசேஷமாக அர்ப்பணம் செய்துவிட்டார். கண்ணனும் அந்தணர்கள்மூலமாக அந்த த்ரவ்யத்தை ஸ்வீகரித்து அந்தணர்களும் தாமும் புஜிக்கும்படி பக்வமாக்க உத்தரவிட்டார். பாகம் செய்தவர்களில் விதுரரும் பகவானின் அநுமதியாலே கலந்து கொண்டார். ஆகப் பக்வாந்நம் இவருடையதன்றென்றதாம். மேலும் விதுரக்ருஹத்தில் குந்தி நித்யவாஸம் செய்பவள். அவள் துர்யோதநனால் காக்கப்பட ப்ரஸக்தியில்லை. அவளுக்கு வேண்டும் போஜநாதிகள் பிறந்தகமான வஸுதேவ க்ருஹத்தினின்றே ஏற்பட்டிருக்கவேண்டும். ஆக விதுர க்ருஹ த்ரவ்யங்களெல்லாம் முன்னமே கண்ணனின் த்ரவ்யங்களே; பீஷ்ம த்ரோணாதிகளின் த்ரவ்யம் போல் துர்யோதந ராஜாவின் த்ரவ்யமகா— என்றும் கூறலாம். சூத்ரரான விதுரரெப்படி கண்ணனுக்கு அந்நம் கொண்டு வந்தாரென்கிற கேள்வியைப் பரிஹரிப்பதற்காகவே அவருக்கு விசேஷணங்களென்கிறார் இது शुचिरिति. அந்தணர்களும் புஜிக்கும்படி தமக்குப் பகவாந்ந த்ரவ்ய ஸம்பந்தமில்லாத விதுரர் அந்த த்ரவ்யத்தினுடைய தர்சந ஸ்பர்சநாதிகளுக்குத் தக்க சுத்தியுடையராயிருந்தது மட்டுமின்றி, கண்ணபிரானுக்கும் அர்ப்பணம் செய்யும்படி அபக்தி ச்ரத்தைகளோடிருந்து பிறர் மூலமன்றி நேராகவே அந்த ஸமர்ப்பணம் செய்தார். அவ்வளவு ஆத்ம குணபூர்த்தியுடையவர் அம் மஹான் என்றதாம்.

சூத்ரராகில் அவருக்கு ப்ரஹ்மமேதஸம்ஸ்காரம் செய்ததெங்ஙனே என்ன அருளிச்செய்கிறார் ப்ரஹ்மமேதி. விதுரர் ஸாமாந்ய சூத்ரராயிருந்து மரணமடையாமல் த்ரைவர்ணிகாதிகாரமாய் प्रशस्तமான பக்தி யோகமூலமாக தேஹத்தைவிட்டதால் இவர்ப்ரபாவம் எல்லாருக்குமறியத் தக்கதாயிற்றென்பதற்காகயோகேத்யாதி. இதை மேலே காண்க. பண்ணினபின்பு என்பதற்கு செய்த என்பதோடு அந்வயம்; ப்ராப்தனை என்பதோடு அந்வயமாய் தேஹந்யாஸம் செய்தபிறகு தர்மபுத்ரர் வந்தாரென்ற பொருளில்லை. ஆச்ரமவாஸிப்ரவத்தில் (28.) தர்மபுத்ரர் த்ருதராஷ்ட்ர ஆச்ரமத்திலிருந்து விதுரரைக் காணச்சென்ற

தர்மபுத்திரன் செய்த संस्कारविशेषम् தூணீம் अनुष्ठितமாதல், व्यक्तिविशेषनियतமாதலா மிற்தனே; இதுகொண்டு व्यक्त्यन्तरங்களில் व्यवहारம் பண்ணவொண்ணுது.

---

போது விதுரர் அப்பால் செல்லா நிற்க, இவர் விரைந்து அவரிடம் ஓடி ஏகாந் தத்தில் ஒரு மரத்தின் கீழ் விதுரரை வணங்க, விதுரர் இமை கொட்டாமல் இவரைக்கண்டு யோகபலத்திஞலே இவர்தேஹத்தில் புகுந்துவிட்டார். விதுர சரீரம் மரத்தின் கீழ் பிணமாய்க் காணலாயிற்று. தர்மராஜன் அதனுல் மிக்கஒளி யுள்ளவராய் வ்யாஸர் முன் சொன்னதை யெல்லாம் நினைத்துக்கொண்டார். அதன்பிறகு அவருக்கு ஸம்ஸ்காரம் செய்ய முயன்ருர், அதற்காக ப்ரா ப்தனுன என்றது, விதுரருக்குப் பிள்ளைகள் பிறந்திருந்தும் அவர்களில்லா மையால் விதுரர் பாண்டுவுக்குத் தம்பி யென்கிற முறையில் இவரே கர்த் தாவாக ப்ராப்தராஞரென்றபடி. இப்படி ப்ராப்தராய் யோக ப்ரபாவ மூலமான தேஹந்யாஸம் கண்டு செய்த ஸம்ஸ்காரம் எத்தகையதென்னில்— வசநபூஷணத்தில் பகவத்பக்தனுக்கு வேறு ஜாதி வருமென்பதைக் கூறும் போது, न शूद्रा இத்யாதி வாக்யங்கள் போல் சரித்ரத்தையும் ப்ரமாணமாக்கி, "க்ஷத்ரியரான விச்வாமித்ரர் ப்ரஹ்ம ரிஷியானுர்; ராவணன் விபீஷணனைக் குலபாம்ஸநனென்பதாலும் ராமன் அவரைச் சேர்த்துக்கொண்டதாலும் அவருக்கு ராக்ஷஸத்வம் போய் வேறு ஜாதி வந்ததென்று தெரிகிறது; ஜடாயு வுக்கு ப்ரஹ்மமேதஸம்ஸ்காரம் செய்தார்; தர்மபுத்ரர் அசரீரிவாக்கைக் கொண்டு விதுரருக்கு ப்ரஹ்மமேதஸம்ஸ்காரம் செய்தார்; க்ருஷ்ணன் விதுரக்ருஹத்தில் புஜித்தார்" என்றெல்லாம் சொல்லப்பெற்றன. அவற் றுக்கு ஸமாதாநம் சொல்வது இப் ப்ரகரணத்தில். இங்குள்ள ஸம்ஸ்கார விசேஷமென்ற பதத்திற்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காம் பொருளென்று உரைப்பர். அசரீரிவாக்கு ஸாரபோதினியில் 'भो भो राजन् न दग्धव्यमेतत् विदुरसंज्ञकम् । कलेबरमिहैतत्ते नैष धर्मः सनातनः ॥ योगो वैकर्तनो नाम भविष्यत्यस्य पार्थिव । यतिधर्ममवाप्तोऽसौ न शोच्यो भरतर्षभ ॥' என்றெடுக்கப்பட்டுள்ளது, இங்கே दाह- संस्कारம் தகாதென்றது; ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரமெங்ஙனே கிடைக்குமென் னில்—ஒரு ஸம்ஸ்காரமும் செய்யாமல் விட்டாரென்பது உசிதமன்று. न शोच्यः என்றுளது. இவருள் புகுந்துளார்; தர்மன்; ஏதோ ஸம்ஸ்காரமிருக்கவேண்டும். அது யதிகளுக்குப் போன்றதாகலாம். அஸ்பஷ்டமாயிருப்பதால் ப்ரஹ் மமேதஸம்ஸ்காரமென்னுமல் ஸம்ஸ்கார விசேஷமென்று பொதுவாகச் சொன் ஞர். சூத்ரர்களுக்கு. 'अमन्त्रमधिकारः स्यात् चातुर्व्यूहक्रियाकृते' என்று மந்த்ர மிராமல் பூஜையிலதிகாரம் போல் மந்த்ரமிராமல் ஸம்ஸ்காரம் தகுமென்று கொண்டு தூஷ்ணீம் அநுஷ்டிதமாதலென்றும் அருளினுர். समन्त्रकமென்றே கொண்டாலும் விரோதமில்லை யென்கிருர் வ்யக்திவிசேஷேதி. ஜடாயுவுக்கு ராமன் செய்த ஸம்ஸ்காரம் ப்ரஹ்மமேதமென்று ராமாயணத்திலிராமற் போனுலும் பாத்ம புராணத்தைக் கொண்டாகுமென்பதுபோல் இங்கு மேதேனும் ப்ரமாணம் கிடைக்குமாகில் ப்ரஹ்மமேதமே யாகுக. இல்லையேல்

இங்ஙனல்லாதபோது धर्मोत्तरரான பாண்டவர்களுக்கு ஒரு नियतिविशेषத்தாலே வந்த दारसाधारण्यத்தைக்கொண்டு ஸர்வலோகமும் व्याकुलமாம்படியாம். ஆகையாலே தம் தம் ஜாதிகளை விடாதே நின்று அவ்வோ ஜாதிகளுக்கு उचितप्रक्रियै யாலே यथाधिकारம் भगवत्कैङ्कर्यம் பண்ண प्राप्तम्.

मोहनशास्त्रங்களில் சொன்ன जात्युद्धारादिகளை प्रामाणिकர் நினைக்கலாகாது.

---

வேறேதேனுமாகுக எப்படியும் அசரீரிவாக்கு விதுரவ்யக்தியையே குறித்து வந்ததாகையால் வேறொருவருக்கு இது தகாது. அவ் வாச்ரமவாஸிபர்வத்திலேயே30வதில் வ்யாஸர்சொல்வதாவது—மாண்டவ்யசாபத்தினாலே தர்மனே விதுரனானான்; பிரமனுடைய ஆஜ்ஞையினாலும் எமது बलத்தாலும் விதுரன் 'महाबुद्धिर्महायोगी महात्मा'; இந்த யுதிஷ்டிரனும் தர்மனே. यो हि धर्मः स विदुरः विदुरो यः स पाण्डवः என்றவாறு. दारसाधारण्यம்= மனைவியாகப் பலருக்காகை.

'दीक्षाप्रवेशमात्रेण ब्राह्मणो भवति क्षणात्। कापालं व्रतमास्थाय यतिर्भवति मानवः' என்றபடி சிவபக்தருக்கே ஜாத்யாதிகள் மாறும்போது விஷ்ணுபக்தருக்கு ஏன் மாறவாகாதென்பதற்கு ஸமாதானம் मोहनेत्यादि. பாசுபதம் மோஹந சாஸ்த்ரமென்றும் அதன் மூலமாம் உயர்ந்த ஜாதி பெறுதல் அப்ராமாணிகமென்றும் ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்ய ஸித்தமாகையால் பாஷ்ய ஸம்மதமான வர்ணாச்ரமவ்யவஸ்தை மாறாது. வசனபூஷணத்தில் விச்வாமித்ரவ்ருத்தாந்தமெடுத்ததற்கு ஸமாதானம் चरुव्यत्यासेति. ஆநுசாஸநிக பர்வத்தில் (7). गाधियின் பெண்ணான ஸத்யவதிக்கு பர்த்தாவான ऋचीक மஹர்ஷி அவள் தாய்க்குப் புத்ரோத்பத்திக்காக க்ஷத்ரிய வீர்யாபிவ்ருத்திக்காக அபிமந்த்ரணம் செய்து ஒரு சருவையும் (உஷ்ணமான பக்வாந்நத்தையும்) அவளுக்கும் புத்ரோத்பத்திக்காக ப்ராஹ்மண தேஜஸ்ஸின் நிறைவுக்காக மந்த்ரிக்கப்பட்ட மற்றொரு சருவையும் பார்யையிடம் கொடுத்திருக்க அவள் தாயிடம் சென்று சொன்னபோது தாய் பெண்ணுக்காகக் கொடுத்த சருவில் அதிக விசேஷமிருக்குமென்று ஆஸ்த்தை வைத்ததால் ரிஷிக்குத் தெரியாமல் சருவுக்கு வ்த்யாஸம் செய்யப்பட்டது. ஆக ப்ராஹ்மண சருவினால் பிறக்கவேண்டும் ப்ராஹ்மணன் க்ஷத்ரியஸ்த்ரீயான தாயினிடத்தில் பிறக்க வேணடியதாயிற்று, அவரே விச்வாமித்ரர். க்ஷத்ரிய சருவினால் பிறக்கவேண்டிய க்ஷத்ரியன் ஸத்யவதியினிடம் பிறக்கவேண்டியதாயிற்று. ஆனால் ஸத்யவதி கர்ப்பிணியாயிருக்கும்போது ரிசிகர் இது க்ஷத்ரிய சருவாயிருக்க வேண்டுமென்று கவனித்து அவளைக் கேட்டபோது நடந்தபடி சொல்லக் கேட்டு அவர் வருத்தப்பட்டார், அதன்மேல் வணங்கி வேண்டினாள் ப்ராஹ்மணனே பிறக்கவேண்டுமென்று. அப்போது அவர் இந்தச் சருவினுடைய வீர்யமெல்லாம் பிறக்கும் பிள்ளையினுடைய பிள்ளைக்குப் போக அருளினார், அதனால் ஸத்யவதிக்கு ஜமதக்நி யென்கிற ப்ராஹ்மணப்பிள்ளையும் ஜமதக்நிக்கு க்ஷத்ரியரான பரசுராமரும் பிறந்த படி. ஆக விச்வாமித்ரர் சருமூலமாக முன்னமே யுள்ள தம் ப்ராஹ்மண்யம் க்ஷத்ரியப் பிறவியினால்

चरुव्यत्यासादिகளான சில विशेषनिदानங்களாலே வருகிற விச்வாமித்ராதிகளுடைய நிலை வேறு சிலருக்குக் கூடு மென்கை वचनविरुद्धம்.

विदुरादिகளினும் उत्कृष्टप्रभावரான ஆழ்வார்களுடைய वृत्तान्तविशेषங்களை நம் அநுஷ்டாநத்துக்கு दृष्टान्तமாக்கலாகாது. அவர்கள்वृत्तान्तங்களையும் ஆராய்ந்தால் ஸ்வஜாதிநியமத்தைக் கடந்தமை யில்லை.

---

மறைக்கப்பட்டதை தபோபலத்தினால் ப்ரகாசப்படுத்திக் கொண்டாரத்தனை; அவரிடமுள்ள க்ஷத்ரியத்வப்ராந்தி(மோஹம்)நீங்கிப்ராஹ்மண்யமே ப்ரகாசிதமாயிற்று. निदान—ஆதிகாரணம். व्यत्यासம்—மாற்றிக்கொள்ளல். ஆதிபதத்தால் பரசுராமரிடம் செல்வதற்கான அருளைக்கொள்வது. विश्वामित्रादि என்ற आदिபதத்தால் பரசுராமரைக் கொள்வது, வீதிஹவ்யனைக் கொள்வதென்றும் உரைப்பர். காசிராஜ விரோதியான ஹைஹயனென்கிற வீதிஹவ்யனின் பிள்ளைகளை காசிராஜदिवोदासபுத்ரனான प्रतर्दनன் ஸம்ஹரித்த போது வீதிஹவ்யன் ப்ருகுவின் ஆச்ரமத்தில் ஒளிந்திருக்க, ப்ரதர்தனன் ப்ருகுவைக் கேட்டபோது, 'இங்கு க்ஷத்ரியன் ஒருவனுமில்லை; எல்லோரும் ப்ராஹ்மணர்களே' என்றார். அந்த வசநமாத்ரத்தால் வீதிஹவ்யன் ப்ரஹ்மரிஷியானான் அவனுடைய ஸந்ததி ப்ராஹ்மண பரம்பரையாயிற்றென்று ஆநுசாஸநிகத்தில்(8)உள்ளது இந்த வீதி ஹவ்யனுடைய ப்ராஹ்மண்யமும் ஔத்பத்திகமென்பர். யோகசக்தியுள்ளவர்களுக்குமாட்டை மனிதனுக்குவதுபோல் ஒரு சரீரத்தையே மறைத்து வேறு சரீரமுண்டுபண்ண சக்தியுண்டாகில் பகவத்ஸம்பந்தத்திற்கும் இப்படி பொதுவாக ஜாதியை மாற்ற சக்தியிருக்குமே யென்னில்—அந்தந்த ஜாதிபக்தரை அந்தந்த ஜாதியராகவே வசநங்கள் சொல்லுகிறதிலிருந்து மாறுமை தெரிகிறது. ஆக இது वचनविरुद्धம். त्रिशङ्कुवीतिहव्यादिகளிடத்தில் शापानुग्रहबलத்தாலே पूर्वजातिக்குரிய கர்மாநதிகாரமும் जात्यन्तरधर्माधिकारादिகளுமே யேற்பட்டன; இது யாகவிசேஷம் செய்த க்ஷத்ரியனுக்கு याजनाधिकारம் போலாம்; ஜாதி ஒழிய வில்லையென்னலுமாம். எங்கும் சரீரமுள்ளபோது ஜாதிக்கு அழிவில்லை, வேறு சிலருக்கு= அத்தகைய விசேஷகாரணம் பெறாத இக் காலத்திலுள்ள வ்யக்திகளுக்கு.

ஆழ்வார்களும் ப்ராஹ்மணக்ருத்யம் செய்திருப்பதால் அவர்களுக்கு ப்ராஹ்மண்யம் பிறகு வந்திருக்கவேண்டுமென்ற சங்கையைப் பரிஹரிக்கிறார் விதுராதீதி. விதுரருக்கு அசரீரி வாக்குப்போலே ஆழ்வார்களை கௌரவிக்க விசேஷமாக பகவந்நியமநாதிரூபமான சில காரணங்கள் இருந்தன. அதனால் அவர்களுக்கு ஏற்பட்ட பெருமை வேறு வ்யக்திகளுக்கிருக்கத் தகாது. திருமழிசைமாழ்வாருக்கு அவர் திருவாழியாழ்வானின் அவதாரமென்ற தோற்றமறிந்த பெரியோர்களால் अग्रपूजै நடத்தப்பெற்றது, திருப்பாணாழ்வார் ச்ரீரங்கநாதனுடைய விசேஷநியமநத்தால் லோகஸாரங்கமுனிவரால் கோயிலுக்குள் கொண்டு வரப்பட்டு அமலனாதிபிரான் அருளி பகவானைக் கண்டார். இத்தகைய விசேஷங்கள் ஸாது ப்ரபல காரணமூலமே யாகும். அது

"विष्णुर्नित्यं विद्यया तात ईड्यस्तस्मात् ज्ञानं नित्यरूपं वरेण्यम् ।
प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्त्रियाद्वा वैश्याच्छूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम् ॥"

என்கிற ச்லோகத்தில் भगवद्ध्यानम् அவச்யம் संपादनीयமாகையாலே पूर्वपूर्वलाभத்தில் மற்றுள்ளார்பக்கலிலும் ஜ்ஞாநமாத்ரம विशदமாக संपादनीयமென்றிவ்வளவு சொல்லிற்று. இப்படியானாலும் विद्यामन्त्रादिகளுடைய ग्रहणம் ब्राह्मणादिविषयத்திலே ஆகவேணுமென்னுமிடம் 'शूद्रयोनावहं जातो नातोऽन्यद्वक्तुमुत्सहे'

---

வும் அவர்கள் தாமே தாம் பெருமை பெறுதற்காகச் செய்த ப்ரயத்நங்களாலல்ல; அவர்கள் தங்களாலியன்ற வரையில் தங்கள் ஜாதிக்குத் தக்கபடியே நடந்து கொண்டனர். திருமழிசைப் பிரான் பெரும்புலியூரக்ரஹாரத்தில் செல்லும்போது இவர் அத்ரைவர்ணிகரென்று அந்தணர்கள் வேதாத்யநத்தை நிறுத்த, அதன் பிறகு அவர்களுக்கு மேல்வாக்யம் மறந்துவிட்டது இவர்கள் தவிப்பதைக் கண்டு ஆழ்வார் வீதியில் காயும் கறுப்புநெல்லைக் கண்டு அதை எடுத்து நகத்தினால் பிளந்து அதுமூலமாக कृष्णान्नं व्रीहिं नख-निर्भिन्नम् என்கிற வாக்யம் நினைவுறச் செய்தார். வாயால் வேதத்தைச் சொல்ல விரும்பவில்லை. திருப்பாணாழ்வார் கோயிலுக்கு வெகுதூரம் வெளியில் நின்று தினந்தோறும் அரங்கனைப் பாடிவந்தாரேயல்லது கோயிலுக்குள் செல்லவில்லை. ஆகையால் ஸ்வஜாதி வ்யவஸ்தையை அவர்கள் தாமாகக் கடந்தார்களென்பதில்லை. நம்மாழ்வார் மதுரகவிகளுக்கு ஆசார்யராயிருந்து வேதத்தின் உட்பொருள் நிற்கப்பாடி நெஞ்சுள் நிறுத்தினரே யென்னில்—அதற்கு உத்தரம் विष्णुरिति. பா. சாந்தி. 323ல் प्राप्यं ज्ञानமென்கிற अर्ध-ச்லோகமிருக்கிறது. ஆனால் प्राप्य என்று ल्यबन्तமான பாடம் காண்கின்றது. विष्णुरित्यादि अर्धச்லோகம் அங்கில்லை இந்த முதல் अर्धச்லோகத்தைத் தனியாகப் பிரித்தால் இங்கு உதாஹரிக்க ஸங்கதியில்லை. ஆக இந்த ச்லோகம் வேறிடத்திலிருக்கக்கூடும். அல்லது विष्णुरित्यादि இங்கெடுத்தபடியே பாரத 88 ப்ராசீந பாடமென்று கொள்ளவேண்டும் யாஜ்ஞவல்க்யர் சொல்லுகிறார் ஜநகருக்கு. அதனால் भूप என்று ஸம்போதநம் பண்ணவேண்டியிருக்க तात என்ற ஸம்போதநம் சேராது. இதன் பொருளாவது—விஷ்ணுவானவர் எப்போதும் ஜ்ஞாநத்தைக் கொண்டே துதிக்கத்தக்கவர். ஆகையால் அழியாதபடியாக விஷ்ணுவிஷயமான ஜ்ஞாநம் ச்ரேஷ்டமானது, அது ப்ராஹ்மணன் க்ஷத்ரியன் வைச்யன் சூத்ரன் அவனுக்கும் கீழ்ப்பட்டவன் என்றபடியில் எங்காவது மேன்மேல் விசதமாம்படி பெறப்படவேண்டுமென்றதாம், இங்கு ப்ராஹ்மணாதி க்ரமத்தினால் உத்க்ருஷ்ட ஜாதியில் கிடைக்காதபோது நிக்ருஷ்ட ஜாதியில் பெறவேண்டுமென்றதாகிறது. இங்கே अभीक्ष्णम् என்கிற சொல்லால் ஸாமாந்யஜ்ஞாநம் போதாது; விசதமாகப் பெறவேண்டியிருப்பதால் ப்ராஹ்மணனிடம் ஸாமாந்யமாக அறிந்ததற்கு மேல் வேறிடத்திலும் விசதமாக அறியலாமென்னும் தெரிகிறது. ஆக இது வைசத்யவிஷயமே யல்லது विद्यामन्त्रप्रथमग्रहणமன்றென்னலாம். இதை ஸ்பஷ்டமா

என்ற ச்ரீவிதுரவாக்யத்தாலே ஸித்தம். துலாதார-தர்மவ்யாதாதிகளும் தர்மஸந்தேஹம் கேட்க வந்த ப்ராஹ்மணரைத் தாங்கள் ஸம்பாவித்து. தீர்த்தயாத்ரையிலே வழிதிகைத்தாரை வழியிலே சேர்த்த மாத்திரம் அவர்களைத் தெளி

---

க்கும் மேலே யெடுக்கப்படும் 'शूद्रयोनौ' என்கிற வாக்யம் (பா. உத்யோக 40-5 ) அதன் 23 उत्तरार्धं 'कुमारस्य तु या बुद्धिः वेद तां शाश्वतीं अहम्।எனக்குத்தெரியும்; ஆனாலும் நான் சூத்ர யோநியில் பிறந்திருப்பதால் இதற்குமேல் சொல்லவிரும்பவில்லை யென்றார் விதுரர். அது போல் மதுரகவிகளுக்கும் அவர் மிக்க வேதியரிடம் அறிந்த வேதத்தின் உட்பொருளை அவரது நெஞ்சில் நிற்கும்படி விசதமாகப் பாடி நிறுத்தியருளினார் நம்மாழ்வார் என்றே தெரிகிறது. ஆகையால் மந்த்ரோபதேசத்தை அவர் செய்தா ரென்று சொல்ல முடியாது. அப்படிச் செய்ததாகத் தெரிந்தால் அது முன் சொன்ன அசரிரி வாக்கு முதலான நிமித்தம் போல் மதுரகவிகளுக்கு ஒன்று ஏற்பட்டு அதன்மூலமாகும். ஆக வ்யக்தி விசேஷவிஷயமாக நிற்கும். நாதமுனிகளுக்கு உபதேசித்தாரே யென்னில்—நம்மாழ்வார் தமது சூத்ரஜாதியுருவத்தோடு இருந்து உபதேசிக்கவில்லையே. மோக்ஷம் சென்றபிறகு யோகத்தில் வருவிக்கப் பெற்றதால் அப்ராக்ருதசரீரத்தோடல்லவோ உபதேசித்தருளினார். அது சாஸ்த்ர விருத்த மாகாதென்க.

துலாதாராதிகளும் மந்த்ரோபதேசாதிகள் பண்ணி ஆசார்யராகவில்லை யென்கிறார் तुलाधारेति சாந்தி 267-ஜாஜலி என்கிற ப்ராஹ்மணன் ஜடாதாரியாய் தீர்ககாலம் தீவ்ரமாகத் தவம் செய்திருக்க அவன் ஜடையில் பக்ஷிகள் குடியிருந்து முட்டையிட்டுக் குட்டிகளை வளர்த்துக் கொண்டு போவதும் வருவதுமாகக் காலம் கழிந்து வந்தது. அவ்வளவையும் பொறுக்கும் படியானமையைக் கண்டு தனக்கு பூமி ஆகாசமெங்கும் போகவான புத்தியுற்றான். தம்மளவு புத்தி பெற்றவர் யாருமில்லை யென்று தோள்தட்டினான். அப்போது ஆகாசத்தில் நீ வாராணஸியிலிருக்கும் மஹாப்ராஜ்ஞனான துலாதாரனுக்கு ஸமானமாகமாட்டாயென்று அசரிரிவாக்கு உண்டாக அதைப் பொறுமல் துலாதாரனைக் காணச் சென்று கண்டான். துலாதாரன்—தராசு பிடிப்பவன். நற்சரக்குகளை விற்கும் துலாதாரனும் ஸம்பாவித்து= நல் வரவு கூறிப்பூஜித்து, 'நீர்வரும்போதே எல்லாமறிந்தேன். தர்மதத்துவம் உமக்குத் தெறியவில்லை, என்னுடைய தராசு இருபக்கததிற்கும் ஸமமாக நிற்பது போல் நான் ஸமனாயிருக்கிறேன். ஒன்றைப் பழிப்பதும். ஒன்றைப் புகழ்வதும் செய்வதில்லை, ஸர்வபூததயை, விஷயங்களில் பற்றின்மை, அஹிம்ஸை, இத்யாதிகுணங்கள் வேண்டும். நிஷ்காமகர்மாவாயிருப்பவனே ப்ராஹ்மணனாவான்' என்றவாறு உபதேசம்செய்தான், எல்லாம் தர்மஸந்தேஹம் நிவருத்தி செய்ததுமட்டும்.வழியிலே சேர்த்த மாத்ரம்= அவ்வளவான: சேர்த்ததுபோல்

धर्मव्याध விஷயம். பா.வந. 209 ஒருமரத்தின் கீழ் தவம் புரிந்த கௌசிகனென்ற ப்ராஹ்மணன் கிளையிலிருந்த கொக்கின் மலம் தன்மேலே விழ அவன்

வித்ரு விட்டார்களித்தனை அல்லது முக்யமான ஆசார்யகம் பண்ணினர்களன்று. இப் ப்ரகாரங்கள் இவ்விதிஹாஸங்களிலே கண்டுகொள்வது.

'भक्तिरष्टविधा ह्येषा यस्मिन् म्लेच्छेऽपि वर्तते। तस्मै देयं ततो ग्राह्यं स च पूज्यो यथा ह्यहम्॥'

---

கோபத்துடன் அதைக் காண, அவன் கோபாக்நியால் அது வெந்து விழுந்து உயிரிழந்தது. கௌசிகன் வருந்தி பிக்ஷைக்காக க்ராமம் சென்று ஒரு ப்ராஹ்மணியிடம் தேஹி என்று கேட்க அவள் அதற்காகப் புறப்பட்டவள் இடையில் கணவன் களைப்புடன் வருவதைக் கண்டு அவன் பணிவிடையில் இழிந்ததால் தாமதித்து பிக்ஷையைக் கொணர்ந்தாள், கௌசிகன் இவள் செய்த தாமதத்திற்காகக் கோபித்தான். அதன்மேல் அவள், 'எனக்கு பர்த்தாவின் சுச்ருஷையே முக்கியம், நான் கொக்கல்ல. உமது கோபம் என்னை ஒன்றும் செய்யாது. உமக்கு தர்மஜ்ஞாநம் போதாது; மிதிலையிலிருக்கும் தர்மவ்யாதனிடம் சென்று தர்மம் தெளிவது' என்றாள். யாரும் சொல்லாமலே கற்பின் மஹிமையினால் இவளுக்குப் பிறந்த கொக்குவரலாற்றின் அறிவுக்கு வியந்து அவளைப் புகழ்ந்துவிட்டு மிதிலை சென்று அந்தணர்மூலம் தர்மவ்யாதன் மாம்ஸ வ்யாபாரம் செய்யுமிடம் சென்று ஜனநெருக்கத்தினால் அருகே செல்லவாகாமல் தூரத்தில் நிற்க, தர்மவ்யாதன் எழுந்து வந்து கௌசிகனை நமஸ்கரித்து உபசரித்து, நீர் வந்த விஷயம் முன்னமே எனக்குத் தெரிந்துவிட்டதென்றெல்லாம் சொல்லிப் பிறகுத் தன் இல்லத்திற்கழைத்துச்செல்ல, கௌசிகனும் இவ்வளவறிவுள்ள உமக்கு இந்த மாம்ஸவ்யாபாரம் ஏனென்று கேட்க, அவன் நான் ப்ராணிவதை செய்கிறதில்லை யென்றும், பிறர்வதைத்த ப்ராணியின் மாம்ஸத்தைக் கொண்டு தர்மமாக வ்யாபாரம் செய்கிறேனென்றும், மாம்ஸம் உண்பதில்லை யென்றும், அவரவர்க்குக் குலக்ரமமாக வந்த தர்மத்தை அவரவர் செய்வது தகு மென்றும், மாதாபித்ருசுச்ருஷையே புத்ரனுக்கு முக்ய மென்றும் சொல்ல, கௌசிகன் பல விஷயங்கள் கேட்க எல்லாம் தெளிவாகச் சொன்னான். கௌசிகன் தன் இல்லம் சென்று தாய்தந்தைகளின் சுச்ருஷையை ப்ரதாநமாக்கி தர்மநெறியில் நின்றான். இவ்வளவு சொல்லியும் கௌசிகனிடத்தில் விசேஷமதிப்புடன் தன் ஜாதிக்குத் தக்கபடி அடங்கி நடந்துகொண்டதால் தர்மவ்யாதன் ஆசார்யனாயிருந்து உபதேசம் செய்யவில்லை யென்று தெரிகிறது. வழியை விட்டுச் சென்றவனை வழியில் திருப்புவது போல், செல்லவேண்டும் வழியில் சேர்த்தது மாத்திரம். இவ்வளவு உபதேசமும் विद्यामन्त्रங்களின் உபதேசமல்லவாகையால் இவர்கள் ஆசார்யராகார்.

ஆனாலும் பக்தனான ம்லேச்சனைக் கண்டாலும் அவனோடு கொடுக்கல் வாங்கல், அவனைப் பூஜித்தல் எல்லாம் தகுமென்று गारुडपुराणवाக்யத்தில் காண்கிறதேயென்ன அதற்குக் கருத்துக் கூறுகிறார் भक्तिरिति. முன்பின் ச்லோகங்களோடு இதற்கு உரையைப் புருஷார்த்தகாஷ்டாதிகாரத்தில்

என்றதுவும் ऐश्वर्यप्रदानादिपरமன்று; ज्ञानप्रदानादिपरமென்று व्याख्यानம் பண்ணினார்கள். 'पूज्यः' என்கிற சப்தமும் ஸாதாரணமாகையாலே, 'भागवतः முற்றை டானால் ஸர்வரும் சாஸ்த்ரம் சொன்ன மட்டுக்களிலே आदरणीयர்; இவர்களை ஸஜாதீயரோடு ஒக்க நினைத்து अवज्ञै பண்ணினபோது நரகமாம்' என்றிவ்வளவிலே தாத்பர்யம்(தத்பரம்?). இவ்வர்த்தத்தை 'यः शूद्रं भगवद्भक्तम्' என்று தொடங்கி மஹர்ஷி संग्रहित्தான். ஆகையால் जातिव्यवस्थै குலையாதே நிற்க भागवतप्रभावம் கண்டுகொள்வது.

'अतो जातेर्निकृष्टायाः सर्वस्या वा विनाशतः । साजात्यं विष्णुभक्तानामिति मन्दमिदं वचः ॥

---

காண்க. இங்குப் பூஜையென்ற சொல் ஜாமிபூஜோக்தி போலென்று சரமச்லோகாதிகாரத்தில் முதற்பாதவுரையில் பணிப்பர். வ்யாக்யாநம்பண்ணினார்கள் இதி. குலந்தருமென் பதற்கு நிர்வாஹம் செய்த பெரியவாச்சான்பிள்ளை இதற்கும் சாஸ்த்ரவிரோதமிராதபடி வ்யாக்யாநம் செயதாரென்றதாம், இங்குச் சொன்ன பூஜையாவது அவஜ்ஞை செய்யாமல் ஆதரித்திருக்கை யென்பது, 'यः शूद्रं भगवद्भक्तं निषादं श्वपचं तथा । वीक्षते जातिसामान्यात् स याति नरकं ध्रुवम् ॥', 'भक्तं शूद्रसामान्यात् अवमन्यन्ति ये नराः । नरकेष्वेव तिष्ठन्ति वर्षकोटीर्नराधमाः ॥ अपि स्युर्हीनजन्मानः मान्या निर्मलेन चेतसा இத்யாதிகளில் ஸ்பஷ்டம்.

ஆக ஜாதி யழியாதென்றதாயிற்று. ஜாதியும் ஒழிந்து ஸாம்யமுண்டென்கிறவர்களுக்கு அது ப்ராக்ருத சரீரமிருக்கும் போதல்லவென்கிறார் अत இதி. अतः—ஆகையாலே—ஜாதிவ்யவஸ்த்தை குலையாதே நிற்பதால் என்றபடி. न शूद्राः भगवद्भक्ता विप्रा...स्मृताः என்றதால் நிக்ருஷ்ட ஜாதி போவதும் உத்க்ருஷ்ட ஜாதி வருவதும் தெரிகிறதென்று இதை இசைந்தால் सर्ववर्णेषु ते शूद्राः ये ह्यभक्ता जनार्दने என்கிறதால் அபக்தரான ப்ராஹ்மணாதிகளுக்கும் உத்க்ருஷ்ட ஜாதி போய் சூத்ரத்வஜாதி இசையவேண்டும். அப்போது அவனுக்கு உபநயநாதி ஸம்ஸ்காரங்கள் ப்ராஹ்மண ரீதியாக இராமற் போம். அவனைக் கொன்றால் ப்ரஹ்ம ஹத்யாதி தோஷமுமில்லையாம் அதனால் அங்குப்போல் சூத்ர விஷயமான விப்ரபதத்திற்கும் ப்ரசம்ஸையிலே நோக்கென்க, அவ்வாறின்றி நிக்ருஷ்ட ஜாதி மாத்ரம் போகுமென்றோ, ப்ராஹ்மணருக்கும் ஸ்வஜாதி போய் சூத்ரத்வஜாதி வரட்டுமே யென்று எல்லா ஜாதிக்கும் அழிவே யென்றோ சொல்லவாகாது; பகவத்பக்தர்களிலேயே விப்ர சூத்ராதி ஜாதிபேதமிருப்பதை ஸ்பஷ்டமாகக் கீழே கூறியபடியால் ஜாதி யழியாதென்று முரைத்ததால் அதுமூலமான ஸாம்யம் வாராது. 'एकान्ती व्यपदेष्टव्यः नैव ग्रामकुलादिभिः' என்றபடி வைஷ்ணவனென்கிற தன்மையில்மட்டுமே ஸாம்யம். ஜாதித்வம்ஸ (ஜாதியின் அழிவு) மூலமாகவும் ஸாம்யம் மோக்ஷத்தில் தான். அதாவது ஜீவ ஸாமாந்யத்திற்கு ப்ராஹ்மணத்வாதிஜாதி யில்லை யென்கிற ஸாம்யமானது எப்போதுமே உண்டு. 'नायं देवो न मर्त्यो वा न तिर्यक् स्थावरोऽपि वा என்றபடி நேராக ஜாதி அவர்களிடமில்லையே. சரீரம் வாயிலாக ஜாதியில்லாமையோ, ஜாதித்வம்ஸமோ ப்ரளயத்திலுமுண்டு. ஒவ்வொரு

वैष्णवत्वेन मान्यत्वं समानं मुनिसम्मतम् । जात्यादिध्वंसतस्साम्यं मुक्तिकाले भविष्यति ॥

भगवद्गीतादिகளிலும், 'स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम्',

'स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः । स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥',

'स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः', 'तस्मात् सप्रणवं शूद्रो मन्नामानि न कीर्तयेत्',

'वर्णाश्रमाचारवता पुरुषेण परः पुमान् । विष्णुराराध्यते पन्था नान्यस्तत्तोषकारकः ॥'

'न चलति निजवर्णधर्मतो यः' इत्यादिகளாலே பாகவதனுக்கே **यथापूर्वं जातिव्यवस्थै**யும், அதுக்கு அநுரூபமான **वृत्तिव्यवस्थै**யும் **सुव्यक्त**மாகச் சொல்லப்பட்டது.

இப்படி **भागवतत्व**மாகிற குணமும் அதடியாக வரும் புருஷார்த்தவிசேஷமும் ஸமாநமாயிருக்க, ஜாதிவிசேஷங்களும் [प्र]वृत्तिविशेषங்களும் **नियतव्यवस्थित**ங்களென்னுமிடம் '**शूद्रस्साधुः कलिस्साधुः**' **इत्यादि**களிலும் ப்ரஸித்தம்.

---

ஜீவனுக்கும் நேர்ந்திருந்த ஸர்வஜாதிகளின் த்வம்ஸ ஸமாநகாலிகத்வமென்கிற ஆகாரத்தைக் கொண்டு ஸாம்யத்தைச் சொல்வதாலே, அது மோக்ஷத்திலே யாகும். ஜாத்யாதி என்கிற ஆதிபதத்தினால் ஜாதிக்கு ஆச்ரயமான சரீராதிகளையும் கொள்வது. பாகவதத்வம் பெற்றபிறகும் முன்ஜாதி அழியாமலே யிருக்குமென்பதை மற்றும் பல வசநங்களைக் கொண்டும் ஸ்தாபிக்கிறார் **भगवदिति**. முதல்வசநம் பாகவதனுக்கும் வைச்யத்வ சூத்ரத்வாதிகளைச் சொல்லிற்று, மேல் மூன்று வசநமும் அவரவர்வர்ணதர்மங்களைச்செய்ய வேண்டுமென்று ஜாதியின் இருப்பைச் சொல்லும், **तस्मा-दिति** பா ஆச்வ 118-14. பாகவத சூத்ரன் என் நாமங்களைச் சொல்லும் போது ப்ரணவத்தோடு சொல்ல வாகாதென்றது, **वर्णेति**. வி பு. 3 8-9. வர்ணாச்ரமாசார முள்ளவனாலேயே விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான்; அவனுக்கு ஸந்தோஷத்தை யுண்டு பண்ண வழி வேறில்லை யென்றது. **नेति** வி.பு.3-7-20. கமலநயந என்று எம்பெருமானை விளித்து **भव शरण**மென்ற ப்ரபந்நனைச் சொல்லும் போது தனது வர்ணதர்மத்திலிருந்து சலிக்காதவன் வைஷ்ணவனென்றது. **शूद्रस्साधुरिति**. வி.பு. 6.2.6 எது ஸாது=சிறந்தது என்று அறிய, ரிஷிகள் வேதவ்யாஸரிடம் சென்ற போது மஹாநதியில் ஸ்நாநம் பண்ணிக் கொண்டிருந்த அவர் அதை யறிந்து **शूद्रस्साधुः कलिस्साधुः योषित्साधुः** என்று சொல்லிக் கொண்டே முழுக்கிட்டார். இதனைத் தெளிவாக அவர் மூலமே அறிய விரும்பி அநுஷ்டாநம் பூர்த்தியாம் வரையில் காத்திருந்து கேட்டபோது ப்ராஹ்மணன் மிகப் பெரிய உபாயத்தினால் ஸாதிக்கும் பலனை சூத்ரன் இதர வர்ண சுச்ரூஷையினாலேயே பெறுகிறான் க்ருதாதி யுகங்களில் த்யாநாதிகளால் பெறவேண்டும் பலனை ஒரு நாள் செய்த நல்ல கார்யத்தினாலேயே கலியில் பெறுகிறார்கள். ஸ்த்ரீயானவள் அதிக தர்மங்கள் செய்யாமலே பதியின் சுச்ரூஷையினாலேயே பூர்ணபலன் பெறுகிறாள் என்றார். பாகவதத்வம் காரணமாக சூத்ரன் ப்ராஹ்மணனால் ப்ராஹ்மணதர்மங்களை யெல்லாம் செய்யவேண்டியிருப்பதால் அவனை சூத்ரனென்றும் ப்ராஹ்

'तमश्शूद्रे रजः क्षत्रे ब्राह्मणे सत्त्वमुत्तमम्' इत्यादिகளில் சொல்லுகிறபடியே सत्त्वादिगुणतारतम्यவத்தான சரீரத்தில் ब्राह्मण्यादिகள் வேறே; மனஸ்ஸில் सत्त्वादिगुणविशेषமடியாக ஸர்வஜாதிகளிலும் प्रशंसावाक्यங்களாலே சொல்லப்பட்ட ब्राह्मण्यादिகளும் வேறே. இவற்றில் शारीरगुणविशेषமடியாக व्यवस्थितங்களான शारीरजातिविशेषங்கள் उत्पत्तिसिद्धங்களாய் मरणान्तமாக स्थिरங்களாயிருக்கும். मानसமான सत्त्वादिगुणोन्मेषமடியாகச் சொல்லுகிற ब्राह्मण्यादिகள் सर्वजातिகளுக்கும்

---

மணனைவிடச் சிறந்தவனுகவும் சொல்லலாகாதே. அதனால் சூக்ரத்வம் ஸ்த்திரமென்று தெரிகிற தென்றபடி. (இனிப்ரஹ்மணத்வாதிவிவேசநம்)

இப்படி ஜாதி நிலைத்திருக்குமென்றதன்மேல் ஒரு கேள்வி—ஜாதி நித்ய மானுல்தானே, 'भागवतர் விப்ரர்' என்றவிடத்தில் விப்ரபதத்திற்கு உத்க்ருஷ்டரென்ற பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது. அநித்யமாகில் விப்ரத்வமே யுண்டென்னலாம். எல்லா ஜாதியும் நித்யமென்று சொல்லும் தார்க்கிகரைப் போல் நாம் ஸித்தாந்தத்தில் இசைவதில்லை घटत्वं मनुष्यत्वं முதலான ஜாதியை संस्थानம்—அதாவது ஒருவிதமான உருவமைப்பு என்றே நாம் சொல்லுகிறோம் மநுஷ்யஜாதியரில் मनुष्यत्वமென்ற அமைப்பு நீங்கலாக ब्राह्मणत्वं क्षत्रियत्वं இத்யாதி அமைப்பு வேறு காணப்படாமையால் இது அப்படி ஸம்ஸ்த்காநமாகாதாயினும், சாஸ்த்ரத்தில் சரீரம் ஸத்வரஜஸ்தமோமயம்; அங்கு குணங்களின் ஏற்றச் சுருக்கத்தால் ப்ராஹ்மணத்வாதிகள்: அதிக ஸத்வம் ப்ராஹ்மண்யம், அதிக ரஜஸ்ஸு க்ஷத்ரியத்வம், அதிகதமஸ்ஸு வைச்யத்வம்; மிக்க அதிகமான தமஸ்ஸு சூத்ரத்வமென்று தெரிகிறது ஸத்வாதி குணங்கள் ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு விதமாய் ஏறியும் குறுகியுமிருக்குமென்பதும் சாஸ்த்ர ஸித்தம். ஆக ஒரே சூக்ரசரீரம் முதலில் அதிக தமஸ்ஸாயிருந்து பாகவதத்வம் வந்த பிறகு அதிக ஸத்வமாகலாம். ஆகையால் ஜாதி வ்யவஸ்த்தையும் வ்ருத்தி வ்யவஸ்த்தையும் எங்ஙனே என்றவாறு— இதற்கு உத்தரம் அருளிச்செய்கிறார் तमश्शूद्रे—இத்யாதியால் பா. ஆச்வ 40-11. தார்க்கிக மதத்திற் போல் ஜாதி நித்யமாகாவிட்டாலும் வ்யக்தியுள்ளவரையில் ஜாதி யிருக்கும். வ்யக்தி யிருக்கும் போது நடுவில் நசியாது. இப்படி घटत्व-मनुष्यत्वादिகளைப் போல் ப்ராஹ்மண்யாதிகளும் நடுவே நசியாமலிருப்பதை யறிவிப்பதற்காகவே அதை ஜாதி என்று சாஸ்த்ரத்தில் வழங்குவது. உண்டாகும் போது சரீரத்தில் ஸத்த்வாதிகுண த்ரவ்யாம்சங்கள் எதெதற்கு எத்தனை பங்கு அதிகமும் குறைவுமாயிருந்ததோ, அத்தனை பங்காகவே மரணம் வரையிலிருக்கும், அதனால் தான் 'अनुज्ञापरिहारौ देहसंबन्धात् ज्योतिरादिवत्' என்றார் ஸூத்ரகாரர். सत्त्वादिगुणங்கள் மநஸ்ஸில் ஏறுவதும் சுருங்குவதுமாயிருக்குமென்று 'आहारशुद्धौ सत्त्वशुद्धिः, मनसा तु विशुद्धेन, कषाये कर्मभिः पक्वे இத்யாதிகளால் ஸ்பஷ்டமாகிறபடியாங் மநஸ்ஸில் மட்டும் ஏற்றச் சுருக்கத்தை யிசைவோம். ஆக சரீரத்தில் இதரகுணம்சத்தைவிட ஸத்வாம்சம் எவ்வளவு அதிகமானுல் ப்ராஹ்மண்ய மென்போ

संभावितங்களாய், प्रह्लादादिகளுக்கு जन्मसिद्धங்களாய், நீக்கியுள்ளார்க்கு आचार्य-संबन्धादिहेतुக்களாலே आगन्तुकங்களாயிருக்கும், இதில் शारीरजातिविशेषங்களை இட்டுச் சில சாஸ்த்ரங்கள் நியதங்களாம். मानसமான ब्राह्मण्यादिகளையிட்டு அவற்றுக்கு அநுரூபமான पुरुषार्थतदुपायங்களும் प्रशंसादिகளும் ஸர்வஜாதியிலும் संभावितங்களாம். இதில் ब्राह्मणादिகள் பக்கலிலே மாநஸமான विपरीताकारங்கள் வந்தால் शमदमादियोग्यமாக शास्त्रसिद्धமான ஜந்மத்திலே பிறந்து தப்பினு

---

மோ, அவ்வளவு மநஸ்ஸில் ஸத்வமிருந்தால் அதையும் ப்ராஹ்மண்ய மென்னலாம். ஆனால் சரீரத்தில் அது ஸ்திரமாயிருப்பதால் ஜாதியாகும்; மனத்தில் அது ஜாதியன்று. இதை யறிவிப்பதற்காகவே சாரீர ஜாதி விசேஷங்களென்றும் மநஸ்ஸில் ப்ராஹ்மண்யாதிகளென்றும் ஜாதிபதத்தை யிட்டும் விட்டும் அருளினார். शूद्राः विप्राः என்றவிடத்தில் சாரீர சூத்ரத்வ ஜாதியை இசைந்த பிறகு அதற்கு விருத்தமான சாரீரவிப்ரத்வத்தைச் சொல்லவாகாமையால் மாநஸ விப்ரத்வம் விப்ரபதார்த்தமாகும். ஆக உத்க்ருஷ்டமென்கிற அர்த்தம் கொள்ளாமல் விப்ரத்வமென்கிற அர்த்தமே கொண்டாலும் தோஷமில்லை. எந்த ஜாதியிலிருப்பவரின் மனதும் வெவ்வேறுவிதம் மாறுகையால் மநஸ்ஸைக் கொண்டு ப்ராஹ்மண்யாதிகளெல்லோருக்கு மாம். இந்த மாநஸமான ப்ராஹ்மண்யம் பூர்வஜந்ம ஸுக்ருதத்தாலே சிலருக்குப் பிறப்பிலேயே இருக்கும்; சிலருக்கு आगन्तुकம்-பின்னால்வரும்.

இப்படி இருவித ப்ராஹ்மண்யமுண்டானால் எந்த வாக்யத்தில் எந்த ப்ராஹ்மண்யத்தைக் கொள்வதென்பதை விளக்குகிறார் இதில் இதி. சில சாஸ்த்ரங்கள்='चत्वारो वर्णाः ब्रह्मक्षत्रवैश्यशूद्राः, तेषां पूर्वः पूर्वो जन्मतः श्रेयान्', 'अष्टवर्षं ब्राह्मणमुपनयीत' இத்யாதிகள். ஒரு ஜாதிக்கு மற்றொரு ஜாதியைக் கொண்டு ப்ரசம்ஸையோ நிந்தையோ சொல்லுமிடத்தில் மாநஸ ப்ராஹ்மண்யாதிகளைக் கொள்வது ஸ்பஷ்டம். அப்படி விசேஷ गमक(साधक)மிராதவிடங்களில் ஸ்வரஸமாக ஸ்தூலசரீரத்திலிருக்கும் ஸ்திரமான ப்ராஹ்மண்யாதிகளைக் கொள்வதே தகும். அநுரூபமான இதி. 'ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्थाः मध्ये तिष्ठन्ति राजसाः। जघन्यगुणवृत्तस्थाः अधो गच्छन्ति तामसाः ॥'' இத்யாதியில் மாநஸாநுகுணமான செயலும் பலனும் சொல்லப்பட்டனவே. ஸர்வஜாதியிலும்-நாலு ஜாதியிலும் ஸங்கரஜாதியிலும்; சாரீர ப்ராஹ்மண்யத்தைவிட மாநஸ ப்ராஹ்மண்யத்திற்கு மதிப்பு உண்டு எனினும், சாரீரப்ரஹ்மண்ய முள்ளவனுக்கு மாநஸ ப்ராஹ்மண்யமிராமைக்காக நிந்தையும் சூத்ரனுக்கு மாநஸ ப்ராஹ்மண்யத்திற்காக ப்ரசம்ஸையும் ஏன் என்ன அருளிச்செய்கிறார் இதில் இதி. ப்ராஹ்மணனுக்கு அத்யயந அர்த்தஜ்ஞாந விசேஷ அநுஷ்டாநங்களுக்கு வசநமிருப்பதால் மாநஸப்ராஹ்மண்யம் ஸ்வரஸமாக வரத் தகும்; சூத்ரனுக்கு அத்யயநாதிகளில்லையாகையால், न चास्योपदिशेत् धर्मं என்றபடி உபதேசம் கிடைப்பதும் அரிதாகையால் மாநஸ ப்ராஹ்மண்யம் வருவதரிது. எனவே ஸ்வரஸ ப்ராப்தம் வராமையால் நிந்தை. அரிதானதும் அடையப்படு.

னென்று மிகவும் நிந்தை நடக்கும். ஜாத்யந்தரங்களிலே பிறந்து குணோத்தர ஞய்ப் போந்தானுகில், 'ஏதைஸ்ஸமேத:(?) ஶூத்ரோऽபி வார்த்தகே மானமர்ஹதி' இத்யாதிகளிற் படியே ப்ரஶம்ஸை மிகவும் நடக்கும்

இவற்றில் சாரீரமாயும் மாநஸமாயும் வரும் உத்கர்ஷம் கர்வஹேதுவாமாகில் அனர்த்தகரமாம். இவ்விரண்டு வழியாலுமுள்ள அபகர்ஷம் 'குலங்களாய ஈரிரண்டில்' என்கிற பாட்டிலும், 'ஜனித்வாऽஹம் வம்ஶே' என்கிற ச்லோகத்திலும் சொல்லுகிற படியே தான் நின்ற நிலை தெளிந்து கார்ப்பண்யத்தை விளைத்து அகிஞ்சனாதிகாரமான உபாயவிசேஷத்திலே மூட்டுமாகில் புருஷார்த்தகாரணமாகையாலே ச்லாக்யமாம்.

---

வதில் விசேஷ ப்ரசம்ஸை. பிறந்து தப்பினுன்—பிறந்திருந்தும் தவறினுன். தப்புக்கிடமானுன். ஏதைரிதி. யாஜ்ஞ. ஸ்ம்ருதி. 1–116. ஏதை: ப்ரபூதை: என்று அங்கே பாடம்; ஸமேதை: என்று இங்கு உரைகளில் பாடம்; ஸமேத: என்று சில மூலப்பதிப்புப் பாடம். வித்யாகர்ம வயோ பந்து வித்தை: மான்யா: யதாக்ரமம் என்று பூர் வார்த்தம். வித்யை செயல் வயது பந்துக்கள் பணம் இவற்றைக் கொண்டு முறைப் படி கௌரவிக்கத்தக்கவரென்று பொதுவாகச் சொல்லி இது மூன்று வர்ணத்திற்குமட்டு மென்று நினைக்க வேண்டா. சூத்ரஜாதியிலும் இவற்றைக்கொண்டு கௌரவிக்க வேண்டுமென்றது உத்தரார்த்தம். ஏதை: என்பதற்கு வித்யாதிகள் பொருள், சாந்த்யாதிகளென்று உரையில் சொன்னது வித்யையைச் சொன்னதாலே இவை அர்த்தஸித்தமாகையால். ச்லோகத்தில் வார்த்தகே என்று சொன்னது யௌவநத்தில் இவை யுண்டாகில் பூர்வவர்ணபரிசர்யை யென்கிற தர்மத்திற்கு ஹாநிவரும்; அதைச்செய்யவாகாத மூப்பில் இவை தகுமென்றறிவிப்பதற்காக. இந்த உத்கர்ஷம் எங்கும் நற்பலனை விளைவிக்கும்; அபகர்ஷமுண்டாகில் பலனில்லை என்கிற வ்யவஸ்த்தை யில்லையென்கிருர் இவற்றில் இதி. வசநபூஷணத்தில் உத்கர்ஷாப கர்ஷவிஷயமான 210வது முதலான வாக்யங்களை இங்கே பராமர்சிப்பது. சிலர் சாரீர உத்கர்ஷத்தை மட்டும் அஹங்காரத்திற்குக் காரணமாக அநர் த்தகரமாகச் சொல்வர். இது மாநஸ உத்கர்ஷத்திற்கும் துல்யம். இருவித உத்கர்ஷமிருந்து அது இருப்பதால் அஹங்காரியாஞல் ஃபலஹாநியே=கேவல ப்ராஹ்மணனுயிருந்து அஹங்காரியானுலும், சூத்ரனுய் மாநஸ உத்கர்ஷம் மட்டுமிருந்து அஹங்காரியானுலும் அநர்த்தமே என்றபடி. குலங்களாய என்ற திருச்சந்த வ்ருத்த 90ம் பாசுரத்தில் சாரீர அபகர்ஷமும் 'நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவினறிலேன்' இத்யாதியால் மாநஸ அபகர்ஷமும் சொல்லியிருந்தாலும் தத்துவ ஜ்ஞாநியான ஆழ்வாருக்கு மாநஸ ப்ராஹ்மண்யமிருப்பதால் சாரீர அபகர்ஷம் இதனின்று கொள்வதாம் ஜனித்வாऽஹம் என்கிற ஆளவந்தார் ச்லோகத்தில் சாரீர உத்கர்ஷத்தைச் சொல்லி நிமஜ்ஜாமி தமஸி என்று அஜ்ஞாநத்தைச் சொன்னதால் மாநஸாபகர்ஷத்தைக் கொள் வது. இவ்விரு அபகர்ஷமுமுள்ளவன் இதைத் தெளிந்து வருந்தி கார்ப்பண்ய முடையனுகில் இவ்வபகர்ஷமே பக்தியைவிட்டு ப்ரபத்தியிலிழியச் செய்

இப்படிக்கு जातिव्यवस्थैயும் जात्यनुरूपமான वृत्तव्यवस्थैயும் உண்டானாலும் ஸர்வருக்கும் भागवतत्वनिबन्धनமாக முன்பு समर्थिக்க उद्देश्यत्वप्रतिपत्तिக்கு விரோதமில்லை.

இப் भगवत्परரில் 'ऐकान्त्यं भगवत्येषां समानमधिकारिणाम्' என்கிறபடியே देवतान्तरस्पर्शமற்றவர்கள் एकान्तिகள். அவர்களில் வைத்துக்கொண்டு 'ज्ञानी तु परमैकान्ती' என்கிறபடியே प्रयोजनान्तरस्पर्शமுமற்றவர்கள் परमैकान्तिகள். அவர்களில் வைத்துக் கொண்டு विलम्बाक्षमராய் सर्वशक्तिயான शेषिபக்கலிலே भरन्यासம் பண்ணி, 'செய்கிற கைங்கர்யத்துக்கு ப்ரயோஜநாந்தரம் கோலு(று)கை பொலிசைக்கு இடுவார் மாத்ரம்' என்கிற श्रुत्यर्थத்தைத் தெளிந்து இக்

---

வதால் புருஷார்த்தகாரணமாய் கௌரவிக்கப்படும், இந்த வாக்யத்தில் அபகர்ஷமென்ற சொல் விளைத்து, மூட்டும் என்கிற சொற்களில் அந்வயிக்கிறபடியால் 'தான் நின்றநிலை தெளிந்து' என்பதற்கு புருஷனைக் கர்த்தாவாகச் சொல்லவாகாமையால், 'கார்ப்பண்யமிருக்கிற ஸ்திதி யறியப்பட்டு' என்று பொருள் கொள்ளவேண்டும். அல்லது, 'பாட்டிலும் ச்லோகத்திலும் புருஷன் தான் நின்ற நிலை தெளிந்து சொல்லுகிறபடியே என்று அந்வயிக்க வேண்டும். उद्देश्यत्वप्रतिपत्तिயாவது, சேஷித்வபுத்தி. कैङ्कर्य उद्देश्यரென்கிற ஜ்ஞாநம். இதற்காகத் தராதர விவேகம் மேலே—

இவ்வளவால் பகவத்ஸங்கல்பத்தினால் உத்க்ருஷ்ட ஜாதி பெறுகிறானென்னும் ப்ரபாவம் சொல்லவாகாதென்று நிரூபித்தார். 'உள்ள ப்ரபாவந தான் என்ன என்பார்க்கு அதைத் தெளிவிக்கிறார் இப்பகவத்பரரில் இதி. 'चतुर्विधा भजन्ते माम्' என்ற ஐச்வர்ய கைவல்ய மோக்ஷார்த்திகளெல்லோரும் பகவத்பரரே இம்மூவருக்கும் ஐகாந்த்யம்=ஒருவரையே உபாயமாகக் கொண்டிருக்கை, தேவதாந்தரத்தை யாச்ரயிக்காமை ஸமாநமென்றார் ஆளவந்தார் கீதார்த்தஸங்க்ரஹத்தில், அவர்களில் உபாயமும் பலமும் எம்பெருமானே யென்றிருப்பவர் வேறு பலத்தை விரும்பாதவர் பரமைகாந்தித்வமென்ற பெருமையைப் பெறுவர். அவர்கள் பக்தர் ப்ரபந்நர் என்று இருவராவர். பக்தர் மோக்ஷம் பெறும் வரை பக்தியை உபாயமாக அநுஷ்டிப்பவர். அதற்கங்கமாகவே எல்லாக் கர்மங்களையும் செய்கிறபடியால் அவர் செய்யும் கார்யங்களில் ஸ்வயம்ப்ரயோஜநத்வ புத்தியில்லை. ப்ராரப்தகர்மம் முடிகின்ற வரையில் மோக்ஷம் பெறுமை யென்கிற விளம்பத்தைப் பொறாமல் ப்ரபந்நரானவர் பின்னால் செய்யும் ஸகல கர்மங்களையும் பரமபதத்தில் முக்தரைப் போலே சுத்த கைங்கர்யமாகவே செய்கிறபடியால் அந்த அம்சத்தில் முக்த ஸாம்யமென்கிற ப்ரபாவம் அவர்க்கிருக்கிறது. வைத்துக் கொண்டு என்பதற்கு அந்தர்பூதராய் என்று பொருள். பொலிசைக்கிடுவார்—பொலிசையாவது வட்டி. செய்யும் கார்யத்திற்கு ப்ரயோஜநாந்தரத்தைப் பலமாக அபேக்ஷிப்பது வட்டிக்காக மூலதநம் கொடுப்பாரின் அளவாகும் மாத்திரம்=அளவு. இதைச் சொல்லும் ச்ருதியாவது 'कुसीद-सेदे विहरन्ति सर्वे ये आशीर्वन्तो ददत्यत्र किञ्चित्। पर्यन्तलोकास्तु इह ते भवन्ति; अना-

கைங்கர்யத்துக்கு மோக்ஷமும் ப்ரயோஜநமென்று கோலா(ரா)தே कैङ्कर्यैक-प्रयोजनராயிருக்குமவர்களுடைய परमैकान्तित्वम् षोडशवर्णस्वर्णத்தோடு ஒக்கும். இம் மாற்று அறியும் மஹர்ஷிகள் महाभारतादिகளிலே இப் பரமைகாந்திகளுடைய மாஹாத்ம்யத்தைப் प्रपञ्चिத்தார்கள்.

இவன் प्रभावத்தைப் பற்ற,

'नारायणैकनिष्ठस्य या या वृत्तिस्तदर्चनम् । यो यो जल्पः स स जपस्तद् ध्यानं यन्निरीक्षणम् ॥

तत्पादाम्ब्वतुलं तीर्थं तदुच्छिष्टं सुपावनम् । तदुक्तिमात्रं मन्त्राग्र्यं तत्स्पृष्टमखिलं शुचि ॥'

என்கிற ச்லோகங்கள் ப்ரமாணமேயாகிலும், இங்கு 'या या वृत्तिस्तदर्चनम्'

---

शिषस्तु विजयाय अनन्ताय'. எவர்கள் பலத்தைக் கேட்கின்றவர்களாய் யாகாதிகளைச் செய்கிறார்களோ, அவர்கள் வட்டிக்கு வ்யாபாரம் செய்கின்றவர்களாவர்; அவர் அழிவுள்ள லோகத்தில் முடிவர். பலத்தை யபேக்ஷிக்காதவர்கள் அழிவற்ற விஜயத்திற்காவரென்க. பக்தியோக நிஷ்டருக்கு வேறு பலத்தில் அபிலாஷை யிராவிடினும் மோக்ஷத்தைக் குறித்துச் செய்வதால் சிறிது குறைவுண்டு; ப்ரபந்நருக்கு ப்ரபத்தியாலேயே மோக்ஷம் ஸித்திப்பதால் கைங்கர்யமே ப்ரயோஜநமாகும். பக்தர் ஸ்வர்ணத்துக்கு ஸமாநம் இவர் ஷோடசவர்ண ஸ்வர்ண ஸமாநமாவர். வர்ணமாவது. நிறம். பெருமை (மாற்று) எதுவும் பூர்ணமானால்—சந்த்ரன் ஷோடசகலன். ஜீவன் ஷோடசகலன் என்பதுபோல் இதுவே பதினாறு பாகமுமாய் பூர்த்தியானால் கலப்பற்ற முழு ஸுவர்ணமாமென்பதற்காக ஷோடசவர்ணமென்கிறது. இந்த நிலை எப்படி ப்ரபாவமாகுமென்னில்—ஜீவன் இருக்க வேண்டிய ஸ்வரூபத்தை மேன்மேல் பெறும் போது அதை ப்ரபாவமென்று ஏன் சொல்லலாகாது. द्रवन्ति दैत्याः; प्रणमन्ति देवताः। तस्मै देवाः बलिमावहन्ति என்ற ஏற்றம் ஏன் ப்ரபாவமாகாது. மஹாபாரதாதிஷி. ஸார ப்ரகாசிகையில் मद्भक्तजनवात्सल्यं இத்யாதி காருடவாக்யமும் श्वपचोऽपि महीपाल विष्णुभक्तो द्विजाधिकः என்ற பாரதமும். शुचिषद्भक्तिदीप्ताग्निदग्धदुर्जातिकल्मषः । श्वपचोऽपि बुधैः श्लाघ्यो न वेदाढ्योऽपि नास्तिकः ।' என்ற हरिभक्तिसुधोदय வசநமும் येषां चक्राङ्कितं गात्रं शूद्रेष्वपि— ...ते वै ब्राह्मणा भुवि देवताः என்கிற ஸ்காந்தவசநமும். न शूद्रा भगवद्भक्ताः... ते हि विप्रा इति स्मृताः என்ற ப்ருகுஸம்ஹிதாவசநமும் குறிக்க ப்பெற்றன. இந்த ப்ரபாவத்தை याः क्रियाः संप्रयुक्ताः स्युः एकान्तगतबुद्धिभिः । ताः सर्वाः शिरसा देवः प्रतिगृह्णाति वै स्वयम् என்கிற வசநமும் காட்டும். இவர்களில் ப்ரபந்நருக்குள்ள ஏற்றம் 'नार्हन्ति शरणस्थस्य कलां कोटितमीमपि' என்னப்பட்டது இந்த ப்ரபாவத்தை विहगेन्द्रसंहिताவாக்யத்தைக் காட்டி அதியாகக் கட்டுகிறார்கள். அத்தகைய ஸம்ஹிதைகளில் ப்ரக்ஷேபம் அதிகமிருப்பதால் அவை விச்வஸிக்கக் கூடியவை யல்ல; ப்ரமாணமென்று கொண்டாலும் இதர ப்ரமாணத்தோடு முரண்படாதபடி அதற்கும் பொருள் சொல்லக்கூடு மாகையால் அதியாக ப்ரபாவ கல்ப்பனை வேண்டாமென்கிறார் இவன் இதி. ப்ரமாணமேயாகிலு மென்பதற்கு சொன்னபடியன்று என்ற விடங்களில் அந்வயம்.

என்றது शास्त्रविरुद्धवृत्तियைச் சொன்னபடி யன்று. देशकालादिवैगुण्यத்தாலே 'आपत्स्वनन्तरा वृत्तिः' என்கிற நிலையிலே நின்றாலும் அது समाराधनोपयुक्तமான सदुपादानமாமென்றபடி. 'मन्निमित्तं(त्त)कृतं पापमपि धर्माय कल्पते' என்றதுக்கும் இதுவே தாத்பர்யம். இங்ஙனல்லாதபோது अतिप्रसङ्गம் வரும். या या चेष्टा' என்று பாடமானாலும் अर्थप्राप्त-शास्त्रप्राप्तங்கள்போலே स्वभावप्राप्तங்களான

---

ப்ரமைகாந்தியினுடைய वृत्ति=செயல் या या எதெதுவோ, அதது तदर्चनम्—அந்த நாராயணனுக்கு ஆராதநமே யாகும். மேல்வாக்யங்களில் தச்சப்தம் போலே இங்கும் தச்சப்தத்தைத் தனியாகப் பிரிக்கலாம். இரண்டு யச்சப்தத்திற்கு ஒரு தச்சப்தம் போது மென்று தர்க்கசாஸ்த்ரத்தில் உதாஹரண வாக்யத்தில் ஸமர்த்தித்தனர். या என்பதன் பொருளானாலும் तत् என்ற நபும்ஸகம் அர்ச்சநமென்கிற விதேயத்தை ப்ரதாநமாக்கி வந்ததாம். அவன் செயலெல்லாம் பகவதாராதநமென்றால் நிஷித்தகர்மாசரணங் கூட ஆராதநமென்றதாகும். வ்ருத்தியாவது ஜீவநார்த்தமான செயல். சாஸ்த்ர ஸம்மதமாகாத செயலைக் கொண்டால் அது அர்ச்சநமாகாது. அத்தகையசெயல் அநேகமாக ப்ரபந்நன் இசையான் என்ற காரணத்தினாலே या या என்றது. ஆக भागवतैकान्तियானவன் முக்யவ்ருத்தியைக் கொண்டு ஜீவிக்கமாட்டாமல் ஆபத்காலங்களில் கீழ்வர்ணச் செயலையும் ஜீவிகையாகக் கொள்ளலாமென்ற சாஸ்த்ரப்படி அதைக் கொண்டால் அதை சாஸ்த்ர பலத்தாலே பகவதாராதநமாக அவன் செய்வானென்பது முதல் अंशத்தின் பொருள், 'मन्निमित्त—என்று என்னுடைய ஆராதநம் காரணமாகச் செய்யும் பாபமும் தர்மமாகுமென்றானே யென்னில்—அதற்கும் அநாபத்தில் பாபமான கீழ்வர்ணவ்ருத்தியும் ஆபத்தில் தர்மமாகுமென்றேபொருள். இங்ஙனல்லாதபோது எல்லாச் செயலையும் பொருளாகக் கொண்டால் स्वर्णस्तेय-सुरापानादिகளும் தர்மமாம். அப்போது नाविरतो दुश्चरितात् இத்யாதிவாக்யங்களும். तद्भाष्यादिகளும் விடப்படுமென்ற அதிப்ரஸங்கமுமாம். वृत्तिः என்கிற பாடத்தில் ஜீவிகா வ்ருத்தி என்று பொருள் கொண்டாலும் चेष्टा என்கிற பாடததில் அதை மட்டும் சொல்லவாகாதே என்ன, அப்போதும் நிஷித்த வ்யாபாரம் நீங்கலாக மற்ற வ்யாபாரத்தையே கொள்ளவேண்டுமென்கிறார் यायेति. எல்லாம் அர்ச்சநமாகுமோ வென்னில்—तत् कुरुष्व मदर्पणम्' என்று எதற்கு ஸாத்விக த்யாகமுள்ளதோ, அதெல்லாம் அர்ச்சநமாகலாம், எம்பெருமான் நிஷேதித்திருக்க க்ஷுத்ரமான தாத்காலிக பலத்தில் நசையாலே தான் செய்யும் நிஷித்த வ்யாபாரத்தை, 'எம்பெருமான் தனக்காகவே தான் செய்து கொள்ளுகிறான்' என்று சொல்லவாகாதாகையால் நிஷித்தகிற்கு ஸாத்துவிக த்யாகம் சேராது. यत् करोषि என்பதும் அதனாலேயே நிஷித்த வ்யாபாரமாகாது. அர்த்தப்ராப்தமாவது—अर्थात्—आक्षेपात्= அதில்லாமல் இருக்கமுடியாததாலே செய்ய நேரும் தேஹயாத்ரைக்கான லௌகிகவ்யாபாரம், சாஸ்த்ர ப்ராப்தம்—நித்யம் நைமித்திகமென்ற கர்ம. ஸ்பாவப்ராப்தம்—கன்

**निमेषोन्मेषादि**களும் ஸமர்ப்பணீயங்களாக **रहस्यशास्त्रसिद्ध**மாகையாலே(அவையும்?) **तदर्चन**மென்னலாம். இது **निषिद्ध**த்தில் **प्रसङ्गि**யாது. **प्रतिषिद्ध**மல்லாத **स्वभाव-अर्थ-शास्त्रप्राप्त**ங்களிறே ஸமர்ப்பணீயங்களாக ஓதப்பட்டது. இதின் **उपबृंहण**மான '**यत् करोषि यदश्नासि**' என்கிற ச்லோகத்துக்கும் இப்படி **शास्त्रविरोध**மில்லாத விஷயத்திலே தாத்பர்யம். இவற்றில் **शास्त्रविरुद्ध**ங்கள் வந்தால் **अधिकारानुरूप**மான **नैमित्तिक**ம் **निग्रहशमन**மான கைங்கர்யம் (கார்யம்).

'**यो यो जल्पः स स जपः**' என்றதுவும்,

'पारुष्यमतिवादश्च (मनृतश्चैव) पैशुनं चैव सर्वशः । अनिबद्धप्रलापश्च वाङ्मयं स्याच्चतुर्विधम् ॥'

என்று **शास्त्रप्रतिषिद्ध**மான **वृथाजल्प**த்தைச் சொன்னபடியன்று; **तत्त्वहितविषय**மாக **शिष्य-गुरु-सब्रह्मचारि-शिष्ट-श्रेयोर्थि**களோடே **अज्ञातज्ञापनार्थ**மாகவும், **ज्ञातस्थिरीकरणार्थ**மாகவும், **संशयनिराकरणार्थ**மாகவும் பண்ணும் **उक्तिप्रत्युक्तिपरम्परै**களைச் சொல்லுகிறது. '**न विगृह्य कथां कुर्यात्**' என்று **सामान्येन** சொல்லச்செய்தேயும் '**यथाशक्ति निगृह्णीयात् देवतागुरुनिन्दकान्**' என்று விசேஷித்து **धर्मशास्त्रसिद्ध**மாகையாலே **बाह्यकुदृष्टि**

---

மூடுவது திறப்பது போன்றவை. ப்ராயச்சித்தமும் கைங்கர்யமாகுமென்கிருர் இவற்றில் இதி. நிக்ரஹசமநமான என்றதால் வேறு ப்ரயோஜநத்திற்கான கார்யம் செய்யத் தகாதாகிலும் பகவத் ப்ரீதிக்காகக் கார்யம் செய்வது யுக்தமாகையால் இநநைமித்திகம் இதரகாம்யகர்மங்கள் போலாகாதென்றறிவித்ததாம். கைங்கர்ய மென்றவிடத்தில் கார்யமென்றும் பாடம். கைங்கர்யமென்ற பாடம் உரையில் ஸம்மதமே. ஜல்பமாவது—**सदस**த்தான பேச்சு என்று முதல்வ்யாக்யாநம். **वाद**ம் **जल्प**ம் **वितण्डै** என்கிற மூன்றுவித சர்ச்சைகளில் இரண்டாவதென்று இரண்டாம் வ்யாக்யாநம். **पारुष्यम्**—(மநுஸ்ம்ருதி 12-6.) க்ரூரமான பேச்சு, அதிவாதம்—இல்லாததை ஏறிட்டுப் பொய்யான பேச்சு. **पैशुन**ம்—கோட்சொல்லல். **अनिबद्धप्रलापः**—ஸம்பந்தமில்லாத வீண்பேச்சு. **सब्रह्मचारी**—சேர்ந்து படிக்கின்றவன். சிஷ்டர்—மற்றும் ஜ்ஞாநாநுஷ்டாநமுள்ள பெரியோர். **श्रेयोर्थि**கள் தனக்கு நன்மை விரும்பிய நல்லோர்; இவர்களோடுசெய்யும் ஸம்பாஷணம் ஜல்பமாம் அதற்கு மூன்று ப்ரயோஜநம் சொல்லுகிருர் **अज्ञातेति**. வாத ஜல்பவிதண்டைகளில் வாதமாவது ஸ்வபக்ஷமோ பரபக்ஷமோ எது தத்துவமோ அதை இசைவதாகச் செய்யும் சர்ச்சை; ஜல்பமாவது. தன் பக்ஷத்தை ஸ்தாபித்து ஜயிக்க வேணடுமென்று செய்யும் சர்ச்சை; விதண்டையாவது தன்பக்ஷத்தை ஸ்தாபிக்காமல் ஜயிப்பதற்காகப் பிற பக்ஷத்தை மட்டும் தூஷிப்பது இவற்றில் **वाद**மென்பது—சாஸ்த்ர ஸம்மதமானது. மேலிரண்டு சர்ச்சையும் வெற்றிக்காகச் செய்யும் சண்டை யாகையால் நிஷித்தம். மநுஸ்ம்ருதி 4-72—**विगृह्य**—சண்டையிட்டு **कथां**—கிழ்க்கூறிய கதையை **न कुर्यात्**—செய்யலாகாது. அங்கே **बहिर्माल्यं न धारयेत्। गवां च यानं पृष्ठेन सर्वथैव विगर्हितम्** என்று மேல் மூன்று பாதங்கள். ஆக இந்த ஜல்ப்பம் **नारायणैक**நிஷ்டனுக்குத் தகுமோ வென்னில்—பொதுவாக ஜல்ப்பத்திற்கு நிஷேதமிருந்தாலும், தேவதை ஆசார்யன் வேதம்

களைப்பற்ற விஜிகீஷுவாகச் சொல்லும் வாக்யாரம்பத்தை ஜலம் என்றகாகவுமாம் 'तत् ध्यानं यन्निरीक्षणम्' என்றது निषिद्धनृत्यादिदर्शनத்தைச் சொன்னபடி யன்று; கைங்கர்யார்த்தமாகப் ப்ரவர்த்திக்கும்போது இவன்கண்ணுக்கு இலக்கான பதார்த்தங்கள் எல்லாம் 'अहं हरिः सर्वमिदं जनार्दनः' இத்யாதிகளிற்படியே 'நிற்கின்ற தெல்லாம் நெடுமால்' என்று ப்ரஹ்மாத்மகமாய்த் தோன்றும் ப்ரகாரத்தைச் சொன்னபடி.

'तत्पादाम्बवतुलं तीर्थम्' என்றதுவும் प्राप्त விஷயத்திலே गुणाधिक्यம் சொல்லு

---

என்ற விஷயங்களை நிந்திக்கிறவர்களைத் தன் சக்திக்குத் தக்கவாறு நிக்ரஹம் செய்யலாமென்றிருப்பதால். நிந்திக்கிற வேதபாஹ்யர்களோடு வேதார்த்த ஸ்தாபநத்திற்சாக ஜல்பம் செய்யலாமாகையால் அதை இங்கும் கொள்வது. இதுவாகாத போது कर्णौ तत्र पिधातव्यौ गन्तव्यं वा ततोऽन्यतः (பழிப்பது கேட்காதபடி காதை மூடிக்கொள்வது; வேறிடமாவது செல்வது) என்பதாம். விஜிகீஷுவாக = ஜயிக்கவிரும்பினவனுகி.

तत् ध्यानमिति. இவன் பார்வையெல்லாம் பகவத்த்யாநமென்று இதன் பொருள். இதில் நிஷித்தவஸ்துவின் பார்வையைக் கூட்டக் கூடாதென்கிறார் निषिद्धेति. நிஷித்தமாகாத பார்வை யெல்லாம் கொண்டாலும் வெளி வஸ்துவின் பார்வை யெல்லாம் பகவத்த்யாநமாகுமோ வென்ன, ஆகுமென்கிறார் अहमिति. நாராயணைகநிஷ்டன் எந்த வஸ்துவைக் கண்டாலும் இதன் உள்ளே நாராயணன் இருக்கிறனென்ற எண்ணத்துடன் காண்கிறன். ஆக दृढ ஸம்ஸ்காரத்தாலே நாராயணனையும் விஷயமாக்கிக் கொண்டிருப்பதால் வெளிவஸ்துவின் दर्शनமெல்லாம் நாராயணும்சத்திலே ஸ்ம்ருதி ஸந்ததியாம் த்யாநமாகும். अहमिति. வி. பு.-1-22 87. 'नान्यत् ततः कारणकार्यजातम्। ईदृङ् मनो यस्य न तस्य भूयो भवोद्भवाः द्वन्द्वगता भवन्ति' 'எனக்கு அந்தர்யாமி ஹரி, இங்கு எல்லாவற்றிற்கும் அந்தர்யாமி அவனே; அவனின்றி காரணமோ கார்யமோ வேறில்லை. இப்படி எவனுக்கு மனனம் (எண்ணம்) உளதோ, அவனுக்கு மீண்டும் ராகத்வேஷம் ஸுகதுக்க மென்கிற द्वन्द्वங்கள் வாரா என்றதாம். நிற்கின்றது, இது நான்முகன் திரு 54. தேவரா யென்று பாட்டாரம்பம். பல வஸ்துக்களாய் நிற்கின்ற எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாவான் நெடுமாலென்றபடி. நிஷித்தமான நாட்யாதிகளுடைய दर्शनமும் இப்படி அந்தர்யாமியின் ஸ்மரணத்தோடு கலந்தால் அதையும் கொண்டாலென்னவெனில், எம்பெருமானை மறந்து நாட்யாதிகளில் போச்ய மென்கிற புத்தியுடன் दर्शनம் நேர்ந்தால் அதையே சேர்க்கவேண்டாவென்கிறோம். இந்த முதல்ச்லோகம் ஏகாந்தியினுடைய கரணத்ரயவ்யாபாரம் எதுவும் அவனுக்கு நன்மைக்கான அர்ச்சந.ஜப.த்யாந ரூபமாகிறதென்றது; மேல்ச்லோகம் அவனுக்கு ஸம்பந்தப்பட்டவை யெல்லாம் பிறருடைய நன்மைக்காகுமென்கிறது.

तत्पादेति. அவனுடைய திருவடி பட்டால் அசுத்தஜலமெல்லாம் சுத்த

கிறது. **पादोदकम्** **तीर्थ**மாகச் சொன்ன விஷயத்தில் **नारायणैकनिष्ठत्व**முண்டா யிற்றுகில், அது **सर्वाधिकतीर्थ**மென்றபடி அல்லது **भागवत**னுடைய **पाद**த்திலே **यादृच्छिक**மாகப் பட்ட **निर्माल्यजलादि**களும் **अतुल**மான **तीर्थ**மென்ற படியன்று

'**तदुच्छिष्टं सुपावनम्**' என்றதுவும் **पुनरुपनयनादिप्रकरण**ங்களிலே **पावन**மாக **शास्त्रप्राप्त**மான **उच्छिष्टविशेष**த்துக்கு இக் **गुणविशेष**மடியாகப் **पावनत्वातिशयम्**

---

ஜலமாகுமென்பதல்ல; ஆனல் எல்லா ப்ராஹ்மணருடைய **पादतीर्थ**மும் **ग्राह्य**மாக விருக்க, இவனுக்கென்ன விசேஷமென்னில்—மற்ற ப்ராஹ்மணனைவிட இவனுக்கு குணுதிக்யமிருப்பதால் இவனது திருவடிதீர்தத்திற்கு குணுதிக்யம். இது இங்கே **अतुलं, सु, अग्र्यं, अखिलं** என்கிற விசேஷணங்களால் தெரிகிறது. இதைத தாத்பர்யசந்த்ரிகையிலும் காண்க. **நிர்மால்யமாவது**—தேவதாந்தரத்திற்கு அர்ப்பணம் செய்யப்பட்ட வஸ்து.

**तदुच्छिष्टम्**= அவன் புசித்தது போக மிகுந்தது. **उच्छिष्ट** சப்தத்திற்கு அவனுடைய போஜநபாத்ரத்தில் மிகுதியானதென்கிற பொருள் ப்ரஸித்தமாகும். அவனுக்கு அர்ப்பித்தது போக **पूजापात्र**த்தில் மிகுதியானதென்கிற பொருளும் கொள்ளலாம். இரண்டாவது பொருளில் சர்ச்சை யில்லையென்னப் போகிருர். முதற்பொருளானல் **तत्** என்று சொல்லப்பட்ட நாராயண நிஷ்டன். ஆசார்யனுக விருக்கவேண்டுமென்று இங்கே சொல்லப் படுகிறது. **उच्छिष्टमगुरोरपि** என்று மேலே வாக்ய மெடுக்கப்போகிருர். குரு நீங்கலாக மற்ற உச்சிஷ்டத்தை உண்டால் ப்ராயச்சித்தம் விதித்திருப்பதே அதற்குக் காரணம். இந்த **गुरु** என்ற சொல்லுக்கு '**उपनीय तु यः शिष्यं वेदम् अध्यापयेत् द्विजः। सकल्पं सरहस्यं च तमाचार्यं प्रचक्षते**' என்றபடி உபநயந அத்யாபந-கர்மாநுஷ்டாந சிக்ஷண. வேதாந்தார்த்த **बोधन**ங்களெல்லாம் செய்தவனே ஆசார்யன் என்ற அர்த்தத்தைக் கொள்வது. அவருடையதே போஜந பாத்ர சேஷம் கொள்ளத்தக்கது, **மற்றவருடையதல்ல** என்றும். பிதா, ஜ்யேஷ்ட ப்ராதா, ஸ்த்ரீயின்பதி என்றவரின் உச்சிஷ்டமும் கொள்ளலாமென்றும் **தாத்பர்யசந்த்ரிகையில்** உள்ளது. இதன் மேல் **रहस्यशास्त्रार्थ**மான மோக்ஷ வித்யோபதேசம் வேதமூலமாகச் செய்கின்றவரும் ஆசார்யரென்பதையும் **वचनबल**த்தால் ஸ்வீகரிக்க வேண்டுமென்ருர் அங்கு. இங்கு ஸார ப்ரகாசிகையில் '**योऽसौ मन्त्रवरं प्रादात् संसारोच्छेदसाधनम्। प्रतीच्छेत् गुरुवर्यस्य तस्योच्छिष्टं सुपावनम्॥' गुरोः स्वस्य यदुच्छिष्टं भोज्यं तत् पुत्रशिष्ययोः**' என்ற வசநமுள்ளது. ஸாரஸங்க்ரஹத்தில் '**साक्षात् मुक्तेरुपायान् यो विद्याभेदान् उपादिशत्। कथ्यते मोक्षशास्त्रेषु स तु श्रेष्ठतमो गुरुः॥**' என்ற ஸ்ரீஸூக்தியை யுதாஹரித்து **भर**ஸமர்ப்பணம் செய்தவன் ஆசார்யனென்று சொல்லப்பட்டது.

இந்த உச்சிஷ்டங்களெல்லாம் **ग्राह्य**மானலும் **तदुच्छिष्टं सुपावन**மென்கிற ப்ரக்ருதவாக்யத்தில் கொள்ளவேண்டியதை யருளிச்செய்கிருர் **पुनरुपनयनेति** **गुरूच्छिष्ट**ம் போலே பித்ராதிகளின் உச்சிஷ்டமும் கொண்டதால் உச்சிஷ்டதோஷமில்லையென்பதுமட்டுமா, அவை பரிசுத்தியையளிக்குமென்பதுமா என்பதை

சொன்னபடி. மற்றும் शिष्यपुत्रादिகளுக்கு नाराषणैकनिष्ठत्वமுண்டானால் आचार्यादिகளுக்கும் அவர்களுடைய उच्छिष्टம் सुपावनமென்றபடி யன்று.

'निर्माल्यं भक्षयित्वैवमुच्छिष्टमगुरोरपि । मासं पयोव्रतो भूत्वा जपन् अष्टाक्षरं सदा ॥ ब्रह्मकूर्चं ततः पीत्वा पूतो भवति मानवः' என்று भगवद्धर्मनिष्ठனுக்கு समयाचारம் சொல்லுகிற सनत्कुमारसंहितावचनத்தை आगमप्रामाण्यத்திலே ஆளவந்தார் उदाहरित्தருளினார். ஆகையாலே 'போனகஞ் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே', என்றதுவும் गुरुविषयமாமித்தனை. பொதுவானாலும் भगवत्संकीर्तनपरர் देशकालादिवैगुण्यத்தாலே ऊनवृत्तिகளுமாய் ऊनकारकர்களுமாய் இருந்தார்களேயாகிலும் தாங்கள் அமுதுசெய்த சேடம் தருவராகில் புனிதமாமென்றதித்தனை.

---

வசநத்தைக்கொண்டு நிர்ணயிக்க வேண்டும். உபநயநம் முதற்கொண்டு எல்லாம் அருளின ஆசார்யனின் உச்சிஷ்டம் பாவநமென்று எங்கே தெரிகிறதென்ன, அதற்காக புநருபநயந ப்ரகரணத்தை யெடுத்தது. இதன் விவரணம் ஸாரப்ரகாசிகையில். वैखानस—बोधायनीयादिகளில் புநருபநயந விதியைச் சொல்லி 'गुरोरुच्छिष्टं वा भुञ्जीत; ततः पूतो भवति என்று குருச்சிஷ்டம் பரிசுத்தியைத் தருமென்றதென்றார். ஸமயம் =கொள்கை. இப்படி பரிசுத்தியைச் செய்யக்கூடுமதாக வேற்பட்ட உச்சிஷ்டம் யாருடையதோ அந்த குரு நாராயணமாத்ர நிஷ்ட்டனாகாமலிருந்தாலும் பரிசுத்தி யுண்டு. பரமைகாந்தியான போது அதிக பரிசுத்தி யென்று ப்ரக்ருதத்தில் சொல்லப்படுகிறது. 'मासं पयोव्रतः' ஒருமாத காலம் பால் மட்டும் பருகுகின்றவனாய்; போனகம் இதி திருமாலை41-வானுளார் அறியலாகா என்ற பாசுரத்தின் ஈடையடி. இப்பாட்டு கீதை 17.10. उच्छिष्टमपि च என்றவிடத்தில் தாத்பர்யசந்த்ரிகையில் ஸம்ஸ்க்ருதச்லோகமாக அநுவதிக்கப்பட்டது. பகவானைத் திருநாமங்கொண்டு அனுபவிப்பவர் முக்ய ஜீவிகாவ்ருத்தியன்றி ஈனமான வ்ருத்தியிலிருப்பவரானாலும் பிறருக்கும் ஊந வ்ருத்தியையே செய்விக்கின்ற வரானாலும் அந்த வ்ருத்தி மூலமாகத் தாம் புசித்த சேஷத்தைத் தருவராகில் அது பரிசுத்தியளிக்குமென்று பாசுரத்தின் பொருள், புனிதமன்றே என்பதற்கு பரிசுத்திகரமாகிறதன்றோ என்ற பொருள் தாத்பர்யசந்த்ரிகாச்லோகத்திலிருந்து தெரிகிறது. அன்றே— அப்பொழுதே பரிசுத்திகரம் என்றும் உரைப்பர். அதிலும் ச்லோக விரோதமில்லை, இப்பாட்டில் ஸர்வபாகவத உச்சிஷ்டமும் கொள்ளப்பட்டதே யென்று ஆக்ஷேபம். இங்கே ஊநவ்ருத்தியாயிருப்பவர் ஊநகாரகராயிருப்பவர் என்றதும் அப்படிப்பட்ட ஆசார்யரையே; மற்றவருடைய உச்சிஷ்டத்திற்கு தோஷமுண்டாதலின் என்று முதல் நிர்வாஹம், இங்கே பாகவதர்கள் இல்லத்தில் தாங்கள் புசித்தபிறகு சிலர் புசிக்கவந்தால் அவர்களுக்குத் தாங்கள் புசித்தசேஷமாய்ப் பாகபாத்ரத்தி லிருப்பதைத் தரலாகாதென்று அஞ்சி வேறு அன்னம்செய்து அளிப்பார். அவ்வாறின்றி சேஷத்தையே மனம்வந்து தருவராகில் அது நமக்குப் பரிசுத்தி தருமென்றுபொருள்கொள்ளுவதானால் குருவைப்போல் மற்ற பாகவதரையும் கொள்ளலாம். பாட்டில்

இதில் शेषशब्दம் 'अन्नशेषः किं क्रियताम्? इष्टैः सह भुज्यताम्' इत्यादिகளில்ந்யாயத்தாலே भाण्डस्थविषयமாகில் விரோதமில்லை. उच्छिष्टशब्दந்தானும் श्रुत्यादिகளிலே भुक्तशिष्टமாய்ப் पाकपात्रस्थமானதிலும் प्रयुक्तம்.

'परित्यजेदर्थकामौ यौ स्यातां धर्मवर्जितौ । धर्मं चाप्यसुखोदर्कं लोकसंक्रुष्टमेव च ॥'

என்று मन्वादिகள் व्यवस्थै பண்ணினார்கள்.

'तदुक्तिमात्रं मन्त्राग्र्यम्' என்றது இவன் தஞ்சமாக उपदेशिக்க भाषावाक्यங்களும் திருமந்த்ரம்போலே ஆதரிக்கது अनुसन्धिக்கவேணுமென்றபடி அல்லது. இவன் சொல்லும் लौकिकव्यवहारங்கள் जपादियोग्यங்களென்றபடியன்று. 'சொல்லு

---

சேஷசப்தம் பாகபாத்ரத்திலுள்ளதையும் சொல்லுமென்பதை உதாஹரண பூர்வமும் அறிவிக்கிறார் இதில் இதி. 'अन्नशेषः किं क्रियताम्' என்று ச்ராத்தத்தில் நிமந்த்ரணம் செய்யப்பட்ட ப்ராஹ்மணர்கள் புசித்தபிறகு ச்ராத்த கர்த்தா தெரிய விரும்பிக்கேட்பது-சமையலறையில் பாண்டத்தில் மீதிருந்திருப்பதை என்ன செய்வதென்று. அவர்களுடைய மறுமாற்றம் 'इष्टैः सह भुज्यताम्' என்று; இஷ்டர்களுடன் சேர்ந்து உண்பீராக என்றபடி. சேஷசப்தமுள்ள விடத்தில் அப் பொருளானாலும் ப்ரக்ருதத்தில் உச்சிஷ்ட சப்தத்திற்கு भाण्डத்திலிருப்பது பொருளாகுமோ என்ன, இதற்கும் அவ்வாறு ப்ரயோகமிருக்கிறதென்கிறார் उच्छिष्टेति. இதற்குத தாத்பர்யசந்த்ரிகையில் வேதவாக்யம் எடுக்கப்பட்டுள்ளது 'अदितिः पुत्रकामा साध्येभ्यो देवेभ्यः ब्रह्मौदनं अपचत्। तस्या उच्छेषणं अददुः, सा रेतोऽधत्त. என்றவிடத்தில் உச்சேஷண சப்தமுளதே.

இப்படி பாவநமாக ப்ரமாணஸித்தமான உச்சிஷ்டம் பரமைகாந்தியினுடையதானால் அதிக பரிசுத்திகரமென்று விசேஷவிதியில் தாத்பர்யம் சொல்லப்பட்டது. அப்படி ஸங்கோசப்படுத்தாமல் இந்த வாக்யத்திற்கே ஸர்வபாகவத ஸர்வவித உச்சிஷ்டமும் ஸம்பூர்ண சுத்திகரமென்றே பொருளாகச் சொல்வது தகாதென்கிறார் பரித்யாஜ்யயால். 'தர்மஸம்பந்தமில்லாமல் கேவல அர்த்தமும் கேவலகாமமுமானதை விடவேண்டும். லோகஸம்மதியில்லாத தர்மத்தையும் துக்கத்தையே பின்னே டளிக்குமென்று விடுவதாம்' என்று மநுஸ்ம்ருதியில் 4. 176. சொல்லியிருப்பதால், இது தான் சாஸ்த்ரார்த்தமென்று நிச்சயமிருந்தாலும் லோகஸம்மதி யிராதபோது விடவேண்டுமென்று தெரிவதால் லோகவிரோதமிராதபடி நிர்வஹிக்கக்கூடிய வாக்யத்தில் விருத்தமான அர்த்தத்தை ஸ்த்தாபிப்பது தகாதென்று கருத்து. ஆகையால் விவாதாஸ்பதமான உச்சிஷ்ட போஜநத்தை இதைக் கொண்டு ஸ்த்தாபிக்கலாகாதென்றதாம்.

तदुक्तिमात्रमिति. मात्रபதத்திற்கு எல்லாமென்று பொருள். ஏகாந்தியின்சொல்லெல்லாம் மந்த்ர ச்ரேஷ்டமாகும்; திருமந்த்ரம் போல்ஆதரிக்கப்படும். இங்குச் சொல்லெல்லாம் என்பதற்கு ரக்ஷையாக உபதேசிக்கப்படும் வாக்யம் எந்த பாஷையாயிருந்தாலும் என்று பொருள். தஞ்சமென்பதற்கு ரக்ஷை என்பது பொருள். லௌகிககார்யத்திற்கான வ்யவஹாரங்களும் மந்த்ரங்கள்போலாகு

மவிடு சுருதியாம்'' என்றதுக்கும் இப்படி हितार्थமான வாக்யமே விஷயம்

'तत्स्पृष्टमखिलं शुचि' என்றது आतुरविषयத்தில் स्पृष्ट्वास्नानம்போலவும், दीक्षाकालத்தில் विष्णुहस्तप्रदानाख्यस्पर्शம்போலவும், திருப்रतिष्ठैயில் महाभागवतस्पर्शம் போலவும் மற்றும் ஸ்பர்சம் விஹிதமான இடங்களிலே இவனுடைய ஸ்பர்சம் பெற்றதாகில் स्पृष्टமானவையெல்லாம் परिशुद्धமாமென்றபடி அல்லது 'उदुम्बरं न

---

மென்பதில்லை. ஜ்ஞாநஸாரக்ரந்தத்தில் அவிடு என்ற சொல்லால் பரிஹாஸ வார்த்தையும் வேதத்திற்கு ஸமமென்று சொல்லியிருக்கிறதே யென்னில்— அதுவும், பரிஹாஸோக்தியானாலும் கேட்பவனுடைய ஹிதத்திற்காகச் சொல்லப்பட்டிருந்தால் அதை விச்வாஸத்தோடு கேட்பவன் ஆதரித்தால் பலனுண் டென்றதாம். मन्त्रमयं என்ற अव्ययपदத்தினாலே பொதுவாகப் பெரியோர் சொல் எதுவும் மந்த்ரமாகலாம்; நாராயணைகநிஷ்டன் சொன்னால் சிறந்த மந்த்ரமாகு மென்றபடி.

तत्स्पृष्टं—அவனால் தொடப்பட்டது. अखिलं शुचि—குறைவிராதபடி பூர்ண மாக சுத்தமாகும். தொடுகிறவன் நாராயணைகநிஷ்டனாகில் शुद्धिபூர்த்தி. சுத்திக்காக ஸ்பர்சம் எங்கே விதிக்கப்பட்டிருக்கிறதோ அங்கே இவன்ஸ்பர் சத்தால் விசேஷசுத்தி யென்றபடி. ஸ்பர்சவிதிக்குப் பல உதாஹரணங்கள் காட்டுகிறார் आतुरेति. ஸ்நாநம் பண்ணவாகாதவனுக்கு ஸ்நாநத்தினால் வரும் சுத்தியை யுண்டுபண்ணுவதற்கு வேறொருவன் ஸ்நாநம் செய்வதும் இவனைத் தொடுவதுமாகப் பத்து ஆவருத்தி செய்தால் இவன் சுத்தனாயி டுவானென்கிறது. 'आतुरस्नान उत्पन्ने दशकृत्वो ह्यनातुरः । स्नात्वास्नात्वा स्पृशदेनं ततः शुद्ध्येत् स आतुरः ॥'. 'आतुरा चेत् ऋतुमती सूतिका वा तथाविधा । स्पृष्ट्वा तां अपरा स्नायात् द्वात्रिंशद्वारमेव वा என்று. ரஜஸ்வலையோ ப்ரஸவித்தவளோ இவர்கள் விஷயத்தில் முப்பத்திரண்டு தரம் தொட்டு ஸ்நாநத்தைச் சொல்லிற்று. ரஜஸ்வலை ஜ்வரத்துடனிருந்தால் பத்துபன்னிரண்டாவ்ருத்தி போது மென் றது. இத்தகைய விடங்களில் தொடுகிற வ்யக்தி நாராயணைகநிஷ்டையா னால் அதிக பலன். दीक्षेति. பாஞ்சராத்ரதீக்ஷையில் மந்த்ரம் உபதேசிக்கும் ஆசார்யன் சிஷ்யனுடைய சரீரத்தைத் தன் கையினால் தடவ விதித்தது அதற்கு விஷ்ணுஹஸ்தப்ரதாநமென்று பெயர். அவ்வாசார்யன் பரமை காந்தியாயிருந்தால் விசேஷம். "करेण संस्पृशेत् गात्रं मन्त्रवित् भावयेत यत् । एषा सा सर्वमन्त्राणां दीक्षेत्याह मुनिः स्वयम् ॥'' 'என்றதே. திருப்ரதிஷ்டையில் இதி. அர்ச்சாமூர்த்தி ப்ரதிஷ்டையில் जलाधिवासादि ஸம்ஸ்காரங்கள்சொல்லப்பட்ட வை க்ரமப்படி நடந்தாலும் நன்றாக நடத்தப்படவில்லை யென்று தோன்றி னாலும் மஹாபாகவதரொருவரை மூர்த்தியைத் தொடும்படி ப்ரார்த்திக்க வேண்டும்; அது பூர்ணப்ரதிஷ்டை ; 'अधिवासादिकं कर्म यथावत् चतुर्लक्षणः । महाभागवतस्पर्शं एकं वा कारयेत् सुधीः ॥' என்றதே. உத்தரஸாராஸ்வாதிநி அருளிச்செய்த திருக்குடந்தைதேசிகனின் ஸ்பர்சத்தை ஆறுவாமுத ஆழ் வானுக்கு ஒரு ஸமயம் ப்ரதிஷ்டாகாலத்தில் பாகவதர்கள் ப்ரார்த்தித்து

खादेत्तु', 'कालिङ्गोदुम्बरालाबुबिम्बानि परिवर्जयेत् । तान्यश्नतस्तु सततं नित्यं दूरतरो हरिः ॥
वृन्ताककतकालिङ्गबिल्वोदुम्बरभिस्सटाः । यो भक्षयति संमोहाद् तस्य दूरतरो हरिः ॥
कालिङ्गीं क्षुद्रवार्ताकं दग्धान्नं मौसलीं तथा । तुम्बिकाफलमश्नीयात् तस्य दूरतरो हरिः ॥
योऽत्ति वार्ताककालिङ्गमसूरबिसकान्यपि । अन्त(न्त्य)काले जगन्नाथं गोविन्दं न स्मरिष्यति ॥',
'तुम्बं कोशातकं चैव पलाण्डुं ग्रञ्जनं तथा । छत्राकं विड्वराहं च भुक्त्वा चान्द्रायणं चरेत् ॥',
'नाळिकाचणछत्राककुसुम्भालाबुविड्भवान् । कुम्भीकञ्चुकवृन्ताककोविदारांश्च वर्जयेत् ॥'
क्षीरं लवणसंमिश्रमुच्छिष्टेऽपि च यद् घृतम् । पानं रजकतीर्थे च सुरापानसमं विदुः ॥',
'आरनाळं न सेवेत कदाचिद्भगवत्परः । सुराकल्पं हि तद् ज्ञेयं तस्माद् यत्नेन वर्जयेत् ॥',

---

நடத்திக் கொண்டார்களென்பது ப்ரஸித்தம். இப்படி விசேஷ விஷயமாகச் சொல்லாமல் பாகவதன் எதைத் தொட்டாலும் அது சாஸ்த்ரஸம்மதமான உயர்ந்த வஸ்து போல் போஜநாதிகளுக்கு ஆகுமென்று கொண்டு ஸர்வவ்யவஸ்த்தையையும் மீறிசிலா நடப்பது **अलेपकमत** துல்யமாகுமென்பதை நிரூபிக்கும் வ்யாஜமாய் ஆஹாரத்தில் நிஷித்தமானவற்றையெல்லாம் உபதேசிக்கிறார் **उदुम्बरमिति. भा—अनुशासन** 161—97. அத்திக்காயை யுண்பதாகாது. **कालिङ्गेति. कालिङ्गம்**—கும்மட்டி. **अलाबु**—சுரைக்காய். **बिम्बம்**—கோவை இவைகளை விடவேண்டும். இவற்றை எப்போது முண்பவனுக்கு என்றுமே பகவான் வெகுதூரத்தி லிருப்பான். **वृन्ताकं**-வெண்கத்திரி ; **कतकம்**-தேத்தாங்கொட்டை **भिस्सटा**—காந்தல். இவற்றை ஆஸ்த்தையோடு உண்பவனுக்கும் பகவான் வெகுதூரத்தில், **क्षुद्र वार्तकम्** ; சிற்றவரை; **दग्धान्नं**—காந்தல்; **मौसली**—நிலைப் பனை ; **तुम्बिका**—சுரைக்காய், **मसूरं**—கன்று போட்டுப் பத்து நாளாகாத பசுவின்பாலைத் தோய்க்க உண்டான வஸ்து. **बिसं** தாமரைக்கிழங்கு. இவற்றை யுண்பவனுக்கு மரணகாலத்தில் எம்பெருமான் நினைவு வாராது. **तुम्बमिति.** பா ஆச்வ. 112 -44. **तुम्बம்** சுரைக்காய், (வேலங்காய்) **कोशातकं**—பீர்க்கு. **पलाण्डु**—ஈருள்ளி, **ग्रञ्जनं**-வெள்ளுள்ளி, **छत्राकं**—நாய்க்குடை. **विड्वराहम्** ஊர் பன்றிக்கிழங்கு; இவற்றைப் புசித்தால், சாந்த்ராயணவ்ரதம் அநுஷ்டிக்க வேண்டும். **नालिकेति**—தேங்காய்முளை, **शाकविशेष** மென்றும் கூறுவர். **चणं**—சணைப்புக்கீரை, **कुसुम्बं**—குஸும்பை. **विड्भवं**—விஷ்டையிலுண்டானது **कुम्भी**—கூழ்; **कञ्चुकं** - குண்டு சுரைக்காய். **कोविदारம்**—கொற்றைக்கீரை **लवणसंमिश्रक्षीरं**-உப்போடு கலந்த பால். **उच्छिष्टे** சாப்பிடும் போது பாத்ரத்தில் வார்த்த **घृतं**-நெய்யும் இதையும் விடவேண்டும்; சாப்பிடத் தொடங்குவதற்குமுன்னே நெய்வார்த்திருந்தால் பிறகு வார்ப்பதில் தோஷமில்லை யென்பர். **रजकतीर्थे**—வண்ணான்துறையில் ஜலபாநத்தை கள்குடிக்கு ஸமாநமாக அறிகிறார்கள். **आरनालं**-சாண்டில்ய ஸ்ம்ருதி 2 51. பகவானிடத்தில் பற்றுடையவன் ஒருபோதும் காடியைக் கொள்ளலாகாது அது கள்ளுக்கு ஸமாநமாக அறியத்தக்கது. எளிதில் பெறும் வழக்கத்தி லிருப்பதால் ப்ரயத்நப்பட்டாவது விடவேண்டும்.

'प्रमादादपि कीलालं यः स्पृशेद् वैष्णवो नरः। उपचारशतेनापि न क्षमामि वसुन्धरे ॥',

'एकादश्यां सुरश्रेष्ठ यो भुङ्क्ते द्विजजन्मवान्। प्रतिग्रासमयं भुङ्क्ते किल्बिषं श्वानविट्समम् ॥

एकादश्यां तु यो भुङ्क्ते शक्तस्सन्निरुपद्रवः। सुरापानसमं पापं भवेत् तस्य न संशयः ॥

मद्यपानात् सुरश्रेष्ठ पातैव नरकं व्रजेत्। एकादश्यन्नकामस्तु पितृभिस्सह मज्जति ॥'

अन्नदोषात् अशमनात् नानाविषयदर्शनात्। देहशौचादिविरहात् समलं जायते मनः ॥'

आलस्यादन्नदोषाच्च मृत्युर्विप्रान् जिघांसति' इत्यादिகளாலே निषिद्धமானவை யெல்லாம் இவன் தொட்டவாறே शुद्धமாமென்றபடியன்று.

இப்படி विषयव्यवस्थै பண்ணுதபோது परिगृहीततमங்களான बहुशास्त्रங்களோடும் शिष्टानुष्ठानத்தோடும் विरोधिக்கையாலே अतिवादमात्रமாய்விடும். महाप्रभावனுன பரமைகாந்திபக்கலிலும் இச்शास्त्रीयनियमம் குலையாதென்னுமிடம்

---

प्रमादात् இதி. வராஹபுராணம், எந்த வைஷ்ணவன் ரக்தத்தைத் தொடுகிருனே, கவனமில்லாமல் தொட்டாற்கூட, பூதேவியே! நூறு உபசாரங்கள் செய்தாலும் பொறுக்கமாட்டேன் என்ருன் பகவான். एकादश्यामिति ஸாத்வதஸம்ஹிதை, இருவித பிறவியுற்றவன் எவன் ஏகாதசியில்புசிக்கிருனே அவன்கபளம் நாய் விஷ்டைக்கு ஸமமாம்; கபளந்தோறும் பாபத்தை யுண்கிருன். एकादश्यांत्विति. எவன் உபவாஸத்திற்கு சக்தியிருந்து பின்னே உபத்ரவமுமிராமலிருக்கவாவான், அவன் ஏகாதசியிலுண்கிருனகில் கள்குடியில் போல் பாபம் பெறுவான். கள்குடியால் குடித்தவனே நரகம் புகுவான்; ஏகாதசியில் அந்நம் உண்கிறவன் பித்ருக்களோடு நரகத்தில் வீழ்வான். अन्नेति ஸ்ரீரங்க மாஹாத்ம்யம், 47-10 புசிக்கும் அன்னத்தில் தோஷமிருப்பதாலும் சாந்தியில்லாமையாலும் பல விஷயங்களைக் காண்பதாலும் தேஹசுத்தி முதலானவையிராமையாலும் மனம் அழுக்குள்ளதாகிறது. आलस्यादिति. மநுஸ்ம்ருதி 5-3. 'अनभ्यासेन वेदानां आचारस्य च वर्जनात्' என்று பூர்வார்த்தம், வேதத்தை ஆவ்ருத்தி செய்யாமையாலும் ஆசாரமில்லாமையாலும் சோம்பலாலும் அந்நத்தில் தோஷத்தாலும் யமன் அந்தணர்களை அழிக்க விரும்புகிருன். இத்தகைய வாக்யங்களால் எது எது நிஷித்தமோ அதுவெல்லாம் நாராயண நிஷ்டன் தொட்டதாலேயே பரிசுத்திக்கு இடமாயிடுவதால் தோஷமேயில்லை யென்று சிலர் அதியாக ப்ரபாவத்தைச் சொல்லலாகாது. ஆகையால் எந்த ஸ்பர்சம் சுத்திக்காக விதிக்கப்பட்டிருக்கிறதோ, அது இவனதாகில் சிறப்புள்ளதென்றே பொருள் கொள்வது. இப்படி ஒவ்வொரு வாக்யத்திற்கும் விஷயसङ्कोचம் செய்து வ்யாக்யாநம் செய்யாமற் போனல் சாஸ்த்ர விரோதமும் சிஷ்டாநுஷ்டாந விரோதமுமாம்.

இனி அந்த சாஸ்த்ரங்கள் அப்ரபந்ந விஷயம். ப்ரபந்ந விஷயத்திலே सर्वधर्मान् परित्यज्य என்று தர்ம ஸ்வரூபத்யாகமே விதிக்கப்பட்டிருக்கிறது. தர்மத்தைப் போல் அதர்மத்தையும் त्यज धर्मं अधर्मं च இதியாதி ப்ரமாணங்களும் கூறுகின்றன இத்யாதியை விஸ்தரேண பரிஹரிக்கிருர் மஹாப்ரபா

नाथमुनिகள் ஆளவந்தார் எம்பெருமானருள்ளிட்ட பரமாசார்யர்களுடைய अन्तिमदिवसावधियान அநுஷ்டானங்களைக் கேட்டுத் தெளிந்துகொள்வது.

वेदवैदिकशास्त्रங்களிற் சொல்லுகிற நியமங்களை बाह्यரும் कुदृष्टिகளும் भ्रान्तियாலே விடுகிறவிடம் तामसत्यागமென்னுமிடத்தை

'नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते । मोहात् तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥'

என்கிற ச்லோகத்தாலே அருளிச்செய்தான். कुटुम्बभरणादिகளுக்கு அலந்து संन्यासादिகளைப் பற்றுவாரைப்போலே दुःखरूपங்களான प्रवृत्तिनिवृत्तिகளுக்குச் சோம்பி விடுகிறவிடம் राजसत्यागமென்னு மிடத்தை

'दुःखमित्येव यः कर्म कायक्लेशभयात् त्यजेत् । स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥'

என்று அருளிச் செய்தான். தன் अधिकारानुरूपமாகத் தவிரவேண்டுமவை தவிர்ந்து, செய்யவேண்டுமவை செய்யுமிடத்தில் நான் स्वतन्त्रனாய்ச் செய்கிறேனென்றும், எனக்கு இக் कर्मம் शेषभूतமென்றும், எனக்கு இன்ன फलத்துக்கு இதுதானே साधनமென்றும் பிறக்கும் நினைவை மாற்றி,ஸர்வேச்வரன் செய்விக்க அவனுக்குச் சேஷமான கைங்கர்யத்தை அவனுகப்பே ப்ரயோஜநமாக अनुसन्धित्து அநுஷ்டிக்கை सात्त्विकत्यागமென்னுமிடத்தை

'कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन । सङ्गं त्यक्त्वा फलञ्चैव स त्यागः सात्त्विको मतः ॥'

என்று அருளிச்செய்தான். இப் भगवत्प्रीतिप्रयोजनமாக अनुष्ठिக்கிறவிடத்திலே

---

வேத்யாதியால். நாதமுந்யாதிகள் धर्मानुष्ठानादिகளைச் செய்தது ப்ரபத்திசெய்ததற்குமுன்னமே; பிறகல்ல என்பதைப் பரிஹரிக்க அந்திம திவஸாவதியாக என்றார். 'सर्वधर्मान् परित्यज्य, என்பதற்கு ஸர்வதர்ம' ஸ்வரூபத்யாகம் பொருளென்பது எப்போதுமில்லை. யென்பதை கீதையில் கூறிய த்யாக ப்ரகாரங்களை எடுத்துக் கூறி விளக்குகிறார் वेदेति. नियतस्येति. கீதை 18-7. நித்ய நைமித்திக தர்மங்களுக்கும் த்யாகம் யுக்தமென்று விட்டால் சாஸ்த்ரார்த்த தமறியாமையால் அது தாமஸ த்யாகமாகும். சிலர் தர்மம் செய்யவேண்டியது தான்; ஆனாலும் ப்ரயாஸை யதிகமாக விருப்பதால் விடுகிறோம்; சாஸ்த்ரார்த்த ஜ்ஞாநமிராமையாலல்ல என்பர். அது ராஜஸ த்யாகமென்பாராய் அதற்கு ஓர் உதாஹரண மருளிச்செய்கிறார் कुटुम्बेति. க்ருஹஸ்தனாயிருந்தால் குடும்பபரணம் செய்யவேண்டியிருக்கிறதென்று ஒருவன் விரக்தி யிராமல் ஸந்யாஸம் செய்துகொண்டால் அதுவே ராஜஸ த்யாகமாகிற போது க்ருஹஸ்தனாயிருந்து அதை விட்டால் அது நல்லதாகுமோவென்றபடி. இந்த இரண்டு த்யாகங்களையும் விட்டு ஸாத்துவிக த்கயாகமே செய்யத்தக்கதென்று அதன் ஸ்வரூபத்தை விளக்குகிறார் தன் அதிகாரேதி. பக்தன் பக்திக்கு அங்கமாக தர்மங்களைச் செய்யவேண்டியிருப்பதால் அவற்றை ஸாத்துவிக த்யாகத்துடன்செய்யவேண்டும்.ப்ரபந்நனுக்குமோக்ஷபலம்ப்ரபத்தியாலேயே ஸித்தித்துவிட்டபடியால் அதற்காக தர்மாநுஷ்டாநமில்லையே, பக்தனைப் போல் அவன் எப்படி செய்வதாமென்ன அருளிச்செய்கிறார் இப் பகவத் ப்ரீதி என்று. स्वस्मै स्वप्रीतये स्वयमेव कारयति என்கிற ஆகாரம் இருவருக்கும் துல்யம்.

இப் ப்ரீதிக்கு மோக்ஷமும் ஃபலமாகக் கோலா (ரா)தே பூர்வப்ரவ்ருத்தியால் பிறந்த பரமகாருணிகப்ரஸாதத்தாலே மோக்ஷம் ஸித்தமென்று நினைத்து முக்தனுடைய கைங்கர்யம் போலவும், அரோகனுடைய பால்வார்த்துண்கைபோலவும் அநுஷ்டிக்கை ஸாத்விகத்யாகத்தின் எல்லைநிலமாகக்கடவது. இது பசித்து உண்பார்மாத்திரம்; இங்ஙனல்லாதபோது ஒட்டத்துக்கு அப்பம் தின்பார்மாத்திரம்.

---

அந்த ப்ரீதியினால் பக்திவளர்ந்து பக்தியால் மோக்ஷபலம் ஸித்திக்கிறதென்று பக்தன் நினைக்கிறான். ப்ரீதியே ப்ரயோஜநம், மோக்ஷமன்றென்று ப்ரபந்நன் நினைக்கிறான். இவன் அநுஷ்டாநத்தில்தான் ஸ்வஸ்மை ஸ்வப்ரீதயே என்றதன் அர்த்தம் புஷ்கலமாகும். ஆகையால் அது செய்யக்கூடும். அரோகனுடைய என்கிற இரண்டாவது த்ருஷ்டாந்தத்தால் பித்தரோகமுள்ளவனுக்குப்பால்கைக்கும்; போக்யமாகாது; அரோகனுயிருந்தால் போக்யதாபுத்தியோடு பால் வார்த்துண்பான். அதுபோல் ப்ரபந்நனுக்குக் கைங்கர்யத்தில் போக்யதாபுத்தி யென்றறிவித்ததாம். இது=போக்யதாபுத்தியோடு செய்வது. பசித்துண்பார் மாத்திரம்=பசியினால் ஆர்வத்தோடு புசிப்பவரின் அளவாகும். இங்ஙனல்லாத போது=போக்யதாபுத்தி யிராதபோது. ஒட்டத்துக்கு=பந்தயத்திற்கு அல்லது சபதத்திற்கு அப்பம் தின்பாரளவாகும். புசிக்க வயிற்றில்இடமிராதவனே, இப்போது இத்தனை யப்பமுண்டால்இவ்வளவுபணம்கொடுப்பேனென்று ஒருவன் சொல்ல அதைப் பெறவோ சபதத்தாலோ சிறிதும் சுவைக்காமல் அவ்வளவு அப்பத்தையும் அடைத்துண்பதற்கு ஸமானமாகும். கீழ்க்கூறிய ராஜஸதாமஸத்யாகங்களில் கர்மாநுஷ்டாநமே யில்லையே. ஸாத்விக த்யாக ஸ்தலத்தில் தானே கர்மாநுஷ்டாநம்; அது பக்தருக்கும் ப்ரபந்நருக்குமுள்ளது. அதில்ப்ரபந்நரின்அநுஷ்டாநம்பசித்துண்பதாகும்; பக்தரதுஒட்டத்துக்குண்பதாகுமென்று சொல்லவேண்டும். அது தகுமா? பக்தன் நிஜகர்மாதி भक्त्यन्तं कुर्यात् प्रीत्यैव कारितः என்றபடி 'சேஷியின் உகப்புக்காகிறது நிஜகர்ம' என்று ஸுஹ்ருத்-புத்ராதிகளின் உபலாளனம் போல் அதிக ப்ரீதியோடு அநுஷ்டாநம் செய்வதால், 'உண்ணுநாள் பசியாவதொன்றில்லை; ஓவாதே நமோநாரணவென்றுஎண்ணுநாள்இருக்கெசுச்சாமவேதநாண்மலர்கொண்டு உனபாதம் நண்ணுநாளவை தத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினிநாளே என்றபடி. பசி தீர்க்கக் கர்மாநுஷ்டாநம் இருவருக்கும் கூடுமே. மோக்ஷத்தில் நோக்கும் பக்தன் செயலிற் சேருகிறதென்றாலும் அவ்வளவைக் கொண்டு அதைக் கேவலமாக்கலாமா என்னில்—சிறிது வைஷம்யத்தையே விளக்குவதற்காக இவ்வாறு கூறியதென்னலாம். அல்லது ஸாத்துவிக த்யாகத்தோடு கர்மாநுஷ்டாநம் செய்யும்போதுகூட விசேஷ ப்ரீதி வைக்காமல் ஏதோ கடமையாகச் செய்வதும், அமுமுக்ஷுக்களாய் த்யாகமே சிறிதுமிராமல் விதிக்கு அஞ்சி நித்ய நைமித்திக கர்மாநுஷ்டாநம் செய்கிற வைதிகரின் அநுஷ்டாநமும் ஒட்டத்துக்கு உண்பதற்கு ஸமாநமென்னலாம்.

'सर्वधर्मान् परित्यज्य' என்கிறவிடத்தில் प्रथमयोजनैயில் बुद्धिविशेषरूपமான सात्त्विकत्यागம் சொல்லுகிறதென்று भाष्यकारர் அருளிச்செய்தார். இப் बुद्धि-विशेषம் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்குப் प्रपत्त्यनुष्ठानकालத்திலும் பின்பு स्वयंप्रयोजनமாய் உபாயத்தோடு துவக்கற்ற उत्तरकृत्यத்திலும் उपजीव्यம். द्वितीययोजनैயில் अल्प-शक्तियாய் विलम्बाक्षमனானவனுக்கு दुष्करமாய் चिरकालसाध्यமான उपायान्तरத்தைப் பார்த்து शोकம் பிறக்க அவனுடைய शोकापनोदनार्थமாக सुकरமாய் सकृत्कर्तव्यமுமான उपायान्तरத்தை विधिக்கதாக்கி, நீ உபாயாந்தரத்தில் அலையவேண்டா

---

இனி, 'பாஷ்யகாரர் கீதாபாஷ்யத்திலே முதல்யோஜனையில், கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களை ஸாத்துவிக த்யாகத்துடன் செய்யும்போது பகவானை உபாயமாகவும் கொள்ளவேண்டுமென்று பொருள் கூறினர். அந்த யோஜனைக்கும் ப்ரபத்திக்கும் ஸம்பந்தமில்லை யென்று தெளிவு. இரண்டாவது யோஜனையில் பக்தி விரோதிகளைப் போக்கப் பெரிய உபாயங்களைச் செய்யமுடியாதவன் அங்கப்ரபத்திகளைச் செய்யலாமென்றார். அந்த யோஜனையில் ஸ்வதந்த்ர ப்ரபத்தியை ஏன் சேர்க்கவில்லை? அதனால் அந்த ப்ரபத்தியைச்சொல்வதாகில் सर्वधर्मान् परित्यज्य என்பதற்கு நித்ய நைமித்திகாதி ஸர்வ தர்மங்களையும் விட்டு என்று பொருள் கூறவேண்டுமென்று அதைக் கூட்டவில்லை யென்று தெரிகிறது. परित्यज्य என்கிற பதத்திற்கும் இதுவே ஸ்வரஸமாகும்'—என்கிற கேள்வியில்—அங்குச் சொன்ன இரண்டு யோஜனையிலும் ஸ்வதந்த்ர ப்ரபந்நனுக்கு உபயோகப்படும் அம்சம் உண்டென்று அறிவிக்கிறார். सर्वधर्मान्—இதி. இந்த ச்லோகம் பக்தியோக ப்ரகரணத்திலிராமல் முமுக்ஷுவிஷயமாகப் பொதுவாயிருந்தால் மோக்ஷத்திற்கான கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களையும், அததற்கு ப்ரதிபந்தககர்ம ப்ராயச்சித்தங்களான गुरुपापங்களையும் ஸாத்துவிக த்யாகத்தோடு செய்யும் போது என்னை உபாயமாகவும் கொள். அததற்குத் தக்கவாறு எல்லா பாபங்களையும் போக்கிவைப்பேன் என்று முதல் யோஜனையையும், கீழ்க்கூறிய இந்த உபாயங்களையெல்லாம் செய்யமுடியவில்லையாகில் என்னிடத்திலே சரணாகதி செய்தால் அதன்மூலமே ஸர்வா நிஷ்ட நிவ்ருத்தி செய்வேன் என்று அங்கப்ரபத்திஅங்கி ப்ரபத்தி இருவிஷயமாக இரண்டாம் யோஜனையையும் அருளியிருப்பர். அவ்வாறின்றி பக்தியோக ப்ரகரணத்திலிருப்பதால் இரண்டு யோஜனையும் பக்தியோக விஷயமேயாகவேண்டுமென்றுவேறு விதம் அருளினர். இதர தர்மங்களுக்குப் போலே மோக்ஷத்திற்கான ப்ரபத்திக்கும் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் षष्ठमङ्गं समुद्दिष्टं फलेच्छा तद्विरोधिनी என்று ஸாத்துவிக த்யாகத்தை விதித்திருப்பதால் லக்ஷ்மீதந்த்ராதிகளில் ப்ரபந்நனுக்கு நித்ய கைங்கர்யங்களையும் விதித்திருப்பதால் அங்கங்கும் முதற்சொன்ன ஸாத்துவிக த்யாகரூப புத்தி ஸூசிக்கப்பட்டதாகும். இரண்டாம் யோஜனையில் உபாய விரோதி பாபநிவ்ருத்திக்காக, துஷ்கரமான பெரிய உபாயங்களைச் செய்யவாகாமல் சோகிப்பவனுக்கு லகுப்ராயச்சித்தமான ப்ரபத்தியை விதித்

என்கிறது என்று அருளிச்செய்தார். இப் प्रपत्त्यनुष्ठानத்துக்குப் पूर्वावस्थैயில் उपायान्तरानन्वयम् दैवात् आगतமாய் प्रपत्त्यधिकारத்திலே சொருகக் கடவது. उत्तरावस्थैயில் उपायान्तरानन्वयम् शास्त्रात् आगतமாய் இப் प्रपत्तियினுடைய नैरपेक्ष्यத்திலே நிற்கக்கடவது. 'परित्यज्य' என்கிறவிது अनुवादமென்பார்க்கு अधिकारம் சொல்லுகிறதென்று தாத்பர்யம்; विधियென்பார்க்கு ப்ரபத்தியாகிற உபாயத்தினுடைய नैरपेक्ष्यादिகளைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம். இப்படி 'परित्यज्य' என்கிறவிடத்தில் அதிகாரம் விவக்ஷிதமானால் 'मामेकं' என்கிற விடத்திலே नैरपेक्ष्यம் अनुसन्धिக்க प्राप्तம். 'परित्यज्य' என்று नैरपेक्ष्यம் விவக்ஷிதமானால் 'मा शुचः' என்கிற शोकनिषेधத்தாலே अकिञ्चनனாய் நிற்கிற நிலை தோற்றுகையாலே अधिकारமும் अर्थसिद्धமாகக்கடவது. அப்போது,

प्रकृतोपासनन्यायात् तदङ्गानामुपस्थितौ । अन्येषां चैतदङ्गत्वत्यागोऽत्र प्रतिपाद्यते ॥

---

தால் இதுபோல் பக்தி செய்யவாகாதவனுக்கும் ஸ்வதந்த்ர ப்ரபத்தியென்று குறித்ததாகுமென்று திருவுள்ளம்.

गुरूपायத்தில் அசக்தனாயிருக்கிறவன் அதைத் தானே விட்டிருப்பதால் அவனைப் பார்த்து பரித்யஜ்ய என்று எதற்காகச் சொல்லவேண்டுமென்னில்—அவனிடம் லகுவான ப்ரபத்தியைச் செய்வதற்கு முன்னும் பின்னும் குரூபாய த்யாகம் வேண்டும். முதலில் அதில்லையாகில் அதிகாரியாகமாட்டான். அதனால் அதை விட்டிருக்கிற நீ லகூபாயம் செய் என்று ஸ்வயமே அவனுக்குள்ள த்யாகத்தை அநுவதிக்கிறது. ப்ரபத்திக்குப் பிறகு வேறு உபாயத்திலிழிந்தானாகில் ப்ரஹ்மாஸ்த்ரமான ப்ரபத்தி விலகுமாகையால் பின்னாலே குரூபாயத்தில் நோக்கை விடு; நித்ய நைமித்திகத்தையும் அதற்காகச் செய்யாதே என்று விதிக்கவேண்டும். नैरपेक्ष्यादिகளை = நைரபேக்ஷ்ய ஸித்திக்கான விதிப்ரகாரங்களை. இப்படி பரித்யஜ்ய என்பது ஸார்த்தகமாகும். இப்படி அதிகாரம் உபாயாந்தர நைரபேக்ஷ்யம் இரண்டும் வேண்டுமானால், ஓரர்த்தத்தைச் சொல்லும் போது மற்றோர் அர்த்தம் எங்கே கிடைக்குமென்னில்-मामेकं என்கிற ஏகபதம் நைரபேக்ஷ்யத்தை யறிவிக்கும், मा शुचः என்கிற விடத்தில் சோகமானது गुरूपायம் செய்யவாகாமையைக் கண்டு வந்ததாகையால் அச் சொல்லிருந்தே இதிலதிகாரம் தோற்றும். அதனால் परित्यज्यவுக்கு அனுவாதம் விதி எனவிரண்டில் ஓரர்த்தம் கொண்டால் மற்றோர் அர்த்தத்தை அவ்விரண்டிலொன்றிலிருந்து यथार्हம் கொள்வது.

ஸ்வதந்த்ர ப்ரபத்திக்கு உபாயாந்தரநைரபேக்ஷ்யத்தை परित्यज्य என்று சொன்னதிலிருந்து உபாயாந்தரநோக்கற்றவனுள்பட ப்ரயோஜநமும் ஸித்திக்கிறதென்கிறார் அப்போது. இதி. ப்ரபத்தி பக்தியோகஸ்த்தாநத்திலாகிறபடியால் பக்தி யோகத்திற்கு அங்கங்களாக விதிக்கப்பட்ட நித்யநைமித்திக கர்மாக்களுக்கும் अन्येषां—ஸர்வகர்மஸாதாரணமாக விதிக்கப்பட்ட ஆசமநாதிகளுக்கும் (அநுஷ்டிக்கப்பட்டாலும்) அங்கத்வமில்லையென்று அறிவித்ததாம். अन्येषां என்பதற்கு 'तस्यैवं विदुषः என்று சொல்லப்பட்ட சிந்தநாதிகளுக்கும்

एकशब्दம் सात्त्विकत्यागத்தாலே தன்பக்கலில் पराधीनकर्तृत्वादिகளை विवक्षित்தல், फलोपायैक्यத்தைச் சொல்லுதல், एकமே सर्वोपायस्थानத்திலே நிற்கிற நிலையைக் காட்டுதல் செய்யக் கடவது.

ப்ரபத்திக்காக ஒன்றும் அநுஷ்டிக்க வேண்டாவாகிலும் स्वतन्त्राधिकार த்தாலே கிங்கரனை இவனுக்கு ஸ்வாமியினுடைய आज्ञातिलङ्घनம் ஆகா தென்று समर्थित்தார்கள்.

आज्ञाविरोधिभिः स्वार्हप्रायश्चित्तपराङ्मुखैः । स्वाधिकारोचितः सर्वैः प्रत्यवायो दुरत्ययः ॥

आज्ञानुपालने तत्तत्प्रत्यवायनिवारणम् । स्वामिसन्तोषतः प्रीतिरिति लाभद्वयं स्थिरम् ॥

अनिच्छातो निवर्तेत स्वर्गाद्यं कर्मणां फलम् । अमर्यादस्य दुर्वारः प्रत्यवायोऽन्यहेतुकः ॥

---

என்றும் பொருளாம். ஏகபதத்தினாலேற்படக்கூடிய நைரபேக்ஷ்யம் பரித் யஜ்ய என்றதினின்றும், அதிகாரம் मा शुचः என்றதினின்றும் கிடைப்பதாகில் ஏகமென்ற சொல் எதற்காக என்ன, அதற்கு வேறு ப்ரயோஜநம் கூறு கிறார் एकशब्दमिति. ப்ரபத்தியை நீ யநுஷ்டிப்பதால் நீயும் உபாயமென்று நினைக்காதே; ஸாத்விகத்யாகத்தை நினைத்தால் உனக்குக் கர்த்ருத்வம் ஸ்வத; இல்லை யென்று தெரியுமென்று ஒரு ப்ரயோஜனம். உபாயமும் ப்ராப்யமும் ஒன்றென்று இரண்டாவது ப்ரயோஜம். ஸர்வசப்தப்ரதியாக ஏகசப்தமா கையால் ஸர்வோபாயஸ்த்தாநத்தில் பகவானொருவன் என்று மூன்றாவது ப்ரயோஜநம். ஸ்வதந்த்ர ப்ரபத்திவிதியில் ஸர்வதர்ம ஸ்வரூப த்யாகமே பாஷ்யகாரருக்கு ஸம்மதமாகலாமென்ற சங்கை அநுசிதமென்று அறிவிக்கிறார் ப்ரபத்திக்காக இதி. ஸ்வதந்த்ராதிகாரத்தாலே =ஒன்றுக்கு அங்கமாகாத படி ஸ்வத்நத்ரமாக நித்யநைமித்திகங்களை விதிக்கும் यावज्जीवादिश्रुति बलத்தினாலே. ஆகாது தகாது. ஸ்ரீபாஷ்யகாரர்தொடங்கி பல மஹான்கள் ப்ர பந்நர்களுக்காக நித்யக்ரந்தங்களை யெழுதியிருப்பதாலும், அப்புள்ளார் முதலானவர்கள் நிதயகர்மாநுஷ்டாநத்தை விசேஷமாக ஸ்த்தாபித்தி ருப்பதாலும் இது நலறென்றதாம். அவச்யம் செய்ய வேண்டுமென்றால் அதன் பலனென்ன; செய்யாமையில் அநிஷ்டமென்ன வென்ன, நிரூபிக்கிறார் ஆஜ்ஞேதி. भगवदाज्ञையை விரோதிப்பவர்களாய் அதற்காக ஏற்பட்ட ப்ராயச் சித்தத்தில் உதாஸீநருமாயிருப்பவர் அப்ரபந்நராலும் ப்ரபந்நராலும் தக்க ப்ரத்யவாய(தோஷ)த்தைப் பெறுவார்கள். அது दुरत्ययः–மீளவாகாது. ப்ரபன்னருக்கு ப்ரத்யவாயத்திற்குப் பலனென்னவெனில்–घृणा भवन्ति இத்யாதி லகுதண்டனை. ஆஜ்ஞையைப் பரிபாலித்து வந்தால் அந்த ப்ரத்யவாயம் (நிக்ர ஹம்) உதியாது; எம்பெருமானுக்கு ஆராதநமாகச் செய்வதால் ஸ்வாமிக்கு உவப்பு எனவிரு லாபமுண்டு. யாகாதி கர்மாக்களைச் செய்தாலும் சிலர் ஸ்வர் காதி பலனைப் பெறுமலிருக்கிறார்களே; அதுபோல் ஸுராபாநாதி கர்மாவும் ஒரு ஸமயம் சிலர்விஷயத்தில் பலனளிக்காமல்தானிருக்கட்டுமே யென்னில் அருளிச்செய்கிறார் अनिच्छात इति. இச்சையிராமற் போனால் !ஸ்வர்காதி

இப் ப்ரபத்தியை **भक्तियोगाङ्ग**மாக அருளிச்செய்தது ப்ரபத்தி **सफलफल-साधन**மானபடியைப் **प्रकृत**மான **भक्तियोग**மாகிற **फल**த்திலே **उदाहरि**த்தபடி. இங்கு **द्वितीययोजनै**யில் **दुष्कर**ங்களான **भक्तियोगपर्यन्तोपाय**ங்களினுடைய **स्थान**த்திலே நிற்கிற **उपायविशेष**மும், **प्रथमयोजनै**யில் **बुद्धिविशेषपूर्वक**மான **प्रपत्त्यनुष्ठान**மும் **कृतोपाय**னுடைய **स्वयंप्रयोजन**மான கைங்கர்யமும் **अनुसन्धेय**ம்.

किंच—सुदुष्करेण शोचेत् यो येन येनेष्टहेतुना। स स तस्याहमेवेति चरमश्लोकसंग्रहः ॥

भावाभावौ न धर्माणां प्रपत्तेरङ्गमिष्यते । स्वतन्त्रशिष्ट्या शवयेहा; शेषाभावोऽधिकारगः ॥

---

பலன் வாராது. **यजेत स्वर्गकामः** என்று ஸ்வர்கேச்சையைக் காரணமாக்கி அது விதிக்கப்பட்டதே, அங்குப் பலத்திற்கு ஸ்வர்கேச்சை காரணம். நிஷேத விதிவாக்யத்திலே பொதுவாக வர்ணாச்ரமங்களைக் குறிப்பிட்டிருப்பதால் அந்த ஸம்பந்தமே அந்தப் பலனுக்குக் காரணமாகும். நித்யகர்மாவை அநுஷ்டிக்காதவன் உபநீத ப்ராஹ்மணனாயிருப்பின், கள் குடிப்பவன் ப்ராஹ்மணனாயிருப்பின் அச்சேர்த்தி காரணமாக ப்ரத்யவாயம் வரும், இப்ரத்யவாயத்திற்கஞ்சி நித்யகர்மாவை இது கடமையென்று செய்கிறவர்கள் ஒட்டத்திற்கு அப்பம் தின்பவராவர்; என்ன கைங்கர்யம் செய்வதென்று தடுமாறும் நமக்கு இது கிடைத்ததே என்று பகவானின் உவப்புக்காக வெகு ஆஸ்த்தையோடு ஆஜ்ஞாநுபாலநத்திலிழிகிறவர்கள் டசித்துண்டவரென்று முன்னமே சொல்லப்பட்டது. இப் ப்ரபத்தியை இதி, பல இடையூறுகள் நேருமாகையால் பக்தி ஸாதிக்கவாகாதென்று சோகிக்கிறவனுக்கு அப்போது பக்தியை விட்டு ஸ்வதந்த்ர ப்ரபத்தியையநுஷ்ட்டியென்றால், பக்தியை எல்லோரும் விடுவதாகும், அதனால் இடையூறுகளையெல்லாம் விலக்க ப்ரபத்தி போதுமானதென்கிற அம்சம் இதுவரையில் சொல்லாதது சொல்லப்படவேண்டுமென்று அங்க ப்ரபத்தியையுபதேசித்தார். இப்படியிருந்தும் அஜ்ஞாந அசக்திகளாலே பக்தியையநுஷ்டிக்கவாகாதவனுக்கு ப்ரதானமாக ப்ரபத்தி யாமென்பது இதனின்றே தெரியவருமென்று கருத்து. இக் கருத்தை வெளியிடுகிறார் 'இங்கு...**भक्तिपर्यन्त**' இதி. இங்கு என்பதற்கு **द्वितीययोजनै**யில் என்று விவரணம். பூர்வயோஜநையினின்று கொள்ளும் அம்சம் முன்பு சொன்னதையே ப்ரஸங்காத் சேர்க்கிறார் **प्रथमेति**.

**सर्वधर्मान् परित्यज्य** என்பது பக்த்யாதி **गुरूपाय**ங்களையும் நித்ய தர்மங்களையும் விடவேணடுமென்கிறதென்பதற்கு வேறு தோஷமும் கூறுகிறார் **किञ्चेति**. இதற்கு சேஷமாக முதல்ச்லோகத்தால் பலத்திற்குளந்த உபாயம்அசக்யமானாலும் ப்ரபத்தியைச்செய்யலாமென்று பொதுவான அர்தத்தைக்கூறுகிறார் **सुदुष्करेणेति**. **इष्टहेतुना**-ஏதேனும் பலத்திற்கு ஸாதநமான **सुदुष्करेण**-செய்யவே யாகாத எந்த உபாயம் காரணமாக எவன் சோகிக்கிறானோ, அவனுக்கு நானே அந்தந்த உபாயமாவேனென்றது அங்காங்கி ஸர்வ ப்ரபத்தி விஷயம். இது சரமச்லோகார்த்தம். **भावेति**. இதில் மோக்ஷார்த்த ப்ரபத்தி நீங்கலாக மற்ற ப்ரபத்தி விஷயத்திலே நித்யநைமித்திக தர்மாநுஷ்டானமும் த்யாகமும் எப்படி அங்கமாகா

क्रत्वनङ्गतया ये तु तदानीमननुष्ठिताः । स्वकाले स्वविधेरेव कार्यास्ते तद्वदत्र नः ॥'

**'त्यज धर्ममधर्मं च'** என்கிறதுவும் **काम्य**ங்களையும் **निषिद्ध**ங்களையும் விடச்

---

வோ, அப்படியே முமுக்ஷுப்ரபத்தியிலுமென்கவென்று கருத்து. **स्वतन्त्रेति.** மேலும் தர்மங்கள் ப்ரபத்திக்கு அங்கமான ஆநுகூல்ய ஸங்கல்பாதிகள் நீங்கலாக நித்யநைமித்திக தர்மங்களுமாம் **गुरूपाय**ங்களுமாம்; அவற்றில் நித்யங்களாய் இவனுக்கு சக்யங்களான சில தர்மங்களில் இவனுடைய **ईहा** ப்ரவ்ருத்தியானது, **स्वतन्त्रशिष्ट्या**-தனியாக நித்ய நைமித்திகவிஷயமான **(शिष्टि)**-சாஸநமிருப்பதால்; ஆக விதிக்கப்பட்ட நித்யகர்மாவுக்கு த்யாகத்தை விதிக்கமுடியாது. **शेषाभावः**—மற்ற **गुरूपा**யங்களுடைய அநநுஷ்டாநம் இவனிடத்தில் ஸித்தமாயிருக்கிறது. அது இவனுக்கு ப்ரபத்தியதிகாரமான ஆகிஞ்சந்யத்தில் சேர்ந்தது, **गुरूपाय**த்யாகமிப்படி ஸித்தமாயிருப்பதால் விதிக்கவேண்டா. இப்படி அவிஹிதமாகையால் **धर्माभाव**ம் அங்கமாவதற்கில்லை. அங்கமாகாவிட்டாலும் ஆகிஞ்சந்யமாகிற அதிகாரம் நிலைப்பதற்காக **गुरूपाय**த்யாகம் பின்பும் அவச்யமாகிறது. நித்ய நைமித்திகத்யாகம் அவ்வாறில்லை. இனி நித்ய கர்மாவுக்கும் **'दीक्षितो न ददाति' न जुहोति'** என்றதால் தீக்ஷிதனிடம் த்யாகத்தை இசைவது போல் **सर्वधर्मान् परित्यज्य** என்ற வசநபலத்தாலே நித்யகர்மத்யாகத்தை ப்ரபந்நவிஷயத்தில் கூறினாலென்ன என்பதற்கு உத்தரம் **क्रत्विति.** அங்கே புருஷார்த்தமாய் அவச்யம் செய்யவேண்டிய அக்நிஹோத்ராதிகளையும். யாகதீக்ஷை செய்துகொண்டவன் யாகமத்யத்தில் செய்வதில்லை; அந்த யாகத்திற்கு இவை அங்கமாகாமையால். அந்த க்ரது முடிந்த பிறகு அந்த ஹோமங்களை விடுவதில்லை. அது போல் ப்ரபத்யநுஷ்டாநகாலத்தில். நடுவில் ஏதாவது நித்யகர்மாநுஷ்டாநம் அவச்யமாக நேர்ந்தால் அதை விட்டு ப்ரபத்தியைப் பூர்த்தி செய்யவேண்டுமென்று தேறுமேயல்லது எப்போதுமே விடவேண்டுமென்றதாகாது. ஒரு கர்மாநுஷ்டாநமத்தியில் வேறு கர்மாவுக்குக் காலம் வந்தாலும் அதை விட்டு, தொடங்கிய கர்மாவை முடிப்பதே சாஸ்த்ரீயம். விட்ட கர்மாவையும் அதனுடைய கௌணகாலத்தில் பின்னல் செய்யலாமென்றிருக்க, எப்போதுமே நித்யநைமித்திகதர்மத்யாகம் எவ்வாறு தகும்? ஆக க்ரதுமத்தியில் செய்யப்படாத அக்நிஹோத்ராதிகள் அந்தந்த விதியைக் கொண்டு அவற்றின் காலத்தில் செய்யப்படுகின்றன; அதுபோல் இங்கும் நமக்கு நித்ய கர்மம் அநுஷ்டேயமாகும்.

**'सर्वधर्मान् परित्यज्य'** என்ற விடத்தில் ஸர்வதர்மஸ்வரூபத்யாகத்தை விதிப்பதாகக்கொண்டபூர்வபக்ஷியின் கருத்திலுள்ள மற்றும் சில வாக்யங்களுக்கும் நிர்வாஹம் கூறுகிறார். **'त्यज धर्मं**' இத்யாதியால். பா. சா 339-44. தர்மத்தையும் அதர்மத்தையும் விடு என்றால், 'நித்ய நைமித்திக தர்மங்களையும் அநுஷ்டிக்காதே; அதர்மத்தையும் செய்யலாகாதென்று நினைக்காதே' என்று பொருள் கொள்ளலாகாது; காம்யதர்மங்களையும் அதர்மங்களைப் போலே விடவேண்டுமென்றதேயாம். **सत्यं अनृतं** என்ற சொற்கள் **सत्यं चानृतं च सत्यमनवद्य** என்கிற

சொன்ன படி. 'त्यज सत्यानृते अपि' என்கிறதுவும் आत्मानुभवத்தையும் ऐश्वर्यத்தையும் प्रयोजनமாகக் கோ(ரா)லாதேகொள் என்ற படி. वाचिकங்களை विशेषिத்துச் சொல்லிற்றாகவுமாம். இதின் அருமை தோற்றுகைக்காக, 'उभे सत्यानृते त्यक्त्वा' என்று अनुवदिக்கிறது. त्यागத்தில் कर्तृत्वமும் पराधीनமென்று

---

விடத்திற் போல் சேதநாசேதநபரமாம். சேதநாசேதநங்களை விடு என்றால் கைவல்ய ஐச்வர்யங்களை விரும்பாதே என்றபடி. கோலாதேகொள் என்பதற்கு அபேக்ஷியாதே என்றே பொருள். இதனால் காம்யகர்மமென்று கீழே கூறினது கைவல்ய ஐச்வர்யங்களை யபேக்ஷிப்பதாலென்றதாய்.மோக்ஷார்த்தமான காம்யம் செய்வதில் தோஷமில்லை யென்றதாயிற்று. இது புநருக்தம் போலிருப்பதால்வேறுஸ்பஷ்டமானபொருள் கூறுகிறார் வாசிகங்களையென்று. त्यज धर्ममென்ற விடத்தில் காயிகாதி வ்யாபாரங்கள் கருதப்பெறும்; गोबलीवर्द ந்யாயத்தாலே வாசிகம் தனியாகச் சொல்லப்படும். ஸத்யத்தையும் விட்டால் பேசாமலெப்படி நடப்பதென்னில், இவ்வாக்ஷேபம் பூர்வபக்ஷிக்கும் துல்யம். சில உண்மைகள் ப்ராணிகளுக்கு ஹிதமாகாமலிருக்கும்; அவற்றையே விடச் சொன்னதாம். இதுபோல் தர்மபதமும் விசேஷபரமாகத் தகுமென்க. சொன்னதையே சொல்லும் மூன்றாம்பாதம் எதற்காக என்பதற்கு உத்தரம் இதின்இதி. மற்றவற்றை எளிதில் விடுவார்கள்; இவற்றை விடுவது அரிது; அதனால் பலகால் சொல்லலாமென்றபடி. நாலாம் பாதத்திற்குப் பொருள் கூறுகிறார் த்யாகத்தில் இதி. இந்த பாதத்திற்கு த்யாகத்திற்கு எது காரணமோ அதை விடு என்று பொருள் படுகிறது, விடுவதற்கு எது காரணமோ அதை விடு என்றால் காரணமிராமையாலே த்யாகமே இராமற் போம். அதனால் வேறு பொருள் கூறுகிறார், த்யாகம் செய்யும்போது தன்னை ஸ்வதந்த்ர கர்த்தாவாக நினைத்துச் செய்வது ஸஹஜம்; அந்த அபிமாநத்தை விடு. ஆக ஸர்வேச்வரன் செய்விக்கிறானென்ற ஸாத்துவிக த்யாகத்தை சொன்னதாம். இதே பூர்வஸம்மதமான உரை. இங்கே त्यज धर्ममித்யாதியில் கார்ய விதியா, நிஷேதமா? காம்யதர்மம், அதர்மம். அஹிதமான ஸத்யம், பொய் இவற்றை விடு என்றால் இவற்றை நான் விட்டிருக்கவேண்டுமென்று அவனவன் செய்யும் ஸங்கல்பமில்லை. 'न सुरां पिबेत्' என்றாற் போலே கேவலம் நிஷேதம். இதில் ஸாத்துவிகத்யாகந்திற்கு என்ன ப்ரஸக்தி? இது ப்ரவருத்தியின்மை மட்டும்; இது கர்தநவயமன்றே. இனி—கர்த்தவ்யமே பொருளாகலாமே; தர்மத்தை விடு என்பதற்கு நித்யநைமித்திகத்திற்கு ஸாத்த்விகத்யாகம் செய் என்றும். அதர்மம் த்யஜ என்பதற்கு अपकार्यशतं कृत्वा, आपत्सु अनन्तरा वृत्तिः என்று அநாபத்தில்அகர்மமானதையும் ஆபத்காலத்தில் ப்ராப்தமென்று ஸாத்துவிகத்யாகத்துடன் செய் என்றும்.மேலே ஸத்யத்திற்கு ஸாத்துவிகத்யாகம்செய், விவாஹாதிகளில் விவாஹாதி கார்யார்த்தமாக சாஸ்த்ராநுமதியுள்ள பொய்நேர்ந்தால் அதற்கும் ஸாத்துவிகதயாகம் செய் என்றும் சொல்லி இந்த ஸாத்விகத்யாகத்திற்கு நானே கர்த்தா என்று நினைக்காமல் அப்படி

अनुसन्धिக்கைக்காக येन त्यजसि तद् त्यज என்கிறது.

இப்படியானல் आज्ञातिलङ्घनத்துக்கு ஒரு விரகின்றிக்கேயிருக்க, சிலர்

"तस्मात् त्वमुद्धवोत्सृज्य चोदनां प्रतिचोदनाम् । प्रवृत्तिं च निवृत्तिं च श्रोतव्यं श्रुतमेव च ॥

मामेकमेव शरणमात्मानं सर्वदेहिनाम् । याहि सर्वात्मभावेन यास्यसि ह्यकुतोभयम् ॥'

என்று निवृत्तिயையுங்கூட விடச் சொன்னபடியாலும், 'सर्वधर्मान् परित्यज्य'

---

நினைத்துவரும் கர்த்ருத்வாபிமாநத்தை விடு என்னலாமே யென்னில், மூலத்தில் அவ்வாறு பொருள் கூறவில்லை, ஆகையினல் த்யாகத்தில் இத்யாதி மூலவாக்யத்திற்கு வேறுபொருள் கொள்ளலாம். அதாவது येन त्यजसि என்றவிடத்தில் येन என்ற तृतीயை ज्योतिष्टोमेन यजेत என்றவிடத்திற் போல் ஸாமாந்ய விசேஷ भावத்தால் வந்தது, ஜ்யோதிஷ்டோமமாகிற யாகம் என்று அங்கே பொருள்; இங்கு येन என்பதற்கு தர்மத்யாகம் அதர்மத்யாகம் ஸத்யத்யாகம் அந்ருத த்யாகம் என்ற த்யாக விசேஷம் பொருள். எந்த விசேஷத்யாகமாகிற த்யாகம் செய்கிருயோ, அந்த த்யாகத்திற்கும் த்யாகம் செய்; அதாவது நீயாக ஸ்வேச்சையாக விட்டதாக நினைக்காதே ஈச்வரன் நிஷேதித்திருப்பதால் तदाज्ञा ரூபமென்று கொள். த்யாகத்தில் கர்த்ருத்வமித்யாதியால் நிஷேதசாஸ்த்ரத்திற்காக நீ நிவர்த்திக்கிருயே அந்தச் செய்யாமையும் உன்னுலாவதில்லை ஈச்வரனுலாகவேண்டுமென்றதாயிற்று. त्यज என்பதற்கு நிவ்ருத்தி என்ற ப்ரயத்னம் பொருளானல் உரைகளில் உரைத்ததையே கொள்ளலாம். ஸாத்துவிகத்யாகபரமாக நாலாம் பாதத்தை யுரைக்காத உரைகளுக்கும் ஸாத்துவிகத்யாகபரமான உரைக்கும்கூட நாம் சொன்ன அர்த்தத்திலேயே தாத்பர்யமென்றே நிர்வஹித்தலுமாம்.

இதற்குமேல் முன்னெடுத்த வாக்யத்துக்கு ஸமானமாக ஸ்ரீபாகவதச்லோகத்தைக் (11—12) கொண்டு தர்மத்யாகத்தையும் அதர்மாநுஷ்டாநத்தையும் ஆதரிப்பவரை நிராக்ரிக்கிருர் இப்படியானல் இதி. இப்படியானல்—त्यज धर्मं என்கிற ச்லோகத்திற்கு ஆஜ்ஞாதிலங்கநமாகாதபடி ஸ்வரஸமாக அர்த்தம் சொல்லக் கூடுமானல் என்றுபொருள். இதற்கு விரகின்றிக்கே இருக்க என்பதில் அந்வயம். त्यज धर्मं என்பதற்கு பொருந்தும் பொருள் கூறிவிட்டபடியால் ஆஜ்ஞாதிலங்கநம் செய்யலாமென்பதற்கு ப்ரமாணமிராது; பாகவத ச்லோகத்திற்கும் இப்படியே நிர்வாஹம் தகும். இப்படி யிருக்க, சிலர் விபரீதமாகச் சொல்வது மிகவும் பரிஹஸிக்கத் தக்கதென்றதாம். तस्मादिति. ஆகையால் உத்தவனே, நீ விதிவாக்யத்தையும் நிஷேதவாக்யத்தையும் கார்யங்களில் ப்ரவ்ருத்தியையும், அகார்யங்களினின்று நிவ்ருத்தியையும். அவைவிஷயமாக இனிக் காதில் விழப்போவதையும் இது வரையில் கேட்டதையும் விட்டு எல்லோருக்கும் அந்தராத்மாவான என்னையே ப்ராபகனுகவும் ப்ராப்யனுகவும் ஸர்வமாகவும் கொண்டு சரணமாகப்பற்று. எதனின்றும் அச்சமில்லை யென்பதைப் பெறுவாய் என்று பொருள், இதன் கருத்து மேலே ஸ்பஷ்டம். இங்கே நிவ்ருத்தியையும் விடு

என்கிற இடத்தில் सर्वशब्दத்தை सङ्कोचियாமைக்காகவும் निवृत्तिरूपधर्मங்களை யுங்கூட விடவேண்டுகையால், அவற்றை விடுகையாவது निषेधित्तवை யெல்லாவற்றிலும் यथाशक्ति அநுஷ்டாநமாகையால், இந்த निषिद्धानुष्ठानம் विधि बलप्राप्तமாகையாலே प्रपन्नனுக்கு बुद्धिपूर्वोत्तराघமும் लेपियாதென்று भ्रमिப்பர்கள்.

இது மிகவும் परिहसनीयம். எங்ஙனேயென்னில்:—अलेपकர் பாபம் பண்ணி னால் लेपियாதென்பர்கள். இவர்கள் பாபம் அவச்யம் அநுஷ்டிக்கவேணு மென்றார்களாயிற்று. இது

"भक्ष्योत्तमप्रतिच्छन्नं मत्स्यो बडिशमायसम् । अन्नाभिलाषी ग्रसते नानुबन्धमवेक्षते ॥"

என்கிற கணக்காம். இவை யெல்லாவற்றையும் நினைத்து,

"अहो बत महत् कष्टं विपरीतमिदं जगत् । येनापत्रपते साधुरसाधुस्तेन तुष्यति ॥"

என்று மஹர்ஷி निर्विण्णனான். இவர்கள் சொல்லுகிறபடி அர்த்தமானால் यावज्जीवமிருந்து அநுஷ்டிக்கும் निषिद्धानुष्ठानமெல்லாம் प्रपत्तिக்கு அங்கமா கையால் साङ्गप्रपदनம் सकृत् कर्तव्यமென்னுமிடம் கழியும். प्रपत्तिक्षणத்தில் எல்லா निषिद्धங்களும் அநுஷ்டிக்கை अशक्यம். அப்போது यथाशक्ति निषिद्धानुष्ठानம் பண்ணிக்கொண்டு ப்ரபத்தி பண்ணவும் கண்டறியோம். இப் பக்ஷத்தில் பாபங்களும் अग्नीषोमीयहिंसैபோலே पापशब्दवाच्यமல்லாமையாலே बुद्धिपूर्वोत्तराघ த்தையும் கூட்டி 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்கிற இடத்துக்குத் தாங்கள்

---

என்று சொன்னதால் ஸுராபாநத்திலிருந்து நிவ்ருத்தியை விடுவது ஸுராபாநம் செய்வதே யாகையால் நிஷித்தமெல்லாம் ப்ரபந்நனுக்கு இசையப்பெற்றதே யாவதல் இவனுக்கு उत्तराघம் ஏது என்று சிலரின் கேள்வி. அலேபகமதத்தை விட இது ப்ரபலமாகும்; பாபாநுஷ்டாநத்தினால் வரும் க்ஷுத்ர பலனிலுள்ள நசையே இவ்வாறு அர்த்தம் கல்பித்து வாதிக்கத் துணிவு பெறுவித்துப் பெரியோர்முன்னே நடக்கச் செய்வது. भक्ष्येति—மீனானது ஆஹாரத்தில் அதிக ஆசை வைத்ததால் புஜிக்கத் தகுந்த சிறந்த வஸ்துவினால் மறைக்கப்பட்ட இரும்பினாலான தூண்டின் முள்ளையும் விழுங்குகிறது. அநுபந்தம்=பின்னே வரப்போவதை नावेक्षते—முன்னோக் கிக் காண்கிறதில்லை. अहो இதி, பா. வந 12-64 இது மிக மிகவும் கஷ்டமா யிருக்கிறது; இவ்வுலகின் போக்கு விபரீதமாயிருக்கிறது. நல்லவன் येन— எந்தக் கார்யம் காரணமாக (எதைச்செய்வதற்கு அல்லது பிறர் செய்யக் காண்பதற்கே) வெட்கப்படுகிறானோ, அதையே துஷ்டன் செய்து ஸந்தோ ஷப்படுகிறானென்றார். இவ்வாறு பொருள் கூறுவது இவர்கள் பக்ஷத்திற்கே விரோதமாகுமென்கிறார் இவர்கள் இதி. அதர்மத்திலிருந்து நிவ்ருத்தியை சரணாகதி செய்பவன் விடவேண்டுமென்றால் இவன் உள்ள காலம் முழுமையும் அதர்மம் செய்தேயாகவேண்டும் அப்போது தான் ப்ரபத்திபூர்த்தி. அதர் மத்திற்கஞ்சினால் ப்ரபத்தி வீணாகும். இப்போது அதர்மம் விதிக்கப்பட்டி ருப்பதால் பாபமென்று சொல்லப்படாது. ஆக இவனுக்கு உத்தர பாபமே யில்லாமையால் सर्वपापेभ्यः என்பதில் உத்தராகத்தைச் சேர்த்ததென்?

व्याख्यानம் பண்ணின ப்ரகாரமும் विरुद्धமாம். यथाशक्ति त्रिविधापचारங்கள் कर्तव्यங்களாகவும் प्रसङ्गिக்கும். இது पूर्वानुष्ठानத்துக்கும், पूर्वसंप्रदायத்துக்கும், स्वानुष्ठानத்துக்கும், மற்றும் இப்போது காண்கிற முமுக்ஷுக்களுடைய அநுஷ்டாநத்துக்கும் विरुद्धம். இப்படிச் சொல்லுமவர்கள் தம்மை ஒரு प्रपन्नर् अर्थकामங்களடியாக நலியப்புக்கால், 'இது प्रपन्नधर्मமன்றோ' என்று இவரை உகந்திருக்கப் प्राप्तமாம். இது अनन्तप्रमाणங்களுக்கு विरुद्धமா மளவே யன்றிக்கே இங்கு எடுத்த வசநங்களுக்கு விவக்ஷிதமுமன்று.

निषिद्धनिवृत्तिरूपங்களெல்லாம் सर्वधर्मशब्दத்தாலே संगृहीतங்களென்னுமிடம் धर्मशब्दार्थம் அறியாமல் சொன்னபடி யென்று சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள். எங்ஙனேயென்னில்—निवृत्तिகளிலே ஒரு फलத்துக்கு साधनமாக नियम-विशेषங்களுடனே செய்தவை धर्मशब्दार्थமாம். ஸாமாந்யமான अहिंसादिमात्रம் पापाभावமாமித்தனை போக்கி धर्मशब्दத்துக்கு मुख्यार्थமன்று. ஆகையால் फल-

---

**நலியப்புக்கால்**—ஹிம்ஸிக்க வந்தால், ப்ரஹ்மவிதபசாரம் ப்ரபந்நநுக்கில்லை யென்று ஒருவனை யொருவன் நலிவதே தர்மமென்று அதிலிழிவதே பெரும் தர்மமாகும்—உகந்திருக்க. நம்மை நலிகிறானென்று உரோடம் தகாது; பகவத்ப்ரீதி மிகுமென்று உவப்பே யிருக்க வேண்டும். எவ்வளவு தோஷமிருந்தாலும் என் செய்வது; வாக்யத்திற்கு இதுவும் பொருளாகிறதே யென்ன, "இது விவக்ஷிதமுமன்று" என்றார். இதற்குப் பலபடி விவரணம் निषिद्धेत्यादियால். வாக்யத்தின் பொருளை மேலே கூறுவர். ச்ரீபாகவத வாக்யத்தில் அதர்ம நிவ்ருத்தியை விடச் சொன்னாலும் सर्वधर्मान् परित्यज्य என்றவிடத்தில், 'நிவ்ருத்தியை விடு' என்றெங்ஙனே பொருளென்றால், அதர்மநிவ்ருத்தியும் தர்மசப்தார்த்தமாகையால் அதன் த்யாகமும் சேருமென்னவேண்டும்; நிவ்ருத்தி யென்பது தர்மசப்தார்த்தமாகுமா என்ற விசாரத்தில் ஆகாதென்றே அநேகமாகக் கொள்வர். न हिंस्यात् सर्वा भूतानि என்று ஹிம்ஸையை நிஷேதித்ததால் இங்கே ஹிம்ஸைக்கு நரகம் பலனுண்டு; ஹிம்ஸை செய்யாமைக்கு ஒரு பலனுமில்லை, பலனுக்காக சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கார்யமே தர்மமாகும். அஹிம்ஸையாவது ஹிம்ஸை யென்கிற வியாபாரமின்மை; அது கர்த்தவ்யமன்று.

இப்படியானால் ऐश्वर्यं सन्ततिं स्वर्गं मुक्तिं वा यद्यदिच्छति । एकादश्युपवासेन तत् सर्वं लभते नरः என்று பலத்திற்காக உபவாஸம் விதிக்கப்பட்டிருக்கிறதே. உபவாஸமாவது புஜிக்காமைதானேயென்னில்—'सायमाद्यन्तयोरह्नोः सायं प्रातश्च मध्यमे । उपवासफलप्रेप्सुः जह्यात् भुक्तचतुष्टयम्' என்று முதல்நாள் தசமியிரவிலும் மறுநாள்த்வாதசியிரவிலும் அபோஜநமென்றவாறு நியமும் फलसं-बन्धமும் சேர்வதால் விசிஷ்டாகாரேண விதிக்கப்பட்டு தர்மமாகலாம். இப்படியே அஹிம்ஸை, ब्रह्मचर्यம் अस्तेयம் இத்யாதிகளான अभावங்களும் காம்யமாய் சாஸ்த்ரோக்த சிற்சில நியமவிசிஷ்டமாய் தர்மமாகலாம். தனியாக க்ரியாநிவ்ருத்திமட்டும் தர்மமாகாது. இந்த தர்மத்திற்கு த்யாகம் सर्वधर्मान् परित्यज्य

विशेष—नियमविशेषங்களோடே கூடின]अहिंसादिகளை விடுகையாவது—फलங்களையும் நியமங்களையும் விடுகை, மற்றும் निवृत्तिशास्त्रத்திற் சொன்ன निवृत्तिகளை விடுகைக்கு விரகில்லை.

नियमविशेषादिகளோடே கூடாத अहिंसादिमात्रமும் धर्मशब्दार्थமென்னும் பக்ஷத்திலும் சொல்லுகிறோம்—

अधर्मपरिहारेऽपि धर्मत्वेन विवक्षिते । स्यात् स्वतन्त्रविधेरेव नित्यं तस्य परिग्रहः ॥

---

என்று சொல்லப்பட்டால் அந்த விசிஷ்ட த்யாகம் ஃபலஸங்கல்பமும் நியமமுமான விசேஷணமாத்ரத்யாகமாகுமே யல்லது விசேஷ்யமான உபவாஸ—அஹிம்ஸா ப்ரஹ்மசர்யாதிகளுக்கும் த்யாகமாகா. ஏனெனில், அந்த விசேஷ்யங்கள் एकादश्यां न भुञ्जीत, न हिंस्यात् सर्वा भूतानि என்று தனியாக நிஷேதவாக்யங்களுக்கு விஷயமாயிருப்பதால் அந்த நிவ்ருத்தியை விட்டால் ப்ரத்யவாயமுண்டாம். த்யாக வாக்யம் விசேஷண த்யாக மாத்ரத்தாலே சரிதார்த்தமாகும்—என்றனர் சில ஆசார்யர்.

இப்படி கேவல நிவ்ருத்தி தர்மமாகாதென்ற பக்ஷம் சொல்லப்பட்டது. சிலர் விதிவாக்யம் போல் நிஷேதவாக்யமும் ஈச்வராஜ்ஞையாகையாலும் நிஷேதவாக்யங்களையும் மீமாம்ஸகர் நிஷேத விதி யென்பதாலும் அஹிம்ஸாதிகளும் நிவ்ருத்திருபமாய் விதேயமாய் தர்மமாகலாமென்பர். இப்பக்ஷத்தில் அஹிம்ஸாரூப தர்ம மாத்திரத்திற்கும் सर्वधर्मान् என்கிற த்யாகம் கூடுமே—என்கிற கேள்வியில் அருளிச்செய்கிறார் நியமவிசேஷேதி. अधर्मेति. அதர்மமாவது ஹிம்ஸை; அதன் நிவ்ருத்தி தர்மந்தானென்று சொல்ல விரும்பினாலும் அதற்கு த்யாகம் சொல்ல வொண்ணாது. விசேஷவிதிபலத்தாலே तस्य = அதர்மபரிஹாரமென்கிற அஹிம்ஸைக்கு பரிக்ரஹ: = ஸ்வீகாரமே எப்போதுமாம். न हिंस्यात् सर्वा भूतानि என்று ஹிம்ஸாஸாமாந்யநிஷேதம் ஸர்வசப்த घटितமாயிருந்தாலும अग्नीषोमीयं पशुमालभेत என்கிற விசேஷ விதியிருப்பதால் அது தவிர மற்ற ஹிம்ஸாவிஷயமென்று சொல்வது போல், இங்கும் न हिंस्यात् என்று ஹிம்ஸாநிவ்ருத்தி விதிக்கப்பட்டிருப்பதால் सर्वधर्मान् परित्यज्य என்பது ஸர்வசப்தமிருந்தாலும் வேறு தர்ம விஷயமேயாகும்.

இனி அங்கு रागप्राप्तஹிம்ஸையைக் கொண்டே நிர்வாஹம் வருகிறபடியால் விஹித வ்யதிரிக்த விஷயமென்றோம். இங்கு सर्व என்று ராக ப்ராப்தத்தைக் கொண்டால் அது தர்மமாகாது. ஆக ஸர்வதர்மபதத்தாலே விஹிதத்தையே கொள்ள வேண்டியிருப்பதால் ஒன்றைக் கொள்வது ஒன்றை விடுவதென்பதற்கு गमक (ஸாதக) மிராமையால் ஹிம்ஸாநிவ்ருத்தியும் கொள்ள வேண்டியதாகு மென்னில்— இங்கும் காம்யமாய் संकल्पितफलமாகிற फलविशेष நியமவிசேஷ விசிஷ்டமான அஹிம்ஸைக்கு अभ्यनुज्ञाविधियாகும். கேவல அஹிம்ஸைக்கு आचाररूपவிதியாகுமென்று சிறிதுபேதமிருப்பதால் अभ्यनुज्ञात தர்மத்தைக் கொண்டே ஸர்வ தர்ம சப்தத்திற்கு நிர்வாஹம் செய்யலாம். अथवा ச்லோகத்தில் स्वतन्त्रविधेरेव என்பதற்கு ப்ரபந்நன்விஷயமாகவே அஹிம்ஸாதிகள் விசே

आनुकूल्यपरित्यागं प्रातिकूल्यपरिग्रहम् । प्रपत्त्यङ्गं प्रतिज्ञातुं न शक्यं साधुसंसदि ॥
प्रपन्नमधिकृत्यैव सदाचारानतिक्रमः । प्रपत्त्यध्यायपठितः प्रतिसन्धीयतामिह ॥

இப்படி அற்றபின்பு 'चोदनां प्रतिचोदनाम्. प्रवृत्तिं च निवृत्तिं च' என்கிற இடத்திலும் ப்ரபத்திக்கு அங்கமாக ஒன்றும் स्वीकरिக்கவேண்டா என்ற தாயித்தனை. मुमुक्षुमात्रத்தைப்பற்ற 'त्रैवर्गिकांस्त्यजेम् धर्मान्' என்கிற கட்டளையிலே फलान्तरसाधनமாகச் चोदितैகளான प्रवृत्तिनिवृत्तिகளையும் அவற்றுக்கு உறுப்பான சாஸ்த்ரங்களையும் விடச் சொன்னதாகவுமாம்.

இங்ஙனன்றிக்கே नित्यनैमित्तिकादिகளுடைய स्वरूपत्यागம் விவக்ஷிதமென்னில், முன்பு சொன்ன सर्वविरोधமும் प्रसङ्गिக்கும். இந்த நிஷ்கர்ஷம் सत्त्वनिष्ठராய் விவேகிகளாயிருப்பார் தெளிந்து அங்கீகரிப்பர்கள். இவ் अर्थத்தை 'செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்' என்றும், 'செய்யேல் தீவினை

---

ஷித்துச் சொல்லப்பட்டிருப்பதால் ஸர்வதர்மசப்தத்தாலே காம்ய கர்மாக்களைக் கொள்ளலாமே யல்லது அஹிம்ஸாவிதியைக் கொள்ளலாகாதென்க.

ப்ரபந்நனுக்கு விசேஷவிதி யிராமற்போனாலும் ஆநுகூல்யஸங்கல்பாதி.அங்கஸ்வாரஸ்யத்தாலேயே அதர்மபரிஹாரம் ஸர்வதர்ம சப்தார்த்தமாகாதென்கிறார் आनुकूल्येति, उत्सृज्य चोदनाமென்று நித்ய தர்மத்தை விட்டால் ஆநுகூல்ய பரித்யாகமாம்; அதர்மத்தைப் பரிக்ரஹித்தால் ப்ராதிகூல்ய பரித்யாகத்திற்கு ப்ரதியாக ப்ராதிகூல்ய பரிக்ரஹமாம்; ஸாதுக்களுடைய கோஷ்டியில் இது சொல்லவாகாது. ப்ரபந்நனுக்குக் கார்யங்களில் அநுகூலப்ரதிகூலविभागமுண்டென்பதற்கு ப்ரமாணம் டலவுண்டு. ஸாரமான அம்சம் प्रपन्नமிதி. லக்ஷ்மீதந்த்ரப்ரபத்த்யத்யாயத்தின் मनीषी वैदिकाचारं मनसाऽपि न लङ्घयेत् என்று முன்பு உதாஹரித்த ச்லோகங்களைக் கொள்க. இப்படியானால் ஸ்ரீபாகவத வசநத்திற்குப் பொருளென்ன என்பதற்கு உத்தரம் இப்படி இதி: அற்றபின்பு—தீர்ந்த பிறகு; விதி நிஷேதாதிகளோடு ப்ரபத்திக்கு ஒரு ஸம்பந்தமில்லை; நிஷித்தத்தைச் செய்கையாலும் ப்ரபத்திக்கு லோபமில்லை; அததனாலேற்படும் குற்றத்திற்கு சிக்ஷையும் ப்ராயச்சித்தமும் வேறு உண்டு; மோக்ஷத்திற்குக் குறையில்லை யென்றபடி. अथवा பக்தியோகம் செய்கிறவன் யோகநிஷ்பத்திக்காக नात्यश्नतस्तु योगोऽस्ति இத்யாதிகளைக் கொண்டு, சாஸ்த்ரீயவிதி. நிஷேதங்களையும் சில லௌகிக ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளையுங்கொள்வதுண்டு; அவைப்ரபத்தியிலிழிபவனுக்கு வேண்டாஎன்றதாம். இப் போது उत्सृज्य என்பதற்கு ப்ரபத்தியோடு ஸம்பந்தப்படுத்தாயலென்று, இவற்றைப்ரபத்தி யபேக்ஷிக்காதென்றுதெரிந்துஎன்று பொருள். த்யாகத்தை விதிக்கிறதென்கிற பக்ஷத்தில் வேறு பொருளும் கூறுகிறார் முமுக்ஷு இதி. மோக்ஷம் தவிரவேறு பலத்திற்காக எத்தனையோ ப்ரவ்ருத்திகளும் நிவ்ருத்திகளும் விதிக்கப் பட்டிருக்கின்றன; அவற்றிலிழிந்தால் अनन्यगतिकत्वமென்ற அதிகாரம் போய்விடும். அதற்காக த்யாகவிதி. செய்யாதன இதி. திருப்பாவை2. முன்னோர்கள் செய்யாதவற்றைப் பின்னோர் செய்யலாகாது. குறளை

யென்றருள்செய்யும்' என்றும் அருளிச்செய்தார்கள். 'நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே' என்றதுக்கும் தாத்பர்யத்தைப் பார்த்தால் க்ஷமிக்கவேணுமென்று அபேக்ஷித்தபடியாகையாலே, ப்ரபந்நனுக்கும் அபராதம் புகுந்தால்

"अज्ञानादथवा ज्ञानादपराधेषु सत्स्वपि । प्रायश्चित्तं क्षमस्वेति प्रार्थनैकैव केवलम् ॥"

என்கிறபடியே க்ஷமை கொள்ளப் ப்ராப்தம்.

'प्रायश्चित्तान्तराशक्तः कालक्षेपाक्षमोऽपि वा । पुनः प्रपद्यते नाथमभिन्दन् लोकसंग्रहम् ॥'

முமுக்ஷுத்வமேயடியாக புத்திபூர்வநிஷித்தங்கள் புகுரா(புகா)வென்னும் வார்த்தையும், 'विद्यते ब्राह्मणे दमः' என்னுமாப்போலே ஔசித்யத்தாலே சொன்னபடியத்

---

யாவது கோட்சொல். (தீய)கோட்சொற்களைச் சொல்லலாகாது. செய்யேல் என்று திருவாய்மொழி 2-9-3. தீவினையைச் செய்யலாகாதென்று எனக்கு அருள் செய்கின்ற கண்ணபிரானே! உன் திருவடியை யேத்தும்படி அருள்செய். நாயினேன்—திருச்சந்த வ்ருத்தம் 111 அடியேன் செய்யும் குற்றத்தை லோகநாதா! நீ குணமாகவே கொள். இப்பாசுரத்தில் நற்றமென்று சொல்லியிருப்பதால் ப்ரபந்நனுக்குப் பாபமில்லை யென்று தெரிகிறதே யென்று கேள்வி குற்றமென்பதை ஒப்புக்கொண்டு, 'மஹாவிரோதிகளையே உன்னைப் பெறும்படி யருளும் நீ தாஸன்குற்றத்தைப் பொறுப்பாய்' என்று வேண்டுகிறாரிங்கு. உண்மையில் அது நற்றமாகில் இப்ப்ரார்த்தனை வீணாகும். அபேக்ஷித்தபடி யாகையாலே= ப்ரார்த்தித்ததேயாகிறபடியாலே, இதற்கு க்ஷமைகொள்ள என்பதோடு அந்வயம். க்ஷமை கொள்ளவேண்டுமென்பதற்கு வசநமுமுள்ளதென்கிறார் अज्ञानात् இதி. அபராதம் செய்கிறவன் புத்தி பூர்வமாகச் செய்வதை பாபமென்று தெரியாமற் செய்தாலும் பாபமென்று தெரிந்து செய்தாலும் பொறுக்க வேணுமென்று ப்ரார்த்தனை செய்யவேண்டும். அதொன்றே பாபத்திற்கு ப்ராயச்சித்தமாகும், இது வங்கிபுரத்துநம்பிகாரிகை. இதனால் வேறு ப்ராயச்சித்தம் தகாதென்று சொல்லவில்லை யென்றறிவிக்கிறார் प्रायश्चित्तेति. ஸர்வஸுலபனும் பரமோதாரனுன ஸர்வேச்வரன் ப்ரார்த்தனைமட்டிலும் பொறுப்பானென்று அசக்த விஷயத்திலே அவனுடைய குணவிசேஷத்தைச் சொல்வதாகும். வேறு ப்ராயச்சித்தத்திலும் ப்ரார்த்தனை யுண்டென்று அதன் முக்யத்வமும் தெரியும். முக்ய ப்ராயச்சித்தம் செய்ய அதிகாரியானவன் லோகஸங்க்ரஹத்திற்காகவும் அதையே செய்யவேண்டும். குருவான ப்ராயச்சித்தத்திற்கு அநதிகாரியானவனும், அது செய்து முடிக்கும் வரையில் விளம்பம் பொறாதவனும் ப்ரபத்தி செய்வதாம். அகிஞ்சநனுக்குதானே ப்ரபத்தி விதிக்கப்படுகிறது.

சிலர் புத்திபூர்வகமாக நிஷித்தகார்யம் முமுக்ஷுவினிடத்தில் நேரா என்பாராய் நேர்ந்ததை இது பாபமென்றெனறு சொல்லப்பார்க்கிறார்கள் போலும். அது சரியல்ல; அவ் வாக்யம் ஔசித்யத்தைமட்டும் காட்டும் ராவணன் விபீஷணனைப் பார்த்துச் சொல்லுகிறான் ரா. யுத்தகா. 16–9. 'विद्यते

தனே முமுக்षुவுக்கே बुद्धिपूर्वनिषिद्धங்கள் புகுந்து பரிஹாரங்கள் பண்ணுகை மஹர்ஷிகள்பக்கலிலும் ऋषिप्रायர் பக்கலிலுமுள்படக் கண்டுபோராநின்ற திறே. இங்ஙனன்றாகில், உபாஸகர்களும் முமுக்ஷுக்களாகையாலே அவர் களுக்கும் बुद्धिपूर्वोत्तराघம் கடியாமையாலே "उत्तराघाश्लेषम् प्रामादिकविषयம்; बुद्धिपूर्वोत्तराघத்துக்கு क्षन्तव्यत्वம் இல்லை" என்று व्यवस्थै பண்ணவொண்ணா தொழியும். உபாஸகனுக்கும் ப்ரபந்நனுக்கும் वर्ण—आश्रम-जाति-गोत्र-प्रवर—चरण-कुल-देश-काल-अवस्था-गुण-समयादिகளை उपाधिயாகக் கொண்டு சொன்ன निषिद्धங்கள் தவிருமிடத்தில் விசேஷமில்லை. निषिद्धங்கள் புகுந்தால் प्रायश्चित्तம் यथाधिकारமாகையாலே வைஷம்யம் உண்டு

"என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்கிறதுவும்

---

गोषु सौरत्नं विद्यते ब्राह्मणे दमः। विद्यते स्त्रीषु चापल्यं विद्यते ज्ञातितो भयम्॥' ராவணன் ப்ராஹ்மணனாக விருந்தும் இந்த்ரியநிக்ரஹம் பெற வில்லையே ஆகையால் गोत्व ब्राह्मणत्वादिகள் போல் முமுக்ஷுத்வமும் நியாமகமாகாது. மஹர்ஷிகளின் நடவடிக்கையினின்றும் அது தெரிகிற தென்கிறார் முமுக்ஷுவுக்கே இதி. ஸாம்ப்ரதாயிகையில் வஸிஷ்டர் துர்வாஸர் லோகஸாரங்கர் முதலானோர்க்குப் பாபமும் பரிஹாரமும் உதாஹரிக்கப்பட்டது காண்க. இங்ஙனன்றாகில் = முமுக்ஷுத்வமென்பதைக் காரணமாகக் கொண்டால் உபாஸகரிடமும் முமுக்ஷுத்வமிருக்கிற படியாலே புத்திபூர்வபாபத்திற்கு ப்ரஸக்தி இல்லையாம். அது இருப்பதாகக் கொண்டு ப்ராமாதிக அப்ராமாதிக பேதத்தைச் சொல்லி ப்ராமாதிகபாபத்திற்கே அச்லேஷம்; புத்திபூர்வத்திற்குப் பரிஹாரம் செய்யா விடில் பலனுண்டென்று பாஷ்யகாரர் அருளியது பொருந்தாது. वर्णेति. வர்ணம் காரணமாக நிஷேதம் 'ब्राह्मणो न सुरां पिबेत्' இதி. ஆச்ரமமூல மான நிஷேதம் ताम्बूलं......ब्रह्मचारिणाम्......मादरासवम् என்றது. ஜாதிமூல மான நிஷேதம் न स्वरः प्रणवोऽप्यानि...स्त्रीणां तु शूद्रजातीनाम् என்றது. गोत्रनि मित्तகம் 'दानं दद्यात् सगोत्राय कन्यादानं तु वर्जयेत् இதி. प्रवरनिमित्तகம்'—समानप्रवरां चैवेति விவாஹ நிஷேதம். चरणं =शाखा; तत्प्रयुक्त மான நிஷேதம் बह्वृचाः श्रवणे कुर्युः श्रावणं न तु पर्वणि என்றது. कुलप्रयुक्तம்—भृग्वग्न्योः दशाहानि कुलस्यान्नं निषिद्ध्यते. देशनिमित्तகம் नाप्सु मूत्रपुरीषं कुर्यात् இதி. कालनिमित्तகம் एकादश्यां न भुञ्जीत; न दिवा स्वपेत् இத்யாதி. அவஸ்தாநிமித்தகம் एकादश्यां न भुञ्जीत शक्तश्चेत् निरुपद्रवः இதி. गुण- निमित्तகம் नातिकेशां अकेशां वा उद्वहेत् இத்யாதி. समयनिमित्तகம்—ஸமயமாவது சிஷ்டஸம்மதி; लोकविद्विष्टं धर्म्यमप्याचरेन्न तु' இதி ஆதிசப்தத்தாலே ஸம்பந்த விசேஷ க்ரஹணம். न भ्रातरौ नियुञ्जीत श्राद्धे पितृसुतावपि. ஸோதரரிருவரையோ தந்தையையும் மகனையுமான இருவரையோ ச்ராத்தத்தில் நிமந்த்ரிக்கலாகா தென்ற நிஷேதம். என்னடியார் பெரியாழ். திரு 4-9 2 தன்னடியார் திறத்தகத்துஎனவாரம்பம். நிக்ரஹமே யறியாத அலர்மேல்மகள் கூறுமளவுக் கும் தாஸர்களிடத்தில் குற்றம் நேரும்; ஆனாலும் ஈச்வரன் அவள்மூலமாக வேற்பட்ட வாத்ஸல்யாதிசயத்தாலே, 'எனது தாஸர்கள் தவறு செய்ய

अपराधம் புகுரு(புகு)மென்கைக்கு लिङ्गம். இங்கு, 'செய்தாரேல் நன்று செய்தார் என்றதுக்கு, "प्रामादिकமாகப் புகுந்தால் நாமே क्षमिप्(போ)புதோம், बुद्धिपूर्वकமாகப் புகுந்தால் அவர்கள் க்ஷமைகொள்ளாதவளவிலும் शिक्षाविशेषங்களாலே நாம் शमिप्(போ)புதோம் ஒரு படிக்கும் கைவிடோம்" என்று தாத்பர்யம். 'நன்று செய்தாரென்பர் போலும்' என்று சொல்லுகையாலே, இது वस्तुवृत्तियில் நன்றன்று என்னுமிடம் सूचितम्.

'अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत् प्रायश्चित्तिरियं साऽत्र यत् पुनश्शरणं व्रजेत् ॥'

என்று சொல்லுகையாலே, बुद्धिपूर्वोत्तराघத்தில் ஈச்வரனுக்கு निग्रहेच्छै उदियாதென்னவொண்ணாது. ஸர்வசக்தியானவனுக்கு निग्रहेच्छै பிறந்தால் க்ஷமை கொள்ளாதபோது फलसिद्धियில்லையென்னவுமொண்ணாது. 'ஈச்வரனுக்கு प्रीत्यभावमात्रம் பிறக்குமத்தனை' என்றால் தனக்கு அத்தால் மேல் ஒரு प्रत्यवायமில்லையாகில் पुनः प्रायश्चित्तம் பண்ணவேண்டா. தனக்கும் प्रीत्यभावம் பிறக்குமத்தனையென்றாலும் प्रत्यवायம் सिद्धமாயிற்று. அதிலும் கழிந்ததுக்கு प्रायश्चित्तம் வேண்டா. மேலும் अनुवृत्तமாய் வரப்புகு (போ)கிற प्रीत्यभावத்தைப் பற்ற प्रायश्चित्तமென்றால், இத்தோடு तुल्ययोगक्षेमतயாலே यथासंभवம் श्रुत्यादिसिद्धங்களான

---

மாட்டார்கள்; ஏதேனும் செய்தார்களாகில் அது நற்செயல்' என்பானென்றார். இங்கே நன்றுசெய்தாரென்பது பொருளல்ல; உபாயத்தினால் வரும் பலனுக்கு बाधकமாகாததையே செய்தாரென்றபடி. அவர் செய்தது ப்ராமாதிகமாகில் குற்றமே யில்லை. புத்திபூர்வமானாலும் க்ஷமை கொள்வதாலோ அனுபவத்தாலோ அது கழிந்துவிடுமென்றதாம். இங்கே பாசுரத்தில் நன்று செய்தாரென்பர் என்றவளவோடு நிற்காமல் என்பர் போலும் என்றதைப் பார்த்தால் இது நல்லது போலிருந்தாலும் நல்லதன்றென்றும் அறிவித்ததாகும். போலுமென்பதன் விரிவும் பிறவும் அங்கே நமது ப்ரபந்த ரக்ஷையில்

இப்படி முமுக்ஷுவுக்கு நிஷித்தாநுஷ்டாந மேற்படாதென்பதைப் பரிஹரித்தார். 'நேர்ந்தாலும் இவனை நிக்ரஹிக்க வேண்டுமென்று இச்சை ஈச்வரனுக்கு வராது. அது வருமாகில் ப்ரபத்தி நிஷ்பலமாகிவிடுமே' என்பதைப் பரிஹரிக்கிறார் अपायेति நிஷித்தாநுஷ்டாநம் உண்டாகில் ப்ராயச்சித்தம் செய்யவேண்டுமென்றதாலேயே ஈச்வரனுக்கு நிக்ரஹிக்க இச்சை யுண்டென்று தெரிகிறதே. அப்படியானாலும் ப்ரபத்தி பலிக்கலாம்; இந்த நிக்ரஹம் फलप्रतिबन्धकமன்றென்றபடி. நிக்ரஹம் செய்ய மாட்டான், ஈச்வரனுக்கு இவனிடத்தில் प्रीत्यभावம் மட்டுமென்பர் சிலர். அதனால் இவனுக்கு ஒரு கேடில்லை யாகில் ப்ராயச்சித்தமெதற்கு? இவனுக்கும் அவனிடத்தில் ப்ரீத்யபாவம் நேருமென்னில், அப்போது அக் கேட்டைப் பரிஹரிப்பதற்காக ப்ராயச்சித்தமென்றதாயிற்று. ப்ராயச்சித்தம் செய்வதற்கு முன் ஏற்பட்ட ப்ரீத்யபாவம் வநதது வந்ததே. அதற்கு ப்ராயச்சித்தத்தால் நிவ்ருத்தியில்லை. இனியும் ப்ரீத்யபாவம் வாராமைக்காகவென்னலாம் लज्जा भवन्ति, काणा भवन्ति என்று சில சிறு க்லேசங்கள் ப்ரமாணஸித்த

**उपक्लेश**ங்களும் வருமென்று **भीत**னாய் ப்ராயச்சித்தம் பண்ண ப்ராப்தம்.

ஆகையால் **उपक्लेश**ங்களும், இங்குற்ற **भगवदनुभव**த்துக்குக் **करणाशक्ति-ज्ञानसङ्कोच-दुःखादि**களடியாக வரும் **विच्छेदसङ்कोच**ங்களும், நியதாயுஸ்ஸுக்களல்லாதார்க்கு **आयुर्वृद्धि**யாலே **परमफल**த்துக்கு **विलम्ब**மும் **प्रसक्ति**யாமைக்குப் **पुनःप्रपदन**ம் பண்ணுகிறது. இது வேண்டா வென்பார்க்கும் **निषिद्ध**ங்களை க்ஷமிக்கிற ந்யாயத்தாலே இதுவும் க்ஷமாவிஷயமாகையாலே இதுவே உசிதம். **बुद्धिपूर्वोत्तराघ**த்துக்கும் ஏற்கனவே ப்ரபத்தி பண்ண வொண்ணுமென்னு மிடமும், முன்பு கோலி(ரி)ன **फल**மொழிய **फलान्तरार्थ**மாகப் **प्रपत्त्यन्तर**ம் பண்ணுகையில் விரோதமில்லை யென்னுமிடமும் முன்பே **समर्थि**த்தோம். இப்படி **भगवदाज्ञासिद्ध**மான **सदाचारानुपालन**த்திலும் விரோதமில்லாமை கண்டு கொள்வது

"प्रपन्नस्य निषिद्धैरप्यलेपमुपपादयन् । यथाभिमतसद्वृत्तनिष्ठेभ्यः किमसूयति ॥

आज्ञातिलङ्घने यस्य रक्षकत्वं न भज्यते । आज्ञानुपालने तस्य कथं तदुपरुद्ध्यते ॥

---

மாகையால் அவை நேராமைக்குமென்று ஏன் சொல்லலாகாது. இவை மூலமான **भगवदनुभवभङ्ग**மும், அநியதாயுஸ்ஸுக்குப் பாபபலனை யநுபவிப்பதற்காக ஆயுளை வளர்த்திநல் **फल**விளம்பமும் நேராமைக்காகவும் ப்ராயச்சித்த மென்னலாம். ஆச ப்ராயச்சித்த வசனத்தாலே ஈச்வரனுக்கு நிக்ரஹ ஸங்கல்ப்பமும் ஸித்தம். இது இத்யாதி வசநபூஷணத்திலே **'यद् पुनश्शरणं व्रजेत्'** என்பதற்கு முன் செய்த ப்ரபத்தியின் அநுஸந்தாநம்மட்டுமென்று பொருள் கூறியதால் ப்ராயச்சித்தம் வேண்டாமென்று சிலர் கூறுவர். ப்ராயச்சித்தம் செய்யாவிட்டால் நிஷித்தங்களை க்ஷமிப்பது எப்படி? ஈச்வரன் தானே க்ஷமிக்கிறனெனனில்–புந: ப்ரபத்தி செய்தால் அதையும் அவனே க்ஷமிப்பானென்று நினைத்து ப்ராயச்சித்தமே செய்துவிடலாம். 'முன் செய்த ப்ரபத்தியே உத்தராகத்துக்கும் ப்ராயச்சித்தமாவதால் ப்ராயச்சித்தம் வேண்டா என்றே இவ்வசநமறிவிக்கிற தென்னில்—இது முன்னமே நிரஸிக்கப்பட்டது. புந: ப்ரபத்தி செய்தால் **सकृदेव प्रपन्नाय** என்பதற்கு விருத்தமாகுமே யென்னலுமாகாது. எந்தப் பலனுக்காக ப்ரபத்தி செய்தோமோ அதற்காக மீண்டும் ப்ரபத்தி தகாது. மற்ற ப்ரபத்தி **आराधनार्थ** ப்ரபத்தி போல் கூடும். இதுபோல் நித்ய கர்மாநுஷ்டாநம் செய்தால் ப்ரஹ்மாஸ்த்ரமான ப்ரபத்தி கைவிடுமென்பதும் தகாது. ப்ரபத்திக்காக நித்ய கர்மாநுஷ்டாநம் செய்யவில்லையே. நித்ய கர்மாநுஷ்டாநம் **'सर्वधर्मान् परित्यज्य'** என்று வேண்டா என்றதால் தோஷமாகுமென்னில்—நிஷித்த கர்மாநுஷ்டானமே லேபிக்காதென்ற போது இந்த தோஷம் எப்படி லேபிக்கும். உண்மையில் **'मध्यमां वृत्तिमास्थितः'** என்று ஆஜ்ஞாநுபாலநம் செய்ய விதித்திருப்பதால் இது எம்பெருமானுக்கு உவப்புக்கே யாகும்; நிக்ரஹ காரணமாகாது **प्रपन्नस्येति**. ஆகையால் ஸதாசார நிஷ்டர் விஷயத்தில் ஏன் அஸூயைப் படவேண்டும். **आज्ञेति**. ஆஜ்ஞை மீறி நிஷித்தாநுஷ்டாநம் செய்தாலும் ரக்ஷணத்திற்கு **भङ्ग**மில்லை யென்றபோது ஆஜ்ஞையை ரக்ஷித்தால் ஈச்வர

न चाचारं विना किञ्चित् कैङ्कर्यमुपपद्यते । न हि शौचमकृत्वैव समाराधनमर्हति ॥
'आचारप्रभवो धर्मो धर्मस्य प्रभुरच्युतः' । इति पञ्चमवेदेऽपि सर्वशास्त्रार्थ ईरितः ॥
प्रपत्तिप्रतिसन्धानमार्यैर्यदुपदिश्यते । तत् स्वाधिकारनियतहानोपादानसिद्धये ॥
प्रतिसन्धानतो हि स्यादधीपूर्वेष्वलेपधीः । बुद्धिपूर्वेष्वपि पुनःप्रपत्तेरेव संग्रहः ॥
अतो निरपराधेन वर्तितव्यं कृतात्मना । अपराधप्रसङ्गे च पुनःप्रपदनं क्षमम् ॥

அடியிலே निरपराधனாகவேணுமென்று கோலி(ரி) ப்ரபத்தி பண்ணினவனுக்கும், பின்பு இதுக்காகப் प्रपत्यन्तरம் பண்ணினவனுக்கும் उत्तरकृत्यம் निरपराधமாகவே நடக்கும்.

इतिहासपुराणங்களில் சில वृत्तान्तदर्शनमात्रத்தைக்கொண்டு वचनविरोधத்தை अनादरित्து भागवतனுடைய बुद्धिपूर्वोत्तराघம் क्षन्तव्यமென்று சிலர் சொல்லுவர்கள். இதுவும் அவ்வோ ப்ரகரணங்களில் அபிப்ராயம் அறியாமல் வந்தது. மஹாராஜருக்குமுள்பட समयातिलङ्घनमात्रமான अपराधம் பெருமாள்திருவுள்ள

---

னிடமுள்ள ரக்ஷகத்வத்திற்கு भंगமேது? न चेति. சுத்திகரமான ஸந்த்யாதிகள் செய்யாதபோது கைங்கர்யமே ஸித்'லை. அதற்கு அர்ஹனாகமாட்டான். பாரதத்திலும், "ஆசார பூர்வகமாகவே தர்மாநுஷ்டாநம் செய்யவேண்டும், அதற்கே ஈச்வரன் ப்ரபு:—பலனளிப்பவன்" என்று சொல்லப்பட்டது. प्रपत्तीति. முன் செய்த ப்ரபத்தியை நினைக்கவேண்டுமென்ற வசநபூஷணத்தில் முன் செய்த ப்ரபத்தி யென்றதென்ன? எம்பெருமானுக்குத் தன்னை சேஷமாக நினைத்துப் பரதந்த்ரனை நான் செய்வதென்ன என்று வாளாவிருந்ததே முன் ப்ரபத்தி; அதை நினைத்துஇப்போதும் வாளாவிருக்க வேண்டுமென்னில்–சேஷத்வாநுஸந்தாநம் மட்டும் போதாது, भरसमर्पणமும்வேண்டும். மோக்ஷார்த்த भर ஸமர்ப்பணம் முன் செய்தது போல் उत्तराघ பரிஹாரத்திற்காக भरसमर्पणம் இப்போது குற்றத்தில் செய்யவேண்டும். முன் ப்ரபத்தி செய்ததை நினைப்பதென்று சில வாப்தரின் உபதேசமுளதே யென்னில், அது தன் அதிகாரத்திற்குத் தக்க ஹாநமும் உபாதாநமும் ஸித்திப்பதற்காக; அதாவது–நாம் முன்னமே ப்ரபந்நராயிருக்கிறோமென்றெண்ணினால் அபுத்தி பூர்வமான பாபமானது லேபிக்காதென்று புத்தி யுண்டாகும். அதற்கான ப்ராயச்சித்தத்தை விடுவதாம். புத்திபூர்வகமான பாபமாகில் தன் அசக்தியைக் கண்டு गुरुप्रायश्चित्तத்தை விடுவதாம், லகுவான ப்ரபத்தியைக் கொள்வதாமென்றே கருத்தாம். अत इति. ஆகையால் அபராதம் வராதபடி நடக்க வேண்டும், வந்தால் ப்ராயச்சித்தம்வேண்டும். ப்ரபந்நனுக்கு புத்திபூர்வ உத்தராகம்லேபிக்காதென்று ப்ரபாவத்தைக் கட்டுவதுதகாதென்றதாயிற்று.

அபராதம் வாராமைக்கு வழி யருள்கிறார் அடியிலே இதி.மோக்ஷத்திற்குப் போலே அதற்கும் ப்ரபத்தி செய்வதே வழியாம். ஸுக்ரீவன் பெருமாள் நியமித்தபடி யிசைந்து பிறகு வராமல் ஸமயாதிலங்கநம் செய்தானே = ஏற்

த்திலே **शोकाभिभव**த்தாலே **प्रतिभासि**த்து—

'न च संकुचितः पन्था येन वाली हतो गतः । समये तिष्ठ सुग्रीव मा वालिपथमन्वगाः ॥

என்று அருளிச்செய்யக் கேட்டு இளையபெருமாள், பெருமாள்தாமே தணிய விடவேண்டும்படி சீறியருளிக் கிஷ்கிந்தையிலே செல்ல,

'कृतापराधस्य हि ते नान्यत् पश्याम्यहं क्षमम् । अन्तरेणाञ्जलिं बध्वा लक्ष्मणस्य प्रसादनात् ॥

என்று **ऐन्द्रव्याकरणपण्डितन्** மஹாராஜருக்கு **उपदेशि**த்தானிறே. அவ்வளவில் மஹாராஜரும் இசைந்து

'यदि किञ्चिदतिक्रान्तं विश्वासात् प्रणयेन वा । प्रेष्यस्य क्षमितव्यं मे न कश्चिन्नापराध्यति ॥

என்று விண்ணப்பம் செய்யவேண்டிற்று. அப்போது இளையபெருமாளுக்கும் தாம் மிகுதியாகச் சொன்ன வார்த்தைகளுக்கு

'यच्च शोकाभिभूतस्य श्रुत्वा रामस्य भाषितम् । मया त्वं परुषाण्युक्तस्तच्च त्वं क्षन्तुमर्हसि ॥'

என்று க்ஷமைகொள்ளவேண்டிற்று. இப்படி ப்ரபந்நனுக்கும் **प्रारब्धकर्म-विशेष**ங்களாலே **बुद्धिपूर्वोत्तराघ**ம் புகுர(புக)வும் கூடும், அவை புகுந்தால் **अनु-ताप**னாய் க்ஷமை கொள்ளவும் வேணும்.

**'न धर्मनिष्ठोऽस्मि'**, 'குளித்து மூன்றனலை யோம்புங் குறி கொளந்தணமை தன்னை யொளித்திட்டேன்' **इत्यादि**களும் **कर्मयोगादि**களுக்கு சக்தி யில்லாமை சொல்லுகிறனவத்தனை; **यथाशक्ति भगवदाज्ञानुपालन**த்தைத் தவிரச் சொல்லு கிறனவன்று.

---

பாட்டைமீறினனே; அதைப் பெருமாள் பொறுத்தாரே யல்லது சிக்ஷிக்கவில்லை யே; அதனால் **उत्तराघ**மில்லையென்னில், அது அந்த ஸந்தர்பத்திற்கு விருத்த மாகும். **प्रेष्यस्य क्षमितव्यं मे** என்று ஸுக்ரீவனே க்ஷமாப்ரார்த்தனை செய் திருக்கிறானே. இதனால் பாபமும் வரலாம்; பிராயச்சித்தமும் வேண்டுமென்ற தாயிற்று. இந்த ராமாயணச்லோக விஷயவிரிவு அபராதபரிஹாராதிகாரத்தில். இதுபோல் புராணத்தில் அக்ரூரர் ஸ்யமந்தகமணிக்காகச் செய்த சூழ்ச்சி போன்றதையும் கொள்க. **प्रतिभासि**த்து = அபராதம் தோன்ற; தணியவிட வேண்டும்படி என்றவிடத்தில் விட என்பது இராமலிருக்கலாம்; அல்லது கிஷ்கிந்தை சென்றாலல்லது இவர் தணியமாட்டாரென்று இவர் தணிவ தற்காகப் பெருமாள் இவரை யனுப்ப வேண்டும்படி என்றதாம். **ऐन्द्रव्याकरणे**தி. **नूनं व्याकरणं कृत्स्नमनेन बहुधाश्रुतम्** என்றதால் **पाणिनीय**த்திற் போலே மற்ற ஐந்த்ரம் முதலான வ்யாகரணாதிகளிலும் பண்டிதர் ஹனுமார். மஹாராஜ னிலும் ஸுக்ரீவன் நீசன்; தாஸர் இளையபெருமாள் உச்சர். சரணாகதியே தகுமென்றாற் போன்றது அவருபதேசம்.

**'न धर्मनिष्ठोऽस्मि'**(स्तो.२.)இதி. இதற்கு நான் நித்யகர்மாநுஷ்டாநம் செய்யா திருக்கிறேனென்று பொருளல்ல; கர்மயோகத்திற்கு அநர்ஹனென்றதாம். 'தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் 25. ஸ்நாநம் செய்து மூன்று அநலை = வைதிகாக்நிகளை ஓம்பும்-ஆராதிப்பதற்கான குறிகொள்-அவதாநம்

ஆகையால் ப்ரபந்நனுக்கும் ब्राह्मण्यादिविशिष्टशरीरம் விடுமளவும் அவ்வோ जात्यादिகளுக்கு ஈடான भगवदाज्ञानुपालनம் कर्तव्यம்.

आहारग्रह (गृहो) मन्त्रार्थजात्यादिनियमैर्युतः । कुर्याल्लक्ष्मीशकैङ्कर्यं शक्त्याऽनन्यप्रयोजनः ॥

आचारात्मगुणोपायपुरुषार्थविशेषतः । अधिकारिणि वैशिष्ट्यं प्रकृष्येतोत्तरोत्तरम् ॥

---

*கொள்ளுகின்ற அந்தணமைதன்னை = ப்ராஹ்மணத்தன்மையை விட்டுவிட்டேனென்பதற்கும் ब्राह्मणனுக்குரிய கர்மயோகாதிகாரமில்லை யென்பதிலேயே நோக்காம். ஆக ஜாதி போகாதென்று கீழே நாம் சொல்லியதால் ஆத்மாவுக்குநேராக ஜாதியிராமற் போனாலும் அந்தந்த ஜாதிசரீரத்திற்குரிய कार्या. कार्यविवेकம் செய்யவேண்டுமென்று சாஸ்த்ரமாகையால் अकृत्यकरण कृत्याकरण மிரண்டும் தகா. ஆஜ்ஞாநுபாலநம் அவச்யமாகையாலே ஸகல நியமங்களும் வேண்டும். இதனால் அதிகாரிக்கு வைலக்ஷண்யமும் உண்டென்கிறார் आहारेति. சரமச்லோகாதிகாரத்திலும் முதற்பாதார்த்த முடிவில் இக்காரிகை வரும். ஆஹார நியமத்தை ஆஹார நியமமென்ற ரஹஸ்ய க்ரந்தத்திலிருந்து தெளிவது. ஸ்ரீபாஷ்யத்தில் ஜாதிதுஷ்டம், ஆச்ரயதுஷ்டம், நிமித்ததுஷ்டம் என்னவாம் அந்நத்தை விடவேண்டுமென்றருளினார். गृह என்ற பாடத்தில் गृह நியமமாவது—ப்ரபந்நன் வஸிக்கும் ஸ்த்தலநியமமென்றுரைப்பர். அப்போது ஸ்த்தல என்றோ ஸ்த்தாந என்றோ பாடம் தகும். ग्रह என்ற பாடத்தில் ப்ரதிக்ரஹ நியமம் அல்லது ஜ்ஞாநநியமம் சொல்லப்படும். கீழே 'कुलटाषण्ढ' என்ற ஸ்ம்ருதியால் சில ப்ரதிக்ரஹம் தகா என்றனரே. सदाचार्य மூலம் பெற்ற ஜ்ஞாநமே கைங்கர்யத்திற்கு உபயோகியாகும். मन्त्रनियमமாவது அவரவர்ஸூத்ரத்தில் அந்தந்தக் கார்யத்திற்கு உபதிஷ்டமான மந்த்ரமே தகுமென்றது. अर्थமாவது தநம். கைங்கர்யத்திற்குச் சில தனம் நிஷேதிக்கப்பட்டது. அல்லது अर्थநியமமாவது கீழே மந்த்ர ப்ரஸ்தாவத்தால் அதனுடைய அர்த்த நியமம்; அதாவது—சரீரம்மட்டில் நிற்காமல் தேவதாந்தராந்தர்யாமிபர்யந்தமாக பதார்த்தத்தைக் கொள்வது. ஜாதிநியமம்—ப்ராஹ்மண்யாதி ஜாதி வ்யவஸ்த்தை. ஆதிபதத்தால் 'ஆச்ரம-கோத்ர. ப்ரவர, சரண. குல. தேச. கால. அவஸ்த்தா. குண. ஸமயாதிகள் சற்று முன்பு மூலத்திற் கூறப்பட்டவைகள் கொள்ளத் தகும். லக்ஷ்மீச கைங்கர்யமென்றதால் ஆஜ்ஞாநுஜ்ஞா கைங்கர்யங்களிரண்டிற்கும் இந்நியமங்கள் வேண்டுமென்றதாம். शक्त्या = சக்திக்குத் தக்கவாறு. अनन्यप्रयोजनः—இவை ப்ரபத்திக்கு அங்கமல்ல; நியமநத்திற்கு அஞ்சிச் செய்வதன்றி ஸ்வயம்ப்ரயோஜநமாக ப்ரீதியுடன் செய்யவேண்டுமென்றபடி. இப்படி செய்வதெல்லாம் ஆசாரம். இதற்கு மேலாகப் பெறவேண்டும் உத்கர்ஷ காரணமுமுண்டென்கிறார் आचारेति. ஆசாராதி பதங்களோடே விசேஷபதத்தைச் சேர்க்க. ஸ்நாந ஸந்த்யாதி ஆசாரங்களில் ஏற்றச் சுருக்குக்கிடாக அதிகாரிக்குள்ள மேன்மையில் ஏற்றச் சுருக்கு; ஆத்ம குணங்களில் "दया सर्वभूतेषु क्षान्तिः*

இப்ப்ரபாவநியமம்ரஹஸ்யத்ரயத்திலீச்வரனுடையப்ரசாஸித்ருத்வாதிகுணானுபந்தமாகஅனுஸந்தேயம்.

தகவாற் றரிக்கின்ற தன்னடியார்களைத் தன்றிறத்தில்
மிகவாதரஞ் செய்யு மெய்யருள் வித்தகன் மெய்யுரையின்
அகவா யறிந்தவ ராரணநீதி நெறிகுலைதல்
உகவாரென வெங்கள் தேசிக ருண்மை யுரைத்தனரே. 32

चातुर्वर्ण्यचतुर्विधाश्रममुखे भेदे यथावस्थिते वृत्तं तन्नियतं गुणानुगुणया वृत्त्या विशिष्टं श्रिताः ।
त्यागोपप्लवनित्यदूरशरणव्रज्याविधौ कोविदाश्चिन्तामभ्युपगन्तुमन्तिमयुगेऽप्येकान्तिनस्सन्ति नः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे प्रभावव्यवस्थाधिकारः पञ्चविंशः ॥ 25

—o—o—

अनसूया शौचमनायासो मङ्गलम् अकार्पण्यम् अस्पृहा” என்று गौतमसूत्रத்திற் சொன்னவை எட்டாம். அவற்றிலும் விசேஷமுண்டு. நாற்பது ஸம்ஸ்காரங்களென்ற ஆசாரங்களைக் கீழே கூறி அவற்றைவிட இவ்வாத்மகுணங்களுக்கே சிறப்பென்றார் அங்கு. உபாயவிசேஷமாவது—தேவதாந்தர பஜநாதிகளை விட்டு பகவத்பஜநாதிகளைக் கொள்வது. புருஷார்த்த விசேஷமாவது—மோக்ஷத்தை விரும்புவது. இந்த ஆசாராதிகளில் சிலர் ஆசாராதிகளைவிடச் சிலர் ஆசாராதிகள் ச்ரேஷ்ட மென்பது போல் இவற்றில் பூர்வ பூர்வத்தைவிட உத்தரோத்தரம்=ஆத்மகுணாதிகம் ச்ரேஷ்டமென்பதுமாம்.

இப்படி ப்ரபாவத்திற்கு வரம்பு விரித்து உரைக்கப்பெற்றது. இது भगवदाज्ञாஸித்தமாகையாலே பகவத்குணத்தை யநுஸந்திக்கும் ரஹஸ்ய பதத்தில் இதையும் சேர்த்தநுஸந்திப்பதென்கிறார் இப்ரபாவேதி.

ப்ரபந்நர் சாஸநத்தை மீறலாகாதென்பது பூர்வாசார்ய உபதேசமென்கிறார் பாசுரத்தால் தகவாலிதி. தகவால் தரிக்கின்ற—கருணையினாலே=பக்த்யுபாயம் செய்ய வாகாமையினால் ப்ரபத்தி செய்து பகவத்க்ருபையினாலேயே ஆத்ம தாரணம் பெற்றிருக்கிற. தன் அடியார்களை—ப்ரபந்நரான தனது தாஸர்களை. தன் திறத்தில்-தனது தர்மத்தில் தன் ஸாதர்ம்யத்தில்; அதைப்பெறுவிக்க மிக=அதிகமாக ஆதரம் செய்யும்—ஆதரிக்கின்ற, மெய் அருள்=தடுக்க வாகாத க்ருபையை யுடைய வித்தகன்—ஆச்சர்ய புருஷனின். மெய் உரையின்—ஸத்யமான சரம ச்லோகரூப ஸ்ரீஸூக்தியின் அகவாய்=உட்புறத்தை—கருத்தை அறிந்தவர்=அறிந்த மஹான்கள் வ்யாஸாதிகள் ஆரணம் நீதி—வேதாந்த சாஸனத்தின் நெறி-மார்கத்திற்கு குலைதல்—கேட்டை, உகவார்-ஸம்மதிக்கமாட்டார்கள் என—என்று எங்கள் தேசிகர் நம்மாசார்யபரம்பரையிலிருப்பவர்கள். உண்மை — வாஸ்தவார்த்தத்தை உரைத்தனர்—உபதேசித்தனர். ப்ரபன்னரும் விதிநிஷேதங்களுக்குட்பட வேண்டுமென்றபடி.

இப்படி ஆஜ்ஞாநுபாலநம் செய்யும் அதிகாரிகள் கலிமுழுதிலும் இருப்பரென்கிறார். चातुर्वर्ण्येति. चत्वारो वर्णा एव चातुर्वर्ण्यम्. ப்ராஹ்மணாதிகளான நாலு

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः
# प्रभावरक्षाधिकारः
## ப்ரபாவரக்ஷாதிகாரம்–26

शिलादेः स्त्रीत्वादिविपरिणतिरस्त्वद्भुतमिदं ततोऽप्येतच्चित्रं यदुत दहनस्यैव हिमता ।

---

வர்ணங்கள்; **चतुर्विधाश्रमम்**, ப்ரஹ்மசர்யாதிகளான நாலு ஆச்ரமங்கள்; இவை முதலான **भेदம் यथावस्थिते** முன்போலிருப்பதாலே **तन्नियतं**–அந்த வர்ணாதிகளுக்கு அவச்யமான **वृत्तम्**–ஆசாரத்தை **गुणानुगुणया**–தங்கள் பாரமைகாந்த்யாதி குணங்களுக்குத் தக்கதான **वृत्त्या**—ஜீவந வ்ருத்தியோடு, **विशिष्टं**—கூடியிருப்பதாக **श्रिताः**—அடைந்தவராய், **त्याग**—ஸர்வ தர்ம ஸ்வரூப த்யாகமாகிற **उपप्लव**—கேட்டுக்கு **नित्यदूरे**–மிகவும் அப்பாலிருக்கிற; தர்மத்தை விடாத **शरण वरणविधौ**–சரணாகத்யநுஷ்டாநத்திலே **कोविदाः**–ஸமர்த்தர்களுமாய் **एकान्तिनः**-பகவானையே பற்றியிருப்பவர்கள் **चिन्तां**—இங்குச் செய்த நமது விசாரத்தை **अभ्युपगन्तुं**—இசைவதற்கு **सन्ति**–இருக்கின்றனர். பிறர் சொல்வது தவறென்றும் நாம் சொல்வதுசரியென்றும்கொண்டுஇதனை யாதரித்தேஸத்தையைப் பெறக்கூடும் மஹான்கள் இக் கலி முழுதுமிருப்பார்களென்பது நிச்சயமென்றபடி. **त्याग**—அடியோடு கர்மத்யாகம்; **उपप्लव**—அதில் சில மாற்றல் செய்வதென்னலுமாம்.

ப்ரபாவவ்யவஸ்த்தாதிகாரம் முற்றும். 25.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

## ப்ரபாவரக்ஷாதிகாரம். 26.

இப்படி ப்ரபந்நனுக்கு உத்க்ருஷ்டஜாதிப்ராப்தி, உச்சிஷ்டபாவநத்வம், **उत्तराघाश्लेष**மென்றவை போன்ற ப்ரபாவங்களை யிசையாமல் வாக்யங்களுக்கு வேறு தாத்பர்யம் கொள்வதாகில், ப்ரபாவத்தையே இசையவேண்டாவே யென்ற சங்கையில் சில ப்ரபாவங்களை அங்கீகரித்தாக வேண்டுமென்று இங்கு ப்ரபாவரக்ஷணம் செய்கிறார். **घोर**மான அபராதங்களைச் செய்து அபரிசுத்தனான ஆத்மாவுக்கும் ப்ரபத்தியால் அடுத்த க்ஷணத்தில் பிறரையும் சுத்தி செய்யுமளவுக்கு சக்தியுண்டாமென்னும் ப்ரபாவமுண்டு. அது எளிதில் இசையத்தக்கதாகாதென்னுமைக்காகப் பல அத்புதங்கள் பகவத்ப்ரபாவ மூலமாக உள்ளவற்றை ச்லோகத்தில் உதாஹரிக்கிறார். இவைபோலே ப்ராமாணிகமான ப்ரபந்ந ப்ரபாவமும் கூடுமென்று கருத்து. **शिलादेरिति. शिलादेः**–கல்முதலானவற்றுக்கு **स्त्रीत्वादि**—பெண்ணுகைமுதலான **विपरिणतिः**–மாறுதலாகிற **इदं**–ப்ரத்யக்ஷஸித்தமான **अद्भुतं**–ஆச்சர்யமானது **अस्तु**–இருக்கட்டும். ச்ரீராமனின் திருவடி ஸம்பந்தத்தாலே கல் அஹல்யையென்கிற ஸ்த்ரீயாயிற்று. கர்ப்பத்தினின்று வந்த கரிக்கட்டை ச்ரீக்ருஷ்ணனின் திருவடிஸம்பந்தத்தினால் பரீக்ஷிந்மஹாராஜனும் புருஷனாயிற்று. இரண்டவதாரங்களிலும் மரணமடைந்த சிசு உயிர் பெற்றது. இவையெல்லாம் உலகிலெங்கும் காணாமையாலே ஆச்சர்யமே. பால் தயிராகின்றது போல் ஒன்று மற்றொன்றாக மாறுவது ஸஹஜம். அசேதநம் சேதநமாவது போன்றவை

तृणस्यैवास्त्रत्वं रिपुषु निहतेरेव हितता पदत्रेणैवेह त्रिभुवनपरित्राणमिति च ॥

**उपायप्रभावव्यवस्थै** சொன்னோம்; இனிமேல் **उपायप्रभावத்தை संकुचितமாகப்** பார்த்து வரும் தப்புகள் பரிஹரிக்கிறோம்—

'अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते' என்கிற கணக்கிலே—

---

ஆச்சர்யங்களேயென்றபடி. இவைநிற்க; மேலான ஆச்சர்யமுமுண்டென்கிறார் **तत** இதி. **ततोऽपि** அதைக்காட்டிலும் **एतत्**—மேலே சொல்லப்படுவது **चित्रम्** ஆச்சர்யமாகும், அது எதென்னில் **यदित्यादि—यत् वत—**(யாதொன்று ப்ரஸித்தமோ) என்பது ஒவ்வொன்றிலும் சேரும். மேலே **हिमता**முதலான **प्रथमान्त**மான சொல் ஒவ்வொன்றிலும் **इति** என்ற சொல் சேரும். **हिमतेति यदुत, अस्त्रत्वमिति यदुत, हिततेति यदुत, परित्राणमिति च यदुत. एतत् ततोऽपि चित्रम्** என வந்வயம். அர்த்தமாவது **दहनस्यैव**—லங்கையைக் கொளுத்துகின்ற ஆஞ்ஜனேயனின் வால்நெருப்புக்கே **हिमता**—உஷ்ணஸ்பர்சம்(சூடு)இன்றி சீதஸ்பர்சமென்பது யாதொன்றோ, அது மிக ஆச்சர்யமாம். கல்லாயிருக்கையும் ஸ்த்ரீயாகையும் காலபேதத்தால் கூடலாம். நெருப்பு எரித்துக் கொண்டே உஷ்ணஸ்பர்சஸமயத்திலேயே சீதஸ்பர்சமாகை மிக்க ஆச்சர்யம். காகாஸுரனுக்கு ஏவிய **तृणस्यैव**—புல்லுக்கே—புல் புல்லாயிருக்கும்போதே **अस्त्रत्वं**—ப்ரஹ்மாஸ்த்ரமாகையும் அப்படியே. **रिपुषु**—சத்ருக்கள்விஷயத்தில் ஏற்பட்ட **निहतेः एव**—வதைக்கே **हितता**—ஸுகத்தையுண்டுபண்ணும்தன்மை அப்படியே. வாலி கபந்த விராத **पूतना**யமளார்ஜுநாதிகளுக்கு பகவன் மூலமாக ஏற்பட்ட வதை அடுத்த க்ஷணத்திலேயே நன்மைக்கானமை ப்ரமாணஸித்தம். **पदत्रेण एव**—ச்ரீராமபாதுகையினலேயே—மரவடியாயிருக்கும் நிலையிலேயே **इह**—இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் **त्रिभुवनपरित्राणम्**—மூவுலகையும் ரக்ஷிக்கை யென்பதும் அப்படியாச்சர்யமே யென்றபடி.

முன்னதிகாரத்திலே ப்ரபாவ விஷயம் சொல்லியாயிற்றே;மீண்டுமெதற்கு என்னுமைக்காக இரண்டதிகாரங்களுக்கும் விஷயபேதம் கூறுகிறார் இவ் உபாயேதி. இவ் வதிகாரத்தில் ப்ரபத்திக்கு ப்ராரப்தநிவர்த்தகத்வாதிப்ரபாவமுண்டென்றும், முமுக்ஷுக்களாய் உபாயத்திலிழிந்தார்க்கு பணப்பற்று மூலமாகச் சில வைபரீத்யமிருந்தாலும் அவர்களை அவமதிப்பது தவறென்றும், ஸத்துக்கள் போலே நடிப்பவர்களையும் (நாமஸங்கீர்த்தந. க்ஷேத்ரவாஸாதிகளின் ப்ரபாவமறிந்து) அவர்கள் செய்வது நடநமென்று தெரியும் வரை உபசரிக்க வேண்டுமென்றும் உபதேசிக்கப்போகிறார். பூர்வபக்ஷி ப்ரபத்திக்கு **प्रारब्ध कर्मनाशकत्व**ம் போன்ற ப்ரமாணஸித்த ப்ரபாவத்தை மறுக்கப் போகின்றவனாய் அதற்கு சேஷமாக, நமது ஸித்தாந்தத்தை **अत्युत्कटैः**— என்று ஆரம்பித்து, வாக்யத்திற்கு அபிப்ராயமென்ற வளவால் அநுவாதம் செய்கிறான். ப்ரபத்திக்கு பக்தியைப் போலே ஸஞ்சித கர்மநாசகத்வமும் கூடுமென்பதற்கு பாபவிசேஷத்தை த்ருஷ்டாந்தமாக்கி ப்ரமாணம் காட்ட 'अत्युत्कटैः' என்றது. **विहगेन्द्रसंहिते**யில் இது என்பர். புண்யத்திற்கும் பாப

'उपायभक्तिः प्रारब्धव्यतिरिक्ताघनाशिनी । साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी ॥'

என்கையாலே प्रारब्धங்களையுங்கூட அமுக்கித் தன் फलத்தைக் கொடுக்க வற்றான ப்ரபத்தியைப் பண்ணினவனுக்கு विद्यान्तरन्यायத்தாலே उत्तरपूर्वाघங்களும், இவ்வித்யைக்குத் தன்னேற்றமான सामर्थ्यத்தாலே प्रारब्धकर्मफलத்தைப்பற்ற உண்டான आर्तिயிலே எல்லைக்கு ஈடாக क्षणान्तर–दिवसान्तर–जन्मान्तराद्यनुवृत्तियும் கழியக் கடவதென்று 'मा शुचः' என்கிற வாக்யத்துக்கு अभिप्रायம்.

இவ்வர்த்தம் तत्त्वமாகில் प्रारब्धधर्मविशेषफलமாய்க்கொண்டு வருகிற துக்கங்களும் துக்ககாரணங்களான கர்மங்களினுடைய मार्जनமும் கழியவேண்டாவோ? आर्तिயைப் புருஷன் अर्थिக்கக்கொடுக்கவேணுமென்னில்—आनुषङ्गिकமான पङ्क्तिपावनत्वादिகளைப்போலே अनभिसंहितங்களையுங்கூட हितैषियான ஈச்வரன் தானே கொடுக்கத் தட்டு என்? இப்படிச்செய்யக் காணாமையால் சோகவிஷயமான அம்சமெல்லாம் निश्शेषமாகப் प्रपत्तिயாலே கழியுமென்றவிடம் प्रपत्ति-प्रभावातिशयத்தைப் பற்ற स्तुति பண்ணினபடி யென்று சிலர் இதின் ப்ரபா

---

த்திற்கும் பெரும்பாலும் ஜந்மாந்தரத்திலே பலன் பெறவாமென்றாலும் अत्युत्कटैः—மிக ப்ரடலமான புண்யங்களாலும் பாபங்களாலும் வரும் பலத்தை அதே ஜந்மத்திலேயே அநுபவிக்கிறான். இதுபோல் ப்ரபத்திக்கும் प्रारब्धनाश-कत्वம் கூடுமென்றபடி. उपायभक्तिः என்கிற ச்லோகத்தின் பொருள் முன்னமே கூறப்பட்டது. அமுக்கி–அழித்து; கொடுக்கவற்றான = கொடுக்க வல்லதான. विद्यान्तरம்–உபாய பக்தி—பக்திமார்க்கம். இவ்வித்யை साध्य (உபாயமாகாத) भक्ति—ப்ரபத்தி, தன் ஏற்றமான = தனக்கு அஸாதாரணமான—சிறந்த; सामर्थ्यம் = प्रारब्धांशनाशकत्वம். आर्ति = த்வேஷம். எவ்வளவு ப்ராரப்தத்தை நிவ்ருத்தி செய்யுமென்ன, ஆர்த்தி யுள்ளவனுடைய அபேக்ஷையை யநுஸரித்து அதாகுமென்கிறார் क्षणान्तरेत्यादियால்.

இப்படி அநுவாதம் செய்த பிறகு பூர்வபக்ஷி இதில் தன் ஆக்ஷேபத்தைத் தெரிவிக்கிறான் இவ்வர்த்தம் இதி. தேஹாவஸாநத்திற்குப் பிறகான ப்ராரப்த கர்மபலம் கழிகிறாப் போலே தேஹாவஸாநத்திற்கு முன் ஜீவித்திருக்கும் காலத்திலும் ப்ராரப்த பலமான துக்கம் வராமலிருக்கட்டுமே; துஷ்ட கார்யங்களில் ப்ரவ்ருத்தியும் வராமலிருக்கட்டுமே. இனி ப்ரபத்தியானது அபேக்ஷித்த பலனைத்தானே கொடுக்கும்; தேஹாவஸாநத்திற்கு முன் உள்ள விஷயத்தில் இவன் ஒன்றும் கேட்க வில்லையே யென்னில்; ப்ரபந்நருக்கு ஈச்வரன் பரிசுத்தியையுண்டாக்குவதோடு भोजनादिகளில் அவர் சேர்ந்த பங்க்திக்கே பரிசுத்தியை யுண்டுபண்ணும் யோக்யதையையும், शरीरारोग्यं अर्थांश्च भोगांश्चैवानुषंगिकान् என்றாற் போலே சிலருக்குச் சில பலன்களையும் கொடுக்கிறானே; அதது அவர் கேட்டதன்றே, அவர் அதனை நினைக்கவே யில்லையே. இப்படி अनभिसंहितமான = அபேக்ஷிக்கப்படாத பலன்களைத் தானே கொடுக்கிறவன் துக்கநிவ்ருத்தியையும் துக்ககாரண ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியையும் தானே கொடுக்கலாமே, அதில்லையாகையால் பங்க்திபாவநத்வாதி

வத்தை வரையிட்டுப் பார்ப்பர்கள்.

இதுக்கு உத்தரம்—अनुग्रहशीलனாய் आश्रयिப்பார்க்குப் प्रपत्तिवाक्योच्चारण-प्रारम्भத்திலே கடுக மோக்ஷம் கொடுக்கத் त्वरिக்கிற ஈச்வரன் இவனுடைய 'நசையாலே சிறிது காலம் இங்கே வைக்க இசைந்தவளவிலே இவ்விடத்திலுள்ள சிற்றின்பங்களை दुःखप्रसङ्गरहितமாக अनुभविப்பிக்குமாகில் இவனுக்கு இந் நசை ஒருகாலும் மாளாது; भगवदनुभवத்தில் भोग्यताबुद्धियும் கொழுந்து விட்டுவ[ள?]ராது, ஆகையால்

'यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम् । बान्धवैश्च वियोगेन सदा भवति दुःखितः ॥

तेन दुःखेन सन्तप्तो यदि मां न परित्यजेत् । तं प्रसादं करिष्यामि यः सुरैरपि दुर्लभः ॥

என்கிற படிகளிலே दुःखादिகளுக்குக் காரணமான प्रारब्धकर्मविशेषத்தை सन्निहितமானकशादिகளைப்போலே துணையாகக்கொண்டு पित्रादिகளைப்போலே शिक्षकனை ஈச்வரன் சில कठिनप्रकृतिகளுக்குப் பண்ணுகிற अनुग्रहविशेषம்இதென்று अनुसन्धिக்கைஉசிதம்.

---

களைச் சொன்னதும் துதிமாத்ரமே யல்லது உண்மையன்று. அதுபோல் ப்ராரப்தகர்மநிவர்த்தகத்வமுமில்லை யென்னலாமென்று உள்ள ப்ரபாவத்தையும் மறுத்துப் பூர்வபக்ஷம். வரையிட்டு= உள்ளதையும் குறைத்து.

வ்யவஸ்தாதிகாரத்தில் சில வசநங்களுக்கு வேறு தாத்பர்யம் வர்ணித்தது ப்ரமாணாந்தரவிரோதம் வாராமைக்காக. அதிராத போது பங்க்தி பாவநத்வாதிகளை ஏன் மறுக்கவேண்டும். துல்யந்யாயமாக துக்கநிவ்ருத்யாதிகளை யளிக்காமைக்குத் தக்க உபபத்தியை நாம் ஆலோசிக்க வேண்டுமேயல்லது சொன்னதை மறுக்கலாகாதென்ற கருத்தால் உபபத்தி கூறுகிறார் अनुग्रहेति. प्रारम्भத்திலே= ஸங்கல்ப்பத்திற்கு முன்னே. உத்தரக்ஷணத்திலேயே மோக்ஷம் கொடுக்கும் ப்ரபத்தியால் தேஹாவஸாநத்தில் மோக்ஷம் கேட்டானே என்று இவ்வுலகில் துக்கம் கலசாத போகத்தைச் செய்வானாகில் இவனுக்கு பகவதனுபவத்தில் த்வரை குறையும். அதற்காக இவனிடம் துக்க காரணமிராதபோது துக்கத்தை யுண்டு பண்ணமாட்டான். धननाश. बन्धुवियोगादिகளுக்குக் காரணமான ப்ராரப்த கர்மம் இவனுக்கிருந்தால் அதைத் தானாக நிவ்ருத்தி செய்யாமல் तन्मूलமான துக்கத்தைக் கொடுப்யான். இதன் மூலம் இவனுக்கு, 'தன்னிடம் தவறு இருந்தால் தனக்கு துக்கம் நேரும்' என்று அஞ்சிப் பாபத்திலிழியாமை ஸித்திக்கும். இப்படி இது புத்ரனை சிக்ஷிக்கப் பிதா கையில் கொண்ட கசை= சாட்டைப் போலாவதால் இதையநுக்ரஹமாகக் கொள்ளவேண்டும். இதைச் சொல்வதுयस्येत्यादि. எவனையனுக்ரஹிக்கவிரும்புகிறேனோ, அவனதுதனத்தையபஹரிப்பேன், பந்துக்களின் பிரிவினாலும் அதிகம் துக்கப்படுவான். அந்தத் துக்கக்கொதிப்பிலும் என்னை விடானாகில் தேவர்களுக்கும் கிடைக்காத அனுக்ரஹமளிப்பேனென்றதாம். कठिनप्रकृतिகளுக்கு= நெஞ்சுரமுள்ளவர்க்கு பாப பலனுக்கு அஞ்சிப் பாபத்தை விலக்காதவர்களுக்கு.

ஒரு வ்யாதிவிசேஷத்தை உண்டோ என்று ராஜா கேட்க, அவரும் ஓர் உபாத்யாயர் உண்டென்று பட்டர் அருளிச்செய்தார். ஆயுஸ்ஸு வளர்க்கவொண்ணுதபடி நியதாயுஸ்ஸானவனுக்கு உள்ளத்தில் உத்வேகம் பிறக்கைக்காகவும். அநியதாயுஸ்ஸுக்களுக்கு ஆயுஷ்காமீயங்களை யிட்டு வளர்க்க நினையாமைக்குமாக து:காதிகள் இவனுக்கு உபாத்யாயர்கள். இது ஆழ்வானுள்ளிட்டார்பக்கலிலே ப்ரஸித்தம். அபசாரங்களையும் தத்பலங்களையும் சிலர்க்குக் காட்டி மறைக்கிற விதுவும். 'பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல் தாங்காதுள்ளம் தள்ளுமென் தாமரைக்கண்ணு' என்று நிர்வேதபூர்த்தியைக் கடுகப் பிறப்பித்துத் தான் இசைந்த ஸம்ஸாரநிவர்த்தநத்தைக் கடுக இவனையும் இசைவிக்கைக்காக வத்தனை. இவ்விடத்தில் ப்ரதிகூலாநுபவாம்சம் துஷ்கர்மபலம். இது சிக்ஷணமாகிறதுவும் ப்ராயச்சித்தத்திலே

---

தககாதிகளை விலக்கினால் பகவதநுபவருசி கொழுந்துவிட்டுவாராதென்றிங்கு ப்ரச்நோத்தரமாகச் சொன்ன விதற்கு ந்யாஸதிலகச்லோகம்—

"भोग(शोक)स्पदांशमथनः श्रयतां भवाब्धौ रागास्पदांशसहजं न रुणत्सि दुःखम्।
नो चेदमी जगति रंगधुरीण भूयः क्षोदिष्ठभोगरसलिप्सास्तत्र न सरेयुः॥" 14

இப்படி கொள்வது பூர்வாசார்ய ஸம்மதமென்கிறார் ஒரு வ்யாதீதி. உண்டோ வென்று கேட்க என்பதன் கருத்தாவது—ப்ரபந்நனுய் ப்ரபாவசாலியாய் பரமபுருஷனின் பூர்ண ப்ரீதி விஷயமானவனுக்கு துக்க காரணமான வ்யாதி விசேஷத்தை ஈச்வரன் உண்டுபண்ணுவானே என்றதாம். உபாத்யாயர் உண்டு இதி, இந்த உபாதியானது இவனுக்கு சிக்ஷையைச் செய்கிறதாகையாலே உபாத்யாயர். उपाध्याय: என்பதற்கு உபாதியினுடைய आय:= வரவு என்றும் பொருள், ஆக उपाध्यायम् उपाध्यायராயிற்று. அதனிடத்தில் வெறுப்பின்றி மதிப்பே வேண்டும். சிக்ஷையின் ப்ரகாரத்தைக் கூறுகிறார் ஆயுஸ்ஸு இதி. சிலருக்கு ஆயுஸ்ஸு வளர்க்கவொண்ணுது; இவ்வளவுதானென்று நியதமாகும்; அவர்களுக்கு இதனுல் என்ன சிக்ஷை யென்னில்—இப்படி என்னென்ன துக்கம் நேருமோ வென்ற அச்சமும் மோக்ஷத்தில் த்வரையும் உண்டாகும். அநியதாயுஸ்ஸுக்கு ஆயுஸ்ஸில் ஆசையால் அவ்வப் போது வரும் ரோகங்களைப் பரிஹரிக்க ஆயுஷ்காமகார்யங்களைச் செய்ய ப்ரவ்ருத்தி யுண்டாம் போது அதைத் துக்காநுபவம் தடுக்கும். மோக்ஷத்தில் த்வரையாம். ஆழ்வான் உள்ளிட்டார் பக்கலில் = கூரத்தாழ்வான் போன்ற மஹநீய பூர்வாசார்யாந்தர்கதர்களிடத்தில்; ஆழ்வானுக்குக் கண்ணைப் பிடுங்கினதாலேற்பட்ட துக்கம் ப்ரஸித்தம் அதற்காக भगवत्पारम्यस्थापनத்தை விட்டாரா?

துக்கத்தை யுண்டுபண்ணுவது சிக்ஷையானுலும் துக்ககாரணமான பாகவதாபசாராதிகளை விளைவித்து அவற்றிற்கு க்ஷமாபணம் செய்வித்து நீக்குவதெதற் காகவென்ன அருளிச்செய்கிறார் அபசாரங்களையு மிதி.பாம்போடு இதி. பெரியதிருமொழி; பூங்கார் என்று பாட்டாரம்பம்.11.8 3. பாம்பு தங்கியிருக்கும் குடிசையில் வாஸம் பண்ணுவதிற் போலே என்னுடைய உள்ளமானது துக்கத்தைத் தாங்காமல் தளும்புகின்றது உன் திருக்கண்ணீர் தளர்பும்

மூட்டுகிறதுவும் उपायफलம். இவற்றில் சில शिक्षणादिகள் प्रारब्धसुकृतविशेषफलமாயும் வரும். प्राणार्थियாய் விழுந்த காகத்துக்குப் ப்ராணனைக் கொடுக்கையாலே அங்கும் प्रपत्तिफलம் பூர்ணம். दुष्प्रकृतियான இக் காகத்துக்கு शिक्षैயாக ஒரு கண்ணை வாங்கிவிட்டதுவும் निग्रहமன்று; अनुग्रहविशेषம்.

ஆகையால் आभूतसंप्लवம் நரகத்திலே கிடக்கும்படி क्षणकृतपापकर्मங்களுடைய प्रभावமான भगवन्निग्रहविशेषத்தை இசைந்தாற் போலவும், 'दुर्गसंसारकान्तारमपारमभिधावताम् । एकः कृष्णनमस्कारो मुक्तितीरस्य देशिकः ॥' என்றும், 'एकोऽपि कृष्णे सुकृतः प्रणामो दशाश्वमेधावभृथेन तुल्यः । दशाश्वमेधी पुनरेति जन्म कृष्णप्रणामी न पुनर्भवाय' என்றும் सुकृतप्रणामविशेषத்தினுடைய प्रभावத்தை இசைந்தாற்

---

என்று பொருள். வந்த அபசாரத்தை ப்ராயச்சித்தத்தால் அழிப்பது அவன் முன் பண்ணிய ஸுக்ருத பலனும். முன்னே சிக்ஷணம் சொல்லப்பட்டது; இப்போது ப்ராயச்சித்தத்தில் மூட்டுவது. இதை ப்ரபத்தியின் பலமாகவும் கொள்வர். வாங்கிவிட்டது–வாங்கியது; நிக்ரஹமன்று இதி. என்னுடைய வலக் கண்ணை எடுக்க வேணுமென்று அதுவே கேட்டுக்கொண்டதே; அது ஹிதம் ஆகையால்= துக்கத்தையும் நிவ்ருத்தி செய்யட்டுமென்கிற ப்ரதிபந்தி= எதிர்வாதம் தகாதாகையால்; आभूतसंप्लवம்—பஞ்சமஹாபூத ப்ரளயமான மஹா ப்ரளயம் வரையில். दुर्गेति. வி. த. 1—18, புகமுடியாத ஸம்ஸாரக் காட்டில் முடிவற்றுத் திரிகின்றவர்களுக்கு முக்தி யென்கிற கரையைக் காண்பிப்பதாகும் க்ருஷ்ண விஷய நமஸ்காரமொன்றே; மற்றவர் விஷயமன்று. இங்கு एकनमस्कारமென்பதற்கு ஒப்பற்ற நமஸ்காரமான பக்தியே பொருளாகலாமே யென்ன, வேறு வசனத்தையும் காட்டுகிறார் एकोऽपीति. இந்த अपिசப்தம் निसப்தம் போலாம். ப்ரச்நம் பொருள். अवभृथமாவது பூர்த்தியாக்கச் செய்யும் ஸ்நானச்சடங்கு. க்ருஷ்ண விஷயமான ஸுக்ருத ப்ரணாமமொன்று பத்து அச்வமேத யாக பூர்த்திகளுக்குத் துல்யமாகுமா; (ஆகாது; மேம்பட்டதே யாகும்) பத்து அச்வமேதம் செய்தவன் மறுபிறவி பெறுகிறானே, க்ருஷ்ண ப்ரணாமீ புநர்ஜந்மம் பெறுகைக்கு ஆகானென்றபடி. இங்கே பத்து அச்வமேதமும் ஒரு ஸுக்ருத ப்ரணாமத்திற்குத் துல்யமாகா என்று மாற்றி யன்றோ கூறவேண்டு மென்னில்—இதிலும் குற்றமில்லை. இனி, க்ருஷ்ண ப்ரணாமம் ஒன்றாயினும் பத்து அச்வமேதத்திற்குத் துல்யமென்று முதலில் கூறி, பிறகு அதில் அத்ருப்தி கொண்டு பத்துக்கு மேலாக ஒன்றுக்கே ஏற்றமென்று உத்தரார்த்தத்தில் கூறுகிறாரென்னலுமாம். இங்கே முன் ச்லோகத்திற் போலே எல்லா ப்ரணாமமும் கொள்ளலாம்; सुकृतः என்பதற்கு நன்றாகச் செய்யப்பட்ட என்று பொருளாமென்னில்—அது सुकृतप्रणामविशेषத்தினுடைய என்கிற ஸூக்திக்குப் பொருந்தாது. முதல் ச்லோகத்திலும் एकः என்பதற்கு இந்த ப்ரணாமமே பொருளென்றிங்குத் தெரிகிறது. सुकृतமென்று ப்ரணாமவிசேஷத்தின் பெயரென்று मातापिता என்கிற ச்லோகத்தில் ஸ்தோத்ரபாஷ்யத்தில் வசனம் அருளிச்செய்தார். வசநம் ஸாரப்ரகாசிகையிலு

போலவும், 'सकृदेव प्रपन्नाय', 'अथ पातकभीतस्त्वम्', 'कुयोनिष्वपि सञ्जातो यः सकृच्छरणं गतः' इत्यादிகளிற் சொல்லுகிறபடியே இப் प्रपत्तिप्रभावத்தையும் शास्त्रार्थोपप्लवप्रसंगமில்லாத விஷயத்தில் சுருங்காதே अनुसन्धिक्कप் प्राप्तம். 'तं मातापितृहन्तारमपि पाति भवादिह' என்றதுவும் उत्तराघविषयமல்லாதபோது उपप्लवமில்லை. उत्तराघ-विषयத்தில் विस्तारक्रमங்கள் முன்பே சொன்னோம்.

'शरणं च प्रपन्नानां तवास्मीति च याचताम् । प्रसादं पितृहन्तॄणामपि कुर्वन्ति साधवः ॥'

इत्यादिகளும் இப்படிக்கு सुघटितங்கள்.

நம் दर्शनத்திலே நிலையுடையராய் முமுக்ஷுக்களாய் कर्म-ज्ञान-भक्ति-प्रपत्तिகளில் ஏதேனும் ஒரு शास्त्रीयमर्यादैயாலே भगवत्प्रवणரானார்க்கு यतमानसंज्ञाद्यवस्थै

---

யெடுக்கப்பட்டுள்ளது. எல்லா ப்ரணாமங்களும் மோக்ஷஹேதுவாகலாம். அவற்றில் இதற்குச் சிறிது ஏற்றம். எந்த நமஸ்காரமும் நிஷ்காமமானபோதே மோக்ஷஹேது. அதில் ப்ரபத்தியை யிசைந்தவர்க்கு ப்ரபத்திமூலமாய் அது அதே ஜன்மத்தில் மோக்ஷஹேதுவாம். அச்வமேதங்களை நிஷ்காமமாகச் செய்கின்றவனுக்கு பக்தியே உபாயமாவதால் புநர்ஜன்மத்திற்கும் இடமுண்டென்று கருத்து. மேலே தேவதை அதன் பாரம்யம் எல்லாம் அறியாமலும் அச்வமேதம் செய்வானென்பர். கிருஷ்ண நமஸ்காரமப்படியன்று. அதனாலும் சிறப்பாம். सकृदेवेत्यादि வாக்யங்கள் முன்னமே உரைக்கப்பெற்றன. कुयोनिष्वपि என்கிற ச்லோகத்திற்கு உத்தரார்த்தம் மேலே யெடுக்கும் तं मातापितृ—हन्तारम्—என்பதாகும். न्यायोपाय சோதநாதிகாரத்திற் காண்க. शास्त्रेति. उपप्लव மாவது விரோதம். பாகவதனைபோது சூத்ரனுக்கு ப்ராஹ்மண்யத்தை இசைந்தால் சூத்ரபாகவதனுக்கும் ப்ராஹ்மண பாகவதனுக்கும் ஆசாராதிபேதம் பணிக்கும் சாஸ்த்ரத்திற்கு விரோதம் வருமே; அதுபோல் ப்ரபத்திக்கு ப்ரபாவம் இசைந்தால் ஒரு சாஸ்த்ரத்திற்கும் பீடையில்லையென்றபடி. उत्तराघेति. ப்ரபத்திக்கு முன் மாத்ருபித்ருஹத்தியினால் गुरुप्रायश्चित्तம் செய்யமாட்டாதவனுக்கு ப்ரபத்தி செய்வதே ப்ராயச்சித்தமாகும். उत्तराघமாகில் பூர்வ ப்ரபத்தியானது ப்ராயச்சித்தமாகாது; அதற்குத் தனியே ஏதேனும் செய்யவேண்டியதாகுமென்றபடி. शरणं च என்கிற ச்லோகம் வி. த. 106. 53. முன் ச்லோகத்தில் ஸர்வேச்வரன் ரக்ஷிக்கிறானென்றது; இது ஸாதுக்களும் அவ்வாறே ஈச்வரன் ரக்ஷிக்கும்படி நடக்கிறார்களென்கிறது. நிர்வாஹம் ஸமம்.

இப்படி ப்ரபத்தியின் ப்ரபாவம் ஸ்த்தாபிக்கப்பட்டது. பொதுவாகவே ஏதேனும் மோக்ஷோபாயத்திலிழிந்தார்க்கும் வ்ருத்திக்லேசாதி மூலமாகச் சில குறைகள் காணப்பட்டாலும் அவர்களுக்கும் ப்ரபாவமுண்டாகையால் எங்கும் அஞ்சி நடக்க வேணுமென்கிறார். நம் இத்யாதியால். நம் दर्शनமாவது श्रीमान् नारायणो नः पतिरखिलतनुः मुक्तिदो मुक्तभोग्यः-என்றாற் போன்ற கொள்கை. ஏதேனும் = ஸாக்ஷாத்தோ பரம்பரயாவோ உபாயமாகிற; மரியாதை—அதிகாராநுகுணமாக ஏற்பட்ட நிலை. यतमानसंज्ञेति. கீதையில் 2.58-55 இந்த்ரியத்தை வசீகரிக்க இழிந்தவனுக்கு நான்கு अवस्थैகள்—நிலைகள் சொல்லப்பட்டன'

களிலே अर्थसङ्गादिகளாகிற சில व्याधिகள் निश्शेषமாக शमियாதமட்டைக்கொண்டு இவர்கள் प्राकृतரைப்போலே असंभाष्यரென்று சில वैराग्यमात्रप्रधानர்கள் சொல்லுவர்கள். இதுவும் भगवच्छास्त्रादिகளில் खिन्नवृत्त्यादिप्रकरणங்களாலே परिहार्यम्.

'डम्भिहैतुक.पाषण्डि.बकवृत्तींश्च वर्जयेत्', 'ये तु सामान्यभावेन मन्यन्ते पुरुषोत्तमम् ।

ते वै पाषण्डिनो ज्ञेयाः सर्वकर्मबहिष्कृताः ॥', 'पुंसां जटाभरणमौण्ड्यवतां वृथैव'

इत्यादिகளிற்படியே வழிதப்பினார்பக்கல் சொல்லும் வார்த்தையை நல்வழியில் அடிதடுமாறினார்பக்கல் சொல்லலாகாதிறே.

---

முதல் நிலை யதமாநஸம்ஜ்ஞை அதாவது மனத்தை ஆத்மாவில் ஸ்தாபிப்பதற்காக வெளியிந்த்ரியங்களை விஷயங்களிலிருந்து நிவ்ருத்தி செய்தல். இரண்டாவது வ்யதிரேகஸம்ஜ்ஞை — எந்த தோஷங்களுக்கு நிவ்ருத்தி செய்யப்பட்டது, எதற்குச் செய்யவேண்டுமென்று விவேசநம், மூன்றாவது ஏகேந்த்ரிய ஸம்ஜ்ஞை—பாஹ்யேந்த்ரியங்களுக்கு ப்ரவ்ருத்தி யிராமற் போனாலும் மனமென்கிற ஓர் இந்த்ரியத்தில் மட்டும் விஷயராகம் தங்கியிருக்கை. நாலாவது வசீகார ஸம்ஜ்ஞை · ஸகல விஷயங்களிலிருந்தும் பூரண விரக்தி பெறுகை. இந்த நான்காம் நிலை வரும்வரையில் அர்த்தத்தில் பற்று, காமம், க்ரோதம் இத்யாதி நடமாடும். அதற்காக, 'அஸம்பாஷ்யர்—ஸம்பாஷணம் செய்யத்தகாதவர்;அவர்களோடு ஸம்பாஷணமும்தகாது' என்னலாகாதென்றபடி. खिन्नवृत्तिகள். கஷ்டப்பட்டு ஜீவநம் நடத்துகின்றவர். "निर्धनांश्चरतो लोके वृत्त्यर्थं भृशकर्शितान् । नावमन्येत तैर्लोकं पवित्रीकुरुते हरिः" என்றவாறு அவர்களால் உலகம் பவித்ரமாவது சொல்லப்பட்டது. பூர்வபக்ஷி சொன்ன 'असंभाष्यत्वम्' वाङ्मात्रेणापि नार्चयेत्, संभाषणादपि नरा नरकं प्रयान्ति என்கிற வசநார்த்தமாகும்; அந்த அதிகாரிகள் வேறென்று விளக்குகிறார் डम्भीति. யாஜ்ஞ. ஸ்ம்ரு 1.130. டம்பார்த்தமாகச் செய்கிறவர்கள், ஹேதுவாதிகள், பாஷண்டிகள், ஸாதுவென்று நம்பி நெருங்கியவர்களை நலியும் बकवृत्तिகள் என்றவர்களோடு ஸஹவாஸம் தகாது. புருஷர்களுக்கெல்லாம் மேலான எம்பெருமானை இதரஸமமாக நினைப்பவர்கள் பாஷண்டிகள். கர்மாவுக்கு அநதிகாரிகள். पुंसामिति. வி.பு.3-18. 'मोघाशिनां अखिलशौचबहिष्कृतानाम् । तोयप्रदान—पितृपिण्डविनाकृतानां संभाषणादपि नराः नरकं प्रयान्ति' என்றது மேல்பாகம், வீணாகவே ஜடையின் भरण=தாரணத்தையும் அல்லது, ஜடையை, க்ருஹஸ்த்தனக்கு ஆபரணமானவற்றை, மொட்டையாயிருப்பதை கொண்டிருப்பவர்' நிவேதநம் செய்யாத அந்நம் புசிப்பவர், சுத்தியெல்லாம் விட்டவர், தர்ப்பணம் ச்ராத்தமெல்லாமும் செய்யாதவரென்பவர்களோடு ஸம்பாஷித்தாலும் நரகம் பெறுவர்கள். வழிதப்பினார்-வழியைவிட்டுச்சென்றவர்கள். முமுக்ஷுக்களான ஆஸ்திகமஹான்களை அவர்களைப் போல் பாவிக்கக்கூடாதென்றபடி. படிப்படியாக சிறிது விளம்பித்தாவது இவர்களுக்கு மோக்ஷமுண்டாகையால் மோக்ஷம் பெறவாகாதவரென்று குறை சொல்லலாகாது ப்ரபாவமுள்ளவரே. ஆகில் சாஸ்த்ரத்தில் பெயர்களால் நிந்தை காண்கிறதே என்ன அருளிச்செய்கிறார்

भागवतரில் ऊन—हीन—परिस्रस्त—नष्ट (?) विषयங்களிலும் பரிமாற்றங்களில் तारतम्यம் विधित்ததே யாகிலும் ऐकान्त्यம் குலையாதேயிருக்கில் முடிவில் ஒரு விரகாலே இவர்கள் ஈடேறிவிடுவர்கள். இவர்கள்திறத்திலும் அபசாரம் ஆகாது என்றிறே சாஸ்த்ரம் विधिக்கது.
'नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते। स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात्॥' என்றும் 'पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते। न हि कल्याणकृत् कश्चित् दुर्गतिं तात गच्छति॥' என்றும் कर्मयोगத்திற் சொன்ன प्रभावம் भक्ति-प्रपत्तिகளில் कैमुतिकन्यायसिद्धமிறே.

'अपि चेत् सुदुराचारो भजते मामनन्यभाक्। साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः॥' என்றும், 'अपि पापेष्वभिरता मद्भक्ताः पाण्डुनन्दन। मुच्यन्ते पातकैस्सर्वैः पद्मपत्रमिवाम्भसा॥' என்றும் ஸர்வேச்வரன்தானே அர்ஜுநனையும் தர்மபுத்திரனையும் பற்ற அருளிச்செய்தான். அப்படியே श्रीपुण्डरीकनारदसंवादத்திலும்,

'चीरवासा जटी वा स्यात् त्रिदण्डी मुण्ड एव वा। भूषितो वा द्विजश्रेष्ठ न लिङ्गं धर्मकारणम्॥

---

பாகவதரில் இதி. ऊनेति. तापः पुण्ड्रः तथा नाम मन्त्रो यागश्च पञ्चमः என்று சொன்ன ஐந்து ஸம்ஸ்காரங்களில் सुदर्शन पाञ्चजन्य ताप संस्कारமற்றவன் ऊनன், पुण्ड्र संस्कारமற்றவன் हीनன், नामसंस्कारமற்றவன் परिस्रस्तன், मन्त्रसंस्कारமற்றவன் नष्टன். दग्धனென்ற பிரிவும் சொல்லப்பட்டிருப்பதால் இங்கே யாகஸம்ஸ்காரமற்றவன் दग्धன் என்று கூட்டலாம். 'तथा स्वकर्मशास्त्रेश गुरुसत्संगवर्जिताः। ऊन हीन स्रस्त नष्ट दग्धाः ज्ञेयाः समासतः॥' என்றிருப்பதால, ஸ்வகார்யத்தைவிட்டவன ஊனன், சாஸ்த்ரவிச்வாஸமற்றவன் हीनன். ஈச்வரனை விட்டவன स्रस्तன். गुरुவை விட்டவன் नष्टன். सत्सङ्गமற்றவன் दग्धனென்னலுமாம். பரிமாற்றமாவது ஆதரம்; உபசாரம். மற்றவர்களைப்போலன்றி இவர்களிடத்தில் ஆதரக் குறைவுக்குக் காரணமிருந்தாலும் அபசாரம் தகாதென்றபடி. ஐகாந்த்யம்— தேவதாந்தரஸம்பந்தமற்றிருக்கை. ஈடேறிவிடுவர்கள் उच्चपदம் பெற்றிடுவார்கள். சாஸ்த்ரம 'वैष्णवे परिवादात् पतत्येव न संशयः' இத்யாதி. இவர்கள் ஈடேறுவதில் ப்ரமாணம் காட்டுகிறார் नेहेति. गीतै-2-40 கர்மயோகத்தில் தொடங்கிய அம்சத்திற்கு அழிவில்லை; மேலே விட்டதற்காகக் கேடில்லை; செய்த ஸ்வல்ப் பாம்சமும க்ரமமாக ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கும். पार्थेति. கீதை—6-40. அர்ஜுனா! யோகப்ரஷ்டனுக்கு இங்குமங்கும் நஷ்டமில்லை; மங்கள கார்யத்தைச் செய்தவனொருவனும் கெட்ட கதி பெறுன். अपि चेदिति— கீதை. 9-30. கெட்ட ஆசாரமுடையனாயினும் வேறொன்றை விரும்பாமல் என்னை பஜிப்பவன் ஸாதுவே யாவான். அவன் மதிப்பிற்குரியவன்; அவன் திடவ்யவஸாயமுடையவனாகிறானே என்றார் அர்ஜுனனைக்குறித்து; மேலே தர்மபுத்ரனைக் குறித்து अपि पापेष्विति. பா. ஆச்வ 96. தர்மபுத்ரரே! எமது பக்தர் பாபகார்யத்திலே விசேஷ நோக்குள்ளவராயினும் தாமரை யிலை ஜலத்தினாற்போல் பாபங்களால் விடப்படுவார். चीरेति. इतिहाससमु. 33-123-124. மரவுரி யுடுப்பவனோ ஜடாதாரியோ த்ரிதண்டதாரியோ மொட்டையனோ அலங்கரிக்கப்பட்டவனோ ஆகலாம், இந்த அடையாளங்கள் மோக்ஷதர்ம

ये नृशंसा दुरात्मानः पापाचाररतास्सदा । तेऽपि यान्ति परं स्थानं नरा नारायणाश्रिताः ॥',

'लिप्यन्ते न च पापेन वैष्णवा वीतकल्मषाः । पुनन्ति सकलं लोकं सहस्रांशुरिवोदितः ॥',

'जन्मान्तरसहस्रेषु यस्य स्याद् बुद्धिरीदृशी । दासोऽहं वासुदेवस्य सर्वलोकमहात्मनः ॥

स याति विष्णुसालोक्यं पुरुषो नात्र संशयः । किंपुनस्तद्गतप्राणाः पुरुषाः संयतेन्द्रियाः ॥'

என்று भगवत्प्रवणर् अनुवृत्तदोषराலும் यथार्हप्रायश्चित्तादिमुखத்தாலே मोक्षसिद्धियில் ஸம்சயமில்லையென்னுமிடத்தையும், निर्दोषருக்குக் कैमुतिकन्यायத்தாலே கடுக

---

மான பக்திக்குக் காரணமாகா. இங்கே மரவுரி யுடுப்பதற்கும் ஜடை தரிப்பதற்கும் ஒன்றேடொன்று விகல்பம் சொல்லலாகாது. ஆக எத்தோடு விகல்பமோ அந்தக் கல்பத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்-மரவுரியோ மெல்லாடையோ, ஜடையோ முடியோ, த்ரிதண்டமோ ஏகதண்டமோ, மொட்டையோ முடியோ, அலங்காரமோ சூன்யமோ என்றவாறு, ஆச்ரம தர்மம் வேண்டுவதில்லை யென்பதை உறுதிப்படுத்த இவ்வாறு உரைப்பதாம். ஸ்வரஸமாக வேறு பொருளும் தெரிகிறது—மூன்று वाकारமிருப்பதால் மூன்றுக்கும் விகல்பம். மரவுரியும் ஜடையுமுடைய வாநப்ரஸ்தரோ, த்ரிதண்டியும் முண்டனுமான யதியோ, कुण्डल—अङ्गुलीयकादि சாஸ்த்ர ஸம்மத அலங்காரமுடைய க்ரஹஸ்த்தனே வாகலாம். ஏதேனுமொரு லிங்கம் இருந்தாலும் ஒன்றும் நியதமாயிராமையால் தர்மகாரணமாகாதென்று தோன்றும் பொருள். த்ரிதண்டி முண்டனுவானேனென்னில் தலைமயிரில்லையாகில் முண்டனாகத்தானே யாகவேண்டும். தவிர, சததூஷணியில் यतिलिङ्गभेदभंगवाद(64) த்தில் कक्षोपस्थ-शिखावर्जं मुण्डयेत शिरो यतिः ; कक्षोपस्थ—शिखावर्जं......;...न त्रिमुण्डमतिक्रमेत् என்ற வசநங்களையெடுத்து."सामान्यो मुण्डशब्दः शिखाव्यतिरिक्तविषय इति स्वारसिकम्, என்றருளியதால் சிகை நீங்கலாக வபநம் செய்துகொண்டவனும் முண்டனே யென்னலாம். न लिङ्गமிதி. இவ்வாச்ரமக் குறிகள் இருந்தாலும் இராமற் போனாலும் பலனுண்டென்றதாம். உண்மையில் இங்கேயே இதன் கருத்தை மேலே அருள்வர். ये இதி. ஹிம்ஸகர்களாய் துஷ்ட ஸ்வபாவமுள்ளவர்களாய் பாபகார்யத்திலேயே நோக்குடையராயுள்ளவர்களும் நாராயணனின் ஆச்ரயணம் காரணமாக மோக்ஷம் பெறுவர். लिप्यन्ते இதி. इतिहाससमु. 27. விஷ்ணுவை யாச்ரயித்துப் பாபமற்றவர்கள் பாப பலனைப் பெறார். உதித்த ஸூர்யன் போலே எல்லா உலகையும் பரிசுத்தமாக்குவரென்றது. இவர்களுக்கு ஸஞ்சிதபாபம் உபாயத்தினல் போம். மற்ற பாபம் ப்ராயச்சித்தத்தாலென்றபடி. जन्मान्तरेति इतिहाससमु. 33. ஆயிரமாயிரமாக ஜந்மங்கள்போக எவனுக்கு, ஸர்வலோக வ்யாபியான வாஸுதேவனுக்கு நான் அடிமையென்று புத்தி யுண்டாகிறதோ, அவன் அந்த ஜ்ஞாநம் தவிர வேறிராமற் போனாலும் விஷ்ணுலோகத்தை யடைவான்; ஸம்சயமில்லை. இப்படியிருக்க வாஸுதேவனிடமே ப்ராணனையும் இந்த்ரியங்களையும் எப்போதும் செலுத்தியஸதாசரர்க்குக் கேட்கவேண்டுமோ. கடுக விரைவில்.

मोक्षसिद्धियையும் சொல்லி,

'अश्वमेधशतैरिष्ट्वा वाजपेयशतैरपि । न प्राप्नुवन्ति सुगतिं नारायणपराङ्मुखाः ॥'

என்று भगवद्विमुखருக்கு अनन्तங்களான उत्कृष्टसुकृतங்களாலும் सुगति யில்லையென்றும் மஹர்ஷி இவ்வர்த்தங்களைப் प्रकाशिप्पித்தான். 'यो ह्येनं पुरुषं वेद देवा अपि न तं विदुः' என்கையாலே भगवद्ज्ञानமுடையவனுடைய प्रभावம் நித்யஸூரிகளுக்கும் परिच्छेद्यமன்றிறே. ஆகையால் अनुवृत्तबुद्धिपूर्वदोषரான भागवतர்க்கு उपलेशादिகள் உண்டானாலும் अवज्ञादिகள் பண்ணலாகாது.

'अवैष्णवनमस्कारादवमानाच्च केशवे । वैष्णवे परिवादाच्च पतत्येव न संशयः ॥'

'यतिनिन्दापरो नित्यं वैष्णवान् अवमन्यतु । अध्यात्मविमुखस्सोऽस्तु बिसस्तैन्यं करोति यः ॥

अन्तर्दुष्टो बहिश्शान्तो ब्रह्मविद्द्वेषतत्परः । कर्मनिन्दापरस्सोऽस्तु बिसस्तैन्यं करोति यः ॥

नित्यानुष्ठानसंयुक्तान् अध्यात्मज्ञानदुर्बलान् । व्यामोहयति दुर्बुद्धिर्बिसस्तैन्यं करोति यः ॥'

---

இந்த வசநங்களால் ஆசாரக் குறைவிருந்தும் ஐகாந்த்யமுள்ள போது மோக்ஷமுண்டென்றதால் ப்ரபாவம் ஸித்தமாம். நாராயணனிடத்தில் பக்தியற்றவரின் ஆசாரமெல்லாம் வீணென்கிறார் अश्वेति. इतिहाससमु 33.180 நூறு நூறான அச்வமேதங்களும் நூறுநூறான வாஜபேயங்களும் செய்தாலும்நாராயணனிடத்தினின்று முகத்தைத் திருப்பினவர்கள் நற்கதி பெறாரென்றது. योहीति வசநம் ப்ரபாவ வ்யவஸ்தாதிகார ஆரம்பத்திலுள்ளது. கீழ் மேல் ஏழேழு பிறப்புக்கும் உத்தாரகனென்கிற ப்ரபாவம் இவனுக்கிருப்பதாலே இது அளவற்றது. இங்கே தேவ சப்தத்திற்கு நித்யஸூரிகள் பொருளென்கிறார் नित्येति. அநுவ்ருத்த புத்தி பூர்வதோஷரான =புத்தி பூர்வமாக மேலே மேலே பாபம் செய்கிறவரான. ऊनदीनादि நிரூபண ஸ்தலத்தில் சாஸ்த்ரம்விதித்தது என்று சொன்னதற்கு விவரணமாகக்கூடிய வசநங்கள் மேலே அவைஷ்ணவேத்யாதிகள் नारदीयम्–அவைஷ்ணவர்களை நமஸ்கரிப்பதாலும் கேசவனை யவமதிப்பதாலும் வைஷ்ணவனை தூஷிப்பதாலும் பதிதனாகிறான்; ஸம்சயமில்லை यतीति. इतिहाससमु 12. இது போல் बिसस्तैन्य விஷயமான வாக்யம் ஸாத்யோபாயசோதநாதிகாரத்தின் முடிவில் எடுக்கப்படுள்ளது. அங்கே தேவதாந்தராராதநம் கூடாதென்பதற்காகவாமது. இங்கு பாகவதாபராதம் கூடாதென்பதற்காக வேறு வசநம். எப்போதும் ஸந்யாஸிகளை நிந்திப்பதில் நோக்குடையனாய் வைஷ்ணவர்களை யவமதித்து வேதாந்தத்தில் நோக்கற்றவனாகவேண்டும் இங்கே தாமரைக்கிழங்கைத் திருடியவன். अन्तरिति–துஷ்டமனமுடையனாய் வெளிக்கு சாந்தனாய் ப்ரஹ்மஜ்ஞாநிகளை த்வேஷிப்பதில் பற்றுள்ளவனாய் சாஸ்த்ரீயமான கர்மங்களை நிந்திப்பவனுமாகவேண்டும்தாமரைகிழங்கைக் களவுகொண்டவன். ஸதாசாரசீலர்களாய் வேதாந்தஜ்ஞாநத்தில் வலிவற்றவரானஸாதுக்களுக்கு மோஹம் விளைவிக்கும் துர்புத்தியாகவேண்டும் இதைக் களவு கொண்டவன். விஷ்ணு பக்தர்களே உண்மையான ஸந்யாஸிகளாவதால் யதிகளை வைஷ்ணவர்

என்று சொல்லப்பட்டதிறே.

श्रीभाष्यकारர் अकृत्यकरण-कृत्याकरणங்களோடே भगवदपचारादिகளைச் சேர எடுத்தது गोबलीवर्दन्यायத்தாலே भगवदपचारादिகள் तीव्रங்கள் என்கைக்காக. எல்லாம் भगवदपचारங்களாயிருக்க, मुखमेदங்களை விவக்ஷித்துச் சிலவற்றை இங்கு भागवतापचारங்களென்கிறது. 'யாவை சில அபசாரங்களைப் புறம்பே செய்கிறான்; அப்படிப்பட்டவைதம்மையே भगवद्भागवतविषयங்களிலே செய்தால் विषयस्वभावத்தாலே राजद्रोहादिகள்போலே மிகவும் दण्डहेतुக்களாம்' என்று

---

களாகவும் விஷ்ணுவாகவும் மனத்திற் கொண்டு यतिनिन्दापरः என்றதென்க. இவ்வளவால் ஆசாராதி லோபமிருந்தாலும் பாகவதர்களிடத்தில் அபராதப் படுவது தகாது. பொதுவாகவே ப்ராஹ்மணாதிகளிடத்தில் அபராதம் தகாது; வைஷ்ணவர்விஷயத்தில் அபராதம் கொடிய பாபமென்றறிவிக்கப்பட்டது

கத்யக்ரந்தத்தில் பாஷ்யகாரர் எல்லா அபராதங்களையும் ஒரு கோவையிலே சேர்த்ததால் எல்லாம் ஸமமே யென்று நினைக்க வேண்டாவென்று அதை வ்யாக்யானித்து விளக்குகிறார் ஸ்ரீபாஷ்யத்தில் இதி. கத்யத்தில் 'அக்ருத்ய கரண க்ருத்யாகரண—பகவதபசார-பாகவதாபசார-அஸஹ்யாப சார' என்று சேர்த்ததால் ஸாம்யம் வாராதென்று அந்தந்தப் பதார்த்த சோதநத்திலிருந்தே தெரியவரும். எல்லாம் ஏகரூபமாகில் भगवदपचारादि பதப்ரயோகமே வீணும். எல்லாம் அக்ருத்யகரணத்தில் சேருமே. ஆக गोबलीवर्दन्यायம் இங்கே கருதப்படும். बलीवर्दம் = காளை गोக்களில் சேர்ந்ததானாலும் அதற்கு ஒரு ப்ராபல்யத்தைக் கொண்டு बलीवर्दमानय என்று தனியே சொல்வது போல் இங்கே அக்ருத்ய கரணத்தில் அடங்கியதையும் தனியே சொன்னார். न सुं पिबेत् இத்யாதி நிஷித்தமான அக்ருத்ய கரணத்திலும் भगवदाज्ञैயை மீறுவது உண்டாகையால் எல்லாமே பகவதபசாரந் தானே. बलीवर्दம் போலே பகவதபசாரமென்பதற்கு விபவாவதாரத்தில் ஸ்ரீக்ருஷ்ணனை நேராக சிசுபாலன் வைதது போன்ற (ஸாக்ஷாத் பகவானையே விஷயீகரித்த) அபசாரங்களும். பகவதர்ச்சாரூபாதி விஷயமான தூஷணங்களும், ஆலயத்தில் செய்யும் அபராதங்கள்போன்றவையும் பொருளாம். பகவத்ஸம்பந்தமற்ற ஸுராபாநாதிகளைவிட இவற்றுக்கு விசேஷமுண்டு இதில் பாபமதிகமென வறிவிப்பதற்காகவே பிரித்தது. பாகவதர்களிடத்தில் அபராதமும் பகவதபசார மாகக்கூடியதானாலும் பகவானைவிட பாகவதரிடத்தில் அதிகபக்தி அவச்யமாகையால் அதற்கு மாறாக அவர்களிடம் அபசாரப்பட்டால் அது बलीवर्दஸமமாய், பகவதபசாரம் வேறு गोவுக்கு ஸமமாகும். ஒருவிதமான அபசாரத்திற்கே விஷயத்தின்வாசியைக் கொண்டு வாசியுண்டென் கிறார் யாவை இதி. புறம்பே—अभागवत ஜநங்களிடத்தில். ஹிம்ஸை யென்றது ஒன்றானாலும ப்ராஹ்மணாதி விஷயததாலே அதற்கு வாசி ஸுப்ரஸித்தம். இதை ராஜத்ரோஹாதி யென்ற ஆதிபதத்தால கொளவது.

**विशेषोपादान**த்துக்கு **अभिप्राय**ம். நரகத்துக்கு நாற்றங்காலான ஸம்ஸாரமண்டலத்திலே நல்வழி நடப்பார் **दुर्लभरा**யிருக்க **भगवद्विषय**த்தைப் பற்றி **अधिकारानुरूप**மாக **मुक्तिमार्ग**த்துக்கு முன்னடியான **कर्मयोगादिपर्वभेद**ங்களிலே நின்றாரையும் நெகிழ நினைக்கை **भागवतापचार**ம்.

'न शब्दशास्त्राभिरतस्य मोक्षो न भोजनाच्छादनतत्परस्य ।
न चैव रम्यावसथप्रियस्य न लोकचित्तग्रहणे रतस्य ॥'

**इत्यादि**களிலும் **भगवत्प्रावण्य**மின்றிக்கே,

'शिश्नोदरे येऽभिरतास्सदैव स्तेयानृता वाक्परुषाश्च नित्यम् ।
व्यपेतधर्मा इति तान् विदित्वा दूरात् देवाः संपरिवर्जयन्ति ॥'

என்கிறபடியே **बाह्यविषयप्रावण्य**மே யுடையார்க்கு மோக்ஷமில்லை யென்றபடி.

'पराङ्मुखानां गोविन्दे विषयासक्तचेतसाम् । तेषां तत् परमं ब्रह्म दूराद् दूरतरे स्थितम् ॥'

**इत्यादि**களிலும் இவ்வர்த்தம் **सिद्ध**ம்.

'तन्मयत्वेन गोविन्दे ये नरा न्यस्तचेतसः । विषयत्यागिनस्तेषां विज्ञेयं च तदन्तिके ॥'

---

மோக்ஷத்திற்குப் பரம்பரயாகாரணத்திலிழிந்தாரிடம் அபசாரம் தகாதென்றார்; அவர்களிடம் **अर्थकाम**ங்களடியாக அபசாரப்படுவதுபோல் **साक्षादुपायनिष्ठ**ரைவிட குறைவிருப்பதாலும் ஈனமாக நினைப்பதும்தகாதென்கிறார் **नरक**த்திற்கு இதி. **நாற்றங்காலாவது** விஸ்தாரமாக வயல்களில் பயிர்களை நடுவதற்காக மொத்தமாக நாற்று வளர்க்குமிடம்; அதுபோல் இங்குச் சிறிதுகாலம் வளர்ந்து பாபியாகி மேலே நரகத்தில் வெகுகாலம் அநுபவம் பெறப் போகிறபடியால் ஸம்ஸாரமண்டலத்திலிது நாற்றங்காலாகிறது. **दुर्लभरा**யிருக்க என்பதற்கு 'நெகிழ நினைக்கை' என்பதில் அந்வயம். குறைவாக நினைப்பதென்று பொருள். **पर्वभेद**ம்=படிகள். சில வசநங்களில் க்ஷுத்ர **பலன்**களில் நசையுள்ளவனுக்கு மோக்ஷமில்லை யென்றதால் அத்தகைய கர்மயோகாதி நிஷ்டருக்கு மோக்ஷமில்லையாகையால்ப்ரபாவம் ஏதென்ன, அருளிச்செய்கிறார் **न शब्देति**. **इतिहाससमुच्चय**. 2-10. கேவல சப்தஸாரமான சாஸ்த்ரங்களில் அதிகப் பற்றுடையவனுக்கு மோக்ஷமில்லை. ஊண் உடைகளிலே நோக்குடையவனுக்குமில்லை. அழகான வீட்டில்ஆசை வைத்தவனுக்குமில்லை உலகின் மனத்தை வசீகரிக்க நோக்குடையவனுக்குமில்லை யென்றது. இந்த வசநத்திற்கு மோக்ஷத்தில்ஆசையுடன் பகவானிடத்தில் ஈடுபாடில்லாதவர் விஷயமென்றபடி. இதை விளக்குகிறார் மேல் ச்லோகத்தால் பா. சா. 305 எவர்கள் எப்போதும் சிற்றின்பத்திலும் உண்பதிலும் ஈடுபட்டவரோ, திருடும், பொய்யும்பருஷவாக்கும் எப்போதுமுடையரோ, அவர்களை தர்மத்திலிருந்துவிலகியவரென்றறிந்து தேவதைகள் வெகுதூரம் விலகி நிற்பர். **पराङ्** இதி. வி. த. 99. கோவிந்தனிடத்தில் நோக்கின்றி விஷயத்தில் பற்றுள்ளவர்களுக்கு பரப்ரஹ்மம் வெகுதூரத்திலிருக்கும். தூரத்திலிருப்பாவது—மோக்ஷம் பெற

ஹ்யாதிகள் भगवत्परருமாய் विषयत्यागிகளுமானார்க்கு विलम्बமில்லை யென்கிறன.

உள்ளொரு பசையற்றுப் பசுத்தோல் போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாயுங் கணக்கிலே भागवतभावத்தை நடண்ணித்திரிவாரையும் உள் அறியுமளவும், उपरिचरादिகள் असुरादिகளை आदरित्தாற்போலே रूपनामங்களையிட்டு आदरिक्क प्राप्तம். இப்படிக்கொத்த शैलूषवृत्तिகளைப்பற்ற न लिङ्गं धर्मकारणम्'.

'फलं कतकवृक्षस्य यद्यप्यम्बुप्रसादकम् । न नामग्रहणेनैव तस्य वारि प्रसीदति ॥'

---

வாகாதபடியிருக்கை அதே விஷ்ணுதர்மத்தில், 'எவர்கள் கோவிந்தன் விஷயமாகவே இருப்பாராய் அவனிடம் மனம் வைத்து விஷயத்தை விட்ட வரோ, அவர்களுக்கு பரப்ரஹ்மம் அருகிலிருக்கும்' என்பதால் மோக்ஷம் விரைவிலே கிடைக்குமென்றதாம். ஆக, கர்மயோகாதிகளான படிகளிலிருப்பவர்களும் முமுக்ஷுக்களாகையாலே ப்ராக்ருதரைப்போலாகாமல் விரைவில் மோக்ஷம் பெறுவாராதலால் ப்ரபாவசாலிகளே யென்றதாயிற்று.

கீழே 'पुंसां जटाधरणमौण्ड्यवतां இத்யாதிகளாலே எவரை அஸம்பாஷ்ய ரென்றுரோ அவர்கள் செயல் வெறும் வேஷமென்று தெளிகிறவரையில் எப்படி யுபசரிக்காமலிருக்கவாகும். உபசரித்தால், संभाषणादपि नरा नरकं प्रयान्ति என்ற கேடு நேருமே என்ன, 'உபசரிப்பதே ஆசாரஸித்தம்; உபசரிக்கலாகா தென்கிற வசனத்திற்கு, வேஷதாரிகளாக அறியப்பட்டவரை யுபசரிக்க லாகாதென்றே பொருள்' என்ற கருத்தை யறிவிக்கிறார் உள் இதி. உள்= மனத்தில் பசை—அன்பு. பசுத்தோல் போர்த்து—ஸாதுவேஷம் பூண்டு. புலிப்பாய்ச்சல் பாய்தல்=தீவ்ரமாகப் பரஹிம்ஸை செய்தல். உள் அறியு மளவும்= அவர்களின் மனத்தின் நிலை யறிவதற்கு முன்னே. உபரிசரேதி. உபரிசரவஸுவின் வரலாறு ஆதிபர்வம் 64, சாந்திபர்வம் 343 அத்யாயாதிகளிலுள்ளது. असुरனை யாதரித்த விஷயம் தேடியறிவது. ஆதிபதத்தால் பிராட்டி அரக்கனை ராவண ஸந்யாஸியை உபசரிக்க முயன்றதைக் கொள்க. உண்மையில் இவர்கள் உபசார விதிக்கு விஷயரல்லர். உபசாரம் விட்ப் பட்டதென்ற குற்றமில்லை. உபசரித்ததால் தோஷமில்லை. இப்படிக்கு ஒத்த— இந்த ப்ரகாரத்தில் ஸமரான. शैलूषवृत्तिகள்= நாட்யமாட வேஷம் பூண்டவனின் செயல் போன்ற செயலுள்ளவர்கள். नलिङ्गमिति. चीरवासा என்று முன் எடுத்தச்லோகமிது. இதற்கு ஆச்ரமத்திற்கான அடையாளம்இராவிட்டாலும் பலனுண்டு என்று முன் தோன்றிய பொருளாம். இப்போது அருள்வதாவது— दम्भार्थமாக வேஷமாகக் கொண்ட இவ்வடையாளம் ख्यातिलाभादिகளுக்குக் காரணமானாலும் தர்மகாரணமாகாது—அத்ருஷ்ட மூலமான பலனளிக்காது. தர்மமாவது—भगवदनुग्रहரூப ஸங்கல்பம். அதற்குக் காரணமாகாதென்றதாம். फलमिति மநுஸ்ம்ருதி 6-67. தேத்தாம் மரத்தின் கொட்டை ஜலத்தைத் தெளிவிப்பதானாலும் அதன் பேரைச் சொல்வதுமட்டால் ஜலம் தெளியாதென்றதாம். பகவந்நாமாவுக்கு ப்ரபாவம் பல படி ப்ரஸித்தமாயிருப்பதாலே அந் நாமஸங்கீர்த்தநம் செய்யும் வேஷதாரிகளுக்கும் ப்ரபாவமிருக்கட்டுமே

என்கிறது. 'आर्ता विषण्णाः शिथिलाश्च भीता घोरेषु च व्याधिषु वर्तमानाः। संकीर्त्य नारायणशब्दमात्रं विमुक्तदुःखास्सुखिनो भवन्ति ॥' என்றும், 'अवशेनापि यन्नाम्नि कीर्तिते सर्वपातकैः । पुमान् विमुच्यते सद्यः सिंहत्रस्तैर्मृगैरिव ॥' என்றும், साङ्केत्यं पारिहास्यं वा स्तोभं हेळनमेव वा । वैकुण्ठनामग्रहणमशेषाघविनाशनम् ॥' என்றும், 'हरिर्हरति पापानि दुष्टचित्तैरपि स्मृतः। अनिच्छयाऽपि संस्पृष्टो दहत्येव हि पावकः॥' என்றும், 'एतावताऽलमघनिर्हरणाय पुंसां सङ्कीर्तनं भगवतो गुणकर्मनाम्नाम् । आक्रुश्य पुत्रम् अघवान् यत् अजामि-

---

என்ன அருளிச்செய்கிறார் आर्ता இதி. நாமஸங்கீர்த்தந வாக்யங்களுக்கு பகவத்த்வேஷமில்லாதவர் விஷயமாவரென்று கருத்து. आर्ताः—இம்மைப் பலனின்மையால் தவிக்கிறவரும், विषण्णाः—மறுமைப் பலனுக்கு வழி தெரியாமல் வருந்துகின்றவரும், शिथिलाः—மநச்சரீராதிகளில் தளர்ச்சி யுள்ளவரும் भीताः—வருமாபத்தினின்று அஞ்சியவரும், घोरेषु.....பயங்கரமான வ்யாதிகளில் அகப்பட்டவரும், नारायण என்ற சொல்மட்டைக் கீர்த்தநம் செய்தே துக்கம் நீங்கி ஸுகம் பெறுவர். अवशेनेति. வி. பு 6-8-19. தனக்கு ஸ்வாதீநமன்றியே கூட எவருடைய திருநாமத்தைக் கீர்த்தநம் செய்வதால் சிங்கத்தினிடம் அஞ்சிய ம்ருகங்கள் போலாகிய ஸகலபாபங்களினின்றும் ஜீவன் விடுபடுவானென்றது. இங்கு वनमिव—என்றும் சேர்க்கலாம். அல்லது புருஷனே மிருகங்களால் துரத்தப்பட்டிருக்கும்போது திடீரென்று சிங்கத்தின் கர்ஜனையைக் கேட்டு அஞ்சிய அவற்றாற் போல் பாதகங்களால் விடப்படுகிறானென்னலாம். விஷ்ணுபுராண வ்யாக்யாநத்தில் மானைத் துரத்தும் துஷ்டம்ருகங்கள் சிங்கத்தைக் கண்டு ஓடிப்போவதுபோலென உரை உளது. साङ्केत्यमिति. ஸ்ரீ. பா. 6-2-14. ஒருவனுக்குப் பெயராக வைத்துச் சொல்லப்பட்டாலும், உனக்கு நாராயணனென்ற பெயரை நன்றாக வைத்தார்களென்று பரிஹாஸமாகச் சொன்னாலும், அர்த்தமிராமல் स्तोभமாகச் சொன்னாலும், हेळनமாக—நிந்தையாகச் சொன்னாலும் வைகுண்டனுடைய—பகவானுடைய நாமகீர்த்தநமானது பாபங்களை யெல்லாம் போக்கும். स्तोभமாவது—நாராயண என்ற ஸ்வரத்தில் நாநாநந என்று அர்த்தமிராமற் சொல்வதென்பர். 'वने चरामः वसु चाहरामः नदीस्तरामः न भयं स्मरामः । इतीरयन्तोऽपि वने किराताः मुक्तिं गताः रामपदानुषङ्गात् ॥' என்றவாறென்னலுமாம். இங்கே चरामः आहरामः இத்யாதி க்ரியாபதங்களில் உள்ளடங்கிய ராம என்ற வர்ணமாத்ரத்திற்குப் பொருளில்லையாகையால் இந்த भागத்தை स्तोभமென்கிறது. அதுவும் மோக்ஷஸாதநமென்றபடி. हेळनமாவது. நாராயணா என்று எப்போதும் சொல்லுகிறவனைக் கண்டு அவனை தூஷிக்க அநுகாரம் செய்வது. हरिरिति ஹர்யஷ்டகம். கெட்ட மனமுடையரால் நினைக்கப்பட்டாலும் ஹரி பாபங்களைப் போக்குவார்; இஷ்டப்படாமல் தொடப்பட்டாலும் நெருப்புச் சுடுவதே யாகுமன்றோ. एतावतेति ஸ்ரீபாக 6-3-24. பகவானுடைய கல்யாணகுணங்களையும் செயல்களையும் திருநாமங்களையும் சொல்லுவது என்கிற एतावता—இவ்வளவும் अघनिर्हरणाय—பாபம் போக்குவதற்கு

लोऽपि नारायणेति म्रियमाण उपैति मुक्तिम् ॥ என்றும்,
'மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்துடைய பேரால் கத்திரபந்து மன்றே பராங்கதி கண்டுகொண்டான் இத்தனையடியரானார்க்கிரங்கும் நம் அரங்கனாய பித்தனைப் பெற்றும்' என்றும் சொல்லுகிற இவையெல்லாம் भगवत्प्रद्वेषமில்லாதவனுக்கு आस्तिक्यம் मन्दமாகிலும், बालादिகளைப்போலே अर्थज्ञानமில்லையேயாகிலும், 'வாய் வெருவுமாப்போலே अभिसन्धिயில்லையேயாகிலும், संकेत–परिहासादिகளிலே துவக்குண்டு अभिसन्ध्यन्तरமுண்டாகிலும், प्रयोजनान्तरसङ्गமுண்டாகிலும், दोषान्तरங்களுண்டாகிலும் ஸங்கீர்த்தனம் पावनतमமென்றபடி அல்லது भगवत्परिवादादिகளுக்காக भगवन्नामसङ्कीर्तनம் பண்ணினாலும் பாபம் போமென்றபடியன்று. भगवत्परिवादादिகள் पातकங்களாகவிறே परिगणितத்துக்கிடப்பது.
'ये द्विषन्ति महात्मानं न स्मरन्ति च केशवम् । न तेषां पुण्यतीर्थेषु गतिः, संसर्गिणामपि ॥'

---

अलं—வேண்டா, यत्—ஏனெனில், अघवान् अजामिलोऽपि—மஹாபாபியான அஜாமிளனும் म्रियमाणः—மரிக்கப்போகின்றவனாய் नारायणेति நாராயண என்கிற பெயரினால் पुत्रं आहूय—மகனைக் கூப்பிட்டதனாலேயே मुक्ति-मुपैति—மோக்ஷமடைந்தானே. மொய்த்த இதி திருமாலை 4. க்ஷத்ரபந்து என்பவன் மொய்த்த—ஒன்று மேலொன்றாக நெருங்கிய வல்—கொடிய வினையுள் நின்று—பாபங்களினுள் அசையமாட்டாமல் அகப்பட்டிருந்தும் மூன்று எழுத்து உடைய கோவிந்தனென்ற திருநாமத்தைச் சொன்னதால் அன்றே–அப் பிறவியிலேயே பராங்கதி[ப்] பரமபதத்தைக் கண்டு பெற்றான். இத்தனையடியரானார்க்கு=ஸ்வல்ப்ப செயலாலே அடிமையானவர்க்கும் இரங்கும்—தயை கூரும் நம் நமது அரங்கன் ஆய பித்தனை—ரங்கநாதனாகிற வ்யாமோஹமுடையவனை பெற்றும்–அருகில் ஸேவிக்கும்படி பெற்றிருந்தும், பிறவியில்–ஸம்ஸாரத்திலேயே பிணங்கும் ஆறே—கலஹம் செய்துழல்வதோ? பகவத்ப்ரத்வேஷமில்லாதவனுக்கு என்று சொல்லப்பட்ட அதிகாரிக்குச் சொல்வதில் இவ்வாக்யங்களுக்கு நோக்கு. உதாஹரித்த வாக்யங்களில் அடைவாகக் கிடைக்கும் சில விசேஷங்களைக் கூறுகிறார். ஆஸ்திக்யமித்யாதியால், சப்தமாத்ரம் என்றதால் அர்த்தஜ்ஞானமில்லையென்று தெரிகிறது. அவசேந என்றதால் எம்பெருமான் விஷயமான இச் சொல்லைச் சொல்ல வேண்டுமென்ற நோக்கின்றியே சொல்வதென்றதாம். வாய் வெருவுமாப்போலே=இவனுக்கே தெரியாமல் வாய் தானே சொல்வது போல், अभिसन्ध्यन्तरம் புத்ராதி விஷயங்களைச் சொல்வதில் நோக்கு. दुष्टचित्तैः என்று வேறு ப்ரயோஜநத்தில் பற்றும் दोषान्तरமும் சொன்னதாம். இவ்வாக்யங்களுக்கு பகவானை வெய்வதற்காகச் சொன்னாலும் பாபம் போகுமென்றே பொருள் சொன்னாலென்ன என்ன உத்தரம் भगवत्परिवादेति. கீழே अवमानाच्च केशवे என்றதையும், यो दूषयति संमोहात् वासुदेवं जगत्पतिम् । तं विद्यात् ब्रह्मघातकम् இத்யாதிகளையும், மேலெடுக்கும் வசநங்களையும் கொள்க. ये இதி. பா.சா 336. மஹாத்மாவான கேசவனை த்வேஷிக்கிறவர்களுக்கும் தீர்த்தங்களில் அவனை

என்றும், 'यः पुत्रः पितरं द्वेष्टि तं विद्यादन्यरेतसम्। यो विष्णुं सततं द्वेष्टि तं विद्यादन्त्यरेतसम्॥' என்றும் சொன்னார்களிறே.

'गोप्यः कामात् भयात् कंसो द्वेषाच्चैद्यादयो नृपाः। संबन्धात् वृष्णयो यूयं स्नेहात् भक्त्या वयं प्रभो॥' என்கிறபடியே ஏதேனுமொரு வகையாலே துவக்குண்டாரும் பிழைப்ப ரென்றதுவும், 'यथा कया च विधया सम्बन्धः स तु पावनः' என்றதுவும் पूर्वसुकृतविशेष ங்களாலே நியதரான अधिकारिविशेषங்களைப் பற்ற வென்னுமிடம் இவர் களுடைய पूर्वापरवृत्तान्तங்கள் சொல்லுகிற புராணாதிகளிலே ப்ரஸித்தம். இப்படி भगवत्क्षेத்ரத்தில் शरीरविश्लेषादिகள் मोक्षोपकारकமாயென்றதவும்

---

நினைக்காதவர்களுக்கும், அவர்களோடு ஸம்பந்தப்பட்டவர்களுக்கும் புண்ய தீர்த்தங்களிலும் நற்கதியில்லை ये இதி ப்ரஹ்மாண்டபு. தகப்பனை எப் போதும் த்வேஷிக்கும் மகனை வேறொருவனுக்குப் பிறந்தவனாகக் கொள்வது; எப்போதும் விஷ்ணுவை த்வேஷிக்கிறவனை அந்த்யஜாதிக்கு=ப்ரதிலோம ஜாதியில் கடையாயிருப்பவனுக்குப் பிறந்தவனாகக் கொள்வதென்றது ஆக த்வேஷம் பூண்டவருக்கு நாமஸங்கீர்த்தனத்தால் பலனில்லை, எம்பெரு மானோடு ஏதேனும் ஸம்பந்தமிருந்தாலும் போதும்; த்வேஷியென்கிற ஸம் பந்தமும் மோக்ஷம் தருமென்று சில வாக்யம் மூலமான சங்கையைப் பரி ஹரிக்கிறார் गोप्य இதி. ச்ரீபாக. 7-1-32 அரசனே! கோபஸ்த்ரீகள் காமத் தினாலும், கம்ஸன் அச்சத்தினாலும் चैद्यादयः-சிசுபாலாதிகள் த்வேஷத்தினாலும் वृष्णयः—யதுவம்சத்தினர் संबन्धात् குலஸம்பந்தத்தினாலும் तद्गतिं गताः என்று முன் ச்லோகத்திலிருந்து சேர்த்து அவனை யடைந்தார்களென்க. பாண்ட வர்களான நீங்கள் ஸ்நேஹத்தினால் அடைகிறீர்கள். நாங்கள் பக்தியினால் அடைகிறோமென்றது இங்கு பக்திக்கு ஸமமாக த்வேஷாதிகளும் மோக்ஷ ஸாதநமாகக் கூறப்பட்டன. यथेति ச்ரீரங்க மாஹாத்ம்யம் 8 – स्मृतिमात्राघ-नाशेन पवित्रेण च शार्ङ्गिणा என்று பூர்வார்த்தம். நினைத்த மாத்ரத்தாலே பாபம் போக்கும் சுத்தனான சார்ங்கதரனோடு ஏதேனுமொருவித ஸம்பந்தமும் சுத்தி யளிக்கும். சார்ங்கினா என்றதால் த்வேஷமும் சுத்தி யளிக்குமென்ற தாம். पूर्वेति முன்னமே எம்பெருமானிடம் பக்தி-ப்ரபத்திகளாலே ஸம்பந்தப்பட்டு நிலைத்தவர் பகவானோடு விஹாரத்தில் வைத்த நசையாலோ சாபத்தாலோ கோபஸ்த்ரீகள் சிசுபாலனென்றும் போன்ற பிறவி பெற்று அக் காமசாடா திகள் கழிந்த பிறகு முன்னிருந்த பக்த்யாதிகளாலேயே மோக்ஷம் பெற்றார் களென்று அந்தந்த வரலாற்றை யாராய்ந்தால் தெரியும், சாஸ்த்ரமானது உபாயபக்தி, ஸாத்யபக்தி யென்னுமிரண்டையே மோக்ஷோபாயமாகச் சொல்வதால் த்வேஷாதிகள் உபாயமாகா. ஆனாலும் த்வேஷியான ஒருவனைக் கண்டமாத்ரத்தில் அவனுக்கு பகவத்ப்ராப்தியில்லை யென்றறுதி யிடலாகாது; சாபத்தினால் அவ்வாறு நேர்ந்திருக்கலாம். அது போனபிறகு பக்தனே யானதால் பெறலாமென்க.

இப்படி இத்யாதியால் நாமஸங்கீர்த்தநத்திற்குச் சொன்னது க்ஷேத்ரவா

पश्वादिகளைப்போலேயாகிலும் प्रातिकूल्यமில்லாதார்க்கு उपकारकமாமென்றபடி. இங்ஙனல்லாதபோது அங்கே भगवत्प्रातिकूल्यம் பண்ணப் புகுந்து பட்டவர்களுக்கும் மோக்ஷமுண்டாகப் प्रसङ्गिக்கும்.

'दुष्टेन्द्रियवशाच्चित्तं नृणां यत् कल्मषैर्वृतम्। तदन्तकाले संशुद्धिं याति नारायणालये ॥'

என்கிற श्रीसात्वतवचनமும் क्षेत्रवासादितत्परராஞர்க்கு शास्त्रविरोधமில்லாத शास्त्रादिप्रावण्यத்தாலே முன்பு भगवत्साक्षात्कारादिகள் இல்லையே யாகிலும் अन्तिमकालத்திலே தெளிவுண்டாமென்னுமிவ்வளவிலே तत्परமென்னுமிடம் प्रकरणादिसिद्धம்.

'यं योगिनः प्राणवियोगकाले यत्नेन चित्ते विनिवेशयन्ति' என்று சொல்லப்படுகிற

---

ஸத்திற்குமாமென்று நிரூபிக்கிருர் சரீரவிச்லேஷாதிகள் என்றஆதிபதத்தால் பிறவியை க்ரஹிப்பது 'जातो वाऽथ मृतो वाऽपि पापानां अतिपापकृत्। मम लोकमवाप्नोति न पुनर्गर्भमृच्छति ॥' என்ற வாக்யத்தில் மஹாபாபிக்கும் க்ஷேத்ரத்தில் ஜநந மரணங்கள் உபாகாரகங்கள்; க்ஷேத்ரவாஸம் செய்யவேண்டுமென்கிற புத்தி யிராதார்க்கும் பலனுண்டென்று தெரிகிறதாஞலும்—அநுகூலஞகாவிட்டாலும் பச்வாதிகளைப் போலே ப்ரதிகூலஞகாமலிருந்தால்தான உபகாரகம்—ப்ரதிகூலஞகில் இல்லையென்றபடி. गंगादितीर्थेषु वसन्ति मत्स्याः देवालये पक्षिसङ्घाश्च नित्यम्—ते ध्यानहीनाः न फलं लभन्ते ॥' என்ற வசநத்தால் க்ஷேத்தரவாஸம் செய்கிறேனென்கிற ஜ்ஞாநமுள்ளவனுக்கே பலனென்று தெரிவதால் பச்வாதிகளைப் போல் ப்ராதிகூல்யமில்லாமைமாத்திரத்தால் உபகாரகமென்னலாமோ என்னில்—பச்வாதிவிஷயம் நிற்க; ப்ரதிகூலஞகும் மனிதன்விஷயத்தில் உபகாரத்தில் தாரதம்யம் கொள்வது. ப்ராதிகூல்யமிருந்தால் உபகாரமே யில்லை, பச்வாதிகளைப்போலேயாகில் ஸ்வல்ப உபகாரம்; க்ஷேத்ரவாஸ புத்தியிருந்தால் அதைவிட அதிகம். ஆநுகூல்ய தாரதம்யத்தால் அதற்கு மேன்மேலென்று கண்டுகொள்வது—புகுந்து= பகவத்விக்ரஹாதிகளை யபஹரிக்கை போன்ற அக்ரமங்கள் செய்யப் புகுந்து. பட்டவர்களுக்கும்= அங்கே தாமாகவோ பிறராலோ அழிந்தவர் களுக்கும். அல்லது ஸம்பந்தித்தவர்க்கும். प्रसङ्गिக்கும் இதி. ये द्विषन्ति महात्मानं இத்யாதி வசநவிரோதத்தால் இது தகாது. ஸாத்வத வசநத்திற்கும் ப்ரதிகூலராகாதவர்களே விஷயமென்கிருர். दुष्टेति துஷ்டமான இந்த்ரியங்களுக்கு வசப்பட்டதால் பாபங்களால் சூழப்பட்டது எந்த மனதோ அதுவும் மரணகாலத்தில்க்ஷேத்ரத்தில்சுத்தி யடையுமென்றது பகவத்த்வேஷம்போன்றபாபங்கள் நீங்கலாக மற்றவற்றைக் கருதியாம். கல்மஷசப்தமானது சாஸ்த்ரவிரோதமிராத விஷயத்திலே யுண்டான காமமாகிற கலக்கத்தைக் கூறியே சரிதார்த்தமாகலாம். அப்போது संशुद्धि என்று ஸாக்ஷாத்கார பர்யந்தத்தைக் குறிக்கும். க்ஷேத்ரவாஸம் செய்யாத யோகிகளுக்கும் அந்திமகாலத்தில் ஸாக்ஷாத்காரமுண்டே; ப்ரபந்நர்களுக்கு ப்ரபத்தி ப்ரபாவத்தாலேயே வருமே; க்ஷேத்ரவாஸமெதற்காக என்ன அருளிச்செய்கிருர் यं இதி ஸாத்வதவசநப்ரகரணத்தைப் பரிசீலிக்கிறபோது அந்திமகாலத்தில் ஸாக்ஷாத்காரமென்கிறபொருள்

स्वपत्नपेक्षै யற அन्तिमकाலத்திலே இவர்களுக்குத் தெளிவு வருகிறவிது ஏற்றம்' இது केवलं मदीययैव दयया ऽतिप्रबुद्धः' என்று प्रपन्नविषयத்திலும் प्रदर्शितம்.

ஆகையால் भगवत्प्रतिकूலர்க்கு प्रातिकूल्यशेषமான रूप-नाम-क्षेत्रवास-सङ्कीर्तनादिகள் தஞ்சமாகா(து) புண்யக்ஷேத்ரங்களில் பண்ணும் प्रतिकूलाचरणங்கள் மிகவும் बाधकங்களா மென்னுமிடம் बहुशास्त्रसिद्धம். இதுவும் भगवत्प्रभावம். भगवत्प्रपन्नர்க்கு வ்ருத்ரன் क्षत्रबन्धு உள்ளிட்டார்க்குப் போலே உள்ள आनुकूल्यங்கள்தாமே எல்லா दोषங்களையும் ஒரு விரகாலே போக்கி उत्तारकங்களாம்.

ஆனபின்பு स्वसङ्कल्पनिपत மாயிருப்பதேதேனு மொரு வ்யாஜத்தாலே ஸர்வேச்வரன் स्वरूपप्राप्तமான मुक्तैश्वर्यம் கொடுக்க நினைப்பிட்ட அதிகாரிகள் பக்கலுள்ள தோஷங்களுக்குச் செலவு செய்வான். 'एकः शास्ता न द्वितीयोऽस्ति शास्ता' என்றும். 'प्रशासितारं सर्वेषाम्' என்றும். 'शास्ता विष्णुरशेषस्य' என்றும்

---

கொள்ளவேண்டியிருப்பதால் ஸ்த்தலாந்தரத்திலிருக்கிற யோகிகளைப்போலே யன்றிப் பிரயாகை யிராமலே க்ஷேத்ரவாஸியான யோகிக்கு ஸாக்ஷாத்கார மென்று சொல்வது. ப்ரபந்நர்க்கு ஸாக்ஷாத்காரம் பெறுதற்காக க்ஷேத்ர வாஸம்வேண்டாமாகிலும், ஈச்வரனுடைய அதிகதயாப்ரஸரத்திற்கு அதுவும் துணையென்ற படி. प्रतिकूल्यशेषமான = ப்ராதிகூல்யத்திற்காகக் கொண்ட; रूपेति—रूपம் வைஷ்ணவவேஷம், नाम—பகவந்நாம தாரணம், सङ्कीर्तन—பகவந் நாம ஸங்கீர்த்தனம். புண்யக்ஷேத்ரங்களில் பாபங்கள் மிகவும் बाधकங்கள். तीर्थो पापं न कुर्वीत ;......दुर्जरं पातकं तीर्थे...तत्र यत् क्रियते कर्म पुण्यपात्मकं नरैः। ज्ञानतोऽज्ञानतोवाऽपि तत् समुद्भ्यति कीटिशः இத்யாதிகள் ப்ரமாணம். பாகவதர்க்கும் பாபம் நேருமாகையால் க்ஷேத்ரவாஸம் बाधकமாகாதோ வென்னில்—பகவத் ப்ராவண்ய மிருப்பதாலே. தக்க உபாயாநுஷ்டாநத்தாலே தீருமென்கிறார் भगवदिति. வ்ருத்ர க்ஷத்ரபந்து வ்ருத்தாந்தங்கள் கீழே கூறப்பட்டன.

கீழே நம் தர்சநத்தில் நிலையுடையராயென்று தொடங்கி முமுக்ஷுக்களிடத்திலுள்ள தாரதம்யத்தைக் கணிசலாகாமதன்று அபசாரப்படாமையை அருளியபோது, உள்ளொரு பசையற்ற வேஷதாரிகளிடமும் வேஷமென்று தெரியாதவரையில் புரஸ்காரமே தகுமென்றதன்மேல், அவர்களுக்கும் நாமஸங்கீர்த்தந க்ஷேத்ரவாஸாதிகளிருப்பதால் தந்மூலமாக ப்ரபாவமிருக்கலாமே என்ன, அவர்கள்விஷயத்தில் அவை கார்யகரமாகாவென்று ப்ராஸங்கிகமாக நிரூபித்தார். இதன்மேல் முன்சொன்ன முமுக்ஷு விஷயமான ப்ரஸ்தாவத்தை உபஸம்ஹாரம் செய்கிறார் ஆனபின்பு இதி. அவர்களிடம் உள்ள தோஷத்தைப் பார்க்க நமக்கு அதிகாரமில்லை; அதற்குச் செலவு செய்கிறவன் அவனே; குணத்தைக் கண்டு கௌரவிப்பதே நம் செயலென்றபடி, एक இதி பா. ஆச்வ. 27—शास्ता यो हृच्छयस्तमहम् अनुब्रवीमि. तेनैव युक्तः प्रवणादिवोदकं यथा नियुक्तोऽस्मि तथा वहामि என்று மேல்பாகம். உலகில் நியமிப்பவன் ஒருவனே; இரண்டாவது நியமிப்பவனில்லை; அவன் ஹ்ருதயத்திலுள்ள அந்தர்யாமி; அவனால் நியமிக்கப்பட்டு மேட்டிலிருந்து

சொல்லப்படுகிறவன் தானே என்று தெளிந்து.

'रागादिदूषिते चित्ते नास्पदी मधुसूदनः । न बध्नाति रतिं हंसः कदाचित् कर्दमाम्भसि ॥'

इत्यादिகளைப் பார்த்து 'நெகிழாதே இவ்வதிகாரிகள் பக்கலுள்ள **गुणांश**த்தை **मरुभूमि**யில் தண்ணீர் பெற்றாற்போலே உகந்து.

'कर्मणा मनसा वाचा यदभीक्ष्णं निषेव्यते । तदेवापहरत्येनं तस्मात् कल्याणमाचरेत् ॥'

என்கிறபடியே **करणत्रय**த்தாலும் தான் நல்வழி கைவிடாதே

'संसारविषवृक्षस्य द्वे फले ह्यमृतोपमे । कदाचित् केशवे भक्तिस्तद्भक्तैर्वा समागमः ॥'

---

பள்ளத்தில் ஜலம்போல் பெருகுகிறேன். '**प्रशासितारमिति**. மநு-12-122-**अणीयांसमणीयसाम् । रुक्माभं स्वप्नधीगम्यं विद्यात्तु पुरुषं परम्॥**' என்பது மேல்பாகம் எல்லோரையும் நியமிக்கின்றவனும் மிகவும் அணுவான வஸ்துவினும் ஸூக்ஷ்மனும் ஹிரண்மயனும் ஸ்வப்ந ஜ்ஞாநம் போன்ற **दर्शनसमानाकार स्मृति विषय**னுமான பரமபுருஷனை அறியவேண்டும். **शास्ता इति** வி-பு 1-17.20 **जगतो यो हृदि स्थितः। तमृते परमात्मानं तात कः केन शास्यते॥**' எல்லோருக்கும் ஹ்ருதயத்திலிருக்கக்கூடிய விஷ்ணுவே ஆஜ்ஞாபிக்கிறவன். அப் பரமாத்மா நீங்கலாகவேறு எவனால் எவன் நியமிக்கப்படுவான். இதரருடைய தோஷங்களை எப்படி அழிப்பதென்று அறியும் ஸர்வேசவரனன்றி மற்ற நம்போன்றவருக்கு ஒருவருடைய தோஷசிந்தை எதற்காக? அப்படி நினைப்பது அந்த தோஷத்தை நமக்கே கொள்வதா மென்று தெளியவேண்டும் **रागेति** வி. த. 9—11. **राग**ம், **द्वेष**ம், **काम**ம், கோபம் என்ற தோஷங்களுள்ள மனத்தில் ஈச்வரன் இடம் கொள்ளான். ஹம்ஸமானது சேற்று நீரில் ப்ரீதியை ஒரு போதும் வைக்காது. **பார்த்து**=ராகாதிகளுள்ள போது நம்மிடம் ஈச்வரன் தங்கானென்று கவனித்து; **நெகிழாதே**—கர்மயோகாத்யதிகாரிகளை அலக்ஷ்யம் செய்யாமல். **कर्मणेति** பா உத்யோ 39. 56. மநோவாக்காய வ்யாபாரங்களால் அடிக்கடி எதில் ஸம்பந்தப்படுகிறானோ, அது அவனை வசப்படுத்திக் கொள்ளுமாகையால் நல்லதையே செய்ய வேண்டும். **நல்வழி கைவிடாதே**= நமக்கு ஸ்வாதீனமான நல்வழியை விட்டுவிடாமல்; **कल्याणमाचरेत्** என்பதை விவரிக்கிறார் மேலே **संसारेति.** ஸம்ஸாரமென்பது விஷம் பழுக்கும் மரம். நரகாநுபவம், இம்மைமறுமைவிஷயாநுபவங்களென்கிற விஷப்பழங்களே நிறைந்த இம் மரத்திற்கு அமுதுக்கிடான பழங்களிரண்டு, ஒன்று ஏதேனுமொருகாலத்திலாவது கேசவனிடம் பக்தி. மற்றொன்று அவனுடைய பக்தர்களோடு சேர்க்கை, இங்கே **वा** என்பதற்கு ஸமுச்சயம் பொருள். அல்லது இரண்டு பலமும் ஒருவன் பெறவேண்டுமென்பதில்லை ஒன்றிருந்தாலும் போதும். சிலர் பாகவத பக்தியிராமல் கேசவபக்தியோடிருப்பர். சிலருக்குச் சிறிதும் பகவத் பக்தி யிராத போதும் பாகவதரை பக்வத் பக்தரென்கிற காரணமாகக் கொண்டாடத் தெரியாத போதும், க்ஷத்ரபந்துவுக்கு ஒரு ரிஷியின் ஸமாகமம்போல் வருகிறதான மஹானின் ஸமாகமமும் ஓர் அமுதப் பலமாக நினைக்கப்படலாம், அது படிப்படியே நன்மைக்குக் காரணமாகின்றதே.

என்று இங்கிருந்த ஶ்லோகத்துக்கு ப்ரயோஜநமாக எடுத்த, பரமனைப் பயிலும் திருவுடைய சிறுமாமனிசருடன் சேர்த்தியாகிற சீரிய பெருப் பேற்றைத் திருவருளாலே பெற்றோமென்று க்ருதார்த்தனாய், 'திருமால் தலைக்கொண்ட நங் கட்கெங்ஙனே வரும் தீவினை' என்று வ்யவஸிதனாய், 'ஆள்கின்றானாழியான்ஆரால்

---

இவர் பகவத்பக்தரென்கிற காரணமாய் ஒருவரோடு ஸமாகமம் செய்தால் இங்கே கேசவ பக்தியும் கூடச் சேரும்; விகல்பமில்லை. தனித்தனியே அமுத மானபோது சேர்த்தி அமுதமாமென்பது சொல்லாமலே விளங்கும். பரமனை இதி. 'பரமனைப் பயிலும் திருவுடையார் எவரேனும் அவர் கண்டீர்' திருவாய்மொழி—3-7-1 சிறுமாமனிசர். 8 10.3. உருவில் சிறியவராய் மேன்மையில் மிக்கராயுள்ள மனிதர் சிறுமாமனிசர்; ஆஹாராதி தேஹ யாத்ரையில் நமக்கு ஸமாநராய் மேன்மையில் வேறுபட்டவரென்னலுமாம். இது ஐகாந்த்யமிருந்தும் சில வாகாரத்தில் குறைவைக் கொண்டு நெகிழ நினைப்பது அபசாரமென்று சொல்லும் ப்ரகரணமாகையால் இவரையே சிறுமாமனிசரென்றிங்குக் குறித்து இவர்களோடு ஸமாகமத்தை அமுதமாகச் சுவைக்கவேண்டுமென்றதாம். பெருப்பேறு. ஸம்ஸார விஷவ்ருக்ஷத்தில் பெற முடியாத பேறு இரண்டு, அவற்றில் பக்த ஸமாகமம் சீரியதென்றபடி. க்ருதார்த்தராய்—சரிதார்த்தராய். ஸம்பூர்ணகாமராயென்றபடி. சிறுமாமனிச ருடன் சேர்த்தியைப் பெற்றிருந்தாலும் என்ன பாபம் நேருமோவென்று அச்சமிருக்குமே யென்ன அருளிச்செய்கிறார் திருமால் இதி. அதைப் பெருப் பேறாகநினைத்தவர்க்குப் பாபம் வராத படியும் ஈச்வரனே பார்த்துக் கொள் வான். இத் திடமுள்ள நிர்ப்பரனுக்கு அச்சம் வாராதென்றபடி. இது திரு விருத்தம் 88வது பாசுரம். திருமால் =ச்ரிய:பதியால், தலைக்கொண்ட— ஸ்வீகரிக்கப்பட்ட நமக்கு பாபம் வர இடமேதென்று பொருளுரைப்பர். பாட்டில் ஸ்வரஸமாய் திரு மால் =சிறந்த வ்யாமோஹம் தலைக்கொண்ட— தலைக்கு மேலேறியிருக்கப்பெற்ற நமக்கு வேறு சிறு பலனில் சிறிதும் நசை யில்லை யாகையால் பாபத்திற்கு இடமில்லை யென்றே தோன்றும் பொருளாம். இது ஸர்வஸம்மதம். இந்த மாலுக்கு—வியாமோஹத்திற்கு விசேஷணமாக அங்கே மூன்றும் அடி அமைந்துள்ளது. ஆக, எம்பெருமானின் திருமேனிக்கு ஸமமாம் மேருமலை; அதில் திகழும் ஸூர்யன் அவன் திருக்கைத் திருவாழிக்கு ஸமமாவான். அதனால் மேருவையும் சூரியனையும் கண்டபோது கூட அவற்றை மறந்து திருமாலையும் திருவாழியையுமே பிதற்றுமளவுக்கான விசேஷ வ்யாமோஹம் நமக்குத் தலையெடுத்திருப்பதால் பாபம் வாராதென்ற தாம். வ்யவஸிதனாய்—நிச்சய முடையவனாய். ஆனாலும் தேஹாவஸாநத் தில் பரமபத ப்ராப்திக்கு தேவதாந்தராதி மூலமாகத் தடை வரில் என் செய்வதென்று அச்சம் வருமோ வென்ன அதுவுமில்லை யென்கிறார் ஆள் கின்றான் இதி. திருவா. 10.4 3. சக்ரபாணி நம்மை யாளும் போது யாரால் நாம் குறையுடையவராவோம். யார் நமக்குக் கேடு செய்பவராவரென்ற

குறையுடையும்' என்கிற படியே परमपदத்திலே பெறப்புகு(போ)கிற परिपूर्ण कैङ्कर्यसाम्राज्यத்துக்கு இங்கே முடிசூடியிருக்க ப்ராப்தம். இப்படி व्यवस्थितமான प्रभावம் रहस्यत्रयத்தில் फलनिर्देशप्रदेशங்களிலே अनुषङ्गसिद्धமாக अनुसन्धेयம்.

உண்மை யுரைக்கு மறைகளி லோங்கிய வுத்தமனூர்
வண்மை யளப்பரி தாதலின் வந்து கழல் பணிவார்
தண்மை கிடந்திடத் தர(தா)மள வென்ற(ன) வியப்பிலதாம்
உண்மை யுரைத்தன ரோரந் தவி ருயர்ந்தனரே. 33

---

படி, யாருடைய அபேக்ஷையுமில்லை யாரும் நமக்கு வேண்டா என்றும் பொருளாம். முடி சூடியிருக்க-இந் நிலைமையிலிருப்பே அபிஷேகம் பண்ணப் பட்டவனாயிருக்கை. அபிஷேகம் பண்ணப்பட்டவனுக்கு க்ருதார்த்த த்வாதிகள் கீழ்க் கூறியவை யெல்லாமிருக்கும்.

எல்லா அதிகாரத்திலும்போல் இவ்வதிகாரத்திலும் அதிகாரார்த்தம்அடங்கிய மந்த்ரபாகத்தைக் காட்டுகிறார் இப்படி இதி.फलनिर्देशப்ரகரணங்கள் மந்த்ர த்தில் चतुर्थ्यादिகள். अनुषंगसिद्धம் உத்தேசிக்காதிருக்கத் தானே வருவது.

மேலே भगवत्संबन्धविशेषमूलप्रभावமாகிற அதிகாரார்த்தத்தின் ஸங்க்ரஹப்பாசுரம் உண்மை இத்யாதி, உண்மை உரைக்கும்=ஸத்யத்தையே சொல்லுகின்ற மறைகளில்-வேதங்களில், ஓங்கிய-எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கும் உத்தமனூர்—புருஷோத்தமருடைய வண்மை—வைலக்ஷண்யம்,—ப்ரபாவம், அளப்பு அரிது=அளவிடவொண்ணாது. ஆதலின்—ஆதலால் வந்து=தேவதாந்தராதிகளை விட்டு வந்து, கழல் பணிவார்— அவருடைய, திருவடியை யாச்ரயித்தவருக்கு, தண்மை கிடந்திட—ஜாத்யாதிகளில் நைச்யமிருந்தாலும், தரம்—உத்கர்ஷமானது. அளவு என்ற இயப்பு இலது ஆம்—பரிச்சேதமென்கிற சொல்லுடையதாகாதென்கிற. உண்மை-தத்து வார்த்தத்தை. உரைத்தனர்-சொன்ன ஆசார்யர்கள், ஓரம் தவிர-ஜாத்யாதி பக்ஷபாதமின்றி, உயர்ந்தனர்—பெருமை பெற்றவராவர், சில அம்சத்தில் நீசத்வமிருந்தாலும் உத்க்ருஷ்ட ப்ரபாவனான எம்பெருமானையே ஆச்ரயித் திருக்கையால் பரமைகாந்தி ப்ரபாவமானது வாசாமகோசரமென்றபடி. தரமளவென்ற என்ற விடத்தில் தாமளவென்ன என்ற பாடம் கொண்டுளர். இயப்பு என்னாமல் வியப்பு என்று பிரிப்பர். தாம் என்பதற்கு கீழ்க்கூறிய உத்தமனுரென்று பொருள் கொண்டு உத்தமனுரென்ற பகவான், கழல் பணிவாரான இவர்களுக்கு அளவு—ஸத்ருசராவாரென்றால் இதில் வியப்பு—ஆச்சர்யம் இல்லை; இவர்களுக்குத் தன்னை விட ஏற்றத்தையும் அவன் இசைந் தானே என்பர். உரைத்தனர் என்பதே வினைமுற்றாய் உயர்ந்தனர் என்பது எழுவாயாகலாம். உயர்ந்தனர் என்பதற்கு ஆசார்யர்கள் என்று பொருள். இப்பாட்டு ஸர்வமுமுக்ஷுவிஷயமாகும். கழல்பணிவாரென்பதற்கு ஸ்வதந்த்ரப்ரபத்தி செய்தவரென்ற பொருளாகில் அவர்விஷயமேயாம்.

பகவத்ஸம்பந்த மூள்ள பரமைகாந்திகளில் ப்ரபத்தியென்கிற உயர்ந்த

रागद्वेषमदादिकैरिह महारक्षोभिरक्षोभितं(ते) नित्ये रक्षितरि स्थिते निजभरन्यासाभिधानं तपः ।
यत् कक्षीकृतमत्यशेत विविधान् धर्मान् अधर्मद्रुहस्तद्भूमार्णवलेशवर्णनमपि प्राचां न वाचां पदम् ॥ ५८

---

தவமுள்ளவர்க்கு ப்ரபாவம் மிக உயர்ந்ததென்கிறார் **रागेति.** **रागम्**–விஷயங்களில் பற்று. த்வேஷம் அதற்கு விரோதிகளிடமாம். **मदम्** கர்வம். இவை முதலான (ஆதிபதார்த்தம்மோஹம்) துர்குணங்களாகிற **महारक्षोभिः**-பேரரக்கர்களாலும் **अक्षोभितं**—அசைக்கப்படாத: இது தபஸ்ஸுக்கு விசேஷணம், ரக்ஷகனுக்கு விசேஷணமாம் போது **अक्षोभिते** என்று பாடாந்தரம். **अक्षोभिते**–குழப்பப்படாத **नित्ये रक्षितरि स्थिते**—சாச்வதமாய் ஸர்வரக்ஷகனுயிருக்கும் பிரானிடத்தில். **निजभरन्यास. अभिधानम्**—ஜீவன் தனதான பரத்தை ஸமர்ப்பிப்பதென்று பேர்பெற்ற. **कक्षीकृतं**—முன்னோர்களாலாதரிக்கப்பட்டதுமான **यत् तपः**—எந்த தவமானது—**अधर्मद्रुहः**—**धर्मेण पापं अपनुदति** என்றபடி பாபங்களைப் போக்குகின்ற **विविधान् धर्मान्**—தைத்திரீய உபநிஷத்தின் முடிவில் ஓதப்பெற்றபடி ஸத்யம் முதலாய் மானஸமென்ற பக்தியோகம்வரையிலான தர்மங்களை **अत्यशेत**—விஞ்சி நின்றதோ. **तद्भूम अर्णव**—அந்த பரந்யாஸத்தின், மஹிமையாம் ஸமுத்ரத்தின் **लेशवर्णनम् अपि**—ஸ்வல்ப்பாம்சத்தை வர்ணிப்பதும் **प्राचां** பெரியோர்கள் ஆதரித்த **वाचां अपि**—ச்ருதி ஸ்ம்ருதி முதலான வாக்குக்களுக்கும் **न पदं**—நிலமாகாது. பக்தியோகத்தைவிட பரந்யாஸத்திற்கு மஹிமை அதிகமாகையால் அதை யநுஷ்டிப்பவரின் ப்ரபாவம் அளவற்றதாகும் '**तस्मात् न्यासमेषां तपसामतिरिक्तं आहुः**' என்றதே. தேவதைகள் ராக்ஷஸர்களாலே க்ஷோபிக்கப் படுவர். அந்த ராக்ஷஸர்களும் ராகத்வேஷாதிகளாலே க்ஷோபிக்கப்படுவராதலால் ராகாதிகள் மஹாராக்ஷஸர்கள். அவற்றாலும் க்ஷோபிக்கப் படாத **अखिलहेयप्रत्यनीक**னான பரமாத்மா ப்ரபந்நனிடமுள்ள ராகத்வேஷாதிகளைக் கண்டு இவர்களுக்கு ப்ரபத்திபலனையளிப்பதில் கலங்கமாட்டான். ஆச்ரிதரிடம் குற்றமிருந்தால் வேறு விதத்தால் அதைத் தீர்த்துப் பலனளிப்பான். ஆகையால் சிலரைத் தாழநினைப்பது தகாதென்ற படி. **अक्षोभितं** என்ற பாடமே **सारास्वादिन्यादि** ஸம்மதமாகும். ப்ரபத்தி என்கிற தவமானது ப்ரபந்நரிடமுள்ள ராகத்வேஷாதி தோஷங்களால் தடுக்கப்படாதென்றதாயிற்று. **कक्षीकृतमत्यशेत** என்ற விடத்தில் மேம்பட்டதாகிறதென்று ஒப்புக்கொள்ளப்பட்டதென்று உரை செய்வர். **प्राचां** என்பது ப்ராசீநமான என்ற பொருளாய் வாசா மென்பதற்கு விசேஷணமாகாது; இது ஸ்த்ரீலிங்கமன்றே என்பர். அதற்காக ப்ராசீந புருஷர்களுடைய என்ற பொருள் கொண்டது. அநாதியாய் ப்ராசீநரான எல்லோரையும் சேர்ந்த வாக்கு என்ருல் வேதாதிகளெல்லாமாகும். **ப்ரபாவரக்ஷாதிகாரம் முற்றும்.**

இந் நான்கு அதிகாரங்களால் ச்ரிய:பதி ஸித்தோபாயமாகிறானென்றும், ஸாத்யோபாயமும் பரிகரங்களோடு வேண்டுமென்றும், ப்ரபந்நருக்கு உத்க்ருஷ்ட ஜாதிப்ராப்தியும் துஷ்டமான எதையும் अदुष्टமாக்குவதுபோன்ற ப்ரபாவமும் சொல்லவாகாவென்றும், ப்ரபத்தியானது **प्रारब्धकर्म**த்தைக்கும்

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे प्रभावरक्षाधिकारः षड्विंशः ॥ 26
श्रीमद्रहस्यत्रयसारे स्थिरीकरणभागो द्वितीयः ॥ 2
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—०—०—

---

நாசகமாய். ஆசாரக்குறைவு முதலானவற்ருல் அழியாததாயு மிருப்பதால் வேஷதாரிகளாகாத வாஸ்தவ ஏகாந்திகளெல்லோரும் ப்ரபாவசாலிகளே என்றும் கூறி அர்த்தாநுசாஸநபாகார்த்தம் ஸ்த்திரீகரிக்கப்பெற்றது.

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம: समस्तांगभाक् ।)

साध्यं किञ्चिदपेक्ष्य सिद्धमिथुनस्योपायभावः स्थितः साध्ये च द्विविधेऽस्त्यकिञ्चनगतो न्यासः
जात्युत्कर्षमुखप्रभाववचनं बाध्यं प्रमाणादृतं प्रारब्धक्षतिमुख्यमित्यभिहितस्थैर्यं द्वितीये कृतम् ॥

ஸ்ரீவாத்ஸ்ய வீரராகவாசார்யன் இயற்றும் ஸாரவிஸ்தரமென்னும்
ஸ்ரீமத்ரஹஸ்ய த்ரயஸார வுரையில் ஸ்த்திரீகரணபாகம் முற்றும்.

---

729. ப-ஸப்தர்ஷிஸம்வாதவிஷயம். பாரத அநுசாஸந-142ல் கச்யபவாக்யம் விஷ்ணு மித்யாதி-சிறிது பாடபேதத்துடன். அங்குள்ள வரலாறு—உடம்பெல்லாம் பருத்துக் கொழுத்த ஸந்நியாஸி நாயுடன் அத்ரி முதலான ரிஷிகளிடம் வந்திருக்க, அருந்ததி பருத்த உடம்பைக் கண்டு வியக்க, கவலையற்றவரென்றுரிஷிகள்கூறிப் பரிசர்யையை யிசைந்துவேர்கிழங்குகளுக்காகப் பலவிடம் போய் ஒரு தாமரையோடைக்கு ஸந்நியாஸியுடன் சென்றனர். வ்ருஷாதர்ப்பியென்பவனல் அக்னியில் கிளப்பப்பட்ட ஓர் அரக்கி அதற்குக் காவலாயிருந்து, அவரவர் பெயரைப் பொருளுடன் சொல்லிவிட்டு நீரிலிழிய வேண்டுமென்ன, அவ்வாறே செய்தனர். ரிஷிகளின் பெயர்களின் பொருள் விசித்ரமாயுள்ளதையும் அவற்றின் உரையையும் அங்கே காண்க. ஸந்நியாஸியும் தம் பெயரைச் சொன்னபோது தெளிவாகச் சொல்லும்படி அரக்கி கேட்டதால் அவர் முனிந்து, சாம்பலாயிடு என்று த்ரிதண்டத்தால் தலையிலடித்தொழித்தார். ரிஷிகள் தாமரைக்கிழங்குகளைப் பறித்துக் கரையில் வைத்துவிட்டு, ஸ்நாநாதிகளை முடித்துக்கொண்டு வந்து கிழங்கைக் காணமல் ஸந்தேஹித்ததில் சபதம் எல்லோரும் செய்தார்கள். பிறகு ஸந்யாஸியைக் கேட்க, களவு செய்தவருக்குப் பல நன்மைகள் வரவேணுமென்று விசித்ரமாக சபதம் செய்துவிட்டு, 'இந்த அரக்கி உங்களைக் கொலைசெய்ய இங்கேயிருந்தாள்; அவளை யழிக்க இவ்வாறு வந்தேன்; மறைத்தேன். நான் இந்த்ரன் என்று சொல்லி அவர்களின் குணத்திற்குப் புகழ்ந்தாரென்றவாறு.

அடுத்த 143வது அத்யாயத்திலும் அகத்தியர் தாமரைக்கிழங்குகளைப் பறித்துவைத்ததும்இந்த்ரன் அபஹரித்ததும் ரிஷிகளின் மேல் அவர் ஸந்தேஹித்ததும் அவர்களின் பலவித சபதமும் முன்போல் இந்த்ரன் சொல்லிப் புகழ்ந்ததும்உளது.இதி ஹாஸஸமுச்சயத்தில் கதைசிறிது வேருயிருக்கலாம்.

श्रीः
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः
अथ पदवाक्ययोजनाभागः

## मूलमन्त्राधिकारः

### மூலமந்த்ராதிகாரம்–27

तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणायेत्याम्नायोक्तं पदमवयतां सार्थमाचार्यदत्तम् ।
अङ्गीकुर्वन् अलसमनसामात्मरक्षाभरं नः क्षिप्रं देवः क्षिपतु निखिलान् किङ्करैश्वर्यविघ्नान् ॥५९

அஸ்மத் குருபரம்பராப்யோ நம:

### ஸாரவிஸ்தரம்—மூலமந்த்ராதிகாரம்-27

இனி பதவாக்யயோஜநாபாகம். இதில் அடைவாக மூலமந்த்ரம் த்வயம் கீதாசரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களில் பதங்களும் வாக்யங்களும் அவற்றின் பொருளும், பதம் பதத்தோடு சேர்வது, வாக்யம் வாக்யத்தோடு சேர்வது இவ்வாறென்று அவற்றின் யோஜனைகளும் அறிவிக்கப்படும், மூல மந்த்ர விஷயமான முதலதிகாரத்தில் 'मन्त्रनाथं गुरुं मन्त्रं समत्वेनापिपूजयेत्' இத்யாதிகளுக்கிணங்க மந்த்ர நாதனைப் மந்த்ரார்த்தமான தேவதையாயிருக்கும் பிரான் விஷயமாகவும் மந்த்ர ப்ரவர்த்தகரிஷியாபிய குருவிஷயமாகவும் மந்த்ர விஷயமாகவுமான ச்லோகங்கள் மூன்று. நான்காவது ச்லோகத்தால். இம்மூல மந்த்ரத்தின் அர்த்தம் முழுமையும் இங்கே அறிவிக்கப்படுமென்கிறார். இங்கு மூலமந்த்ரமாவது எது, அதை மூலமந்த்ரமென்று சொல்லுவதற்குக் காரணமென்ன என்பதை யறிவிப்பதற்காக மூலமந்த்ரார்த்தமான தேவதை மூலமாக நாம் பெறவேண்டும் பெரும் பேற்றுக்கு உபாயமாக பரந்யாஸாநுஷ்டாநத்திற்குக் காரணமான தத்துவ ஹித புருஷார்த்த ஜ்ஞாநத்திற்கு அஷ்டாக்ஷரமந்த்ரம் காரணமாயிருப்பதால் இது மூல மந்த்ரமாகிறதென்றறிவித்துக்கொண்டு இது மூலமாக நமக்குப் பலனளிக்கும் மந்த்ர தேவதாவிஷயமாக மங்களம் அருளிச் செய்கிறார் तारमिति. மேலே எடுக்கப்படும் नारदीयकल्प ச்லோகம் 1-11. मन्त्राणां परमो मन्त्रः என்றதில் இதை மூலமந்த்ரமென்று நிர்தேசித்திருக்கிறார். மோக்ஷார்த்தமாக ப்ரபத்தியநுஷ்டாநத்திற்குச் சேதநனை அதிகாரியாக்குகிறபடியால் திருவஷ்டாக்ஷரம் மூலமந்த்ரமாகிறது. பூர்வார்த்தத்தால் திருவஷ்டாக்ஷர ஸ்வரூபம் அறிவிக்கப்படுகிறது. இங்கு आम्नायोक्तं सार्थमाचार्यदत्तं என்ற பதங்கள் तारं முதலான மூன்றிலும் அந்வயிக்கும். आम्नाय பதத்தினாலே 'ओमित्यग्रेव्याहरेत् । नम इति पश्चात् । नारायणायेत्युपरिष्टात्.........एतद्वै नारायणस्याष्टाक्षरं पदम्' என்கிற अथर्वनारायणोपनिषத்து கருதப்பெறும். आम्नायोक्तं—பூர்வோத்தர க்ரமத்துடன் வேதத்தில் ஓதப்பட்ட. तारं—ப்ரணவத்தை पूर्वं—முதலிலும், तदनु—அதன்பிறகு हृदयं—नमःपदத்தையும் तत्—அப்படிப்பட்ட नारायणायेति पदं च—நாராயணய என்கிற சொல்லையும் सार्थं-அர்த்தத்துடன் आचार्यदत्तं—ஆசார்யரால் அளிக்கப்பட்டு अवयतां-அறிகின்றவர்களும் अलसमनसां ஆகிஞ்சந்யத்தாலே

कल्याणमावहतु कार्तयुगं स्वधर्मं प्रख्यापयन् प्रणिहितेषु नरादिकेषु ।
आद्यं कमप्यधिगतो रथमष्टचक्रं बन्धुस्सतां बदरिकाश्रमतापसो नः ॥ ६०

---

பக்தியோகத்தில் ப்ரவர்த்திக்க மாட்டாமல் மந்தமான மனமுடையர்களு மான नः-முமுக்ஷுக்களான நம்முடைய आत्मरक्षाभरम्—நம்மை ரக்ஷிக்க வேண்டும் பாரத்தை देवः-ஜகத்காரணனுன எம்பெருமான் अङ्गीकुर्वन्—ஸ்வீ கரிக்கின்றவனுய் निखिलान्—ஸமஸ்தமான किंकर ऐश्वर्य विघ्नान्—கைங்கர்ய ஸாம்ராஜ்யத்துக்கு இடையூருன புண்யபாபங்களை क्षिप्र-விரைவில். தேஹா வஸாநத்திற்குள் क्षिपतु—போக்கவேண்டும். திருவஷ்டாக்ஷரத்தில் நம:பத த்தை ஹ்ருதயமென்று மந்த்ர சாஸ்த்ரத்தில் சொல்லியிருப்பதால் இங்கே ஹ்ருதயமென்ருரென்பர். மந்த்ரமத்யத்திலிருப்பதாலும் ஹ்ருதய மாம். नमश्शेति நம:பதார்த்தமே சரீரத்தில் ஹ்ருதயம் போல் ப்ரதானமாகும். 'தாரமும் நம:பதமும் பதமாயிருந்தாலும் नारायणायेति என்கிற சொல்லு க்கே மேலே அந்வயிக்க ஆகாங்க்ஷையிருப்பதால் பதம் என்ற சொல்லை அதுடன் சேர்த்தது. तद् என்ற சொல்லால் நாராயண சப்தத்தில் णत्वமிரு ப்பதால் வேறொன்றைச் சொல்லவாகாமை யென்கிற பெருமையும், सुबाल- தைத்திரீயாதிகளில் நாராயண சப்தத்தின் ஆவ்ருத்தியிருப்பதும், நாராயண சப்தத்தில் அச்சும் ஹல்லுமாகப் பிரிக்கப்பட்டெட்டக்ஷரமாய் திருவஷ்டா க்ஷரப்ரபாவமும் அறிவிக்கப்பெறும். तदनु हृदयं என்றுற்போலே तदनु नारायणाय என்று சொல்லவேண்டுமே யென்னில்—முன் 'तदनु என்பதை तद् अनु என்று பிரித்து तच्च என்ற चकारத்தாலே अनु என்பதைச் சேர்த்து तत्—அந்த ஹ்ருத யத்திற்கு अनु-பின்னலே என்றும் உரைப்பர், உபநிஷத்திற் போலே व्या- हरेत् என்பதைச்சேர்த்து 'तारத்தை முன்னும் பிறகு நமஸ்ஸையும் பிறகு நாராயணுய என்பதையும் சொல்லவேண்டும் इति என்று வேதத்தில் ஓதப்பெற்ற' என்றவாறும் முதற்பாதத்திற்குப் பொருளாம். இப்போது பதமென்ற சொல் पद्यते मुमुक्षुभिः अस्मादिति पदं என்ற பொருளாய் உப நிஷத்தில் अष्टाक्षरं पदम् என்ற விடத்திற் போல் முழுமந்த்ரத்தையும். கூறும். 'உத்தரார்த்தத்தில் देवः नः—आत्मरक्षाभरं किङ्करैश्वर्य என்கிற பதங் களால் தத்துவஹித புருஷார்த்தங்கள் மூன்றும் இம்மந்த்ரத்தின் பொரு ளென்று குறிக்கப்பெற்றது. இப்படி இம்மந்த்ரத்திற்குள்ள मूलत्वம் மேலே धारक पोषक भोग्य நிரூபணத்தில் விவரிக்கப்பெறும். क्षिपं என்ற சொல்லாலே भक्तियोगानधिकारि அறியவேண்டும் வகையில் மூல மந்த்ரார்த்தத்தை சிக்ஷித்து க்கொள்ள வேண்டுமென்று குறித்ததாம். मन्त्रनाथனை தேவதைவிஷயமான மங்களமாகும் இது. आचार्यवद् என்றதாலே ஆசார்யவிஷயமுமாயிற்று.

மேலே மந்த்ர ப்ரவர்த்தக ரிஷிவிஷயமான மங்களம் कल्याणमித்யாதி. कार्तयुगं—க்ருதயுகஸம்பந்தியான स्वधर्मं 'निवृत्तिलक्षणं धर्ममृषि र्नारायणोऽब्रवीत्' என்ற பகவத் தர்மமான நிவ்ருத்திதர்மத்தை प्रणिहितेषु—அநந்யரான नरादिकेषु—

यदन्तस्थमशेषेण वाङ्मयं वेदवैदिकम् । तस्मै व्यापकमुख्याय मन्त्राय महते नमः ॥ 61 ॥

इह मूलमन्त्रसंवृतमर्थमशेषेण कश्चिदनुभवति । स्फटिकतलनिहितनिधिमिव देशिकदत्तेन चक्षुषा जन्तुः 62

---

நரநாரதாதிகளான ஆச்ரயித்தவரிடம் प्रवर्तयन्—பொருளுடன் ப்ரசாரம் செய்கிறவரும் அதற்காக आद्यम् ஆதிகாலம் முதலிருக்கிற (அநாதியான) रूपि-அநிர்வசநீயமான மேன்மையையுடைய. अष्टचक्रं—अष्टचक्रं हि तद्यानं भूतयुक्तं मनोजवम् என்ற பாரதம் சாந்திபர்வத்தின் முடிவில் திருநாராயணீயத்தின் படி எட்டு சக்ரங்களையுடைய रथं=தேரை अधिगतः—பெற்றவரும், இது எட்டு அக்ஷர முள்ள திருவஷ்டா க்ஷரமென்கிற மோக்ஷயாநத்தைக் கண்டவரென்பதற்கு ஸூசகம். सतां—ப்ரஹ்மஜ்ஞாநிகளுக்கு बन्धुः—ஸர்வவிதபந்துவுமான बदरिकाश्रमतापसः பதரிகாச்ரமத்தில் தவம் புரியும் திருமந்த்ரரிஷியான நாராயணன். नः—நமக்கு कल्याणम्—திருமந்த்ரமூலமாக நிவ்ருத்திதர்மங்களாலாம் மங்களத்தை आवहतु அளிக்கட்டும்.

இனி மந்த்ரவிஷயமான நமஸ்காரரூபமான மங்களம் அருளுகிறார் यदिति. वेदवैदिकं வேதரூபமாயும் वेदसंबन्धिஸர்வவித்யாஸ்தாநரூபமாயுமிருக்கும் वाङ्मयं—வாகிந்த்ரியமூலமான சொற்களெல்லாம் अशेषेण—ஒன்று விடாமல் यदन्तस्थम्—எதனுள் அடங்கியிருக்கிறதோ, तस्मै—அந்த व्यापकमुख्याय—षडक्षर पञ्चाक्षर द्वादशाक्षरமந்த்ரங்களாகிற வ்யாபகமந்த்ரங்களுக்குள் முக்யமானதும் महते—सन्ध्याकालेषु जप्तव्यं सततं च आत्मशुद्धये இத்யாதிப் படி மஹாப்ரபாவமுள்ளதுமான मन्त्राय திருவஷ்டாக்ஷரமந்த்ரத்திற்கு नमः எனது ப்ரணாமம். 'अकारो वै सर्वा वाक्; ओङ्कार एवेदं सर्वम्' என்று ஸர்வவாக்ரூபமாகச் சொல்லப்பட்ட அகார ஓங்காரங்கள் இதில் அடங்கியிருப்பதால் यदन्तस्थ என்றது. வேறு வ்யாபக மந்த்ரத்திலும் அகார ஓங்காரங்கள் இருந்தாலும் இதற்கு மிருப்பதாலே புகழ்வது தகும்—அல்லது नमो नारायणाय என்றதில் அச்சும் ஹல்லுமாகப் பிரித்தால் பதினாலாகும். இது பதினாலு வித்யாஸ்தாநங்களின் குறிப்பாகலாம்-अथवा-सर्ववाङ्मयத்தினுடைய அர்த்தமும் அடங்கியிருப்பதால் ஸர்வவாங்மயமும் இதிலுள்ளதாகச் சொல்லிற்று. வ்யாபக மந்த்ரமென்று பேர் பெற்ற மூன்றில் இது व्यापकव्यापक तत्त्वकण्ठोक्तिमत्ताகையாலே மிகவும் முக்யமென்றது பகவந்நாமங்களுக்குள் நாராயணசப்தமே சிறந்ததாகையாலும் இதற்கு மஹத்துவம்.

இத் திருமந்த்ரத்திற்கு முழுப்பொருளும் இங்கே உரைக்கப்பெறும். பாக்யசாலிகள் வேறெங்கும் அலையாமல் அநுபவிக்கலாமென்கிறார் इह இதி. इह—இவ்வுலகில் कश्चित् जन्तुः—'मनुष्याणां सहस्रेषु कश्चित् यतति सिद्धये । यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥' என்றாற் போலே பலவாயிரம் பேர்களில் ஒருவனே मूलमन्त्रसंवृतं—திருவஷ்டாக்ஷரமென்கிற பெட்டியிலடக்கப்பட்ட अर्थं—பொருளை अशेषेण—முழுமையும். स्फटिकतल निहित निधिम् एव—ஸ்படிகங்களாலான தலத்தில் வைக்கப்பட்ட புதையலைப் போல் देशिकदत्तेन—காண்பிக்கும் ஆசார்யனால் அளிக்கப்பட்ட चक्षुषा—உட்கண்ணால் अनुभवति—போக்யமாக

सत्वस्थர்க்கு அநுஸந்தேயங்களான सारतमार्थங்களையும், அவற்றினுடைய स्थिरीकरणप्रकारங்களையும் प्रतिपादित्தோம். இவற்றையெல்லாம் प्रकाशिப்பிக்கிற ரஹஸ்யத்ரயத்தில் पदवाक्ययோஜனைகள் இருக்கும் படி சொல்லுகிறோம்.

அவற்றில் முற்படத் திருமந்த்ரம் परशेषतैकरसस्वरूपादिகளைத் தெளிவித்து, அம்முகத்தாலே समस्तप्रतिबन्धकनिवृत्तिपूर्वक—परमपुरुषार्थप्राप्तियிலே ருசியையும், त्वरैயையும் விளைப்பித்து. उपायाधिकारपूर्तिயை யுண்டாக்கும். இப்படி அதிகாரி யானவனுடைய फलापेक्षापूर्वक—उपायविशेषानुष्ठानप्रकारத்தை द्वयம் विशदமாக ப்ரகாசிப்பிக்கும். இவ்வுபாய விசேஷத்தை विधिக்கிறது चरमश्लोकம்.

இவை மூன்றிலும் தனித்தனியே எல்லா அர்த்தங்களையும் शाब्दமாகவும் आर्थமாகவும் காணலாமாகிலும், ஒரொன்றிலே ஒரொன்றுக்கு நோக்காயிருக்

---

அநுபவிப்பான். व्यापकादर्शदेशे என்று கீழ்க்கூறியபடி திருமந்த்ரம் கண்ணுடி போலிருப்பது அதனுள் உள்ளவற்றையெல்லாம் ஸ்படிகக் கற்களால் நிரு மிக்கப்பட்ட தலத்தில் வைத்த நிதியைப் போல் தேசிகரளித்த கண்ணைக் கொண்டு காணலாம்.........मनसि मम यत्प्रसादात् वसति रहस्यत्रयस्य सारोऽयम्என்று கீழ்க் கூறியபடி தம் தேசிகர் மூலமாகக் கிடைத்ததும் தாமாகிற தேசிகனுல் அருளப்பட்டதுமான இவ்வதிகாரமாகிற கண்ணாலே தம் சிடர்கள் காண் பது இங்கே கருதப் பெறும். இதுபோல் மேலிரண்டதிகாரங்களிலும்.

முன்பாகங்களோடு இந்த பாகம் ஸங்கதமென்றறிவிக்கிருர் सत्वस्थர்க்கு இதி. முமுக்ஷுக்களுக்கு என்றபடி. கீழ்க்கூறிய ஸாரதமாம்சங்களை யறியா விட்டால் पदवाक्ययोजनैயில் சொல்லுவது தெளிவாகாதென்றன்ருே அவைகள் கீழே நிரூபிக்கப்பட்டன. முதல் ச்லோகத்தில் கருதிய பொருளை விசத மாக்குகிருர் அவற்றில் இத்யாதியால் முற்பட—முதலில். परशेषतैकरसस्वरूपं— பரமாத்மாவின் சேஷத்வத்தையே ஸாரமாகவுடைய ஜீவாத்ம ஸ்வரூபம்— இதுப்ரணவார்த்தம் ஆதிபதத்தால் மேற்பதங்களின் பொருளைக்கொள்வது ப்ரகாசிப்பிக்கும் இதி. உபாயாநுஷ்டாந காலத்தில் அர்த்தஸ்மரணம் இத் த்வய மந்த்ர பூர்வமாகப் பெறவேண்டும் விதிக்கிறது இதி. ஆகில். அனுஷ் டிப்பவனுக்கு அதிகார பூர்த்திக்காக மூலமந்த்ரார்த்த ஜ்ஞாநம் முதலில் வேண்டும். த்வயமூலமான ஜ்ஞாநம் அநுஷ்டாநகாலத்தில் என்று அங்கே க்ரமமிருந்தாலும் அநுஷ்டாநத்திற்குப் பிறகு விதிவாக்யத்தாலாவதென்; விதிவாக்யத்தால் அறிந்த பிறகே மந்த்ரத்தைக் கொண்டநுஷ்டிப்பது ஆகச் சரமச்லோகத்திற்குப் பிறகே த்வயத்திற்கு உபயோகம். இதை ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்தில் காண்க. அங்ஙன மிருக்கச் சரமச்லோகத்தைக் கடையில் கூறியது ஏன் என்ன—விதிவாக்யம் அறியாவிட்டாலும் அவசியமான மந்த்ரங்களிலேயே அர்த்தாத் விதியையும் ஊஹிக்கலாமாகையால் அந்த विषय த்தைவிட்டு, கீதைக்கு முன்னமே இருப்பாலும் மந்த்ரமானதாலும் இரண் டையும் சேர்த்து, மூலமந்த்ர த்வய சரமச்லோகங்களில் நமக்கு அபே க்ஷிதமான அர்த்தங்கள் மேன்மேல் விசதமாகின்றன வென்ற விவரண

கும். திருமந்த்ரத்தில் प्रथमपदத்தில் प्रथमाक्षरத்திலே संक्षिप्तமான शरण्यपारतन्त्र्यத்தையும், இதில் मध्यमतृतीयपदங்களிலே प्रतिपन्नமான उपायोपेयங்களையும் அடைவே विशदமாக்குகிறது द्वयम्. இதில் 'प्रपद्ये' என்கிற பதத்தில் உத்தமனாலே விவக்ஷிதமான அதிகாரிவிசேஷத்தையும் अर्थसिद्धமான उपायान्तरनैरपेक्ष्यத்தையும், உபேயத்தில் नमश्शब्दसंक्षिप्तமான विरोधिनिवृत्त्यंशத்தையும் வெளியிடுகிறது சரமச்லோகம். இவை மூன்றும் (நமக்கு) ज्ञान—अनुष्ठान—फल निदानங்களாய்க் கொண்டு धारक—पोषक—भोग्यங்கள்.

'व्यक्तं हि भगवान् देवः साक्षान्नारायणः स्वयम् । अष्टाक्षरस्वरूपेण मुखेषु परिवर्तते ॥'

என்கிறபடியே देशिकजिह्वैயிலே இருந்து शिष्यहृदयगुहान्धकारத்தைக் கழித்துப்

---

காரணத்தினாலும் சாமச்லோகம் மூன்றாவதாக்கப்பட்டதென்று தெளிவிக்கிறார் திருமந்த்ரத்தில் இதி. அடைவே—க்ரமமாக. உபாயத்தை விசதமாக்குகிறது शरणं प्रपद्ये என்பது. உபேயத்தை விசதமாக்குகிறது 'ச்ரீமதே நாராயணாய' என்பது. உத்தமனாலே = உத்தமபுருஷப்ரத்யயத்தினாலே. விவக்ஷிதமான = வாசகசப்தமிராமற்போனாலும் அறிவிக்கக் கருதப்பெற்ற அதிகாரிவிசேஷத்தை = ப்ரபத்திக்கு அதிகாரியான அகிஞ்சநனை. அல்லது அதிகாரிக்குள்ள விசேஷத்தை—ஆகிஞ்சந்யத்தை. இது, 'सर्वधर्मान् परित्यज्य என்பது அநுவாதம் என்ற பக்ஷத்தில் கிடைக்கும். அர்த்தஸித்தமான = த்வயத்தில் பரந்யாஸத்தைச் சொன்னதாலேயே ஸித்திக்கக்கூடிய. உபாயாந்தரநைரபேக்ஷ்யத்தை = வேறு உபாயத்தைத் துணையாக அபேக்ஷிக்காமலிருக்கையை. இது परित्यज्य என்றவிடத்தில் விதிபக்ஷத்தில் தேறும். உபேயத்தில் = த்வயத்தின் உத்தரகண்டார்த்தத்தில். வெளியிடுகிறது இதி. விரோதிநிவ்ருத்தியாவது–ஸர்வபாபமோக்ஷமென்று சரமச்லோகத்தில் தெரியவருமே.

சரமச்லோகத்தை இரண்டாவதாகக் கொண்டு மற்றொரு விதமாக மூன்றுக்கும் உபயோகம் அருள்கிறார் இவை இதி. இது மேல் விவரணத்திலிருந்து வ்யக்தமாகும். நமக்கு–முமுக்ஷுக்களாய் அகிஞ்சநரான நமக்கு. சில கோசங்களில் நமக்கு என்ற சொல் இல்லை. ஜ்ஞாநத்திற்கு நிதாந(மூலகாரண)மாய் மூலமந்த்ரம் धारकம், விதிவாக்யமே ப்ரவர்த்தகமாகையால் அநுஷ்டாநத்திற்கு நிதாநமாய் சரமச்லோகம் போஷகம். அநுஷ்டித்த பிறகு सर्वदा த்வயோச்சாரணம் भोगரூபமாயிருப்பதால் போக்யம் த்வயம். "धारकत्वத்தை உபபாதிக்கிறார், வ்யக்தம் இதி. धारकत्वமாவது—ஸத்தாஹேதுத்வம். ஸத்தையாவது—தத்த்வ ஜ்ஞாநமென்றபடி. வ்யக்தமென்ற சொல்லுக்கு ஜ்ஞாநம் என்று பொருள். உத்ப்ரேக்ஷாவ்யஞ்ஜக சப்தமிது. ஆசார்யன் உபதேசிக்க சிஷ்யர்கள் गुरुमुखोच्चारण–अनूच्चारणத்தாலே அதைப் பெறும்போது गुरुमुखशिष्यमुखங்களில் திருவஷ்டாக்ஷரம் நடமாடுகிறது. இதை அஷ்டாக்ஷரரூபியாய் நாராயணனே ஸாக்ஷாத் நடமாடுகிறதாகக் கொள்ளுகிறோமென்றபடி. ஆக அவனைப் போல் இதுவும் धारकமாகிறது. தேசிகஜிஹ்வையிலே. ஆசார்யனின் நாக்கிலே, சிஷ்ய ஹ்ருதயேதி. அநூச்சாரணத்தில்

परशेषतैकरसமான परिशुद्धस्वरूपத்தை வெளியிட்டு सम्यग्ज्ञानத்தைப் பண்ணுகையாலே திருமந்த்ரம் धारकம். சரமோபாயத்திலே प्रवर्तिக்கும்படியான ज्ञानवि-शेषोपचयहेतुவாகையாலே श्रोतव्यशेषமில்லாதபடி उपायोपदेशपर्यवसानமான சரம ச்லோகம் போஷகம். सकृदुच्चारणத்தாலே परमपुरुषार्थहेतुவாய்க்கொண்டு सदानु-सन्धानத்தாலே कृतार्थனாக்குகையாலே द्वयम् भोग्यम्.

இவற்றில் திருமந்த்ரத்தினுடைய ऋषि-छन्दो-देवता-बीज-शक्ति वर्ण-विनि-योग-स्थान-न्यासादिகள் அவ்வோ कल्पसंप्रदायங்களுக்கு ஈடாகக் கண்டுகொள்வது

---

சிஷ்டனால் தன் நாச்கில் கொண்டுவரப்பட்டு ஹ்ருதயத்தில் தரிக்கப்பட்ட படியால் என்று கருத்து. பரிசுத்த ஸ்வரூபம் = ஜீவாத்ம ஸ்வரூபம். அதை வெளியிடுவதாவது—அதுவிஷயமாக ஜ்ஞாநத்தை யுண்டுபண்ணுகை. அந்தகாரத்தைக் கழித்த பிறகு ஜ்ஞாநத்தை யுண்டுபண்டுகை இங்கே கூறப்பட்டது. ஸித்தாந்தத்தில் தீபமானது வஸ்துக்களை மூடிக்கொண் டிருக்கும் அந்தகாரத்தை விலக்குகிறது: பிறகுக் கண்ணோடு வஸ்துவுக்கு ஸம்பந்தத்தினால் வஸ்துஸ்வரூபம் ப்ரகாசிக்கிறதென்று இசைந்திருப்ப தால் அதுபோல் இங்கு ஓதப்பட்ட மந்த்ரமானது தன் ஸம்பந்தத்தால் மநஸ்ஸுக்குள்ள தமஸ்ஸைக் கழித்த பிறகு தத்துவ ஜ்ஞாநத்தை உண்டு பண்ணுகிறதென்று திருவுள்ளம். சரமோபாயத்திலே = ப்ரபத்தியிலே. லக்ஷ்மீதந்த்ரத்தில் கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களை மூன்று உபாயங்களாகக் கூறி இதைச் சரமமென்றது. படியான என்பதற்கு உபசய த்தில் அந்வயம். உபசயமாவது—புஷ்டி—अभिவ்ருத்தி; புஷ்டிஹேதுவாகை யாலே போஷகமென்கிறது. இதில் சொல்லாத (கேட்கவேண்டிய) விஷயம் வேறில்லை யென்றபடி. தத்த்வஹித புருஷார்த்த ஜ்ஞாநமிருந்தாலும் விதி வாக்யமிராத போது ப்ரவ்ருத்தி உண்டாகாதாகையாலே விதிக்கும் சரம ச்லோகம் போஷகம். फलம் முதலானவற்றை விசதமாக்குகிறபடியால் ஸாத ராம். सकृदिति, सकृदुच्चार: संसारमोचको भवति என்றதால் மோக்ஷார்த்தமாக ஸங்கல்பித்துச் செய்த सकृदुच्चारणமே மோக்ஷம் பெறப் போதுமானதால் அதன் பிறகுவரும் த்வயாநுஸந்தாநங்களெல்லாம் फलान्तरोपायமாகக் கொள்ளாத போது भोगரூபமாய் भोग्यமாகும். ஆக சரீரத்திற்கு अन्नादिकं धारकम्; क्षीरादिकं पोषकं, चन्दनादिकं भोग्यமென்பதுபோல் ஆத்மாவுக்கு இவை யென்றதாம்.

இப்படி மூன்றதிகாரங்களுக்கு ஸம்பந்தப்பட்ட மூன்று ரஹஸ்யங் களையும் முதலில் கூறி இவ்வதிகாரவிஷயமான திருமந்த்ரத்தைத் தொடங் குகிறார். இவற்றில் இதி. 'अविदित्वा ऋषीन् छन्दः दैवतं योगमेव वा । यो याजयेत् जपेद्वाऽपि पापीयान् जायते तु सः'' என்றதால் மந்த்ரத்தினுடைய ரிஷி, சந்தஸ்ஸு தேவதைமுதலானவை தெரியவேண்டும். அவை பல வகையா யிருப்பதால் பொதுவாகக் கூறுகிறார். இம் மந்திரத்திற்கு பதரிகாச்ரமவாஸி ச்ரீமந்நாராயணன் ரிஷி, காயத்ரீ சந்தஸ்ஸு, அந்தப் பரமாத்மாவே தேவதை; அம் என்பது பீஜம். ஆய என்பது சக்தி. வர்ணம் சுக்லம். ஜப—ஆராதநாதி

களிலே விநியோகம். வைகுண்டம் ஸ்தாநம்; ந்யாஸம்—அங்கந்யாஸாதிகள் ஆதி பதத்தால் கீலகாதிகளைக் கொள்வது. அவ்வோ கல்பமாவன—नारदीय नारायणात्मकादिகள். அநுஷ்டாநத்திற்கு முன்னே அர்த்தஜ்ஞாநம் பெறுதற்கு ச்ருதிஸ்ம்ருதி வாக்யங்களும் பல மந்த்ரங்களுமிருப்பதாலே இதையே மூல மந்த்ரமாக ஏன் கொள்ள வேண்டுமென்ன, இதற்கு வேத-வைதிக-द्रमिडவேத ப்ரஸித்தமாகும் ப்ரபாவமென்று வைலக்ஷண்யத்தை விளக்குகிறார். இத்திரு மந்த்ரம் இத்யாதியால். ஓதிய வேதவாக்யத்தின் மூலமான அர்த்தஜ்ஞாநமே வைதிக ப்ரபத்த்யநுஷ்டாநத்திற்குக் காரணமாகையால் அதை யாராயும் போது சக்த-அசக்தஸாதாரணமும் ரிக்யஜுஸ்ஸாமாதிசாகைகளாகப் பிரிந்த ஸர்வபுருஷர்க்குமான வேதவாக்ய மரிதாயிருந்தது. எந்தவைஷ்ணவமந்த்ரமும் ப்ரபத்திக்கு ஸாதகமானாலும் இதற்குப் போல் பல வேதங்களில் ப்ரஸித்தி அவற்றுக்கு இல்லை யென்பது षडक्षरी द्वादशाक्षर மந்த்ரங்களுக்கும் துல்யம். अथर्वनारायणोपनिषத்து இதை भोगமோக்ஷஹேதுவாகவும் விரிவாகப் புகழ்ந்தது. இப்போது ஓதப்படும் कठवल्लியில் இம் மந்த்ரப்ரஸ்தாவமிராவிட்டாலும் த்வயமந்த்ரவிஷயமான कठवल्लीखिलத்திலே முதலில் அஷ்டாக்ஷர ப்ரகரணத்தில் த்வயத்தின் பூர்வ खण्डத்தை ஓதி, பிறகு உத்தरखण्ड ப்ரஸ்தாவத்தில் மோக்ஷேச்சையுடையவன் இரண்டையும் சேர்த்து உச்சரிக்க வேண்டுமென்று சொல்லியிருப்பதாக த்வயாதிகார ஸாராஸ்வாதிநியில் காண்பதால் த்வயமந்த்ரத்திற்கு முன்னே கடவல்லியிலே அஷ்டாக்ஷர மந்த்ரார்த்த விவரணமிருப்பதாகத் தெரிகிறது. மூலத்திலும் மேலே, உகாரம் லக்ஷ்மீவாசகமென்கிறது कठश्रुतिயென்னப் போகிறார். मकारस्तु तयोर्दासः என்று பொருள் விசதமாகிறதுவும் आथर्वणத்தைவிட இதற்குச் சிறப்பு இதையும் காரணமாகக் கொண்டே த்வயத்தினால் ப்ரபத்தியையநுஷ்டிப்பதற்குமுன்னே இதையே மூலமந்த்ரமாக ஸம்ப்ரதாயத்தில் கொண்டனர். இதற்கு ஜபாதி விஷயமான பல கல்பங்களுமிருக்கின்றன, வைதிகமந்த்ரம் தகாதவர்களுக்கு இதையே தாந்த்ரிகமாக்கி உபதேச ரீதியுமுளது. அதனாலேயே ஆழ்வார்கள் இதை யாதரித்தனர். லோகஸங்க்ரஹத்திற்காகவும் ஸர்வ வர்ணங்களுக்கும் உபதேஷ்டாக்களான ஆசார்யர்கள் இதையே கொள்வது தகுமென்று நம் ஸம்ப்ரதாயத்தினர் இதை யாதரித்தனர். இப்படி ஓதிய வைதிக மந்த்ரத்திலிருந்து ஸர்வார்த்தக்ரஹணம் செய்து அநுஷ்டித்தால் फलसिद्धिக்குக் குறையில்லை யென்று இந்த घट्टத்தின் கருத்து. कठादिஎன்கிற ஆதிபதத்தால் ஸுபாலோபநிஷத்தைக் கொள்வர். அஷ்டாக்ஷர விஷயமும் அதிலிருந்தால் விவாதமில்லை. நாராயணசப்தம்மட்டு மிருந்தாலும் அதற்கே அஷ்டாக்ஷரஸாம்யம் சொல்லுவதுண்டாகையால் அவ்வாறு கூறியதுமாம். மந்வாதி சாஸ்த்ரங்களிலும் இதி. மநுஸ்ம்ருதியில் அஷ்டாக்ஷர விஷய மில்லையாகில் இங்கு अतद्गुणसंविज्ञानबहुव्रीहि யென்க. अधिकप्रसिद्धियால் இவரைச்

शास्त्रங்களிலும், नारायणात्मक-हैरण्यगर्भ-नारदीय-बोधायनादिबहुविधकल्पங்களிலும் सुप्रसिद्धवैभवமாயிருக்கும்.

मन्त्रान्तरங்களிற்காட்டில் भगवन्मन्त्रங்கள் அதிகமானாற் போலவும், स्वतन्त्रங்களான भगवन्मन्त्रங்கள் தம்மில் व्यापकत्रयம் அதிகமானாற் போலவும்,

'मन्त्राणां परमो मन्त्रो गुह्यानां गुह्यमुत्तमम् । पवित्रं च पवित्राणां मूलमन्त्रः सनातनः ॥'

என்கையாலே व्यापकमन्त्रங்களெல்லாவற்றிலும் அதிகமாய், सर्ववेदसारமாய் सर्वविघ्ननिवर्तनक्षमமாய், सर्वपुरुषार्थங்களுக்கும் साधकமாய், सर्वोपायங்களுக்கும் उपकारकமாய், सर्ववर्णங்களுக்கும் தந்தம் अधिकारानुगुणமாக वैदिकरूपத்தாலும் तान्त्रिकरूपத்தாலும் उपजीव्यமாய், व्याप्य-व्यापक-सर्वेतरकण्ठोक्तिमத்தாய், सर्वमन्त्रनैर-पेक्ष्यकरமாய், सर्वभगवन्मूर्तिகளுக்கும் साधारणமாயிருக்கையாலே ஸர்வாசார்யர்

---

சொன்னது. பாத்மஸம்ஹிதாதிகளில் திருமந்த்ரத்திற்கு वर्णोद्धारादिகள் பண்ணியிருப்பதாக த்வயாதிகார ஸாராஸ்வாதிநியிலிருப்பதால் அவற்றையும்இங்குக் கொள்வது. अधिकம்= उत्कृष्टம். மந்த்ரங்கள் தம்மில் = மந்தரங்களுக்குள். व्यापकत्रयம் அஷ்டாக்ஷரமும் த்வாதசாக்ஷரமும் ஷடக்ஷரமும். விஷ்ணு-வாஸுதேவ. நாராயணசப்தங்கள் வ்யாபகத்வாகாரத்தோடு பகவானைச் சொல்வதால் இம் மந்த்ரங்களை வ்யாபகங்களென்கிறது. मन्त्राणामिति நாரதீயம் 1-11. मन्त्राणां गुह्यानां पवित्राणां என்ற பதங்களால் வ்யாபகமத்ந்ரங்களைக் கொள்வது. எல்லா மந்த்ரங்களையும் கொண்டாலும் வ்யாபகமந்த்ரங்களைக்காட்டிலும் கூடபரமத்வம் ஸித்திக்கும். गुह्यानां ரஹஸ்யங்களுக்குள்; पवित्राणां சுத்தி செய்கின்றவற்றுள். இங்கே उत्तमமென்கிற பதத்தை யநுஷங்கிப்பது. सनातनत्वம் மற்றவற்றுக்குமுள்ளதானாலும் அநாதியாக ப்ரசாரமிதற்கென்ற கருத்தாலாகலாம். ஸாக்ஷாத் நாராயண ப்ரவர்த்திதமாயிற்றே. ஸர்வேதங்களின் அர்த்தத்தையும் சொல்வதால் ஸர்வவேதஸாரம். புருஷார்த்தபதத்தாலே இஷ்டார்த்தஸித்தியைக் கொள்வது. ऐहलौकिकमैश्वर्य.....कैवल्यं भगवन्तं च मन्त्रोऽयं साधयिष्यति என்றதே. ஸர்வோபாயங்களுக்கும் உபகாரகமாகையாவது— ஜபத்தினாலும் தத்து வாதி ஜ்ஞாநத்தைத் தெளிவிப்பதாலும் ப்ரபத்திக்குப் போலே கர்மயோகாதிகளுக்கும் உபயோகப்பட்டிருக்கை. ஸர்வ வர்ணங்களுக்கும் இதி. இது மேலே வ்யக்தமாகும். அஷ்டாக்ஷரத்திற்குப் போலே ஷடக்ஷர—த்வாதசாக்ஷரங்களுக்கும் ப்ரணவமிராதபோது தாந்த்ரிகத்வம் உண்டாய் ஸர்வவர்ணாதிகார முண்டானாலும் ச்வபாகாதிகளுள்பட எல்லோருக்கும் இதில் அதிகாரம் பலவிடங்களில் வ்யக்தமாகத் தெரிகிறது

உபஜீவ்யமாய்—உபாயாநுஷ்டாநத்திற்கு முன் அபேக்ஷிதமாய், व्याप्येति. விஷ்ணு வாஸுதேவபதங்கள் வ்யாபகனை இவனைச் சொன்னாலும் வ்யாப்ய வஸ்துக்களை ஒரு சொல்லால் குறிக்கவில்லை. இது நாரபதத்தினால் எல்லாவற்றையும் குறிப்பதால் இங்கு कण्ठोक्तियாம். ஸர்வமந்த்ரேதி. किं तस्य बहुभिर्मन्त्रैः என்கிற வசநபலத்தால் இதர மந்த்ரங்களால் ஸாதிக்கப்படும் கார்யம் இதனாலேயே ஸாத்யமாவதால் அவற்றுக்கு அபேக்ஷை யில்லை. मूर्तीति·

களும் இத்தையே விரும்பிப்போ[ரு]வர்கள்,

ஆழ்வார்களும், 'நின் திருவெட்டெழுத்தும் கற்று' என்றும், 'எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே' என்றும், 'எட்டெழுத்தும் வாரமாக வோதுவார்கள் வல்லர் வானமாளவே' என்றும், 'நாடு நகரமும் நன்கறிய நமோ நாராயணாய' என்றும், 'நல்வகையால் நமோ நாராயணா' என்றும் இத் திருமந்த்ரத்தையே விரும்பிப் போந்தார்கள். ருஷிகளும்

'बहवो हि महात्मानो मुनयस्सनकादयः । अष्टाक्षरं समाश्रित्य ते जग्मुर्वैष्णवं पदम् ॥',

'यथा सर्वेषु देवेषु नास्ति नारायणात्परः । तथा सर्वेषु मन्त्रेषु नास्ति चाष्टाक्षरात्परः ॥'

'भूत्वोर्ध्वबाहुरद्याद्य सत्यपूर्वं ब्रवीमि वः । हे पुत्रशिष्याः शृणुत न मन्त्रोऽष्टाक्षरात्परः ॥

तदर्चनपरो नित्यं तद्भक्तस्तन्नमस्कुरु । तद्भक्ता न विनश्यन्ति ह्यष्टाक्षरपरायणाः ॥'

'आसीना वा शयाना वा तिष्ठन्तो यत्र कुत्र वा । नमो नारायणायेति मन्त्रैकशरणा वयम् ॥'

என்றார்கள். இத் திருமந்த்ரத்தை ஸர்வேச்வரன் ச்ரீநாரதபகவானை யிட்டு

---

ராமாதிமந்த்ரம் க்ருஷ்ணாதிமூர்த்திக்குப் பொருந்தாதது போலன்றி இம் மந்த்ரம் ஸகலமூர்த்தி யாராதநாதிகளுக்கும் பொருந்தும்.

ஸர்வாதிகாரமாகையாலே ஸர்வவித ஆழ்வார்களும் ஏககண்டமாக இதையே யாதரித்தனர். ஆகையால்—உபடிவேத ப்ரஸித்தி இதற்கே என்கிறார். ஆழ்வார்களும்' இதி. நின் இதி பெரி திரு. 8-10-3 மற்று மோர் தெய்வமென்று பாசுரவாரம்பம். திருக்கண்ணபுரத்துப் பெருமான் விஷயம். எட்டிதி திருச்சந்த்வ்ருத்தம் 77. எட்டும் என்ற பாசுரம். எட்டெழுத்தான திருமந்த்ரத்தை ஓதுகின்றவர் பரமபதத்தை ஆள்வதற்கு ஸமர்த்தராவரென்றது. அதே திருச்சந்த வ்ருத்தத்தில் சோர்விலாத என்ற அடுத்த பாசுரத்தில் அதை விரித்திருக்கிறார் வாரமாக= இத்தனை தடவை ஜபிப்போமென்று எண்ணிக்கையுடன்; 'असंख्यातात् तु संख्यातं सहस्रगुणमुच्यते, என்றதே. நாடு என்ற பாசுரம் திருப்பல்லாண்டு 4. அதிலேயே நல்வகையால் 11. நாரதீயத்திலே ரிஷிகள் அஷ்டாக்ஷரத்தில் பற்றுள்ளவர்களென்றுஅறிவிக்கப்பட்டிருப்பதை உதாஹரிக்கிறார் बहव இதி.भूत्वा இத்யாதிஇரண்டு ச்லோகங்கள் नारसिंहपुराण த்தில் 18-32 மற்றவை முறையே நாரதீயத்தில் 1-14. 1-42 மஹாத்மாக்களான வெகு ரிஷிகள் ஸநகாதிகள் அஷ்டாக்ஷரத்தைக் கொண்டேவிஷ்ணுபதம்சென்றார்கள்.எப்படிதேவதைகளில் நாராயணனுக்கு மேலொன்றில்லையோ. அவ்வாறு மந்த்ரங்களில்அஷ்டாக்ஷரத்திற்கு மேலில்லை. கையைத்தூக்கினவனாய் இங்கே இப்போது ஸத்யமாக உங்களுக்குச் சொல்லுகிறேன் புத்ரர்களே! சிஷ்யர்களே! கேளுங்கள்—அஷ்டாக்ஷரத்திற்கு மேல் மந்த்ரமில்லை; அர்ச்சநம் பக்தி நமஸ்காரம் எல்லாம் தத்விஷயத்திலேயாம். அஷ்டாக்ஷரத்தில் பற்றுடன் தத்பக்தர்கள் அழியார் இங்கு தத்பதங்களாலே அஷ்டாக்ஷரத்தையோ அதன் பொருளான பகவானையோ கொள்வது. உட்கார்ந்தோ படுத்தோ எங்கோ நின்றோ இருப்பினுமஷ்டாக்ஷரத்தையே பற்று

ஸ்ரீபுண்டரீகனுக்கு உபதேசிப்பிக்க, அவனுமிதையே பரமஹிதமாகக் கேட்டபடியாலே

पुण्डरीकोऽपि धर्मात्मा नारायणपरायणः । नमो नारायणायेति मन्त्रमष्टाक्षरं जपन् ॥'

इत्यादि களிற் சொல்லுகிறபடியே இம் मन्त्रनिष्ठனாய் முக்தனானான். இம் மந்த்ரத்தைத் திருமங்கையாழ்வாருக்கு ஸர்வேச்வரன் தானே உபதேசித்தான்.

இது प्रणवचतुर्थिகளை யொழிந்தபோது सर्वाधिकारம் என்னுமிடம் ச்ரீவராஹ புராணத்தில் கைசிகத்வாதசீமாஹாத்ம்யத்திலே 'नमोनारायणेत्युक्त्वा श्वपाकः पुनरागमत्' என்கிற வசநத்தாலே காட்டப்பட்டது இவ்வர்த்தம் 'நாமம் சொல்லில் நமோ நாராயணமே' என்றும், 'நன் மாலை கொண்டு நமோ நாரணா,

---

வோம். पुण्डरीकः என்கிற ச்லோகம் இதிஹாஸ ஸமுச்சயம். 33-130 தர்மமூர்த்தியான புண்டரீகனும் நாராயணனை பரமப்ராப்யமாகக்கொண்டு அஷ்டாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டு என்றது புண்டரீகன் இம்மந்த்ரத்தை நாரதரிடம் பெற்றதற்கு நாராயணனின் நாரத நியமநமே காரணம் நேராகவே நாராயணன் திருமங்கையாழ்வாருக்கு இதை உபதேசித்தான். திருநாரணன் அந்தணவேஷம் பூண்டு பத்நியுடன் மணக்கோலமாக வரும்போது அங்கே திருமணங்கொல்லையிலே வழிபறிக்க மறைந்திருந்த ஆழ்வார் தம் பரிஜநங்கள் நால்வரோடு வாளும் வேலும் ஏந்தி எதிரில் வந்து எல்லாம் பறித்து, மோதிரமொன்றைக் கழற்ற முடியாமல் மணவாளனை ஏனென்று கேட்க அவர் மந்த்ரமுண்டென்ன இவர் பற்களால் பெயர்க்க முயன்று திருமேனிச் சுவையில் ஈடுபட்டு வியந்து பவ்யப்பட்டு நின்றபோது, எம்பெருமான் அன்புடன் இத் திருவஷ்டாக்ஷரத்தை உபதேசித்தருளினனே. ஆகவே இந்நாமத்தைக் கொண்டே அவர் பெரியதிருமொழி தொடங்கியது.

கீழே ஸர்வவர்ணங்களுக்கும் உபஜீவ்யமென்று சொன்னதைவிவரிக்கிறார். இது இதி. சதுர்த்தி நாராயணபதத்தின் மேலுள்ளது; மந்த்ரத்தில் யேலெடுக்கும் வாக்யங்களில் அதை விட்டிருப்பதால் ப்ரணவத்தைப் போலே அதையும் விட்டே சிலருக்கு உபதேசமென்று தெரிகிறது. அப்படியானால் ப்ரணவத்தினுடைய ஸ்தாநத்தில் வேறொன்றில்லையாகில் அஷ்டாக்ஷரத்வமெங்ஙனே யென்னில்—ஓரக்ஷரம் குறைத்தாலும் குற்றமில்லை யென்று கருத்தாகுக. नम इதி 139-63. ச்வபாக ஜாதியைச் சேர்ந்த நம்பாடுவான்எம்பெருமானுக்கு गानம் செய்துவிட்டு இம் மந்த்ரத்தைச் சொல்லி மீண்டும் ப்ரஹ்மரக்ஷஸ்ஸு இருக்குமிடம் சொற்படி வந்தான். இந்த நம்பாடுவான் என்கிற ச்வபாகனின் சரித்ரம் ஸர்வ ஸ்தலங்களிலும் கைசிக மாஹாத்ம்ய பாராயணத்தாலும் ப்ரஸித்தம். பலவகைப் பண்களில் கைசிகமென்பது ஒன்று பண்பாவது இசை. நாமம் இதி பெரியதிருமொழி. 6. 10. 1. கிடந்த நம்பி முதலாகப் பல மூர்த்திகளை யநுஸந்தித்து எல்லோருக்கும் பொதுவான மந்த்ரம் இது என்றார். நன்மாலை இதி முதல் திரு. 57. அதிலேயே நாவாயில் என்பது 95, அயல் என்று பாசுராரம்பம். ஊன் திருவடி சேர்

என்றும், 'நா வாயிலுண்டே நமோ நாரணவென்று ஓவாதுரைக்குமுரை யுண்டே' என்றும் சொல்லுகிற பாசுரங்களாலும் ப்ரஸித்தம்.

இது ப்ராஹ்மணாதிகளுக்கு, अधीतமான क्रमத்திலே प्रणवத்தோடே கூட அஷ்டாக்ஷரமாயிருக்கும்.

'वैदिकं तान्त्रिकं चैव तथा वैदिकतान्त्रिकम् । त्रिविधं कर्म संप्रोक्तं पञ्चरात्रामृतार्णवे ॥

वैदिकं ब्राह्मणानां तु राज्ञां वैदिकतान्त्रिकम् । तान्त्रिकं वैश्यशूद्राणां सर्वेषां तान्त्रिकं तु वा ॥

अष्टाक्षरश्च यो मन्त्रो द्वादशाक्षर एव च । षडक्षरश्च यो मन्त्रो विष्णोरमिततेजसः ॥

एते मन्त्राः प्रधानास्तु वैदिकाः प्रणवैर्युताः । प्रणवेन विहीनास्तु तान्त्रिका एव कीर्तिताः ॥

न स्वरः प्रणवोऽङ्गानि नाप्यन्यविधयस्तथा । स्त्रीणां तु शूद्रजातीनां मन्त्रमात्रोक्तिरिष्यते ॥'

என்கிறபடியே ப்ரணவம் ஒழிந்தபோது.

---

வதற்காக உன்னைத்தொழுது செந்தமிழ் மாலைகளைக் கொண்டு नमो नारायण என்கிற சொல்மாலையின் பொருள்களை அப்யஸித்தேன். 95. வாயில் நாக்கு உண்டே, விடாமல் சொல்லக்கூடிய திருவஷ்டாக்ஷரமென்ற சொல்லு முண்டே; நற்கதிக்கிடமிருக்கின்றதே; தீக்கதிக்குச் செல்வது ஏனோ என்ற தாம். ஓவாது—விடாமல். இப்படி ப்ரணவமிராமற் போனாலும் இது மந்த்ரமாகுமென்று சொல்லியாயிற்று கீழே நாரதீயத்தில் 'नमो नारायणा-येति मन्त्रैकशरणा वयम्' என்றவிடத்தில் ப்ரணவத்தைச் சொல்லாத போதும் சேர்ப்பது போல் இந்த வாக்யங்களிலும் ப்ரணவத்தைச் சேர்ப்பதே கருத்தி லுள்ளதாகலாமே என்ன—சிலர் ப்ரணவமிராமல் சொல்லவேண்டுமென்ப தற்கு ப்ரமாணம்அருளிச்செய்கிறாராய் அப்போது அஷ்டாக்ஷரத்வமில்லையே என்பதற்கும் ப்ரமாண வாக்யமூலமாகவே பரிஹாரம் அருளிச்செய்கிறார் இது இத்யாதியால். ओमित्यग्रे व्याहरेत् என்று ஓதியபடி அஷ்டாக்ஷரமாகி ப்ராஹ்மணாதிகளுக்காம்; த்ரைவர்ணிகரல்லாதார்க்கு ப்ரணவமிராமல் தாந் த்ரிகமாகும். ச்லோகார்த்தமாவது—பஞ்சராத்ரமென்கிற அமுத கடலில் வைதிகாதி விபாகத்தாலே கர்மாவை மூன்றுவிதமென்றது கர்மாவுக்கு வைதிகாதி மந்த்ரச் சேர்க்கையாலென்க. அந்தணருக்கு வைதிக மந்த்ர த்தாலேயே கர்மானுஷ்டானம் முக்யம்; அரசர்களுக்கு வைதிகத்தாலும் தாந்த்ரிகத்தாலும் முக்யமே; மற்றவருக்குத் தாந்த்ரிகமே. எல்லோரு க்கும் தாந்த்ரிகமே யாகவுமாம். வேதப்ரஸித்தம் வைதிகம், ஆகம சாஸ்த்ர ஸித்தமானது தாந்த்ரிகம். அளவற்ற தேஜஸ்ஸையுடைய விஷ்ணுவுக்கு வ்யாபக மந்த்ரங்கள் மூன்றும் ப்ரதாநங்கள். இவை ப்ரணவம் சேர்ந்த போது வைதிகங்களாம். சேராதபோது இவ் வைதிகங்களும் தாந்த்ரிக ங்களாம். ப்ரணவமிராத போது எழு அக்ஷரங்களை மட்டும் க்ரஹிப்பதென்று கொள்ளாமைக்காக அருளிச்செய்கிறார். न स्वर इதி. ஸ்த்ரீகளுக்கும் சூத்ர ர்க்கும் (ஜபத்தில்)—உதாத்தாதிஸ்வரமும் ப்ரணவமும் அங்கந்யாஸமும்

'तत्रोत्तरायणस्यादिर्बिन्दुमान् विष्णुरन्ततः । बीजमष्टाक्षरस्य स्यात् तेनाष्टाक्षरता भवेत् ॥'
என்கிற **प्रक्रिये**யாலேஎட்டெழுத்தும் **अनुसन्धेय**மாக**विधि**க்கப்பட்டது.**प्रणव**மொழி
ந்தாலும் அது கூடினாலுள்ள **फल**ம் இவ் அதிகாரிகளுக்கு உண்டென்னுமிடம்

'किं तत्र बहुभिर्मन्त्रैः किं तत्र बहुभिर्व्रतैः । नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः ॥'
**इत्यादि**களாலே **सिद्ध**ம். இப்படி ப்ரணவமொழிய அஷ்டாக்ஷரமானபோது
ப்ரணவத்தில் அர்த்தமெல்லாம் இப் **प्रणवप्रतिच्छन्द**மாக சாஸ்த்ரம் வகுத்த
அக்ஷரத்திலே **प्रथमाक्षर**ம் **सर्वसंग्रह**மான கணக்கிலே சுருங்க **अनुसन्धेय**ம். **मन्त्र**-

---

புரச்சரணாதி விதியுமில்லை. **மந்த்ரம்** மட்டும் ஜபிக்கலாம். **तत्रेति**. அந்த
அஷ்டாக்ஷர மந்த்ரத்தில் நாராயண சப்தத்தின் உத்தரமான = இரண்டாம்
பதமான **अयन** என்பதின் ஆத்யக்ஷரமான, **विष्णुः** = விஷ்ணுவாசகமான, அகார
மானது **अन्ततः बिन्दुमान्**—முடிவில் அநுஸ்வாரமுடையதாம். அஷ்டாக்ஷர
த்தில் கடைசி அக்ஷரமுமிராமல் ச்வபாகாதிகள் ஜபிக்குமிடத்தில் அஷ்டா
க்ஷரத்வம் எங்ஙனே? எட்டக்ஷரமிராமற் போனாலும் அங்குக் குறையில்லை
யென்னில்—கடைசி அக்ஷரத்தில் அதிகாரமுள்ள ஸ்த்ரீ—சூத்ரர்களுக்கும்
எட்டக்ஷரமிராமற் போனால் குற்றமில்லை யென்னலாமே. எதற்காக அஷ்டா
க்ஷரத்வ ஸாதனமென்னில்—எங்கும் அஷ்டாக்ஷரமாயிருக்க வேண்டுமென்
கிறதில்லை. இப்படியிருக்க '**अष्टाक्षरजपः स्त्रीणां प्रकृत्यैव विधीयते**' என்று ஸ்த்ரீ
களுக்கும் அஷ்டாக்ஷர ஜபமென்று சொல்லி மேலே ப்ரணவமில்லை யென்றால்
அது அஷ்டாக்ஷர ஜபமாகுமோ என்ற கேள்வியில் **तत्रेति श्लोक**ம். ப்ரணவ
மிராவிட்டாலும் **बीजाक्षरं** சேர்த்து ஜபிப்பது அவர்களுக்கு ப்ரமாண ஸித்த
மாகையால் அதைக் கருத்திற் கொண்டு **अष्टाक्षरजपः** என்ற ப்ரயோகமென்று
வசநதாத்பர்யம். ச்லோகத்தில் **अन्ततः** என்ற பதமெதற்காகவென்னில்—**अयन**
என்ற சொல்லின் இடையில் அகாரத்தின் மேல் **बिन्दु** வைக்காமைக்காக.
அல்லது **अन्ततः** என்பதை **अं ततः** என்று பிரிப்பது அகாரமானது **बिन्दुमान**ாகும்.
**ततः** அதனால் **अं** என்று **बीजाक्षर**ம் ஸித்திக்குமென்று பொருளாம். **किमिति**. நார
தீயம் 1–41. வெகு மந்த்ரங்களாலும் வெகு வ்ரதங்களாலும் ஆவதென்ன?
**नमो नारायणाय** என்பதே எல்லாப் பலனையும் ஸாதிக்குமென்றதாம். இங்கு ப்ர
ணவமிராதபோதும் ஸர்வ பலஸித்தி தெரிகிறது. சேஷத்வ ஜ்ஞாந மூல
மான பலனும் இதனால் ஸித்திக்கவேண்டுமே; ப்ரணவமிராதபோது சேஷ
த்வஜ்ஞாநஸித்தி யில்லையே என்பதற்கு உத்தரம் இப்படி இத்யாதி.
ப்ரணவப்ரதிச்சந்தமாக = ப்ரணவ ப்ரதிநிதியாக. சாஸ்த்ரம் வகுத்த—
**तेनाष्टाक्षरता भवेत्** என்று சொல்லப்பட்ட, அக்ஷரத்திலே-பீஜாக்ஷரத்திலே.
சுருங்க—ஸங்க்ஷேபமாக. உகாரார்த்தம் கண்டோக்தமாகாமையால் சுருங்க
என்றது. ஓரக்ஷரத்திலே எல்லா அர்த்தமும் எப்படி சுருக்கப்படு மென்ன
அருளிச் செய்கிறார். **प्रथमेति**. **ओङ्कार**மாகிற ப்ரதமாக்ஷரம் **नमोनारायणाय**
என்கிற பூர்ணமந்த்ரார்த்த ஸங்க்ரஹரூபமாயிருக்கிற ரீதியிலே என்று
உரைப்பர். இது **अष्टाक्षरस्तु प्रणवे अकारे प्रणवः स्थितः** என்கிற வசநத்தை யநு

माक्षरத்தில்(ன்?) பொருளும் अर्थसिद्धமாம். இதில் तृतीयाक्षरத்தில் சொல்லுகிற

---

ஸித்ததாகும். அகாரத்திற்கு நாராயணனே அர்த்தமாகையாலும் உகாரம் நமச்சப்தார்த்தத்தைக் குறிப்பதாலும் சேஷசேஷிபாவத்தைச் சொன்னதாலேயே கைங்கர்யமென்கிற பலம் ஸித்திப்பதாலும் ப்ரணவத்தில் இம்முழு மந்த்ரத்தின் அர்த்தமும் அடங்கும். இங்கு ப்ரதமாக்ஷரமான ப்ரணவம் அங்கங்களோடு கூடிய அநந்தசாகைகளின் அர்த்தஸங்க்ரஹமாவது போலென்றும் உரைப்பர். 'वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः। तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः' என்றதால் வேதத்தின் ஆத்யந்தங்களில் ஓதப்படுவதும் அஷ்டாக்ஷரப்ரதமாக்ஷரமுமான ஓங்காரம் ஸர்வவேதப்ரக்ருதியாய் விதையில் வ்ருக்ஷஸாரங்களெல்லாம் அடங்குவது போல் தன்னுள் ஸர்வவேதஸாரமும் அடங்கும்படி யிருக்கும். அக் கணக்கிலே அகாரமும் ஓங்கார ப்ரக்ருதியாகையாலே விதையின் ஸூக்ஷ்மாம்சத்திற் போல் அதில் எல்லாம் அடங்குமென்றதாம். இந்த வாக்யத்தில் ஓங்காரத்திற்கு ப்ரணவ சப்தத்தையே ப்ரயோகித்திருப்பதால் ப்ரதமாக்ஷர என்ற பதமானது அதைவிட வேறான அகாரத்தைச் சொல்வது தானே யுக்தம். மேலே மத்யமாக்ஷர, த்ருதீயாக்ஷர என்கிற சொல்லையும் பலவிடத்திலும் காண்க வென்னில்—இங்கே அகாரத்திற்கு த்ருஷ்டாந்தமாக ப்ரதமாக்ஷரமென்று சொன்னதால் அதற்கு அகாரம் பொருளாகாதென்று இவ்வாறு உரைப்பதாம். இனி, ப்ரணவாந்தர்கதமான ப்ரதமாக்ஷரம் ஸர்வஸங்க்ராஹகமாயிருப்பது போல் ப்ரணவ ப்ரதிநிதியான அகாரமும் ஸர்வஸங்க்ராஹகமென்னலாமென்று பொருள் உரைக்கக் கூடுமாகில் கொள்க. சுருங்க அநுஸந்தேயம் இதி- அகாரத்திற்கு ஸர்வரக்ஷகனென்றும் ஸர்வகாரணபூதனென்றும் பொருளாகையால் उपादानत्वமும், அது சரீராத்மபாவத்தாலாகவேண்டியிருப்பதால் सर्वात्मत्वமும், அதில் சேஷித்வம் அடங்கி யிருப்பதால் ஸர்வசேஷித்வமும், சேஷித்வத்தாலே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வமுமெல்லாம் குறித்ததாகும். உகாரார்த்தமான அந்ய சேஷத்வவ்யாவ்ருத்தி எப்படி ஸித்திக்குமென்ன அருளுகிறார் सर्वशेषेति. அவனையே ஸர்வசேஷியாகச் சொன்னதால் இதரருக்கு சேஷத்வம் பொருவாகையால் 'गुणानां च परार्थत्वात् असंबन्धः समत्वात् स्यात्' என்கிற ந்யாயமாய் பிறரைப் பற்ற சேஷத்வமில்லை யென்பதும் விளங்குமென்றபடி. ஆனாலும் ஸர்வசேஷி என்பதால் ஜீவர்கள் ஸித்தித்தாலும் அவர்களுக்கு ஜ்ஞாதஸ்வரூபத்வம் ஜ்ஞாத்ருத்வமென்ற मकारार्थம் எப்படி விளங்கும்? அம் என்கிற விடத்தில் பிந்துவினால் அறியலாமென்னில்—பிந்துவாவது அநுஸ்வாரந்தானே; மகாரமன்றே. ப்ரணவத்திலுள்ள மகாரத்தின் ஸ்த்தாநத்திலே பிந்து என்னில்—அதற்கு ப்ரமாணமில்லையே. அகாரத்திற்குமேல் பிந்துவைச் சேர்க்கவேண்டுமென்றதே யன்றி மகாரத்தைச் சேர்க்கவேண்டும், அது பிந்துவாகுமென்னவில்லையே' என்ன அருளிச்செய்கிறார் இதில் இதி. த்ருதீயாக்ஷரமாவது ப்ரணவமகாரம். ஆதிபதத்தால் ज्ञानत्व—अणुत्वादिகளைக்

ज्ञातृत्वादिகளும் நமஸ்ஸில் द्वितीयाक्षरத்தில் प्रकृतिயாலே अनुसन्धेयம்.

प्रणवம் स्वतन्त्रமானபோது एकमात्रं द्विमात्रं त्रिमात्रं सार्धत्रिमात्रமென்றும் போலே பல प्रकारமாய், अर्थங்களும் அப்படியே कार्य कारणावस्थ ब्रह्मात्मवाचकत्वादिप्रक्रियையாலே பலவகைப்பட்டிருக்கும். व्यापकमन्त्रங்களிலும் प्रणवத்தைப்

---

கொள்வது ப்ரக்ருதியிலே=म: என்கிற ஷஷ்டீ விபக்த்யந்தத்தில் प्रातिपदिक த்திலே. இப்படி அஷ்டாக்ஷர ஸ்வரூப-சோதநமாயிற்று.

இனி पदादिविभागம். அதில் ப்ரணவத்தை ஒரே அக்ஷரமாக்கியும் மூன்றக்ஷரமாகப் பிரித்தும் பொருள் கூறப்போகிறாராய், 'ப்ரச்ருதத்தில். அபேக்ஷிதமானவை தவிர வேறு அம்சங்களும் ப்ரமாண ப்ரஸித்தமாயிருக்கும், அவை நமக்கு ப்ரக்ருத மல்ல' என்றறிவிக்க முதலில் அருளிச்செய்கிறார் ப்ரணவம் இதி. ஸ்வதந்த்ரமானபோது—ஒரு மந்த்ரத்திலும் சேராமல் தனி மந்ரமானபோது. एकमात्रमिति—ஹ்ரஸ்வதீர்க்க ப்லுதங்களே மாத்ரைகள். ப்லுதத்தின் மேலுள்ள நாதத்தை अर्धமாத்ரை என்கிறது. 'एकमात्रो भवेत् ह्रस्वः...ज्ञेयं त्वर्धमात्रकम्' என்றது காண்க. अर्धमात्रप्ரஸ்தாவம் अथर्वशिखैயில். ஆனால் அங்கே द्विमात्रः என்றவாறன்றி द्वितीया मात्रा என்றவாறுளதாகையாலும் चतुरक्षरः என்றிருப்பதாலும் अकार—उकारादिविभागம் ஸம்மதம், ஆதலால், अकारात्मा हि ऋग्वेदः उकारात्मा यजुश्श्रुतिः। सामावेदो मकारात्मा अनुस्वारो ह्यथर्वणः என்று அகார-உகார—மகார—அநுஸ்வாரங்களைச் சொன்ன படி கொள்க. மூலத்தில் मात्रापदம் ஹ்ரஸ்வாதிபரம். ப்ரச்நோபநிஷத்தில் ஹ்ரஸ்வ ப்ரணவத்திற்கு ऐहिककार्यावस्थब्रह्मமும், தீர்க்கமான ப்ரணவத்திற்கு आमुष्मिककार्यावस्थब्रह्मமும் प्लुतமான प्रणवத்திற்கு कारणावस्थब्रह्मமும் அதாவது பரவாஸுதேவாத்மக ப்ரஹ்மமும் பொருளாய் அவ்வாறு உபாஸிப்பவர்களுக்கு பூலோக-ஸ்வர்க்கலோக-பரமபதங்களிலே தக்க फलप्राप्ति ஓதப்பெற்றது. இது ईक्षतिकर्माधिकरणसिद्धம் अर्धमात्रத்தை யநுஸரித்து பூலோக-அந்தரிக்ஷ-ஸ்வர்க்க பரமபதங்களென்று நாலாக உரைப்பது வேறுப்ரமாணத்தினாலாம். இப்படி अकार-उकार-मकारங்களாகப் பிரித்தும். பல பொருள்களையும் உபாஸநங்களையும் माण्डूक्य—अथर्वशिखादिகளில் காண்க. இது பல ப்ரகாரமாய் என்ற சொல்லாலும் ஆதிபதத்தாலும் அறிவிக்கப்படும். மாண்டூக்யத்தில் சொல்லப்பட்ட-அநிருத்தாதி வ்யூஹபரத்வமும் ஆதிபதார்த்தமாகலாமே. இது போல் மாத்ராபேதமிராமல் பொதுவாகவே பரமாத்மவாசகத்வமும் உண்டு. இவ்வளவால் ஸ்வதந்த்ரமான போதும் अखण्डம் सखण्डமென்ற பிரிவுகளுண்டென்று தேறும். இப்படி ஸ்வதந்த்ரபக்ஷத்திற் போல் இது அஷ்டாக்ஷராதிகளில் சேர்ந்த போதும் सखण्डமாகிறாப் போல் अखण्डமாய் பரமாத்மாவைச் சொல்வது மாகுமென்கிறார் வ்யாபகேதி. सखण्ड பக்ஷத்தில் அகாரம் சதுர்த்த்யந்தமாகையால் மகாரார்த்தஜீவனை ப்ரதாநம்-அதாவது விசேஷ்யமாகிறானென்று கருத்து अखण्डபக்ஷம் दशविधயோஜனையில் ப்ரணவார்த்தாய நாராயணாய என்று உரைத்ததினின்று விளங்கும். இனி सखण्डமாகப்

परमात्मप्रधानமாகவும் சில சாஸ்த்ரங்கள் சொல்லும். இதின் ப்ரபாவம்,

'आद्यं तु त्र्यक्षरं ब्रह्म त्रयी यत्र प्रतिष्ठिता । स गुह्योऽन्यस्त्रिवृद्वेदो यस्तं वेद स वेदवित् ॥'

इत्यादिகளிலே ப்ரஸித்தம். இது,

'हविर्गृहीत्वाऽऽत्मरूपं वसुरण्येति मन्त्रतः । जुहुयात् प्रणवेनाग्नावच्युताख्ये सनातने ॥'

என்கிறபடியே न्यासविद्यையில் स्वतन्त्रமாய் आत्मसमर्पणपरமாயிருக்கும். அக் கட்டளையில் இங்கும் समर्पणपरமாகவும் யோஜிப்பர்கள். இவ்விடத்தில் स्वरूपज्ञानप्राधान्यத்தாலே शेषत्वानुसन्धानमात्रம் உபஜீவ்யமென்றும் யோஜிப்பர்கள். அப்போது

---

கொண்டு விஸ்தரேண அர்த்தம் சொல்லப்போகிறாராய் அதற்கு சேஷமாக அதற்கு விசேஷ ப்ரபாவத்தை வெளியிடுகிறார் இதின் இதி. आद्यमिति மநுஸ்ம்ருதி. 11—225. त्रयी மூன்று வேதங்களும் यत्र-எதில் प्रतिष्ठिता· நிலை பெற்றனவோ, அந்த ब्रह्म-ப்ரணவரூபப்ரஹ்மமானது आद्यं=ओङ्कारश्च अथशब्दश्च என்றபடி ஸர்வத்திற்கும் முந்தியதாய், त्र्यक्षरं=மூன்றக்ஷரத்தையுடையதாயிருக்கும். स वेदः. இந்த வேதமானது गुह्यः சேஷசேஷிபாவம் சொல்வதால் பரமரஹஸ்யமானது; अन्यः-மற்ற அஸ்பஷ்ட வேதத்தை விட விலக்ஷணமானது; त्रिवृत—மூன்றாயிருக்கும். எவன் இதை யறிகிறானோ அவன் வேதவித்.

இனி இப்ரணவத்திற்கு ஸமர்ப்பணம் அர்த்தம் அல்லது சேஷத்வம் அர்த்தம் என்று அர்த்தநிரூபணம் செய்கிறார் இது இத்யாதியால். இது-இந்த ப்ரணவம் हविरिति-தைத்திரீயத்தின் முடிவில் ந்யாஸவித்யையில் விதிக்கப்பட்ட அர்த்தத்திற்கு விவரணமாகும் இந்த வசநம். அங்கே वसुरण्यो विभूरसि என்று தொடங்கிய மந்த்ரத்தாலே ஜீவாத்மஸ்வரூபத்தை க்ரஹித்து ओमित्यात्मानं युञ्जीत என்று ப்ரணவத்தினாலே ஜீவாத்மஸமர்ப்பணம் விதிக்கப்பட்டது. இந்த ஸமர்ப்பணத்தை ஹோமமாகவும் ஆத்மாவை ஹவிஸ்ஸாகவும், ஸமர்ப்பிக்க இடமான பரமாத்மாவை அக்னியாகவும் கல்ப்பித்து அதற்கு உபப்ரும்ஹணமாம் हविरिति. ஆக வஸுரண்ய மந்த்ரத்தால் ஜீவாத்மாவாகிய ஹவிஸ்ஸை க்ரஹித்து அச்யுதனென்கிற ஸநாதநாக்நியில் ப்ரணவ மந்த்ரத்தால் ஹோமம் செய்யவேண்டுமென்றதாம். இப்போது, 'வஸுரண்ய மந்த்ரம் ஜீவபரம்; ப்ரணவம் पृथक्पदமாய் பரமாத்மபரமாகும். அகண்ட ப்ரணவத்தின் மேல் चतुर्थी ஸமர்ப்பணபரை' என்பதுமுண்டு. இப்போதும் ப்ரணவம் ஸகண்டமாகுமென்றும் அகாரம் சதுர்த்யந்தமென்றும் மகாரம் ஸமர்ப்பணீய ஜீவபரமென்றும் மேலே மூலத்திலேயே अकारार्थ-मकारार्थ முடிவுகளில் வ்யக்தமாகும். உபநிஷத்பாஷ்யத்திலும் காண்க. அக் கட்டளையிலே—ந்யாஸவித்யையில் சொன்ன ரீதியிலே; இங்கும்—வ்யாபக மந்த்ரத்திலும். इन्द्राय इदं न मम என்றாற்போலே ஸமர்ப்பணபரமென்றதாயிற்று.

இரண்டாவது அர்த்தத்தை அருளிச்செய்கிறார் இவ்விடத்தில் இதி. அநுஷ்டாந காலத்தில் த்வயமந்த்ரத்தையே ப்ரயோகிக்கிறபடியால் அதில் அதிகார ஸம்பாதகமான ஞாநத்திற்கே திருமந்த்ரம் காரணம். ஆகையால் சேஷத்வாநுஸந்தாநம் மட்டும் இங்குப் போதுமென்றபடி. சேஷத்வ ஜ்ஞாந

இச் शेषत्वानुसंधानம் அதிகாரத்திலே சேரும். 'क्षेत्रज्ञस्येश्वरज्ञानात् विशुद्धिः परमा मता' என்றது शेषित्वज्ञानमात्रपरமானபோது उपायानर्हत्वनिवृत्तिपरம். उपायरूपज्ञानान्तरத்தை விவக்ஷிக்கும்போது மோக்ஷபரம். இப் प्रणवार्थानुसंधानक्रமத்தை

'ईदृशः परमात्माऽयं प्रत्यगात्मा तथेदृशः । तत्संबन्धानुसंधानमिति योगः प्रकीर्तितः ॥'

என்று श्रीशाण्डिल्यभगवान் அருளிச்செய்தான். இத்தை

'अकारार्थो विष्णुर्जगदुदयरक्षाप्रळयकृत् मकारार्थो जीवस्तदुपकरणं वैष्णवमिदम् ।
उकारोऽनन्यार्हं नियमयति संबन्धमनयोः त्रयीसारस्त्र्यात्मा प्रणव इममर्थं समदिशत् ॥'

---

த்தாலேயே மோக்ஷம் சொல்லியிருப்பதால் இது அதிகார மாத்ரபரமென்னலாமோ என்ன, அந்த வசநத்தின் அர்த்தத்தை யருளுகிறார் क्षेत्रज्ञस्येति. யாஜ்ஞவல்க்ய. 3 34. இந்த வசநம் அதிகாரத்தையும் சொல்லலாம்; உபாயத்தையும் சொல்லலாம். இந்த ச்லோகத்தில் ஜ்ஞாநபதம். ஈச்வரன் சேஷீ என்கிற ஜ்ஞாநத்தை மட்டும் சொல்வதானல். விசுத்திபென்பதற்கு உபாயாநுஷ்டாநத்துக்கு ஜீவன் அநர்ஹனயிருக்கை யென்கிற தோஷத்திலிருந்து நிவ்ருத்தி யென்று பொருளாம். ஆக அதிகாரஸித்தி. ஈச்வர ஜ்ஞாநமென்பதற்கு உபாஸநரூப ஜ்ஞாநமென்றே ஆத்மாத்மீய பரஸமர்ப்பணமென்றே பொருளானல் விசுத்தி பதத்தால் மோக்ஷத்தைக் கொள்வது. ஆக இந்த ச்லோகம் அதிகாரபரமுமாம்; உபாயபரமுமாம். சாண்டில்ய வசநத்தில் யோகபதமிருந்தாலும் இதே பொருளென்கிறார் இப் ப்ரணவேதி. க்ரமத்தை, இருவித ஜ்ஞாநத்தை பூர்வாபரமான ஜ்ஞாநத்தை, ईदृश இதி5-17. பரமாத்மாவானவன் ईदृशः—பக்தி ப்ரபத்தி சாஸ்த்ரத்தில் ஓதப்பட்ட குணவிசேஷமுடையவன்; अयं प्रत्यगात्मा—இந்த ஜீவாத்மா ईदृशः—தேஹவைலக்ஷண்யாதிகளை யுடையவன்; இவ்விருவருக்குமுள்ள ஸம்பந்தத்தை அநுஸந்திப்பதென்பது யோகமாகும். பரமாத்மாவுடன் ஜீவாத்மாவைச் சேர்ப்பதற்குக் காரணமாகையால் அதிகாரரூபஜ்ஞாநம் உபாயரூபஜ்ஞாநமெல்லாம் யோகமே. இங்குச் சொன்ன பரமாத்மா ஜீவாத்மா அவர்களின் ஸம்பந்தமென்ற மூன்றுக்கும் ப்ரணவத்திலுள்ள அக்ஷரங்களை முறையே बोधकமாக ஸம்ப்ரதாய ஸூக்தியால் விவரிக்கிறார் இத்தை இதி. அகாரத்தின் அர்த்தம் விஷ்ணு; अकारो विष्णुवाचकः என்றது ஸ்ம்ருதி. कारणत्वाकारेण விஷ்ணு சொல்லப்படுகிறாரென்பதற்காக மேலே விஷ்ணு விசேஷணம் जगदिति. உலகத்தினுடைய உத்பத்தி ரக்ஷை ப்ரளயம் இம்மூன்றையும் செய்கிறவன், आदिः—कारणம் என்று பொருள் கொண்டால் இம்மூன்றும் ஸித்திக்குமென்று கருத்து, ரக்ஷகத்வம் தனியே சொல்வது अवधातुவைக் கொண்டு யோக வ்யுத்பத்தி பக்ஷத்தில். ஜீவன் மகாரத்திற்குப் பொருள். तत् इदं—அப்படியான இந்த ஜீவன் वैष्णवमुपकरणं—விஷ்ணுவுக்கு சேஷமாகும். उपकरणं—उपकारकं—சேஷமென்றபடி. இனி சதுர்த்தியின் அர்த்தம்—உகாரமானது अनयोः—இவர்களுக்குள்ள, ஸம்பந்தம்= சதுர்த்தியினல் சொல்லப்பட்ட சேஷத்வத்தை अनन्यार्हं—வேறொருவரைப் பற்ற ஆகாதபடி नियमयति—

என்று விவரித்தார்கள். 'கண்ணபுரமொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனோ' என்கிறதும் இப் प्रणवार्थविवरणम्. प्रणवத்தில் अक्षरत्रयத்தையும் वेदत्रयसारமாக श्रुतिस्मृतिகள் प्रपञ्चिத்தன.

இவ்வக்ஷரங்கள் இவ்வர்த்தங்களைச் சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்:-

'अष्टाक्षरशरीराङ्गप्रणवाद्यक्षरेण तु । अकारेणाखिलाधारः परमात्माऽभिधीयते ॥

समस्तशब्दमूलत्वादकारस्य स्वभावतः । समस्तवाच्यमूलत्वाद् ब्रह्मणोऽपि स्वभावतः ॥

वाच्यवाचकसंबन्धस्तयोरर्थात् प्रतीयते ॥'

என்று ஸ்ரீவாமநபுராணவசநத்தாலே सर्ववाचकजातप्रकृतियான प्रथमाक्षरத்துக்கு सर्ववाच्यजातप्रकृतियான நாராயணன் वाच्यனென்று प्रसिद्धமான अर्थத்தை वेदार्थसंग्रहத்திலே அருளிச்செய்தார்.

இத்தாலே कारणवाक्यसिद्धமான सकलजगन्निमित्तोपादानकारणत्वமும் அத்தாலே आक्षिप्तமான सर्वज्ञत्व—सर्वशक्तित्वादिगुणवர்க்கமும் இங்கே सिद्धமாயிற்று. இவ்

---

வ்யவஸ்த்தை செய்கிறது. उकारத்தின் பொருள் அவதாரணம். அதன் விவரணமிது. त्रयीसारः—வேதங்களின் ஸாரமாய், त्रि-आत्मा—மூன்று அவயவங்களையுடைய प्रणवः—ஓங்காரமானது एममर्थं=अनन्यार्ह-जगत्कारणविष्णुशेषत्वமுடையவன் ஜீவனென்னும் அர்த்தத்தை நன்கு அளித்தது. கண்ணபுரம் இதி. பெரிய திரு 8-5-3. ஒன்று-ஒப்பற்ற திருக்கண்ணபுரத்தின் பெருமானுக்கு; விஷ்ணுவுக்கு என்றபடி. அடியேன்—தாஸனாவேன். வேறொருவருக்கு அர்ஹனல்லேன். ச்லோகத்தில் த்ரயீஸார: என்றதற்கு ப்ரமாணம் பலவுள என்கிறார் இவ் இதி. 'तेभ्योऽभितप्तेभ्यः त्रयो वर्णा अजायन्त अकार उकारमकार इत्यादि ச்ருதி. अकारञ्चाप्युकारं च मकारं च प्रजापतिः । वेदत्रयात् निरवृहत्' இத்யாதி ஸ்ம்ருதி

மூன்று அக்ஷரங்களுக்குக் கீழ்க்கூறிய மூன்றும் பொருள்களென்று ஸ்தாபிக்கும் ப்ரமாணம் எவை என்ன, விவரிக்கத் தொடங்குகிறார். இவ்வக்ஷரங்கள் இத்யாதி अष्टाक्षर என்கிற வாமநபுராணம் அகாரத்திற்குப் பரமாத்மா பொருளென்று யுக்தியுடன் உபபாதிக்கிறது. अष्टाक्षरமான शरीर—உருவின் अङ्ग=ஓர் அவயவமான ப்ரணவத்தின் ஆதிஅக்ஷரமான அகாரத்தினாலே ஸர்வாதாரமான பரமாத்மா சொல்லப்படுகிறான்—समस्तेति. அகாரம் ஸ்வபாவமாய் ஸர்வ சொற்களுக்கும் மூலமாய், ப்ருஹ்மமும் ஸ்வபாவமாய் எல்லாப் பொருளுக்கும் மூலமாயிருப்பதால் அவ்விரண்டிற்கும் ஸம்பந்தம் பொருந்துகிறது. அது சப்த—அர்த்த விஷயமாகையால் வாச்யவாசக ரூபமாகிறது-என்று ச்லோகார்த்தமாம். जात—கூட்டம். प्रकृति—மூலகாரணம். वाचक-சொல். वाच्यं-பொருள். இப்படி காரணத்வ மூலமாக வாச்ய வாசக பாவம் சொன்னதற்குக் கருத்தைக் குறிக்கிறார் இத்தாலே இதி. आक्षिप्तமான=எது இராமற் போனால் காரணத்வம் ஸித்திக்காதோ அது காரணத்வம் சொன்னதாலேயே ஆக்ஷிப்தமாகும்=சொல்லாமலேயே ஸித்திக்குமென்றபடி. அகாரம் பகவந்நாம என்பதற்கு யுக்தியன்றி ப்ரமாணங்களும் உள என்கிறார் இவ்வக்ஷரம்

அக்ஷரம் भगवद्वाचकமென்னுமிடம், ‘अ इति निषेधे पुमान् विष्णौ’ என்றும், ‘अकारो विष्णुवाचकः’ என்றும்,

‘अ इति भगवतो नारायणस्य प्रथमाभिधानमभिदधता किं नाम मङ्गलं न कृतम्’

என்றும், निखण्डुक्களிலும், प्रयोगங்களிலும் प्रसिद्धம். இது व्याकरणव्युत्पत्तியாலே ஸர்வேச்வரனைச் சொல்லும்போது रक्षण-प्रीणनादिविषयமான धातुவிலே कर्तृवाचि யான प्रत्ययத்தாலே निष्पन्नமான पदமாய் सर्वरक्षकत्वादिविशिष्टனைக் காட்டும். இத் धातु अनेकार्थமேயாகிலும் रक्षणार्थத்தில் प्रसिद्धिप्रकर्षத்தாலும், இவ்வர்த்தம் இங்கே அபேக்ஷிதமாகையாலும், இங்கே नानार्थங்கள் अनुसन्धेयங்களாக ஒரு निरुक्ति யில்லாமையாலும் प्रथमपठितமான ரக்ஷணம் शाब्दமாய் மற்ற अपेक्षितार्थங்கள் இத்தாலே आक्षिप्तங்களாக अनुसन्धिக்கை உசிதமென்று இவ்வளவே ஆசார்ய ர்கள் व्याख्यानம் பண்ணினார்கள்.

இந்த रक्षकत्वம் अवच्छेदकமில்லாமையாலே ஸர்வவிஷயம், रक्षाप्रकारங்கள்

---

இதி. अ இதி. अकारம் நிஷேதமென்ற பொருளிலே அவ்யயம். விஷ்ணு என்கிற பொருளிலே புல்லிங்கம் என்றதாம். अ इति இதி. अथ शब्दानुशासनम्—என்று மஹா பாஷ்யத்தின் தொடக்கத்திலே பகவானுன நாராயணனுக்கு முதற் பேரான அகாரத்தைச் சொல்லுகின்ற பதஞ்ஜலியால் ஏன் மங்களம் செய்யபபட்ட தாகாதென்றபடி, நாராயணனுக்கு अकारம் வாசகமென்றதில் நிகண்டுக் களும் ப்ரமாண மென்கிறார். ப்ரயோகங்களிலுமென்றதாலே நிகண்டுக் களிலுள்ள அப்ரஸித்தசப்தம் போல் இதுவாகாதென்றதாம். யோகவ்யு த்தியுமுண்டென்கிறார் இது व्याकरणेति. अव என்ற தாதுவின்மேல் கர்த்ருவாசசொல்லும் ப்ரத்யயம் சேர்ந்தால் ரக்ஷணகர்த்தா என்று பொருளாகிறது. அது औणादिकडप्रत्ययமென்பர் சிலர். அது வன்றி क्विप् प्रत्ययமோ विच्प्रत्ययமோ கொண்டால் अव என்ற தாதுவில் वகாரமும் ப்ர த்யய அக்ஷரங்களும் लुप्त மாக அகாரமே நிற்குமாகையால் அவ்வர்த்தம் கூடு மென்பர் பிறர். अव என்ற தாதுவுக்கு ரக்ஷண-காந்தி—ப்ரீதி-த்ருப்தி— द्युति முதலான பல பொருள்களாம் அவற்றில் முதலில் கூறிய ரக்ஷணமென்கிற பொருளே அதிகப்ரஸித்தமாகையால் அதையே கொள்வர். सकृत्प्रयुक्तः शब्दः सकृदेवार्थं गमयति என்கிற ந்யாயத்தாலே ஒரு பொருள் கொள்வதுதான் ஸ்வரஸம். பல பொருள்கள் கொள்ளும் படி ப்ரமாணமிருந்தால் அவற் றையும் கொள்ள வேண்டியதாகும்; அஃதில்லை. ரக்ஷணகாரணத்வம் என்ற தொன்றைச் சொன்னாலே மற்றவையும் தாமே ஸித்திக்கு மென்றும் இப் பொருளே ஸர்வாசார்யஸ்வீக்ருதம். இப்படி ரக்ஷகத்வம் ஸித்தித்தாலும் அது ஜீவஸாதாரணமாகையால் ஈச்வரனே பொருளாவது எங்ஙனே என்ன, கீழ்ச் சொன்ன ஸர்வ ரக்ஷகத்வாதிகள் ஸித்திக்கும் வழி யறிவிக்கிறார் இந்த இதி. अवच्छेदकமில்லாமையாலே = இன்னாருக்கு ரக்ஷகனென்று விசேஷணமான சொல் இல்லாமையாலே எல்லோருக்கும் ரக்ஷகனென்றதாகும். ரக்ஷணமும் அநிஷ்டத்தினின்று விலக்குகையும் இஷ்டத்தை யடைவிப்பதுமாம். இஷ்டா

விஷயங்கள்தோறும் ப்ரமாணங்கள் காட்டின படியிலே விசித்ரங்களாயிருக்கும். இது हेतुनिर्देशம் பண்ணுமையாலே निरुपाधिकமாய்த் தோன்றினாலும் सापराधரான ஸம்ஸாரிகளுக்கு मोक्षादिप्रदानத்தில் ஸ்வதந்த்ரனான ஈச்வரன் தான் ஸங்கல்ப்பித்து வைத்ததொரு வ்யாஜத்தை அபேக்ஷித்திருக்கும். நித்யர் பக்கலிலும் முக்தர்பக்கலிலும் निरुपाधिकसहजकारुण्यमात्रத்தாலே स्थितस्थापनरूपेण ரக்ஷை முழுக்க நடக்கும்.

இப்படி स्वाभाविकமான रक्षकत्वம், प्रातिकूल्यம் நடக்கும் காலத்தில் अनाद्यप-राधத்தாலே பிறந்த निग्रहरूपोपाधियாலே प्रतिबद्धமாம். प्रतिबन्धकமான இவ் उपाधियைக் கழிக்கைக்காகவே ப்ரபத்தி முதலான வ்யாஜங்கள் शास्त्रसिद्धங்கள்.

'त्राणे स्वामित्वमौचित्यं न्यासाद्याः सहकारिणः । प्रधानहेतुः स्वातन्त्र्यविशिष्टा करुणा विभोः ॥'

---

நிஷ்டங்களும் தேசம் காலம் விஷயம் இவற்றின் வேறுபாட்டால் பலவகையாகும். இதனால் ஸர்வருக்கும் ஸர்வவிதரக்ஷணம் செய்கிறவனென்றதாயிற்று. 'இப்படி ரக்ஷணத்திற்குக் காரணங்களைக் கூறுமையால் நிருபாதிகமாகவும் ரக்ஷகத்வம் கிடைக்கும். அப்போது ஸம்ஸாரிகளெல்லோரையும் நிஷ்காரணமாக ரக்ஷிப்பதாகில் எல்லோருக்கும் ரக்ஷணம் ஏகரூபமாகவேண்டும். ரக்ஷகத்வம் ஸோபாதிகமென்றால் நித்யர்களுடைய ரக்ஷணங்களிலே காரணம் கூறவேண்டும்' என்ன, ரக்ஷகத்வம் நிருபாதிகமென்றே இசைந்து ஸம்ஸாரிகள் விஷயத்திலே ஈச்வரன் ரக்ஷணத்திற்கு வ்யாஜத்தையும் எதிர்பார்க்கிறபடியால் அவர்கள் விஷயத்தில் இங்கு ரக்ஷகத்வம் सोपाधिकமானாலும் மோக்ஷத்திலே நிருபாதிகமாகுமென்கிறார் இது இதி..ஹேதுநிர்தேசம் = ரக்ஷணகாரணமுண்டு, இன்னதென்று குறித்தல். நித்யர்விஷயத்தில் தேசகால பேதத்தாலே ரக்ஷணம் வெவ்வேறாகச் சொல்லக் கூடாமையால் அது स्थितस्थापनமேயென்கிறார். स्थितस्य—முதலில் இருந்ததையே பிற்காலத்திலுமெப்போதும் स्थापनம் = இருக்கச் செய்வதேயாம். ஸம்ஸாரிவிஷயத்தில் ரக்ஷணம் வெவ்வேறு விதமாகையால் பலவித வ்யாஜம் வேண்டியிருக்கிறதாகில் அது எப்படி ஸ்வாபாவிகமாகுமென்ன விளக்குகிறார் இப்படி இதி. ஸ்வாபாவிகமானாலும் கார்யம் தடைப்படலாம். ரக்ஷணம் வ்யாஜத்திற்குக் கார்யமன்றே ப்ரதிபந்தக நிவ்ருத்தியே வ்யாஜகார்யம். ப்ரதிபந்தகம் போனபோது ரக்ஷணம் ஸ்வாபாவிகமாய் ஸித்திக்கிறதென்று கருத்து ப்ராதிகூல்யம் நடக்கும் காலமானது ஸம்ஸாரதசை. இனி ஈச்வரன் ரக்ஷிப்பது ஸ்வாமியானபடியால். ஸ்வதந்த்ரனானபடியால், காருணிகனானபடியால் ப்ரபத்யாதிகளை நாம் செய்வதால் என்று பலபடி சொல்லுகிறார்கள். எது உண்மையென்ன, எல்லாம் வேண்டுமென்கிறார் காரிகையினால். ஈச்வரனுக்கு நம்மை ரக்ஷிக்கும் விஷயத்தில் ஔசித்யம் = யோக்யதையாகிறது அவனுடைய ஸ்வாமித்வம். உடையவன் உடைமையை ரக்ஷிப்பது உசிதமென்பரே. இது ஸ்வரூப யோக்யதாமாத்ரம். நாம் செய்யும் வ்யாஜம் ஸஹகாரி காரணமாகும். முக்யகாரணமாவது காருண்யம். அஸ்வதந்த்ரனுடைய காருண்யத்தால் கார்யஸித்திநிச்சயமில்லையாகையால்

सर्वरक्षणदीक्षितனவன்

'लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकः सर्वसिद्धान्ते वेदान्तेऽपि च गीयते ॥'

इत्यादिகளிற்படியே सपत्नीकனக सिद्धனயிருக்கையாலே இங்கே प्रमाणसिद्धोपयोग-विशेषமான पत्नीसंबन्धம் आर्थம். இப்படி सन्नियोगशिष्टन्यायத்தாலே எம்பெரு மானைச் சொல்லுமிடம் எங்கும் பிராட்டியையும் சொல்லிற்றுமென்னுமிட த்தை 'तदन्तर्भावात् त्वां न पृथगभिधत्ते श्रुतिरपि' என்று समर्थித்தார்கள். ஆகையால் स्वरूपनिरूपकधर्मங்கள் सर्वविद्यகளிலும் வருகிற கணக்கிலே அவற்றில் प्रधानமான இவ் விசேஷணமும் सर्वविद्यகளிலும் अनुसंधेयம். இதுதான் देवतान्तरव्यावृत्ति யையும் பண்ணிக்கொண்டு सर्वातिशायियான स्वतन्त्रस्वरूपத்துக்கு निरूपकமாம் இவனுடைய स्वतस्सिद्धातिशयங்களான स्वरूप-विग्रह-विभूतिகள் 'भास्करेण प्रभा यथा' என்னும்படி विशेषणமாய் நிற்கிற இவளுடைய स्वरूप–विग्रह–विभूतिகளாலும் लब्धातिशयங்களாய்க்கொண்டு விளங்கியிருக்குமென்னுமிடம் देवतापारमार्थ्यवेदि களான மஹர்ஷிகளாலே प्रपञ्चितம்.

---

அதோடு ஸ்வாதந்த்ர்யமும் சேரும். இப்படி ஸம்ஸாரிவிஷயத்தில் स्वामित्वसह कृत व्याजसापेक्षरक्षणहेतु स्वातन्त्र्यविशिष्ट कारुण्यवाனாய் காரணமான அவனுக்கு லக்ஷ்மீ விசிஷ்டனென்கிற விசேஷணமும் வேண்டுமென்கிறார் सर्वेति. दीक्षित பதத்தி னாலே பத்நீஸம்பந்தம் ஆவச்யகமென்றதாயிற்று. प्रमाणेति. பத்நீஸம்பந்த மானது ப்ரமாணஸித்தமான உபயோகத்தையுடையதாம். உபயோகமென் னவெனில்—புருஷகாரத்வமும் உபாயமாயிருக்கையும். அகாரத்திற்கு விஷ்ணு மாத்ரம் பொருளாயிருந்தாலும் குணங்கள் பத்நீஸம்பந்தம் இவைகளில்லா மல் ரக்ஷகனாகிறதில்லையாகையால் இவை அர்த்தஸித்தமென்றார்; இதற்கநுகூல மாக ஸம்ப்ரதாயத்தையும் கூறுகிறார் संनियोगशिष्टेति. संनियोगशिष्टानां सह वा प्रवृत्तिः सह वा निवृत्तिः என்று வ்யாகரண வசநம். இரண்டு அம்சங்கள் சேர்த்து விதிக்கப்பட்டால் அவற்றில் ஒன்றுக்கு ப்ரவ்ருத்தியுள்ள போது மற்றொ ன்றுக்கும் ப்ரவ்ருத்தி யுண்டு; ஒன்றுக்கு நிவ்ருத்தி என்றால் மற்றொன்றுக்கும் நிவ்ருத்தி. लक्ष्म्या सह रक्षकः என்று ஸர்வ பாஞ்சராத்ர ஸித்தாந்தத்திலும் வேதாந்தத்திலும் சிஷ்டமாகையால் = உபதிஷ்டமாகையால் ஈச்வரனுக்கு ரக்ஷகத்வம் சொல்லும்போது லக்ஷ்மிக்கும் அது ஸித்தமாகுமென்றபடி. இதுவும் तदन्तर्भावादित्யாதியும் முன்னமே வ்யாக்யாதம். அவற்றில் सत्यत्वादि-स्वरूपनिरूपकधर्मங்களைவிட இதற்குள்ள ப்ராதாந்யத்தை விவரிக்கிறார் இதுதான் இதி. லக்ஷ்மியினால் அதிசயமென்றதால் இயற்கையில் அவனுக்குக் குறை யென்றதாகாது. பகவத்ஸ்வரூபத்திற்குப் பிராட்டியின் ஸ்வரூபத்தாலே அதிசயம்; அவன் திருமேனிக்கு இவள் திருமேனியாலே; அவன் விபூதியான புருஷர்களுக்கு இவள்விபூதியான ஸ்த்ரீகளாலே. இதற்கு पुन्नामा भगवान् हरिः, स्त्रीनाम्नी लक्ष्मीः என்றவிடத்தில் விஷ்ணுபுராணத்தில் விரிவாம். देवतापारमा र्थ्यமாவது உண்மையான இறைநிலை—'ब्रह्मरुद्रादिव्यावर्तकलक्ष्मीविशिष्टனேவே தேவதையாகிறா னென்பது. ரக்ஷகத்வதசையும் உபேயத்வதசையும்

இப்படி नारायणशब्दत्तிலும் पत्नीसंबन्धம் अनुसंधेयம். ரிப் पत्नीसंबन्धம் द्वयத்திலே स्पष्टोक्तம். द्वयविवरणமான गद्यத்தில் प्रथमத்திலே 'भगवन्नारायण' என்று தொடங்கிச் சொல்லச் செய்தே नारशब्दத்தின் நடுவே இவளைச் சொல்லிற்றும் पत्नीत्वनिबन्धनமான पतिपारार्थ्यத்தாலும் 'नरसंबन्धिनो नाराः' என்கிற व्युत्पत्तियாலும் ஆகக்கடவது.

இங்குப் प्रथमाक्षरம் चतुर्थ्येकवचनान्तமாய் विभक्तिलोपம் பிறந்து கிடக்கிறது. அது எங்ஙனேயென்னில்—परमात्माவுக்கு स्वात्माவை समर्पिக்க विधिக்கிறவிடத்

---

ஏகருபமென்கிறார் ரிப்படி இதி. இவ்விரண்டும் த்வயத்தில் ஸ்பஷ்டமாயிருப்பதாலும் நாராயணசப்தார்த்தத்திலும் ஸ்ரீஸம்பந்தம் கொள்வது ப்ராமாணிகமாகும். சரணாகதி கத்யத்திலே முதலில் ஸ்ரீப்ரபத்திக்காக ஸ்ரீப்ரஸ்தாவம். மேலே ஸ்ரீமந்நாராயண என்று இருதரம் சொல்லிற்றும்= அருளியதும் உபேய தசையிலும் உபாயதசையிலும் சேர்த்தியை யறிவிக்கவாம். அதற்கு முன்னே நாரசப்தார்த்த குணநிரூபணத்திலே ஸ்ரீவல்லப என்றருளியது இவளுக்கும் நாரத்வமுண்டென்றறிவிப்பதற்காக என்னவேண்டும். அப்போது இதர நாரஸாம்யமும். नराज्जातानि तत्त्वानि नाराणि என்றபடி कादाचित्कत्वமும் கொண்டதாகுமே யென்ன அருளிச்செய்கிறார் द्वयेति. சொல்லச்செய்தே= சொல்லியிருந்தும் என்றதால் அவளுக்கு நித்யத்வம் ஸித்தம். இது மேல் श्रीमन्नारायण என்பதற்கும் உபலக்ஷணம். पत्नीत्वनिबन्धनமான—பத்நீத்வ மிசைந்ததாலேற்பட்ட. पत्नीत्वं निबन्धनं=(नियामकं)यस्य என்று बहुव्रीहि. மற்ற வஸ்துக்களுக்குப் பரமாத்மசேஷத்வம் ஸ்வத:= ஸ்வபாவத்தாலேற்பட்டது. இவளுக்கு சேஷத்வம் அவ்வாறின்றி பத்நீத்வத்தை இசைந்ததால் ஆனதென்றபடி. नरसंबन्धिनः என்றதாலே नराज्जातानि என்கிற வ்யுத்பத்தியில் லக்ஷ்மியை க்ரஹிக்கவாகாதென்றதாம். ஈச்வர நித்யகுணங்களும் नरसंबन्धि என்கிற விக்ரஹத்தில் க்ரஹிக்கப்படும். ஆக இவள் நித்யமாயிருப்பதால் இவளோடு சேர்ந்தே அவன் எப்போதும் ரக்ஷகனாகிறானென்றதாயிற்று. இப்படி அகாரார்த்தம் சொல்லப்பெற்றது.

மேலே விபக்த்யர்த்தம். அகாரத்தின் மேல் ஒரு விபக்தியுமில்லையே. அது எப்படி ஸாதுவாகும். விபக்தியிருந்து லுப்தமாயிருக்கிறதென்னில், प्रथमातिक्रमे कारणाभावात् அது ப்ரதமாவிபக்தியே யாகலாம். அப்போது பரமாத்ம ஸம்பந்தம் ஜீவாத்மாவுக்குச் சொன்னதாகாதென்ன, சதுர்த்தியை ஸ்த்தாபிக்கிறார் இங்கு இதி. சதுர்த்தியேகவசநாந்தமென்றதாலே. லக்ஷ்மீ வாசகமான உகாரத்தைக் கொண்டபோது 'मकारस्तु तयोर्दासः(से)' என்றபடி இரண்டக்ஷரத்தின் மேல் ஷஷ்டீத்விவசந லோபம் இசைவது குறித்ததாம். விபக்திலோபம் பிறந்து= लुप्तविभक्तिकமாய்; கிடக்கிறது என்பதற்கு ப்ரதமாக்ஷரம் எழுவாய். அகாரத்தின்மேல் ஷஷ்டீ லுப்தமாயிருந்தாலென்ன? ப்ரதமா விபக்தி லோபத்தை தானிசைந்தாலென்ன என்பதற்கு உத்தரம் தொடங்குகிறார். அது இதி. 'ओमित्यात्मानं युञ्जीत' என்று பரமாத்மாவினிடம் ஸ்வாத்ம ஸமர்

திலே ப்ரணவத்தை மந்த்ரமாக विधिक्कैயாலும், இதுக்கு अनुष्ठेयार्थप्रकाशनम् प्राप्तமாகையாலும், இதில் समर्पणीयனான ஆத்மா तृतीयाक्षरத்திலே प्रकाशिக்கை யாலும், இதுக்கு उद्देश्यமான परब्रह्मம் प्रथमाक्षरத்தில் प्रकृतिபாலே தோற்றுகை யாலும். उद्देश्यवाचकத்தையும் समर्पणीयवस्तुவையும் समानाधिकरित्तु प्रयोगिக்கை உசிதமல்லாமையாலும் उद्देश्यवाचकத்துக்கு அநுரூபமான चतुर्थीविभक्तियை இவ் விடத்திலே கொள்ளப் प्राप्तம். प्रथमतृतीयाक्षरங்களை समानाधिकरणங்களாகக் கொண்டு जीवपरमात्माக்களுடைய स्वरूपैक्यமிங்கே சொல்லப்படுகிறதென்னும் कुदृष्टिपक्षத்துக்கு बहुप्रमाणविरोधமும் समभिव्याहृत—नमश्शब्द - नारायणशब्द—चतुर्थिகளுடைய स्वरसार्थविरोधமும் வரும்.

இது प्रणवத்தை धनुस्साகவும் आत्माவை शरமாகவும் ब्रह्मத்தை இலக்காகவும்

---

ப்பண விதி அதில் ப்ரணவம் மந்த்ரம் ஸமர்ப்பிக்கப்படும் ஜீவாத்மா மகாரார்த்தம். ப்ரஹ்மம் ஸமர்ப்பணத்திற்கு உத்தேச்யம். இங்கே ஸமர்ப்பணம் கிடைப்பதற்காக संप्रदान चतुर्थीயைக் கொண்டால் ஸம்ப்ரதாநம் ஸமர்ப்பண மாகையாலே இஷ்ட ஸித்தி. அதனால் இங்கே சதுர்த்தி. இது ஷஷ்டீ விபக்தி யால் வ்யக்தமாகாது ப்ரதமாவிபக்தியைக் கொண்டு ஸமாநாதிகரித்து = अभेद-निर्देशமாக ப்ரயோகித்தால் அபேதம் கிடைக்குமே யன்றி ஸம்ப்ரதாந ஸம்ப்ர தேய भावம் ஸித்திக்காது. அத்வைதிகளிசைந்த அபேதமே யிருக்கட்டுமே என்னில்—கீழ்க்கூறிய ஸமர்ப்பண விதிவாக்யத்தோடு விரோதம்மட்டுமே யன்றி, எல்லாத் தசைகளிலும் ஜீவபரமாத்ம பேதத்தையே சொல்லும் ஸகல ப்ரமாண விரோதமுமாம் அதை யருளுகிறார் बह्विति. समभिव्याहृतेति. மகாரார்த்த மும் நாராயணனும் ஒன்றாகில் नारायण: என்றே யிருக்கவேண்டும். நமச்சப்த மும் நாராயண சப்தத்தின் மேல் சதுர்த்தியும் தகாது ஆக விரோதம். இது போல் नन्ता नन्तव्यन् என்று இருவரில்லையாகையாலே நமச்சப்தத்திற்கு விரோதம். நாரமான ஜீவர்களுக்கு அயநமான ஆதாரமான என்று சொல் லும் நாராயண சப்தத்திற்கும் விரோதம். அபேதம் அர்த்தமாகாத, உத்தே ச்யத்வமே அர்த்தமான சதுர்த்தியும் விரோதிக்குமென்றதாம். ओमित्यात्मानं युञ्जीत என்றவிடத்தில் ओम् என்ற சொல்லை அகண்டமாகக் கொண்டு அதன் மேல் சதுர்த்தியை, ओमर्थाय नमो नारायणायेति पदवाक्यता என்ற அஷ்டாக்ஷர ப்ரதம யோஜனையிற் போல் லுப்தமென்று கூறி, चतुरण्यमन्त्रोक्तமான ஜீவனை ப்ரணவார்த்த பரமாத்மாவிடம் ஸமர்ப்பிப்பது என்று அர்த்தம் கொள்ளாமல் सखण्डப்ரணவமாகவே கொண்டு அகாரார்த்த பரமாத்மாவினிடம் மகா ரார்த்தஜீவ ஸமர்டணமென்றே ந்யாஸவித்யையில் கொள்வது இந்த கட்ட த்தில் யுக்தம். இது மகாரார்த்த ப்ரகரணத்திலே மிக வ்யக்தமாகும்.

ப்ரணவம் अखण्डமானது अभेदபரமன்று, ஸமர்ப்பணபரமென்பதற்கு மற்றொரு मुण्डकश्रुतिயையும் ப்ரமாணமாக்குகிறார் இது இதி. 'प्रणवो धनुः शरो ह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते । अप्रमत्तेन वेद्धव्यं शरवत् तन्मयो भवेत्' என்று ப்ரண வத்தை வில்லாகவும் ஜீவாத்மாவை அம்பாகவும் ப்ரஹ்மத்தைக் குறியாகவும்

ஆத்மஸமர்பணத்தை லக்ஷ்யவேதமாகவும் வகுத்துச்சொல்லுகிற வாக்யத்தாலும் ஸித்தம். இங்கு பரஸமர்பணம் பொருளாம் போது ஸ்வதந்த்ரப்ரணவத்திற் கண்ட சதுர்த்திப்படியே இச் சதுர்த்திக்கும் அர்த்தமாகக் கடவது. இங்கு ப்ரணவம் பரஶேஷத்வைகஸ்வரூப-ப்ரதிபாதநபரமான பொருளில் இச் சதுர்த்தீ தாதர்த்யத்தை விவக்ஷிக்கையாலே ஆத்ம பரமாத்மாக்களுடைய ஶேஷஶேஷிபாவம் ப்ரகாஶமாகையால் நிருபாதிகஸர்வஶேஷியான ஈச்வரனைப் பற்றத் தான் நிருபாதிகஶேஷமான படி அநுஸந்தேயம். 'த்வம் மே' என்று ஸ்வாமியான ஸர்வேச்வரன் தொடர்ந்து பிடித்தாலும், 'அஹம் மே' என்று திமிறப்பண்ணும் அஹங்காரவிசேஷத்தாலே அஸத்கல்பனான இஜ்ஜீவாத்மாவை ஶேஷத்வாநுஸந்தானம் உஜ்ஜீவிப்பிக்கிறதாகையாலே இதின் ப்ராதாந்யம் தோற்றுகைக்காக தர்மிக்கு முன்னே சேஷியோடே ஸம்பந்தத்தைச் சொல்லிற்று.

---

வகுத்து=பிரித்துக் கூறி அம்பினால் குறியை யடிப்பதென்று ஆத்ம ஸமர்ப்பணத்தையும் விளக்கிற்று. இதனின்று ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் பேதம் ஸித்திக்கிறது, அம்பு குறியோடு ஒன்றுமே யன்றி ஒன்றாகாது. ஆத்ம ஸமர்ப்பணமானது आत्मात्मीयभरन्यासो हि आत्मनिक्षेप उच्यते—என்றபடி பரஸமர்ப்பணமாகும். ஆத்மாவை மட்டும் சொல்வதாயிருந்தால் சேஷசேஷி பாவம் கொள்ளலாம்; ஸமர்ப்யஸமர்ப்பகபாவம் சொல்லும் போது பரத்தையும் சேர்ப்பதாம். அதனாலேயே தைத்திரியந்யாஸவித்யை ப்ரபத்தியாயிற்று. அங்குப் போல் இந்த அஷ்டாக்ஷர ப்ரணவத்திலும் சதுர்த்தி ஸம்ப்ரதானத்தில் வந்ததென்கை தகுமென்றதாம்.

ஆனாலும் ஸித்தாந்தத்தில் அஷ்டாக்ஷரம் தத்துவஜ்ஞானபரமாகையாலே ஸமர்ப்பணயோஜனையை விட்டு சேஷசேஷிபாவபரமாகச்சொல்வது யுக்தமென்று ஸம்ப்ரதானசதுர்த்தியைவிட்டு चतुर्थी तदर्थार्थ—बलि-हित सुख-रक्षितैः என்ற ஸூத்ரத்தாலான தாதர்த்யசதுர்த்தீ என்கிறார்—இங்கு இதி. தாதர்த்யமாவது பாரார்த்யம். அதே சேஷத்வம். அங்கு சேஷத்வத்திற்குக் காரணத்தைக்கூறாமையாலே நிருபாதிகத்வம் ஸித்திக்கிறது. மகாரார்த்தம் அகாரார்த்தத்திற்கு சேஷம் என்ற இப்பொருளிலே மகாரார்த்தம் உத்தேச்யமாகையால் उद्देश्यवचनं पूर्वं என்கிற ந்யாயமாய் மகாரம் முன்னும் அகாரம் பின்னும் இருக்கவேண்டுமே யென்ன அவ்வாறிராமைக்கு யுக்தியை யருளுகிறார் त्वं मे இதி. இந்த பட்டர்முக்தகசலோகம் முன்னமே உரைக்கப் பெற்றது. தொடர்ந்து பிடிப்பதாவது—ஒருதரம் சொல்வதோடு நிற்காமல் சர்ச்சைக்கு வரும்படி மேன்மேல் வாதிப்பது. திமிற—விலக. அஹங்காரவிசேஷமாவது தேஹாத்மப்ரமத்தோடு ஸ்வதந்த்ராத்ம ப்ரமமும். தேஹாத்ம ப்ரமமுமுள்ளவன் ஈச்வரனை யிசையாமையாலே தனக்கு ஈச்வரசேஷத்வமில்லை யென்பான்; தேஹாதிரிக்தனாக ஜீவனையும் ஈச்வரனையும் இசைந்தாலும் அவனுக்கு எப்போதும் சேஷனாகவேண்டு மென்பதை இசையாதாரும் உண்டு. அஸத்கல்பனான=ம்ருதனுக்கு ஸமானமான. சிற்சிலவிடத்தில் உத்தேச்யத்திற்கு முன்னமே விதேயத்தைச் சொல்வதுண்டு, அதன் கருத்து இவ் விதேயஜ்ஞா

निश्चिते परशेषत्वे शेषं संपरिपूर्यते। अनिश्चिते पुनस्तस्मिन् अन्यत् सर्वमसत्समम्॥

இப்படி ஈச்வரன் ஸர்வசேஷியாம்போது 'अस्या मम च शेषं हि विभूतिरुभयात्मिका। इति श्रुतिशिरस्सिद्धं मच्छास्त्रेष्वपि मानद॥' என்றும், 'उभयाधिष्ठानं चैकं शेषित्वम्' என்றும் சொல்லுகிறபடியே ஸபத்நீகனாயிருக்கும். अग्नीषोमीयादिகளிற் போலே ஆத்மஹவி-ஸ்ஸமர்ப்பணதேவதாத்வம் இருவர்க்கும் கூட வென்று தோற்றுகைக்காக, சேஷிகளிருவராயிருக்க சேஷித்வமேகமென்கிறது.

---

நமின்றியிருக்கும் உத்தேச்யஜ்ஞாநம் நிஷ்ப்ரயோஜநமென்றறிவிப்பதாம். இதை விரித்துரைக்கிறார் காரிகையால். ஆளவந்தார் சதுச்லோகீ என்ற ச்லோகத்தில் ஆத்மா தேஹாதிகளைவிட வேறென்று அதன் ஸ்வரூப ஜ்ஞாந மிராமற் போனாலும், பரமாத்ம சேஷத்வ ஜ்ஞானம் அவச்யமாகுமென்றார். निश्चित इति பரமாத்மசேஷத்வ நிச்சயமிருந்தால் அவன் அநுக்ரஹத்தாலே விரைவில் தேஹாதிவிலக்ஷணனென்ற தெளிவும் வரும். உபாய ஜ்ஞானத்தில் சேஷத்வ ஜ்ஞாநமும் சேர்ந்திருப்பதால் இது முக்யமாகிறது. இதனால்—ஸ்வதந்த்ராத்ம ப்ரம நிவ்ருத்தியினால் शमदमादिகளும் ஸித்திக்கும். ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநத்தில் ஊன்றுவான். तस्मिन्—அந்த பரமாத்ம சேஷத்வமானது अनिश्चिते सति நிச்சயிக்கப்படாதபோது अन्यत् सर्वं—தேஹவைலக்ஷண்யாதி ஜ்ஞாநமெல்லாம் இருந்தாலும் असत्समम्—இல்லாததற்கு ஸமாநமே. பரமாத்ம ப்ராவண்யமிராமையால் மோக்ஷத்திற்கு வழி யில்லையென்றபடி.

இந்த சேஷத்வமானது பெரியபிராட்டியைக் குறித்துமாகவேண்டுமென்கிறார் இப்படி இதி. முன்னமே அகாரார்த்தத்திலே பத்நீஸம்பந்தம் அநுஸந்திக்க வேண்டுமென்று நிரூபித்திருந்தாலும், 'लक्ष्म्या सह रक्षकः' இத்யாதிவசநங்களைக் கொண்டு பத்நீ விசிஷ்டனாய் ரக்ஷகனென்று ஸித்திப்பது போல் சேஷியாவதும் பத்நீ விசிஷ்டனாகவே என்பதற்கு ப்ரமாணம் அறிவிக்க மீண்டும் இப்பிரஸ்தாவம் செய்வதாம், अस्या இதி விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. उभयात्मिका = இருவிதமான = சேதநாசேதநரூபமான அல்லது லீலாவிபூதியும் போகவிபூதியுமான விபூதி இவளுக்கும் எனக்கும் சேஷபூதம். இது வேதாந்தத்திலும் ஸித்தம். मानद என்று விஷ்வக்ஸேந விஷயமான விளிச்சொல். उभयाधिष्ठानं இருவரையும் ஆதாரமாகவுடைய சேஷித்வமானது एकम्—ஒன்றே. பகவானுக்கு சேஷித்வம் முன்னே, பிராட்டிக்கு சேஷித்வம் பின்னே என்பதில்லை என்றார் சோமாசியாண்டான். சேஷிகளிருவராயிருக்க சேஷித்வமும் இரண்டாகத்தானே இருக்கும்; ஒன்றென்பதெங்ஙனே என்ன—அதன் கருத்தையுரைக்கிறார் अग्नीषोमीयेति. இருவர் சேர்ந்த தேவதையாவரென்றால் அக்நிக்கும் ஸோமனுக்கும் தனித்தனியாக ஹவிஸ்ஸைக் கொடாமல் இருவருக்கும் சேர்த்தே அர்ப்பணம் செய்வதென்றதாம். அதுபோல் ஆத்மா என்கிற ஹவிஸ்ஸை இவர்களுக்கு அர்ப்பணம் செய்யும் போது பிராட்டியையும் பிரானையும் சேர்த்தே இதை அர்ப்பிப்பதென்றறிவிப்பதற்காக சேஷித்வம் एकம் மென்கிறது.

**मध्यमाक्षरத்தை लक्ष्मीवाचकமாகச் சொல்லுகிற कठश्रुतिवाक्यத்தைப் परामर्शि த்தால் இருவரையும் பற்ற இவ்வாத்மா शेषமென்னுமிடம் सिद्धम्.**

**शेषत्वமாவது தனக்கு ஓர் உபகாரத்தைப் प्रधानமாகப்பற்றலன்றிக்கே परोप-कारार्हமாகை. இத்தை 'परगतातिशयाधानेच्छया उपादेयत्वमेव यस्य स्वरूपं स शेषः, परः शेषी' என்று ச்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தார்.**

---

ப்ரணவம் ஸமர்ப்பண பரமென்ற பக்ஷத்தில் லக்ஷ்மீ விசிஷ்ட பரமாத்மா உத்தேச்யமென்று த்வயமந்த்ரத்திற் போல் கொள்வதாகும்; அதுபோல் இந்தத் तादर्थ्यமென்ற சேஷத்வ பரமான யோஜனையிலும் லக்ஷ்மியையும் சேர்ப்பதற்கு அஷ்டாக்ஷர வ்யாக்யாநமான कठ ச்ருதியும் ப்ரமாண மென்கிறார் மத்யமாக்ஷரத்தை இதி. अकारेणोच्यते विष्णुः सर्वलोकेश्वरो हरिः । उद्धृता विष्णुना लक्ष्मीः उकारेणोच्यते तथा ॥ मकारस्तु तयोर्दासः(से) इति प्रणवलक्षणम् ॥ उ என்பது லக்ஷ்மியைச் சொல்வது அவனால் உத்தாரம் செய்யப் பெற்றவளென்ற பொருளைக் கொண்டாம். उद्धारமானது அமுதக் கடலினின்றும் அசோக வநத்தினின்றும் சிசுபால விவாஹவிபத்தினின்றும் பல படி யாகும். அல்லது उत्-உயர-திருமார்பில் தரிக்கப்பட்டாளென்றதாலுமாம். சேஷத்வ மென்றால் மிகுதியாயிருக்கையென்று பொருளாகிறது; அது இங்குப் பொருந்த வில்லையே. உபகாரகத்வம் சேஷத்வ மென்றால் ராஜாவுக்கு ஊழியன் போல் ஊழியனுக்கும் ராஜா உபகாரம் செய்வதால் ராஜாவும் சேஷனாகவேண்டும்— ஒருவன் செய்யும் கார்யத்தினால் பிறருக்குப் போல் தனக்கும் உபகாரமிருப்ப தால் தனக்குத் தானும் சேஷனாகவேண்டு மென்ன—அருளிச்செய்கிறார் சேஷத் வமாவது இதி. இவன் அவனுக்கு சேஷனென்றால் அவனுடைய உப காரத்தையே இவன் ப்ரதாநமாகக் கொண்டிருப்பவனென்றதாம். அப்படி கொண்டபோதே சேஷத்வம். தன் ப்ரயோஜநத்தையே ப்ரதானமாகக் கொண்டால் परशेषत्वமில்லை. ஜீவன் अहं मे என்றாற்போல் நினைக்கிறவரையில் பரமாத்ம சேஷனுவானோ என்னில்—ஆகவேண்டு மென்பதற்காகவே இங்கே பரோபகார அர்ஹமாகை என்றருளியது. ஒவ்வொருவனும் ஸர்வேச்வரன் தவிர மற்றவருடைய உபகாரத்தை ப்ரதாந மாக்காமல் ஸர்வேச்வரனின் உபகாரத்திற்கே அர்ஹன் இவன் ப்ராந்தியினால் அந்த உபகாரத்தைக் கண்டு செய்யாமற் போனாலும் அர்ஹத்வ முண்டு—இப்படிப்பட்ட அர்ஹத்வ ரூப சேஷத்வம், ஈச்வரனைக் குறித்துப்போல் பிராட்டியைக் குறித்தும் உண்டென்று குறித்தபடி. வேதார்த்தஸங்க்ரஹத்தில் ச்ரீபாஷ்யகாரர் அருளிய சேஷத்வ லக்ஷணத்தில் उपादेय என்றவளவால் பிறரின் பெருமைக் காகத் தனக்கு உபாதாநார்ஹத்வத்தைக் குறித்ததால் ஈச்வரனைக் குறித்துத் தன்னை சேஷனாக நினைக்காமற் போனாலும் சேஷத்வம் உண்டு; ஆனால் நினைக்க வேண்டுமென்று அறிவித்ததாம். இதை அருளுகிறார் இத்தை இதி.

உகாரம் லக்ஷ்மீவாசகமென்கிற ச்ருதியில் तयोः दासः என்று ஷஷ்டீ த்விவசநமிருப்பதால் ப்ரணவத்திலும் अ उ. என்கிற இரண்டு பதங்களை

இவ்விடத்தில் ச்ருதியில் தோற்றின षष्ठीद्विवचनம் लुप्तம். இங்கு संबन्ध-सामान्यத்திலே प्रवृत्तैயான षष्ठिயானது प्रमाणसिद्धமாய் अपेक्षितமான விசேஷத்திலே विश्रमिக்கக் கடவது. तादर्थ्यமாகிற உபயுக்தமான संबन्धविशेषம் उपपन्नமாகைக்காகச் चतुर्थीद्विवचनம் ஏறி லோபித்துக் கிடக்கிறதாகவுமாம் அப்போது लुप्तமான चतुर्थीद्विवचनத்தினுடைய விவரணமாகிறது 'இருவருக்கும் दासன்' என்கிற ச்ருதி. இப்படி हविरुद्देश्यदेवताद्वन्द्वத்தில் ஹவிஸ்ஸுபோலே இருவரையும் பற்ற இவ்வாத்மா சேஷமென்னும்போது இங்கு अवधारणம் आर्थम्. இவர்களிருவருக்கும் இவ்வாத்மா अनन्यार्ह-निरुपाधिकशेषமென்றதாயிற்று.

---

த்வந்த்வஸமாஸமாக்கி ச்ருதியில் காணும் ஷஷ்டீத்விவசநத்தை இங்கும் கொள்ளவேணடு மென்கிறார் இவ்விடத்தில் இதி. இப்படியாகில் ஷஷ்டிக்கு ஸம்பந்த ஸாமாந்யமே பொருளாகில் சேஷத்வ ரூப விசேஷம் அறியவாகாதே என்ன நிரூபிக்கிறார் இங்கு இதி. ஸாமாந்யமான சொல்லும் விசேஷத்திலே முடியும். ச்ருதியில் तयोर्दासः என்று தாஸத்வம் ஸ்பஷ்டமாக ஓதப்பட்டதால் ப்ரணவத்திலும் அது ஸ்பஷ்டமாவதே தகும். அங்குள்ள ஷஷ்டியானது தாஸத்வரூபதர்மம் இன்னாரைக் குறித்து என்று நிரூபக வஸ்துவைக் காட்டுவதாகும். ப்ரணவத்தில் அகார உகாரங்களுக்கு மேல் ஷஷ்ட்டியைக் கொண்டால் அது மகாரார்த்தத்தோடு ஸம்பந்தத்தைமட்டும் சொல்லும் ச்ருதியில் ஷஷ்டியும் दास பதமும் சேர்ந்து அகார உகாரங்களுக்கு மேலுள்ள விபக்தியின் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்பதே தகும், அந்த விபக்தி ஷஷ்டியானால் ஸம்பந்தஸாமாந்யமே பொருளாகும்; சேஷத்வத்தைக் கல்ப்பிக்கவேண்டும். 'आक्षेपतः प्राप्तात् आभिधानिकस्यैव ग्राह्यत्वात्' என்கிற ந்யாயத்தால் சேஷத்வமே ஸாக்ஷாத் வாச்யமென்று கொள்வது தகுமென்ற கருத்தினால் பக்ஷாந்தரத்தைக் கொள்கிறார்—तादर्थ्यமித்யாதியால். இருவருக்கும் தாஸன் என்றதாலே ப்ரணவத்தில் ஓ என்றவிடத்தில் ओश्वां என்ற சதுர்த்தி லுப்தமாயிருக்கிறதென்றதாம். अ उ இரண்டையும் தனிப்பதமாக்கித் தனித்தனியே சதுர்த்தி வைத்தால் இரண்டு சதுர்த்திகளுக்குக் கல்ப்பனை யென்ற கௌரவ தோஷமுமாம். இருவரும் சேர்ந்தே உத்தேச்யமாயிருப்பதால் द्वन्द्वसमासமே தகும். இதை யறிவித்துக்கொண்டு, லக்ஷ்மீ வாசகமென்ற பக்ஷத்தில் அவதாரணமென்கிற அர்த்தம் ஸித்திக்கும் ப்ரகாரத்தையும கூறுகிறார் இப்படி இதி. இருவரையும் இதி. இந்த கட ச்ருதியிலிருந்தும் த்வயத்தில் ச்ரீமந்நாராயண என்று விசேஷண விசேஷ்யமாக நிர்தேசிக்கிறவிடத்திலும், பிராட்டிக்கும் உத்தேச்யத்வமுண்டென்பது வ்யக்தம் இரு மந்த்ரங்களையும் கருதியே महेन्द्राग्निविष्णुप्रभृतिषु என்று இருவித உதாஹரணம், आर्थं = अर्थसिद्धम्. மூன்றுவது வ்பக்தியைக் குறித்தும் சேஷத்வமுண்டானால் ஒருவரைமட்டும் கூறி இரண்டாவதுக்கும் அது உபலக்ஷணமென்னலாம் அதனாலும், सर्वं वाक्यं सावधारणம் மென்கிற ந்யாயத்தாலும் அவதாரணம் சொல்லாமலே விளங்கும் अवधारणமாவது अन्ययोगव्यवच्छेदம். अनन्या-

இம் मध्यमाक्षरம் श्रौतप्रयोगத்தாலே अवधारणपரமானபோது இத் दम्पतिகளை யொழிந்தார்க்கு निरुपाधिकशेषம் என்று शङ्कियாமைக்காக अन्ययोगव्यवच्छेदம் இங்கே शाब्दம். இத்தாலே अन्यரைப் பற்ற शेषत्वம் स्वरूपप्राप्तமன்றென்னு மிடத்தைச் சொல்லுகையாலே यथावस्थितात्मज्ञानமுடையவனுக்குத் तदीयपर्यन्त மாக देवतान्तरस्पर्शம் निवृत्तமாயிற்று भगवदभिमतமான भागवतशेषत्वத்தாலே अन्यशेषत्वदोषம் வாராதென்னுமிடம் पुरुषार्थकाष्ठैயிலே சொன்னோம். இப்படி अन्ययोगव्यवच्छेदம் शाब्दமாகப் பெற்றால் अयोगव्यवच्छेदமும் कालसंकोचकमில்லா

---

ईनिरुपाधिकेति. अनन्यार्हत्वம் निरुपाधिकत्वம் இரண்டும் அர்த்தஸித்தமென்று கருத்து.

அவதாரணம் कण्ठोक्तமென்கிற பக்ஷத்தையும் அறிவிக்கிறார் இம்மத்யமேதி. 'तदन्तर्भावात्' என்கிற ந்யாயமாய் லக்ஷ்மீ விசிஷ்டத்வம் नारायणाय என்ற பதத்திற் போலே தானே ஸித்திக்குமாகையால் உகாரத்திற்கு அவதாரணமே பொருள் 'तदेवाग्निः......तदु चन्द्रमाः'', 'तदेवर्तं तदु सत्यमाहुः' என்றவாறு ச்ருதியில் உகாரததிற்கு அவதாரணம் என்கிற அர்த்தம் ப்ரஸித்தமுமாமென்று கருத்து. இத் தம்பதிகளையொழிந்தார்க்கு = லக்ஷ்மீ நாராயண भिन्नர்களுக்கு; பிறருக்கு நிருபாதிக சேஷனல்லன் என்றால் सोपाधिकशेषனாகலாமென்று தெரிகிறதே. அப்போது 'மற்றிங்கோர் தெய்வமுளதென் றிருப்பாரோடுற்றிலேன்' என்றது எப்படி ஸித்திக்குமென்ன அதை நிரூபிக்கிறார்-இத்தாலே இதி வாக்யத்தால். பிறரைப் பற்ற நிருபாதிக சேஷத்வமில்லை யென்றால் ஸோபாதிகத்வமென்கை யிலே, உபாதி தகாத போது சேஷத்வம் தகாதென்று தானே விளங்கும். உபாதியாவது ப்ரயோஜநாந்தரம். அதை யபேக்ஷிக்காதவனுக்கு தேவதா ந்தரமும் தத்ஸம்பந்தியும் சேஷமாகாது. ப்ரயோஜநாந்தரருசி அநுசித மாகையால் அதற்காக தேவதாந்தரசேஷத்வம் அநுசிதமென்றே விளங்கும்; 'இங்கு அந்ய யோகவ்யவச்சேத பக்ஷத்தில் பாகவதரும் லக்ஷ்மீ நாராயண भिन्नராகையாலே தச்சேஷத்வமும் கூடாதென்று ஸித்திக்குமே. 'உற்றதும் உன் அடியார்க்கு அடிமை' என்றது எங்ஙனே' என்ன, உத்தரம் भागवदिति. புருஷார்த்தகாஷ்டையில் = புருஷார்த்தகாஷ்டாதிகாரத்திலே. பாகவத சேஷத்வத்தை இவன் விட்டானாகில் பகவதிஷ்ட விநியோகார்ஹ னாகாமையாலே பகவச் சேஷத்வமே போம். ஈச்வரன் मम मद्भक्तभक्तेषु என்று பாகவதர்விஷயத்திலே இவனை விநியோகித்திருப்பதால் அதை சாஸ்த்ர வச்யன் இசையவேண்டும். ஆக பாகவதகார்யபூர்த்தி யென்கிற உபாதி இவன் அபேக்ஷிப்பதே -யிருப்பதால் அநுசித உபாதியாகாதாகையால் அந்த ஸோபாதிகசேஷத்வத்திற்கு நிவ்ருத்தியில்லை யென்றபடி. இப்படி அந்ய யோக வ்யவச்சேதம் போலே அயோகவ்யவச்சேதமும் ஏவகாரத்திற்கு அர்த்தமாகுமாகையால் அதுவும் சாப்தமாகட்டுமே. ஆக நிரபாதிகத்வமும் சாப்தம் என்ன, அருளிச்செய்கிறார் இப்படி ...பெற்றால் இதி. ஒரு ஏவகாரத் திற்கு இரண்டு பொருள் தகா. சேஷத்வ அயோகவ்யவச்சேதம் பொருளாக வேண்டுமானால் 'லக்ஷ்மீ நாராயணருக்கு சேஷமே' என்று சேஷபதத்தின்

மையாலே सिद्धम्. இச் शेषत्वायोगव्यवच्छेदத்தாலே ஈச்வரனுக்குப் पृथक्सिद्ध्य-नर्हविशेषणமாய்த் தோற்றின चेतनद्रव्यத்துக்கும் अचित्துக்குப் போலே शरीरत्वம் प्रकाशितம்.

तृतीयाक्षरம் இங்கு अवश्यानुसन्धेयனான ஜீவனை முன்னாகக் கொண்டு उक्त மான शेषत्वத்துக்கு आश्रयமாய் सर्वத்தையும் उपलक्षिக்கிறது. இது जीवात्म-वाचकமென்னுமிடம் —
'मकारं जीवभूतं तु शरीरे व्यापकं न्यसेत्' என்றும்', 'पञ्चानां तु पञ्चानां वर्णानां परमेश्वरः।

---

மேலே அவதாரணம் வேண்டும். இங்கு அகாரத்தின் மேல் அவதாரணம் இருப்பதால் அந்யயோக வ்யவச்சேதமே பொருள். மேலும் நிருபாதிக த்வம் அர்த்தஸித்தம்; காலவிசேஷத்தைக் குறிக்கவில்லையே என்று கருத்து. அந்யயோக வ்யவச்சேதத்தால் தேவதாந்தர வ்யாவ்ருத்தி போல் அயோக வ்யவச்சேதத்தால் ஸித்திப்பதென்ன என்பதற்கு உத்தரம் இச்சேஷ த்வேதி. நிருபாதிகசேஷத்வமாவது—நியமேந சேஷத்வம், இது அப்ருதக் ஸித்தவஸ்துவுக்கே வரும். இப்படி சேதநன் அப்ருதக் ஸித்தவஸ்து என்று தெரிவதால் சரீரத்வம் ஸித்திக்கிறது. அசித்துக்குப் போலே இதி. சில அசேத நம் சரீரமாவது லோகப்ரஸித்தம். மற்ற அசேதநம் சேதநம் இரண்டும் சரீர மென்பது சாஸ்த்ரப்ரஸித்தம். அது இங்கே அறிவிக்கப்படுகிறது. அசேதநத் திற்குப்போலே தனக்குள்ள எல்லா ப்ரவ்ருத்தியும் தனக்காத்மாவான பரமா த்மாவுக்காகவே ஆகவேண்டுமென்று ஜீவன் தெளியவேண்டுமென்றதாயிற்று.

இனி த்ருதீயாக்ஷரமான மகாரத்திற்கு வ்யாக்யாநம். ஜீவனும் அசேதநமும் எல்லாம் ஈச்வரசேஷமாயிருக்க ஜீவனைமட்டும் சொன்னது முமுக்ஷுவுக்குத் தான் பரமாத்ம சேஷமென்று அறியவேண்டிய தவச்ய மாகையாலே அதனால் இதரத்திற்கு சேஷத்வமில்லை யென்று சொன்னதா காது. அது ஜீவனை முன்னாகக்கொண்டு= வாச்யார்த்தமாகக் கொண்டு அசேதநத்தையும் குறிப்பதே யாகும். அநேகமாக அசேதநம் சேதநாநு बन्धियாகையாலே அசேதநத்தோடு சேதநனுக்கு சேஷத்வம் சொன்ன தாகும். மகாரத்தை मीयते= அளவிடப்படுகிறது அல்லது அறியப்படுகிறது என்ற வ்யுத்பத்தியாலே சேதநாசேதந ப்ரமேய பரமாக்கி ஸர்வ க்ரஹணம் செய்யாமல் ஜீவனை மட்டும க்ரஹிப்பதற்கு ப்ரமாணம் கூறுகிறார் இது இத்யாதியால். என்னுமிடம் என்பதற்கு என்பது என்று பொருள். இதற்கு, மேலே ஸித்தமென்பதோடந்வயம். மகாரமிதி. ஜபகாலத்தில் அங்கந்யாஸம் செய்யும் போது ஜீவபூதம் மகாரம்= ஜீவனை வாச்யமாகக் கொண்ட மகாரத்தைத் தன் முழுசரீரத்தில் வ்யாபகந்யாஸம் செய்ய வேண்டு மென்றது, ககாரம் முதலான ஹல்லக்ஷரங்களில் இருபத்தைந்தாவது அக்ஷரமான மகாரத்திற்கு இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவன் பொரு ளென்பதை தத்துவ ஸாகரஸம்ஹிதாச்லோகத்தால் அறிவிக்கிறார். पञ्चेति. கவர்க்கம் சவர்க்கம் டவர்க்கம் தவர்க்கம் பவர்க்கம்என்கிற ஐந்து வர்கங்களும்

संस्थितः कादिमान्तानां तत्त्वानामात्मभावेन सर्वदा ॥' என்றும், 'भूतानि च कवर्गेण चवर्गेणेन्द्रियाणि च । टवर्गेण तवर्गेण ज्ञानगन्धादयस्तथा ॥ मनः पकारेणैवोक्तं फकारेण त्वहङ्कृतिः । बकारेण भकारेण महान् प्रकृतिरुच्यते ॥ आत्मा तु स मकारोऽयं (मकारेण?) पञ्चविंशः प्रकीर्तितः ॥ என்றும் तत्त्वसागरसंहितादिகளிலே पञ्चविंशतितत्त्वங்களுக்கும் ककारம் முதலான இருபத்தைந்து அக்ஷரங்களும் वाचकங்களாக வகுத்துச் சொல்லுகையாலே सिद्धம். இத்தால் जडत्वाचेतनत्वादिदोषाश्रयங்களான இருபத்திநாலு தத்த்வங்களைக்காட்டிலும், ஸர்வகாரணமாகவும் ஸர்வரக்ஷகனாகவும் ஸர்வசேஷியாகவும் प्रथमाक्षरத்தில் தோற்றின षड्विंशகனிற்காட்டிலும் ஜீவாத்மாவுக்கு

---

ஐந்தைந்து வர்ணங்களையுடையவை, अपि சப்தம் மாத்ருகாவர்ணத்தைச் சொல்லும். क. ख ग घ ङ. என்றாற்போலே ஐந்தைந்து வர்ணங்களையுடைய ஐந்து வர்கங்களடங்கிய कादिमान्तानां–ககாரம் முதல் மகாரம் வரையிலான அக்ஷரங்களுக்கு அர்த்தங்களான ப்ருதிவீ முதலான இருபத்தைந்து தத்துவங்களுக்கு आत्मत्वेन ஆத்மாவாக ஸர்வேச்வரன் सर्वदा संस्थितः—இருக்கிறான். இதனின்று ஒவ்வோரக்ஷரமும் ஒவ்வொரு தத்த்வத்திற்கு ஆத்மாவாக ஸர்வேச்வரனையும் சொல்லும். ககாரம் ப்ருதிவீக்கு அந்தர்யாமியான பரமாத்மாவைச் சொல்லும், खகாரம் ஜலத்திற்கு. இந்த க்ரமத்திலே மகாரம் ஜீவனுக்கு அர்தர்யாமியான பரமாத்மாவை என்றும் தெரிகிறது. இந்த ச்லோகத்தில் मान्तानां तत्त्व என்றவிடத்தில் ஷஷ்டிக்கு, அக்ஷரங்களுக்கும் தத்த்வங்களுக்குமுள்ள வாச்ய வாசகபாவ ஸம்பந்தம் பொருளென்பது அவ்யக்தமாகையாலே பாத்மோத்தரவசநத்தை (4.25) உதாஹரிக்கிறார். भूतानि இதி. பஞ்சபூதங்கள் कவர்கத்தாலும் கர்மேந்த்ரியங்கள் चவர்கத்தாலும் ஜ்ஞாநேந்த்ரியங்கள் टவர்கத்தாலும் गन्धतन्मात्रादिதந்மாத்ரங்கள் तவர்கத்தாலும் மனது पகாரத்தாலும் சொல்லப்படும்; फகாரத்தாலே அஹங்காரம்; बकारத்தாலே மஹத்து; भकारத்தால் ப்ரகிருதி; तु= விலக்ஷணமான—கீழ்க்கூறிய தத்துவங்கள் போலன்றி சேதநமாய் நிர்விகாரமாயுள்ள ஆத்மா ஜீவாத்மாவானவன் மகார:=மகாரார்த்தமாய் அல்லது मकारेण—மகாரத்தினால் பஞ்சவிம்ச:—இருபத்தைந்தாவதாகச் சொல்லப்படுகிறான். ஆத்மாந்தர்யாமியான பரமாத்மா சொல்லப்படுகிறானென்று பூர்வரீதியில் கொள்ளலாம். வகுத்து பிரித்து; து என்கிறதின் கருத்தை வெளியிடுகிறார் இத்தால் கீழ்க்கூறிய இருபத்திநாலு தத்துவங்களைவிட வைலக்ஷண்யம்போல் அகாரப்பொருளான ஸர்வேச்வரனைவிட வைலக்ஷண்யமும் இதன் பொருளென்றபடி. அகாரம் முதலக்ஷரமானதால் ஸர்வகாரணத்வமும், யோகவ்யுத்பத்தியாலே ஸர்வரக்ஷகத்வமும். சதுர்த்தியினாலே ஸர்வ சேஷித்வமும் அவனுக்குத் தெரிகிறது. ஜீவாத்மா அவ்வாறில்லை. அகாரம் காரணத்தைக் கூறுவதால் காரணத்வத்தில் உபாதாநத்வம் சேர்ந்திருப்பதால் உபாதாநத்வத்தில் ஆத்மத்வம் அடங்கி யிருப்பதால் ஸர்வசேஷித்வம் ஸித்திக்கிறதென்னலுமாம். षड्विंशकेति. ககாராதி அக்ஷரக்ரமத்தில், அகாரார்த்தமான பரமாத்மா

வேறுபாடு सिद्धித்தது. இத் திருமந்த்ரத்தில் मकारங்களும் नारशब्दமும் निष्कर्ष-विवक्षையாலே विशेषणमात्रपरங்கள்.

இவ்வக்ஷரம் व्याकरणप्रक्रियையைப் பார்த்தால் 'मन ज्ञाने' इत्यादिधातुக்களிலே निष्पन्नமான पदமாகையாலே "ज्ञोऽत एव' என்கிற अधिकरणத்திற்படியே ज्ञानस्वरूपனுமாய் ज्ञानगुणकனுமாய் அணுவான ஜீவாத்மாவைச் சொல்

---

இருபத்தாறுவதாகமாட்டான், ஆகையால் ஸாங்க்யர் சொன்ன இருபத்தைந்துத் தத்துவங்களுக்கு மேற்பட்டவனென்பதாலே இருபத்தாறுகிறான். तं षड्विंशकमित्याहुः என்றது உபநிஷத்தும். இந்த ஸம்ஹிதாவசநத்தில் அந்தந்த தத்துவ விசிஷ்ட பரமாத்மாவே பொருளாய் மகாரத்திற்கு ஜீவாத்ம விசிஷ்ட பரமாத்மா பொருளாகலாமானாலும் அஷ்டாக்ஷரத்திலே நாரசப்தத்திற் போலே மகாரத்திலும் விசேஷண (ஜீவ)மாத்ர விவக்ஷையென்கிறார் இத்திரு இதி. நிஷ்கர்ஷ விவக்ஷை=விசேஷண மாத்ரத்தைச் சொல்வதில் நோக்கு. அதாவது ஸித்தாந்தத்தில் சப்தங்கள் நிஷகர்ஷகங்கள் நியதநிஷ்கர்ஷகங்கள் அநியதநிஷ்கர்ஷகங்களென இருவிதமாகும் நிஷ்கர்ஷகமாவது—விசேஷணத்தைச் சொல்வதாய் அதற்கு நேர்தர்மியான வஸ்துவை முக்யார்த்தமாகக் சொல்லாதது. உதாஹரணம் गोत्वादि-जाति-रूप-रस-शरीरादिशब्दங்கள். गोत्वादि जातिशब्दங்கள் வ்யக்தியை முக்யார்த்தமாகச் சொல்லா, ரூபாதிசப்தங்கள் குணத்தையே சொல்லும்; गुणியை முக்யார்த்தமாகச் சொல்லா. शरीर.तनु गात्रादि शब्दங்கள் சரீரத்தை மட்டும் சொல்லும்; ஆதாரமான ஆத்மாவைச் சொல்லா. अनियतनिष्कर्षकமாவது நியதமாகாதபடி நிஷ்கர்ஷகம் அல்லது நியதமாகாத (நிலையாகாத) நிஷ்கர்ஷத்தையுடையது. புருஷனுடைய கருத்திற்கு (விவக்ஷைக்கு) இணங்கி சிலவிடத்தில் நிஷ்கர்ஷகமாகும்=விசேஷணத்தை மட்டும் சொல்லும்; விசேஷ்யத்திலும் விவக்ஷையிருந்தால் தர்மம் தர்மி இரண்டையும் சொல்லும். உதாஹரணம்-தேவ-மநுஷ்ய.கோ-ப்ராஹ்மணாதி சப்தங்கள். தேவத்வாதி ஆக்ருதி விசிஷ்ட பிண்டத்தை மட்டும் சொல்லுமிடத்தில் निष्कर्षकங்கள். पिण्डविशिष्टजीवात्मा வையோ पिण्डविशिष्टजीवविशिष्टपरमात्माவையோ சொல்லும்போது अनिष्कर्षकங்கள்.

இப்படி மகாரத்துக்கு ஜீவன் பொருளென்பதை ப்ரமாணமூலமாக நிரூபித்தார். இனி யோகவ்யுத்பத்தியாலே ஜீவன் பொருளாவதை நிரூபிக்கிறார். இவ்வக்ஷரமிதி. मन ज्ञाने(मन्यते) என்கிற தாதுவுக்கு ஜ்ஞாநம் பொருள். அதன்மேல் उप्रत्ययம்; அது भावार्थकமாகில் ஜ்ஞாநம் பொருள். கர்த்தா அர்த்தமாகில் ज्ञाता என்று பொருள். ஆதிபதத்தால் मनु अवबोधने (मनुते) என்பதைக் கொள்வது. अणु என்ற பொருளுக்கு माङ् माने என்ற தாதுவைக் கொள்வது. मसू धातुவைக் கொள்வதென்பர். அது பரிமாணார்த்தகமல்ல. 'मसू परिणामे—परिणामो विकारः' என்றன்றோ வையாகரணர் சொல்வது. ज्ञोऽत एव.=अत एव—ச்ருதி ப்ரமாணத்தினாலேயே ஆத்மாவானது ज्ञः ஜ்ஞாநகுணகமாகும். ஜ்ஞாந ஸ்வரூபமாகுமென்பதும் இவ்வதிகரணத்தில் यावदात्मभावित्वाच्च என்ற चकार

லுகிறது. ज्ञानस्वरूपனைப் பொதுவிலே சொன்னாலும் இவன்ஸ்வரூபம் அநுகூலமாகப் प्रमाणसिद्धமாகையாலே आनन्दरूपமான விசேஷமும் सिद्धिக்கும். ज्ञानगुणकனென்னுமிடம் சொன்னால் प्रमाणानुसारத்தாலே मुक्तदशैயில் निरुपाधिकप्रसरणமாய் संकोचरहितமான ज्ञानம் गुणமானமை தோற்றும்.

இப்படிப் परिशुद्धமான स्वाभाविकरूपத்தைப் பார்த்தால் अचेतनங்களிலுள்ள जडत्वादिகளும் கழிந்து संसारदशैயிலுள்ள க்லேசாதிகளும் கழிந்துநிற்கையாலே स्वरूप-धर्मங்களிரண்டிலுமுள்ள निर्मलत्वம் अनुसंहितமாயிற்று. இந்தப் परशेषतैकरस-परिशुद्धस्वरूपமே मुमुक्षुदशैயிலே अनुसन्धेयமென்னுமிடம் 'व्यतिरेकस्तद्भावभावित्वान्न तूपलब्धिवत्' என்கிற ஸூத்ரத்திலே सिद्धம். இவனுக்கு முமுக்ஷு-

---

த்தாலும் அதற்கு மூலமான 4–4.ல் உள்ள ब्राह्माधिकरणத்தாலும் ஸித்தித்திருப்பதால் அந்த धातुவிலிருந்து ஜ்ஞாநஸ்வரூபம் ஜ்ஞாநகுணகமென இரண்டையும் கொள்வது இப்படி ப்ராமண ஸித்தமாகையாலே 24 அக்ஷரங்களால் சொல்லப்பட்ட 24 தத்துவங்களைக்காட்டிலும் 25ஆவது தத்துவத்திற்குக் கருதப்பெற்ற வைலக்ஷண்யம் இது தானென்று தெரிகிறது. ஜீவனுக்கு ஆநந்த ஸ்வரூபத்வமும் ப்ராமாணிகம். அவனவனுக்கு அவனவனாத்ம ஸ்வரூபம் அநுகூலமாகவே எப்போதும் ப்ரகாசிக்கும். पक्त्वानुकूलत्व-प्रत्यक्त्वविशिष्टस्वभानமென்பரே. ஆநந்த குணகத்வமும் ப்ரமாணஸித்தம். मन ज्ञाने इत्यादि धातुவினின்று அது ஸித்திக்க வழியைக் கூறுகிறார் ஜ்ஞாநஸ்வருபனை இதி. ப்ரமாணாநுஸாரத்தாலே—यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षालनान्मणेः என்றும், सर्वभूतेषु भूपाल तारतम्येन वर्तते என்றும் மோக்ஷத்தில் स वै ह पश्यः पश्यति என்றும் வசநமிருப்பதால் ஜ்ஞாநம் ஸ்வாபாவிகமாய் அதற்கு ஸங்கோசம் ஔபாதிகமென்று தெரிகிறது. ஜ்ஞாநகுணகமென்ற மட்டிலே நிற்காமல் ஸங்கோசமற்றிருக்க வேண்டும் ஞானம் குணமென்றறிந்தால் 'ज्ञानस्वरूपमत्यन्तनिर्मलम्' என்றபடி ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் निर्मलत्वம் ஸித்திக்கிறதென்கிறார். இப்படி பரிசுத்தேதி. ஜ்ஞாந ஸ்வரூபத்வம் அறியப்பெற்றதால் ஜடத்வமில்லை யென்று தெரிவதால் நிர்மலத்வம்; ஸங்கோசமற்ற ஜ்ஞாநமென்றறிந்தால், सर्ववस्तुவுக்கும் भगवच्छेषत्वानुकूलत्वங்களை யறியாமையாலான க்லேசாதிதோஷமெல்லாம் ஔபாதிகமென்றறிவதால் ஸ்வபாவத்திலும் நிர்மலனென்றறியப்படும். சேதநனுக்கு க்லேசாதி தோஷம் போலே தர்மபூத ஜ்ஞாநத்திற்கு க்லேசத்வாத்யவஸ்த்தை ஹேயமாகும். ஸ்வபாவஸித்தமான விகாஸம் ஏற்பட்ட போது அவ்வறிவும் நிர்மலமாகும்.

இனி உண்மையில் ஜீவ தத்துவம் இப்படி யிருந்தாலும் இதையறிய வேண்டுமோ? மரணத்திற்குப் பிறகு தேஹாத்ம ஜ்ஞாநமுள்ளவனுக்கு, ஆத்மா இல்லை யென்கிற புத்தி யிருப்பதால் மோக்ஷப்ரவ்ருத்தி வாராதாகையால் தேஹாதிரிக்த ஆத்ம ஜ்ஞாநமே வேண்டுவது. அத்துடன் பரமாத்மசேஷத்வஜ்ஞாநம் வேண்டுமென்னில், அவ்வளவே போதும். நிர்மலத்வாதி ஜ்ஞாநமெதற்கென்ன அருளிச்செய்கிறார் இந்த...परिशुद्धेति. व्यतिरेक इति 3-3-21.

தசையில் फलदशानुसन्धानம் फलापेक्षैக்கு உறுப்பாம். पुरुषार्थभेदங்களுக்கு ஈடாக அனுஸந்தேயாகாரங்கள் வேறுபட்டிருக்குமென்னுமிடம் श्रीगीतैயில் अष्टमाध्यायத்தி

---

व्यतिरेकाधिकरणத்தில் இந் ஸித்தாந்த ஸூத்ரம். ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ भोक्तृத்வங்களும் லோகாந்தர ஸஞ்சரார்ஹத்வமும் அறிந்தால் போதுமே என்ற பூர்வபக்ஷத்திற்குக் खण्डनம். ஸூத்ரார்த்தமாவது न तु—ஜ்ஞாத்ருத்வாத்யநு ஸந்தானமென்பதில்லை, அது ஸம்ஸார தசையிலுள்ள ஆகாரம், व्यतिरेक:— ஸாம்ஸாரிக ஆகாரத்தைவிட வேறான தன்மையே अपहतपाप्मत्वाद्याकारமே உபா ஸிக்கப்படவேண்டும். तद्भावभावित्वात्—உபாஸிக்கும் தர்மம் फलानुभवகால த்தில் வரவேண்டுவதாயிருப்பதாதலின்; ஸாம்ஸாரிக ஆகாரத்தை உபாஸித் தால் அதுவே வரும்; மோக்ஷஸித்தியில்லை. ஆக उपलब्धिवत्—ப்ரஹ்ம விஷயக மான உபாஸநம் போலே ஜீவாத்மோபாஸநமும் ஸ்வாபாவிக ஜீவதத்த்வ விஷயமாகுமென்றதாம். ஸாரஸ்வாதிநியில் न तु परस्वरूपमात्रमुपास्यम् என்று ஸூத்ரார்த்தத்தில் சேர்த்திருப்பது, ஸ்ரீபாஷ்யத்தில் न च परस्वरूपमात्रविषयमेवेदमिति वक्तुं शक्यते என்கிற ஸ்ரீபாஷ்ய வாக்யத்தை யநுஸரித்து வந்ததாம். இதுவும் ஸூத்ரார்த்தத்தில் சேரலாம். மற்றது भाष्यार्थदर्पणத்தில் காண்க.

अपहतपाप्मत्वादिகள் फलदशैயிலுள்ளவை பக்திவித்யையில் अहं ब्रह्मास्मि என்ற உபாஸநகாலத்தில் உபாஸிக்கவேண்டியவையானாலும் ஜ்ஞாநயோக காலத்தில் தேஹ வைலக்ஷண்ய மறிவதற்காக ஜ்ஞாத்ருத்வ-கர்த்ருத்வலோ காந்தரஸஞ்சாரித்வாதி தர்மாநுஸந்தாநம் போதாதோ? ப்ரத்யக்ஷாநுபவத் திலுள்ள தர்மத்தை விட்டு வேறு அநுஸந்திப்பதெதற்காக? தேஹேந்த்ரி யாதி संवादத்தில் देह.प्राण इन्द्रिय विलक्षणனாய் ஆத்மாவை அறிவதற்காக 'द्रष्टा घ्राता बोद्धा कर्ता विज्ञानात्मा पुरुष:' என்று தானே உபநிஷத்து நிர்தேசிக்கிறது. இது தானே ஸ்வர்க்காதி பலனை யபேக்ஷிக்கிறவனும் அறியவேண்டிய ஆகார மென்ன-உத்தரம் இவனுக்கு நிதி. ஜ்ஞாநயோகமானது பக்தியோகத்திற்கு அங்கமாக ஜீவாத்மாவைக் காண்பதற்காக அநுஷ்டிக்கப்படுகிற படியால் பக்தியோக பலத்தை விரும்பி முமுக்ஷு செய்யும் ஜ்ஞாநயோக காலத்திலே ப்ரஜாபதி வாக்யத்தின்படி அபஹதபாப்மத்வாதி தர்மங்கள் ஜ்ஞாத்ரு த்வாதிகளைப் போல் அறியப்படுகின்றவையே. फलापेक्षैயுள்ளவனுக்கு फलदशै யில் வரும் ஸ்வரூபத்திலேயே ருசி யிருக்குமாகையால் அவ்வநுஸந்தாநம் உசிதமென்றே ப்ரஜாபதி வாக்யத்தின் கருத்து. ஸ்வர்க்காதி பலத்தில் அபேக்ஷை யுள்ளவனுக்கு இவ்வாகாரம் வரப்போகிறதில்லையாகையால் அங்குள்ள கர்த்ருத்வாத்யாகாரத்திலே அவன் நிற்கிறான். அவனவன் அபே க்ஷிக்கும் பலத்திற்கிணங்க, உபாஸிக்கும் தர்மங்கள் வேறுபடுமென்று 'कविं पुराणं अनुशासितारं' இத்யாதி கீதாவாக்யத்திலும் அதினுடைய பாஷ்யாதி களிலும் காண்க. ஆக நிர்மலத்வாநுஸந்தாநம் மோக்ஷத்தில் ஹேயரஹித மான நிலையென்ற நிச்சயத்திற்காகவேண்டுவதாம் இல்லையேல் மோக்ஷமும் ஸம்ஸார துல்யமாக சங்கிக்கப்படுமென்றபடி.

லும் भाष्यादिகளிலும் सुव्यक्तம். जीवभेदம் प्रामाणिकமாகையால் இத் तृतीयाक्षरம் 'नात्मा श्रुतेः' इत्यादिகளிற்போலே जात्येकत्वपरம். இப்படி जीवतत्त्वத்தை எல்லாம் இங்கு 'दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः' என்கிறபடியே सामान्येन भगवच्छेष மாகச் சொன்னாலும் அதிலே தானும் अन्तर्गतனாகையாலே 'अतोऽहमपि ते दासः' என்னும் अनुसन्धानமும் सिद्धिக்கிறது.

2 இங்கு शेषत्वज्ञानமும் स्वातन्त्र्याभिमाननिवृत्त्यादिகளும் उपायविशेषपरिग्रहமும்

---

மகாரத்தின் மேல் ஏகவசநமிருப்பதால் ஜீவாத்மா ஒன்றென்று தெரிகிறதே; இது அத்வைதியின் ஏகஜீவாத்மவாதமாகுமோ என்ன அருளிச்செய்கிறார் ஜீவேதி. ஜீவபேதம் = ஜீவநாநாத்வம். வெகு ஜீவர்களுடைய ஸத்தை. 'नित्यो नित्यानां चेतनश्चेतनानाम्', 'तोयेन जीवान् व्यससर्ज भूम्याम्' இத்யாதிகள் ப்ரமாணம். नात्मा श्रुतेः என்ற ஸூத்ரத்தில் ஜீவாத்மாவை ஆத்மா என்று ஏகவசநத்தால் சொல்லி யிருப்பதால் ஜீவன் ஒருவனே என்று தெரிகிறதே யென்று கேட்டு ச்ரீபாஷ்யத்தில் பரிஹாரம் செய்திருப்பதைக் கொள்வதென் பதற்காக அதை. இங்கு எடுத்தது, ஆக ஜீவர்கள் பரமாத்மசேஷ பூதரென வறியப்பட்டாலும் தான் சேஷபூத னென்பது ஸ்பஷ்டமாக வில்லையே யென்ன அருளிச்செய்கிறார் இங்கு இதி. दासेत्यादिச்லோகம் ருத்ரன் செய்த ந்ருஸிம்ஹமந்த்ரராஜபத ஸ்தோத்ரத்திலுள்ளது. உத்தரார்த்தம். अतोऽह मपि ते दासः इति मत्वा नमाम्यहम्. எல்லா ஜீவாத்மாக்களும் பரமாத்மாவான உனக்கு இயற்கையில் அடிமையானவர்கள். எல்லோரும் அடிமையாகையால் அவரிற்சேர்ந்த நானும் அடியனென ஸித்திக்குமென்றபடி.

2. மற்ற ஜீவர்கள் பகவச்சேஷ பூதர்களென்பது அசேதநங்கள் பகவச்சேஷ பூதங்களென்பதற்கு ஸமாநமாகையால் அதற்கு ப்ராதாந்யமில்லை அதனால் அசேதநங்களைப் போலே அவர்களையும் मकारार्थமாக்காமல் விட்டு முக்யமான தன்னை பகவச்சேஷமாக அநுஸந்திப்பதே உசிதம். இதை விட்டு जीवர்களெல்லாம் பகவச்சேஷர்களென்று சொன்னால் नमः என்பதில் जीवர்களெல்லாம் எனக்கு சேஷர்களல்லரென்ற தாகும். எல்லா जीवர்களையும் தனக்கு சேஷமாக யாரும் எப்போதும் நினைப்பதில்லை. அங்கே मः என்கிறவிடத்திலும் ஜாத்யேகவசந மாக்கிப் பொருள் கூறுவது க்லிஷ்டம். न मम என்ற பொருளே ப்ரஸித்தம். உபாயவிசேஷமான ப்ரபத்தியை எல்லா जीवர்களுக்கும் சொல்லவுமாகாது. नारायणाय என்ற விடத்தில் स्यां என்ற ஏகவசநாத்யாஹாரமும் சேராது. ஆகையால் முதலிலிருந்து தன் விஷயமாகவேயிருக்கவேண்டும், ஆகத் தனக்கு ஜ்ஞாத்ருத்வ ஜ்ஞாநஸ்வரூபத்வாதிகள் தெரிவதற்காக மகாரத்தை मनधातु மூலமாகக் கொண்டாலும் அதை விசேஷணமாக்கி अहं என்று விசேஷ்யபதம் சேர்க்கவேண்டுமென்கிற பக்ஷத்தைத் தொடங்குகிறார்' இங்கு இதி. ஸ்வாதந்த்ர்யேதி. नमः என்பதற்கு न मम स्वातन्त्र्यम् என்கிற அர்த்தத்தை யநுஸரித்து இது. न मम शेषित्वम् न मम अहम्, न मम किञ्चित् என்றவற்றை ஆதிபதத்தால் கொள்வது. உபாய

**फलभूतशेषवृत्तिप्रार्थनै**யும் தனக்குப் பிறக்கிறதாகையாலே தன்னைப் **प्रधान**மாகக் காட்ட வேண்டுகையால் **तृतीयाक्षर**த்துக்கு **विशेष्यपद**மாக **अहंशब्द**த்தை **अध्याहरि**த்து **अन्वय**மாகிறதென்றும் சில ஆசார்யர்கள் சொல்லுவர்கள். அப்போதும் ப்ரணவவிவரணமான '**मम नाथ यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव**' **इत्यादि**களிற் படியே **गुण**ங்கள் **प्रधानानुवर्ति**களென்கிற **न्याय**த்தாலே தனக்கு **शेष**மான **गुणादि**களும் **उपलक्षित**ங்கள்.

3 வேறே சில ஆசார்யர்கள் **अस्मच्छब्द**த்தில் **व्यञ्जनमात्र**மான **मकार**த்தை எடுத்து **छान्दसप्रक्रिय**யாலே **पूर्वोत्तरभाग**ங்கள் லோபித்துநிற்கிறதாய்த் **तृतीयाक्षर**ந்தானே **अहमर्थ**த்தைக் காட்டுகிறதென்றும் யோஜிப்பர்கள். பரமாத்மாவுக்கு **आत्महवि**ஸ்ஸை ஸமர்ப்பிக்க **विधि**க்கிற **न्यासविद्य**யிலே ப்ரணவத்தை மந்த்ரமாக ஓதுகையாலே இது **अनुष्ठेयार्थप्रकाशक**மாகைக்காக இதிலே **परावरात्मविषय**மான **वाचकांश**ம் அபேக்ஷிதமானால் **प्रमाणानुसार**த்தாலே **प्रथमाक्षर**ம் **उद्देश्यकारक**த்தைச்

---

விசேஷம் **नमश्शब्दस्थूलयोजनै**யில் ஸ்பஷ்டம். பரயோஜனையிலுமாம். நாராயணசப்தத்தில் தத்புருஷஸமாஸத்தில் ஸித்தோபாயமே உபாயமென்றதுமாம். **चतुर्थी**யின் பொருள் **फलेति**. **विशेष्यपदमिति** **मकारार्थज्ञातृत्वादिविशिष्टोऽहं अकारार्थायैव** என்றதாயிற்று. **मकार**ம் ஜீவ ஸாமாந்யவாசி என்கிற பக்ஷத்தில் அசேதநங்களும் உபலக்ஷ்யமென்று கீழே சொல்லியது போல், மகாரார்த்தமான நான் என்று தன்னைமட்டும் சொல்லுகிற பக்ஷத்திலும் தனக்கு அங்கமான அசேதநாதிகளும் உபலக்ஷ்ய மென்கிறார் **அப்போதும் இதி** **ममेति** ஆளவந்தார் ஸ்தோத்ரம் 53 எல்லோருக்கும் நாதா! எனக்கு சேஷபூதமாவது யாதோ, நான் எதுவாயிருக்கிறேனோ, இவையெல்லாம் ச்ரிய:பதியான உனக்கே சேஷபூதம். **तवैव** என்கிற ஏவகாரத்தாலே—உனக்கு நிருபாதிகமாக சேஷமானவையே சில எனக்கு ஔபாதிக சேஷமாக உன்னாலாக்கப்பட்டன என்றறிவிக்கப்படும். **குணங்கள் இதி.** குணமென்பதற்கு சேஷமென்று பொருள். ராஜா பூஜிதனென்றால் பரிஜனங்களோடு ராஜாவே ஸ்வரஸமாகத் தோன்றுவதால் இது லோகஸித்தந்யாயம். அதனால் '**प्रधानं नीयमानं हि तदङ्गान्यपकर्षति**' என்கிற ந்யாயத்தாலே ஜீவாத்மாவைப் பரமாத்மாவுக்கு சேஷமென்றால் ஜீவாத்மா தன் குணங்களோடு சேர்ந்தே சேஷமாகும். இது **अक्षरध्यधिकरण**த்தில் விசதம். '**अक्षरधियां त्ववरोधः** இத்யாதி ஸூத்ரம்.

3. **मकार**மே அஹம்சப்தார்த்த பரமாகையால் அஹம் **सप्ताध्याहार**ம் வேண்டாவென்கிற பக்ஷத்தை யறிவிக்கிறார் **வேறே இதி** வ்யஞ்ஜநமாத்ரமான—**म्** என்கிற ஹல்மாத்ரமான; **छान्दसेति** வ்யாகரணத்தில் **अस्मच्छब्द**த்தில் மகாரம் மட்டும் நிற்பதற்கு வழி தனியே சொல்லாமற்போனாலும் **छन्दसि बहुलम्** என்று பொதுவாகச்சொன்ன ரீதியாலே என்றதாம். **अस्मच्छब्द**த்தில் மகாரம் மட்டும் நிற்பது ப்ரதமாவிபக்தியில் அநுபவத்திலிராமற் போனாலும் மேல் விபக்திகளில் **मां मया मे मत्** இவற்றைக் காணும்போது ஸ்பஷ்டம் இப் பக்ஷத்திற்கு '**ओमित्यात्मानं युञ्जीत**' என்கிற விதிவாக்யமும் **उपष्टम्भक** மென்று

சொல்லுகையாலும், மத்யமாக்ஷரம் அன்யார்த்தமாகையாலும் பாரிசேஷ்யத்தாலே த்ருதீயாக்ஷரம் ஸமர்ப்பணீயமான ப்ரத்யாத்மஹவிஸ்ஸைக் காட்டவேண்டியதால் இவ்வக்ஷரத்துக்கு அஹம் என்று பொருளாகை மிகவும் உசிதம். ஆகையாலேயிறே பட்டர் இங்குற்ற ப்ரணவத்துக்கு 'அகாரார்த்தாயைவ ஸ்வரூபம்' என்று வ்யாக்யானம் பண்ணிற்று.

இப்படியே நமஸ்ஸில் மகாரம் மூன்றத்தொரு ப்ரகாரத்தாலே ப்ரத்யாத்மாவைச் சொல்லுகிறது. இது ஷஷ்டீவிபக்த்யந்தமாகையாலும் நகாரம் நிஷேதத்தைச் சொல்லுகையாலும் ந மம என்றதாயிற்று. நிஷேதத்தில் ஆதராதிசயம் தோற்றுகைக்காக நஞ் முன்னே கிடக்கிறது. இது 'த்ருஷ்டா ஸீதா' என்னுமாப் போலேயிருக்கிறது. இம் மகாரத்தில் ஷஷ்டியானது ஸம்பந்தஸாமாந்யமுகத்தாலே உசிதஸம்பந்தவிசேஷத்தை விவக்ஷிக்கிறது. இவ் வபிப்ராயத்தாலே யிறே பட்டரும் 'அத மஹ்ய

---

தெரிவிக்கிருர் பரமாத்மாவுக்கு இத்யாதியால். ப்ரமாணேதி. அ இதி ப்ரஹ்ம. 'அகாரோ விஷ்ணுவாசக:' இத்யாதி ப்ரமாணுநுஸாரத்தாலே என்றபடி. அன்யார்த்தம்=பரன் ஜீவன் இவ்விரண்டை விட வேருன அர்த்தத்தையுடையது அவதாரணார்த்தமாகையாலுமென்றபடி பாரிசேஷ்யத்தாலே=பரிசேஷ ஏவ பாரிசேஷ்யம் மிகுதியாயிருக்கை. தன்னைசசொல்ல வேண்டியிருப்பதால் அதற்கு வேறு பதம் இராமையால் ம என்பதற்கும் வேறு அர்த்தம் ஏற்படாமையாலென்றபடி. இப் பக்ஷத்திற்கு ஸம்ப்ரதாய ஸூக்தியும் ஸஹாயமென்கிருர் ஆகையாலிதி. பண்ணிற்று=பணணியிருப்பது இப்படி ப்ரணவத்தின் அர்த்தம் முடிந்தது.

மத்யம பதார்த்த நிருபணம் மேலே. நம:—நமஸ்காரமென்ற அர்த்தத்தையும் மேலே கூறுவர்...மூன்றத்து=மூன்றில். இருபத்தைந்தாவது அக்ஷரமாகையாலே இருபத்தைந்தாவது தத்துவத்தை ரூடியினுல் கூறுகிறதென்றும். வ்யாகரணவ்யுத்பத்தியாலே ஜ்ஞாநத்வாதிகளைக்கூறுகின்றதென்றும் அஸஹ்சப்தத்தில் மிகுந்த அக்ஷரமாகையால் நான் என்று பொருளதென்றும் சொன்ன மூன்று ப்ரகாரங்களில் என்றபடி. இங்கே மூக்யமாக மூன்றுவது ப்ரகாரத்தையே கொண்டு உரைப்பர். ம: என்பது ந என்பதற்கு மேலிருப்பதால் மகாரார்த்தமே நிஷேத்ய மென்று நினைக்க வேண்டா என்ற கருத்தினுல் விவரிக்கத் தொடங்குகிருர். இது இத்யாதியால். எனக்கில்லை என்கிற அர்தத்தில் பின்னே ப்ரயோகிக்கவேண்டிய நகாரத்தை முன்னே ப்ரயோகித்ததற்குக் காரணம் கூறுகிருர் நிஷேதேதி. த்ருஷ்டேதி. 'ஸ்வவேச்யத்மேயாத்மா த்ருஷ்டா ஸீதேதி தத்வத:' என்று ஸங்க்ஷேபராமாயணம். இங்கே ஸீதா த்ருஷ்டா என்னுமை அபேக்ஷிதமான தர்சநத்தை முதலில் அறிவிப்பதில் ஆதரத்தாலேயாம். அதுபோல் ம: என்கிற ஸம்பந்தத்தில் த்வேஷமும் நிஷேதத்தில் ஆதரமும் தோற்றுவதற்காக நஞ் முன்னே உள்ளது. ஷஷ்டியினுல் சொல்லப்பட்டது ஸம்பந்த ஸாமாந்யமாகையால் ஏதேனும் ஒரு ஸம்பந்த மிருக்கும்போது நிஷேதம் கூடுமோ என்ன, ஸம்பந்த விசேஷத்தைக் கொள்ளவேண்டுமென்கிருர் இம் இதி இது கீழே அகாரத்தின் மேல் சதுர்த்தியினுல் சேஷத்வம் சொல்லியிருப்பதால் அதுவே என்று ஸந்தர்ப்பத்தால் விளங்கும். இதை

न' என்றது. வாக்யங்களுக்கு अवधारणத்திலே தாத்பர்யம் கொள்ளுகை உசிதமாகையாலே இப் ப்ரணவத்திலே मध्यमाक्षरसिद्धமான तात्पर्यத்தோடே உறவாயிருக்கிற இந் நமஸ்ஸின் பொருளே ஸர்வத்திலும் ஸாரமென்னுமிடம் 'द्व्यक्षरस्तु भवेन्मृत्युः त्र्यक्षरं ब्रह्म शाश्वतम्। ममेति द्व्यक्षरो मृत्युर्न ममेति च शाश्वतम्' इत्यादिகளாலே சொல்லப்பட்டது.

'सर्वं जिह्मं मृत्युपदमार्जवं ब्रह्मणः पदम्। एतावान् ज्ञानविषयः किं प्रलापः करिष्यति ॥'

---

விசதமாக்குகிறது பட்டர் ச்லோகம். அஷ்டச்லோகியில் 'अकारार्थायैव' என்ற ச்லோகத்திலுள்ளது இவ்வாக்யம். இங்கே ப்ரமாணத்ருடன் नमः என்பதின் அர்த்தத்தை ஸாரமென்கிறார். மேலே 'त्र्यक्षरं ब्रह्म शाश्वतं' என்று ப்ரணவத்தைச் சொல்ல வேண்டியிருக்க न मम என்கிற மூன்றக்ஷரத்தை சாச்வத ப்ரஹ்மமாகக் கொண்டாடினது எங்ஙனே என்ன—அதற்குச் கருத்துரைக்கிறார் வாக்யங்களுக்கு இதி. ஏவகாரத்தோடு சேர்ந்த வாக்யங்களில் ஏவகாரார்த்தத்திலே தாத்பர்யமென்று यदा ह्येव आवपन्ति; अत एवोद्वपन्ति இத்யாதி வாக்யங்களிலே पूर्व मीमांसैயில் நிர்ணயம் செய்தார்கள். அதனால்தான் चक्षुषैव गृह्णाति இத்யாதிகளில், न तु त्वचा இத்யாதி अवधारण விவரணமாக வாக்யம் வருகிறது. அதனால் अकार. उकार.मकाररूप त्र्यक्षरமான ப்ரணவத்தில் மகாரார்த்தம் அகாரார்த்த சேஷம் என்பதைவிட அந்ய சேஷமன்று என்கிற ஏவகாரார்த்தம் ப்ரதானமாகிறது. இந்த அந்யசேஷத்வ நிவ்ருத்தியிலே, 'எனக்கு நான்சேஷமல்லேன்' என்கிற स्वशेषत्वनिवृत्तियும் அடங்கியிருக்கிறது. அகாரார்த்தம்தவிர வேறொன்றுக்கும் சேஷமன்று என்பதில், 'எனக்கு சேஷமன்று' என்பதும் அடங்கியுள்ளது. எல்லா ஜீவனுக்கும் தனக்குத் தான் சேஷன், தனக்குத் தான் ஸ்வதந்த்ரன் என்கிற புத்தியே வருகிறது. அந்யசேஷத்வ புத்தி இருக்கும்போதும் அது சில ஸமயமேயாய் ஸ்வதந்த்ரத்வ புத்தியே முடிவாகத் தோன்றியிருக்கும். ஆகையால் ஸ்வசேஷத்வ புத்தி நிவ்ருத்தி அவதாரணார்த்தத்தில் ஸாரமாகிறது. இதனால் न मम என்பதையே ப்ரதானமாகச் சொன்னதென்றபடி. தாத்பர்யார்த்தேதி. ஏவகாரார்த்தம் பொதுவாக அந்யயோக வ்யவச்சேதம்; தாத்பர்யார்த்தம் அகாரார்த்த வ்யதிரிக்த வஸ்து சேஷத்வ நிவ்ருத்தி. உறவாயிருக்கையாவது அந்யசேஷத்வ நிவ்ருத்தியிலே யடங்கி இருக்கை ஸர்வத்திலும் = அகாரார்த்த சேஷத்வ விதி, இதர சேஷத்வ நிவ்ருத்தி என்றவற்றிலும் என்றபடி. द्व्यक्षर இதி. சாந்தி 13-4 मम என்ற இரண்டக்ஷரமுடைய சொல், அல்லது मम என்ற இரண்டக்ஷரங்களையுடையசொல்லின் பொருளான ममत्वबुद्धिயானதும்ருத்யுவாகும்-ஸம்ஸார காரணமாகும். त्र्यक्षरं—மூன்றக்ஷரமான न मम, என்ற, அல்லது அதன்பொருளான 'எனதன்று'என்கிற புத்தியே சாச்வதபரஹ்மமாகும் அதன்ப்ராப்திக்குக் காரணமாகும். உத்தரார்த்தம் இதில் இரண்டக்ஷரம் மூன்றக்ஷரம் என்பதை விவரிக்கிறது. सर्वमिति. பா சாந்தி. 79. 22. கோணல் எல்லாம் ஸம்ஸாரகாரணம் ருஜுவாயிருப்பகை ப்ரஹ்ம ப்ராப்திக்கு ஸாதகமாயிருக்கும்

என்கிற ச்லோகத்துக்கும் இந் நமஸ்ஸின் பொருளிலே प्राधान्येनதாத்பர்யம்.

இங்கு 'न मम' என்கிறது எதையென்னில், ப்ரணவத்தில் तृतीयाक्षरத்தை अनुषज्जित्து நான் எனக்குரியேனல்லேன் என்றதாயிற்று. अध्याहारத்திற் காட்டில் अनुषङ्गம் உசிதமென்னுமிடம் अनुषङ्गाधिकरणसिद्धம். இங்கு 'न ममाहम्' என்று விசேஷிக்கையாலே கீழ் अन्यशेषत्वத்தைக் கழிக்கிற मध्यमाक्षरம் गोबलीवर्दन्यायத்தாலே स्वव्यतिरिक्तविषयம். 'अहं न मम' என்கிற வாக்யத்தாலே

---

இவ்வளவே யறியவேண்டியதாக இருக்கிறது; வேறு வீண்பேச்சு என்ன செய்யுமென்று ச்லோகார்த்தம். இந்த ச்லோகத்தில் प्रलापः=வீண்பேச்சு என்றதால் கீழ் ஆர்ஜவமென்ற விடத்திலும் பேச்சே விஷயமென்று தெரிகிறது. அது नमश्शब्दமாயிருக்க வேண்டும். அதன் பொருளே ப்ரஹ்மண; பதமாகும். அதனுல் நிவர்த்திக்கப்படும் அம்சங்களெல்லாம் सर्वं जिह्मम् என்று கருதப்பெற்றதாம். प्राधान्येन. என்றதால் வேறு பொருளையும் கூட்டலாமென்றதாம். न मम என்ற விடத்தில் இரண்டே பதமிருப்பதால் இது (எது) எனக்கன்று என்று தெரியவில்லையே என்று கேட்டு உரைக்கிருர் இங்கு இதி. முன்வாக்யத்திலிருந்து म् என்கிற அக்ஷரம் ஸ்வரஸமாக இங்குச் சேருமென்று கருத்து. न मम என்பதோடு किञ्चित् என்ற பதத்திற்கு அத்யாஹாரம் செய்தாலென்ன என்பதற்கு உத்தரம் அத்யாஹாரத்திற் காட்டில் இதி. அத்யாஹாரமாவது-முன்பின்காணுத பதத்தைக் கூட்டுவது: அநுஷங்கமாவது—முன்வாக்யத்திலுள்ளதை இவ்வாக்யத்திலும் சேர்ப்பது. அநுஷங்காதிகரணம் பூர்வமீமாம்ஸையில்(2–1–16–17). அவ்வதிகரணத்தில் புதிய சொல்லை அத்யாஹரிப்பதை விட வாக்யத்தில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கும் பதத்தை அநுஷங்கிப்பதே தகுமென்று கூறி, या ते अग्ने रजाशया என்ற விடத்திலும் चित्पतिस्त्वा पुनातु என்ற விடத்திலும் அநுஷங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. ப்ரணவத்தில் உகாரத்தாலே அகாரார்த்தம் நீங்கலாக அந்யத்திற்கு சேஷனல்லன் நானென்று சொன்னது போதாதோ; இது எதற்காக? இதே அதற்கும் பொருளாகில் இதுவே போதும்; உகாரத்திற்கு வேறேதேனும் பொருள் கொள்ளவேண்டுமென்ன, அருளிச்செய்கிருர் இங்குஇத்யாதி. நம:பதம் தனக்குத்தான் சேஷனல்லனென்று சொல்வதால் உகாரமானது தான்தவிர மற்ற ஜீவனுக்கு சேஷனல்லன் என்கிறதென்னல் தகும். बलीवर्दं (காளையை) आनय என்றுற்போலே न मम என்று விசேஷித்துச் சொன்னதாகும். बलीवर्दத்தை விசேஷித்துச் சொல்வது அவச்யமாவது போல் ஸ்வசேஷத்வ புத்திநிவ்ருத்தியானது விசேஷித்துச் சொல்லப்படவேண்டியதாகும். அந்ய சேஷத்வம் வேண்டாவென்றுல் எளிதில் இசைவான்; ஸ்வசேஷத்வ புத்தியை விடான். அதனுலேயே 'त्वं मे, अहं मे என்று கலஹம் நீடிக்கிறது. இது தவிரவும் விசேஷ நிர்தேசத்திற்கு ப்ரயோஜநமொன்று அருளிச்செய்கிருர் अहमिति. இதன் கருத்தாவது—'சேஷசேஷிபாவமென்கிற ஸம்பந்தம் இரு வஸ்துக்களுக்கே யாகுமாகையால் தனக்கே தான் எப்படி சேஷமாகக்கூடும்?

தன் ஸ்வரூபமும் தனக்கு உரித்தல்லாமையாலே குணங்கள் प्रधानानुवर्तिन ளென்கிற படியே வேறொன்றையும் பற்றத் தனக்கு निरुपाधिकस्वामित्वமில்லை யென்று விசேஷித்து अनुसंधानம் பலித்தது. இது विशेषनिर्देशத்துக்குப் ப்ரயோஜநம்,

2. இப்படி अनुषङ्गियாத பக்ஷத்தில், பொதுவிலே தன்னோடு துவக்குண்டாய்த் தோற்றுகிறவற்றையெல்லாம், என்னதன்றென்று தன் துவக்கறுக்கிறது இத்தால் தன்னையும் தன்னுடைய गुणविग्रहादिகளையும் பற்றத் தன் अभिमानविशेषங்களைக் கழிக்கையாலே विपरीताहङ्कार-ममकारங்களாகிற ஸம்ஸார மூலங்கள் छेदிக்கப்பட்டன. இங்குக் கழிக்கிற அஹங்காரம் अप्रकृतமான

---

மேலும் சேஷத்வமாவது பாரார்த்த்யம். வேறொருவரைக் குறித்து தானே அது சொல்லமுடியும். ஆதலால் உகாரத்தால் சொன்ன அந்யசேஷத்வ நிவ்ருத்தியில் அஹமர்த்தவ்யதிரிக்தமான சேதநர்களைப் போலே தன்னை அந்யபதத்தால் கொள்வதற்கில்லை. தன்னைக் குறித்துத் தனக்கு சேஷத்வ ப்ரஸக்தியில்லை யாகையால் அதன் நிவ்ருத்தியைச் சொல்லவேண்டாவே. ஆக இங்கு गोबलीवर्दन्यायம் வராது. त्वं मे अहं मे என்றவிடத்தில் अहं मे என்பதற்கு आत्मेश्वरं என்றவிடத்திற் போல் பரசேஷத்வமில்லாதவனென்றே பொருளாகும்' என்ற ஆசங்கையில் இந்த வாக்யம் உத்தரமாகும். अहं न मम என்பதற்கு मदीयविशिष्टனான நான் எனக்கு சேஷனல்லேன் என்று பொருள். விசேஷ்யமான தனக்கு ஸ்வசேஷத்வமில்லை யென்பதிலே இதற்குத் தாத்பர்யமில்லை. என்னிடம் சேஷத்வமில்லை யென்றால் என் விசேஷணமான मदीयத்தில் தன்னைப் பற்ற சேஷத்வமில்லை யென்றே கருதப்பெறும். இக்கருத்தைக் கொண்டு உகாரார்த்தமான அந்யயோக வ்யவச்சேதத்தில் अन्य என்பதாலே அகாரார்த்தத்தைவிட வேறான தன்னையும் கொள்ளலாம். ஆக अहं न मम என்பதற்கு என்னுடைய குணாதிகள் எனக்கு சேஷமல்ல என்றதாம். 'என்னுடைய குணாதிகள்' என்று சேஷத்வம் சொல்லிக்கொண்டே, 'சேஷமல்ல' என்னலாமோ என்னில்—இவை எனக்கு நிருபாதிக சேஷமல்லவென்ற கருத்தாகும், मन्निरूपितनिरुपाधिकशेषत्वமில்லை யென்றால் प्रतियोगि अप्रसिद्धமாயிற்றே என்னில்—அதற்காகத் தான் மூலத்தில் गुणादिनिरूपितनिरुपाधिकस्वामित्वம் எனக்கில்லை யென்று மாற்றி யருளியது. அது அகாரார்த்தத்துக்கே யுண்டு.

2. மகாரத்தை யநுஷங்கித்து மகாரார்த்தத்திலே ஸ்வசேஷத்வ நிவ்ருத்தியைச் சொல்லி விசேஷணமான குணாதிகளில் ஸ்வசேஷத்வ நிவ்ருத்தியிலே தாத்பர்யமென்று கல்பிப்பதைவிட யோக்யமான கிஞ்சித்பதத்தையே அத்யாஹரித்து ஒன்றும் எனக்கு சேஷமன்றென்னலாமே என்ற வினாவில் அதையே இசைகிறார் இப்படி இதி. துவக்காவது ஸம்பந்தம்—சேஷத்வம். என்னது=என்னுடையது. இதற்கு ப்ரயோஜந மருளுகிறார் இத்தால் இதி. தன்னைப்பற்ற அபிமாந விசேஷம்—அஹங்காரம். ஆத்மாவையே அஹமென்று க்ரஹித்தால் அது தோஷமாகாது. அதற்காக விபரீதாஹங்காரமென்றது. தேஹாதிகளில் ஆத்ம புத்தி இதுவாகும். தேஹாதிகளிலுள்ள சில सौन्दर्यादि

ருசிविशेषम். மற்றும் தத்துவங்களில் எண்ணின அஹங்காரம் विवेकमात्रத்தால் கழிவதொன்றன்று; ஸூக்ஷ்மசரீரம் விடுமளவும் இவனைத் தொத்திக் கிடக்கும். இவ் अचित्संबन्धம் இவனுக்குக் கழியாதிருக்க இதின் கார்யங்களாய் अनर्थरूपங்களான अहङ्कारादिव्याधिகள் मूलमन्त्रादिகளாலே सिद्धமான விவேகமாகிற भेषजविशेषத்தாலே கழிகிறன.

3. தனக்கு अन्यशेषत्वம் ப்ரணவத்தில் मध्यमाक्षरத்திலே கழிகையாலே அந்யனை தன்னைப்பற்றத் தனக்கு शेषत्वமில்லையென்று பிரித்துச் சொல்லவேண்டாமையால், अन्यशेषியாய்த் தோற்றின தனக்கு இங்கு ஏதேனுமொன்றையும் பற்ற निरुपाधिकस्वामित्वம் கழிக்கையிலே தாத்பர்யமாகவுமாம். ஜீவனுக்கு शेषமானவையெல்லாம் निरुपाधिकसर्वशेषியான ஸர்வேச்வரன் स्वार्थமாகக் கொடுத்தவையிறே. ஜீவர்களுடைய நித்யங்களான குணாதிகள் ஈச்வரனுடைய नित्येच्छासिद्धங்கள். अशुद्धदशैயிலும் शुद्धदशैயிலுமுண்டான अनियतविग्रहादि

---

விசேஷங்களைத் தன்னிடத்தில் ஏறிட்டதால் வந்த கர்வமும் அஹங்காரமாகும். விபரீத புத்திக்குக் காரணமாக அஹங்கார தத்துவமுமொன்றுண்டு; அதை இங்குக் கொள்ளலாகாதென்கிறார் மற்றுமிதி, ஸூக்ஷ்மேதி. அங்கே மஹத்தின் கார்யமான அஹங்காரதத்துவம் பஞ்சபூதங்களுக்கும் காரணமானது. மஹா ப்ரளயத்தில் தான் கழியும்; இதனுடைய விவேகத்தால் கழிவதன்று. விவேகம் பிறந்து உபாயாநுஷ்டாநம் செய்து மோக்ஷம் செல்லும் போது விரஜாநதிக்கரையில் இவன் ஸூக்ஷ்மசரீரத்தை விடும் வரையில் இவனோடு ஸம்பந்தித்திருக்கும். இவன் அதை விட்டிட்ட போதும் அஹங்காரம் இவனோடு ஸம்பந்தப்படாதது மாத்ரமே; கழிவதன்று என்றபடி. காரணமான அஹங்காரம் இருக்கும் போது கார்யமான श्रमादि அஹங்காரங்களு மிருக்க வேண்டுமே; ஸம்ஸார மூலங்களான அவை எப்படி யழியுமென்ன—அருளிச்செய்கிறார் இவ்விதி. வியாதிகளுக்கு நிதாநமிருக்கும் போதும் சில மருந்தினாலே வியாதி தடுக்கப்படுவதுண்டு; அபத்யம் உண்டபோதும் மருந்தின் மஹிமையினால் அது அபத்யமாகாமலிருப்பதுண்டு; அதுபோல் விவேகம் இங்கு மருந்தென்றபடி.

3. இப்படி மகாரத்தை யநுஷங்கித்தோ, கிஞ்சித் என்றும் பதத்தை அத்யாஹரித்தோ தன்னைக் குறித்து ஒன்றுக்கும் சேஷத்வமில்லை யென்று கூறினார். இப்படி கூறித் தனக்கு ஸ்வாமித்வமில்லை யென்று கருத்தைக் கொள்வதைவிட ஸ்வாமித்வமென்றே அத்யாஹாரம் செய்து, न मम स्वामित्वम् என்றே கூறலாம்; किञ्चिदर्पितनिरुपाधिकस्वामित्वं தனக்கில்லை யென்றபடி என்கிறார் தனக்கு இத்யாதியால். ஜீவனுக்கு சேஷமானவை ஈச்வரனுக்கு எப்படி சேஷமாகு மென்பதற்கு உத்தரமாக நிருபாதிக என்றும் ஸ்வார்த்தமாக என்றும் அருளியது. ஒருவனுக்கு ஸோபாதிகமாய் மற்றொருவனுக்கு நிருபாதிக மாயிருப்பதில் தோஷமில்லை. ஜீவனுக்கு சில விசேஷத்திற்காகவும் ஈச்வரனுக்கு லீலாரஸத்திற்காகவும் அது இருப்பதால் இருவித சேஷத்வமும்

கள் இவர்களுடைய कर्मजन्यமாயும் कर्मनिरपेक्षமாயுமுள்ள अनित्येच्छासिद्धங்கள்.

4. ப்ரணவத்திலே अनन्यशेषत्वம் கழிகையாலே பரமாத்மாவிற்காட்டில் அந்யனை தனக்குத் தான் சேஷனல்லனென்னுமிடம் सिद्धिக்கையாலும், தான் வேறொருத்தர்க்கும் சேஷமல்லாதாப் போலே வேறு ஒன்றும் தன்னைப் பற்ற निरुपाधिकशेषமன்றென்னுமிடமும் இங்கே வருகையாலும், ப்ரணவத்தில் தோற்றாத स्वस्वातन्त्र्यनिवृत्तियிலே நமஸ்ஸுக்குத் தாத்பர்யமாகவுமாம். அப்போது पूर्वप्रयुक्तमकारத்தை अनुषङ्गिக்கு நான் எனக்கு நிர்வாஹகனல்லேனென்று சொல்லிற்றாயிற்று.

स्वातन्त्र्यवद्माத்தை अध्याहरिத்து न मम स्वातन्त्र्यம் என்றதாகவுமாம்.

இச்சேதநனுக்கு स्वातन्त्र्यनिवृत्तियாவது-निरपेक्षकर्तृत्वाभावத்தை. இதுக்கு அடி—बद्धावस्थैயிலும் मुक्तावस्थैயிலும் स्वबुद्धिपूर्वप्रवृत्ति பண்ணாநின்றாலும் ஈச்வரன்கொடு

---

ஸபலமென்றபடி. அசுத்ததசை—ஸம்ஸாரதசை. சுத்ததசை—முக்ததசை. அநித்யவிக்ரஹம் இங்கே ப்ராக்ருதம்; அங்கே அப்ராக்ருதம். விக்ரஹங்களும் கார்யங்களுமெல்லாம் भगवदिச்சாஸித்த மாகையால் ஜீவனுக்கு ஔபாதிக சேஷமே யாகும்.

4. இப்படி नमः என்பதற்கு अहं न मम, न मम किञ्चित्, न मम स्वामित्वम् என்று மூன்றர்த்தம் சொல்லியாயின. மேலே न मम स्वातन्त्र्यम् என்கிற நான்காவது அர்த்தம் சொல்வதற்காக, முன்னைய மூன்றர்த்தங்களும் ப்ரணவத்தாலேயே ஸித்தமென்கிறார் प्रणवे इति. अन्ययोगव्यवच्छेदத்தாலே தனக்கு अकारार्थान्यसमान्यशेषत्व மில்லையென்றால் அந்த அந்யரில் தானும் சேர்ந்திருப்பதால் தனக்குத் தான் சேஷனல்ல னென்பதாம்; மகாரத்தாலே गुणादिविशिष्टனை தன்னைக் கொண்டால் விசிஷ்டமான தான் அகாரார்த்த சேஷமென்றால் தன்னுடைய குணாதிகளும் அகாரார்த்தத்திற்கே நிருபாதிகசேஷமென்றதாம், இது 'भार्या पुत्रश्च दासश्च त्रय एते अधनाः स्मृताः। यत् ते समधिगच्छन्ति यस्यैते तस्य तद्धनम् ॥' என்றதாலும் தோற்றும். ஆகத் தனக்கொன்றும் நிருபாதிக சேஷமன்றென்று தெரியவரும். அதனாலேயே தனக்கு ஸ்வாமித்வமில்லை யென்பதும் ஸித்திக்கும். இதே வருகையாலே என்னப்பட்டது; अर्थात् सिद्धिக்கையாலே என்றபடி. ப்ரணவத்தில் சேஷத்வ ப்ரஸ்தாவமேயுளது, ஸ்வாதந்த்ர்ய ப்ரஸ்தாவமில்லை சேஷத்வ பாரதந்த்ர்யங்களிரண்டும் அறியவேண்டியிருப்பதால் न मम என்பதற்கு அதையே அர்த்தமாகச் சொல்லவேண்டு மென்றபடி. அது அநுஷங்கத்தாலும் ஸித்திக்கலாம் அத்யாஹாரத்தாலுமா மென்கிறார் அப்போது இதி. நிர்வாஹகனல்லேன் இதி. मम என்கிற ஷஷ்டிக்கு நிர்வாஹ்யநிர்வாஹகभावஸம்பந்தத்திலே தாத்பர்யம். அல்லது निर्वाहक பதத்திற்கு அத்யாஹாரமென்று கருத்து.

ஜீவன் ஸகலகர்மாக்களின் கர்த்தாவாயிருப்பதால் स्वतन्त्रः कर्ता என்றபடி ஸ்வாதந்த்ர்யமிருக்கும்போது அதற்கு நிவ்ருத்தி எங்ஙனே என்ன, निरपेक्षकर्तृत्वமாகிற स्वातन्त्र्यமில்லை யென்கிறார் இச் இதி. இந்த்ரியங்களையும்

த்த கரணாதிகளைக்கொண்டு அவன் ப்ரேரகனுமாய் ஸஹகாரியுமாகப் ப்ரவர்த்திக்கவேண்டுகை. ஈச்வரனுக்குப் ப்ரதமாக்ஷரத்தில் ப்ரக்ருதியிலே சொன்ன ஸர்வரக்ஷகத்வம் உபாயாதிகாரிகள் பக்கல் ஏதேனும் ஓர் உபாயத்திலே ப்ரேரித்துக்கொண்டே வரக்கடவது. ஜீவன் ஸ்வரக்ஷணார்த்தமான உபாயானுஷ்டானத்திலும் பராதீனகர்த்தாவாகையாலும், இவ்வுபாயம் அநுஷ்டித்தாலும் பலப்ரதானரூபரக்ஷை பண்ணுவான் ப்ரஸந்நனான ஸர்வேச்வரனாகையாலும் ப்ரதமாக்ஷரத்தில் ப்ரக்ருதியாலே சொல்லப்பட்ட அவனுடைய ஸர்வரக்ஷகத்வமே இந் நமச்சப்தத்தாலும் த்ருடீக்ருதம். இப்படி ப்ரதமசதுர்த்தியாலே ப்ரதிபந்நமான ஈச்வரனுடைய நிருபாதிகஸர்வசேஷித்வமும், ஜீவனுக்கு ஏதேனும் ஒன்றையும்பற்ற நிருபாதிகசேஷித்வம் கழித்த முன்புற்ற யோஜனையாலே த்ருடீக்ருதமாயிற்று. இஜ்ஜீவனுக்குள்ள ஸ்வாதந்த்ர்யமும் 'பராத்து தச்ச்ருதே:' என்கிற ந்யாயத்தாலே நிருபாதிகஸ்வதந்த்ரனாய் ஸ்வார்த்தப்ரவ்ருத்தனான பரமாத்மாவடியாக வந்தது. அப்படியே வஸ்த்வந்தரங்களைப்பற்ற இஜ்ஜீவனுக்கு சேஷித்வமும் நிருபாதிகசேஷியான அவன் ஸ்வார்த்தமாகக் கொடுக்க வந்தது.

श्रीमान् स्वतन्त्रः स्वामी च सर्वत्रान्यानपेक्षया । निरपेक्षस्वतन्त्रत्वं स्वाम्यं चान्यस्य न क्वचित् ॥
तारस्य नमसश्चेमौ सारौ देशिकदर्शितौ । अनन्यशरणत्वादेरधिकारस्य सिद्धये ॥

---

சரீரத்தையும் கரணாதிகளை யென்றது. அவன் ப்ரேரகனுமாயிதி. स एव साधुकर्म कारयति என்றவிடத்தில் ஈச்வரன் ப்ரேரகன்; மற்றவிடத்தில் ஸஹகாரீ. न मम स्वातन्त्र्यम् என்றதால் பாரதந்த்ர்யம் உண்டென்று தெரிகிறது. அதாவது பராதீநகர்த்ருத்வம். இதைச் சொன்னதால் இது மூலமாகவே ஈச்வரனுக்கு அகாரார்த்தமான ரக்ஷகத்வமென்றும் தெரிகிறது. ஆக ஸர்வரக்ஷகத்வத்திற்கு இது விவரணமாகிறது. மூன் சொன்ன नमच्சப்தார்த்தங்கள் சதுர்த்தியின் அர்த்தமான சேஷித்வத்திற்கு விவரணமாகும். सर्वशेषित्वமும் என்பதற்கு மேலே த்ருடீக்ருதமென்றதோடு அந்வயம். கழித்தது ஜீவனின் நிருபாதிகசேஷித்வம். இப்படி ஈச்வரனுக்கே ஸ்வாதந்த்ர்யமும் சேஷித்வமுமானால் ஒவ்வொரு கார்யத்திலும் இதர காரகங்கள் அஸ்வதந்த்ரங்களென்றும் ஜீவன் ஸ்வதந்த்ரனென்றும் இவனே சேஷி, மற்றது சேஷமென்றும் லோகத்தில் சொல்வது எங்ஙனே யென்ன, விவரிக்கிறார் இஜ்ஜீவனுக்கு இதி. ஸ்வாதந்த்ர்யமும் என்பதற்கு ஜ்ஞாந-சிகீர்ஷா—ப்ரயத்ந ரூபமாகிற ஸ்வாதந்த்ரியமுமென்று பொருள் கொடுக்க=கொடுத்ததால். அகாரார்த்தத்திலே ஸ்ரீவிசிஷ்டத்வம் அர்த்தஸித்தமென்றதை நினைப்பிக்கிறவராய் ப்ரணவ நமஸ்ஸுக்களின் ஸாரத்தை அதன் ப்ரயோஜநத்தோடு காரிகையால் சுருக்குகிறார் श्रीमानिति. अन्यानपेक्षया — இதர நிரபேக்ஷமாக ஸ்வதந்த்ரனும் ஸ்வாமியுமாகிறானென்றதிலிருந்து அகாரார்த்த ரக்ஷகத்வ காரணத்வங்களில் ஸ்வாதந்த்ர்யம் குறித்த படி. உத்தரார்த்தத்தில் சொல்வது नमச் சப்தார்த்தம். तारस्येति । இப்படி ப்ரணவத்திற்கும் நமஸ்ஸுக்கும் ஸாரார்த்தம். அஸ்வாதந்த்ர்யத்தால் எல்லாம் அவனே செய்விப்பதால் அநந்ய சரண

துவக்கி வரும் ஏற்றங்களுமெல்லாம் அடைவே अनुसंधेयங்கள்.

इह संग्रहत: श्रीमान् गोप्ता शेषी समाधिकदरिद्रः। शरणं सर्वशरीरी प्राप्यः सेव्यश्च साधुभिर्भाव्यः ॥

இப்படிப் प्राप्यனான பரமாத்மாவைப் प्रापिக்கும் ஜீவாத்மா இத் திருமந்த்ரத்தாலே अनुसंधेयனும்போது श्रीमद्रक्ष्यत्वं, अनन्यरक्ष्यत्वं, सर्वदा सर्वदा सर्वप्रकाररक्षकपरं सुशीलरक्षकवत्त्वं, पुरुषकारवत्त्वं, महाविश्वासयोगित्वं,—सलक्ष्मीकदासत्वं, नित्यदासत्वं, निरुपाधिकदासत्वं, अनन्यार्हदासत्वं,—ज्ञानत्वं, आनन्दत्वं, स्वयंप्रकाशत्वं, स्वस्मै भासमानत्वं, अहंशब्दवाच्यत्वं, अणुपरिमाणत्वं, सूक्ष्मत्वं, छेदनाद्यनर्हत्वं, चतुर्विंशतितत्त्वविलक्षणत्वं, अमलत्वं, ईश्वरादन्यत्वं, ज्ञातृत्वं, आनुकूल्यादियोग्यत्वं, परमपुरुषार्थापेक्षार्हत्वं, निरोगयोग्यत्वं, कैङ्कर्ययोग्यत्वं, सर्वसाक्षात्कारयोग्यत्वं, निरतिशयानन्दयोग्यत्वं,—परापेक्षकर्तृत्वं, सोपाधिकस्वामित्वं, भागवतशेषत्वं, भागवतकिङ्करत्वं, अनन्योपायत्वं, अविद्यादिमत्त्वं, करणादिसापेक्षज्ञानविकासवत्त्वं, संसारभयाक्रान्तत्वं, अविद्यादिनिवृत्तिसापेक्षत्वं, अकिञ्चनत्वं, ईश्वरसौहार्दादिमत्त्वं, सदाचार्यप्राप्तिमत्त्वं, साध्योपायानुष्ठानार्हत्वं, उपायनिष्ठत्वं

---

முதலாக இதுவரை நாற்றெட்டு தர்மங்கள் குறிக்கப் பெற்றன. இவை ப்ரதானங்கள் இவற்றைத்துவக்கி—இவற்ரேடு ஸம்பந்தப்பட்டு. வரும் ஏற்றங்கள் कामान्नी कामरूपी अनुसंचरन्, सर्वेषु लोकेषु कामचारो भवति என்று ஓதப்பெற்ற सहावतार सञ्चारादिகள். எல்லாம் ஜபாதிகாலங்களில் அநுஸந்திக்க முடியாமையால் ஸங்க்ரஹமாக எட்டு பகவத்குணங்களை யறிவிக்கிறுர் इहेति காரிகையால். इह—இந்த மந்த்ரத்தில் साधुभि:—ஸாதுக்களாலே நாராயணன். संग्रहत:—சுருக்கமாக அகாரத்தில் லக்ஷ்மீ விசிஷ்டனுகவும் ரக்ஷகனுகவும் அதன்மேல் சதுர்த்தியில் சேஷியாகவும் ஒத்தார்மிக்காரில்லாதவனுகவும் நமஸ்ஸில் சரணமாகவும் நாராயணபதத்தில் ஸர்வாந்தராத்மாவாகவும், அதன் மேல் சதுர்த்தியால் ப்ராப்யனுகவும் கைங்கர்யத்திற்கு இலக்காகவும் भाव्य:=அநுஸந்திக்கத் தக்கவனுவான். लक्ष्म्या सह हृषीकेशः, तदन्तर्भावात् त्वाम् என்கிற வசனப்படி லக்ஷ்மீ விசிஷ்டனுக்கே எல்லா ஆகாரங்களுமென்றதும் இந்த ச்லோகத்தாலறிவித்ததாம்.

ஈச்வரனிடத்திற் போல் ஜீவனிடத்தில் அநுஸந்திக்கப்படும் குணங்களையும் காட்டுகிறுர் இப்படி இத்யாதியால், ப்ராபிக்கும்—அடைகின்ற, ஸ்ரீமத்ரக்ஷ்யத்வம்=ஸ்ரீவிசிஷ்ட நாராயணனுலே ரக்ஷிக்கப்படுகை. अनन्यरक्ष्यत्वம்—வேறெருவரால் ரக்ஷிக்கப்படமாட்டாமை, சதுர்த்திஸித்தமானவற்றைக் கூறுகிறுர். सलक्ष्मीकेति. மகாரஸித்தமானவற்றைக் கூறுகிறுர் ஜ்ஞாநத்வமிதி छेदनेति. 'अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च। नित्यः सर्वगतः स्थाणुः' என்கிற கீதையை யநுஸந்திப்பது. சதுர்விம்சதி தத்துவங்கள்—ப்ரக்ருதியும் ப்ருதிவி வரையிலான அதன் விகாரங்களுமான இருபத்திநாலு. आनुकूल्यादि என்ற ஆதிபதத்தால் इच्छाப்ரயத்நாதிகளைக் கொள்வது. நமச்சப்த ஸித்தமானவற்றைக் கூறுகிறுர் परापेक्षेति अनन्योपायत्वம்—வேறு உபாய

महाप्रभावत्वं,—विशिष्टवेषத்தாலே सृष्टिसंहारविषयत्वं, अक्षयत्वं, स्वतो बद्धत्वं, असंख्यातत्वं, ईश्वरव्याप्यत्वं, ईश्वरनियाम्यत्वं, ईश्वरधार्यत्वम्, இவற்றின் நியமமடியாக வந்த ईश्वरशरीरत्वं, ईश्वरलीलारसहेतुत्वं, ईश्वरभोगोपकरणार्हत्वं, तदधीनगतित्वं, तदधीनतत्प्राप्तित्वं, ऐश्वर्यकैवल्यनिरपेक्षत्वं, भगवत्प्राप्त्यर्थित्वं,-सर्वाविद्योन्मुक्तत्वं, आविर्भूतस्वरूपत्वं, सर्वद्रष्टृत्वं, सर्वप्रकारभगवदनुभवैकभोगत्वं, निरतिशयानन्दवत्त्वं, भगवद्भोगार्थभोक्तृत्वं, ऐच्छिकविग्रहादिमत्त्वं, इच्छाविघातरहितत्वं, ईश्वरलक्षण-व्यतिरिक्तपरमसाम्यं, अशेषकैङ्कर्यैकरतित्वं, अपुनरावृत्तिमत्त्वமென்று இவை प्रधानங்களாகக் கொண்டு இவற்றைத் துவக்கிவரும் மற்றுள்ள प्रामाणिकार्थங்களும் எல்லாம் இப்பதங்களில் அடைவே शब्दसामर्थ्यத்தாலும் अर्थस्वभावத்தாலும் अनुसंधेयங்கள்.

पदत्रयेऽत्र संक्षेपात् भाव्याऽनन्यार्हशेषता । अनन्योपायता स्वस्य तथाऽनन्यपुमर्थता ॥

இப்படி 'सर्वपद्माक्षरान्तःस्थम्' என்னும்படியிருக்கிற இத் திருமந்த்ரத்திலே चिदचिदीश्वरस्वरूपங்களும், ஜீவர்களுடைய अन्योन्यभेदமும் शेषशेषिभावादिகளாலே निरुपाधिकजीवेश्वरभेदமும் निखिलजगन्निमित्तोपादानभूतपरदेवताविशेषनिर्धारणादिகளும் सिद्धिக்கையால், இப்படி अनुसंधिப்பாரிருந்தவூரிலிருக்குமவர்களுக்கும்—ஈச்வரன் இல்லையென்றும், निर्विशेषனென்றும் अत्यन्तोदासीनனென்றும்

---

மொன்றுமிராமலிருக்கை உபாயநிஷ்டத்வம்—ப்ரபந்நனுகை. அதனுலேயே स महात्मा सुदुर्लभः என்றபடி மஹாப்ரபாவவத்வம். நாரசப்தஸித்தமானவற்றை யநுஸந்திக்கிறூர் विशिष्टेति. அசேதந விசிஷ்டாகாரத்தாலே சேதநனுக்கு ஸ்ருஷ்டிவிஷயத்வாதி, अयन சப்தஸித்தம் ஈச்வர வ்யாப்யத்வாதி. சதுர்த்திஸித்தமானவற்றைக் கூறுகிறூர் सर्वाविद्येति. ப்ரக்ருதி—ப்ராக்ருத ஸம்பந்த—तदधीनदुर्वासनादिகள் ஸர்வாவித்யாதிகள். ஈச்வரலக்ஷணேதி. லக்ஷ்ம்யாதிபதித்வ—ஸ்ருஷ்ட்யாதிகர்த்ருத்வ—மோக்ஷ ப்ரதத்வாதிகள் ஈச்வர லக்ஷணங்கள். ஜீவனிடமும் சுருக்கமாக (மூன்று)குணங்களைக் காட்டுகிறூர் पदत्रये என்கிற காரிகையால். अनन्यार्हशेषत्वம்—ஸ்ரீமானுக்குத் தவிர வேறொருவருக்குத் தகாத ஸ்வாபவிகசேஷத்வம் ப்ரணவமென்ற முதற் பதத்தாலே ஸித்தம். அவன் தவிர வேறு உபாயமிராமை நமச்சப்தஸித்தம். வேறு புருஷார்த்தமிராமை நாராயணுய என்றதால் ஸித்தம். ப்ரணவம் ஒரு பதமாகுமோ; அகார உகார மகாரங்களாய் மூன்று பதங்களல்லவோ வென்னில்—एकवाक्यार्த்தத்தைக்கொண்டு அந்தந்த வாக்யத்தை இங்கே பதமென்றது.

இப்படி பராவர ஆத்மாக்களுக்குள்ள वैलक्षण्यங்கள் சொல்லப்பட்டன. இவ் விசேஷங்களையும் அறிந்தவர்க்கு இத் தத்துவ விஷயங்களிலே மதாந்தரங்கள் மூலமாக ஏற்படும் விபரீத புத்திகளெல்லாம் விலகும்; அவர்கள் கல்பித்த ஆகாரங்களெல்லாம் பொய்யென்றும் ஸித்திக்கும். தத்துவத்தில் விபரீத புத்தி போலே உபாயாந்தர ப்ரவ்ருத்யாதிகளும் போமென்று உபபாதிக்கிறூர் இப்படி ஸர்வம் இக்யாதியால். सर्वपद्माक्षरान्तःस्थं என்பது நாரதீய கல்பத்தில். 1-9. अत्यन्त—उदासीनன் சுபாசுப கர்மப்ரவ்ருத்திகளிலே

प्रतिफलनतुल्यैश्वर्यனென்றும், कर्मविशेषसिद्धैश्वर्यனென்றும், कदाचित् कर्मादिपरवशனென்றும், त्रिमूर्त्तिகளும் ஸமரென்றும், एकரென்றும், त्रिमूर्त्युत्तीर्णன் परतत्वமென்றும், ब्रह्मादिகளிலே ஒருவன் ஈச்வரனென்றும், स्वरूपपरिणामवானென்றும், निमित्तोपादानैक्यம் கொள்ள வொண்ணுதென்றும், ஜீவேச்வரர்கள் एकात्माவென்றும், उपाधिभिन्नभेदரென்றும், नित्यभिन्नाभिन्नரென்றும், ஜீவன் कर्ममात्राधीनशेषभावனென்றும், अनियतशेषभावனென்றும், जडனென்றும், ज्ञानमात्रस्वरूपனென்றும், नित्यमुक्तனென்றும், आरोपितभोगனென்றும், கர்த்தாவல்லனென்றும், ईश्वरनिरपेक्षकर्ताவென்றும், आप्रलयस्थायिயென்றும், आमोक्षस्थायिயென்றும், एकனென்றும், स्वनिष्ठனென்றும், स्वरूपतः कार्यभूतனென்றும், कार्यत्वप्रसङ्गरहितனென்றும், कर्ममात्रोपायனென்றும், मुक्तदशैயில் पाषाणकल्पனென்றும், स्वात्मानन्दमात्रतृप्तனென்றும், अत्यन्तस्वतन्त्रனுமென்றும், ஈச்வரனேடே एकीभूतனுமென்றும், व्यापारादिरहितனுமென்றும், विभागाविभागादिशक्तिमाனென்றும், आनन्दतारतम्यவானென்றும், व्यवस्थितसालोक्यादिभेदவானென்றும் மற்றும் இப் புடைகளிலுள்ள बाह्यकुदृष्टिमतங்களா(ளிலொ?)ன்றாலும் கலக்கம் வாராது.

இப்படியே ரக்ஷகனை श्रियःपतिயைப் பற்ற विश्वासदार्ढ्यமும், रक्षकान्तरान्वेषणமும், 'त्वं मेऽहं मे' என்று பிணக்கும் निरुपाधिकान्यशेषत्वभ्रमமும், देवतान्तरप्रावण्यமும், तद्भक्तसंसर्गமும், மற்றுமுள்ள असेव्यसेवादिरुचिயும், देहात्मभ्रमादिகளும், स्वतन्त्रात्मभ्रमादिகளும், स्वार्थपरिग्रहமும், भागवतापचारமும், आकिञ्चन्यविस्मृतिயும், संसा-

---

காரணமாகாதவன். प्रतिफलनம்—பிரதிபிம்பம். ஐச்வர்யமாவது நியமந கர்த்ருத்வாதிகள். ஆத்மா நிர்லேபமானதால் அதற்கு அவையிரா; ப்ரக்ருதி விசேஷத்திலுள்ள ஈச்வரத்வம் ப்ரதிபிம்பமான ஆத்மாவில் ஆரோபிதம்; ஆகையால் உண்மையான ஈச்வரத்வமுள்ள ஆத்மா இல்லை யென்று யோகமதத்தில் தேறும். த்ரிமூர்த்திகள்=ப்ரஹ்ம, விஷ்ணு, ருத்ரர்கள். ஏகர்—ஒரே ஆத்மாவாயிருப்பவர். த்ரிமூர்த்தி உத்தீர்ணன்—ப்ரஹ்மாதிகளுக்கு மேம்பட்ட பரமாத்மா. பரஹ்மாதிகளிலே ஒருவனுவது—நான்முகனுவதும் ருத்ரனுவதும். கர்மமாத்ரேதி. மோக்ஷத்தில் சேஷத்வம் கிடையாதென்றபடி. ஜடன் =ஸ்வயம்ப்ரகாசமாகாதவன் ஜ்ஞாநமாத்ர என்ற மாத்ர பதத்தால் ஜ்ஞாந-ஆச்ரயத்வநிஷேதம். भोगம்—ஸுகதுக்காதி ஆரோபிதம் என்று ஸாங்க்யமதம். विभाग-अविभागेति. ஒவ்வொரு ஆத்ம ஸ்வரூபமும் மோக்ஷத்தில் பலவாகப் பிரியும் சேருமென்று யாதவப்ரகாசமதம். இப் புடைகளில்—இந்த ப்ரகாரங்களில்.

விபரீதபுத்திகளைக் கூறினர்; விபரீதநிஷ்டையைக் கூறுகிறார். இப்படியே இதி. त्वं मेऽहं मे என்பது பட்டர்முக்தகம்; கீழே உரைக்கப்பட்டது. பிணக்கு=கலஹம். தேஹாத்மப்ரமாதி என்கிற ஆதிபதத்தால் இந்த்ரியாதிகளில் ஆத்ம ப்ரமத்தைக் கொள்வது. ஸ்வதந்த்ர ஆத்ம ப்ரமாதி என்கிற ஆதிபதத்தாலே ஜீவாந்தர பாரதந்த்ர்யத்தைக் கொள்வது. स्वार्थपरिग्रहம். எதையும் ஈச்வரனுக்காகக் கொள்ளவேண்டுமிறே; அதை விட்டுத் தனக்

रानुवृत्तिरुचியும், आत्मनाशादिभயமும், असदाचाररुचियும். शत्रुमित्रादिविभागनिरूपण
மும், बान्धवान्तरपरिग्रहமும், प्रयोजनान्तररुचियும், परमप्रयोजनवैमुख्यமும், மற்றும்
स्वनिष्ठाविरोधिகள் [என்பவற்றில்?]ஒன்றும் பின்னு(ன் நா)டாது.

इह निजपक्षविरुद्धैरीदृशनिष्ठाविरोधिभिश्चान्यैः । द्विचतुष्कसारवेदी गङ्गाहद इव न गच्छति क्षोभम् ॥

—o—o—

இத் திருமந்த்ரத்தில் வாக்யமும் வாக்யார்த்தமும் இருக்கும்படி எங்ஙனே யென்னில்—இத்தை एकवाक्यமென்றும், वाक्यद्वयமென்றும், वाक्यत्रयமென்றும் அவ்வோ संप्रदायங்களாலே अनुसन्धिப்பார்கள். இப்படி வாக்யார்த்தத்தையும் बहुप्रकारமாக வகுத்து अनुसंधानம் பண்ணுவார்கள்.

(1) एकवाक्यமானபோது, 'तस्य वाचकः प्रणवः' इत्यादिகளிற் படியே 'प्रणव-

---

காகக் கொள்வது. बान्धवान्तरம்=ஸர்வவிதபந்துவான பகவானைவிட வேறு பந்து. वैमुख्यம்=பற்றற்றமை. பின்னுடாது=தொடராது.

இவற்றை ஸங்க்ரஹிக்கிறார் इहेति. द्विचतुष्कसारवेदी — இருநான்கை யுடைய அஷ்டாக்ஷரத்தின் ஸாரத்தை யறிந்தவன். गङ्गाहृद इव—என்றும் ஆழமான கங்கையின் மடுவைப் போலே யிருந்து. इह—பராவரதத்துவ விஷய ங்களில் निजपक्षविरुद्धैः—தமது மதத்திற்கு விருத்தங்களான கீழ்க்கூறிய ஆகாரங்களாலும். अन्यैः அவற்றைவிட வேறான, ईदृशनिष्ठाविरोधिभिः—தன் பக்ஷம் போலே ஆதரிக்கவேண்டிய தனது நிஷ்டைகளுக்கு விரோதிகளான கீழ்ச்கூறிய விச்வாஸமாந்த்யாதிகளாலும் क्षोभं கலக்கத்தை न गच्छति—பெறான். 'न प्रहृष्यति सम्माने नावमाने च कुप्यति । गङ्गाहृद इवाक्षोभ्यः यः स पण्डित उच्यते ॥ 'என்ற வசனம் இங்கு நினைக்கத்தக்கது. கங்கையின் மடு மிக்க ஆழமானபடியாலே எவ்வளவு கலக்கினாலும் கலங்காமல் தெளிந்தேயிருக்கும்.

இப்படி पदपदार्थशोधनத்தினாலே பராவர தத்துவங்களுக்கு ஸித்தாந்தத்தி லுள்ள விசேஷங்களும், அந்யமதங்களில் சொல்லும் விசேஷங்கள் அவாஸ் தவங்களென்பதும் தெளிந்தாலும் பதார்த்தசோதநகாலத்தில் ப்ரணவம் अखण्डமும் सखण्डமுமென்றும், நமச்சப்தத்திலே அக்ஷரங்களைப் பிரித்தும் பிரிக்காமலும் அநேகார்த்தங்களென்றும், கடைசியில் சதுர்த்தியை संप्रदान-चतुर्थी என்றும் तादर्थ्य चतुर्थीயென்றும் சொன்னதால் அர்த்தபேதம் தெரிகிறது. अखण्डமென்றபோது வேறு பதத்தோடு சேர்ந்தே வாக்யமாகும். सखण्ड மென்றபோது தனக்குள் வாக்யஸமாப்தி யாகும், அதனால் திருமந்த்ர த்தில் எத்தனை வாக்யங்கள், வாக்யார்த்த யோஜனைகள் யாவை யெவ்வாறு என்கிற கேள்விகளைக் கருத்திற்கொண்டு ப்ரச்னம் பண்ணிப் பத்துவிதமாக வாக்யார்த்த யோஜனைகளை அறிவிக்கத் தொடங்குகிறார் இத்திருமந்த்ரத்தில் இதி. வகுத்து=பிரித்து.

ஏகவாக்யமென்ற பக்ஷத்தில் இரண்டு விதமான யோஜனைகள்; வாக்ய த்வயபக்ஷத்தில் மூன்று; வாக்யத்ரய பக்ஷத்தில் ஐந்து, மொத்தம் பத்து.

முதற்பக்ஷத்தை யருளிச்செய்கிறார் एकेति. तस्येति. योग सूत्र 1-1.27, கீழே

प्रतिपाद्यस्वभावविशिष्टाय नारायणाय नमः' என்று அந்வயமாம். இப் ப்ரணவம் தானே नामமாகவுமவற்றாய் நிற்க 'अध्यक्षार्थतयोङ्कारः केवलं नैव साधकः' என்று शाण्डिल्यायुक्तप्रक्रियைபாலே व्यापकमन्त्रங்களில் नामान्तरம் व्यक्त्यर्थம்.

[ङ] இந்த யோஜநாவிசேஷம் अहिर्बुध्न्यसंहितोक्तமான स्थूलानुसन्धान-प्रकारத்தைப் பார்த்தால் உபாயபரம். இப்படியானாலும் स्वरूपपुरुषार्थங்கள்

---

पुरुषविशेषः ईश्वरः என்று சொல்லி अखिलहेयप्रत्यनीकனை அவனுக்கு ओम् என்ற சொல் வாசகமென்றதால் अखण्डமென்று தெரிகிறது: सम्बन्धशब्दங்களுக்கு तत्संज्ञकனென்றே பொருளாகையால் प्रणवप्रतिपाद्याय नाराणाय என்கிற அர்த்தமாகும். रूढशब्दங்களுக்கு அதனர்த்தத்திலுள்ள அஸாதாரண தர்மமே ப்ரவ்ருத்தி நிமித்தமாகையால் இந்த ப்ரணவமும் நாராயணனிடத்திலிருக்கும் அஸாதாரண தர்மத்தோடு அவனைச் சொல்வதாகுமென்று கருதி प्रणवप्रतिपाद्य-स्वभावविशिष्टाय என்றது. प्रणवप्रतिपाद्य என்பது ஸ்வரூப கீர்த்தநம்; அர்த்தத்தில் சேர்ந்ததன்று. அந்த அஸாதாரண தர்மம் எதென்னில்—जगत्कारणत्वादिகளென்றார் ஸாரதீபிகையில் योगसूत्रத்தில் क्लेशकर्मविपाकाशयैरपरामृष्टः ईश्वरः என்று சொல்லியிருப்பதால் तस्य वाचकः என்றவிடத்து तस्य என்பதற்கு अखिल-हेयप्रत्यनीकत्वविशिष्टனுக்கு என்று அர்த்தம் கிடைப்பதால் அது அஸாதாரண தர்மமென்றார் ஸாரப்ரகாசிகையில். ओम् என்பது अवधातुவிலிருந்து मनिन् प्रत्ययம் வைத்து நிஷ்பந்நமாகிறதென்று கூறி. ஸர்வ ப்ரகார ரக்ஷகத்வமென்கிற யோகார்த்தம் ப்ரவ்ருத்திநிமித்தமென்றார் ஸாராஸ்வாதிநியில். நாராயண சப்தத்திலே கருதப் பெற்ற தர்மத்தைவிட வேறு தர்மத்தை ப்ரவ்ருத்தி நிமித்தமாகக் கொண்டால் புநருக்தி தோஷமில்லை. ப்ரணவமே போதுமாயிருக்க நாரயண சப்தமெதற்கென்பதற்கு உத்தரம் இப் ப்ரணவம் இதி. अध्यक्षार्थतया = இதர தேவதையைச் சொல்லாதென்பது ஸ்பஷ்டமாயிராமையால் நாராயணபதமும் வேண்டும். व्यक्त्यर्थம் = ஸ்பஷ்டமாகைக்கு. पक्वयोगशरीराणां एवं ज्ञानवतामपि என்பது उत्तरार्धம். ஜ்ஞாநவான்களுக்கும் ஸ்பஷ்டமாகவறியவாகாத அம்சம் ஸாதகமாகாதாகையால் வேறு பதம் வேண்டுமென்றதாயிற்று. ஆனால் ओङ्कारத்தை விட்டிடலாமே யென்னில்—श्रुतिயில் ப்ரணவத்தையே எங்கும் ப்ரசம்ஸித்திருப்பதால் அதுதான் யோகிகளுக்கு ப்ரதாநமான மந்த்ரமாகும். சப்தச்சிறப்பு உண்டு. நாராயணாதி சப்தங்கள் விவரணத்திற்காக வேற்பட்டவை. ओङ्कारம் அவ்யக்தமாயிருப்பதற்குக் காரணம் வேதத்தில் அதற்குப் பலவித பொருள்கள் கூறியிருப்பதும் லோகத்தில் அநுஜ்ஞை யென்ற பொருளிலும் ப்ரயோகித்திருப்பதுமாம். இவ் வளவால் ओङ्कारம் रूढமாய் நாராயண விசேஷணமாயிற்று. அப்போது சதுர்த்தீ வேண்டுமே யென்னில்—இதை அவ்யயமென்று கொண்டார்கள். ஆக இந்த மந்த்ரம் ஒரே வாக்யமென்று ஏற்பட்டது. அர்த்தமென்னவெனில்—உபாய பரமாக முதல் யோஜனை. புருஷார்த்த பரமாக இரண்டாவது யோஜனை. முதலில்—ப்ரணவார்த்தமான நாராயணனிடத்தில் भर ஸமர்

இதிலே अन्तर्गतங்கள்.

[ख] 'बद्धाञ्जलिपुटा हृष्टा नम इत्येव वादिनः' இத்யாதிகளைப் பார்த்துப் प्राप्यान्तर्गत-शेषवृत्तिपरமாகவும் अनुसन्धिப்பர்கள். இவ் वृत्तिविशेषமும் स्वरूपानुसन्धानपूर्वकம். இதுவும் कृतोपायர்க்கு இவ்வளவு ரஸிக்குமவஸ்தையிலும் உபஜீவ்யம்.

(2) இவ்விரண்டு अनुसन्धानமும் प्रतिष्ठितமாம்போது ஸ்வரூபவிவேகம் வேணும். அதற்காக वाक्यद्वयமாக अनुसन्धिக்கும் போது—

[क] 'अकारनारायणशब्दवाच्य—सर्वरक्षकत्व—सर्वाधारत्वादिविशिष्टனானவனுக்கே நான் निरुपाधिकानन्यार्हशेषभूतன், எனக்குரியேனல்லேன், ஒன்றைப் பற்ற निरु-पाधिकस्वामियுமல்லேன், निरपेक्षस्वतन्त्रனுமல்லேன்' என்றதாம். अकारनारायणशब्द-ங்களிரண்டும் भगवन्नामமாகையாலே पुनरुक्ति வாராதோவென்னில்—அப்போது व्युत्पत्तिविशेषसिद्धமான அர்த்தவிசேஷத்தை விவக்ஷித்து ஒன்று விசேஷண

---

பணருபமான நமநத்தைச் செய்கிறேன் என்றதாம். ஸ்வஸ்வரூப ஜ்ஞாநமும் புருஷார்த்தஜ்ஞாநமு மிராத போது உபாயாநுஷ்டாநம் செய்ய வாகாதே. அவற்றை எதுமூலம் அறிகிறதென்னில்—இதனாலே அதுவும் ஆக்ஷிப்தமாகலாம். அதாவது அர்த்தஸித்தமாகலாம்; சொல்லாமலே கிடைக்கு மென்றபடி. சரணாகதி—பரந்யாஸம் என்கிற அர்த்தத்திற்போல் ஸ்வயம் ப்ரயோஜநமான வந்தனத்திலும் நமச்சப்தம் ப்ரயோகிக்கப்படுகிறதை बद्धाञ्जलिपुटाः என்கிற வாக்யம் அறிவிப்பதால் புருஷார்த்தமான நமநமே நமச்சப்தார்த்தமாயில் புருஷார்த்த பரமென்கிற இரண்டாவது யோஜனையாம். बद्धाञ्जलीति. (भा. शा. 344. 45) ச்வேதத்வீபவாஸிகள் அஞ்ஜலியாகக் கைகளைக் குவித்துக் கொண்டு மிக்க ஆநந்தத்துடன் நம: நம: என்றே சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இங்கே ச்வேதத்வீபத்தில் வஸிப்பவரின் இவ் விருப்பானது பரமபதத்தில் முக்தராயிருப்பவரின் செயல் என்று மேலே சொன்னதால் புருஷார்த்தரூபமென்று தெரிகிறது அதனால் ப்ராப்யமான மோக்ஷத்தில் அடங்கியிருக்கும் ஸ்வயம் ப்ரயோஜநமாகிற மாநஸ வாசிக காயிக நமஸ்காரமாகிற சேஷவ்ருத்தியே பொருளாகலாம். இப் பக்ஷத்திலும் ஸ்வரூபாதிகள் அர்த்தஸித்தம். உபாயாநுஷ்டாநம் செய்திருப்பவரும் இந்த அர்த்தத்தில் ஊன்றி யிருக்கவாமென்றிதற்குவிசேஷமென்கிறார் இதுவுமிதி.

வாக்யத்வயபக்ஷத்தைத் தொடங்குகிறார் இவ்விதி உபாயாநுஸந்தாநமும் புருஷார்த்தாநுஸந்தாநமும் प्रतिष्ठितமாம்போது = நிலைத்திருக்கைக்கு ஸ்வஸ்வரூபாநுஸந்தாநம் அவச்யமாகும். அதற்காக மந்த்ரத்தை ஸ்வரூபபரமாக யோஜிப்பது. அப்போது ப்ரணவத்தை மூன்றக்ஷரமாகப் பிரித்து நாராயணாய என்பதை அதோடு சேர்த்து, லுப்த சதுர்த்தியான அகாரத்தை நாராயணாய என்பதற்கு விசேஷணமாக்க வேண்டும். நம: என்பதைத் தனிவாக்ய-மாக்க இரண்டு பதமாக்கவேண்டும். तथा च अाय नारायणायैवाहम्; न मम என்றதாகும். அதனர்த்தத்தைக் கூறுகிறார் முதலில் अकारेति. அர்த்தவிசேஷத்தை = ரக்ஷகத்வம் आधारत्वம் என்றாற் போன்ற தனித்தனி அர்த்தத்தை, ஒன்று

மாகக் கடவது. अकारवाच्यனை நாராயணனுக்கு என்றும் पुनरुक्ति परिहरिக் கலாம். भागवतेष्வும் नामधेयமாயிருக்க वासुदेवादिशब्दத்தோடே समानाधिकरणமா காநின்றதிறே. सर्वबीजाक्षरवाच्यமான ஸர்வகாரணம் देवतान्तरமோவென்று शङ्कियாதபடி நாராயண னென்று விசேஷிக்கையாலும் सप्रयोजनம். மந்த்ரங் களுக்குப் पदक्रमம் अध्ययननियतம்; அந்வயம் अर्थानुगुणமாகக் கடவது

இப்படி वाक्यद्वयமானல் திருமந்த்ரம் முழுக்க स्वरूपपरம். இந்த स्वरूपपर- योजनैயைப் பற்ற, 'திருமந்த்ரத்திலே பிறந்து द्वयத்திலே வளர்ந்து द्वयैकनिष्ठ னாய்' என்று பூர்வர்கள் அருளிச்செய்தார்கள். பிறக்கையாவது—स्वरूप- ज्ञानம் பிறக்கையாலே, 'அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்'

---

விசேஷணமென்றதாலே आय என்பதையும் விசேஷ்யமாக்கலாம். ஒன்று रूढம். ஒன்று यौगिकம். இரண்டையுமே रूढமாகக் கொண்டால் புநருக்தி வருமே யென்ன அப்போது अ என்பதற்கு அகாரவாச்யன் என்று பொருள் கொள்ளலாமாகையால் ப்ரவ்ருத்திநிமித்தம் வேறென்கிறர் அகார வாச்யனை என்று. அப்போது அ என்பது லாக்ஷணிகமாகிறதே என்னில்- ஆகில் அகாரத்திற்கு ஸர்வகாரணத்வம் रूढ्यर्थமாகக் கொண்டு, நாராயண சப்தத்திற்கு வேறு அஸாதாரணதர்மம் ப்ரவ்ருத்திநிமித்தமாக வைத்துப் புநருக்தியைப் பரிஹரிக்கலாம். அகாரத்திற்கு ஸர்வகாரணத்வம் எங்ஙனே ப்ரவ்ருத்தி நிமித்தமென்னில்—'समस्तशब्दमूलत्वात् अकारस्य स्वभावतः। समस्तवाच्य मूलत्वात् ब्रह्मणोऽपि स्वभावतः ॥ वाच्यवाचकसम्बन्धः तयोरर्थात् प्रतीयते ।' என்றதால் ஸர்வசப்தகாரணமான அகாரரூப அக்ஷரத்திற்கு ஸர்வகாரணம் रूढ्यर्थமா கத் தெரிகிறதென்கிறர் सर्वबीजेति. ஸர்வசப்தமூலமான வென்று பொருள். நாராயணனுக்கே ஸர்வகாரணத்வமாகையாலே आय என்பதே போதுமே; நாராயணய என்பதெதற்காக என்ன—ச்ருத்யாதிகளில் शिव एव केवलः இத்யாதி களைக்கொண்டு ருத்ராதிகளுக்கு ஸர்வகாரணத்வ சங்கை வருமென்று அதைப் பரிஹரிப்பதற்காக நாராயணசப்தமென்பதற்காக தேவதாந்தரமோ இதி. இப்படி வாக்யத்வயமாகில் ओं ना रायणाय नमः என்று தானே மந்த்ரவர்ணக்ரமம் வேண்டும்; ஒரு வாக்யத்தினிடையில் வாக்யாந்தரமான நம: என்பது புகுமோ என்ன, உத்தரம் மந்த்ரங்களுக்கு இதி. இந்த யோஜனைக்கு ஸம்ப்ரதாயத்தை ப்ரமாணமாகக் காட்டுகிறர் திருமந்த்ரத்திலே இதி. அநாதியாய் நிர்விகார மான ஆத்மாவுக்குப் பிறப்பும் வளர்ச்சியும் கூடாமையால் திருமந்த்ரத்திலே பிறப்பு எங்ஙனே என்ன, உத்தரம் பிறக்கையாவது இதி. யாக விதிவாக்ய த்தை யாகோத்பத்திவாக்யமென்று மீமாம்ஸகர் வ்யவஹரிப்பது போல் திருமந்த்ரத்தை ஆத்மோத்பத்தி மந்த்ரமென்கிறது. ஜ்ஞாநோத்பத்தியே பொருளென்றபடி. இந்த ப்ரயோகத்திற்குத் திருச்சந்த வ்ருத்தத்தையும் ப்ரமாணமாக்குகிறர் அன்று இதி. அன்று—தேஹஸம்ச்லேஷமாகிற பிறவியை அடைந்த முதல்க்ஷணத்திலே. நின்றது (64) என்று பாசுரவாரம்பம். ஜ்ஞாநப் பிறவியைப் பிறவியாகச் சொல்வதை तत् द्वितीयं जन्म இத்யாதி

என்கிற முன்புற்ற நிலை கழிகை. அதாவது—தன் இசைவாலும் अन-न्यशेषனாய் अनन्याधीनனாய், அதடியாக अनन्यप्रयोजनனாய், अनन्यशरणனாகை. வளருகையாவது—अधिकारविशेषानुरूपफलविशेषविषयज्ञानविशेषத்தாலே उपायपरि-ग्रहம் பண்ணுகை. द्वयैकनिष्ठனாகையாவது—द्वयानुसंधानத்தாலே उपायान्तरத்திலும் प्रयोजनान्तरத்திலும் துவக்கற இதிற் சொன்ன உபாயத்திலும் ப்ரயோஜநத்திலும் प्रतिष्ठितனாகை. இப்படித் திருமந்த்ரமும் द्वयமும் கூட स्वरूप-उपाय-पुरुषार्थங்களைக் காட்டுகிறன.

(ख) இவ்விரண்டு வாக்யமான யோஜநைதன்னிலே திருமந்த்ரம் முழுக்க स्वपरिकरात्मसमर्पणपरமென்றும் अनुसंधिப்பார்கள். அப்போது ப்ரணவத்தில் मकारம் प्रथमान्तமே யாக அமையும். हविस्समर्पणन्यायத்தாலே

---

களிலும் காண்க. மறந்திலேன் என்று மறதியில்லை யென்றதாலே இங்குச் சொன்ன பிறக்கை ஜ்ஞாநமென்று தெரிகிறது. மறந்திலேனென்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் முன்புற்றநிலைகழிகை இதி. ஜ்ஞாநத்திற்கு முன்னிருந்த, அன்று நானென்ற நிலையாவது அஜ்ஞாநாவஸ்தை. அது கழிவது சொல்லாமலே விளங்கும். அதனால் சொன்னதற்குக் கருத்து வேறு கூறுகிறார் அதாவது இதி. பகவச் சேஷத்வஜ்ஞாநம் வருவதற்கு முன் அந்ய சேஷத்வத்தை யிசைந்திருந்தேன்; அதை விட்டேன்; அதுபோல் ப்ரயோஜநத்திற்காக வேறு உபாயத்தையும் இசைந்திருந்தேன்; அதையும் விட்டே னென்றதாயிற்று. ஆக இப்பாசுரத்தில் ஸ்வரூப ஜ்ஞாநம் உபாய விசேஷ ஜ்ஞாநம் புருஷார்த்த ஜ்ஞாநம் மூன்றும் விவக்ஷிதமாகும். இது அதிகாரம். द्वयमन्त्रம் உபாயாநுஷ்டாநத்திற்கு உபயோகியாகையால் மூலமந்த்ரத்தால் வந்த ஜ்ஞாநத்திற்குப் பின்னை அநுஷ்டாநத்தை வளர்ச்சி யென்கிறார். द्वयம் தவிர வேறு மந்த்ரங்களிலும் வேதாந்தாதிகளிலும் ப்ரவ்ருத்தி யுடையவனுக்கு द्वयैकनिष्ठःத்வ மெங்ஙனே யென்ன, அதன் கருத்தை யுரைக்கிறார் द्वयेति. இந்த ஸ்வரூப பரமான யோஜநை உபாயோபேயரூபார்த்தங்களுக்கும் உபலக்ஷணமாகுமென்று சொல்லவேண்டா, அவை த்வயத்தாலே கிடைக்குமென்கிறார் இப்படி இதி. கூட = இரண்டும் சேர்ந்து.

வாக்ய த்வயமென்கிற பக்ஷத்தில் மூன்றுவித யோஜநைகள். அவற்றில் ஸ்வரூப பரயோஜநை முடிந்தது. உபாய பரயோஜநை மேலே. இவ்விரண்டு இத்யாதியால். இதன் பிறகு புருஷார்த்த பர யோஜநையும் வரும், இந்த ஸமர்ப்பண பக்ஷத்திலும் முன் போலே வாக்யாந்வயம், இதில் 'நாராயணனுக்கு என்னை ஸமர்பிக்கிறேன்' என்று சொல்லவேண்டியிருப்பதால். ப்ரணவத்தின் மகாரத்தை த்விதீயாந்தமாக மாற்ற வேண்டுமென்பதில்லை யென்ற கருத்தாலே கூறுகிறார் அப்போது இதி (அப்போதும் என்றிருக்கலாம்). அமையும்—பொருந்தும். நான் ஸமர்ப்பிக்கப்படுகிறேன் என்று ப்ரயோகிக்கலாமாகையால் மகாரம் ப்ரதாமாந்தமேயாம். ஹவிஸ்ஸமர்ப்பண ஸ்தலத்திலும் इदमिन्द्राय என்று ப்ரதாமாந்தமாகவே யுளது; அது போலா

निरुपाधिकமான आत्महविஸ்ஸு निरुपाधिकदेवतैயாய் अकारवाच्यனான நாராயண னுக்கே भरமாக समर्पितமென்றதாயிற்று. இப்படி निरुपाधिकமான आत्मयाग த்தில் 'नमः, என்று தன்னோடு தன் துவக்கறுத்து, எனக்கு भरமல்லேன் என்றதாயிற்று. 'इदमिन्द्राय, न मम' என்னுமாப்போலே இங்கும் परसंबन्ध- विधियிலும் स्वसंबन्धनिषेधத்திலும் प्रवृत्तமாகையாலே वाक्यद्वयமும் सप्रयोजनம். இந்நமஸ்ஸு ஸமர்ப்பணந்தன்னிலும் பரநிரபேக்ஷ கர்த்ருத்வாதிகள் நிஷேதிக்கையிலே தத்பரமாகவுமாம். வேறொருத்தருக்கும் भरமன்று, என க்கும் भरமன்று என்று वाक्यद्वयाभिप्रायமாகவுமாம். திருமந்த்ரம் आत्मनिवेदन- परமென்னுமிடத்தை निरुक्तத்திலே सूक्ष्मग्रन्थेण स्वात्मानं देवाय निवेद्य' என்று

---

மிங்குமென்பதற்காக हविस्समर्पणन्यायத்தாலே யென்றது. இதற்கு 'समर्पित மென்றது' என்றவிடத்தில் அந்வயம். முன் வாக்யத்திலும் அந்வயிக்கலாம். [ஹவிஸ்ஸாவது தேவதைக்கு த்யாகம் செய்யப்படும் வஸ்து. தேவதை யாவது த்ரவ்ய த்யாகத்திற்கு உத்தேச்யமான வ்யக்தி.] ஸமர்ப்பணத்திற்கு முன்னே இந்த்ரனுக்கு ஹவிஸ்ஸாகாமலிருந்த வ்ஸ்துவுக்கு அவன் பின்னே தேவதையாகிறான். அது போலிங்காகாது. ஜீவாத்மா என்றும் அவனதே யாகையால் ஸமர்ப்பணத்திற்கு முன்னும் அது அவனுக்கு ஹவிஸ்ஸாகும். ஹவிஸ்ஸாயிருக்கை அதனால் நிருபாதிகம். ஆக எப்படி ஸமர்ப்பணமாம்? ஸமர்ப்பணமாவது शेषत्वानुसंधानமே யென்றால் அப்போது ஸ்வரூப பரமான முதல்யோஜனையே யாகுமே யென்னில்—ப்ரபன்னன் भरसमर्पणம்செய்யவேண்டி யிருப்பதால் भरविशिष्टात्मा என்று சேர்த்து ஸமர்ப்பணம் கூடும். भरமான பக்தி யோகம் ஸமர்ப்பணத்திற்கு முன் அவனது ஹவிஸ்ஸாகாதே என்று இவ்வாக்யத்தின் பொருள். யாகத்தில் ஸமர்ப்பணத்திற்கு முன் இவனதாக வஸ்து இருப்பதால் इदमिन्द्राय न मम என்றவிடத்தில் நமம என்பதுவேண்டும். இவ்வாத்மா இவனதன்றே யாகையால் இங்கே नमम என்பதெதற்கென்ன அருளிச்செய்கிறார் இப்படி நிருபாதிகமான இதி. கீழே ஹவிஸ்ஸுக்கு निरु- पाधिकत्व மாவது இயற்கையில் அவனதாகவே யிருக்கை; தேவதைக்கு நிரு பாதிக த்வமாவது ஸ்வபாவமாய் ஸ்வாமியாயிருக்கை. இங்கே யாகத்திற்கு நிருபாதிகத்வமாவது யாகவிஷயமான ஆத்மாவைப் பற்ற நித்ய ஸ்வாமியான வனைக் குறித்தே யாகமிருக்கை. ஆனாலும் भरविशिष्टனைக் கொண்டதால் भरம் எனதன்றென்பதிலே முடிவானாலும் ஸமர்ப்பணம் பொருந்துமென்றபடி. उकारத்தாலேயே இது கிடைக்குமே யென்ன, வேறு கருத்துக் கூறுகிறார், இந்நமஸ்ஸு இதி. कर्तृत्वादि என்ற ஆதி பதத்தில் ममता-फलसंगங்களைக் கொள் வது. न मम स्वातन्त्र्यम्, न मम हि स्वत्र् என்று சொல்வதாம். இங்கே அத்யா ஹாரதோஷம்; हविस्समर्पणवाक्यशैलिக்கும் இது பொருந்ாதென்று வேறு கருத்துக் கூறுகிறார் வேறு இதி. गोवलीवर्दन्यायம் கொள்வதென்றபடி இந்த ஸமர்ப்பண பக்ஷத்திற்கு ஸம்ப்ரதாயத்தை ப்ரமாணமாக்குகிறார் திருமந்த்ர மிதி—நிவேதநமாவது ஸமர்ப்பணம்.

அருளிச்செய்தார். இப்படி श्रीवैकुण्ठगद्यத்திலும். श्रीमता मूलमन्त्रेण मामैकान्तिकात्यन्तिकपरिचर्याकरणाय परिगृह्णीष्वेति याचमानः प्रणम्य आत्मानं भगवते निवेदयेत्' என்று இவ்வர்த்தம் दर्शितम्.

(ங) வாக்யந்தோறும் ஒரு प्रार्थनापदத்தை अध्याहरித்துத் திருமந்த்ரம் முழுக்க द्वयத்தில் उत्तरखण्डம்போலே इष्टप्राप्त्यनिष्टनिवृत्तिरूपपुरुषार्थप्रार्थनापरமாகவும் अनुसन्धिப்பார்கள். அப்போதும் स्वरूपानुसंधानம் இதிலே अन्तर्गतம். स्वरूपमात्रपरமானபோதும் पुरुषार्थविशेषம் सूचितம். அதிலுபாயமும் प्रार्थनैயும் तत्तत्प्रमाणवशத்தாலே வரும். இம் मन्त्रोत्पाद्यங்களான शेषत्वज्ञानादिகள் முன்பு प्राप्तங்களல்லாமையாலே இம் மந்த்ரம் முழுக்கப் प्राप्यपरமென்றது अन्यपरम्. எங்ஙனேயென்னில்—प्राप्यपरமென்றது प्राप्यप्रतिपादकமென்றபடி யன்று. शब्दத்தால் उत्पाद्यமான ஜ்ஞாநம் शब्दத்துக்குப் प्रतिपाद्यமன்றிறே.

---

வாக்யத்வயபக்ஷத்தில் மூன்றாவது யோஜனையை யறிவிக்கிறார் வாக்யந்தோறுமிதி. प्रार्थनापदமாவது स्याम् என்பது. नारायणाय आयैवाहं स्याम, न मम स्याम्, அவனுவப்புக்காகச் செய்பவனாவேன், எனக்காக அல்லேனென்றபடி, ஸ்வரூப பரயோஜனையாகில் உபாயாதிகள் த்வயமந்த்ரத்தினின்று கிடைக்குமெனலாம்; இது புருஷார்த்த பரமென்றால் இதற்கு முன்னே स्वरूपज्ञानம் எதுமூலமாக ஸித்திக்குமென்ன, உத்தரம் அப்போதும் இதி. चतुर्थीயானது तादर्थ्यத்தைச் சொல்லிப் பிறகு புருஷார்த்தமான கைங்கர்யத்திலே முடிவதால் முதலில் ஸ்வரூபஜ்ஞானமும் இங்கே உண்டாகிறதென்றபடி. இதுபோல் ஸ்வரூபபரயோஜனையில் மற்ற யோஜநார்த்தங்கள் ஸித்திக்குமா என்ன, அங்குள்ள வாசியைத் தெளிவிக்கிறார் स्वरूपमात्रेति. சேஷத்வம் ஸ்வாபாவிகமெனறால் அதற்குத் தக்க புருஷார்த்தம் கைங்கர்யமென்பது கூறாமலே விளங்கும். மற்ற புருஷார்த்தம் அபுருஷார்த்தமாம். இதற்கு ப்ரார்த்தனையோ, இதற்காக உபாய மின்னதென்றோ அறியலாகாது. வேறு ப்ரமாணவாக்யங்களைக் கொண்டு தான் அறியவேண்டுமென்றபடி.

இங்கு மூன்றாவது யோஜனையை प्राप्यपरமென்பது. சிலர் முழுக்க= எல்லா யோஜனையும் ப்ராப்யபரமே யென்பர். பலன் போலே ஜ்ஞானமும் ப்ராப்யமெனப்படுமே; प्राप्यं ज्ञानं ब्राह्मणादित्यादि காண்க. ஆக ஸ்வரூப ஜ்ஞானம், உபாயஜ்ஞானம் फलஜ்ஞானமென்கிற ப்ராப்யங்கள் மூன்று யோஜனையிலென்று விளக்குவர். இது தகாது. இப்படி உலகில் எல்லா வாக்யமும் ப்ராப்யபரமாகலாம். ஜ்ஞானம் प्राप्यமானாலும் வாக்யம் தத்பரமாகாது. तत्परமென்பதற்கு அதை போதிக்கிறதென்று பொருள். வாக்யமானது அர்த்தத்தை போதிக்குமே யல்லது ஜ்ஞானத்தை போதிக்காது; ஜ்ஞானத்தையுண்டாக்குமெனலாம். அவர்கள் प्राप्यपरமென்பதற்கு நினைத்திருக்கும் பொருள் प्राप्योत्पादकமென்பது, प्राप्यप्रतिपादकமென்பதன்று. மூன்றாவது யோஜனை प्राप्यपरமெனபதற்கு प्राप्यफलप्रतिपादकமென்பது பொருள். இந்த வாசியை யறிவிப்பதாகும் இம மந்த்ரேத்யாதிவாக்யங்கள். எங்ஙனேயென்னில் என்பதற்கு ஏனென்னில் என்று பொருளாம்,

(6) திருமந்த்ரம் மூன்று वाक्यமானபோது स्वरूपமும் पुरुषार्थமும் சொல்ல உபாயம் आर्थமாதல், ஸ்வரூபமும் உபாயமும் சொல்லப் पुरुषार्थம் आर्थமாதல், உபாயமும் पुरुषार्थமும் சொல்ல ஸ்வரூபம் आर्थமாதல், स्वरूपोपायपुरुषार्थங்கள் இடையே शाब्दங்களாதல் ஆகக்கடவது எங்ஙனேயென்னில்—

'अकारार्थायैव स्वमहमथ मह्यं न; निवहा नराणां नित्यानामयनमिति नारायणपदम् ।
यमाहास्मै कालं सकलमपि सर्वत्र सकलास्ववस्थास्वाविस्स्युर्मम सहजकैङ्कर्यविधयः ॥'

என்கிறபடியே—ப்ரணவமும் नमस्सும் ஸ்வரூபத்தை शोधिக்கிறன; மூன்றாம் பதம் ப்ரணவத்திற் சொன்ன तादर्थ्यத்தைப் पुरस्करिத்துக்கொண்டு अध्याहृतமான क्रियापदத்தோடே கூடிப் पुरुषार्थप्रार्थनार्थம். அப்போது अनिष्टनिवृत्तिप्रार्थனை अर्थस्वभावத்தாலே வரக்கடவது. द्वयத்திலும், 'भवांस्तु सह वैदेह्या' इत्यादिகளிலும் சொல்லுகிறபடியே कैङ्कर्यप्रतिसंबन्धियும் सपत्नीकனான படியாலே இங்கும் ஸலக்ஷ்மீகனான நாராயணன்பொருட்டாவேன் என்றபடி. 'नारायणाय' என்கிற இதுக்குக் क्रियापेक्षை உண்டாகையால் ஔசித்யத்தாலே 'भवेयम्' என்றொரு பதம் अध्याहार्यம். 'வழுவிலாவடிமை செய்யவேண்டும்' என்றும், 'அடி

---

வாக்யமொன்றென்ற பக்ஷத்தில் இரு யோஜனைகளும், வாக்யமிரண்டென்ற பக்ஷத்தில் மூன்று யோஜனைகளும் தெரிவிக்கப்பெற்றன. இனி வாக்யம் மூன்றென்ற பக்ஷம். அதில் ஐந்து யோஜனைகள் கூறப்பெறும். இங்கே மூலத்தில் நான்கு வகைகள்தாமே சொல்லப்பட்டன; ஐந்தல்லவேயென்று நினைக்கவேண்டா. ஸ்வரூபமும் புருஷார்த்தமும் சொல்லுமென்கிற முதல் வாக்யத்திலே இரண்டு யோஜனைகள் கருதப்பெறும். இரண்டு வாக்யங்கள் ஸ்வரூப பரமாய் ஒன்று புருஷார்த்த விஷயமாக முதல் யோஜனை; ஒன்று ஸ்வரூபபரமாய் இரண்டு புருஷார்த்த விஷயமென 2வது யோஜனை. இவ்விரண்டும் முதல் வாக்யப்பொருள். ஸ்வரூப—உபாய—புருஷார்த்தங்களிலே ஏதேனும் இரண்டைக் கொண்டு ஒன்றை விட்டுச் செய்யும் யோஜனைகள் நான்கு. மூன்றையும் கொண்டது கடைசி யோஜனை. முதல் யோஜனைக்கு பட்டரஷ்டச்லோகீபத்யம் ப்ரமாணமென்கிறார் अकारेति—அகாரவாச்யனுக்கே யாவேன் நான் என்று ப்ரணவார்த்தம். நானெனக்கல்லேன் என்றது नमःபதார்த்தம். இரண்டு வாக்யமும் ஸ்வரூபபரம். நரசப்தார்த்தரான நித்யமான ஜீவர்களுக்கு அயநமென்று நாராயணபதம் எவனைச் சொல்லுகிறதோ, அவன்பொருட்டு எல்லாக் காலத்திலும் எல்லாத் தேசத்திலும் எல்லா நிலைகளிலும் எனக்குக் கைங்கர்யங்கள் எழுந்த வண்ணமிருக்க வேணுமென்று புருஷார்த்த ப்ரார்த்தனை மூன்றாவது வாக்யமான நாராயணாய என்பதன் பொருள். என்கிறபடியே என்பதற்கு சோதிக்கிறன என்பதிலும் पुरुषार्थप्रार्थनार्थமென்பதிலும் அந்வயம். அநிஷ்ட நிவ்ருத்தி, இஷ்ட ப்ராபதி என்ற இருவகையில் இஷ்டப்ராப்தியே சொல்லப்பெற்றது. அது அநிஷ்ட நிவ்ருத்திக்குப் பிறகாகையாலே அதுவும் சொன்னதுபோலாம். பட்டருக்கு மூலமான வாக்யங்களையும் உதாஹரிக்கிறார் வழுவிலா இத்யாதி

யேனை யாட்கொண்டருளே' என்றும், 'नित्यकिङ्करतां प्रार्थये' என்றும், 'नित्यकिङ्करो भवानि' என்றும் இப் प्रार्थनैயைப் प्रयोगித்தார்களிறே.

तादर्थ्यம் नित्यसिद्धமாகையாலே आशासिக்கவேண்டாமையாலும் இஸ் सम्बन्धस्वरूपம் ப்ரணவத்திலே சொல்லுகையாலும் இதின் फलமாய் 'समुद्रे गोष्पदं मास्तु' என்னுமாப்போலே पुरुषार्थान्तरங்களையெல்லாம் விளாக்குலை கொண்டிருக்கிற पारपूर्णब्रह्मानुभवपरीवाह[रूप]மான கைங்கர்யம் ஒழிவில்காலத்திற்படியே இங்கு अपेक्षिக்கப்படுகிறது.

अत्र स्वलाभापेक्षाऽपि स्वामिलाभावसायिनी । स्वामिप्रयोजनापेक्षाऽप्यतः स्वानन्दहेतुका ॥

உன்னை உகப்பிக்கும் கைங்கர்யத்தை நான் பெறவேணு மென்றாலும், என்னை அடிமை கொண்டு, நீ உகக்கவேணுமென்றாலும இருவர்க்கும் ப்ரயோஜநம் सिद्धம்.

'त्रैगुण्यं षड्गुणाढ्यं च द्विधाऽन्नं परिकीर्तितम् । त्रैगुण्यमन्नं बद्धानामितरेषामथेतरत् ॥'

---

யால். இங்கே கைங்கர்யத்தைக் கூறும் சொல்லேது என்ன அறிவிக்கிறார் तादर्थ्यமிதி. சதுர்த்தியின் பொருளான. तादर्थ्यமாவது சேஷத்வம்; அது எப்போதுமே யுளது. அதை ப்ரார்த்திக்க வேண்டா. भवामि என்னவொண்ணாது. तादर्थ्यம் ப்ரணவத்திலேயே அறியப்பெற்றதே. ஆகையால் சேஷத்வகார்யமான மோக்ஷபுருஷார்த்தம் சதுர்த்தியில் கருதப்பெறுமென்று भवेयமென்று அத்யாஹாரம் செய்வோமென்றதாம். வேறு புருஷார்த்தங்களை விடுவதற்குக் காரணம் கூறுகிறார் समुद्र இதி. மற்ற புருஷார்த்தமெல்லாம் இதனுள் அடங்கியவை, ஹேயமான புருஷார்த்தங்கள் இதனுட் புகுமோ என்னில்—ஸமுத்ரத்திலே गोष्पदமென்ற குளப்படி ஜலமே யுள்ளதா? அதனளவிலாம் ஜலமே யுளது. அதுபோல் ஹேய ஸுகவளவான ஸுகமும் மோக்ஷாநுபவத்திலடங்கியதே. விளாக்குலை கொள்ளல் =कबलीकारத்தல் (ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 19) விளா–விலா. ஒழிவில்காலத்திற்படியே—ஒழிவிலகாலமெல்லா மென்கிற பாட்டின்படி, சேஷனாயிருப்பவன் தனக்கு ஒரு புருஷார்த்தத்தை அபேக்ஷிக்கலாமோ என்ன அருளிச்செய்கிறார் अत्रेति. தனக்கு லாபத்தை—கைங்கர்யகர்த்தாவாகையை யபேக்ஷிப்பதானது ஸ்வாமியின் லாபத்தில் = உவப்பில் முடியும். அவன்லாபத்திற்காகவே தன் லாபம். अतः = தன் கைங்கர்யத்தினின்று ஸ்வாமிக்கு லாபம் வருகிறபடியால் ஸ்வாமிலாபத்தை யபேக்ஷிப்பதானது தன் ஆனந்தத்தையும் ஸ்வாமிலாபத்திற்குக் காரணமாகவுடையதாகும். அதனால் தன் லாபத்தின் அபேக்ஷையாகும். கார்யாபேக்ஷையுள்ளவனுக்குக் காரணாபேக்ஷையிருக்குமே. ஸ்லோகத்தை விவரிக்கிறார் உன்னை இதயாதியால்.

மோக்ஷத்தில் अन्नभोजनமே பலனாகச் சொல்லப்பட்டிருப்பதால் அந்த போஜநத்தை விட்டுக் கைங்கர்யம் பலனென்னலாமோ என்ன—அதற்கும் இதே பொருளெனகிறார் त्रैगुण्यमिति. லக்ஷ்மீதந்த்ரம். अन्नं–அந்நமானது त्रैगुण्यं–

என்கிற षाड्गुण्य மான परमावधि—भगवद्गुणानुभवம். அதடியாக வருகிற भोग्यतमकैङ्कर्य विशेषங்களாகவுமாம். 'भोगमात्रसाम्यलिङ्गाच्च' என்கிறபடியே मुक्तदशै யில் परमसाम्यம் भोगத்திலும் ஜ்ஞானத்திலுமாகையால் அப்போதும் स्वरूपानुबन्धि யான शेषत्वத்துக்கும் இதின் फलமான கைங்கர்யத்துக்கும் विरोधமில்லை. 'मुमुक्षु-दशैயிலும் मुक्तदशैயிலும் உண்டான सम्बन्धம் शरीरात्मभावமாலே' என்று भाष्यादि களிலே समर्थितமாகையால் இவ்விசம்பந்தம் पारार्थ्यकाष्ठैபடியாக வந்ததிறே. இப்படி मुक्तदशैயில் வரும் கைங்கர்யம் स्वतःप्राप्तமாய் दुःखरहितமாய் निरन्तरமாய்

---

त्रिगुणमेव त्रैगुण्यம். முக்குணமயமென்றும் षड्गुणैश्वर्य—ஆறு குணங்கள் நிறைந்ததென்றும் இருவிதமாகச் சொல்லப்படும். முதலன்னம் ஸம்ஸாரிகளுக்கே—வேறு அந்நம் வேறு ஜீவர்களுக்காம். முக்குணமாவது ஸத்த்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் கொண்ட ப்ரக்ருதி. இதில் அநுபவிக்கப்படும் எல்லா வஸ்துவும் முக்குணங்களுள்ளதே. மோக்ஷத்தில் அநுபவிக்கப்படும் அந்நம் பரப்ரஹ்மம். அது ஜ்ஞாந சக்த்யாதி குணங்கள் ஆறு நிறைந்தது. முக்தர்களுக்கு அது அந்நமென்றால் அவ்வந்நத்தின் அநுபவமும் கைங்கர்யமுமே முக்தர்களுக்கு என்றதாகும், ஆக அந்நசப்தத்தாலே கைங்கர்யம் வரையில் கருதப்பெறும். இதே अहमन्नादः என்ற ச்ருதிக்கும் பொருளாகும். இப்படி சேஷத்வ மூலமான கைங்கர்யம் புருஷார்த்தமானால் भोगसाम्यं சொன்னது விரோதிக்காதோ வென்பதற்கு உத்தரம் भोगमात्रेति. போகமாத்ரத்தில் ஸாம்யம் என்றது ஸ்வாதந்த்ர்ய பாரதந்த்ர்யங்கள் முன்போல் நிலைத்திருப்பது தெரிவதற்காகவென்றபடி 'अहमन्नादः' என்று ஸ்வாநுபவம் ப்ரதாநமாகத் தெரிகிறது; அது கைங்கர்யமாகுமோ என்ன அதற்கு உத்தரம் முமுக்ஷு இதி. உபாஸந காலத்தில் अहं ब्रह्मास्मि என்று சேஷசேஷி பாவத்தோடே சேர்ந்த शरीरात्मभावம் விஷயமாயிருப்பது अथातोऽहङ्कारादेशः இத்யாதி வேத ப்ரஸித்தமாகையால் அதே அநுபவம் மோக்ஷத்திலும் தொடர்வது अविभागेन दृष्टत्वात् என்ற ஸூத்ரத்திலும் சொல்லப்பட்டிருப்பதால் अहमन्नादः என்பதற்கு தானும் தன் அந்தர்யாமியும் ப்ரஹ்மாநுபவம் செய்வதே பொருளாகையால் தன்னிடமுள்ள அநுபவம் அந்தர்யாமியான அவன் உவப்புக்காகவென்பதும் அதிலே யடங்கி யிருக்குமென்றபடி. पारार्थ्यकाष्ठैபடியாக இதி. पारार्थ्य—சேஷத்வம். அவ்வளவு மட்டுமறிந்தவன் தன்னை மட்டும் अहं என்றும் க்ரஹிக்கலாம். निरुपाधिकनित्यपारार्थ्य மாகிற पारार्थ्यकाष्ठै யறிந்திருப்பதாலே தன்னைத் தனியாக க்ரஹிக்காமல் எம்பெருமானோடு சேர்த்தே மோக்ஷத்தில் க்ரஹிக்கிறான். ஆகையால் தனதெல்லாம் எம்பெருமானுடைய உவப்புக்காகவே யென்ற எண்ணம் விடாமலிருக்குமென்றபடி.

परमसाम्यத்திற்கு சேஷத்வ ஜ்ஞாநத்தோடு விரோதமில்லை யென்பது மட்டுமில்லை; ஸம்ஸாரதசையில் வரும் போகத்தைப்போலன்றி புஷ்கலமாயுமிருக்குமென்ற விசேஷத்தையும் குறிப்பிடுகிறார் இப்படி இதி. दुःखरहितமாய் இதி. ஸம்ஸாரதசையில் வரும் கைங்கர்யரஸம் दुःखलौकिकसुख—संसार-

अनवच्छिन्नरसமாயிருக்கும். मुमुक्षुदशैயில் स्वयंप्रयोजनமாகப் பண்ணும் கைங்கர்யம் सुकृतविशेषोपाधिकமாய் द्वन्द्वतितिक्षायुक्तமாய் निद्रादिகளாலே अन्तरितமாய் अवच्छि-न्नरसமாயிருக்கும்.

இங்கு இவன் கைங்கர்யமொழியப் பண்ணும் வ்யாபாரங்களில் भगवदाज्ञै க்குப் பொருந்தாதவையெல்லாம் ஏதேனுமொரு प्रतिकूलफलத்தைக் கொடுக்கும் भगवदनुज्ञातங்களான काम्यங்களில் स्वर्गपश्वाद्यर्थங்களானவையெல்லாம் अनेकदोषदुष्टங்களான अनुकूलाभासங்களைக் கொடுத்து அம் मुखத்தாலே बाधकங்களாம். ஆகையாலே முமுக்ஷுவுக்கு 'त्रैवर्गिकांस्त्यजेत् धर्मान्' என்கிறபடியே प्रयोजनान्तरहेतुக்களைவிட்டு भक्ति-तत्त्वज्ञानங்களையும் भगवद्भागवतसमृद्धियையும் பற்றச் செய்யும் काम्यங்களான भगवद्धर्मங்கள் साधनமாக अनुष्ठिக்கச்செய்தேயும் बन्धकங்களல்லாமையாலே उचितமான कैङ्कर्यकोटियிலே சேர்ந்து கிடக்கும்.

---

शीतोष्णादिसहितமாயிருக்கும். மோக்ஷத்தில் द्वन्द्वरहितம். निरन्तरமாய்—விச்சேதமிராததாய்; ஸம்ஸாரத்தில் निद्रैயாலும் जाग्रத்தில் வேறு கார்யத்தாலும் தடைபட்டிருக்கும். अनवच्छिन्नरसம்தேசகாலபரிச்சேதமற்றதும் ஸ்வரூபநிகர்ஷமற்றதுமான ரஸத்திற்கு ஹேது வாயுமிருக்கும். ஸ்வத: ப்ராப்தமென்பதற்கு நேர்மாறுகும் सुकृतविशेषोपाधिकமென்றது. अवच्छिन्नरसம்= பரிமிதரஸம்.ய

இப்படி ஸம்ஸாரத்தில் கைங்கர்யமாகாத வ்யாபாரமு முண்டென்றுல் அது எது? நிஷித்தமும் காம்யமுமென்னில்—இவன் செய்யும் கார்யமெல்லாம் ஈச்வரனுக்கு போக்யமே யாகுமென்று சிலர் சொல்வதற்கு இது விருத்தமாகுமே என்ன, பக்தனுக்கும். ப்ரபந்நனுக்கும் காம்ய நிஷித்தங்கள் த்யாஜ்யங்களே யென்கிறராய் காம்யத்திலே கைங்கர்யமாகும் சில விசேஷங்களையும் குறிக்கிறுர் இங்கு இத்யாதியால். கீழே முமுக்ஷு என்பது பக்தப்ரபந்நஸாதாராணம். கைங்கர்யம் ஒழிய இதி. ப்ரபந்நனுடைய நித்ய கர்மாநுஷ்டாந மெல்லாம் கைங்கர்யமேயாகும். ஆஜ்ஞைக்குப் பொருந்தாதவை=நிஷித்தங்கள். ஏதேனும் இதி. ஜந்மாந்தரம் பெறக் கூடிய முமுக்ஷுவாகில் நரகம் பெறக்கூடுமாகிலும் மற்ற முமுக்ஷுவுககு 'इहैव केचिदुपप्लवा भवन्ति' என்ற காணத்வாதிகளே நிஷித்தகர்மபலமாகும். காம்யங்களில் भगवदनुमतकाम्यம் भगवदनभिमतकाम्यம்—என இரண்டுவிதமுண்டு தனக்குச் சில க்ஷுத்ரபலன்களுக்காகச் செய்யும் காம்யங்கள் அப் பலன்களைக் கொடுத்துத் தத்காலத்தில் கைங்கர்யாநுபவबाधकங்களாகும். 'भक्तिज्ञानाभिवृद्धिं परिचरणगुणान् सत्समृद्धिं च युक्तां नित्यं याचेत्' என்கிறபடி பக்த்யாதிகளுக்காகச் செய்யும் காம்யங்கள் फलसाधनமாயிருந்தாலும் பகவத்பாகவதர்களின் உவப்புக்கே யாகிறபடியால் दोषமாகா; ஸாரபூத கைங்கர்யங்களே யாகும். இப்படி உட்பிரிவிருப்பதால் ஸம்ஸாரம் பரிமிதரஸம்.

இப்படிஸம்ஸாரத்தில்பகவத்-பாகவத-उभयகைங்கர்யமுண்டாகிலும்மோக்ஷத்தில் नारायणाय स्वां என்று பகவத் கைங்கர்யமே சொல்லப்பட்டிருப்பதால் முக்தனுக்கு भागवतகைங்கர்யமில்லையென்று நினைக்கவேண்டா, ப்ரணவ நமஸ்

प्रणवத்திற்சொன்ன भगवच्छेषत्वம் நமஸ்ஸிலே औचित्यரூபமான अत्यन्तपारतन्त्र्य-पारार्थ्यங்களடியாக यथाप्रमाणம் तदीयपर्यन्तமாய் நிற்கையாலே 'नारायणाय' என்கிற விடத்தில் அபேக்ஷிக்கிற भगवत्कैङ्कर्यமும் तदीयपर्यन्तம்.

'मम मद्भक्तभक्तेषु प्रीतिरभ्यधिका भवेत् । तस्मान्मद्भक्तभक्ताश्च पूजनीया विशेषत. ॥'

'तस्मात् विष्णुप्रसादाय वैष्णवान् परितोषयेत् । प्रसादसुमुखोविष्णुस्तेनैव स्यान्न संशयः ॥'

इत्यादिகளிலும் இவ்வர்த்தம் सिद्धம்.

'सर्वं परवशं दुःखम्' इत्यादिகள் தனக்குப் प्राप्तமல்லாத क्षुद्रविषयத்திலே कर्म-मूलமாக வருகிற पारवश्यம் दुःखकारणமென்கிறன. भगवद्भागवतविषयத்தில் पारत-न्त्र्यம் आत्माभिमानानुगुणपुरुषार्थव्यवस्थैயாலே निरतिशयप्रीतिकारणம். இங்குத் तदीय ரென்கிறது तदीयत्वव्यवसायरसமுடையவர்களை. नारங்களாலே विशिष्टனான நாராயணனைப்பற்றக் கைங்கர்யத்தை அபேக்ஷிக்கும்போது विशेषणமான(ங்களான) நாரங்களையும்பற்றக் கைங்கர்யம் अपेक्षिக்கப்பட்டதாமென்னுமிடம் न्यायसिद्ध மாகையாலே இங்கே तदीयकैङ्कर्यம் सिद्धिக்கிறதென்று சிலர் சொல்லுவர்கள்—இப்படி विशेषणत्वமே प्रयोजकமானல் नारशब्दार्थங்களாக இங்கு विवक्षितங்களான

---

ஸங்க்களில் तदीयशेषत्वமும் சேர்க்கப்பட்டிருப்பதால் இங்கே சொல்லும் सत्फल மான கைங்கர்யமும் बद्धमुक्तरूपद्विविध तदीयपर्यन्तமே யென்கிறார் ப்ரணவத்தில் இதி. இதற்கு வசநத்தை ப்ரமாணமாக்குகிறார் ममेति இவை முன்னமே வ்யாக்யாதங்கள், பரமகாருணிகனுன ஸர்வேச்வரனிடத்தில் பாரதந்த்ர்யம் துக்க காரணமாகாவிட்டாலும் तदीयரெல்லோரும்அவ்வாறே யென்று சொல்ல வாகாததால் तदीय பாரதந்த்ர்யம் சில விடம் துக்கஹேதுவாகுமே யென்ன அருளிச் செய்கிறார் सर्वमिति. மநுஸ்ம்ருதி. 4-160. பிறர்விஷயத்தில் பாரதந்த்ர்யம் துக்க காரணமாயிருப்பதற்கு நமது கர்மாவே காரணமாகையால் முக்தனுக்கு வரும் பாரதந்த்ர்யம் கர்மமூலமாகாததால் துக்க காரணமாகாது. ஈச்வரேச்சையை நேரிற் கண்டே முக்தன் பாகவதனுக்குப் பரதந்த்ரனுகிறபடியால் அந்த பாரதந்த்ர்யம் இஷ்டமேயாகு மென்றபடி. ததீயரென்பதற்கு பகவச்சேஷபூத ரென்றே பொருளாகையால் ஸர்வ சேதநரும் ததீயராவதால் तच्छेषत्वம் இவனுக்கு வேண்டுமாகில் உகாரத்தினுலே அந்யசேஷத்வத்தை விலக்கியதெங்ஙனே என்ன அருளிச் செய்கிறார் இங்கு இதி. तदीयत्वव्यवसायरस-மாவது தம்களுள்ள ததீயத்வத்தை நிச்சயித்து போக்யமாகக்கொண்டிருக்கை. ஆக போக்யமாக பகவச்சேஷத்வத்தைக் கொண்ட பாகவதரைமட்டும் இங்கே तदीय ரென்போம். மற்ற சேதநரிடம் சேஷத்வ நிஷேதம் உகாரார்த்தம். இப்படியிருக்க. சிலர் நாராயணுய என்ற பதத்தால் நாரவிசிஷ்டன் என்று பொருள் கூறப்படுவதால் விசிஷ்ட விஷயத்தில் சொன்ன கைங்கர்யம் விசேஷணமான நாரவிஷயத்திலும் ஸித்திக்கு மென்று तदीय कैङ्कर्यलाभமென்பர். அதைப் பரிஹரிக்க அநுவதிக்கிறார் நாரங்காளாலே இதி. நாரங்களாலே விசிஷ்டனுன—நாரசப்தவாச்யஸர்வஜீவஸமூஹவிசிஷ்டனுன. பரிஹரிக்கிறார்

ब्रह्मादिदेवतान्तरங்களையும் भगवद्द्वेषिகளையும் पश्वादिகளையும் பற்றக் कैङ्कर्यापेक्षை பண்ணிற்றும். नरपतिயைப் பற்றக் கைங்கர்யத்தை अपेक्षिத்தானென்றால் நரரைப்பற்றக் கைங்கர்யம் अपेक्षितமாகாதாப்போலே இங்கும் न्यायमात्रத்தால் नारங்களைப் பற்றக் कैङ्कर्यापेक्षை सिद्धियாது. ஆனபின்பு प्रमाणमुखத்தாலே ஸ்வாமியினுடைய अभिमतம் செய்ய अपेक्षिக்கிறதுகையாலே அவனுக்குப் प्रियतमராயிருக்கிற शेषत्वज्ञानமுடைய अनन्यप्रयोजनரைப்பற்றக் கைங்கர்யம் अपे-क्षितமாமித்தனை. अनुवादद्शैயிலும் नारशब्दार्थமான ஸர்வமும் प्रविष्टமாமென்னு மிடமும் प्रमाणबलத்தாலே வந்ததத்தனை. இப்படித் திருமந்த்ரத்தில் वाक्यद्वयத்திலே இரண்டு वाक्यம் स्वरूपपरமாய் ஒருவாக்யம் पुरुषार्थप्रार्थनापरமாக योजिத்தது.

(7) இங்ஙனன்றிக்கே प्रणवம் स्वरूपपरமாய் நமஸ்ஸிலே अनिष्टनिवृत्तिप्रार्थनै யாய் अनिष्टம் निवर्तिத்தால் வரும் புருஷார்த்தத்தை 'नारायणाय स्वाम्' என்று கணிசிக்கிறதாகவுமாம். இந் நமஸ்ஸுக்கும் இப்படி. द्वयத்தில் நமஸ்ஸுக்குப் போலே विरोधिनिवृत्तिप्रार्थनैயிலே தாத்பர்யமான योजनाविशेषமும்,

'प्रणवोदिततच्छेषभावोऽहं निजकर्मभिः । अहङ्कारममत्वाभ्यामभिभूतोऽप्यतः परम् ॥

---

இப்படி இதி. பண்ணிற்றும் பண்ணியதாகும். தேவதாந்தர—நாஸ்திக க்ரிமிகீடாதிகளும் நாரங்களாகையாலே தத்கைங்கர்யமும் சொல்ல வேண்டியதாகும். அப்போது சாஸ்த்ரவிரோதம். ஆகலால் நார சப்தார்த்தம் கைங்கர்யப்ரதிஸம்பந்தியாகாது இப்படி யானால் கைங்கர்யம் அநுபவபரிவாஹமானபடியாலே அநுபவமும் ஸர்வ நாரவிஷயமாகாமற்போனால் உபயவிபூதி விசிஷ்டப்ரஹ்மாநுபவம் நமக்கெங்ஙனே என்ன, அநுப்ராவ்யதையிலும். இதி. सर्वं ह पश्यः पश्यति இத்யாதி ப்ரமாணத்தால் அநுபவ-ஆநந்த விசேஷணத்வம் ஸர்வத்துக்கும் உண்டு; முக்தன் सर्वज्ञனாய் ஈச்வரேச்சையைக் கண்டு கைங்கர்யத்திலிழிகிற படியால் அபாகவதவிஷயத்தில் அவனுக்கிச்சையில்லை யென்றும் இக் கைங்கர்யம் செய்பான். அதற்காகவும் ஸர்வாநுபவமும் வேண்டியதாகும். ஆகச் சில நாரவிஷயத்திலே மட்டும் கைங்கர்யாந்வயம் ப்ரமாணபலத்தாலே போல ஸர்வநாரங்களுக்கு அநு பாவ்யதையும் प्रमाणबलத்தாலேயே யாம்; விசேஷணத்வபலத்தாலே யன்றென்றபடி.

இப்படி வாக்யத்ரய பக்ஷத்தில் ஸ்வரூப புருஷார்த்த उभयபரமென்கிற ப்ரதமயோஜனையில் ப்ரதமகல்ப்பமான = அதாவது வாக்யத்வயம் ஸ்வரூப பரம் கடைவாக்யம் புருஷார்த்தபரமென்கிற பக்ஷம் முடிந்தது. அந்த ஸ்வரூப புருஷார்த்த உபய பர யோஜனையிலேயே, முதல் வாக்யம் மட்டும் ஸ்வரூபபரம், மேல் இரண்டு வாக்யம் புருஷார்த்தவிஷயமென்கிற இரண்டாவது கல்ப்பத்தைக் கூறுகிறார் இங்ஙனன்றிக்கே. இதி. புருஷார்த்தத்தைச் சொல்ல இரண்டு வாக்யமெதற்கென்னில் நம: என்பது அநிஷ்ட நிவ்ருத்தியைச் சொல்லும்; மேல்பாகம் இஷ்ட ப்ராப்தியை. புருஷார்த்தமென்று தெரிவதற்காக அவ்விடத்திலும் स्वः என்று அத்யாஹரிக்கவேண்டும். இதற்கும் பட்டர்ஸூக்தியே ப்ரமாணமென்கிறார் प्रणवेति, ப்ரணவத்தாலே

तच्छेषत्वत्वानुसंधानपूर्वतच्छेषवृत्तिकः । भूयासमित्यमुं भावं व्यनक्ति नम इत्यदः ॥'
என்று भट्टर्निरुक्तத்திலே प्रदर्शितम्. ஆகையாலே 'अहं न मम स्याम्' என்றுதல் 'न मम किञ्चित् स्यात्' என்றுதல் வாக்யாந்வயமாய். இத்தாலே.

'अस्य जीवात्मनोऽनाद्यविद्यासंचित—पुण्यपापरूप—कर्मप्रवाहहेतुक—ब्रह्मादिसुरनरतिर्यक्स्थावरात्मक—चतुर्विधदेहप्रवेशकृत—तत्तदात्माभिमानजनित—अवर्जनीयभवभयविध्वंसनाय' என்றும்,

'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்' என்றும் சொல்லுகிற अविद्या-कर्म-तदुभयवासना-रुचि-प्रकृतिसंबन्धादिरूपமான सर्वानिष्टமும் अस्य-

---

சொல்லப்பட்ட பகவச்சேஷத்வத்தையுடைய நான் அஹங்கார மமகாரங்களாலாக்ரமிக்கப்பட்டிருந்த போதிலும். अतः परं—இதற்குமேல் அவனைக் குறித்து சேஷத்வத்தை யநுஸந்தாநம் செய்வது மூலமாக அவன்விஷயமான கைங்கர்யமுமுடையனுவேனுக என்கிற கருத்தை நம: என்கிற சொல் வெளியிடுகிறதென்று ச்லோகார்த்தமாம் இதிலே அநிஷ்ட நிவ்ருத்தி ப்ரார்த்தனை நமச்சப்தார்த்தமென்று எங்ஙனே தெரிகிறதெனில்—சேஷத்வ ஜ்ஞாநம் ப்ரணவத்தால் ஸித்தமென்று இதிலேயே சொல்லப்பட்டது; சேஷத்வாநுஸந்தாநமூலமான சேஷத்வ வ்ருத்தியான. கைங்கர்யமும் நாராயணுய என்பதால் ஸித்தம் ஆக நடுவிலிருக்கும்अंशம் நடுவாக்யமான நமச்சப்தத்தின் பொருளிலிருக்க வேண்டும். அங்கே(अभिभूतोऽप्यतः परं) என்றதால் அஹங்காரமமகாரங்களாலே ஸ்வப்ரகாசமற்றிருந்தாலும் இனி அஹங்கார மமகார நிவ்ருத்தி பெற்றவனுய்க்கொண்டு, என்ற பொருளேற்படுவதால் அதுவும் भूयासं என்கிற விசிஷ்ட ப்ரார்த்தனையில் விஷயமாகத் தெரிவதால் நமச்சப்தம் அநிஷ்ட நிவ்ருத்திப்ரார்த்தனையில் வந்ததென்று தேறுமெனத் திருவுள்ளம். இதற்காக ப்ரார்த்தநாவாசகமான स्याम्, स्यात् என்ற பதத்தைச் சேர்த்து வாக்யார்த்தம் கூறுகிறுர் ஆகையாலே இதி. वेदार्थसंग्रहादि வாக்யங்களைக் கொண்டு இதை விவரிக்கிறுர் இத்தாலே இதி. "இந்த ஜீவாத்மாவுக்கு அநாதியான அஜ்ஞாநத்தினுலேற்பட்ட புண்யம் பாபமென்கிற இருவினைகளின் வெள்ளம்மூலமான—நான்முகன் முதலான தேவதைகள், மனிதர், திர்யக்கு. ஸ்தாவரம் என்கிற நான்கு வகையான தேஹங்களில் ப்ரவேசம் காரணமாக அந்தந்த தேஹமே ஆத்மாவென்கிற அபிமாநத்தினுல் உண்டாக்கப்பட்டு விலக்கப்படமாட்டாமலிருக்கும் ஸம்ஸார பயத்தை அழிப்பதற்காக" என்று अस्येति வாக்யத்தின் பொருளாம் பொய் இதி. திருவிருத்தம் முதற்பாசுரம். பொய் என்ற ஜ்ஞாநமாவது मिथ्याज्ञानम् देहात्माभिमानादि; பொல்லா ஒழுக்கு= துச்சரிதம்; அழுக்கு உடம்பு= அசுத்தமான தேஹம். இவற்றை இப்போதுள்ள நிலையில் இனி ஜீவர்கள் பெருதபடி ஜீவர்களை யருள்வதற்காக எத்தனையோ யோனிகளிற் பிறந்தருள்கின்ற தேவாதிராஜனே; அவ்வாறு பிறந்து எதிரிலே மெய்யாகவே நின்று அடியேனுடைய விஜ்ஞாபநத்தைக் கேட்டருள வேண்டுமென்று அப் பாட்டின் பொருள். இதில் ஸர்வாநிஷ்ட

ஷ்டநிவ்ருத்தமாகவேணுமென்று அபேக்ஷிக்கதாயிற்று.

இப்படி அநிஷ்டநிவ்ருத்தியைப் ப்ரார்த்தித்தால் இஷ்டப்ராப்தியை அபேக்ஷிக்கவேணுமோ? 'ஸம்பத்யாऽऽவிர்பாவ: ஸ்வேநஶப்தாத்' என்றும்,

'यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षालनान्मणेः । दोषप्रहाणान्न ज्ञानमात्मनः क्रियते तथा ॥

यथोदपानकरणात् क्रियते न जलाम्बरम् । सदेव नीयते व्यक्तिमसतः संभवः कुतः ॥

तथा हेयगुणध्वंसादवबोधादयो गुणाः । प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवाऽऽत्मनो हि ते ॥'

என்றும் சொல்லுகிறபடியே இஷ்டப்ராப்தி தானே வாராதோவென்னில்—

---

நிவ்ருத்தி ப்ரார்த்திக்கப்படுகிறது. தदुभयवासनैயாவது—அவித்யாமூலமாய் அவித்யைக்குக் காரணமான ஸம்ஸ்காரமும் கர்மமூலமாய் கர்மாவுக்குக் காரணமான ஸம்ஸ்காரமும். இந்த ஸம்ஸ்காரம் மீண்டும் மீண்டும் அப்யாஸத்திலுல் வ்ருத்தியடையும். ருசி= பலனில் ஆசை. ப்ரக்ருதிஸம்பந்த: = ஸ்தூலஸூக்ஷ்ம தேஹப்ராப்தி. ஆதிபதத்திலுல் இச் சக்ரம் சுற்றிவருகிறது அறிவிக்கப்படும்.

ஆக நமச்சப்தம் அநிஷ்டநிவ்ருத்திப்ரார்த்தநாபரம். नारायणाय—என்பது இஷ்ட ப்ராப்தி ப்ரார்த்தநாபரமென்று ஸித்தித்தது. இவற்றில் இரண்டாவது ப்ரார்த்தனை வேண்டாமே. ப்ரார்த்திக்காமற் போனலும் ஸித்திக்குமே யென்று வினவுகிருர் இப்படி இதி. संपद्येति. ப்ரஹ்மஸூத்ரம் 4 4-1. பரஞ்சோதியை யணுகி. ஆவிர்ப்பவிக்கை=ஸ்வஸ்வரூபத் தோற்றம் பெறுகையாம். வேதத்தில் स्वेन என்ற சொல் இருப்பதால் அந்த ரூபம் ஸ்வாபாவிகமென்று தெரிவதாலென்று பொருள். ஸ்வர்காதி புருஷார்த்தம் போலே ஔபாதிகமாகில் ப்ரார்த்திக்க வேண்டும். ஸ்வஸ்வரூபத் தோற்றத்திற்கு ப்ரதிபந்தகம் போனல் அது தானே வருமாகையால் ப்ரார்த்திப்பதென்—என்றபடி. ஸ்வாபாவிகமென்பதை विष्णुधर्मத்தைக் கொண்டு விளக்குகிருர் यथेति 104. 55. ரத்நத்திற்கு அழுக்கைப் போக்குவதால் ஒளி புதிதாக எப்படி உண்டுபண்ணப்படுவதாகாதோ, அதுபோல் ஜீவாத்மாவுக்கு அவித்யாதி ஸர்வதோஷங்களையும் போக்குவதால் ஜ்ஞாநம் புதிதாயுண்டு பண்ணப்படுவதாகாது. மற்றோர் உதாஹரணமுமாம்—उदपान—கிணறு, குளம் வெட்டுவதால் மண் விலக்கப்படுகிறதே யல்லது அங்கே जलाम्बरम्—ஜலமோ ஆகாசமோ உண்டு பண்ணப்படுகிறதில்லை; முன்னிருந்த ஜலமும் ஆகாசமுமே தோற்றுகிறது. ஆக இருக்கிற வஸ்துவே ப்ரகாசம் பெறுவிக்கப்படுகிறது ஸத்கார்யவாதத்தில் அஸத்துக்கு உத்பத்தி யென்பது ஏது? எந்த த்ரவ்யமும் முன் இருந்தே யாகவேண்டுமென்பது सत्कार्यवादம். அதுபோல் ஆத்மாவுக்கு மோக்ஷத்தில் ஹேய குணங்களெல்லாம் அழிந்தால். ஜ்ஞாநமோ अपहतपाप्मत्वादि गुणங்களோ எல்லாம் முன்னிருந்தவையே தோற்றம் பெறுகின்றன, ஆத்மாவில் எப்போதும் இருப்பதால் அவை உண்டுபண்ணப் படுபவை யல்ல என்றதே. ஆக இஷ்ட ப்ராப்தி ஸித்தமாகையால் உண்டாக்கவேண்டும் அநிஷ்ட நிவ்ருத்தியைமட்டும் ப்ரார்த்தித்தால் போதுமென்று கேள்வி—

'स्वतः स्वार्हं यथा भागं पुत्रः पितुरपेक्षते । सापराधस्तथा दासः कैङ्कर्यं परमात्मनः ॥'

தன் अपराधக்காலே ஸ்வத:ப்ராப்தத்தை இழந்து கிடக்கிற இவன், 'என் கூறு நான் பெறவேணும், அதுக்காக என் अपराधத்தைப் பொறுத்தருளவேணும்' என்று अपेक्षिக்கையில் विरोधமில்லை. இத்தால் प्रतिबन्धकनिवृत्तियில் மாணிக்கத்திலொளியும், 'इच्छति पुत्र तव विश्वादर्थसत्ता' என்கிறபடியே नियतैயான ईश्वरेच्छैயாலே பரம்புமாப்போலே இங்கும் स्वाभाविकமான ज्ञानविकासादिகள் सहजकारुण्यरूपैயான

---

இவ் வினவிற்கு விடை காரிகையால் स्वतः இதி. ஸுகம், துக்க நிவ்ருத்தி யென்கிற இரண்டு புருஷார்த்தங்களில் ஸுகம் முக்ய புருஷார்த்தம்; ஸ்வத: இஷ்டமானதாம். துக்க நிவ்ருத்தி யென்பது துக்கம் ப்ரதிகூலமாயிருப்பதால் அதற்கு விரோதி என்கிற காரணத்தினுல் இஷ்டமாகிறதே யல்லது ஸ்வத: (சுயமாகவே) அன்று என்று ஸ்ரீபாஷ்யத்தில் அருளிய படி இஷ்டப்ராப்தி முக்ய புருஷார்த்தமாய் அநிஷ்ட நிவ்ருத்தி அமுக்யமாயிருப்பதாம். இஷ்ட ப்ராப்தி யென்ற புருஷார்த்த மிருக்க அநிஷ்ட நிவருத்தி மாத்ரத்தில் இச்சை உலகத்தில் உண்டாகாது அதனுல்தான் अपराधियான புத்ரன் பிதா வினிடத்தில் அபராதத்தைப் பொறுக்கவேண்டுமென்று மட்டும் ப்ரார்த்தி க்காமல் स्वतः—தானுகவே स्वार्हं தனக்கு வரக்கூடிய भागं—பங்கையும் पितुः—தகப் பனுரிடமிருந்து अपेक्षते—அபேக்ஷிக்கிருன். यथा—இது எப்படியோ, तथा—அப்படி குற்றமுள்ளவன் கைங்கர்யத்தை परमात्मनः=பரமாத்மாவினிடமிருந்து அபேக்ஷி க்கிருன். கேட்காமற் போனுலும் வரக்கூடியதைக் கேட்பது, கேட்டால் தான் வருமென்கிற காரணத்தாலேயல்ல; இஷ்டத்தில் ருசியால். அதனுலேயே ஒரு தரம் கேட்டபலனையே மீண்டும் கேட்கிருர்கள். 'द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता' என்றனரே. ஆக இதனுல் தனக்குள்ள ருசியைக் காண்பித்ததாகும். ப்ரார்த்திப்பதே உபாயமென்கிற புத்தியினுல் ப்ரார்த்திக்கவில்லையாகையால் விரோதமில்லை. ஆனுலும் ஸ்வத: வரக்கூடிய புருஷார்த்தத்திற்கு ஈச்வரன் காரணமல்லனுகையாலே அவனை ப்ரார்த்திப்பது ஏனென்ன, அவன் காரணமே யென்று ஸ்தாபிக்கிருர் இத்தால் இதி 'மணிக்கு அழுக்கை யெடுப்பது மட்டும்; ஒளி தானே வரும்' எனருல் தட்டான் ஒளிக்குக் காரணமல்லனென்ற தாகுமே யல்லது ஈச்வர ஸங்கல்ப்பமிராமல் மணிக்கு ஒளி வருமென்ற தாகாது. உலகத்திலுள்ள நித்ய பதார்த்தங்களுடைய ஸத்தைகூட ஈச்வர ஸங்கல்பாதீநமென்று ப்ரமாண ஸம்ப்ரதாய ஸித்தமாயிருக்க, அநித்யமான மணியில் அநித்யமாய் ஸ்வாபாவிகமான ஒளி ஈச்வர ஸங்கல்பமின்றி வருமோ, ஆகையால் கீழே கூறிய மணியொளித்ருஷ்டாந்தம் ஈச்வர ஸங்கல்ப த்தை நிவர்த்திக்காது. ஸ்வாபாவிகமாகையால் நமது ப்ரயத்நாதீநமன் றென்றே சொன்னதாம். ஆக முக்தனுக்கு ஸ்வாபாவிக ஜ்ஞாந விகாஸமும் अपहतपाप्मत्वादि குணங்களின் ஆவிர்ப்பாவமும் ஸ்வாபாவிகமானுலும் ஈச்வரே ச்சைக்கு அதீனமே. அநித்யமானது ஸங்கல்பத்தாலேயாம்; நித்யமானவை எப்படி அதற்கதீனமென்னில்—நித்ய விஷயத்திலே ஈச்வரனின் நித்யேச்சையே

ஈச்வரேச்சையாலே வருகிறனவென்னுமிடம் தோற்றுகிறது

ஆனாலும் भावान्तराभावपक्षத்தில் सर्वानिष्टनिवृत्तिதானே इष्टप्राप्तिயாயிருக்கத் தனித்துச் சொன்னால் पुनरुक्ति வாராதோ? 'अविद्यानिवृत्तिरेव हि मोक्षः' என்று श्रीभाष्यकारரும் அருளிச்செய்திலரோ வென்னில்—

---

காரணம். அதாவது ஸஹஜகாருண்யம். ஸஹஜகாருண்யாதீநமான விகாஸத்திற்கு கர்மத்திரள் தடையாயிருந்தது, தடை போனவுடன் தோன்றுகிறது. நித்யமான சேதநாசேதநங்களும், தர்மபூத ஜ்ஞாநமும் ஈச்வரேச்சாதீநமாயிருக்க ஜ்ஞாந விகாஸாதி அவஸ்தாவிசேஷத்தில் அது வேண்டுமென்பதில் ஸந்தேஹமென்ன? நித்யமான வஸ்து அநாதியாயிருப்பதால் 'பூர்வகாலத்திலிராமல் உத்தரகாலத்தில் உண்டாதல்' என்கிற கார்யத்வம் அதற்குக் கூடுமோ வென்னலாம். இந்தக் கார்யத்வம் ஜந்யத்வரூபமன்று; 'ஈச்வர ஸங்கல்ப்பமில்லையாகில் இது இராது' என்கிற ப்ரயோஜ்யத்வரூப தர்மமே என்க. ஆக அநிஷ்ட நிவ்ருத்தி போல் இஷ்ட ப்ராப்தியும் ஈச்வராதீநமாகையால் ஈச்வரனிடத்தில் அதை யபேக்ஷிப்பது அநுசிதமாகாது. ஸ்வதஸ்ஸித்தமான இஷ்ட ப்ராப்தியும் பகவதஸங்கல்ப்பாதீநமென்ற விசேஷம் அறிவிக்கப்பட்டதாகுமென்கிற பலனும் உண்டென்றபடி.

இப்படி அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் வெவ்வேறு தர்மமென்கிற பக்ஷத்தில் தனியாக இஷ்ட ப்ராப்திப்ரார்த்தனை ஸமர்த்திக்கப்பட்டது; அவ்விரண்டுமொன்றேயென்கிற பக்ஷத்தில் தனியாக இஷ்ட ப்ராப்தி-ப்ரார்த்தனை கூடாதென்கிற சங்கையில் அப் பக்ஷத்திலும் ஸமர்த்திக்கிறார் ஆனாலும் இதி. भावம் போல் अभावமும் தனிப்பதார்த்தமென்று தார்க்கிக பக்ஷம். எல்லா அபாவமும் ஏதேனும் भावமே யாகுமென்று தனி அபாவம் இசையாதவர்கள் மீமாம்ஸகர்களும் வேதாந்திகளும். இதையே भावान्तरமே अभावம் என்பது. गोमहिषादिகளெல்லாவற்றிலுமுள்ள அச்வத்வாभावம் தனிப் பதார்த்தமென்டர் தார்க்கிகர் गोவிலுள்ள அச்வத்வாபாவம் கோத்வமே, மஹிஷத்திலுள்ள அது மஹிஷத்வமே என்றவாறு அந்தந்த भावधर्मமே अश्वत्वाभावமாகிறதென்பர் வேதாந்திகள். அது போலவே ஜீவனுக்கு ஸர்வாநிஷ்ட நிவ்ருத்திரூப மோக்ஷகாலத்தில் இஷ்ட ப்ராப்தி அவச்யமாயிருப்பதால், அந்த விலக்ஷண இஷ்ட ப்ராப்தி அதற்கு முன் இராமையால் ஒன்றின் நிவ்ருத்தி என்கிற अभावம் வேறொன்றின் ப்ராப்தி என்கிற भावपदार्थமே யாகிறது. ஆக नमः என்று அநிஷ்ட நிவ்ருத்தி ப்ரார்த்தனை செய்ததே போதும்; அதையே மீண்டும் நாராயணாய என்று ப்ரார்த்திப்பது ஏனென்றபடி. 'இஷ்ட ப்ராப்தியே போதுமே; அநிஷ்ட நிவ்ருத்தி மோக்ஷமென்று தார்க்கிகாதிகளே இசைந்தனர்' என்று சொல்லலாகாது. ஸ்ரீபாஷ்யகாரர் லகு ஸித்தாந்தத்தில் அத்வைத மதத்திற்போல் தம் மதத்திலும் अविद्यानिवृत्तिயே மோக்ஷமென்றருளினரே. இந்த मतத்தில் भावान्तरமே अभावமென்பதும் கருதப்பெறும்—இவ்வாறு சங்கை. இரண்டுமொன்றேயென்றிசைகிறார் காரிகையால், மேலே சங்கையைப் பரிஹரிப்பர்.

'एकमेव स्वरूपेण परेण च निरूपितम् । इष्टप्राप्तिरनिष्टस्य निवृत्तिश्चेति कीर्त्यते ॥'

ஒன்றுதன்னையே स्वरूपத்தாலும் प्रतियोगिயாலும் நிரூபிக்கப் प्रयोजनविशेषाभि-सन्धियாலே பிரியச் சொல்லக்கடவதாயிருக்கும். संसारदशैயில் ஒரு प्रतिकूलनिवृत्ति प्रतिकूलान्तरமாயும் अनुकूलप्रतिकूलोभयनिवृत्तियாயுமிருக்கும். இங்கு सर्वप्रतिकूल-निवृत्तियாகையாலே மேல் முழுக்க अनुकूलமேயாயிருக்கும். ஆகையால் पूर्वावस्थैயினுடைய अनिष्टतमत्वத்தையும் केवलानुकूलरूपैயான उत्तरावस्थैயினுடைய इष्टतमत्वத்தையும் தோற்றுவிக்கைக்காக आकारद्वयத்தாலே பிரிய अपेक्षिக்கிறது. भगवन्निग्रहादिनिवृत्तियும் ஜீவனுடைய ज्ञानसंकोचादिகளும் வேறாகையாலே பிரிய

---

एकमेवेति. அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியுமொன்றே ஆனுலொரு விசேஷமுண்டு. இஷ்ட ப்ராப்தி யென்கிற போது அதன் விரோதியைக் கொடாமல் ஸ்வரூபம்மட்டும் சொல்லப்படும்; நிவ்ருத்தி யென்றபோது அதே परेण விரோதி(प्रतियोगि)யான அநிஷ்டத்தைக்கொண்டு அதன் நிவ்ருத்தியாகக் கூறப்பெறும். இப்படி நிரூபணத்தில்வாசியிருந்தாலும் வஸ்துவொன்றே. ஒருவனையே புத்ரனென்றும் ஜாமாதாவென்றும் சொன்னால் நிரூபணத்தில் வாசியிருந்தாலும் வ்யக்தி ஒன்றே. யென்றபடி. இப்படி ஒன்றேயாகில் இங்கே இருவிதமாக நிரூபிப்பதெதற்காக வென்னில்—ப்ரயோஜந விசேஷத்தைக் கருதியென்கிறார் ஒன்று தன்னையே இதி. ப்ரயோஜந விசேஷाभिसन्धियாலே என்ற சொல்லுக்கு இரண்டு வாக்யத்திற்கு மேல் 'பூர்வாவஸ்தையினுடைய அநிஷ்டதமத்வத்தையும் உத்தராவஸ்தையினுடைய இஷ்டதமத்வத்தையும் தோற்றுவிக்கைக்காக'' என்று விவரணம் காண்க. 'இப்படி நிவ்ருத்தியும் ப்ராப்தியும் ஒன்றென்றது தகாது; அநிஷ்ட நிவ்ருத்தி யென்பது இஷ்ட ப்ராப்தியாகவேயிருக்குமென்பதென்? உலகில் ஒருவித நோயின் நிவ்ருத்தி மற்றொரு நோயின் ப்ராப்தியுமாகிறது அது இஷ்ட ப்ராப்தியாகாதே. அதுபோல் உறக்கத்தில் அநிஷ்ட நிவ்ருத்தி யிருப்பினும் दुःख-सुख-उभय निवृत्तिயே யுளது; அது इष्टप्राप्तिயாகாதே' என்ற சங்கை நடுவில் வர—இதை யிசைந்து ப்ரக்ருதத்தில் இதற்கிடமில்லை யென்கிறார் இங்கு இதி. மோக்ஷத்தில் ஒரு ப்ரதிகூல ப்ராப்தியுமில்லை. ஸர்வ ப்ரதிகூல நிவ்ருத்தியே. அது இஷ்ட ப்ராப்தியாகலாமென்று ஸமாதாநம்.

இனி மோக்ஷத்தில், ப்ரார்த்திக்கப்பட்ட அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் வேறென்று கூடக் கூறலாமென்கிறார் भगवदिति. இங்கே धर्मभूत-ஜ்ஞாந பூர்ணவிகாஸமும் अपहतपाप्मत्वादिகளுமான இஷ்டதமம் ப்ரார்த்திக்கப்படுகிறது. அவை ஜீவதர்மங்கள் = ஜீவனிடத்திலுள்ள ஜ்ஞாநஸங்கோசமும் सपाप्मत्व—सज्वरत्वादि தர்மங்களும் அநிஷ்டங்கள். அந்த அநிஷ்டங்களின் நிவ்ருத்தியே நம: என்று ப்ரார்த்திக்கப்படுகிறதாகில் நிவ்ருத்தியும் ப்ராப்தியுமொன்றென்னலாம்; இரண்டும் ஜீவனுடைய தர்மமாதலின். இவ்வாறின்றி, ஜீவன்விஷயத்திலே எம்பெருமான் செய்திருக்கிற நிக்ரஹ—அநுக்ரஹரூப பாபபுண்யங்களையே அநிஷ்டங்களாகக் கொண்டு

अपेक्षिक्கிறதாகவுமாம். ज्ञानसङ्कोचादिகளுக்கு हेतुवान भगवन्निग्रहादिகளுடைய निवृत्तियும் निग्रहफलமான ज्ञानसङ्कोचादिகளுடைய निवृत्तियான ज्ञानविकासकैङ्कर्यादिகளும் வேறுபட்டவையாகையாலே பிரிய अपेक्षिக்கக் குறையில்லையிறே.

सर्वानिष्टनिवृत्ति பிறந்தால் पाषाणकल्पत्वादिमतान्तरशङ्कै வாராமைக்காகவும், भगवत्प्राप्तियில் ऐन्द्रादिप्राप्तियிற்போலே दुःखसंबन्धमில்லையென்று தோற்றுவிக்கையில் तात्पर्यத்தாலும் பிரித்துச் சொல்லுகிறதாகவுமாம்.

---

அவற்றின் நிவ்ருத்தியை ப்ரார்த்திப்பதானல் அந்த நிவ்ருத்தி பகவானிடத்திலுள்ளதாகையால் ஜீவதர்மமாக முன் சொன்ன ஜ்ஞாநவிகாஸாதி இஷ்டதர்மத்தோடொன்ருகா. அதனல் தனித்தனியே ப்ரார்த்திப்பது தகுமென்றபடி. அப்போது இது भावान्तरமான अभावமென்ற படியாகுமா வென்னில்—அதற்கு விரோதமில்லை; பகவானிடத்திலுள்ள நிக்ரஹ நிவ்ருத்தியை அவனிடமுள்ள மோக்ஷகாரணமான ஸங்கல்ப் பாதிரூப भावपदार्थமாகக் கொள்ளலாமே. வேறுபட்டவையாகையாலே = இந்த நிவருக்தி भगवन्निष्ठம்; இந்த இஷ்ட ப்ராப்தி जीवनिष्ठம்; ஆகையால் ஒன்ருகா வாகையாலே.

புநருக்திபரிஹாரத்திற்கு மூன்ருவது வழி சொல்லுகிருர் ஸர்வேதி. இங்கே 'நம:' என்கிற அநிஷ்ட நிவ்ருத்திப்ரார்த்தனை பகவந் நிக்ரஹநிவ்ருத்திப்ரார்த்தனை தான்; ஜ்ஞாநஸங்கோசரூப அநிஷ்ட நிவ்ருத்தி ப்ரார்த்தனையன்று என்று நிர்ணயிக்கக் காரண மென்ன? பொதுவாக ஸர்வாநிஷ்ட நிவ்ருத்திப்ரார்த்தனையாகவே யிருக்கலாமே யென்கிற சங்கையில் முன்பக்ஷம் விடப்பட்டதென்று ஸர்வபதத்தால் ஸூசிதமாகும். தார்க்கிகர்கள் 'तदत्यन्तविमोक्षः अपवर्गः' என்று ஸர்வவித துக்க நிவ்ருக்திடையும் மோக்ஷந்தில் இசைந்து இஷ்டப்ராப்தியை யிசையாமல் ஜீவன் ஜ்ஞாநாதி ஸர்வவிசேஷகுணங்களுமற்று அசேதந ஸமாநமாகிருனென்ருர்கள்; ஸாங்க்யாதிகள் ஸ்வயம்ப்ரகாசஜ்ஞாநஸ்வரூபமாக ஆத்மாவை இசைந்தும் அதன் அநுபவமாகிறஇஷ்டப்ராப்தியை யிசையவில்லை. அதனல் ஸர்வாநிஷ்டநிவ்ருத்தியில் இஷ்டப்ராப்தியுமிருக்கவேண்டுமென்பதில்லையென்கிறகேள்வியாம், அதைக் களைவதற்காக—அந்தத் தார்க்கிகாதிபக்ஷத்தை நிராகரிப்பதற்காக இஷ்டப்ராப்திப்ரார்த்தனையை இசைத்தது. ஆனல் இஷ்டப்ராப்தி ப்ரார்த்தனையே போதுமென்னில்—இந்த்ரலோகாதி இஷ்ட ப்ராப்தியில் சிற்சில அநிஷ்டங்களுமிருப்பதால் ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தி யில்லை அதுபோல் மோக்ஷத்திலும் அநிஷ்டம் சில விருக்கலாமென்னும் ஐயம் தீர்ப்பதற்காக அநிஷ்டநிவ்ருத்தியையும் இசைத்தது. ஆக ஸித்தாந்தத்தில் ஸர்வாநிஷ்ட நிவருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் ஒன்ருகக் கூடுமாயினும் பரமதரீதியில் வரும் சங்கைகளின் நிவ்ருத்திக்காக விரண்டையும் சொன்னதென்றதாயிற்று.

இவ்வளவால் மந்த்ரத்தில் முதற்பதம் ஸ்வரூபபரம், மேலிரண்டு பதங்கள் இரண்டுவிதபுருஷார்த்த ப்ரார்த்தநாபரமென்கிருர். இது ஏழாவது யோஜனை. இப்போது உபாயத்தைச் சொல்லவில்லை யென்ற குறையை நிவ்ருத்தி

இப்படி ஸ்வருபமும் पुरुषार्थप्रार्थनமும் शाब्दமானால் இப் புருஷார்த்தத்துக்கு साधनமாக शास्त्रविहितமான साध्योपायமும் भरन्यासपर्यन्तமாக अकिञ्चनனுக்கு अनिष्टनिवृत्तियைச் சொல்லுகிற நமஸ்ஸிலே आर्थமாக अनुसंधेयம்.

(8) இப் पुरुषार्थप्रार्थनै इच्छामात्रமாயிருக்கை யன்றிக்கே गोप्तृत्ववरणरूपै யாகையாலே शेषम् उपलक्षितமாகவுமாம். அப்போது திருமந்த்ரம் स्वरूपोपाय-प्रधानமாயிருக்கும். अयनशब्दத்தில் करणव्युत्पत्तियாலே ஈச்வரனுடைய उपायत्वமும் सिद्धிக்கும்.

(9) केचित्तु चरमश्लोके द्वये चोक्तक्रमादिह । भरन्यासपरं तारं शेषं फलपरं विदुः ॥

---

செய்கிறார்—இப்படி இதி. भरन्यासपर्यन्तமாக என்றதற்கு अनुसंधेयம் என்ற விடத்தில் அந்வயம். நமஸ்ஸினால் அநிஷ்ட நிவ்ருத்தியை ப்ரார்த்திப்பதால் பக்தியென்கிற भारத்தை வஹிப்பதும் அநிஷ்டமாகையால் तन्निवृत्तिप्रार्थनै யில் भरन्यासம் அர்த்தாத் ஸித்திக்குமென்றபடி.

புருஷார்த்த ப்ரார்த்தனையை விட்டு स्वरूपोपाय उभयपरமென்கிற எட்டாவது யோஜனையைக் கூறுகிறார். இப்புருஷார்த்தேதி. புருஷார்த்த ப்ரார்த்தனையைச் சொல்லும் பதம் எங்ஙனே உபாய பரமாகுமென்ன அதை விளக்குகிறார் इच्छामात्रेति. ப்ரார்த்தனை யென்பதற்கு இச்சை யென்றும் யாசனை யென்றும் பொருளாகும். அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்ட ப்ராப்திக்கும் इच्छै யென்றால் புருஷார்த்தத்தை மட்டும் சொன்னதாகும். 'அநிஷ்ட நிவ்ருத்தியையும் அருள்; இஷ்டப்ராப்தியையும் அருள்' என்று யாசித்தால் இருவித गोप्तृत्व வரணமும் சொன்னதாகும். ஆனாலும் ஓர் அங்கந்தானே ஸித்தித்தது. अंपञ्चाङ्ग संपन्नமான भरन्यासம் சொன்னதாகாதே யென்னில்—उपायैकदेशம் பூர்ணோபாயத்திற்குக் குறிப்பாகும். गोप्तृत्व வரணமென்பது பக்த ப்ரபந்ந ஸாதாரணமாகையாலே ப்ரபத்தி யென்கிற உபாய விசேஷமெப்படி ஸித்திக்குமென்னில்—பக்தனுக்கு ஸங்கல்ப காலத்தில் புருஷார்த்த அபேக்ஷை = காமனை வேண்டுமானாலும் யாசநாரூபவரணம் அவச்யமாகாதென்னலாம்; அல்லது अयन சப்தத்தாலே உபாயமான ஈச்வரனை யநுஸந்திக்கும் போதும் உபாயாந்தர ஸ்தாநாபத்திரூப உபாயத்வத்தை யநுஸந்தித்தால் ப்ரபத்திரூப உபாய ஸித்தியாமென்கிற கருத்தால் அருளிச்செய்கிறார் அயநசப்தத்தில் இதி. இப்படி எட்டாவது யோஜனையும் முற்றும்.

(9) ஒன்பதாவது யோஜனையைக் காரிகையால் அருளிச்செய்கிறார் केचित् இதி. திருமந்த்ரம் उपाय फल उभयपरம் அதில் ஏழாவது யோஜனையிற் போல் மேலிரண்டு பதம் புருஷார்த்தபரம். ப்ரணவம் ஸ்வரூப பரமாகாமல் உபாய பரமென்றதாம். இப்படி उपाय फल उभयपर மாயிருப்பதை மேல் இரண்டு ரஹஸ்யங்களில் பூர்வோத்தர खण्डங்களிலும் பூர்வோத்தரார்धங்களிலும் காண்பதால் இங்கும் அந்த ரீதி தகும், மேலும் ப்ரணவத்தை உபாயபரமாக 'ओमित्यात्मानं युञ्जीत' என்று ந்யாஸவித்யையில் கண்டோம். ஜீவனுக்கு பகவச்சேஷத்வமே ஸ்வரூப மென்கிற ஸ்வரூபஜ்ஞாநம் 'आत्मात्मीयभरन्यासो ह्यात्म-

(10) இத் திருமந்த்ரத்தில் स्वरूपोपायपुरुषार्थங்கள் மூன்றும் அடைவே शाब्दமாம். அப்போது ப்ரணவம் स्वरूपपरம்; நமஸ்ஸு उपायपरம்; शेषம் पुरुषार्थप्रार्थनापरम். இம் மூன்றின் விரிவெல்லாம் अध्यात्मशास्त्रங்களைக் கொண்டு தெளிந்து இங்கே अनुसन्धेयम்.

இந்த யோஜனைக்கு वेदान्तशास्त्रத்தில் तत्त्वोपायपुरुषार्थங்களை நிருபித்த க்ரமத்தோடு சேர்த்தி யுண்டு. எங்ஙனே யென்னில்—முதல் இரண்டு अध्यायத்தாலே परावरतत्त्वங்களைத் தெளிவித்துத் तृतीयத்தாலே अधिकारपरिकरங்களோடே கூடின उपायம் சொல்லிச் चतुर्थத்தாலே फलம் சொல்லிப் பிறே शारीरकशास्त्रம் தலைக்கட்டிற்று. அங்கு முதல் இரண்டு अध्यायத்திற் சொன்ன परा-वरतत्त्वस्वरूपமும் நான்காம் अध्यायத்திற் சொன்ன फलமும் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்

---

निक्षेप उच्यते' என்கிற உபாயஜ்ஞாநத்திலே அந்தர்கதமாகையால் இவ் உபாயத்திற்குப் பல னென்னவென்று फलजिज्ञासैயே இருப்பது. அதற்காக ஸம்ஸார நிவ்ருத்தியும் பரமாத்மப்ராப்தியும் பல மென்று அறிவிப்பதற்காக नमो नारायणाय. என்ற மேல்பாகமென்க.

கீழ்யோஜனைகளில் மூன்றில் ஒன்று शाब्द மாகாதபடியால் மூன்றும் शाब्द மாகும்படி மிக ஸ்வரஸமான கடைசி யோஜனை பத்தாவது கூறப்படுகிறது இத்திருமந்த்ரத்தில் இதி. விரிவெல்லாம்—சேஷத்வம் நிருபாதிகம் லக்ஷ்மீ பரமாத்ம उभयநிருபிதம் இத்யாதி ஸ்வரூபத்தின் விரிவு अङ्गस्वरूपविशेषம் உபாயத்தின் விரிவு. அநிஷ்ட நிவ்ருத்தி, இஷ்ட ப்ராப்தி. கைங்கர்யம், அபுநராவ்ருத்தி யென்பவை புருஷார்த்தவிரிவு கீழ்க்கூறிய யோஜனைகளுக்கு அங்கங்கு ஸம்ப்ரதாயம் ப்ரமாணமாகக் காட்டப்பட்டது. ஒன்பதாவது யோஜனைக்கு द्वय-चरमश्लोकैकरूप्यம் गमकமென்று அறிவிக்கப்பட்டது. அது போல் இக் கடை யோஜனைக்கு अध्यात्मशास्त्रமான शारीरकैकरूप्यம் गमकமென்கிறார் இந்த இத்யாதியால். परावरेति. முதலத்யாயத்தில் ப்ரஹ்மதத்துவம் நிரூபிக்கப்பட்டது. இரண்டாமத்யாயத்தில் மூன்றும்பாதத்தில் சேதநாசேதநதத்துவம். अधिकार-परिकरेति. மூன்றாவதில் முதல்பாதத்தில் வைராக்யமும் இரண்டாம் பாதத்தில் [ப்ராப்யமான பரமாத்மாவின் குணங்களைக் கூறி] प्राप्तृतृष्णैயுமாகிற அதிகாரம அறிவிக்கப்பெற்றது. நாலாவது பாதத்தில் வர்ணாச்ரமதர்மம் शमदमादिகள் बाल्य पाण्डित्य मौनங்கள் என்கிற பரிகரங்கள் நிரூபிக்கப்பட்டன. மூன்றும் பாதத்தில் முக்யோபாயம் நிரூபிக்கப்பட்டது. चतुर्थाध्यायத்திலே सञ्चित-पुण्यपापनिवृत्ति. ब्रह्मनाडीप्रवेशம் अर्चिरादिमार्गம். பரமாத்மாநுபவம் என்கிற பலம் சொல்லிற்று. தலைக்கட்டிற்று=பூர்த்தி பெற்றது. அது போல் இங்கும் ப்ரணவத்தால் பராவரதத்துவமும் பிறகு நமஸ்ஸால் உபாயமும் மேற்பதத்தால் फलமும் சொல்ல ப்பட்டனவென்று க்ரமச் சேர்த்தி காண்க. பக்தியோக நிஷ்டருக்கன்றோ अध्यात्मशास्त्रம் வேண்டும். ப்ரபத்தி நிஷ்டருக்கு இம் மூன்று ரஹஸ்யமே போதுமே, ஆக अध्यात्मशास्त्रक्रमத்தை எதற்கு ஆதரிப்பதென்ன அருள்கிறார் அங்கு இதி. द्वयमर्थानुसन्धानेन सह सदैवं वक्ता என்றதால்

கும் துல்யம். மூன்றும் अध्यायத்தில் वैराग्यपादத்திலும் उभयलिङ्गपादத்திலும் சொன்ன संसारदोषமும் ब्रह्मனுடைய हेयप्रत्यनीककल्याणैकतानत्वமும் முமுக்ஷு-வான இவனுக்கு அவச்யம் ज्ञातव्यம், மூன்றும் पादத்தில் उपायமாகச் சொன்ன उपासनभेदங்களை அவற்றுக்கு அதிகாரிகளானவர்கள் अनुष्ठिக்கக்கடவர்கள்; अकिञ्चनனான अधिकारी தனக்கு அவற்றின் அருமையைக் கண்டு 'नाना शब्दादि भेदात्' 'विकल्पोऽविशिष्टफलत्वात्' என்கிற अधिकरणங்களிற் சொன்ன கட்டளையிலே विद्यान्तरव्यावृत्तமாய், அவை கொடுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்குமிடத்தில் निरपेक्षமுமான ந்யாஸத்தையே பற்றக்கடவன். நாலாம் पादத்திற் சொன்ன वर्णाश्रमधर्मங்களை उपासननिष्ठன் 'सहकारित्वेन च' என்கிறபடியே विद्या-परिकरமாக अनुष्ठिக்கும், स्वतन्त्रप्रपत्तिनिष्ठன் 'विहितत्वाच्चाऽऽश्रमकर्मापि' என்கிறபடியே भगवदाज्ञासिद्धமென்று स्वयंप्रयोजनமாக अनुष्ठिக்கும். இப்படியாலல் शारीरकத்திற் சொன்ன स्वरूपोपायपुरुषार्थங்களெல்லாம் श्रीमदष्टाक्षरान्तरस्थங்கள். இதில் अर्थ-पञ्चकादिகள் கிடக்கிற வகுப்பெல்லாம் கீழே சொன்னோம்.

இப்படித் திருமந்த்ரம் पक्षत्रयமானபோது (1) उपायपरமென்றும்,

---

விரிவாக அர்த்தாநுஸந்தானம் செய்ய உபயவேதாந்தங்களைப் போல் வேதாந்த தர்சனத்தையும் அறிவது அவச்யமாகுமென்று கருதி, அநேகமாக अध्यात्मशास्त्रங்கள் ப்ரபந்நனுக்கும் வேண்டுமென்பதை விரித்துரைக்கிறார் முதல் இந்யாதியால். மூன்றும் அத்யாயம் மூன்றாவது பாதத்தில் விசாரித்த உபாஸநங்கள் நீங்கலாக மற்றவை யெல்லாம் இவனுக்கு உபயோகப்பட்டவையே. உபாஸநங்களை யறிவதும் ஓர் உபாஸனமும் நம்மால் செய்யவாகாதென்று ஆகிஞ்சந்ய நிர்ணயத்திற்காகும். அப் பாதத்திலேயே ப்ரபத்தியை विद्यान्तरத்தை விடவேறாகச் சொல்லும் नाना शब्दादि भेद त् என்ற ஸூத்ரமும், பக்திக்கும் ப்ரபத்திக்கும் फलம் துல்யமென்கிற விகல்ப ஸூத்ரமும் அறிய வேண்டியவை. 4ம் பாதத்தில் நித்யகர்மங்கள் உபாஸநத்திற்குப் போல் ப்ரபத்திக்கு ஸஹகாரியாகாமற்போனாலும் विहितत्वाच्च आश्रमकर्मापि என்ற ஸூத்ரம் அவையும் அவச்யமென்றறிவிக்கும். கொடுக்குமிடத்தில்—கொடுப்பதில். இப்படியானால்—இந்தப் பத்தாவது யோஜநா ப்ரகாரமானால். எல்லாம்—ஏதேனுமொன்று शास्त्रமாகவில்லை யென்றதபடி மூன்றும். சாரீரகத்திற் சொன்ன பக்தியோகம் இதிலடங்குமோ என்னில், அடங்கும். அஷ்டாக்ஷர ப்ரஹ்ம வித்யையாக இதைக் கொண்டு பக்தி யோகம் அநுஷ்டிப்பவருக்கு सद्वारकप्रपत्तिயும் இதன் அர்த்தமாக வேண்டுமே. ஸாத்விகத்யாக புரஸ்ஸரமான கார்யங்களெல்லாம் நமச்சப்தார்த்தமுமாகும். இருபத்தாறுவது அதிகாரம் வரையிற் சொன்ன விசேஷார்த்தங்களெல்லாம் ரஹஸ்யத்ரயத்தில் அடங்கியவையென்று அங்கங்கே ஒவ்வோரதிகாரத்திலும் குறித்திருப்பதால் ஸர்வவேதாந்தார்த்தஜ்ஞாநமுடையவனே விசதமாக மந்த்ரார்த்த ஜ்ஞாநம் பெற்றவனுவானென்றதாயிற்று.

கீழ்க்கூறிய பத்து யோஜனைகளைச் சுருக்கியருள்கிறார் இப்படி இதி.

(2) वृत्तिपरமென்றும், वाक्यद्वयமானபோது (3) स्वरूपपरமென்றும், (4) अन्वयव्यतिरेकमुखेन समर्पणपरமென்றும், (5) पुरुषार्थप्रार्थनापरமென்றும், वाक्यत्रयமான போது (6) முதலிரண்டு पदமும் स्वरूपपरமாய் மேல்பதம் पुरुषार्थप्रार्थनापर மென்றும், (7) ப்ரணவம் ஸ்வரூபபரமாய் மேல் இரண்டு பதமும் अनिष्ट-निवृत्तीष्टप्राप्तिप्रार्थनापरமென்றும், இக் கட்டளையிலே (8) प्रथमपदம் समर्पणपरமாய் மேலிரண்டு பதமும் உபாயபரமென்றும், (9) प्रथमपदம் समर्पणपरமாய் மேலிரண்டு பதமும் फलप्रार्थनापरமென்றும், (10) पदत्रयமும் அடைவே तत्त्वोपाय-पुरुषार्थप्रार्थनापरமென்றும், अनन्तार्थगर्भமான இத் திருமந்த்ரத்தில் वाक्यार्थ தைப் பத்துப் படியாக यथासंप्रदायம் अनुसन्धिப்பார்கள். இப்படிச் சிலவற்றைப் प्रधानமாக अनुसन्धिக்தாலும் மற்றுள்ளவையும் आर्थமாகக் கடவது.

तदेवं पदवाक्यार्थैस्तत्त्वविद्गुरुदर्शितैः । तत्तत्कुदृष्टिकथितं निरस्तं योजनान्तरम् ॥

---

இக்கட்டளையிலே—முன் ஒன்றும் இரண்டுமாகப்பிரித்தது போல் பிரித்தே.

ப்ராமாணிகமான வர்த்தங்களைக்கூறினார்; ப்ரமாணவிருத்தமான பரஸம்மதமான யோஜனைகளை நிராகரிக்கிறார் तदेवमिति காரிகையால்; தத்துவவித்துக்களான = உண்மையறிந்தவர்களான ஆசார்யர்களால் அறிவிக்கப்பெற்ற கீழ்க் கூறிய பதார்த்தவாக்யார்த்தங்களாலே குக்ருஷ்டிகளானசங்கராதிகளால் கருதப்பெறும் तत्तत्-அந்தந்த வேறு யோஜனை நிராகரிக்கப்பட்டதாகும். அந்த யோஜனை எவ்வாறெனில்—அகாரமும் மகாரமும் ப்ரथமாந்தமாய் ஸமாநாधिகரணமாகும். ஜீவன் ப்ரஹ்மமே; வேறல்லன் என்று ப்ரணவார்த்தம். न मः—ஜீவனுக்கு அஹந்த்வமில்லை; न नारायणाय—நாராயணசேஷத்வமுமில்லையென்று ஒரு வகை. ஜீவப்ரஹ்மைக்யமென்கிற தத்துவஜ்ஞானம் விஷ்ணுபக்தியினால் வரவேண்டியிருப்பதால் அதனால் नमोनारायणाय என்று ஸகுணநமஸ்காரத்தைச் சொன்னாலும் ப்ரணவத்தில் சொல்லப்பட்ட ஐக்யமே முக்யார்த்தமென்று மற்றொரு வகை, ஐக்யமே தத்துவமாகையால் அதை ஸாதிக்க இலகுவில் முடியாமலிருப்பவர்க்கு सगुणब्रह्मप्राप्ति யென்கிற அமுக்ய முக்தியை नमो नारायणाय என்றதென்று க்ரமமுக்தியைச் சொல்வது மற்றொரு வகை. இவையெல்லாம் அப்ராமாணிகங்களே. நிர்குணப்ரஹ்மம், அதற்கு ஜீவைக்யம், அது விஷ்ணுபக்தி மூலமாய் வரும், அதே முக்ய முக்தி. ஸகுணப்ரஹ்மப்ராப்தி ஸம்ஸாரம், இது मन्दाधिकारिविषयமென்கிற கல்பனைகளுக்கு வேதாந்தங்களிற் சிறிதுமிடமில்லையே. नमः என்றவிடத்தில் ஸ்தூலமாய் ப்ராமாணிகமான பொருளோடு முரண்படுவதலும் ஸூக்ஷ்மமானபொருளிது பொருந்தாது. मः न என்று ஷஷ்டீவிபக்தியிருப்பதாலேயே ப்ரணவத்தில் अकारத்தின் மேலே ஷஷ்டியோ சதுர்த்தியோ இருக்குமேயல்லது प्रथमै யிராதென்று தெளிவாம். ந்யாஸவித்யாபரமான தைத்திரீயம் அதன் விவரணமான ஸ்ருதிமுதலானவை இவற்றோடும் முரண்படும் இதென்க. மந்த்ரத்திற்குப் பிறர்சொன்ன அர்த்ததின் ஜ்ஞானமும் உத்க்ருஷ்டமாகாவிட்டாலும் மந்த்ரார்த்த ஜ்ஞானமானபடியாலே மந்த்ரார்த்தம் அறியாதவனைக்காட்டிலும் அவருக்கு ஏற்றமிருக்கலாமே

இத்திருமந்த்ரத்தில் பாஹ்யகுத்ருஷ்டிமதங்களால் கலக்கவொண்ணாத தெளிவுடையவனை

'प्रज्ञाप्रासादमारुह्य अशोच्यः शोचतो जनान् । भूमिस्थानिव शैलस्थो ह्यज्ञान् प्राज्ञः प्रपश्यति ॥'

என்கிறது. 'ज्ञानेन हीनः पशुभिः समानः' என்கிறவிடத்தில் ஜ்ஞானமென்கிறதுவும் இத் தெளிவை. இப்படித் தெளிந்தவன்

'न प्रहृष्यति संमाने नावमानेऽनुतप्यते । गङ्गाह्रद इवाक्षोभ्यो यः स पण्डित उच्यते ॥'

என்கிறபடியே மாநாவமாநாதிகளிற் கலங்கான். இத் திருமந்த்ரத்தில் यथार्थज्ञानமும் निष्ठैயுமுடையவனை आदरிக்கும் देशத்திலும்

'यत्राष्टाक्षरसंसिद्धो महाभगो महीपते । न तत्र सञ्चरिष्यन्ति व्याधिदुर्भिक्षतस्कराः ॥'

---

டென்ன அருளிச் செய்கிறார் இத்திரு இதி. ப்ரஜ்ஞேதி. சாந்தி ப.50-11 என்பர். அங்குள்ள ச்லோகம் "प्रज्ञाप्रासाद् आरुह्य अशोच्यः शोचते जनान् जगतीस्थानिव शैलस्थः प्रज्ञया प्रतिपश्यति॥" என்றவாறு. இந்த ச்லோகம் பொதுவாயிருந்தாலும், அதனுல் அந்தந்த சாஸ்த்ரத்திலோ, லௌகிகங்களான உயர்ந்த ஸ்தாநங்கள் பெறுதற்கான வழிகளிலோ ஏதேனும் ஒன்றிலே விசேஷஜ்ஞாநமுடையவன் அந் நிலை பெறவாகாமல் வருந்துகிறவர்களை, மலைமேலிருப்பவன் தரையிலிருப்பவர்களைப் போல் அல்பாகார முள்ளவர்களாகக் காண்கிறனென்று பொருள் சொல்லக்கூடுமாகிலும், அந்த ஜ்ஞாநங்களெல்லாம் சரியான ஜ்ஞாநமல்லவாகையாலும் குத்ருஷ்டி கூறிய அர்த்தத்தின் ஜ்ஞாநமிராமல் அஜ்ஞனான ஸாதுவுக்கும் குத்ருஷ்டியைவிட உயர்ச்சி யுண்டாகையாலும் இச்லோகத்தில் प्रज्ञापदத்தாலே கீழ்க்கூறிய சிறந்த ஜ்ஞாநத்தைக் கொள்வதே தகும். ஆக अज्ञां अल्पज्ञां च என்ற சலோகத்திற்குக் கீழ்க்கூறிய அர்த்தமே ச்லாக்யமாயிருப்பதுபோல் இந்த ச்லோகத்திற்கும் ப்ராமாணிக மந்த்ரார்த்த ஜ்ஞாநமே பொருளாகுமென்று கருத்து. ஜ்ஞாநேநேதி. நரஸிம்ஹ புராணம் 14—11 இது முதற் பாதம்; மேல்பாகம் 'साक्षात् पशुः पुच्छविषाणशून्यः । तृणं न खादन्नपि जीवमानः तदेव भाग्यं परमं पशूनाम् ॥' என்றதாம். விஷ்ணுபுராணத்திலும் பரமாத்ம ஜ்ஞாநம் நீங்கலாக மற்ற ஜ்ஞாநமெல்லாம் அஜ்ஞாநம் என்றார். இந்த ஜ்ஞாநமுடையவரெல்லோரும் அசோச்யர்= சோசிக்கத்தகாதவரென்னலாமோ; சிலர் அவமாநாதிகளைப் பெற்று சோச்யராவரே என்ன—இத் தெளிவுடையவன் मानापमानयोस्तुल्यः என்றிருப்பவனாகையால் அவன் அபேக்ஷித்த மோக்ஷபலத்திற்கு ஹாநியில்லையாகையால் शोच्यனாகானென்றறிவிப்பதற்காக அவனைக் கொண்டாடுகிறார் இப்படி. இதி. நேதி. உத்யோகபர்வ33-33. "எவன் संमाने—பூஜையில் களிப்பதில்லையோ, अवमाने—அவமதிப்பில் கஷ்டப்படுவதில்லையோ, கங்கையின் மடுவைப்போல் கலங்காதவனாகிறானோ. அவன் பண்டிதனெனப்படுகிறான்" என்கிற லக்ஷணப்படி கலக்கம் பெறான்.

அவன் ஸம்மாநாதிகளை யபேக்ஷிக்காமற் போனாலும் அவனிடத்தில் கௌரவபுத்தி யுள்ளவர்களுக்குப் பல நன்மைகளுண்டென்கிறார் இத்திரு இதி. நிஷ்டையாவது यथोक्त—लाभ-पूजाद्यपेक्षையாய் கலங்காமலிருக்கை. यत्रेति.

என்கிறபடியே ஒரு दोषமும் வாராது. இச் ச்லோகத்தால்

> 'रागादिरोगान् सततानुषक्तान् अशेषकायप्रसृतान् अशेषान् ।
> औत्सुक्यमोहारतिदान् जघान योऽपूर्ववैद्याय नमोऽस्तु तस्मै ॥

என்று आयुर्वेदवित्तுக்கள் प्रधानव्याधिகளாக எடுத்த रागादिகளும், ஸத்துக்களுக்கு ஸ்ரீயென்று ஓதப்பட்ட ज्ञानसंपत्தினுடைய ஸங்கோசமும், बाह्य-तस्करர்க்கு நிலமல்லாத आत्मापहारादिகளைப் பண்ணும் महातस्करரான அஹங்காராதிகளும் நடையாடாவென்றதாயிற்று.

—o—o—

இத் திருமந்த்ரத்தில் அறுதியிட்ட பொருளே विष्णुवासुदेवशब्दविशिष्टங்களான व्यापकमन्त्रान्तरங்களுக்கும் பொருள்.

'व्याप्ति-कान्ति-प्रवेशेच्छास्तत्तद्धातुनिबन्धनाः । परत्वेऽभ्यधिका विष्णोर्देवस्य परमात्मनः ॥'

என்று अहिर्बुध्न्यादिகள் निर्वचनம் பண்ணினபடியே 'विषऌ व्याप्तौ, वश कान्तौ, विश

---

नारदीय 1.20. அஷ்டாக்ஷரத்தில் ஸித்தி பெற்ற பாக்யசாலி எந்த தேசத்தில் மதிக்கப்படுகிறானோ அந்த தேசத்தில் வ்யாதிக்கும் துர்பிக்ஷத்திற்கும் திருடனுக்கும் இடமில்லை யென்றது. அஷ்டாக்ஷர ஸித்தி பெற்றவனிருக்கும் சில ஊரில் பலருக்கு வ்யாதி முதலானவை காண்கையால் இது தவறென்ன, இங்கே வேறு பொருள் கூறுகிறார் இச்லோகத்தால் இதி. रागेति. वाग्भट க்ரந்தம். 'सतत अनुषक्तान्—எப்போதும் தொடர்ந்து வருவனவும், முழு சரீரத்திலும் பரவினவும் மிகவும் தீவ்ரமான ஆசை, அஜ்ஞானம், அப்ரீதி இவற்றை விளைவிக்கின்றனவுமான ராகம் முதலான எல்லா ரோகங்களையும் எவன் போக்குவானோ, அந்த அபூர்வமான வைத்யனுக்கு எனது நமஸ்காரமாகுக' என்று சொன்ன रागादिகளே வ்யாதிகள். ராகாதிகளாவன 'कामः क्रोधः तथा लोभः' என்னப்பட்ட மூன்று. இவற்றுக்கு முறையே கார்யமாகும் औत्सुक्यादिகள் மூன்றும். दुर्भिक्षமாவது—ஜ்ஞானச் செல்வமிராமை; योऽन्यथासन्तम् என்றபடி அஹங்கார மமகாரங்கள் திருடர்கள்; இவை அஷ்டாக்ஷரஸித்தி பெற்றவனுக்கும் அவனை கௌரவிக்கிறவர்களுக்கும் இரா. ஓதப்பட்ட இதி. सा हि श्रीः अमृता सतां என்ற வேதத்தில் சொல்லப்பட்ட ரிக்வேதாதிகளே செல்வம்.

இப்படி திருமந்த்ரத்தின் பொருளும் ப்ரபாவமும் கூறப்பெற்றன. மற்ற இரண்டு வ்யாபக மந்த்ரங்களுக்கும் பொருள் கூறி அவற்றைவிட இதற்கு உத்கர்ஷத்தை யருளத்தொடங்குகிறார் இத் திருமந்த்ரத்தில் இதி. அறுதியிட்ட—நிர்ணயிக்கப்பட்ட. பொருள்—பதார்த்த வாக்யார்த்தங்கள். அங்கும் பத்துவித யோஜனைகள் தகுமென்றபடி. அங்குள்ள திருநாமங்களில் முதலில் விஷ்ணு பதத்தின் பொருள் கூறுகிறார் வ்யாப்தீதி. அஹி-ஸம். 52-38. விஷ்ணு சப்தம் பல பல தாதுக்கள் மூலமாக வரும். அந்த தாதுக்களின் பொருள் வ்யாப்தி முதலானவை. வ்யாப்தியாவது பரவியிருத்தல் அவைகள் பரத்வமுள்ளவிடத்தில் நிருபாதிகங்களாகும். அதனால் விஷ்ணு,

प्रवेशने, इषु इच्छायाम्’ என்கிற धातुக்களிலே निष्पन्नமான விஷ்ணுசப்தத்திலுள்ள பொருள்களும், வாஸுதேவசப்தத்திலும் ‘वसति वासयति’ என்றும் ‘दीव्यति’ என்றும் தோற்றின सर्वव्यापकत्वம், सर्वाधारत्वம், तद्गतदोषरहितत्वம், क्रीडाविजिगीषादिमत्वம் என்கிற आकारங்களுமெல்லாம் नारायणशब्दार्थத்திலே एकदेशம்.

‘ऋचो यजूंषि सामानि तथैवाथर्वणानि च । सर्वमष्टाक्षरान्तःस्थं यच्चान्यदपि वाङ्मयम् ॥’ என்கையால் இத் திருவஷ்டாக்ஷரமே முமுக்ஷுக்களுக்குத் स्वहितानुबन्धिகளான सर्वापेक्षित प्रकाशकம்.

‘ऋचो यजूंषि सामानि योऽधीतेऽसकृद्द्विजः । सकृदष्टाक्षरं जप्त्वा स तस्य फलमश्नुते ॥’ என்கையாலே இதினுடைய सकृदुच्चारणம் सर्ववेदजपतुल्यம்.

‘यस्य यावांश्च विश्वासस्तस्य सिद्धिश्च तावती । एतावानिति नैतस्य प्रभावः परिमीयते ॥’ என்கையாலே தந்தம் विश्वासतारतम्यத்துக்கு ஈடாக सिद्धितारतम्यம் உண்டானாலும் महाविश्वासமுடையார்பக்கல் இத்திருமந்த்ரம் अनवच्छिन्नप्रभावமாயிருக்கும்.

இச் ச்லோகத்தில் இன்னாரால் परिच्छेदிக்கவொண்ணாதென்று விசேஷியா

---

வுக்கே அவை. காந்தியாவது—விருப்பம்; वष्टि—என்பதற்கு விரும்புகிறான் என்று பொருள். इषु என்பதற்கும் இதே பொருளானாலும் இவ்விரு धातुக்களும் விஷ்ணு சப்தத்திற்கு மூலமாகலாமென்று धातुभेदத்திற்காக இரண்டையும் சொன்னது. वासु என்பதின் பொருள் वसति वासयति என்பன सर्वत्रासौ समस्तं च वसत्यत्रेति वै यतः என்றது விஷ்ணுபுராணம். இதனால் सर्व-व्यापकत्व.सर्वाधारत्वங்களுக்கு முறையே ஸித்தி. देवशब्दार्थமாகும் விளங்குகிறவன் என்றது. அதன் விவரணம் दोषरहितत्वादिகள். दिवु-क्रीडा-विजिगीषा-व्यवहार-द्युति-स्तुति-मोद-मद-स्वप्न-कान्ति-गतिषु என்ற பொருள்களில் கூடுமவற்றைக் கொள்க முதலில் பொருளில் இம்மந்த்ர. உத்கர்ஷத்திற்கு ப்ரமாணம் காட்டுகிறார் ऋच इति नारदीयம் 1–9. நாலுவேதங்களும் மற்ற சொற்களுமெல்லாம் அஷ்டாக்ஷரத்திலடங்கியது: அவற்றின் பொருளெல்லாம் शाब्दமாகவும் आर्थமாகவும் இதன் பொருளென்றபடி. பொருளுக்குப் போல் சொல்லுக்கும் பெருமையுண்டென்கிறார் இரண்டாவது ऋच इति நாரதீ. 1-10. எல்லா வேதங்களையும் பலகால் தவறாமல் ஓதுவதின் பலனை ஒரு தரம் அஷ்டாக்ஷரத்தை ஜபித்தே பெறுவானென்றபடி. இதில் நம்பிக்கை வேண்டுமென்கிறார் यस्येति. नारदी 1-14. எவனுக்கு எவ்வளவு விச்வாஸமோ அவனுக்கு அவ்வளவு பலன்; இதினுடைய ப்ரபாவம் அளவிடப்படுகிறதன்று. நம்மால் அளவறியப்படாவிட்டாலும் ஈச்வரனாலறியப்படுமாகையால் अनवच्छिन्नप्रभावமாகாதே என்ன, अनवच्छिन्नமென்பதை ஸ்தாபிக்கிறார் இச்லோகத்தில் इति. एतस्य प्रभावः न परिमीयते என்று பொதுவாகச் சொன்னதால் ஒருவராலும் परिच्छेदिக்க வொண்ணாது—அளவுள்ளதாக அறியவொண்ணாதென்று தெரிகிறது. அஷ்டாக்ஷரத்தினுடைய பொருளெல்லாம் விரித்துரைத்த அவன் அளவிருந்தால் அதையும் அறிந்திருப்பான். இருந்து அறியாமற் போனாலும், இல்லாததை இருப்பதாகக் கொண்டாலும் दोषமே; இராதபோது

மையாலே' நர நாரணனுயுலகத்தறநூல் சிங்காமை விரித்தவன்' என்கிறபடியே இத் திருமந்த்ரத்துக்குப் ப்ரவர்த்தகனுமாய்ப் ப்ரதிபாத்யனுமாயிருக்கிற ஸர்வேச்வரனான நாராயணன் தானும் இதின் ப்ரபாவத்தைப் பரிச்சேதிக்க யோக்யனன்றென்று அறியுமத்தனை.

இம் மந்த்ரத்துக்கு த்ரஷ்டாவுமாய் தேவதையுமானவன் பக்கலிலே இத்தை லப்த மாகப்பெற்ற திருமங்கையாழ்வார், 'அந்தணர்மாட்டந்தி வைத்த மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம்' என்றருளிச்செய்தார் எட்டுமாமூர்த்தி யெண்கண்ணனெண்டிக் கெட்டுறை யெண்பிரகிருதி, எட்டு

---

இல்லையென்று அறிவதே அவனுக்கு வேண்டும் ஆக அளவை அறியா னென்னுல் அளவு இருந்து இவன் அறியாதவனென்பதல்ல, அளவில்லா மையாலே அளவில்லை என்று அறிந்திருக்கிறனென்றதே. நரேதி. எங்காணு மென்று (பெரிய தி-10-5-1) பாட்டாரம்பம், மிக்க பரத்வத்தோடு மிக்க ஸௌலப்யத்தையும் பரக்க அநுபவிக்கிறார் இங்கு. நரனோடு சேர்ந்த நாராய ணனுகி உலகத்தில் அற(ம்)நூல்= தர்மத்தைச் சொல்லும் சாஸ்த்ரத்தை ஸாத் த்விக ராஜஸ தாமஸங்களான தர்மங்களில் ஸாத்த்விக தர்மத்தை விசேஷ மாகச் சொல்லும் திருவஷ்டாக்ஷரமென்கிற மந்த்ரத்தை சிங்காமை= ஒர் அர்த்தமும் விடாதபடி விரித்துரைத்தவன்; அதுவே யின்றி சிவந்த சேதி மூதவான எல்லாவற்றையும் ராஜஸ தாமஸங்களா யிருக்கின்றனவே யென்று ப்ரளயத்தில் உண்டவன்; அப் பரனே இங்கு வெண்ணெயுண்டு ஆச்சியரால் கட்டுண்டு ஏங்கி நின்றுனென்று பாட்டின் பொருள். அறநூல் என்ற விடத்தில் அருநூல் என்ற பாடம் உண்டாகில் அருமையான நூல்=பரிச் சேதிக்க வொண்ணுத ப்ரபாவமுள்ள நூலென்றதாம். இப்படி சொல்லப் பட்ட ஸர்வஜ்ஞனும் மந்த்ரதேவதையுமானவனே அளவில்லை யென்றே அறி கிறனென்றபடி. இனி, முன் பாட்டருளிய ஆழ்வாரே திருமந்த்ரார்த்தத்தை மறவாமற்காக்க வேணுமென்றருளினர்; இது முக்கியமென்கிறார் இம் மந்த்ர இதி. அந்தணர் இதி திருநெடுந்தாண்டகம், 4, இந்திரர்க்கும் என்ற பாட்டு அந்தணர்—ப்ராஹ்மணர்களின் மாடு—தநமான வேதத்தின் அந்தி-முடிவான உபநிஷத்தில் வைத்த—சொல்லப்பட்ட மந்திரத்தை= ரஹஸ்யார்த்தமாய் ஸர்வாதாரமுமான நாராயணனை அஷ்டாக்ஷர மந்த்ரத்தாலே என்றும் மறக்காமல் அநுபவித்தால் வாழ்க்கை பெறலாம்; திருவஷ்டாக்ஷர மூல மாக ஸர்வார்த்த விசிஷ்ட நாராயணன் ஸதா அநுபவிக்கப்படவேண்டிய வனென்றபடி. இப்படி யநுபவிக்கிறவர்களுக்கு வாழ்க்கையாவது ஸர்வ பல ப்ராப்தி யென்பதை ஒரு பாசுரமிட்டு விளக்குகிறார் எட்டு இதி. எட்டு மூர்த்தி முதலாக, எட்டுவரை வரையிலான எத்தனையோ எட்டை என்ற—படைத்த, எண்குணத்தோன்= ஸர்வேச்வரனுடைய எட்டக்ஷரமான மந்த்ரத்தை எணும்= எண்ணுகிறவர்க்கு ஜபிப்பவர்களுக்கு எட்டு மலர் முதலாக, எட்டு ரஸத்திற்கு மேலான சாந்திரஸம் வரையிலானவை பெற்

மாவரைகளீற்ற வெண்குணத்தோ னெட்டெழுத்துமெண்குணமதியோர்க்கு
எட்டுமாமலரெண்சித்தியெண்பத்தியெட்டுயோகாங்கமெண்செல்வம்
எட்டுமாகுணமெட்டெட்டெழுத்துங்கலையெட்டிரதமேலனவுமெட்டினவே.

ஸர்வாதாரபூதனுமாய் அகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதானனுமான ஸர்வேச்வரனுக்கு ப்ரதிபாதகமான திருவஷ்டாக்ஷரத்தை அநுஸந்திக்கும் மஹாமதிகளுக்கு ஆத்ம-குணாதிகளிலும் ஐச்வர்யாதிகளிலும் யதாமநோரதம் துர்லபமாயிருப்பது ஒன்றுமில்லை யென்கிறது. எட்டுமாமூர்த்தி = ப்ருதிவ்யாதிபூதங்கள் ஐந்தும், சந்த்ராதித்யர்களும், யஜமானனும் தனக்கு மூர்த்திகளாக வரம்பெற்று அஷ்டமூர்த்தியென்று பேர்பெற்ற ருத்ரன். எட்டுக்கண்ணான் = சதுர்முகனாகையாலே எட்டுக் கண்ணுடைய ப்ரஹ்மா. எண்டிக்கு = எட்டு திக்குகள். எட்டு இறை = இந்த்ராதிகளான எட்டு திக்பாலர்கள். எண்பிரகிருதி = அவ்யக்தமஹதஹங்காராதிகளான எட்டுத் தத்வங்கள். எட்டு மாவரைகள் = எட்டுக் குலபர்வதங்கள். ஈற்ற எண் குணத்தோன் = இவையெல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்த ஸ்வாபாவிகஸகலகுணவிசிஷ்டனான பரமாத்மா; இவனுக்கு எட்டு குணங்களென்கிறது அபஹதபாப்மத்வ-ஜரா—மரண—சோக—க்ஷுத்—பிபாஸைக(ள?)ன்றிக்கே யொழிகையும், நித்யங்களான போக்யங்களையுடையவனாகையும், நினைத்தது முடிக்க வல்லனாகையும்; எட்டெழுத்துமெண்குணமதியோர்க்கு = இப்படிப்பட்ட ஸர்வேச்வரனுக்குப் ப்ரதானமந்த்ரமான திருவஷ்டாக்ஷரத்தை அர்த்தமாகக் கேட்டு அநுஸந்திக்கும் பராக்ருதபுத்தியுடைய அநந்யரான ப்ரதிபுத்தர்க்கு. புத்திக்கு எட்டு அங்கங்களாவன—'ग्रहणं धारणं चैव स्मरणं प्रतिपादनम् । ऊहोऽपोहोऽर्थविज्ञानं तत्त्वज्ञानं च धीगुणाः ॥' என்கிறவை. எட்டு மாமலர் = 'अहिंसा प्रथमं पुष्पं पुष्पमिन्द्रियनिग्रहः । सर्वभूतदया पुष्पं क्षमा पुष्पं विशेषतः ॥ ज्ञानं पुष्पं तपः पुष्पं ध्यानं पुष्पं तथैव च ।

---

லாம்; எட்டினவே = ஸித்திப்பவையேயென்று அந்வயார்த்தம். பதார்த்தங்களை ஆசார்யரே விரித்துரைக்கிறார் ஸர்வாத்யாதியால். பாட்டின் ஸாரார்த்தம் ஸர்வேத்யாதி.

பதங்களின் பொருள் எட்டு இத்யாதியால். மா = பெரிய, எட்டு மூர்த்தி-அஷ்டமூர்த்திகள்; அவற்றையுடையவன் சிவன்; எட்டு ப்ரக்ருதிகளாவன-ப்ரக்ருதி மஹத் அஹங்காரங்களும், பஞ்சதந்மாத்ரைகளும். வரை—மலை எண்குணத்தோன் 'अपहतपाप्मा विजरः' என்று சாந்தோக்யத்தில் சொல்லப்பட்ட அபஹதபாப்மத்வாதிகுணங்கள்; சாச்வத போக்யங்களையுடையவனாகை ஸத்ய காமத்வம்; நினைத்ததை முடிக்க வல்லனாகை ஸத்யஸங்கல்பத்வம்; எட்டு = திருவஷ்டாக்ஷரம் எணும் = எண்ணுகிற ஜபித்து அர்த்தானுஸந்தானம் செய்கிற எண் குணமதியோர்—எட்டு குணமுடைய புத்தியை யுடையவர்கள். அவ்வெட்டு குணங்கள் க்ரஹணாதிகள். ग्रहणं—அறிவது. धारणम्. தரிப்பது. स्मरणम्—ஸமயத்தில் வேண்டுவதை நினைப்பது. प्रतिपादनं—போதிப்பது. ऊहः—ஒன்றின் ஸ்தானத்தில் மற்றொன்றைச் சேர்ப்பது. अपोहः—விடவேண்டுமவற்றை யெல்லாம் விட அறிவது; तत्त्वज्ञानम्—ஒவ்வொரு வஸ்துவையும் மாறுபாடின்றி அறிவது. ஆக எட்டாகும். மாமலர் = வெளியிலிருக்கும் புஷ்பங்களைவிட உயர்ந்த மலர்கள்,

पुष्पमष्टविधं पुष्पं विष्णोः प्रीतिकरं भवेत् ॥' என்கிற புஷ்பங்கள். எண் ஸித்தி = ऊहः शब्दो(स्तर्की?)ऽध्ययनं दुःखविघातास्त्रयः सुहृत्प्राप्तिः । दानं च सिद्धयोऽष्टौ என்கிற எட்டு ஸித்தி. எண்பத்தி = 'मद्भक्तजनवात्सल्यं पूजायां चानुमोदनम् । मत्कथाश्रवणे भक्तिः स्वरनेत्राङ्गविक्रिया ॥ स्वयमाराधने यत्नो ममार्थे दम्भवर्जनम् । ममानुस्मरणं नित्यं यच्च मां नोपजीवति ॥ भक्तिरष्टविधा ह्येषा' என்கிற எட்டுவிதங்களான பக்திகள். எட்டு யோகாங்கம் = योगाङ्गமாகச் சொல்லப்பட்ட யமநியமாதிகள்.

---

எண்ஸித்தி. ऊह இதி ஸாம்க்யகாரிகை. 51. இங்கே तर्क என்றவிடத்தில் शब्दः என்றே ப்ராசீநபாடம். ऊह சப்தத்திற்குத் தர்க்கம் பொருள். அது சில ஓலைகளில் குறிக்கப்பட்டு ச்லோகத்தில் புகுந்திருக்க வேண்டும் तत्त्वकौमुदीயில் ऊहादिशब्दங்களுக்கு வேறு பொருளை விட்டு கொள்ளப்பட்ட பொருள்களை மேலே கூறுவம், அச் சொற்களுக்குப் பொருளோடு சொல்லும் பரிபாஷைகளும் அங்கே குறிக்கப்பெற்றன. இந்த எட்டு ஸித்திகளுக்கு ச்லோகத்திற் சொன்ன முறையிலே க்ரமமில்லை. அதனால் முறைப்படி உரைக்கிறோம்—முதலாவது ஸித்தி अध्ययनம்—அதாவது சாஸ்த்ர க்ரஹணம்; இதற்கு தாரம் என்று பரிபாஷை, இரண்டாவது शब्दம்; அதாவது சப்தமூலமான அர்த்தஜ்ஞாநம், இது सुतारம். மூன்றுவது ऊहம். அதாவது ச்ரவணத்திற்குப் பின்னுள மநநம் இது तारतारம்; நாலாவது ஸுஹ்ருத் ப்ராப்தி = ப்ரவசநத்திற்காகவும் ஸம்வாதத்திற்காகவும் சிஷ்ய ஸப்ரஹ்மசாரிகள் போன்ற ஸஹ்ருதயர்களைப் பெறுகை, இது रम्यकம்; ஐந்தாவது दानம், दैप् शोधने என்கிற தாதுவினுல் சுத்தி என்று பொருள். அதாவது வந்த ஜ்ஞாநத்தின் சுத்தி, வேறு ஜ்ஞாநங்களின் கலப்பின்றி விவேகத்தின் ஸ்வச்சமான ப்ரவாஹம். இது सदामुदितம்; இதனின்று வரும் ஸித்திகள் மூன்று. அவை आध्यात्मिक आधिभौतिक आधिदैविकदुःखनिवृत्तिகள். இவை प्रमोद.मुदित मोदमानங்கள். இம் மூன்றே ஸித்திகள். இவற்றுக்குக் காரணமாயிருப்பதால் மற்ற ஐந்தையும் ஸித்தி யென்றது. க்ரமப்படி இதற்கு ஸங்க்ரஹம் கூறுவம்—अध्ययनं शब्दोहौ सुहृदां प्राप्तिश्च दानमथ तिस्रः। अध्यात्मभूत-दैव-प्लेशक्षतयोऽष्ट सिद्धयः सांख्ये ॥ तत्परिभाषाः क्रमतः तार-सुतारे च तारतारं च। रम्यं च सदामुदितं प्रमोदमुदिते च मोदमानं च ॥. ஸாம்க்ய ச்லோகத்தில் शब्दः = சாஸ்த்ர க்ரஹணம்; अध्ययनम् = अर्थ श्रवणமென்றும் உரைக்கலாம். அப்போது शब्दोऽध्ययनमथोहः என்று மாற்றவேணும். ऊह என்கிற ச்லோகத்திற்கு நாலாம்பாதம் सिद्धेः पूर्वोऽङ्कुशस्त्रिविधः எனவாம். ஸித்திக்கு ப்ரதிபந்தகம் முன்சொல்லப்பட்ட மூன்று என்று அதன்பொருள். அவை விபர்யய.அசக்தி,துஷ்டிகள். இதற்கு விரிவை ஸாங்க்யகாரிகை 46லிருந்து காண்க.

मङ्क्लेति गारुडपुराणம். 219. यमनियमादिகள். यमनियम आसन प्राणायाम प्रत्याहार धारणा ध्यान समाधिகள். अणिमादिகள். எட்டு ஸித்திகளென்று அமரஸிம்ஹன் சொல்லியிருந்தும் எண் ஸித்தியென்று அவற்றைச் சொல்லாமல் எண் செல்வமென்றதெங்ஙனே என்கிற சங்கை பிறவாமைக்காக இவற்றை ஐச்வர்யமாகச்

என் செல்வம்= 'अणिमा महिमा च तथा लघिमा गरिमा वशित्वमैश्वर्यम् । प्राप्तिः प्राकाम्यं चेत्यष्टैश्वर्याणि योगयुक्तस्य ॥' என்கிற விபூதிகள். எட்டுமாகுணம்= मुक्तदशै யில் ஆவிர்பவிக்கும் गुणाष्टकம்: 'अष्टौ गुणाः पुरुषं दीपयन्ति' इत्यादिகளிற் சொன்ன வையாகவுமாம். எட்டெட்டெ-ணும் கலை चतुष्षष्टिகலைகள். எட்டிரதமேல துவும்='शृङ्गारवीरकरुणाद्भुतहास्यभयानकाः । बीभत्सरौद्रौ च रसाः' என்கிற ரஸங் களெட்டுக்கும் மேலான சாந்திரஸம் இவையெல்லாம் எட்டினவே= இவற்றில் இவனுக்கு இச்சையுள்ளபோது எட்டாதவையொன்றுமில்லை.

ஆத்மகுணாதிகள் நிரம்பாதொழிகிறது अनुसन्धानத்தில் ஊற்றம் போதாமையாலே. ऐश्वर्यादिகள் வாராதொழிகிறது உபேக்ஷையாலே.

---

சொல்லும் வசநத்தை உதாஹரிக்கிறார் अणिमेति. இது ஸாங்க்யகாரிகையன்று, अणिमा-உடல் சிறிதாகை. महिमा-பெரிதாகை, लघिमा-கனமற்றிருக்கை, गरिमा- கனம். वशित्वं-எல்லாம் தனக்கு வசமாகக் கொள்கை; ஐச்வர்யம்-நியமநசக்தி, ப்ராப்தி—வஸ்துவுள்ள இடத்தில் தான் செல்வது. प्राकाम्यं-இஷ்டமானவை யெல்லாம் தன்னை யணுகப் பெறுகை. गुणाष्टकं—எண் குணத்தோனென்ற விடத்தில் ஈச்வரனுக்குச் சொன்ன அபஹதபாப்மத்வாதி குணங்கள் अष्टौ गुणा இதி. பா உத்யோக. 30—106. என்பர். அந்த ச்லோகத்தில் "प्रज्ञा च कौल्यं च दमः श्रुतं च पराक्रमश्चाबहुभाषिता च । दानं यथाशक्ति, कृतज्ञता च" என்று எட்டு குணங்கள் உள்ளன. உரைகளில் 'दया सर्वभूतेषु क्षान्तिरनसूया शौच- मनायासो मङ्गलं अकार्पण्यं अस्पृहा என்று கௌதமதர்மஸூத்ரத்தில் கூறிய குணங்களை எடுத்திருக்கிறார்கள். இவற்றை ஆதிசப்தத்தில் கொள்வது.

எட்டெட்டு=எட்டால் எட்டைப் பெருக்கக் கிடைப்பது அறுபத்து நாலு. எட்டிரதமேலது=எட்டு இரதம் மேலது என்று பதப்பிரிவு. ரஸமென்பது ஸகரம் தகரமாய் ரதமாயிற்று. தமிழில் ரேஃபத்திற்கு முன் உயிரெழுத்தைச் சேர்ப்பர். அதனால் ரவியென்றது இரவி என்பது போல் ரதம் என்பது இரதமென்றாயிற்று. ச்ருங்காரம், வீரம், கருணம், ஆச்சர்யம், சிரிப்பு. பயம், ஜுகுப்ஸை, உக்ரம் என்ற எட்டு ரஸங்களிற்கு மேல்பட்டது: அதாவது சாந்திரஸம் இம் மந்த்ரார்த்தமான எம்பெருமான் ஈன்ற பல வஸ்துக்கள் எட்டென்ற எண்ணுள்ளவையாகும். அவனுக்கு குணங் களும் எட்டு. அவனுடைய மந்த்ரத்தின் அக்ஷரமும் எட்டு. அதை யநுஸந் திக்கும் ஜீவர்களுடைய மதிக்கு குணங்களும் எட்டு, அஷ்டாக்ஷரமூலமாக அவர்கள் பெறும் பலன்களும் எட்டு ஆக எல்லாம் எட்டென்ற எண் கொண்டவையாம்.

இம்மந்த்ரம் எண்ணுகிறவர்கள்சிலருக்கு ஆத்மகுணாதிகளில்லையே என் பதற்கு ஸமாதாநம் आत्मेति. ஊற்றமிருந்து எண்ணினால் அவை உண்டா மென்றபடி. அஷ்டைச்வர்யாதிகள் சிலருக்கில்லையே என்பதற்கு ஸமாதா நம்—ऐश्वेति. வைராக்யத்தால் விரும்பாதவர்களுக்கு அவை வாரா, விரும்பி ஜபித்தவர்களுக்குஅவை வரும். எல்லோருக்கும் சாந்திரஸம் உண்டாகிலும்

கடுக ஸம்ஸாரம் நிவர்த்தியாதொழிகிறது இசைவில் குறைவாலே. ஆகையா லேயிறே 'नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः' என்கிறது.

अविद्यापूतनोन्मुक्तैरनवज्ञातसत्पथैः । असदास्वादसव्रीडैरादिष्टमिति दर्शितम् ॥

உயர்ந்தனன்(நங்)காவ லல்லார்க்குரிமை துறந்துயிராய்
மயர்ந்தமை தீர்ந்து மற்றோர்வழியின்றி யடைக்கலமாய்ப்
பயந்த வந் நாரணன்பாதங்கள் சேர்ந்து பழவடியார்
நயந்த குற்றேவலெல்லா நாடு(ட?)நன் மனு வோதினமே.

---

மோக்ஷம் விளம்பிக்கிறது ஏன் என்ன, உத்தரம் கடுக இதி. கடுக=விரைவில் ஆகையால் ஸர்வபலஸாதநத்வம் சொன்னதற்கு விரோதமில்லை.

திருமந்த்ரார்த்த விவரணத்தை உபஸம்ஹரிக்கிறார் अविद्येति. கீழ்க்கூறிய பொருளெல்லாம் ஆசார்யர்கள் கூறியவை. மற்ற மதாந்தரஸ்தர்கள் சொல்லும் பொருளை ஆசார்யர்கள் ஆதரியார். அவித்யையாவது—அஜ்ஞாநம். அதாகிற பிசாசியினின்று விடுபட்டவரும், சாஸ்த்ர ஸம்மதமான மார்க்கத்தை அவமதிக்காதவரும், அஸத்தான வஸ்துவின் அநுபவத்தில் வெட்கமுற்றவருமானவராவர் ஆசார்யர்கள். அவர்களால் ஆஜ்ஞையுடன் உபதேசிக்கப்பட்ட அர்த்தமானது इति—இவ்வாறு दर्शितम्—காண்பிக்கப் பெற்றது. ஜீவப்ரஹ்ம—ஐக்யம் பொருளென்று சிலர் சொல்லலாம். அது அஜ்ஞாந பிசாசத்தின் ஆவேசத்தால்வந்தது. சிலர் नमः என்பதற்குளனக்கொன்றும் கார்யமில்லையென்று स्वप्रवृत्तिनिवृत्तिயே பொருளென்பர்; அது சாஸ்த்ர ஸம்மதமான உபாயத்தை அவஜ்ஞை செய்து வந்ததாகும். नारायणाय என்றதை உபாயத்திலே சேர்த்து ஐச்வர்யாதி பலனையே விரும்புவருண்டு. அது असदास्वादத்திலேருசியால் வந்தது. परस्त्रीवैष्याद्यर्थம் அப்ராமாணிகமாகையாலே அத்யந்தம் அஸத்தாகும். ஆகக் கீழ்க்கூறிய பொருள்களே முமுக்ஷுக்களுக்கு ग्राह्यங்களாம்,

மற்றொரு ரீதியில் முழு மந்த்ரார்த்தத்தையும் சுருக்கிக்கொண்டு இவ்வதிகார மூலம் இவ்வர்த்தம் அறிந்தோமென்று பாசுரத்தால் அருள்செய்கிறார் உயர்ந்த இதி. உயர்ந்தனன் காவலன் என்றும் உயர்ந்த, நங்காவலன் என்றும் பாடங்கள். இது அகாரார்த்தம். மேலே உகாரார்த்தம். உயிராய் என்றது மகாரார்த்தம். இரண்டாமடியில் நமச்சப்தார்த்தம். பயந்த என்றது நாரசப்தார்த்தம். மேலே—மேலம்சத்தின் அர்த்தம். பாட்டின் பொருளாவது—உயர்ந்த(னன்)—यतो वा इमानि......स ब्रह्म என்றபடி ஜகத்காரணதவ ப்ரயுக்தமான நிரதிசயோத்கர்ஷம் பெற்றவனான (நம்=நமக்கு) காவலன்—ரக்ஷகனான ச்ரிய:பதியைவிட அல்லார்க்கு—வேறானவர்க்கு. உரிமை துறந்து—சேஷத்வத்தை விட்டு. உயிராய்—தேஹாதி விலக்ஷணனான ஆத்மாவாகி, மயர்ந்தமை தீர்ந்து=அஹங்கார மமகாராதிகள் கழியப் பெற்று. மற்று ஓர் வழியின்றி—ஜ்ஞாந சக்த்யாதிகளில்லாமையாலே ப்ரபத்தி தவிர வேறு உபாயமில்லாமல், அடைக்கலமாய்—அவனுக்கு भरமாக ஸமர்பிக்கப்பட்டவனாய், பயந்த—नराज्जातம் என்றபடி ஸர்வத்தையும் படைத்த

इत्थं सङ्घटितः पदैस्त्रिभिरसावेकद्विपञ्चाक्षरैरर्थैस्तत्त्वहितप्रयोजनमयैरध्यात्मसारैस्त्रिभिः ।

आद्यत्र्य(स्त्र्य)क्षरवेदसूतिरजहत्स्थूलादिवृत्तित्रयः त्रैगुण्यप्रशमं प्रयच्छति सतां त्रय्यन्तसारो मनुः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे मूलमन्त्राधिकारः सप्तविंशः ॥ 27

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—०—०—

---

அ-நாரணன்—ப்ராப்ய ப்ராபக பூதனுய் ப்ரஸித்தமான திருமாலின், பாதங்கள் சேர்ந்து—திருவடியை வைகுண்டத்தில் பெற்று பழ அடியார்—நித்யஸூரிகள் நயந்த=ப்ரீதியுடன் செய்கின்ற, குற்றேவல் எல்லாம்—ஸர்வகைங்கர்யங்களையும் நாடு=ஆசைப்பட்டுப் பெறுதற்குக் காரணமான. நல்—சிறந்த, மனு=மந்த்ரத்தை—திருவஷ்டாக்ஷரத்தை. ஓதினம்—அர்த்தத்தோடு அறிந்தோம். சேர்ந்து என்பதற்கு நாடு என்பதில் அந்வயம். இங்கே நாடு என்பதற்கு நாம் நாடுவதற்கான என்று பொருள். வினைத்தொகையில் வினைக்கு மேற் சொல்லுக்குத் தகுந்தபடி பொருள் கொள்வதுண்டு. நாட என்ற பாடம் உண்டாகில் அர்த்தம் ஸ்பஷ்டம்.

மேலே ச்லோகத்தாலே இம்மந்த்ரத்திற்கு அக்ஷரம் எத்தனை, பதம் எத்தனை, எத்தனை யோஜனைகள், என்ன பலன் இத்யாதிகளைச் சுருக்கியருள்கிறார் इत्थम् இதி. असौ—இந்த—आद्यः—மூன்று ரஹஸ்யங்களில் முதலாவதாய், त्रिभिः पदैः மூன்று பதங்களால் संघटितः அமைக்கப்பெற்றதாய் ओमित्येकाक्षरम्, न म इति द्वे अक्षरे, नारायणायेति पञ्चाक्षराणि என்றதே. अध्यात्मसारैः ஆத்மாவோடு ஸம்பந்தப்பட்ட तत्त्व.हित.प्रयोजनमयैः தத்துவம் ஹிதம் புருஷார்த்த மென்கிற त्रिभिः अर्थैः மூன்று பொருள்களோடும் संघटितः சேர்க்கப்பட்டதாய்; மூன்று பதங்களுக்கு அடைவாக மூன்றும் பொருளாகும். त्रि अक्षर वेदसूतिः—त्रि अक्षर—अ-उ-म् என்கிற மூன்று அக்ஷரங்களையுடையதான வேதஸூதி:—வேதகாரண ப்ரணவத்தையுடையதாய் आद्यत्र्यक्षरवेदसूतिः என்கிற ஸமஸ்தபாடத்தில் முதல் அவயவமான மூன்றக்ஷரங்கொண்ட ப்ரணவத்தையுடையதாயென்று பொருள். अजहत् स्थूलादिवृत्तित्रयः—स्थूल आदिः यस्य तत् स्थूलादि· இது த்ரய த்திற்கு விசேஷணம். जन्मादि என்ற விடத்தில் एकवचनத்தால் ஸ்ருஷ்டி ஸ்திதிப்ரளய ஸமுதாயத்தைக் கொண்டு அதில் ஜந்மாவை ஆதி யென்றது போல் இங்கே வ்ருத்தி த்ரயமென்கிற ஸமுதாயத்தில் ஸ்தூலத்தை ஆதியாகக் கொள்க. वृत्तीनां त्रयं वृत्तित्रयम्. अजहत् त्रयं यं सः என்று த்விதீயாபஹுவ்ரீஹியாம். वृत्तियாவது बोधनव्யாபாரம். இங்கே நமச்சப்தத்தில்' स्थूलம் ஸூக்ஷ்மம் பரம் என்று அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிற் சொன்ன கீழ்கூறிய மூன்றுவித बोधन व्यापारங்களைக் கொள்க. இது நாராயணமந்த்ரம். இதற்கு நாராயண சப்தம் அஸாதாரணம்; ப்ரணவமும் நமச்சப்தமும் வேறு வ்யாபக மந்தரங்களிற் போல் இங்கும் சேருமென்று இந்த மூன்றும் பாதத்திலிருந்து தேறும். இதுபோல்

இம் மந்த்ரத்திற்கு ஏகவாக்யம் வாக்ய த்வயம் வாக்ய த்ரயம் என்ற மூன்று போதந வ்யாபாரங்களுமிருப்பதால் அதில் ஏகவாக்ய பக்ஷத்தில் ப்ரணவத்திலும் நமச்சப்தத்திலும் உட்பிரிவு இராமையாலே அந்த வ்ருத்தி ஸ்தூல விருத்தியாகும், ஆக ஸ்தூலாதியான முவ்வகை வாக்யப் பிரிவுகளையும்விடாத என்று **अखण्ड** இத்யாதி பதத்திற்கு அர்த்தமாகும். இப்படி இந்த ச்லோகத்தில் அக்ஷரம் பதம், அக்ஷரார்த்தம் பதார்த்தம் அவாந்தர வாக்யார்த்தமெல்லாம் அறிவிக்கப்பட்டன. பலத்தை யருளிச்செய்கிறார் **त्रैगुण्यप्रशम**மிதி. **त्रयो गुणाः यस्य स त्रिगुणः** என்று **गुणत्रय वश्य**னை **बद्धजीव**னைச் சொல்லுகிறது. **तस्य भावः त्रैगुण्यं—बन्धम्**; அதனுடைய நிவ்ருத்தியை **प्रयच्छति**—அளிக்கிறது.

எட்டுமாமூர்த்தி யென்கிற பாட்டிலே பல எட்டுக்களைக் காட்டினாற்போல் இங்கே பல மூன்றுகளைக் காட்டுகிறார்—இம் மந்த்ரம் மூன்றில் ஒன்று. இதில் பதங்கள் மூன்று; அவற்றின் அக்ஷரங்களின் எண்ணிக்கை ஒன்று இரண்டு ஐந்து என்று முவ்வகையானது, தத்துவாதி ரூபங்களான அர்த்தங்கள் மூன்று. முதற்பதத்தில் அக்ஷரங்கள் மூன்று. அதன்மூலமான வேதங்களும் மூன்று. **नमः** என்பதில் பரயோஜனையில் அக்ஷரங்கள் மூன்று. நமச்சப்தத்திற்குப் பொருள் மூன்று. **अ-नर-नारायण** என்று எம்பெருமானுக்குச் சொற்கள் மூன்று. முழுமந்த்ரத்திற்கு ஏகவாக்யம் த்விவாக்யம் த்ரிவாக்யம் என்று யோஜனைகள் மூன்று. இதனால் விலக்கப்படும் மிச்ர குணங்கள் மூன்று, மந்த்ரமூலமான பலன்கள் ஐச்வர்யகைவல்யமோக்ஷங்கள் மூன்று இம்மந்த்ரம் மூன்று வேதஸாரம் என்ற சமத்காரம் இங்கே கருத்திலுள்ளது.

**यत्र विष्णोश्च लक्ष्म्याश्च शेषित्वे तुल्यतोदिता । कठवल्ल्यामिमं श्रेष्ठनारायणमन्त्रं भजे ॥**

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

மூலமந்த்ராதிகாரம் முற்றும். 27.

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

## த்வயாதிகாரம். 28

ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்தில் மூலமந்த்ரத்தை முதலாகவும் சரமச்லோகத்தை 2-ஆவதாகவும் த்வயத்தை மூன்றாவதாகவும் முதலில் அருளியிருந்தாலும் முடிவில் ச்லோகத்திலே த்வயமே யிரண்டாவதாகக் கருதப்பெற்றது. **सारसंक्षेप**த்தாலும் இதே யிரண்டாவதாகும். மேன்மேல் விவரணமாயிருப்பதாலும் த்வயம் மத்யமம். திருமந்த்ரம் போல் மந்த்ரமாயிருப்பதாலும் அத்துடன் சேரும். ஸம்ப்ரதாயத்திலும் இரண்டாவதாக இதே ப்ரஸித்தம். அதனால் த்வயமந்த்ரவ்யாக்யானம் இங்குத் தொடங்குகிறார் முதலில்—திருமந்த்ரம் ச்ருதியில் ஸுப்ரஸித்தமாய் ஓதப்பெற்றது. ஸ்வரூபஜ்ஞானத்திற்காக முதலில் க்ரஹிக்கப்படுகிறது. **सन्ध्याकालेषु जप्तव्य**மித்யாதிகளாலே அவச்யம் ஜபிக்க வேண்டியதுமாகிறது. திருவாராதநத்திலே இதையே மந்த்ரமாக நித்யத்தில் அருளினார். கீழதிகாரத்தில், ஸர்வபல

श्री:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

# द्वयाधिकारः

## த்வயாதிகாரம்—28

आकर्णितो वितनुते कृतकृत्यकक्ष्याम् आम्रेडितो दिशति यश्च कृतार्थभावम् ।
प्रत्यूषतां भजति संसृतिकालरात्रेः पद्मासहायशरणागतिमन्त्र एषः ॥

---

ஸாதநமாகவும் ஓதப்பெற்றது. புண்டரீகாதிகள் நாரதாதி மூலமாக இதையே பெற்று மோக்ஷமடைந்தன ரென்று பாரதாதி ப்ரஸித்தம். நமச்சப்தம் இருப்பதாலே ப்ரபத்திமந்த்ரமாவதற்கும் குறையில்லை. 'मूलमन्त्रेण स्वात्मानं देवाय निवेद्य' என்று ஆத்மஸமர்ப்பணமந்த்ரமாக பாஷ்யகாரரும் அருளினர். இப்படி ஸுப்ரஸித்தமான மந்த்ரத்தை ஸம்ப்ரதாயமூலமாகப்பெற்றிருக்க, ச்ருதி புராணுதி ப்ரஸித்தமாகாததாய் பூர்வாசார்யவாக்ய மென்றே சொல்ல ப்பட்ட த்வயத்தை சரணுகதி மந்த்ரமாகக் கொள்வதென்? ஒன்ருயிருக்க, த்வயமென்பதென் இத்யாதி சங்கைகளெல்லாம் திரும்படி மேலே விரித்து உரைப்பதற்கு ஸங்க்ரஹமாகும் ச்லோகம் आकर्णित इति. ச்லோகார்த்தமாவது—यः எந்த மந்த்ரமானது आकर्णितः—கேட்பிக்கப் பெற்றதாய் कृतकृत्यकक्ष्यां—மந்த்ரத்தைச் சொன்னவனுக்கு உபாய பூர்த்தியானவனின் தன்மையை वितनुते—நன்ருகச் செய்கிறதோ, आम्रेडितः—பல கால் உச்சரிக்கப்பட்டதாய் कृतार्थभावं च—புருஷார்த்தம் பெற்றவனுயிருக்கையையும். दिशति—அளிக்கிறதோ, एषः—இந்த. पद्मासहायशरणागतिमन्त्रः—ச்ரீவிசிஷ்ட நாராயணனிடத்தில் சரணுகதி செய்வதைச் சொல்லும் மந்த்ரமானது संसृतिकालरात्रेः—ஸம்ஸாரமாகிற இருண்ட இரவுக்கு प्रत्यूषतां—விடியற் காலமாயிருக்கையை भजति—அடைகிறது. सकृदुच्चारणादि விசேஷங்களிருப்பதால் இதுவே மோக்ஷமந்த்ரமாக ஆதரிக்கப்படுகிறதென்று ச்லோகத்தின் கருத்து. यः என்கிற பதத்திலே இதற்கும் ச்ருத்யாதி ப்ரஸித்தியும் ஆசார்ய பரிக்ரஹமும் உண்டென்று அறிவிக்கப்பெற்றதாம். आम्रेडितः என்ற பதத்தாலே ஒரு த த்திற்கு மேலாகச் சொல்லப்படுவதைக் கூறியதால் आकर्णित என்றவிடத்தில் ஒருதரம் சொல்வது கருதப்பெற்றிருக்கவேண்டும் அதனுல் கேட்கப்பட்டதா யென்று பொருள் கொள்ளாமல் கேட்பிக்கப்பட்டதா யென்று निजकृतार्थ த்தைச் சேர்த்தது. ஆசார்ய மூலமாகக் கேட்ட மாத்ரத்தால் சிஷ்யன் க்ருதக்ருத்யனுகான். சிஷ்யன் மூலமாக ஈச்வரனுல் கேட்கப்பட்டதாய்க் கொண்டே இவனை க்ருத க்ருத்யனுக்கும். அப்படி சிஷ்யன் சொல்லவேண்டுமென்பது வ்யக்தமாகைக்காக கேட்பிக்கப்பட்டதா யென்றது. आकर्णितः என்றவிடத்திலே उच्चारितः—என்றே இருக்கலாமே யென்னில்—இவன் விசதமாக ப்ரபத்தி செய்ய அசக்தனுயிருந்தாலும்—சரண்யன் அறிய இப் பூர்ண ப்ரபத்திகர்ப்பமான மந்த்ரத்தைச் சொன்னுலும் போருமென்பதற்காக,

இவனிடம் அவன் கேட்பதை யறிவிக்கவேண்டுமென்று இச் சொல்லாம். அடியோடு அர்த்த ஜ்ஞானமே யிராமல் உச்சாரணம் पूर्णफलसाधन மாகாவிட்டாலும் ஸமுதாய ஜ்ஞாநபூர்வக உச்சாரணத்தில் அவிசதமாக ப்ரபத்தி ஸித்திப்பதால் க்ருத க்ருத்யத்வ முண்டு. आम्रेडित: இத்யாதியால் ஒரே பலனைக் குறித்து இரண்டு தரம் சொல்லவேண்டா, மீண்டும் அநுஸந்தாநம் புருஷார்த்தமே யாகு மென்றதாம். இதனால் அஷ்டாக்ஷராதி மந்த்ரம் பலகால் ஜபிக்கப்படவேண்டும்; பக்தி யோகத்திற்கும் மந்த்ரமாகையால் உபாயமாகவும் புந: புந: சொல்லப்படும். இது அவ்வாறன்றென்றதாம். முதற்பாதத்தினுலேயே மோக்ஷ ஸாதநமென்று தெரிவதால் மூன்றும் பாதமெதற்கென்னில்—மூன்றும் பாதத்தில் மோக்ஷ ஸாதநமாகக் கொள்ளப்படுகை विधेयम्. அதற்கு ஹேதுவைக் கூறுவது पूर्वार्धम्. ே-லும் முதற்பாதத்தாலே மோக்ஷம் நீங்கலாக மற்ற பலன்களைக் கொண்டு மோக்ஷத்திற்கு இவ்வளவு போதாதென்ற சங்கை வர, அதைப் போக்க 'सकृदुच्चार: संसारमोचको भवति என்கிற ப்ரமாணத்தை விசேஷித்துக் குறிப்பதற்காக மூன்றுவது பாதம். முதற்பாதத்தால் உபாய ஸித்தியும் மூன்றும் பாதத்தால் ஸம்ஸார நிவ்ருத்தி என்ற பல ஸித்தியும் சொல்லி த்வய சப்தார்த்தம் குறித்ததுமாம். ப்ரபத்தி செய்யாமல் த்வயம் மட்டும் க்ரஹித்திருப்பவனுக்கும் விரைவில் பல ஸித்தியுண்டு; ஸம்ஸாரத்தில் ஜந்மாந்தரமுமிருந்த போதிலும்எல்லாம்இரவின் கடைசிபாகத்திற்கு ஸமாநமாகவே கழியுமென்பதற்காகவும் மூன்றும் பாதமாம். ஸாரதீபிகையில் आकर्णित என்ற சொல்லுக்குக் கேட்கப்பட்டு என்றே பொருளுரைத்து, கேட்டு உச்சரிக்கப்பட்டு என்று தாத்பர்யம் கொள்ளப்பட்டது. கேட்பது உச்சரிப்பதற்காகவே யாகையாலே அதுவும் ஸித்திக்கு மென்று கருத்து. कृतकृत्यभाव மென்று கூறுமல்...कक्ष्यां என்றதாலே சிறிது வேறுகவும் பொருள் கூறலாம். शिरोमणिकक्ष्यै யென்று சொன்னுல் வித்யாசாலையில் சிரோமணியாவதற்கான வகுப்பு என்றே பொருள் கொள்வது போல், க்ருத க்ருத்ய கக்ஷ்யை யென்றுல் க்ருத க்ருத்யனுக்கு வேண்டும் வ்யாபாரம் செய்யும் गोष्ठी என்னலாமாகையாலே மந்த்ரமானது கேட்கப்பட்டு க்ருதக்ருத்யனுகைக்கான வ்யாபாரமுள்ளவனுக்குகிற தென்று ஸித்திப்பதால் மந்த்ரத்தைக் கேட்டவன் உபாயாநுஷ்டாநம் பண்ணுவானென்றதாகும். அதனுல் அஷ்டாக்ஷராதிகள்போலன்றி த்வயமந்த்ரத்தை ஆசார்யர் சொல்லும் போது காதால் கேட்டு உச்சரிக்காமல் (ஸந்யாஸமந்த்ரத்தைப்போல்) மனத்தில் தரித்து உபாயாநுஷ்டானகாலத்தில் முதன் முதலாக உச்சரித்தாலும் போதுமென்று सकृदुच्चार: என்கிற ச்ருதிக்குத் தாத்பர்யம் சொல்லலாமென்று ஆகர்ணித பதம் குறிக்கும் போலும். அப்போது உபதேசிக்கப்பட்டுக் கேட்டமாத்திரத்திலே உபாயாநுஷ்டாநாதிகாரமென்று முதற்பாதப்பொருளாம்; உபாயத்திற்குப் பின் நிலை மேற்பாதத்தில், உபாயமாகை மூன்றும் பாதத்திலென்க த்வயத்தில் முதல் கண்டம் க்ருத்ய

திருமந்த்ரத்தில் मध्यमपदத்தில் आर्थமாகவாதல் शाब्दமாகவாதல் சொன்ன உபாயவிசேஷத்தையும், இதின் फलமாகத் तृतीयपदத்திற் சொன்ன पुरुषार्थविशेषத்தையும் विशदமாகப் ப்ரகாசிப்பிக்கிறது द्वयम्. இது कठवल्लिயிலே பிரிய வோதிச் சேர்த்து अनुसन्धिக்க விதிக்கையாலும், भगवच्छास्त्रத்திலே श्रीप्रश्नसंहितादिகளிலே वर्णोद्धारादिகளும் பண்ணிப் प्रतिपादिக்கையாலும் श्रुतिमूलமான तान्त्रिकम-ந்த்ரம். இத்தைப் पूर्वाचार्यवाक्यமென்று சிலர் சொன்னதுவும்—ஆப்தர் उपदेश

---

த்தைக் கூறும்; மேல்கண்டம் பலத்தைக் கூறும்; இப்படி சேர்ந்து மந்த்ரமாகுமென்பதை 1-3. பாதங்களால் அறிவித்ததுமாம். திருமந்திரத்திற்கு இத்தன்மை யிராமை போல் பிராட்டியையும் சரணகதியையும் ஸ்பஷ்டமாகச் சொல்லாமையும் உண்டு; அதனாலும் த்வயத்திற்குச் சிறப்பென்று நாலாம் பாதத்தில் அறிவித்ததாம்.

ச்லோகத்தில் குறித்த விசேஷங்களை மேலே விரித்துரைக்கிறார் திருமந்த்ரத்திலித்யாதியால். இதனின்று, "இத் த்வயமே ப்ரபத்தி மந்த்ரங்களெல்லாவற்றிலும் ப்ரதாநம்" என்றவரையில் த்வயத்திற்கு ஏற்றம் வரையப்பெறும். ஸாத்யோபாய—உபேயங்கள் திருமந்த்ரத்தில் சுருக்கப்பட்டன; नमः என்பதற்கு எனக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை; எனக்கு அநிஷ்ட நிவ்ருத்தி வேண்டுமென்ற பொருளிலிருந்து உபாய கற்பனை; நம: நமஸ்காரமென்ற போது சாப்தமானாலும், ச்ரீவிசிஷ்ட நாராயண சரணாகதியென்பது அஸ்பஷ்டம். ச்ரீவிசிஷ்டனிடம் கைங்கர்யமென்பதும் அஸ்பஷ்டமென்றபடி. இதற்கும் ச்ருத்யாதி ப்ரமாண ப்ரஸித்தியுண்டென்கிறார் இது இதி. कठवल्लिயிலே இதி. அஷ்டாக்ஷரம் த்வயம் இரண்டையும் கொண்ட இந்தக் कठवल्ली இப்போது ஓதப்படுகிறதில்லை; खिलமாக வாக்யங்கள் உதாஹரிக்கப்பட்டுள்ளன. அங்குப் பூர்வோத்தர खण्डங்கள் சேர்த்து ஓதப்படாமல் இடையில் पूर्णमदः இத்யாதி வாக்யங்களோடு இருக்கின்றன. तद् द्वयं सर्वं तत् सकृदुच्चारणः என்றிருப்பதாலும், இரண்டு खण्डங்களின் அக்ஷரங்களையும் பதங்களையும் எண்ணிக் கூறியிருப்பதாலும் சேர்ந்து த்வயமாகுமென்று தெரிகிறது. த்வயமாயினும், ஒரு கார்யத்திலே சேர்த்து உபயோகப்படுகிறபடியால் ஒரு மந்த்ரமாயிற்று. कठवल्ली வாக்ய ராசியை पाठभेद விசாரங்களுடன் நாம் அச்சிட்ட उपनिषद्भाष्यத்தில் காண்க. இரண்டுவித பாடங்களிலும சில அம்சங்கள் அநுவாதத்திலுள. சில உரைகளிலும் அவை உள. ச்ரீப்ரச்ந ஸம்ஹிதையும் அச்சிடப் பெற்றதே. அதில் वर्णोद्धारम् श्रीः प्रथमाक्षरम् मकारो द्वितीयाक्षरम्" என்ற க்ரமத்தில் உளதென்பர். உத்தரகண்டத்தில் नमः என்பது முதற்பத மென்ற பக்ஷமும் தெரிகிறது. ஸம்ஹிதாதி என்ற ஆதிபதத்தினாலே பாத்ம புராணாதிகளை க்ரஹிப்பர். இப்படி தந்த்ரத்தில் சொல்லப்பட்டதால் तान्त्रिकமந்த்ர மென்று சொன்னாலும் ச்ருதியுமிருப்பதால் ச்ருதிமூலமான தாந்த்ரிகமந்த்ர மென்னவேண்டும். ஸர்வாதிகாரமென்பதை யறிவிப்பதற்காக तान्त्रिकமென்றது; ப்ரணவம் சேராதபோது வைதிகமும் தாந்த்ரிகமாம். இப்படி வைதிகத்வம்

த்தாரென்று आदरिக்கைக்காகவாதல், பரமாசார்யனுன ஸர்வேச்வரன் सात्व-தத்திலே அருளிச்செய்கையாலேயாதலாமத்தனை. இதற்கு ருஷ்யாதிகளும் मूलमन्त्रादिகளிற்போலே अपेक्षमाणர்க்கு मन्त्रव्याकरणादिகளிற்படியே கண்டுகொள்ளலாம்.

இம் மந்த்ரம் 'स भ्रातुश्चरणौ गाढम्', 'भवांस्तु सह वैदेह्या' என்கிற श्लोकद्वयத்தில் விவக்ஷிதமான उपाय-उपेयरूपமான अर्थத்தைப் प्रतिपादिக்கையாலே द्वयமென்று பேர் பெற்றது. இப்படியிருக்கையால் उपायान्तरங்களிலும் उपेयान्तरங்களிலும்

---

தாந்த்ரிகத்வம் இரண்டுமிருப்பதால் கேவலபூர்வாசர்ய வாக்யமாகாது, ஆசார்யபரிக்ரஹீத மென்ற கௌரவத்திற்காகவும் அதனுல் ஸந்மூலமாகத் தானிருக்கு மென்றுகொள்வதற்காகவும் அவ்வாறு கூறுவது. பூர்வசப்தம் ஸர்வபூர் வனுன பரமாத்மாவைச் சொல்வதானுல் தாந்த்ரிகமென்றே पूर्वाचार्य-वाक्य மென்பதன் பொருளாகும். அருளிச் செய்கையாலே இதி. 'द्वयेन मन्त्ररत्नेन मतिप्रयेण भजेत् सदा। तस्मिन्नन्तःपुरे लक्ष्म्यै मया दत्तं सनातनम् என்று प्रथमगुरु அளித்த படி தெரிகிற தென்பர். ரிஷிச்சந்தோ தேவதைகள் தெரியாமையால் மூலமந்த்ரதுல்யமா காதெ கன்பதற்கு உத்தரம் இதற்கு இதி. புதிய மந்த்ரங் களுக்கும் ரிஷிச் சந்தோ தேவதைகளை யறிய மந்த்ரவ்யாகாரணம் வழி காட்டுகிறபடியால் அவையில்லை யென்ன வொண்ணுது. உண்மையில் சொல்ல ப்பட்டுமிருக்கின்றன என்று அறிவிப்பதற்காக மந்த்ரவ்யாகரணுதிகளின் என்றது. "अन्तर्यामी ऋषिस्तस्य देवी गायत्री उदाहृता। छन्दस्तु देवता विष्णुः परमात्मा सनातनः॥ पञ्चविंशाक्षरो मन्त्रः प्रपत्तिरित्युदाहृतः। सर्वेषामेव मन्त्राणां मन्त्रोऽयं मन्त्रनायकः॥ हृदयाद्यंशभेदेन पदैःषड्भिरलङ्कृतम्। नवार्णं हृदयं विद्धि त्रितयार्णं शिरो मतम्॥ शिखाष्टाक्षरं विद्धि कवचं तद्वदेव हि। अस्त्रं पञ्चाक्षरं नेत्रं द्व्यक्षरं परिकीर्तितम्॥ षट् पदानि च मन्त्रस्य षडङ्गान्येव विन्यसेत्" இத்யாதி வசநங்கள் உள. ஆனுலும் இவை அவச்யமில்லை யென்பதற்காக அபேக்ஷமாணர்க்கு என்றருளினுர். அஷ்டாக்ஷராதிகள் அஸ் பஷ்டப்ரபத்தி மந்த்ரமாய் ரிஷ்யாதி ஜ்ஞாநஸாபேக்ஷமாய் जपपुरश्चरणादिகளாலே சக்தி பெறவேண்டியதாயுமிருப்பதாலே அவற்றை யபேக்ஷிக்காமையும் இதற்கு ஏற்ற மென்றபடி.

த்வயமென்ற பெயர் எதனுல்? பிரிய வோதிப் பிறகுச் சேர்த்திருப்பதால் द्वय மென்னில்-श्रीमन्नारायण இத்யாதி மந்த்ரம் த்வயமாகாது. இரண்டு வாக்ய மாகையால் த்வயமென்னில்—இது மூன்று வாக்யமுமாகிற படியால் தகா தென்ன—ஸாத்யோபாய—உபேயங்களைச் சொல்லுவதால் த்வயமென்கிருர் இம் மந்த்ரம் இதி. அப்போது திருமந்த்ரமும் த்வயமாகலாமே என்னில்— அங்கு ஏகவாக்யதாபக்ஷத்தில் அதில்லை. விசதமாக ப்ரதிபாதிக்கிற மந்த்ரம் த்வயமே என்றலுமாம். இந்த த்வயம் போலே பிரித்து ஓதப்பெற்றுச் சேர்த்து அநுஸந்திக்கக் கூடிய ஸ்ரீமத்ராமாயண ச்லோகங்களை உபாயஉபேயங்களைக் குறிப் பதில் த்ருஷ்டாந்தமாக்குகிருர் ஸ ப்ராதுரிதி. இருவரையும் உபாயமும் உபேயமுமாகச் சொல்வதாலும் த்வயமென்றும் கூறுவர். இப்படி யிருக்

துவக்கற்றவன் இம் மந்த்ரத்துக்குப் பூர்ணாதிகாரி. இம் மந்த்ரம் சரணஸமர்ப்பணங்களை இடைவே ப்ரதிபாதிக்கையாலே த்வயமென்று சொல்லப்படுகிறதென்றும் சிலர் சொல்லுவர்கள். இப்படி 'श्रीमन्नारायण स्वामिन्' इत्यादिमन्त्रान्तரத்திலும் த்வயशब्द-प्रयोगத்துக்கு இவையே நிமித்தம்.

"मन्त्रराजमिमं विद्यात् गुरुवन्दनपूर्वकम् । गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः ॥

गुरुरेव परा विद्या गुरुरेव परायणम् । गुरुरेव परः कामो गुरुरेव परं धनम् ॥

यस्मात् तदुपदेष्टाऽसौ तस्मात् गुरुतरो गुरुः । नानुकूल्यं न नक्षत्रं न तीर्थादिनिषेवणम् ॥

---

கையால் = உபாயத்தைப் போலே உபேயத்தையும் ஸ்பஷ்டமாக மோக்ஷமாகக் கூறியிருப்பதால் திருவஷ்டாக்ஷராதிகளுக்கு பக்திரூப உபாயத்திலும் फलान्तரத்திலும் துவக்குள்ளவன் அதிகாரி; இங்கே சரணாகதியையும் மோக்ஷத்தையும் சொல்வதால் அகிஞ்சநமுமுக்ஷு பூர்ணாதிகாரி பூர்ண என்பதால் फलान्तरापेक्षैயிலும் இம்மந்த்ரம் அமுக்யமாக உபாயமாகுமென்று தெரிகிறது. அப்போது उत्तरखण्डम் அந்வயிக்காதே என்ன வேறு பொருள் கூறுகிறார் இம்மந்த்ரம் இதி. பூர்வखण्डம் गोप्तृत्ववरणादि அங்கங்களையும் உத்தர खण्डம் அங்கியையும் சொல்லுகிறது. அருளாளப்பெருமாளெம்பெருமானாரின் நிர்வாஹமிதென்று மேலே தெரியும். சதுர்த்தியானது கைங்கர்யபரமானாலும் த்வயத்தினால் फलान्तरத்தை அபேக்ஷிக்கும் போது அதையும் கைங்கர்ய சேஷமாக்கி அபேக்ஷிக்க வேண்டுமென்றும் கொள்க. फलवल्लியிலும் सर्वपुरुषार्थसिद्धिर्भ-वति, எனவுளது. சேர்த்து அநுஸந்திப்பதால் த்வயம் என்று த்வயசப்தார்த்தம் கூடாமைக்கு வேறு மந்த்ரத்திலும் த்வயசப்தப்ரயோகம் காரணமென்கிறார் இப்இதி श्रीमन्नारायण स्वामिन् दासोऽहं तव तस्य वै। परमीप्सुस्तमेवार्थं अनुकूलो विस(व)र्जयन्।

प्रातिकूल्यं सुविस्रब्धः संप्राप्य शरणं परम् । व्रजामि युष्मच्चरणं सर्वदाऽऽप्य मयार्चितः' என்கிற ச்லோக த்வயமாம். ஆதிபதத்தால் "भगवन् सर्वविजयिन्" இத்யாதி மந்த்ரத்தைக் கொள்வதென்பர். த்வயம் ஒன்றையும் அபேக்ஷிக்காதெனில் குருவை யாச்ரயிப்பதும் வேண்டாவென்ன அருளுகிறார் मन्त्रराजमिति. "எந்த மந்த்ரமும் தற்செயலாகக் கேட்டதாலும் மறைந்திருந்து கேட்பதாலும் வேறு வியாஜமாகக் கேட்பதாலும் கோசத்தில் காணப்பட்டும் கார்யத்திற்கு உதவாது. அதற்கு மாறாகக் கேடும் நேரும்" என்றவாறு வசநம் கூறுவதால் குருவை யாச்ரயிப்பது ஸர்வஸாதாரணமென்றபடி. मन्त्रराज மித்யாதி ஸாத்யகி தந்த்ரம். அங்குச் சொன்னது ஒரு तान्त्रिक மந்த்ரமென்று நிக்ஷேப ரக்ஷையில் தெரிகிறது त'द्विष्णोः என்ற மந்த்ரமென்பர். குரு இல்லையேல் परब्रह्मादि प्राप्ति யில்லை, ब्रह्मविद्यैயை (மந்த்ரத்தை) உபதேசம் செய்பவரே முக்ய குருவாவர். இப்படி குரு வேண்டுமென்பதினாலேயே மற்றவையும் வேண்டுமென்னலாகாது. சில மந்த்ரம் சில பேருக்கே பொருந்தும்; சிலருக்கு விரோதியாகும் இதனை सिद्धारिकोष्ठம் மூலம் காண்பர். அப்படி பொருத்தத்தை இந்த மோக்ஷமந்த்ரத்திற்குப் பார்க்க வேண்டா. உபதேசம் பெற சுபநக்ஷத்ரதீர்த்த

न पुरश्चरणं नित्यं जपं वाऽपेक्षते ह्ययम् । नमस्कृत्य गुरुं दीर्घप्रणामैस्त्रिभिरादितः ॥
तत्पादौ गृह्य मूर्ध्नि स्वे निधाय विनयान्वितः । गृह्णीयान्मन्त्रराजानं निधिकाङ्क्षीव निर्धनः ॥
लब्ध्वैवं मन्त्रराजानं मां गच्छेच्छरणं नरः । अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत् ॥

मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति ।" என்று प्रपत्तिमन्त्रान्तरத்திற் சொன்ன गुरूपसत्त्यादिகள் இங்கும் வர ப்ராப்தம்.

ஆஸ்திகனுக்கு இம் मन्त्रार्थத்தினுடைய समुदायज्ञानपूर्वकसकृदुच्चारणமே உத்தாரகமென்னுமிடம் शास्त्रसिद्धம்.

---

ஸ்நாநாதிகளெல்லாமும் வேண்டா. இதற்குப் पुरश्चरणமும் வேண்டா; அதாவது மந்த்ரஸித்திக்காகச் செய்யும் சடங்கு. இது நித்யமாக ஜபத்தையும் வேண்டாது. முதலில் நீண்ட ப்ரணாமங்கள் மூன்று செய்து குருவின் திருவடிகளை சிரஸ்ஸில் வைத்துப் பிறகு அடக்கவொடுக்கத்தோடு நிதியை விரும்பும் மிடியன் போல் மிக்க ஆசையுடன் இந்த मन्त्रराजத்தைக் க்ரஹிக்க வேணடும். இதைப்பெற்று என்னைச் சரணம் புகவேண்டும். இம் மந்த்ரத்தைக் கொண்டே என்னிடம் ஆத்மநிக்ஷேபம் செய்ய வேண்டும். தனக்குக் கர்தவ்யமான பரத்தை என்னிடம் வைத்தவன் कृतकृत्यனாவான் என்றெல்லாம் வேறு மந்த்ரத்திற் சொன்னது இங்கும் கொள்ளத்தகும். அந்தத் தாந்த்ரிகமந்த்ரதிற்குச் சொன்ன மேன்மை இதற்கும் தகுமே. அங்குப் போல் गुरूपसत्ति = குருவை யணுகுதல், உபதேசம் பெறுதல், சரணாகதி செய்தல் இத்யாதி அவச்யமானால் அந்த மந்த்ரத்தையே கொள்ளலாமே யென்னில்—உபதேசமாகாததை எப்படி கொள்வது?

வர ப்ராப்தமிதி. कठவல்லியில் ஒருபாடத்தில் 'मन्त्ररत्नः सदाचार्यमूलः, आचार्यो वेदसंपन्नः' என்று தொடங்கி 'तस्मात् गुरुतरो गुरुः' என்ற வரையிலான வாக்யங்களாலே गुरूपसत्ति அவச்யமென்று தெரிகிறது. மற்றொரு பாடத்தில் இதெல்லாம் இல்லை. இராமற் போனாலும் சொல்லாத மற்ற அம்சங்கள் போல் இவையும் வரும், சில அம்சம் சொல்லியிருப்பது மற்றவற்றிற்கும் குறிப்பாகுமென்று கருத்து. அஷ்டாக்ஷராதி ஸர்வமந்தரங்களைவிட இதற்கு மற்றொரு விதத்திலும் ஏற்றமென்கிறார் ஆஸ்திகனுக்கு. இதி சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டதில் அவிச்வாஸம் இல்லாதவனுக்கு என்றபடி. இம்மந்த்ரமென்று ப்ரக்ருத த்வய மந்த்ரத்தைச் சொல்லுகிறது. ஸமுதாய ஜ்ஞாநமாவது அங்காங்கிகள் எல்லாவற்றையும் ஸங்க்ரஹமாக அறிகை. सकृदुच्चारणமென்று ஸக்ருத்பதம் எதற்கு? ப்ரபத்தி யநுஷ்டாந காலத்தில் ஒரு தரம் உச்சாரணம் போதுமென்பது எல்லா மந்த்ரத்திற்கும் ஸமானமாகுமே யென்னில்—அதற்கு முன் ஜபாதிகள் வேண்டாவென்பதிலே सकृत् பதத்திற்கு நோக்கு. ஸமுதாயஜ்ஞாநபூர்வகத்வம் வேண்டுமென்று அங்கே சொல்லாமற் போனாலும் மந்த்ரம் அநுஷ்டாநத்திற்காகையாலே அநுஷ்டிக்க வேண்டும் அர்த்தத்தை மந்த்ர மூலமாக ஸ்மரிக்க வேண்டுமென்று மீமாம்ஸா

செய்து இவர்களுடைய ஆர்த்தியைச் சமிப்பிக்குமென்றதாம். இப்படிப் புருஷகாரக்ருத்யத்தைச் சொல்லுகிற இதுக்கும் புருஷகாரபாவத்திலே நோக்கு.

'मत्पदद्वन्द्वमेकं ये प्रपद्यन्ते परायणम् । उद्धरिष्याम्यहं देवि संसारात् स्वयमेव तान् ॥',

आनृशंस्यं परो धर्मः' इत्यादिகளை அவன்பக்கலிலே கேட்டு.

'शृणु चावहितः कान्त यत् ते वक्ष्याम्यहं हितम् । प्राणैरपि त्वया नित्यं संरक्ष्यः शरणागतः ॥'

என்று கபோதத்தைக் கபோதி கேட்பித்தாற்போலே அவஸரத்திலே கேட்பிக்குமென்னவுமாம். ஸர்வேச்வரன்பக்கலிலே லோகஹிதத்தைக் கேட்டு 'मित्र-मौपयिकं कर्तुम्' इत्यादिகளிற்படியே விபரீதரையுங்கூடக்கேட்பிக்குமென்னவுமாம்.

---

ந்யாயமாய் அவர்கள் செய்துள்ள வ்யவஸ்தை இவ்வாருகும். இதுக்கும் = शृणोति श्रावयति என்பதற்கு இப்போது சொன்ன பொருளுக்கும்; உம்மையால் श्रीयते श्रयते என்றவிடத்தில் முதல் யோஜனைக்குப் போலென்றதாம்.

இனி எம்பெருமானிடம் கேட்கிருள்; அதையே யெம்பெருமானுக்குக் கேட்ப்பிக்கிருள். (நினைப்பூட்டுகிருள்) என்று பொருள் கூறுகிருர் मत्पदेति. வராஹபுராணம். பூதேவியே! எவர்கள் गुरूपायத்தை விட்டு ப்ராப்யமான என்னடியிணையையே பேருபாயமாகக் கொள்கிருர்களோ, அவர்களை நான் गुरूपायनिरपेक्षமாக ஸம்ஸாரத்தினின்று उद्धरिப்பேன். இங்கு पदशब्दமும் एवकारமும் गुरूपायம்வேண்டாவென்கிறது தேவியும்உபாயமாயிருக்கத் தன்னை மட்டும் உபாயமாகச் சொன்னதெங்ஙனே யென்னில்—பிராட்டி உபாயமாவது ஸஹஜஸித்தம்; दण्डधरனை எம்பெருமான்விஷயத்தில்தான் சங்கை. அதனுல் நான் உபேக்ஷிப்பேனென்று சங்கிக்க வேண்டா வென்பதற்காக இவ்வாறு சொல்லுகிறுன். மேலும் இங்கு பூதேவியினிடம் சொல்லுகிறபடியால் அவளுக்கு உபாயத்வ மில்லையாகையாலே தன்னைமட்டும் சொன்னதாம். आनृशंस्यमिति(ரா.ஸு.38.39) आनृशंस्य—ஹிம்ஸகனுகைக்கு நேர்மாருன நன்மை செய்யவனுகை; அது உயர்ந்த தர்மமென்று உம்மிடமே நான் கேட்டிருக்கிறேனென்று ஸீதை ராமனிடம் சொல்வதால் ஒரு ஸமயம் ராமன் இவ்வாறு சொல்லியிருப்பது தெரிகிறது. பத்நியும் பர்த்தாவைக் கேட்பிப்பதுண்டென்பதைப் பெண்புருவின் பேச்சைக் கொண்டு நிரூபிக்கிருர் शृणु इति. एतिहा. வேடன் மரத்தின்கீழ் சோர்ந்திருந்த போது அது ஆண்புருவைப் பார்த்துச் சொல்லுகிறது—ப்ரியரே! நீர் கவனத்துடன் கேட்க வேண்டும். உமக்கு நான் நல்லது சொல்லுகிறேன். சரணுகதன் உம்மால் ப்ராணனைக் கொண்டும் எப்போதும் காக்கப்படவேண்டுமென்றதாம், இவ்வாக்யங்களில் சரணுகதி செய்தவன்விஷயத்திலே வந்த பேச்சே யிருப்பதால் புருஷகாரக்ருத்யமாகாது. சரணுகத்யாதி ப்ரபாவத்தை நினைப்பிப்பதாம். இனி பகவான் பகர்ந்ததை ப்ரஜைகளைக் கேட்பிக்கிருளென்று வேறு பொருள் கூறுகிருர் मित्रमिति ரா.ஸு. 21. ஸீதை ராவணனுக்குச் செய்யும் உபதேசம்.

இனி ச்ரீசப்தத்திற்கு வேறு தாதுவைக் கொண்டு உபாயத்வத்தை உப

'शृणाति निखिलान् दोषान्' என்று வ்யுத்பத்தியானபோது

'लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकः सर्वसिद्धान्ते वेदान्तेऽपि च गीयते ॥'

என்றும், 'வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும்' என்றும் சொல்லு கிறபடியே उपायाधिकारिகளுக்கு विरोधिகளான कर्मादिகளைக் கழிக்குமென்றதாம். 'श्रीणाति च गुणैर्जगत्' என்று निरुक्तियில் தன் कारुण्यादिगुणங்களாலே, 'நின்திரு வருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு" इत्यादिகளிற்படியே ஆச்ரிதர்க் குக் कैङ्कर्यपर्यन्त-गुणपरिपाकத்தை உண்டாக்குமென்றதாம்.

இவ் வ்யுத்பத்திகள் எல்லாவற்றாலுமுள்ள वैभवத்தைக் கணிசித்து 'श्रीरित्येव च नाम ते भगवति ब्रूमः कथं त्वां वयम्' என்று ஆளவந்தார் அருளிச்செய்தார். भट्टரும் निरुपाधिकमङ्गलत्वத்தை நினைத்து 'श्रीरसि यतः' என்றார்.

இவ்வர்த்தங்களில் ஈச்வரனுடைய उपायभावத்துக்கு उपयुक्तங்களானவை पूर्वखण्डத்திலும் प्राप्यतैக்கு उपयुक्तமானவை उत्तरखण्डத்திலும் अनुसन्धेयங்கள்.

स्वाम्युपाय उपेयश्च स्वरूपादिसमर्पणे । प्रथितः प्रतिसंबन्धी श्रीमान् निगमचक्षुषाम् ॥ —०—०—

'श्रीमान्' என்று பொதுவிலே சொன்னாலும் प्रमाणानुसारத்தாலே இங்கு

---

பாதிக்கிறார் शृणाति இதி. शॄ हिंसायां என்கிற धातु; निखिलान् என்றிருப்பதால் प्राप्तिविरोधि பாபங்களையெல்லாம்போக்குமென்று தெரிகிறது, लक्ष्म्या என்றலக்ஷ்மீ தந்த்ரமும் வேரிஎன்கிற திருவாய்மொழியும்ப்ராப்திவிரோதி நிவ்ருத்திபரமாக முன்னமே உரைக்கப்பெற்றன. உபாயவிரோதி கர்மங்களை யென்னமல் உபா யாதிகாரிகளுக்கு விரோதிகளான என்றதால் ப்ராப்தி விரோதிகளையும் கொள்வது தோற்றும். श्रीञ् पाके என்கிற தாதுவிலிருந்து வரும் பொருளைக் கூறுகிறார் श्रीणाति இதி गुणपरिपाकம் अपहतपाप्मत्व—सत्यसंकल्पत्वादिगुणங்க ளுக்கு உந்மேஷம். உபாயभावத்திற்கு உபயுக்தங்களானவை யென்றதால் புருஷகாரभावத்திற்கு உபயுக்தங்களானவை ச்ரீசப்தார்த்தத்தில் சேர்வதா லும் द्वयमन्त्रकरणकமான அநுஷ்டாநத்தில் முக்யமாக ஸம்பந்தப்படாவென்று ஸூசிதம். காரிகையால் நிகமிக்கிறார் स्वामीதி. வேதத்தைக் கண்ணாகவு டைய ப்ராமாணிகர்களுக்கு ச்ரீவிசிஷ்டனாகவே நாராயணன் ஸ்வாமியாய் ஸ்வரூப ஸமர்பணத்திலும், உபாயமாய் भरஸமர்ப்பணத்திலும், உபேயமாய் फलஸமர்ப்பணத்திலும் प्रतिसंबन्धी= விஷயமாக प्रथितः—ப்ரஸித்தனாகிறான். இப்படி ச்ரீசப்தார்த்தம் நிரூபிக்கப்பட்டது. மேலே मतुप्प्रत्ययத்தின் பொருள். ச்ரீமான் என்கிற பதத்தை உலகில் எல்லோருக்கும் விசேஷணமாக ப்ரயோ கிப்பதால் मतुप्प्रत्ययமானது பொதுவானபொருளைத்தானே கூறும். பதியென்று ஸித்திக்குமோ என்பதற்கு உத்தரம் श्रीमान् இதி. பிறரிடம் ச்ரீமான் என்கிற ப்ரயோகத்தில் லக்ஷ்மியின் அருள் பெற்றவன் என்ற பொருள் கொள்ளலாம். அல்லது ச்ரீயின் விபூதியான செல்வம் பொருளாய் ஜ்ஞாநம், धनம் போன்ற ஏதேனுமொரு ஸம்பத்துடையவன் என்னலாம். இங்கு ச்ரீபதத் தாலே முக்யதமார்த்தமான லக்ஷ்மியையே கொள்வதால் நாராயணனுக்கு அவளோடு பதித்வரூபஸம்பந்தமிருப்பதால் இவ்வர்த்தஸித்திக்குக் குறை

श्रियःपति யென்றபடி. ஸாமாந்யமாகத் தோற்றின संबन्धम् श्रुतिबलத்தாலே विशेषितम्. ஸர்வருக்கும் आश्रयणीயையாய் जगन्माताவான இவளுக்குப் पति யென்னவே परत्वமும் सौलभ्यமும் தோற்றும். இங்குப் பிராட்டியை விசேஷித்து எடுக்கையாலே नारायणशब्दार्थங்களான वस्त्वन्तरங்களிற்காட்டில் व्यावृत्तिயும், விசேஷணமாக निर्देशिக்கையாலே यथाप्रमाणम् पतिपारार्थ्यமும் सूचितम्.

'भूम.निन्दा.प्रशंसासु नित्ययोगेऽतिशायने । संसर्गेऽस्तिविवक्षायां भवन्ति मतुबादयः ॥'

---

வில்லை ஆனாலும் ச்ரீயை அஹமர்த்தமான பகவானுடைய அஹந்தை யென்றும் சக்தி யென்றும் ப்ரமாணங்கள் கூறுவதால் அந்த அஹந்தாதிகளுக்கு ஆதாரமாகிறவனென்றும் ச்ரீமான் என்பதற்குப் பொருளாகலாமே. இனி பிராட்டி எம்பெருமானுக்கு நித்யவிசேஷணமாய் பரதந்த்ரையானவளென்றறிவிப்பதற்காக அஹந்தாதிகளாகச் சொல்லப்பட்டாலும் ச்ரீசப்தார்த்தம் அச் சேதநத்ரவ்யமே யென்றாலும் அந்த லக்ஷ்மிக்கும் பகவான் ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாயிருப்பதால் அந்த ஸம்பந்தங்களையே கொள்ளலாமே; பதியென்றே பொருள் ஸித்திப்பதெங்ஙனே யென்னில்— ஆதாரத்வாதிகள் ஸர்வத்ரவ்ய ஸாதாரணமாயிருப்பதால் ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ இத்யாதி ச்ருதிகளில் பதிபத்நீபாவ ஸம்பந்தத்தையே விசேஷித்துச் சொல்வதால் இந்த விசேஷ ச்ருதி बलத்தாலே பதித்வமென்ற அர்த்தமே விரைவில் தோன்றுமென்கிறார் ஸாமாந்யமாக இதி. மந்த்ரத்திலே ச்ரீசப்தத்தாலே பிராட்டியையும் அவளுடைய குணவிசேஷங்களையும் ப்ரயோஜந ஸித்திக்காக விவக்ஷிப்பது போல் மதுப்புக்கும் அதற்காகவே ப்ராமாணிகமான பதித்வமென்ற பொருளை விவக்ஷிப்பது யுக்தமென்ற கருத்தாலே அதற்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்கிறார் ஸர்வருக்கும் இதி எல்லோராலும் ஆச்ரயிக்கப்படக் கூடியவளென்றதாலே இவளுக்குப் பரத்வமும் அப்படிப்பட்டவளுக்குப் பதி யென்றதாலே அவனுக்கு அதிக பரத்வமும், இவள் நமக்கு மாதாவாகையால், ஸுலபையான மாதாவுக்குப் பதியென்பதால் அவனுக்கும் ஸௌலப்யமும் குறிக்கப்படுமென்றதாம். பிராட்டிக்குள்ள சில விசேஷாகாரங்களைக் குறித்தால்தான் ச்ரீமச்சப்தம் பயன்படும்; இல்லையேல் நாரசப்தத்தாலேயே அவனுடைய குணாதிகளைப் போல் அவளும் சொல்லப்பட்டிருப்பதால் இது வீணாகும். ஆனால் மதுப்பில்லாமலே ச்ரீ நாராயண என்றாலேயே உபாயத்வம் ஸித்திப்பதால் மதுப்பெதற்கென்னில்— உபாயமாம்போதும் பதிக்குப் பரதந்த்ரையாய் பதியை வசப்படுத்தி உபாயமாகிறாளென்றறிவிப்பதற்காக வென்கிறார் இங்கு இதி. வஸ்த்வந்தரங்களைக் காட்டில்–குணவிக்ரஹ. भूदेव्यादिகளைவிட; व्यावृत्ति–விசேஷம்; पारार्थ्यं சேஷத்வம்; இப்படி ச்ரியःபதியென்று பொருளானாலும் பிரிந்திருந்தாலும் பதி பத்நீ भावமுண்டாகையால் சேர்ந்திராத போது செல்பவரைப்பற்ற எப்படி புருஷகாரத்வ உபாயத்வ ஸித்தி யென்ன. இங்கே நித்யயோகமென்கிற அர்த்தம் மதுப்பில் கொள்வதென்கிறார் भूमेति. भूमा—बहुत्वम् கீழே பதித்வரூப

என்று अनेकार्थமாயிருந்ததே யாகிலும் இங்கு मतुप् उपयोगविशेषத்தாலே प्रमाण-सिद्धமான नित्ययोगத்தைச் சொல்லுகிறது. विग्रहத்தில் स्वपरत्वपरिस्थितिயிலுமுள்பட

---

ஸம்பந்த விசேஷம் பொருளென்று கூறி இப்போது நித்யயோகமென்ற பொருளையும் கூறுவது கூடுமோ? सकृत्प्रयुक्तः शब्दः सकृदेवार्थं गमयति என்கிற ந்யாயத்தால் ஒரு ப்ரயோகத்தில் பல பொருள் கொள்ளலாகாதென்று கீழே கூறியுள்ளாரே; பதித்வரூப அர்த்தத்தை விடுவதானால் அதை முன் கூறாமலே யிருக்கலாமே யென்னில்—பல பொருள்களையும் கூட்ட ப்ரமாணமுள்ளவிடத்தில் அந்த ந்யாயமில்லை. இங்கே கூட்டுவதற்கு வ்யாகரணமே ப்ரமாணமாகும். எங்ஙனேயென்னில்—भूम என்கிற ச்லோகம் ஏழு பொருள் கூறும். भूमाவாவது बहुत्वம் = வெகுவாகை, நிந்திக்கப்படுகை, ச்லாக்யமாகை, நித்யயோகம், அதிசயம்—(விஞ்சியிருக்கை), ஸம்ஸர்கம்—(ஸம்யோகாதிஸம்பந்தம்); ஏழாவது अस्ति யென்பது. अस्तिविवक्षायाமென்பதற்கு இருக்கிறதென்கிற அர்த்தத்தை விவக்ஷிக்கும் போது—அதாவது ஆதார—ஆதேய பாவமென்கிற பொருளிலென்று பொருளாம். "तदस्य अस्ति अस्मिन्निति मतुप्" என்ற ஸூத்ரத்தில் धनमस्यास्तीति धनवान्, घटोऽस्मिन्नस्तीति घटवत् என்று பொதுவாக ஸம்பந்தமும் ஆதார ஆதேய பாவமுமே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்திற் சொன்ன भूमादिகள் धनादिகளிடத்திலுள்ள தர்மங்களே யாகும். धनादिகளுக்கும் புருஷனுக்குமுள்ள ஸம்பந்தத்தில் சேரா. ஆக இங்கு உதாஹரணங்களில் धनवान्—பஹுதநமுடையவன், 'महदिदं कौशलमायुष्मताम्' என்றவிடத்தில் आयुष्मत्—நிந்திக்கப்பட்ட ஆயுஸ்ஸையுடையவன், बुद्धिमान्—ப்ரசஸ்தமான புத்தியுடையவன், प्रभावान्—நித்யமாகச் சேர்ந்த பிரிவற்ற ப்ரபையுடையது, वीर्यवान्—சிறந்த வீர்யமுடையவன், दण्डी—தன்னோடு சேர்ந்த தண்டத்தை யுடையவன் என்றவாறு பஹுத்வாதிகள் ப்ரக்ருத்யர்த்தமான धनादिகளுக்கு விசேஷணமாகவும் அததையுடைய என்று मत्वर्थம் வேறாகவும் தோன்றுகிறது. இப்படி भूमनिन्दाप्रशंसைகளுக்கும் अतिशायने என்று சொல்லப்பட்ட அதிசயிதத்வம் அல்லது अतिशयाधायकत्वமென்ற தர்மத்திற்கும் இடையில் சொல்லப்பட்ட நித்யயோகமும் கூறியவாறு भूमादिகளைப் போலே ப்ரக்ருத்யர்த்த விசேஷணமான தர்மமே யாகும். अस्यास्ति என்று சொல்லப்பட்ட ஸம்பந்தம் வேறு. श्रीमान् என்பதற்கு श्रीः अस्यास्ति என்கிற விக்ரஹத்தில் தன்னோடு நித்யயுக்தையான ச்ரீயானவள் தனக்குப் பத்நியாயிருக்கிறாளென்ற பொருளாகையால் ஸ்ரீமாந் என்பதற்கு नित्ययुक्तश्रीसंबन्धी (पतिः) என்று பொருள் தேறும். மேலும் விபுவான பரமாத்மாவுக்கு எல்லா த்ரவ்யங்களுடன் நித்ய யோகமிருக்கிறதே; ச்ரியோடு நித்யயோகம் சொல்வதில் என்ன விசேஷமுளது. அதனால் எம்பெருமானுடைய திருமேனியோடு பிராட்டியின் திருமேனிக்கு நித்யயோகமே இங்கு விவக்ஷிதம். இது மேலே "विग्रहத்தில்" என்ற வாக்யத்தாலும் வ்யக்தம். நித்யயோகம் விக்ரஹங்களுக்கு; ச்ரீ என்னும் ஆத்ம ஸம்பந்தம் பரமாத்மாவுக்கு; ஆக स्वविग्रह-

'कृष्णाजिनेन संवृण्वन् वधूं वक्षःस्थलालयाम्' என்னும்படியிறே नित्ययोगமிருப்பது.

---

नित्ययुक्तविग्रहशालिश्रीपतिः என்று ச்ரீமாந் என்பதின் பொருளாம். இப்படி விசேஷணமாக நித்யயோகமும் पतित्वரூபஸம்பந்தமாக मतुबर्थமும் இங்கே ப்ரமாணஸித்தமானதால் இரண்டையும் சொன்னது தகும். ச்லோகத்தில் संसर्गத்திற்கு உதாஹரணமாக வையாகரணர் சொன்னது दण्डी पुरुषः என்பது. संसर्गமாவது ஸம்யோகம். அதுவும், வேறு ஸம்பந்தத்தாலே दण्डியாகிறவனுக்கும் दण्डத்திற்குமுள்ள ஸம்யோகத்தை விவக்ஷித்தாம். दण्डी पुरुषः என்பதற்கு स्वसंयुक्तदण्डஸ்வாமீ என்று शेखरग्रन्थத்தில் வ்யாக்யாநம் ஒருவன் दण्डத்தைத் தொட்டுக்கொண்டிருந்தால் दण्डी पुरुषः என்பதில்லை, வீட்டுக்குள் दण्डத்தை வைத்துவிட்டிருந்த போதும் दण्डी என்பதில்லை. கையிலொரு வஸ்துவை வைத்துக்கொண்டு அதன்மேல் दण्डத்தை வைத்திருந்தாலும் दण्डी என்பதில்லை. ஆசார்யனது त्रिदण्डத்தை त्रिदण्डத்தின் ஆஸநத்தோடு சிஷ்யன் கையில் வைத்திருக்கும்போது சிஷ்யனை त्रिदण्डी என்பதில்லையே. அதனால் संयुक्तமான दण्डத்திற்கு आधारமாயிருக்கும் போதே दण्डि யாகலாமென்றெல்லாமும் இங்கு ஊஹிக்க வேண்டும். இப்படி ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட मतुबर्थங்கள் இரண்டே; அதாவது स्वामित्व-पतित्वादि ஸம்பந்தமும் आधारत्वமும். அத்தோடுகூட விவக்ஷையை யநுஸரித்து भूमादिகளும் கொள்ளப்படுமென்று வார்த்திகத்தின் பொருளாகையால் நித்யயோகத்தையும் பதித்வத்தையும் சேர்த்துச் சொன்னது பொருந்தும், இங்கு வையாகரண ஸம்மதமான அர்த்தமாவது अस्तिविवक्षायां = ஸூத்ரத்திற் சொன்ன अस्ति என்ற ஸம்பந்தத்தை யறிவிக்க வரும் मतुப்புள்ளவிடத்திலே இடத்திற்குத் தக்கவாறு भूमादि षडर्थம் ஆறும் சேருமென்பதே; ஸூத்ரத்தினின்றே अस्ति என்ற ஸம்பந்தம் ஸித்தமாயிற்றே. अस्तिविवक्षायाமென்றது अस्तिमान् என்ற ப்ரயோக நிர்வாஹத்திற்காக என்பர் மஹாபாஷ்யாநுஸாரிகள். இது अर्थस्थिति.

இவ்வாறின்றி நித்யயோகமென்ற ஒரே பொருள் போதுமென்றாலும் இங்கு நித்யயோக பதத்தாலே कान्त्यभिमानप्रयुक्त भोगविशेषोपघातक विग्रहद्वारक-नित्ययोगமென்கிற விசேஷ ஸம்பந்தமே விவக்ஷிதம். ஆகையால் பதித்வாம்சமும் அதற்குள்ளே யடங்குமென்று அதையும் அருளியதென்று கொள்க.

பிராட்டிவிக்ரஹமெல்லாம் எம்பெருமானின் விக்ரஹத்தோடு சேர்ந்தே யிருக்குமென்கிற நியமமில்லை யென்றாலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு விக்ரஹமும் பிராட்டிவிக்ரஹத்தோடு சேர்ந்தே யிருக்குமென்பதை விளக்குகிறார் விக்ரஹத்தில் இதி. कृष्णेति. कृष्णम्—க்ருஷ்ணம்ருகம்; மான். அகலகில்லேனென்று திருமார்பையே யிடமாகக் கொண்ட பிராட்டியை (வாமநன்) மான்தோலினால் மறைத்துக்கொண்டு என்று பொருள். இதனால் ஸர்வாவஸ்தையிலும் நித்யயோகம் தெரிகிறது. वक्षस्स्थलालयां என்கிற ஆலயபதத்தினாலே गोमान् कलत्रवान् இத்யாதிகளைப்போலன்றி श्रीमान् என்றவிடத்தில் விக்ரஹம் வாயிலாக आधाराधेयभावமுமுண்டென்று குறிக்கப்பெறும்.

अपृथक्सिद्धवस्तुவுக்கு 'श्रीमान्' என்று मत्वर्थीयप्रत्ययसापेक्षமாக सामानाधिकरण्यம் கூடுமோ என்றும், पृथक्सिद्धமாகில் 'कीर्तिः श्रीर्वाक् च नारीणाम्' என்றும், 'பூவில் வாழ்மகளாய்' என்றும் मत्वर्थीयप्रत्ययनिरपेक्षமாக सामानाधिकरण्यம் கூடுமோ வென்றும் சிலர் சொல்லும் चोद्यங்கள் இரண்டும் मन्दங்கள்; எங்ஙனே யென்னில்–'तद्गुणसारत्वात् तु तद्व्यपदेशः प्राज्ञवत्' என்கிற न्यायத்தாலே ज्ञानगुणத்தை யிட்டு ஆத்மாவை ஜ்ஞாநமென்று சொல்லலாயிருக்கச்செய்தே 'ज्ञानवान्' என்று मत्वर्थीयप्रत्ययान्वितமாகவும் सामानाधिकरण्यம் உண்டாகிறாப்போலே இங்கும் குறையில்லை. ஆகையால் मत्वर्थीयप्रत्ययमात्रத்தைக்கொண்டு पृथक्सिद्ध

---

இந்த நித்யயோகத்தைப் பின்பற்றிவரும் இரண்டு கேள்விகளை எடுத்துப் பரிஹரிக்கிறார் अपृथक्सिद्धेति. நித்யயுக்தையான பிராட்டிக்கு எம்பெருமான் अपृथक्सिद्धाधारமாகிறான். अपृथक्सिद्धமான नीलादिரூபத்தை த்ரவ்யத்திற்கு விசேஷணமாக்குகிற போது नीलो घटः என்றே ப்ரயோகிப்பர்; नीलवान् घटः என்பதில்லை. ஆக श्रीमान् என்ற ப்ரயோகமெங்ஙனே யென்று ஒரு கேள்வி मत्वर्थीयप्रत्यय என்ற பதத்தாலே मतुप्प्रत्ययத்தின் அர்த்தத்தில் வருமெல்லா ப்ரத்யயமும் கொள்ளப்படும். நித்யயுக்தமாயிருந்தாலும் ஈச்வராதி.धर्मभूतज्ञानத்திற்கும் மற்ற வஸ்துக்களுக்கும் अपृथक्सिद्ध आधाराधेयभावம் கொள்வதில்லையே. அது போல் नित्यविभुவான த்ரவ்யங்களுக்கு ஸம்யோகமில்லை யென்கிற தார்க்கிகபக்ஷம்போல் பிராட்டிக்கும்பெருமானுக்கும் अपृथक्सिद्धि வேண்டாவே யென்றால் பிராட்டிக்கும் பெருமானுக்கும் அங்கங்குள்ள समानाधिकरणप्रयोगம் சேராது. கீதையில் (10 34) 'ஸ்த்ரீகளுக்குள் कीर्ति, लक्ष्मी, वाक् முதலான ஸ்த்ரீகள் நான்' என்ற கண்ணன் வாக்யத்தில் समानाधिकरणप्रयोग முளது. अपृथक्सिद्धधर्मवाचिपदந்தானே धर्मिபர்யந்தமாகும். இங்கே ச்ரீபதத்திற்கு லக்ஷ்மிதான் பொருள்; திருவாய்மொழியில் 6–3–6 மூவுலகுங்களுமாய் என்ற பாசுரத்திலே பூவில் வாழ் மகளாய் என்று பிராட்டியோடு திருவண்ணகர்சேர்ந்தபிரானுக்கு ஐக்யம் சொல்லப்பட்டிருக்கிறது, இங்கே மகள் என்ற சொல்லுக்கு ச்ரீவிசிஷ்டனென்று பொருளாகையால் அவளை अपृथक्सिद्धधर्मமாகத்தானே கொள்ளவேண்டும். இல்லையேல் ஸாமாநாதிகரண்ய ப்ரயோகம் (अभेदनिर्देशம்) கூடாதென்று இரண்டாம் கேள்வி இக் கேள்விகள் मन्दங்களென்பதை நிரூபிக்கத் தொடங்குகிறார் எங்ஙனே இதி. முதல்கேள்விக்குப் பரிஹாரம் तद्गुणेत्यादि. இரண்டாங்கேள்விக்குப் பரிஹாரம் नरपतिरित्यादि. तद्गुणेति ப்ரஹ்மஸூத்ரம் 2–3–29. ஜ்ஞாநமென்கிற குணமானது ஜீவாத்மாவுக்கு ஸாரமாயிருப்பதாலே 'विज्ञानं यज्ञं तनुते' இத்யாதிகளில் ஜ்ஞாநபதத்தினாலே निर्दिष्टமாகும். सत्यं ज्ञानमनन्तं ब्रह्म, आनन्दो ब्रह्म என்று ज्ञानानन्दशब्दங்களாலே பரமாத்மாவுக்கு நிர்தேசம் போல். ஆக ஜ்ஞாநபதத்திற்கு ஜ்ஞாநவிசிஷ்டனென்று பொருளென்று ஸூத்ரார்த்தமாம். ஜ்ஞாநம் அப்ருதக்ஸித்ததர்மமாயிருந்து ஜ்ஞாநபதமே मतुप्प्रत्ययமிராமல் ஜ்ஞாநவிசிஷ்டனென்று பொருளதாயிருக்க ஜ்ஞாநவாந் என்றும் ப்ரயோக

மென்று निश्चयिக்கப்போகாது. 'नरपतिरेव सर्वे लोकाः' इत्यादिகளிற் போலே विवक्षान्तरம் संभावितமானவிடத்தில் இப் प्रत्ययமில்லாத सामानाधिकरण्यमात्रத்தைக் கொண்டு पृथक्सिद्धமன்றென்னவுமொண்ணாது. ஆனபின்பு विशदமாக प्रतिपादिக்கும் प्रमाणान्तरங்களைக்கொண்டு இவ் वस्तुस्थिति யிருக்கும்படி தெளிய प्राप्तம்.

இங்கு उपायदशैயிலும் फलदशैயிலும் प्रमाणங்கள் नित्ययोगத்தைச் சொல்லு

---

யிருக்கிற படியால் अपृथक्सिद्ध விஷயத்திலேயே இரண்டுவித ப்ரயோகமும் தகுமென்று தெரிகிறது. नीलो घटः என்றவிடத்தில் नीलवान् घटः என்று ப்ரயோகிப்பதில்லை: गुणवचनेभ्यो मतुपो लुगिष्टः' என்று அங்கே மதுப் ப்ரத்யத்திற்கு லோபம் சொன்னதே அதற்குக் காரணம், இரண்டாவது கேள்வியும் தகாது; முக்யமான ஸமாநாதிகரணப்ரயோகத்திற்கு ப்ருதக்ஸித்தவிஷயத்திலே मतुप्प्रत्ययादिகள் அவச்யமானாலும் அமுக்யமான ப்ரயோகம் அதிராமலுமிருக்கலாம். எல்லா ப்ரஜைகளும் அரசனே என்றால் அங்கே அரசன் (நரபதி) என்ற சொல்லுக்கு ராஜதுல்யரென்று பொருள். सिंहो देवदत्तः என்பதையும் காண்க. விவக்ஷாந்தரம் = அபேதம், அப்ருதக்ஸித்தி யென்ற பொருள் விஷயமான விருப்பமன்றி வேறுபொருள் கூற விருப்பம் தெளியப்ராப்தம இதி अपृथक्सिद्ध धर्मத்தைச்சொல்லும் பதமாயிருந்தாலும் समानाधिकरण प्रयोगம் சிலவிடங்களில் வருவதில்லை. मनुष्यो जीवः என்பது போல் சரீரம் ஜீவ: என்று ப்ரயோகிப்பதில்லை गौर्मृगः என்பது போல் जाति मृगः என்பதில்லை. அதனால் சப்த ஸ்வபாவத்தைக்கொண்டு ப்ரயோகவ்யவஸ்தையை நிர்வஹிக்க வேண்டும். गोशब्दादिகள் गोत्वादिधर्मத்தைச் சொல்லுவதானாலும் धर्मिயை விட்டு धर्मத்தைச் சொல்லா; जातिशब्दம் शरीरசப்தமெல்லாம் अपृथक्सिद्ध வஸ்துவைச் சொல்வதானாலும் तद्विशिष्टமென்கிற பொருளிலே முக்யமாக ப்ரயோகிப்பதில்லை. ஆகையால் அவை नियतनिष्कर्षकம் = விசேஷணத்தை மட்டும் சொல்லி நிற்குமென்றபடி. ज्ञानानन्दादिசப்தங்களுக்கு விசேஷணமாத்ரத்தில் ப்ரயோகமென்கிற நிஷ்கர்ஷம் நியதமன்று; அதனால் ஜீவனையே ज्ञानமென்றும் ज्ञानवान् என்றும் நிர்தேசிக்கலாம் அது போல் உலகிலுள்ள சேதநாசேதநங்களைச் சொல்லும் பதங்களெல்லாம் अनियत निष्कर्षकங்கள். சேதநாசேதநங்களை மட்டும் விவக்ஷித்து மேலே ஈச்வரனைச் சொல்வதற்கு மதுப்பும் ப்ரயோகிக்கலாம்; அவற்றையே விசிஷ்ட वाचिயாகக் கொண்டு மதுப்பை விட்டும் ப்ரயோகிக்கலாம், இதை 'सर्वं खल्विदं ब्रह्म,' 'सर्वशासौ,' 'सर्वं समाप्नोषि ततो हि सर्वः' என்றவாறு எங்கும் காணலாமென்றபடி.

लाघवयुक्तியால் ச்ரீசப்தத்தாலேயே ச்ரீவிசிஷ்டனென்ற பொருளைக் கொண்டால் ச்ரீக்கு அவன் अपृथक्सिद्धधर्मी என்று அர்த்தமாகுமேயன்றி ச்ரீக்குப் பதி என்ற ஸம்பந்தமும் நித்யயோகமும் கிடைக்காதாகையால் மதுப்ப்ரத்யயம் அவச்யமாகிறதென்றறிவிக்கிறார் இங்கு இத்யாதியால், பூர்வखण्डத்தில் மதுப்பு வேண்டுமானாலும் உத்தர खण्डத்தில் வேண்டாவே யென்ன, அங்கும் இந்த நித்யயோகாதிகள் வேண்டுமென்றறிவிக்க फलदशैயிலும் இத்யாதி. स भ्रातुः

கையாலும் இம்மந்த்ரத்தில் இவ்வர்த்தம் प्रकाशिப்பிக்கை अपेक्षितமாகையாலும் पूर्वोत्तरखण्डங்களில் चतुப்பாலே 'स भ्रातुश्चरणौ गाढं', 'भवांस्तु सह वैदेह्या' என்கிற படியே பிரிவற்ற படி சொல்லிற்றாயிற்று. நம்மாழ்வாரும் 'அகலகில்லேனிறையு மென்றலர்மேல்மங்கையுறைமார்பா' என்றும், 'ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப' என்றும், 'இங்குமங்குந் திருமாலன்றியின்மை கண்டு' என்றும் उपायदशैயிலும் फलदशैயிலும் श्रीमच्छब्दத்திற் சொன்ன नित्ययोगத்தை अनुसन्धित்தார். இவ் अनुसन्धानம் सापराधர்க்கு அணியீடாதே நினைத்தபோதே ஆச்ரயிக்கைக்கு உறுப்பாம்.

---

என்கிற ராமாயண வாக்யத்தில் गाढ निपीडन = கெட்டியாய்ப் பிடிப்பதென்பது ஸீதையின் திருவடிவிஷயத்தில் தகாதாகிலும் ப்ரணம விஜ்ஞாபநாதிகள் இருவரையும் குறித்தென்பது सीतामुवाच இத்யாதியால் வ்யக்தம். இது உபாயபரமான வாக்யம். भवांस्तु என்கிற फलपरமான வாக்யத்திலும் सह वैदेह्या என்கிறவிடத்தில் नित्ययोगம் விவக்ஷிதம். கைங்கர்யம் செய்யத் தான் இராவிட்டால் வேறு கார்யத்தில் ராமன் இழியவாகும்போது பிராட்டியின் சேர்க்கைக்கு भरம் வரும்; அது கூடாதென்று தானே अहं सर्वं करिष्यामि என்கிறார். ஆழ்வார்பாசுரத்திலும் இருதசையிலும் நித்யயோகம் சொல்லப் பட்டதென்கிறார் நம்மாழ்வாரும் இதி. ஒண்தொடியாள் = எம்பெருமானுடைய நித்யயோகத்தால் அழகிய வளை முதலாக सर्वाभरणभूषितैயான பிராட்டியும் நீயும் பரமபதத்திலே நிலைத்திருக்கக் கண்டு களிக்கும் நித்ய ஸூரிகளின் நிலையைக் கண்டு அப் பேற்றில் அபேக்ஷையால் ஐச்வர்ய கைவல்யங்களை விட்டேனென்று பரமபதத்திலுள்ள சேர்த்தியைச் சொல்வதால் उपेयदशैயில் நித்யயோகம் இங்கே கருதப்பெறும். இவ் வாக்யத்தையும் உபாயதசாவிஷயமாகக் கொண்டு செய்யும் விசாரமெல்லாம் வீணாகும்: இரு தசைகளிலும் நித்யயோகத்திற்கு ஆழ்வாரின் வசநமாகும் இங்கும் இத்யாதி. 7-9-11; இங்கும்–ப்ரக்ருதிமண்டலத்திலும், அங்கும்–பரமபதத்திலும், திருவும் மாலும் அல்லாமல் வேறு அநுகூலஞ் செய்கிறவர் இல்லை யென்பதை நன்கறிந்துத் தாம் சொன்ன பத்து என்றதாலே இரு தசையிலும் பிராட்டியின் சேர்க்கை ஸித்தம், இப்பாட்டில் பெரியவாச்சான்பிள்ளையுரையிலும் ஈட்டிலும் உள்ள வாக்யங்களாவன. "साधनानुष्ठान வேளையோடு (ஆச்ரயண வேளையோடு) ப்ராப்தி வேளையோடு வாசியற இவ்வாத்மாவுக்கு ஒரு மிதுநமே தஞ்சம்...... ஆச்ரயணவேளையிலும் அவள்முன்னாக வேண்டும்" என்றன வாம். இங்கே नित्यமே என்றதாலே புருஷகார ப்ரபத்திக்குப் பிராட்டிமாத்ரம் போல் மோக்ஷார்த்தப்ரபத்திக்குப் பெருமான்மட்டுமென்கிற பிரிவு தவறென்று தேறும் வாசியற என்பதாலும் உபேயதசையை விட உபாயதசையில் வாசியைக் கல்பிப்பது தவறென்று தேறும். இப்படி முதலில் விவக்ஷிதமான நித்யயோகத்திற்குப் பலனருளிச் செய்கிறார் இவ் விதி. எம்பெருமான் अभिगन्तव्यனாகாதபடிக்கு அபராதம் செய்தவர்கள் அதற்குப் பரிஹாரமாகப் புரஷகார

இப்படி **अपेक्षित**மான **पुरुषकार**ந்தானும் தன்னேற்ற மாம்படியிருக்கிறன நாராயணசப்தத்தில் தோற்றுகிற **स्वरूप**மும் **गुण**ங்களும். இது 'தன்னடி

---

ப்ரபத்தி செய்த பிறகும் உடனே எம்பெருமானிடம் சரணாகதி செய்ய அஞ்சி அணியிடாதே=வேறு ஸஹாயத்தைக் கொள்ளாதே நிஸ்ஸம்சய மாக; அதாவது—பிராட்டி பெருமானிடம் வந்தபோது தானே நம்மைப் பற்றிப் புருஷகார மாகமுடியும்; ஆகையால் அதை வேறு மூலமாக அறிந்துகொண்டு பிறகே நாம் நெருங்கி அவளோடு அவளிருப்டையுங் கண்டு இருவர்விஷய மாகச் சரணாகதி செய்யவேண்டுமென்று நினைத்துத் தாமதிக்காமல் உத்தர க்ஷணத்திலேயே மோக்ஷார்த்த சரணாகதி செய்வது இதனால் சக்யமாகும். உறுப்பு—ஸாதநம். உத்தரखण्डத்தில் நித்யயோகாநுஸந்தாநம் இருவருக்கும் செய்யும் கைங்கர்யம் எப்போதும் தடையின்றி நடக்குமென்கிற உத்ஸாஹ த்திற்கு உறுப் பாமென்று இங்கே சேர்த்துக்கொள்க.

இப்படி நித்ய யோகமுள்ள பிராட்டி புருஷகாரமாயிருந்தாலும் ஈச்வரன் இவளிடம் தாக்ஷிண்யத்தாலே பலனளிப்பவனே யன்றி, அன்பு வைத்துச் செய்கிறானல்லனென்று நினைக்கவேண்டா; அவன் ஸ்வபாவமாகவே நமக்கு அநுகூலம் செய்யவேண்டுமாகாரங்களையுடையவனென்று நாராயணசப்தத் தினின்று தெரிகிறதென்கிறார் இப்படி இதி. புருஷகாரந்தானும்=புருஷகார மான பிராட்டிதானும்; அல்லது புருஷகாரக்ருத்யந்தானு மென்று பொருள் கொள்ளலாம். தன்னேற்றமாம்படி—மிகுதியாம்படி. அநபேக்ஷிதமென்ன லாம்படி. அல்லது பிராட்டி செய்யும் புருஷகாரக்ருத்யம் பெருமாளுக்கு ஏற்றமாம்படி. பெருமாள் 'लक्ष्मीः पुरुषकारत्वेनोद्दिष्टा शास्त्रवेदिभिः । ममापि च मतं ह्येतत् नान्यथा लक्षणं (रक्षणं) भवेत् ॥' என்று இவள் புருஷகார மாயிருக்க வேண்டு மென்பதைத் தன் மதமாகவும் அறிவித்ததால் தான் ஸ்வாமித்வ மாகிற ஸம்பந்தத்தையும் ஸஹஜகாருண்யாதிகளையுமுடையவனாயிருந்தும் பித்ருத்வாநுரூபமான சீற்றத்தையு முடையவனாய் அதற்குப் பரிஹாரமாக இவளைப் புருஷகாரமாக வாக்கியிருப்பதால் அந்த வ்யாஜம் வந்தவுடனே தணிந்து அநுகூலம் செய்கிறான். ஆகையால், 'எவ்வளவு ஸபர்த்தனாகிலும் எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்கலாமே யல்லது மணலிலிருந்து எடுக்க வாகுமோ; அது போல் பிராட்டியார் செயல் வீணானால் என் செய்கிறது' என்ன வேண்டா என்றபடி. இவனே புருஷகாரக்ருத்யம் செய்வித்தபடியால் தன்னேற்றமாகிறது. இதற்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் **இது இதி.** **தன்னடியார்.** பெரியா—திரு. 4-10-2. அப் பாட்டில், தன் அடியார்விஷய த்தில்தாமரையாளான பிராட்டியே சிதகு உரைக்குமேல்=ஏதாவது குற்றம் சொன்னாலும், என் அடியார் அது செய்யார். செய்தாரேல் நன்று=நல்லதை யே செய்தார் என்பர்போலும் என்றதால் அடியார்விஷயத்தில் சிக்ஷையை மறுப்பானென்று தெரிகிறது. ஈச்வரன் ஸ்வபாவமாய் நற்குணனாகாமல் இவ ளிடத்தில் தாக்ஷிண்யத்தால் நன்மை செய்வதாகில் இவள் குற்றம் கூறும்

யார்' என்கிற பாட்டிலே காணலாம். 'श्रीधरः श्रीकरः श्रेयः श्रीमान् लोकत्रयाश्रयः' इत्यादिகளிலே भगवन्नामமாகப் प्रसिद्धமான श्रीमच्छब्दமே அமையாதோவென்னில்—पूर्वखण्डத்தில் उपायभावத்துக்கு உறுப்பான गुणविशेषानुसन्धानार्थமாகவும், उत्तरखण्डத்தில் सर्वविशिष्टனை शेषि प्राप्यனைத் தோற்றுகைக்காகவும் नारायणशब्दம் अपेक्षितமாகையால் இங்கு श्रीमच्छब्दம் விசேஷணம்.

இங்குற்ற नारायणशब्दத்துக்கு मूलमन्त्राधिकारத்தில் व्युत्पत्तिகளாலே சொன்ன அர்த்தங்களெல்லாம் விவக்ஷிதங்களாகிலும் पूर्वखण्डத்தில் नारायणசப்தத்துக்கு शरण्यतैயிலே நோக்கானபடியாலே 'நிகரில் புகழாய்' इत्यादिகளிலே संगृहीतங்

---

போது ஸந்தோஷமாக தண்டிக்கவே முன்வருவானே. அவ்வாறின்றியிருப்பதால் அவளுக்கு மேம்பட்டு गुणशाली என்று தெரிகிறது. ஆகில் புருஷகார—க்ருத்யமெதற்காகவெனில், உத்ஸாஹப்படுத்திய பிறகு ஆஞ்ஜநேயருக்கு ஸ்வபாவஸித்தமான வீர்யாதிகள் மேலெழுவது போல் அவனது ஸ்வாபாவிக குணங்கள் அவளுடைய ப்ரோத்ஸாஹநத்தாலே விசேஷ அபிவ்ருத்தியடைந்து பிறகெப்போதுமே குறையாமலே நிற்கும். அடியாராகாதவர்விஷயத்தில் புருஷகாரமிராதபோது அவை கார்யம் செய்யா. இதற்காகவே பாசுரத்தில் அடியாரென்றது. இந்த குணங்கள் அவனுக்கு ஸ்வாபாவிகங்களென்பது புருஷகாரத்வமும் அவனே ஏறபடுத்தியதென்றறிவிக்கும் வாக்யத்தாலும் ஸித்தம். நாராயணனுக்கு அந்த குணங்களிருக்கட்டும்; ஆனாலும் மந்த்ரத்தில் நாராயணபதமெதற்கு? ச்ரீமாந் என்று சொல்லப்பட்ட வ்யக்தி இன்னாரென்று தெரிவதற்காக அச் சொல்லென்ன வொண்ணாது. ச்ரீமான் என்பது ஸஹஸ்ரநாமங்களில் ஒரு பகவந்நாமமாகையால் அதே பகவானை யறிவிக்கும். மேலும் இந்த மந்த்ரம் மோக்ஷத்திற்காக ப்ரபத்திவிஷயகமாகையால் மோக்ஷமளிக்கும் ச்ரீமானையே யிங்குக்கொள்ளவேண்டியிருப்பதால் ச்ரீமான்= ச்ரீபதி என்று பொருளானபோது தேவதாந்தரவ்யாவ்ருத்திக்காக நாராயண என்கிற ஸம்ஜ்ஞாசப்தத்தால் வ்யக்தியை யறவிக்க வேண்டியதில்லை யென்ன—பக்தியோகத்திற் போலே ப்ரபத்தியிலும் உபாயத்வ உபயுக்தமாகச் சில குணங்களை யநுஸந்திக்க வேண்டியிருப்பதால் அவற்றை யறிவிப்பதற்கு முதல் நாராயணசப்தம்; உபேயனாகும்போது உபயவிபூதிஸ்வாமியாய் அநுபவிக்கப்படுகிறானென்றறிவிப்பதாம் உத்தரமான நாராயணசப்தமென்று விளக்குக்கிறார் ச்ரீதர:இத்யாதியால். அப்போது நாராயணபதம் குணவிசிஷ்டபரமாகையாலே விசேஷணமாய், ச்ரீமச்சப்தமே விசேஷ்யமாகு மென்ன, ஆனாலும் நாராயணசப்தம் ஸம்ஜ்ஞையானபடியால் यानि नामानि गौणानि என்றபடி ச்ரீமச்சப்தமே இரு खण्डத்திலும் அஸாதாரணயோகவ்யுத்பத்தியால் விசேஷணமென்றறிவிக்க ச்ரீமச்சப்தம் விசேஷண மென்றார்.

முன்னதிகாரத்தில் நாராயணபதத்திற்குப் பல பொருள்கள் கூறப்பட்டிருக்க எந்த குணங்களைப் பொருளாகக் கொள்வது; அதற்கென்ன ப்ரமாணமென்ன அருளிச்செய்கிறார் இங்குற்ற இதி. 'அகலகில்லேன்' என்கிற

களான वात्सल्य-स्वामित्व-सौशील्य-सौलभ्य-सर्वज्ञत्व-सर्वशक्तित्व-सत्यसंकल्पत्व-परमकारुणिकत्व-कृतज्ञत्व-स्थिरत्व-परिपूर्णत्व-परमोदारत्वादिகள் இங்கு अनुसन्धेयங்களில் प्रधानतमங்கள். இவற்றில் वात्सल्यமாவது - 'दोषो यद्यपि तस्य स्यात् सतामेतदगर्हितम्' என்கிறபடியே ஆச்ரிதனுடைய अपराधத்தைப் பாராதே अङ्गीकरिக்கைக்கு ஈடான இரக்கம். இது தன் दोषங்களைப் பார்த்து அகலாமைக்கு உறுப்பாம்.

स्वामित्वமாவது—प्रणवादिகளில் शिक्षितமான संबन्धविशेषம். இது தன்பேறாக ரக்ஷிக்குமென்கிற தேற்றத்துக்கு உறுப்பாம்.

सौशील्यமாவது—தான் सर्वाधिकனாயிருக்கச்செய்தே தண்ணியரான निषाद—वानर-गोपालादिகளோடே नीरन्ध्रसंश्लेषம் பண்ணுகை. இது 'அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்; யானார்' என்று அகலாதே सारथ्यदूत्यादिपर्यन्तமாக अपेक्ष

பாசுரத்தில் நிகரற்ற புகழுடையவனே என்று வாத்ஸல்யமும், உலகமூன்றுடையானே என்று ஸ்வாமித்வமும், என்னை யாள்வானே என்று ஸௌசீல்யமும், திருவேங்கடத்தானே என்று ஸௌலப்யமும் குறிக்கப்பெற்றன. இவைபோல் ஸர்வஜ்ஞத்வாதிகளும் உபாயத்வத்திற்கு வேண்டியிருப்பதால் கருதப்பெறும். மற்ற குணங்களையும் உபாயத்வத்திற்கு உபயுக்தமாக்கலாமாகிலும் இவை ப்ரதாநதமங்கள் விரிவாக அநுஸந்திக்கும் போது गद्यादिகளிற் கூறிய குணங்களெல்லாம் கூறப்படலாமென்று கருத்து.

தாமெடுத்த வாத்ஸல்யாதி குணங்களை விசதப்படுத்தி உபயோகம்கூறுகிறார் இவற்றில் இத்யாதியால். दोष இதி. ரா.யு அவனுக்கு दोषो यदि—தோஷமுளதானால் स्यादपि இருக்கட்டும். एतत्—துஷ்டனை சரணாகதனையும் ரக்ஷிப்பது सतां—பெரியோர்களுக்கு நிந்திக்கப்படுவதற்கு நேர்மாறாக ச்லாகிக்கப்படுவதேயாகும். பாராதே= காணாமல். அபராதத்தில் நோக்கு வைக்காமலென்றபடி. சிலர் வாத்ஸல்யமாவது दोषादर्शित्वம்—தோஷத்தை யறியாமை யென்பர். अदर्शनम् என்பதற்கு அஜ்ஞாநமென்று பொருளல்ல. अविज्ञाता सहस्रांशुः என்றவிடத்தில் सर्वज्ञனுக்கு அஜ்ஞாநமென்பது விருத்தமாகுமென்று கேட்டு दोषो यद्यपि, 'अपि चेत् सुदुराचारः' என்கிற வசநங்களை யெடுத்து அஜ்ஞாநமென்பதற்கு உபேக்ஷை யென்ற பொருளை பட்டர் அருளிச்செய்தார்; அதே இங்கு பாராதே என்றதாம்; இரக்கம்—ஸ்நேஹம்; दोषानादरहेतुவான स्नेहம் वात्सल्यம் என்றதாயிற்று. ப்ரபத்திகாலத்தில் இவன் இந்த குணங்களை யநுஸந்திப்பதற்குப் பலன் தெளிவிக்கிறார்; அதில் வாத்ஸல்யஜ்ஞாநத்திற்குப் பலன் இது இத்யாதி. நமக்கு தோஷங்களிருக்கின்றன; நம்மை அவன் அங்கீகரியானென்று நெருங்காமையை நிவ்ருத்தி செய்யும் வாத்ஸல்ய ஜ்ஞாநம். தன்பேறாக= நம் ரக்ஷணத்தால் தனக்கே ப்ரயோஜநமென்று ரக்ஷிப்பான். சேஷனாகும் விசேஷங்களெல்லாம் சேஷிக்காகவே யல்லவோ. தண்ணியரான= தாழ்ந்தவர்களான. நிஷாதேத்யாதி ராமக்ருஷ்ணவதாரங்களைக் கருதியாம். नीरन्ध्रसंश्लेषம்= சித்ரமிராமல்—இடைவிடாமல் மிக நெருங்கிச் சேர்ந்திருக்கை. அம்மான் இதி. திருவாய் 5.1-7. அப்படிப்பட்ட

க்கும்படி विश्वसनीयतैக்கு உறுப்பாம்.

सौलभ्यமாவது—सनकसनन्दनादिमहायोगिகளுக்குங்கூடக் கிட்ட நிலமல்லாத தன்னை 'सकल-मनुज-नयन-विषयतां गतः' என்னும் படி பண்ணுகை. இது கிட்ட அரியனென்கிற निःस्पृहतै வாராமைக்கு உறுப்பாம்.

सर्वज्ञत्वமாவது—'अज्ञातं नास्ति ते किञ्चित्', 'यो वेत्ति युगपत् सर्वं प्रत्यक्षेण सदा स्वतः' என்கிறபடியே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கை. இது ஆச்ரிதர்க்குக் கொடுக்கவேண்டும் நன்மைகளிலும், கழிக்கவேண்டும் विरोधिகளிலும் இவன் அறியாதது இல்லை யென்னும் अनुसन्धानத்துக்கு உறுப்பாம்.

सर्वशक्तित्वமாவது—अघटितघटनासामर्थ्यம். இது ஸம்ஸாரிகளான நம்மை நினைத்தபோது नित्यसूरिपरिषத்திலே निवेशिப்பிக்க வல்லன் என்கிற निश्चयத்துக்கு உறுப்பாம்.

सत्यसङ्कल्पत्वமாவது—தன் ஸங்கல்பத்துக்குத் தன்னாலும் (பிறராலும்) (परராலும்) प्रतिहतिயின்றிக்கே யொழிகை. இது अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்கிற பாசுரம் பழுதாகாதென்கிற विस्रम्भத்துக்கு உறுப்பாம்.

परमकारुणिकत्वமாவது—स्वार्थनिरपेक्षயான परदुःखनिराकरणेச்சை. இது अनन्तापराधங்களையுடையவர்களையும் 'मित्रभावेन संप्राप्तम्', 'यदि वा रावणः स्वयम्' என்கிற படியே ஒரு व्याजमात्रத்தாலே க்ஷமிக்குமென்கிற தெளிவுக்கு உறுப்பாம்.

---

மஹானான திருவாழி யேந்தியவன். எவ்வளவு மேன்மையுள்ளவன்; யான் ஆர்= நான் எவ்வளவு கீழ்நிலையிலிருப்பவன்; நானாவது அவனோடு சேர்வதாவது என்று நினைத்து விலகாமை மட்டுமன்றி, 'எனக்குத் தேரோட்டு,' 'தூது செய்' என்றெல்லாம் ஏவும்படியான துணிவுக்கும் ஸாதகமாகும் ஸௌசீல்யம். सकलेति गीताभाष्यம். மஹான்களுக்கும் துர்லபனானவன் எல்லோரும் காணலாம்படி ஸாரதியாய் அர்ஜுநனுக்கு ஆளாக முன்னே தேரில் உட்கார்ந்தான். अज्ञातं இதி ரா யு 17-35. மூவுலகிலும் உமக்குத் தெரியாததொன்றுமில்லை; அந்த ஜ்ஞானம் இயற்கையாய் ப்ரத்யக்ஷமாய் எல்லாக் காலத்திலிருக்குமென்கிறது यो वेत्ति என்கிற ந்யாயதத்துவ ச்லோகம். अघटितघटना-सामर्थ्यமாவது—பிறரால் ஒன்றோடொன்று சேர்க்கப்படவாகாததையும் சேர்ப்பதிலுள்ள சக்தி. भावाभावங்களுக்குப் பரஸ்பரம் விரோதமிருக்கிறாப் போலே மற்றும் சிலவற்றிற்கும் சேர்க்கை நம்மால் ஸாத்யமாகாமையால் விரோதமென்று நினைக்குமிடங்களில் அவ் விரோத மிராதபடி சேர்க்க எம்பெருமானுக்கு சக்தி யுண்டு. सत्यसङ्कल्प என்றவிடத்தில் ஸத்ய சப்தத்திற்கு உண்மையான என்ற பொருளல்ல; பலிக்காத ஸங்கல்ப்பமும் உண்மையானதுதானே. ஆகையால் பலனை விடாத ஸங்கல்ப்பம்—தடைப்படாத ஸங்கல்ப்பமென்று பொருள் स्वार्थेति. தன் ப்ரயோஜநத்திற்காகவன்றி பிறர் துக்கத்தைப் போக்க வுண்டான தீவ்ரமான விருப்பமே தயை; परदुःखदुःखित्वம் தயாசப்தார்த்தமன்றென்பது வேறிடத்தில் வ்யக்தம். க்ருதஜ்ஞனென்பதற்குச் செய்ததை யறிந்தவனென்று பொருளானால், தான் செய்ததை

कृतज्ञत्वமாவது—'न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया । कथञ्चिदुपकारेण कृतेनैकेन तुष्यति ॥', 'ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति' என்கிறபடியே अत्यल्पानुकूलव्यापारத்தையும் परमोपकारம் பண்ணினாற்போலே மறவாதொழிகை. இது தன்பக்கலில் ஏதேனுமொரு வல்ல குறி கண்டால், இனி நம்மை ஒரு காலத்திலும் கைவிடானென்றிருக்கைக்கு உறுப்பாம்.

स्थिरत्वமாவது-आश्रितरक्षणத்தில் நிலையுடைமை. இது अत्यन्ताभिसङ्गர்விலக்கிலும் 'न त्यजेयं कथञ्चन' என்கிறபடியே நம்மை விடானென்று நம்புகைக்கு உறுப்பாம்.

परिपूर्णत्वமாவது—अवाप्तसमस्तकामत्वம். இது

---

யறிந்தவன், பிறர் செய்த குற்றத்தை யறிந்தவன் என்றெல்லாம் சொன்னதாகும். அதற்காக உரைக்கிறார் न स्मरतीति. रा. अ. 1-13, आत्मवत्तया= பெருந்தன்மை யுடையவராகையாலே—அபகாரங்களை யெல்லாம் மறந்து ஏதேனுமொன்றை உபகாரமாக்கிக் கொண்டு ஸந்தோஷப்படுகை कृतज्ञत्वம். இதை யறிந்தால், நாம் அவனுக்காகச் செய்யாததையும் தனக்கு உபகாரமாக நினைத்து நம்மை யநுக்ரஹிப்பானென்று தேற்றமுண்டாகும். ऋणमिति. भा. उ. 47 39 गोविन्देति यत् आक्रन्दत् कृष्णा मां दूरवासिनम् என்பது पूर्वार्धம் சூதாட்டத்தின் பிறகு ஸபையில் பரிபவப்படவான த்ரௌபதி வெகு தூரத்திலிருக்குமென்னை விளித்துக் கதறினளே; அது வட்டி ஏறிய கடன் போல் என் மனத்தை விட்டு அகலாமலிருக்கிறதென்றான் கண்ணன். இவள் கதறியது இவளுக்கேற்படும் பரிபவம் போவதற்காக; இதனால் கண்ணனுக்கு என்ன உபகாரம். हा कृष्ण द्वारकावास क्वासि यादवनन्दन । इमां अवस्थां संप्राप्तां अनाथां किमुपेक्षसे என்றாள். நீ த்வாரகையில்மட்டு மிருப்பவனா; யாதவர்களை மட்டும் ஆநந்தப்படுத்துகிறவனா; ஸர்வாந்தர்யாமியாய் நல்லோர் எல்லோருக்கும் நன்மை செய்கிறவனல்லையா. பர்த்தாக்களான ஐந்து பேரும் பீஷ்மாதிகளான பெரியோர்களும் வாளாவிருந்த பிறகு நான் அநாதை= அகிஞ்சனைதானே; சரணாகதையை யுபேக்ஷிக்கலாகுமோ என்று தானே கதறினளென்னில்—மாநஸாதிவ்யாபாரத்தாலும் அவனது அநுக்ரஹம் பெறலாயிருக்க இவள் கதறியதற்கு அது பலனாகாது. இவள் கதறாமற் போனால் அந்த ஸபையிலுள்ள துஷ்டர்களும் சிஷ்டர்களும் க்ருஷ்ணனுடைய அநுக்ரஹத்தால் வந்ததென்று நினைக்காமல். பாதிவ்ரத்ய ப்ரபாவத்தால் வந்ததாக நினைப்பர். கற்பைக் காத்துக் கதறியதால் ஸர்வேச்வரனை என்னிடத்தில் அவர்கள் அதிக மதிப்பு வைக்கும் படி யாயிற்று. இப்படிப் பலருக்குச் செய்த சிக்ஷணம் தனக்குச் செய்த மஹோபகாரமாகுமென்று கண்டு இதற்குப் பலனளிக்கவில்லையே யென்று வருந்தினனென்றவாறு கருத்தாம். மறவாதொழிகை—மறவாமலிருக்கை. வல்ல குறி—சக்யமான வியாஜம். स्थिरत्वமாவது—தண்டிப்பதிலே நிலைத்திருக்கை யல்லவென்று விவரிக்கிறார் आश्रितेति—அத்யந்த அந்தரங்கர்—ஸுக்ரீவாதிகளைப் போல் மிகவும் நெருங்கியவர். कथञ्चन—எவ்வளவு நிர்பந்தித்தாலும். परिपूर्णत्वம்

'अण्वप्युपहृतं भक्तैः प्रेम्णा भूर्येव मे भवेत्', 'पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति' इत्यादिகளிற்படியே भावबन्धம் பார்க்குமத்தனையொழிய மற்றும் நாம் இடும் பச்சையில் வரிசை பாரான் என்று வல்ல क्षिप्रसत्कारத்திலே முயல்கைக்கு உறுப்பாம்.

परमोदारत्वமாவது—उपायलाघवமும் उपेयगौरवமும் पात्रापकर्षமும் பாராதே सर्वस्वदानம் பண்ணியும் நாம் செய்தது போதாதென்றிருக்கும் वदान्यதை. இது दधिभाण्डादिகளைப் போலே हठात्कारம் பண்ணியும் अनुबन्धिपर्यन्तமாகப் परमपुरुषार्थத்தை अपेक्षिக்கைக்கு உறுப்பாம்.

இப்படி மற்றும் शरण्यதைக்கு उपयुक्तமான गुणங்களையும் அவற்றினுடைய उपयोगविशेषங்களையும் இங்கே अनुसन्धिத்துக் கொள்வது.

उपायानुष्ठानदशैயில் அவ்வோ विधिகளுக்கு அடைத்த कतिपयगुणविशिष्टன்

---

ஸர்வவ்யாபித்வமன்று. அது அநந்தத்வம்; அதுதெரிந்ததே; இதுவேறென்கிறார் अवाप्तेति. தன்னிஷ்டத்திற்கு ஸாதகமான ஸகலவஸ்துக்களும் நிறைந்திருக்கை. अण्वपि ச்ரீபாக 10-81. பக்தரால் உபஹாரமாக அர்ப்பணம் செய்யப்பட்டது மிகச் சிறியதானாலும் அவருக்கு அன்பு அதிகமாயிருப்பதால் எனக்குப் பெரிதே யாகும். भूर्यप्यभक्तोपहृतं न मे तोषाय कल्पते என்று உத்தரார்த்தம். पत्रमिति கீதை 9-26 तदहं भक्त्युपहृतं अश्नामि प्रयतात्मनः என்பது உத்தரார்த்தம், எவன் இலையாகிலும், பூவாகிலும், பழமாகிலும் தண்ணீராகிலும் எனக்கு பக்தியோடு அர்ப்பணம் செய்கிறானோ அந்த சுத்தமான மனமுடையவனின் பக்தியினாலான உபஹாரத்தை மிகவுயர்ந்த भक्ष्य-भोज्यங்களைப் போலுண்கிறேன். भावबन्धम्= நிலையான அன்பு; பச்சை—உபஹரிக்கப்படும் த்ரவ்யம். வரிசை=தரம். வல்ல= நினைக்கியன்ற. உதாரன்=கம்பீரமானவன்; மதிப்புடையவனென்றும் பொருளாகும்; அதை விட்டு வேறு கூறுகிறார். அநுஷ்டித்த உபாயம் சிறியது; அளிக்கும் பலன் பெரியது; பெறுகின்றவன்(பாத்ரம்)மிகவும் தாழ்ந்தவன் என்ற விசேஷங்களிருந்தாலும் அவற்றில் நோக்கின்றி எல்லாமளிப்பதும், அளித்தது போதாதென்று வெட்கப்படுவதும் சேர்ந்து ஔதார்யமாகும். दधिभाण्ड சப்தத்திற்கு கண்ணனை ஒளித்து வைக்கும்படி பெரிதான, தயிர்வைக்கக்கூடிய பாத்திரம் (சால்) பொருளானாலும், இது இங்கே அதை யுடைய புருஷனைச் சொல்லுகிறது. अनुबन्धि=சார்ந்தது; இத்தாலே दधिभाण्डத்தைக் கொள்வது அந்த भाण्डஜீவனுக்கும் அவன் மோக்ஷம்கேட்டுப்பெற்றானே. மற்றும் இதி वशी वदान्यः என்ற ஆளவந்தார்ச்லோகத்திலும் சரணாகதிகத்யத்திலும் அருளிய मार्दव—आर्जवादि குணங்களைக்கொள்வதாம். இங்கே" நிரபேக்ஷோபாயத்வம் ந்யாஸவித்யைக்கு விசேஷித்து उपकारம். இதனக்கபேக்ஷிதமாய்க்கொண்டு ஜ்ஞானசக்த்யாதிகள் வருகிறன" என்று மேலே அருளப்போகிறார். அதே இங்கு சரண்யதைக்கு உபயுக்தமான என்றறிவிக்கப்பெற்றது. உத்தரखण्डத்தில் நாராயணபதத்தாலே அறிவிக்கப்படும் குணங்கள் சேஷித்வம், நிரதிசய போக்யத்வம் முதலானவை யென்கிறார் உபாயேதி. எல்லா குணங்களையும் அநுஸந்திப்பது சக்யமன்றாகையாலே பக்தியோகங்களிற் போல் ப்ரபத்திய

ननुसन्धेयனாய் प्रतिदर्शेயில் समस्तगुणविभूतिविशिष्टன் अनुभाव्यனானாலும். இங்கு उत्तरखण्डத்தில் नारायणशब्दத்துக்கு स्वरूपकृतமாயும் गुणकृतமாயும் வரும் कैङ्कर्यप्रति संबन्धित्वத்திலே நோக்கானபடியாலே அதுக்கு உபயுக்தங்களான शेषित्वनिरति शयभोग्यत्वादिகள் प्रधानतमங்கள். இங்கு संबन्धविशेषादिमुखத்தாலே आनुकूल्यसंकल्प மும் प्रातिकूल्यवर्जनமும் सूचितமான படி अधिकारान्तरத்திலே சொன்னோம்.

இவ்விடத்தில் 'श्रीमन्नारायणचरणौ' என்று समस्तமாகவும் யோஜிப்பர்கள். 'कमलनयन वासुदेव...भव शरणम्' என்கிற प्रयोगத்தையும். 'त्वमेवोपायभूतो मे भव' என்கிற வாக்யத்தையும். 'அகலகில்லேன்' என்கிற பாட்டையும். 'अकिञ्चनोऽ-नन्यगतिः शरण्य' என்கிற स्तोत्रवाक्यத்தையும், 'श्रीमन्नारायण स्वामिन्' इत्यादिमन्त्रान्तर ங்களையும் द्वयविवरणமான गद्यத்தையும் பார்த்து श्रीमन्, नारायण என்று இரண்டு संबुद्धिகளாக்கி, 'तव' என்று ஒரு पदத்தை अध्याहरित्தும் யோஜிப்பர்கள். இப்படி व्यस्तமானாலும் समस्तமானாலும் विशेषणविशेष्यங்கள் நிற்கும் நிலைக்கு

---

நுஷ்டாநகாலத்திலும் சில குணங்களையே கொள்வம். மோக்ஷத்தில் फलानुभव காலத்தில் எல்லா குணங்களுமே அநுபவத்தில் வருவதேயாகும்ஆனாலும்மேல் நாராயணபதத்தில் எல்லா குணங்களையும் बद्धदசையில் அநுஸந்தாநம் பண்ணமுடியாதாகையாலே முக்யமான குணங்கள் சேஷித்வாதிகள் உதா ஹரிக்கப்படுகின்றன. மற்றெல்லா குணங்களுமென்று பொதுவாகக் கூட்டுக.

இது ஸாங்கசரணாகதியநுஷ்டாநமந்த்ரமாகையாலேஇந்தப் பதத்தினால் இந்த அங்கம் குறிக்கப்படுகிறதென்றறியவேண்டும். அவற்றில் மற்றவற் றிற்கு வாசகபதம் கிடைக்குமானாலும் ஆநுகூல்ய ஸங்கல்ப—ப்ராதிகூல்ய வர்ஜநங்களுக்குப் பத மில்லை. ஆனாலும் ஸ்ரீபதமும் நாராயணபதமும் பிராட்டிக்கும் பெருமாளுக்குமுள்ள ஸ்வாமித்வ- ரத்வங்களை வ்யுத்பத்தியால் குறிப்பதால் அந்த ஸ்வாமித்வாதி விஷய புத்தியே இந்த அங்கங்களுக்குக் காரணமாகுமென்று பரிகரவிபாகாதிகாரத்தில், 'இவை யிரண்டும் ஸ்ரீமந் நாராயணபதஸூசிதம் என்றருளினார், அதை நினைப்பூட்டுகிறார்–இங்கு இதி.

ஸமஸ்தமாகவும் இதி. இதே ப்ராயேண ஸித்தாந்த ஸம்மதம், நாராயண என்ற வரையில் ஸம்போதநமென்று பக்ஷாந்தரம்; அதற்குச் சான்றுகள் பலவென்கிறார் कमलेति. விஷ்ணு பு 3 7-33. भव शरणம் என்று உத்தரார்த்த ஆரம்பம். நடுவில் "विष्णो धरणिधर अच्युत शङ्खचक्रपाणे' எனவுள்ளது.ஸம்போதந பக்ஷத்தில் பூர்வखण्डத்தில் तव என்றும் உத்தரखण्डத்தில் तुभ्यं அல்லது ते என்றும் பதம் சேர்க்கவேண்டும். 'உத்தரखण्डத்திற் போல் श्रीमन्, नारायण என்று பதங்களிரண்டாகலாமே; அப்போது எது விசேஷணம்' என்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. 'பூர்வகண்டத்தில் புருஷகார மாகையாலே ச்ரீயை முன்னே அநுஸந்திக்க வேண்டும்; मोक्षार्थ சரணாகதி யில் அவளை விட்டு நாராயண குணங்களையும்அவனையும்மட்டும் அநுஸந்திக்க வேண்டும்; அதனால் ச்ரீமத்பதத்தை உபஸர்ஜநமாக்கி நாராயணபதத்தை ப்ரதானமாக்குவது. உபேயதசையில் இருவரும் ஸமப்ரதாநமாகையால்

वैषम्यமில்லை. இந் நிலை पूर्वोत्तरखण्डங்களிலும் ஒக்கும்.

'चरणौ' என்கிற शब्दம் நித்யமான दिव्यमङ्गलविग्रहத்துக்கு उपलक्षणம். श्रियःपतियினுடைய सर्वस्मात् परत्वமும் नित्यविग्रहयोगமும் ज्ञातव्यங்களில் प्रधानतमமென்னுமிடம்

'नित्यसिद्धे तदाकारे तत्परत्वे च पौष्कर । यस्यास्ति सत्ता (सक्तिः)हृदये तस्यासौ सन्निधिं व्रजेत् ॥'

इत्यादिகளிலே प्रसिद्धம். ஆகையால் 'श्रीमन्नारायण' என்கிறவிடத்திலே सौलभ्यान्वितமான परत्वமும், 'चरणौ' என்கிறவிடத்திலே नित्यविग्रहयोगமும் अनुसन्धेयம்.

---

எதையும் விசேஷ்யமாக்கலாம்' என்ற கேள்வியில் அருள்கிறார் இந்நிலை இதி. ஸமப்ர धाநமாகில் श्रीनारायणाश्रयौ என்றேமேலேயிருக்கலாம். பகவானை உபேயமாக்குவதற்கு 'सर्वं परिजनमाज्ञापयन्त्या' என்று இவளும் துணையாயிருப்பதால் இவளை முன்னிட்டே அவனை உபேயமாகக் கொள்வது உசிதம். சேஷசேஷி भावத்தாலே இவளுக்கு அமுக்யோபேயத்வமும் ஒருவிதமுண்டு. உபாய தசையிலும் உபலக்ஷணத்வம் கீழே நிராகரிக்கப்பட்டது ஆகையால் இரண்டிலும் வாசி ஒன்றுமில்லை யென்று கருத்து இவ்வளவு அறிவிப்பதற்காகவே உத்தரखण्डத்தில் என்னுமே पूर्वोत्तरखण्डங்களில் என்றது. விசேஷணமாயிருந்தாலும் कैङ्कर्यप्रतिसम्बन्धित्वம் பிராட்டிக்கு முண்டே யென்னில்—பூர்வखण्डத்தில் சரணாகதிப்ரதிஸம்பந்தித்வமும் அவ்வாறேயாம்; ச்ரீமச்சப்தம் வ்யஸ்தமானால் உபலக்ஷணத்வம் ஸுலபமாகவித்திக்குமென்னில்-உத்தரखण्डத்திலும் உபலக்ஷணத்வம் வந்திடுமென்று கருத்து.

இனி चरणசப்தவ்யாக்யாநம்—நாராயணனே शरणமாகையால் नारायणं शरणं प्रपद्ये என்னவேண்டும்: चरणौ என்பது எதற்காக? அவனது திருமேனியையநுஸந்திப்பதற்காக வெனில்—அப்போது विग्रहமென்னாமல் चरणத்தை மட்டும் சொன்னதெங்ஙனே? அதனால் இதராங்கங்களுக்கு விலக்கு தானே ஏற்படும். திருமேனி இராதபோது அவன் சரணமாகானென்னலுமாகுமே என்கிற சங்கைகளை விரிவாகப் பரிஹரிக்கிறார் चरणौ இத்யாதியால் திருமேனி நித்யமாகையாலே அகிராத தசையில்லை. ப்ராக்ருதமான சரீரமாகில் அநித்யமாம். இது दिव्यம், இது शुभाश्रयமென்பதால் பாபங்களை நிவ்ருத்தி செய்யும். அதனால் चरणशब्दம்முழு திருமேனிக்குஉபலக்ஷணமாகுமென்றபடி. ஆனாலும் முழுவிக்ரஹத்தைச் சொல்லாமல் சரணத்தைச் சொன்னதற்குப் பலனை மேலே கூறுவர். பகவானுடைய பரத்வம் போலே நித்யவிக்ரஹமும் அவச்யம் அறியவேண்டுமென்பதற்கு ப்ரமாணம்உதாஹரிக்கிறார் नित्यसिद्धे இதி. பௌஷ்கரஸம்ஹிதை. பௌஷ்கர =பிரமனே! நித்யமாகவே யிருக்கும் அவன் திருமேனியிலும் அவனது பரத்வத்திலும் எவனுக்கு புத்தி நிலைத்திருக்கிறதோ, அவனது ஹ்ருதயத்திலே அப் பெருமான் ஸந்நிதாநம் பெறுவான், ச்லோகத்தில் सत्ता என்கிறவிடத்தில் सक्तिः என்ற ஸம்ஹிதாக்ரந்தபாடம் ஸ்வரஸமென்று முன்பே சொன்னோம், திருமேனியை யறிந்த போதே கைங்கர்ய ருசி புஷ்கலமாகும். பக்தியோக நிஷ்டருக்கும் திருமேனியின் த்யாநத்தால் மனம் நிலைத்த பிறகே பரமாத்ம ஸ்வரூப த்யாநம்செய்யவாகுமென்றது விஷ்ணுபுராணம்; ப்ரபத்தி

दिव्यात्मस्वरूपத்திலும் கீழ்ச் சொன்ன गुणादिகளிலும் தெளிவில்லாதார்க்கும் शुद्धसत्त्वद्रव्यमयமாய், स्वविषयज्ञानத்தாலே ज्ञानसङ्कोचத்துக்கு निवर्तकமாய், परत्व—सौलभ्यद्वयव्यञ्जकமான दिव्यमङ्गलविग्रहமே இலக்காம். இப் प्राधान्यத்தைப் பற்றி गद्यத்தில் குணங்களுக்கு முன்னே दिव्यमङ्गलविग्रहத்தை அருளிச்செய்தார்.

दिव्यात्मस्वरूपத்தில் தெளிவுடையராயிருக்கச்செய்தேயும் 'मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम्' என்னும்படி ஈச்வரன் தனக்கும் भोग्यतमமான नित्यविग्रहानुभवத்

---

யதிகாரிகள் திவ்யாத்ம ஸ்வரூபத்யாநம் எங்ஙனே செய்வர். ஆகையால் இவனுக்கு த்யாநஸௌகர்யத்திற்காகத் திருமேனியைச் சொல்வதென்கிறார் दिव्येति பரமாத்மாவுக்கு திவ்யத்வமாவது சுத்த ஸத்வமயத்வாதிகளல்ல; ஸர்வப்ரகார உத்க்ருஷ்டத்வம். தெளிவில்லாதார்க்கும் இதி. திவ்யமங்கள விக்ரஹத்யாநத்திற்குப் பிறகே दिव्यात्मस्वरूपगुणादिகளில் தெளிவுமுண்டாகுமென்று கருத்து. द्रव्यमयமாய் என்பதற்கு द्रव्यமாய் என்றே பொருள். मयट् விகாரார்த்தமன்று. அவதாரரூபங்கள் விகாரமானாலும் பரவாஸுதேவரூபம் நித்யஸித்தம், விகாரமாகாது. நிவர்த்தகமாய் இதி. அதனால் தானே 'तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः' என்று கீதையில் அருளினார். இந்த நிவர்த்தகத்வமே திருமேனிக்குள்ள சுபத்வம். स्वरूपமான என்றதால் விக்ரஹதர்சநத்திலே பரமாத்மகுணங்கள் அறியப்படுமென்றதாம். அதனாலேயே अनन्तज्ञानानन्दैकस्वरूप என்று ஸ்வரூபத்தைச் சொன்ன பிறகு स्वाभिमत என்றாரம்பித்து दिव्यरूपத்தைச் சொல்லிப் பிறகே परमात्मगुणங்களை स्वाभाविक என்று தொடங்கி गुणगणौघमहार्णव। என்று गद्यத்திலருளினரென்கிறார் இப் இதி.

இத் திருமேனியின் சிறப்பானது दिव्यात्मस्वरूपानुभवத்தையே மறுத்து இதிலேயே நிற்கச் செய்யுமளவுக்காகுமென்பதைத் திருமங்கையாழ்வாரின் நிலையைக் காட்டி அதனால் அவருக்குப் பரமபுருஷார்த்தத்தில் மாறுட்டம் நினைக்கலாகாதென்றறிவிக்கிறார் दिव्यात्मेति. இவ்வாழ்வார் திருமடல்களிலே அறம் பொருள் இன்பம் வீடு என்று நான்கு புருஷார்த்தங்களில் நாலாவது புருஷார்த்தத்தை, 'பின்னையது பின்னை' என்று பின்னாலே வருமென்றே சொல்வார்களே யன்றி யாரும் கண்டதில்லை யென்று கழித்தார். நான்காவது புருஷார்த்தமாவது அசேதநாநுபவரூபமான ஐச்வர்யத்திலும் சேதநாநுபவரூப கைவல்யத்திலும் வேறான முக்யதத்துவமான பரமாத்மாவின் அநுபவமே யாகும். அவர் அதை யில்லையென்று கூறி, க்ஷுத்ரமான காமாதி புருஷார்த்தங்களையும் கழித்து பகவத் திவ்யமங்கள விக்ரஹாநுபவத்திலேயே ஈடுபட்டதால் அது தவிர வேறு பரமாத்மாவை அங்கீகரிக்கவில்லையென்று தோன்றுகிறது. ஆனால் "பாருருவில் நீரெரிகால் விசும்புமாகிப் பல் வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற" இத்யாதிகளில் ஸர்வாந்தர்யாமியான தத்துவத்தை இவரே யருளியிருப்பதால் அதை யிசையவில்லையென்ன வொண்ணாது. ஆக அதை யிசைந்த பிறகு அதனுடைய போக்யதையைவிட விக்ரஹாதிகளுக்கு போக்யதையை யதிகமாக விசைந்தால்

தில்லூற்றத்தாலே திருமங்கையாழ்வார் தம்மைஈச்வரவிஷயத்தில் தேஹாத்ம

பரமாத்மா பரமபுருஷார்த்தமென்று சொல்ல வொண்ணுது. ஆளவந்தார் ச்லோகத்தில் शान्तानन्त—என்று பரமாத்ம ஸ்வரூபத்தை ச்லாகித்து, மூர்த்தி ரூபமான ப்ரஹ்மமென்று திவ்யமங்கள விக்ரஹத்தை யெடுத்து அது பரமாத்மாவுக்குத் தன் ஸ்வரூபத்தைவிட மிகவும் இஷ்டமானதென்றும் அத்யாச்சர்யமென்றும் அருளி யிருப்பதைப் பார்த்தால் இதைவிட பரமாத்ம ஸ்வரூபம் தாழ்ந்ததெனவாகும். அதற்காகப் பரமாத்ம ஸ்வரூபமே திவ்ய மங்கள விக்ரஹமுமாகுமென்று माध्वादिகளைப் போலே கொண்டால், ஆத்மாவுக்குத் தாழ்வு வாராமலிருக்கும். திவ்ய மங்கள விக்ரஹத்தில் நித்யமான பரவாஸுதேவரூபத்தைவிட விபவாதிரூபத்திற்கு ஸௌலப்ய—ஸௌசீல்யாதி குணமூலமாக ஏற்றம் சொன்னுலும் அது பரவாஸுதேவரூபத்தின் அம்சமாகையாலே அதற்கே ஒரு விதம் உத்கர்ஷம் சொன்னதாவது போல், விக்ரஹமெல்லாம் பரமாத்மாவே யென்று கொண்டால் விக்ரஹ—உத்கர்ஷம் பரமாத்மாவின் உத்கர்ஷமே யாகும்—என்று கருதி தேஹாத்மவாதி யானுர். அதாவது திவ்ய விக்ரஹம் பரமாத்மாவென்பதே, இது தேஹமே ஆத்மா என்ற चार्वाकமதமன்றி, தேஹம் ஆத்மாவே என்றதாகும். ஸர்வவ்யாபியாய் ஸர்வாந்தர்யாமியான பரமாத்ம ஸ்வரூபமே அவன்தேஹமாயுமிருக்கிறது; அதில் தேஹமான பரமாத்மாவின் போக்யதை அதிக மாகையால், அந்த தேஹத்திலும் அர்ச்சாவிபவங்களில் போக்யதை அதிகமாகத் தோன்றியதால், "ஏரார்முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே" என்று மற்றவற்றைக் கழித்தார், இப்படி அவர் கழித்ததும் இங்கே பரமாத்மஸ்வரூபாநுபவம் துர்லபமாகையால் சேர்க்கமுடியாமையாலும் விக்ரஹாநுபவத்தில் ஊற்றத்திறுலுமாம். ஸம்ஸாரிகளுக்குச் சரியான ஆத்மஜ்ஞாநம் பிறந்த பிறகு தேஹத்தை விட்டு ஆத்மஸ்வரூப மாத்ரத்திலே நோக்கிருப்பதுபோல் பரமாத்மா அவன் திருமேனியைவிட வேறென்றறிந்த பிறகு திருமேனியின் ப்ராப்தியில் ஈடுபட்டால் முக்தியாகாது; பரமாத்மாவினிடமேயீடுபட வேண்டுமென்கிற விபரீத புத்தி யுண்டாகாமைக்காகவும் திவ்யமங்களவிக்ரஹமும் பரமாத்மாவாகவே தோற்றும்படி அவர் அருளியது. இக் கருத்திறுலேயே ஸ்ரீபஞ்சராத்ரமும் द्विमात्मिका भगवतो व्यक्तिः என்று திருமேனிவிஷயமாகக்கேட்டு यदात्मको भगवान् तदात्मिका भगवतो व्यक्तिः என்று சொல்லிற்று. ஆறுலும் இந்த வாக்யம் பகவான் என்கிற ஆத்மஸ்வரூபம் வேறு, திருமேனி வேறு என்று விளக்கும் இவ்வாழ்வார் வாதத்தைக் கொண்டே वरदराजपञ्चाशத்தில்

'विश्वातिशायिसुखरूप यदात्मकस्त्वं व्यक्तिं करीश कथयन्ति तदात्मिकां ते ।'

येनाधिरोहति मतिस्त्वदुपासकानां सा किं त्वमेव तव वेति वितर्कडोलाम् ॥'

என்றருளினுர். ஸித்தாந்தத்தில் ஆத்மஸ்வரூபத்திற்கு நிர்விகாரத்வ-நிரவயவத்வாதிகளை ஸ்வீகரித்திருப்பதால் விக்ரஹங்களும் ஆத்ம ஸ்வரூபமே யென்

வாதிகளாக அருளிச்செய்வர் ஸர்வேச்வரனுடைய दिव्यमङ्गलविग्रहத்துக்கு 'पापं हरति यत् पुंसां स्मृतं सङ्कल्पनामयम् । तत् पुण्डरीकनयनं विष्णोर्द्रक्ष्याम्यहं मुखम् ॥', 'रूपौदार्यगुणैः पुंसां दृष्टिचित्तापहारिणम्' इत्यादिகளிற்படியே சுபத்வமும் ஆச்ரயத்வமு

---

பதில்லை. ஆத்மாவுக்குப்போல் விக்ரஹத்திற்கும் ஸ்வரூபத்வமுண்டு; அசேதந மாகையாலே ஷாட்குண்யமில்லை. விக்ரஹத்திலே ஷாட்குண்யம் பஞ்ச ராத்ரத்தில் சொல்லப்பட்டதே யென்னில்—அது ஆத்மாவின் ஷாட்குண் யத்திற்கு விக்ரஹமூலமாகத் தோற்ற மென்ற கருத்தாலேயாம். ஆளவந்தார் விக்ரஹம் ப்ரியதர மென்றது ஆத்மாவை விட அதிக ஆநந்தஸ்வரூப மென்ற கருத்தாலல்ல; ஆத்மாவை விட அதில் அதிக வாகாரத்தைக் கருதியாம். பகவத்கைங்கர்யத்தை விட பாகவதகைங்கர்யம் சிறந்ததென்றால், பகவத் ஸ்வரூபத்தை விட பாகவத ஸ்வரூபத்திற்கு அதிக ஆநந்த ஸ்வரூபத்வம் சொன்னதாகுமோ. எல்லாம் நிருபாதிகாநந்தமான பரமாத்மஸ்வரூப ஸம்பந் தத்தாலன்றோ போக்யமாகிறது. ஓராகாரத்தாலே ப்ரியதரமாகத் திருமேனி யானாலும் சோதித்த போது பரமாத்மாவே ப்ரியதமமாகுமென்றே प्रियतर பதப்ரயோகம் செய்தருளினர். இவர் நம்மாழ்வாரைப் போலே அர்ச்சிராதி மார்க்கத்தாலே தம் மோக்ஷார்த்தப்ரவ்ருத்தியைத் தம் ப்ரபந்தத்தில் முடிவில் காட்டாமல் அர்ச்சாரூபமான பரமாத்மாவினிடம் நாயிகாபாவத்திலே நின்று திருமேனியினனுபவத்திலேயே இங்கு இழிந்திருந்தாலும், 'விக்ரஹம் சுத்த ஸத்துவமயம்; பரமாத்ம ஸ்வரூபம் அதைவிட மேலான ஆனந்தம்' என்றே இவர் ஸித்தாந்தமாகும். ப்ராக்ருத விஷயங்களே பரமாத்மா வினிடமிருந்து மனத்தை இழுக்கும் போது அப்ராக்ருத விக்ரஹம் இழிப் பதில் வியப்பொன்றுமில்லை. நாம் காணக்கூடியது திருமேனியே யாகையாலே அதனுள் பரமாத்மாவை நினைத்து அதை வணங்குவதாம். ப்ராப்ய தசையில் பரமாத்ம ஸ்வரூப ப்ரதானமாகவே ப்ரத்யக்ஷமிருப்பதால் அங்கே தனியாகத் திருமேனியையோ சரணத்தையோ மந்த்ரத்திலும் சொல்லவில்லை யென்க.

திவ்யமங்கள விக்ரஹத்திற்கு எல்லாவற்றையும்விட ஏற்றமேதனுலோ அதையறிவிக்கிறார் सर्वेति.पापमिति. पुंसां-ஜீவர்களுக்கு स्मृतं நினைக்கப்பட்டதாய் தைலதாரையைப் போலே अविच्छिन्नस्मृति விஷயமாய் அல்லது பொதுவாகவே நினைக்கப்பட்டதாய் सङ्कल्पनामयं-தனக்குத் தோன்றியபடி கொள்ளப்பட்ட यत्-எது पापं பாபத்தை हरति-போக்குமோ,तत्-அந்தச் செந்தாமரைக்கண்களை யுடையவிஷ்ணுவின் திருமுகத்தை எப்போதுபார்ப்பேன்.रूपेति.रा-अ -10029 ) 'न ततर्प समायान्तं पश्यमानो नराधिपः' என்று வாக்ய முடிவு. அழகினுலும், கொடை யென்ற செயலாலும் காம்பீர்யத்தாலும் மற்ற குணங்களாலும் ப்ரஜை களுடைய கண்ணையும் மனத்தையும் கவருகின்றவனுகி வருகின்ற ராமனை தயரதர்த்ருப்தி பெறுமல் கண்டவண்ணமிருந்தார். இங்கே பாபத்தைப் போக்குவதென்றதாலே சுபத்வம் தெரிகிறது. दृष्टिचित्तापहारिण மென்றதாலே ஆச்ரயத்வமும் தெரிகிறது. வெறுென்றில் இவையிரண்டும் சேர்வதில்லை

முண்டு. बद्धनுக்கு आश्रयत्वமுண்டாகிலும் शुभत्वமில்லை. भगवत्स्वरूपத்துக்கு शुभत्वமுண்டேயாகிலும் आश्रयत्वமில்லை. संसारबन्धरहितமான परिशुद्धात्मस्वरूपத் துக்கு संसरिக்கைக்கு सहकारियोग्यதை இல்லையே யாகிலும் परतन्त्रचेतनतैயாலே ஸம்ஸரிக்கைக்கு स्वरूपयोग्य வஸ்துவாகையாலே அதுக்கு(?) हेयप्रत्यनीकत्वरूपशुभत्व முமில்லை; आश्रयत्वமுமில்லை. முக்தருடைய(க்கு?) विग्रहपरिग्रहदशैயிலும், नित्यविग्रह ரான நித்யருக்கும் आश्रयत्वமுண்டேயாகிலும் संसारनिवर्तनक्षमமான शुभत्वமில்லை. ஆகையால் दिव्यमङ्गलविग्रहத்துக்கே मुमुक्षूपयुक्तமான शुभत्वமும்आश्रयत्वமும்உள்ளது

परावरसुखग्राह्यं प्रेमबोधप्रसावकम् । स्वरूपात् स्वामिनो रूपमुपादेयतमं विदुः ॥

---

யென்கிருர் பத்தருக்கு இத்யாதியால். ஆச்ரயத்வமாவது—மனத்தில் பதிந் திருக்கை—இது மூர்த்தியான எல்லா வஸ்துக்களுக்குமுண்டு. அமூர்த்த மான ஆத்மாவுக்கு இது எளிதிலாகாது. பத்தருக்கு என்பதற்கு பத்த ஜீவ சரீரங்களுக்கு என்பது பொருள். शुभत्वம்=ஹேய நிவர்த்தகத்வம் பகவத் விக்ரஹத்திற்குமுண்டு; பகவத் ஸ்வரூபத்திற்குமுண்டு. मुक्तनित्य ஆத்ம ஸ்வ ரூபத்திற்கும் அதில்லை. விஷ்ணுதர்மம் आब्रह्मस्तम्बपर्यन्ता என்றுரம்பித்து बद्ध मुक्त नित्यர்களின் த்யானத்தினுல் பலனில்லை யென்று சொல்லிற்று. அதற்குக் காரணம் அவர்களும் ஸம்ஸார யோக்யரா (பரதந்த்ர சேதநரா) யிருக்கை. ஆகில் எல்லோரும் ஸம்ஸரிக்கவேண்டுமேயென்னில்—யோக்யதை இருவிதம்; स्वरूपयोग्यतै सहकारियोग्यतै என்றவாறு ஸஹகாரிகாரணமான पुण्यापुण्यம் இராமை யால் ஸம்ஸரிக்கையில்லை. ஆசார்யாதி மஹான்களுடையவும் அநந்த கருடாதி நித்ய ஸூரிகளுடையவும் த்யாநம், 'संभाष्य पुण्यकृतो मनसा ध्यायेत्' என்றபடி பாபநிவர்த்தகமாயிருப்பதால் வேறொருவருக்கும் சுபத்வமில்லை யென்னக் கூடுமோ வென்ன-அதன் பரிஹாரத்திற்காக मुमुक्षूपयुक्तமான என்ற விசே ஷணம். மோக்ஷத்திற்காக ஸங்கல்ப்பித்துச் செய்யும் த்யாநத்திலே பகவத் விக்ரஹமொன்றுக்கே அத்தகைய ஹேயநிவர்த்தந சக்தி ஆச்ரயத்வத்துடன் சேர்ந்திருக்குமென்றபடி. இந்த வைலக்ஷண்ய மிருப்பதாலே விக்ரஹ மானது (நிரதிசயானந்தமாகாமற்போனலும்) உபாதேயதமமாகிறது.

மேழ பகவத் ஸ்வரூபத்தைவிட இது ப்ரியதரமென்றதற்கும் உபாதேய தமமென்பதிலேயே நோக்கு என்ற கருத்தாலே அதற்குக் காரணத்தை ஸங்க்ரஹிக்கிருர் காரிகையினுல். परेति. पर–யோகிகளாலும் अवर–நம்மைப் போன்றவராலும் எளிதில் புத்தியில் கொள்ளத்தக்கதும், प्रेम–பக்திக்கும் बोध—ஜ்ஞாநத்திற்கும் प्रसावक–(பாபநிவர்த்தநம் செய்து) உத்பத்தி காரண மாயுமிருக்கிற रूप–எம்பெருமானின் திருமேனியை திவ்யாத்ம ஸ்வரூபத்தை விட उपादेयतमम्—அநுஷ்டாநகாலத்தில் கொள்ளத்தக்கதாக विदुः—அறிகிறு ர்கள். அயோகிகளான ப்ரபந்நர்கள் அமூர்த்தமான பரமாத்ம ஸ்வரூப த்தை எப்படி நினைத்து அர்ப்பணம் செய்வதென்ற சிந்தையை நிவ்ருத்தி செய்கிறது चरणौ என்கிற சொல், அவன்திருமேனி எதேனுமொன்று எளி தில் புத்தியில் விஷயமாகிறபடியால் கண்ணுக்கும் கோசரமாகிறபடியால்

शरणागतिविधायकवाक्यத்திலும் 'मामेकं शरणं व्रज' என்று विग्रहविशिष्टன் இலக்காய்த் தோற்றினன். இத் दिव्यविग्रहம் परव्यूहाद्यवस्थापञ्चकத்திலும் शुभाश्रयமென்னுமிடம் शास्त्रसिद्धம்.

चित्तालम्बनसौकर्य.कृपोत्तम्भक(न)तादिभिः । उपायत्वमिह स्वामिपादयोरनुसंहितम् ॥

இங்கு दासभूतன் औचित्यातिशयத்தாலும், 'अनतिक्रमणीयं हि चरणग्रहणम्' என்கிறபடியே कृपोत्तम्भकत्वातिशयத்தாலும், 'तवामृतस्यन्दिनि' इत्यादिகளிற்படியே

---

அங்கே சரணாகதி செய்பலாமென்றதாம். இதற்காகவே 'பத்துடை யடியவர்க்கு' என்ற திருவாய்மொழி. சரமச்லோகத்தில் मां என்று ஆத்ம ஸ்வரூபத்தை தானே சொல்லியிருக்கிறது; திருமேனியைச் சொல்லவில்லையேயென்ன அருளிச்செய்கிறார் शरणेति. திருமார்பில் கைவைத்து मां என்கிறார்; அது திருமேனியையும் குறிக்குமென்றபடி அப்போது க்ருஷ்ணமூர்த்தியொன்றே இலக்காகுமென்ன உத்தரம் இத் இதி. ஸர்வதசையிலுமுள்ள தன்னை मां என்று சொல்வதால் எல்லா விக்ரஹமும் मां என்பதில் விவக்ஷிதம் 'तां यजेत् तां विचिन्तयेत् । विशल्यपास्तदोषस्तु तामेव ब्रह्मरूपिणीम्' என்று அர்ச்சாமூர்த்திக்கும், यो वेद निहितं गुहायाम् என்று हार्दமூர்த்திக்கும் சுபத்வம் சொல்லப்பட்டது. ஆனாலும் முழு விக்ரஹத்தையே கண்டோக்தமாக்காமல் चरणத்தை ப்ரதாநமாகக் குறிப்பது ஏனென்ன, உத்தரம் चित्तेति. चित्त—சித்தத்தினால் आलम्बन=க்ரஹிப்பது सौकर्य—ஸுகமாய் செய்யக்கூடியதாயிருப்பதாலும் कृपोत्तम्भनता—க்ருபையை அபிவருத்தி செய்யக்கூடியதாதலாலும்; ஆதிபதத்தால் அடிமையாயிருப்பவன் இழியும் துறையாயிருப்பதாலும் என்று கொள்வது. ஸ்வாமியான பரமாத்மாவினிடமே யிருக்கும் உபாயத்வமானது इह—இந்த மந்த்ரத்தில் அவனுடைய திருவடிகளில் अनुसंहितम्—கொள்ளப்பட்டது. நிரபேக்ஷரக்ஷகத்வமென்கிற உபாயத்வம் ஈச்வரனுக்குள்ளது. அதைத் திருவடியில் அநுஸந்தாநம் செய்ததென் என்னில், அடிமையாயிருப்பவன் திருவடியிலிழிவதே தருமாகையாலும் திருவடியில் சேர்ந்தவன்விஷயத்திலேயே ஸ்வாமியின் க்ருபை யதிகமாவதாலும் அமூர்த்தமான ஆத்மாவையும் முழுத்திருமேனியையும் விடச் சிறிதான திருவடிக்கே சித்தத்தால் க்ரஹிப்பதில் ஸௌகர்யமிருப்பதாலும் तवामृतस्यन्दिनि என்றபடி மிகவும் போக்யமாயிருப்பதாலும் சரணத்தைக் குறித்ததென்றபடி. कृपोत्तम्भकत्वமாவது க்ருபையை யதிகப்படுத்துதல். பக்தியநதிகாரிக்கு க்ருபையே உபாயம். ஸஹஜமான காருண்யத்திற்கு ப்ரதிபந்தகமான அபராதங்களிருக்கும்போது சரணாகதி அதற்கு உத்தம்பக (உத்தேஜக) மாகிறது. அதைவிடத் திருவடியைப் பற்றி சரணாகதி செய்தால் க்ருபைக்கு அபிவ்ருத்தியாம். இதைக் கருத்தில் கொண்டு कृपोत्तम्भकत्वातिशयத்தாலும் என்றருள்வர். அர்ஜுநனும் துர்யோதநனும் க்ருஷ்ணனை யணுகினார்கள் தலைப்பக்கம் வந்திருந்த துர்யோதநனைவிடத் திருவடிபக்க மிருந்த அர்ஜுநனிடம் க்ருபை யதிகமாயிற்று.

अनतिक्रमणीयமிதி. ஒருவனை நிற்கச்செய்யப் பிடிக்கும்போது காலிற்

श्रोत्यपाश्रियத்தாலும், திருவடிகளை அவலம்பிக்கிறான். இவ்வர்த்தம் 'सर्वदा चरण-द्वन्द्वम्', 'त्वत्पादकमलादन्यत्', 'मम ते पादयोः स्थितम्'. 'लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो'. 'स भ्रातुश्चरणौ गाढम्', 'तस्य साम्रतलौ तात चरणौ सुप्रतिष्ठितौ । सुजातमृदुरक्ताभि-रंगुलीभिरलंकृतौ । प्रयतेन मया मूर्ध्ना गृहीत्वा ह्यभिवन्दितौ ।', 'चरणौ शरणं यातः', 'प्रपन्नाघौघविध्वंसिचरणौ शरणं गतः' इत्यादिகளிலும் ப்ரஸித்தம். இவற்றை அடியொற்றி

---

பிடித்தால் திமிறிச்செல்லமாட்டான்; நிற்பது நிச்சயம். அது போல் சரணகதியில் திருவடியைப் பிடித்தால் மீறிச் செல்லவாகாதென்றபடி तवेति. ஸ்தோத்ரரத்நம் 27. तवामृतस्यन्दिनि पादपंकजे निवेशितात्मा कथमन्यदिच्छति । स्थितेऽरविन्दे मकरन्दनिर्भरे मधुव्रतो नेक्षुरकं हि वीक्षते எம்பெருமானே; மோக்ஷமாகிற தேனைப் பெருக்குகின்ற உமது திருவடித்தாமரையில் மனம் வைத்தவன் வேறொன்றை எங்ஙனே விரும்புவான்; தேன் நிறைந்த தாமரைப்பூ புத்தியிலிருக்கும் போது வண்டு நீர்முள்ளிப்பூவைப் பெறப் பாராதே. सर्वदेति. 'देवानां दानवानां च सामान्यमधिदैवतम् । सर्वदा चरणद्वन्द्वं व्रजामि शरणं तव ॥ ஜிதந்தை 1.2 வாசியின்றி தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் தேவதையான உனது திருவடி யிணையை எப்போதும் சரணமாகப் பற்றுகிறேன். எம்பெருமானுக்கு உள்ள தேவதாத்வம் அதிக மதிப்பாலே இங்கே திருவடியிற் கொள்ளப்பட்டது. அதே ஜிதந்தையில் (1–10) त्वत्पादकमलादन्यत् न मे जन्मान्तरेष्वपि । निमित्तं कुशलस्यास्ति येन गच्छामि सद्गतिम्= எதனால் நல்ல கதியடைவேனோ அத் தகைய க்ஷேமகரமான வஸ்து எனக்கு உன்திருவடித்தாமரை தவிர வேறு இனி பல ஜந்மங்கள்வரினுமில்லை யென்றது. ममेति ஜிதந்தை—1—13. न कामकलुषं चित्तं मम ते पादयोः स्थितम् । कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम्'= வேறு பலன்களில் நசையால் கலங்கிய என் மனம் உனது திருவடிகளிலேயே நிலைத்திருக்க வில்லை. எல்லா ஜந்மங்களிலும் விரக்தவைஷ்ணவனாயிருக்கையையே விரும்புகிறேனென்று திருவடியே குறிக்கப்பெற்றது. लोकेति सर्वे धर्मांश्च संत्यज्य सर्वकामांश्च साक्षरान् । लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो= காம்யதர்மங்கள் அனைவற்றையும் கைவல்யத்தோடு சேர்ந்த அவற்றின் பலன்களையும் விட்டு, ப்ரபுவே; உலகமளந்த உன் திருவடிகளைச் சரணமாகப் பற்றினேன். स इति. (ராமா). तस्येति பா ஆரண் 191 மார்க்கண்டேயர் தர்மபுத்ரருக்குச் சொல்லுகிறார்—ப்ரளயத்தில் ஆலந்தளிரில் பள்ளிகொண்ட குழந்தையின் வயிற்றிற் புகுந்து விசித்ரமான உலகனைத்தும் கண்டு களித்து ப்ரமித்து மீண்டும் அத் திருமுகம் வாயிலாக வெளிவந்து, "என்ன கண்டு களித்தாயோ" என்று அவன் கேட்க. அவ் வாச்சர்யக் காட்சி போனவுடன், பிள்ளாய் தர்மபுத்ரரே 'சிவந்த அகவாயுள்ளவையும் நன்கு பதிந்திருப்பனவும் மென்மை பொருந்திய சிவந்த விரல்களால் விளங்கி அழகாயுமுள்ள அவன் திருவடிகள் பரிசுத்தனை என்னாலே பிடித்து ஸேவிக்கப்பெற்றன. चरणाविति. 'श्रीमन् नारायण स्वामिन् अनन्यशरणस्तव । चरणौ शरणं यातः तवैवास्म्यहं अच्युत ॥' என்று மற்றொரு த்வய மந்த்ரம், நாதா! வேறு உபாயமற்றவனாய் உன் திருவடிகளை சரணமாகப்

னவர்களும் 'உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்' என்றும், त्वत्पादमूलं शरणं प्रपद्ये என்றும் அருளிச்செய்தார்கள்.

"सौगन्ध्य.सौकुमार्यादिगुणविग्रहवान् हरिः । तस्य स्वात्मप्रदाने तु साधनं स्वपदद्वयम् ॥"

என்று अभियुक्तரும் प्रतिपादித்தார்கள்.

'चरणौ' என்கிற இடத்திலே 'तमेव शरणं गच्छ', 'கழல்களவையே சரணாக', 'நாகணைமிசை நம்பிரான்சரணே சரண்'इत्यादिகளிற்படியே अवधारणம்विवक्षितம்.

---

பற்றினேன் உனக்கே நான் அடிமையானேன். प्रपन्नेति. ப்ரபந்நர்களின் பாபத்திரளைப் போக்கும் திருவடிகளை சரணமடைந்தேன். இவற்றையடியொற்றினவர்களும் = திருவடிகளையே ப்ரதானமாகக் காட்டும் இவ் வசநங்களை ப்ரமாணமாகக் கொண்ட நம் குருபரம்பரையிலுள்ளவர்களும்.

सौगन्ध्येति. மணம் மென்மை முதலிய குணங்கள் நிறைந்த திருமேனியையுடையன் திருமால்; அவனுடைய ஸ்வரூபாநுபவத்தை நமக்களிப்பதில் அவனுடைய திருவடியிணையே உபாயமாகுமென்றார். இதில் பூர்வார்த்தம் சுபகுணமான விக்ரஹவிசிஷ்டன் हरिः = ச்ரீபகவான் உபாயமென்றது. அவன் உபாயமாவதற்கு அவன் திருவடியை யாச்ரயிப்பதே ஸாதகமென்றது உத்தரார்த்தம். இவ்வபியுக்தர் அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்பர், ஸாரப்ரகாசிகையில் பராசரபட்டரென வுளது. இவ்வளவால் திருவடிக்குச் சிறப்பு ஸர்வஸம்மதமென்று தெரிகிறது. இப்படி இதை ப்ரதாநமாக நிர்தேசித்தாலும் சரணசப்தார்த்தம் நிரபேக்ஷ ரக்ஷகத்வமென்று ஸர்வஸம்மதமாகையால் இப்படிச் சிறந்த திருவடிகொண்ட திருமேனியையுடையனாய் வாத்ஸல்யாதி குணநிதியாய் ச்ரீமானுமானவனை என்று श्रीमन्नारायणचरणौ என்பதின் பொருளாம். அவனுக்கு நிரபேக்ஷரக்ஷகத்வம் शरणசப்தார்த்தம்.

பல வாக்யங்களைக் கொண்டு चरणौ என்றவிடத்தில் ஏவகாரத்தைச் சேர்க்கவேண்டு மென்கிறார். चरणाविति. அப்போது திருவடி தவிர வேறு உபாயமில்லை யென்றால், 'மற்ற அவயவமும் உபாயமன்று' என்று கொள்ளாமைக்கு ஸாதகமாகும் முதல் உதாஹரணம்; இதைப் போன்ற வாக்யத்தையே உதாஹரிக்கிறார் கழல்கள் இதி. திருவாய் 5-8-11. 'பேய்ச்சியின் உயிருண்ட பிரானின் திருவடிகளையே சரணாகக் கொண்ட சடகோபன்' என உளது. நாகணை இதி. திருவாய் 5-10 11. நாகம்—ஆதிசேஷன். அதன் உடலான படுக்கையின் மேலுள்ள நமது பிரானின் चरणங்களே நமக்கு शरणம். இந்த ஏவகாரத்தினால் ஸித்திப்பதென்னவெனில்—त्वमेवोपायभूतो मे भव—இத்யாதியிற் சொல்லுமதே शरणமென்பதற்குத் திருவடியிலுள்ள பரம்பரயா ஸாதகத்வமாகிற உபாயத்வம் அர்த்தமாகில் திருவடிக்குப் போலே க்ருபோபகாரத்வாதிசயம் வேறொன்றுக்கில்லையென்றதாம். ஈச்வரனிடமுள்ள உபாயத்வமே சரணசப்தார்த்தமென்னில் சரணாகதிஸந்தர்ப்பத்திலே शरणசப்தத்திற்கு ரக்ஷகத்வமென்ற பொருளைக் கொள்ளாமல் உபாயத்வமென்ற பொருளைக் கொள்வதால் பகவான் உபாய

चरणाविति निर्देशः पत्नीवैशिष्ट्यबाधकः । इति मन्दैरिदं(न्दे रितं) प्रोक्तम्; श्रीमच्छब्दविरोधतः ॥

மென்றால்—பகவான் உபாயாந்தர ஸ்த்தாநாபந்நனென்று சொன்னதாம். அதனாலேயே ஸாத்யோபாயம் வேண்டா என்று தெரிவதால் நிரபேக்ஷ ரக்ஷகத்வமென்பது ஸித்திக்கிறதே; பிறகு ஏவகாரமெதற்கென்னில்—ரக்ஷகன் வேறொருவனிருக்க மற்றொருவனை உபாயாந்தர ஸ்த்தாநாப்நநனாகக் கொள்வதுமுண்டு. அதில்லை; எவன் ரக்ஷகனோ அவனையே உபாயமாகக் கொள்வதைச் சொல்வதாகும். அதனால் நிரபேக்ஷரக்ஷகத்வம் ஸித்திக்கும். தேவதைகள் த்ரிபுராஸுர ஸம்ஹாரத்திற்குத் தாங்கள் அசக்தராய் ருத்ரனை சரணம் புகுந்தனர்; அந்த ருத்ரன் தனக்கு ஸஹாயமாக இதரதேவதைகளின் பலத்தையும், அக்நியையும், முடிவாக விஷ்ணுவையும் அபேக்ஷித்தான். இப்படி பலவற்றோடு சேர்ந்து ருத்ரன் உபாயமானது போலாவான் மோக்ஷத்திற்கு உபாயமாகிற விஷ்ணுவுமென்று நினைக்காமைக்காக, ஸர்வ நிரபேக்ஷனாகவேயிருந்து நீ உபாயமாகவேண்டுமென்றதுமாம். விரிவு மேலே.

இனி चरणौ என்கிற த்விவசநத்தினால் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்று தெளிவாமென்ற तात्कालिक ஏகதேசிவாதத்தை நான்கு காரிகைகளால் நிராகரிக்கிறார் चरणाविति. चरमरहस्यत्रयத்தில் நயினாராச்சான்பிள்ளை சொன்னதற்கு இங்கே நிராகரண மென்பது ஸ்பஷ்டம். "இப் பதத்தில் द्विवचनम् स्वाद्वितीयम् இவ்வுபாயமென்கிற ஸாஹஸவசநத்தைத் தள்ளுகிறது. அவனும் அவளும் கூடி உபாயமென்னில் चरणங்கள் இரண்டென்ன வொண்ணாது; நாலென்னவேணும்" என்பது அவர்வாக்யம். चरणौ என்கிற த்விவசநநிர்தேசமானது உபாயமான நாராயணனுக்குப் பத்நீவைசிஷ்ட்யத்தை=பத்நீயோடு சேர்ந்து உபாயமாகையை बाधக்கும் इति इदम्= என்ற இது मन्दैः—சிற்றறிவுள்ளவர்களால் प्रोक्तम्- சொல்லி ப்ரவசனமும் செய்யப்பட்டது. मन्देरितं प्रोक्तமென்று பாடாந்தரமாம். அப்போது அறியாதவாரொருவர் சொல்லப் பலரால் அது ப்ரவசநம் செய்யப்பட்ட தென்று பொருள். मन्दत्वத்திற்குக் காரணம் சொல்லுகிறார் श्रीमच्छब्दविरोधतः என்று श्रीमत् என்றிராமல் श्री என்றே யிருந்தால் श्रीनारायण என்பதன்மேல் चरण சப்தமானால் चरण பதத்தாலே நாலைச் சொல்வதற்காக बहुवचनम् வரலாம். இங்கே ஸ்ரீயானவள் நாராயணனுக்கு விசேஷணமாகத் தோன்றுவதால் ஸ்ரீசப்தார்த்தத்திற்கு चरणத்தில் நேராக அந்வயமிராமையால் நாலு சரணத்தைக் கொள்ளலாகாது. அப்போது श्रीயின் चरणம் உபாயமென்ற விவக்ஷையில்லையென்னலாமே யென்னில்—அப்போது மதுப் ப்ரத்யயவிரோதம் வரும். மதுப்பினாலே ச்ரீவிசிஷ்டனென்ற பொருள் சொல்லப்படுகிறதே. 'तदस्यास्ति अस्मिन् इति मतुप्' என்ற விடத்தில 'உபலக்ஷணமாகில் மதுப்பு' வாராது; வர்த்தமாநகாலஸம்பந்தமிருந்தால்தான் மதுப்பு' என்று வையாகரணரும் வரைந்தனரே சரணாகதிகாலத்தில் ச்ரீஸம்பந்தம் நாராயணனுக்கிருப்பதைச்சொல்வதால் ச்ரீக்கும் சரணாகதிஸம்பந்தமாம், चरणौ என்ற த்வித்வம்

शब्दस्वरसतः प्राप्तं वैशिष्ट्यं प्रथमश्रुतम्। विशेष्यचरणद्वित्वं न हि बाधितुमर्हति ॥
चरणानिति वक्तव्यमिति यच्च प्रसञ्जितम्। ग्रन्थज्ञैरपहास्यं तत् पतिप्राधान्यतोऽन्वयात् ॥

---

ஶ்ரீக்கு விசேஷணத்வத்தை பாதிக்கு மென்பதை வேறு காரணத்தினாலும் தூஷிக்கிறார் शब्देति. மதுப்பிராமல் श्रीमति யென்றாற் போலிருந்தாலும் வைசிஷ்ட்யம்=விசேஷணமாகக் கொள்கையே ஸ்வரஸமாகும். மதுப்சப்தமுள்ள போது ஸுதராம். மதுப்பானது விசேஷண உபலக்ஷண ஸாதாரணமன்று. ஆனாலும் चरणद्वित्वத்தால் அதற்கு बाधமென்ன வொண்ணாது. முதலில் அறியப்பட்டது வைசிஷ்ட்யம்; அதாவது பிராட்டிக்கு விசேஷணத்வம். த்வித்வம் பின்னால் அறியப்படுகிறது. விரோதமுண்டாகில் असञ्जातविरोधिन्यायத்தாலே முதலில் அறியப்பட்ட வைசிஷ்ட்யத்தை யிசைந்து த்வித்வத்தையே பாதிக்க வேண்டும். இல்லையேல் उपक्रमाधिकरणविरोधம். மேலும் ஸங்க்யைச் சொல்லும் वचनம் அமுக்யம். गुणे त्वन्याय्यकल्पना என்று த்வித்வத்தை बाधிக்கலாம். உண்மையில் த்வித்வத்திற்கு பாதமுமில்லை—விசேஷ்யமான நாராயணனின் चरणத்திற்குள்ள த்வித்வமிங்கே சொல்லப்படலாம். விசேஷணமான ச்ரீக்கு நாராயணனிடத்தில் அந்வயமின்றி நேராக சரணத்தில் அந்வயமில்லையே. ஆக द्वित्वமானது वैशिष्ट्यத்தை बाधிக்காதென்று பொருள். இனி ஸமப்ரதாநமாயிருந்தாற் போல் விசேஷணமாயிருந்தாலும் ச்ரீக்கு चरणத்தில் அந்வயமுண்டாகில் चरणान् என்றே இருக்க வேண்டும்; அந்வயமில்லை யெனில் ச்ரீக்கு உபாயத்வம் ஸித்திக்காதென்றார் அதற்கு உத்தரம் चरणानिति. यत्—எந்த பஹு வசநமானது प्रसञ्जित—ஆபாதிக்கப்பட்டதோ. அது க்ரந்த மறிந்தவர்களாலே பரிஹஸிக்கத் தக்கதாகும். ஸமப்ரதாநமாயிருந்து இருவர் चरणங்களையும் கொண்டாலும் चरणौ என்றிருக்கலாம். शिखरे निशि गच्छतां पुरा चरणौ यद् दुनोषि नो हिमम् என்ற ப்ரயோகம் காண்க. விசிஷ்டப்ரயோகத்திலே गुरोः सदारस्य निपीड्य पादौ என்றாற் போலே விசேஷ்யத்தை யநுஸரித்து தான் வசநம் வரும். விசேஷண விசிஷ்டத்திலே अभेदமாக அந்வயிக்கும்படி ஸமாநாதிகரணமாக ப்ரயோகித்தால் அங்கே லிங்கமும் வசநமும் விசேஷ்யத்துக்குள்ளதே யாகும். விசேஷணத்தையநுஸரித்து ப்ரயோகித்தால் ப்ரயோகம் அஸாதுவாகும். सवत्सा गौः क्रीता என்றே ப்ரயோகம் ஸாதுவாகும் सपरिकरो राजा पूजितः என்னாமல் पूजितौ என்னலாகாது, நாராயணனுக்கு விசேஷணமாயிருப்பதால் चरणத்தில் ச்ரீக்கும் அந்வயமுண்டு ஆனாலும், पतिप्राधान्यतोऽन्वयात्=பதியைத் தனக்கு விசேஷ்யமாக்கிக்கொண்டே चरणத்திலும் அந்வயிப்பதால் चरणान् इति= என்று बहुवचनं தகாது. விசேஷண விசிஷ்டத்திற்கு மேலே ஒன்றில் அந்வயம் கொள்ளும்போது அந்த ஒன்றில் விசேஷணமும் ஸம்பந்தப்பட்ட தென்று கருதப்பட்ட போதும் அந்த ஒன்றின் மேல் வசநம் விசேஷணத்தையும் அநுஸரித்து வருகிற

न सम्राजि सपत्नीके सद्वितीयोक्तिसाहसम् । तथाऽत्रेत्यपरामृश्य दर्शितं गुरु साहसम् ॥'

ஸர்வசக்தியானவன் உபாயமாம்போது இவ் விசேஷணத்தால் அபேக்ஷை என்; सापेक्षனாகில் ஸர்வசக்தியன்றிக்கே யொழியாதோ என்னில்—இச் चोद्यம் நாராயணசப்தத்தாலும்चरणशब्दத்தாலும்சொல்லப்பட்ட गुणविग्रहयोगத்திலும் பண்ணலாம் அவை இவனுக்கு விசேஷணங்களாகையாலும் அவற்றுக்கு वस्त्वनुरूपமாக उपयोगविशेषங்கள் உண்டாகையாலும் அவற்றால் सर्वशक्तित्वविरोध மில்லையென்று यथाप्रमाणம் கொள்ளில், இது बहुप्रमाणप्राप्तமாய் இங்கு श्रीशब्द-த்திலும் स्वारसिकविशेषणभावமான पत्नीसंबन्धத்திலும் துல்யம்.

---

தன்று. அதனால் ச்ரீவிசிஷ்ட நாராயணனுக்கு ஸ்ரீயோடு चरणத்தில் அந்வய மிருந்தாலும் த்விவசநந்தான் வரும். ச்ரீக்கு உபாயத்வமிசையாதவர்கள் பஹுவசநமிருந்தாலும் நாராயணனுடைய चरणமே கொள்ளப்படுமென்று வாதிக்கலாம்; பஹுவசநம் அதற்கு முக்ய ஸாதகமாகாது ச்ரீக்கு உபாய த்வமிசைகின்றவர் चरणசப்தம் விக்ரஹத்திற்கு உபலக்ஷணமாகையால் திரு மேனியும் இரண்டு, அவர்களும் இருவர், அதனால் த்விவசனமென்றும் வாதி க்கலாம். உண்மையான ஸமாதானம் மேலே மொழிந்ததேயாகும். பிறரின் உரையிலுள்ள குற்றங்களை அறிய நமது வசநக்ருத்ய விமர்சத்தைக் காண்க.

நயினாராச்சான்பிள்ளை 'सद्वितीयம் இவ்வுபாயம் என்கிற ஸாஹஸவசந த்தைத் தள்ளுகிறது' என்றார். உபாயம் सद्वितीयமென்று யார் சொன்னார்கள்? ஒருவன் ஸபத்நீகனாய் सम्राट् ஆனால், सद्वितीयः सम्राट् என்பதில்லை अद्वितीयः सम्राट् என்றே சொல்வது. அவர்கள் இருவராயிருந்தாலும் सम्राट्त्वம் एकम्, அதுபோல் இங்கு உபாயத்வமொன்றே. ஆகையால் मामेकं शरणं व्रज என்றதில் விரோதமில்லையென்கிறார் न सम्राजीति. இப்படி अपरामृश्य—பரிசீலநம் செய்யாமல் ச்ரீக்கு உபாயத்வதூஷணத்திற்காகத் தமது गुरु=மிக்க ஸாஹஸமானது அவ ரால் காண்பிக்கப் பட்டது.

இனி இந்த த்விவசநத்தால்மட்டும் கூறவில்லை. தர்க்கமும் துணை. ச்ரீக்கு உபாயத்வத்தைக் கொண்டால், த்ரிபுராஸுரஸம்ஹாரத்தில் பல ஸஹாய த்தை யெதிர்பார்த்த ருத்ரனுக்குப் போல் எம்பெருமானுக்கு ஸர்வசக்தி த்வமில்லை யென்னவாம், ஆக ஸர்வசக்தித்வமே ச்ரீயின் உபாயத்வத்திற்கு बाधकமென்று சங்கித்துப் பரிஹரிக்கிறார் ஸர்வேதி. இங்கே वात्सल्यादिगुण-विशिष्टः विग्रहविशिष्टश्च नारायणः शरणम् என்று த்வயார்த்தம் ஸர்வஸம்மதமாகிறது; அத்துடன் ஸ்ரீவிசிஷ்ட: என்பதும் சேருகிறது; குணவிக்ரஹங்களோடு சேர்ந் தாலல்லது அவன் உபாயமாகானென்று அவற்றுக்கும் உபாயத்வமிசைந்தால் ஸர்வ சக்தித்வभंगம் வருமே; குணவிக்ரஹங்கள்மூலமாகத் தானே அவன் ஸங்கல்ப்பிப்பது. குணவிக்ரஹங்கள் ப்ரதானமாகாமல் விசேஷணமாகத் தோன்றுவதால் விரோதமில்லை; அவற்றுக்கிங்கே உபயோகமுமுளதெனில்—விசேஷணமாகத் தோன்றுவதால் உபயோகமுமுள்ளபடியால்-ச்ரீக்கும் அது

இப்படியிருக்க **'चरणौ'** என்கிற **द्विवचनमात्र**த்தைக்கொண்டு **श्रीसंबन्ध**த்தை உபலக்ஷணமென்னில், **गुणादिसंबन्ध**த்தையும் இப்படிச் சொல்லப் **प्रसङ्गि**க்கும். **चरणशब्द**த்தில் **उपायवाचिशब्दसमभिव्याहार**த்தாலே **उपयुक्तगुणविग्रहविशिष्ट**ன் உபாயமாகிறானென்று விவக்ஷிதமென்னில்— இது இங்கும் துல்யம்.

இப்படியிருக்க இவளை விசேஷணமாகக்கொள்ளில் **सर्वशक्तित्वविरोध**ம் வருமென்பார்க்கு இப் **पुरुषकारापेक्षै**யிலும் **सर्वशक्तित्वविरोध**ம் **प्रसङ्गि**க்கும். **'युवत्वादौ तुल्ये'** என்கிற ச்லோகத்திற் சொன்ன **गुणविभाग**த்தின்படியே **पुंस्त्वपितृत्व—प्रशासितृत्वादि**களாலே **प्रतापोत्तर**னாய் **दण्डधर**னாய் நிற்கிற ஈச்வரனைபபற்ற இவர்க்கு **स्त्रीत्व—मातृत्वादि**களாலே வந்த **मार्दव—वात्सल्यादिगुणातिशय**த்தாலே இவள் அவனைப்பற்ற நமக்குப் புருஷகாரமாகையுமீ**श्वरस्वातन्त्र्यनियत**மென்று சொல்லில், இப்படியே **सहधर्मचारिणि**யான இவளாலே **विशिष्ट**னாய்க்கொண்டு **शरण्य**னாகையும் **ईश्वरस्वातन्त्र्यनियत**மென்று கொண்டால் ஒரு ப்ரமாணத்துக்கும் **विरोध**மில்லை

---

கூடும்; இல்லையேல் குணங்களும் உபாயமாகாமற் போமென்றபடி, **स्वार-सिकेति. वशेषणभावः = विशेषण**மாகை;ஸ்வரஸமாக விசேஷணமாகையையுடைய.

**இப்படி இதி.** த்வித்வவிசிஷ்டசரணத்தில் ச்ரீக்கு அந்வயமிராமையால் ச்ரீக்கு உபாயத்வமில்லை யெனில்—**चरण**த்தில் குணங்களுக்கு ஸம்பந்தமேயிராமையால் குணங்களுக்கும் உபாயத்வ மில்லையாம். **चरण**த்தை விசேஷ்யமாகச் சொல்லியிருந்தாலும் அது விக்ரஹத்துக்கு உபலக்ஷணமாய் **गुणविग्रह-विशिष्टो नारायणः** என்றே வாக்யார்த்தமென்னில்—அப்போது **श्रीविशिष्टः गुणविशिष्टः विग्रहविशिष्टश्च नारायणःशरणं** என்பதில் என்ன தோஷமிருக்கிறது? உண்மையில் நாராயண சப்தத்தாற் போல் ச்ரீசப்தத்தாலும் உபாயத்வோபயுக்தமான குணங்கள் சொல்லப்பட்டிருப்பதால் **चरण**சப்தத்தில் ச்ரீக்கும் அந்வயமுண்டாகையால் **गुणविग्रहविशिष्टश्रीविशिष्टं गुणविग्रहविशिष्टं नारायणं शरणं प्रपद्ये** என்றே வாக்யார்த்தமாம். இப்படி **चरण**த்தையும் உபாயகோடியிற் சேர்க்கவேண்டுமென்பதற்காக **नारायणं शरणं** என்னாமல் **चरणौ शरणं** என்றது.

ஸர்வசக்தித்வவிரோதம் வருமென்று ச்ரீக்கு உபாயத்வத்தை விட்டால் புருஷகாரத்வத்தையும் விடவேண்டியதாகுமென்கிறார் **இப்படி யிருக்க இவளை இதி.** புருஷகாரமான பிராட்டியை யபேக்ஷிக்காமலே ரக்ஷிக்க சக்தியுள்ளவனுக்கு அந்த அபேக்ஷையைக் கொண்டால் ஸர்வசக்தித்வஹாநி வருமே யென்று கேள்வி. இதற்கு **युवत्वादौ** இத்யாதி அவர்கள் சொல்லும் ஸமாதாநம். இது முன்பே வ்யாக்யாதம். ஸர்வசக்தனான ஈச்வரன் ஆசார்ய உபதேசாதிமூலமான உபாயாநுஷ்டாநத்தை யபேக்ஷித்தே ரக்ஷிக்கிறானென்றால், அங்கும் ஸர்வசக்தித்வவிரோதம் வரலாம். தான் ஏற்படுத்திய வ்யவஸ்தையை யநுஸரித்துத் தான் உபாயமாவதில் தோஷமில்லை யென்ன வேண்டும். அதுபோல் பிராட்டி புருஷகாரமாக வேண்டுமென்ற வ்யவஸ்தையும் அவன் ஏற்படுத்தியது தானென்று அவர்கள் ஸமாதாநம். இந்த ஸமாதாநம் உபாயத்வத்திலும் துல்யமென்கிறார் **இப்படியே இதி. संसारार्णव-**

இவ்விடத்தில் शरणशब्दம் 'उपाये गृहरक्षित्रोः शब्दः शरणमित्ययम् । वर्तते; सांप्रतं त्वेष उपायार्थैकवाचकः' என்று விசேஷிக்கையாலே உபாயபரம்.

भरन्यासबलादेव त्वयत्नविनिवृत्तये । अत्रोपायान्तरस्थाने रक्षको विनिवेशितः ॥

---

कारिणीम्', देवजुष्टामुदाराम्', 'सधर्मचरी तव' இத்யாதி ப்ரமாணங்களால் இவளும் சேர்ந்து உபாயமும் உபேயமுமாகவேண்டுமென்று அவனது அபிப்ராயத்தை சாஸ்த்ரமூலம் அறிவதால், யார் செய்யும் கார்யமும் அவனாலே யாகிற படியால் இது ஸர்வசக்தித்வஸாதகமே யாகுமென்றபடி.

இவ்வளவால் गुणविग्रह विशिष्टश्रीविशिष्टनारायणமென்று முதற்பதத்திற்கு அர்த்தம் ஸித்தித்தது. இனி—शरणசப்தமானது சேதநவிஷயத்தில் ரக்ஷகன் என்கிற பொருளிலும் அசேதநத்தில் க்ருஹமென்கிற பொருளிலும், ப்ரபத்தி பரமான त्वं शरणमपाम् என்கிற வாக்யத்திற் போல் உபாய பரமாகவும் ப்ரயோகிக்கப் படுகிறது. ஆக இங்கே चरणौ शरणம்= திருவடியே சரணமென்றால் இது க்ருஹமாகாது. க்ருஹமென்பதற்கு प्राप्यமென்ற பொருளானாலும் பூர்வஸ்வரூபம் प्राप्यபரமன்றாகையால் சேராது. உபாயபரமாகலாம். முதற்பதத்திற்கு விக்ரஹ விசிஷ்ட நாராயணன் என்ற அர்த்தத்தில் முடிவைச் சொன்னதால் शरण சப்தத்திற்கு ரக்ஷகனென்று பொருளாகலாம். பக்தியோக நிஷ்டனுக்கும் चरणம் உபாயமாய் ஈச்வரன் ரக்ஷகனாகையால் பக்தியோகமும் சரணாகதியாக ப்ரஸங்கிக்கும்-என்ன அருளிச்செய்கிறார் இவ்விடத்தில் இதி. (அஹிர். ஸம். 7-29) ப்ரபத்திஸந்தர்ப்பத்திலிருக்கிற शरणசப்தமானது க்ருஹம் ரக்ஷகன் என்கிற அர்த்தங்களை விட்டு உபாயமென்கிற பொருளையே சொல்லுமென்றதால் இவ்விடத்தில்= த்வயத்திலும் உபாயமே பொருள். भरन्यासமென்ற பதத்திற்கு ஒருவன் ரக்ஷிக்கிறவனாயிருந்து அதற்காக ஓர் உபாயத்தை விதித்திருந்தானாகில், அவ்வுபாயத்தைச் செய்யமாட்டாமல் அவனைச் சரணமாகப் பற்றுமிடத்திலே என்று பொருள். மற்றவிடத்தில் ரக்ஷகனென்றே பொருளுமாகலாமென்று கருத்தாம். 'பக்தி முதலான அசேதநங்களுக்குள்ள உபாயத்வம் ஈச்வரனுக்கில்லையே; ரக்ஷகத்வந்தானே இவனிடமுள்ளது: ஸாமாந்யமான பொருளைச் சொல்லி அதை ரக்ஷகத்வமென்கிற விசேஷத்தில் பிறகு முடிப்பதைவிட முதலிலேயே ரக்ஷகனென்ற பொருளையே கொள்ளலாமே யென்னில்—शरण சப்தத்திற்கு அசேதநமான உபாயந்தான் பொருள். ஈச்வரன் அசேதந—உபாயமாகமாட்டாநாகையால் அந்வயம் வாராதே யென்னலாம்; உபாயமென்பதற்கு, உபாய ஸ்த்தாநாபந்நனென்று பொருளாகுக, यजमानः प्रस्तरः என்றவிடத்தில் ப்ரஸ்தரமென்கிற தர்ப்பமுஷ்டியானது யஜமானன் = யஜமாநஸ்தாநாபந்நமென்றது போலாம் இது. அங்கே யஜமாநன் செய்யவேண்டிய इविर्धारणத்தை ப்ரஸ்தரம் செய்கிறதென்பதை யறிவிப்பதாமென்னில், இங்கேயும் அவ்வாறென்கிறார் अपेतिकारிகையால். प्रपद्ये என்பதால் பரந்யாஸம் சொல்லப்பட்டது. அதனால் भरமான பக்திவிஷயத்திலே இவனு

ஸர்வாதிகாரிகளுக்கும் அவ்வோ சாஸ்த்ரார்த்தங்களாலே ஆராதிதனான ஸர்வேச்வரன் பலோபாயமாயிருக்க, இங்கு விசேஷித்து உபாயமென்னவேண்டிற்று— உபாயாந்தரஸ்தாநத்திலே ஸஹஜகாருண்யாதிவிசிஷ்டனான ஈச்வரனை நிறுத்துகிற ப்ரபத்தி-

---

க்கு ப்ரயத்ந மிராமலிருக்கவேண்டும். அப்போது பலனெங்ஙனே வருமென்ற சங்கையில் ரக்ஷகனான பகவானே உபாயாந்தர ஸ்தாநத்தில் நிற்கிறனென் கிறது. அதன் ஸ்தாநத்தில் நிற்பதாவது—அதில்லாமலே அதன் கார்யத்தைச் செய்கை. அவனாலேயே கார்யம் ஆகிறதென்று தெளிந்து இவனும் ஸ்வயத்ந த்தை விடுகிறதாம் கபோதம் சிபியைச் சரணமடைந்ததென்றவிடத்தில் அது தன்னாலாம் வ்யாபாரத்தால் தன்னை ரக்ஷித்துக்கொள்ளமாட்டாமல், 'நீர் உமக்காம் வியாபாரத்தைக் கொண்டு காக்கவேணும்' என்றதாம். அதுபோல் முமுக்ஷு தன்னாலாம் பக்தியென்னும் வியாபாரத்தால் தன்னைத்தான் காக்க மாட்டாமல், நீ உனக்குத் தக்க வியாபாரத்தால் காக்கவேணுமென்கிறு னென்னலாமே; ஸாத்யோபாயத்வ ப்ரார்த்தனை யென்பதென் என்னில்—லௌ கிக வ்யாபாரத்தால் ஒருவன் பலனைப் பெறும்போது வ்யாபாரம் செய்கிறவனே ரக்ஷகனெனப்படுவான். சாஸ்த்ர விஹிதமான வ்யாபார மூலம் பலன் பெறும் போது அந்த வ்யாபாரத்தை விதித்தவன் ப்ரீதி யடைவதால் அதன்மூலம் பலன் வருவதால் அவனைத்தான் ரக்ஷகனென்கிறது; செய்கிறவனை ரக்ஷக னென்பதில்லை அவன் செய்த வியாபாரத்தை தான் உபாயமாகக் கொள்வர்; செய்கிறவனை உபாயமாகவும் கொள்வதில்லை. அதனால் கபோதம் தன் ஸ்தான த்தில் சிபியை வைத்து ரக்ஷை பெற்றதென்பது போல் சாஸ்த்ர விஹிதமான தைச் செய்யவாகாதவன் அதை விட்டபோது, தன் ஸ்தானத்தில் ஈச்வரனை நிறுத்துவதென்னாமல் உபாய ஸ்தானத்தில் அவனை நிறுத்துவதென்பதாம்.

காரிகையின் பொருளை யுரைக்கிறார் ஸர்வேதி. ரக்ஷகத்வமென்ற உபாயத்வம் யாக. தான. ஹோம. கர்மயோக-ஜ்ஞானயோக-பக்தியோக விஷயங்களில் ஈச்வரனுக்கிருக்கிறது அந்த ரக்ஷகத்வம் இங்கே சொல்லவேண்டியதன்று. ஸ்வோபாயம் செய்ய வாகாத வனுக்கு ப்ரபத்தி யாகையால் ஈச்வரனே ஸ்வோபாயம் அதாவது ஸ்வோபாய-ஸ்தானத்தில் நிற்பவனாகவேண்டுமென்று அபேக்ஷிக்கிறன் இவன் அப்படி அவனை நிறுத்துகையென்கிற வ்யாபாரம் ப்ரபத்தியினுடையதாகும். ந்யாஸ-லக்ஷணாதேவ என்றதால் ஈச்வரன் உபாயாந்தர ஸ்தாநத்தில் நின்று என்னை ரக்ஷிப்பானென்கிற மஹாவிச்வாஸத்தோடு பரந்யாஸம் செய்திருப்பதால், அதனாலேயே ஸ்வோபாயஸ்த்தாநத்திலே பகவான் நிறுத்தபட்டானென்றபடி. உபாயாந்தர ஸ்தாநத்திலே நிற்கவேண்டுமென்று ப்ரார்த்தனை செய்தாலும் அவன் அவ்வாறு நிற்கலாம். அப்போதும் பரந்யாஸம் செய்தாக வேண்டும். ஸமர்ப்பணமே அத்யவஸாய சப்தார்த்தமென்று முடிவாக அருள்வார். அப் போது ந்யாஸலக்ஷணத்தாலேயே என்பது ஸ்பஷ்டம். அதனால் இதே போது மென்பதற்காக ஏவகாரம். ஸ்வோபாயம் செய்யாதிருக்க ஈச்வரன் உபாயகார்ய த்தைச் செய்கை தகுமோ என்பதைப் பரிஹரிக்க, ஸஹஜகாருண்யரதி

प्रकारம் தோற்றுகைக்காகவா மத்தனை. இங்கு भक्तियोगस्थानத்திலே ப்ரபத்தி நில்லாநிற்க, ஈச்வரன் उपायान्तरस्थानத்திலே நிற்கையாவது என் என்னில்— अङ्गமாகப் प्रपत्तियும் பண்ணி உபாயமாக उपासनமும் अनुष्ठित्துப் பெறவேண்டும் फलத்தை அவ்வுபாயமொழியவே प्रपत्तिमात्रத்தாலே பெறுகைக்கு அடி ஈச்வரனுடைய सहजकारुण्यादिस्वभावविशेषமாகையாலே अकिञ्चनனுக்கு ஈச்வரன்

---

விசிஷ்டனுன என்றது. ஈச்வரன் தனது காருண்யத்தாலே ப்ரபத்தியை விதித்திருப்பதால் அகிஞ்சநவிஷயத்திலே गुरूपायத்தை எதிர்பாராமல் நிற்பது தெரிகிறது. அதற்குக் காரணம் ஸஹஜகாருண்யமே.

இனி यत् येन कामकामेन என்றுரம்பித்து 'न्यासेनैव महामुने' என்று. गुरूपायகார்யத்தை ப்ரபத்தி செய்வதாகச் சொல்லியிருப்பதால் ப்ரபத்திதானே பக்திஸ்த்தாநாபந்நையாகத் தெரிகிறது; பக்தியினுல் வரவேண்டும்ஈச்வரப்ரஸாதமும் அதன் மூலமான பலமும் ப்ரபத்தியினுல் தானே வருகிறது. இப்படியிருக்க ஈச்வரனை பக்திஸ்த்தாநாபந்நனுகச் சொல்லக்கூடுமோ என்று வினவுகிருர் இங்கு இதி. உத்தரம் அருளிச்செய்கிருர் அங்கமாக இதி. साङ्गप्रபத்திநிஷ்டன்விஷயத்திலே மோக்ஷத்திற்கு இரண்டும் வேண்டும்; அத்வாரகப்ரபத்திநிஷ்டன் ப்ரபத்தி மாத்ரத்தால் பலன் பெறுகிருன். அங்கப்ரபத்திக்கும் இந்த ப்ரபத்திக்கும் விஷயம் வேருனுலும் அதைப்போல் அவ்வளவு சிறியகாலத்தில் இதுவும் செய்யக்கூடியதாகையால் ஸமமாகிறது பக்தியைச் செய்கிறவனிடத்தில் அதனுலான ப்ரீதியினுலே (உவப்பாலே) அனுக்ரஹம் செய்கிருன். ப்ரபத்தியைமட்டும் செய்தவனிடத்தில் गुरूपायம் செய்தானென்ற உவப்பு உண்டாகாது; அப்படியிருந்தும் அவன் பலனளிப்பது ஸஹஜகாருண்யத்தாலென்ன வேண்டும். அந்த ஸஹஜகாருண்யம் எல்லோரிடமுமிருப்பதால் பக்தனையும் பக்திநிரபேக்ஷமாக ரக்ஷிக்கலாமேயென்றுகேட்கலாம். அசக்தன்விஷயத்திலே விலக்ஷணமான ஸஹஜகாருண்யமென்ன வேண்டும். அப்போது எல்லா அசக்தரையும் காக்க வேண்டுமே; அதற்காக நான் அசக்தன், என்னைக்காக்கவேண்டுமென்பவனைக் காக்கிருனென்றுப்ரபத்தி சாஸ்த்ரத்தால் தெரிகிறதென்னில், அப்போது பொதுவான ஸஹஜகாருண்யத்தோடு அசக்தியை யறிவிக்கிறவன்விஷயத்தில் गुरूपायமிராமலே பலன் அளிக்கவேண்டுமென்று ஈச்வரனுக்கு அநாதிஸங்கல்பமிருப்பது தெரிகிறது. இதையறிவிக்க सहजकारुण्यादि என்ற आदिपதமாம். இந்த ஸஹஜகாருண்யாதி இராமற்போனுல் ப்ரபத்தி சாஸ்த்ரமேற்படாது. இச் சாஸ்த்ரமிராமற் போனுல் गुरूपायம் செய்ய முடியாதவர் பலனைப் பெருர். இங்கே ஸ்வபாவவிசேஷமாகையாலே என்றதால் ஈச்வரனிடமுள்ள ஸ்வபாவவிசேஷமே உபாயமாகையால் ஸ்வபாவவிசிஷ்ட ஈச்வரன் உபாயமென்றதாகுமென்றதாயிற்று. அகிஞ்சநனுடைய பக்திஸ்த்தாநத்திலே ஸ்வபாவவிசேஷத்தை யிங்குச் சொன்னதால் உபாயாந்தரஸ்தாநாபத்தி ஈச்வரனுக்குப் பொருந்துகிறது.

இங்கே கரூர்ஸ்வாமி யென்கிற ஸ்ரீரங்கராமாநுஜமுனிகள் தமது ஸம்ஸ்க்ருத வ்யாக்யாநத்திலே கூறுவதாவது—பக்திஸ்தாநத்தில் ப்ரபத்தி யென்பதே ஸம்மதம்; பக்தி ஸ்தாநத்திலே ஈச்வரனென்பது முக்ய ப்ரயோக மன்று. பக்தியைப் போலே ப்ரபத்தியும் நேராக பகவத் ப்ரஸாதத்திற்குக் காரணமாய் மோக்ஷகாரணமாகிறது. பக்தி ஸஞ்சிதகர்மமாத்ர நிவர்த்தகம், ப்ரபத்தி ஸஞ்சிதம் ப்ராரப்தமிரண்டுக்கும் நிவர்த்தகம். சிலர் ப்ரபத்தி யாலே ஈச்வரனிடத்தில் भर ஸ்வீகாரமென்கிற தர்மமுண்டாவதால் அதுவே நேராக மோக்ஷஸாதநமாகையால் ப்ரபத்தியானது பரம்பரயா உபாயம்; பக்தி துல்யமாகி உபாயமன்றென்று கல்பிக்கிறார்கள். அது ஆவச்யகமன்று. 'ப்ரபத்தி உபாயமன்று என்கிற ஸ்ரீதேசிக ஸூக்திக்கு ப்ராயச்சித்தமான புநः ப்ரபத்திக்கு மோக்ஷோபாயத்வமில்லை யென்றாற் போல் வேறுவிதமாக நிர்வாஹம் செய்யவேண்டுமென்றவாறு: இத்துடன், ரக்ஷகத்வம் கலக்காமல் भर ஸ்வீகாரமென்பது நிரூபிக்க முடியாது. அவனுக்கு உபாயாந்தரஸ்தாநாபத்தி யென்பதும் भरस्वीकारமென்பதுமில்லை. பக்திக்குப் பிறகு ப்ரஸாதம் ரக்ஷகத்வ மென்ற இரண்டுபோல் ப்ரபத்தியிலும் ப்ரஸாதம் ரக்ஷகத்வ மென்றிவ்வளவே யுளதென்றாராய், உபாயத்வப்ரார்த்தனையாவது நிரபேக்ஷரக்ஷகத்வப்ரார்த்தனை; அந்த ப்ரார்த்தநாவிசிஷ்டமாகவே பரந்யாஸமென்ற அங்கியை அநுஷ்டிக்கவேண்டும்; ஆக உபாயத்வப்ரார்த்தனை अङ्गावच्छेदकமாகும் என்று சில முன்னோருரையிலுள்ளதையும் இங்குக் கூட்டியிருக்கிறார்

இங்கே ஸாரஸ்வாதிநியின் கருத்தை வெளியிடுவோம்—ரக்ஷகத்வ ப்ரார்தநா என்கிற பொருளை விட்டு உபாயத்வ ப்ரார்த்தனையைக் கொள்ளவேண்டு மென்றதால் கேவல ரக்ஷகத்வமின்றி உபாயத்வம் வேறுவிதமென்பது ஸித்தம். அசேதநமான பக்த்யாதிரூப உபாயமாகவே ஈச்வரனை யாக்கமுடியாது. ஆகையால் உபாயாந்தரஸ்தாநாபத்தி ப்ரார்த்தனையென்று முடிந்தது ஈச்வரன் ரக்ஷகனுயிருப்பதால் அவனது ஸங்கல்பமின்றி பலன் வராதாகையால் ரக்ஷகத்வத்தை விடமுடியாது. ஈச்வரன் உபாயாந்தர ஸ்தாநாபந்நன் என்றால் ஜீவன் பக்தியை யநுஷ்டித்து உபாயமாகிறாப் போலே ஜீவனுக்காக ஈச்வரன் பக்தியை யநுஷ்டித்து உபாயமாகிறானென்பதுமில்லை ஆகையால்என்னிடமிருந்து உபாயத்தை யபேக்ஷிக்காமல் ரக்ஷி என்கிற ப்ரார்த்தனையாயிற்று. அதிலே ரக்ஷகத்வாம்சம் சேர்ந்திருந்தாலும் வேறு அம்சம் கூடியிருப்பது ஸ்பஷ்டம். அதே நிரபேக்ஷத்வம். அதை விவரிக்க வேண்டும். இதை ஸாராஸ்வாதிநியில் 'உபாயாந்தரஸ்தாநாபந்நத்வம्उपासनादि(सत्गुरु)साध्य सर्वफलनिर्वोढृत्वम् भरस्वीकर्तृत्वमिति यावत् என்றார், அதன் பொருளாவது भक्ति साध्य सर्वफलनिर्वाहक धर्मवत्त्वम्. அந்த தர்மமானது भरस्वीकारமாகவே முடியும் அதன் மூலம் ஸர்வ फलங்களும் வருகிறன. ஆக பக்தியைப்போல் भरஸ்வீகாரம் फलहेतुவாகையால் भरஸ்வீகாரவிசிஷ்டேச்வரன் உபாயாந்தரஸ்த்தாநாபந்நனே. ப்ரபத்தியானது உபாயாந்தரஸ்தாநாபத்திப்ரார்த்தனையை உள்ளடக்கிக்

उपायान्तरस्थानத்திலே நின்றுனென்கிறது.

---

கொண்டு உபாயமாகையால் ஈச்வரனை உபாயாந்தரஸ்தாநாபந்நனாக இது குறிப்பதால், தான் உபாயாந்தரஸ்தாநாபந்நமாகாது 'त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थनामतिः என்கிற வசநத்திற்கு விரோதம் வாராதபடி உபாயாந்தர ஸ்தாநாபத்தியை ப்ரபத்திக்கே அமுக்ய மென்ன வேண்டும் இதரோபாயங் களாலே ஸாதிக்கப்படும் फलத்திற்காகப் புருஷன் செய்வது ப்ரபத்தியே யாகையால் அவ்வளவால் உபாயாந்தரஸ்தாநாபத்தியை நாம் அதற்குச் சொல் வது; ப்ரபத்திக்கு உபாயாந்தரஸ்தாநாபத்தியைக் கூறும் வசனமில்லை. உலகிலும் ஒருவன் भरन्यासம் செய்து தான் உபாயம் செய்யமாட்டாமையை யறிவித்தால் பலன் அளிப்பவன் வேறு வழியால் அளிக்கிறான். அப்பலனுக்கு அசக்தியின் அறிவிப்பே உபாயமென்று சொல்வதில்லை அந்த அறிவிப்பு உபாயம் செய்யமாட்டாமையை உட்கொண்டதாகையால் உபாயமாகாது.

இந்த பரஸ்வீகாரமென்பது ரக்ஷகத்வத்தோடு சேர்ந்ததுதானே என் னில்—அதனுலென்ன, கார்ப்பண்யம் மஹாவிச்வாஸமென்றவற்றிலும் ரக்ஷக த்வம் விஷயந்தான். மேலும் சேர்ந்ததா சேராததா என்கிற விசாரம் நிற்க. இதனுடைய ஸ்வரூபத்தை சோதிக்க வேண்டும் இது உபாயத்வப்ரார்த்தனை யினுலேவருகிறதா, ப்ரந்யாஸத்தாலேவருகிறதா என்றபோது, भरन्यासफलदिव என்ற காரிகையில் भरन्यासத்தைச் சொல்லியிருப்பதால் அதை விடமுடியாது. भरமநுஷ்டிக்காதவன் தன்னிடமிராத भरத்தை धनादिகளைப் போலே யெப்படி ந்யாஸம் செய்வதென்று ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் விசாரித்தோம்; அதைப் போல் भरस्वीका ரமென்ற விடத்திலும் நிஷ்பந்நமாகாத भरத்தை எப்படி ஸ்வீகரிப்பதென்றே கேள்வியாம்; அதில் உத்தரம் சொல்லவேண்டும். கபோத சரணுகதியானது, 'என்னைக் காத்துக்கொள்ள என்னுலாகவில்லை, நீ என்னைக் காக்கவேணும்' என்ற ரக்ஷகத்வ ப்ரார்த்தனை மட்டுமாகிறது தான் செய்யவேண்டும் கார்யமாகிற உபாயத்தின்ஸ்தாநத்திலே சிபியை நிறுத்துவ தென்பதில்லை, 'நீ என்னை ரக்ஷிக்க என்னிடம் உபாயத்தை எதிர்பாராதே' என்று கபோதம் கேட்கிறதில்லையே. ஒருவன் ஒரு கார்யத்தைக் கூறி இதைச் செய்பவனுக்கு நன்மை செய்கிறேனென்று தெரிவித்திருந்தால் அந்த நன்மையைப் பெற விரும்புகிறவன் தான் கார்யம் செய்யவாகாமற் போனாலும்—தன்னிடம் ப்ரீதியுள்ள மற்றொருவனைக் கொண்டு அந்தக் கார்ய த்தை நடத்தி நன்மை பெறுவதுண்டு அங்கே நன்மை யளிப்பவன் ரக்ஷ கன்; ஒருவனுக்காகக் கார்யம் செய்கிற வேறொருவன் அவன்ஸ்தாநத்திலே உபாயமாகிறபடியால் உபாயஸ்தாநாபந்நனாகலாம். இங்கு ரக்ஷகனே உபாயமாக்கப்படுகிறான். அதனுல் இங்கே சரணசப்தத்தை உபாயவாசகமாக்கி உபாயத்வப்ரார்த்தனை சரணுகதி யென்றது சாஸ்த்ரம். சிபிகபோத ஸ்த்தலத்தில் भरஸ்வீகாரமாவது ரக்ஷணவ்யாபாரமென்கிற भरத்தை அவன் செய்ய விசைவது; இங்கே भर ஸ்வீகாரமாவது பக்தி போன்ற உபாயத்தை

அவன் ஸ்வீகரிப்பதென்பர். அந்த ஸ்வீகாரமும் भक्तिயை இவனுக்குபாயமாக அங்கீகரிப்பதென்றால்சேராது. பக்தியை ஈச்வரன் அநுஷ்டிப்பதே भरस्வீகார மென்பதும் தகாது. அதனால் அதன் கருத்தென்ன வெனில்—ஈச்வரன் ஸஹஜ காருண்யத்தாலே மோக்ஷமளிக்கிறவன் ஸர்வமோக்ஷம் வாராமைக்காக பக்தி ரூப உபாயாபேக்ஷை பண்ணுகிறான். இவ்வபேக்ஷை ஸஹஜகாருண்ய கார்ய ப்ரதிபந்தகமாகும்;பக்திசெய்துவிட்டால்அபேக்ஷை நிவ்ருத்தியாகிறபடியால் கார்யபூர்த்தி. அகிஞ்சநன் என்னை ரக்ஷி யென்று மட்டும் கேட்டால் ப்ரதி பந்தகமிருப்பதால் ஈச்வரன் கார்யம் செய்யான். அதற்காக அந்த ரக்ஷக னையே பார்த்து. நான் அசக்தன்; என்னிடம் அதை யபேக்ஷியாமலே பலன் அளி யென்று கேட்டால் அவன் ரக்ஷிக்கிறானென்று ப்ரபத்திசாஸ்த்ரம் சொல்லுகிறது. 'நீ அபேக்ஷிக்காமலிரு' என்பதையே உபாயத்வ ப்ரார்த்தனை யென்கிறது. அந்த உபாயத்வ ப்ரார்த்தனையை ப்ரமாணத்தால் பரந்யாஸ த்திலே முடிப்பதால் ரக்ஷகனிடமுள்ள வ்யாபாரத்தை भरस्வீகாரமென் கிறது. அதாவது தன்னை ரக்ஷிப்பதற்காக ஏற்பட்ட भरத்தை=உபாயத்தை ஸ்வீகரிப்பது=फलापेक्षैயுள்ளவனிடத்தில் சுமத்தாமலிருப்பது. இவனிட மிருந்து தனக்குள்ள உபாயாபேக்ஷையை நிவர்த்தித்துக் கொள்வது; 'நான் இனி உபாயம் செய்யவிழிவதில்லை' என்று பரந்யாஸம் மூலமாக நிவ்ருத்தி செய்து கொண்டாயே; இது முடிவில் மாரு டலிருந்தால் உனக்குப் பலனளி க்க உன் செயலை எதிர்பார்ப்பதில்லை யென்று ஈச்வரன் செய்யும் அநுக்ரஹம். இதே பரந்யாஸத்தின் கார்யமான பரஸ்வீகாரமாகும் முன் சொன்ன ஸஹஜ காருண்யமும், பொதுவாக அகிஞ்சநரிடத்திலுள்ள ஸங்கல்பமும் வேறு; இது வேறு; மோக்ஷ ப்ராப்தி விரோதியை விலக்க வரும் ரக்ஷணஸங்கல்பமும் இதைவிட வேறு. இப்படி விவேசநம் செய்தால் भरஸ்வீகாரம் துர்வசமாகாது.

இனி गोप्तृत्ववரணத்தில் ஸ்வீகார ப்ரார்த்தனை சேராமையால் பரந்யா ஸமானது भर ஸ்வீகார ப்ரார்த்தநாவிசிஷ்டமாக அநுஷ்டிக்கப்பட வேண்டு மென்று சொல்லலாம். இவ் வளவை விட்டு ஈச்வரனிடம் ரக்ஷகத்வம் சேர்ந் திருப்பதால் இந்த ரக்ஷணத்திற்காகவே भरஸ்வீகார மாகையால் निरपेक्षरक्षकत्व प्रार्थनाविशिष्टभरन्यासமே अंगीஎன்று கொண்டால்गोप्तृत्ववरणமும் இங்கே அடங்கி யிருப்பதால் தனியாக அதை யநுஷ்டித்தால் மீமிசையாம்—அதை விட்டால் ஐந்து அங்கங்களென்கிற ஸித்தாந்தம் குலையும். இதை விட அங்கியான பரந்யா ஸத்தில் இதைச் சேர்க்காமல் நிரபேக்ஷரக்ஷகத்வ ப்ரார்த்தனையே இங்கே गोप्तृत्ववरणமாகிற அங்கமென்று கொள்ளலாம். शिष्टविषयத்திலே இதில்லை யே யென்னில், அதனாலென்ன; शुरुपायத்தை ரக்ஷகன் விதித்திருந்து அதைச் செய்யமுடியாத விடத்தில் இப் படிப் பட்ட गोप्तृत्ववरणமென்று கொள்ளலாம். க்ரந்தங்களில் இப்படி गोप्तृत्ववरण நிஷ்கர்ஷமில்லையே யென்னில்—भरந்யாஸ ரூப அங்கியின் நிஷ்கர்ஷத்திலும் अंगितावच्छेदकத்தின் சேர்க்கை இவ்வாறு எங்குமில்லை யென்பது ஒவ்வொரு घट्टத்திலும் ஸ்பஷ்டம். அதனால் இரண்டிடத்

திலும் அதை விட்டுப் பொதுவாக भरஸ்வீகார ப்ரார்த்தனையை பரந்யாஸ காரணமாக்கி அதன் கார்யமான भरந்யாஸம்மட்டும் போதுமென்பது உசிதமாகும். அநுஷ்டியாமற் போனாலும் भरस्वीकारापेक्षै யென்கிற குணமானது ப்ரபத்தி செய்பவனிடத்தில் எப்போதுமிருப்பதே.

இவ்வளவால் பக்தனிடத்தில் ப்ரஸாதமாவது ப்ரீதியும் தகுந்த ஸமயத்தில் ரக்ஷண ஸங்கல்பமும்; ப்ரபந்நனிடத்தில் ப்ரஸாதமாவது சாஸ்த்ரார்த்தாநுஷ்டாநத்தாலே வரும் ப்ரீதியும் भरஸ்வீகாரமென்கிற அநுக்ரஹவிசேஷமும் அதன் பிறகு (பக்தி விசிஷ்ட ஸஹஜகாருண்யத்தால் ரக்ஷண ஸங்கல்பம் போல்) இந்த அநுக்ரஹவிசிஷ்ட காருண்யாதியால் ரக்ஷண ஸங்கல்பமும். இதையே நிக்ஷேபரக்ஷையில் भक्त्यापि हि भगवत्कृपैव उत्तम्भ्यते। सा चेत् अकिञ्चने प्रपन्ने, स्वयमेवोत्तम्भ्यते। अतो भक्तिसाध्यं तामीश्वरस्वभाव एव निर्वर्तयतीति अनुपायानां स एवोपाय: என்றருளினார் ஸஹஜகாருண்யத்கால் வரும் ரக்ஷண ஸங்கல்பத்திற்கு பக்திரூப உபயாபேக்ஷைக்குக் காரணமான கர்மபந்தம் ப்ரதிபந்தகமாயிருந்தது; பக்தி உத்தேஜகம் அகிஞ்சநனிடத்தில் அதற்கு ப்ரபத்தி மூலமான அநுக்ரஹமானது உத்தேஜகமாகிறது. இந்த உத்தேஜகபலத்தினால் கார்யஸித்தி. இப்படி பக்திஸ்த்தாநத்திலே பகவானுடைய அநுக்ரஹமிருப்பதால் ஈச்வரனை உபாயாந்தரஸ்தாநாபந்நனென்கிறது. இந்த அநுக்ரஹத்திற்குக் காரணமான ப்ரபத்தி உபாயோபாயமாகையால் பக்தி போல் साक्षादुपाय மாகாது; प्रपत्त्या उत्तम्भ्यते என்னாமல் स्वयमेवोत्तम्भ्यते என்றருளினாரே. ஈச்வரனே உபாயமென்று ப்ரபத்தியின் ஸ்வரூபமாயிருக்க அதற்கு விரோதமாக ஸாக்ஷாத் உபாயத்வம் அதற்கிசைவது அத்யந்தவிருத்தமாகும் இப்படி வைலக்ஷண்யமிருப்பதால் ப்ரபத்தி பக்திஸ்தாநாபந்நை யென்கிற வ்யவஹாரத்தை விட பகவான் பக்தி ஸ்த்தாநாபந்நனென்கிற வ்யவஹாரமே ஸமுசிதமாகும். சில ச்ராத்தத்திற்கு ப்ரதிநிதியாக தர்ப்பணத்தைப் போல் गुरूपायஸ்த்தானத்திலே இலகுவான உபாயத்தை அசக்தனுக்கு விதிப்பதுண்டு. அதுவும் காருண்ய மூலகந்தான். சக்தனிடம் गुरूपायத்தாற் போல் அசக்தனிடம் இலகுவினால் ப்ரீதியும் பலனும் ஸித்திக்கும். அது போலே ப்ரபத்தியிலுமாகில், भरन्यासம் ரக்ஷகத்வப்ரார்த்தனையென இவ்வளவே போதும், சரண சப்தம் உபாயபரமென்று வேறு பொருளைக் கூறுகிறதென்னல் வீணாகும். ஆகையால் ரக்ஷகத்வத்தைவிட விசேஷமான உபாயத்வம் கூறவேண்டும், நிரபேக்ஷ ரக்ஷகத்வமே அது என்னலாம் இக் களுர்ஸ்வாமியே சரமச்லோகாதிகாரத்தில் இதுவாவது, அதுவாவது காரணமென்றவிடத்தில் ஒவ்வொன்றும் இதரநிரபேக்ஷமென்று தெரிந்தேயிருப்பதால் ப்ரபத்திக்கும் பக்திக்கும் விகல்பமிருப்பதால் ப்ரபத்தி பக்திநிரபேக்ஷமாகத்தானிருக்குமென்றார். அப்படியானால் நிரபேக்ஷத்வம் ஸித்தமாகையால் ப்ரார்த்திப்பது வீணாகும். அதனால் சேதநனை ஈச்வரனிடம் गुरूपायத்திற்குள்ள (அசேதனத்திற்குள்ள) உபாயத்வம் வாராதாகையால் உபாயாந்தரத்தை

अभिमतफलத்துக்கு உபாயமாக विहितமான भरம் சுமக்கமாட்டாத अकिञ्चनன் गोप्तावாய் நிற்கிற அவனே, நீ எனக்கு उपायமாகவேணுமென்று उपायान्तरस्थान த்திலே निवेशिப்பிக்கையாவது—என் தலையில் उपायान्तरத்தைச் சுமத்தாதே அவற்றைச் சுமந்தால் மேல்வரும் अभिमतமெல்லாம் தருகை समर्थकारुणिकனை உனக்கே भरமாக ஏறிட்டுக்கொள்ளவேணுமென்கை. இவ் அம்சத்தை நிஷ்கர்ஷித்து निक्षेपத்தை अङ्गिயென்று சொல்லுகிறது. இது ஏ—

---

அபேக்ஷிக்காமையென்கிற அனுக்ரஹ கிலதற்கு முடிவு. அப்பலனுக்காக ப்ரபத்தி இப்படி ப்ரபத்திக்கு உபாயத்வத்தை விட்டு அவனிடமே இசைக.

भरन्यासबलादेव என்ற காரிகையில் அகிஞ்சநனுல் பரந்யாஸ மூலமாக ரக்ஷகன் உபாயாந்தர ஸ்த்தாநத்தில் நிறுத்தப்படுகிறனென்னப்பட்டது. 'तदेकोपायतायाच्ञा प्रपत्तिः शरणागतिः' என்று உபாயத்வ ப்ரார்த்தனையினுலே நிறுத்தப்படுகிறது தெரிகிறது—நிக்ருஷ்டனுயிருப்பவன் உத்க்ருஷ்டனை ஆஜ்ஞை செய்து நிறுத்தவாகாறு; அதை யறிவிக்க ப்ரார்த்தனையைச் சொல்வது தகும் ஆக ஈச்வரன் நிற்பது பரந்யாஸத்தினுலா ப்ரார்த்தனையினுலா வென்ன விவரிக்கிறுர் अभिमतफलेத்யாதியால். உபாய ஸ்த்தாநத்திலே நிறுத்துகையாவது உபாயத்வ ப்ரார்த்தனை தான். பக்தி நிஷ்டமான உபாயத்வம் ஈச்வரனுக்கு வாராதாகையாலே அது உபாய ஸ்த்தாநத்தில் நிற்க ப்ரார்த்தனை யென்னப்படுகிறது. அதன் விவரணம் என்தலையில் இத்யாதி. 'என்னுல் பக்திரூப உபாயம் அநுஷ்டிக்கப்படவேண்டுமென்கிற திருவுள்ளத்தை விட்டு' என்று சுமத்தாதே யென்ற வரைக்குப் பொருள். அதன் மேலம்சத்திற்கு तत्साध्यसर्वफलप्रदाने समर्थकारुणिक-त्वद्भरत्वेन स्वीकुरु என்று பொருளாம். फलप्रदानமென்கிற வ்யாபாரமானது பக்தியோகம் பண்ணுகிறவன்விஷயத்திலும் ஈச்வரभरமே யாகும். ஆகையால் ஈச்வர भरत्वप्रार्थनैக்கு அது விஷயமாகாது, समर्थकारुणिकனை என்ற விசேஷணத்திலே நோக்கு. உனக்கே யென்கிற ஏவகாரத்தினுல் गुरूपायம் விலக்கப்படுகிறது. ஆக என்னிடம் गुरूपायத்தை யபேக்ஷிக்காமல் मद्भक्तिसहकृतत्वत्कार्य-फलप्रदानं समर्थकारुणिकत्वदधीनं कुरु:फलप्रदाताவான நீ फलத்தை ஸஹகாரியான பக்திக்கு अधीनமாக்காமல் உன்னுடைய காருண்யாதீநமாக்கிக் கொள் என்று சொன்னதாகும். உபாயாந்தர ஸ்த்தாநத்தில் ஈச்வர நிவேசநமென்பதற்கு உபாயகார்யமான फलத்தை ஈச்வரனிடமுள்ள காருண்ய கார்யமாக்குகை பொருளாகும். இந்தக் காருண்யம் க்ருபாதிசயமென்றும் காருண்ய உல்லாஸமென்றும் அங்கங்கே வ்யவஹரிக்கப்படும். இந்த ப்ரார்த்தனையை भरஸ்வீகார ப்ரார்த்தனை யென்று प्रपद्ये என்ற பதவ்யாக்யானத்திலருளப்போகிறுர். இவ்வம்சத்தை= இப்படி சொன்ன உபாயத்வ ப்ரார்த்தநாம்சத்தை: நிஷ்கர்ஷித்து= விவேசநம் செய்து முடிவுடண்ணி, நிக்ஷேபத்தை அங்கியென்கிறது அதாவது—उपायत्वप्रार्थनामतिः என்கிற வாக்யத்தைப் பார்க்கும் போது ப்ரார்த்தனையே அங்கி யென்று தெரிகிறது. निक्षेपापरपर्यायो न्यासः पञ्चाङ्गसंयुतः

निर्भरत्वपर्यन्तम். இந் निष्कर्षத்தை நினைத்து साम्प्रतं त्वेष उपायार्थैकवाचकः என்கிறது.

---

இத்யாதி बहुவாக்யங்கள் நிக்ஷேபமே அங்கி என்கிறன. அதனால் भरस्वी காரமென்கிற உபாயத்வமானது நிக்ஷேப ஜந்யமென்று நிர்த்தாரணம் செய்ய வேண்டும். भरस्वीகார ப்ரார்த்தனை யென்பது அத்தோடு சேர்ந்தே யிருக்கு மாகையால் அதைச் சொன்னதாம். மேலும் உபாயத்வ ப்ரார்த்தனை யென் பதை भरस्वीகார ப்ரார்த்தனை யென்ற பொருளிலே முடிவு செய்தாலும் முதலில் அங்கீகரிக்கப்பட்ட அர்த்தம் நிரபேக்ஷ ரக்ஷகத்வ प्रार्थனை யென்பதே. அதில் गोप्तृत्ववरणம் சேர்ந்திருக்கிறது, ஆக உபாயத்வப்ரார்த்தநாபதமானது गोप्तृत्ववरணத்தைச் சொல்லிக்கொண்டு நிரபேக்ஷத்வ மென்கிற அம்சம் மூலமாக भरन्यासத்தைக் குறிக்கிறது. இப்படி நிக்ஷேபாம்சத்தை அங்கியாகக் கொண்டதால் முன்னே காரிகையில் உபாயாந்தர ஸ்தாந நிவேசத்தை भरन्यासबलादेव என்று भरந்யாஸ கார்யமாகச் சொன்னது.

'निक्षेपापरपर्यायो न्यासः இத்யாதிகளில் நிக்ஷேபபதத்தாலே ஸ்வரூப ஸமர்ப்பணத்தை மட்டுமிசைந்து उपायत्वप्रार्थना என்றதிலடங்கிய भरस्वी கார ப்ரார்த்தனையை யநுஷ்டித்து அதையும் அங்கி யென்னலாமே; பர ந்யாஸத்தை யிசையாமற் போனாலென்ன' என்பதற்கு உத்தரம் இது स्वनिर्भरत्वेति. இந்த நிக்ஷேபமானது आत्मात्मीयभरन्यासो हि आत्मनिक्षेप उच्यते இத்யாதி வசநபலத்தால் स्वरूप.भर फलங்களின் ஸமர்ப்பணரூபமாகையால் பரந்யா ஸத்தை அநுஷ்டித்தே யாகவேண்டும். இப்படி நிக்ஷேபம் இவனுக்கு நிர்பர த்வம் ஸித்திக்குமளவுக்கு பரந்யாஸமாகிறபடியால் பரஸ்வீகாரப்ரார்த்தனை யைச் சொன்னதும் வசநாந்தரங்களால் ஸித்தமான பர்ந்யாஸத்தைக் குறிப்பதற்காகவேயாகும். இப்படி நிஷ்கர்ஷம் பரிசிலனை செய்தால் கிடைக்கு மென்று நினைத்தே 'साम्प्रतं तु இதி வாக்யமென்கிறார். இந்நிஷ்கர்ஷத்தை நினை த்து இதி.இவ்வளவு நிஷ்கர்ஷம் தானே வருமென்று நினைத்து;உபாயத்வப்ரார் த்தனை யென்பது भरन्यासத்திற்குப் பதமிராமையால் भरந்யாஸம் கிடைப்பதற் காக வென்று நினைத்து தான் 'साम्प्रतं त्वेष उपायार्थैकवाचकः' என்றதென்றபடி. शरणசப்தத்திற்கு உபாயமென்கிற அர்தத்தை விட்டு ரக்ஷகனென்ற அர்த்தத் தைக் கொண்டால் भरन्यासமென்கிற அர்த்தம் சரணாகதி சப்தார்த்தமாகா தென்று அபிப்ராயம். இந்த பரந்யாஸத்திற்கு விசேஷணமாக அநுஷ்டாந காலத்தில் ப்ரார்த்தனை வேண்டுமா என்கிற விசாரத்தை மேலேயும்செய்வோம். ப்ரார்த்தநாவிசிஷ்ட பரந்யாஸமென்றாலும் ப்ரார்த்தநாம்சமும் பரந்யாஸா ம்சமும் தனித்தனி ஜ்ஞாநமாகையால் அநுஷ்டிக்கிற காலத்தில் விசேஷண விசேஷ்ய भावஸித்தி எங்ஙனே? ஆக விசிஷ்டம் அங்கி என்ன வொண்ணாது.

சிலர் பரந்யாஸத்தால் भरस्वीகாரஸித்தி, பரஸ்வீகாரமூலமாக ரக்ஷண ஸங்கல்பமென்பது எதற்காக? பக்தியினாலே ரக்ஷண ஸங்கல்பம் வருகிறது போல் ப்ரபத்தியினாலேயே ரக்ஷண ஸங்கல்பமென்னலாமே. ஆக பக்திதுல்ய மாக உபாயத்வம் ப்ரபத்திக்குமுண்டென்பர். கபோத சரணாகத்யாதி

களைப் போல ரக்ஷகத்வ ப்ரார்த்தனையைமட்டும் கொள்ளாமல் शरणசப்த த்தால் நிரபேக்ஷ ரக்ஷகத்வ ப்ரார்த்தனையைச் சொல்வதற்காகவே உபாயத்வ ரூப அர்த்தத்தை ஸ்வீகரித்த படியால், ஓர் உபாயத்தை விதித்து, 'அதை யநுஷ்டித்தால் ரக்ஷிக்கிறேன்' என்றருளிய ரக்ஷகனிடத்தில் விசேஷப்படி யாக அகிஞ்சநன், 'நீ விதித்த உபாயத்தை யென்னிடம் அபேக்ஷிக்காம லிரு' என்று ப்ரார்த்திக்க வேண்டுமென்றார். இத்தகைய ப்ரார்த்தனைக்குப் பலனாக, இனி உனக்குண்டான ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தியானது யதாவத் தாக முடிவில் நிற்குமானால் உன்னை அந்த உபாய விதியிலிருந்து விலக்கு கிறேன்' என்று ஈச்வர ஸங்கல்பமுண்டாவது ஸ்வரஸஸித்தம். அதை எதற் காக இல்லை யென்னவேண்டும். பக்தியோகத்திலும் अन्तिमप्रत्ययத்திற்குப் பிறகுச் செய்யும் ஸங்கல்பமே போதுமே; तद्धिगमाधिकरणத்தில் பக்த்யாரம்ப த்தில் புண்யபாபாச்லேஷ விநாச ஸங்கல்பத்தை சாஸ்த்ரார்த்தமாக எதற்கு அங்கீகரிக்கவேண்டும்? ப்ரேமாதிசயத்தாலே அவ்வாறு ஸங்கல்ப்பம் அவ னுக்குண்டாகுமென்னில்—இங்கும் அவ்வாறேயாகும்.

பரந்யாஸத்திற்குப் பின்னாலே வருகிற பரஸ்வீகாரத்தை பரந்யாஸ மென்கிற ஜ்ஞாநத்தில் விஷயமாக்க முடியுமோவென்று கேட்டு, ப்ரத்யக்ஷ த்திலே भाविपदार्थविषयकत्वமிராமற்போனாலும் भरन्यासम् मानसभावनारूपமாகை யாலே அதை விஷயமாக்கலாமென்றது ஸாராஸ்வாதிநீ. இதை யாக்ஷேபிப்பர்- நமது ஸித்தாந்தத்தில் மாநஸப்ரத்யக்ஷமில்லையே- பரந்யாஸம் ஸ்ம்ருதி ரூபமான ஜ்ஞாநமென்று रहस्यशिखामणिரஹஸ்யத்தில் அருளப்பட்டிருக் கிறதே. மாநஸभावनैயென்றதற்கு ஸ்ம்ருதியென்று தான் பொருளென் னில்—ஸ்ம்ருதியானது पूर्वानुभूतपदार्थविषयकமாகையாலே भरन्यासத்திற்குப் பின்னால் வரும் பரஸ்வீகாரத்தை முன்னான பரந்யாஸம் விஷயீகரிக்குமோ என்றவாறு. இதற்கு ஸமாதாநம்—ஸாரஸ்வாதிநியில் மாநஸ ப்ரத்யக்ஷ மென்று சொல்லவில்லை. भावनै स्मृतिதான். ஸ்ம்ருதியானது पूर्वानुभूतपदार्थ விஷயகந்தான். अनुभूतமாகாதது ஸ்மரிக்கமுடியாது. அதனால் அநுபவம் முன் னேயிருக்க வேண்டுமே தவிர விஷயமான அர்த்தம் முன்னேயிருக்க வேண்டு மென்பதில்லை. भविष्यद्विषयकமான பரோக்ஷமான शाब्द-आनुमान अनुभवத்தாலே வரும் ஸ்ம்ருதியானது भविष्यद्विषयकமே யாகலாமே என்றவாறு.

இப்படி இந்த வாக்யங்கள் உபாயத்வ ப்ரார்த்தனை யென்பதை अङ्गिकोटि யில் சேர்க்காமல் பரந்யாஸ மாத்ரம் अंगि யென்கிற அபிப்ராயத்தாலே வந்தவை. பரிகரவிபாகாதிகாரத்தின் முடிவில், 'உபாயத்வாத்யவஸாயம் இவ்விடத்திலே शाब्दமாய் ஸர்வாதிகாரி ஸாதாரணமான गोप्तृत्व வரணம் आर्थமாகக் கடவது' என்றருளியதால் गोप्तृत्वவரணத்தை விட்டு வேறாக ஒரு ப்ரார்த்தனை அநுஷ்டிக்கப்படுவதில்லை. உபாயத்வாத்யவஸாயமே அநு ஷ்டிக்கப்படுவது, அது ப்ரார்த்தனையன்று. உபாயத்வ ப்ரார்த்தனை யென்று ப்ரமாணவாக்யத்தில் சொன்னது பரந்யாஸத்தைக் குறிப்பதற்காக: வேறு

उपायप्रार्थनैயையும் निक्षेपத்தையும் ஓரிடத்திலே(?) பிரியச் சொல்லுமிடங்களில் उपायशब्दத்தில் இவ்விவக்ஷையைத் தவிருதல், भरसमर्पणादिகள் सुव्यक्तங்களாகைக்காகப் பிரியச்சொல்லுகிறதாதல், இங்கு ஸ்வரூபமும் भरமும் फलமும் समर्पणीयமாகையாலே अनेकांशविशिष्टமான ஸமர்ப்பணத்தில் अंशान्तरपरமாதல் ஆகக்கடவது. இவை மூன்று ப்ரகாரத்துக்கும் पुनरुक्तिदोषமில்லை.

---

ப்ரார்த்தனையை யநுஷ்டிப்பதற்காக வன்றென்றே இங்கு விவக்ஷிதம் இவ்வாறின்றி भरஸ்வீகார ப்ரார்த்தனையும் அநுஷ்டேயமாகக் கொண்டால் மேல்வாக்யமும் சேராது. மேல்வாக்யம் உபாயத்வப்ரார்த்தனையும் நிக்ஷேபமுமாக இரண்டு அநுஷ்டிக்கப்பட வேண்டுமென்பதை விலக்குகிறதே.

ப்ரமாணவாக்யங்களில் உபாயத்வ ப்ரார்த்தனையைச் சொல்வது பரந்யாஸத்தைக் குறிப்பதற்காகவே யானால், 'आत्मात्मीयं च यत्किञ्चित् दुर्भरं दुस्त्यजं मम । तत् सर्वं तव निन्यस्तं शुभयोः पादपद्मयोः । उपेयस्य तव प्राप्त्यै त्वामुपायतया वृणे ।', 'आत्मात्मीयभरं सर्वं निक्षिप्य श्रीपतेः पदे । उपायं वृणु लक्ष्मीशं तमुपेयं विचिन्तय' இத்யாதிகளில் பரந்யாஸத்தைச் சொல்லி உபாயத்வ ப்ரார்த்தனையையும் சொன்னது சேருமோ வென்ன' மூன்றுவிதமாக நிர்வஹிக்கிறார் उपायेति, 'ஓரிடத்திலே பிரியச்சொல்லுமிடங்களில் என்றுளது; ஓரிடத்திலே யென்பது வேண்டா; அல்லது அதை மேலே சேர்க்கலாம். ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு நிர்வாஹமாம். இவ்விவக்ஷையை = பரந்யாஸ வ்யஞ்ஜநார்த்தமாக உபாயாந்தரஸ்தாநாபத்திவிவக்ஷையை; தவிருதல் = விடுதல், ரக்ஷகத்வ प्रार्थनैயை மட்டும் கொள்ளுதல். இரண்டாவது நிர்வாஹம் भरेति. आत्मात्मीयभरं सर्वम् என்பதற்கு ஆத்மாத்மீயமாகிற ஸ்வரூபத்தை நிக்ஷேபம் செய்து என்று பத்திஸாதாரணமாகக் கொள்ளாமைக்காக भरஸமர்ப்பணம் ஸுவ்யக்தமாகைக்காக உபாய வரணத்தைச் சொன்னதென்றபடி. மூன்றாவது நிர்வாஹம் இங்கு இதி. உபாயவரண பதத்திலே भरஸமர்ப்பணமொன்றே விவக்ஷிதம். ஸ்வரூப फलஸமர்ப்பணங்கள் முன்வாக்யத்தில்விவக்ஷிதங்களென்றபடி. எந்த நிர்வாஹத்திலும் ஸமர்ப்பணமொன்றே விவக்ஷிதம்; ப்ரார்த்தனையில்லை अंगितावच्छेदकத்தையும் அங்கியையும் பிரித்துச் சொல்லிற்றென்னவில்லையே யென்பது கவனிக்கத்தக்கது. ப்ரார்த்தனையும் அநுஷ்டேயமானால் ப்ரார்த்தனையும் ஸமர்ப்பணமும் ஸமநியதமா (எப்போதும் சேர்ந்தே) யிருந்தாலும் ஒன்றாலே மற்றொன்று ஸித்திப்பதானாலும் இரண்டையும் அநுஷ்டிக்க வேண்டுமென்பதற்காக இரண்டையும் பிரியச் சொன்னதென்கிற ஸமாதாநமே ஸுகரமாகையால் இப் பிரயாசைக்கு ப்ரஸக்தியில்லை. புநருக்தி தோஷமில்லை யென்றதால் அவ்யக்தமாகச் சொன்னதை வ்யக்தமாக்க மீண்டும் சொல்வது दोषமாகாதென்றதாம். ஓரிடத்தில் ஸத்ய ஸங்கல்ப்பனென்று சொன்னதை அதே உபாஸனத்தில் 'सर्वस्य वशी सर्वस्येशानः' என்று விவரித்தது புநருக்தி யாகாதென்று ஸ்ரீபாஷ்யத்தில் நிர்ணயிக்கப்பட்டதே.

शरणं प्रपद्ये என்பதற்கு शरणமான = உபாயமான ப்ரபத்தி யென்ற பொருளா

இவ் **उपायत्वम्** **न्यासविद्यै**க்கு **विशेषित्त** **वेषाकारम्**. இதுக்கு **अपेक्षित**மாய்க் கொண்டு **ज्ञानशक्त्यादि**கள் வருகிறன. —o—o—

'**प्रपद्ये**' என்கிறவிடத்தில் **गतिवाचि**யான **धातु**, **गत्यर्थ**ங்கள் **बुद्ध्यर्थ**ங்களாகையாலே இங்கு **अपेक्षितबुद्धिविशेष**த்தைச் சொல்லுகிறது புத்தியாவது இவ்விடத்தில், '**रक्षिष्यतीति विश्वासः**' என்கிற **अध्यवसायम्**. அங்கங்களில் ஸாரமான விச்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு **परिकर**மான **साध्योपायम्** இங்கே தோற்றுகிறது. எங்ஙனேயென்னில்—இங்கு '**प्र**' என்கிற **उपसर्गम्** விச்வாஸத்தினுடைய **प्रकर्षरूप**மான மஹத்த்வத்தையைக் காட்டும். இவ் விச்வாஸ ப்ரகர்ஷம் **श्रीमच्छब्द**த்திலும் நாராயணசப்தத்திலுமுள்ள **पुरुषकार-संबन्ध-गुणादि**களை **अनुसंधित्त**

---

காதோவென்ன அருளுகிறார் இவ்விதி உபாயத்வம்–நிரபேக்ஷ ரக்ஷகத்வம். நிரபேக்ஷத்வம் அஸாதாரணமானதாலே இந்த அம்சம் **रूप**த்தில் கொள்ள வேண்டுமென்பதற்காக **शरण**சப்தத்தில்ரக்ஷகத்வமென்ற அர்த்தத்தைவிட்டது. ந்யாஸ வித்யைக்குள்ள உபாயத்வம் த்வயத்தில் **वक्तव्य**மன்றென்றபடி. இதே யறியவேண்டிய ஆகாரமானால் நாராயணசப்தத்திலே வாத்ஸல்ய–ஸ்வாமித்வாதிகளை விவக்ஷித்தது ஏன் என்ன அருளிச்செய்கிறார் இதுக்கு இதி. நாராயண சப்தத்தாலே வாத்ஸல்யாதிகளைக் காட்டி அவ்வம்சங்கள் நிறைந்தவனாகையால் நிரபேக்ஷரக்ஷகனென்றறிவித்ததென்றபடி.

**शरण**சப்தார்த்தம் சொல்லியாயிற்று; இதற்கு **प्रपद्ये** என்கிற க்ரியாபதத்தில் அந்வயம். அதற்கு அடைகிறேன் என்று பொருளானால் அடைதல் = ப்ராப்தி யென்றால் **शरणं** என்பது **विधेयविशेषण**மாகாது. ஆகையால் ஜ்ஞானமென்கிற பொருளைக் கூறி விச்வாஸம் என்கிற விசேஷத்தில் முடிக்கிறார் **प्रपद्ये** இத்யாதியால். **गत्यर्थ**ங்கள் **बुद्ध्यर्थ**ங்களாகையாலே = **गति** = அடைதல் என்ற பொருளைச் சொல்லும் சொற்களெல்லாம் புத்தியைச் சொல்லுமாகையாலே, **शरण** சப்தார்த்தமான நிரபேக்ஷரக்ஷகத்வம் விச்வாஸத்திலே விஷயம். ரக்ஷகத்வம் விச்வாஸவிஷயமென்பது **रक्षिष्यतीति विश्वासः** என்று தெரிந்ததே. அதில் விசேஷம் **शरण**சப்தத்திலிருந்து தெரிகிறது. விச்வாஸமே ப்ரார்த்தநைக்கும் பரந்யாஸத்திற்கும் காரணமாகையால் இது ஸாரமானது. அப்போது மற்ற அம்சங்களைச்சொல்லும் பதமில்லையேயென்ன, எல்லாமிங்கே கருதப்பெறுமென்கிறார் அங்கங்களில் இதி. விச்வாஸமே ஸாரமென்பதையும் அது மற்ற அங்கத்தையும் பரந்யாஸத்தையும் எப்படி குறிக்குமென்பதையும் விவரிக்கத் தொடங்குகிறார் எங்ஙனே இதி. சாஸ்த்ரார்த்தத்தில் பொதுவான விச்வாஸ மெங்குமேயுண்டு இங்குச் சொல்வது மஹாவிச்வாஸம்; அப்படி மஹத்துவத்தை விசேஷணமாக்கினதாலேயே இது ஸாரமென்று தெரிகிறது. அந்த விசேஷத்தை யறிவிக்க **प्र** என்கிற உபஸர்க்கமுமுளது. உபஸர்க்கம் மஹத்துவத்தைச் சொன்னாலும் அது ஸித்திக்கக் காரணமென்னவெனில்—அது **श्रीमन्नारायणपदार्थ** சோதநத்தில் ஸித்திக்குமென்று பரிகரவிபாகாதிகாரத்திலே வ்யக்தம். புருஷகாரவிசேஷம், நிருபாதிகஸ்வாமித்வரூப ஸம்பந்தவிசே

வாறே வரும். இத்தாலே தன் अपचारप्राचुर्यादिகளடியாக வரும் சங்கைகளெல்லாம் கழியும். இவ் विश्वासदार्ढ्यம் வேணுமென்னுமிடத்தை

'राक्षसानामविस्रम्भादाञ्जनेयस्य बन्धने । यथा विगलिता सद्यस्त्वमोघाऽप्यस्त्रबन्धना ॥

तथा पुंसामविस्रम्भात् प्रपत्तिः प्रच्युता भवेत् । तस्माद्विस्रम्भयुक्तानां मुक्तिं दास्यति साऽचिरात् ॥

என்று சொல்லிற்று. இவ் व्यवसायத்தினுடைய प्रभावம்

'व्यवसायात् ऋते ब्रह्म नाऽऽसादयति तत् परम्', 'निस्संशयेषु सर्वेषु नित्यं वसति वै हरिः ।

---

ஷம். வாத்ஸல்யாதி குணத்தில் விசேஷம்; ப்ரபத்திரூப வ்யாபார விசேஷம், ப்ரயோஜநவிசேஷமென்கிற பஞ்சகம் शङ्कापदार्थनिवर्तकமென்றதே. ஆறே = வகையில்;இது மூலமான மஹத்துவம் மோக்ஷார்த்த ப்ரபத்திக்கே யாம். மற்ற விடத்திலும் விச்வாஸ தார்ढ்யம் வேண்டுமானாலும் இவை காரணமல்ல. பொதுவாகவே விச்வாஸதார்ட்யம் வேண்டும்போது இங்கே அது அவச்யமென்பதில் ஸந்தேஹமேது? இதற்காக அருளுகிறார் இவ்விச்வாஸேதி. दार्ढ्यமாவது—அநுஷ்டானகாலம் முழுமையும் தொடர்ந்திருக்கை. மேலெடுக்கும் ஸநத்குமார ஸம்ஹிதையில் விச்வாஸமில்லையாகில் நடந்த ப்ரபத்தி நழுவுமென்றதால் தார்ட்யம் வேண்டுமென்று தெரிகிறது. இந்த்ரஜித்து ஆஞ்ஜநேயரை யடக்குவதற்குச் செய்த ப்ரஹ்மாஸ்த்ரக் கட்டானது யடக்கிப் பலனளிப்பதாயிருந்தும் அரக்கர்களிடமிருந்த அவிச்வாஸத்தாலே உடனே எவ்வாறு கழன்றுவிட்டதோ. அவ்வாறு ப்ரபந்நர்களுடைய அவிச்வாஸத்தால் ப்ரபத்தி நழுவும். ஆகத் திட விச்வாஸமுள்ளவர்களுக்கு अचिरात् கோரின காலத்திலே மோக்ஷத்தை யளிக்கும் அரக்கர்களுக்கு அவிச்வாஸமிருந்தாலும் இந்த்ரஜித்து விச்வாஸத்துடன்தானே கட்டினான்; ஏன் நழுவ வேண்டுமென்னில்—அவர்கள் அவநம்பிக்கையினால் சணற்கயிறு முதலானவற்றைக்கொண்டு கட்டினார்கள். இந்தரஜித்து அவர்களை விலக்கவில்லை, அதைப் பொறுக்காமல் அது தளர்ந்தது. அப்படியாகில் விசவாஸத்துடன் ப்ரபத்தியை யொருவன் செய்திருக்கப் பிறர் அதில் அவநம்பிக்கை கொண்டு அவனுக்கு வேறு உபாயம் செய்தால் இவன் செய்த ப்ரபத்தி நழுவுமே யென்னில், அவ்வாறில்லை பிறர் செய்யும் கட்டாலும் ஆஞ்நேயர் கட்டுப்படலாம். பிறர்செய்யும் உபாயம் மோக்ஷகாரணமென்பதற்கு ப்ரமாணமில்லை. பிறர் ப்ரபத்தி செய்யலாமே யென்னில், ப்ரபத்தியில் அவநம்பிக்கையுள்ளவர்கள் ப்ரபத்தியை யுபாயமாகச் செய்யாரென்க.

மோக்ஷார்த்தமான ப்ரபத்தியில் திடமானவிச்வாஸம் அவச்யமென்பதை யறிவிக்கும் பரமாணத்தைக் காட்டி அதனால் அது ஸாரமென்று தெரிவிக்கிறார் இவ் வ்யவஸாயேதி. வ்யவஸாயமாவது—அத்யவஸாயம்; விச்வாஸம். व्यवसायादिति பா.சாந்.334—47. व्यवसायात् ऋते—விச்வாஸமில்லையாகில் அப் பரப்ரஹ்மத்தை யடையான்; பா.சாந்.359,71 ஸம்சயமில்லாதவரிடமெல்லாம் எம்பெருமான் எப்போதும் வஸிக்கிறான். ஸம்சயமுள்ளவராய் தர்க்க

ससंशयान् हेतुबलान् नाध्यावसति माधवः ||' இத்யாதிகளிலும் ஸுப்ரஸித்தம். இம்மஹா விச்வாஸம் உண்டானால் பின்பு விமர்சகாலத்திலொருகாலும் ஸம்சயம்பிறவாது ஆகையால் பின்பு ஒரு காலும் இவ்விஷயத்தில் ஸம்சயம் பிறவாதபடியான प्रथमक्षणத்தில் மஹாவிச்வாஸம் ப்ரபத்திக்கு அங்கம்; இது मन्दமாயிருந்

---

தெலன் கொண்டவரிடம் திருமால் வனிப்பதில்லை. அப்படியாகில் மரணம் வரையிலான விச்வாஸம் அங்கமென்றால், ஸாங்கமான ப்ரபத்தி க்ஷணகால ஸாத்யமென்பதெப்படி யென்ன—அருளிச்செய்கிறார். இம் மிதி. புருஷகாரவிசேஷாதி பஞ்சகநிர்ணயம்மூலமாயேற்பட்ட விச்வாஸம் ப்ரபத்யநுஷ்டாநகாலத்திலுள்ளதுதான் அங்கமாகும். அந்த விச்வாஸமுள்ளவனுக்கு உத்தரகாலத்தில் ஸம்சயம்—அவிச்வாஸமில்லை. ஆக சங்காபஞ்சகநிவர்த்தகஜ்ஞாநத்தினாலாகை விச்வாஸமஹத்துவமென்றதாயிற்று. இந்த விச்வாஸம் பின்னை ஜ்ஞாநரூபமாகவோ ஸம்ஸ்காரரூபமாகவோ அநுவர்த்திக்காமலிராது; அதன் நிலை அவ்வாறானாலும் பின்னிருப்பதெல்லாம் அங்கமல்லவென்றபடி. ஒருவனுக்கு சங்காபஞ்சகமுமில்லை; அதற்கு நிவர்த்தகமான புருஷகாராதிகளிலுள்ள விசேஷங்களுக்கு ஜ்ஞாநமுமில்லை, சாஸ்த்ரார்த்த ஜ்ஞாநமும் அதில் விச்வாஸமும் பொதுவாகவிருந்து ப்ரபத்தி செய்துகொண்டான் உக்திநிஷ்டைக்கு ஸமுதாய ஜ்ஞானமே போதுமென்றதால் புருஷகாராதி விசேஷ விமர்சமிராமலுமிருக்கலாமே. பிறகும் தேஹாவஸாநம் வரையில் ஸம்சயமற்றேயிருந்தான். அவனுக்கு निस्संशयेषु இத்யாதிவசனத்தால் மோக்ஷமுண்டென்ன வேண்டும்; மஹாவிச்வாஸத்தை இவ்வாறு நிஷ்கர்ஷித்தால் அது அவனுக்கிராதே யென்ன இதை விவரிக்கப்பீடிகையிடுகிறார் ஆகையால் இதி. சங்காபஞ்சகம்வாராமைக்காக சங்காபஞ்சகநிவர்த்தகஜ்ஞாநத்தாலே மஹத்த்வம் ஸித்திக்குமென்றோம்; शंकापञ्चकनिवर्तकज्ञानजन्यत्वम் मात्र மென்பதில்லை. உத்தரகாலத்தில் சங்கைக்கிடமில்லாத விச்வாஸமுண்டாகில் அவனுக்கு மோக்ஷமுண்டு. பின்னால் புருஷகாராதிவிசேஷ ஜ்ஞானத்தால் மஹாவிச்வாஸம் பிறக்குமிடத்தில் स्वसजातीयस्वोत्तरकालिक विश्वासम् पुरुषकारादि-ज्ञानजन्यமாயிருப்பதே இதற்கும் மஹத்துவம். இதுபோல் मूढ விச்வாஸமாகிற இம் மந்த விச்வாஸமுள்ளவனுக்குப் பின்னும் சங்கை வாராதபடி கடாக்ஷிக்கிறான். இதுவும் சேஷபூரணமாம். ஆக உத்தரகாலத்தில் எதற்கு विश्वास-संस्कारनिवर्तकशङ्कारहितமான विश्वासமோ, அது महाविश्वासம். புருஷகாராதி அம்சங்கள் கீழே சொன்னது அவை பெரும்பாலுமிருக்குமென்றதாலே. கீழே நிர்யாணாதிகாராதிகளில் புத்தி दौर्बल्यादि வந்தவர்களுக்கு முன்பிருந்த விச்வாஸம் மந்தமாயிருக்குமென்றார் அங்கே மீண்டும் ப்ரபத்தி யநுஷ்டாநமுண்டென்னலாம்; இங்கே உத்தரகாலத்தில் ஸம்சயமில்லாதவனுடைய மந்த விச்வாஸத்தைச் சொல்லுகிறார் இது முன் வாக்யத்தினின்று தெரியும். அதனால் இங்கே இந்த மந்த விச்வாஸத்திற்கு புந: ப்ரபத்தி வேண்டியதில்லை. முன் அதிகாரத்தோடு ஸமாநார்த்தகமாக்குவதற்காக புந:ப்ரபத்தி

தாலும் விசேஷித்துக்கடாக்ஷிக்கத் தொடங்கின ஈச்வரன் சேஷபூரணம் பண்ணும்.

'मित्रभावेन संप्राप्तं न त्यजेयं कथंचन' என்று சரண்யன் அருளிச்செய்தானிறே. अज्ञवादिகளும் அகப்பட 'न जातु हीयते' என்றும்படியிறே இருப்பது. ஆகை யால் मन्दविश्वासமும் மஹாவிச்வாஸபர்யந்தமாம்.

---

பரமாகவே இதற்கும் வ்யாக்யாநம் செய்வோமென்னில்—வாக்ய நிர்வாஹம் கூடலாம். ஆனல் அவதாரிகையில் தெரிவித்த கேள்விக்கு உத்தரம் ஓரிடத்தில் சொல்லியாக வேண்டும். அதனுல் இதற்கு ஒரு பொருளை ஸாராஸ்வாதினியில் அருளினர். மந்தவிச்வாஸனுக்கும் பின்னுல் புருஷகாராதி ஜ்ஞான மூலமான மஹாவிச்வாஸமுமீச்வரன் அருள்வானென்ருர் ஸாராஸ்வாதினியில், அது இராமற் போனுலும் மஹாவிச்வாஸமிசையலாமென்றிப்போது விமர்சிப்பது. மோக்ஷார்த்தமல்லாத ப்ரபத்திகளிற் போல் மோக்ஷார்த்தப்ரபத்தியிலும் புருஷகாராதிஜ்ஞானமின்றியும் விச்வாஸ மஹத்துவம் இருக்கலாமே.

சேஷபூரணம் பண்ணுவானென்று எங்ஙனே நிச்சயிப்பதென்ன, இதை ஸ்த்தாபிக்கிருர் मित्रेति. அகப்பட=உள்பட; ஸம்ப்ரதாயத்தையும் ப்ரமாண மாக்குகிருர் अज्ञेति. விச்வாஸமே யிராமல் பாவநை பண்ணினவனையும் வெளி வ்யாபாரம் மட்டுமுள்ளவனையுங்கூடப் பின்பு உபாய நிஷ்டனுக்கிக் காக்கக் காத்திருக்கும் சரண்யன் மந்தமான விச்வாஸமுடையவனைக் கைவிடுகிருனென்ன வொண்ணுது. அவர்களைப் போலே இவனையும் பிறகு உபாயம் அநுஷ்டிப்பித்துக் காக்கிருனு, முன் செய்த உபாயத்தாலேயா என்றே விசாரிக்கவேண்டும். निस्संशयेषु இத்யாதி ப்ரமாணத்தால் ஸம்சயமில்லாதவனுக்கு முன் ப்ரபத்தியே போதுமாம்படி மஹாவிச்வாஸ பரிஷ்காரம் செய்வதே உசிதம். ப்ரபத்தி க்ஷணத்திலிருக்கும் விச்வாஸத்திலே शङ्कापञ्चक निवर्तकज्ञानजत्वम् महत्त्वம் வேண்டுமென்னுமல் उत्तरत्र சங்காப்ரஸக்தியில்லாமையே மஹத்துவமென்ருல் இது எல்லா விச்வாஸத்திற்குமாகும். பின்னுலும் புருஷகாராதி விசேஷ உபதேசமிராமற் போனுலும் ஸந்தேஹமே யிராம லிருப்பவனின் விச்வாஸத்திலுமுள்ளது. மந்தவிச்வாஸத்தோடு ஒருவன் ப்ரபத்தி செய்து பிறகுச் சிறிது ஸந்தேகமுடையனுய் ஆசார்யாதிகள் செய்யும் உபதேசத்தாலே பிறகு ஸம்சயமற்றே யிருந்தால் அங்கே புந: ப்ரபத்தி வேண்டாமா வென்னில்—வேண்டு மென்றே எல்லோரும் வரைவது அந்த மந்தாதிகாரியையும் இருவிதமாகப் பிரித்து 'எவனுக்குப் பின்னுலுண்டான ஸம்சயம் முன்பு பிறந்த விச்வாஸம்மூலமான दृढसंस्कारத்தை யழிக்காமல் சங்காபஞ்சகநிவர்த்தக ஜ்ஞாநவிஷயத்தில் தீவ்ரமான ப்ரயத்நத்திற்குக் காரணமாகி நிஸ்ஸம்சயனுக்குமோ, அவனுக்கு पुनः प्रपत्ति வேண்டா வென்னலாம். எவனுக்கு ஸம்சயத்தால் விச்வாஸஸம்ஸ்காரத்திற்கே ஹாநியோ, அவன் 'ससंशयान् हेतुबलान्' என்றபடி குதர்க்கத்தை बलமாகக் கொண்டு विपरीत कोटि उत्कटமாம்படி ஸம்சயமுடையனுவதால் पुनः प्रपत्ति வேண்டும், இவ் விருவித அதிகாரியையும் கருதி நிர்யாணுதிகார ஸ்ரீஸூக்தி பிறந்துள்ள

தென்றால் அங்கே முன் சொன்ன விஷயங்களோடொத்து बुद्धिदौर्बल्यத்திலும் இருவகை சொன்னதாகும். இதை ஸத்யோபாய சோதநாதிகாரத்தில் சிறிதறிவித்தோம். அவ்வதிகாரத்தில் சொன்னது புந:ப்ரபத்தி பண்ண வேண்டிடுமதிகாரி விஷயமானாலும் எல்லா ஸ்ரீஸூக்தியும் அப்படியே யாக வேண்டுமென்பதில்லை. ஆக சேஷபூரணம் பண்ணுமென்பதற்கு. உள்ள மந்தவிச்வாஸம் மஹாவிச்வாஸமே யென்று சொல்லுமளவுக்கு மேலே அவனுக்கு விசேஷ ஜ்ஞாநத்தையோ விபரீத ஸஹவாஸ பரிஹாரத்தையோ செய்யுமென்றும் பொருள். விச்வாஸ ஸம்ஸ்காரத்திற்கே அழிவு வருமாகில் மஹாவிச்வாஸமுண்டானபிறகு புந:ப்ரபத்தியையும் செய்விப்பானென்றும் பொருள். இப்படி பொருள் கொள்ளவேண்டுமென்றே இவ்வாறு வாக்ய ப்ரயோகம்; இல்லையேல் இது மந்தமாயிருந்தால் உபாய நிஷ்பத்தி யில்லை யென்றே யருளியிருக்கலாம். மஹாவிச்வாஸ பர்யந்தமாமென்றருளினரே யல்லது புந:ப்ரபத்திபர்யந்தமாமென்னவில்லையே. சில மந்தாதிகாரிகளைச் சேர்ப்பதற்காக दृढतरसंस्कारनिवर्तकशंकापञ्चकान्यतमप्रागभावविशिष्टविश्वासवत्त्वम्; वैशिष्ट्यमेककालावच्छिन्नैकात्मवृत्तित्वसंबन्धेन என் றுமுன்னோர்மொழிவது. மோக்ஷார்த்த விச்வாஸத்தில் शङ्कापञ्चकनिवर्तकप्रागமூலமான மஹத்த்வம் வேண்டியிருந்தாலும் வேறு பலத்திற்கான ப்ரபத்தியில் இந்த மஹத்துவம் சொல்லவாகாது. ப்ரபத்தி ஸாமாந்யத்திற்கு மஹாவிச்வாஸம் அங்கமென்று தெரிகிறது. ஸுக்ரீவனுக்கு சரணாகதிக்குப் பின்னே சங்கை யுண்டாக அதை சரண்யன் நிவ்ருத்தி செய்து அதை மஹாவிச்வாஸமாக்கினான். அங்கே மீண்டும் சரணாகதி செய்தானென்பதில்லை. அவனுக்குச் சிறிது ஸந்தேஹமிருப்பினும்அது தெளிவதற்கான ப்ரவ்ருத்திக்கே காரணமாயிற்று. ஆனால் ஸுக்ரீவன் முதலில் मित्रभावத்திலே யிருந்து ஸந்தேஹித்தான். ஸந்தேஹம் தீர்ந்த பிறகே சரணாகதி செய்தானென்றே ஸ்ரீமத்ராமாயண ஸ்வரஸார்த்தமென்னலாம். இது நிற்க; மோக்ஷார்த்த ப்ரபத்தியிலும் அபராத பரிஹாராதிகாரத்தில் 'प्रायश्चित्तिरियं साऽत्र यत् पुनश्शरणं व्रजेत् । उपायानां उपायत्वस्वीकारेऽप्येतदेव हि' என்று உதாஹரித்த வாக்யத்திற்கு கர்மயோக.ஜ்ஞாந யோக-பக்தியோகரூப மோக்ஷோபாயத்தில் ஒன்றை ப்ரபந்நனாயிருப்பவன் உபாயமாக அநுஷ்டித்தால் அப்போதும் அந்த தோஷ பரிஹாரத்திற்காக ப்ராயச்சித்த ப்ரபத்தி செய்துகொள்ளவேண்டுமென்றே யெல்லோரும் வ்யாக்யாநம் செய்வது. नरस्य बुद्धिदौर्बल्यादुपायान्तरमिष्यते என்றபடி புத்தி दौर्बल्यத்தால் தானே அவ்வாறு செய்கிறான். உபாயாந்தரம் அநுஷ்டிப்பவனுக்கே பூர்வப்ரபத்தி போதுமென்றால் ஸம்சயம்மட்டு முள்ளவனுக்கு ஏன் போதாது? बुद्धिदौर्बल्यமும் அதனால் உபாயாந்தரப்ரத்யாசையும் உள்ளபோதும் சிலருக்கு மீண்டும் ப்ரபத்தி யநுஷ்டிக்காமலே மோக்ஷஸித்தியென்று நிர்யாணாதிகார வாக்யத்திற்குத் தாத்பர்யம் சொல்லலாமே ஆக அதையும் இவ்வதிகார வாக்யத்தையும் பொதுவாகவே யோஜிக்கலாமென்கிறது.

சரமச்லோகாதிகாரத்தில் मोक्षयिष्यामि என்றவிடத்தில் अनेन प्रपत्ति உபாயாந்தரவ்யபேக்ஷையாமென்றதும் காண்க. ந்யாஸவிம்சதிக்குத் தாமே அருளிய வ்யாக்யானத்திலும் (12) 'तथा पुंसामविश्रम्भात् प्रपत्तिः प्रच्युता भवेत्' इत्येतदपि तात्कालिक विश्रम्भविषयाभिप्रायम् । उत्तरकाले......तद्विरहे प्रपत्तिप्रच्यवनायोगात् எனவருளினதால் பின்னே விச்வாஸம் விடுமிடத்திலும் முன் ப்ரபத்தியே போதுமென்பது ஸ்பஷ்டம்.

இதற்குத் தக்கபடி மஹாவிச்வாஸத்திலே மஹத்த்வத்தை நிர்வசநம் செய்ய வேண்டும் மந்தவிச்வாஸிகளில் எவருக்கு புந: ப்ரபத்தி, எவருக்கில்லையென்கையும் விவேசிக்கவேண்டும். புருஷகார விசேஷாதிஜ்ஞாந பூர்வகமாக விச்வாஸமுடையவனும் பிறகுக் குதர்க்க மூலமாக அதை யிழக்கலாம் ஆக ஸம்ஸ்காரத்தில் ஒருவித வாசியைக் கொண்டால் प्रपत्तिकार्यप्रतिबन्धकशङ्काविशेषप्रागभावविशिष्टान्य-स्वजातीय दृढतरसंस्कारकर विश्वासकत्वं விச்வாஸத்திற்கு மஹத்த்வம். மரணத்திற்கு முன்னே இவ்விச்வாஸம் பிறந்த பின்னே விபரீத சங்கை பிறவாமலிருந்தால் அவனுக்கு ப்ரபத்தி காலத்திலுள்ள மந்தவிச்வாஸமும் மஹாவிச்வாஸமாம். கலங்கிய முதலியை எம்பெருமானார் தெளிவித்த வரலாற்றையும் (निर्याणाधिकारे) நினைக்க. இங்கே, 'ஸம்சயம் பிறவாதபடியான' என்றது மஹாவிச்வாஸம் முதலிலேயே பிறந்தவிடத்தைப் பற்றவென்பது வாக்யத்திலேயே வ்யக்தம். இனி புத்திதௌர்பல்யமும் உபாயாந்தரப்ரத்யாசையுமிருந்தாலும் ஸம்சயமில்லை; ஆஸ்தையினால் அதிகத்தில் ப்ரவ்ருத்திமட்டு மென்னலாமெனில்—புந:ப்ரபத்தி சிலவிடத்தில் வேண்டாமென்பது ஸித்தம்; ஆக முன் சொன்னதை யிசையலாம்.

இதுவரையில் शरणं என்ற சொல், प्र என்ற உபஸர்க்கம், மேலே पद्लृधातु இம்மூன்றுக்கும் சேர்ந்து உபாயத்வ விஷயக மஹாவிச்வாஸம் பொருளென்றதாயிற்று. ஸம்ப்ரதாயத்தில் 'प्रपत्तिर्विश्वासः என்றதோடு நிற்காமல் विश्वासपूर्वकप्रार्थनमिति यावत्' என்று பூர்வர் உரைத்திருப்பதால் ப்ரார்த்தனையைக் கொள்ளவேண்டும். ப்ரார்த்தனை अप्रार्थितो न गोपायेत् என்ற गोप्तृत्व வரணமென்றே ஸ்வரஸமாகத் தோன்றும். 'आत्मनः नित्यकिङ्करतां प्रार्थये' என்கிற गद्य ஸூக்தியாலும் அதே தெரிகிறது. அப்படியிருந்தும் உபாயத்வ ப்ரார்த்தனையையே விவக்ஷிக்க வேண்டுமென்று ப்ரமாணோபந்யாஸ பூர்வகமாக அருளுகிறார் இப்படி இதி. சரணாகதி சப்தத்திற்கு உபாயத்வ ப்ரார்த்தனை அர்த்தமென்று ஸ்பஷ்டமாக வசனமிருப்பதால் शरणं प्रपद्ये என்பதற்கு இது பொருளாகத் தகும். அவ்வர்த்தத்தைக் கொள்ளாமல் गोप्तृत्व வரணத்தை மட்டும் இசைந்தால் பரந்யாஸமாகிற அங்கியானது பூர்வखण्डार्थமாகாமற்போம் உபாயத்வப்ரார்த்தனையென்று நிரபேக்ஷரக்ஷகத்வ ப்ரார்த்தனையாகையாலே ஈச்வரனுக்கு நிரபேக்ஷத்வம் பரந்யாஸத்தாலே ஸித்திப்பதால் அதனால் பரந்யாஸம் வ்யஞ்ஜிதமாகும், அப்படியானால் राघवं शरणं गतः என்றவிடத்திற் போல்

'अनन्यसाध्ये स्वाभीष्टे महाविश्वासपूर्वकम् । तदेकोपायतायाच्ञा प्रपत्तिः शरणागतिः ॥',
'त्वमेवोपायभूतो मे भवेति प्रार्थनामतिः । शरणागतिरित्युक्ता', 'भव शरणं' इत्यादिप्रमाणानुसारத்தாலே उपायप्रार्थनैயும் இங்கே சொல்லிற்றாயிற்று. இவ் उपायप्रार्थनैயிலே गोप्तृत्ववरणம் अन्तर्गतம், पृथग्भूतமன்று.

इष्टप्राप्ति—अनिष्टनिवृत्तिरूपமான फलத்தினுடைய प्रार्थनैயை उत्तरखण्डத்திலே பண்ணாநிற்க இங்குப்फलप्रार्थनैயைப் பண்ணினால் पुनरुक्तिயுண்டாம்; ப்ரபத்திக்கு फलமாக भक्तिरूपोपायத்தைப் प्रार्थिக்குமாப்போலே स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கு இங்கு साध्यமாய்ப் प्रार्थनीयமாயிருப்பதோர் உபாயமில்லை; ஆனபின்பு இங்குப் प्रार्थनै யைச் சொல்லுகிறபடி என்னென்னில்—फलप्रदानம் பண்ணுகிறவிடம் सवधि-

---

உபாயத்வப்ரார்த்தனையையே பொருளாகக் கொள்ளலாமே; மஹாவிச்வாஸ த்தை முதலர்த்தமாகச் சொன்னதென்னென்னில்—அங்கே ராமாயணத்தில் மஹாப்ராஜ்ஞ: என்று மஹாவிச்வாஸம் சொல்லப்பட்டிருப்பதால், உபாயத்வ ப்ரார்த்தனையை மட்டும் மொழிந்தார். ஸாரமான மஹாவிச்வாஸத்தை இங்குச் சொல்ல வேறு பதமிராமையால் प्रशब्दமுமிருப்பதால் அதையே பொருளாகச் சொன்னது அங்கமும் அங்கியுமாகாத உபாயத்வப்ரார்தனையைவிட மஹாவிச் வாஸம் முக்யமென்பதே பொருந்தும். பலனை அபேக்ஷிக்கிறவனுக்கு மஹா விச்வாஸமிருந்தால் ப்ரார்த்தநாதிகார்யம் தானே வருமாகையால் அதனின்று இதுவும் ஸித்தமென்ற படி. இப்போது गोप्तृत्ववरணமென்கிற அங்கம் விடப்படுகிறதே என்ன, விடவில்லை யென்கிறார் இவ்வுபாயேதி. गोप्तृत्व வரணமாவது ரக்ஷகத்வ ப்ரார்த்தனை; இது நிரபேக்ஷரக்ஷகத்வ ப்ரார்த்தனை யென்கிற உபாயத்வ ப்ரார்த்தனையில் அடங்கியுள்ளது. அதனால் அதுவும் पूर्वखण्डத்தில் சொன்னதாம். இந்த ச்ரீஸூக்திக்கு உபாயத்வ ப்ரார்த் தனை யநுஷ்டித்தால் போதும்; गोप्तृत्ववरணத்தைத் தனியாக அநுஷ்டிக்க வேண்டா என்று தாத்பர்யமென்றாலென்னெனில்—அதனாலென்? ஆனால் இது யாருக்கும் ஸம்மதமன்று. அதனால் கீழ்க்கூறியதே பொருள்.

இப்படி மஹாவிச்வாஸமும் பரந்யாஸமும் गोप्तृत्ववरணமும் மந்த்ரா ர்த்தமாக அறிவிக்கப்பெற்றன, உபாயத்வ ப்ரார்த்தனையில் பரந்யா ஸமும் கோப்த்ருத்வவரணமும் அடங்கியுள்ளதென்றால், அங்கு ப்ரார்த்திக்க ப்படும் அம்சமெது? பரந்யாஸம் ப்ரார்த்திக்கப்படுகிறதன்று: गोप्तृत्वம் ப்ரா ர்த்திக்கப்படலாமென்னில்—வேறிடங்களில்]அவ்வாறு கூறலாம். த்வயத்தில் உத்தரகண்டமிருப்பதால் அங்கே स्याम् என்று அத்யாஹரிப்பதால் இஷ்டப்ரா ப்தியை அங்குச் சொல்வதால் அதே போதுமென்கிற சங்கையையும், உத்தர கண்டத்தில்ஸித்திக்காத भरஸ்வீகார ப்ரார்த்தனையிலே உபாயத்வ ப்ரார்த்தனை முடியுமென்கிற ஸமாதாநத்தையும் கூறுகிறார் இஷ்டேதி. உபாயத்வாத்யவ ஸாயமென்று கீழ்க்கூறியதே போதுமே; அதன்மேலே சொன்ன உபாயத்வ ப்ரார்த்தனையால் என்ன ப்ரார்த்திக்கப்படுகிறது? फल ப்ரார்த்தனையா உபாய ப்ரார்த்தனையா? फल ப்ரார்த்தனை உத்தர खण्डத்தாலே கிடைக்கும், உபாயமே

पारिशिषयத்திலும் பொதுவாயிருக்க अकिञ्चनனாய் सर्वभरन्यासம் பண்ணுகிறவன் பக்கல் ப்ரபத்தி வேறோர் உபாயத்துக்கு அங்கமாக நில்லாதபடி शरण्यன் தான் उपायान्तरस्थानத்திலே நின்று [1]फलம் கொடுக்கிற அம்சம் ஏற்றமானபடியாலே அவ்வேற்றமான भरस्वीकारांशம் இங்குப் प्रार्थिக்கப்படுகிறது.

ஆனாலும் இப்படி उपायமாய் நிற்கவேணுமென்று அபேக்ஷிக்கவே अभि-मतफलविशेषத்தை उपायान्तरव्यवधानமறத் தரவேணுமென்று प्रार्थित्ததாகாதோ? ஆகையால் उत्तरखण्डத்தில் प्रार्थनै மிகுதியன்றோ என்னில்—उक्तप्रकारத்தாலே

---

செய்ய வாகாதவனுக்கு உபாய ப்ரார்த்தனை ஏது என்று கேள்வி. பக்தனுக்கு அவன் செய்யும் பக்தி போல் ப்ரபந்நனுக்கு ईश्वरसाध्यமான भरஸ்வீகாரம் ப்ர பத்திफलமும் मोक्षरूपफलोपायமுமாகிறது ப்ரார்த்திக்கப்படுமென்றுஸமாதானம்.

இப்படி ஸ்பஷ்டமாகப்பிரித்திருக்கும் भरस्वीकारத்தைப் பிரித்துச்சொல்ல வாகாதென்கை தகாது. ப்ரபத்தியினால் भरस्वीकारविशिष्ट ரக்ஷணஸங்கல்பம் ஒன்றே விசிஷ்டமாக உண்டாகலாமே;எதற்குப் பிரிக்க வேண்டுமென்னில்— பக்தியோக ஸ்தலத்திற் போலே இங்கும் ரக்ஷணஸங்கல்பம் ஒரேவிதமாய் ப்ரபத்திகார்யமான அதிகபட்டியான भरस्वीकार ஸங்கல்பம்தனியே சொல்லக் கூடியதாயிருக்கச் சேர்ப்பதெதற்காக? ஈச்வரன் பரத்தை ஸ்வீகரிப்பது पूर्व-खण्डविषयம், ரக்ஷிப்பது उत्तरखण्डविषयமென்று பிரித்ததற்கிணங்க அவ்வாறே கொள்ளலாமே. அதனால் भरस्वीकारம் உபாயமாய் ப்ரபத்தி அதற்கு உபாய மென்னதாகுமே யென்னில்—ஆனாலென்ன? அனுகூலமே; இதை நினைந்தால் 'इयं केवल लक्ष्मीशोपायत्वप्रार्थनात्मिका। स्वहेतुत्वधियं रुन्धे, परिविहितस्वोपायभावात्मिका இத்யாதியால் ப்ரபத்தி நேருபாயமன்றென்றருளியது ஸமஞ்ஜஸமாகும். இதை நிர்வஹிக்கத் தடுமாறும் பிரயாசை எதற்கு? भक्त्या परमया वापि प्रपत्त्या वा என்று பக்திதுல்யமாகச்சொல்லிற்றேயென்னில். य इष्ट्या पशुना सोमेन वा यजेत என்றவிடத்தில் த்ருதீயாவிபக்திக்கெல்லாம் ஒரேவிதமான உபாயத்வம் பொருளன்றே, அதுதன் अर्थस्वभावத்திற்கிணங்க தானே அதைக் கொள்ளவேண்டும். பக்தியைப் போல் ப்ரபத்தியை யனுஷ்டிப்பதே போதும், இவன் செய்வது வேறில்லை யென்பதே அதனால் ஸித்திக்கும். அதன்மேல் ஈச்வரகார்யத்தில் ஒன்றைவிட மற்றொன்றில் வாசி யிருக்கலாம். வாசி கூடாதாகில் भरस्वीकार विशिष्टरक्षणसंकल्पமென்றுமே வெறும் ரக்ஷணஸங்கல்பமே இங்குமென்ன வேண்டியதாகும். அதை யிசைந்த பிறகு, ஸ்வீகாரம் பண்ணி[1] ரக்ஷிக்கிறானென்ற ப்ரயோகத்திற்கிணங்க ஸ்வீகாரம் முன்னே, ரக்ஷண ஸங்கல்பம் பின்னே. அதனால் கார்யகாரண भावமுமுண்டு. பக்தி கார்யகரத்வமீச்வர ஸ்வபாவத்திற்கே யென்க. உலகில் எந்த भरन्यासத்திலும் இந்த ரீதியே;ப்ரபத்தி நேராக வுபாயமன்றென்பதே ப்ரஸித்தம். அதை மறுப்பது அவச்யமன்று.

மீண்டும் கேள்வி ஆனாலுமிதி. भरஸ்வீகார ப்ரார்த்தனை யென்றால் ரக்ஷகனான நீ அளிக்கும் பலத்திற்கு உபாயமான भरத்தை ஸ்வீகரிக்கவேண்டுமென்றது தானே. இதிலேயே ரக்ஷண ப்ரார்த்தனையும் வ்யங்க்யமாகிறதே

प्रार्थनाविषयத்தில் संशयம் தோற்றுகைக்காகப் பிரிய அபேக்ஷிக்கிறதாகை யாலே மிகுதியில்லை. उत्तरखण्डத்தில் अपेक्षणीय-फलविशेषव्यञ्जकமான வாக்யத் தினுடைய अर्थपातத்துக்காகப் प्रार्थनापदம் अध्याहरित्तாலும் फलसमर्पणத் திலே தாத்பர்யமென்று பரிஹாரமாகவுமாம். पूर्वोत्तरखण्डங்கள் இரண்டுக்கும் திரண்ட பொருள் நிஷ்கர்ஷிக்குமிடத்தில் अकिञ्चनனான எனக்கு நீ उपायान्त-रस्थानத்திலே நின்று फलविशेषத்தைத் தருகைக்காக यथोक्तமான आत्मरक्षा-भरनिक्षेपம் பண்ணுகிறேனென்று ஒரு विशिष्टप्रार्थनान्वितभरसमर्पणமாம்.

---

உத்தர खण्डத்தில் फल ப்ரார்த்தனை யெதற்காக என்றவாறு. उक्तयाதி யால் முதல் உத்தரம், பூர்வகண்டத்திலே எல்லாம் கிடைக்குமாறாலும் அதில் ப்ரபந்நனுக்கு அஸாதாரண அம்சமும் பக்த ப்ரபந்நர் ளுக்குஸாதா ரணமான அம்சமும் அடைவே பிரித்துச் சொல்லப்படும். வேறு ஸமாதாந மும் கூறுகிறார் உத்தரேதி. பூர்வகண்டத்தில் फलத்திற்கான भरமென்றாலும் எப்பலத்திற்காக என்று தெரியவில்லை கைங்கர்யாதி ரூபமான பலமென்றறி வது உத்தரகண்டத்தாலேயாம். अध्याहरित्तாலும் இதி स्याम् என்று அத்யா ஹரிக்காமற்போனால் ஸாத்யமென்று தெரியாது எல்லா ப்ரார்த்தனையையும் ஒன்றாகச் சேர்த்துச் சொல்லவாகாதோ என்ன அருளுகிறார் पूर्वो इति யாக ஹோமாதி விதி ஸ்தலத்திலே அந்தந்த அங்கங்களையும் அங்கியையும் தனித் தனியே பல வாக்யங்களால் விதித்தாலும் இவ்வளவு அங்கங்களோடு கூடிய இவ்வங்கியை இவ்வதிகாரி இன்ன காலத்திலே இன்ன தேசத்திலே செய்ய வேண்டுமென்று ஒரு ப்ரயோகவிதி கல்ப்பிக்கிறாப் போலே, இங்கும் மந்த்ர ப்ரயோகம் செய்தவுடன் அங்காங்கி அநுஷ்டாநம் செய்வதற்கு முன்னே 'ச்ரீமந்நாராயணன் இஷ்ட ப்ராப்தி அநிஷ்ட நிவ்ருத்தி ரூபமான மோக்ஷ பலம் தருவதற்காக உபாயாந்தர ஸ்தாநத்திலே அவன் நிற்பதற்காக அதாவது—भरஸ்வீகாரத்திற்காக ஸாங்க பரந்யாஸம் செய்கிறேன்' என்று எல்லாம் சேர்த்து ஒரு மஹாவாக்யார்த்த அநுஸந்தாநம் பண்ணுவதாம். எல்லாப்ரார்த்தனையையும்ஒன்றாக்கி प्रार्थनान्वितभरन्यासமென்றாலும்மோக்ஷफलம் பின்னே, அதற்கான भरஸ்வீகார रूपம் முன்னேயாகும். இங்கே திரண்ட பொருள் நிஷ்கர்ஷிக்குமிடத்தில் என்றதால் வாக்யார்த்தாநுஸந்தாந தசை யில் எல்லாம் ஒரு வாக்யத்திலே சேர்ந்தாலும் அநுஷ்டாநகாலத்தில் அங்கம் வேறாக அங்கி வேறாகவே அநுஷ்டிக்கப்படும். भरஸ்வீகார ப்ரார்த்தனையை அநு ஸந்திப்பது भरन्यासத்தைக் குறிப்பதற்காகையால் குறித்த भरन्यासமே அநு ஷ்டிக்கப்படும்; ப்ரார்த்தனை गोप्तृत्ववरणத்திற்காகவே முக்யமாக வந்ததெ ன்றறிவித்ததாம். அதனாலேயே கீழதிகாரங்களிலே ப்ரயோகம் சொல்லு மிடமெங்கும் भरஸ்வீகார ப்ரார்த்தனையை விட்டது

இவ்வளவால் விச்வாஸம் முதலர்த்தம்; அதனின்று ப்ரார்த்தனையும் அது மூலமான भरन्यासமும் ஸூசிதமாகுமென்றார். பரிகரவிபாகாதிகாரத் திலும் உபாயத்வாத்யவஸாயமும் ப்ரார்த்தனையும் ஓரே ஜ்ஞாநமாக்கமுடி

யாதாகையால் மஹாவிச்வாஸம்மட்டுமே அத்யவஸாயமென்றார். இப்போது ப்ரார்த்தனையைப் பிரிக்க வேண்டியிருந்தாலும் भरन्यासமென்பது अध्यवसाय மாகுமாகையால் प्रपद्ये என்பதற்கு அதையும் முக்யார்த்தமாகக் கொள்ளலாமே; அப்போது प्रधानமான உபாயம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டதாகுமே யென்ற கேள்வியில், அதை யிசைந்தருளுகிறார் இஸ் இடு. இங்கே இஸ் ஸமர்ப்பணம் அத்யவஸாய சப்தார்த்தமுமாம் என்று பாடாந்தரம். அப்போது இமே மஹாவிச்வாஸபூர்வக உபாயத்வ ப்ரார்த்தனையைச் சொன்னாலே ஸமர்ப்பணமானது வ்யஞ்ஜிதமாகிற தென்றது மட்டு மன்றி சப்தத்திற்கே அர்த்தமுமாகிற தென்றதாம். ஒரு சப்தம் இரண்டர்த்தம் சொல்லுமோ வென்னில்—प्रपद्ये என்பதற்கு रूढ्यर्थं भरन्यासम्. அவயவார்த்தமான ப்ரக்ருஷ்டவிச்வாஸத்தை அர்த்தமாகக் கொண்டபோது விச்வாஸ பூர்வக ப்ரார்த்தநமென்ற வரையில் பொருளை ப்ரமாணாநுஸாரத்தாலே கொண்டதால் சிற்சில விடங்களில் योगरूढ्यर्थங்களைச் சேர்ப்புமுண்டாகையாலே. மந்த்ரத்தாலே அநுஷ்டாநத்திற்காக அங்காங்கிகளை ஸ்மரிக்கவேண்டியிருப்பதால் இந்த இரண்டர்த்தங்களையும் சேர்க்கலாம். வ்யஞ்ஜிதமாய் ஸ்மரிக்கப்படுவதே போதுமென்னில்—रूढ्यर्थத்தை விடுகையென்றதாம. வேறு பாடத்தில் இஸ்ஸமர்ப்பணமும் என்று भरஸமர்ப்பணத்தையும் சப்தார்த்தமாகக் கூட்டுவதால் முன் சொன்ன அர்த்தம் விடப்படுவதில்லை யென்பது ஸ்பஷ்டமாகிறது பரிகரவிபாகாதிகாரத்தில் ப்ரார்த்தனையும் அத்யவஸாயமுமாக இரண்டர்த்தம் ஒன்றுக்குச் சொல்லவாகாதென்றதால் अवश्यம் சொல்வது ஆசார்ய ஸம்மதமாகாதே யென்னில்—அங்கே உபாயத்வாத்யவஸாயத்தை மட்டும் பொருளாக்கி ப்ரார்த்தனையை அர்த்தமாக்காதபடியால் இங்கும் உபாயத்வாத்யவஸாயமே பொருளாகுக. ப்ரபத்திசப்தார்த்தமென்னுமல் அத்யவஸாய சப்தார்த்தமென்றதால் உபாயத்வாத்யவஸாயமென்று முன் சொன்ன அர்த்தத்தில் अध्यवसायस्वरूपेण भरसमर्पणத்தை அடக்குவதாகத் தெரிகிறது. ப்ரபத்தி சப்தத்திற்கு ப்ரார்த்தநாந்வித भरन्यासம் रूढ्यर्थமென்பது शिष्टஸம்மதம். அதை யிங்குச் சொல்லாமைக்குக் காரணமென்னவெனில்—शरणசப்தமிராத போது அவ்வர்த்தம் கொள்வதானாலும் இங்கு शरणசப்தமிருப்பதால் அது உபாயார்த்தமாகையால் அது அந்வயிக்கும்படி அத்யவஸாயம் மட்டும் धातुவின் அர்த்தமாய் அதிலே प्रधानार्थமான भरத்தைச் சேர்த்து महत्तान நிரபேக்ஷ ரக்ஷகத்வாத்யவஸாயமென்றே பொருள் கொள்ளவேண்டும். இதனின்று வரும் ப்ரார்த்தநா மூலமான भरन्यासமும் அத்யவஸாய விசேஷமாகையாலே ப்ரார்த்தநா மூலமாக வ்யஞ்ஜிப்பதை விட்டு அங்கியும் மந்த்ரத்தாலே ஸ்மரிக்கப்படுவதற்காக மஹாவிச்வாஸத்தின் ஆகாரத்தையும் भरन्यासத்தின் ஆகாரத்தையும் அத்யவஸாயம் என்கிற ஒரே ஜ்ஞாநத்தில் விஷயமாக்கி மந்த்ரார்த்தமாக நினைக்கலாமென்கிறதாம். ஆக ச்ரீமந்நாராயணன் நிரபேக்ஷ

இப்படி सपरिकरமான भरसमर्पणமே प्रपत्तिशास्त्रार्थமென்னுமிடம் प्रमाण-संप्रदायங்களாலே பலவிடத்திலும் समर्थித்தோம்.

'अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत् । मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति ॥'
என்று प्रपत्तिमन्त्रान्तरத்திற் சொன்ன कर्तव्यनिक्षेपप्राधान्यம் இங்கும் तुल्यம்.

मोक्षप्रदமான सिद्धोपायத்துக்கு मुमुक्षுவின் பக்கலிலே யுள்ளதொரு शास्त्रीयமான साध्यव्याजம் वशीकरणமென்னுமிடம் தன்னைக் कर्ताவாகக் காட்டுகிற उत्तमனாலே सिद्धம். இதில் औचित्यத்தாலே 'புகலொன்றில்லாவடியேன்',

---

ரக்ஷகன் என்றத்யவஸிக்கிறேனென்று மட்டும் உரைக்காமல், 'ச்ரீமந் நாராயணன் நிரபேக்ஷ ரக்ஷகன்; இந்த भरம் அவன்பொருட்டே, எனக்கன்று' என்று அத்யவஸிக்கிறேன் என்று பூர்வவாக்யத்தை உரைக்கலாமென்ற தாயிற்று. மந்த்ரார்த்தஸ்மரணஸௌகர்யத்திற்காக இப்படிச் சேர்த்தாலும் மஹாவிச்வாஸமும் பரந்யாஸமும் தனித்தனியே யனுஷ்டிப்பதாம், இப்போது உபாயத்வ ப்ரார்த்தனையை ஆக்ஷேபிக்க வேண்டியதில்லை, गोप्तृत्व வரணத்திற்கு ஆக்ஷேபகதை அங்கேயே யருளியிருக்கிறார். இதைக் கொண்டு தான் மேலே, விச்வாஸம், गोप्तृत्व வரணம், நிக்ஷேபம், கார்ப்பண்யம் என்ற நான்கும் शरणं प्रपद्ये என்கிறவிடத்தில் ஸித்தமென்று நிகமிக்கப்போகிறார்.

शरणசப்தத்தோடு சேர்ந்த धातுவிற்கிணங்க ப்ரமாண ஸித்தமான உபாயத்வ ப்ரார்த்தனையையோ மஹாவிச்வாஸரூப வாச்யார்த்தத்தையோ அங்கியாகக் கொள்ளாமல் ஸமர்ப்பணத்தையே அங்கியாகக் கொண்டு அதை ஸ்மரிப்பதற்கு இவ்வளவு ப்ரயாஸை ஏன் என்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. நிக்ஷேபம் மந்த்ரத்திற்கர்த்தமென்பது வேறு மந்த்ரத்தில் ப்ரமாண ஸித்தமாகையால் அதே ந்யாயம் இந்த द्वयத்திற்குமாமென்கிறார் अनेनेति. ஸாத்யகிதந்த்ரம்; கீழே உரைக்கப்பட்டது. कर्तव्यनिक्षेप என்பதற்கு நாம் செய்ய வேண்டிய गुरूपायத்தினுடைய ந்யாஸமென்று பொருள். ஆத்ம நிக்ஷேபமென்றால் ஸ்வரூபந்யாஸம் மட்டுமன்று, பரந்யாஸமுமென்று निक्षिप्तकर्तव्यः என்ற பதத்திலேற்பட்டது. அல்லது कर्तव्यनिक्षेप என்பதற்கு கர்த்தவ்யமான நிக்ஷேபமென்று பொருளாய், உபாயத்வ ப்ரார்த்தனை கர்த்தவ்யமன்றாகை யாலே அதற்கு ப்ராதான்யம் சங்கிக்க வாகாதென்று குறித்த படி.

இப்படி धातुமூலமாக பரந்யாஸமென்கிற அங்கி யறிவிக்கப்பட்டது. கார்ப்பண்யமென்கிற அங்கத்தைத் தெரிவிக்க வ்யாக்யாநம்செய்கிறார் मोक्षेति धातुவின்மேலிருக்கிற ப்ரத்யயம் आयघातம். அது प्रपद्यते என்று ப்ரதம புருஷனாயிருந்தால் மந்த்ரத்தைச் சொல்லுகிறவன் ப்ரபத்தியநுஷ்டிப்பது தெரியாது. உத்தம புருஷனாயிருப்பதால் தான ப்ரபத்தி செய்கின்றேனென்ற தாம். இதனால் फलத்தில் அபேக்ஷையுள்ளவன் இதைச் செய்யவேண்டுமென்று தெரிகிறது. இதனால் ஸித்தோபாயமே ப்ரபத்தி என்பதும் தகாதெனத் தேறுமென்று இவ்வாக்யததுக்குப் பொருள். अस्मद्युत्तमः என்ற ஸூத்ரத்தால் உத்தம புருஷனுக்கு நானென்ற பொருளானாலும் அகிஞ்சநனென்ற

'अहमस्यपराधानामालयोऽकिञ्चनोऽगतिः', 'न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी'

इत्यादिகளிற்படியே அதிகாரிவிशेषமும் कार्पण्यமாகிற परिकरமும் सूचितम். இது गद्यத்தில் 'अनन्यशरणः' என்கிற पदத்திலும், சிறுगद्यத்தில் 'स्वात्मनित्यनियाम्य' என்கிற चूर्णिकैயிலும், श्रीवैकुण्ठगद्यத்தில்

'तत्प्राप्तये च तत्पादाम्बुजद्वयप्रपत्तेरन्यन्न मे कल्पकोटिसहस्रेणापि साधनमस्तीति मन्वानः'

என்கிற चूर्णिकैயிலும் प्रपञ्चितமாயிற்று. அருளாளப்பெருமாளெம்பெருமானாரும்

'स्वाभीष्टे परसंबन्धे स्वाशक्त्या हीनसाधनः। तत्प्राप्त्युपायं तत्पादौ कृत्वा विश्वासपूर्वकम् ॥'

என்று அருளிச்செய்தார் இப்படி अकिञ्चनाधिकारமாய் भरसमर्पणरूपமான உபாயத்தைச் சொல்லுகையாலே दुष्करकर्मान्तरनैरपेक्ष्यம் अर्थसिद्धम். இப்படி शरण-

---

பொருள் தெரியவில்லையே யென்ன விவரிக்கிறார் இதில் இதி. புகலித்யாதி வாக்யங்களில் ஆகிஞ்சந்யம் சொல்லப்பட்டிருக்கிறது; द्वयத்தில் व्याख्यातத்தில் அது கருதப்பெறு மென்பதை யறிவிப்பதற்காக இவ் வாக்யங்களுக்கு விவரணமாகும் गद्यश्रीसूक्तिகளென்கிறார். गद्यத்திலென்பதற்கு பெரிய गद्य மென்கிற शरणागतिगद्यத்திலென்று பொருள். சிறுगद्यம் மிதागद्यமென்கிற ச்ரீரங்க गद्यம். அதில் स्वात्मनित्यनियाम्य என்கிற இரண்டாவது வாக்யத்தில் अनागत-अनन्तकालसमीक्षयाऽपि अदृष्टसन्तारोपायः என்ற வளவால் ஆகிஞ்சந்யம் விவரிக்கப்பட்டது. दयापालमुनिவாக்யத்தையும் உதாஹரிக்கிறார் அருளாளே தி. स्वेति. தனக்கிஷ்டமான பரமாத்மப்ராப்தியாகிற மோக்ஷவிஷயத்தில் தன் அசக்தியினாலே ஓர் உபாய ஹீநனாய் அதற்கு உபாயமாக அவன்திருவடிகளைக் கருதி மஹாவிச்வாஸபூர்வகமாக என்று அதன்பொருள். இதற்கு—பரந்யாஸம் செய்கிறேன் இத்யாதி விஷயமாகவுள்ள மேல்ச்லோகத்தில் அந்வயம். இங்கும் पूर्वार्धத்திலே—கார்பண்யம் கூறப்படும். கார்ப்பண்யஸ்த்தாபநத்திற்காக ப்ரமாணஸம்ப்ரதாயங்களைக் கொண்டு இவ்வளவு விரிவெதற்கென்னில்—த்வயத்தில் கார்ப்பண்யத்திற்கான சொல் இராமையாலே ப்ரபத்திக்கு எல்லோரும் அதிகாரிகள்; கர்மயோகாதிகள் அஹங்கார கார்யமாகையாலே ஸ்வரூபவிருத்தம்; உபாயமேயல்ல. ஆதலால் அவற்றிற்கு அதிகாரிகளும் இதைச் செய்யலாமாகையாலே ஆகிஞ்சன்யம் வேண்டா என்பர். அது விருத்தமென்பதற்காக இவ்விரிவு. இப்படி ப்ரபத்திக்குஅங்கபஞ்சகஸாபேக்ஷத்வம்போல்இதரகர்மநிரபேக்ஷத்வமும்முக்கியமாகையால்அதற்குப் பதமில்லையேயென்ன, அதுவும் ஸித்தமென்கிறார் இப்படி இதி. भरन्यासத்தில் அங்கங்களோடுசேர்ந்தஅங்கியே भरமாகும். ஆகையால் கர்மயோகஜ்ஞாநயோகங்கள் நித்யநைமித்திகதர்மங்களான ஸஹகாரிகளென்ற ஸர்வவிசிஷ்டபகத்தியாகிற भरஸ்த்தானத்திலே ஈச்வரன் நிற்கிறுகையாலே नैरपेक्ष्यம் ஸித்தம். அகிஞ்சனன் என்பதில் किञ्चनபதமிருப்பதால் மோக்ஷத்திற்காகச் செய்யவேண்டிய ரீதியில் அவற்றில் ஒன்றுமே செய்யவியலாதென்றதாலுமிது தேறுமென்றபடி. க்ரியாபதவ்யாக்யாநததை நிகமிக்கிறார் இப்படி இதி. रक्षिष्यतीति அஹிர்

शब्दान्वितமான 'प्रपद्ये' என்கிற பதத்திலே 'रक्षिष्यतीति विश्वासो गोप्तृत्ववरणं तथा। आत्मनिक्षेपकार्पण्ये' என்று निर्दिष्टமான நாலும் சொல்லிற்றாயிற்று.

'चराचराणि भूतानि सर्वाणि भगवद्वपुः। अतस्तदानुकूल्यं मे कार्यमित्येव निश्चयः॥',
'स्वस्य स्वामिनि वृत्तिर्या प्रातिकूल्यस्य वर्जनम्'

इत्यादिप्रमाणங்களின்படியே स्वामित्वादिनिबन्धनங்களைச் சொல்லுகிற ஸவிசேஷணமான नारायणशब्दத்திலே आनुकूल्यसङ्कल्पமும் प्रातिकूल्यवर्जनமும் सूचितமென்றுமிடம் முன்பே சொன்னோம். இப் பரிகரங்களும் उपायार्थமாக कर्तव्यங்களென்றுமிடம் अधिकारान्तरத்திலே சொன்னோம்.

இக் क्रियापदத்தில் वर्तमानव्यपदेशம் बर्हिर्लवनादिमन्त्रங்களிற் போலே अनुष्ठानकालाभिप्रायம். இங்ஙனன்றிக்கே இவ் वर्तमानव्यपदेशம் वर्तनदेशावधियாகப் प्रपत्त्यनुष्ठानकर्तव्यतैயை விவக்ஷிக்கிறதென்றும், फलம் வருமளவும் प्रपत्तिपरिकरமான विश्वासानुवृत्तियை விவக்ஷிக்கிறதென்றும், ப்ரபத்திகாலத்தில் தான் ஸங்கல்பித்தபடியே आनुकूल्यादिகள் प्रपत्तिपरिकरமாகவே மேல் अनुवर्तिக்கவேண்டும்படியைக் காட்டுகிறதென்றும் சொல்லும் पक्षங்கள் இவ்வுபாயம் सपरिकरமாக

---

புத்ந்ய வாக்யம் த்வயத்திலுள்ள பதங்களால் அறிவிக்கப்பட்ட க்ரமத்திலே ஆறு அங்கங்களையும் கூறியுள்ளது; ஆநுகூல்யஸங்கல்பாத்யங்கங்களுக்குப் பதமில்லையே யென்ன ச்ரீபதமும் நாராயணபதமும் ஸ்வாமித்வத்தை யறிவிப்பதால் அந்த ஸ்வாமித்வாதிகளே ஆநுகூல்யாதிகளுக்கு निबन्धन(காரண)மாகையால் அங்கே அவை ஸித்திக்கும். चरेति இந்த ச்லோகார்த்தம் முன் அதிகாரத்திலே காண்க. भगवद्वपुरिति, நாரயணேதி பதத்திலே சரீராத்ம भावம் தெரிகிறபடியால் ஆநுகூல்யஸங்கல்பாதிஸித்தி; स्वस्य= சொத்தான ஜீவனுக்கு.

பரந்யாஸம் ஒருதரமே செய்யத் தகுமானாலும் இவ்வங்கங்கள் பயன் பெறும் வரையில் செய்யவேண்டியவை யென்று நினைக்கவேண்டா என்றறிவிக்கிறார் இப்படி; பலன் பெறுமளவும் அங்கியையும் அங்கத்தையும் செய்ய வேண்டுமென்கிற मेघनादारिसूरि பக்ஷத்திற்கு யுக்தியைக் கூறி அதற்கு ப்ரமாண விரோதமுண்டென்கிறார் இக் இதி. प्रपद्ये என்று लट्प्रत्ययம் வர்த்தமாநகாலத்தைச் சொல்லும். द्व...सदैवं वक्ता என்று எம்பெருமானார் அருளியதால் सदा ப்ரபத்தி யநுஷ்டாநம் தெரிகிறது. अङ्गियै யநுஷ்டிக்கும்போது அங்கங்களுக்கும் அநுஷ்டாநம் வரும். धातुवுக்கு விச்வாஸம் அர்த்தம்; அது கடைசிவரையில் வேணடுமென்பது ஸர்வஸம்மதம், ஸங்கல்பித்தபடி ஆநுகூல்யாதிகளும் பின்னே இருக்கவேண்டுமென்று அவரபிப்ராயம். யாகத்தில் दर्भहरणத்திற்கான बर्हिर्देवसदनं दामि என்கிற மந்த்ரத்தில் दामि (खण्डयामि) என்கிற வர்த்தமாந காலம் दर्भமரிக்கும் காலத்தில் मन्त्र प्रयोगம் செய்வதற்காக; அதுபோலிங்கும் ப்ரபத்தி யநுஷ்டாந காலத்தில் மந்த்ரம் வேண்டும். ப்ரபத்தி, 'सकृदेव प्रपन्नाय', 'सकृदेव हि शास्त्रार्थः कृतोऽयं तारयेन्नरम्' இத்யாதிகளால் ஒருதரமே செய்யப்படவேண்டும். பாஷ்யகாரரு

[illegible]என்று காட்டுகிற ப்ரமாணங்களோடே विरोधिக்கும். स्वरूपातिशय த்தாலும் भोगातिशयத்தாலும் வரும் आनन्त्यம் पूर्वखण्डத்திற் சொன்னபடியே अनुष्ठेयமான प्रपत्तिशरीரத்தில் ப்ரவேசமில்லை. ஆகையால் இவ்வுபாயவாக்ய த்தில் वर्तमानव्यपदेशம் स्वार्थानुसन्धानेन ह सर्वं पक्ता என்கிற रागप्राप्तमोक्षानु वृत्तியை விவக்ஷிக்கிறதுமன்று.

இப்படி उदीरणपत्र(नत्व?)மும் शरणागतिस्वरूपமும் இதின் परिकरங்களும் अधिकारविशेषமும் पूर्वखण्डத்திலே प्रकाशितமாயிற்று. இத்தாலே अनन्योपायत्व மும் ஸித்தித்தது.

இப்படித் தோற்றின शरणागति, 'तावदार्तिस्तथा वाञ्छा तावन्मोहस्तथाऽसुखम्' इत्यादिகளிற்படியே सकलफलसाधनமாகையாலும், 'तदन्यः को महोदारः' என்கிற படியே परमोदारனான शरण्यன் अर्थितार्थपरिदानदीक्षितனாய் 'கொள்ளக் குறைவிலன்

---

ளியது स्वयंप्रयोजनமான மந்த்ரோச்சாரணப்; அநுஷ்டாநத்திற்காக வன்று. சிலருக்குப் பலன் பெற த்வரையிருப்பதை யறிவிப்பதற்காக அவசமாக அடிக்கடி ப்ரபத்தியநுஷ்டாநமிதி வரும். அவ்வநுபவத்திலுள்ள ருசியாலே ஆவ்ருத்தி நேரும். இதெல்லாம் உபாயத்வ புத்தியோடு செய்யப்படுவ தன்று. இது உபாய கரணமந்த்ரமாக விதிக்கப்பட்டிருப்பதால் भोगरूप அநுஸந்தாநத்திற்கான பிற்காலத்தை யெல்லாம் இந்த ग्रंथ என்கிற लट् ப்ரத்யயம் சொல்லுமென்பதும் உசிதமன்றென்றபடி.

பூர்வகண்டத்தில் சொன்ன அர்த்தங்களை ஸங்க்ரஹிக்கிறார் இப்படி இதி. இப்படி ஈச்வரன் தவிர வேறு உபாயத்தையும் சொன்னால் अनन्योपायत्वம் ஸித்திக்குமோ வென்ன ஸித்திக்குமென்கிறார் இத்தாலே இதி. அநந்ய சேஷித்வம் அநந்ய உபாயத்வம் அநந்யப்ரயோஜநத்வமென்ற மூன்று அம்சங்கள் திருமந்த்ரத்தில் அறிப்பட்டவை. அவற்றில் அநந்யோபாயத்வ விவரணம் பூர்வகண்டம்; அநந்யப்ரயோஜநத்வத்தின் விவரணம் உத்தரகண்ட மென்பதை மேல்வாக்யம் முடிந்ததும் அருள்வர். ப்ரபத்தியானது ஈச்வரனே உபாயமென்று அறிவிப்பதே யாகையால் அநந்யோபாயத்வத்திற்கு ஹாநி அடியோடில்லை.

உத்தரகண்டத்திற்கு அவதாரிகை இப்படி இத்யாதி. फलावलிபில் பிரிய ஓதிச் சேர்த்து அநுஸந்தாநத்தை விதித்தது சரணாகதி ஸர்வफलसाधन மென் கைக்கப்பிரிதததாம். மோக்ஷபலனுக்கே இதை முக்யமாக உபயோகிக்க வேண்டுமென்று அதைச் சொல்லும खण्डத்தை வேதம் கூட்டுகிறது. இந்த ஏற்றத்தைக் கருதியே प्रयुक्तां भजति संसृतकालरात्रेः என்று அதிகமாக அருளினார். இம் மோக்ஷமாகிற பலனை இரண்டம்சமாகப் பிரித்து அறிவிக்கிறதுமேல் खण्डம். तावदिति வி.பு. 1-9 73 முன்னமே व्याख्यातம். तदिति. இதிஹா. 33 11-9. तस्मात्त्वमपि राजेन्द्र नारायणपरो भव तदन्यः को महोदारः प्रार्थितं दातुमीश्वरः 'ஆகையால் அரசனே நீயும் நாராயணனிடமே பற்றுக்கொள் அவன் தவிரவேறு யார் கேட்டதையெல்லாம் அளிக்கவல்ல பெரும் வள்ளல் अर्थितेति. அபேக்ஷித்

வேண்டிற்றெல்லாந்தரும்' என்னும்படி நிற்கையாலும் இங்கு என்ன फल த்துக்காகப் प्रपत्ति பண்ணுகிறதென்கிற अपेक्षैயிலே. महोदारனை शरण्यனுக்கும் सर्वोत्कृष्टविषयமான இவ் वशीकरणविशेषத்துக்கும் शेषैकरसனை தன் ஸ்வரூபத்துக்கும் अनुरूपமான फलविशेषத்தை उत्तरखण्डம் 'தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே' என்கிறபடியே समस्तविरोधिनिवृत्तिपर्यन्तமாகப் प्रार्थिக்கிறது. இத்தாலே अनन्यप्रयोजनत्वமும் सिद्धिக்கிறது.

இவ்விடத்திலே ஸவிசேஷணமான नारायणशब्दம் प्राप्यत्वैக்கு अनुरूपமான स्वामित्वादिகளும் अनन्तगुणविभूतिविशिष्टனை' ஸ்வாமியினுடைய सर्वप्रकारनिरतिशय-भोग्यतैயுமாகிற आकारங்களை यथाप्रमाणம் प्राधान्येन காட்டுகிறது. இப்படி उभयविभूतिविशिष्टம் प्राप्यமாயிருக்கச்செய்தேயும் आत्महविर्देशरुமாய் शेषत्वप्रति-संबन्धिகளுமாய் அதடியாக வருகிற கைங்கர்யத்துக்கும் இலக்காய்க்கொண்டு प्रधानप्राप्यருமாயிருப்பார் இவ் विशिष्टदम्पतिகள் என்று தோற்றுகைக்காக இங்கு

---

கப்பட்டதைப் பூரணமாக அளிப்பதற்கே ஸங்கல்பமுள்ளவனுயென்றபடி. கொள்ள இதி. (3 9-5. திருவாய்) முன்னமே உரைக்கப்பெற்றது. என்கிற அபேக்ஷயிலே=என்று கேட்டால்; இந்தப் பலத்திற்குள்ள ஏற்றத்தை அறிவிக்கிருர் महोदारனை இத்யாதியால். தனக்கே இதி. திருவாய் 2-9-4. எனக்கே யென்று பாட்டாரம்பம். எனக்கே ஆட்செய் எக்காலத்துமென்று என் மனத்திற்கே வந்து இடைவிடாமல் மன்னி தனக்கே நான் ஆகும்படி என்னை அவன் கொள்ளுகின்றதே எனக்கு நான் கண்ணனைக் கொள்ளுகின்றதாகும். மற்ற பலன்களை நமக்காக நாம் பெறுகிறோம். நாம் மோக்ஷத்திலே எம்பெருமானைப்பெறுவதாவது எம்பெருமான் தனக்காக நம்மைக்கொள்வதே. நமக்காகவன்றி எம்பெருமானுக்காகவே நாம் ஆவதேயாமென்று ஆழ்வார் தெளிவித்தார். நமக்காக நாம் பெறுதலென்று நினைப்பதாம் அஹங்கார மமகாரங்களே விரோதிகள். ஆக விரோதிநிவ்ருத்தி நமச்சப்தார்த்தயென்றது இங்கே வ்யக்தம். இதை யறிவிக்கிருர் समस्त विरोधि निवृत्तिपर्यन्त மாகவென்றதால். प्रार्थिக்கிறது; ஜீவன் இதற்கு கர்த்தா.

பதம்பதமாக உரைக்கத்தொடங்குகிருர் இவ்விடத்திலே இதி. ஸவிசேஷணமான என்றதால் ஸ்ரீசப்தத்தாலே பிராட்டிககு ஸ்வாமித்வாதிகளறிவிக்கப்படுமென்றதாம். இதற்கு பூர்வखण्डத்தில் உபாயத்வோபயுக்தகுணங்களிலே நோக்கென்றுர்; இங்கே ப்ராப்யத்வத்திற்கு முக்கியமாயிருக்கும் அம்சங்களிலே நோக்கென்றபடி. आत्महविर्देशरென்றதாலே भरादिविशिष्ट ஆத்ம ஸமர்ப்பணம் கருதப்பெற்றது. ஸமர்ப்பணத்திற்கு முன்னுமிருக்கும் ஆகாரம் சேஷத்வ ப்ரதிஸம்பந்தி யென்னப்பட்டது. உத்தேச்யரென்றவிடத்தில் भरसमर्पणத்தை மட்டும் கொண்டால் प्रतिसंबन्धि என்றவிடத்தில் ஸ்வரூப ஸமர்ப்பணம் கொள்வது. ஸ்ரீமச்சப்தமிராவிட்டால், நாரசப்தத்தில் பிராட்டி சொல்லப்பட்டாலும் வேறு பதார்த்தங்கள் போலவே அங்குத் தோன்றுவதால், பிராட்டிக்குள்ள ப்ரதாந ப்ராப்யத்வம் சொல்லப்பட்ட

श्रीमच्छब्दம். இவ்வர்த்தம்

'वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः', 'तया सहाऽऽसीनमनन्तभोगिनि,' 'आत्मानुरूपया श्रिया सहाऽऽसीनम्', 'ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப.' 'கோலத் திருமாமகளோடு உன்னை' इत्यादिகளிலும் விவக்ஷிதம்.

இங்குற்ற श्रीशब्दம் 'शृणाति निखिलान् दोषान् श्रीणाति च गुणैर्जगत् । श्रीयते चाखिलैर्नित्यं श्रयते च परं पदम् ॥', 'श्रयन्तीं श्रीयमाणां च शृण्वतीं शृण्वतीमपि' इत्यादिகளிற்படியே अनेकार्थங்கள் உண்டேயாகிலும் 'श्रिञ् सेवायाम्' என்கிற धातुவிலே सेवकत्वादिகளைச் சொல்லிக்கொண்டு कैङ्कर्यप्रतिसंबन्धित्वपरம். 'श्रीमते' என்கிற शब्दந்தன்னாலே विशिष्टமான प्रतिसंबन्धि தோற்றிற்றேயாகிலும் सर्वविधकैङ्कर्यத்துக்கும் ப்ரயோஜகமான प्रीतिविशेषத்தைப் பிறப்பிக்கும் संबन्धगुणविभूत्यादिपरिपूर्णानुभवसिद्धिக்காக இங்கு नारायणशब्दம் प्रयुक्तமாகிறது.

இங்குச் चतुर्थी तादर्थ्यमुखத்தாலே கைங்கர்யத்தைக் கணிசிக்கிறது. तादर्थ्यம் மாத்திரம் நித்யமாகையாலே 'तच्छेषत्वानुसंधानपूर्वतच्छेषवृत्तिकः', 'अहं सर्वं करिष्यामि' इत्यादिகளிற்படியே இங்குப் परिपूर्णानुभवपूर्वकமான கைங்கர்யம் प्रार्थनीयம். शरणागतனைப்போது शरण्यனை अभिमतप्रार्थனை பண்ணுகிறுகையாலே இங்கே 'भवेयम्' என்கிற पदம் अध्याहार्यம். இப்படிப் प्राधान्यத்தாலே முற்பட इष्टप्राप्तियை அபேக்ஷித்து இதுக்காக अनन्तरம் நமஸ்ஸாலே सर्वानिष्टनिवृत्तியையும் प्रार्थिக்கிறது.

---

தாகவென்றபடி  विशिष्ट = விலக்ஷணமான;

ஸ்ரீசப்தத்திற்கு உக்தார்த்தகத்தில் உபயுக்தமான வ்யுத்பத்தியை யறிவிக்கிறார் இங்குற்ற இதி. இரண்டும் அஹிர்பு... ஸம்ஹிதையில். शृणाति = போக்குகிறாள்; श्रीणाति-பக்குவப்படுத்துகிறாள். परं परं = பரமாத்மாவை; श्रीयते-என்பதற்கு நம்மாலே கைங்கர்யத்திற்காக ஸேவிக்கப்படுகிறாள். கைங்கர்யத்திற்கிலக்காவதற்குத் தக்க ஆகாரங்களனைவற்றாலும் அவள் அடையப்படுகிறாளென்றவாறு பொருளாம்; तादर्थ्य முகத்தாலே இதி. तादर्थ्यம்—சேஷத்வம் வாச்யார்த்தம் முதலில் தோன்றுவது. அது முன்னமே ஸித்தமாகையால் கைங்கர்யம் தாத்பர்யார்த்தம். तच्छेषत्वेति பட்டர் நித்யம் மூலமந்த்ராதிகாரத்தில் दशविधयोजनैயில் ஏழாவது யோஜனையில் உரைக்கப்பெற்றது. नमः என்றதைத் தனியே பிரிக்கவேண்டும்; சதுர்த்திவிபக்தி அந்வயிப்பதற்காக भवेयம் என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். ஸ்ரீவிசிஷ்ட நாராயணனுக்குக் கிங்கரனாவேன், அதில் விரோதியான ஆகாரங்கள் न मः = எனக்கு வேண்டா என்று பொருள். இதுக்காக = இஷ்டப்ராப்தி ஸித்திப்பதற்காக; அல்லது इष्टप्राप्तियாகிற அனுபவத்தில் தெளிவுபெறுதற்காக; இப்போது अनिष्टनिवृत्ति யாவது स्वार्थत्वादि புத்தி. இதை ச்லோகத்தால் விளக்குகிறார் மேலே अप्राप्तिरिति.

அநிஷ்ட நிவ்ருத்திக்குப் பிறகு தானே இஷ்ட ப்ராப்தி. இஷ்ட ப்ராப்தி வேண்டுமென்றதாலே அநிஷ்ட நிவ்ருத்தியும் ஸித்திக்குமே; அதைச் சொல்வதேன்? மேலும் இவன் இருவிதமான பலனை யபேக்ஷித்தால் தன்னை फलியாகக் கொண்டதாகாதோவென்ற சங்கையெல்லாம் இங்கே போக்கப்படும்.

अप्राप्तितः परिहरन् स्वपरैः स्वरक्षां तादर्थ्यधीपरिहृतस्वपरार्थभावः ।
अन्योपभोगविरहादनघः प्रपन्नो भुङ्क्ते स्वभोगमखिलं पतिभोगशेषम् ॥

இந் நமஸ்ஸுக்கும் க்ரியாபதம் அத்யாஹரித்துக்கொள்ள வேணும். 'न मम स्याम्' என்றது; 'எனக்காவேனல்லேன்' என்றபடி. 'न मम किञ्चित् स्यात्' என்று ஸர்வ விஷயமமகாரநிவ்ருத்திமுகத்தாலே ஸர்வாநிஷ்டநிவ்ருத்தியைப் ப்ரார்த்திக்கிறதாகவு

अप्राप्तितः = சக்தி யின்மையாலும் உரிமையின்மையாலும் ஈச்வராதிரிக்தன் ரக்ஷகனாகானமையால் தன்னாலும் பிறராலும் स्वरक्षां परिहरन्—தனக்கு ரக்ஷை வருமென்பதைக் கழிக்கிறவனாய் तादर्थ्य—அவனுக்கே சேஷனென்கிற புத்தியாலே தனக்கும் பிறருக்கும் சேஷனாயிருக்கும் தன்மையை விட்டவனாய், अन्य उपभोगविरहात्—வேறு அனுபவத்தை விட்டதாலே अनघः—தோஷமற்றவனுமான प्रपन्नः—ப்ரபத்தி யநுஷ்டித்தவன் தன்னுடைய போகமனைத்தையும் பகவனுக்குள்ள போகத்துக்கு சேஷமாக அநுபவிக்கிறான் முதற்பாதத்தால் அநந்யோபாயத்வமும் இரண்டாவதால் அநந்ய சேஷத்வமும் மூன்றாவதால் அநந்ய ப்ரயோஜநத்வமும் சொல்லிற்று. எல்லாவற்றிற்கும் இங்கு உபயோகமுண்டு. அநந்ய உபாயனானமையாலே ப்ரபந்நனான். தன்னையும் ரக்ஷிப்பானாக ஒருவன் நினைத்தானாகில் தான் प्रधान போக்தா என்கிற புத்தியும் நேரும் அதனாலும் அதைக் கழிப்பதாம். அநந்ய சேஷியாகையாலே परिभोगத்திற்காகவே யானான் தோஷமற்றவனானமையாலே தனக்கு வரும் போகத்தை அப்ரதாநமாகக் கொண்டான். மோக்ஷத்தில் இஷ்ட ப்ராப்தியானது அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமானாலும் இவ்வுலகில் भगवदैश्वर्यம் அநிஷ்டத்தோடு கலந்திருப்பதால் இதைவிட விலக்ஷணமானது தனக்கு வேண்டுமென்பதற்காகவும் ஸ்வர்க்கம் முதலியவைகளிலே தான் ப்ரதான கர்த்தாவும் போக்தாவுமென்று புத்தியுளது அது கலசாத இஷ்ட ப்ராப்தி மோக்ஷம், அதனால் அத்தன்மையை யறிந்து வேண்டுவது தோற்றவும் அநிஷ்ட நிவ்ருத்தியைச் சேர்த்தது. அங்கே ஒருவித விபரீத போகமுமில்லை. இங்கும் அந்தःபுரபரிஜனம் கிளிக்குப் பாலூட்டுவது அரசனின் உவப்புக்காக, பத்னி தன்னை அலங்கரித்துக் கொள்வது பதிக்காக; அதுபோலாம். இங்கே फलसाधना भापेक्षापि என்கிற மூலமந்த்ராதிகார காரிகையைக் கூட்டுவது.

ப்ரார்த்தனையைச் சொல்லும் க்ரியாபதமில்லையே என்ன அருளிச்செய்கிறார். இந் நமஸ் இதி. ச்ரீமதே நாராயணாய என்றவிடத்தில் சேர்த்த स्याम् என்கிற சொல்லை இங்கும் அநுஷங்கித்தால் न मम स्याम् என்றதாகும். ஸர்வத்திற்கும் தன் ஸம்பந்தத்தைக் கழிப்பதற்காக स्यात् என்று புதிதாகச் சேர்த்தால் அங்குள்ள போகாதிகளும் எனக்கில்லை என்று எல்லாவற்றிலும் மமத்வபுத்திநிவ்ருத்தி சொன்னதாகும். முன்னதிகாரத்தில் மூலமந்த்ரம் வாக்ய த்ரயமென்ற பக்ஷத்தில் இரண்டாவது யோஜனையில் அநிஷ்ட நிவ்ருத்தி ப்ரார்த்தனை, இஷ்ட ப்ராப்தி ப்ரார்த்தனை இரண்டையும் சொல்லும்

மாம். திருமந்த்ரத்தில் इष्टप्राप्ति-अनिष्टनिवृत्तिகளிற் சொன்ன चोद्यपरिहारங்கள் இங்கும் अनुसंधित्तுக்கொள்வது. இந் नमःशब्दத்தாலே अविद्या-कर्म-तद्वासना-रुचि-प्रकृतिसंबन्धादिरूपங்களான पूर्वविरोधिகளையும் கழியாநிற்கச் செய்தேயும் இதுக்கு निर्वहणம் பண்ணுகிற श्रुतियின்படியே परिपूर्णब्रह्मानुभवरूपफलदशैயில் फलान्तरानुभवव्यवायத்தாலே शङ्कितமான स्वाधीनकर्तृत्वம் स्वाधीनभोक्तृत्वமாகிற மிகைகளைக் கழிக்கையிலே இங்குப் प्रधानतात्पर्यமென்று अनुसंधिப்பார்கள். இத்தால் फलानुभवदशैயிலுண்டாம் स्वाधीन-कर्तृत्व-भोक्तृत्वभ्रमங்கள் मुक्तदशैயில் கைங்கர்யத்தில் இல்லாதபடி கண்டு அக் கட்டளையிலே प्रार्थिக்கிறானென்றதாயிற்று.

"परमात्मनि नाराणां सर्वभारसमर्पणात् । संजातं नैरपेक्ष्यं तु नम इत्युच्यते बुधैः ॥"

என்று இங்குற்ற நமஸ்ஸை அருளாளப்பெருமாளெம்பெருமானார் व्याख्यानம் பண்ணினார். இந்த श्लोकத்திற்சொன்ன नैरपेक्ष्यம் प्रपदनத்தில் निर्भरत्वम्. இந்த

---

போது அவ்விரண்டும் ஒன்ரு, வேரு; பிரித்துச் சொல்லவேண்டுமா என்று விரிவாக விசாரித்திருப்பதை இங்கும் சேர்த்துக் கொள்ளலாமென்கிருர் திருமந்த்ரத்தில் இதி. ச்ருதிவாக்யத்தை யநுஸரித்து நமச்சப்தார்த்த்திற்கு விசேஷத்திலே நோக்கென்கிருர் நிந்நம இதி. ஸர்வ விரோதி நிவ்ருத்தி தான் வாச்யார்த்தம். ச்ருதியில் சொன்ன அர்த்தத்தில் நோக்கு அதில் याः काश्चन कृतयो मम भवन्ति ताः न ममताऽस्ति तासु मम। भगवत एव ताः। ममोऽहम्। न ममाऽ- र्थिन என்ற வாக்யத்தால் கைங்கர்யங்களிலும் தன்னிடத்திலும் ममत्व புத்தியிலாமையை யநுஸந்திருப்பதால் மோக்ஷத்தில் கர்த்ருத்வ भोक्तृत्वங்கள் தனக்குள்ளவை ஸ்வாதீநமும் ஸ்வார்த்தமுமல்ல என்ற விசேஷத்தைக் குறித்ததாம். கழியாநிற்க=கழிக்க. ஏன் ச்ருதிக்கு விசேஷத்திலே நோக்கென்ன உரைக்கிருர். இத்தால் இதி. மோக்ஷம் தவிர வேறு பலனை யநுபவிக்கும் போது स्वाधीनत्वबुद्धि யுண்டு. மோக்ஷத்தில் இல்லை. அதனால் அப்பலன் தனக்கு வேண்டுமென்றும் இங்குள்ள அநுபவ கைங்கர்யங்களுக்கும் அங்கு வரும் அநுபவ கைங்கர்யங்களுக்கும் வாசியைக் கண்டும் அதில் ஆசை வைக்கிருன்.

இப்படி ஸூத்திற்கு ஸாம்ப்ரதாயிகார்த்தம் சொல்லியாயிற்று. அருளாளப்பெருமாளெம்பெருமானரின் யோஜனையை परमात्मनि என்ற ச்லோகம் ஆரம்பித்து. 'स्वतःप्राप्तम्' என்கிற வரையிலாக விரிவாக நிருபிக்கிருர், परमात्मनीति. அவர் சொன்ன நமச்சப்தார்த்தமாவது नाराणां-ஜீவர்களுக்கு परमात्मनि-பகவானிடத்தில் सर्वभारसमर्पणात् संजातं-எல்லா பாரத்தையும் ஸமர்ப்பிப்பதாலுண்டாகக் கூடிய नैरपेक्ष्यं-ஒன்றையும் அபேக்ஷிக்காமலிருக்கையானது நம; பதார்த்தமாக அறிஞர்களால் அறிவிக்கப்படுகிறதென்றதாம். ஜீவர்களுக்கு फलापेक्षै யும், பகவான் உபாயமாகவேண்டுமென்ற அபேக்ஷயுமிருக்கும் போது நைரபேக்ஷ்யமிருக்குமோ என்ன அதை உரைக்கிருர் இந்த இதி. नैरपेक्ष्यமாவது நிர்ப்பரத்வம். भरஸமர்ப்பணத்திற்குப் பிறகு பலத்திற்காக ஒன்றும் செய்யாமை. அவர் भरஸமர்ப்பணத்தை யெங்கே சொன்ஞர்; அதற்குப் பிறகுதானே நிர்பரத்வத்தைச் சொல்ல வேண்டுமென்ன, கருத்துரைக்கிருர்

**निर्भरत्व**த்தாலே **भरसमर्पण**ம் **सूचित**மாதல், **स्वनिर्भरत्वपर्यन्त**மான **भरसमर्पण**ம் இவ்விடத்திலே விவக்ஷிதமாதல் ஆகக்கடவது. **हविस्समर्पण**த்தில் '**इदमिन्द्राय; न मम**' என்னுமாப்போலே '**अहं श्रीमते नारायणाय**' என்று இங்கு **भरगर्भ**மாக ஸமர்ப்பித்து, '**न मम**' என்று தன்னுடன் துவக்கறுக்கிறதென்றால் இஸ்ஸமர்ப்பணயோஜனைக்கு **स्वरस**ம். இந்த யோஜனையில் **पूर्वखण्ड**ம் **अनुवादरूपपर**ம்; **उत्तरखण्ड**ம் **अङ्गप्रतिपादक**ம்.

'**अहमेव मया समर्पितः**' என்கிறபடியே இவ்விடத்தில் நான் ச்ரீமானை நாராயணனுக்கென்று ஸமர்ப்பிக்க '**यत्सम्बन्धितयाऽर्थ्यते**'. '**तवैवास्मि हि भरः**' **इत्यादि**களிற்படியே **स्वरक्षणभर**மும் **स्वरक्षणफल**மும் அவனதென்று இங்கே **अभिप्रेत**மாகவுமாம்.

'**नमः**' என்கிற இத்தாலே **आत्म-आत्मीय**ங்களோடும் **स्वरक्षणतत्फल**ங்களோடும் தனக்குத் துவக்கற்றமை காட்டுகிறது. **परसंबन्धविधि**யிலும் **स्वसंबन्धनिषेध**த்திலும் தாத்பர்யமாகையாலெ இச் **चतुर्थीनमस्सु**க்கள் இரண்டுக்கும் **फल**முண்டு. இஸ்ஸமர்ப்பணந்தன்னிலும் **परनिरपेक्षकर्तृत्वादि**களை **निषेधि**க்கைக்காக **नमः**' என்கிறதாகவுமாம்.

---

இந்த நிர்பரத்வேதி. பரஸமர்பணத்தால் வரும் நிர்பரத்வத்தைச் சொன்னால் பரஸமர்பணமும் குறிக்கதாகுமென்று கருத்து. இனி **भरसमर्पणजन्य-निर्भरत्व**மென்று நமச்சப்தார்த்தமானால் பரஸமர்பணம் அதற்குள்ளேயடங்குமென்ற கருத்தமென்கிறார் **स्वेति** இப்படிச் சொல்லுகிறவர் **श्रीमते नारायणाय** என்பதற்கு என்ன அர்த்தம் கொண்டிருப்பாரெனனில்—ஸித்தாந்தத்திற்போலே இஷ்டப்ராப்திபரமென்றேயிருக்கலாம். ச்ரீமந்நாராயணனுக்காக = அவன் பலன்பெற **यद्वा** என்னலாம். ஸ்வரஸமான பொருளைக் கூறுகிறார் **हविरिति** ஸமர்பணத்தில் **परसंबन्धविधि, स्वसंबन्धनिषेध**ம் என்ற இரண்டு அம்சங்களில் பகவானுக்கென்று பரஸம்பந்தத்தை **चतुर्थ्यन्त**ம் சொல்லும், மற்றதை நமச்சப்தமென்றபடி. இப்போது அங்கியும் ஸ்பஷ்டமாகப் பணித்ததாகுமென்கிறார் இந்த இதி. உத்தர**खण्ड**த்திலே **भर**ஸமர்பணத்தை விவக்ஷித்தால் இதுவே உபாயபரமாகிறதே; பூர்வகண்டத்தின் கார்யமென்ன என்பதற்கும் இங்கே உத்தரமாயிற்று. **भरगर्भ**மாக என்பதால் **भरफल विशिष्टस्वरूप-समर्पण**மென்றதாகும்.

**स्वरूपभरफलानि श्रीमते नारायणाय** என்றோ, **भरफलविशिष्टोऽहं श्रीमते नारायणाय** என்றோ உரைக்காமல் **अहं** என்று ஸ்வரூபத்திற்கு மட்டும் ஸமர்ப்பணமென்கிற யோஜநாந்தரத்தை யருளுகிறார் **अहमिति**. ஆளவந்தார் ச்ரீஸூக்தி ஸ்வரூபத்தை மட்டும் சொன்னாலும் **भरादि**ஸமர்ப்பணமும் பட்டர்ச்ரீஸூக்தியின் படியில் கிடைக்குமென்பதுபோல் அவை யிங்கும் **अर्थात्** ஸித்திக்குமென்றபடி. இந்த யோஜனைகளில் நமச்சப்தம் வீணாதுமென்று நினைப்பர்; அதனால் அதன் பொருளை விளக்குகிறார் **परेति**. இந்த ஸ்வஸம்பந்த நிஷேதம் சொல்வாமலே கிடைக்குமென்கிற சங்கையில் அதற்கு வேறு பொருள் கூறுகிறார்- இஸ்ஸிதி, ஸாத்விக த்யாகம் பொருளென்றதாயிற்று.

स्थूलप्रक्रियैयைக் கொண்டாலும் 'नमामि' என்கிற பதத்தை आत्मसमर्पणार्थமென்று व्याख्यानம் பண்ணின पद्स्तोत्रप्रक्रियैயாலே இந் नमश्शब्दம் ஸமர்ப்பணப் பொருளுக்கு संगतம். இப்படி उत्तरखण्डத்தை आत्मसमर्पणपरமாக अनुसन्धिப்பார்க்கு இதுக்கு अनुरूपமாய் स्वरूपानुबन्धियான फलविशेषம் இங்கே स्वतःप्राप्तம்.

पूर्वोक्तமான படியே फलपरமாக उत्तरखण्डத்தை अनुसंधिப்பார்க்கு இவ்வாத்मरक्षाभरसमर्पणம் उपायपरமான पूर्वखण्डத்தில் शरणशब्दान्वितமான क्रियापदத்திலே अनुसंधेयம்.

இப்படி द्वयத்தில் पदங்களில் அடைவே शब्द-अर्थस्वभावங்களாலே पुरुषकार-

---

இப்படி அருளாளப்பெருமாளெம்பெருமானாரின் பக்ஷத்தில் நம: என்பது இரண்டு பதமென்றுகொண்டே வாச்யமாகவோ வ்யங்க்யமாகவோ ஸமர்ப்பண ஸித்தி சொல்லப்பட்டது ஒரு பதமாக்கியும் நிர்வஹிக்கிறார் स्थूलेति. पदस्तोत्रेति. नृसिंहमन्त्रराजपदங்களின் பொருளை முறையே காட்டும் ச்லோகங்களாகிற ஸ்தோத்ரத்தில் நமாமி யென்கிற பதத்தின் வ்யாக்யாந ரீதியாலே யென்றபடி. ஸ்வரூபஸமர்ப்பணத்தாலே फल ஸமர்ப்பணமும் குறிக்கப்படுமென்றால் ச்ரீமானான நாரயணனுடைய கைங்கர்யத்திற்காக என்று உரைக்கிற பக்ஷத்திற் போல் இன்ன फल மென்று தெரியவில்லையே யென்ன அருளுகிறார் இப்படி இதி. आत्माभिमानानुगुणपुरुषार्थव्यवस्थैयின்படி தன்னை ஸ்வதந்த்ரமாகக் கொண்டால் வேறு பலன் பல தோன்றும்; ஸ்வரூபத்தை பகவச்சேஷமாக ஸமர்ப்பிக்கும் போது பலன் சேஷிகைங்கர்யமென்றே ஸித்திக்குமென்றபடி.

இப்படி இவருடைய பக்ஷம் நிரூபிக்கப்பட்டது. இவர்பக்ஷத்தில் பூர்வ खण्डம் அங்கமாத்ரபரமென்பதிருந்தாலும் அதற்கு முன் விரிவாகச் சொன்ன யோஜனையில் அர்த்தமும் பூர்வखण्डத்திற்கே அர்த்தமென்கிறார் पूर्वेति. இந்த ஸம்ப்ரதாயபக்ஷம் फलपादेपில் உத்தர खण्डத்தைச் சேர்த்து द्वयம் ஸம்ஸாரமோசகமாகிற தென்று சொன்னதற்கு இணங்கிய தென்று கருத்து.

இந்த द्वयத்தில் ஆறு பதங்களென்று கூறி மேலே கடச்ருதியானது अर्घा दश என்கிறது. अर्था दश என்றும் பாடம். இங்குப் பத்து அர்த்தங்களை பட்டர் அஷ்டச்லோகியில் அருளினார். अर्घा என்ற பாடத்திலும் अर्घங்களாவன சகலங்கள் =खण्डங்கள்: பதங்கள் ஆறாயிருந்தாலும் அவற்றுள் खण्डமாக்கிப் பத்தை உபநிஷத்தே குறித்துளது. खण्डங்கள் பத்தானால் அர்த்தங்களும் பத்தாகும். வேறுபக்துக द्वयोपनिषद्व्याख्यानத்தில் காண்க. இங்கு உபநிஷத்திற் செய்த खण्डங்களின் பத்துப் படி பொருளானால் பட்டர்படி

श्रीतत्त्वं नित्ययोगं गुणिनमपि परं विग्रहं प्रापकत्वं कर्तव्यं प्राप्ययोगं निरुपधि च दाचस्वामितां किंकरत्वम् ।
सर्वानिष्टप्रहाणं दशभिरभिदधात्येष मन्त्रो दशार्थान् खण्डैरेतत् सुबोधं विभजनदशके वीक्षते वेदकल्पे ॥

என்றவாறாகும்—இப்படியானாலும் திருமந்த்ரத்திற் போலே இங்கும் வாச்யமாகவும் வ்யங்க்யமாகவும் ஸித்தித்த எல்லா அர்த்தங்களையும் அடைவாகக் குறிக்கிறார் இப்படித்வயத்தில் இதி. சப்தார்த்தஸ்வபாவங்களாலே யென்பதற்கு ப்ரகாசிதங்களாயிற்று என்பதோடந்வயம். சப்தஸ்வபாவத்தாலே

योगं. அதின் नियमम्, उपायवैशिष्ट्यं, शरण्यगुणपूर्तिம், संबन्धविशेषம், दिव्य-मङ्गळविग्रहयोगம். அதில் शेषभूतன் இழியும் துறை. அதில் उपायस्वरूपம், वशी-करणविशेषம், तत्परिकरங்கள், अधिकारिविशेषம், प्राप्यशिष्टம், गुणविभूतिविशिष्टप्राप्य-त्वम्, कैङ्कर्यप्रतिसंबन्धित्वम्, कैङ्कर्यप्रार्थनம், स्वकैङ्कर्यैकलक्षणம், सर्वानिष्टनिवृत्ति அதி-னுடைய आत्यन्तिकत्वம், पराधीनपरार्थैकत्वம், तथाविधमोक्षत्वம் என்றிவை प्रधान-மாய் இவற்றுக்கு अपेक्षितங்களுமெல்லாம் सिद्धसाध्यभागவத்தான உபாய-மென்றும் உபேயமென்றும் இரண்டு प्रधानप्रतिपाद्यங்களோடே துவக்குண்டு प्रकाशितங்களாயிற்று.

இப்படி शारीरकशास्त्रத்திற்போலவே तत्त्वविशेषமும் उपायविशेषமும் फलविशेष-மும் இம்மந்த்ரத்திலே प्रतिपादितமானாலும் இது ग्रन्थान्तरம்போலே फला-पेक्षापूर्वकமான उपायानुष्ठानप्रधानமாகையால் उप.फलங்களுடைய उत्पत्तिक्रम-த்தோடே சேர்ந்த पाठक्रमத்தாலே फलप्रतिपादकवाक्यம் பிற்பட்டாலும் अर्थ-

---

தெரிவது வாச்யார்த்தம்; அர்த்தஸ்வபாவத்தாலே தெரிவது तात्पर्यம். ச்ரீப-தத்தில் புருஷகாரத்வம் உபாயத்வமிரண்டும் தோற்றுவதால் पुरुषकार-மாய் உபாயமுமான பிராட்டியின் ஸம்பந்தம் சொல்லப்படும். அதில் सौन्दर्य-विलास—आलापादिகளாலே பிராட்டி புருஷகாரமாகிறுளென்று பிராட்டியின் திருமேனிக்கும் பெருமான்திருமேனிக்கும் நித்யயோகம் அபேக்ஷிதமாயிரு-ப்பதால் புருஷகாரயோகத்திற்கு நித்யத்வத்தை யருளினர். இழியுந்துறை யென்றது चरणशब्दार्थं. शरणசப்தத்தாலே திருவடியின் உபாயத்வமும் எம் பெருமான் உபாயமாவதும் சொல்லப்படும். அதனால் உபாயத்வப்ரகார-மென்றும் வசீகரணவிசேஷமென்றும் சொன்னது. अधिकारिविशेषம் = ஆகிஞ்-சந்யம்: ப்ராப்யையான பிராட்டியோடு சேர்க்கை श्रीमते என்றதிலுள்ள பொருள். ப்ரார்த்தனை आय என்பதன் பொருள். ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தி இத்யாதிகள் நமச்சப்தார்த்தம். இவ்வளவு சொற்களும் பொருள்களுமுள்ள போது द्वयமென்று ஏன் பெயரென்பதற்கு உதக்ரமாகும் सिद्धयादि. உபாயமும் உபேயமும் ப்ரதாநப்ரதிபாத்யம் ஆகையால் द्वयமென்கிறது. அவ்விரண்டிலும் ஸித்தம் ஸாத்யமென்கிற भेदமுமுளது இவற்றோடு துவக்கு—ஸம்பந்தம் இருப்பதால் மற்ற பொருள்கள் சொல்லப்படுகின்றன.

இம்மந்த்ரத்தில் மூன்று வாக்யங்களுள: இதனால் द्वयமென்றும் பெயரிருக்க லாமே யென்னில், அந்நிலே திருவஷ்டாக்ஷரத்திற்குமுண்டு வாக்யம் மூன்று னும் மஹாவாக்யமாகும் போது ஒரே வாக்யமாம். இந்த மூன்று வாக்யங்களில் எது மஹாவாக்யத்தில் ப்ரதாநமாகுமென்ற கேள்விக்கு உத்தரமருளு கிறார் இப்படி शारीरके. பூர்வகண்டம் உபாயபரம்; உத்தरखण्डத்தில் मुमुक्षुर्वै शरणं अहं प्रपद्ये (நான் மோக்ஷபலத்தில் ஆசையுள்ளவனாய் சரணாகதி செய்கிறேன்) என்று சரணாகதி க்ரியைக்கு साध्यமிருப்பதால் இங்குப பலங்களில் ஆசையுள்ளவனாய் ப்ரபத்தி பண்ணுகிறேனென்று பொருளாய் பூர்வखण्डம் ப்ரதாநமாகும். உபாயம் முன்னே, फलம் பின்னே யென்கிற அவ வுக்கணங்க

ஸமத்தாலே இரு முற்பட அநுஸந்தேயமென்று பூர்வர்கள் அருளிச்செய்வர்கள். புருஷன் புருஷார்த்தத்தை விமர்சித்துக்கொண்டன்றி உபாயவிமர்சமும் உபாயாநுஷ்டானமும் பண்ணுவனிறே. இப்படித் திருமந்த்ரத்திலும் உபாய-ஃபல-ப்ரதிபாதகாம்சங்களில் க்ரமங்களைக் கண்டுகொள்வது. ஃபலார்த்தியாய் அதிகாரியானாலிறே இவனுக்கு இவ் உபாயாநுஷ்டானம் வருவது. 'த்வயேந சரணம் வ்ரஜேத்', 'த்வயார்த்த: சரணாகதி:' என்கிற அபியுக்தர் பாசுரங்களாலும் த்வயம் உபாயாநுஷ்டானத்தைப் ப்ரதானமாக ப்ரகாசிப்பிக்கிறது.

இங்குப் பூர்வார்த்தமும் சதுர்த்த்யந்தபதங்களும் நமஸ்ஸுமாக மூன்று அவாந்தரவாக்யங்களாலும் திரள உபாயப்ரதானமான ஒரு வாக்யமாய்த் தலைக்கட்டக்கடவது. எங்ஙனேயென்னில்—ஸர்வஸ்வாமியாய் ஸர்வப்ரகாரநிரதிசயபோக்யனைப் பெரியபிராட்டியாரோடு பிரிவில்லாத நாராயணன்திருவடிகளில் ஸ்வரூபப்ராப்தமான ஸர்வதேச-ஸர்வகால-ஸர்வாவஸ்தோசித—ஸர்வவித கைங்கர்யத்துக்கும் விரோதியான ஸர்வமும் கழிந்து பரிபூர்ணகைங்கர்யம் பெறுகைக்கு அகிஞ்சநனான அடியேன், ஸ்வரக்ஷணபராதிகளில் எனக்கு அந்வயமறும்படி ச்ரீமானான நாராயணன்திருவடிகளிலே அநந்யசரணப்ரபந்நமான

---

ப்ரபத்யே என்பதற்கும் ஃபலத்தைச் சொல்லும் சதுர்த்தியாதிகளுக்கும் மந்த்ரத்தில் பாடத்தில் அடைவிருக்கிறது ஆனால் உபாயம் செய்கிறவன் உபாயத்தை யபேக்ஷிக்கிறவனாயிருந்தாலே செய்வதாம் உபாயத்தில் அபேக்ஷை யென்பது ஃபலத்திலபேக்ஷைக்குப் பிறகே வரும். ஆக உபாயாநுஷ்டானத்திற்கு முன் ஃபலாபேக்ஷை வேண்டியிருப்பதால் ஃபலகாம: உபாயம் கரோமி, முமுக்ஷு: சரணமஹம் ப்ரபத்யே என்று ப்ரயோகிக்க வேண்டியிருப்பதால் உத்தரகண்டார்த்தத்தை முன்னே அநுஸந்திப்பதாம்; திருமந்த்ரத்திலும் உபாய ஃபலங்களைச் சொல்லும்போது இந்த ரீதியாகத்தான் மஹாவாக்யத்தைச்சொல்வதாம். மந்த்ரமானது அநுஷ்டேயார்த்தப்ரகாசகமாகையாலே அநுஷ்டிக்க வேண்டிய ப்ரபத்தியை ப்ரதாநமாக்கி ஃபலத்தை விசேஷணமாக்குவதே தகும். அதனால் தான் த்வயார்த்தம் சரணாகதியென்றார்கள்:; த்வயார்த்தம் மோக்ஷமென்னவில்லை. மூன்றுவாக்யங்களை ஒரு வாக்யமாகத் தலைகட்டுவதெவ்வாறெனில்-ஸ்ரீமதே நாராயணாய ஸ்வாம், ந மம கிஞ்சித்ஸ்யாதிதி ஸ்ரீம...சரணம் ப்ரபத்யேஎன்றவாறு. இந்த மஹாவாக்யத்தின் படி பொருள் விரித்தருளுகிறார் எங்ஙனேயென்னில் இதி உத்தரகண்டார்த்தம் ஸர்வஸ்வாமியாய் இத்யாதி; அதில் ஸர்வமும் கழிந்து என்ற வரையில் நமச்சப்தார்த்தம்.கைங்கர்ய விரோதி வேண்டாவென்று அதற்குப் பொருளாகையாலே அக் கைங்கர்யம் ச்ரீமந்நாராயணனின் சரண விஷயமாகையால் அதை விரிவாகச் சொன்னது. 'பரிபூர்ண கைங்கர்யம் பெறுகைக்கு' என்பது ஸ்ரீமதே நாராயணாய என்பதின் பொருள். ஸர்வஸ்வாமியாய் என்று தொடக்கமாக, ஸ்வரூப ப்ராப்தமான என்ற வரையிலுள்ளதை இங்கும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அகிஞ்சநனான இத்யாதி பூர்வகண்டத்தின் அர்த்தமாகும். ஸ்வ ரக்ஷணபராதிகளில் எனக்கு அந்வய மறும்படி யென்றது ஸ்வரூப-பர-ஃபல ஸமர்ப்பணங்களிலடங்கிய ந மம யென்ற பாகங்களின் பொருள். ஆத்ம ரக்ஷா பர ஸமர்ப்பணமென்பதில் ஸ்வரூப-ஃபல ஸமர்ப்பணமும் சேரும். இதற்கே ஆத்ம ஸமர்ப்பணம் ரக்ஷாரூபஃபலஸமர்ப்பணம் பரஸமர்ப்பணமென்று

आत्मरक्षाभरसमर्पणம் பண்ணுகிறேனென்று ஸூத்ரத்தில் திரண்ட பொருள்.

वैराग्यविजितस्वान्तैः प्रपत्तिविजितेश्वरैः । अनुकम्पैकविजितैरित्युपादेशि देशिकैः ॥

---

மூன்று பொருளுமாம். இதுவரையில் பலவிடங்களில் அங்காங்கிவிவேசந காலத்திலும் ப்ரயோக சிக்ஷணகாலத்திலும் உபாயத்வ ப்ரார்த்தனையைச் சொல்லாமலிருந்தது போல் இங்கும் சொல்லாமலே விட்டதால் அது அநுஷ்டேயமான அங்கமன்றென்றே தெரிகிறது. இதை வடமொழியில் அநுவாதம் செய்த ஸாரப்ரகாசிகையிலும் அதைத் தனியாகக் குறிக்கவில்லை 'अप्रार्थितो न गोपायेत्' என்றிருப்பதால் உபாயத்வ ப்ரார்த்தனையை விட்டால் ஃபலம் ஸித்தியாதே யென்னில்—அங்கே गोप्तृत्ववरணந்தானே சொல்லப் பட்டது; गोपायेत् என்ற சொல்லுமிருக்கிறதே மற்ற भरन्यास ஸ்த்தலத்தில் ரக்ஷகத்வ ப்ரார்த்தனை மட்டும் போதுமானாலும் 'त्वमेवोपायभूतो मे भव' என்று சொல்லவேண்டுமிடத்தில் நிரபேக்ஷ ரக்ஷகத்வ ப்ரார்த்தனை அவச்யம் வேண்டுமென்னில்—அப்போது அந்தந்த ஸ்த்தலத்தில் गोप्तृत्वம் வெவ்வேறு விதமென்றதாகிறது. ஆக गोप्तृत्व வரணமே உபாயத்வ ப்ரார்த்தனையாயிட்டதால் அதைத் தனியாக अङ्गतावच्छेदकமாக ஏன் அநுஷ்டிக்கவேண்டும்? அதிலே गोप्तृत्व வரணம் அடங்கியிருப்பதால் गोप्तृत्ववरणத்தைவிடுவோமென்றால் இங்கு அங்கபஞ்சக ஸம்பந்நமான என்பதற்கு भ्रमமாம். உபாயத்வ ப்ரார்த்தனையை சாஸ்தரம் சொன்னது भरन्यासத்தைக் குறிப்பதற்கே யாகும்; தனியாக வநுஷ்டிப்பதற்கன்றென்று முன்னமே நிரூபிக்கப்பெற்றது.

கீழருளியது மொத்தம் सदाचार्योपदिष्टமென்று காரிகையால் அருளுகிறார் वैराग्येति. வைராக்யத்தாலே வென்ற மனமுடையவர்களும், ப்ரபத்தியினாலே ஈச்வரனை வென்றவர்களும், दयैயினாலேயே நன்கு வெல்லப்பட்டவர்களுமான ஆசார்யர்களாலே இவ்வதிகாரத்தில் சொல்லப்பட்ட விதமே உபதேசிக்கப் பட்டது. ஆசார்யர்களுக்கு आप्ततमत्वம் வேண்டும். தத்துவதர்சிகளாய் க்யாதி லாப பூஜா நிரபேக்ஷராய் வச்யவாக்குக்களாய், दयापरवशர்களாயிருப்பவர்கள் ஆப்ததமர்கள். வைராக்யமிராமல் க்யாதிலாபாதிகளில் நோக்குள்ளவர்களுக்குச் சிற்சில விஷயங்களிலே சாஸ்த்ரார்த்தத்தை மாற்ற நேரும். ப்ரபுக்களுக்கு வசப்பட்டு ஸர்வேச்வரன் அபிமானத்திற்குச் சிறிது விலக்காயிருப்பவர்களுக்கு அவனது அநுக்ரஹக் குறைவால் வாக்கில் அபாடவமேற்படுவதால் அர்த்தம் விபரீதமாகும். தயையில்லாத போது வஞ்சநாயுக்தியாலு दुरवबोधமாம். அவ்வாறின்றி कृपया निःस्पृहो वदेत् என்றநீதியிலே வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் भ्रमप्रमाद विप्रलम्भ करणापाटवங்களாகிற दोषங்களுக்கு வெகு தூரத்திலுள்ள தேசிகரால் உபதேசிக்கப்பட்டதாகையால் அங்காங்கியநுஷ்டாநாதிகளெல்லாம் இதிற் கூறியபடியே கொள்ள வேண்டுமென்றதாயிற்று.

திருமந்த்ரத்தில் பத்துவித யோஜனைகள் கூறப்பெற்றன. அங்கும் மஹாவாக்யமொன்றாகக் கொள்ளலாமென்று கீழே அருளினர். அவ்வாறின்றி தத்துவவிஷயம், உபாயவிஷயம், ஃபலவிஷயம் என்று மூன்றாகப் பிரித்து

इदमष्टपदं व्यासे, समासे षट्पदं विदुः । वाक्यं पञ्चपदैर्युक्तमित्याख्यातप्रधानकम् ॥

---

ஆங்கே அநுஸந்தாநம் செய்வதாலும், இந்த த்வயம் ப்ரபத்தியநுஷ்டா நத்திற்கான மந்த்ரமே யாகையால் ஒரு வாக்யமாகவே கொள்ளப்படு மென்கிறார் इदमिति இந்த த்வயத்தை व्यासे—श्रीमन्नारायण चरणौ என்பதை மூன்று பதமாகப் பிரித்தபோது எட்டு பதங்கள் உடையதாகவும். समासे= பிரிக்காமல் சேர்த்தபோது ஆறு பதங்கள் உடையதாகவும் அறிகின்றனர். इति இப்படி ஐந்துபதங்களோடுசேர்ந்ததாய் आख्यातமென்கிற க்ரியாபதத்தை ப்ரதாநமாகவுடையதுமான வாக்யமாகும் இது என்று இதற்கர்த்தமாகிறது—

இதன்மேல் கேள்வியெழும்—இந்த ச்லோகம் எதற்காக? சாஸ்த்ரகாரர் களில் தார்க்கிகர் प्रथमान्तार्थमुख्यविशेष्यமாக शाब्दबोधம் கூறுவர்; வையாகரணர் धात्वर्थ क्रिया मुख्यविशेष्य மென்பர்; மீமாம்ஸகர் க்ரியாபதத்தின்மேலுள்ள तिङ्विभक्त्यर्थமான भावना मुख्यविशेष्यமென்பர். அது போல் நம் ஸித்தாந்தத்தில் ஒரு ரீதியைக் குறிப்பதற்காக இந்த ச்லோகமென்னில்—இந்த விசாரம் எல்லா வாக்யத்திலும் செய்யலாம். द्वयाधिकारத்திற்கும் இதற்கும் என்ன ஸம் பந்தம்? ஆகையால் இது ப்ரக்ஷிப்தம் போல் தோன்றுகிறது, மேலும் எட்டு பதங்களென்பதும் ஆறு பதங்களென்பதும் ஸம்ப்ரதாயஸம்மதமாகில் உத்தரார்த்தத்தில் ஐந்து பதங்களும் आख्यातமுமென்று சொன்னது எங்ஙனே பொருந்தும்? पञ्चपदैः என்ற விடத்தில்பொதுவாக अन्यपदैः என்றன்றோ இருக்கத் தகும். पञ्चपदैः என்பது ஸாதுவுமாகாது. 'संख्यापूर्वो द्विगुः' என்று த்விகுஸமாஸம் வேண்டுமே. மேலும் आख्यातशब्दத்தாலே தாதுவைக் கொள்வதா; அதன்மே லுள்ள ப்ரத்யயத்தைக் கொள்வதா. நம் ஸித்தாந்தத்தில் लकारार्थ कर्तृ कर्मविशेष्यकबोधமே ஸம்மதமாகும். भावनादि मुख्य विशेष्यकबोधம் ஸம்மதமன்று. இது सेश्वरमीमांसा. सर्वार्थसिद्धि—न्यायपरिशुद्धिகளில் கவனிக்கத்தக்கது இந்த விசேஷம் பொதுவாக आख्यातपदप्रयोगத்தால் எப்படி அறியப்பெறும். மேலும் नमः என்ற சொல்லுக்கு இரண்டு பதமாகப் பிரித்தே பொருள் கூறியிருப்ப தால் பதங்கள் ஒன்பது அல்லது ஏழாகும். अष्टपदं षट्पदं पञ्चपदैः என்பது எங்ஙனே பொருந்தும் என்றவாறு.

இதற்கு ஸமாதாநம்—द्वयोपनिषत्தில் षट् पदानि என்று தொடங்கி नवाक्षरं प्रथमपदமென்றும் द्व्यक्षरः षष्ठः, दशमो द्व्यक्षरः என்றும் கூறியிருப்பதால் முதற் பதம் ஸமஸ்தமென்றும் நம: என்பது ஒரே பதமென்றும் தெரிகிறது. இதனால் द्वयं षट्पदमென்ற பக்ஷமே வேதஸம்மதமாகிறது. இவ் வதிகாரத்தின் முதலில் இவ் வாசார்யன் பல வாக்யங்களைக் கொண்டு வ்யஸ்த மென்ற பக்ஷத்தையும் எடுத்திருந்தாலும் ஸமாஸபக்ஷத்தையே ஆதரித்தா ரென்பது அங்குள்ள ஸூக்தியாலும், கடையில் இரண்டு பொருள் கூறும் வாக்யந்தாலும் தெரிய வருகிறது அதற்கிணங்கவே இங்கும் पञ्चपदैः என்றருளினர். पूर्वग्रन्थத்தில் இரண்டு பக்ஷங்களைச் சொல்லியிருக்க पञ्चपदैः என்னலாமோ வென்னில். இந்த ச்லோகம் षट्पदपक्षस्थापकமென்றே கொண்டு தக்கவாறு உரைக்க

வேண்டும். முழுச்லோகம் ஒரே வாக்யம்; एतमित्यादि (உத்தரார்த்தமும்) द्वितीयान्तम्.
அந்வயக்ரமம் இவ்வாறு—व्यासे अष्टपदमिदं—வ்யாஸத்தில் எட்டு பதங்களு
டையதான இந்த द्वयத்தை ஸமாஸத்தைக் கொண்டு ஆறு பதமுடையதா
கவும் அதனாலேயே पञ्चपदैः आख्यातம் தவிர ஐந்து பதங்களோடு கூடியதாய்,
इति = கீழே திரண்ட பொருளிற் கூறிய ப்ரகாரம் आख्यातप्रधानकम्-க்ரியா பதத்தை
ப்ரதாநமாகவுடையதுமான वाक्यम्—வாக்யமாக विदुः—அறிகின்றனர்.
ச்ருதியில் ஆறு பதமாகவே ஓதியிருப்பதாலும் வ்யாஸபக்ஷத்தில் तव, ते என்று
அத்யாஹாரம் கல்பிக்க வேண்டியிருப்பதாலும் एभिरणादिमन्त्रம் போலே
மந்த்ரமெல்லாம் விளிச்சொல்லோ டிருக்க வேண்டுமென்ற நிர்பந்தமில்லை
யாகையாலும், அநுஷ்டாநகாலத்தில் எம்பெருமானை விளித்து அநுஷ்டிப்
பதாலும் திரண்ட பொருளை யநுஸந்திக்கும்போது விளிச்சொல் அநாவச்
யகமாகையாலும் षट्पदபக்ஷமே தகும். பட்டரும் அஷ்டச்லோகியில் 'षट्-
पदोऽयं द्विखण्डः' என்று षट्पद பக்ஷத்தையே யருளியிருக்கிறார். அப்போது
नमः என்பதை இரு பதங்களாகப் பிரித்தல் தகுமோ வென்னில்—பிரிக்
காமற் போனாலும் நமச்சப்தம் த்யாகபரமாகலாம். व्युत्पत्तिवादத்தில் 'नमस्स्वस्ति'
என்கிற ஸூத்ரவ்யாக்யாநத்தில் नमः என்பதற்கு, 'त्यागம் செய்கிறேன்',
'ப்ரணாமம் செய்கிறேன்' என்று இரு பொருள்கள் கூறப்பட்டன. நமச்சப்தம்
स्थूलानुसन्धानத்தில் ஸமர்ப்பணபரமென்று இங்கும் கீழே உரைக்கப் பெற்றது.
அங்கு मम ஸமாநார்த்தகமாய் ஆத்மஸமர்ப்பணம் விஷயம்; व्युत्पत्तिवादத்தில்
சொன்னது பொதுவாக த்யாகம். அதைத் தெளிவிப்பதற்காக இரு பதங்
களாகப் பிரித்து உரை செய்தாலும் ஒரே பதமாயிருந்தும் அப் பொருள்
படுவதால் ச்ருதியில் ஏகபதமென்றது. ஆக, 'பதங்களெட்டு என்ற பக்ஷத்தை
யநுஸரித்துத் திரண்ட பொருள் கூறவில்லையே' என்கிற ஆசங்கையில்
षट्पदபக்ஷமே ஸம்ப்ரதாயத்தில் ஆசார்யர்களால் விசேஷமாக ஆதரிக்கப்
பட்டதாமென்ற பரிஹாரம் இந்தச்லோகத்தால் அருளுகிறார். திரண்ட பொருள்
கூறியவுடன் இந்தக் காரிகையே முதலிலிருக்கலாமே யென்னில்—இருக்கு
மாகில் கொள்க. இங்கே தகும், पूर्वश्लोकार्थமும் இதற்கு ஹேதுவாமே.
आख्यातप्रधानकமென்றதால் शाब्दबोधத்தில் எது முக்யவிசேஷ்யமென்பதைத்
தெளிவிக்கிறாரென் பதில்லை. வாக்யம் பலவாயிருந்தாலும் அநுஷ்டாநத்திற்
கான மந்த்ரத்திற்கு அநுஷ்டிக்கப்படும் க்ரியையைத் தெரிவிப்பதில் நோக்
காகையால் இதரவாக்யார்த்தத்தை யதற்கு விசேஷணமாக்கித் திரண்ட
பொருளில் கூறியபடி க்ரியையில் முடிக்கவேண்டுமென்பதே கருதப்பெறும்.
पञ्चपदैः என்கிற விடத்தில் द्विगुसमासமே வேண்டுமென்கிற நிர்பந்தமில்லை.
त्रिलोकादिசப்தங்கள் போலே பலவிடங்களில் இத்தகைய ப்ரயோகமிருப்பது
கண்கூடு. ஸமாஸமின்றி வாக்யம் போலே द्विगुसमासமன்றி வேறு ஸமாஸமும்
லோகஸித்தம். द्विगुसमासविधि अपूर्वविधिயாகட்டுமே. லோகப்ரஸித்தத்தை बाधि
க்கலாகாது. இதைக்கொண்டுச்லோகம் ப்ரக்ஷிப்தமென்று ஊஹிக்கலுமாகாது.

एकं द्वयं त्र्यवयवं सुखलभ्यतुर्यं व्यक्तार्थपञ्चकमुपात्तषडङ्गयोगम् ।
सप्तार्णवीमहिमवत्विवृताष्टवर्णं रङ्गे सतामिह रसं नवमं प्रसूते ॥

ஓதுமி(தியி)ரண்டை யிசைந்(த்)தருளா லுதவுந் திருமால்
பாதமிரண்டுஞ் சரணென பற்றி நம் பங்கயத்தாள்
நாதனை நண்ணி நலந்திகழ் நாட்டி லடிமையெல்லாம்
கோதிலுணர்த்தியுடன் கொள்ளு மாறு குறித்தனமே 35

த்வயமென்றே பெயரானாலும் எல்லா எண்ணிக்கையும் அடங்கும்படி. விசேஷ மஹிமையுள்ளது இதென்கிறார் ஏகமிதி. ஏகம்—ஒரே மந்த்ரமாய், த்வயம்—இரண்டு கண்டமுடையதாய், உபாயோபேயங்களிரண்டைச் சொல்லுவதாய், த்ரி—அவயவம் அவாந்தர வாக்யங்கள் மூன்றை யுடையதாய், ஸுகலப்யதுர்யம்—தன்னை ஒருதரம் சொன்னதாலேயே அடையக்கூடிய மோக்ஷபுருஷார்த்தத்தையுடையதாய் வ்யக்த-அர்த்தபஞ்சகம்—ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபமித்யாதி ஐந்து அர்த்தங்களை வ்யக்தமாக வுடையதாய் உபாத்தஷடங்கயோகம்—ஷடங்கமென்கிற ப்ரபத்தியாம் உபாயத்தைச் சொல்வதாய் ஸப்தார்ணவீமஹிமவத் ஏழுகடல்களின் சேர்க்கைக்கு மேல்மிகவும் ஆழமாய் விவ்ருத அஷ்டவர்ணம்—அஷ்டாக்ஷரத்தை விவரிக்கிறதுமான இது ரங்கே பல ரஸாநுபவத்திற்கிடமான இந்த ப்ரக்ருதிமண்டலத்தில் ஸதாம்—நல்லோர்க்கு—ப்ரஹ்மஜ்ஞாநிகளுக்கு நவமம் ரஸம்—சாந்தி ரஸத்தை ப்ரஸூதே—உண்டுபண்ணுகிறது. ரங்கே என்பதற்கு ச்ரீரங்கத்தில் என்றும் பொருள் கொள்வதாம். பாஷ்யகாரர் ப்ரபத்தி யநுஷ்டித்த இடமாகையால் அதற்கு விசேஷம். ரங்கத்திலிருப்பவர்கள் பல ரஸங்களை யநுபவிப்பவரானாலும் த்வயம் கிடைத்த பிறகு அவர்களுக்கு சாந்தி ரஸமே போக்யமாயிற்றென்றபடி. இந்த க்ரந்தத்தொடக்கம் திருக்கச்சியில்; முடிவில் ச்ரீரங்க ப்ரஸ்தாவம் வரப்போகிறது ஆக இந்த பாகம் ச்ரீரங்கத்தில் அருளியதென்ற குறிப்பும் கொள்ளலாம்.

த்வயத்தின் பொருளை ஸங்க்ரஹித்துப் பாட்டால் அதிகாரார்த்தத்தை நிகமிக்கிறார். ஓதும் இதி. ஓதும்—கட சருதியில் பிரித்து ஓதப்பெற்ற. இரண்டை—இரண்டு கண்டங்களை இசைந்து—மோக்ஷ ஸாதநமாகக் கொண்டு அருளால்—தயையினால் உதவும்—நமக்கு உபகரிக்கும்—இசைந்து என்பதற்கு சேர்த்து என்றும் பொருளுரைப்பர். பூர்வோத்தர பாகங்களாக இஷ்டப்பட்டு என்றும் உரைக்கலாம் சேர்த்து என்ற பொருளுக்கேற்ப இசைத்து என்ற பாடமும் கொள்வர். ஓதும் என்றவிடத்தில் ஓதி யென்றும் பாடமுண்டு இரண்டைப் பிரித்து ஓதிச் சேர்க்க இசைந்து அதன் உச்சாரணமாத்ரத்தாலே மோக்ஷமென்று அருள்புரிந்து உதவுகின்ற என்றதாயிற்று. திருமால் பிராட்டியினிடம் வ்யாமோஹம் கொண்டவனின் பாதமிரண்டையும் சரண்—நமக்கு உபாயம் என=என்று பற்றி=ஆச்ரயித்து நாம் செய்யும் கைங்கர்யத்திற்கு இலக்கான பங்கயத்தாள்—அவர்

न वेदान्ताच्छास्त्रं न मधुमथनात् तत्त्वमधिकं
न तद्भक्तात् तीर्थं न तदभिमतात् सात्त्विकपदम् ।
न सत्त्वादारोग्यं न बुधभजनात् बोधजनकं
न मुक्तेः सौख्यम्, न द्वयवचनतः क्षेमकरणम् ॥

---

மேல்மங்கையின் நாதனை, நலம் திகழ் நாட்டில்=ஆநந்தமே அளவற்று விளங்கும் பரமபதத்தில் நண்ணி—கிட்டி அனுபவித்து, அடிமை எல்லாம்-ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்த்தோசித கைங்கர்யங்களையும், போது இல் உணர்த்தியுடன் स्वार्थकर्तृत्वभोक्तृत्वங்களாகிற குற்றமறும் விவேகத்துடன், கொள்ளும் ஆறு-பெறும் வகையை, குறித்தனம்—இவ்வதிகாரத்தில் நிருபித்தோம். திரு என்ற சொல் தொடங்கி உணர்த்தியுடன் என்றவரையிலான சொற்களால் அடைவாக த்வயத்தின் சொற்களின் பொருள் கூறப்பெறும்.

கீழ ச்லோகத்தில் இம் மந்த்ரம் प्रपत्तिप्रधानமென்றதால் அநுஷ்டாந காலத்தில் प्रपद्ये என்பதை ப்ரதாநமாக்கி ஏகமஹாவாக்யமாக்க வேண்டுமென்றருளினர். இப் பாட்டில் प्रपत्तिயை அப்ரधानமாக்கி फलांशத்தை ப்ரதாநமாகப் பணித்ததால் உத்தரखण्डத்தை ப்ரதாநமாக்கியது தெரிகிறது. இதனால் ப்ரபத்தியை யநுஷ்டித்த பிறகு सदा द्वयार्थानुसन्धानத்தில், 'திருமால் திருவடியில் ப்ரபத்தி செய்திருக்குமெனக்குப் பலன் அவன்விஷயமான கோதற்ற ஸர்வவித கைங்கர்யம்' என்று அநுஸந்திக்கை பொருந்துமென்று தெரிய வருகிறதெனக் கருத்துரைப்பர். இதனால் प्रपद्ये என்கிற வர்த்தமாநகாலத்தைப் பிற்காலத்தில் விட்டு அநுஸந்திக்க வேண்டுமென்பதே இங்கு ஸாராம்சம்; ப்ரபத்தியானது மந்த்ர ப்ரதாநார்த்தமாகாதென்பதில்லை

மற்ற மந்த்ரங்களை விட द्वयத்திற்கு ப்ராதாந்யம் வாஸ்தவமென்று ஸ்தாபிக்கிறார் முடிவான ச்லோகத்தினால் नेति. சாஸ்த்ரங்களுக்குள் வேதாந்தத்திற்கு மேலான சாஸ்த்ரமில்லை. अधिकं என்ற பதத்தை ஒவ்வொரு வாக்யத்திலும் சேர்க்க. தத்துவங்களுக்குள் मधुसूदनனுக்கு மேலான தத்துவமில்லை பரிசுத்தி செய்யும் பதார்த்தங்களுக்குள் பகவத்பக்தருக்கு மேலான தீர்த்தமில்லை. வாஸம் செய்வதற்த ஸாத்துவிகமான ஸ்த்தாநம் பாகவதர் அபிமானித்த ஸ்தலந்திற்கு மேம்பட்டதில்லை ஆரோக்யத்தை யளிக்கும் வஸ்துக்களுக்குள் ஸத்துவத்துக்கு மேம்பட்டதில்லை. அறிவுக்குக் காரணமானவற்றில் ஜ்ஞாநிகளை யாச்ரயிப்பதற்கு மேலொன்றில்லை. ஸுகமென்கிற புருஷார்த்தங்களில் மோக்ஷத்திற்கு மேம்பட்டதில்லை, இவ் விஷயங்கள் ஸர்வ ஸம்மதமானவை. இவை போலவே சிறந்த க்ஷேமத்திற்குக் கருவியானவற்றில் द्वयोच्चारणத்திற்கு மேம்பட்டதில்லையென்பதும் பரமார்த்தம். ஸித்தஸாத்யோபாயோபேயங்களை விஸ்டஷ்டமாகச் சொல்வது இதே; மோக்ஷபலத்தையும் பிரித்து விளக்குகிறது. பலத்தோடு நன்குரைப்பதால் இதே पूर्वप्रपत्तिसम् ச்ரௌதமுமாகிறது.

முதற் பாதத்தில் ப்ரமாணத்தையும் அதமூலமாம் ப்ரமேயத்தையும் அருளி ஞர். மேலே அவன்மூலமான பக்தப்ரபாவத்தையும் அவர்மூலமான ஸ்தலப் பெருமையையும்; 3ம் பாதத்தில் அந்தச் சேர்க்கைமூலமான ஸத்துவத்தை யும் அதமூலமான அறிவையும்; 4ல் அந்த ஞானமூலமான மஹாஸுக த்தையும் அருளி, அவற்றைப்போல் த்வயமும் மந்த்ரங்களிற்சிறந்ததென்ருர்.

இங்கே அடைவாக, 'वेदाच्छास्त्रं परं नास्ति, न दैवं केशवात् परम्', 'न ह्यम्मयानि तीर्थानि न देवा मृच्छिलामयाः। ते पुनन्ति उरुकालेन दर्शनादेव साधवः', 'निगृहीतेन्द्रियग्रामो यत्रयत्र वसेन्नरः। तत्रतत्र कुरुक्षेत्रं नैमिशं पुष्करं तथा ॥', 'तत्र सत्त्वं निर्मलत्वात् प्रकाशकमनामयम् ।', 'सद्भिरेव सहाऽऽसीत', 'आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत्', 'स एको ब्रह्मण आनन्दः; श्रोत्रियस्य चाकामहतस्य', 'सर्वेषामेव मन्त्राणां मन्त्ररत्नं शुभावहम्...स हि स्मरणमात्रेण ददाति परमं पदम् ॥' द्वयात् परतरो मन्त्रो नास्ति वेदेष्वशेषतः। இத்யாதிவசநங்களை யாதாரமாகக் கொள்க. கீதாபாஷ்யத்தில் 16–6. अनामयம் என்ற சொல்லுக்கு अरोगताहेतुः என்று வ்யாக் யாநம். रजस्तमोगुणங்கள் பாபமூலமாக ரோகத்திற்குக் காரணம். ஸத்துவம் அவ்வாறின்றி ஆரோக்ய காரணம் ஆக இங்கே ஆரோக்யமென்ற பதத்திற்கு न विद्यते रोगः यस्मात् तत् अरोगम् अरोगमेव आरोग्यம் என்றவாறு பொருளாம்.

பக்தியைவிட ப்ரபத்தி ப்ராரப்தகர்மத்திற்கும் நாசகமாகையாலே சிறந் ததாகும். அதே த்வயவசனம். द्वयोच्चारणமென்று उक्तिनिष्ठையைக் கொள்வதாகில் ப்ரபத்தியைவிட லகுவாயிருந்தும் அதைப்போல் பலனை அதில் அநதிகாரிக்கும் அளிப்பதால் சிறந்ததென்க. सकृदुच्चारः संसार मोचनं भवति என்கிற ச்ருதி க்குப் பொருள் எவ்வளவோ அவ்வளவையுமிங்குக் கொள்க

இங்கே த்வயோச்சாரணத்திற்கு மேலான மோக்ஷஸாதநமில்லையென்ற தால் ப்ரபத்தியைவிட த்வயோச்சாரணம் சிறந்ததென்னவேண்டா. ப்ரா ரப்த கர்மங்களையும் போக்கிப் பலன் கொடுப்பது ப்ரபத்தி. அதைவிட அதிக பலன் த்வயத்திற்கென்பதில்லை. மேலும் த்வயம் சரணமந்த்ரமாய் ப்ரபத்திக்கு அங்கமேயாகும். பக்திக்கு ப்ரபத்தி அங்கமானாலும் ஸ்வதந் த்ரமுமாவது போல், த்வயோச்சாரணம் ப்ரபத்திக்கு அங்கமாகச் சிலருக்கு ஆனாலும், சிலருக்கு ஸ்வதந்த்ரமாகலாமென்பதில்லை. இவ்வாறு 'सकृज्जप्तेन मन्त्रेण कृतकृत्यः सुखी भवेत्', 'प्रपत्तिवाचैव नरीक्षितुं वृणे' இத்யாதிகளைக் கொண்டு சங்கித்து, அந்த உச்சாரணம் பின்னே ப்ரபத்தியை யுண்டாக்கித்தான் மோக்ஷஸாதநமென்று, मन्त्राख्यं मुक्तिबीजं परिणतिवशतः फलते सत्फलाय என்று ந்யாஸவிம்சதியிலருளி, मन्त्रोच्चारणादिकं यथावस्थितप्रपत्त्यनुष्ठानमुत्पाद्य तन्मुखेनैव मुक्तिं साधयति என்று விவரணம் செய்து अनेनैव तु मन्त्रेण स्वात्मानं मयि निक्षिपेत्। मयि निक्षिप्तकर्तव्यः कृतकृत्यो भविष्यति என்று ப்ரமாணத்தையும் உதா ஹரித்தார். सकृज्जप्तेन मन्त्रेण कृतकृत्यः என்பதற்கு மந்த்ரம் செய்யும் கார்ய விஷயத்திலே இந்த மந்த்ரத்தை ஒருதரம் சொல்வதேபோதும்; மந்த்ரஸித்தி

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे द्वयाधिकारोऽष्टाविंशः ॥ 28
श्रीमते निगमान्तगुरवे नमः

---

முதலானவை வேண்டா என்றே கருத்தாகும். சிலர் ஆசார்யோச்சாரணானுச்சாரணமென்பதால் உபதேசகாலத்தில் உச்சாரணமே போதுமென்பர். ஜபதம் பிறகுவரும் உச்சாரணமென்று தெரிவிக்கும் सदाहेतुमकृज्जपेन सकृत् काले द्वयेन विपन् என்று மோக்ஷார்த்தம் ஸங்கல்ப்பித்து அனுஷ்டிக்கிற போது ஒருதரம் ஜபம் வேண்டுமென்றறிவித்தார். येनकेनापि प्रकारेण द्वयवक्ता என்ற எம்பெருமானாரும் முன்னே शरणमहं प्रपद्ये என்று ப்ரபத்தியனுஷ்டானம் செய்திருப்பதால் ப்ரபத்தியோடு சேர்ந்த द्वयवचनமே மோக்ஷஹேதுவாம். प्रपत्तिर्वाचैव என்ற உக்திநிஷ்டாஸம்ப்ரதாயவாக்யத்தை யெடுத்து அதுவும் பின்னே ந்யாஸத்தை உண்டுபண்ணியே மோக்ஷஸாதன மென்று ந்யாஸவிம்சதியில் விவரித்ததால் உக்திநிஷ்டையிலும் மந்த்ரோச்சாரணத்திற்குப் பிறகு ப்ரபத்தி யனுஷ்டிக்க வேண்டுமென்று தெரிகிறது. த்வயோபநிஷத்தில் सकृदुच्चारः संसारविमोचनं भवति ; एतन्मन्त्रस्य प्रपत्तिः என்று ஸ்பஷ்டமாயிருக்க அதை விட்டு ஏன் இப்படி கூறுவதென்னில்—ப்ரபத்தியானது விசதஜ்ஞானமுள்ளவனுக்கும் ஸமுதாயஜ்ஞானமுள்ளவனுக்கும் மோக்ஷஸாதநமென்று द्वयं शरणमद्यानामिदमेव विजानताम् இத்யாதிகளில் ஸித்தம். மந்த்ரமானது அநுஷ்டேயார்த்தப்ரகாசகமென்பதும் ப்ரமாணஸித்தம். உலகில் ப்ரபத்தியானது மந்த்ரமிராமலே फलप्रदமெனக் காண்பதால் சாஸ்த்ரவிஹிதமான ப்ரபத்தியும் மந்த்ரமின்றியே மோக்ஷமளிக்கு மென்று நினைக்க வேண்டா; ஐந்து அங்கங்களைப் போல் மந்த்ரோச்சாரணமும் அங்கம் இது மோக்ஷத்திற்கு முக்கியமென்பதற்காக मन्त्रोच्चारणं संसारविमोचनமென்றது. ஆனால் மந்த்ர ஸித்தி முதலானவை வேண்டுமோ என்ன सकृदुच्चारः என்றது. ப்ரபத்திக்குப்ரமாணமாகவே த்வயோபநிஷத்தையெல்லோருமெடுப்பதாலும் பாஞ்சராத்ரமும் ஸம்ப்ரதாயஸூக்திகளும் ப்ரபத்தி செய்யவேண்டுமென்று ஸ்பஷ்டமாகச் சொல்வதாலும் இது த்வயமூலமான ப்ரபத்தியைத்தான் கருத்திற் கொண்டதாகும் व्रीहिभिर्यजेत என்கிற வாக்யத்திற்கு அரிசிவாயிலாக வ்ரீஹி யாகஸாதனமெனப் பொருளானாலும் व्रीहि भः என்றிருப்பதால் சிலருக்கு நெல்லே நேராக ஸாதநமாகலா மென்பது போலவாகும் த்வயமே நேராக மோக்ஷஸாதநமென்பது. ப்ரபத்திக்கு த்வயத்திற்கு மேம்பட்ட மந்த்ரமில்லை யெனவுரைப் பொருந்தும். மற்றும் சில மந்த்ரங்களும் இப்படிக் கொண்டாடப் பட்டிருந்தாலும் இது ச்ரௌதமாய் பெரியபிராட்டியாரிடம் பெருமாள் கூறியதுமாகையால் விசேஷமாக மதிக்கத்தக்கதாகுமென்க.

अभिनवदेशिक श्रीवात्स्यवीरराघवाचार्यன் இயற்றும் ஸாரவிஸ்தரத்தில்
த்வயாதிகாரம் (28) முற்றும்.
ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

ஸ்ரீ:

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

चरमश्लोकाधिकारः 29.

சரமச்லோகாதிகாரம்-29

य उपनिषदामन्ते, यस्मादनन्तदयाम्बुधेः त्रुटितजनताशोकः श्लोकः त्वयं समजायत ।
तमिह विधिना कृष्णं धर्मं प्रपद्य सनातनं शमितदुरिताः शङ्कातङ्कत्यजः सुखमास्महे ॥

---

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம.

சரமச்லோகாதிகாரம்-29.

மூன்றாவது ரஹஸ்யமான பகவத்கீதாச்லோகத்தில் पदवाक्ययोजनैयை யருளத்தொடங்குகிறார் य இதி. முதல்ச்லோகத்தில் அதிகாரார்த்த ஸங்க்ரஹம். यः—எந்த பரமாத்மா उपनिषदां—வேதாந்தங்களுக்கு अन्ते—ஸமீபத்தில் விளங்குகிறானோ; எல்லா வேதாந்தங்களாலும் நேராகச் சொல்லப்படுகிறானோ என்றபடி. श्रुतिशिरसि विदीप्ते என்றருளினார். उपनिषत् என்கிற சொல்லுக்கும் ब्रह्मणि उपनिषण्णत्वाद्वा उपनिषत् என்று தானே ப்ராசீந வ்யாக்யாநம். अथवा अन्ते=முடிவில். ஒவ்வோர் உபநிஷத்தின் முடிவிலும் எவன் உபாயமாகவும்-ப்ரபத்திக்கு இலக்காகவும் ஓதப்பட்டிருக்கிறானோ வென்றதாம். இதனால், கீதாசரமச்லோகத்திற்கு உபநிஷத்துக்களிலுள்ள சரம(கடைசி) பாகம் ப்ரமாணமென்று குறித்தபடி. ஈசாவாஸ்யத்தில் முடிவு பகவானே உபாயமென்றதாக ப்ரபத்திபரமாக ஸ்ரீதேசிகனின் பாஷ்யத்தில் வ்யக்தம்; மஹா நாராயணீயத்தில் விரிவு; छान्दोग्यத்திலும் श्यामात् शबलं प्रपद्ये இத்யாதி முண்டகத்தில் नायमात्मा என்கிற ச்ருதி. தைத்திரீயத்தில் முடிவில் ந்யாஸ வித்யையே மிக விரிவாக உளதென்றெல்லாம் வேறிடத்தில் விளக்கியிருக்கிறோம். இப்போது இரண்டு यच्छब्दங்களுக்கும் तम् என்பது प्रतिनिर्देशம். यद्वा यः என்பது சரமச்லோகத்திற்கு விசேஷணம். उपनिषदां अन्ते என்பதற்கு भगवद्गीतासु उपनिषत्सु என்று சொல்லப்பட்ட கீதாச்லோகங்களின் முடிவிலென்று பொருள். இந்த पक्षத்திற்கு ப்ரதிநிர்தேசமான பதத்தை उत्तरार्ध வ்யாக்யாநத்தில் காண்க. अनन्त—அளவற்ற க்ருபைக்குக் கடலான எவனிடத்திலிருந்து त्रुटित...ஜநஸமூஹத்தின் சோகத்தைப் போக்கக்கூடிய सर्वधर्मान् परित्यज्य என்ற எந்த ச்லோகமானது स्वयं=தானாகவே-பக்தியோகாதிகளைக் கேட்ட அர்ஜுநன் அவை தனக்கு சக்யமல்லவென்று தொந்திருந்தும் வேறு லகுவான உபாயம் அருளவேணுமென்று கேட்காமலிருக்கும்போதே, நயையினாலேயே समजायत—பொருள்விளங்க உண்டாயிற்றோ. तं-அந்த सनातनं धर्मं-ஸித்தோபாயமாய் பக்தி ஸ்தாநத்திலிருப்பவனுமான க்ருஷ்ணனை विधिना சாஸ்த்ரப்படி इह-இப் பிறவியில் प्रपद्य-சரணமாகவடைந்து शमितदुरिताः-இஷ்டப்படி ஸஞ்சித—ப்ராரப்தகர்மங்கள் போக்கப்படவாகி शङ्का-आतङ्कत्यजः-मा शुचः என்றபடி நிஸ்ஸம்சயராய் நிர்பயராய் सुखं ஸுகமாக आस्महे இருக்கிறோம்.

दुर्विज्ञानैर्नियमगहनैर्दूरविश्रान्तिदेशैः बालानर्हैर्बहुभिरयनैः शोचतां नः सुगम्याः ।
निष्प्रत्यूहं निजपदमसौ नेतुकामः स्वभूम्ना सत्पाथेयं किमपि विदधे सारथिः सर्वनेता ॥

---

पः என்பது ச்லோகபரமாகில் इह—இந்த ச்லோகத்திலுள்ள विधिना = शरणं व्रज என்ற விதிப்படி யென்று பொருளாம். जनता என்ற பதத்தாலே, பக்தி யோகம் சிலரே செய்யக்கூடும்; செய்யாதவர்க்குப் फलप्रஸக்தியில்லை; ப்ரபத்தி பலரநுஷ்டிக்கக் கூடியது; பிறருக்காகவும் அநுஷ்டிக்கக்கூடியது; ஒரு ப்ரபத்தியே ஜநஸமூஹத்திற்கு சோகத்தை நீக்கும்' என்றதாம்.

இப்படி ப்ரபத்தியை விதித்தால் गुरुவான பக்தியோகத்தில் யாரும் இழியாரே; அப்போது உபநிஷத்துக்கள் பல வித்யைகளை உபதேசித்தது வீணுகுமே யென்ன—இந்த ச்லோகமே அசக்தருக்கே ப்ரபத்தியில் அதிகார மென்று தெரிவிக்கிறதென்கிறார் दुर्विज्ञानैरिति. दुर्विज्ञानैः விசேஷமாக அறியப் படமாட்டாதவையும் नियमगहनैः அநேக ஜந்மங்கள் அங்க லோபமிராமலும் யோகத்துக்கு வேண்டிய நியமங்களுடனும் செய்யவேண்டியிருப்பதால் அசக்யங்களாயும் दूरविश्रान्तिदेशैः உபாயத்தை முடித்துக் களைப்பற்றிருக்கை யென்பது,வெகுதூரத்திலிருக்கவானவையும்.பலன்எளிதிற்பெறவாகாதவையு மென்றபடி. இதனாலே बाल—नर्हैः அறிஞ்சநருக்குத் தகாதவையுமான बहुभिः—மூன்றான; பற்பலவாய் திகைக்கவுமான अयनैः மோக்ஷோபாயங்கள்காரண மாக; மோக்ஷோபாயங்களின் கீழ்க் குறித்த ஆகாரங்கள் காரணமாக என்ற படி; शोचतां வருந்துகிற नः—நமக்கு सुगम्याः—தானே நல்ல ஸ்த்ரமான உபாயமாகி असौ இந்த பகவான் सारथिः—அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்து கொண்டு सर्वनेता—எல்லோரையும் நியமிக்கின்றவனாய் எல்லாப் பலனும் பெறுவிக்கின்றவனுமாகி स्वभूम्ना—தன் ஸ்வாதந்த்ர்ய—ஸஹஜகாருண்யாதி ஸ்வபாவத்தாலே निष्प्रत्यूहं தடையின்றி निजपदं—தனது நித்யவிபூதியை नेतुकामः—அடைவிக்க விரும்பினவனாய் किमपि—ஒப்பற்ற सत्पाथेयं—சிறந்த வழியுணவை (கட்டுச்சோற்றை) विदधे—சரமச்லோகத்தில் விதித்தருளினான்.

முதற்பாதத்தில் மூன்று விசேஷணங்களால் முறையே அஜ்ஞாநமும் அசக்தியும் फलविलम्बासहत्वமும் சோக காரணமென்று குறித்ததாம. बालानर्हैः சோறு செய்ய அறிவும், சக்தியும், காலதாமதப் பொறுமையுமில்லை யென் பது மட்டுமன்றி அதற்குத் தக்க வயதுமிராத பாலர்கள் போல் ஜ்ஞா நாதிகளைப் பெற அநுகூலமான பிறவியுமிராமையால் சாஸ்த்ராநுமத பக்தி யோக்யதை யிராதவர்கள் இங்கு பாலர்கள் என்னலாம். अयनैः என்று கர்ம யோகமும். ஜ்ஞாநயோகமும். பக்தியோகத்தின் உட்பிரிவுமாக மூன்றும் சொன்னதாம் सुगम्याः उपायान्तरनिरपेक्षமான ஸித்தோபாயம் निष्प्रत्यूहम्; உபாயம் க்ஷணமாத்ரத்திலாவதால் தடையின்றி தலைக்கட்டும்; பூர்த்தியான உபா யம் புண்யபாபங்கள் நேர்ந்தாலும் அழியாதென்றதாம. स्वभूम्ना—பக்தி ஸ்த்தாநத்தில் அவன் நிற்கிறபடியால் அவனுடைய ஸ்வபாவமே ஸங்கல்

ஒண்தொடியாள் திருமகளும் தானுமாகி
ஒரு நினைவா லீன்ற வுயிரெல்லா முய்ய
வண்துவரைநகர் வாழ வசுதேவற்காய்]
மன்னவற்(ர்க்)குத் தேர்ப்பாகனாகி நின்ற
தண்துளவமலர்மார்பன்தானே சொன்ன

---

ப்பத்திற்குக் காரணமாகிறது. पाथेयम्—வழியில் உண்பதற்காகப் பல ஸம்பார ங்கள் சேர்த்து போக்யமாகச் செய்யப்பட்ட அன்னவகை. இது இல்லத்தில் புசிக்கும் அந்நத்தைவிட போக்யமாய் பர்யுஷிதாதி தோஷமற்றதுமாயிரு க்கும். பக்தியோகம் க்ருஹாந்நம். ப்ரபத்தி வழிச்சோறு. க்ருஹாந்நத் திற்கு வ்யஞ்ஜந-உபஸேசநாதிகள் வேண்டும்; இதற்கு வேண்டா; ப்ரபத்தி ஸஹகாரிநிரபேக்ஷமென்றபடி. सद्यः என்றதால் வெகுகாலம் பசி வராதபடி செய்யும், ப்ராரப்தத்தையும் போக்குவதாலும் சிறந்தது. क्रियापि. ஸுகரமாய் ஸக்ருத் கர்த்தவ்யமாய் அநுபந்திகளுக்கும் பலனளிப்பதுமாய். सारथिः सर्वेषा—அர்ஜுநனுக்கு உபதேசித்தானாலும் கீழ குரூபாயांस्तां एवं सततयुक्ता ये என்று பொதுவாக உபதேசித்து அவற்றின் ஸ்தாநத்திலே இதை யுபதேசிப்பதால் இதுவும் எல்லோருக்குமே யாகும்.

எம்பெருமான் ஸாரதியாகி விநித்திருக்கிறானென்றாலும் புத்தாவதார த்தில் எல்லோரையும் எல்லாப் பாபத்திலிருந்தும் விடுவிக்கிறே னென்றது போல் இது கபடப்பேச்சாமோ வென்கிற கேள்வியில்—இவ்வவதாரம் உலகநன்மைக்காக வேற்பட்டது; உறவாயிருந்து உபதேசித்திருக்கிறான் वेद ஸ்ம்ருதி பாஞ்சராத்ரங்களிலே சொன்ன விஷயமே சொல்லப்பட்டிருக்கிறது பிராட்டியுடன் அஜ்ஞாநமூலமான செயலைப் போக்குவது மாகிறது அவனோடு பரமஸாம்யமும் பெறவாகிறது. ஆகலால் बुद्धोपदेशम् போலாகாதென்றாற் போன்றவற்றை யறிவிக்கப் பாசுரமிடுகிறார் ஒண் இதி. ஒண் தொடியாள்—அழகிய முன்கைவளைகளையணிந்த—ஸர்வாபரண பூஷிதையான திரு மகளும். பெரியபிராட்டியும் தானுமாகி—இருவரும் சேர்ந்து ஒரு நினைவால்—ஒன்றான இதற்கு முன் ஸ்ருஷ்டிகளைப் போல் ஏகரூபமுமான तदैक्षत बहु स्याम् என்ற ஸங் கல்பத்தால் ஈன்ற—படைக்கப்பெற்ற—உயிரெல்லாம்—எல்லா ஜீவாத்மாக் களும்உய்ய-உஜ்ஜீவிக்கும்படி. வண்-விலக்ஷணமான-பூமியில் பிறர்ராஜ்யமான மற்றவிடங்கள் போலன்றி தனக்கென்றே கடலினின்றெழுப்பப்பட்டு विश्व- कर्ममூலம் நிருமிக்கப்பட்ட துவரை நகர்—த்வாரகாபுரியானது வாழ—பரமபத வாழ்க்கை பெறும்படி. அல்லது துவரை நகரில் தான்வாழ்வதற்காக, வஸு தேவர்க்கு ஆய்-வஸுதேவருக்குக் குமாரனாக அவதரித்து, மன்னவற்கு-அரசு புரியத் தகும் பந்துவான அர்ஜுநனுக்கு தேர்ப்பாகனாகி நின்ற—தேரோட் டியாய் எல்லோரும் காணும்படி முன்னே வீற்றிருந்த, தண்துளவம் மலர் மார்பன்—குளிர்ந்த துழாய்மாலையைத் திருமார்பிலணிந்த ஸத்யவாதி ஸர்வே ச்வரன், தானே சொன்ன, வேதபாஞ்சராத்ராதிகளில் உபதேசித்திருக்கிற

தனிக்கருமம் தானெமக்காய்த் தன்னையென்றும்
கண்டு களித் தடிசூட விலக்காய் நின்ற
கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின்றானே. 36

---

தனி—ஸ்வாதந்திரமான (துணை வேண்டாத) கருமம்—ஸித்தோபாயமாக, தான் எமக்கு ஆய், சுயமாய் நமக்கானவனாய், என்றும்—எல்லாக் காலமும் தன்னை கண்டு—பரமபதத்தில் தன்னையனுபவித்து களித்து ஆநந்தமுற்று, அடிசூட—திருவடியை சிரஸா வஹித்துக் கைங்கர்யம் செய்வதற்கு விலக்கு ஆய் நின்ற—தடையாக அநாதியாயிருக்கிற கண்புதையல் விளையாட்டை=கண்களை மூடுவது முதலான பாலக்ரீடையை—அநாதி அஜ்ஞாந மூலமான ஸம்ஸார गतागतத்தை கழிக்கின்றான்—போக்குகின்றான். தானெமக்குத் தனித் தருமமாய் என்பதற்கு கழிக்கின்றானென்பதில் அந்வயம்.

பிராட்டியோடு சேர்ந்து உலகஸ்ருஷ்டியைச் செய்பவனே பரமபதம் போன்ற துவரைநகரில் தான் வாழ்ந்துகொண்டு எல்லோருக்கும் நல்வாழ்க்கையளித்தான். இப்படிகளே தார்மிகச்ரேஷ்டரான வஸுதேவரிடம் தோன்றினான். அதுமூலம் பந்துவான அர்ஜுநனுக்கு ஸௌசீல்யத்தாலே தேர்ப்பாகனானான், அவனுடைய நன்மைக்காகச் செய்த உபதேசம் கபடமாகாது. துளஸீமாலாதாரியாய்த் தான் ஏற்கனவே செய்த உபதேசமும் இதுவும் ஒன்றேயாகிறது. अमृतस्य एष सेतुः இத்யாதிகளிலே அவனே ஸநாதநதர்மமென்பது வ்யக்தம. சிறு பிள்ளைகள் கண்மூடப்பெற்று அதையே போக்யமாகக் கொண்டு விளையாடுவது போல் ப்ரஜைகள் ஸம்ஸாரத்திலுள்ள பரதத்த்வ பரமஹித பரமபுருஷார்த்த அஜ்ஞாநத்தையே பாராட்டி அதன் மூலம் ஸம்ஸாரத்தில் गतागतங்களை போக்யமாகவே நினைத்திருக்கிறார்களே யென்று வருந்தி இவர்கள் மூலமாகத் தனக்கு வரும் லீலாரஸாநுபவத்தை யொழித்து போகரஸாநுபவத்தைப் பெற விரும்பி இவர்கள் கண்ணைத் திறப்பதற்காகச் செய்த உபதேசமிது. இதுமூலம் கண் திறந்து பரமபதத்தைக் கண்டு கைங்கர்ய ஸாம்ராஜ்யம் எல்லோரும் பெறவேண்டுமென்று செய்த இவ்வுபதேசம் ஸர்வப்ரமாண ஸாரமாகையாலே விச்வஸிக்கத்தக்கதே யென்றபடி.

திருமகளும் தானுமாகிப் படைத்தவனே இவனென்பது एष नारायणः श्रीमान् இத்யாதிகளிலே வ்யக்தம். மன்னவர்க்கு என்று பன்மையாகில் ஆய் என்ற சொல்லை இங்கும் சேர்த்தால் பாண்டவர்களுக்கு தூதனாய் என்று மேலே சொல்லவதாம். மன்னவற்கு என்று ஒருமையாகில் அர்ஜுனனுக்கு என்று பொருள்,

இப் பாட்டிற் சொல்லியபடி ஈச்வரன் தனித்தர்மமாகை உண்டென்றாலும் ப்ரபத்தி ஸித்திப்பதென்? गीताशास्त्रத்தில் அருளியபடி அநுஷ்டிக்கும் பக்தி வ்யாஜமாத்ரமாய் ஈச்வரனுக்கே உபாயத்வமென்பதே சரமச்லோகார்த்தமாகலாமே; போர் புரிவது அவச்யமான தர்மமென்று ஸ்தாபிக்கும் கீதையில் அதற்கு ஸம்பந்தப்படாததாய் ஸர்வதர்மநிரபேக்ஷமான ப்ரபத்

'एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः । नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मधुरां पुरीम् ॥'
என்கிறபடியே अवाप्तஸமஸ்தகாமனான ஸர்வேச்வரன் साधुपरित्राण-दुष्कृद्विनाश-धर्मसंस्था-पनங்களுக்காக வண் துவராபதிமன்னனாய் (க?) (?)வந்து—அவதரித்தருளி सर्वसुलभனாய் 'द्रौपद्या सहिताः सर्वे नमश्चक्रुर्जनार्दनम्' என்கிறபடியே शरणागतரான பாண்டவர்களுக்கு இன்னார் தூதனென நின்று அர்ஜுநனை रथिயாக்கித் தான் सारथियாய் அவனுக்கு विधेयனாய் நின்ற வளவிலே,

இவ்வர்ஜுநன், தன்னை निमित्तमात्रமாகக்கொண்டு ஸர்வேச்வரன் தன் प्रतिपक्षங்களை நிரஸிக்க நின்ற நிலையைக் கண்டு बन्धुविनाशं सिद्धமென்று நிச்சயித்து अस्थानस्नेहத்தாலே பிறந்த शोकத்தாலும் अस्थानकृपैயாலும், आचा-र्यादिகள் युद्धोन्मुखரேயாகிலும் அவர்கள் वधத்தாலே பாபம் வருகிறதென்கிற भयத்தாலும் கலங்கி, எது ஹிதமென்று தெளியவேண்டுமென்று பார்த்து, 'यच्छ्रेयः

---

நியை விதிக்கத்தான் முடியுமோ என்ன—போர் செய்வதையும் முமுக்ஷு-வாய் ப்ரபத்தி செய்வதையும் இணைத்து இந்த ச்லோகத்திற்கு அவதாரிகை யருளிச் செய்கிறார் एव இதி. ப்ரக்ருதி மண்டலத்தில் திருப்பாற் கடலை இடமாகக் கொண்டு விளங்கும் திருமாலான நாராயணன் தான் வருவது எல்லோருக்கும் தெரியுமாறு தன் படுக்கையான ஆதிசேஷனை முன் விட்டு மதுரையில் அவதரித்தானென்று ச்லோகார்த்தமாம், துவராபதி என்பது द्वारवती என்பதின் திரிபாகலாம். அல்லது பதி—க்ஷேத்ரம். आगतः என்பதற்கு வந்து என்று உரை; அதற்குப் பொருள் அவதரித்தருளி என்பது இது வண் இத்யாதிக்கு முன் இருக்கலாம் மதுரையை விட்டு வைகுண்டம்போல் விலக்ஷணமாக த்வாரகையை நிருமித்து வாழ்ந்துகந்தது அவனுக்கு परैश्वर्यद्योतकबुद्धा
वतारविलक्षणமாக தர்மஸ்தாபநத்தைக் குறிக்கும். இவன் பஞ்சபாண்டவர்களுக்கு அநுகூலமாக நின்றதற்குக் காரணம் கூறுகிறார் द्रौपद्या இதி. இங்குச் சொன்னது राज्यापेक्षैயுடன் பஞ்சபாண்டவர்கள் செய்த சரணாகதி இன்னார் தூதன்-பாண்டவதூதன் ஸாரதியாகிறதோடு நிற்காமல் வேதாந்தோபதேசம் செய்தது நரனாய் ஆச்ரிதனான அர்ஜுநனின் நன்மைக்காக. அதுவும் அவன் ஆசார்யனாக வரித்ததால் என்றறிவிக்கிறார் இவ்வர்ஜுநனிதி நிமித்த மாத்ரமாக=அசேதந உபகரணதுல்யமாக, வ்யாஜமாத்ரமாக. இது கீதையில் निमित्तमात्रं भव सव्यसाचिन् (I. म) என்று பகவான் சொன்னதைக் கருதியாம். துர்யோதநனுக்கு बलக் குறைவினால் தனக்கபாயமென்ற பயமிருந்தது; அர்ஜுநனுக்குத் தனக்கு ஜயம் திண்ணமென்ற உறுதியிருந்தாலும் தர்மாதர்மபயம் முதலானவையிருந்தனவென்கிறார் अस्थाने इति 'अस्थानस्नेह कारुण्यधर्माधर्मभयाकुलं' என்று भयशब्दघटितமான பாடம் இங்கு ஆதரிக்கப்பட்டது க்ஷத்ரியர்களுக்கு எதிர்த்துப் போர்புரிய வந்தவர்களிடம் ஸ்நேஹமும் க்ருபையும் தகா; அதனால் अस्थानस्नेहकारुण्य என்றது. போரில் கொல்வது பாபமாகாதென்றாலும் ஆசார்ய விஷயத்தில் பாபமாகுமென்று 'कथं भीष्ममहं संख्ये द्रोणं च मधुसूदन । इषुभिः प्रतियोत्स्यामि पूजार्हावरिसूदन' என்றான்; அதைக் குறிக்க ஆசார்யேத்யாதி. यच्छ्रेय இதி.

स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्' என்று விண்ணப்பம் செய்ய,
அவனுடைய शोकத்தை निवर्तिप्பிக்கைக்காக—देहादिव्यतिरिक्तமாய்ப் परशेष-तैकस्वरूपமான नित्यात्मस्वरूपத்தையும், இஸ் ஸ்வரூபம் தெளிந்தவனுக்குப் परम-पुरुषार्थसाधनத்துக்குப் परम्पराकारணங்களான कर्मयोग-ज्ञानयोगங்களையும், साक्षादु-

---

அவர்களை நாம் வெல்வது சிறந்ததா, நம்மை யவர்கள் வெல்வது சிறந்ததா? அவர்களை வெல்வது அவர்களைக் கொன்றுதானுவதாம். சுற்றார் உறவினர்களைக் கொல்வதோ? எவ்வளவு ராஜ்யாதிகளைப் பெற்றாலும் இந்த சோகம் போக வழி யில்லை. இவர்களும் அழிந்து இவர்களுடைய குலங்களும் கெடுமாறு நாம் வெல்வதைவிட அவர்கள் வெல்வதே சிறந்ததாகும் போரிலிழியாமல் அவர்களும் ஜீவித்து நாமும் பிக்ஷாதிகளால் ஜீவிப்பது அதை விடச் சிறந்ததாகும். ஆகப் போர் புரிதல் போரை விடுதல் இவ் விரண்டில் எது தகுமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ—அதை சிஷ்யனுய் இதற்காக ப்ரபந்நனுமான எனக்கு உபதேசித்தருள வேணுமென்று விஜ்ஞாபித்தானென்றபடி. ஆனாலும் வேதாந்தார்த்த உபதேசம் அவன் விரும்பவில்லையே. 'போரில் இழிந்தபிறகு எதிரி முனைந்திருக்கும் போது விலகுவது க்ஷத்ரியனுக்கு தர்மமாகாது; ஆசார்யாதிகளாயிருந்தாலும் போரில் கொலை பாபமன்று' என்றிவ்வளவே போதாதோ என்னில்—அவ்வளவால் அவன் சோகம் நிவர்த்திக்காதென்கிறார்—அவனுடைய ஹ்ருத்யாதியால். நித்யநைமித்திக தர்மங்களைச் செய்தே யாகவேண்டுமாகையால் நைமித்திகமான யுத்தம் விடப்படாதென்றாலும் இதற்கு வெற்றியும் ராஜ்யலாபமும் ப்ரயோஜநமாக ப்ரத்யக்ஷஸித்தமாயிருப்பதால் அப் பலனில் விருப்பமிருந்தால்தானே இதைச் செய்ய வேண்டும். விட்டால் अकरणे प्रत्यवाय மென்கிற தோஷம் வருமே யென்னில்—பலனும் ப்ரத்யக்ஷமாயிருப்பதால் பலத்தோடு சேர்ந்தே நிமித்தம் அநுஷ்டானத்திற்குக் காரணமாகும், பிறந்த புத்ரனுக்குப் பரிசுத்தி புஷ்டிமுதலான பலன்களை वैश्वानरेष्टियில் சொல்லியிருப்பதால் பலத்தோடு சேர்ந்த புத்ரஜநநமே இஷ்டியின் அநுஷ்டானத்திற்குக் காரணமாகுமென்று संवलिताधिकारத்தை மீமாம்ஸகர் இசைந்திருப்பதுபோல் இங்கும் विजयपूर्वक-राज्यलाभकामनाविशिष्टयुद्धभूमिप्राप्तியே युद्धानुष्ठानकारण மாகுமென்று அவன் நினைத்திருக்கிறான். அதனால் விரும்பாதவனும் போர் புரியவேண்டுமென்று நிரூபிக்க வேண்டும். அதற்காக பகவத்ப்ரீதிக்காக ஸர்வகர்மாநுஷ்டானமே சாஸ்த்ரீயமென்று தெரிவிக்கவேண்டும். அது முமுக்ஷுக்களுக்கே கூடுமாகையால் மோக்ஷரூபபுருஷார்த்தத்தை யறிவிப்பதற்காக परावरवस्तुविवेचनமும் மோக்ஷோபாயமான கர்மயோக ஜ்ஞாநயோகாதிகளின் உபதேசமும் அவச்யமாயின. ராஜ்யலாபாதிபலனை யுத்தேசித்துப் போர்புரிந்தபோதிலும் போரில் யாரைக் கொன்றாலும் பாபமில்லையென்று சாஸ்த்ரஸித்தமாயிருக்க, அப் பலனை விரும்பாமல் பகவத்ப்ரீதிக்காகச் செய்யும் போது பாபசங்கைக்கு இடமேது? அந்த மோக்ஷோபாயங்களுக்கு நித்யநைமித்திகதர்மங்களெல்லாம் அங்கங்கள்,

पाय மாகச் चोदित மான भक्तियोग த்தையும் सपरिकर மாக उपदेशिக்க.

இப் பரமபுருஷார்த்தத்தைக் கடுகப் பெறவேண்டுமென்கிற த்வரை உண்டேயாகிலும் सपरिकर மான இவ் उपायத்தினுடைய दुष्करतैயினாலும் இவ் उपायानुष्ठानத்துக்கு अपेक्षितज्ञानशक्तिகளுண்டேயாகிலும் अनेकावधानக்கோடே கூடச் चिरकालसाध्यமான उपायस्वभावத்தாலே अभिमतम் கடுகத் தலைகட்டாத படியிருக்கையாலும் नितिशयशोक 'वष्टனான அர்ஜுநனை வ்யாஜமாகக்கொண்டு परमकारुणिकனான गीतोपनिषदाचार्यன்.

'भक्त्या परमया वाऽपि प्रपत्त्या वा महामते। प्राप्योऽहं नान्यथा प्राप्यो मम कैङ्कर्यलिप्सुभिः ।।'

என்று தான் விகல்பித்து விதித்த உபாயங்களில் 'तावदार्तिस्तथा वाञ्छा ताव न्मोहस्तथाऽसुखम्' என்கிறபடியே தன் திருவடிகளைப் பெறுமைக்கும் மற்றும் अभिमत ங்களை எல்லாவற்றுக்கும் பொதுவான साधनமாய், आनुकूल्यसङ्कल्पादि-व्यतिरिक्ताङ्गनिरपेक्षமாய் லघुतरமாய், क्षणमात्रसाध्यமான रहस्यतमोपायத்தை

---

அவற்றிலும் இவ்வளவு பெரிய போராகிற தர்மாநுஷ்டாநம் ஸாத்த்விக த்யாகத்தோடு செய்யப்பட்டால் வைராக்யவளர்ச்சியால் மோக்ஷோபாயம் விரைவில் ஸித்திக்குமென்று கருதி பத்தியோகம் வரையில் உபதேசித்தருளினு ரென்றபடி. இவ்வளவு உபதேசமும் கேட்டு, 'பகவச்சேஷத்வமே ஜீவனுக்கு ஸ்வரூபமாகையால் அவனுக்கு ப்ரீதிகரமான மோக்ஷத்தை மற்ற டலனைப் போல் உபேக்ஷிக்க லாகாது; அதைப் பெறுதற்காக இப்போர் மஹோபகாரக மாகையால் அவச்யம் செய்யவேண்டியதே; ஆனாலும் அதற்கு அங்கிகளான கர்மயோக ஜ்ஞாந யோகங்களும் அவற்றுக்கும் அங்கியான பக்தியோகமும் எப்படி செய்வது? அவை ஆகாத போது இது எதற்கு என்று மற்றொரு விதத்தில் மிகப் பெரிய சோகமுற்றவனான் அர்ஜுநனென்கிறார் இப்பர மேதி. दुष्करतैயினாலுமென்றது दुर्विज्ञानै र्नियमवदैः என்றதின் ஸங்க்ரஹம். அதன்மேல் இவ்வுபாயாநுஷ்டாநேத்யாதி दुर्विज्ञानैर्ददैः என்றதின் விவ ரணம் வ்யாஜமாகக் கொண்டு இதி அர்ஜுநனுக்கிந்த சோகமிருப்பதைக் கண்டு உபதேசித்ததால் இந்த சோகமுள்ளவரெல்லோரும் இந்த ப்ரபத்தி க்கதிகாரிக ளென்று தெரிகிறது. அதனால் எல்லோருக்கும் உபதேசித்ததே யாகும். பொதுவாக உபதேசிக்காமல் ஒருவனைக் குறித்து உபதேசித்தாலும் பொதுவாகக் கொள்வதற்கு ஸ்பஷ்ட ப்ரமாணமிருக்கிறதென்கிறார் भक्त्येति. இதுவும் மேல் விஷ்ணுபுராண அச்லோகமும் முன்னமே வ்யாக்யாதம்; இவை போன்ற ப்ரமாணங்களிலிருந்தே இவ்வுபாயத்தின் அங்காங்கி ஸ்வரூபாதிகள் ஸ்பஷ்டமாக அறியப்படுவதால் அவையெல்லாம் இங்கே கருதப்பெற்றன. व्यतिरिक्तपरिकर=வேறு அங்கம்; பக்தியோகாதிகளுக்குப் போல் இதற்குப் பரிகரம் வேண்டாமாகில் போர் என்கிற தர்மத்தையும் விட்டுஇவன் ப்ரபத்தி செய்து வாளா விருந்துவிடுவானே. அப்போது எதற்காக உபதேசாரம்பமோ அதற்கு मूलोच्छेदமாகுமே. ஆகையால் இப்படிப்பட்ட लघुतरोपायத்தை யிங்கு அர்ஜுநனுக்கு உபதேசிதிருக்கமாட்டா ரென்னில்—உபதேசத்திற்கு

श्रोतव्यशेषமில்லாதபடி उपदेशपर्यवसानமான चरमश्लोकத்தால் सकललोकरक्षार्थமாக அருளிச்செய்கிறான். श्रुतिसिद्धமான இவ்வர்த்தத்தை सर्वज्ञன ஸர்வேச்வரன் தானே உபதேசிக்க இருந்தானே,|

---

விரோதமில்லை. இதுவே ப்ரபன்னருக்கு நித்யகர்மம் அவச்யமன்றென்கிற பக்ஷம் எழாதபடி செய்யும். யுத்தம் அங்கமாகாவிட்டாலும் அவச்யம் செய்ய வேண்டியதேயாகும். 'उपायापायसंत्यागी मध्यमां वृत्तिमाश्रितः', 'प्रियाय मम विष्णोश्च देवदेवस्य शार्ङ्गिणः । मनीषी वैदिकाचारं मनसाऽपि न लङ्घयेत्' என்றபடி மோக்ஷரூபபலத்திற்கு ஸாதநமான பகவத்ப்ரீதிக்குக் காரணமாக நித்யநைமித்திகதர்மங்களை பக்தன் அநுஷ்டிப்பது போலன்றி, பரமபதத்தில் முக்தர்கள் அநுஷ்டிக்கிறப் போலே கேவலம் பகவத் ப்ரீதிக்காகவே இங்கிருக்கும் நாளில் கைங்கர்யம் செய்யஇழிந்த ப்ரபந்நன் இவனை நிமித்த மாத்ரமாகக் கொண்டு போர் நடத்த நின்ற எம்பெருமானின் ப்ரீதிக்கு விசேஷகாரணமான போரை விடுவதோ? இது இங்கே ஆநுகூல்யஸங்கல்பமென்றதாலும் குறிக்கப்பெறும். रहस्यतममिति. மற்ற கீதாச்லோகங்கள் போலே இதுவும் மந்த்ரமாகாவிட்டாலும் எல்லா ரஹஸ்யங்களிலும் பரம ரஹஸ்யமான 'एतद्धि देवानां गुह्यम्' என்பதை உபதேசித்ததாலே இதுவும் ரஹஸ்யமென்று பேர் பெற்றது. श्रोतव्यशेष மில்லாதபடி இதி. श्रोतव्य =கேட்கவேண்டியதில்; கீழே பக்தியோகத்தை உப தேசிக்குமிடத்தில் உபநிஷத்திலுள்ள பக்தி மார்க்கங்களுக்கெல்லாம் பொது வான அம்சத்தை உபதேசித்தாரேயல்லது இந்த பக்தியோகத்தை இவ்வாறு செய்ய வேண்டுமென்று ஸாங்கோபாங்கமாக உபதேசிக்கவில்லை; 'अन्तकाले च मामेव' இத்யாதிகளால் அதிலுள்ள க்ரமத்தை மட்டுமறிவித்தார். அவ்வாறின்றி இங்கே சரணாகதிவிதிவாக்யங்களில் வ்யக்தமாகக் கூறப்பட்ட அங்கங்களை யெல்லாம் मामेकं शरणं व्रज என்பதிலிருந்தே குறிப்பாய் இதரதர்மாபேக்ஷை யில்லை, பக்தி யோகாதிகளைப் போல் அசக்யமுமாகாதென்று அறிவித்து, இந்த ப்ரபத்தி உபாய விரோதி பாபம்மட்டும் போக்குமாகில் प्राप्तिविरोधिपापம் எங்ஙனே போமென்ன, सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்று இதுவே போக்கும் இது வ்யாஜமாத்ரம், இது உபாயமன்றே நான் தானே. 'உபாயம் இந்த அஜ்ஞாந அசக்திகள் நிறைந்த நிலையிலேயே நீ பலனைப் பெறலாம், சோகலேசமும் வேண்டா' என்றதால் ச்ரோதவ்யத்தில் சேஷமில்லை' என்றது விதிக்காமல் ப்ரபத்தி फल ஸாதந மென்று மாத்திரம் உபதேசித்திருந்தால் ப்ரவ்ருத்தி மந்தமாகும். அதற்காக விதிவாக்யமாகவும் ப்ரயோகித்தாரென்றபடி. கீழ்க் கூறியபடி ப்ரபத்தியும் ஓர் உபாயமாக அறியப்பட்டிருந்தாலும் ஆசார்ய ருசிபரிக்ருஹீதமாகத் தெரியவில்லையாகையால் அர்ஜுநனும் மற்றவரும் இதை அநுஷ்டிப்பரோவென்ன, அருளிச்செய்கிறார் श्रुति இதி. வேதங்களுமிராமல் க்ருஷ்ணன் ஸ்வதந்த்ரமாக உபதேசித்திருந்தால் இவ்வாறு சங்கிக்கலாம்; ப்ரமாணஸித்தமான அர்த்தத்தை ஆசார்யர்கள் உபதேசிப்பது போல் இவரும் ச்ருதி ஸ்ம்ருதி, ப்ரஹ்மஸூத்ர. பஞ்சராத்ரஸித்தமானதை அர்ஜுனன்

'संत्यज्य विधिना नित्यं षड्विधां शरणागतिम् । आचार्यानुज्ञया कुर्यात् शास्त्रदृष्टेन वर्त्मना ॥'
என்று श्रीविष्णुतत्त्वादिகளிற் சொன்ன आचार्यानुज्ञैயுமாயிற்று.

सर्वधर्मान् इत्यादि—இந்த ச்லோகத்துக்கு शङ्कराद्युत्प्रेक्षितங்கள் சொல்லும் பொருள்களையெல்லாம் तात्पर्यचन्द्रिकैயிலும் निक्षेपरक्षैயிலும் பரக்க दूषित्तோம். இங்கு ஸாரமான अर्थங்களை स्वसंप्रदायसिद्धமானபடியே சொல்லுகிறோம்—இதில் पूर्वार्धं उपायविधायकம்; उत्तरार्धं फलनिर्देशादिमुखத்தாலே विधिशेषம். ஆகையால் இச். ச்லோகம் उपायविधानप्रधानம்.

धर्मமாவது—சாஸ்த்ரமே கொண்டு அறியவேண்டியிருக்கும் पुरुषार्थसाधनம்.

---

ஆசார்யராக வரித்த பிறகு உபதேசித்திருப்பதால் இவரும் ஆசார்யராய் இவருடைய உபதேசமே ஆசார்ய ஸம்மதியுமாயிற்றென்றபடி. संत्यज्येति. 'सर्वधर्मान् सर्वकामान् ऐहिकामुष्मिकानपि ।' என்பது ஸ்ரீவிஷ்ணு தத்துவத்தில் பூர்வார்த்தம். அந்த द्वितीयान्तங்களை सन्त्यज्य என்பதில் சேர்க்க. नित्यं—எப்போதும் विधिना=उपायापायसंत्यागी இத்யாதிவிதியைக்கொண்டு காம்யமான தர்மங்களையும் நித்ய நைமித்திக தர்மங்களில் கூறப்பெற்ற ஐஹிகாமுஷ்மிக பலன்களையும் நிஷித்த கர்மமூலமான ஐஹிகாமுஷ்மிக फलங்களையும் தனக்கு வராதபடி விலக்கிக்கொண்டவனாய். शास्त्रदृष्टेन वर्त्मना—ப்ரபத்திசாஸ்த்ரத்தில் உபதேசிக்கப்பட்ட வகையினால் आचार्य-अनुज्ञया—ஆசார்யர் தாம் அனுஷ்டிக்காமல் தன்னையே அனுஷ்டித்துக் கொள்ள அநுமதித்தால் ஆநுகூல்ய ஸங்கல்பாதிகள் ஆறுகொண்ட சரணாகதியை அநுஷ்டிக்க வேண்டுமென்றபடி.

அவதாரிகையாயிற்று. இப்படி ஸ்வதந்த்ரப்ரபத்தியின் உபதேசத்திற்காக இந்த ச்லோகம் வந்ததென்றறிவித்து அதற்கிணங்க வ்யாக்யாநம் விரிவாக அருளிச்செய்கிறார். மதாந்தரத்திற் சொன்ன அர்த்தங்கள் அபார்த்தங்களென்று அறிவதெங்ஙனே என்ன—வேறு தமது க்ரந்தங்களில் என்கிறார் இந்த இதி. ச்லோகத்தை மூன்று வாக்யமாகப் பிரித்து विधेयांशம் ப்ரதாநமென்கிறார் இதில் இதி. द्वयத்திலும் இதே க்ரமமாகும்; அங்கே அநுஷ்டாந ரீதி; இங்கு அதற்கு முன்னாகும் உபாயविधानமென்பது விசேஷம். முதற்பாதத்திற்கு வ்யாக்யாநம் தொடங்குகிறார்—धर्मமாவது இதி. பாதத்தின் வ்யாக்யாந முடிவில் பாட்டு அருளிச்செய்வர்; அதுவரை இதற்கே வ்யாக்யாநமாம். परित्यज्य என்கிறது ப்ரபத்திசெய்கிறவன் தானே சிலவற்றை விட்டிருப்பதைச் சொல்லுகிறதா, விடவேண்டுமென்று விதிக்கிறதா என்ற விசாரத்தில் இருவிதமாகவும் நிர்வஹிப்பர். ஏற்கனவே விட்டிருப்பதைச் சொல்வதாகில் அந்த தர்மங்களெவை, விடவேண்டுமென்று சொல்வதாகில் அப்போது எவை யென்று சோதிக்கவேண்டும். இதுவிஷயத்திலே சிலரது கொள்கையை நிரஸிக்கப் போகிறாராய் தமக்கு ஸம்மதமான அர்த்தங்களை முதலிலருளிச்செய்கிறார், இரண்டு யோஜநைக்கும் வரும்படி धर्मசப்தார்த்தமிருப்பதை யறிவிக்கிறார் शास्त्रமே இதி. 'शास्त्रबोधित श्रेयस्साधनताकत्वं धर्मलक्षणम् । धृतिः-प्रीतिः-सुखं श्रेयः என்பர் மீமாம்ஸகர்.

'धर्मान्' என்கிற बहुवचनத்தாலே अभिमतसाधनமாக शास्त्रचोदितங்களான धर्मங்களுடைய बाहुल्यத்தைச் சொல்லுகிறது सर्वशब्दத்தாலே सपरिकरமான நிலையை விவக்ஷிக்கிறது. धर्मपरिकरங்களையும் धर्मமென்று சொல்லக் குறையில்லையிறே. இஸ்ஸர்வशब्दத்தை पक्षशब्दप्रतिसंबन्धियாக யோஜிக்கும்போது இது अङ्गகளான நாநா धर्मங்களினுடைய कात्स्न्यத்தைச் சொல்லுகிறது. இப்படிப் பொதுவிலே சொன்னாலும் இங்குப் प्रकरणवशத்தாலே मोक्षार्थமாக शास्त्रविहितங்களாய் सपरिकरங்களாய்

---

விடவேண்டிய தர்மங்கள் வெகுவாயுள்ளன என்பதற்காக बहुवचनமென்கிறார் धर्मान् இதி. अनुष्ठाय என்னாமல் संत्यज्य என்றவிடத்தில் ஸங்கோசிக்க ப்ரமாணமில்லை; बहुवचनமே ஸர்வबहुत्वத்தைச் சொல்லும்; ஸர்வசப்தம் வீணென்ன, உத்தரம் ஸர்வேதி. பஹுவசநத்தாலே அநேகத்வரூப ஸங்க்யை ஏற்பட்டாலும் அசேஷத்வம் ஸித்திக்காது 'ध्यानः सर्वशरीरगः' இத்யாதியில் ஸர்வத்வம் அசேஷத்வரூபம். அதாவது ஒவ்வொரு சரீரத்தையும் முழுமையாகக் கொள்வது. ஸாவயவமான வஸ்துவில் ஒவ்வோர் அவயவத்தையும் விடாமைக்காக இவ்வாறு ப்ரயோகம். அதுபோல் அங்காங்கிரூபமாய் விசிஷ்டமான ஒவ்வொரு தர்மத்தையும் முழுமையாகக் கொள்வதற்காக ஸர்வசப்தமென்றபடி. ஸர்வசரீரग: என்றவிடத்தில் கை கால் முதலான அங்கங்களையும் சேர்த்து சரீரமென்கிறாப் போலே யாகாதிகளில் அங்கங்களை தர்மங்களென்பதுண்டோ? ப்ரதானந்தானே फलसाधनम्; அதுதானே தர்மம்; அங்கங்கள் அவற்றிற்கு உபகாரகங்களே யென்ன—உத்தரம் அருள்கிறார். धर्मेति. அங்காங்கிகளைச் சேர்த்து ப்ரயோகித்தால் தானே फलம் ஸித்திக்கிறது: எல்லாம் ஸாக்ஷாத் பரம்பரயா வா फलஸாதநமாகலாம். எதற்காகவானாலும் விதிக்கப்பட்டதெல்லாம் धर्मமாகலாமென்றபடி. அங்கங்களை அநுஷ்டிப்பது अङ्गியை யநுஷ்டிக்கும் போது தானே. अङ्गியையே விட்டிருப்பவன் அங்கத்தை விடுவது திண்ணமாகையால் அங்கத்யாகத்தை எதற்காகச் சொல்லவேண்டுமென்னில்—அநுஷ்டிக்கமாட்டாத அங்கங்கள் நிறைந்திருப்பதால் அங்கியையும் விடுகிறானென்று விடுவதைத் திடப்படுத்துவதற்காகவென்க. இனி धर्मசப்தத்தை அங்கவிஷயமாக்காமலும் நிர்வஹிக்கிறார் இஸ் இதி. எல்லாம் விட்டு ஒன்றைக் கொள்ளென்றால் அந்த ஒன்றைப் போலே ப்ரதாநமாயிருப்பவற்றையே எல்லாமென்ற சொல் சொல்லத்தகும். அப்போது ஸர்வசப்தம் பஹுவசநார்த்தத்தை திடப்படுத்துகிறது. பக்தியோகங்கள் பல விருக்க அவற்றை யெல்லாம் விட்டவனே ப்ரபத்திக்கு அதிகாரி. ஐந்தாறு பக்தியோகங்களை மட்டும் அசக்யமென்று விட்டவனல்லன். ஏதேனுமொரு பக்தியோகந்தானே யாரும் செய்வது, அதற்குத் தகுந்தவன் ப்ரபத்திக்கு அதிகாரி யாகானென்று இதனால் அறிவித்ததாம். ப்ரபந்நன் மோக்ஷார்த்தமான गुरु தர்மங்களை விட்டாலும் ஜ்ஞாநாதிகளுக்கான வேறு தர்மங்களை யநுஷ்டிக்கிறானாகையால் सर्वधर्मत्यागமில்லையே என்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. प्रकरणेति. முழுகீதையும் மோக்ஷத்திற்காகவே வந்த

நாநாப்ரகாரங்களான உபாஸநங்களையெல்லாம் சொல்லுகையிலே தாத்பர்யம்.

புருஷோத்தமத்வஜ்ஞாநம் ஸர்வவித்யைகளுக்கும் உபகாரகமான தத்வஜ்ஞாநமாத்ரமாகவும், அவதாரரஹஸ்யசிந்தநம் அநுஷ்டிக்கிற உபாஸநாதிகளுடைய சீக்ரநிஷ்பத்திஹேதுவாகவும், தேசவாஸாதிகள் உபாயவிரோதிபாபக்ஷயஹேதுக்களாய்க்கொண்டு உபாயநிஷ்பாதகங்களாகவும் ஸ்ரீகீதாபாஷ்யாதிகளிலே ஸமர்த்திக்கையாலே இவற்றை ஸாக்ஷாந்மோக்ஷோபாயங்களாக்கி பஹுத்வவிஷயமான பஹுவசநத்தாலே விவக்ஷிக்கிறதென்கை உசிதமன்று. 'நாநா சப்தாதிபேதாத்' என்கிறபடியே இவையொழியவும் ஸத்வித்யா-தஹரவித்யாதிபேதத்தாலே அங்கிபஹுத்வம் கிடைக்கையால் இப் பஹுவசநம் ஸார்த்தம். அங்கிபஹுத்வத்தையும் பரிகர-பஹுத்வத்தையுங் கூட விவக்ஷித்தாலும் விரோதமில்லை.

---

தாயிற்றே என்றபடி ஸபரிகரங்களாய் என்றது முதற்பக்ஷத்தை யநுஸரித்து. நாநாப்ரகாரங்களான என்றது த்விதீய பக்ஷத்தில். ஆக ஸாக்ஷாத் மோக்ஷஸாதநமானவை தர்மசப்தார்த்தம். முமுக்ஷுப்படி முதலான க்ரந்தங்களில் அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தமவித்யை, தேசவாஸம், திருநாம ஸங்கீர்த்தநம், இத்யாதிகளும் தர்மசப்தார்த்தமாகச்சொல்லப்பட்டன. 'தர்மசப்தம் மோக்ஷ ஃபலஸாதநங்களைச் சொல்லுகிறதென்று முன்னே சொல்லியிருப்பதால் மோக்ஷ ஸாதநங்களாகாதவற்றைச் சேர்ப்பதாகாதென்கிறார் புருஷேதி. ஆனால் கீதையில் நாலாம் அத்யாயத்தில் அவதாரரஹஸ்ய சிந்தநமும் பதினைந்தில் புருஷோத்தமத்வநிருபணமும் எதற்காக வென்னில்— பரம்பரயா காரணமாயிருப்பதாலென்றபடி. தேசவாஸமாவது திவ்ய தேசவாஸம். ஆதி பதத்தால் நாமஸங்கீர்த்தநாதி க்ரஹணம். இவற்றைக் கொள்ளாத போது பஹுவசநமெங்ஙனே கூடுமென்ன—பக்திமார்க்கங்கள் பல விருப்பதால் கூடு மென்கிறார் நாநேதி. தர்மசப்தம் ஸாக்ஷாத் பரம்பரயா வா ஃபலஸாதநங்களை யெல்லாம் சொல்லுமென்று புருஷோத்தம ஜ்ஞாநாதிகளையும் கொண்டாலென்ன என்றதற்கு உத்தரம் அங்கிபஹுத்வேதி. பரிகரங்களைக் கொள்ளாமலே ஏகசப்தப்ரதி ஸம்பந்தியாக ஸர்வசப்த மென்கிற பக்ஷத்திற்குமிணங்க அங்கிபஹுத்வத்தை விவக்ஷித்தே ஸர்வமும் ஸப்ரயோஜநமாகையால் இந்த ப்ரயாஸை வேண்டா பக்தியோகம் செய்யவாகாதவன் புருஷோத்தமத்வஜ்ஞாநத்தைப் பெற சக்தனாயிருந்தாலும் ப்ரபத்தியிலிழியலாம்; புருஷோத்தமத்வஜ்ஞாநத்தை விட்டவனே அதிகாரியென்று சொல்வதற்குமில்லை. பரிகரங்களான கர்மயோக ஜ்ஞாநயோகங்களையும் பக்தியோகங்களையும் விட்டவனென்றிவ்வளவே இங்குத் தகும். ஜீவாத்மாவின் அவலோகநத்திற்காக விதிக்கப்பட்டதால் கர்மயோகாதிகளும் தர்மமாயினும் நேராக மோக்ஷஸாதநமாகா. இதற்காகவே ஸர்வதர்மாந் என்றதென்று கருத்து. ஸர்வம் பரிகரஸஹிதபரம் ( ) மேலே பரித்யஜ்ய என்பதற்குப் பொருள் கூறுகிறார். பக்த்யாதிதர்மங்களைச் செய்யாதவனாயிருந்தாலும் அவற்றைச் செய்ய ஆசையுள்ளவனாகில் ப்ரபத்தி யிலிழியான், அதற்காக அவற்றில் ஆசையை விட்டு என்று பொருள் கூறுகிறாராய், அதெப்படி சப்தார்த்தமாகு மென்ன அதையும் அருளுகிறார்

(1) பரித்யஜ்ய என்கிறவிடத்தில் த்யாகமாவது—भवता च प्रपत्त्या मामाकिञ्चन्यैकपूर्विकाम्' இத்யாதிகளிற்படியே அகிஞ்சநனான தன் நிலையைக் கண்டு உபாயாந்தரங்களிற் பிறந்த நைராச்யம். ஆசையாலே பற்றுகையால் ஆசையை விடுகை த்யாகமென்ன உசிதமிறே. இதில் 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே, 'अनागत—अनन्त—कालसमीक्षयापि अदृष्ट-सन्तारोपायः', 'त्वत्पादकमलादन्यन्न मे जन्मान्तरेष्वपि' இத்யாதிகளிற்படியே அத்யந்த—அகிஞ்சநனுக்கு ஸர்வகாலத்திலும் ஸர்வப்ரகாரத்தாலும் யோக்யதையில்லாமை தெளிகையாலே பிறந்த நைராச்ய-அதிசயம் சொல்லப்படுகிறது. ஸர்வப்ரகாரத்தாலும் த்யாகமாவது—பூர்ணானுஷ்டானசக்தியில்லாதபோது யதாசக்தி அனுஷ்டானம் பண்ணுகிறோமென்றும், அதுக்கு யோக்யதையில்லாத தசையிலே வேறே சில அனுகல்பங்களையாதல் உபாய-உபாயங்களையாதல் அனுஷ்டிக்கிறோமென்றும் தனக்கு துஷ்கரங்களைக் கணிசிக்கும் துராசை யற்றிருக்கை.

இவ் அனுவாதத்துக்கு அதிகாரவிசேஷத்தைக் காட்டுகை ப்ரயோஜநம் அதில்

---

பரி இத்யாதியால். ஒருவன் ஒரு வஸ்துவை த்யாகம் செய்வதாவது அவ்வஸ்துவுக்குத் தன் ஸம்பந்தத்தை யொழிக்கை. இப்படி த்ரவ்ய விஷயத்தில் சொல்லவாம். கர்மத்யாகமென்கிற போது சொல்லவாகாது. கர்ம உண்டானபிறகு அதன் ஸம்பந்தமே யிருப்பதால் ஒழிக்க முடியாது. உண்டாவதற்குமுன் ஸம்பந்தமேயில்லையாகையால் எதை ஒழிப்பது. இனி தர்மத்யாகமாவது தர்மத்திநின்று நிவ்ருத்தி யென்றால்; நிவ்ருத்தியாவது என்ன? வெறும் ப்ரவ்ருத்த்யபாவத்தை தர்மத்யாகமென்பதில்லை. ப்ரவ்ருத்த்யபாவத்திற்கு ப்ரயோஜகமான தொன்று த்யாக மென்னில்—ப்ரவ்ருத்திப்ரயோஜகதர்மமாகும் ஆசை ஜ்ஞாநம் சக்தி என்பவை. அவற்றின் அபாவம் ப்ரவ்ருத்த்யபாவப்ரயோஜகமாம்; அது ப்ரவ்ருத்த்யபாவமுள்ளவிடமெல்லாமிருக்குமாகையால் த்யாகமாகாது. அதனால் செய்யமுடியாமையைக்கண்டதால் பிறந்த நைராச்யமே த்யாகமென்றது. அதற்கு ப்ரமாணம் ஆஹச ஸ்ரீ விஷ்வக்ஸேநஸம்ஹிதை? "இந்த ப்ரபத்தியினாலே என்னை ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டுக் கொண்டு" என்று அதன்பொருள். இதற்கு மேல், ('என்னை) 'உபாயமாக்கி' இத்யாதி இருக்கலாம். ஏகபதத்தினால்—ஆகிஞ்சந்யம் முக்யம்; அது பூர்ணமாயிருப்பது; அநந்யகதிகத்வம் புஷ்கலமன்று; தேஹாவஸாநம் வரையில் வேறு பலனில் நசை யுளதே என்றறிவித்ததாம். அத்யந்தாகிஞ்சந்யமாவது பிற்காலத்திலும் எப்போதும் தனக்கு யோக்யதை வாராமை. இதன் தெளிவு அதிகநைராச்யத்திற்குக் காரணம். ஆசையாலே பற்றுகையால் இதி. பற்று=ப்ரவ்ருத்தி—அனுஷ்டானம். அது உண்டாவது ஆசையால். ஆக தர்மத்யாகமாவது தர்மகாரணமான ஆசையின் த்யாகம்; இதில் ஆசை நமக்குத் தகாதென்ற விவேகம். அநுகல்பங்கள்-ப்ரதிநிதியான(பதிலான) கார்யங்கள்; சிலகாலம் அவற்றைச் செய்தால் முக்யானுஷ்டாநம் செய்ய யோக்யதை வருமென்று முக்யத்திலுள்ள ருசியால் இவற்றில் ப்ரவ்ருத்தி வரும். கணிசிக்கும்=விஷயமாகக் கொள்ளும்: முக்யமான ஸ்வோபாயம் செய்ய முடியவில்லை என்றறிந்தபோதே அதை விட்டு ப்ரபத்தியிலிழிய வேண்டும். இப்படி பிறந்த

'परि' என்கிற உபஸர்க்கம் ஸவிசாரபரித்யாகத்தை விவக்ஷிக்கிறது. 'अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम्' என்கிறவிடத்தில் 'प्राप्य' என்கிற ல்யபின் நிக்கே 'प्राप्य वर्तमानः त्वम्' என்று வ்யாக்யாநமானாற்போலே இங்கும் 'परित्यज्य स्थितः त्वम्' என்று விவக்ஷிதமாகக்கடவது. இப்படி அர்த்தாந்தரங்களிலும் प्रयोगமுண்டாகையாலே क्त्वाश्रुतिமாத்ரத்தைக் கொண்டு த்யாகம் அங்கமென்னவொண்ணாது.

---

நைராச்யமே सर्वधर्मपरित्यागம். சக்தியிருந்து சோம்பலால் விடுவதோ, அதற்காம் நைராச்யமோ கொள்ளத்தகாது. இப்படி நைராச்யம் அர்த்தமானால் தன்னிலையை விவேகிக்கிறவனுக்கு தானே இது வருமாகையால் வேறுதர்மத்தில் நிராசனாயிருந்துகொண்டு சரணாகதி செய் என்று விதிக்க முடியாதே யென்னில்—இதற்கு விதியில்லை. व्रज என்ற க்ரியாபதத்திலுள்ள விதி பரித்யஜ்ய என்கிறதிலும் அந்வயிப்பதால் விதி வேண்டுமே யென்னில்—விதியிராமலும் ப்ரயோகமுண்டென்று உதாஹரிக்கிறார் अनित्यमिति. கீதை 9—33. அநித்யமாயும் துக்கமாயுமிருக்கிற இந்த லோகத்தை நீ யடைந்து என்னிடம் பக்தி பண்ண வேண்டுமென்று பொருள் படும். இந்த லோகத்தையடைவது விதிக்க வேண்டாவே; முன்னமே அர்ஜுநன் அடைந்திருக்கிறானே. அதனால் விதிக்ரியாபதத்தோடு நேராக அந்வயம் கூடாமையால் वर्तमानः என்று வேறு க்ரியாபதம் சேர்த்து அதில் प्राप्य என்பதற்கு அந்வயத்தை பாஷ்யகாரர் அருளினார். அது போல் அத்யாஹாரம் செய்து கொள்வது. இத்தகைய ப்ரயோகத்திற்கு இரண்டு க்ரியைகளும் முன்னும் பின்னுமாகையும், ஸமாநகர்த்ருகத்வம்=கர்த்தா ஒருவனாயிருக்கையும் வேண்டும்; மற்ற அம்சம் வேண்டியதில்லை. இது போல் விதிக்ரியாபதத்தோடு சேர்ந்தாலும் விதிக்கவாகாத க்ரியாப்ரயோகத்தை வேறு விதத்திலும் காண்கிறோம். 'संभाष्य पुण्यकृतो मनसा ध्यायेत्' என்ற விடத்தில் ம்லேச்சஸம்பாஷணம் அங்கமன்று. ப்ராயச்சித்தத்திற்கு நிமித்தமாகும். इष्ट्वा सोमेन यजेत என்ற விடத்தில் தர்சபூர்ணமாஸேஷ்டி ஸோமயாகத்திற்கு அங்கமன்று; நிமித்தமுமன்று. वपया प्रचर्य पशुपुरोडाशमनुनिर्वपति என்றவிடத்தில் மாறாக பசுபுரோடாசமே அங்கம். ஆக अर्थान्तरங்களிலும்=விதிக்கவாகாத அங்கத்வமுமிராத அர்த்தங்களிலும் ப்ரயோகமிருப்பதால் परित्यज्य என்பது அநுவாதமாகலாம். அநுவாதமென்றுஸ்பஷ்டமாகத் தெரிவதற்காக वर्तमानः என்று வேறு க்ரியாபதத்தை அத்யாஹரிப்பது. क्त्वाश्रुतीதி. त्यक्त्वा என்று ப்ரயோகித்தால் त्वा என்கிற சொல்வடிவம் செவியிற்படும். உபஸர்க்கம் சேருமிடத்தில் क्त्वा என்பது ल्यप् ஆக மாறும். அதனால் परित्यज्य என்ற விடத்தில் य என்பதையே क्त्वा என்று கொள்க ஒரு கர்த்தா செய்யும் க்ரியைகள் இரண்டைக் கூறும்போது முன் உண்டாகும் க்ரியைக்குமேல் त्वा என்றும் ப்ரத்யயம் வரும்.

2 விதிக்ரியாபதத்தோடு சேர்ந்தாலும் விதேயமாகாததில் விதிக்கு அந்வய ப்ரஸக்தியில்லையானாலும், 'விதிக்ரியையோடு அந்வயிக்கும் போது விதேயத்வம் கொள்வது ஸ்வரஸம்; அசக்தி प्राप्ति முண்டாகில்தான் விடுவது' என்பார்க்கு

2 'परित्यज्य' என்கிறவிது விதிபானபோது प्रपत्त्याद्यादिகளில் விதிக்கிறபடியே आकिञ्चन्य प्रतिसन्धानादिरूपமான कार्पण्यமாகிற प्रपत्त्यङ्गத்தை விதிக்கிறதென்றால் அர்த்தில் விரோதமில்லை., அப்போது 'सर्वधर्मान् परित्यज्य' என்கிறவிது 'अहमस्म्यपराधानामालयोऽकिञ्चनोऽगतिः' 'न धर्मनिष्ठोऽस्मि' इत्यादिகளிற்படியே सर्वधर्मங்களும் தன்னை योग्यतापर्यन्तமாகக் கழிகைப்படியை முன்னிட்டுக்கொண்டு என்றபடி. இவ்வளவு விலக்ஷண प्रतीतिकமான अर्थமும் वस्तुप्रमाण-अनुगुणமாகையால் அவற்றுக்கு

---

விதிக்கத்தக்க அர்த்தமும் வேறு சொல்லலாமென்கிறார் परित्यज्य இதி. கீழே கூறப்பெற்ற நைராச்ய முடையவனென்று பொருளில் அதற்குக்காரணமாக. 'அகிஞ்சநனை தன் நிலையைக் கண்டு' என்று சொன்ன ஆகிஞ்சந்ய ஜ்ஞானமே இங்கு ஸர்வதர்மபரித்யாகம்; இது கார்ப்பண்யம். கார்ப் பண்யம் ப்ரபத்திக்கு அங்கமாகையால் அங்கவிதியே யாகலாம். முன்னே सर्वधर्मान् परित्यज्य என்பதற்கு தர்மங்களை ஆசைக்கு விஷயமாக்காமல், நைராச்யத்திற்கு விஷயமாக்கி என்று பொருள் கொண்டது; இப்போது த்விதீயாவிபக்தி முதலானவற்றிற்கு என்ன பொருளென்பதற்கு உத்தரம் அப்போது இதி. पदलक्षणापக்ஷத்தை விட்டு वाक्यलक्षणापக்ஷத்தை யிங்குக் கொண்டு सर्वधर्मान् परित्यज्य என்கிற ஸமுதாயத்திற்கு 'सर्वधर्मविषयायोग्यतानुसंधानம் செய்து' என்று பொருள்; அல்லது परित्यज्य என்பதற்கு अशक्यत्वानुसंधानம் லக்ஷ்யார்த்தம். सर्वधर्मान् अशक्यत्वेनानुसंधाय என்றதாயிற்று. இங்கே सर्वधर्मங்களும் தன்னை இத்யாதியால் தர்மங்களுக்கு த்யாககர்த்ருத்வம் சொல்லப்பட்டது. அதன் கருத்தென்னவெனில்—தர்மத்தை இவன் த்யாகம் செய்கிறானென்று இவனைக் கர்த்தாவாக நினைக்கிறபோது சக்தியிருந்தும் அந்த த்யாகமாகலாம்; தர்மங்கள் இவனை விடுகிறனவென்றால், இவனுக்கு யோக்யதையிராமையாலென்பது ஸ்பஷ்டமாகும். ஆக ஆகிஞ்சன்யம் ஸ்பஷ்டமாகைக்காக அவ்வாறு கூறியது. परित्यज्य என்ற धातுவினின்று த்யாகம் புத்தியிற்பட்டபோது தர்மங்கள் இவன்விஷயத்தில் பண்ணும் த்யாகமும் கொள்ளப்படலாம். சக்யார்த்தத்திற்கு வாக்யார்த்தத்தில் அந்வயம் வேண்டுமென்பதில்லை. அதனின்று இவனுக்கு தர்மங்கள் அசக்யமென்று தோன்றும் ஆக शक्यसंबन्धरूपलक्षणை கூடும். இப்போது நைராச்யமென்ற கீழ்க் கூறிய அர்த்தம் அறியப்படாமலே இது கிடைக்குமென்று கருத்து. முன்னிட்டுக் கொண்டு என்பதற்கு தர்மங்கள் தன்னைக் கழித்த படியை முன்னிட்டு=முதலிலே त्यागशब्दपदार्थமாக அறிந்து அதனால் अशक्यत्वानुसंधानத்தைக் கொண்டு என்ற பொருளாகலாம்.

'धर्मान् परित्यज्य என்பதற்கு धर्मस्वरूपत्यागமென்கிற பொருளே ஸ்வரஸமாய் சீக்ரமாய் தோன்றுவது; கீழ்க்கூறிய பொருள் எளிதில் தெரியக் கூடியதல்ல; க்லிஷ்டமாய் தாமதமாய்த் தோன்றும் பொருள் இசையத் தக்கதன்று' என்ன அருளிச்செய்கிறார் இவ்வளவு இதி. எல்லா தர்ம ஸ்வரூபத்தையும் விடவேண்டுமென்று கூறி, मामेकं शरणं व्रज; पराशितवाक्यम्

विरुद्धமாக शङ्कराद्युक्तங்களான सर्वधर्मस्वरूपत्यागपर्यங்களிற்காட்டிலும் उपादेयம்.

1 ப்ரபத்திக்காக ஒரு धर्मமும் अनुष्ठिक்கவேண்டாவென்றுப்ரபத்தியினுடைய नैरपेक्ष्यத்தைச் சொல்லுகிறதென்கை विधिपक्षத்துக்கு உசிதம். அப்போது 'परि' என்கிற उपसर्गம் 'आचान्तेन कर्तव्यम्' 'शुचिना कर्तव्यम्' इत्यादिகளிற் சொல்லுகிற सर्वसाधारणयोग्यता—आपादकங்களும் இதுக்கு सहமாக स्वीकार्यங்களாகா என்று विवक्षिக்கிறது.

இங்ஙனன்றிக்கே कर्मयोगம் ज्ञानयोगம் भक्तियोगமென்கிற धर्मங்களினுடைய स्वरूपत्यागம் ப்ரபத்திக்கு அங்கமென்னும் பக்ஷத்தில் ப்ரபத்தி सर्वाधिकारமன்றிக்கேயொழியும். धर्मानुष्ठानशक्तனுக்கிறே அவற்றினுடைய त्यागத்தை विधिக்கவேண்டுவது. இது बहुप्रमाणसिद्धமான कार्पण्यமாகிற அங்கத்துக்கும், 'புகலொன்றில்லாவடியேன்' 'குலங்களாய' 'குளித்து மூன்று' 'न धर्मनिष्ठोऽस्मि' इत्यादिகளிலே प्रसिद्धமான अकिञ्चनाधिकारமென்கிற ஸம்ப்ரதாயத்துக்கும் विरुद्धமாம்.

ஈச்வரனைப்பற்ற अत्यन्तपरतन्त्रतैயாலே उपायान्तरங்களுக்கு क्षेत्रज्ञन् नित्याशक्तன்

---

பெறு என்று உரைத்தார் சங்கரர். அது முழுமையும் ப்ரமாணவிருத்தம். आदिपदத்தால் ஏகதேசிகளையும் கொள்வது—சக்தராயிருப்பவரும் தர்மஸ்வரூப த்யாகம் செய்து ப்ரபத்தியை யநுஷ்டிப்பது; அதாவது स्वप्रवृत्ति-निवृत्ति-(ஒன்றும் செய்யாமலிருப்பது) என்று ஏகதேசிகள் கூறினர். எவ்வளவு ஸ்வரஸமானாலும் ப்ரமாண விருத்தமானல் ப்ராமாணிகமாகாது. அஸ்வரஸமாகிலும் ப்ரமாண ஸம்மதியுள்ள போது கொள்ளத்தகும். सिंहो माणवकः என்றவிடத்தில் ஸ்வரஸத்தையே கொள்ளவேண்டுமென்று மாணவனேடு சிங்கத்துக்கு ஐக்யத்தை எவரேனும் கூறுவரோ?

3 இப்படி அநுவாத பக்ஷத்திலும் விதிபக்ஷத்திலும் கர்மயோக. ஜ்ஞாநயோக. பக்தியோகங்களை सर्वधर्म சப்தார்த்தமாக்கி வாக்யார்த்தம் அருளினர்: இனி धर्म சப்தத்தைப் பொதுவாகக் கொண்டு தர்மங்களை விட்டு என்பதற்கு வர்ணச்ரமாதி தர்மங்களை பக்திக்குப் போலே ப்ரபத்திக்கு அங்கமாகக் கொள்ளாமல், எல்லா தர்மங்களுக்கும் பொதுவான शुचित्व आचमनादिகளையுமிதற்கு அங்கமாகக் கொள்ளாமலென்று கூறினல் விதிபக்ஷமுமாகிறது; ஸ்வரஸமுமாகிறது, இப்போது தர்மசப்தம் கர்மயோகாதி பரமன்றென்கிருர் ப்ரபத்தீதி சிலர் இங்கும் கர்மயோகாதி பரமாகப் பொருள் உரைப்பர். அதில் தோஷத்தைக் கூறுகிருர் இங்ஙனன்றிக்கே இதி, இப்பக்ஷத்தை தூஷித்த பிறகு முன் சொன்ன விதிபக்ஷத்தை 'ஆகையால் உபாஸநத்தில் வரும்' இத்யாதி வாக்யத்தாலே உபஸம்ஹாரம் செய்வர். தூஷணகாரணம் கூறுகிருர் धर्मेति. அசக்தனைப் பார்த்து ஸர்வதர்மங்களையும் த்யாகம் செய்யென்று எதற்கு விதிக்க வேண்டும். தர்மமே அவனை த்யாகம் செய்திருக்கிறதே; சக்தனைக் குறித்து நீ செய்யாதே விடு என்னலாம். ஆக गुरूपायशक्तனே ப்ரபத்தி செய்யவேண்டுமென்றதாயிற்று அப்போது கார்ப்பண்யம் அங்கமாகாது, ஆகிஞ்சந்யம் அதிகாரமாகாதென்றபடி. சக்தருக்கும் ஆகிஞ்ச

என்று கட்டி இவனுக்கு அவற்றினுடைய त्यागத்தை विधिக்கிறதென்னுமது सर्वेश्वर–सर्वज्ञ–सर्वशक्त्यादिविरोधத்தாலே अत्यन्तपरिहास्यम्. அப்போது पूर्वपक्षि-यस्थिயாலே 'व्रज' என்கைதானும் घटियाது. उपायान्तरங்களுக்கு ஜீவாத்மா नित्याशक्तனென்கை நங்களுக்கு अनिष्टமான अनुवादपक्षத்துக்கு स्वीकरणம் பண்ணினபடியாமத்தனை. एकप्रयोगத்தாலே अशक्तனைப் பற்றத் त्यागविधियாகை

---

ந்யத்தை நிர்வஹித்துப் பூர்வபக்ஷம் ஈச்வரனை இத்யாதி யாரை சக்த ரென்கிறோமோ, அவர் எப்போதும் அசக்தரே. எல்லோரும் ஈச்வரனுக்கு அத்யந்த பரதந்த்ர ராகையால் இவர்களுக்குச் செய்ய சக்தியேது? ஆகை யாலே கார்ப்பண்ய–ஆகிஞ்சந்யங்களைச் சொன்னது பொருந்துமென்று பூர்வ பக்ஷியின் கருத்து. தூஷிக்கிறார் ஸர்வேதி. आख्यातानां अर्थं ब्रुवतां शक्तिः सहकारिणी என்பர். பூர்ணசக்தனுக்கே காம்யகர்மங்களென்றும் நித்யகர்மங்களில் यथाशक्ति அநுஷ்டாநமும் உண்டென்றும் சாஸ்த்ரம் சொல்லும். ஸர்வப்ரகாரத்திலும் அசக்தனாயிருந்தால் கர்மகாண்டத்திலுள்ள ஒரு விதிவாக்யமும் தகாது, சாஸ்த்ரத்வமே சாஸ்த்ரத்திற்குப் போம்; ஸ்வவசந விரோதமுமாம். உபாயா ந்தரங்களுக்கு நித்யாசக்தனென்றால் அவற்றிற்கு உபாயாந்தரத்வம் எப்படி? விதிக்கப்பட்டதை யநுஷ்டித்தால் தானே உபாயத்வம், த்யாகத்தை விதிக் கிறதென்பது மெப்படி, ப்ரவருத்த்யபாவத்தை விதிக்கமுடியாது. நிவ்ருத்தி வ்யாபாரம் விதேயமென்னில்—அத்யந்த பரதந்த்ரன் அதிலும் அசக்தன் தானே, இப்படி ஸ்வப்ரவ்ருத்தி விரோதமுமாம்—ஸ்நாந–புண்ட்ரதாரண போஜநாதி வைதிக லௌகிக ப்ரவ்ருத்திகளுக்கும் அசக்தராகின்றனரே, ஆகையால் பராதீநமான சக்தியும் பராதீநமான அநுஷ்டாநமும் தகுமாகை யால் அதுவுமிராதவனே அகிஞ்சநன். ஸர்வாசக்தனைக் குறித்து த்யாகத்தை விதிக்கமுடியாது. த்யாகத்தை யென்பதென்; शरणं व्रज என்கிற ப்ரபத்தி விதியும் சேராது என்கிறார் அப்போது இதி. விதி அநுவாதம் என்கிற இரு பக்ஷங்களில் இவர்களுக்கு அஸம்மதமான அநுவாதபக்ஷமே இவர் பக்ஷ த்திலும் சேரும். ஜீவர்கள் நித்யாசக்தரானபடியாலே எப்போதும் உபா யத்தைச் செய்யாமல்தானே யிருப்பர், சக்தர் அசக்தரென்று இருவித மாகப் பிரித்து அசக்தர்விஷயத்திலே ப்ரபத்தி விதியாகையால் அவர்கள் விஷயத்தில் சொன்ன ஸர்வதர்மத்யாகம் அநுவாதரூபமென்றனர் ஏகதேசிகள். இப்போது சக்தரையும் அசக்தரென்று சொன்னபடியால் ஸர்வவிஷயத்திலும் அநுவாதமே யாகுமென்றபடி, இனி அத்யந்த பரதந்த்ரர்களுக்கும் சக்தியை ஸ்வீகரிக்கிறோம், அசக்தர் போலே ஸ்ருபாய சக்தரும் ப்ரபத்தியை யநுஷ்டி க்கலாமென்பதே ஸித்தாந்தம். ஆகப் பரித்யஜ்ய என்பது சக்தர்விஷயத்தில் விதியாய் அசக்தர்விஷயத்திலே அநுவாதமாய் இருக்கலாமென்று சங்கி த்துப் பரிஹரிக்கிறார் एकेति. ஏகப்ரயோகந்தானே = ஸக்ருத் ப்ரயுக்த சப்தமே. उद्देश्यत्व-अनुवाद्यत्व-प्राधान्यங்களும் उपादेयत्व-विधेयत्व-शेषत्वங்களும் பரஸ்பர விருத்தமென்றும் இந்த விருத்த த்வயங்கள் ஒரு ப்ரயோகத்தில்

त्यागानुवादமாய் ஏதரனைப் பற்ற த்யாகவிதியாகை लघूपायத்தில் घटियாது. फलத்தில் वैषम्यமுமின்றிக்கே अधिकारियும் एकனாயிருக்க गुरुलघुविकल्पமும் சொல்லவொண்ணாது. गुरूपायத்திலே अशक्तனானவனுக்கே அதின் त्यागविशिष्ट மான लघूपायத்தை विधित्தால் गुरूपायத்தில் ஒருத்தரும் प्रवर्तिப்பாரில்லாமை யாலும் வேறொரு मुखத்தாலே अधिकारभेदம் சொல்லவொண்ணாமையாலும் गुरूपायத்தை विधिக்கிற शास्त्रங்களெல்லாம் प्रमाणமன்றிக்கேயொழியும். लघूपाय-प्ररोचनार्थமாக गुरूपायத்தை विधित्து அதுதன்னையே निषेधिக்கிறதென்கையும்

---

கொள்ளலாகாதென்றும் மீமாம்ஸகர் நிரூபித்தனர். ஏகவாக்யத்தில் என்ப தால் ஒரு வாக்யத்தில் விதேயமானது மற்றொரு வாக்யத்தில் अनुवाद्यமாகலாம்; ஒரு பதமே வேறு வாக்யத்தில் அநுஷங்கிக்கப்படுகிறபோதும் வேறுவித மாகலாமென்று குறித்ததாம். இனி சக்தனைக் குறித்து விதி யென்பதே தகாதென்கிறார்—फलத்தில் இதி. ஒருவனுக்கே गुरूपायத்தை விதித்து அவ னுக்கே அதன் த்யாகத்தோடு ப்ரபத்தியை எப்படி விதிக்கிறது? சேர்த் தநுஷ்டிக்க வேண்டாம்; விகல்பமாகட்டுமே யென்னில், गुरुलघु விகல்பமாகுமே. ஆனாலென்னவெனில், गुरुविधि வீணாகும். இனி गुरूपाय மநுஷ்டிப்பவனுக்கு गुरुவான फलம்; लघूपायம் அநுஷ்டிப்பவனுக்கு लघुफलமென்று அதிகார भेद மென்னில்—அது ஸம்ப்ரதாயவிருத்தம். இருவருக்கும் பலன் ஏகரூபமென்று विकल्पोऽविशिष्टफलत्वात् என்றார். ஒருவனுக்குப் பூர்ணாநுபவம் மற்றொருவனுக்குக் கைங்கர்யம் என்று சில வைஷம்யம் கல்பித்ததும் ப்ரமாண—गद्यादिवचनविरुद्ध மென்கிறார் வேறொரு முகத்தாலே இதி. தாமஸருக்கு अभिचारத்தையும் ராஜஸருக்குப் பல காம்யகர்மங்களையும் விதித்தாற்போலே ஸாத்விகரில் தாழ்ப்பட்டவருக்கு गुरूपायத்தையும் பரமஸாத்விகருக்கு लघूपायத்தையும் விதிக்கிறதென்று அதிகாரிபேதமுண்டென்பர். இப்படி பக்திரூப गुरूपायத்தில் இழியும் ஸாத்விகருக்கு பரமஸாத்விகரளவில் தத்துவ ஜ்ஞாநமில்லை; அஹங் காராதிகளுண்டென்றால், தத்துவ ஜ்ஞாந ஸாத்யமான மோக்ஷம் அவர் களுக்கு வாராது. மோக்ஷோபாயமான பக்தியிலிழிகின்றவருக்கு दोषமான அஹங்காரம் சிறிதுமிருக்க ந்யாயமில்லை. 'பக்தி विधायक வாக்யங்களுக்கு गुरूपायவிதியில் நோக்கில்லை; ஔஷதம் கொடுப்பவர், முதலில் கசப்பான ஔஷதம் கொடுத்தால் உட்கொள்ள மாட்டானென்று ஔஷதமாகாத வெறும் வெல்லத்தை முதலில் கொடுத்து ஔஷதம் கொடுப்பது போல் प्ररोचनार्थ மாக = ருசியையுண்டு பண்ணுவதற்காக உபாயமல்லாத பக்தியை உபாயமாகக் கட்டி அதில் ப்ரபத்தியைக் கலந்து அநுஷ்டிக்கச் செய்து, பிறகுத் தனி ஔஷதம் கொடுப்பது போல் தனி ப்ரபத்தியான லகூபாயத்தை உபதேசித்ததென் கிற பக்ஷத்தைக் கூறிக் கழிக்கிறார் लघूपाये இதி. அத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞாநம் பக்த்யாதி வ்யாபார நிவ்ருத்திக்குக் காரணமாகில்—வேறு பலத்திற்கான கர்ஜ்ஞானபக்திகளைப் போலே மோக்ஷத்திற்காக அத்யந்த பரதந்த்ரனான இவன் செய்வதொன்றில்லை யென்று முமுக்ஷுவானபோதே ப்ரபத்தியையே

अत्यन्त-अनुचितம். अनुपायங்களை उपायங்களாக विधिக்கிறதென்றால் श्रुतिस्मृतिகள் मोहनशास्त्रங்களாகப் प्रसक्तिக்கையாலே शरण्यस्वरूपादिகளும் सिद्धियாத படியாம். गुरुக்களான कृष्यादिव्यापारங்களும் लघुக்களான रत्नवाणिज्यादिகளும் अर्थिகள் பக்கல் விகல்பிக்கிறதுவும் अधिकारिविशेषव्यवस्थैயாலேயென்னுமிடம் लोकप्रसिद्धம். ஆழ்வானுடைய चरमश्लोकव्याख्यानத்திலும் இவ்வளவே विवक्षितமாகையால் ஒரு

---

விதிக்கலாம்; गुरुவுக்கு உபாயத்வேந विधि வ்யர்த்தமாகும். விதித்தால், 'வெல்ல மிது ரோகம் போக்கும்' என்கிற லௌகிக வாக்யம் போலே பக்தியை விதிக்கும் வாக்யம் தப்பான விஷயத்தைச் சொல்வதால் மோஹநமாய் அப்ரமாணமாகும், மேலும் ப்ரபத்தியே அல்லது பகவானே உபாயமென்று முதன் முதலாக வேதம் உபதேசித்தால் அது ரசப்பாவதற்குக் காரணமென்ன? பெரிய கார்யங்களைச் செய்வதே இவனுக்கு வழக்கத்திலிருப்பதால் இதை முதலில் ஏற்கமாட்டானென்னில்—அப்போது पत्रं पुष्पं फलं तोयम् இத்யாதி உபதேசத்தையும் ஏற்கமாட்டான். பகவானுடைய கல்யாண குணங்களை யறிந்தால் அது ருசிக்குமென்னில்—இங்கும் அக் குணங்களையே கூறி உபதேசம் கூடும். மேலும் உபாயமல்லாததை உபாயமாக விதிப்பதென்றால் ஒருவித பக்தியோகமே போதும்; பல பக்தியோக விதிகளும் அவற்றின் விரிவுகளுமெல்லாம் வீணாகும். அத்வைதிகள் सगुणब्रह्मஜ்ஞாநத்திற்குக்கல்ப்பிப்பது போல் பக்தருக்குத் தனியே மோக்ஷாபாஸம் கல்ப்பிப்பதாம், இவ்வளவால் வசநபூஷணத்தில் ஔஷத த்ருஷ்டாந்தம் சொன்னதும், லகூபாயத்திலே ருசி வருவதற்காக गुरूपायविधि யென்றும் गुरूपाय அநுஷ்டாநம் நித்யசேஷத்வ—அத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞாந விரோதி யாகையால் இது अभिचारத்திற்கும் மேலாக மர்மஸ்பர்சியான தோஷமென்றும் சொல்லியிருப்பதும், பெரிய வாச்சான்பிள்ளை गद्य வ்யாக்யாந ப்ரவேசத்திலே குத்ருஷ்டிகளை நிரஸிப்பதற்காக பாஷ்யாதிகளில் பக்தியைச் சொன்னது, ஸாத்விகருக்கு ப்ரபத்தியே க்ராஹ்யமாகுமென்றதும் நிராகரிக்கப்பட்டன. ஆக உண்மையில் இரண்டும் உபாயங்களே. இவை गुरुவும் लघुவுமாயிருப்பதால் ஒருவித அதிகாரியே விகல்பேந அநுஷ்டிக்கலாமென்ன வொண்ணாது. இது भाष्यासंमतமுமாம்.

गुरुलघुக்களுக்கும் துல்யவிகல்பம் காண்கிறோ மென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார்—गुरुக்களான இதி. कृष्यादि என்கிற ஆதிபதத்தால் गोरक्षादिகளை க்ரஹிப்பது, अधिकारिविशेषेति. उञ्छ शिल – अमृत – मृतादि ப்ராஹ்மண வ்ருத்திகளைப் போல் அதிகாரி பேதம் இங்கும் கொள்வது. க்ருஷிகனுக்கு ரத்நபரீக்ஷாதி சக்தியும் ரத்ந வ்யாபாரிக்குக் க்ருஷிசக்தியும் அரிதாகும். அததற்குப் பலனிலும் ஏற்றத்தாழ்வு உண்டு. ஆகில் ஆழ்வான் 'उपायान्तरदौष्कर्यात् शोचंस्त्वं मद्वाप्तये। साधनत्वेन निर्णीतान् सर्वान् संत्यज्य दूरतः। मामेकं शरणं याहि" என்கிற ச்லோகத்தால் அசக்தனாய்!சோகிக்கிறவனுக்கு பக்த்யாதி உபாய த்யாகத்தை விதித்திருக்கிறாரே; உபாயத்யாகத்தை அங்கமாகக் கொள்ளாமற் போனால் அது விரோதிக்குமே என்பதைப் பரிஹரிக்கிறார் ஆழ்வானு

विरोधமுமில்லை. समावर्तनादिகளில் गुरुलघुविकल्पமும் अवस्थाविशेषங்களாலே நியத மென்று கொள்ளாதபோது गुरुविधानवैयर्थ्यமும் வரும்.

"ज्ञानपूर्तियாதல் विश्वासपूर्तियாதலுடையவன் ப்ரபத்திக்கு अधिकारी; ज्ञानमान्द्य மாதல் विश्वासमान्द्यமாதலுடையவன் उपासनादिகளுக்கு अधिकारी" என்றால். இச் चरमश्लोकादिகளுக்கு उपदेष्टाக்களுமாய்ப் பரமாஸ்திகருமாகையாலே पूर्णज्ञानविश्वास ரான व्यासादिகளுக்கு उपासनादिகளில் अधिकारமில்லையாம். அவர்கள் उपदेशकाल த்திலே ज्ञानविश्वासங்களையுடையராய்ப் பின்பு கலங்கி உபாஸகரானார்களென் கைக்கு ஒரு ப்ரமாணமில்லை.

ப்ரபந்நராய்வைத்து लोकसंग्रहार्थமாக उपासनादिகளை अनुष्ठித்தார்களென் கைக்கும் அவ்வோ प्रबन्धங்களில் ஒரு வசநமில்லை. அப்படிக் கல்பிக்கப் புக் காலும் தன் अधिकारத்துக்கு निषिद्धமானவற்றை लोकसंग्रहार्थமாக अनुष्ठिக்கப்

---

டைய இதி. த்யாகவிதிபக்ஷத்திலே நாம் இங்குச் சரமச்லோகத்திற்குச் செய்யும் நிர்வாஹமெல்லாம் அவர்கருத்திலுள்ளதே யென்னலாம். அநுவாத பக்ஷத்தையும் கொண்டு पौरुषादि दूरतः सर्वान् सन्त्यज्य शोचन् त्वं मां शरणं याहि என்று அந்வயிப்பர். समावर्तनेति. வேதாத்யயநம் பூர்த்தியான பிறகு விவாஹத்திற்கு முன் செய்யும் ஸமாவர்த்தநமென்ற சடங்கில் ஸ்நாநத் திற்கு முன்னைப் பல கார்யங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. எல்லாம் விட்டு तीर्थं स्नात्वा என்று ஸ்நாநம்மட்டுமென்கிற பக்ஷாந்தரமுமிருக்கிறது. அங்குள்ள गुरुलघुவிகல்பமும் காலவிளம்பத்தை ஸஹிக்காதவனுக்கே लघु பக்ஷம் என்றாற்போல் சொல்லி நிர்வஹிக்கப்படும்.

ஒரேவிதமான ब्रह्महत्यादिपापத்தின் ப்ராயச்சித்தங்களில் गुरुलघु விகல்பம் காணப்படுகிறது. அதுவும் சக்தி அசக்தி, பலகால் பாபம் செய்தல், ஒரு காலே செய்தது இத்யாதிகளைக் கொண்டாகும். ஸோமயாகத்தில் अतिरात्रे षोडशिनं गृह्णाति; नातिरात्रे षोडशिनं गृह्णाति என்று அதிராத்ரसंस्थाक ஜ்யோதி ஷ்டோமயாகத்திலே षोडशि என்கிற ஸோமரஸபாத்ரத்தில் ஸோமரஸத்தை க்ரஹிப்பது, க்ரஹிக்காமலிருப்பது என்று விகல்பமுள்ளது. அங்கும் फल த்தில் வைஷம்யமுண்டானாலும் விட்டதால் கர்மவைகுண்யமில்லை யென்றும், ஸோமரஸம் குறைவாயிருக்கும் போது இதொன்றைமட்டும் விடலாமென்றும் கருத்துக் கூறுவதால் அதிகாரிவ்யவஸ்த்தை யுண்டென்ற படி.

இங்கும் பக்த்யதிகாரிக்கு ஜ்ஞாநமோ விச்வாஸமோ மந்தமாயிருக்கும். ப்ரபத்த்யதிகாரிக்கு அது பூர்ணமென்று அதிகாரிபேதத்தை சங்கித்துப் பரி ஹரிக்கிறார் ज्ञानेति. भगवदत्यन्तपारतन्त्र्यம் நித்ய சேஷத்வமெல்லாமறியாமையே ஜ்ஞாநமாந்த்யமென்பது தவறு; 'परात्तु तच्छ्रुतेः; अविभागेन दृष्टत्वात्' இத்யாதி ஸூத்ரங்களால் அத்யந்த பாரதந்த்ர்ய-நித்ய சேஷத்வ-சரீராத்மபாவாதிகளை ஸ்த்தாபிக்கும் வ்யாஸாதிகளுக்கு மாந்த்யமில்லாமையால். அவர்கள் உபாஸநம் செய்வது தவறாகும். ப்ரபந்நராய் இதி. வ்யாஸாதிகளும் ப்ரபந்நர்களே; கர்மயோகாதிகளை யநுஷ்டித்தது லோகஸங்க்ரஹத்திற்காக வென்னில் —

யுக்கால் அவை இவன்தனக்கும் பாபமாய் अधिकारத்துக்கு विरुद्धानुष्ठानம் பண்ணுகையாலே தன் अनुष्ठानத்தை யிட்டு लोकसंग्रहம் பண்ணவும் கடப்படா தொழியும். தனக்கு இரண்டு வழிகள் शास्त्र - अनुमतங்களானால் அவற்றில் லோகத்தார்க்கு சக்யமாய் அவர்களுக்கு ஹிதமாயிருப்பதொன்றைத் தான் अनुष्ठित்துக் காட்டி லோகத்தாரை அதிலே நிலைநிறுத்துகையே लोकसंग्रहமென்று श्रीगीताभाष्यத்திலே யருளிச் செய்தார். அல்லது संन्यासिக்கு निषिद्धமான गृहस्थ-धर्मத்தை संन्यासि अनुष्ठित்துக்காட்டுமது लोकसंग्रहार्थமாகாது. இது शास्त्र-सिद्धமாமத்தனை. இப்படியே प्रपत्त्यधिकारिக்கு निषिद्धத்தை அவன்தானே कैङ्कर्यबुद्धियாலே अनुष्ठिக்கையும் शास्त्रविरुद्धம். ப்ரபத்திக்கு अनपेक्षितங்களான शास्त्रीयங்களைக் कैङ्कर्यबुद्धियாலே अनुष्ठिப்பார்க்கு विरोधமில்லை.

"தத்தம் जात्यादिகளுக்கு अनुरूपங்களுமாய்த் தந்தமக்கு शक्यங்களுமான धर्मங்களினுடைய स्वरूपத்யாகம் अयुक्तமாக विधेयம்" என்னும் பக்ஷத்திலும் प्रपत्त्युत्तरकालம் தன் वर्णाश्रमाद्यधिकारங்களுக்கு अनुरूपமாக அடைத்த कैङ्कर्यफल

---

ஜ்ஞாநாதிமாந்த்ய மிராமையால் கர்மயோகாதிகளுக்கு அநதிகாரிகளான வ்யாஸாதிகள் அவற்றை லோகஸங்க்ரஹத்திற்காகச் செய்யலாமோ? இது ஸந்யாஸிகளும் க்ருஹஸ்த்த தர்மத்தைச் செய்யலாமென்பதற்குத் துல்யமாகும். கடப்படாதொழியும் = முடியாமற்போம்; நேர்மையாகாது. ஆனால் லோகஸங்க்ரஹத்தை கீதையில் சொன்னது என்ன கருத்தாலென்ன — அதை விளக்குகிறார் தனக்கு இரண்டு இத்யாதி வாக்யத்தால். இப்படியே = ஸந்யாஸி க்ருஹஸ்த தர்மத்தைப் போலே; ப்ரபத்த்யதிகாரிக்கு கர்மஜ்ஞாநபக்தி யோக த்யாகத்தை ப்ரபத்தியங்கமாக விதித்தால் அப்படி நிஷித்தமானவற்றைக் கைங்கர்ய புத்தியினாலும் செய்யலாகாது. நிஷித்த ஆசரணம் கைங்கர்யமாகுமோ? இப்போது ப்ரபந்நர்கள் பல சாஸ்த்ரிய கைங்கர்யங்களைச் செய்கிறார்களே; அதெப்படி கூடுமென்ன — அவை ப்ரபத்திக்கு வேண்டாமாகிலும் ப்ரபந்நனுக்கு நிஷித்தங்களல்லவாகையால் தோஷமில்லை கர்மயோகாத்யுபாயங்களுடைய த்யாகத்தை விதிக்காமலிருந்தால் அவை நிஷித்தமாகாமையால் ப்ரபத்த்யதிகாரியும், உபாயமாகச் செய்யவாகாமற் போனாலும், நாதமுனிமுதலானோரைப் போல் கைங்கர்யமாகச் செய்யலாமென்றறிவிக்கிறார் ப்ரபத்திக்கு இதி.

இவ்வளவால் स्वरूपत्यागविधि யென்கிற பக்ஷம் தூஷிக்கப்பட்டது இதை விட்டு स्ववर्णाश्रमानुरूपसर्वधर्मत्यागத்தை விதிக்கலாமே யென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் இந்த ஸர்வதர்மத்யாகமாவது विधिविषयप्रवृत्तिधर्म-निषेधविषयनिवृत्तिधर्मसर्वत्यागமா. ப்ரவ்ருத்திதர்மமாத்ரத்யாகமா. மேலும் இந்த த்யாகம் உத்தரகாலத்திலா; ப்ரபத்த்யநுஷ்டாநகாலத்தில் மட்டுமா — என்று விகல்பித்து எல்லாம் தூஷிக்கிறார். பொதுவாக ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஸர்வ தர்மத்யாக விதிக்கு தம் தம் இத்யாதியால் முதலில் தூஷணம். அசக்யங்களுக்கு த்யாகத்தை விதிக்கமுடியாதாகையால் சக்யமான என்று சேர்த்

த்தையும் இழந்து अहिंसा-सत्यवचनादि-सामान्यधर्मங்களையும் शौचवन्दनादिகளை யும் தவிர்ந்து पशु-मृग-पक्ष्यादिகளைப் போலே திரியும் படியாம்.

'निषेधवाक्यसिद्धங்களான निवृत्तिरूपधर्मங்கள் स्वरक्षणार्थव्यापारமல்லாமை யாலே शरणागतिயோடு विरोधமில்லாமையால் இங்குப் प्रवृत्तिरूपधर्मங்களினு டைய त्यागமே விவக்ஷிதம்'' என்னும் निर्वाहமும் मन्दम्. निवृत्तियும் व्यापारविशेष மென்னுமிடமும் அதுவும் स्वरक्षणार्थமாமென்னுமிடமும் बोधयिष्यते. இவ் विधिबलத்தாலே प्रवृत्तिनिवृत्तिरूपங்களான सर्वधर्मங்களையும் தவிர்ந்து திரிகை தானே ப்ரபந்நனுக்கு शास्त्रार्थமாறுலோவென்னில், ப்ரபந்நரான பூர்வர்களும் இப்போதுள்ளாரும் सावधानமாய்ப் பண்ணிப்போருகிற கைங்கர்யங்களும் अनाचारपरिहारங்களும் शिष्टानुष्ठानமாம். यथाधिकारம் शास्त्रार्थनिष्ठराय்ப் परमकारुणिகருமாயிருக்கிறவர்களுக்கு भ्रम—विप्रलम्भसम्भावनैயுமில்லை.

''यावज्जीवं सर्वधर्मत्यागம் विधेयமாகிலன்றோ இவ் विरोधமுள்ளது? प्रपत्त्यनु-ष्ठानक्षणத்தில் सर्वधर्मங்களினுடைய स्वरूपत्यागம் स्पष्टமாகில் विरोधமில்லையே'' என்னில்—அப்போது सम्भावितமல்லாதவற்றினுடைய स्वरूपत्यागம் विधिக்க வேண்டா; सम्भावितமானவற்றினுடைய स्वरूपत्यागம் विधेयமாகில்—அப்போது உண்டான भगवत्क्षेत्रवास—शिखा - यज्ञोपवीत - ऊर्ध्वपुण्ड्रधारणादिகளைத் தவிர்ந்து கொண்டு ப்ரபத்தி பண்ணப் प्रसक्तिக்கும்.

ஆகையால் உபாஸநத்தில் வரும் धर्मविरोधங்களாலே நிரபேக்ஷையாயிரு

---

ந்து. இந்த த்யாகம் எப்போதும் வேண்டுமென்ற பக்ஷத்தில் உத்தரகாலத்தில் वर्णाश्रमधर्मकैङ्कर्यங்கள் விடப்படும். அஹிம்ஸை அஸ்தேயம், (களவின்மை) ப்ர ஹ்மசர்யம் என்கிற நிவருத்திதர்மங்களும் விடப்படும். அப்போது ம்ருக ப்ராயமான நிலையாம். ப்ரவ்ருத்தி தர்மமாத்ரத்யாகம் இசைகிறோம்; அஹிம் ஸாதிகளைக்கொண்டதால் ம்ருகவைலக்ஷண்ய மென்னில்—सर्वधर्म என்றி ருக்க, நிவருத்தி தர்மத்தைச் சேர்க்காமைக்குக் காரண மென்ன? நிவ்ருத்தி வ்யாபாரமாகாதே யென்னில்—ப்ரயத்நத்தை ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யென்று பிரித்திருப்பதால் நிவ்ருத்தியும் வ்யாபாரமே. 'रागाद् प्रवृत्तिः द्वेषाद् निवृत्तिः' என்று அதற்கு வ்யாபாரத்வம் ஸித்தம். शास्त्रार्थமாக இருந்தா லென்ன வெனில்—பூர்வாசார்யாநுஷ்டாநவிருத்தமாகுமிது यावज्जीवमिति த்யாகம் எப்போதுமென்று விதியென்பதை விட்டு ப்ரபத்தி காலத்தில்மட்டும் ஸர்வ தர்மத்யாகமென்னில்—அப்போது ப்ரபத்தி பண்ணும்போது தான் ஸ்வீகரி த்திருக்கிற க்ஷேத்ரவாஸ शिखाधारण உபவீத புண்ட்ரதாரணாதிகளை விட்டே ப்ரபத்தி செய்ய வேண்டியதாகும். सम्भविக்காததற்கு त्यागविधि வராதே.

இவ்வளவால் गुरूपायत्यागविधि, வர்ணாச்ரமதர்மாதித்யாகவிதி யென் கிற பக்ஷங்கள் கண்டிக்கப்பட்டதால் த்யாகவிதிபக்ஷத்தில், 'அநுஷ்டிக்கும் தர்மங்களை ப்ரபத்திக்கங்கமாகப் பற்றாமல்' என்று सर्वधर्मान् परित्यज्य என்ப தற்குப் பொருளாமென்று முன் (3) தொடங்கியதையே நிகமநம் செய்கிறார் ஆகையால் இதி. அங்கங்களாலே நிரபேக்ஷையாய் = அங்கங்களை வேண்டா

க்கிற ப்ரபத்திக்கு अङ्गமாக ஒரு धर्मத்தையும் பற்றவேண்டாவென்கையே त्यागविधिपक्षத்துக்கு உசிதம். இந்தத் त्यागविधियான பக்ஷந்தன்னிலும் उपाया-न्तरसामर्थ्यமில்லாதார்க்கும், அது உண்டாகிலும் विलम्बाक्षमரல்லாதார்க்கும் இப் ப்ரபத்தியில் अधिकारம். இப்படியாலுல் ஒரு ப்ரமாணத்துக்கும் विरोधமில்லை.

பூர்வாசார்யர்களும் இவ்விடத்தில் सर्वधर्मस्वरूपत्यागம் प्रपत्त्यङ्गமென்றும் இப்படியன்றென்றும் विवादம் பண்ணினார்களல்லர்; ப்ரபத்திக்கு अधिकार மான आकिञ्चन्यமும் ப்ரபத்தியினுடைய नैरपेक्ष्यமும் இச் चरमश्लोकத்தில் எந்தப் पदங்களிலே விவக்ஷிக்கை உசிதமென்று विमर्शिத்தார்களத்தனை.

अधिकारं पुरस्कृत्योपायस्य निरपेक्षताम् । एकशब्देन वक्तीति केचित् वाक्यविदो विदुः ॥

---

ததாய்; இந்த மூன்றும் பக்ஷத்தொடக்கத்திற்கு முன்னே இங்கு सर्वधर्मान् परित्यज्य என்பதற்கு गुरूपायங்களைச் செய்யமுடியாமையால் விட்டிருக்கிறவனைத் தன்னை யறிந்தவனாய் என்று கார்பண்யவிதிபக்ஷம் கூறப்பெற்றது. அதற்கு முன் गुरूपायத்தைச் செய்யமுடியாமல் விட்டிருக்கும் அகிஞ்சநன் என்று அநுவாதபக்ஷம் சொல்லப்பெற்றது, அப் பக்ஷங்களில் அகிஞ்சநனே ப்ரபத்த்யதிகாரி யென்பது ஸ்பஷ்டம், இந்த மூன்றும் பக்ஷத்தில் அது எப்படி ஸித்திக்குமென்ன, அருளிச்செய்கிறார் இந்த த்யாகவிதியான இதி. सांगप्र பத்தியில் கார்பண்யமும் அடங்கி யிருப்பதாலும் ப்ரதாநம் भरந்யாஸமே யாகையாலும் உபாயாந்தரசக்தனுக்கு ப்ரபத்தியில்லை என்றது ஸ்பஷ்டமென்றபடி.

இப்படி सर्वधर्मस्वरूपत्यागவிதியை தூஷித்தால் அந்த த்யாகம் ப்ரபத்த்யங்கமென்று பூர்வர்கள் சொன்னது விரோதிக்குமே என்ன—அவ்வாறு அவர்கள் சொல்லவில்லையென்கிறார் पूर्वेति. ஸ்வரூபத்யாகம்அங்கமா அன்றா என்ற விசாரங்கூட அவர்கள் செய்யவில்லை. செய்ததென்னவெனில்—परित्यज्य என்பதை அநுவாதமாகக் கொண்டு ஆகிஞ்சந்யமென்கிற அதிகாரபரமென்றனர் சிலர். ப்ரபத்திக்கு வேறு ஸஹகாரி ஒன்றும் வேணடா என்று நைரபேக்ஷ்யத்தை இது அறிவிக்குமென்றனர் மற்றும் சிலர், இரண்டும் அறிவிக்கக்கூடியவையே. मामेकं என்ற ஏகபதத்தாலே நைரபேக்ஷ்யம் அறிவிக்கப்படலாமென்று ஆகிஞ்சந்யம்அர்த்தமென்றவரின் கருத்து;நைரபேக்ஷ்யம்அர்த்தமென்றவரின் பக்ஷத்தில் ஆகிஞ்சந்யம் கிடைக்கப் பதமில்லையே யென்றபோது அவர் मा शुचः என்று சோகப்படாதே யென்றதால் முன்பு சோகித்திருந்தானென்று தெரிகிறபடியால் அதிலே ஆகிஞ்சந்யம் விஷயமென்றனர், இவ்விரு பக்ஷங்களில் எது உசிதமென்றுவிசாரித்தார்கள் (பாஷ்யகாரர் இந்த फलाफलविचारம் வ்யர்த்தமென்று வாளாவிருந்தார்)என்றபடி இதைக் காரிகைகளால் அறிவிக்கிறார் अधिकारमिति-சரமச்லோகமானது परित्यज्य என்கிறபதத்தினால் ஆகிஞ்சந்யமென்கிறஅதிகாரத்தை முன்னிட்டுக்கொண்டு உபாயமான ப்ரபத்திக்கு நைரபேக்ஷ்யமென்கிற தன்மையை मां என்பதற்கு விசேஷணமான ஏகமென்கிற சொல்லால் वक्ति அறிவிக்கிறது इति—என்று वाक्यविदः—மீமாம்ஸாசாஸ்த்ர

नैरपेक्ष्यं पुरस्कृत्य विहितस्य लघीयसः । उपायस्याधिकारं तु शोकयोत्यं विदुः परे ॥

इत्थमर्थाविशेषेऽपि योजनाभेदमात्रतः । प्राचां विवादः संवृत्तो भाष्यकारैरवारितः ॥

अज्ञातपूर्ववृत्तान्तैर्यत् तत्राऽऽरोपितं परैः । तत्तु श्रीविष्णुचित्ताद्यैर्निर्मूलमिति दर्शितम् ॥

ஆனால் 'इदं शरणमज्ञानामिदमेव विजानताम् । इदं तितीर्षतां पारमिदमानन्त्यमिच्छताम् ॥' என்றும்

---

மறிந்தவர் அல்லது வாக்யங்களின் தத்துவமுணர்ந்தவர் **केचित्** சிலர் **विदुः** கொண்டார்கள். **परे**—மற்றும் சிலர் ப்ரபத்தி வேறு ஸஹகாரியை வேண்டாதென்ற நைரபேக்ஷ்யத்தை (**परित्यज्य** என்பதால்) **पुरस्कृत्य** முன்னிட்டுக்கொண்டு **विहितस्य** விஹிதப்பட்டதாய், **अत एव लघीयसः** ஸக்ருத் கர்தவ்யமாயிருப்பதால் இலகுவாயிருப்பதோடு கடைசிவரையில் ஸஹகாரியை யபேக்ஷியாமையால் மிகவும் லகுவாக ஸித்தித்த **उपायस्य**—ப்ரபத்திக்கு வேண்டும் ஆகிஞ்சந்யரூப அதிகாரத்தை **माशुचः** என்றதால் குறிக்கத்தக்கதாக **विदुः**—கொண்டார்கள். இங்கே **पुरस्कृत्य** என்பதற்கு **विहितस्य** என்றதில் அந்வயம். நைரபேக்ஷ்யத்தை எதற்காகக் கொள்ளவேண்டுமென்னில்—**गुरूपाय**த்தைக் கண்டு சோகிக்கிறவனுக்கு லகூபாயத்தை விதிக்கிறவர் **लघुतर**மாகவும் தெரிவிப்பது மிகவும் அவச்யமாகும். அதிகாரமென்பது அவச்யம் அறிவிக்கவேண்டியதல்ல. சோகித்தவனுக்கு தானே இதை உபதேசம் பண்ணுகிறார்; அதனாலே அதிகாரம் ஸித்தமில்லையா? சோகித்தவனுக்கு உபதேசம் செய்கிறாரென்பது எப்படி தெரியுமென்னில்—ஸஹகாரி நிரபேக்ஷமாய் ஸக்ருத்தான சரணாகதியை விதித்ததாலேயே தெரியும். **माशुचः** என்று சொல்லும் இருக்கிறது என்று இவர்கள் கருத்து **इत्थं**—இப்படி **अर्थ-अविशेषेऽपि** அதிகாரம் நைரபேக்ஷ்யம் என்கிற இரண்டையும் இருபக்ஷத்திலும் இசைந்திருந்தபோதிலும். **योजनाभेदमात्रतः**—எந்தச் சொல்லில் எந்தப் பொருளை இணைப்பதென்பதில் மட்டுமுள்ள வேறுபாட்டாலே **प्राचां**—முன்னோர்களுக்குள் **संवृत्तः विवादः**—ஏற்பட்ட விவாதமானது பாஷ்யகாரராலே விலக்கப்படவில்லை; ஒரு பக்ஷத்தைக் கொண்டு மற்றொன்று மறுக்கப்படவில்லை **अज्ञात पूर्व वृत्तान्तैः**—முன் நடந்த வரலாற்றை யறியாதவர்களான **परैः**—தர்மத்யாக விதியைச் சொல்பவர்களால் **तत्र**—அந்த முன்னோர்விவாதத்தில் **यत्** எந்த ஸ்வபக்ஷமானது **आरोपितम्** ஏறிடப்பட்டதோ, **तत्**—அது **निर्मूलमिति**—ஆதாரமற்றதென்று **श्रीविष्णुचित्ताद्यैः** ச்ரீவிஷ்ணுசித்தர் முதலானவர்களால் **दर्शितम्**—வ்யக்தமாக நிரூபிக்கப்பெற்றது. இங்கு 'स्वस्ववर्णाश्रमाधीनं कर्म न त्याज्यमेव तत् । यावद्देहं प्रपन्नैश्च त्याग-हेतोरदर्शनात् । श्रुतिस्मृत्यादिविहितमनुष्ठेयं तु नैत्यकम् ।' என்று அவர்களின் ச்லோகங்களென்பர்.

இனி **अज्ञ-सर्वज्ञ-भक्तानां प्रपत्तौ अधिकारिता** என்று ஸர்வஜ்ஞருக்கும் ப்ரபத்தியில் அதிகாரம் சொன்னதால் ஜ்ஞாநமாந்த்ய முள்ளவனுக்கு பக்தியில் அதிகாரமென்று தெரிகிறதே யென்ற சங்கையைப் பரிஹரிக்கிறாராய் லக்ஷ்மீ தந்த்ராதிவசநங்களுக்குப் பொருள் பணிக்கத் தொடங்குகிறார் ஆனால்

'अविद्यातो देवे परिवृढतया वा विदितया स्वभक्तेर्भूम्ना वा जगति गतिमन्यामविदुषाम्'

என்றும் சொல்லுகிற அபிப்ராயமிருக்கும் படி என் என்னில்—இவ்விடத்திற் சொன்ன अज्ञानம் पश्वादिகளைப்போலே शास्त्रीयமொன்றுமறியாதொழிகை யன்று. மற்றென்னென்னில், उपासनादिகளில் தெளிவில்லாமையாதல், ப்ரபத்திதன்னிலும் ஸூக்ஷ்மவிசேஷங்கள் அறியாமையாதலாமத்தனை. இவற்றில் 'विजानतां' என்றும் 'पेपे परितृढतया घा विदितया' என்றும் சொன்ன ஜ்ஞாந விசேஷமும் उपासनादिகளில் தெளிவாதல் ப்ரபத்திக்கு உபயுக்தமான शरण्य-गुणादिविषयத்தில் தெளிவாதலாமித்தனை. அல்லது இதுக்கு अनपेक्षितமான सर्व-विषयज्ञानமன்று, परिवृढस्वरूपशरण्यगुणविशेषज्ञानமிறே இங்குச் சொல்லப்படுகிறது.

---

இதி. ல. த. 17—100 इदमिति. इदं—இந்த ப்ரபத்தியே अज्ञानां—அறியாதவர்களுக்கும் शरणं—உபாயம். इदमेव—இதுவே विजानतां—விசேஷமாக அறிந்தவர்களுக்கும் உபாயம். तितीर्षतां—விரைவில் ஸம்ஸாரத்தைக் கடக்க விருப்பமுள்ளவர் களுக்கும் இதுவே पारं—உபாயம். இதுவே आनन्त्यम्—अपरिच्छिन्न-ब्रह्मानन्दத்தைவிரும்புகிறவர்களுக்கும்உபாயமென்றது. இங்கே पूर्वार्धத்தில் अज्ञानां என்கிற பதத்திற்கு ஒன்றுமே யறியாதவர்களென்றது ஸ்வரஸமாகும் अज्ञानां என்பதற்கெதிரான विजानतां என்பதற்கு பூர்ணஜ்ஞாநமுள்ளவர் ஸர்வஜ்ஞரென்று பொருளாகும். இதை யநுஸரித்து जितन्तार्थसंग्रहरूपமான अविद्यातः என்கிற பட்டரின் முக்தகச்லோகத்திலும்—अज्ञानां என்றது अविद्यातः என்னப்பட்டது. 'देवे परिवृढतया वा विदितया' என்பதற்கு, 'அறியப்பட்ட देवनिष्ठமான ஸர்வேச்வரத்தன்மையாலே' என்று பொருளாகையால் ஸர்வேச்வரத்வஜ்ஞாநமென்பதாலே सर्वज्ञानமே சொன்னதாகும். भक्तेर्भूम्ना वा என்றது (ல-த) उत्तरार्ध-अर्थसंग्रहம். இவ்வர்த்தத்தைதான் अज्ञसर्वज्ञभक्तानां என்று கீழே கூறினம்—என்று பூர்வ-பக்ஷியின் அபிப்ராயம். இதை நிரஸிக்கிறார் இவ்விடத்தில் இத்யாதிபால். अज्ञानां என்பதற்கு ஒன்றுமேயறியாத ஜீவரென்று பொருளானல் அது சரீரமுள்ள ஜீவனுக்குச் சொல்லவாகாது. பச்வாதிகளைப் போலே சாஸ்த்ரார்த்தஜ்ஞாநமிராதவரென்ற பொருளானல் ப்ரபத்தியும் அநுஷ்டிக் கவாகாது. இதனல் गुरूपायத்திலே ஜ்ஞாநமில்லாதவர் என்ற பொருளைக் கொள்ள வேண்டும். இருபோல் ப்ரபத்தியில் விசதஜ்ஞாநமில்லாதவரென்ற பொருளையும் கூட்டலாம். அவிசத ஜ்ஞாநமுள்ளவருக்கும் ப்ரபத்தி ஸம்ப்ரதாய ஸம்மதமாதலின். विजानताम् என்பதற்கு सर्वज्ञருக்கு என்ற பொருள் தகாது. பத்த ஜீவர்களில் ஸர்வஜ்ஞனே அகப்பட மாட்டான். உபயோகமற்ற க்ருமிகீடாதி ஜ்ஞாநத்தை இங்கு எதற்குக் கூட்டுவது? பட்டரும் 'देवे परिवृढतया वा, என்றே யருளினர். தேவனை ஸர்வேச்வரனென்று க்ரஹித்ததாலேயே நமக்கு ஸர்வஜ்ஞத்வம் ஸித்தியாது. ஒவ்வொரு வஸ்துவையும் தனித்தனியே விசதமாக அறிந்தவனே ஸர்வஜ்ஞன். இது இவ்விடத்தில் இத்யாதியான சொல்லப்படுகிறது இத்யந்தவாக்யத்தின் பொருளாகும். ஆனலும் ஸர்வேச்வரத்வம் அறியப்பட்டதென்றால் பக்தி

இவ் उपयुक्तज्ञानமுண்டானாலும் उपायान्तरத்தில் शक्तियில்லாதபோது अकिञ्चनனாய் ப்ரபத்திக்கு अधिकारியாம். சக்தி யுண்டேயாகிலும்,

'शरैस्तु संकुलां कृत्वा लङ्कां परबलार्दनः। मां नयेद् यदि काकुत्स्थः, तत् तस्य सदृशं भवेत् ॥'

என்கிறபடியே ரக்ஷகன் கைபார்த்துத் தான் கைவாங்கியிருக்கை யன்றோ உசிதமென்னில்—இது ப்ரபந்நனுடைய उत्तरकृत्यविशेषத்துக்கு उदाहरणமாம். அல்லாதபோது उपायविधायकशास्त्रங்கள் निरर्थकங்களாம்.

उपायान्तरத்தில் தனக்கு ஜ்ஞாநமுண்டாய் அதில் अनुष्ठानशक्तियுமுண்டானாலும் विलम्बाक्षमனன்றிக்கேயிருக்குமாகில், கடுக फलம் தரவல்ல ப்ரபத்தியே நமக்கு உசிதையென்றிருக்கு மவனும் இப் ப்ரபத்திக்கு अधिकारியாம். இத்தை 'इदं तितीर्षतां पारम्' इत्यादिகளிலே சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்—'तितीर्षतां पारम्' என்றது கடுக अनिष्टनिवृत्ति பிறக்கவேணுமென்னும் த்வரையுடையார்க்கு என்றபடி; 'आनन्त्यमिच्छताम्' என்றது स्वरूपप्राप्तपरिपूर्णभगवदनुभवத்தைப் பெற்றல்லது தரிக்க மாட்டாதார்க்கு என்றபடி.

இவை யிரண்டையும் நினைத்து 'समयतेर्भूयसा वा' என்கிறார். இங்கு भक्ति

---

யோகாநுஷ்டாநத்திற்கு வேண்டிய ஸர்வஜ்ஞாநமுள்ளவனென்று தெரிகிறதே அந்த பக்தியோகாதிகாரிக்கு ப்ரபத்தியைச் சொன்னால் அகிஞ்சநனுக்கே அதிகாரமென்பது ஸித்திக்காதே யென்னில்—विजानतां என்பதற்கு ப்ரபத்தியை நன்றாக அநுஷ்டிக்கத் தெரிந்தவர்களுக்கு என்றிவ்வளவுமட்டும் பொருளென்றால், इदमेवविजानतां என்பதே வ்யர்த்தமாகும். எதை யநுஷ்டிக்கிறானோ அதை அவன் நன்றாக அறியவேண்டுமென்பது ஸர்வஸம்மதமன்றோ? ஆகையால் பக்தியோக ஜ்ஞாநமுள்ளவர்களுக்குமென்ற பொருள் அவச்யமென்றாலும், பக்தியோகத்தைவிட்டு ப்ரபத்தி செய்யலாமென்று ஸித்தித்துவிடாது. अज्ञानां என்று பக்திஜ்ஞாநமில்லாதவர்க்கு ப்ரபத்தி யென்றார்; ஜ்ஞாநமுள்ளவருக்கும் பக்தியில் சக்தியிராதபோது ப்ரபத்தி உபாயமென்பதற்காக विजानतां என்றதாம். இதற்கு सर्वं सावधारणமென்ற ந்யாயத்தாலே ஜ்ஞாநமாத்ரமுள்ளவர்க்குமென்ற பொருள் தகும். அதனால் சக்த்யபாவம் ஸித்திக்கும். பக்திசக்தியுள்ளவனுக்கும் அதிகாரம் சொன்னாலென்ன? அதற்கு साधकம் ஸ்ரீமத்ராமாயணவசனமென்றதைப் பரிஹரிக்கிறார் சக்தித்யாதி; நிரர்த்தகங்களாமென்ற வரையிலான வாக்யத்தால். இவ்வர்த்தத்தை மேலே இதிலும் உபாயாந்தரத்திலும் தெளிவுண்டானாலும் என்று நிகமநம் செய்வர்—परिवृढतया वा विदितया என்பதற்கு பக்தியோக விஷயமான பூர்ணஜ்ஞாநம் பொருளென்றெப்படி ஸித்திக்குமென்னில்—अज्ञानां என்று பக்தி யோகத்தில் அஜ்ஞாநத்தைச் சொன்னதால் ஸித்திக்குமென்க. இருக்குமாகில்= இருக்கிறானாகில்; ப்ரபத்திசப்தம் ஸ்த்ரீலிங்கமாகையால் உசிதைஎன்ற ப்ரயோகமாம்.

இங்கே வேறு விதமாகக் கருத்துக் கூறிலும் ஸ்ரீஸூக்தி விரோதம்வாராதென்று தோன்றுகிறது. அதாவது—இந்த பட்டர் ச்லோகம் जितन्तेஸ்தோத்ரத்தின் அர்த்தஸங்க்ரஹம். அதற்குப் பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானம்

வென்றது प्रेमपारवश्यத்தைச் சொன்னபடி, அல்லது भक्तियोगத்தைச் சொன்ன படியன்று. ஙிப் भक्तियினுடைய भूमा வாகிறது கடுக प्राप्ति கிடையாதபோது அழியும்படியான अवस्थाविशेषம். இது சிலர்க்குச் சட்டகளப்பட்ட भक्तियोग மில்லையாகிலும் सुकृतविशेषमूलமான भगवत्प्रसादத்தாலே வரும். இவ் அவஸ்தை யுடையவனும் ப்ரபத்திக்கு अधिकारि.

---

ப்ரஸித்தம். நிக்ஷேபரக்ஷாபூமிகையில் இந்த ச்லோகத்தை யெடுத்து நாம் சொன்னதாவது—जितन्ते ஸ்தோத்திரத்தில் மந்த்ரமான முதல்ச்லோகத்திற்கு மற்ற ச்லோகங்கள் வ்யாக்யாநமாகும். அதில் 'गतिर्गम्यश्चासौ हरिरिति जितन्ता-ह्वयमनोः रहस्यं व्याजह्रे स खलु भगवान् शौनकमुनिः' என்ற பட்டர்ச்லோக உத்தரார்த்தத்தில் गतिः गम्यश्च என்று சொன்ன गतिःபத்திற்கு விவரணம் இரண்டாவது ச்லோகம் தொடங்கியாம்; गम्यःப மென்ற உபேயத்வத்திற்கு விவரணம் ஏழாவது தொடங்கி. மூன்றுவது ச்லோகத்திலே गुणमायासमावृतः என்று அஜ்ஞாநம் சொல்லப்பட்டது—அதை अविद्यातः என்றுர். நாலாவதில் त्वामेव शरणं प्राप्य निस्तरन्ति मनीषिणः என்று பக்தியோகநிஷ்டர்களும் நடுநடுவே உனக்கு ப்ரபத்தி செய்தே கடக்கின்றனர்; தனித்த பக்தியாலல்ல; அவர்களே அப்படியிருக்க எனக்கு என் என்று அசக்தி யறிவிக்கப் பட்டது. இதை ஸங்கரஹிப்பதாகும் देवे परिवृढतया वा என்றது. प्रभौ परिवृढः என்ற शाब्दिक வ்யவஹாரப்படி ப்ரபுத்வ மறிந்தவனுக்கு ப்ரபத்தி யென்ற தாம். ப்ரபுத்வமாவது स्वतन्त्रர்களான ஸம்ஸாரிகள் விஷயத்திலே, கர்மாநுகுண மாக फलप्रदानத்தை விடாமல் செய்கை. ஒருவன் கர்மயோக ஸ்தானத்தில் ஒரு ப்ரபத்தியும் பக்தியோக ஸ்தானத்திலே மற்றொரு ப்ரபத்தியும் செய்து दर्शनसमानाकारஜ்ஞானத்தைச் சில நாளிலேயே பெறவாகாதது ஏன்? தேவனின் ப்ரபுத்வமே காரணம். ஆகையால் கர்மாநுபவத்திலே ப்ரேரிக்கப்பட்ட வருக்கு பக்தி செய்ய சக்தி எங்ஙனே உண்டாகுமென்று அசக்தியைக் காட்டின தாகும். ப்ரபு என்பதால் நாதனுள்ளவர்கள் அவனாலேயே கார்யம் ஸித்திப் பதால் தாம் தனியே கார்யம் செய்யமாட்டார்களென்று அறிந்து பக்தியை விடலாம், ப்ரபத்தி செய்யலாமென்னில்—பக்தியோகநிஷ்டருக்கும் பகவான் நாதனென்கிற ஜ்ஞாநம் புஷ்கலமாகவே யிருக்கிறதாலும் பக்திவிதி வாக்யங்கள் இருப்பதால் வாளாவிருத்தல் தகாதென்று அதிலிழிகிறுர்கள். அசக்தரிடம் பக்தியோகசாஸ்த்ரம் ப்ரவ்ருத்திக்காதபடியாலே நமக்கு நாதனே உபாயமாகலாமென்று ப்ரபத்தியதிகாரிகள் நினைப்பதாம். எப்படியும் देवे परिवृढत्वप्रधानமானது अनन्यदुष्करमिन्त्राணுக்கு பக்தியோகத்தில் அசக்தியை அறிவிப்பதே யாகும், இனி अज्ञानமென்றது பூர்ணமான அஜ்ஞானமுடையவ ரையென்றும் विजानता வென்றது பூர்ண ஜ்ஞானமுடையவரை யென்றும் சொல்லவாகாதென்றே வசநபூஷணத்தில் विजानताமென்பதற்கு ஜ்ஞாநாதிகரென்று பொருள் கூறிறுரென்னில், அது தவறு; பக்தியோக நிஷ்டரை அத்யந்தபாரதந்த்ர்யஜ்ஞாநமில்லாதவர் என்றது பொருந்தாது. பார

இப்படி யாகையால் उपायान्तरத்தில் अशक्तராய் இவ்வுபாயத்தில் समुदाय-ज्ञानமுடையராயிருப்பார்க்கும், இதிலும் उपायान्तरத்திலும் தெளிவுண்டாகிலும் उपायान्तरத்தில் अनुष्ठानसामर्थ्यமில்லாதார்க்கும். இவை யிரண்டும் உண்டாகிலும் विलम्बம் பொறாத आर्तित्वरैயுடையார்க்கும் ப்ரபத்தியிலே யிழியலாம்.

இவ் विलम्बाक्षमனும் தான் நினைத்த காலத்திலே பலம் பெறுகைக்கு उपायान्तररहितன். இப் ப்ரகாரத்தை நினைத்து 'जानति नतिमन्धामविद्युपाम्' என்

---

தந்த்ர்யமென்பது पराधीनप्रवृत्तिயைக் காட்டுமே யல்லது நிர்வ்யாபாரமாயிருப்பதைக் காட்டாது. பக்தரைவிட ப்ரபந்நருக்கு ஜ்ஞாநமதிகமில்லை யென்று முன்னமே சொல்லப்பட்டது. अज्ञाः विजानन्तः என்பதற்கு ஸ்வரஸார்த்தம் நகாதென்ற பிறகு ப்ரமாணங்களுக்கு விரோதமில்லாத பொருள் கொள்வதே தகும். अशक्ताः என்பதற்கே அஜ்ஞரும் அசக்தருமென்று பொருள் கட்டி विजानन्तः மென்பதற்கு அநுகுணமான அர்த்தம் கல்பிப்பதைவிட अज्ञपदம் ஜ்ஞாநமில்லாமையையும் विजानन्तःமென்பது அசக்தியையும் காட்டுமென்பதே ஸமுசிதம். பட்டர்ஸூக்தியிலும் அசக்தியைக் கொள்ளப் பதமில்லையே யென்னில்—साधारणமாய் அது அசக்தியைக் குறிக்குமென்றும் வேறு வழியும் முன்னமே சொன்னோம். இப்படி ஸித்திப்பதால் இதை மூலத்தில் கூறவில்லை.

अतित्वरा என்பதற்கு (பக்தியோகத்திற்குப் பிறகு வரும் பரமபக்தியைப் போன்ற) தீவ்ரமான ஆசையினன் என்று பொருள். இது அநிஷ்டநிவ்ருத்திவிஷயமுமாம்; இஷ்டப்ராப்திவிஷயமுமாம். கீழெடுத்த ப்ரமாண ஸம்ப்ரதாய வாக்யங்களின் பொருளைச் சுருக்குகிறார் இப்படியாகையால் இதி. ஏக अशक्ताः अविद्वांसः என்று மோக்ஷோபாய விசத ஜ்ஞாநமிராமையும் विज्ञानतास् ते ते परिवृढतया विदितपा என்று தமக்கொரு நாளும் சக்தி வராதென்று தெளிவதற்கான ज्ञानपरिपाकத்தினிடமுள்ள ஆகாரவிசேஷ ஜ்ஞாநமும் கருதப்பெற்றதால். विलम्बाक्षमत्वம் अतित्वरा என்றதின் பொருளாம். அதிக விச்வாஸமென்கிற பொருளல்ல, उपलक्षणத்திலும் அவ்வாறு கூறவில்லை. 'பக்தியோகாநுஷ்டாந சக்தனும் விளம்பாக்ஷமனாய் ப்ரபத்தி செய்யலாமென்றால் அகிஞ்சநனுக்கே ப்ரபத்தி யென்கிற வ்யவஸ்தை கெடுமே' என்னில்—விளம்பித்துப் பலனளிக்கும் பக்தியில் சக்தனானாலும் இவன் கோலின காலத்தில் பலனளிக்கக் கூடிய உபாயம் தெரியாதவனாயிருப்பதால் அகிஞ்சநனே யாவானென்கிறார் இவ்விளம்பேதி. அப்படி ஓர் உபாயமுண்டோ வென்னில்—இருந்தால் தெரியவில்லை யென்பது; இராமற்போனாலும் அகிஞ்சநனே; பக்தியோகத்தாலாகாத ப்ராரப்தகர்மநாசத்தையுமபேக்ஷித்து ப்ரபத்திசெய்யச் சொன்னதால் प्रपत्तिயானது गुरूपायस्थानத்திலேயாகையால், गुरूपाय பெருமாள் திருவுள்ளத்திலிருப்பதாம், சாஸ்த்ரமூலமாக அறியமுடியாமற்போனாலும் உபாயாந்தர ஸாத்யமாகாமையை முன்னிட்டே ப்ரபத்தி செய்வதாம். இது परिमन्यं परिप्लुषं என்கிற பட்டர்ஸூக்தியில் கருதப்பெறும்,

கிறது. व्यासादिகள் अधिकारिपुरुषர்களாகையாலே विलक्षणருமாய் उपायान्तरशक्तருமாயிருப்பார்கள். ஆகையால் உபாஸநத்தில் இழிந்தார்கள். அல்லது ज्ञानमान्द्यமாதல் विश्वासमान्द्यமாதல் உண்டாகி இழிந்தார்களல்லர்.

अशक्तस्यातिकृच्छ्रेषु दुराशादार्ढ्यशालिनः । कस्यचिद् बुद्धिदौर्बल्यं लघुत्यागस्य कारणम् ॥

तत्र प्रपत्त्यनर्हाणामन्यदित्यपि युज्यते । व्यासादिषु तु नैवैषा नीतिः संशयघातिषु ॥ இப்படி उपासक—प्रपन्नர்களுக்கு अधिकारம் व्यवस्थितமாகையால் இரண்டு சாஸ்த்ரமும் सप्रयोजनம். இரண்டு அதிகாரிகளுக்கும் स्वधर्मத்தில் प्रतिपत्तिवैषम्यமேயுள்ளது.

---

வ்யாஸாதிகளுக்கு ஜ்ஞாநமாந்த்ய மிராமற் போனாலும் விச்வாஸ மாந்த்யத்தைக் கொள்ளவேண்டும். नरस्य बुद्धिदौर्बल्यात् उपायान्तरमिष्यते என்று விச்வாஸ மாந்த்யத்தை தானே பக்தியோகத்தில் ப்ரவ்ருத்திக்குக் காரண மாகச் சொல்லிற்றென்ன—அருளிச்செய்கிறார் अशक्तस्येति. அந்த வசநம் गुरूपायத்தில் ப்ரவர்த்திப்பவரெல்லோருக்கும் விச்வாஸமாந்த்யம் காரண மென்று சொல்வதன்று; लघूपायத்திலே இழியவேண்டிய அதிகாரி அதை விட்டு गुरूपायத்தை விரும்புவது புத்திदौर्बल्यத்தாலென்கிறது. வ்யாஸாதி களுக்கு புத்திदौर्बल्यம் சொல்லவாகாது, ப்ரபத்திசாஸ்த்ரத்தை யுபதேசம் செய்து நமக்கு ஸம்சயம் போக்கி விச்வாஸம் விளைவித்தவர்கள் அவர்கள் தாமே. अशक्तस्य—அசக்தனாயிருந்தும் अतिकृच्छ्रेषु—தன்னால் செய்யவாகாத கர்மயோகாதிகளிலே திடமான துராசை கொண்ட வல்பனுக்கு लघूपायत्याக த்திற்குக் காரணம் புத்திதௌர்பல்யம். விச்வாஸமாந்த்யமிருந்தாலும் वृथैव भवतो याता भूयसी जन्मसंततिः இத்யாதிப்படி சிலர் ப்ரபத்தியிலிழியலாம். இழியாமையால் துராசை யுளது, तत्र—ப்ரபத்தியில் விச்வாஸ மாந்த்யமோ गुरूपायத்தில் திடமான துராசையோ இருப்பதனால் ப்ரபத்திக்கநதிகாரியா னார்க்கு உபாயாந்தரம் செய்யமுடியாமற் போனாலும் அதற்குக் கீழ்ப் படியில் ஏதேனுமொன்றாகும் गति என்பது युज्यते தகும். அவர் இச்சிக்கிறா ராகிலும் உண்மையில் அவரால் செய்யவாகாதென்று गुरूपायानधिकारமே யுளது. ப்ரபத்தியில் விச்வாஸமிருந்தும் गुरूपायத்தை ஸாதிப்பேனென்று துராசையுள்ளவனும் அநதிகாரி; கார்பண்யமில்லையே அவனுக்கு गुरूपायமே ஸாத்யமென்கிற ப்ரமமே बुद्धिदौर्बल्यம். வ்யாஸாதிகள் சக்தரானபடியாலே அவர்களுக்கு பக்தி யோகத்தில் ஆசை துராசையாகாது, ப்ரபத்தியை விடுவது ஆகிஞ்சந்ய மிராமையாலே. ஆக एषा नीतिः—விச்வாஸ மாந்த்யத்தால் துராசை யால் ப்ரவ்ருத்தி யென்கிற வழி வ்யாஸாதிகளிடம் சொல்லவாகாது. இப்படி விளம்பக்ஷமரான பக்தியோக சக்தரும் ப்ரபத்தியே செய்வதென்பதை நிராக ரித்தபடியாலே அதிகார வ்யவஸ்தை யுண்டென்று முடிக்கிறார் இப்படி இதி. ப்ரபத்திக்கு வர்ணாச்ரமதர்மாபேக்ஷையில்லையாகில் ப்ரபந்நன் அதை யெதற்கநுஷ்டிப்பது? அநுஷ்டித்தால் அங்கமாகும். ப்ரஹ்மாஸ்த்ர ந்யாய த்தாலே ப்ரபத்தியும் கைவிடும். ஆகையால் த்யாகத்தை விதிக்கவேண்டுமே

ப்ரபந்நனுக்குக் கோரின फलத்தைப்பற்ற வேறு ஒன்றை अनुष्ठिக்கில் ब्रह्मा-स्त्रन्यायத்தாலே विरोधமுண்டானாலும் स्वयंप्रयोजनமாகவாதல் भगवद्भागवतसमृद्ध्यादि—फलान्तरத்தைப் பற்றவாதல் வேறொன்றை अनुष्ठिத்தால் विरोधமில்லை.

(2) இப்படி स्वरूपत्यागம் கூடாதொழிந்தாலும் उपायत्वबुद्धित्यागம் பண்ணுகை 'परित्यज्य'வுக்குப் பொருளாகாதோ என்னில், ப்ரபந்நனுக்கு उत्तरकृत्यगोचरங்களான वाक्यங்களில் उपायत्वबुद्धित्यागம் விதிக்கிறவிடம் உசிதம். இங்கு उत्तर-कृत्यपरமன்றிக்கே उपायविधायकமாயிருக்கிற இவ்வாக்யத்திற் சொல்லுகையாலே இப் बुद्धित्यागपूर्वकமான धर्मस्वरूपம் ப்ரபத்திக்கு अङ्गமாக अनुष्ठेयமென்று फलिக்கையால் 'स्वयंप्रयोजनமான केवलकैङ्कर्यம் उपकरत्यம்' என்கிற मतம் सिद्धियாது; இவ்வுபாயத்துக்குச் சொல்லுகிற सर्वान्तरनैरपेक्ष्यமும் கிடையாது; இவ்வுபாயம் अकिञ्चनाधिकारமன்றிக்கே ஒழியும். எங்ஙனேயென்னில்—உபாயமல்லா

---

யென்ன—அருளிச்செய்கிறார் இரண்டு அதிகாரிகளுக்கும் இதி. பகவத்ஸம்ருத்தி, பாகவதஸம்ருத்தி யெல்லாம் உத்தேசித்துச் செய்யும் தர்மங்கள் ப்ரபத்தியை ஏன் बाधिக்கவில்லை? வேறு ப்ரயோஜநத்திற்காகச் செய்வதாலென்னில், நித்ய நைமித்திகங்களும் ஸ்வயம்ப்ரயோஜநமாகச் செய்வதால் बाधकமாகா என்ற கருத்தாலே भगवद्भागवतेत्यादि.

(2) இப்படி தர்மஸ்வரூபத்யாகபக்ஷத்தைக் கண்டித்து, 'தர்மத்தைத் துணையாக அபேக்ஷிக்காமல்' என்ற அர்த்தம் ஸ்தாபிக்கப்பட்டது. இனி தர்மங்களுக்கு உபாயத்வ புத்தித்யாகம் விதிக்கப்படலாமென்கிற பக்ஷத்தைக் கண்டிக்கிறார் இப்படி ஸ்வரூப இத்யாதியால். 'सर्वधर्मान् परित्यज्य=செய்யும் தர்மங்களில் உபாயத்வபுத்தியை விட்டு என்று பூர்வபக்ஷி சொல்வது. தர்மங்களில் உபாயத்வபுத்தியை விடு என்று ப்ரபந்நனுக்குச் சொல்வதானால் அவன் செய்யும் உத்தரக்ருத்யங்களில் ஸ்வயம்ப்ரயோஜநத்வ புத்தியை உபதேசித்ததாகும்; சரமச்லோகம் ப்ரபந்நனைக் குறித்து வந்ததன்று; ப்ரபத்தியை விதிக்க வந்தது. இதில் ஸர்வதர்மங்களிலும் உபாயத்வ புத்தியை விட்டு ப்ரபத்தி செய் என்றால் உபாயத்வ புத்தித்யாகம் ப்ரபத்திக்கு அங்கமாகும். அநுஷ்டிக்கப்படாத தர்மத்திற்கு உபாயத்வபுத்திப்ரஸக்தி யில்லை; அதை விடச் சொல்ல வேண்டா. அநுஷ்டிக்கிற தர்மத்திற்கு புத்தித்யாகத்தை விதித்தால் உபாயத்வ புத்தித்யாகத்துடன் தர்மங்களை யநுஷ்டித்துக்கொண்டு ப்ரபத்தி செய்யென்றதாம். அப்போது த்யாகவிசிஷ்டஸர்வதர்மங்களும் ப்ரபத்தியங்கமாகும். இதில் வரும் தோஷங்களைக் கூறுகிறார் ஸ்வயம் ப்ரயோஜநேத்யாதியால். உத்தரக்ருத்ய மெல்லாம் அங்கமாகும் நைரபேக்ஷ்யம் கிடையாது=போயிடும். அகிஞ்சநாதிகாரத்வமும் போமென்றபடி. பக்தியோகாநதிகாரிதானே இதைச்செய்கிறான்; ஆகிஞ்சந்யத்திற்கு ஹாநி யில்லையே. 'துணையாக ஒன்றையுமபேக்ஷிக்காமல்' என்ற ஸித்தாந்த பக்ஷம் போல்தானே இதாகுமென்ற கருத்தால்கேட்கிறார் எங்ஙனே இதி. உத்தரம் உபாயமிதி. பக்தியோகமே உபாயம்; வர்ணாச்ரம தர்மங்கள் அநுபாயம்,

தவற்றில் उपायत्वबुद्धित्यागம் இங்கு विधिக்கவேண்டா. உபாயமானவற்றில் उपायत्वबुद्धित्यागம் பண்ணி अनुष्ठिக்கையாவது பழைய उपासनादिகளில் நிலையாம். இங்கு उपायत्वबुद्धित्यागம் பொருளாகச் சொல்லுகிற பக்ஷத்தில் त्यागविधिக்கும் अनुष्ठानविधिக்கும் अधिकारि भेदத்தாலே विरोधம் பரிஹரிக்கவிடமும் अनपेक्षित-वचनம். இங்கு फलत्यागம் சொல்லும்போதிறே இவ் विरोधप्रसङ्गமுள்ளது? இப்படி बुद्धिविशेषत्यागपूर्वककर्म—ज्ञान—भक्तिகளைப் ப்ரபத்திக்கு अङ्गமாக இசையும் பக்ஷத்தில் उपासन-प्रपदनங்களுக்கு परस्परव्यपदेशத்தில் மாறுட்ட மேயுள்ளது. अङ्गभावத்தில் यथाकथञ्चिद् अनुष्ठानம் அமையுமென்கிற வைஷம்யமும் सत्यம்; 'सकलाङ्गोपसंहारे काम्यं कर्म फलिष्यति' என்று சொல்லப்பட்டதிறே.

---

அநுபாயத்திலே உபாயத்வ புத்தித்யாக விதி வீணாகையால் உபாயத்தி லென்ன வேண்டும்; அப்போது புத்தித்யாகத்துடன் பக்தியை யநுஷ்டி த்துக்கொண்டு ப்ரபத்தி செய் யென்றதாம். ஆக வாகிஞ்சந்யஹாநி யென்றபடி. பழைய இதி. முன் சொன்ன உபாயத்யாகவிதிபக்ஷத்தில் ஆகிஞ்சந்ய ஸாரம்; உபாஸனம் செய்ய வேண்டு மென்றேும். அப் பழைய நிலையே இந்த உபாயத்வபுத்தித்யாக விதியிலுமாம். இவ்வுபாயத்வபுத்தி த்தித்யாகவாதி ஒரு விரோதத்தை சங்கித்துப் பரிஹரித்தார்; அந்த சங்கைக் கும் பரிஹாரத்திற்கும் இடமில்லை யென்கிறுர் மேலே. பக்திரூப உபாயவிதிக் கும் த்யாகவிதிக்கும் விரோதமென்று சங்கை. பக்த்யதிகாரிக்கு அதன் விதி; ப்ரபத்த்யதிகாரிக்கு த்யாகவிதி யென்று அவர் சொன்ன பரிஹாரம். இங்கு இந்த த்யாகமானது தர்மத்யாகமா, உபாயத்வபுத்தி த்யாகமா, தர்ம த்யாகமாகில் தர்மவிதியோடு விரோதத்திற்கு இடமுண்டு. உபாயத்வ புத்தி த்யாகந்தானே சொல்வது. தர்மத்தை யநுஷ்டித்துக் கொண்டுதானே உபா யத்வபுத்தித்யாகம் செய்ய வேண்டும். அதனுல் தர்மவிதி விரோதமில்லையே யென்றபடி. இதில் வரும் தோஷத்தைக் கூறுகிறுர் இப்படி புத்தி இதி. உபாயத்வ புத்தித்யாகத்தோடு பக்தியைச் செய்துகொண்டு ப்ர பத்தியைச் செய்யவேண்டு மென்று இங்கு விதி; பக்திவிதிவாக்யத்தில் அங்கமாகப் பல ப்ரபத்திகளுண்டாகையாலே ப்ரபத்திவிசிஷ்டபக்திவிதியாம். ஆக இருவரும் இரண்டையும் அநுஷ்டிக்க வேண்டும். ஒருவனுக்கு ப்ரபத்தி அங்கம்; ஒருவனுக்கு பக்தி அங்கம் என்றதேயாம். ஆக அகிஞ்சநாதிகாரத்வ மெப்படி? அதிராமற்போனுலும் பக்தியை யங்கமாக்கினுல் ஒரு லாபமுண் டென்று கேட்டுப் பரிஹரிக்கிறுர் अङ्गभावத்தில் இதி सकलाङ्गोपसंहारे= எல்லா அங்கங்களுடன் சேர்த்து அநுஷ்டித்தால் தான் காம்யம் பலிக்கும். மோக்ஷ காமனையால் செய்வதால் பக்தியும் ப்ரபத்தியும் காம்யமே, அதனுலேயே மோக்ஷத்திற்கான ப்ரபத்தியநுஷ்டாநத்தில் ஐந்து அங்கங்களும் விடாமல் அநுஷ்டிக்க வேண்டு மென்கிறது ஆக ப்ரபத்திக்கு பக்த்யாதிகளை அங்கமாகச் சொன்னுலும் அங்கியான பக்ஷத்திற் போலே பூர்ணுநுஷ்டாநம் வேண்டும்.

இனி உபாயமான பக்த்யாதி ஸ்வரூபத்யாகத்தையோ பக்தயாதிகளில்

अतः स्वरूपत्यागोक्तौ कैङ्कर्यस्यापचारता । उपायत्वमतित्यागे तत्स्वरूपाङ्गता भवेत् ॥

सात्त्विकत्यागयुक्तानां धर्माणामेतदङ्गता । नूनं विस्मृतकाकादिवृत्तान्तैरुपवर्णिता ॥

सकृत्प्रपदनेनैव धर्मान्तरदवीयसा । तत्क्षणेऽभिमतं पूर्वे संप्रापुरिति शुश्रुम ॥

प्रसक्ताङ्गत्वबाधे तु ब्रह्मास्त्रसमतेजसः । उपायस्य प्रभावश्च कैङ्कर्यादि च सुस्थिरम् ॥

ஆகையால் 'இங்கு सर्वधर्मங்களினுடைய स्वरूपत्यागத்தை अर्थமாக विधिக்

---

உபாயத்வபுத்தித்யாகத்தையோ அர்த்தமாகக் கொள்ளாமல் வர்ணாச்ரம தர்மஸ்வரூப த்யாகத்தையோ அவற்றில் உபாயத்வபுத்தித்யாகத்தையோ அர்த்தமாகக் கொள்ளலாமே யென்பதைக் காரிகையால் கண்டிக்கிறார். अतः—பக்தியாதி தர்மத்தைக் கொண்டு சொன்ன அர்த்தத்தில் தோஷமிருப்பதால் स्वरूपत्यागोक्तौ வர்ணாச்ரம தர்மத்யாகத்தைச் சொல்வதானால் கைங்கர்யமும் வர்ணாச்ரம தர்மத்திற் சேர்வதால் அதற்கு த்யாகவிதி யிருந்தும் அதை யநுஷ்டித்தால் अपचारता = நிஷித்தாநுஷ்டாநமென்னும் தோஷம் வரும். उपायत्वमतित्यागे-வர்ணாச்ரமதர்மங்களை விடாமல் அவற்றில் உபாயத்வபுத்தியை மட்டும் விடவேண்டுமென்றால் வர்ணாச்ரம தர்மங்கள் ப்ரபத்திக்கு அங்கமென்றதாகும். அல்லது முதற்காரிகையால் கீழ்க்கூறியதற்கு தோஷாந்தரமும் கூறி நிகமனம் अतः= இவ்வளவால்; இதற்கு भवेत् என்றதில் அந்வயம். कैङ्कर्यस्यापचारता =निजकर्मादिभक्त्यन्तமென்றபடி கைங்கர்யம் இஷ்டம். அது தவறென்னவாகும். இனி வர்ணாச்ரம தர்மங்களுக்கு ஸாத்விக த்யாகவிதி யாகட்டுமே என்ன, அருளிச்செய்கிறார் सात्त्विकेति. ஸாத்துவிக த்யாகத்துடன் சேர்ந்த இவை அங்கமாகை காகாதிவ்ருத்தாந்தத்தை மறந்தவர்களால் சொல்லப்பட்டதாகும். காகாலிய गजेन्द्रादिகளுக்கு வர்ணாச்ரம தர்மங்களில்லை யாகையாலே ப்ரபத்தி தகாததாகும். மனிதர்க்கே வர்ணாச்ரம தர்மம் வேண்டுமென்னில்-அதுவுமில்லை.धर्मान्तरदवीयसा தர்மத்திற்கு வெகுதூரத்திலிருக்கிற பின்னே தர்மாநுஷ்டாந ப்ரஸக்தியிராத सकृत्प्रपदनेन एव—ப்ரபத்தி யென்கிற ஒரு காலத்திய கார்யத்தாலேயே அந்த க்ஷணத்திலேயே पूर्वे—சிலமுன்னோர்கள் अभिमतं—கோரின பலத்தை संप्रापुः பெற்றார்களென்று கேட்டுளோம். இங்கே ஸக்ருத்பதத்தினால் धर्मान्तरம் அங்கமாகாமைக்குக் காரணமும் குறிக்கப்படும். பக்திக்கு வர்ணாச்ரம தர்மங்கள் அங்கமாகை மனச்சுத்தியுண்டுபண்ணி மேன் மேல் பக்தியை வளர்ப்பதாலாம். ப்ரபத்திக்கு வளர்ச்சி யில்லை; தர்மாந்தரம் அநுஷ்டிப்பதற்கு முன்பே ப்ரபத்திபூர்த்தியாம். அதால் धर्मान्तरம் அங்கமாகாதென்றபடி. பிறர் கூறிய த்யாகவிதிபக்ஷங்களைக் கண்டித்து விட்டுத் தம் பக்ஷத்தில் தோஷமில்லையென்கிறார் प्रसक्तेति.வர்ணாச்ரம தர்மங்களை அங்கமாகக் கொள்ளாமல் என்பது ஸ்வபக்ஷம். அதைச் சொன்னதால் ப்ரபத்தி ப்ரஹ்மாஸ்த்ரதுல்யமென்று தேறும். அதனால் உபாயப்ரபாவம் ஸ்திரமாயிற்று. த்யாகவிதியிராமையால் கைங்கர்யம் செய்வதும் நிலைத்தது, காரிகைகளின் விவரணம் ஆகையால் இத்யாதியால். प्रसक्ताङ्गत्वबाधे என்றதால் ப்ரபத்தி

கிறது' என்றும், 'அவை अङ्गமாம்படி இங்கு बुद्धिविशेषत्यागमात्रம் विधिக்கிறது' என்றும் சொல்லுகிற பக்ஷங்கள் आज्ञानुपालनादिशास्त्रங்களுக்கும், ப்ரபத்திக்கு नैरपेक्ष्यம் சொல்லுகிற शास्त्रங்களுக்கும், पूर्वाचार्यसंप्रदायங்களுக்கும், प्रपन्नராய்ப் போந்த पूर्वशिष्टர்களுடைய ஆசாரத்துக்கும் विरुद्धங்களாம்.

இப்படி उक्तदोषங்களாலே धर्मங்களினுடைய स्वरूपत्यागமும் ப்ரபத்திக்கு अङ्गமன்று, उक्तनैरपेक्ष्यத்தாலே அந்த धर्मங்களினுடைய ஸ்வரூபமும் இதுக்கு अङ्गமன்று. ஆகையால் இங்கு மற்றொரு धर्मத்தாலும் இப் ப்ரபத்திக்கு அபேக்ஷையில்லை என்கையிலே இத் त्यागविधिக்குத் தாத்பர்யம்.

'இப்படி प्रतिषेधिக்கைக்கு प्रसङ्गம் வேணும் இங்கு என்ன धर्मங்கள் प्रसक्तங்களாய் प्रतिषेधिக்கப்படுகிறன' என்னில்—वेदान्तचोदितங்களான வித்யைகளில் ஒரு வித்யையிலே ஓதி अङ्गங்களாய்த் தோற்றின वर्णाश्रमधर्मங்களும் गतिचिन्तनादिகளும் विद्यान्तरத்திலும் வருமாப்போலே न्यासविद्यैயிலும் இவை(?) तुल्यन्यायத்தையாலே अङ्गங்களாய் வரப்புக இப்படி अङ्गत्वप्रसङ्गமுடைய सर्वधर्मங்களாலும் இதுக்கு அபேக்ஷையில்லை என்கை இவ்விடத்துக்கு உசிதம்.

இத் धर्मங்களுக்கு 'सहकारित्वेन च' என்ற ஸூத்ரத்திற் சொன்ன विद्या-सहकारित्वविशेषம் தவிர்ந்தாலும், 'विहितत्वाच्चाऽऽश्रमकर्मापि' என்று सूत्रान्तरத்திற் சொன்ன विनियोगान्तरத்துக்குப் ப்ரபந்நன்பக்கல் निवारकரில்லை. ஆகையால் இத் धर्मங்களினுடைய अनुष्ठानமும் धर्मங்களைத் த்யஜிக்கையும் ப்ரபத்திக்கு अङ्गமல்லாமையால் अशक्यங்களில் नैराश्यம் अधिकारத்திலே சொருகும்; शक्यமான नित्य-नैमित्तिकங்களுடைய अनुष्ठानம் आज्ञानुपालनமான கைங்கர்யமாத்ரமாம்.

---

யைக் குறித்துச் சிலவற்றிற்கு அங்கத்வம் ப்ரஸக்தமாயிற்றென்றதே; எப்படி ப்ரஸக்தமாயிற்றென்ன, விவரிக்கிறார் இப்படி प्रति சி. वेदान्तचोदितங்களான = உபநிஷத்துக்களில விதிக்கப்பெற்ற. ஒருவித்யையிலே = क्रियावानेष ब्रह्मविदां वरिष्ठः, तेऽर्चिषमभिसंभवन्ति, तत् सुकृतदुष्कृते धूनुते என்று அங்கங்கே. गति—மார்க்கம். பக்தியோகநிஷ்டன் த்யாநத்திற்கங்கமாக, கடைசியில் தான் போகிற அர்ச்சிராதி மார்க்கத்தையும், அதற்கு முன் தனக்குப் புண்யபாப ஹாநியும் பிறரிடம் அப் புண்யபாப ஸங்க்ரமமுமாமென்றதையும் நித்யம் சிந்தனை செய்யவேண்டும். சிலவிடத்திற் சொல்லியிருந்தாலும் எல்லா பக்தியோகத்திற்கும் இவற்றைக் கொள்வது போல் ப்ரபத்திக்கும் கொள்ள வேண்டுமென்று ப்ரஸக்தி, அதனால் வேண்டாமென்று. प्रपत्तेः क्वचिदप्येवं परापेक्षा न विद्यते என்கிற வசநத்தை யநுஸரித்து நிஷேதம். நித்ய நைமித்திக தர்மங்களால் பக்தியோகத்திற்குப் போல் ப்ரபத்திக்கு உபகாரம் சொல்லவாகாமற் போனாலும் गतिचिन्तनादिகள் வேண்டுமென்று சிந்திக்க இடமிருக்கிறது (இவை யென்கிற சொல் இராமலுமிருக்கலாம்.) அப்படியானால் கதி சிந்தநாதிகளைப் போலே வர்ணாச்ரமதர்மத்தையும் விட்டுவிடலாமே யென்பதற்கு உத்தரம் இத்தர்மங்களுக்கு இதி. நிவாரகரில்லை = நிஷேதக ப்ரமாணமில்லை. அப்படி அங்கமல்ல வென்று தெரிந்ததால் அசக்யத்தைச் செய்யு

सङ्कल्पमात्रमेवाङ्गं श्रुतमाचरणं पुनः । अनङ्गमाज्ञया प्राप्तं न सङ्कल्पनिबन्धनम् ॥

இப்படியாகில் இவனுக்கு नित्य-नैमित्तिकங்களில் அடைக்க வொண்ணாத प्रभूतकैङ्कर्यங்களுக்குப் ப்ரயோஜகர் ஆரென்னில்—இவை இவனுக்கு उपायान्तरத்திற் புகா(து); अङ्गान्तरनिरपेक्षையான ப்ரபத்திக்குப் பரிகரங்களுமாகா(து); अकरणத்தில் ஈச்வரன் வெறுக்குமென்று செய்கிறானுமல்லன்; தனியே இவை தமக்கு ஒரு पापक्षय–स्वर्ग–पशु–पुत्रादिफलान्तरத்தை ஆசைப்பட்டுச் செய்கிறானுமல்லன்: லௌகிகரானவர்கள் द्यूतादिகள் பண்ணுமாப் போலே கேவலம் தன் உகப்பாலே ப்ரவர்த்திக்கிறானுமல்லன்; முக்தரைப்போலே भगवदभिप्रायத்தைப் प्रत्यक्षமாகக் கண்டு அவனை உகப்பிக்கைக்குப் प्रवृत्तिக்கிறானுமல்லன்; மற்று எங்ஙனேயென்னில்—இக்கைங்கர்யங்களுக்கும் फलान्तरங்கள் போலே भगवत्प्रीतियும் फलமாக शास्त्रसिद्धமாகையாலே அவனுகப்பிலே सर्वोत्तरனான தன் प्रकृतिस्वभावத்தாலே ருசி பிறக்கையாலே सुहृत्-पुत्राद्युपलालनங்களிற்போலே सर्वविधबन्धुவான அவனுடைய प्रीणनங்களிலே சாஸ்த்ரம் கைவிளக்காக प्रवर्तिக்கிறான்.

இவ்விடத்திலே சிலர்—"ஸர்வேச்வரன்பக்கலிலே सर्वभरन्यासம் பண்ணின விவேகிக்குத் त्याज्य—उपादेयविभागनिर्णायकம் स्वरूपज्ञानமன்றோ? இப்படி இவன்

---

ஆசை கொள்ளமாட்டான்; சக்யத்தைக் கைங்கர்யமாகச் செய்வானென்க.

ஆநுகூல்யஸங்கல்பம் ப்ரபத்திக்கு அங்கமாயிற்றே; உத்தரக்ருத்யங்களை யநுஷ்டித்தால் தானே அதற்குப் பூர்த்தியென்பதைப் பரிஹரிக்கிறார் ஸங்கல் பேதி. ஸங்கல்ப்பமே அங்கமாக ச்ருதம்; உத்தரக்ருத்யம் அங்கமென்று சாஸ்த்ர ஸம்மதமானால் அநுகூலனாயிரு என்றே விதியிருக்க வேண்டும்; ஸங்கல் பிக்க வேண்டுமென்று தானே விதியிருக்கிறது. பின்னால் செய்யாவிட்டாலும் ஸங்கல்பம் நடந்தது தானே. பின்னால் செய்வது ஸங்கல்ப்பத்தை நிபந்தநம்=காரணமாகவுடையதன்று: ஆச்ரமதர்மவிதியே காரணம். விஹிதமென்ற காரணத்தால் செய்வதானால் அவச்யவிஹிதமாகாத प्रभूत=பெரிய கைங்கர்யங்களை ஏன் செய்கிறானென்ன—பிறரின் தர்மாநுஷ்டானத்திற்கும் ப்ரபந்நனுடையதற்கும் உள்ள வாசியை விரித்துரைக்கிறார் இப்படியாகில் இதி. ப்ரயோஜகர் ஆர்=நியமிக்கிறவர் யார். எது ப்ரேரகமென்றபடி, இவை இத்யாதி. भक्त-भीत-कामि-राज-मुक्त விலக்ஷணனானவான் ப்ரபன்னன்.

பெரிய பெரிய கைங்கர்யங்களை ஸ்வரூபத்திற்கநுகுணமென்று செய்கிறானாகில் ஸ்வரூபஜ்ஞாநமுள்ளவனுக்கு அதுவே ப்ரவர்த்தகமாகலாமே; சாஸ்க்ரம் ப்ரவர்த்தகமென்று கொள்ளவேண்டாவே. ஆக சாஸ்த்ரீயத்திற்கு த்யாகமும் தகுமென்பர் சிலர். அதை அநுவதித்து நிரஸிக்கிறார் இவ்விடத்திலே சிலர் இதி. ஸ்வரூப ஜ்ஞாநமுள்ளவன் ஸ்வரூபோசிதங்களான கைங்கர்யங்களையே செய்வானென்றால் அக் கார்யங்கள் எவை? சேஷத்வ ஜ்ஞாநமுள்ளவனுக்கு சேஷியுப்புக்கான கார்யமே உசிதமென்று பொதுவாகத் தெரிந்தாலும், அது எதெதென்று சாஸ்த்ரமின்றி யறியவாகாது. சேஷிக்கு மாலாகரண தீபாரோபண ஹவிர்நிவேதநாதிகள்

स्वरूपवश्यனுமத்தனை போக்கி शास्त्रवश्यனும் படி என்?'' என்று சொல்லுவர்கள். இதுவும் अनुपपन्नம்; எங்ஙனேயென்னில்—ஸ்வரூபம் இன்னபடி இருக்குமென்று சாஸ்த்ரத்தைக்கொண்டு அறுதியிட்டால், 'இஸ் ஸ்வரூபத்துக்கு இன்ன पुरुषार्थமும் तदुपायமும் त्याज्यம்; இன்ன पुरुषार्थமும் तदुपायமும் उपादेयம்' என்று பிரித்துத் தெளிகைக்கு முக்தனுமளவும் शास्त्रமொழிய வழியில்லை. ஸ்வரூபத்தில் शेषत्वादिகளைக்கொண்டு சில औचित्यमात्रம் அறியலாமத்தனையல்லது 'शेषि உகந்த கைங்கர்யத்தின் ப்ரகாரம் இது, இக் கைங்கர்யத்துக்கு உபாயங்கள் இவை' என்று स्वरूपज्ञानம் நியமித்துக் காட்டாது. ஆனபின்பு சாஸ்த்ரத்தை अनादरित्து निषिद्धद्रव्यங்களைக் கொண்டாதல், विहितங்கள்தம்மிலும் न्यायार्जितமல்லாத द्रव्यங்களைக்கொண்டாதல் தனக்கு ருசித்தபடியே शास्त्रविरुद्धமாயிருக்கும் கட்டளையிலே கைங்கர்யத்தை நடத்தப் பார்த்தால் उपचार–अपचारங்களுக்குப் பிரிவில்லையாம். அப்போது தன் ருசியொழிய வேறு नियामक மில்லாமையாலே முமுக்ஷுக்கள் தவிர்ந்து போ[ரு]கிற सर्वनिषिद्धங்களையும் தன் रुचिमात्रத்தாலே கைங்கர்யமாக अनुष्ठिக்கப் प्रसंगिக்கும். हविर्निवेदनத்திலும் ஸ்ரீபாஷ்யகாரர் ''शास्त्राविरुद्धानि संभृत्य'' என்று அருளிச்செய்தார். ஆகையால் शास्त्रवश्यனையத் தன் अधिकारத்துக்கு சாஸ்த்ரமடைத்த கைங்கர்யங்களையே பண்ணப் प्राप्तம்.

"तस्माच्छास्त्र प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ । ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥" என்ற उपदेशம் सर्वाधिकारिகளுக்கும் பொதுவாயிருக்கும் ஆளவந்தார் श्रीगीतार्थसंग्रह(த்)

---

போக்யங்களென்று லோகந்யாயத்தாலேயே தெரியுமென்னில்—ஈச்வரனுக்கு இந்த வஸ்து இஷ்டமென்று முக்தர்களைப் போலே ப்ரத்யக்ஷமாய்க் காணவாகாமையால் சாஸ்த்ரம் ஈச்வராஜ்ஞையாகையாலே சாஸ்த்ர ஸம்மதமானது ஈச்வரனுக்கிஷ்டம் என்றறிந்தே செய்யவேண்டும். மாலாகரனுதிகளாலே ஆராதிக்கப்படவேண்டிய அர்ச்சாவிக்ரஹங்களும் அவற்றின் ப்ரதிஷ்டாக்ரமமும் அவற்றுக்குத் தக்க மாலா.தீப.நிவேதநாதிகளுக்கு உபயோகப்படும்த்ரவ்யவ்யவஸ்த்தையும், ஆராதிப்பவர் இன்னுரென்று வர்ணாச்ரம வ்யவஸ்த்தையும், ஆராதநத்ரவ்யங்களுக்கு ப்ரதிக்ரஹாதி வ்யவஸ்த்தையும் ஆராதநத்திற்கு அர்ஹதை வரும்படி நித்யநைமித்திக அநுஷ்டாந வ்யவஸ்த்தையும் சாஸ்த்ரமூலமாகவே கொள்ளவேண்டும். ஸ்வரூபஜ்ஞாநமுள்ளவன் देहात्मமான வர்ணாச்ரமாதிகளைக்கொண்டு ஒன்றும் செய்யவாகாவென்னில்—மாலாகரனுதிகளும் அந்த ஸேஹகார்யமாகையால் விடப்படவேண்டும் ஆக சாஸ்த்ரமே கைவிளக்கென்று விரிவாக ஸமாதாநம் அருளுகிறார் எங்ஙனே இத்யாதியால். தவிர்ந்துபோருகிற=விட்டிருக்கிற.

இப்படியானால் ஆளவந்தார் ப்ரபந்நன் எக் கார்யம் செய்தாலும் प्रीत्यै=தன்னிஷ்டப்படி செய்யலாமென்று எவ்வாறருளினா ரென்பதற்கு ஸமாதாநம் ஆளவந்தார் இத்யாதி. அந்த ச்லோகத்தில் प्रीत्यैव என்பது தன்னிஷ்டப்படி என்ற பொருளில் வந்ததல்ல; அந்த ச்லோகம் பக்தி

இலே "ज्ञानी तु परमैकान्ती तदायत्तात्मजीवनः । तत्संश्लेषवियोगैकसुखदुःखस्तदेकधीः ॥

भगवद्ध्यानयोगोक्तिवन्दनस्तुतिकीर्तनैः । लब्धात्मा तद्गतप्राणमनोबुद्धीन्द्रियक्रियः ॥

निजकर्मादि भक्त्यन्तं कुर्यात् प्रीत्यैव कारितः उपायतां परित्यज्य न्यस्येत् देवे तु तामभीः ॥"

என்று அருளிச்செய்தவிடத்தில் 'प्रीत्यैव कारितः' என்றதுவும் शास्त्र வேண்டா வென்றபடி யன்று; இங்கு शास्त्रம் கொண்டே அறியவேண்டுகிற கைங்கர்ய ந் தன்னில் स्वसिद्धान्तरजनकत्वमடியாக शेषभूतனான தனக்குப் பிறக்கிற ப்ரீதியினு டைய प्रेरकत्वातिशयம் சொல்லுகையிலே தாத்பர்யம்.

இச் श्लोकங்களை उपासनाधिकारिகளிலே யோஜிக்கும்போது, उपासनादि களுடைய स्वादुतमत्वத்தையும், फलोपायமான शरण்யனுக்குப் प्रसादनமாய்க் கொண்டு फलத்துக்கு साक्षादुपायமன்றிக்கே நிற்கிற நிலையையும், இவ்வுபா ஸநத்தாலே ப்ரஸந்நனான ஸர்வேச்வரன்தானே फलத்துக்கு साक्षादुपायமாய் நிற்கிற நிலையையும் சொல்லுகையிலே நோக்காககடவது.

स्वतन्त्रप्रपत्तिनिष्ठன்திறத்தில் இச் श्लोकங்களை யோஜிக்கும்போது, இவன் आज्ञानुज्ञैகளாலே பண்ணும் கைங்கர்யமெல்லாம் भक्तियोगादिகளின் கட்டளை குலையாதிருந்தாலும் ஸ்வாமி ஸந்தோஷமொழிய வேறொரு स्वर्गमोक्षादिप्रयोजन த்துக்கு உபாயமாக अनुष्ठिக்கிறானல்லாமையாலே இவனுக்கு अनन्योपायत्वமும் अनन्यप्रयोजनत्वமும் குலையாதேயிருக்கிறபடியையும், अकिञ्चनனான இவனுக்கு ஈச்வரன்றானே उपायान्तरस्थानத்திலே நின்று फलம் கொடுக்கிறபடியையும் சொல்லுகையிலே தாத்பர்யம்.

---

யோகநிஷ்டனுக்கும் செய்யவேண்டிய ரீதியை யுபதேசிப்பது ஆகையால் प्रीत्यैव என்பதால் தனக்குத்தோன்றிய படி யெல்லாமென்றதாகாது சாஸ்த்ர விஹிதத்தைச் செய்யும்போது நிர்பந்தத்திற்காக வருந்திச் செய்வது போலன்றி ஸ்நேஹிதனுடைய ஆராதநம்போல் ப்ரீதியோடுசெய்யவேண்டு மென்றதாம். ப்ரபந்ந விஷயத்திலும் அந்த ச்லோகத்திற்கு அவ்வாறே பொருள். ப்ரபந்நரான நாதமுநயாதிகளைப் போலே முடியுமாகில் பக்தியோக த்தையும் அநுஷ்டிக்கலாம். 'उपायतां परित्यज्य न्यस्येत् देवे तु तां अभीः' என்கிற அம்சத்திற்கு மட்டும் அர்த்தம் சிறிது வேறுபடும். பக்தியோகநிஷ்டன், தான் செய்வது முக்திக்கு நேராக உபாயமென்கிற புத்தியை விட்டு அந்த உபாயத்வத்தை எம்பெருமானிடமே வைக்கவேண்டும். ப்ரபந்நன் எல்லாம் ஸ்வயம்ப்ரயோஜநமாகச் செய்வதால் அது ஒரு பலத்துக்கும் உபாயமன்று கையால் அதில் உபாயத்வபுத்தியை விடவேண்டும். பலன் ஒன்றுமிராத போது ஈச்வரனிடத்தில் உபாயத்வத்தை வைப்பதென்றது ப்ரபந்நனுக்குச் சேருமோ வென்னில்—ஸ்வயம் ப்ரயோஜனமாகவே யெல்லாம் செய்தால் மோக்ஷ ப்ராப்தி எங்ஙனே யென்ன, उपायस्थानத்திலே ஈச்வரனை நிறுத்திய படியாலென்றறிவிக்க அவனிடம் உபாயத்வத்தை வைப்பதென்றது; ப்ரீதிக்கு அது உபாயமாவதும் அவனாலென்றதுமாம். अभीः சாஸ்த்ரார்த்தைவிடாமையால்

"இரண்டு अधिकारिகளும், 'प्रतिबुद्धा न सेवन्ते', 'अनन्यदेवताभक्ताः', 'नान्यं देवं नमस्कुर्यात्' इत्यादिகளிற்படியே பரமைகாந்திகளாயிருக்க, இங்கு 'निजकर्मादिभक्त्यन्तम्' என்று அருளிச் செய்தபடியே वर्णाश्रमादिधर्मங்களை இவர்கள் अनुष्ठिக்கப்புக்கால் अग्नीन्द्रादिदेवताराधनमिश्रतैயாலே परमैकान्तित्वம் குலையாதோ?" என்று वेदान्तव्युत्पत्ति பண்ணாதார் चोद्यம் பண்ணுவார்கள். இவ்விடத்தில் 'साक्षादप्यविरोधं जैमिनिः' என்கிற ஸூத்ரத்தின்படியே अग्नयनादिव्युत्पत्तिवशத்தாலே अग्न्यादिशब्दங்களை ஸர்வேச்வரனுக்கு साक्षाद्वाचकங்களாக நிர்வஹிக்கலாமிடத்தில் இவை श्रीसहस्रनामத்தின் திருநாமங்கள்படியே நிற்கையாலே இவற்றில் देवतान्तरस्पर्शமில்லை 'देवान् ऋषीन् पितॄन् भगवदात्मकान् ध्यात्वा सन्तर्प्य' என்று नित्यग्रन्थங்களில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே तत्तद्देवताशरीरகனைப் परमात्माவை अनुसंधिத்துக்கொண்டு तत्तत्कर्मங்களை अनुष्ठिக்கை शास्त्रबलसिद्धமான இடத்தில், 'उपासात्रैविध्यात्' என்கிறபடியே प्रतर्दनविद्यादिகளில் विशेष्यமான दिव्यात्मस्वरूपத்தாலும் चेतनाचेतनविशिष्டனாகவும் பரமாத்மாவை उपासिயா நின்றாலும் விசேஷணமான चेतनाचेतनங்களில் आराध्यत्वமில்லாதாப் போலே இவ்விடத்திலும், விசேஷணமான देवर्षिपित्रादिகளை இவன் आराधिக்கிறானல்லன்

---

பயமற்றவனைய் योगोक्ति = பூஜையும்ப்ரவசனமும்; लब्धात्मा = स्वरूपம்பெற்றவனைய்.

இப்படி ப்ரபந்நனும் வர்ணாச்ரம தர்மத்தைச் செய்யவேண்டுமானால் देवतान्तरஸம்பந்த மேற்படுவதால் ஸ்வரூபஹாநி நேருமே யென்ன ஆராதநரூப தேவதாந்தர ஸம்பந்தமில்லை யென்று பல ப்ரமாண—ஸம்ப்ரதாய வாக்யங்களைக் கொண்டு விரிவாக உரைக்கிறார் இரண்டதிகாரிகளு மித்யாதியால். பக்தரும் ப்ரபந்நருமென்றபடி. வேதாந்த வ்யுத்பத்தி பண்ணாதார்—உபநிஷத்தில்' अनेन जीवेन आत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि' तदनुप्रविश्य सच्च त्यच्चाभवत्' இத்யாதிகளால் சேதநாசேதநவாசியான சப்தமும் சேதநாசேதநவிசிஷ்ட ஈச்வர பர்யந்தம் சொல்லுமென்று शब्दार्थ ஸம்பந்த ஜ்ஞானம் பெறாதவர்களென்றபடி. ஸஹஸ்ரநாமத்தின் இதி. ஸஹஸ்ரநாமத்தில் நாமங்கள் சேதநாசேதநங்களைச் சொல்லி तदन्तर्यामिயாக பகவானைச் சொல்வனவல்ல. यानि नामानि गौणानि विख्यातानि என்றபடி தக்க धातुக்களைக் கொண்டு நிர்வசநம் செய்கிறபடியால் பகவானுடைய गुणक्रियैகளைக்கொண்டு அவனைச் சொல்லும். இது ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் வ்யக்தம். 'வ்யாகரண வ்யுத்பத்தியாலே ஸாக்ஷாத்தாக பகவானைச் சொல்லவாகாத விடங்களில் தேவதாந்தரத்தைக்கூட்டியாகவேண்டுமே; இதற்கு உதாஹரணம் देवर्षितर्पणம் முதலானவை, அங்கே देवादि சப்தத்திற்கு மேல் பஹுவசநமிருப்பதாலும் सर्वपद.गणतत्पत्न्यादिபதप्रयोगமிருப்பதாலும் देवादिகளைக் குறித்தே தனித்தனியே செய்யவேண்டுமே. ஆகையால் இத்தகைய நித்யகர்மத்தை விட்டுப் पाञ्चरात्रத்தில் குறித்த ஸந்த்யாதிகளைச் செய்வதே உசிதம் என்ன—அருளிச்செய்கிறார் देवान् இத்யாதி. இது श्रीभाष्यकार नित्यग्रन्थ परम्परासंप्रदायसिद्धम् என்றபடி उपासात्रैविध्यात् என்பதற்கு प्रतर्दनவித்யையில் ப்ராணரூப அசேதந சரீரகமாகவும்

'अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च', 'हव्यकव्यभुगेकस्त्वं पितृदेवस्वरूपधृक्',

'ये यजन्ति पितॄन् देवान् ब्राह्मणान् सहुताशनान्। सर्वभूतान्तरात्मानं विष्णुमेव यजन्ति ते ॥'

என்கிறபடியே सर्वान्तर्यामियானவனே प्रतिबुद्धனை இவனுக்கு आराध्यனென்கை யாலே இப்படித் தெளிந்து अनुष्ठिக்கும் ப்ரபந்நனுக்கு यथाशास्त्रம் अनुष्ठिக்கிற கைங்கர்யங்களால் उपायान्तरस्पर्शம் வாராதாப்போலவும், कैङ्कर्यार्थங்களான द्रव्यार्जन-निवेदितोपयोगादिகளால் प्रयोजनान्तरस्पर्शம் வாராதாப்போலவும் आराध्यविशेषणமாக विधिबलप्राप्तங்களான चेतनाचेतनங்களால் देवतान्तरस्पर्शदोषம் வாராது.

'नारायणं परित्यज्य हृदिस्थं प्रभुमीश्वरम्। योऽन्यमर्चयते देवं परबुद्ध्या स पापभाक् ॥',

'यस्तु नारायणं देवं सामान्येनाभिमन्यते। स याति नरकं घोरं यावच्चन्द्रदिवाकरम् ॥',

---

இந்த்ரருபசேதநசரீரகமாகவும் स्वरूपத்தாலும் = आनन्दत्व-अजरत्व-अमृतत्वादिपरमात्म धर्मविशिष्टமாகவும் உபாஸநம் விதித்திருப்பதால் द्वैविध्यம். மூலவாக்கை. अहं हि இதி. गीते हव्येति வி.பு 1-19-73. பித்ருக்களையும் தேவதைகளையும் தன் சரீரமாக தரிப்பவனாய் அவர்களுக்கு அந்தர்யாமியாய் நீ ஒருவனே தேவதைகளுக்கான ஹவ்யத்தையும் பித்ருக்களுக்கான கவ்யத்தையும் உண்கிறாய். ये இதி. பா சாந் 355; दक्षस्मृति. பித்ருக்களையும் தேவதைகளையும் ப்ராஹ்மணர்களையும் அக்நியையும் குறித்துப் பூஜைசெய்யும் ஏகாந்திகள் அந்தராத்மாவான விஷ்ணுவையே ஆராதிப்பார்கள்; ஆகையால் தேவதாந்தர ஸ்பர்சதோஷமில்லை. த்ருஷ்டாந்தம் கூறுகிறார் यथाशास्त्रम् இதி. ப்ரபந்நன் கைங்கர்யமென்று சில கார்யங்களைச் செய்தால் அக் கார்யங்களே சிலருக்குச் சில பலத்திற்கு உபாயமாவதால் ப்ரபந்நனுக்கு உபாயாந்தர ஸம்பந்தமென்ற தோஷம் வருமே யென்னில்—உபாயத்வபுத்தி யில்லாமையாலே வராது. கைங்கர்யத்துக்காக த்ரவ்யார்ஜநம் செய்வதிற் போல் கைங்கர்யசேஷமாக தேஹதாரணத்திற்காக निवेदितமான வஸ்துக்களையுண்டால் ப்ரயோஜநாந்தர ஸம்பந்தமென்ற தோஷம் வாராது. அதுபோல் விசேஷணமானாலும் ஆராத்யமென்ற புத்தியில்லாமையால் தேவதாந்தர ஸ்பர்சமில்லை, எவ்வித ஸம்பந்தமும் தோஷமாகும்; அதற்கு என்ன ப்ரமாண மென்ன விளக்குகிறார் नारायणं இதி. ப்ராஜாபத்ய ஸ்ம்ருதி. எவனொருவன் ஹ்ருதயத்திலிருக்கும் நாராயணனென்கிற ஈச்வரனை விட்டு வேறு தேவதையைப் பரமாக நினைத்து ஆராதிக்கிறானோ, அவன் பாபியாவானென்றது. வேறொன்றைப் பரத்வ புத்தியோடு ஆராதிக்கலாகாது அதன் அந்தர்யாமியைப் பரத்வ புத்யா ஆராதிக்கலாம். தேவதாந்தரம் நமக்கெல்லாம் அந்தர்யாமியாகாமையால் பரமாகா, பரமன்று என நினைத்தே தேவதாந்தராராதனம் செய்தாலென்ன எனில்—ஏகாந்தியாகாதவர் ஆராதிக்கலாம். ஏகாந்திக்கு நிஷ்டை குலையும் "नान्यं देवं नमस्कुर्यात्" இவதவிடச் சிறிய பாபத்திற்கும் கொடிய பலனென்கிறார் यस्त्विति—நாராயணனை இதர

'बुद्धरुद्रादिवसतिं श्मशानं शवमेव च । अटवीं राजधानीं च दूरतः परिवर्जयेत् ॥'

इत्यादिகளிற்படியே देवतान्तरங்களிலே परत्वबुद्धि பண்ணுதல், समत्वबुद्धि பண்ணுதல் नित्यनैमित्तिकங்களில் துவக்கற்ற देवतान्तरस्थलங்களிலே செல்லுதல் செய்யில் பரமைகாந்திக்கு दोषமாமல்லது नित्यनैमित्तिकங்களில் आराध्यனை सर्वान्तर्यामि க்கு சரீரமாய் நிற்கிற நிலையில் இக் देवतைகள்பக்கல் परत्वबुद्धिயும் स्वातन्त्र्यबुद्धिயும் स्वनिष्ठत्वबुद्धिயும் आराध्यत्वबुद्धिயும் फलप्रदत्वबुद्धिயும் இல்லாமையாலே, उपास्य-विशेषणங்களான प्राण—वैश्वानर—त्रैलोक्यादिகளால் இவனுக்கு व्यभिचारம் வாராதாப்போலே शास्त्रसिद्धங்களான अग्नीन्द्रादिविशेषणங்களாலும் இவனுக்கு देवता-न्तरविरोधம் வாராது. வங்கிபுரத்து நம்பியும் ப்ரபந்நனுக்கு अहोरात्रकृत्यமான भगवत्समाराधनத்தைச் சொல்ல இழிந்து,

"गायत्रीजपपर्यन्तं मन्त्राचमनपूर्वकम् । सान्ध्यं कर्माखिलं साधु समाप्य च यथाविधि ॥"

समिदाज्यादिभिर्द्रव्यैर्मन्त्रैरपि यथोदितैः । हुत्वाऽग्नीन् अग्निहोत्रादावुक्तं कालमपि क्षिपन् ॥' என்றும், 'ततो माध्यन्दिनं कर्म स्वोदितं श्रुतिचोदितम् । स्नानादि ब्रह्मयज्ञान्तं कृत्वाऽखिलमतन्द्रितः ॥' என்றும்

---

தேவதைக்கு ஸமனாக நினைக்கிறவன் சந்த்ரஸூர்யர்களுள்ளவரை கொடிய நரகமநுபவிப்பான்; மற்றும் சில ஸம்பந்தங்களும் அநிஷ்டமென்கிறார் புத்தி சாண்டில்ய ஸ்ம்ருதி. புத்தன் भगवदवतारமாயினும் அவனுடைய கோயிலையும் रुद्रादिதேவதாந்தர ஆலயங்களையும் சுடுகாட்டையும் பிணத்தையும் பெருங் காட்டையும் அரசன் வஸிக்கும் நகரத்தையும் விட்டு வெகுதூரம் விலகியிருக்க வேண்டும். இங்கே தேவதாந்தர ஆலய ப்ரவேசமே கூடாதென்றதால் அந்த அர்ச்சாமூர்த்தியின் ஸேவை நகாதென்பது ஸ்பஷ்டம். देवतान्तरத்தைச் சொல்லும் சொல்லையும் पर्याय விடவேண்டுமென்று சொல்லவில்லை. परत्वबुद्धि= விஷ்ணுவிநும் பரமென்ற புத்தி; स्वनिष्ठत्वबुद्धिயாவது—தேவதாந்தரம் ஸ்வதந்த்ரம் அநந்ய சேஷமென்கிற புத்தி; பரமைகாந்தியான பக்தனுக்கு प्रतर्दनविद्यै वैश्वानरविद्यै முதலானவற்றில் ப்ராணன், வைச்வாநரம், பூம்யாதி லோகம் எலலாம் பரமாத்ம விசேஷணமாகை உபநிஷத் ஸம்மதம்; அதனால் அவனுக்குப் பாரமைகாந்த்ய भंगமில்லையே; அதுபோல்ப்ரபந்நனுக்கும் ஆகுமென்று திருவுள்ளம் கொண்டே ப்ரபந்நருக்கான நித்ய க்ரந்தத்திலே देवर्षिपितृतर्पणादि களை भगवदाराधनान् என்று பரிஷ்கரித்து பாஷ்யகாரர் உபதேசித்தார். அசேதநத்தைச்சொன்னது த்ருஷ்டாந்தமாகலாம், व्यभिचारம்= பதியை விட்டு வேறிடம் ஸம்பந்தம். शास्त्रसिद्ध=दर्शयागादि कर्मशास्त्रसिद्ध ; பின்னுள்ள ஆசார்யருடைய க்ரந்தங்களையும் வரிசைக்ரமமாக வுதாஹரிக்கிறார் வங்கிபுரத்து இத்யாதியால். मन्त्राचमनपूर्वकम्=सूर्यश्च இத்யாதி மந்த்ரத்தாலாம் ஆசமநம் தொடங்கி; यथोदितैः-உள்ளபடி சொல்லப்பட்ட ஸமித்து நெய்முதலான த்ரவ்யங்களையும் மந்த்ரங்களையும் கொண்டு अग्निहोत्रம் ஔபாஸநம் முதலியவற்றில் அக்நிகளில் ஹோமம் செய்து காலத்தைப் போக்கி யென்றதால் தேவதாந்தர மந்த்ரங்களும் ஸம்மதமென்று தெரிகிறது. மேலே ततः—பிறகு தன் ஜாதிக்குத்

'होमं पितृक्रियां पश्चादनुयागादिकं च यत्' என்றும் இப் ப்ரகாரங்களிலே तत्तन्मन्त्रपूर्वकங்களான वर्णाश्रमधर्मங்களை அருளிச்செய்தார். भट्टரு ம்(?) ஆழ்வாரும் தாந்தாங்கள் அருளிச்செய்த நித்யங்களிலே

'श्रुतिस्मृत्युदितं कर्म यावच्छक्ति परात्मनः । आराधनत्वेनाऽऽपाद्य सोर्ध्वपुण्ड्रश्च तर्पयेत् ।।'

इत्यादिகளை அருளிச்செய்தார்கள். பெரியஜீயரும் 'श्रीपराशरभट्टार्यचरणौ संश्रयेमहि' इत्यादियாலே संप्रदायविशेषज्ञापनार्थமாக गुरुनमस्कारादिகளைப் பண்ணி,

'भगवच्चरणाम्भोजपरिचर्याविधिक्रमम् । एकान्तिभिरनुष्ठेयं नित्यं समभिदध्महे ।।' என்று தொடங்கி

'आपोहीत्यादिभिर्मन्त्रैर्वाचकैः परमात्मनः । संप्रोक्ष्य मन्त्राचमनं मन्त्रैस्तत्प्रतिपादकैः ।।

आदित्यान्तःस्थितस्यार्घ्यं वितीर्य परमात्मनः । प्रतिपादिकया विष्णोः सावित्र्या तं जपेद्धरिम् ।।

ध्यायन् जप्त्वोपतिष्ठेत तमेव पुरुषोत्तमम् । नारायणात्मकान् देवान् ऋषीन् संतर्पयेत् पितॄन् ।।

என்றருளிச்செய்தார். भाष्यकारसंप्रदायத்திலுள்ள குலங்களெல்லாம் இன்றளவாக स्वस्वसूत्रोक्तமானபடியே तत्तद्देवतामन्त्रங்களைக்கொண்டு विवाह-उपनयनादिகள் अनुष्ठिக்கவும் காணாநின்றோம். பெரியநம்பிமுதலான பரமாசார்யர்களும் தந்தம் ஸூத்ரங்களின்படியே यागादिகள் பண்ணினார்களென்னுமிடம் ஸர்வர்க்கும் प्रसिद्धம்.

ஆனபின்பு भाष्यकारருடையவும் तच्छिष्य—प्रशिष्यர்களுடையவும் उपदेशा-

---

நக்க வேதவிஹிதமான माध्याह्निकமான ஸ்நாநம்முதலான ब्रह्मयज्ञம் வரையிலான கார்யத்தையும் சோம்பலின்றி செய்துகொண்டு என்றார். ப்ராதःகாலத்தில் ப்ரஹ்ம யஜ்ஞம் செய்யாதவர்களுக்கு மாத்யாஹ்நிகாநுஷ்டாநத்தில் ப்ரஹ்ம யஜ்ஞத்தைச் சேர்த்ததாம். होममிதி. வைச்வதேவபஞ்சமஹாயஜ்ஞங்களிலே அக்நியில் செய்யப்படுவதை ஹோமமென்றார். पितृक्रियां என்று பித்ருயஜ்ஞத்தைச் சொன்னது; ச்ராத்ததினத்தில் வரும் ச்ராத்தத்தையும் குறித்ததாம். अनुयागபதத்தாலே ப்ராணாபாநாதி ஆஹுதிபூர்வகமான அர்ந்தர்யாமி ஆராதநம் சொல்லப்பெறும். இவர்கள் வேதோக்தத்தைச் சொன்னாரேயல்லது பாஞ்சராத்ரத்தைச் சொல்லவில்லை அவர்களுக்குப் பின்னனவர்களையும் கூறுகிறார் பட்டரும் இதி. ஆழ்வானும் பட்டரும் என்று பாடமிருக்கலாமா? இவர்களும் வேதோக்த தர்மங்களையே பரமாத்மாராதநமாக்கிச் செய்ய வேண்டுமென்றார்கள், பட்டருடைய சிஷ்யர் பெரியஜீயர். இவருக்கு வடமொழியில் நாராயணமுநி யென்று திருநாமம் ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷையில் மூன்றாம அதிகாரத்தில் ஸ்பஷ்டம். இவர் நஞ்ஜீயரென்று வ்யாக்யாநங்களில் உள்ளது இவரும் आपोह இத்யாதி மந்த்ரங்களையே ப்ரபந்நனுக்குச் சொன்னார். எல்லாம் பரமாத்மவாசகம்: उपतिष्ठेत=உபஸ்த்தானம் செய்ய வேண்டும்; ஸாவித்ரியைக் கொண்டு அர்க்ய ப்ரதாநமும் ஸாவித்ரி ஜபமுமே சொன்னாரல்லது வேறு பாஞ்சராத்ர மந்த்ரம் சொல்லவில்லை இப்படி க்ரந்தங்களைக் காண்பித்துப் பின்னுள்ள உபநயந விவாஹாதி ஆசாரமும் காண்பிக்கிறார். பெரிய இதி.

नुष्ठानங்களிலே निष्ठैயுடையார்க்கு आगमसिद्धान्तानुवर्तिகளான संहिताविशेषங்களில் प्रतिनियतமாகச் சொல்லும் मन्त्रविशेषங்களைக்கொண்டு क्रियाविशेषங்கள் अनुष्ठिக்க வொண்ணுது. अधिकारादिகளுக்கு अनुरूपமாகச் चतुर्विधपञ्चरात्रமும் विभक्तமாய் நிற்கும் நிலையும், वचनविरोधமில்லாதவிடத்தில் 'अनुक्तमन्यतो ग्राह्यम्' என்கிற ந்யாயம் நடக்கும்படியும், நாலாச்ரமத்திலும் ब्रह्मविद्यैயும் मोक्षलाभமும் உண்டென்று शारीरकादिகளிலே समर्थिக்தாற்போலே, आगमसिद्धान्तादिகள் நாலிலும் साक्षा-न्मोक्षोपायமும் मोक्षप्राप्तिயும் உண்டென்றும் श्रीपाञ्चरात्ररक्षैயிலே उपपादिத்தோம். இச் शास्त्रங்களில் व्यवस्थितமாக विधिத்த படியொழியத் தந்தமக்கு ருசித்த மந்த்ரங்களைக்கொண்டு सर्वधर्मங்களையும் अनुष्ठिத்தால் प्रायश्चित्तादिகளும் பரக்கச் சொல்லப்பட்டன ஆனபின்பு முக்கனளவும் स्वाधिकारानुगुणமாக சாஸ்த்ரம் சொன்ன கட்டளை யன்றிக்கே கைங்கர்யம் பண்ண விரகில்லை

இப்படி ப்ரபந்நனுக்கும் शास्त्रवश्यனாய் शास्त्रोक्तकैङ्कर्यமே பண்ணவேண்டுகையாலே—विधिनिषेधलङ्घनपक्षமும். 2. विहितनिषिद्धत्यागपक्षமும். 3 ,वर्णाश्रमधर्मங்கள்

---

இவ்வளவு விரிவு எதற்காகவோ அதை யருளுகிறார் ஆனபின்பு இதி. இப்படியாகில் ச்ரீபாஞ்சராத்ரத்தில் சொன்னது யாரைக் குறித்து? நமக்கு இல்லையாகில் பாஞ்சராத்ர ரீதியாக ஆராதநமும் நாம் கொள்ளத்தகாது. வேதஸம்பந்தமில்லாத பாஞ்சராத்ரிகர்கள் வேறு உண்டென்னில், அவர்கள் உபநிஷத்தை விட்டிருப்பின் மோக்ஷம் பெறுர் என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறுர் அதிகாராதிகளுக்கு இதி. ஆதிபதத்தாலே आराध्यमूर्तिகளைக் கொள்வது, चतुर्विधपञ्चरात्र —आगमसिद्धान्त-मन्त्रसिद्धान्त- तन्त्रसिद्धान्त- तन्त्रान्तर सिद्धान्तरूप पञ्चरात्रम्—ஹயக்ரீவ ஸம்ஹிதையில் ஆகமஸித்தாந்தம் மோக்ஷ மாத்ரफलकம். மந்த்ரம் ஸித்திமோக்ஷ उभयप्रदம், தந்த்ரம்—சதுர்வர்க பல ப்ரதம்—தந்த்ராந்தரம் இஷ்டफलப்ரதம் என்றதால் எதிலும் மோக்ஷமுண்டு. वचनेति· कर्षणादिप्रतिष्ठान्तம் எந்த ஸித்தாந்தத்தைக் கொண்டு தொடங்கியதோ அதன்படியே செய்யவேண்டும் 'अनुक्तमन्यतन्त्रेषु निरीक्ष्य अन्यत्र योजयेत्' என்று நாரதவாக்யம் शारीरकादि என்று ஆதிபதத்தால் गीतैயை க்ரஹிப்பது. அதிகாராநுரூபமாக பாஞ்சராத்ரத்தை विभागம் செய்தது மட்டுமின்றி அவ்யயவஸ்தையாக மந்த்ரங்களையும் க்ரியைகளையும் கொண்டால் ப்ராயச்சித்தமும் சொல்லப்பட்டிருக்கிறதாகையால் அம் மந்த்ர-கர்மங்களை அவ்வதிகாரிகள் தவிர மற்றவர் கொள்வதும் தகாதென்றறிவிக்கிறுர் இச்சாஸ்த்ரங்களில் இதி ஆக உபரிஷத்துப் போல் அது க்ரியாவிஷயத்தில் ஸர்வஸாதாரணமாகாது. ஆகையால் ஆபஸ்தம்பாதி ஸூத்ரங்களிலே ப்ரதிஷ்ட்டா—ஆராதநாதிகளை விரிவாகச் சொல்லாமையால் ஸ்ரீபாகவதாதிகளையும் (11-स्कन्ध) ப்ரமாணமாக்கி அதைமட்டும் கொண்டு மற்றவற்றை அவரவர் गृह्यादिஸூத்ரங்கள் படிச் செய்யவேண்டிய நாம் ஸம்ப்ரதாயத்தை யுபேக்ஷித்து இஷ்டப்படி நடப்பது தகாதென்று நிகமநம் செய்கிறுர் ஆனபின்பு मुक्ति, இவ்வளவால் ஸித்தித்த அம்சங்களைச் சுருக்கி யருளுகிறுர் இப்படி

விரோதிகளங்களாகையாலே स्वरूपज्ञानம் பிறந்தவனுக்குத் त्याज्यங்கள்' என்கிற பக்ஷமும். 4. இவை செய்யவுமாம் தவிரவுமா மென்கிற பக்ஷமும், 5 இவை தவிர்ந்தாலும் உகப்பிழக்குமத்தனையே: வேறொரு प्रत्यवाय மில்லை' என்கிற பக்ஷமும், 6 'இவை अनुष्ठियாதபோது लोकविरोधமாத்ரமே प्रत्यवायம் என்கிற பக்ஷமும், மற்றும் இப்புடைகளிலுள்ள பக்ஷங்களுமெல்லாம் सत्‌न्यायानुगृहीत-शास्त्र संप्रदायविरुद्धங்களானபடியாலே सत्संप्रदायர்க்கு अनुपादेयங்கள்.

संन्यासाश्रमस्थர்க்குப் பண்டுள்ளவை சிலவற்றை निषेधिத்துப் புதியன வாகச் சிலவற்றை विधिக்குமாப்போலே भागवतत्वமடியாகச் சிலவற்றை निषेधि த்துச் சிலவற்றை अपूर्वமாக विधिக்காலும் सर्वशाखोऽस्तु चर्तितव्यतनैःसद्धर्मस्तु इत्या-दिகளாலே अपर्यवसितங்களாகச் சொல்லப்பட்ட கர்மங்களை விடவொண்ணாது. धर्मशास्त्र सूत्रभेदங்களிற்போலே भगवच्छास्त्रसंहिताभेदங்களிலும் इतिहासपुराणங்களி லும் சொல்லும் संध्योपासनभेदங்களை அவ்வோ शास्त्रங்களிலே இழிந்தவர்கள் अनुष्ठिக்கக்கடவர்கள் 'देवतान्यभिगच्छेत् तु' என்றும், 'देवस्थानप्रणामनम्' என்றும் இப்புடைகளிலே धर्मशास्त्र-इतिहासादिகளிற் சொன்ன आचारமும் பரமைகாந்திக்கு शास्त्रबलத்தாலே भगवद्विषयத்திலே நியதம். ஆகையால் ஒரு शास्त्रத்துக் குப் (ங்களுக்கும்) विरोधமில்லை.

'तस्मादष्टाक्षरं मन्त्रं मद्भक्तैर्गीतकल्मषैः । सन्ध्याकालेषु जप्तव्यं सततं चाऽऽत्मशुद्धये ॥'

என்று श्रीवैष्णवधर्मशास्त्रங்களிற் சொன்னதுவும், 'द्वयमर्थानुसंधानेन सह सदैवं वक्ता' என்று गद्यத்திலருளிச்செய்ததுவும் மற்றும் இப்புடைகளில் உள்ளவையு மெல்லாம் अपर्यवसितங்களான नित्य—नैमित्तिकங்களுக்கு विरोधம் வாராதபடி அவற்றுக்குப் போக்கி மிக்க காலத்திலேயாகக்கடவன. 'श्रौतस्मार्तविरुद्धेषु कालेषु जपमाचरेत्' என்று नारदादिகளும் சொன்னார்கள் 'हुत्वाऽग्नीन् अग्निहोत्रादावुक्तं

---

இத்யாதியால். अनुगृहीत= उपकृत; காம்யகர்மங்களையும், தேவதாந்தர நமாதிகளை யுமே ப்ரபந்நனுக்குத் தகாவென்றதால் ஸர்வத்யாகம் உசிதமன்றென்கிறார் सन्न्यासेति. ஒரு சாஸ்த்ரத்துக்கும்= ஸாமாந்யசாஸ்த்ரம், விசேஷ சாஸ் த்ரம், விதி, நிஷேத மென்கிற எவ்வித சாஸ்த்ரத்திற்கும்; நித்ய நைமித்திக ங்களை ஸர்வஸாதாரணமாகச் சொல்லிற்று; ப்ரபந்நனுக்கும் இவை அவச்ய மென்றும் ப்ரபத்தியத்யாயத்திலுள்ளது. देवर्षिपित्रादिகளுக்கு இவன் கிங்கர னல்லன் என்றுமட்டும் சொல்லிற்று; எல்லாம் அந்தர்யாமிக்கே ஆராதந மென்றும் வசநமிருக்கிறது. விட்டால் திருமாலின் உகப்பை இழந்ததாகு மென்றும் வசநமுளது. எல்லாவற்றிற்குமிணங்க வாம் கீழ்ச்செய்த நிர்ணய மென்றபடி. இப்படி எல்லாம் அநுஷ்டிக்க வேண்டுமானல் அஷ்டாக்ஷர த்வயாதிகளையே எப்போதும் சொல்லச் செய்யும் வசநங்கள் விரோதிக்குமே யென்ன, அருளிச்செய்கிறார் तस्मादिति. த்வயத்தை ஜபித்தால் இதை ஜபித்த தாகுமா? ஆகையால் எப்போதுமென்றால் வேறொன்றுக்கான காலம் போக மிகுந்த காலத்திலென்றே பொருளாம். இது மற்ற கர்மாநுஷ்டாத்திற்கும்

காலமபி க்ஷிபந்' என்று வங்கிபுரத்துநம்பியும் அருளிச்செய்தார். भाष्यकारர் अन्तिमदशैயிலும்; வருந்தியெழுந்திருந்து सन्ध्याकालத்திலே जलाञ्जलिप्रक्षेपம் பண்ணியருளினார்.

ஆகையால் वर्णाश्रमधर्मங்கள் औपाधिकங்களென்று த்யஜிக்கை पूर्वानुष्ठान-विरुद्धம் இப்படி த்யஜிக்கில் देहेन्द्रियाद्युपाधिகளையொழிய मालाकरण-दीपारोपणादि विशेषकैङ्कर्यங்களும் अनुष्ठिக்கவொண்ணாமையால் அவையுமெல்லாம் औपाधिकங்களாய்த் த்யாஜ்யங்களாம். அவை अनुष्ठिக்க ஆசைப்படில் அவற்றுக்கு योग्यता-पादकங்களான आचार(शौचाचार संस्कारादिகளையும் விடவொண்ணாது. ஆனபின்பு

आहार.ग्रह.मन्त्रार्थ.जात्यादिनियमैर्युतः । कुर्याल्लक्ष्मीशकैङ्कर्यं शक्त्याऽनन्यप्रयोजनः ॥

मङ्गल्यसूत्रवस्त्रादीन् संरक्षति यथा वधूः । तथा प्रपन्नः शास्त्रीयपतिकैङ्कर्यपद्धतिम् ॥

यद्वन्मङ्गल्यसूत्रादेस्त्यागे संरक्षणेऽपि वा । रक्षेन्निरोधैर्भोगैर्वा पतिस्तद्वदिहापि नः ॥

अवज्ञार्थमनर्थाय भक्तजन्मादिचिन्तनम् । शास्त्रव्यवस्थामात्रार्थं न तु तद् दुष्यति क्वचित् ॥

अत एव हि शास्त्रेषु तत्तज्जात्यैव दर्शिताः । धर्मव्याध.तुलाधार.शबरी.विदुरादयः ॥

---

துல்யம். இவ் விஷயத்தில் வசநமும் ஸ்பஷ்டமாகவுண்டு. பாஷ்யகாராத்யநுஷ்டாநமும் இதற்கு ப்ரமாணமென்றபடி. கீழே மாலாகரண—தீபாரோபணாதிகள் மட்டும் போதுமென்று மனத்திற் கொண்டு நித்ய நைமித்திகாநுஷ்டானம் ஆக்ஷேபிக்கப்பட்டது; அந்த அம்சத்தைக் கண்டிக்கிறார் **ஆகையால்** இதி. சொன்ன வர்த்தத்தை லௌகிக த்ருஷ்டாந்தத்துடன் உபஸம்ஹரிக்கிறார் आहारेति. ப்ரபாவ வ்யவஸ்த்தாதிகார முடிவில் இக்காரிகை வ்யாக்யாதம். मङ्गल्येति. திருமங்கல்யச்சரடு, கூறை, வளை முதலானவற்றை மணமகள் ரக்ஷிப்பது போல் ப்ரபந்நன் சாஸ்த்ரீயமான பகவத் கைங்கர்ய மார்க்கத்தை ரக்ஷிக்க வேண்டும். திருமங்கல்யாதிகளை விட்டால் தண்டித்தும், விடாமலிருந்தால் போகங்களைக் கொடுத்தும் பதி மனைவியைப் பாதுகாப்பது போல் இங்குமாகும்.

இப்படி ஜாத்யாதி நியமம் வேண்டுமென்னலாமோ? அனைவரும் அந்தணரல்லரோ? சூத்ரபாகவதரையும் ப்ராஹ்மணராக நினைக்கவேண்டியிருக்க நிஹீந குலமாக நினைத்தால் அபசாரமாகாதா? (வசநபூஷணம் 197) अर्चावतारोपादान.वैष्णवोत्पत्तिचिन्तनम् । मातृयोनिपरीक्षायास्तुल्यमाहुर्मनीषिणः (उपादान-वैष्णवोत्पत्ति என்று ஒரே பதம், உபாதாநத்தற்கு உபாதாநத்ரவ்யம் பொருள். இதற்கு சிந்தநமென்ற விடத்தில் அந்வயம்.) என்ன அருளிச்செய்கிறார் अवज्ञार्थमिति. பக்தர்களை அவமதிப்பதற்காக அவர்களுடைய பிறவி அறிவு ஒழுக்கம் இவைகளைச் சிந்திப்பது மஹாபசாரமாகும். सहभोजन प्रणमन मन्त्रोपदेशादि क्रमव्यवस्थैக்காக சாஸ்த்ரத்திற்கு கட்டுப்பட்டு நடப்பதற்காக அதனை வ்சாரிப்பது தோஷமாகாது. அர்ச்சையிலும் அபிஷேக.शोधन பரிஷ்கரணாதி கைங்கர்யத்திற்காக दारु.सुधा. ताम्र.रजत. सुवर्ण விசாரம் தோஷமாகாது.

स्वजात्यनुगुणैरेषां वृत्तिरप्यैतिहासिकी । विशेषविधिसिद्धं तु तद्बलात् तत्र युज्यते ॥
देशकालाधिकार्यादिविशेषेषु व्यवस्थिताः । न धर्माः प्राप्तमर्हन्ति देशकालान्तरादिषु ॥
केचित् तत्तदुपाख्यानतात्पर्यग्रहणाक्षमाः । कलिकोलाहलक्रीडां वर्धयन्ति रमापतेः ॥
"मातृभिः पितृभिश्चैताः पतिभिर्देवरैस्तथा । पूज्याः भूषयितव्याश्च बहुकल्याणमीप्सुभिः ॥
जामयो यानि गेहानि शपन्त्यप्रतिपूजिताः । तानि कृत्याहतानीव विनश्यन्ति समन्ततः ॥"
एवमादिषु पूजोक्तिर्यथोचित्यान्नियम्यते । भक्तम्लेच्छादिपूजोक्तिरेवमेव नियम्यताम् ॥

இந் நியமங்களெல்லாம் **संप्रतिपन्नशिष्टानुष्ठानपरम्परै**யாலும் ஸித்தங்கள். ஆகை யால் தன் **वर्णाश्रमादि**களுக்கு அடைத்த நியமங்களோடே **भगवत्कैङ्कर्यं** பண் ணுகை **परमैकान्त्यविरुद्ध**மன்று.

---

**अत एव**—அதனால்தான் சாஸ்த்ரங்களில் அந்தந்த ஜாதியைக் கொண்டே **धर्मव्याध, तुलाधार, शबरी, विदुरादि**கள் அறிவிக்கப்பட்டனர். **स्वेति** இதிஹாஸங் களில் அவர்கள் நடத்தையும் ஜாதிக்குத் தக்கபடியே யுள்ளது. ஜ்ஞாந ஸம்பாதநம் விதுராந்ந ஸ்வீகாரம் முதலானவை விசேஷசாஸ்த்ரத்தை யநு ஸரித்துத் தகும். **देशेति.** சில தேசத்தில் சில காலத்தில் சில அதிகாரி விஷயத்திற் சொன்னவை வேறு தேச கால அதிகாரிகளிடம் ஸம்பந்தம் பெறத்தகா. இப்படி யிருக்கச் சிலர் அந்தந்தப் புராணவரலாற்றின் கருத்தை யறியமா ட்டாதாராய் திருமால் நடத்தும் கலியுக கோலாஹல லீலையை வளர்க் கிறார்கள்; விதுராதிகளான சிலர்விஷயத்தேற் சொன்னவற்றை பாகவத ஸர்வ சூத்ராதி ஸாதாரணமாக்கி அசாஸ்த்ரவ்ருத்தி செய்கின்றனர் சிலர் **'भक्तिरष्टविधा ह्येषा यस्मिन् म्लेच्छेऽपि वर्तते । तस्मै देयं ततो ग्राह्यम्'...** இத்யாதியில் மலேச்சனுகிலும் பக்தனுகில் அவனுக்கு **दान**ம் செய்யலாம் அவனிடம் கொள்ளலாம்; அவனை பகவானைப் போல் பூஜிப்பதென்றிருப்பதால் விவாஹாதிகளும் விசேஷ பூஜையும் செய்யலாமெனபர். **दान**மென்றால் கந்யாதானமாகாது பூஜையென்ற சொல்லுக்கும் ஓரளவான மதிப்பிலே தாத்பர்யம். அதற்கு த்ருஷ்டாந்தம் அருளுகிறார் **मातृभः इति.** பர்த்தாவின் தாயினாலும் தகப்பனாலும் பதியாலும் மைத்துனனாலும் குடும்பத்துக்குச் சுபத்தை விரும்பி மருமகள் பூஜிக்கத் தகுந் தவள். அப்படி பூஜிக்கப்படாமல் மருமகள் கஷ்டம் தாங்காமல் புக்கக த்தைச் சபித்தால் அந்த வீடு **अभिचारपिशाच**த்தினால் போல முழுதும் அழி யுமென்றது. இந்த ப்ரமாணவாக்யத்திலே மருமகளைபூஜிப்பதென்றால் தக்க வாறு மதிப்பதென்று பொருளாகுமே யல்லது திருவாராதநமாகாது அது போலவே பக்த ம்லேச்ச விஷயத்தில் பூஜையைச் சொன்னதும் வரம்பிடப் படும். **संप्रतिपन्नशिष्टेति.** ஸதாசாரசீலர்களாகப் பெரியோர்களால் ஸம்மதிக்கப் பட்ட சிஷ்டர்களென்றபடி. இந்த வ்யவஸ்த்தை பெரியவாச்சான்பிள்ளை வாக்யத்தைக் கொண்டும் கீழே நிரூபிக்கப்பட்டது.

இங்கே **आद्यपद्य** என்கிற முதற்காரிகையில் 'லக்ஷ்மீசகைங்கர்யம்'

साक्षाल्लक्ष्मीपतावेव कृतं कैङ्कर्यमञ्जसा। सार.कल्कविभागेन द्विधा सद्भिरुदीर्यते ॥

कृतकृत्यस्य कैङ्कर्यं यदनन्यप्रयोजनम् । गुर्वादिरक्षणार्थं वा तत् सारं संप्रचक्षते ॥

डम्भार्थं परपीडार्थं तन्निरोधार्थमेव वा । प्रयोजनान्तरार्थं वा कैङ्कर्यं कल्क इष्यते ॥

பரமைகாந்திகளல்லாதார் பண்ணும் கைங்கர்யத்தை ஸர்வேச்வரன் திருவடிகளாலே கைக்கொள்ளுமென்னுமிடத்தையும், பரமைகாந்திகள் பண்ணும் கைங்கர்யத்தைத் திருமுடியாலே கைக்கொள்ளுமென்னுமிடத்தையும் 'तद् सर्वं देवदेवस्य चरणावुपतिष्ठते' என்றும், 'याः क्रियाः संप्रयुक्ताः स्युरेकान्तगतबुद्धिभिः । ताः सर्वाः शिरसा देवः प्रतिगृह्णाति वै स्वयम् ॥' என்றும் श्रीवेदव्यास-भगवान् அருளிச்செய்தான்.

இப்படி இவன் भगवदाज्ञैயாலே अनुष्ठिக்கிற नित्यनैमित्तिकங்களும், भगवदनुमति யாலே இவனுகப்பே ப்ரயோஜநமாக அநுஷ்டிக்கிற ஏற்றமான கைங்கர்யங்களும்

---

'अनन्यप्रयोजनः' என்ற சொற்களின் பொருள் தெளிவதற்காகக் கைங்கர்யத்தை ஸாரம் கல்க்கம் என இருவிதமாகப் பிரிக்கிறார் साक्षादिति. நேராகத் திருமால் விஷயமாகவே தேவதாந்தர ஸம்பந்தமின்றி अञ्जसा—சாஸ்த்ரோக்த ரீதியாக ஒழுங்காகச் செய்யப்படும் கைங்கர்யமும் ஸாரம் கல்க்கமென்று இருவிதமாக ஸத்துக்களால் சொல்லப்படும். ப்ரபந்நனையாலே க்ருதக்ருத்யனானவன் செய்யும் கைங்கர்யம் வேறு ப்ரயோஜநமிராமையாலே ஸ்வயம்ப்ரயோஜநமாகும். அதையும், ஆசார்யர் பாகவதர் இவர்களின் ரக்ஷணத்திற்காகச் செய்வதையும் ஸாரமென்பர். டம்பத்திற்காகவோ ஹிம்ஸிப்பதற்காகவோ பிறரால் வரும் ஹிம்ஸையைப் போக்குவதற்காகவோ வேறு க்ஷுத்ர பலத்திற்காகவோ செய்யப்படுவது கல்க்கமென்று கொள்ளப்படும். ஸாரகைங்கர்யத்தை ஸர்வேச்வரன் மிகவும் ஆதரிக்கிறானென்கிறார் परमैकान्तिகளல்லாதாரிதி கைங்கர்யத்தை இதி. வேறு பலனை யுத்தேசித்துச் செய்யும் கார்யம் கைங்கர்யமாகுமோ வென்னில்; அதுவும் ஒருவித ப்ரீதி ஸாதநமாகையால் கைங்கர்யமென்றது. அல்லது அபரமைகாந்தி செய்யும் கார்யமே பரமைகாந்தி செய்யும் போது கைங்கர்யமாகிறபடியால் அதே செயலென்ற கருத்தால் कैङ्कर्य பதம். तत् सर्वमिति. 'हव्यं कव्यं च सततं विधिपूर्वं प्रयुञ्जते' என்று देवतैகளையும் பித்ருக்களையுமே குறித்துச் சிலர் செய்யும் கார்யம் முன்னே கூறப்பட்டன. அவை ஸர்வேச்வரனுடைய திருவடிக்குத் தாமாக நெருங்குகின்றன. एकान्तगतबुद्धिभिः—ஒரு பலனிலேயே நிலைத்த பரமைகாந்திகளால் செய்யப்படும் கார்யங்கள் யாவை, அவற்றை ஸர்வேச்வரன் தானே தலையால் கொள்கிறான் என்றதால் இது ஸாரமென்று தெரியலாகும். இவ்வளவால் ஒரே செயலே देवतान्तर—ஆராதநமும் பரமாத்ம—ஆராதநமுமாகிறதென்று தெளியலாம்.

இப்படி ஆஜ்ஞா-அநுஜ்ஞாகைங்கர்யங்களிருப்பதால்விடாமல்' அவற்றை ப்ரபத்திக்குஅங்கமாகக் கொள்ளாமல்' என்று முன்சொன்னதே परित्यज्य என்பதின் பொருளென்று நிகமிக்கிறார் இப்படி இதி இதற்குப் பலன் அருளுகிறார்

இப் ப்ரபத்தியோடு துவக்கற்று நின்ற நிலை 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்கிற விதானத்தாலே ஸித்தமாயிற்று.

अतः शक्यानि सर्वाणि न प्रपत्त्यर्थमाचरेत् । अशक्येषु च सामर्थ्यं न तदर्थं समार्जयेत् ॥

இந்த யோஜனையில் பரிகரபூதமான ஆகிஞ்சந்யமும் 'சோகியாதே கொள்' என்று தேற்றுகிற வாக்யத்தாலே ஸூசிதம். அநுவாதபக்ஷத்தில் தன் அசக்தியாலே கழிந்தவையொழிய சக்யமாய்ச் செய்கிற ஆசாராநுபாலனாதிகளும் ப்ரபத்தியில் துவக்கொண்ணாதென்னுமிடம் ஏதச்சப்தத்திலே விவக்ஷிதமாகக்கடவது. இப்பக்ஷத்தில் 'மா சுச:' என்கிற வாக்யம் 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்று உக்தமான அதிகாரத்தை ஸ்வசப்தமாக்கிக்கொண்டு மேலுள்ள நிர்பரத்வாதிகளை முன்னிட்டு உத்தரார்த்தத்தில் இருக்கக்கடவ படியையெல்லாம் உபலக்ஷிக்கிறது.

த்யாகவிதிபக்ஷத்துக்குப் ப்ரமாணவிரோதம் வாராதபடி இன்னமும் சில கதிகளுண்டு—

(1) आत्माशक्यवृथायासनिवारणमिहापि वा । लज्जापुरस्सरत्यागवादोऽप्यत्र नियम्यताम् ॥

---

அத இதி. இந்த நைரபேக்ஷ்ய விதியிராவிட்டால் பக்திக்குப் போலே ப்ரபத்திக்கும்எல்லாம் அங்கமென்று நினைத்து அங்கலோபம் வாராமைக்காக முடியாத அங்கங்களையும் எப்படியாவது செய்ய சக்தியை ஸம்பாதிக்க இழிவான். அங்கமல்லவென்று தெரிந்ததால் முடிந்ததைச் செய்வது மட்டுமேயன்றி முடியாததில் முயற்சியைக் கொள்ளான். முடிந்ததையும் ப்ரபத்திக்காகச் செய்யான். இக் காரிகையில் கடைசியில் ஸமார்ஜயேத் என்று பாடம்.

இவ்வதிகார ஆரம்பத்திலே அநுவாதபக்ஷம் விதிபக்ஷமென்று இரண்டைத் தொடங்கி, 'ப்ரபத்திக்காக ஒரு தர்மமும் அநுஷ்டிக்க வேண்டா' என்று சொன்ன நைரபேக்ஷ்ய பக்ஷத்திற்குப் பல சர்ச்சைகளுக்குப் பிறகு இங்கே முழு முடிவென்று கொள்க. இப்படி பரித்யஜ்யவில் நைரபேக்ஷ்ய விதியாலும் ஆகிஞ்சந்யம் மாசுச: என்றதில் ஸித்திக்கும்; அநுவாதபக்ஷத்தில் ஆகிஞ்சந்யமாகிற அதிகாரம் பரித்யஜ்ய என்பதில் ஸித்திக்கும்; அப்போது தர்மாந்தரநைரபேக்ஷ்யம் ஏதச்சப்தத்தால் ஸித்திப்பதால் மாசுச: என்பதின் கார்யமென்னவெனில், இனி சோகிக்க இடமில்லையென்றறிவித்துக் கடைசிவரையில் நிர்பரத்வ—நிர்பயத்வங்களைக் காட்டி விச்வாஸத்தைத் திடப்படுத்துவதேயாகுமென்கிறார் இந்த யோஜனையில் இத்யாதியால். இருக்கக் கடவ படி = இருக்கக்கூடிய ப்ரகாரம். அது விச்வாஸ தார்ட்யமும் உபாயாந்தர ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும். மேலே அகிஞ்சநாதிகாரித்வம் அநுவாத பக்ஷத்தில் அர்த்தமென்று கூறி, விதிபக்ஷத்தில் சார்ட்டண்யாங்கத்வ விதி, ப்ரபத்திக்காக தர்மாந்தராபேக்ஷைக்கு த்யாகவிதி யென்று இரண்டு பக்ஷங்கள் கூறப்பெற்றன; வேறு மூன்று ப்ரகாரமாகவும் த்யாகவிதியைச் சொல்லலாமென்கிறார் த்யாகேதி. கதி மூன்று மூன்று காரிகைகளால். தனக்குச் செய்யவாகாத உபாயாந்தரங்களில் வீணாக ப்ரயாஸப்படுவதிலிருந்து நிவ்ருத்தி விதி ஒரு கதியாகும். அபிவா என்று முன் சொன்ன கதியோடு விகல்பம். இதி

(२) स्वदुष्करेषु धर्मेषु कुशकाशावलम्बनः । आशालेशानुवृत्तिर्वा त्यागोक्त्या विनिवार्यते ॥
(३) अविशिष्टफलत्वेन विकल्पो यश्च सूचितः । तन्मुखेनापि वाऽत्रेष्टं ब्रह्मास्त्रन्यायसूचनम् ॥

अङ्गத்திலே प्रपत्तिயைத் 'தவிர்' என்கையும், தனக்கு दुष्करங்களாய்க்

---

லேயே வேறொன்றையும் சேர்க்கிறார் लज्जेति. धर्मस्वरूपत्यागवादिகள் சில நாள் வீணாகச் செய்ததாலேற்பட்ட लज्जानुतापங்களின் த்யாகத்தைப் परिशुद्धம் காட்டுமென்றனர். अत—இந்த ப்ரயாஸநிவாரணவாதத்தில் அந்த த்யாக வாதமும் निवर्त्यता—पं'क्तिயில் அடக்கப்படும். लज्जापुरस्सर=வெட்கம் முதலானவற்றின். 2வது த்யாகவிதியைக் கூறுகிறார் स्वेति. தனக்குச் செய்யமுடியாத தர்மங்களில் कुशकाशावलम्बनः-கரையேறத் திண்டாடுகிறவன் பிடிப்புக்கு நிற்காதது ம் நாணல் முதலானவற்றைப்பிடிப்பது போலாகிச் சிறிது ஆசைகொள்வதை விடுவதென்று த்யாக சப்தார்த்தம். முன்னே ப்ரயத்ந நிவ்ருத்தியைச் சொன்னார்; இங்கு ப்ரயத்ந காரணமான ஆசையின் நிவ்ருத்தியை யென்க. सुदुष्करेषु என்கிறபாடாந்தரம் வ்யாக்யாநங்களில்விலக்கப்பட்டது. ஆத்மாசக்ய என்பதற்கிணங்கியது स्वदुष्करेषु என்றதாகும். மூன்றாவது அர்த்தம் கூறுகிறார் अविशिष्टेति. முன் சொன்ன பக்திரூப தர்மங்களோடு வாசியற்ற பலத்தை ப்ரபத்தி உடையதாயிருப்பதால் அதற்கு विकल्पोऽविशिष्टफलत्वात् என்று யாதொரு விகல்பம் சொல்லப்பட்டதோ, तन्मुखेन—அந்த விகல்பம் வாயிலாக இவ்விடத்தில் ब्रह्मास्त्र ந்யாயத்தை ஸூசிப்பதும் परित्यज्यவில் இஷ்டமாகும்; परित्यज्य—செய்யும் ப்ரபத்தி கெடாமைக்காக வேறு உபாயங்களை விட்டு என்றதாயிற்று. விகல்பம் சொன்னதால் ப்ரஹ்மாஸ்த்ரந்யாயம் எப்படி தேறுமென்னில்—व्रीहिभिर्यजेत यवैर्यजेत என்று இரு தானியங்களுக்கு விகல்பம் சொன்னவிடத்தில் ஒருவன் இரண்டையும் சேர்த்து யாகம் செய்தால் கார்யஹானி; நிரபேக்ஷமாக ஏகைக கரணமென்று தனி விபக்தியால் தெரிவதாலி னென்றனர் மீமாம்ஸகர். அது போலென்க. 'இரண்டு கார்யங்களில் ஏதேனுமொன்று செய்தால் போதுமாயிருக்க இரண்டையும் செய்ததால் பலனுக்கு ஹானியில்லை யென்பதையும் சிலவிடம் கொண்டுளோமே; இங்கே இருவித பக்தியோகங்களை ஒருவன் ஆயுள்முடிவு வரையில் விடாமல் அநுஷ்டிக்கவாகாதென்றாலும், ப்ரபத்தியை ஒருநாள் செய்து விட்டுப் பிறகு பக்தியை விடாமற் செய்தாலென்ன, நேரான பக்தியோகத்தைச் செய்யவாகாமற் போனாலும் அதற்குக் கீழான படியை தேஹாவஸாநம் வரை செய்தாலென்ன. தேஹாவஸாநத்தில் அது பூர்த்தியாகாமற் போனாலும் ப்ரபத்தியால் மோக்ஷம் பெறலாமே' என்றிங்கே வினவினால்—ப்ரபத்தியோடு வேறு உபாயத்தைச் சேர்த்தால் ப்ரபத்தியில் விச்வாஸக் குறைவாம்; கார்ப்பண்யத்திற்கும் ஹானியாம்; பரந்யாஸமும் பரத்தை ஸ்வீகரிப்பதால் அழியுமென்று சொல்லி விகல்ப ஸ்தாபனம் செய்தால் ப்ரஹ்மாஸ்த்ர ந்யாயம் குறித்ததாகும். மூன்று ச்லோகத்தின் அர்த்தத்தையும் விளக்குகிறார்

ஒழிந்து நிற்பிறவற்றிலே अभिनिवेशமுடையவனை 'இது வேண்டா' என்கையும், विकल्पித்த उपायान्तरங்களிலே ஒன்றை இங்கே கூட்டில் ब्रह्मास्त्रन्यायத்தாலே विरोधिக்குமென்று ஒழிக்கையும் **विधिप्रकारங்கள்.**

1.अतोऽशक्ताधिकारत्वम् 2. आकिञ्चन्यपुरस्क्रिया । 3.अनंगभावो धर्माणाम् 4.अशक्यारम्भवारणम् ॥
5. तत्प्रत्याशाप्रशमनं 6. ब्रह्मास्त्रन्यायसूचनम् । सर्वधर्मपरित्यागशब्दार्थाः साधुसंमताः ॥

देवतान्तरधर्मादित्यागोक्तिरविरोधिनी । उपासकेऽपि तुल्यत्वादिह सा न विशेषिका ॥ 'उपायापाय-संत्यागी' इत्यादिகளிற் சொன்ன उपायत्यागமும் இப் ப்ரகாரங்களிலே निर्वाह्यம்.

(1) மூண்டாலு மரிதனில் முயல வேண்டா
(2) முன்னமதி லாசைதனை விடுகை திண்மை
(3) வேண்டாது சரணநெறி வேறோர் கூட்டு
(4) வேண்டில் அயனத்திரம்போல் வெகுளி நிற்கும்

---

**अशक्येत्यादि**யால். கீழ்க்கூறிய மூன்றையும், இங்கே கூட்டிய மூன்றையும் அதே க்ரமத்தில் ச்லோகத்தாலே ஸங்க்ரஹிக்கிறார் **अत इति. अशक्ताधिकारत्वम्— अशक्तस्य अधिकारो यत्र प्रपत्तौ तत्त्वम्.** இது அநுவாதபக்ஷம். **आकिञ्चन्यपुरस्क्रिया—** ஆகிஞ்சந்ய ஆவிஷ்காரரூப கார்பண்யாங்கத்வம். **धर्माणां अनंगभावः—** ஒரு தர்மத்திற்கும் ப்ரபத்தியங்கத்வமில்லாமை; **धर्मान्तरनैरपेक्ष्य**மென்றபடி. இவை முன்னே கூறியவை; மேல்மூன்று இங்கே கூறியவை. **साधुसंमताः—**ஸாதுக்களால் ஸ்வீகரிக்கப்பட்டவை. **धर्मपरित्याग**ம் **साधुसंमत**மாகாதென்றபடி. **सर्वधर्म**பதத்தாலே தேவதாந்தரங்களுக்கான தர்மங்களையும் வேறு காம்ய தர்மங்களையும் கொண்டு **धर्मपरित्याग**மே சொல்லலாமே என்பதற்கு உத்தரம் **देवतान्तरेति.** அந்த தர்மத்யாகத்திற்கு உக்தியானது விருத்தமாகாது; ஆனாலும் அந்த த்யாகம் உபாஸகனுக்கும் துல்யமாய்ப் பொதுவாகையால் **इह—**இங்கு ப்ரபத்தியை விதிக்கிற இடத்திலே **सा** அந்த உக்தியானது **न विशेषिका—** விசேஷமாகாது. இப்படியானால் லக்ஷ்மீதந்த்ரத்தில் **'उपायापायसंत्यागी मध्यमां वृत्तिमाश्रितः'** என்று அபாய சப்தவாச்யமான நிஷித்தங்களுக்குப் போலே உபாயங்களுக்கு ஸ்வரூபத்யாகமே சொன்னது எப்படி சேருமென்ன, அருளிச்செய்கிறார் **उपायेति,** அங்கும் இங்குப்போல் **अशक्यारम्भवारणं तत्प्रत्याशाप्रशमन**ம் என்று முன் சொன்னவாறு பொருள் கொள்ள வேண்டுமென்றபடி.

கீழ்க்கூறிய ஆறு அர்த்தங்களையும் சேர்த்து உபதேசித்தவாறு ஒரு பாட்டில் கூட்டிச் சரமச்லோகார்த்தத்தை யருளிச் செய்கிறார் மூண்டாலு மிதி. முன் சொன்ன முறையில் இங்குக் கூறப்படவில்லை; பொருளிணங்க மாறியுளது. மூண்டாலும் என்று தொடங்கி—பொறுப்பேன் என்ற வரையில் அர்ஜுநனுக்குக் கண்ணன் செய்யும் உபதேசம். மூண்டாலும்= எவ்வளவு முயற்சி செய்தாலும் அரிதனில்—செய்யவாகாத கார்யத்தில் முயல வேண்டா—முயற்சியை விடு; அதற்கு முன்னுள அந்தக் கார்யத்திலாசையையும் விடுகையானது திண்மை-ச்ரேஷ்டமாகும். ஏனெனில், சரணநெறி—சரணு

(5) நீண்டாகு நிறைமதியோர் நெறியிற் கூடா
(6) நின்தனிமை துணையாக வென்றன் பாதம்
பூண்டாலுன் பிழைகளெல்லாம் பொறுப்ப(பே)னென்ற
புண்ணியனார் புகழனைத்தும் புகழுவோமே. 47 —o—o—

இங்கு 'मां' 'अहं' என்கிற பதங்களுக்கு அடைவே अवताररहस्यத்திலும் पुरुषोत्तमत्वप्रतिपादनप्रकरणத்திலும் சொல்லுகிற படியே सौलभ्यத்திலும் स्वातन्त्र्यத்திலும் प्राधान्येन நோக்கு.

1. अवतारस्य सत्यत्वम्. 2. अजहत्स्वस्वभावता 3. शुद्धसत्वमयत्वं च 4. स्वेच्छामात्रनिदानता ॥

---

கதியென்கிற உபாயம் வேறோர்கூட்டு—வேறொரு தர்மத்தின் சேர்க்கையை வேண்டாது—அபேக்ஷிக்காது. அப்படி யிருக்கும் போது வேண்டில்—நீ எதையாவது கூட்ட விரும்பினால், அயன் அத்திரம் போல்—ப்ராஹ்மாவின் அஸ்த்ரம் போலே சரணநெறியானது—வெள்கி நிற்கும்—வெட்கப்பட்டுப் பலனளிக்காமலிருந்துவிடும். இப்படி अपचारप्रतीकारं तत्प्रत्याशाप्रशमनम् अनंगभावो धर्माणां ब्रह्मास्त्रन्यायसूचनं என்ற நாலர்த்தம் சொல்லப் பட்டன. அசக்தாதிகாரத்வத்தைச் சொல்லுகிறார் நீண்டாகும் இதி. நீண்டு ஆகும்—வெகுகாலத்தில் साधिக்க வேண்டிய நிறைமதியோர்நெறி—நிறைந்த புத்தியுடைய பக்தர்களின் வழியான யோகத்தில், கூடா—கூடவாகாதவனை—அசக்தனை என்றபடி; நின்—உன்னுடைய, தனிமை—தனியான இருப்பு, திக்கற்ற நிலை—கார்ப்பண்யமானது துணையாக அங்கமாயிருக்க; தனிமை இத்யாதியால் आकिञ्चन्यपुरस्कृता என்ற கார்பண்யாங்கத்வம் கூறப்பட்டது. இப்படி நீ எனதுடைய பாதம்—திருவடியை பூண்டால்—ஆச்ரயித்தால் பிழைகளெல்லாம் பொறுப்பேன்= सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்ற புண்ணியனார்—என்று உபதேசித்த पुण्यानामपि पुण्योऽसौ என்னப்பட்ட ஸநாதந தர்மமான பகவானுடைய புகழ் அனைத்தும்—ப்ரஸித்தமான கல்யாணகுணங்களை யெல்லாம் புகழுவோம—கொண்டாடுவோமென்றபடி. இவ்வளவால் சரம ச்லோகத்தில் முதற் பாதம் உரைக்கப்பெற்றது. —o—o—

இனி இரண்டாம் பாதத்திற்கு வ்யாக்யானம். அதில் முதற்பதம் अहं என்பது. இதுவும் மூன்றாம் பாதத்தில் முதற்பதமும் ஒரே பொருளதாகையாலே அங்கங்குக் கொள்ள வேண்டிய விசேஷணங்களோடு அவற்றின் பொருளை ஒரே இடத்தில் சேர்த்தருளுகிறார் இங்கு இத்யாதியால், அடைவு—க்ரமமாக. அவதாரரஹஸ்யத்தில் (கீதை நாலாம் அத்யாயம்) बहूनि என்று ஆரம்பித்து सोऽर्जुन என்ற வரையிலான ச்லோகங்களில்; पुरुषोत्तमत्वप्रतिपादनप्रकरणம் (கீதை 15 புருஷோத்தமாத்யாயம்) 'द्वाविमौ पुरुषौ என்று தொடங்கி सर्वभावेन भारत என்ற வரையான ச்லோகங்கள், இதே புருஷோத்தம வித்யை. அவதாரரஹஸ்யம் ஸௌலப்ய ப்ரதிபாதகம்; இது ஸ்வாதந்த்ர்ய ப்ரதிபாதகம். माமென்றவிடத்தில் ஸ்வாதந்த்ர்யம், அவதார ரஹஸ்யத்திற் குறித்த அர்த்தங்களைக் காரிகைகளால் சுருக்குகிறார் अवतारस्येति. பகவான் அவதரிப்பது

5. धर्मग्लानौ समुदयः 6. साधुसंरक्षणार्थता । इति जन्मरहस्यं यो वेत्ति नास्य पुनर्भवः ।।

இவ் अवताररहस्यज्ञानம் सद्वारकप्रपत्तिनिष्ठனுக்கு उपायपूर्णம்; स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கு ஸ்வதந்த்ரனுடைய सौलभ्यத்தைக் காட்டும். இப் ப்ரகரணங்கள் இரண்டிலும் सिद्धமான सौलभ्यமும் स्वातन्त्र्यமும் ஒன்றுக்கொன்று துணையாயிருக்கும்.

स्वतन्त्रस्यापि नैव स्यादाश्रयो दुर्लभस्य तु । अस्वतन्त्रात् फलं न स्यात् सुलभादाश्रितादपि ॥

अस्वतन्त्रे न कैङ्कर्यं सिध्येत स्वैरप्रसङ्गतः । दुर्लभे साध्यमप्येतन्न ह्यं लोकनीतितः ॥

---

என்பது ஸத்யம்; இந்த்ரஜாலம் போல் பொய்யன்று. अजहत्स्वस्वभावता— அவனுடைய ஈச்வரத்வாதி ஸ்வபாவங்கள் அப்போதும் அவனை விடா. न जहत् स्वस्वभावः यं सः अजहत्स्वस्वभावः என்று द्वितीयाबहुव्रीहि. शुद्धसत्त्वमयत्वम्= ரஜஸ்ஸூம் தமஸ்ஸூம் கலசாத ஸத்த்வமான—அப்ராக்ருத த்ரவ்யமான திருமேனியுடையனாகை. அவதாரத்திலும் அவனுக்கு ப்ராக்ருத சரீரமில்லை. அவதாரத்திற்கு निदानம்—ஆதிகாரணம் அவனுடைய இச்சையே யாகும்; அவனுக்குப் புண்யமோ பாபமோ இல்லையே. இதுவே सम्भवामि आत्ममायया என்னப்பட்டது. धर्मग्लानौ समुदयः=தர்மம் வாடுகிற போது அவதாரம்; காலவ்யவஸ்தை யில்லை. அவதார ப்ரயோஜந மென்னவெனில், ஸாது ஸம்ரக்ஷணம்; கலந்து பரிமாறி யிருக்க ஆசைப்படும் ஸாதுக்களின் மநோரத பூர்த்தியே ப்ரயோஜநமாகும். மற்ற கார்யங்களும் आनुषङ्गिकமாகக்கூடும். இப்படி அவனுடைய ஜந்மமும் செயலும் दिव्यமாகும் இந்த ஆறு அம்சமான ரஹஸ்யத்தைச் சிந்தனை செய்கிறவனுக்குப் புநர்ஜந்மமில்லை [இது கீதையில்(4)கூறப்பட்டது] ஆகில் பக்தி—ப்ரபத்திகள் போல் இதுவும் ஒரு மோக்ஷோபாயமாவென்ன அருளிச்செய்கிறார் இவ் இதி. பக்தியோ, ப்ரபத்தியோ மோக்ஷஸாதநமாகும். பக்தனுக்கு இந்த அவதாரரஹஸ்ய சிந்தநம் விரைவில் பக்தியைப் பூர்த்திசெய்யும். ப்ரபத்தியிலிழிந்தவனுக்கு இதமூலமான ஸௌலப்ய ஜ்ஞாநம் விரைவில் ப்ரபத்தியில் மூட்டும். இங்குக் குறித்த ஸௌலப்யமும் ஸ்வாதந்த்ர்யமும் ஒன்றோடொன்று சேர்ந்தே கார்யம் செய்யும்; ஆனாலும் ஒன்றுக்கு ஓரிடத்தில் ப்ராதாந்யமென்கிறார் இப் இதி. स्वतन्त्रस्येति ஸ்வதந்த்ரனாயிருந்தாலும் दुर्लभस्य—மேருவைப்போல் ஸுலபமாகாதவனுக்கு आश्रयः न स्यात्—ஒருவரால் ஆச்ரயிக்கப்படுகை யில்லை அஸ்வதந்த்ரனுக்கு ஸௌலப்யம் ஆச்ரயண அர்ஹத்வம் இரண்டுமிருந்தாலும் பலன் ஸித்திக்காது. ஸ்வாதந்த்ர்யம் பலத்திற்கு ஹேது; ஸௌலப்யம் ஆச்ரயண ஸாதகம். अस्वतन्त्रे—ஸ்வதந்த்ரனாகாதவிடத்தில் स्वैरप्रसंगतः-தன் இஷ்டப்படி செய்யவும் நேருமாகையால் कैङ्कर्यं न सिध्येत्—அப்போது கைங்கர்ய மிராமற்போம். साध्यम् अपि ஸாதிக்கப்படுவதானாலும் एतत् கைங்கர்யம் दुर्लभे ஸுலபனாகாதவன்விஷயத்தில், लोकनीतितः உலகில் போக்யமாகாமையையே காண்பதால் அந்த ந்யாயமாய், न ह्यम् போக்யமாகாது. ஆக ஸுலபனும் ஸ்வதந்த்ரனுமாகில் ஆச்ரயிப்பதும் फलप्राप्तियுமாம், த்ருஷ்டாந்தப்

ஆகையாலே शैलसुलभமான तृणादिகளைப்போலன்றிக்கே सुलभனுமாய், दुर्लभமான மேருவைப்போலுமன்றிக்கே सुलभனுமாய்ப் परனுமான சரண்யன் आश्रयणीयனுமாய்ப் प्राप्यனுமாகிறன்,

இவ்விரண்டு पदத்திலும் ஸர்வரக்ஷகனுன ஸர்வசேஷி ரக்ஷணத்துக்கு அவஸரம் பார்த்து நிற்கிற நிலையும் தோற்றுகிறது, இப்படி अवसरप्रतीक्षனுன ஈச்வரன் 'रक्षापेक्षां प्रतीक्षते என்கிறபடியே 'என்றோ நம்மை இவர்கள் அபேக்ஷிப்பது?' என்கிற अभिप्रायத்தாலே अभिमुखனுய் நிற்கிற நிலை 'मां' என்கிற पदத்திலே सूचितம். 'என்று நாம் இவர்களை அழுக்குக் கழற்றின आभरणத்தைப் போலே अङ्गीकरிப்பது?' என்கிற अभिप्रायத்தாலே सत्वरனுய்த் தன் பேறாகப் फलம் கொடுக்க நிற்கிற நிலை 'अहं' என்கிற पदத்திலே காட்டப்படுகிறது.

இப்படி अकिञ्चनனுன अधिकारिக்கு यथाविधि रक्षापेक्षापूर्वकभरन्यासத்தையொழிய வேறொன்றால் அபேக்ஷையில்லாத सिद्धोपायத்தை 'मामेकं' என்று காட்டி அதினுடைய वशीकरणार्थமான साध्योपायத்தை 'शरणं व्रज' என்று விதியாலே காட்டுகிறது. இப்படி विधिக்கிற प्रपत्तिरूपविधिக்கு शरण्यप्रसादनமாகச் चोदितत्वத்தாலே வருகிற उपायत्वம் भक्तियोगतुल्यம்; இதனாலே प्रसन्नனுன ஈச்வரன் மோக்ஷத்துக்கு साक्षादुपायம். இவ்விதிக்கு விசேஷித்து वेदान्तம் विशे-

---

களைக் காட்டி இந்த வைலக்ஷண்யத்தை யறிவிக்கிறார் ஆகையாலே இதி. ஸ்வதந்த்ரனுமாய் ச்லாக்யனுமாகையாலே சரண்யனுய், ஸுலபனுகையாலே ஆச்ரயணீயனுய். பரனுகையாலே ப்ராப்யனுமாகிறன், அவனுக்கு त्वरादिகளும் मां अहं என்றவிடத்தில் தோற்றுமென்கிறார் இவ் இதி இதன் விவரணம் இப்படி இதி. இப்படி அகிஞ்சநனுன இதி. இது மாமென்கிறதின் வ்யாக்யான கட்டம். இது முடிந்த பிறகு एक சப்தவ்யாக்யானமும் அதன் பிறகு शरणंव्रज என்பதற்கு வ்யாக்யானமும் செய்வர்; இங்கே எதற்காக இவ்வாக்ய மென்னில்—मा மென்கிற விடத்திலே இவ்வித்யைக்கு வேண்டும் குணங்களையும் சேர்த்தனுஸந்திக்க வேண்டுமெனப்போகிறாராய் ஏகசப்தத்தால் இவன் மட்டும் உபாயமாவதால் வித்யையொன்றேது என்கிற கேள்வியை விலக்க வித்யையையும் அதற்கு முக்யவிஷயமான நிரபேக்ஷரக்ஷகத்வத்தையும் காட்டி அதற்காக குணங்கள் வேண்டுமென்றருள்வதற்காக இவ்வாக்யமென்க.சரணபதத்தாலே ஈச்வரனே உபாயமாகச் சொல்லியிருக்க ப்ரபத்தி உபாயமாகுமோ; அதை ஸாத்யோபாயமாகச் சொல்லுவதெப்படி யென்ன—பரம்பரயா உபாயத்வம் இசைவதால் விரோதமில்லை யென்கிறார் இப்படி விதிக்கிற இதி. अक्त्या परमया वा ऽपि प्रपत्त्या वा என்கிற த்ருதீயையினுல் சொன்ன உபாயதவம் प्रसादहேதுத்வரூபம். प्रसादविशिष्टனுன பகவானுக்கே ஸாக்ஷாந்மோக்ஷோபாயத்வமென்றபடி. அப்போது பக்திதுல்ய உபாயத்வம் ப்ரபத்திக்காய் ஸித்தோபாயத்வமே பகவானுக் கென்று தெரிவதால் मामेकं शरणं व्रज என்பது பக்தன் விஷயமுமாகலாமே யென்ன, அருளிச்செய்கிறார் இவ்வித்யைக்கு இதி. शरणமென்ற பதத்தாலே सिद्धरूपोपायस्वरूपस्वम् சொல்லப்படுகிறபடியால் பக்தி

क्षोपायत्वम் இதுக்கு उपयुक्ताकारங்களெல்லாம் 'मां' 'एकं' என்கிற पदங்களிலே विवक्षितங்கள். 'एष नारायणः श्रीमान्' इत्यादिகளிலே निर्दिष्टप्रकारனான சரண்யனைச் சொல்லுகிற 'मां' என்கிற पदத்தாலே திருமந்த்ரத்திலும் द्वयத்திலும் प्रकाशित மான सर्वरक्षकत्वமும் सर्वशेषित्वமும் श्रियःपतित्वமும் नारायणत्वமும், இவற்றால் आकृष्टமாய்ப் परत्व-सौलभ्यங்களுக்கு உறுப்பாய் வருகிற सर्वज्ञत्व—सर्वशक्तत्वादि களும் परमकारुणिकत्व—सौशील्य-वात्सल्यादिகளும், द्वयத்தில் द्विवचनान्तपदத்தாலே தோற்றின शुभाश्रयமாய்ப் परत्व—सौलभ्यव्यञ्जकமான पार्थसारथियினுடைய दिव्य—मङ्गलविग्रहविशेषமும் காட்டப்படுகின்றன.

இங்கே 'நிகரில் புகழாய்' इत्यादिகளிற் சொல்லுகிற वात्सल्य—स्वामित्व—सौशील्य—सौलभ्यरूपமான இக் गुणचतुष्टयமும் அடியிலே अस्थानस्नेहादिகளாலே கலங்கின அர்ஜுநனை अनादरियாமையாலும், 'मत्तः परतरं नान्यत्' என்று தானே அருளிச்செய்கையாலும். 'हे कृष्ण हे यादव', 'रथं स्थापय मेऽच्युत' என்னும்படி நின்று सारथ्यादिகளைப் பண்ணுகையாலும், 'காணவேண்டும்' என்ன सर्वैश्वर्यरूप த்தைக் காட்டி, மீண்டும் 'பழைய सौम्यविग्रहத்தைக் காட்டவேண்டும்' என்ன, அப்போதே सारथिरूपனாய்த் தோற்றிநிற்கையாலும் व्यञ्जितமாயிற்று.

उक्तமான शरण्यगुणங்களில் आश्रितसंरक्षणத்துக்குப் प्रधानतमங்கள் 'सर्वज्ञोऽपि हि विश्वेशः सदा कारुणिकोऽपि सन्' என்று भगवच्छास्त्रத்திலும், 'त्वद्ज्ञानशक्तिकरुणासु सतीषु' என்கிற अभियुक्तवाक्यத்திலும் संग्रहिக்கப்பட்டன. இவை மூன்றிலும் ज्ञानशक्तिகள் निग्रह-अनुग्रहसाधारणங்கள். स्वामित्वமும் लीलोपकरणமாக்குகைக்கும் भोगोपकरणமாக்குகைக்கும் பொதுவாகையாலே वात्सल्यादिகளை रक्षणोपान्तங்களாக

---

நிரபேக்ஷ உபாயத்வம் ஈச்வரனுக்கு ஸித்திக்கிறது. அதாவது ஈச்வரன் ஸ்வபாவத்தாலேயே உபாயமாகிறான். அப்படி அவன் ஸாத்யோபாயோ பேக்ஷை செய்து உபாயமாகைக்கு உபாயமாகும் ப்ரபத்தி; நிரபேக்ஷ உபாய த்வமென்பதற்கு साक्षात् प्रसादहेतुभूत स्वेतरोपाय निरपेक्षत्वलक्षणत्व மென்று பொருள். நிரபேக்ஷ உபாயத்வம் वेषाकारமென்றால் வாத்ஸல்ய ஸ்வாமித்வாதிகுணங் கள் वेषங்களாக வேண்டாவென்ன அவை நிரபேக்ஷோபாயத்வஸாதகங்க ளென்கிறார். இதெல்லாம் द्वयाधिकारத்திலே ஸ்பஷ்டம். விவக்ஷிதங்கள் என்று முன் சொன்னதை க்ருபாப்ராधாந்யத்தைக்காட்டி—ஸர்வாகாரங்களாலும் விசிஷ்டனை..ரமென்று நிர்தேசித்தருளினானென்று107 நிகமனம் செய்வர். உறுப்பாய்—ஸாதகமாய்; இந்த குணங்களில் அகலகில்லேனென்கிற சரணா கதிப்பாசுரத்திலே நேராகக் குறித்த நாலு குணங்கள் मां என்ற விடத்தில் கருதப்படுவதற்கு கீதையில் கீழுள்ள வாக்யங்களை அடைவாக ஸாதகமாகக் காட்டுகிறார் இங்கே இதி. நிகர் இல் புகழாய்= நிகரற்ற புகழையுடையவனே என்று வாத்ஸல்யமும், உலகம்மூன்று உடையாய் என்று ஸ்வாமித்வமும், என்னையாள்வானேயென்று ஸௌசீல்யமும் திருவேங்கடத்தானே என்று ஸௌலப்யமும் குறிக்கப்பெறும். ஜ்ஞாநசக்தி ஸ்வாமித்வ காருண்யங்களில் காருண்யத்திற்கு ப்ராதாந்யத்தை நிரூபிக்கிறார் இவை இதி: स्वामित्वமும்

ஜியஸிக்கமாட்டாது. காருண்யமுமிதின்கவடுகளான ஸௌசீல்ய-வாத்ஸல்யாதிகளும் அநுக்ரஹத்துக்குபகாரங்கள். இப்படி இக் காருண்யத்தினுடைய வாசியைக் கண்ட பூர்வர்களும் 'सोऽहं ते देवदेवेश नार्चनादौ स्तुतौ नच । सामर्थ्यवान् कृपामात्रमनोवृत्तिःप्रसीद मे' என்றும், 'நின்னருளே புரிந்திருந்தேன்' என்றும், 'துணியேனினி நின்னருளல்லதெனக்கு' என்றும், 'உனதருளே பார்ப்பனடியேன்' என்றும். 'திருமாமகளைப் பெற்றுமென்னெஞ்சங் கோயில்கொண்ட பேரருளாளன்' என்றும், 'உன்திருவருளாலன்றிக் காப்பரிது' என்றும், 'நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்' என்றும், 'ஆவாவென்றருள் செய்து' என்றும், 'कृपया केवलमात्मसात् कुरु' என்றும். 'करीश तेषामपि तावकी दया तथात्वकृत्; सैव तु मे बलं मतम्' என்றும் இப் ப்ரகாரங்களிலே இக் க்ருபாகுணத்தைத் தஞ்சமாக அநுஸந்தித்து ஸ்வாமித்வத்தையும் குணாந்தரங்களையும் காருண்யத்துக்குச் சொல்லிற்றுச் செய்வனவாக்கித் தாங்கள் காருண்யைகாந்திகளாய்ப் போந்தார்கள். பிராட்டியும் குணாந்தரங்களிருக்க 'वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत्' என்று அருளிச்செய்தாள். ஸ்லோகத்திலும் 'मदीययैव दयया' என்கையாலே இக் க்ருபையின் ப்ராதான்யம் விவக்ஷிதம்.

---

என்பதற்கு மாட்டாதென்பதில் அந்வயம். सोऽहं இதி வி.பு 5-7-70. தேவதேவதேவனே! உன்னை அர்ச்சிப்பதிலும், துதிப்பது போன்ற வாக்வ்யாபாரத்திலும் நான் வல்லமையற்றவன்; உனது க்ருபையொன்றிலேயே மனவிருப்புள்ளவன்; கிருபையால் என்னையநுக்ரஹிக்கவேணும். நின் இதி. பெரியா5-4-1 உனது க்ருபையொன்றிலேயே ஊன்றியிருக்கிறேன். துணியேன் இதி. பெரியதிரு 11-8-8. அணியார் என்று பாசுரவாரம்பம். இவ்வளவு விவேகம் வந்தபிறகு உனது தயை தவிர வேறொருபாயம் எனக்கிருப்பதாக நினைக்கமாட்டேன். உனது இதி. பெருமாள் திரு 5-4. வாளால் என்று பாட்டாரம்பம். நோயாளன் மருத்துவனிடம் போல் நான் உனது தயையையே பார்த்திருப்பேன். திருமா இதி. பெரியதிரு 9-5-10 தன்னைப் பெரியபிராட்டி யடைந்திருந்தும் என்னெஞ்சை இருப்பிடமாகக் கொண்ட பெருங்க்ருபையையுடையவன். உன் இதி. திருவிரு 62. உனது க்ருபை தவிர வேறொன்றால் ரக்ஷை ஸாத்யமாகாது. त्वत्प्रसादात् ऋते कृपा न ஸுலபம் என்று அதிமாநுஷ ஸ்தவத்தில் (61) அருளின ஆழ்வானே அவற்றில் தயைக்கு ப்ராதாந்யத்தை வரதராஜஸ்தவத்தில் (94) அருளினரென்கிறார் करीशेति. அத்திகிரிநாதனே गुरूपायம் செய்கிறவர்களுக்கும் உன் தயை பலனளிப்பதாகும்; எனக்கு அதே பல மாகும். சொல்லிற்றுச் செய்வனவாக்கி — சொன்னபடி செய்கின்றவைகளாகக் கல்பித்து; அதாவது காருண்யத்தை ஆஜ்ஞாபிக்கிற ஈச்வரனாகவும் மற்ற குணங்களை அதன்படி நடக்கும் ப்ருத்யர்களாகவும் भावित्து; கீழ்ச்சொன்ன விடங்களிலெல்லாம் தயை யென்று பிராட்டியையே சொன்னதாகலாமோ என்ன, எம்பெருமான் குணமே கருதப்பெறுமென்று ஸ்த்தாபிக்கிறார் பிராட்டியும் இதி कृपया पर्यपालयत् என்றுளல்லது मया पर्यपालयत् என்னவில்லை. தன்னை நேராகச் சொல்ல இஷ்டமில்லை

இப்படி आश्रितरक्षणத்துக்குப் प्रधानமாயும் परिकरமாயுமுள்ள स्वीकारங்களாலும் विशिष्टனை தன்னை अभिमुखस्थितिயிலே 'मां' என்று निर्देशித்தருளினன்.

(1) 'मां' என்கிற पदத்திலே एकवचनத்தாலே एकत्वம் தோற்றுநிற்கப் பின்பும் एकशब्दம் 'தன்னைத் தந்த கற்பகம்' என்கிறபடியே प्राप्यனானவன் தானே प्रापकனானபடியாலே उपायफलैक्यத்தைச் சொல்லுகிறதென்றும் யோஜிப்பர்கள். இதுக்கு 'मामेकमेव शरणम्' என்கிற समानप्रकरणवाक्यமும் अनुगुणம். एवकारம் உண்டாயிருக்க एकशब्दம் கிடந்தால் இதுக்கு अवधारणமொழிய வேறே பொருள் கொள்ளுகை உசிதமிறே.

(2) இங்ஙனன்றிக்கே 'मुख्याद्यकेवलेष्वेकम्' என்கிறபடியே बह्वर्थमान एकशब्दம் இங்குக் केवलपर्यायமாய் 'मामेव ये प्रपद्यन्ते', 'तमेव शरणं गच्छ' इत्यादिகளிற்படியே अवधारणार्थமாய் शरण्यगुणपौष्कल्यத்தாலே उपायान्तरादिகளை निवर्तिப்பிக்கிறதென்றும் சொல்லுவர்கள். எங்ஙனேயென்னில், ஸ்வரக்ஷைக்கு உபயுக்தங்களான वशीकरणங்களை शास्त्रनियुक्तனான தான் अनुष्ठिக்கையாலே ரக்ஷையிலே தனக்கும் कर्तृत्वம் தோற்றி सिद्धोपायभूतனான शरण्यனோடொக்கத் தன்னையும் உபாயமாக எண்ணப்புக, இப்படிப் प्रसक्तமான उपायत्वத்தைக் கழிக்கிறது एकशब्दம். அது கழிந்தபடி என்னென்னில், 'कर्ता शास्त्रार्थवत्वात्' என்கிறபடியே ஜீவனுக்குக் कर्तृत्वம் ப்ராமாணிகமேயாகிலும் இது पराधीनமுமாய் अल्पविषयமுமாய்ப் प्रतिहतियोग्यமுமாயிருக்கும். ஆகையால் இவன் தான் उपायानुष्ठानம் பண்ணிற்றும் 'वरद तव खलु प्रसादात् ऋते शरणमिति वचोऽपि मे नोदियात्' என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே प्रेरितனாய், அவன் सहकरியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த करणकलेबरங்களைக் கொண்டு அவன் காட்டின உபாயத்தை அவன் துணை செய்ய अनुष्ठिத்து அவன் கொடுக்கப் புகு(போ)கிற फलத்துக்குச் चातकம் போலே அண்ணாந்திருக்கிற இவனை स्वाधीन-सर्वविषय-अप्रतिहत कर्तृत्वமுடைய

---

யென்றால் गुणान्तरத்தைச் சொல்லியிருக்கலாம்; அதுவுமில்லை அதனால் தயை ப்ரதானமென்றபடி.

(1) मां என்பதின் வ்யாக்யானம் முடிந்தது. ஏகசப்தத்திற்கு ஆறு அர்த்தங்களைக் கூறப்போகிறாராய் प्राप्यप्रापकैक्यமென்கிற முதலர்த்தம் கூறுகிறார் मां என்கிற இதி. தன்னை இதி திருவாய் 2-7-11. பற்பநாபனென்று பாட்டாரம்பம். என்னைத் தனக்காகவாக்கிக் கொண்டு எனக்குத் தனையும் அளிக்கின்ற விசித்ரமான கல்பக வ்ருக்ஷம். मामेकं என்பதற்கு मामेव என்று பொருளாமேயென்ன. சிலவிடத்தில் ஏவகாரத்தை ஏகசப்தத்துடன் சேர்த்து ப்ரயோகித்திருப்பதால் அது பொருளாகாதென்கிறார் இதுக்கு இதி.

(2) இனி இங்கே ஏவகாரமில்லாமையால் ஏவகாரார்த்தம் சொல்லவாமென்றும் அருளிச்செய்கிறார் இங்ஙன் இதி. ஏகசப்தம் முக்யம், வேறு, கேவலம் என்ற மூன்று பொருளிலும் வரும். केवलम् என்பதற்கு அவதாரணம்= ஏவகாரார்த்தம் பொருள். இதனால் சரணாகதி பண்ணுகிறவனைத் தள்ளு

வனோடே துல்யமாக—இரண்டாம் सिद्धोपायமாக எண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்றென்று पूर्वार्धத்தாலே சொல்லிற்றாயிற்று.

(3) இக் கட்டளையிலே साध्योपायமான ப்ரபத்தியையும் सिद्धोपायத்தோடு ஒரு கோவையாக எண்ணுமைக்காக पूर्वार्धம் என்றும் சொல்லுவர்கள். அது எங்ஙனேயென்னில்—இப் ப்ரபத்தியும் भक्तियोगம்போலே प्रसादनமாக विधिக்கப்பட்டிருந்ததேயாகிலும்—सहजकारुण्यादिविशिष्टனை ஸர்வேச்வரனுடைய कालुष्यशमनमात्रार्थीமாய் साक्षात् फलத்துக்கு सहजसामर्थ्यकारुण्यविशिष्टனை இவன் நினைவே காரணமாம்படியாய்—அவன் தானே अत्यन्त-अकिञ्चनனை ப்ரபந்நனுக்கு सत्त्वोत्कर्षத்தாலே भक्तियोगादिகளான गुरुतरोपायங்களின் நேரே நின்று இவ் आनुकूल्यसङ्कल्पादियुक्तप्रपत्तिमात्रव्याजसापेक्षனாய் வேறொன்றால் अपेक्षैயில்லா

---

கிறது. 'அஸ்வதந்த்ரனை உன்னையும் என்னோடு துல்யமாகக் கூட்டிக்கொள்ளாமல் என்னைமட்டும் சரணமாகக் கொள் என்கிறான். ஜீவனுக்குக் கர்த்ருத்வமுண்டு; ஆனால் அது பரமாத்மாதீனம்; அத்துடன் பக்தி விஷயமாகாமல் அல்பவ்யாஜ விஷயகம். அதுவும் சில ஸமயம் பலனளிக்கத் தடைபெறும். ஆகையால் கூடக்கூட்டலாகாதென்றபடி, ஆகக் கர்த்தாவின் ப்ராதாந்யத்தை விலக்கல் இரண்டாவது அர்த்தமாயிற்று.

(3) இனி மூன்றாவது அர்த்தம் இக்கட்டளையிலே இதி. ஒரு கோவையாக= அப்ரதாநமான கர்த்தாவைப் போல் அப்ரதாநமான ப்ரபத்தியை ப்ரதாந பரமாத்ம ஸமமாக, மேலே 'அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக எண்ணுகை உசிதமன்று' என்னப்போகிறபடியால் அவனுக்கதீநமானதை ஸ்வதந்த்ரமான அவனோடு ஸமமாக்குவது, முக்யகாரணமான அவனோடு வ்யாஜத்தை ஸமமாக்குவது தவறென்றதே இங்கு விவக்ஷிதமாகும். இது பக்தியோகத்திற்கும் துல்யம். ஆக, 'என் உணர்வினுள்ளே' இத்யாதிவாக்யமே இங்குப் போதுமாயினும் உண்மையில் பக்தியைவிட ப்ரபத்திக்குக் கீழ்நிலையே யிருப்பதால் இத்தை ஸமமாக நினைப்பது மிகவும் தவறென்றறிவிப்பதற்காக இப் ப்ரபத்தியும் பக்தியோகம் போலே இத்யாதி அபேக்ஷணீயமாயிருக்க இத்யந்தமான வாக்யம். भक्त्या परमया वापि இத்யாதி வாக்யத்தை நோக்கும் போது பக்தியைப் போல் ப்ரபத்தியும் மோக்ஷகாரணமான பகவத்ப்ரஸாதத்துக்கு உபாயமாகத் தெரிகிறது. ஆகிலும் வாசியுண்டு. அந்த வாசியானது ஸஹஜகாருண்யேத்யாதியாலன்றி அவன் தானே இத்யாதியால் கூறப்படுகிறது அதனால் இருந்ததேயாகிலும் என்பதற்கு அவன் தானே இத்யாதி வாக்யத்தில் அந்வயம். ஸஹஜகாருண்யேத்யாதி' காரணமாம்படியாய் என்றவரை प्रपत्त्या वा என்கிற पूर्ववाक्यத்திலிருந்து தோற்றும் அம்சம் இது பக்தி ப்ரபத்தி ஸாதாரணமாம். ஆனாலும் सहजकारुण्यादि என்பது மேலே சொல்வதற்கு உபயுக்தமாகையால் இங்குச் சேர்த்தது, வாசியின் விவரணம் अवन्तेत्यादि. பக்தியிலே நிரபேக்ஷோபாயத்வம் ऐकान्तिकமன்று,

மையால் निरपेक्षोपायत्वமே இந் व्याजविधिக்கு ஆதாரமாகக்கொண்டு 'त्वमेवोपाय-भूतो मे भव' என்று अपेक्षणीयனுயிருக்க—'என்னுணர்விலுள்ளே யிருத்தினே துவுமவனின்னருளே' என்றும், 'இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்
னதுமம்மானே' என்றும் சொல்லுகிறபடியே उपायभूतனுன அவன் செய்விக்கச் செய்கிற व्याजमात्रத்தை அவனேடு ஒக்க उपायமாக எண்ணுகை உசிதமன்றென்று प्रकरणத்துக்குத் தாத்பர்யம்.

இப்படி सिद्धोपायத்தைப்பற்ற साध्योपायம் व्याजमात्रமாய் இது प्रधानமன்றிக்கே நிற்கிற நிலையைப் பற்ற संबन्धज्ञानमात्रம், सिद्धोपायप्रतिपत्तिमात्रம், अनिवारणमात्रம், अनुमतिमात्रம், आचाद्व्यावृत्तिमात्रம், चैतन्यकृत्यம், चित्तसमाधानம், अधिकारिविशेषणம் என்று இப்புடைகளிலே अतिवादம் பண்ணினர்கள். இவ் अन्यपरोक्तिயைக்கொண்டு இவைதாமே अर्थमென்று அறுதியிட வொண்ணுது-

---

विवक्षितமான காரணங்களில் ஒருகாரணம் காரணாந்தரநிரபேக்ஷமாகை ப்ரஸித்தம். அதனுலேயே ப்ரபத்தியும் பக்திநிரபேக்ஷமென்று ஸித்தமேயென்று கேட்கலாம். அவ்வாறு துல்ய விகல்பமன்று; இங்கே पक्षया—முக்கிய கல்ப்பமான பக்தியினுல் அது முடியாதாகில்] ப்ரபத்தியாலாவது என்று பொருள். ப்ரபத்தியும் ப்ரஸாத ஹேதுவே யானுலும் त्वमेव उपायभूतो मे भव என்கிற ப்ரபத்திசப்தார்த்தத்தை சோதித்தபோது பக்திஸாபேக்ஷோபாயனுன பகவானை அகிஞ்சனனுபடியாலே பக்தியிராமற் போனுலும் காக்க வேண்டுமென்று இரக்கம் கொள்விப்பதே ப்ரபத்தி யென்று தெரிவதால் அந்த இரக்கமே பக்தியைப் போல் प्रसादकारणமாகும். இரக்கத்துக்கு ப்ரபத்தி காரணம், பக்தியே அவனேடு ஸமமாகாத போது பக்தியைவிட விலகியிருப்பதான இதை அவனேடு ஸமமாக்குவது ஸாகராம் தவறென்றபடி. என் உணர்வின் இதி—திருவாய். 8-8-3. உணர்விலென்ற பாட்டு. ஜ்ஞாநாநந்தமயமான பரமபதத்தில் நித்ய ஸூரிநாதனை அவனது கிருபையால் பெறுதற்காக அவனை என் சிந்தையில் நிறுத்தினேன், நிறுத்தியதும் அவனது அருளாலேயே. மற்றதெல்லாம்—ஐச்வர்ய கைவல்யமெல்லாம் ஹேயமென்றறிவதற்காக அவன நானுகவே யானுன். எப்போதும் அவன் அந்தர்யாமியாகவே நின்றதால் ஐச்வர்யம் போல் கைவல்யமும் ஹேயமாய் சேஷியான அவனே போக்யமானுனென்றது. இசைவித்து இதி' திருவாய் 5 8 9. ஆராவமுதா! விஷயப் பற்றுடைய என்னையும், உன் அடிமையாகையே தத்துவமென்று ஸம்மதிக்கச்செய்து உன் திருவடி யிணையிலே நோக்குடையனுக்குகின்ற ஸ்வாமியே! என்ற இதுவும் அவனிடம் நோக்கு அவனுலேயே யென்றது.

ஏகமென்றதால் வ்யாஜமாகக்கூட ப்ரபத்தி யாகாதென்று கருதி அதைப் பலவாருக ஏகதேசிகள் சொல்வதை இங்கு நிரஸிக்கிருர் இப்படி இதி. ஸித்தோபாயசோதநாதிகாரத்திலும் இது அறிவிக்கப்பெற்றது. अप्राधान्यத்தை யறிவிப்பதற்காக இவ்வாறு பல சப்தப்ரயோகம்; இல்லையேல் परस्

இவையெல்லாம் 'शरणं व्रज' என்கிற विधिக்கு विरुद्धங்களாம்;

अतिप्रसङ्गादिदोषங்களுமுண்டு, அது எங்ஙனே யென்னில்—

सम्बन्धज्ञानमात्रமென்றாலும் सिद्धोपायप्रतिपत्तिमात्रமென்றாலும் இது वाक्यमात्रजन्यமாகில் विधिविषयமாகமாட்டாது. वाक्यार्थज्ञानத்தாலே மோக்ஷமென்பார்க்கு उपासनादिविधिविरोधம் भाष्यादिसिद्धம். तत्ज्ञानமுடையவனுக்குப் பின்பு कर्तव्यமான ज्ञानान्तरமாகில் ப்ரபத்தியினுடைய विधि-लक्षण-अनुष्ठानवाक्यங்கள் சொல்லுகிறபடியே இதின் ஸ்வரூபம் अङ्गीकरिக்கவேண்டும். सिद्धोपायस्वीकारமென்ற பாசுரத்துக்கும் सिद्धोपायத்தை அறிந்து அது தனக்குக் कार्यकरமாம்படி பண்ணுகிற विधिप्राप्तप्रार्थनापूर्वक-भरन्यास-अधिकारिकृत्यத்திலேயிறே தாத்பர்யம்

अनिवारणमात्रமென்றது விலக்காதமாத்திரமானால்—ரக்ஷகனை ஈச்வரனை இவன் முன்பு प्रबलனாய் விலக்கினானாகில் ஈச்வரனுடைய ईश्वरत्वம் संकुचितமாம், अपराधத்தாலே निग्रहத்தை யுண்டாக்கி விலக்கினானாகில், இவன் பண்ணுகிற ப்ரபத்தி प्रसादनமே யாகவேண்டும். स्वरूपानर्हव्यापारத்தாலே விலக்கினானென்னில், निर्व्यापारமான सुषुप्ति-प्रलयाद्यवस्थैகளிலும், व्यापरिக்க योग्यனாயிருக்கிற जाग्रद्दशैயில் விலக்காதேயிருக்கும்போதும் ஈச்வரன் मोक्षप्रदानம் பண்ணப் प्रसङ्गिக்கும்.

---

व्रज என்கிற விதிவிருத்தமாவதோடு வேறு தோஷங்களுமுண்டு அதை விரிவாகத் தெரிவிக்க அதெங்ஙனே இத்யாதி. ஸம்பந்த ஜ்ஞாநமிதி அவன் ஸ்வாமீ ஜீவன் தாஸன் என்கிறது ஸம்பந்தம். இதன் ஜ்ஞாநம் விதேயமா, அவிதேயமா. அவிதேய ஜ்ஞாநமெனில், அத்வைதியின் பக்ஷத்தில் तत्त्वमसि என்கிற வாக்யம் கேட்டவுடனே வரும் ஜ்ஞாநமே மோக்ஷகாரணமென்பது போல் இங்கும் உபதேசகாலத்தில் வரும் ஜ்ஞாநமே மோக்ஷகாரணமென்றதாகும். गद्यமுகமாக பாஷ்யகார் செய்த ப்ரபத்யநுஷ்டாநமும் வ்யர்த்தமாம். विधि-लक्षणेति. விதிவாக்யமும் லக்ஷணவாக்யமும அநுஷ்டாந வாக்யமுமென்று பொருள். ஸித்தோபாய ப்ரதிபத்தி யென்பதை தூஷிக்கிறார் सिद्धेति. அதாவது ஸித்தோபாயமே நமக்கு உபாயமாமென்ற விச்வாஸம். ஸித்தோபாய ஸ்வீகாரமென்றும் சொல்வர். ப்ரார்த்நாபூர்வக பரந்யாஸ விதியிருப்பதால் தன் மூலமான ஸ்வீகாரமே கொள்ளத் தகுமென்றபடி. अनिवारणमात्रமென்பதற்கு விலக்காமை மட்டுமென்று பொருளாகிறது. ரக்ஷிக்க முன் வரும் ஈச்வரனை யறிந்து, 'நீ எனக்கு அளிக்கவேண்டா' என்று ஜீவன் விலக்க ப்ரஸக்தி யேது? அவ்வாறு விலக்கும்படி அவனைவிட प्राबल्यமேது? நிக்ரஹகாரணமான அபராதம் செய்வதே விலக்கலென்னில்—அப்போது அபராதம் நீக்க ஏதேனுமொன்று செய்யவேண்டுமென்றதாயிற்று, அது சாஸ்த்ரோக்த ப்ரபத்தியாகலாமே. இனி தன்னை ரக்ஷிக்கத் தானே வ்யாபரிக்கை விலக்கல்; அது இராமலிருக்க வேண்டுமென்னில்—உறக்கத்திலும் ப்ரளயத்திலும் மரணத்திலும், வ்யாபாராந்தரம் செய்யும் जाग्रद्दशैயிலும் अनिवारणமிருப்பதால் அவவளவாலே பக்தியோக நிஷ்டரும் எல்லோருமே கூட மோக்ஷம் பெற்றிருக்கவேண்டும்.

अनुमतिमात्रமென்ருல் அது உபாஸகனுக்கும் துல்யம். अचिद्व्यावृत्तिमात्रम् प्रतिकूलदशैயிலும் உண்டாகையாலே இவ்வளவே रक्षणीयतैக்கு உறுப்பாகாது.

चैतन्यकृत्यமென்ருல் उपासनादिகளும் மற்றுமுள்ள चेतनवृत्तिகளுமெல்லாம் चैतन्यकृत्यமாகையாலே இதுக்கு ஒரு வாசி சொல்லிற்ருகாது. சேதநனுக்குத் தானே வருமதென்று विवक्षिக்கில் उपदेशादिகள் வேண்டாதொழியும்.

फलानुगुण—चित्तसमाधानमात्रமென்னில், தந்தம் रुच्यनुरूपமாகப் प्रतिपुरुषम् வேறுபடும். 'यज' என்று विधेयமாய்ப் फलतत्कामनादिகளன்றிக்கேயிருக்கிற இத்தை अधिकारिविशेषणமென்னவொண்ணுது.

कर्तव्यமாக विधिக்கிற ப்ரபத்திதனக்கே இப்படி ஏதேனுமொரு கண்ணழிவு பண்ணில்—उपासनादिகளையும் இப்படிக் கண்ணழிக்கலாம். அப்போது இம் मुखங்களாலே उपासनादिகளிற்காட்டில் ப்ரபத்திக்கு व्यावृत्ति சொல்ல நினைத்தது தலைக்கட்டாது. स्वविषयस्वीकारविशिष्टமாய்க்கொண்டு फलप्रदமாகாநிற்கச்

---

அநுமதியாவது அவன் கொடுப்பதை இசைகை- கொடுப்பதெப்படி? फलापेक्षैபாலெனில், உபாஸகனும் உபாஸநம் செய்யாமலே மோக்ஷம் பெறவாகும். अचिद्व्यावृत्तिயாவது ஏதேனும் சைதந்யம் பெற்றிருக்கை. சைதந்யக்ருத்ய மாவது—பெற்ற அறிவுமூலம் வரும் வ்யாபாரம். चित्तसमाधान மென்பதைதூஷிக்கிருர் फलेति. ஏதேனுமொன்று செய்யாமற் போனுல் சித்தம் திருப்தி யடைவதில்லை; அதன் ஸமாதானத்திற்கான செயல் ப்ரபத்தி யெனில்—அது फलத்திற்கு உபயுக்தமென்ருல் சாஸ்த்ர விஹிதமாயிருக்க வேண்டும்; அது நாம் சொல்லும் ப்ரபத்தியே. फलத்திற்கு உதவாததென்ருல், அது அந்தந்தப் புருஷன் செய்யும் எச் செயலுமாகலாம்; வ்யவஸ்த்தை யில்லையாம். अधिकारिविशेषणமென்கிற பக்ஷத்தை தூஷிக்கிருர் व्रजेति. फलेति. விஹிதமான வ்யாபாரத்தைச் செய்யும் அதிகாரிக்குள்ள फलकामनै அல்லது काम्यमान फलம் ஜீவநாதி நிமித்தம் என்றவை அதிகாரி விசேஷணமென்பர். ப்ரபத்தி அவற்றிற் சேராமையால் அதிகாரி விசேஷணமாகாது. फलादिभ्यो विभिन्नत्वात् प्रपत्तिर्विध्यनन्वयात्। विधेयान्तरहानेश्च नाधिकारिविशेषणम् என்று निक्षेपरक्षैயில் இதன் விரிவாம். உபாஸநாதி என்ற ஆதிபதத்தால் கர்மயோக ஜ்ஞாநயோகங்களைக் கொள்வது. விதி அஸ்பஷ்டமாயிருக்குமிடத்திலும் விதியை யிசைந்து அநேக परविद्यैகளை बादरायणர் ஸ்தாபித்தார்; ஸ்பஷ்ட விதியிருந்தும் ப்ரபத்தி கர்த்தவ்ய மன்றெனருல், உபாஸநாதிகளை சாஸ்த்ரம் விதிக்கவில்லை யென்றே சொல்லலாம். விதித்ததாக ஸ்வீகரித்து அஹங்காரகர்ப்பமாகையால் தகாதென்று எதற்குச் சொல்லவேண்டும்? கண்ணழிவு=முக்யாம்சலோபம். உபாஸந விதியையும் இசையாவிடில் ஸ்வவசந விரோதமென்கிருர் அப்போது இதி. உபாஸன முண்டானுல் தானே அதைவிட இதற்கு வாசியென்னலா மென்றபடி. ப்ரபத்தி விதேயமன்றென்பவரின் கருத்தை மற்றொருவிதம் வெளியிட்டு நிரஸிக்கிருர் स्वेति. स्वம் ஈச்வரன்; அவனை ஸித்தோபாயமாக ஸ்வீகரிப்பது स्वविषयस्वीकारम्,

செய்தே இஸ்सिद्धोपायம் ஸ்வீகாரத்தாலும் निरपेक्षமென்று बुद्धि பண்ணவேண்டு மென்னில்—இது द्दष्टविधि போலே आरोपितமாதல் स्ववचनविरुद्धமாதல் ஆம்.

ஆகையால் ஈச்வரன் प्रसादनीयனாய்ப் प्रधानமான सिद्धोपायம்; भक्तिप्रपत्ति கள் இரண்டும் प्रसादनங்களாய்க்கொண்டு प्रधानமல்லாத साध्योपायங்கள். இவையிரண்டத்தொன்றிலே यथाधिकारம் நிலையாகக் கடவது.

(4) अपेक्षितफलத்துக்கு उपायமாக விஹித்த साधनान्तरங்களை இடையிட வேண்டாதபடி ப்ரபத்திக்கு अनन्तरம் भरस्वीकारம் பண்ணின शरण्यன் தனித்து நிற்கும் நிலையைப் பற்ற एकशब्दம் என்றும் சொல்லுவர்கள். அது எங்ஙனே யென்னில்—ப்ரபத்தியும் பண்ணி अनन्तरம் அதடியாக उपासनादिகளும் अनुष्ठिக் தால் फलोपायமாகக் கடவனான शरण्यன் अकिञ्चनனாய் विलम्बाक्षमனல்லாத இவ ன்திறத்தில் ப்ரபத்திக்கும் தனக்கும் நடுவே நிற்பதொரு சுமை சுமத்தாதே இவன் சுமையைத் தன் गुणங்களின் மேலே ஏறிட்டு

'शरणं त्वां प्रपन्ना ये ध्यानयोगविवर्जिताः । तेऽपि मृत्युमतिक्रम्य यान्ति तत् वैष्णवं पदम् ॥' என்றும்,

'ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' என்றும் சொல்லு கிறபடியே गुणविशिष्टனான தானே निरपेक्षफलप्रदனாய் நிற்கும் நிலையை अनुसन्धि த்துக்கொண்டு शरणமாக அடை யென்று இங்குச் சொல்லிற்றாயிற்று

---

இதே 'சரணம் வ்ரஜ' என்பதன் பொருளான ப்ரபத்தி, அவன் இதைத் துணை யாகக்கொண்டு फलप्रदன். ஆனால் एकமென்று நிரபேக்ஷோபாயத்வம் சொன்ன தால் ஸ்வீகார நிரபேக்ஷனென்று தெரிகிறது. அதனால் இது விலக்ஷண விதேய மென்னில்—ஸ்வீகாரத்தையும் விதித்து ஸ்வீகார நிரபேக்ஷத்வத்தையும் கூறுவதெங்ஙனே? விருத்தமாயிற்றே. நிரபேக்ஷத்வாரோபமென்னில்— அதத்த்வஜ்ஞானமாம். அது மோக்ஷसाधनமாகாது. வேறென்ன பலன்? மேலும் இதற்கு ஆரோபமாகில் प्रपत्ति विधेयமாவதற்குத் தடையென்ன வென்றபடி.

இப்படி ஸம்பந்தஜ்ஞானமாத்ர மித்யாதியான அதிவாதத்தை நிரஸித்து முன் ஸித்தோபாயத்தோடு ப்ரபத்தியைத் துல்யமாக எண்ணுமை ஏக சப்தார்த்தமென்று தொடங்கிய மூன்றும் பக்ஷத்தை முடிக்கிறார் ஆகையாலிதி. இரண்டத்து = பக்திப்ரபத்திகளில் 4வது பக்ஷம் அபேக்ஷிதேத்யாதி ஏகம்என் பதற்கு उपायान्तरव्यवधानरहितனான என்று பொருள். பக்தியோகநிஷ்டன் प्रायश्चित्त- प्रपत्तिயைச் செய்து மேலே பக்தியையும் செய்வது போல் ஸ்வதந்த்ர ப்ரபத்தி நிஷ்டன் உபாயாந்தரம் செய்யவேண்டா வென்றதாயிற்று. இதே शरणं त्वां என்கிற ப்ராஹ்மபுராணத்தில் ध्यानयोगविवर्जिताः என்ற பதத்தாலறி விக்கப்பட்டது. तेऽपि என்பதற்கு த்யாநயோகம் செய்யும் ப்ரபன்னர் போல் அது செய்யாதவர்களுமென்று பொருள். ஆறு இதி. திருவாய் மொழி. 5-7-10 நின்பாதமே = உனது திருவடியையே அகிஞ்சநனான எனக்கு சரண் ஆறு ஆக = நிரபேக்ஷ ரக்ஷகமென்கிற உபாயமாக அளித்தா யென்று பொருள். गुणविशिष्टனான = விசேஷ இரக்கமுள்ள; நிரபேக்ஷ फलप्रद னாய்—ஸாக்ஷாத் ப்ரஸாதஹேது शरणागति நிரபேக்ஷனாகவே பலனளிப்பவனாய்,

5).இப்படியே परिपूर्णனை தன்னைப் ப்ரபத்தி பண்ணும்போது आनुकूल्य-सङ्कल्पादिகளையொழிய வேறொரு परिकरத்தை இதிலே विद्यान्तरத்திற்போலே சொருகிக்கொண்டு அதுவும் प्रसादनமான उपायकोटियிலே நிற்கிறதென்னும் நினைவைக் கழிக்கைக்காக पक्षान्तरமென்றும் சொல்லுவர்கள். 'आज्ञानुज्ञैகளாலே अनुष्ठिக்கும் कर्तव्यान्तरங்களுமெல்லாம் ப்ரபத்திக்குத் துணையல்ல; இப் ப்ரபத்தியாலே वशीकृतனாய்ப் फलம் தர விருக்கிற நானொருவனுமே இக்क्षणिकोपायத்துக்குப் प्रतिभूவாய் நின்றேன், இப் प्रपत्तिफलத்தைப் பற்ற வேறொரு தேவை செய்யவேண்டா; அத் தேவையைத் துணையாகக்கொண்டு உன்னை நான் रक्षिக்கப்புகு (போ)கிறேனல்லேன்' என்று தாத்பர்யம். இத்தால் आनुकूल्य-सङ्कल्पादिविशिष्टप्रपत्तिயொழியப் प्रपत्तिपरिकरம் என்று பேரிட்டுத் தனக்கு வேறொரு सहकारिकारणத்தைக் கூட்டவேண்டாவென்று சொல்லிற்றாயிற்று. 'येन केनापि प्रकारेण द्वयवक्ता त्वम्' என்றும், 'प्रातिवाच्यैव निरीक्षितुं वृणे' என்றும் சொல்லுகிறபடியே पूर्णपदतिக்கு अपेक्षितமான தெளிவு இல்லாவிடிலும் यथा-कथञ्चिदनुष्ठानத்தாலே கார்யம் செய்கிற இவ் उपायத்துக்கு வேறொரு परिकरத்தைத் தேடப் प्रसक्तमில்லையிறே.

'ततः सागरवेलायां दर्भान् आस्तीर्य राघवः । अञ्जलिं प्राङ्मुखः कृत्वा प्रतिशिश्ये महोदधेः ॥ बाहुं भुजगभोगाभमुपधायारिसूदनः ॥' என்று பெருமாள் समुद्रத்தைப் பற்ற शरणागति பண்ணின விடத்திலும்,

---

5 ஐந்தாவது பக்ஷம் அருளிச்செய்கிறார் இப்படியே இதி ஆநுகூல்ய ஸங்கல்பாத்யங்கம் போலே வேறு அங்கம் வேண்டாமல் நிற்குமென்னை யென்று पक्षान्तरமென்பதின் பொருள். இதனால் நித்யகர்மாநுஷ்டாந. नाम सिந்தநாதிகள் அங்கமல்லவென்றதாயிற்று. தேவை= அபேக்ஷிதமான கார்யம். அங்கியான ப்ரபத்தி அவிசதமானாலும் பலனுண்டென்று தெரிகிற போது अङ्गान्तरापேக்ஷைக்கு ப்ரஸக்தி யேது என்று இதை உறுதிப்படுத்துகிறார் येनकेनापि இதி.

ஸ்ரீமத்ராமாயணத்திலும், ஹரிவம்சத்திலும் ப்ரபத்திக்கு அங்காந்தராபேக்ஷை ஸ்பஷ்டமாயிருக்க அது இல்லை யென்னலாமோ என்பதற்குப் பரிஹாரம் ततः இத்யாதியால். 'समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति' என்கிற விபீஷணாபிப்ராயத்தை லக்ஷ்மணனும் ஸுக்ரீவனும் சொன்னபோது அதை யிசைந்து ராமன் அநுஷ்டித்தது இங்குச் சொல்லப்படுகிறது ரா. யு, 21. சரணாகதி செய்வதாக முடிந்த பிறகு, சத்ருக்களை யழிக்கவல்ல ராமபிரான் கடலின் கரையிலே தர்ப்பங்களைப் பரப்பி, பாம்பின் உடல்போல் திரண்டு உருண்டிருந்த தம் புஜத்தைத் தலையணையாக்கிக்கொண்டு கிழக்கு முகமாய்க் கடலுக்கு அஞ்சலி செய்து ப்ரதிசயநம் செய்தருளினார். கீழ் சரணாகதிப்ரஸ்தாவத்தினாலே अञ्जलिं कृत्वा என்பதற்கு ப்ரபத்தி செய்து என்ற பொருள் தெரிகிறது, அதற்கு அங்கமாகும் இந்த ப்ரதிசயநமென்று சங்கை. ஹ இதி. ஹரிவம்சம். 24. கௌசிகனுடைய பிள்ளைகள் ஏழுபேர் தங்களை

'स राजा परमापन्नो देवश्रेष्ठमगात् तदा । शरण्यं सर्वभूतेशं भक्त्या नारायणं हरिम् ॥
समाहितो निराहारः षड्रात्रेण महायशाः । ददर्शादर्शने राजा देवं नारायण प्रभुम् ॥'

என்று सनत्कुमारोपाख्यानத்திலே ब्रह्मदत्तचरितத்திலும் சொன்ன प्रकारங்களு மெல்லாம் प्रपत्तिக்கு अङ्गமல்ல; இவ்விரண்டிடமும் सपरिकरप्रतिशयनादिप्रधानமாகை

---

சபித்த தமப்பனர் இறந்த பிறகு गार्ग्यருக்கு சிஷ்யர்களாகி, கன்றேடுகூடிய அவருடைய கபிலைப்பசுவை மேய்க்கும்போது பசியால் கொல்ல முடிவுசெய்து பித்ருக்களுக்காக அதைக் கொன்று ச்ராத்தம் செய்து மாம்ஸத்தைப் புசித்து ஆசார்யரிடம் சென்று பசுவைப் புலி தின்றுவிட்டதென்று பொய் சொல்லிக் கன்றைஅவரிடம்சேர்த்தனர். அந்தப் பாபம் காரணமாகஅவர்கள் ஏழு व्याधர்களாகச் சேர்ந்து பிறந்தார்கள். பூர்வஜந்ம ஜ்ஞாநம் மட்டும் அவர்களுக்கு இருந்தது. அதன் பிறகு அவர்கள் ம்ருகங்களாகவும், சக்ரவாக பக்ஷிகளாகவும், ஹம்ஸங்களாகவும், அந்தணர்களாகவும் பிறந்தபோதும் ஜ்ஞாநம் குன்றுமலிருந்தது. அப்படியிருந்தும் அவர்களில் ஒருவன் அந்த:புர ஸ்த்ரீகளுடன் காட்டில் புகுந்த ஓரரசனைக் கண்டு அவனைப் போலாக விரும்பினன். அதனல் ப்ரஹ்மதத்தன் என்கிற அரசனகப் பிறந்தான். அவனுக்கு ஸர்வ ப்ராணிகளுடையவும் பேச்சை யறியும் வல்லமை யிருந்தது. அவன் அஸிததேவரின் புத்ரியான ஸந்நதி யென்ற பார்யையோடு காட்டிலிருந்த போது காமிகளான இரண்டு எறும்புகள் பேசுவதைக் கேட்டுச் சிரித்தான். ஏன் சிரித்தீரென்று மனைவி கேட்டு எறும்பின் பேச்சுக்காகவென்று சொன்னதை நம்பாமல் கோபம் கொண்டாள். அதன்மேல் स: என்ற ச்லோகம். அந்த ப்ருஹ்மதத்தனென்ற அரசன் பார்யையை ஸமாதாநப்படுத்த முடியாமல் மிகவும் ஆபத்திற்கு ஆளாகி ஸர்வேச்வரனை நாராயணனை யடைந்தான். அவரிடமே சென்ற மனமுடையனய் நாராயணனைக் காணமல் ஆறுநாள் ஆஹாரமின்றி யிருந்து நாராயணனைக் கண்டான், பகவானும். காலையில் உனக்குக் கல்யாணமான வார்த்தை கிடைக்குமென்றநுக்ரஹித்தார். அதன்படிஅவனேடு கூடப்பிறப்பவரில் ஒருவன்மூலமாக முதலில் ஸப்தவ்யாதர்களாகி இப்படிப் பல ஜந்மங்கள் எடுத்திருப்பதை யறிந்து உடனே தெளிந்து பிள்ளையான விஷ்வக்ஸேநனுக்கு ராஜ்யமளித்துவிட்டு பார்யையுடன் யோகம் செய்யச் சென்றன். இப்படியவன் புறப்படவேண்டுமென்றே பார்யை முன்னே கோபம் கொண்டவள் போல் நடந்து கொண்டாளென்றறிந்தான். இது வரலாறு. இங்கு ब्रह्मदत्तन் ஆறுநாள் நிராஹாரமாயிருக்கை தெரிகிறது, ராமன் மூன்று நாள் நிராஹாரமாயிருந்தார். ஸப்தவ்யாதோபாக்யாநமாவது—கௌசிக புத்ரர்கள் ஏழு வ்யாதர்களாகிப் பின்னே பல ஜந்மங்கள் எடுத்துச் செய்ததெல்லாமாகும்.

இந்த சங்கைக்குப் பரிஹாரம்—அந்த இடங்களில் ப்ரதிசயநம் முதலான வேறு கார்யங்களுக்கே அந்த நியமங்கள்; ஆக அவை சரணகதிக்கு அங்க

யாலே அங்கு அந்த நியமங்கள் சொல்லப் प्राप्तம்.

இப்படி सुकृत्प्रणामத்திலும் கண்டுகொள்வது

இங்குப் प्रपत्त्यायादिகளிற் சொன்ன आनुकूल्यसङ्कल्पादिपरिकरங்களொழிய

---

மல்லவென்பதாம், அங்கே சரணாகதி செய்தது உண்டோ இல்லையோ, உண்டா கில் இரண்டு எதற்கு என்று இதன் மேல் வினா எழும். இங்குச் சிலர் சொல்லுவதாவது—சரணாகதி செய்யவேண்டுமென்று முன்னே ப்ரஸ்தாவமிருந்தாலும் ராமன் அநுஷ்டித்தது ப்ரதிசயநமே; गुरुदीक्षையை அநுஷ்டிக்க முடியாமற் போனால் தானே ப்ரபத்தி. ஆகையால் சக்ரராஜைப்போல गुरुदर्भத்தையே யநுஷ்டித்தார் இப்படியே ब्रह्मदत्त சரிதத்திலுமென்றவாறு மற்றும் சிலர்–சரணாகதியே அநுஷ்டித்தார் அப்போது தான் "சரணாகதி பண்ணின விடத்திலும்" என்ற ஸ்ரீஸூக்தி பொருந்தும் ராமன் சரணாகதி பண்ணினனென்றே பெருவாக ப்ரஸித்தி. ப்ரதிசயநமாவது—அதற்கங்கமான கார்ப்பண்யத்தின் விரிவு. சிலர் ப்ரபத்த்யநுஷ்டாந காலத்தில் ஆகிஞ்சந்ய–அநுஸந்தானத்தோடு நிற்பர் சிலர் அவரவர்களுக்குத் தோன்றினவாறு பல க்ருபண வ்ருத்திகளைச் செய்வர். அவற்றில் இதுவும் ஒரு முதிர்ந்த வகையாமென்பர். இனி இந்த ப்ரதிசயநாதிகள் சாஸ்த்ர விஹிதமான பஹுதிந ஸாத்யமான கர்மவிசேஷமாகத் தெரிவதால் க்ஷணகால ஸாத்யமான ப்ரபத்தியின் அங்கமான கார்ப்பண்ய விரிவான அவிஹித கார்யமான க்ருபண வ்ருத்தி யாகா. சரணாகதி செய்தது ஸேதுபந்தத்திற்கு ஸமுத்ரராஜன் இடமளிப்பதற்காகவேயாகும். ப்ரதிசயநம் செய்தது அவனை நேரில் கண்டு பேசவேண்டுமென்பதாலென்க. ப்ரஹ்மதத்த சரிதத்தில் दर्शनம் பெறுதற்காக षष्ठोपவாஸமென்பது வ்யக்தம். இராமாயணத்திலும் இவ்வளவு செய்தும் ஸமுத்ரராஜன் दर्शनமளிக்கவில்லையே—न च दर्शयते मन्दः என்று பல கால் ராமன் சொல்வதால் தர்சனம் பெறுதற்காகவே ப்ரதிசயநம் செய்ததென வாராய்க.

एकोऽपि कृष्णे सुकृतः प्रणामः दशाश्वमेधावभृथेन तुल्यः । दशाश्वमेधी पुनरेति जन्म कृष्णप्रणामी न पुनर्भवाय என்று ஸுக்ருத ப்ரணாமத்திற்குப் பலன் புநர்ஜந்மமில்லாமையென்றதால் அது ப்ரபத்தியே யாகவேண்டும். ஸுக்ருத ப்ரணாமமாவது—கைகளை மூன்று தரம் நீட்டி அஞ்ஜலிசெய்து, மூன்று தரம் முழங்கால் வரை நீட்டி, நெற்றி மூக்கு தாடைகள் இவைகளை மூன்று தரம் பூமியில் பதியவைத்துப் பன்னிரண்டு தரம் செய்யப்படும் அஷ்டாங்க ப்ரணாமமென்பர். मातापिता என்ற ச்லோகவ்யாக்யாநத்தில் ஸ்தோத்ர பாஷ்யத்திலும் இது சுருக்கமாயுள்ளது ஆகையால் ப்ரபத்திக்கு அந்த அங்கங்கள் வேண்டுமே யென்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. ப்ரபத்தி வேறு, ஸுக்ருத ப்ரணாமம் வேறாகையால் அதற்கு இங்கு அவகாசமில்லை யென்று கருத்து. ப்ரபத்தியை விதிக்கும் ஸ்தலங்களிலும் அதை யநுஷ்டித்தவரின் வரலாறுகளிலும் வேறு அங்கம் சொல்லப்படவில்லை யெனகிறார் இங்கு இதி. த்ரௌபதீ சூதாட்டத்தில் மாநபங்க பரிஹாரத்திற்காக க்ரு

வேறு நியமங்கள் வேண்டா. आकिञ्चन्यैकधनரான द्रौपदी—दमयन्ती—राक्षसी—विभीषण—क्षत्रबन्धु—मुचुकुन्द—गजेन्द्र—पाण्डव-देव-सुमुख-त्रिशङ्कु-शुनश्शेफ-किरात-काक-कपोतादिகள் शरणागतராகிறபோது அப்போதைய आनुकूल्यादिகளையொழிய வேறொர் इतिकर्तव्यतैயைச் சொல்லக் கண்டிலோம். क्षणकालसाध्यமாய் निरपेक्षமான प्रपत्तिमात्रத்தாலே கடுக அவ்வோ शरणागतர்க்கு அவ்வோ अपेक्षितसिद्धियும் கண்டோம். இப்படி मोक्षार्थप्रपत्तियிலும் இவன் கோரி(வி)ன காலத்திலே फलसिद्धिக்குக் குறை யில்லை. இது 'मा शुचः' என்கிற வாக்யத்திற்கும் தாத்பர்யம். 'परित्यज्य' என்கிறவிடத்திலே परिकरान्तरनैरपेक्ष्यம் சொன்ன பொருளிலே

---

ஷ்ணனை சரணம் புகுந்தாள். தமயந்தீ ஸ்வயம்வரத்தில் நளன் இன்னானென்று தெரிவதற்காக நளவேஷத்திலிருந்த தேவதைகளை சரணம் புகுந்தனள்; த்ரிஜடையென்ற அரக்கி அசோகவனத்தில் ஸீதையை; விபீஷண சரணாகதி ராமன்விஷயம். க்ஷத்ரபந்து பாதிராத்ரியில் கண்ணனை சரணமடைந்தானென்பர். முசுகுந்தன் காலயவநனைக் கொல்வதற்காகத் தன்னிடம் கிட்டி நின்ற கண்ணனை சரணமடைந்தான்; கஜேந்த்ர சரணாகதி முதலைபால் பீடிக்கப்பட்டபோது மூலமான ஹரிவிஷயம்; பாண்டவசரணாகதி மார்க்கண்டேய உபதேசத்தினால் க்ருஷ்ணவிஷயம். தேவதைகள் ஐச்வர்யம்பெறுதற்காக விஷ்ணுவை சரணமடைந்தனர் (திருநாராயணீயம்); ஸுமுகனென்கிற ஸர்ப்பம் கருடனிடமஞ்சி உபேந்த்ரனை சரணமடைந்தது (ஆதிபர்வம்); த்ரிசங்குவும் சுநச்சேபரும் விச்வாமித்ரரை(ரா.பாலகாண்ட);கிராத சரணாகதி கபோதோபாக்யாநத்தில் (அபயப்ரதாநப்ரகரணத்திலும் பாரதத்திலும்); காகாஸுரசரணாகதி ராமன்விஷயம்;கபோதம்(பா.)சிபியை சரணமடைந்தது. இந்த स्थलங்களில் அவச்யமான அங்கம் வேறு தெரியவில்லையென்றபடி.

ப்ரபத்தி க்ஷணகாலஸாத்யமாயிருப்பதாலும் அவ்வளவுமட்டிலே பலன் தெரிகிறபடியாலும் நித்யநைமித்திகாதிதர்மங்கள் அங்கமாக ப்ரஸக்தியில்லை யென்கிறார் க்ஷணேதி. மற்ற பலங்களுக்கான ப்ரபத்திக்கு வேறங்கம் வேண்டாவாகிலும் மோக்ஷம் பெரும் பேறா யிருப்பதால் அதற்கு அதிக அங்கமிருக்கலாமே யென்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. விசேஷ வசநமிராத போது फलान्तर ப்ரபத்தி ந்யாயமாய் மோக்ஷார்த்த ப்ரபத்திக்கும் அங்கம் வேறில்லை யென்ற அநுமாநமே உசிதமாகும். மோக்ஷார்த்தமான ஆர்த்த ப்ரபத்திக்கு வேறங்கம் சொல்லவாகாதபடியால் மற்ற மோக்ஷார்த்த ப்ரபத்திக்கும் அதே யென்னலுமாம். இவ்விதமான சங்கைகளைப் பரிஹரித்து இதைத் திடப்படுத்துவதற்காகவே ச்லோகத்தில் परित्यज्य என்றும் एकं என்றும் சொல்லியிருந்தும் மீண்டும் मा शुचः என்றதென்கிறார் இது இதி. அதுபோல் परित्यज्य என்று சொன்னதையே ஏகமென்ற பதத்தாலும் திடப்படுத்தலாமென்கிறார் परित्यज्येति—உண்மையில் பரித்யஜ்யவென்பதற்குக் கீழே ஆறு அர்த்தங்களும். एकं என்பதற்கு இங்கு ஆறு அர்த்தங்களும் கூறப்பட்டதால் ப்ரபத்திக்கு இதர நைரபேக்ஷ்யமென்கிற அர்த்தத்தை ஒரிட

एकशब्दத்தில் இந்த योजनை स्वीकरणार्थமாகக் கடவது. இதுக்கு अवधारणम् विवक्षितமாகவுமாம். एकशब्दத்துக்கு இது பொருளானால் 'परित्यज्य' என்கிற விதுக்கு அங்குச் சொன்ன अर्थान्तरங்களைக் கொள்ளவுமாம்.

सपरिकरप्रपत्तिக்கு उपासनादिகளான அங்கங்களையும், இவற்றின் परिकरங்களான धर्मान्तरங்களையும் கழிக்கிற இப் பொருள்களில் இவ் एकशब्दம் शरण्यனை विशेषिக்கபடி என்னென்னில்,—अधिकारिன்பக்கலிலே இவை प्रसादनமாய்க்கொண்டு शरण्यனோடு துவக்கற்றமை காட்டுகைக்காக मामेकं என்கிறது.

(6)'सर्वधर्मान्' என்கிற கீழில் सर्वशब्दத்தையும், 'सर्वपापेभ्यः' என்கிற மேலில் सर्वशब्दத்தையும் பார்த்து இவ் एकशब्दம் सर्वशब्दத்துக்குப் प्रतिसंबन्धियाய் நிற்கிறதென்றும் சொல்லுவர்கள் அப்போது,

---

த்தில் கொள்ளும்போது வேறிடத்தில் வேறு அர்த்தம் கொள்ளலாம், புநருக்தி தோஷத்திற்கு இடமேயில்லை யென்கிறார் இதுக்கு இதி.

இந்த நாலாவதும் ஐந்தாவதுமான அர்த்தங்களில் एकं என்பது मां என்பதற்கு எப்படி விசேஷணமென்று கேட்டு விளக்குகிறார் सपरिकरे इति. ப்ரபத்தி மட்டும் போதும்; அங்கியான உபாஸநமும் வேண்டா, அங்கமாக நித்யதர்மமும் வேண்டா வென்றால் ப்ரபத்திக்குதானே உபாயாந்தரராஹித்யமும் அங்காந்தரராஹித்யமும் சொல்லப்பட்டதாகும். அப்போது एकं என்பது அதற்குதானே விசேஷணமாக வேண்டும். मां என்பதற்கு விசேஷணமாகாதே; व्रज என்கிற க்ரியா விசேஷணமாகவே யிருக்கட்டுமே யென்னில். அது க்லிஷ்டமாகு மென்று சங்கை. பக்தன்விஷயத்தில் ஈச்வரன் அவன் செய்த பக்தியையும், அதற்கு அங்கமாக அவன் செய்த நித்யதர்மங்களையும் கண்டு ப்ரஸந்நனாகிறான். அப்போது அவை प्रसादहेतुவாய் ஈச்வரனுக்கு விசேஷணமாகின்றன. இப்படி तत्सहितனாகி அங்கே ஈச்வரன் फलप्रदன். இங்கே அவையில்லாமலே फलप्रदனாகிறபடியால் तद्रहितन்—तन्निरपेक्षன் என்கிற பொருளாய் एकं என்பது मां என்பதற்கு விசேஷணமாகுமென்று கருத்து. शरणं व्रज என்ற ப்ரபத்தியானது ஈச்வரனை உபாயாந்தரஸ்தாநாபந்நனுக்குப்போது உபாயாந்தராநுஷ்டாநத்திற்கு ப்ரஸக்தி யேது? ஸாங்க உபாய ஸ்தாநத்தில் ஈச்வரனை நிறுத்துவதால் அங்கமாகச் சிலவற்றையநுஷ்டிக்கவும் ப்ரஸக்தியில்லையே. ஆகையால் இந்த நைரபேக்ஷ்யத்தைத் தெரிவிப்பதற்கு एकமென்கிற சொல் வேண்டாவேயென்னில்— ஏகம் என்ற சொல் இருப்பதால் உபாயாந்தர ஸ்தாநாபத்தி யென்கிற அர்த்தம் स्वीकृतமாகும்; ப்ரமாணாந்தரஸித்தத்தைதானே ஏகசப்தம் குறிக்குமென்று கொள்க

6, ஆறாவது அர்த்தம் தொடங்குகிறார் सर्वधर्मान् இதி. ச்லோகத்தில் ஸர்வ சப்தத்தையும் ஏகசப்தத்தையும் ப்ரயோகித்திருப்பதால் ஸர்வத்திற்கும் ப்ரதியாக ஏகமென்று தெரிகிறது. அதனின்று எந்தெந்த தர்மம் செய்ய முடியவில்லையோ அவை யெல்லாவற்றிற்கும் ப்ரதியாக நானேயென்று தேறுகிறபடியால் ஸர்வேச்வரன் ஸர்வதர்மஸ்தாநாபந்நனென்றதாம்,

सुदुष्करेण शोचेत् यो येन येनेष्टहेतुना । स स तस्याहमेवेति चरमश्लोकसंग्रहः ॥

இத்தாலே என் சொல்லிற்றாயிற்றென்னில்—

'यत् येन कामकामेन न साध्यं साधनान्तरैः । मुमुक्षुणा यत् साङ्ख्येन योगेन न च भक्तितः ॥

प्राप्यते परं धाम यतो नाऽऽवर्तते यतिः । तेनतेनाऽऽप्यते तत्तत् न्यासेनैव महामुने ॥"

என்கிற கட்டளையிலே தனக்கு अभिमतங்களாயிருப்பதே(?)தேனும் ஒரு(?)फल ங்களைப்பற்ற அவற்றுக்கு अनुगुणமாகத் தனித்தனியே शास्त्रங்களாலே विधि க்கப்பட்ட उपायங்களில் ज्ञानाभावத்தாலேயாதல்—ज्ञानமுண்டாயிருக்க शक्त्यभाव த்தாலேயாதல் இவையிரண்டும் உண்டாயிருக்க विलम्बासहत्वத்தாலேயாதல் शोचिக்கிற अधिकारियைப்பற்ற,'அவ்வுபாயங்களொன்றிலும் நீ அலையவேண்டா; அவை தனித்தனியே தரும் फलங்களுக்கெல்லாம் प्रपत्तिवशीकृतனான நான் ஒருவனுமே அமையும்' என்று சொல்லிற்றாயிற்று. பல औषधங்கள் தரவல்ல आरोग्यத்தையெல்லாம் இஸ் सिद्धौषधம் ஒன்றுமே தரவற்றாகையாலே நீ औषधान्तरங்களுக்கு அலமராதே இந்த औषधமொன்றையுமே उपजीविக்க அமையும்; இது உனக்கு அந்த औषधங்களாலே கழிக்கப்படும் व्याधिகள் எல்லாவற்றையும் கழிக்கும்; உனக்குப் பின்பு इष्टभोगங்களையும் भुजिக்கலாம், நீ आरोग्यத்தையும் भोगங்களையும் இழக்கிறோமென்று வெறுக்க வேண்டா' என்று சொல்லுமாப்போலே யிருக்கிறது இச் चरमश्लोकம்.

---

सुदुष्करेणेति. यः—எவன் தன்னிஷ்டத்திற்குக் காரணமான—தன்னால் செய்ய வாகாத எந்தெந்த தர்மம் காரணமாக வருந்துகிறானோ. तस्य—அவனுக்கு நான் ஒருவனே அந்தந்த தர்மமாகிறேன்; அந்தந்த தர்மஸ்தானத்தில் நின்று அந்தந்த இஷ்டத்தை யளிக்கிறேனென்று சரமச்லோகஸாரார்த்தம். மோக்ஷமுள்பட எல்லாப் பலத்திற்கும் ஸாதகமான எல்லா தர்மங்களுடைய ஸ்தானத்திலும் பரமாத்மாவின் இருப்பை அறிவிக்கும் இதை அஹிர் புத்ந்யஸம்ஹிதாவாக்யத்தாலே விளக்குகிறார் यदिति. இதன் பொருளை ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் காண்க வேறு உபாயத்தால் ஸாதிக்க முடியாமற் போனால் பரமாத்மாவையே फल ஸாதநமாக்கலாமென்கிறது இது. ஸாதிக்க முடியாமைக்குக் காரணம் ஜ்ஞாநாभावமும் சக்த்யभावமும் போல் தான் அபேக்ஷிக்கிற காலத்தில் பலன பெறுவிக்கத் தக்க உபாயம் இல்லா மையுமாவதால் विलम्बाक्षमत्वத்தையும் கூட்டினார். ஆர்த்த ப்ரபத்தி விதியும் இதற்கு ப்ரமாணமாகும். அலமராதே—அலையாமல் ஒவ்வொருவிதமான ரோகம் வரும்போது அததற்கான தனிமருந்தைப் பெறப் பிரயாஸைப் படாமல் ஒரு ஸித்தௌஷதமே கொண்டு எல்லாம் பரிஹரிப்பதை லோகத் தில் காண்கையால் பரமௌஷதமான பரமாத்மாவுக்கும் இந்நிலை கூடு மென்றபடி. சரமச்லோகத்தில் ஸர்வதர்ம ஸத்தானத்திலே ஈச்வரன் சொல் லப்பட்டான்; கீழ் அஹிர்புத்ந்ய வாக்யத்திலே न्यासेनैव என்று ஸர்வதர்ம ஸ்தானத்தில் ப்ரபத்தியே சொல்லப்படுகிறது; இரண்டும் ஒன்றாகாதே

सर्वधर्मपरित्यागविशिष्टமான एकशब्दम् सिद्धोपायप्राधान्यத்தாலே शरण्यனை विशेषिக்குக்கொண்டு நின்றாலும் 'च तेनैव' என்கிற படியே ப்ரபத்தியொன்றுமே सर्वधर्मस्थानத்திலும் विधिக்கப் படுகிறதென்று फलिக்கும். இத்தால் 'त्रिवर्गार्थिகளும் இப் शरणप्रपत्ति பண்ணலாம்' என்றதாயிற்று அப்போது—

'त्वयाऽपि प्राप्तमैश्वर्यं यतस्तं तोषयाम्यहम्', 'नाहमाराधयामि त्वां तव बद्धोऽयमञ्जलिः ॥',

---

என்ன, அருளுகிறார் ஸர்வசப்தேதி. ந்யாஸமாவது ப்ரபத்தி. அது—ஈச்வரனை ஸர்வதர்மஸ்த்தாநாபந்நனாக்கும். प्रसादनமாக ந்யாஸாநுஷ்டாநமிராதபோது ஈச்வரன் ஸர்வதர்ம ஸ்த்தாநாபந்நனாகான். ஸம்ஹிதையிலும் லகுவான ந்யாஸத்திற்கு ஸர்வதர்ம ஸ்தாநத்திலிருப்பு எங்ஙனே யென்றதை விளக்க 'परमात्मा च तेनैव साध्यते पुरुषोत्तमः' என்றது. பரந்யாஸத்தாலே பரமாத்மா வசீகரிக்கப்படுகிறான். ஆக ஸித்தோபாயனான பரமாத்மாவே ஸர்வதர்ம ஸ்தாநாபந்நன். புருஷனுக்குக் கர்த்தவ்யமான ஸர்வதர்மங்களைப் போல் ந்யாஸம் விதிக்கப்படுவதால் அதற்கும் ஒருவிதம் ஸ்தாநாபத்தி இங்கு ஸம்மதம். ஈச்வரனுக்கு ஸ்தாநாபத்தியை ஏகமென்று காண்பித்து அதற்காகவே शरणं व्रज என்று ந்யாஸத்தை விதித்ததே. ஆகச் சரம ச்லோகமும் அந்த வாக்யமும் ஒரே பொருளதாகும். ஸம்ஹிதையிலே முமுக்ஷுவைப் போல் त्रिवर्गकामरूप फलान्तरार्थिகளையும் कामकामेन என்றெடுத்து அவர்கள் செய்ய வேண்டும் உபாயங்களின் ஸ்தாநத்திலும் பரமாத்மா நிற்கிறானென்றதாலே முமுக்ஷுக்களல்லாதாரும் தேவதாந்தரவிஷயமாகவோ வேறாகவோ எந்த உபாயம் செய்யவாகாமற் போனாலும் ஈச்வரனிடம் ப்ரபத்தி செய்யலாமென்று தெரிகிறது அதுவும் இச் சரம ச்லோகத்தில் ஸித்திக்கிறதென்கிறார் இத்தால் இதி. இதனால் தேவதாந்தர—ஆராதநமான கர்மாவைச் செய்யவாகாத அமுமுக்ஷுக்கள் தேவதாந்தர ப்ரபத்தி பண்ணுவதை விலக்கியதாகாது. அவர்கள்விஷயத்திலும் ப்ரபத்தி செய்யலாம். அந்தந்தப் பலனுக்காக அந்தந்த தேவதையைத் தனித்தனியே சரணம் புகாமல் அந்த கர்மங்களை உண்மையில் இவனுக்கும் ஆராதநமாயிருப்பதால் இவனை ஒருவனையே சரணம் புகலாமென்றபடி அமுமுக்ஷுக்கள் பலவத் ப்ரபத்தியைச் செய்வது போல் அகிஞ்சந முமுக்ஷுக்கள் வேறு பலன் வேண்டும் போது தேவதாந்தரத்தையும் சரணமடையலாமென்று கொள்ளல் தகாதென்று ப்ரமாணத்துடன் நிரூபிக்கிறார் அப்போது இதி. முமுக்ஷுக்கள் முடிந்த வரையில் ஏகாந்திநிலை பெற முயற்சி செய்யவேண்டுமென்று கருத்து. त्वयेति வி.பு. 2-14. यतः—எந்த எம்பெருமானிடமிருந்து त्वयापि—உன்னாலும் ஐச்வர்யம் பெறப்பட்டதோ. तं—அவனையே तोषयामि—ஆராதிக்கிறேன். தேவதாந்தரமான உன்னை இல்லை. நித்யநைமித்திக கர்மங்களில் தேவதாந்தரப் பெயரையும் சொல்வதால் அதை ஸந்தோஷப்படுத்துவதாகுமே யென்ன, नाहमित्यादि (2;8.). பெயரைச் சொன்னாலும் உன்னை நான் ஆராதிக்கவில்லை; உனக்கொரு கும்பீடு போடுகிறேன். 'உனக்கு' என்றபோது என்

'स त्वं प्रहर वा मा वा मयि वज्रं पुरन्दर । नाहमुत्सृज्य गोविन्दमन्यमाराधयामि भो ॥'

इत्यादिகளிற்படியே नित्यनैमित्तिकங்களில் விசேஷணமாய்ப் புகுமளவேயொழிய மற்றும் सर्वावस्थैயிலும் देवतान्तरस्पर्शமற்றிருக்கை உசிதம். மோக்ஷத்துக்கு उपायान्तरार्थिகளாய் उपायविरोधिகளைக் கழிக்கவேண்டுவார்க்கும் இப் ப்ரபத்தி பண்ணலாம்: प्राप्तिविरोधिயைக் கழிக்கவேண்டுவார்க்கும் இப் ப்ரபத்தி தானே அமையுமென்று प्रपत्तिயினுடைய सकल-अभिमत-साधनत्वம் இங்கே சொல்லிற்றாயிற்று. இதில் प्रपत्ति उपायविरोधिயைக் கழிக்கும் கட்டளையை श्रीगीताभाष्यத்தில் द्वितीययोजनैயிலே அருளிச்செய்தார்; प्राप्तिविरोधिயைக் கழிக்கும் கட்டளையை गद्यத்திலே அருளிச்செய்தார். இவை இரண்டிடத்திலும் ஒன்றை अनादरித்து ஒன்றை அருளிச்செய்தபடியன்று. இரண்டு இடமும் सर्वाभिमत-साधनமான இவ்வுபாயத்தின் प्रभावத்துக்கு उदाहरणपरம்.

---

கை வேலை செய்யாதபடி சேர்த்துக்கொள்கிறேன். स இதி 2-28 புரந்தர இந்த்ரனே! நீ என்மேல் வஜ்ராயுதத்தை எறிந்தாலும் சரி; உன்னிடம் எனக்கு த்வேஷமில்லையாகையால் எறியாமலிருப்பினும் சரி; நான் கோவிந்தனை விட்டு வேறொருவனை யாராதியேன். இங்கு आराधयामि என்கிற சப்த ஸ்வாரஸ்யத்தை வெளியிடுகிறார் नित्येति.—புகுமளவே யொழிய என்றதால் தேவதாந்தரத்திற்கு பரமாத்ம விசேஷணமாக க்ரஹணம் மட்டுமுண்டு. ஆனாலும் ஆராத்யத்வமில்லை. அந்த நித்ய நைமித்திகாநுஷ்டாந காலத்திலுள்பட எப்போதும் ஏகாந்திக்கு தேவதாந்தர ஸ்பர்சம் தகாது. புரந்தர என்று கூப்பிடுகிறானே; அதுவும் தேவதாந்தர ஸ்பர்சந்தானே யென்னில்– தேவதாந்தர ஆராதகத்வமில்லை யென்றே பொருள். 'आखण्डलद्रविणयाचन-शीलस्य', 'विधिशिवसनकाद्यैः', 'எருத்துக்கொடியுடையானும் பிரமனும்', இத்யாதிப்ரயோகங்களாலும் தேவதாந்தரத்தோடு பேசுவதாலும் தேவதாந்தர ஆராதகத்வம் நேர்ந்துவிடாது. அஹிர்புத்ந்யச்லோகம் त्रिवर्गार्थि விஷயமுமாகும், முமுக்ஷு விஷயமுமாகுமென்பது போல் முமுக்ஷுவுக்கே उपेय[मोक्ष]विरोधिसर्वपापनिवृत्तिக்கான பக்தியோக ஸ்தானத்திற் போல் உபாயமான பக்தியோகாதிகளுக்கு ப்ரதிபந்தகமான பாபங்களை நிவர்த்திக்கக் कृच्छ्र-चान्द्रायणादि ப்ராயச்சித்த ஸ்த்தாநத்திலும் ப்ரபத்தி செய்வதைக் குறிப்பதாகும். ஆக. சரமச்லோகத்தில் सर्वपापेभ्यः என்கிற சப்தத்திற்கு, 'कृच्छ्र-चान्द्रायणादिகளால் போக்கக்கூடிய பாபங்களினின்றும் என்றும்பொருளுண்டாகையால் இரண்டுவாக்யமும் ஸமாநார்த்தகமாகுமென்கிறார் மோக்ஷத்துக்கு இதி. பாஷ்யகாரருக்கும இதே கருத்தாமென்கிறார் இதில் இ. பக்தியை அங்க ப்ரபத்தி பரமாக யோஜிக்கும் போது அங்கிப்ரபத்தியைச்சொல்வதும், அங்கிபரமான யோஜனையில் அங்கத்தைச் சொல்வதும் வேண்டா வென்று ஒவ்வொன்றை அருளினர். அதிகாரிக்குத் தக்கவாறு இரண்டும் பொருளாகுமென்றே திருவுள்ளம். இப்படி ஒன்றே ஸ்வதந்த்ரமும் பரதந்த்ரமு

ப்ரணவம் मन्त्रान्तरத்தில் प्रविशித்து நின்று ஸ்வதந்த்ரமாயும் நிற்குமாப் போலே இப் ப்ரபத்தி अधिकारिविशेषத்தில் भक्त्यङ्गமாய் अधिकार्यन्तरத்திலே स्वातन्त्र्यமுமாயிருக்கை वचनबलத்தாலே सिद्धம் இப்படி नियताधिकारமாக भक्ति-प्रपत्तिகள் विकल्पित्तு நிற்கிற நிலை, 'भक्त्या परमया वाऽपि प्रपत्त्या वा महामते' इत्यादिகளிலே प्रसिद्धம். ஆகையால்

'सम्यग्ज्ञानेन वा मोक्षं गङ्गायां मरणेन वा । प्रणामाद्वाऽपि सुकृतात् भक्त्या वा लभते नरः ॥'

इत्यादिகளிலே साक्षादुपायத்தோடே கூடப் परम्परोपायங்களை எடுத்ததுவும் அவற்றினுடைய प्राशस्त्य—अतिशयம் தோற்றுகைக்காக வத்தனை. (एकशब्दार्थसंग्रह .–)

प्राप्यस्यैव प्रापकत्वं स्वप्राधान्यनिवारणम् । प्रपत्तेर्व्याजमात्रत्वमन्योपायैरनन्वयः ॥ 1

तदङ्गैरप्यसम्बन्धः सर्वसाध्येष्वभिन्नता । इत्थमर्थाः षडाचार्यैरेकशब्दस्य दर्शिताः ॥ 2

---

மாகுமோ என்பதற்கு உத்தரம் ப்ரணவம் இத்யாதி. இப்படி அதிகாரிபேத முண்டாகில் प्रपत्त्या वा என்று விகல்ப்பம் கூடுமோ என்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. நியதாதிகாரம்; வ்யவஸ்த்திதவிகல்ப்பம் கூடும். அவ்யவஸ்த்திதவிகல்ப்பமில்லை. பக்திக்கு பரமத்வமாவது தன்னைப் போல் ஸாத்ய-உபாயம்வேறொன்றில்லாமை. ப்ரபத்தியானது பக்தி ஸ்தாநத்தில் ஈச்வரனை நிறுத்தும் வ்யாபாரமே யாகையால் பக்திபண்ணுதவன்விஷயத்தில் ஈச்வரனுடைய இரக்கமே அநுக்ரஹகாரண மென்று தெரிவதால் பக்திதுல்யோபாயத்வம் ப்ரபத்திக்கில்லையென்பது ஸித்தமானாலும். கங்காமரணாதிகளுக்குபக்திதுல்யத்வம் தெரிகிறதே யென்ன, அதற்குக் கருத்தருளுகிறார் ஆகையால் இதி. अनन्यासत्तோடு भरानुष्ठानம்சேராதாகையால்இங்குவிகல்ப்ப ஸித்தி,அவ்வாறாகாமையாலும் नान्यथा प्राप्यः என்று வேறு உபாயத்தை நிஷேதித்திருப்பதாலும் கங்காமரணாதிகள் பக்திநிரபேக்ஷமாக உபாயமாகமாட்டா. ஸம்யக்ஜ்ஞாநமாவது—உபதேச மூலமான சேஷசேஷித்வஜ்ஞாநம்; ஸுக்ருத ப்ரணாமம் கீழே கூறப்பெற்றது. भक्त्या वा என்ற விடத்தில் பக்தி பதத்தாலே பக்தியோகத்தைக் கொள்வதானால் கங்காமரணாதிநிரபேக்ஷமான பக்தியாலாவதென்றுபொருள். वाசப்தம் ப்ரபத்திபரமுமாம். ஆறாவது யோஜனை முடிகிறது.

இவ் ஆறு யோஜனைகளையும் ஸங்க்ரஹிக்கிறார் प्राप्यस्यैवेति. ப்ராப்யமும் ப்ராபகமும் ஒன்றென்பது முதல்யோஜனை. ப்ரபத்தி பண்ணுகிற தனக்குக் காரயிதாவான பகவானுக்குப் போல் ப்ராதாந்யமில்லை யென்பது 2 வது. ப்ரபத்தியும் வ்யாஜமாத்ரம்; பகவானோடு துல்யமான உபாயமன்றென்று மூன்றாவது. பக்தியோகத்தைப் போல ப்ரபத்திஸ்தலத்தில் ஈச்வரனுக்கு உபாயாந்தராபேக்ஷையில்லை யென்பது நான்காவது. பக்தியோகஸ்தலத்தில் ஈச்வரன் அதற்கு ஸஹகாரிகாரணமாக வர்ணாச்ரமதர்ம-सत्चिந்தநாதிகளை யபேக்ஷிப்பதுபோல் ப்ரபத்திஸ்த்தலத்தில் அபேக்ஷிப்பதில்லை யென்பது ஐந்தாவது. ஸாத்யமாக விதிக்கப்பட்ட गुरुधर्मங்கள் அந்தந்த பலத்திற்காக எவ்வாறாயினும் அவற்றின் ஸ்த்தாநத்தில் ப்ரபத்திமூலமாக ஈச்வரன் ஒரு

केचित्त्विहैकशब्दार्थं शरण्यैक्यं प्रचक्षते । विशिनष्टि तथाऽपि श्रीर्गुणविग्रहवत् प्रभुम् ॥ ४

ईश्वरी सर्वभूतानामित्थं भगवतः प्रिया । संश्रितत्राणदीक्षायां सहधर्मचरी स्मृता ॥ ५

एकं जगदुपादानमित्युक्तेऽपि प्रमाणतः । यथाऽपेक्षितवैशिष्ट्यं तथाऽत्रापि भविष्यति ॥ 5

---

வனே யாவானென்பது ஆறுவது. இப்படி ஆசார்யர்களால் ஆறு அர்த்தங்கள் உபதேசிக்கப் பெற்றன.

एकं शरणं व्रज என்று ஒருவனையே சரண்யனுகக் கொள் என்றதால் சரண்யன் ஒருவனே யென்று ஏகசப்தார்த்தமாகலாமென்பர் சிலர் இதையு மிசைந்து இதனுல் பிராட்டிக்கு சரண்யத்வமில்லை யென்று ஸித்திக்காதென்கிருர் केचित्तु இதி. சிலர் इह—இந்த சரமச்லோகத்தில் शरण्यैक्यं சரண்யன் ஒருவனே யென்பதை ஏக சப்தத்தின் அர்த்தமாகச் சொல்லுகிருர். केचित् என்கிற சொல்லால்—வேறு பல பொருள் கொள்ளக்கூடிய இவ் ஏக சப்தத்திற்கு शरण्यैक्यம்பொருளென்றுசொல்லிப் பிராட்டியைப் புறக்கணிக்க ப்ரயாஸை வீணென்றறிவித்ததாம். பிராட்டியும் शरण्याயாகலாம்; एक வென்பது விரோதிக்காதென்பதற்கு விரிவு विशिनष्टीத்யாதி. तथापि—அப்படியானுலும். श्रीः—பிராட்டியானவள் गुणविग्रहवत् உபாயத்வோபயுக்தமான குணங்களும் திருமேனியும் போல் प्रभुं विशिनष्टि—எம்பெருமானுக்கு விசேஷணமாகிருள். விசேஷணங்கள் எவ்வளவிருந்தாலும் ப்ரதாநமான விசேஷ்யம் ஒன்றுனபடியாலே ஐக்யமும் தகும். शरण्यपदத்திற்கு அது बाधकமாகாது. விசேஷணமாவதால் ரக்ஷோபயோகித்வந்தான் கிடைக்கும்; அது புருஷகாரத்வமேயென்னில், பகவத்ப்ரபத்திக்குப் பிறகான உபயோகப் புருஷகாரத்வமாகாது; உபாயத்வமே. பிராட்டிக்கு சரண்யத்வமுண்டென்பதில் ப்ரமாணங்களைக் கூறுகிருர் ईश्वरीதி. ईश्वरीं सर्वभूतानां त्वामिहोपह्वये श्रियम् என்று பகவானைப் போல் இவள் ஈச்வரத்தன்மையுள்ளவளாக ஓதப்பட்டாள் ईश्वरीபதத்திற்கு ईश्वरपत्नी என்ற பொருள் இங்கே ஸ்வரஸமாகாது. प्राणेश्वरीम् (यादव 13 1 टि.) என்றவிடத்திற் போலே साधुत्वம் ஸம்மதமென்பதே முடிவு. ஆக ஈச்வரலக்ஷணமான மோக்ஷோபாயத்வம்குணவிக்ரஹவிலக்ஷணமாக இவளுக்கும் ப்ராப்தம்; தகும் भगवतः प्रिया என்றதால் ஐகரஸ்யம் தெரிவதால் द्वैराज्यदोष மில்லை யென்றதாம். ஈச்வரத்வ மிருந்தாலும் நிக்ரஹஸாக்ஷாத்காரணத்வமில்லை யென்பது போல் मोक्षरूपफलोपधायकत्वமில்லை யென்பதற்கு ப்ரமாணமில்லை: அதற்கு மாருக साधकமே யுள்ளதென்கிருர் संश्रितेति. ஆச்ரிதருடைய ரக்ஷணமாகிற தர்மத்தில் தீக்ஷைபெற்றிருப்பது காரணமாக ஸஹதர்மசரியாக 'लक्ष्म्या सह......दक्षया'. 'सहधर्मचरी तव' என்ற ஸ்ம்ருதிகள் சொல்லுகின்றன பரம்பரயா காரணமாகில் लक्ष्म्या என்பதே போதும் सह என்பது வேண்டா. एकम् என்று ஸ்பஷ்டமாகச் சொன்ன பிறகு விசேஷணத்தைச் சேர்க்கலாமோவென்ன உத்தரம் एकमिதி. 'एको ह वै नारायण आसीत्'. 'एकमेवाग्र आसीत्' என்று एक பதமிருந்தாலும் ஏக

एकोपास्तिविधानेऽपि गुणादीनां यथाऽन्वयः । तथैकशरणव्रज्याविधानेऽप्ययमनुमन्ताम् ॥ 6

यथा गुणादिवैशिष्ट्ये सिद्धोपायैक्यमक्षतम् । एवं पत्नीविशिष्टत्वेऽप्यभीष्टं शास्त्रचक्षुषाम् ॥ 7

प्रभाप्रभावतोर्यद्वत् एकोक्तावितरान्वयः । एवमन्यतरोक्तौ स्यात् सहवृत्त्यभिधानतः ॥ 8

---

अचेतनविशिष्टं उपादानं என்று சில விசேஷணங்களைச் சேர்க்கிறோம்; அவை யபேக்ஷிதமாயிருப்பதால், ஆக அங்கு அபேக்ஷிதத்தோடு சேர்க்கை போலே तथापि— இங்கும் विशिष्टत्वம் ப்ரமாணபலத்தால் ஸித்திக்கும். உலகுக்குத்தனி ப்ரஹ்மம் காரணமாகாதது போல்தனிப்ரஹ்மம் உபாயமாகாது பலனளிக்கா தென்பதேன் என்ன அருளிச்செய்கிறார் – तमेवैकं जानथ आत्मानम् இத்யாதி வாக்யங்களில் ஒருவனுக்கே உபாஸநத்தை விதித்த போதிலும் அந்தந்த வித்யாப்ரகரணத்தில் ஓதப்பெற்ற गुणविग्रहव्यापारங்களுக்கு எப்படி உபாஸநத்தில் அந்வயமோ. அப்படியே இந்த ஏகசரணகதி विधान வாக்யத்திலும் குணாதிகளுக்கும் ஸ்ரீக்கும் அந்வயம் உளது. गुणங்கள், திருமேனி, பிராட்டி யென்கிற விசேஷணங்கள் ஈச்வரனுக்கு உபாயத்வ ஸித்திக்காக அபேக்ஷிக்கப்படுகின்றனவே யாகும். ஸித்தத்வம் உபாயத்வமிரண்டுமுள்ள गुणादिகளைச் சேர்த்தாலும் 'सिद्धोपाय'மொன்று என்பதற்கு எப்படி ஹானியில்லையோ, அப்படி பத்நீ விசிஷ்டனை உபாயமென்றாலும் सिद्धोपायैक्यம் கூடுமென்பது சாஸ்த்ரத்தைக் கண்ணாகக் கொண்டவர்களின் கொள்கையாகும். குணாதிகளின் உபாயத்வத்திற்கும் ஈச்வரனிடமுள்ள உபாயத்வத்திற்கும் வாசியுண்டென்னில்— இங்கும் प्राधान्यम् अप्राधान्य'மென்கிற வாசியுண்டு. ஸ்த்ரீபுருஷர்களிருவரும் யாககர்த்தாவாயிருக்க ஏகன் யஜமாநனென்கிறாப் போலும் இந்த சாஸ்த்ரம் பொருந்தும். சிற் சிலவிடங்களில் ஒருவரைமட்டும் கூறியிருந்தாலும் இருவரையும் கொள்ள வேண்டுமென்டதற்கு சாஸ்த்ரஸம்மத த்ருஷ்டாந்தத்தையே கூறுகிறார் प्रभेति. ப்ரபை யிராமல் ஸூர்யன் வஸ்து ப்ரகாசத்திற்குக் காரணமாகான். அதனால் ப்ரபையைச் சொல்லாத விடத்திலும் அதைச் சொன்னதேயாம். ஸூர்யனிராமல் ப்ரபை தனித்திராது. அதனால் ப்ரபையைச் சொன்னவிடத்தில் ஸூர்யனையும் சொன்னதாம். அதனால் 'संनियोगशिष्टानां सह वृत्तिः' என்கிற ந்யாயத்தாலே 'माया वा एषा नारसिंही सर्वमिदं सृजति सर्वं इदं संहरति सर्वमिदं रक्षति என்று ந்ருஸிம்ஹதாபநீயத்திலும், 'एको ह वै नारायणः' என்று महोपनिषत்திலும் தனித்தனியே சொன்னாலும் இருவரையும் கொள்ளவேண்டும் ஸூர்யனுக்கு வெளிவஸ்துக்களோடு ஸம்பந்தம் இடையிற் ப்ரபையைச் சேர்க்காமல் சொல்லவாகாது. ஆக ஸம்பந்தத்தில் ப்ரபை சேர்ந்ததால் அதுவும் காரணமாகும், ஈச்வரனுக்கு ரக்ஷ்யவஸ்துக்களோடு ஸம்பந்தம் க்ருபாவிஷயத்வந்தானே, அதில் பிராட்டி சேராமையால் அவள் காரணமாகாளென்னில் — ஸங்கல்ப்பமூலம் காரணமாகாத ப்ரபைக்கு ஸூர்யாதிகளின் ஸம்பந்தத்திற் சேராமல் காரணத்வம் சொல்லவாகாது. ஸங்கல்ப்ப மூலமாகிற பிராட்டிக்கு அது வேண்டுவதில்லை.

स्मरन्ति चैनां मुनयः संसारार्णवतारिणीम् । ऊचतुः स्वयमप्येतत् सात्वतादिषु तावुभौ ॥ 9

उपायोपेयदशयोर्द्वयेऽपि श्रीः समन्विता । इष्टा च शेषिणि द्वन्द्वे शेषवृत्तिर्यथोचिता ॥ 10

---

ஸூர்யனுடைய உஷ்ணஸ்பர்சம் ஸம்பந்தத்தில் சேராமலும்விசேஷணமாய் வஸ்து சுத்திக்குக் காரணமாகிறது; அது போலும் பிராட்டி காரணம் விசேஷணமான गुणविग्रहங்களுக்கும் மேலாக முக்ய சரண்யத்வமும் லக்ஷ்மிக்கென்பதில் மற்ற ப்ரமாணமுமுண்டென்கிறார் स्मरन्तीति. गुणादिகளுக்கு ஈச்வரத்வமில்லை; இவளுக்கு அதுவுண்டென்கிற வாசியால் சரண்யத்வமிருப்பதே தகும் स्मरन्ति मुनयः என்றவிடத்தில் 'வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும்' என்பது முதலான அருளிச்செயல்களும் கருதப்பெறும். மோக்ஷ விரோதி பாபத்தை விட்டு மோக்ஷோபாய விரோதிபாபத்தை என்று சொல்லச் செல்வதென்? அங்கே நஞ்ஜியர் முதலாகஎல்லோரும் ப்ராப்திவிரோதிபாபங்களையும் போக்கிப் பலனும் அளிப்பவள் இவளென்றே உரைத்திருக்கிறார்களென்பதை முன்னமே குறித்தோம். परिपूर्णानुभवप्रदानसंकल्पமும் இவளிடமிருப்பது உரையில் ஸ்பஷ்டம். लक्ष्मीतन्त्र த்திலும் उपेयायास्तव प्राप्त्यै त्वामुपायं तथा वृणे । प्लुष्य मे दुरितं सर्वं पुष्य मे त्वद्गतां धियम् என்று எம்பெருமானிடமும் இவளிடமும் ப்ரார்த்தனை ஒரேவிதமாக ஸ்பஷ்டமாயுள்ளது. பலன் தர வரும் அவனை விலக்கிஇவள் முன்னேயருள்கிறாளென்றதால் ஸங்கல்பம் ஒரேவிஷயமாகுமென்பதும், முன் இவள் ஸங்கல்பிக்கக் கண்டு அவன் ஸங்கல்ப்பிப்பதும் தெரிகிறது. विभुवान ஈச்வரனுக்கு अघटितघटनासामर्थ्यத்தாலே अणुत्वம் போல் अणुवान ச்ரீதேவிக்கு विभुत्वம் அதே ஸாமர்த்தியத்தாலென்று பிறர் சொன்னதில் दृष्टान्त विषयம்(चतुः श्लो४ ) भाष्यத்தின்படி भाष्यविरुद्धம்; ச்ரீவிபுத்வப்ரமாணத்தைப் பாராமையால் சொன்னதென்று கொள்வதே ப்ராமாணிகபத்ததி; அதுபோலிங்குமாகுக.'अपवर्गप्रदां रम्यां संसारार्णवतारिणीम्। क्षिप्रप्रसादिनीं लक्ष्मीं शरण्यां अनुचिन्तयेत्','परनिर्वाणदायिनी, 'याचः परं प्रार्थयिता प्रपद्येत् नियतः श्रियम्' என்று ரச்யபாதிகளால் त्रिवर्गफलप्रदत्वं मोक्षप्रदत्वं पुरुषकारत्वமெல்லாம் போல் சரண்யத்வமும் சொல்லப்பட்டது. ऊचतुरिति. एतत्—இவள் மோக்ஷப்ரதை யென்பதை सात्वतादिषु—ஸாத்வதஸம்ஹிதைமுதலானவற்றில் तौ उभौ திவ்யதம்பதிகளிருவரும் स्वयमपि தாமே நேராகவும் சொன்னார்கள். (सात्वतसं— . - -३४.) ''सत्कारैरनुविज्ञेयं प्रकृतिः प्राकृतैरहम् । यतोऽहमाश्रयत्यस्याः मूर्त्तेर्म्येतदात्मिका । यामालम्ब्य सुखेनेमं दुस्तरं हि गुणोदधिम् । निस्तरन्त्यचिरेणैव व्यक्तध्यानपरायणाः'' என்று ச்ரீபதிருத்யானத்திலே प्रकृतिशब्दवाच्यையானபிராட்டியையும் தன்னையும் துல்யமாக வ்யக்தமாகச் சேர்த்து த்யானம் செய்பவருக்கு எளிதில் மோக்ஷமென்றான் लक्ष्मीं मां च सुरेशेशं द्वयेन शरणं गतः । मल्लोकमचिरात् लब्ध्वा मत्सायुज्यं स गच्छति'' என்றுமுளது. மற்றும் லக்ஷ்மீதந்த்ர வாக்யமும் கொள்வது. இவ் வசநங்கள் போல் சரணாகதிமந்த்ரமான द्वयமும் இதற்கு ப்ரமாணமென்கிறார் उपायेति. श्रीः=பிராட்டி द्वयेऽपि—த்வய மந்த்ரத்திலும் உபாயதசையிலும் உபேயதசையிலும் समन्विता—நன்கு அந்வயம்

अतोऽनन्यपरानेकश्रुतिस्मृत्यनुसारतः । पत्नीविशिष्ट एवैकः प्रपत्तव्य इहोदितः ॥ 11

---

பெறுகிருக்கிறுள். ஸ்வரூப-फलसमर्पणங்களில் அந்வயம் அவச்யமாதலால்உத்த ரார்த்தில் சொல்லும் ரீதி பூர்வார்த்திலுமென்கிறுர் दृष्टेति. शेषिणि-சேஷிகளான दम्पत्योः-இருவரிடத்திலும் यथोचिता-தக்கவாறு शेषवृत्तिः-கைங்கர்யம் दृष्टा-ஸர்வ ஸம்மதமாயிறது. यथोचिता என்கிறபதத்திறுல் இருவருக்கும்பொதுவான கைங் கர்யம்போலே அவரவர்க்கு ப்ரத்யேகமான கைங்கர்யமிருந்தாலும் கைங்கர் யம் இருவரைக் குறித்தாவது போல் இருவருக்கும் पुनःपापरुद्धप्रीतिफोपनिवृत्ति யாயிற மோக்ஷத்திற்கான ஸங்கல்பத்தில் வாசி யிருந்தாலும் சரணுகதி இருவரைக் குறித்தாவதற்குத் தடையில்லை யென்று குறிக்கப்பெற்றது.சரண் யைக்யம் பொருளானாலும் பத்நீக்கு சரண்யத்வம் बाधि க்கப்படாதென்கிற அம்சத்தை நிகமநம் செய்கிறுர் अत इति. अतः என்பதன் விவரணம் अनन्यपरेति. வேறு தாத்பர்யம் சொல்ல வாகாத கீழ்க்கருதிய பல ச்ருதி ஸ்ம்ருதி பாஞ் சராத்ராதிகளை யநுஸரித்து इह இந்த சரமச்லோகத்திலும் पत्नीविशिष्ट एव— பிராட்டியோடு சேர்ந்தவனுகவே एकः ஒருவனுய் प्रपत्तव्यः—சரணுகதிக்கு இலக்காக उदितः சொல்லப்பட்டானுவான். இத்தனை ப்ரமாணங்களைக் காட்டினுலும் நாங்கள் இசைந்ததற்குமேல் ஒன்றும் ஸித்திக்கவில்லை யென்டர் சில ஏகதேசிகள். ईक्षत्यधिकरणத்திலே முக்யமான ईक्षणादिகளைக் கொண்டு सृष्टियானது ப்ரக்ருதிபரமாகாது விலக்ஷணப்ரஹ்மபர மென்று बादरायणர் ஸத்தாபித்ததைக் கேட்டு ஸாங்க்யன், 'दृष्टिपतीक्षाः शालयः என்ற விடத்திற் போலாகுமென்று ईक्षतिயை நிர்வஹித்து விட்டேனே' என்று சொல்வது போலிருக்கிறது 'आर्तानामाशुफलदा இத்யாதிகளைப் போலே संसारार्णवतारिणी இத்யாதிகளை நிர்வஹித்து விட்டோமே' என்று இவர்கள் சொல்வது. पूर्वोत्तर मीमांसैகளில்பெரும்பாலும் प्रत्यधिकरणமும் பூர்வபக்ஷியும்வேதவாக்யங்களை நிர்வ ஹிக்காமல் அப்ரமாணமென்பதில்லை; அதனுல் அது ஸித்தாந்தமாயிடுமா?

தத்துவத்ரயாதிகாரத்திலே सर्वेश्वरன் सर्वावस्थैயிலும் सपत्नीकனுகிறு னென்றருளினுர். सिद्धोपायशोधनाधिकारத்திலே 'பிராட்டி புருஷகாரப்ரபத்தி யிலேயே விஷயம்;மோக்ஷார்த்த சரணுகதியில் விஷயமாகாளென்ற வாதத்தை நிராகரித்து विशिष्टो विषयोऽत्र नः என்று நிரூபித்தார். த்வயாதிகார ததில் பிராட்டி விஷயமானுலும் விசேஷணமாகாமல் உபலக்ஷணமாக வேண்டும்; चरणौ என்றவிடத்தில் அந்வயமுண்டாகில் த்விவசனம் தகாதே, பஹுவசனம் வேண்டுமே; இப்படி பிராட்டிக்கும் உபாயத்வமிசைந்தால் अनन्योपायत्व- भंगமும் வருமே யென்பதை நிராகரித்துப் पुरुषकारமாயிருப்பது போல் शरण्यै யுமாகிறுளென்று ஸ்தாபித்தார். முமுக்ஷுப்படிவ்யாக்யானமான तात्पर्यदी- पिकैயிலும், "सर्वथा वेदान्ताचार्याणां द्वेधा श्रिय आश्रयणमभिमतं पुरुषकारतया विशेषणतया च।...आद्यायाः प्रपत्तेराश्रयणविरोधि पापनिवर्तनं कार्यम्; द्वितीयायास्तु भरस्वीकार-मोक्ष- प्रदानादिः, तदनुकूलो व्यापारो वा" என்று ஸ்ரீதேசிகஸம்ப்ரதாயமும், 'आकरानुयायिनां तु उभयथाऽऽश्रयणमभिमतम्। तस्य च कार्यं न मोक्षप्रदानम्......तदौपयिक ज्ञानशक्त्याद्युद्बो॰

पुरुषत्वमनुमन्तृत्वं प्रधानप्रेरकत्वं वात्सल्याद्युद्गुणोपेतत्वमित्यादीनि श्रियः कार्याणि । तत्र प्रपत्त्यधिकार्यसाधारणानि प्रयोजकत्वेनाश्रीयन्ते" என்று ஏகதேசிஸம்ப்ரதாயமும் பிரித்துரைக்கப் பெற்றன. பிராட்டி விசேஷணமானாலும் अनन्यासाध्यत्व மில்லையென்றும் விசேஷணமாகைக்குப் பலன் साध्योपायतुल्यமான प्रसादकत्व மென்றும் சொல்லப்பட்டது. இதுவுமில்லை யென்றால் उपायतोक्तिகளெல்லாம் அடியோடு பொருளற்றனவாகு மென்றும் சொன்னார். அதனின்றும் வாக்யங்களுக்கு ஸ்வரஸார்த்தம் விடப்பட்டது வ்யக்தம். இப்படி ப்ரமாண ஸம்ப்ரதாயஸூக்தி ஸ்வாரஸ்யத்தை ஏன் விடவேண்டு மென்பதே இந்த அதிகாரத்தில் ச்ரீதேசிகன் அருள்வது. த்வயோச்சாரணமே போதும் ப்ரபத்தி வேறில்லை யென்றும், ப்ரபத்தியில் பிராட்டி விஷயமாகாளென்றும், விஷயமானாலும் விசேஷணத்வமில்லையென்றும், விசேஷணமானாலும், சரணாகதியுத்தேச்யத்வமில்லை யென்றும் பலவிதம் ஏகதேசிகள் சொல்வதெல்லாம் ச்ரீதேசிகஸம்ப்ரதாயத்தைவிட வேறேயாகுமே. चतुश्श्लोकीभाष्यத்திலே (3) "परिपूर्णब्रह्मानन्दसंदोहस्तु भगवतः स्वस्यैव वा सपत्नीकस्य चेति यथाप्रमाणं भवतु" என்றாரே யென்னில்—मोक्षार्थप्रपत्तिविषयत्वம் வரையில் இசைவதே இவர்களுக்கு அரிதாகிறதே; அதுவரைக்கும் வந்தால் போதுமென்பதிலே நோக்கு संप्रदान्वयம் லக்ஷ்மியிலுமுளதே. स्वस्यैव वा लक्ष्म्या वा என்று சொன்னால் தனியாகப் பிராட்டி மோக்ஷகாரணமென்று கூறினதாகும். எம்பெருமானுக்கு अघोरமாயிருந்து ஸங்கல்ப்பிக்கிறாளென்று अनन्योपायत्वஸ்தாபனத்திற்காக இவ்வாறு அருளினார் இதையே முடிவாகச் சொன்னால் இதே ஸித்தாந்தம்; ஸர்வ ப்ரமாண பூர்ணார்த்தவாபம் இப்போது. ப்ரபத்திக்குமுன் போல் பின்னை பிராட்டியின் செயல்களையும் புருஷகாரத்வத்திலேயே சேர்ப்போமெனில்— அவளுடைய மோக்ஷப்ரதானஸங்கல்ப்பமும் பகலத்ஸங்கல்ப்பஹேதுவாய்ப் புருஷகாரத்வத்தில் சேரலாமே. இஷ்டாகத்தியென்னில், பேரில் விவாதமே யன்றிப்பொருளில்விவாதமில்லையென்றதாயிற்று உபாயத்வமென்றால்மோக்ஷப்ரதானஸங்கல்பாச்ரயத்வமே யென்பதுமில்லை. தர்மமாக விஹிதமானப்ரபத்திமுதல் மேல்வருமவையெல்லாம் உபாயத்வாச்ரயமே, ஆகையால் இவ்வளவிசைந்தால் விவாதத்தைவிடலா மென்பது. लक्ष्मीतन्त्रத்தில் प्रपद्यन्ते मां नित्यं देवं वा पुरुषोत्तमम् என்று தொடங்கிப் பிராட்டியைமட்டும் ஆச்ரயிப்பதைச் சொல்லிற்றே. அதென்னவெனில்-அவளை மட்டுமாச்ர யித்தாலும் பெருமாள் தான் பலனை ஸங்கல்ப்பிப்பதென்றார் तात्पर्यदीपिகையில். உண்மையில் என்னை யாச்ரயித்தாலும் பெருமானையாச்ரயித்தாலும் அங்காங்கிகளில் ஒன்றையும் விடாமல் ஒரேவிதமாய் ப்ரபத்தி செய்யவேண்டு மென்பதே இப்ரகரணார்த்தம்; ஒருவரைமட்டும் ஆச்ரயிப்பதில் நோக்கில்லை, புருஷகாரத்வம்முதலாக மோக்ஷம் வரையிலான எல்லாப் பலனுக்காகவும் சேர்ந்து இவளிடம் ப்ரபத்திசெய்து எம்பெருமானிடம்மட்டும் பிறகு ப்ரபத்தி செய்தாலென்ன வெனில் —செய்க, இவளுக்கும் शरण्यत्वம் உண்டென்பதே நமக்குவிவக்ஷிதம்.

இங்குற்ற शरणशब्दத்துக்கும் द्वयाधिकारத்திற் சொன்ன பொருளை அநுஸந்தி க்துக்கொள்வது. இந்த शरणवरणம் அர்ஜுநனைக் குறித்து उपदेशिக்கப்பட்ட தேயாகிலும் 'अनालोचितविशेष-अशेष-लोकशरण्य' என்கிறபடியே ஸர்வவிஷய

---

வாசியிராமையால் ஒரே ப்ரபத்தியில் இருவரையும் கொள்வதாம் आग्नावैष्णव யாகத்தில் परम-अवमदेवतैகளிருவரின் ப்ரீதிகளைப் பெறக் காம்யாநுஷ்டானம். पातिव्रत பாகத்தில் विशेषण विशेष्यभावத்திலும் उभयप्रीतिயே. மேலே अत्रियும் लक्ष्मीनारायणाधारा भविता ते मनःस्थितिः என்று अनसूयैக்கு (लक्ष्मीतन्त्रத்தில்) உபதே சிக்கிறார். இவ்வளவு ஸ்பஷ்டமாயிருப்பதால் இதே ப்ராமாணிகமென்றபடி நிக்ரஹஸங்கல்பமிராதவள்விஷயத்திலே நிக்ரஹநிவ்ருத்திக்கான ப்ரபத்தி செய்யக்கூடுமோ என்னில்—லக்ஷ்மீதந்த்ரத்தில் दैवाद्वा यदिवा मोहादपायस्य परिप्लवे । भजमानोऽथ तावेव लक्ष्मीनारायणावुभौ என்று எந்த அபராதத்திற்கும் பொதுவாக இருவரை யாச்ரயிப்பது விதிக்கப்பட்டது. அதனால் எதற்கும் இருவருடைய அநுக்ரஹம் வேண்டுமென்பது ஸ்பஷ்டம். प्रियाय मम विष्णोश्च देवदेवस्य शार्ङ्गिणः । मनीषी वैदिकाचारं मनसाऽपि न लंघयेत् என்று ஆஜ்ஞாரூப மான சாஸ்த்ரத்தின்படி நடந்தால் இருவருக்கும் ப்ரீதி என்பதால் மீறினால் அப்ரீதி இருவருக்கும் ஸித்தம். நிக்ரஹம் செய்யாமற் போனாலும் திருவுள்ளம் நொந்திருக்கும். அதனால் ஈச்வராதி மூலமான நிக்ரஹத்திற்கு இடமுண்டா கிறது. ப்ரபத்தியால் இவள் ப்ரீதி யடைந்தால் ஸர்வநிக்ரஹ நிவ்ருத்தி. இதெல்லாம் ईशत्वत्करुणा என்கிற ச்லோகத்திலும் வ்யக்தம். मोक्षप्रदानसंकल्पம் ஒருவருக்கா இருவருக்கா என்கிற விசாரமெதற்காக? ப்ரபத்தியால் இவள் அநுக்ரஹம்; அதனால் எங்குள்ள நிக்ரஹத்திற்கும் நிவ்ருத்தி. पुण्यरूपनिग्रह மிவளிடமே யுண்டு தாயதந்தைகளுக்குள் சேஷசேஷிभावமிருந்தாலும் ப்ரஜைகளை இருவருமே அநுக்ரஹிப்பவர்கள். தாய் அநுக்ரஹிக்கும் போது அவளுக்கு ஸாமர்த்தியமில்லை யென்ற நிரூபணம் ப்ரஜை செய்தால் அதுவே அபராதமாகும். ஆக லக்ஷ்மீதந்த்ராதிகளின்படி மோக்ஷார்த்த ப்ரபத்தியு மிருவரைக் குறித்தேயாகும் அதனால் உபாயத்வமும் இருவரு க்கே. अस्ति कर्मद्वयफलदे पत्यौ कृत्यद्वयं श्रियः । निग्रहाद्वारणं काले संधुक्षणमनुग्रहे என்றுதானே அருளினரென்னில்— பர்த்தாவினிடம் செய்வது இவ்விரண்டே. ஆச்ரிதரிடம் செய்வதான अनिष्टनिवृत्तिसंकल्पமும் மோக்ஷத்திலுள்பட மேன்மேல் கைங்கர்யாதி அநுக்ரஹமுமிதனால் விலக்கப்படா.

ஏகசப்தார்த்தம் முடிந்தது शरणं व्रज என்பதற்குப் பொருள் கூறுகிறார் இங்கு இதி. சரணசப்தம் ரக்ஷகாதி அர்த்தத்தை விட்டு உபாயரூப அர்த்த த்தைச் சொல்லும், அதனின்று எம்பெருமானுக்கு ஸாத்யோபாய ஸ்த்தாநா பத்தி சொன்னதாம் இத்யாதிகளைக் கொள்வதென்றபடி. சரணாவரண மென்ற பதத்தினாலே व्रज என்ற சொல்லுக்கு ப்ரார்த்தனையும் பொருளென்று குறிக்கப்பெற்றது. அர்ஜுநனைக் குறித்துச் செய்த உபதேசமாகையால் ஸர்வஸாதாரணமன்றென்று தெரிகிறதே; 'यजेत स्वर्गकामः' என்றாற்போலே

மென்னுமிடம் श्वेताश्वतरश्रुतिप्रसिद्धम्. 'कृष्णं धर्मं सनातनम्', 'शरण्यं शरणं च त्वाम्' 'योगो योगविदां नेता, अमृतं साधनं साध्यम्' इत्यादिகளிலும் सङ्कोचமில்லாமையாலே सर्वविषयत्वம் विवक्षितம். இப்படி இவன் शरणமாக वरणीयனும் போதைக்குத் தான் अनन्यशरणனுகையே வேண்டுவது.

'व्रज' என்கிற शब्दமும் प्रपद्ये என்கிறவிடத்தில் அறுதியிட்ட सपरिकर—आत्मनिक्षेपத்தையே சொல்லுகிறது. அவ்விடம் अनुष्ठाताவினுடைய अनुसन्धानமானபடியாலே उत्तमனுயிற்று. இவ்விடம் 'शिष्यस्तेऽहं शाधि माम्' என்று अभिमुखனுக நின்றவனைக் குறித்து विधिக்கிறதாகையாலே मध्यमனுயிற்று. இவ் आनुकूल्यसङ्कल्पादि—अङ्गान्तरங்களும் இங்கே सूचितமானபடியை द्वयத்திற் போலே उचितपदங்களிலே கண்டுகொள்வது. 'सकृत् कृतः शास्त्रार्थः' என்கிற निर्णयத்துக்கு उपासनத்திற்போலே இங்கு आवृत्ति வேண்டும்படி अपवादமில்லை. இவ்வர்த்தம் 'सकृदेव प्रपन्नाय' इत्यादिवचनத்தாலும் सुप्रतिष्ठितம். இப்படி महोदारனுன सर्वशक्ति

---

ப்ரதம புருஷனில்லையே யென்று சங்கிக்கவேண்டா. छान्दोग्ये तत्त्वमसि என்று ச்வேதகேதுவைக் குறித்து உபதேசமிருந்தாலும் அது பொதுவாகிறதே. இது பொதுவென்பதற்கு ப்ரமாணங்களும் உள. ச்வேதாச்வதர வாக்யம் 'सर्वस्य शरणं सुहृत्' என்றதாம். धर्मं धर्मस्थानापन्नम् । ஸர்வ ஸாதாரணமாகில் பக்தியோகாதிகாரியும் செய்யலாமே யென்பதற்கு உத்தரம் இப்படி இத்யாதி. ஆகிஞ்சந்யாநுஸந்தாநம் ப்ரபத்திக்கு அங்கமாகையால் गुरूपायाधिकारि இதைச் செய்யவாகாது. ஆக अनन्यशरणत्वरूप ஆகிஞ்சந்யம் வேண்டும். வரணீயனும் போதைக்கு= வரணீயனுகைக்கு; உத்தமன்—உத்தம புருஷன். மத்யமன்—மத்யம புருஷன். आनुकूल्यसंकल्पेति. அங்கே ஸ்வாமியைச் சொல்லும் ஸ்ரீமந்நாராயணபதத்திற் போல், இங்கே माम् என்றவிடத்தில் முதலிரண்டங்கங்களும், மற்றவை शरणं व्रज என்றவிடத்திலும் கருதப்பெறு மென்றபடி. கீதையில் கீழே விதிக்கப்பட்ட பக்தியோகமானது यावदायुषम् அநுவர்த்திக்கப்பட வேண்டியதாயிருந்தது. இங்கும் அதை விலக்கவில்லையாகையால் ஆவ்ருத்தி யுண்டென்ன வேண்டாவென்றறிவிக்கிறார் सकृदिति. ஆவ்ருத்திக்கே வசநம் வேண்டும். அநாவ்ருத்திக்கு அது வேண்டா. पौर्णमास्यां यजेत, अमावास्यायां यजेत இத்யாதிகளில் पुनःपुनः யாகாதிகளைச் செய்வதில்லையே. நிர்ணயத்துக்கு என்பதற்கு அபவாதமென்ற சொல்லில் அந்வயம். கீதையில் सकृत्பதமிராமற் போனாலும் ஸ்ரீராமாயணத்திலுள்ளதென்கிறார் இவ் இதி. सकृदेव प्रपन्नाय என்றவிடத்தில் सकृदेव என்பது எதற்கு? प्रपन्नाय என்றாலே ஒருதரமென்று தெரியுமேயெனில்—கீழே ஸுக்ரீவாதிகள் राघवं शरणं गतः என்று சொல்லி வந்த விபீஷணனை விலக்க முழு முயற்சி செய்தனர். அவனால் நமக்கு அபாயமில்லை அஞ்சவேண்டா என்று ராமன் அருளிய பிறகும், 'ஏதோ ஒருதரம் சொன்னான்; அவன் செய்த சரணாகதி போதாதென்று ஸுக்ரீவன் கருதுகிறானென்று கொண்டு सकृदेव என்றார், இதனால் அவன் முன் செய்ததே போதும்; அதில் குறை

பக்ஷிலே भरन्यासம் பண்ணுமவனுக்கு साभिप्रायविशेषமொழிய फलविलम्बத்துக்கு ஹேதுவில்லை ஆகையாலே இந்न्यासविधिக்குப் प्राधान्येन तात्पर्यं विशेषமாகிறது.

இவ்விடத்திலே சிலர், 'स्वतन्त्रனைக் குறித்தன்றோ ஒன்றை विधिப்பது? अत्यन्तपरतन्त्रனாய் अध्यात्मशास्त्रங்களிலும் मूलमन्त्रादिகளிலும் शिक्षितனான अधिकारिயைக் குறித்து 'व्रज' என்று ஒரு कर्तव्यத்தை विधिக்கும்படி என்?' என்று சொல்லுவர்கள். இது पारतन्त्र्यकाष्ठையைப் परामर्शியாமல் சொன்னபடி. எங்ஙனே யென்னில்—'कर्ता शास्त्रार्थवत्त्वात्', 'परात्तु तच्छ्रुतेः' என்று वेदान्तத்தில் ஸ்தாபித்த படியே இவனுக்கு भगवदधीनकर्तृत्वமுண்டாகையாலே இவனைப் பற்ற विधिக்கக் குறையில்லை. अचित्तुக்கள் मृदादिகளை ஈச்வரன் உண்டாக்கச் சமைக்கிறாப் போலே இவ்வளவு स्वातन्त्र्यத்தை எடுத்துச் சுமக்கையும் இவனுக்கு भगवद्-

---

யொன்றுமில்லை, ஸுக்ரீவன் லக்ஷ்மணனோடு சேர்ந்து செய்த இரண்டு ப்ரபத்திக்கே பலனில்லை. சில உபாயங்களைப் போலன்று ப்ரபத்தி. ஒரு தரமே செய்தவனே ப்ரபத்தி தத்துவம் உணர்ந்தவனாவான், பரத்தை ந்யாஸம் செய்த பிறகு மீண்டும் அதை ந்யாஸம் செய்வதெவ்வாறு கூடும் என்றறிவித்தார். तवास्मीति च याचते என்று கைங்கர்யார்த்தமான சரணாகதியென்றும் குறித்தார் ஆக மோக்ஷார்த்த சரணாகதியும் ஒருதரமே செய்யக் கூடியதென்று ந்யாயத்தாலும் வசநத்தாலும் நன்று நிலைநாட்டப்பட்டதென்றபடி. ஒருதரமே போதுமாகில் உடனே மோக்ஷம் ஏனில்லை? விளம்பமுண்டெனில்—ஸம்ஸாரநிவ்ருத்தியை இவன் கேட்டாலும் பக்திக்குப் போலே प्रारब्धकर्मத்தின் முடிவில்தான் பலனாகும்; தேஹாவஸாநத்தில் மோக்ஷம் ஸித்தியாது; அடுத்த க்ஷணத்தில் பலனுக்காக ஆர்த்த ப்ரபத்தியும் கூடாதொழியுமென்ன அருளிச்செய்கிறார் இப்படி இதி. ஆகையாலே= காலத்தில் பலன் பெறுவிக்கும் உபாயம் காணாதவரெல்லோரும் ப்ரபத்தி செய்யலாமாகையாலே.

व्रज என்கிற வாக்யம் முடிந்தது; மேலே लकारத்தால் அதற்கு விதியுள்ளது. மோக்ஷாதிகாரியைக் குறித்து அவ்விதி தகாதென்ற ஆக்ஷேபத்தை விரிவாகப் பரிஹரிக்கிறார் இவ்விடத்திலே இத்யாதியால். व्रज என்று விதிக்கக் குறையில்லை என்றவளவால், विधि ஸித்தித்த பிறகு மேலே மூன்று அம்சங்கள் அடைவாக நிராகரிக்கப்படும், 1 பக்த்யாதிகள் ஸ்வரூபவிருத்தம் விடுவதே ஸாம்ப்ரதாயிகமென்பது; 2 ஸ்வரூப ஜ்ஞானமுள்ளவனுக்கு நிஷித்தாநுஷ்டானமென்ற தோஷமில்லை யென்பது; 3. ஸ்வரூப ஜ்ஞானமே சரமச்லோகார்த்தம், வேறு விதேயமில்லை யென்பது, अध्यात्मशास्त्रங்கள்= அந்தர்யாமிब्राह्मणादिகள். விதிக்கும்படி என்= விதிக்கிற ப்ரகாரம் தகுமோ? स्वतन्त्रः कर्ता என்றபடி சிறிது ஸ்வாதந்த்ர்யமுள்ளவனைக் குறித்து தானே விதி, அத்யந்த பரதந்த்ரனுக்கு விதிக்கவாகுமோ என்று கேள்வி. कर्त्रादि, பாரதந்த்ர்ய காஷ்டையாவது கர்த்ருத்வமென்னும் ஸ்வாதந்த்ர்ய மிராமையன்று, அது வேதாந்த ஸூத்ரவிருத்தம். ஆக அசேதநம் தன் தர்மத்தைப்

पारतन्त्र्यशास्त्रे யிருந்த படி. இவனுக்கு ஒரு வழியாலும் कर्तृत्वம் இல்லையென்னில், प्रकृति-अविद्यादिகளுக்குக் कर्तृत्वம் சொல்லுகிற सिद्धान्ततुल्यமாம். कर्तृत्वம் स्वाधीनமென்னில், सर्वनियन्ता ஒருவன் என்கிற அர்த்தம் கிடையாமையாலே निरीश्वरसिद्धान्तப் படியாம். ईश्वराधीनமாக வரும் कर्तृत्वந்தானும் ज्ञातृत्वमात्रமென்னில்—पुरुषार्थ संपादनरुचियும் तदुपायप्रवृत्तियும் தவிரப் प्रसङ्गिக்கும். ज्ञानமும் அதின் अवस्थाविशेषமான इच्छैயுமே யுள்ளன, வேறொரு வ்யாபாரமில்லை யென்னிலும் दृष्ट—अदृष्टार्थங்களான [ஓர்] உபாயங்களையும் स्वयंप्रयोजनமான கைங்கர்யங்களையும் अनुष्ठिக்க விரகில்லை. ஆகையால் ज्ञानचिकीर्षाप्रयत्नங்கள் மூன்றும் आत्माவுக்கு உண்டு.

இதில் चिकीर्षाप्रयत्नங்கள் ज्ञानத்தினுடைய अवस्थाविशेषங்களென்னுமிடத்தை वेदार्थसंग्रहத்தில் அருளிச்செய்த लाघवयुक्तिயாலே கண்டுகொள்வது. क्रिया-

---

போல் சேதநனும் அவனளித்ததை எடுத்து—இசைந்து சுமந்திருக்கையே காஷ்ட்டையாகும். அசேதநவைலக்ஷண்யத்திற்காகக் கர்த்ருத்வரூப ஸ்வாதந்த்ர்யத்தை யளித்திருக்கிறான். ஆக உபதேசிக்கும் விதிவாக்யத்தை யறியவும் விரும்பவும் முயலவும் சக்தி யென்கிற கர்த்ருத்வமிருப்பதால் விதி தகும். அதனாலே யன்றோ परवान् असि काकुत्स्थ...क्रियतामिति मां वद என்று இளையபெருமாள் பரதந்த்ரனென்று கூறியே விதிப்பதைப் பார்த்திருந்த தென்றபடி. இதை இசையாமை ஸாங்க்யாதி பக்ஷமாகுமென்கிறார் இவனுக்கு இதி. ஸாங்க்யர்—ஆத்மா வெல்லாம் நிர்விகாரம்; ப்ரக்ருதிக்கே= ப்ரக்ருதி பரிணாமமான புத்திக்கே கர்த்ருத்வாதிகளென்றார், சாங்கரர் ஆத்மா ப்ரஹ்மம்; அது நிர்குணம்; அவித்யை யென்கிற வஸ்துவிலே கர்த்ருத்வமென்றனர், ஆதிபதத்தால் மாயையைக் கொள்வது; ஈச்வரத்வமும் ப்ரஹ்மத்திற்கில்லை; மாயையிலுள்ளது அங்கு ஆரோபிதமென்றனரே कर्तृति ஸூத்ரார்த்தத்தைச் சொன்ன பிறகு परात् तु என்கிற ஸூத்ரத்தைக் கருதிச் சொல்லுகிறார் कर्तृत्वमपि. இதர காரக வ்யாபாரங்கள் கர்த்தாவுக்கு அதீனமாயிருப்பது போல் कर्तृव्यापारம் மற்ற காரகங்களுக்குப் பரதந்த்ரமாகாமையால் ज्ञानचिकीर्षाप्रयत्नवत्त्वமென்ற இந்த வ்யாபாரமே ஸ்வாதந்த்ர்யமெனப்படும்.

இம் மூன்றில் முன் முன் தர்மத்தை மட்டும் இசைந்தால் போதாதென்று நிரூபிக்கிறார் ஈச்வரேத்யாதியால். விரகு—உபாயம். இச்சைக்குப் பிறகு ஆத்மாவில் ப்ரயத்நமுண்டாக அதன் பிறகே மநோ வாக் காய வ்யாபாரங்கள் வருமென்றது லோகவேத ப்ரஸித்தமென்றபடி. वेदार्थसंग्रहेति. ज्ञानம் இச்சை प्रयत्नம் என்ற மூன்றும் தனித்தனி ஆத்ம குணங்களென்று தார்க்கிக மதம், धर्मभूतज्ञानமொன்றுக்கே இவ்வித மூன்று தசைகளென்று ஸித்தாந்தம். கர்த்தா என்ற சொல்லுக்குப் பொதுவாக क्रियाश्रयः என்ற பொருளுமுண்டு. कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते என்றவிடத்தில் அசேதநத்திற்குச் சொன்ன கர்த்ருத்வம் क्रियाश्रयத்வமாகும். अधिष्ठानं तथा कर्ता என்றவிடத்தில் कर्ता என்றது प्रयत्नाश्रयः என்ற பொருளிலே என்றறிவிக்கிறார் क्रियेत्यादिயால்.

श्रयत्वरूपமான कर्तृत्वம் चेतनाचेतनसाधारणம். प्रयत्नाश्रयत्वरूपமான कर्तृत्वம் चेतनैका-न्तம். प्रयत्नமாவது—शरीरादिप्रेरणहेतुவான बुद्धिविशेषம். ज्ञानमात्रத்துக்கு आश्रयமான போதும் भोगमात्रத்துக்கு आश्रयமானபோதும் क्रियाश्रयत्वमात्रமான सामान्य-कर्तृत्वமே உள்ளது. ஒன்றைத் தன் बुद्धिயாலே उत्पादिக்கும் போது प्रयत्ना-श्रयत्वरूपமான कर्तृत्वம்.—இப்படிப்பட்ட कर्तृत्वம் कैङ्कर्यमात्रத்திலே என்கையும் उचितமன்று. அங்கும் भगवत्प्रीतியென்று ஒரு प्रयोजनத்தை उद्देशித்து उपाय-अनुष्ठानம் பண்ணினையிறேயிருப்பது. ஆனபின்பு कर्तृत्वத்தில் बन्धहेतुவான आकारமே त्याज्यம். அது எது என்னில்—ஈச்வரன் கொடுத்த ज्ञानशक्त्यादिகளையும் करणकलेबरादिகளையும் கொண்டு, அவன் प्रेरकனுமாய் धारकனுமாய்ச் शेषिயுமாய்க் கொண்டு सहकरिக்க, प्रवर्तिக்கிற தன்னை இதுக்கு विपरीतமாக अनुसन्धिத்திருக்கையும் இவ் अनुसन्धानத்தில் திருத்தமுண்டேயாகிலும் இதிலே प्रयोजनान्तरத்தை இடுக்கி अनुष्ठिக்கையும் बन्धकம் भक्तिप्रपत्तिகள் தாமும் प्रयोजनान्तरपर

---

கர்த்ருத்வமும் ஜ்ஞாத்ருத்வாதிகளும் வெவ்வேறாயிருக்க ज्ञानचिकीर्षाप्रयत्नवत्त्वं कर्तृत्वமென்று சொல்லக்கூடுமோவென்ன जानाति, इच्छति இத்யாதிகளும் க்ரியா பதங்களாகையாலே அவற்றை கிரியையாகக் கொண்டு கர்த்தா என்னலாமென்றறிவிக்கிறார் ஜ்ஞாநமாத்ரேதி ஒன்றை இதி. ஒரு வஸ்துவை ஒருவன் விரும்பினாலும் அதை ஸாதிக்கச் சில ஸமயமே வ்யாபரிக்கிறான். அதற்குக் காரணம் முதலில் ப்ரயத்நமிராமையும் பிறகு ப்ரயத்நம் வருகையுமென்ன வேண்டும். இது வெவ்வேறாக அநுபவஸித்தமென்றபடி. இவ்வளவால் பரதந்த்ரனுக்கும் கர்த்ருத்வமுண்டென்று சொல்லியாயிற்று.

ஆனாலும் கர்த்ருத்வத்தை கைங்கர்ய விஷயத்தில் இசைவோம்; உபாய விஷயத்தில் இசையோமென்றதை நிராகரிக்கிறார் இப்படிப்பட்ட இதி. அங்கும் = கைங்கர்யத்திலும். கைங்கர்யமாவது என்ன? சேஷியின் உகப்புக்காகச் செய்யப்படுமதே. அதுவும் உபாயகர்த்ருத்வமேயாகிறதே. மேலும் ஒருவன் திருவாராதனத்திற்காக ஸ்நானம் செய்ய நதிக்குச் செல்லுகிறான். அந்த கதி, ஸ்நானமெல்லாம் கைங்கர்யந்தானே. அதில் கர்த்ருத்வம் உபாய கர்த்ருத்வந்தானே. இனிக் கைங்கர்யமாகாத உபாயங்களில் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு இல்லையென்போமென்னில்—உபாயகர்த்ருத்வத்தை ஆத்மாவில் இசையவில்லையாகில் அது எங்கேயுளது? ப்ரக்ருதியிலென்றால், ஸாங்க்ய பக்ஷமாகும், ஸூத்ராதி விரோதமுமென்று முன்பே சொன்னோம். இப்படியானால் கைங்கர்ய கர்த்ருத்வத்தை ஆதரித்து உபாய கர்த்ருத்வத்தை விடுவதேன் என்னில்—அதைத் தெளிவிக்கிறார் ஆனபின்பு இதி. ஒரே கர்மத்திலும் ஒருவித கர்த்ருத்வம் விடப்படும்; மற்றொருவிதம் விரும்பப்பெறும். ஸம்ஸார காரணமாகையும் ஆகாமையுமே அதற்குக் காரணம். விபரீதஜ்ஞானமும் வேறு பலத்தில் நசையும் बन्धकत्वकारणம். களையும் கொண்டு என்பதற்கு प्रवर्तिக்கிற என்றவிடத்தில் அந்வயம். ஸஹகரிக்க = ஸஹகரித்ததால்; விபரீதமாக = ஈச்வரனுக்கு अनधीनமாக, भक्ति. வேறு ப்ரயோஜனமின்றிச் செய்கிற

னுக்கு बन्धकமாயிறே இருப்பன? ஆகையால் स्वाभाविककैङ्कर्यार्थियாய் अनन्यप्रयोजननுயிருக்குமவனுக்கும் फलदशैயில் कर्तृत्वம்போலே उपायदशैயில் कर्तृत्वமும் विरुद्धமன்று. फलदशैயிற் विविधविचित्रकैङ्कर्यकर्तृत्वம் केवलம் ईश्वरेच्छावैचित्रियோடே பொருந்தின स्वेच्छैபாலேயாயிருக்கும். संसारदशैயில் உள்ள कर्तृत्वமெல்லாம் कर्मानुरूपமாக ஈச்வரன் परिणमिப்பிக்கு सत्त्व-रजस्-तमस्सुக்களை उपाधियாகக் கொண்டு बहुविधமாயிருக்கும். இதில் ரஜஸ்ஸாலும் தமஸ்ஸாலும் प्रयोजना-न्तरसङ्गहेतुவான सत्त्वத்தாலும் வரும் कर्तृत्वம் बन्धकம் भगवत्प्राप्तियிலே रुचिத்தைப் புணர்க்கும் प्रकृष्टसत्त्वविशेषமடியாக வரும் कर्तृत्वம் मोक्षकारणம். இக் गुणत्रयத்தோடு துவக்கற்றிருக்கும் मुक्तदशैயில் कर्तृत्वம்.

இப்படியிருக்கையால் ஆத்மாவுக்குக் कर्तृत्वமில்லை என்கிற वाक्यங்களுக்கும் कर्तृत्वமுண்டென்கிற वाक्यங்களுக்கும் विषयव्यवस्थै உண்டாகையாலே विरोधமில்லை அது எங்ஙனே யென்னில், कर्तृत्वமில்லை என்கிற வாக்யங்கள் ईश्वराधीनமாயும், तदायत्त-प्रकृति-गुण-अधीनமாயும் வரும் कर्तृत्वத்தை निरपेक्षமென்று நினைக்கலாகாதென்கிறன. कर्तृत्वம் உண்டு என்கிற வாக்யங்கள் ईश्वरेच्छादिகளடியாகவே வந்த ज्ञानத்துக்கும் तद्विशेषங்களான चिकीर्षाप्रयत्नங்களுக்கும் இவனே आश्रयமென்னும் இடத்தைச் சொல்லுகிறன, இந் निष्कर्षप्रकारத்தை 'शरीरवाङ्मनोभिर्यत्' என்று தொடங்கி गीताचार्यன் தானே அறுதியிட்டான்.

---

வனுக்கு நித்ய நைமித்திகாதி கர்மங்களும் बन्धकமாகாமலிருப்பது என்றும் இங்கே சேர்த்துக் கொள்க. ஆக வ்யாபாரத்தைப் பிரிக்கலாகாது; கர்த்ருத்வத்தையே பிரிக்கவேண்டுமென்றபடி. प्रयोजनान्तरसङ्गेति. सत्त्वं सुखे सञ्जयति என்று எந்த ஸுகத்திலிழிவதும் ஸத்த்வத்தாலன்றோ என்றபடி.

இப்படி बन्ध—மோக்ஷகாரணமான எல்லா கர்த்ருத்வத்தையும் ஜீவனிடமே கொண்டால் 'प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः । अहङ्कारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते' என்று गीतैயில் 'ஸத்வாதி குணங்களிலிருக்கும் கர்த்ருத்வம் ஜீவனிடத்தில் ஏறிடப்பட்டது; உண்மையில் இல்லை' என்றெல்லாம் சொன்னது சேருமோ என்ன, அதற்குக் கருத்து உரைக்கிறார் இப்படியிருக்கையால் இதி. விஷய வ்யவஸ்தையைத் தெளிவிக்கிறார் அதெங்ஙனே இதி. ஜீவர்களிடமுள்ள கர்த்ருத்வத்தையே, 'அவனிடமில்லை, ஈச்வரனிடமுள்ளது' என்று சொல்வதெல்லாம் அக் கர்த்ருத்வம் ஈச்வராதீனம் गुणाधीनமென்று தெரிவிப்பதற்காமத்தனை. கர்த்ருத்வம் ஜீவனிடமுள்ளதென்று சொல்லும் வாக்யமே यथार्थமான அர்த்தத்திலிருப்பதென்றபடி.

இது அந்யாதீநமென்பதை நிஷ்கர்ஷிக்கும் வாக்யத்தை எடுக்கிறார் இந் இதி शरीरेति–18-15 दैवमिति–गी-18-14. दैवं दिष्टं भागधेय என்கிற கோசப்படி दैवபதத்திற்குப் புண்யமும் அர்த்தமாவதானாலும் அசேதநமான புண்யபாபங்கள் ஈச்வரன் துணையன்றிக் காரணமாகாமையாலும், புண்யபாபங்கள் உண்மையில் ஈச்வர ப்ரீதி கோபங்களே யாகையாலும், தேவதாந்தர ப்ரீதி கோபங்கள் அஸ்திரங்களாகையாலும், दैवशब्दத்திற்கு दैवविषयத்திலும்

அவ்விடத்தில் 'दैवं चैवात्र पञ्चमम्' என்று புருஷோத்தமனைச் சொல்லுகிறது.

இவன் ஜீவனை ஒரு கார்யத்தில் प्रवर्तिப்பிக்கும்போது இக் கார்யத்தைப் பற்றக் कारयिता வென்று சொல்லப்படும்.

தானே प्रवर्तिக்கும் फलप्रदानादिகளிலும் सृष्ट्यादिகளிலும் कर्ताவென்று சொல்லப்படும். ஒன்றிலே प्रवृत्तனான चेतनனை விலக்காதவளவில் उदासीनன்; அப்போது இசைந்திருக்கையாலே अनुमन्ता; இளந்தலை சுமக்குமவனுக்குப் प्रबलன் பெருந்தலை சுமக்குமாப்போலே கூடப் प्रवर्तिக்கையாலே ஸஹகாரி. सृष्ट्यादिகளில் देवमनुष्यादिवैषम्यं जीवकर्मविशेष—उपाधिகமாகையாலே

---

விசேஷ ப்ரஸித்தியுண்டாகையாலும் இங்குப் புருஷோத்தமனே दैव சப்தார்த்தம். இப்படி मत्तः स्मृतिः ज्ञानमपोहनं च என்றபடி எல்லாம் ஈச்வராதீநமாகில் ஈச்வரன் எங்கும் कारयिताவாகிறான்; அவனை உபேக்ஷகன் अनुमन्ता कर्ता என்றெல்லாம் சொல்வது சேருமோ என்ன, எல்லாம் நிர்வஹிக்கிறார் இவன் இதி. ஸாத்விக த்யாகாதிகளில் கண்டபடி அந்தர்யாமியாய் எல்லா ப்ரவ்ருத்திக்கும் காரணமாயிருப்பதால் எங்கும் कारयिता என்னலாம். एष एव साधु कर्म कारयति என்கிற வாக்யங்களின்படி சிலவிடங்களிலே कारयिता வாகை புஷ்கலமாகும். ஜீவன் கர்த்தாவாயிருக்குமிடத்தில் ஈச்வரனைக் கர்த்தா வென்பதில்லை; நேராகவே அவன் செய்யும் ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரதிற் கூறும் கர்த்ருத்வமே முக்யமாகும். நிஷித்த கார்யத்திலே சேதநன் ப்ரவ்ருத்திக்கும் போது விலக்காமலிருப்பதால் உபேக்ஷகனென்பது. அங்கே ஈச்வரன் காரயிதாவானாலும் அதை ஜீவன் செய்யவேண்டுமென்று ஆதரமில்லாமையால் कारयिताவென்பதில்லை. உபேக்ஷகனாயிருப்பதுமன்றிச்செய்ய அநுமதியுமளிப்பதால் अनुमन्ता என்னப்படுகிறான். பெரிய கார்யங்களாமவை ஈச்வரன் துணையின்றி செய்யவாகாவென்று தோன்றும்போது அவன் துணையாகி அதிகபாரம் சுமப்பதால் सहकारी எனப்படுவான்; இதை யருள்கிறார் இளந்தலை இதி. ஒரு மரக்கட்டையில் சிறுத்த முனைப்பாகம் இளந்தலை; பருத்த அடிப்பாகம் பெருந்தலை. அப் பெரிய கார்யத்தில் ஜீவன் செய்வது கட்டையில் முனைப்பாகம் சுமப்பதளவாகும்; ஈச்வரன் செய்வது அடிப்பாகம் சுமப்பதளவாகும். இது சுருக்கம்; இவ் अनुमन्तृत्वादि விரிவை வேறிடத்திற் காண்க. ஈச்வரனுக்கு ஸ்ருஷ்ட்யாதி கர்த்ருத்வம் நேராகவே உண்டாகில் निमित्तमात्रमेवासौ सृज्यानां सर्गकर्मणि என்று अप्राधान्यம் சொன்னது கூடுமோ என்ன. அதனால் கர்த்ருத்வ நிஷேதமில்லை; அதற்கு गीतैயே ப்ரமாணம் என்கிறார் सृष्टीति चातुरिति गीतै 4-1-3. ஸத்வாதி குணங்களையும் கர்மங்களையும் கூட்டி வர்ணங்களை நானே படைக்கிறேன் என்று कर्तृत्वத்தைத் தானே இசைந்தான். ஸம்ஸாரத்தில் ஜீவனே கர்த்தாவாயிருந்தும், அது ஸத்வாதி குணாதீநமாகையால் ஜீவனை அகர்த்தா என்பது போல், ஸ்ருஷ்ட்யாதிகளும் ஜீவகர்மாதீநமாகையால் அதற்கிணங்காமல் தன்னிஷ்டப்படி ஈச்வரன் அவற்றைச் செய்வதில்லை யென்றறிவிக்க ஈச்வரனை अकर्ता என்கிறது;

,चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः । तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥'
என்று ஈச்வரனுக்குக் कर्तृत्वनिषेधं பண்ணுகிறது இப்படி सर्वविषयसाधा-रणकर्तृत्वமுடைய ஈச்வரனடியாக ஜீவனுக்கு स्वबुद्धिपूर्वप्रवृत्तिशक्तिरूपமான नियोगयोग्यत्वம் सिद्धமாகையாலே இங்கு 'व्रज' என்று विधिக்கக் குறையில்லை.

இப்படி भक्त्यादिகள்போலே शरणागतिधर्மமும் कर्तव्यமாக विधिக்கப்படுகையால், "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே. ஈச்வரனால்வரும் நன்மை முலைப்பால் போலே" என்று பிள்ளான்வார்த்தைக்கு भक्तिप्रपत्त्यादिகளெல்லாம் அவனாலே வருகிறனவென்று நினைக்கவேண்டுமென்று தன்னுடைய पराधीन-कर्तृत्वத்திலே தாத்பர்யம்.

---

இவ்வளவு தூரம் ஜீவகர்த்ருத்வ நிரூபண சேஷமாகக் கூறி அந்தக் கர்த்ருத்வத்திற்காக व्रज என்ற விதி தகுமென்று விதிவிசாரத்தை முடிக்கிறார் இப்படி ஸர்வேதி.

இனி இங்கே மூன்று விஷயங்கள் ஏகதேசிஸம்மதமானவை கழிக்கப் படுகின்றன. விதியிருந்தாலும், அதன்படி யநுஷ்டிக்கும் அதிகாரிகள் ஸாத்விகராகிலும், அதை விட்டு மோக்ஷம் விரும்பியிருப்பவரே பரமஸாத்விகராவாரென்று சில ஸம்ப்ரதாய வாக்யங்களுக்கு விபரீதமாக அர்த்தம் கொண்டு சொல்வதைக் கழிப்பது இப்படி இதி.முதலில் வசநபூஷணத்தில் (177) திருக்குருகைப்பிரான் பிள்ளான்வாக்யமாக எடுக்கப்பட்டதாம் தன்னால் இத்யாதி. தானே தன் முயற்சியால் நன்மை பெறுவது விலை கொடுத்துப் பால் வாங்கிப் பருகுதற்கு ஸமாநமாகும்—விரஸமாகும், வீண்செலவுமாகும். ஈச்வரனே நன்மையளிக்கப்பெறுதல் முலைப்பாலுக்கு ஸமாநமாகும். சில முலைப்பாலும் விலைப்பாலாமாயினும்— தாய்முலைப்பாலுக்குக் கூலியில்லை அதற்குக் கூலி கொடுப்பதென்றால் தாய் என்பதைமறந்ததாகுமென்பர். பக்தி ப்ரபத்தி முதலானவற்றின்விஸ்பஷ்டவிதிகளையெல்லாம்இவ்வாக்யத்தைக்கொண்டுகழிக்கவாகுமோ? ददामि बुद्धियोगं तं येन मां उपयान्ति ते இத்யாதியால் பக்த்யாதிகள் ஈச்வரனால் வருவதாயிருக்கத் தன்னால் வருமென்று எண்ணலாமோ. அவன் தனக்காகவே எல்லாம் செய்துகொள்ளுகிறானென்கிற ஸாத்விகத்யாகம் அநுஷ்டிப்பவர், தாமே ஸாதிப்பதாக நினைப்பரோ? ஆகையால் ஸமஸாரிகள் மோக்ஷம் தவிர வேறு பலனைத் தம் ப்ரயத்நத்தால் வருவதாக நினைப்பது போல் தாமே ஸ்வதந்த்ரமாகச் செய்து மோக்ஷம் பெறுவதாக முமுக்ஷு நினைக்கலாகாதென்ற தத்துவோபதேசமே பிள்ளான் செய்ததாகும், இதுபக்திப்ரபத்திகளை யநுஷ்டிக்க வேண்டிய விதத்தின் சிக்ஷையாகுமென்றபடி. பிள்ளான்பணித்ததற்கு விபரீதார்த்தம் கொண்டு அதன்மேல் (178) எம்பெருமான் தானேயருள்பவனாயிருக்கத் தான் தனக்கு நன்மை தேடமுயன்றால் தாய்தந்தையர் கையினின்று குழந்தையை இழுத்துக்கொலைக்குக் கூசாத ஆட்டுவாணியன்கையில் இடுவதாய்த் தனக்கு நாசமேயாமென்றனர். இக்கல்பனைக்கு இடமேயில்லை,சிலர்—பக்தியைவிதித்தது அதையநுஷ்

अन्यविश्वाससिद्ध्यर्थं भक्त्युपायविधिं वदन् । सर्वशास्त्रेष्वविश्वासमाधत्ते मुखभेदतः ॥
मद्योपहतपात्रस्थतीर्थदृष्टान्तवर्णनम् । अहङ्कारान्वये तु स्यात् प्रपत्तावपि भक्तिवत् ॥

டிக்கவேண்டுமென்ற கருத்தாலல்ல; அந்யவிஶ்வாஸஸித்த்யர்த்தம் = ப்ரபத்தியில் விச்வாஸத்தையுண்டுபண்ணுவதற்கே யென்பர்; இதை நிரஸிக்கிறார் அந்யேதி. இப்படி சொல்லுகிறவர் சாஸ்த்ரம் முழுமையிலும் அவிச்வாஸம் உண்டுபண்ணுகிறவராவர். நாஸ்திகர் வேதமே அப்ரமாணமென்று நேராகச் சொல்வர். இவர் முகபேதத:—ஆஸ்திக வேஷம் பூண்டு இம் முகத்தாலே சாஸ்த்ரத்தில் அவநம்பிக்கையையே ஸ்தாபிப்பராவர். ஸோமயாகத்தை விதித்தது இஷ்டி யாகத்தில் விச்வாஸத்தை யுண்டுபண்ணுவதற்காக. இஷ்டியை விதித்தது அக்நிஹோத்ரத்தில் விச்வாஸத்திற்காக. அக்நிஹோத்ரத்தை விதித்தது ஸந்த்யோபாஸனத்தில் விச்வாஸத்திற்காக. அதை விதித்தது ஸ்நாநத்தில் விச்வாஸத்திற்காக. ஆக ஸ்நாநம் பண்ணுல் போதுமென்று இவர் கொள்ளும் சாஸ்த்ர தாத்பர்யம். ஸ்நாநத்தை விதியிராமலே செய்வரே; ஆகையால் அதிலும் தாத்பர்யமில்லை யென்ன, முழு சாஸ்த்ரத்திற்கும் அப்ராமாண்யமாம். குருவான உபாயத்தை விதிப்பது இலகுவான உபாயத்தில் விச்வாஸத்திற்காக என்று சொல்லவாகாதென்றும் முன்பே சொல்லப்பட்டது.

பிள்ளான் அருளிச்செய்த மற்றொரு வாக்யத்தைக் கொண்டு, பக்தி விதிக்கப்பட்டிருந்தாலும் அது அஹங்காரகர்ப்மாகையாலே நிஷித்தமாகுமென்று வசநபூஷண(122)திகளில் சொன்னதால், பிள்ளான் சொன்னது ஏகதேசிக்கு அநுகூலமன்றென்கிறார் மத்யேதி. "மதிராபிந்துமிஶ்ரமான ஶாதகும்பமய-கும்பகத-தீர்த்த-ஸலிலம் போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்", என்றது பிள்ளான் வாக்யமென்பர். மதிராபிந்து = கள்பொட்டு. ஶாதகும்பமாவது பொன். தன்மயகும்பமாவது கெட்டிப்பொன்னலான குடம். தீர்த்தமான ஜலம் கங்காதி. பாத்ரம் பொன்மயமானதால் அதில் அசுத்தி யில்லை. ஜலம் தீர்த்தமானதால் ஸ்வபாவமாக அசுத்தியில்லை. அதிலே கள்பொட்டு கலந்தால் ஸ்வரூப நாசமே. அதுபோல்-ஜ்ஞாநாநந்தஸ்வரூபனும் பகவச்சேஷனுமான ஜீவாத்மா பொற்குடமாய் பகவத் விஷயகமான பக்தியானது விஷய கௌரவத்தால் தீர்த்தமாகுமானாலும் அது அஹங்காரம் கலந்திருப்பதால் ஸ்வரூப நாசகமாகுமென்று உரைக்கின்றனர். இப்படி மத்யத்தால் கெட்ட பாத்ரஸ்த தீர்த்த-சுத்தபாத்ரத்திலுள்ள தீர்த்தத்தை த்ருஷ்டாந்தமாக வர்ணித்தது அஹங்காராந்வயே து ஸ்யாத் = அஹங்கார ஸம்பந்தம் உள்ளபோது மட்டும் தோஷத்திற்காகவாம்; எப்போதைக்குமாகாது. வாக்யத்திற்குப் பூர்வாபர ஸந்தர்ப்பத்தையும் அவ்வாக்யத்தின் நிலையையும்பார்த்துப் பொருள் கூறவேண்டும். இங்கு 'அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்'' என்றிருக்கிறது. மேலுள்ள பதம் இன்னதென்று தெரியவில்லை. ஸலிலம் போலே யென்றிருப்பதால் அனர்த்தகரம் என்றவாறு பதமிருக்கலாம். இங்கே உபாயாந்தரம் அஹங்கார மிச்ரமாகுமென்றிருந்தால் பக்தியெல்லாம்

அஹங்கார மிச்ரமே யென்று சொன்னதாம், அவ்வாறின்றி உபாயாந்தரத் திற்கு அஹங்கார மிச்ரத்வம் விசேஷணமாயிருப்பதால் मद्यबिन्दुमिश्रமாகாத தீர்த்தம்போலேஅஹங்கார மிச்ரமாகாத பக்தியோகமேபெரும்பாலும்இருக்கு மென்று தெரிகிறது. ஆகக் கர்மயோகம் ஜ்ஞாநயோகம் பக்தியோக மெல்லாம் வர்ஜ்யமென்று இதனின்று ஸித்திக்காது. பக்தியோகமெல்லாம் अहंब्रह्मास्मि என் றவாறுகையால்அஹங்கார மிச்ரந்தானேயென்னில்—अथातोऽहङ्कारादेशः என்று உபநிஷத்து ஜீவபரமாத்மசரீராத்ம भाव ग्रहणरूपமான அஹங்காரத்தைग्राह्यமாக உபதேசித்தது. இது अहमन्नादः இத்யாதியின்படிமுக்த தசையிலுமுள்ளது. ஆத்ம ஜ்ஞாநமில்லாதார்க்கு வரும் தேஹாத்ம ப்ரமரூப அஹங்காரம் வர்ஜ்யம். आत्मन्येष न दोषाय (விஷ்ணுபுராணம்) என்றார், பரமாத்ம சேஷத்வரூப ஜ்ஞாநம் திடமாயிராதார்க்கு ஸ்வாத்மாவை மட்டும் க்ரஹித்து வரும் அஹங்காரமும் தேஹத்தில் அஹங்காரம் போல் முக்ததசையில் இராததாகும். பக்தியோக நிஷ்டனுக்கும் ஸாத்துவிக த்யாகமும் சரீராத்மபாவ த்யாநமும் விடாமலிரு ப்பதால் ஹேயமான அஹங்காரத்திற்கு இடமில்லை. அநாதி துர்வாஸநாவச த்தாலே யோக காலத்திலும் அத்தகைய அஹங்காரம் புகுமாகில் அந்த யோகம் கார்யம் செய்யாதென்றிவ்வளவே இவ் வாக்யத்தினின்று தேறும். ஏகதேசியின் வாக்கிலும் "இந்த பக்தியிலும் அஹங்காரம் கலசாதிருந்தால் ஒரு குறையில்லை" என்ற சொல் அவசமாய் வந்துளது; இப்படியிருக்க பக்தி யோகமெல்லாம் த்யாஜ்யமாகுமா? மேலும் உபாயாந்தரமென்று ப்ர யோகித்திருப்பதால் பக்தியோகம்உபாயமாகையும் ஸம்மதமாகத் தெரிகிறது. இந்த வாக்யத்தில் பக்திக்கும் ப்ரபத்திக்கும் வாசி சொல்வதாக இவர்கள் நினைப்பதும் தவறு. உபாயாந்தரமென்பதற்கு ப்ரபத்தி நீங்கலான கர்ம யோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களென்று பொருள் கொண்டால் ப்ர பத்தி அஹங்கார கர்ப்பமானாலும் துஷ்டமாகாதென்று சொன்னதாகும். அது கூடுமோ? ப்ரபத்தியில் அஹங்காரமே புகாதென்று சொல்லவும் ஆகாது. அதிக விவேகியான பக்தியோக நிஷ்டனிடமே அஹங்காரம் புகும்போது அவிவேகியின் ப்ரபத்தியில் அதற்கிடம் திண்ணம் ப்ரபத்தியிலும் ஸாத்விக த்யாகாதிகளை விட்டுத் தன்னை ஸ்வதந்த்ரனாகவும் கர்த்தாவாகவும் நினைப்ப துண்டாகில் மோக்ஷ பலனில்லை. இனி உபாயாந்தரமென்பதற்கு ஸித்தோ பாயமான எம்பெருமானைத் தவிர வேறான உபாயமென்றே பொருள்; பெரிய திருவந்தாதியில், "நெறி காட்டி நீக்குதியோ" என்று 'நான் செய்யும்படி ஓர் உபாயத்தைக் காட்டி நீ என்னை அகற்றப் பார்க்கிறாயோ என்றதால் ஸித் தோபாயமானதே உபாயம்., ப்ரபத்தியும் த்யாஜ்யமென்று சொல்லுவோ மென்னில்—அப்போது ப்ரபத்தி தவிர வேறு உபாயத்தை விலக்க இவ்வாக் யத்தை ப்ரபத்தி ப்ரகரணத்தில் உதாஹரித்தது தவறும். ஈச்வரனே ப்ர பத்தி யென்னில்—ஈச்வரன் எப்போது மிருப்பதால் எல்லோருக்கும் மோக்ஷ மாம். स्ववृत्तिनिवृत्तिயே ப்ரபத்தி யென்னில்—அந்த நிவ்ருத்தியும் அஹங்கார

ஆகையால், 'प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा' இத்யாதிகள் முன்பு தாம் பண்ணின ப்ரபத்திக்கு க்ஷமைகொள்ளுகிறபடி' என்று சிலர் சொல்லுமதுவும் अहङ्कार-स्पर्शादिदोषங்களையைப் பற்றவாமத்தனை, அல்லது यथाशास्त्रम् अनुष्ठित्त प्रपत्ति अपराध மாய் அதுக்கு க்ஷமைகொள்ளுகிறபடி யன்று. அப்படியாகில் 'पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद' என்கிற पूर्वाचार्यपुरस्काराधிகளும் தாம் செய்கிறதாகையாலே

---

மிச்ரமாகில் துஷ்டமே. இவ்வளவையும் கருத்திற் கொண்டு प्रपत्तावपि भक्तिवत् என்றருளினர். இது நிற்க; பிள்ளான்வாக்யத்தால் அஹங்காரமிச்ர மாகாத சாஸ்த்ரவிஹித ஜ்ஞானமெல்லாம்மோக்ஷோபாயமென்றேதெரிவதால் இவ் வாக்யம் ஏகதேசிக்கு ஸாதகமன்று.

பெரியவாச்சான்பிள்ளை स्तोत्ररत्नவ்யாக்யானத்தின்முடிவில்'अकृत्रिम' என்ற ச்லோகத்தில் पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा' என்ற விடத்தில்—பாரதந்த்ர்யத்திற்கு விருத்தமாக ப்ரபத்தி செய்தேனென்று என் நடத்தையைப் பார்த்து விலக்காமல் பிதாமஹர் நாதமுனிகளென்பதைக்கண்டுஇந்த ஸம்பந்தத்திற்காக என்னிடம் சீற்றம் கொள்ளாமலிருக்க வேண்டுமென்று ப்ரபத்தியாதிகளை விட்டு ஆசார்யஸம்பந்த மொன்றையே தஞ்சமாகச் சொள்ள வேண்டுமென்றறிவிப்பதாக உரை செய்தார். அதுவும் தகாதென்று நிருபிக்கிறார் ஆகையால் இதி. பிள்ளான்வாக்யத்தில் சாஸ்த்ரவிஹிதம் உபாயமென்று ஸித்திந்ததாகவென்றபடி. இந்த ச்லோகத்திற்கு பூர்வக்ரந்தவிரோதம் வாராதபடி ப்ரபத்திக்கு உபயோகியாக ஆசார்யபுரஸ்காரம் செய்வதாக உரைசெய்வதே தகும். இதை விட்டு இவ்வாறு உரை செய்ததை அநாப்தவாக்யமாயிருந்தால் விலக்கிடலாம். ஆப்தவாக்யங்கள் ஸ்வரஸமாக முரண்பட்ட அர்த்தங்களையே சொல்வனபோல்வன வானாலும் முடிந்தவரையில் வேறுதாத்பர்யம் சொல்லி ஸமரஸப்படுத்துவதிலே ஆசார்யனுக்கு நோக்கு அதற்கு சேஷமாகவே அவரவர் வாக்யத்தின் यथाश्रुतமான பொருளில் தோஷங்களைக் காட்டுவது; தூஷிப்பதற்கன்று. ஆகையால் இதற்கும் ஒரு தாத்பர்யம் அருளுகிறார் முன்பு இத்யாதியால். ஸ்வயமே தாம் செய்த ப்ரபத்தியில் அஹங்காரஸ்பர்சாதி தோஷங்களுண்டாகில், என் செய்வதென்று ஆளவந்தார் அஞ்சி அந்த அபராதத்தை க்ஷமிக்க வேண்டு மென்று வேண்டுகிறாரென்று ஏகதேசிவாக்யதாத்பர்யம். இதை விட்டு சாஸ்த்ர விஹிதமான பக்தியைப்போல் ப்ரபத்தியையும் சாஸ்த்ரோக்தரீதியிலே அநுஷ்டிப்பதும் தவறென்றே பெரியவாச்சான்பிள்ளைக்கு அபிப்ராயமாகில் இது சேராது. முன்னே 'अथवा किन्नु समर्पयामि ते என்ற விடத்தில் அவிவேகியாய் ப்ரபத்தியும் செய்யவேண்டும்செய்ததற்கு அநுசய(அனுதாப)மும்கொள்ளவேண்டுமென்று சொன்னது போல் உபேக்ஷிக்கத்தக்கதாகும். அந்த விஷயத்தை स्वरूपप्रपदना-धिकारத்தில் காண்க. அஸ்வதந்த்ரனாயிருக்க ப்ரபத்தி செய்தது தவறென்று க்ஷமைகொள்ளப் பூர்வாசார்யபுரஸ்காரம் செய்வதும் அஸ்வதந்த்ரனுக்கு அநுசிதமாகும். இதுவும் குற்றமாகையால் இதன்மேல்மற்றொரு क्षामणम् வேண்டு

றுக்கு க்ஷமைகொள்ளவேண்டி ஸமவஸ்தேயாம். இது ஸபரநிர்வாஹமாகில் இது போலே முன்பு பண்ணின ப்ரபதநமும் ஸ்வபரநிர்வாஹமென்னலாம் இங்குச் சொல்லும் ஹேதுக்களாலே பூர்வர்கள் பண்ணின ப்ரபத்தியும் அபராதமாயற கையாலே பூர்வர்களை முன்னிடவுமொண்ணுதொழியும். ஆகையால் இஸ் ஸ்தோத்ரத்தில்ஆத்யந்தங்களில்பண்ணின ஆசார்யபுரஸ்காரம்இங்குஅருளிச்செய்கிற ப்ரபத்திக்குஅபேக்ஷிதமாயாதல்வைகல்யபரிஹாரார்த்தமாயாதல்உபயுக்தமாய்வந்ததித்தனை. இவ் ஆசார்யபுரஸ்காரத்திற்போலே ப்ரபத்த்யாதிகளிலும் பராதீநகர்த்ருத்வம் தோஷமன்று.

---

மென்று அவஸ்தேயாம். ஸ்வபரநிர்வாஹமாகில் இதி. விளக்கானது வேறொன்றுக்கு ப்ரகாசகமாய் தனக்கும் ப்ரகாசகமாவது போல் இந்த ஆசார்யபுரஸ்காரம் வேறு குற்றத்திற்குப் பரிஹாரமாவது போல் தன்னால் வரும் தோஷத்திற்கும் பரிஹாரகமாகுமென்றபடி. ப்ரபதநமும் இதி. இதராசார்யத்தால் வரும் நிக்ரஹத்திற்குப் பரிஹாரமாவது போல் தன்னால் வரும் நிக்ரஹத்திற்கும் பரிஹாரமாக ப்ரபத்தியே யாகலாம் ஆசார்யபுரஸ்காரமே அநாவச்யகமாகு மென்றபடி. ஆசார்ய புரஸ்காரத்தால் ஃபலஸித்தியுமாகாதென்கிறார் இங்கு இதி. அறுகையாலே=முடிவதால். குற்றமுள்ளவன் குற்றமில்லாதவரின் ஸம்பந்தத்தைக் காட்டி க்ஷமைகொள்ளக் கேட்பது தகும் நாதமுநிகள் பக்தியும் ப்ரபத்தியும் அநுஷ்டித்தவராகையால் அதிக குற்றவாளியாவர். அவருடைய புரஸ்காரம் தகுமோவென்றபடி. இப்படி ப்ரபத்தி அவச்யம் வேண்டுமென்றால் ஆசார்யபுரஸ்காரமெதற்கென்ற வினவுக்கு விடையுடன் நிகமநம் செய்கிறார் ஆகையால் இதி. ப்ரபத்தி செய்ததற்கு க்ஷமைகொள்வதற்காக ஆசார்யபுரஸ்காரமென்றால் ஸ்தோத்ர ரத்னத்தில் முதலில் மூன்று ச்லோகங்களால் செய்த புரஸ்கார மெதற்கு? செய்யப்போகிற ப்ரபத்திரூப அபராதத்தின் க்ஷமணத்திற்காக வாகில் அதே போதும்; அந்தத்தில் வேண்டா. ஆகையால் ப்ரபத்திக்குஒருவாறு அங்கமென்றே கொள்ளவேண்டுமென்றபடி. அபேக்ஷிதமாயாதல் என்பதற்கு ஸாத்விக த்யாகாதிகளைப் போல் அங்கமாயென்று பொருள். ப்ரபத்திக்கு வேறு அங்காபேக்ஷையில்லை யென்றாலும், आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत् என்றபடி ஆசார்யஸம்பந்தம் முக்யமாகையால்அநுஷ்டாநகாலத்தில்மந்த்ரஆசார்யதேவதாத்யநுஸந்தாநம்வேண்டும் விசேஷ ப்ரீதி ஹேதுவாகுமென்றபடி. அப்போது கடைசியில் எதற்காகப் புரஸ்கார மென்னில் உத்தரம் வைகல்யேति. अङ्गपञ्चकाद्यनुष्ठानம் நடந்திருந்தாலும் அதில் அநவதாநமோ அபசப்தப்ரயோகமோ சொல்மாற்றமோ காயிக ப்ரணாமாதிகளில் வைகல்யமோ இருந்தால் எல்லாம் ஆசார்யஸம்பந்தகௌரவத்தாலே ஈச்வரன் பொறுப்பானென்றபடி. ப்ரபத்தி செய்வது குற்றமாகாமற்போனாலும் தனக்குக் கர்த்ருத்வமிருப்பதாக நினைப்பது குற்றமாகையால் அதன் பரிஹாரத்திற்காகலாமென்ன அருள்கிறார் இவ்விதி. அந்த தோஷம் ஆசார்யபுரஸ்கார மென்கிற க்ரியையிலும் இருப்பதால் வாளாவிருப்பதே தகும். ஸ்வதந்த்ர கர்த்ருத்வ புத்திதானே தோஷமாகும்; பராதீநமாய் ஆசார்ய

இப்படிப் பராதீநகர்த்ருத்வம் ப்ராமாணிகமாகையாலே, 'ஆத்மாவுக்குக் கர்த்ருத்வமில்லாமையாலே ஸ்வரூபம் தெளிந்தவனை நிஷித்தகர்மங்களில்ஒன்றும் லேபியாது' என்கிற பக்ஷமும் நிரஸ்தம். முமுக்ஷுவுக்குச் சொன்ன பால்யம் பாலக்ருத்யங்களான காமசாராதிகளன்று, ஸ்வமாஹாத்ம்ய-அநாவிஷ்காரமாத்ரமென்னுமிடம் 'अनाविष्कुर्वन् अन्वयात्' என்கிற ஸூத்ரத்திலே ஸமர்த்திதம். 'अनिष्टमिष्टं मिश्रं च', 'यस्य नाहंकृतो भावः' இத்யாதிவசன

---

புரஸ்காரத்தில் கர்த்தாவாகை தோஷமன்றென்னில்—இப் பரிஹாரம் ப்ரபத்திவிஷயத்திலும் ஸமானமாகும்.

பக்தி ப்ரபத்தி கர்த்ருத்வம் தோஷமே யாகுமென்பதே ஸாம்ப்ரதாயிகம் என்ற விஷயம் நிரஸிக்கப்பட்டது. ஏகதேசிகள் விஹிதகர்மகர்த்ருத்வம் தோஷமாமென்றவர் நிஷித்தகர்மங்களால் லேபம் வராதென்றும் கூறினர். அதற்குக் காரணம் தனக்குக் கர்த்ருத்வமிராமையைத் தான் தெளிந்திருப்பதே யென்பர். அதை நிரஸிக்கிறார் இப்படி இதி. கீழே ஆத்மாவுக்கு கர்த்ருத்வத்தை ஸ்தாபித்ததால் "அது இராமையாலே" என்றது தவறு. கர்த்ருத்வமில்லையாகில் எபபோதுமே லேபிக்காது. ஸ்வரூபம் தெளிந்தவனுககே லேபமில்லை யென்ற வசனம் எங்ஙனே? बाल्येन तिष्ठासेत् என்று பாலக்ருத்யங்களான காமசார-காமவாத காமபக்ஷங்களைச் செய்துகொண்டு பக்தியைச் செய்யச் சொன்னதால், நிஷித்த கர்மம் லேபியா தென்னலாமே யென்னில்—அந்த பால்ய மானது பால க்ருத்யமே; ஆனாலும் காமசாராதியன்று. 'नाविरतो दुश्चरितात्' இத்யாதியால் அது நிஷித்த மாகிறதே—யுவாவாயிருப்பவன் தனக்கு அபிஜன-வித்யா-தனாதிகள் இருந்தாலும் இராமற் போனாலும் இருப்பதாகக்கொண்டு மாஹாத்ம்ய ஆவிஷ்காரம் செய்வான் பாலனாயிருப்பவன் தனக்கு அவை யிருநதாலும் அவற்றால் கர்வப்பட்டு தற்புகழ்சசி செய்து கொள்ளமாட்டான். அதுபோல் பக்தனும் ப்ரபந்நனும் வ்யவஹரிக்க வேண்டுமென்றே बाल्येन तिष्ठासेत् என்பது உபநிஷத்தில் உரைக்கட்பெற்றது. अनाविष्कुर्वन्. தன் மாஹாத்மயத்தை ஆவிஷ்கரிக்காமல் வெளிக்காட்டாமலிருந்து கொண்டு உபாயத்தி லிழிந்திருப்பான். अन्वयात्—அதுவே சாஸ்தரத்திற்குப் பொருந்தியிருப்பதா லென்று (3-4-49) ஸூத்ரார்த்தம். விவேகிக்கு புத்தி பூர்வபாபம் தோஷமாகா தென்பதற்கு ஸ்பஷ்ட ப்ரமாண முள்ளதென்ற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார் अनिष्टमिति. गीता 18—12. यस्येति—18—17. ஆதி பதத்தால் 'सुखदुःखे समे......नैवं पापमवाप्स्यसि', 'न द्वेष्ट्यकुशलं कर्म', இத்யாதிகளைக் கொள்வது. अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम्। भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित्॥ त्याग-संन्यास பதங்களுக்கு ஸாத்விகத்யாகம் பொருள், ஸாத்விகத்யாகம் செய்யாதவர்களுக்கு கர்மபல மான அநிஷ்டமும் இஷ்டமும் கலந்ததும் உண்டாகும். அநிஷ்ட பலம் நரகாதி. இஷ்டபலம் ஸ்வர்காதி. இரண்டும் கலந்த பலன் பூலோகத்தில் பசு—புத்ராதி. த்யாகம் செய்கிறவர்களுக்கு இப் பலன்கள் உண்டாகா. என்றபடி "விதை விதைத்தால் விரும்பினாலும் விரும்பாமற்போனாலும் முளையுண்டாவது போல் அந்தந்த கார்யத்தைச் செய்தால் இவன் விரும்

ங்கள் बुद्धिपूर्व-उत्तराघविषयங்களல்ல வென்னுமிடம் प्रमाणविरोधம்வாராமைக்

பாமற் போனாலும் பலன் வந்தே தீரும். நிஷித்த கர்மபலமான நரகம் இவன் விரும்பியா வருகிறது; அது போல்" என்று கேள்வி, 'கர்மத்திற்கு நித்யமாக அநுஷ்டானமும் அந்தந்த பலனுக்காகக் காம்யமான அநுஷ்டானமும் 'यावज्जीवम्'. 'स्वर्गकामः' இத்யாதி ஸித்தமாகையால் काम पदादिகளிருப்பதால் விரும்பினால் தான் பலன், வேறு பலனை விட்டு பகவத்ப்ரீதியையே விரும்பினால் அதே உண்டாகும், ஆகையால் கர்மாநுஷ்டானம் செய்வதாலேயே ஸம்ஸார बन्धமென்று நினைக்கவேண்டா' என்று பரிஹாரம். இங்கே ப்ரக்ருத மென்னவெனில்—दृष्टफलனைப் போலே அநிஷ்ட பலனுமில்லை யென்றிருக்கிறதே; நிஷித்த கர்மத்திற்கு தானே அநிஷ்ட பலன். அதனால் ஸாத்விக த்யாகத்துடன் செய்கிறவனுக்கு நிஷித்த கர்மபலமான நரகாதி வராதென்று தெரிவதால் நிஷேதம் இவன்விஷயமன்றென்று ஸ்பஷ்டமாகிறது நிஷித்த ஸுராபாநாதி கர்மம் செய்கிறவன் அக்காலத்திய அல்ப்ப பலனுக்காகவே செய்வதால் ஸாத்விக த்யாகம் செய்வானோ என்னில்—அதற்குஸாத்விகத்யாகமில்லைதான் ஆனாலும்விஹிதகர்மத்தை ஸாத்விகத்யாகத்துடன் செய்கிறவனுக்கு வசந बलத்தாலே நிஷித்தகர்மத்தால் வரும் அநிஷ்டமுமில்லை யென்று கொள்ளவேண்டுமென்று ஏகதேசியின் ஆக்ஷேபம். இதற்கு முன் உள்ளதான न द्वेष्ट्यकुशलं कर्म என்றதில் प्रामादिकமான—அபுத்தி பூர்வகமான பாபத்தையே கொன்வதென்று गीताभाष्यத்தில் ஸ்தாபித்திருப்பதால் இந்த வசநமும் புத்தி பூர்வமாகாத उत्तराघ விஷயம்; அவ்வாறு சொல்லாமல் இங்கு வேறு रीतिயிற் சொன்னதால் வேறு கருத்தும் தெரிகிறது. ஸாத்விக த்யாகம் செய்யும் முமுக்ஷு விஷயத்தில் அதற்கு முன் செய்த காம்யகர்மங்களும் நிஷித்தகர்மங்களும் உபாயத்தால் நாச்யமாகையால்பலனை யளிக்கா என்றும் பொருள் கொள்ளலாம். இப்போது உத்தராக விஷயமேயன்று என்றதாகும். அநிஷ்ட பலத்தையும் ஸாத்விக த்யாகத்துடன் செய்த கர்மவிஷயத்திலேயே கொண்டுமிவ்வாறு உரைக்கலாம்—ஸகல காம்ய கர்மங்களையும் கேவல பகவத் ப்ரீதிக்காகச் செய்ய சாஸ்த்ரமிருப்பதால் ஐஹிக ஆமுஷ்மிக இஷ்டத்திலேயே முடிகிற காம்யகர்மங்களைப் போல் श्येनेनाभिचरन् यजेत என்கிற अभिचारयागத்தையும் பகவத் ப்ரீதிக்காக ஒருவர் செய்தால் அதனால் சத்ருவதை யென்கிற பலன் ஸித்திக்காது. அதனால் அதன் மூலமான அநிஷ்டத்திற்கும் இடமில்லை யென்றவாறு. அப்போது இந்த ச்லோகம் अघ விஷயமே யன்று என்றதாகும். यस्य नाहङ्कृतो भावः बुद्धिर्यस्य न लिप्यते । हत्वापि स इमान् लोकान् न हन्ति न निबध्यते என்று மூவுலகங்களையும் வதைத்தாலும் பாபமில்லை யென்றதே. இது புத்தி பூர்வமான உத்தராகந்தானே என்னவேண்டா. சாஸ்த்ர விஹிதமான யுத்தாதிகளில் நடக்கும் ஹநந விஷயமாகையாலே अघ விஷயகமே யன்று. ச்லோகார்த்தமாவது—எவனுக்கு अहङ्कृतः-ஸ்வதந்த்ராத்மாபிமானத்தாலுண்டாக்கப்பட்ட भावः-நான் இதற்குக்

ாக सत्वादिகளிலே समर्थिக்கப்பட்டது. 'हत्वाऽपि' என்றதுவும் धर्मयुद्धादिविषयम्.

उपभुक्तौषधन्यायादुत्तरापथ्यमर्दनम् । अनन्यपरनिर्बाधश्रुतिस्मृतिशतैर्हतम् ॥ मन्वादिகளும்

'जीवितात्ययमापन्नो योऽन्नमत्ति यतस्ततः । आकाश इव पङ्केन न स पापेन लिप्यते ॥'

'प्राणसंशयमापन्नो योऽन्नमत्ति यतस्ततः । लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥'

---

கர்த்தா என்கிற புத்தியானது न இல்லையோ, यस्य बुद्धिः—எவனுடைய புத்தியானது न लिप्यते–'இதனால் எனக்குப் பலனுண்டு; இக்கர்மம் எனது என்ற பற்றற்றதோ; फलत्याக மமதாத்யாகங்களுடன் கூடியதோ என்றபடி அவன் हत्वापि–தர்மயுத்தத்தில் மூவுலகையும் புத்திபூர்வகமாகக் கொன்றாலும் வேறென்ன செய்தாலும் தன்னைக் கர்த்தாவாக நினையாமையாலே ஹநநாதி கர்த்தாவாகமாட்டான்; न निबध्यते—அவனுக்கு பந்தமுமில்லை அமுமுக்ஷுவாய் ராஜ்யாதி பலனுக்காக தர்மயுத்தம் செய்தாலும் பாப லேபமில்லையே; இங்கென்ன விசேஷ மென்னில்—அவனுக்கு ராஜ்யாதி பலன் கிடைப்பதால் ஸம்ஸாரபந்தமுண்டு. தர்மயுத்தாதி ஸ்வதர்மத்லிருக்கும் க்ஷத்ரியனுக்கு அந்தந்த வர்ணத்தாருக்குத் தம் தர்மாநுஷ்டாந பலனாக ஸ்வர்கலோக ஸ்தாநம் உண்டாகையாலும் ஸம்ஸாரபந்தமாம். ஸாத்விக த்யாகத்துடன் தர்மயுத்தம் செய்தவனுக்கு அத்தகைய கர்மபலனில்லை யாதலால் ஸம்ஸார பந்தமில்லை; மோக்ஷமே யென்று ச்லோகார்த்தம். बहुசாஸ்த்ர விரோதமாவது 'नाविरतो दुश्चरितात्', 'आहारशुद्धौ सत्त्वशुद्धिः' இத்யாதிவிரோதம். हत्वा என்றது நிஷித்த ஹிம்ஸையன்றென்கிறார் हत्वापीति । प्रामादिकமான பாபமும் उत्तराघந்தானே; அதுமட்டும் முன் அனுஷ்டித்த உபாயத்தாலெப்படி போகும்? முன்னே கொள்ளப்பட்டு अपथ्यदोषம் போக்குகின்ற மருந்தும் சில உண்டு; அவை போலெனில்—அது போலவே புத்தி பூர்வ பாபத்தையும் போக்கலாமென்ன அருளுகிறார்—उपभुक्तेति. இங்கு अपथ्यசப்தத்திற்குப் பாபம் பொருள், முன்னே கொள்ளப்பட்டு, பின்னை அபத்யங்களையும் बाधकமாகாதபடியாக்குகின்ற மருந்தைப் போல் ப்ரபத்தியும் உத்தராघमर्दनமாகட்டுமென்பது अनन्यपर–வேறு பொருள் சொல்லவாகாத. निर्बाध–சொன்ன பொருளைக் கொண்டால் விரோதமுமில்லாத பல நூற்றுக்கணக்கான ச்ருதி ஸ்ம்ருதிகளாலே அடிக்கப்படும். எதற்கும் த்ருஷ்டாந்தம் கிடைக்கலாம். சாஸ்த்ர விரோதமுள்ள போது தர்க்கம் குதர்க்கமாகும். ப்ரபந்நனுக்கு யமலோக ப்ராப்தியை மட்டும் 'இல்லை' யென்றது इहैव केचित् उपप्लवा भवन्ति; अपायसंप्लवे सद्यः प्रायश्चित्तं समाचरेत्, शान्तिफाहारमेव सेवेत, இத்யாதிவசநங்கள் உள. पूर्वभुक्तौषधेन न्यायादुत्तरापथ्यमर्दनम् । न्यायः स इह निर्बाधश्रुतिस्मृतिशतैर्हतः॥ எனவிருக்கும்?

ப்ரஹ்மவித்துக்கு புத்திபூர்வ உத்தராகம் லேபியாதென்றால் மந்வாதிகள் 'ப்ராணனுக்கு அபாயம் வரும் தருணத்திலிருப்பவனுக்கு மட்டும் நிஷித்தாந்நபோஜநத்தால் பாபலேபமில்லை, சேற்றால் ஆகாசம் போலும், நீரால் தாமரையிலைபோலும் நிர்லேபனாகவேயிருப்பான்' என்றுசொன்னதுசேராது.

என்று நியமித்தார்கள். இது ப்ரஹ்மவித்துக்கும் துல்யமென்னுமிடம் 'ஸர்வான்னாநுமதிஶ்ச ப்ராணாத்யயே தத்தர்ஶநாத்' என்கிற ஸூத்ரத்திலே த்ருஷ்டாந்தரூபேண ஸூசிதமாயிற்று.

ஆகையால் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு இல்லையென்றுதல் பாரதந்த்ர்யஜ்ஞானமாத்ரத்தைக் கொண்டாதல் புத்திபூர்வோத்தராகம் ஒரு படிக்கும் லேபியாதென்கையும், இத்தைப் பற்றப் புந:ப்ரபதநம் வேண்டா வென்கையும் பரபக்ஷமாம்.

இவ்விடத்திலே சிலர் 'வ்ரஜ' இத்யாதிவிதிகளை அந்யபரங்களாக்கி,

योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते । किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

यमो वैवस्वतो राजा यस्तवैष हृदि स्थितः । तेन चेदविवादस्ते मा गङ्गां मा कुरून् गमः ॥

---

அவ் வசநம் பொதுவானதால் அப்ரஹ்மவித்விஷயமாகட்டுமே யென்ன. ஸர்வ விஷயமென்பதற்கு ப்ரமாணம் காட்டுகிறார் இது இதி. ஸர்வாந்ந 3.4.27 ப்ராண வித்யாநிஷ்டனுக்கு 'न वै किञ्चिदनन्नं भवति' என்று எந்த அந்நமும் போஜ்யமாகலாமென்றது ப்ராணோபாய காலத்திலே யாகும்; தத்தர்ஶநாத்—ப்ராண வித்யாநிஷ்டனுக்கு மேம்பட்ட ப்ரஹ்மவித்தான உஷஸ்திக்கே ஆபத்காலத்திலேயே, யானைப்பாகனுக்கு போஜநமாயிருந்த குல்மாஷத்தின் போஜநம் ஸம்மதமாயிருந்ததை சாந்தோக்யத்தில் காண்பதால். 'न वा अजीविष्यं इमान् अखादन्' என்று இதை உண்ணுமற் போனல் என்னல் ஜீவிக்கவாகாதென்றாரே. நிகமநம் செய்கிறார் ஆகையால் இதி. ஆத்மாவுக்குக் கர்த்ருத்வமில்லை யென்பது தவறு. அதனால் அதைக் காரணமாக்கலாகாது. பாரதந்த்ர்ய ஜ்ஞாநமுண்டு. அது பாபலேபத்திற்கு பாதகமாகாது. பாரதந்த்ர்ய ஜ்ஞாநமிருந்து தானே கைங்கர்யம் செய்கிறான். அதனால் ஈச்வரனுக்கு உவப்பு என்கிற பலன் ஸித்திக்கவில்லையா. அதுபோலென்றபடி. பரபக்ஷமாம் இதி. அலேபகரின் பக்ஷ ரீதியாகுமென்றபடி.

இனி மூன்றாவது விஷயம்—ஶரணம் வ்ரஜ என்பது விதியன்று. ஆத்மாவுக்கும் ஈச்வரனுக்குமுள்ள சேஷசேஷி பாவ ஜ்ஞாநந்தானே மோக்ஷஸாதநம். அது பதிம் விஶ்வஸ்ய இத்யாதி வாக்யங்களைக் கேட்ட போதே வருவதால் அதற்கு விதி வேண்டா. அந்த ஜ்ஞாநம் போதுமென்பது பஹுப்ரமாண ஸித்தமென்கிற பக்ஷத்தை நிரஸிக்கிறார் இவ்விடத்திலே சிலர் இதி. அந்ய பரங்களாக்கி—விதியில் தாத்பர்யமில்லை; இமமர்த்தம் ஜாநீஹி என்றவிடத்திற் போல் அவதாநத்திற்காக விதிப்ரயோகம். வாக்யத்தினால் வரும் ஜ்ஞாநம் இந்த்ரியாதிகளால் வரும் ஜ்ஞாநம் போலே. தானே வரக்கூடியது புருஷதந்த்ரமன்று என்பர். அதற்கு ப்ரமாணவாக்யங்கள்—ய:—இதி. அந்யதா ஸந்தம்—பரமாத்மாவுக்கு சேஷமாயிருக்கிற ஜீவாத்மாவை அந்யதா—ஸ்வதந்த்ரமாக எவன் நினைக்கிறானோ அந்த ஆத்மாபஹாரம் செய்த கள்ளனால் செயயப்படாத பாபமேது என்றது பா. உத்யோக 42.35. யம இத்யாதி 8-92. யம: நியமிக்கின்றவனும் ராஜா—ராஜாதிராஜனும் வைவஸ்வத:—ஸூர்யமண்டலத்திலிருந்து கொண்டே உன்னு

आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च सदा स्मर' इत्यादिகளில் तात्पर्यगतियையும் परा-मर्शியாதே இவற்றைக் கொண்டு शास्त्रजन्यसम्बन्धज्ञानமொழிய வேறு முமுக்ஷு-வுக்கு अनुष्ठेयமா யிருப்பதோர் உபாயமில்லை யென்பார்கள். இது अखिल श्रवणादि-विधि-स्वारस्य-विरुद्धம். रागप्राप्त-श्रवण-मननங்களாலே सिद्धமான शास्त्रजन्यज्ञानத்தை विधिக்கவும் வேண்டா. अविधेयज्ञानத்தை मोक्षसाधनமாகச் சொல்லுவார்க்கு विधिविरोधादिदोषங்களும் வருமென்று साधित्तதிறே. ஆனபின்பு सर्वविद्या-निष्ठரான முமுக்ஷுக்களுக்கும் பொதுவாய்ப் परम्परया उपकारकமான जीव-परमात्म-सम्बन्धज्ञानம் சாஸ்த்ரத்தாலே பிறந்தவனுக்கு, நம்முடைய स्वामियாய் निरतिशय-भोग्यனான श्रियःपतियைப் प्रापिக்கைக்கு வழி எது என்கிற उपायाकाङ्क्षै பிறந்த வளவில், இங்கே அவ்வோ अधिकारिविशेष—अनुरूपமாக विधिக்கப்படுகிற ज्ञाना-

---

டைய ஹ்ருதயத்திலுமிருப்பவன் எவனோ அவனோடு உனக்கு விவாதமில்லை யாகில் கங்காதி தீர்த்தங்களுக்கோ குருக்ஷேத்ராதி திவ்ய தேசங்களுக்கோ போகவேண்டியதில்லை. அது ஜ்ஞாநம் பெறுதற்கான சுத்திக்கு ஏற்பட்டது ஜ்ஞாநமுண்டான போது விசுத்தி. வேறு மோக்ஷத்திற்காகச் செய்யவேண்டியதொன்றுமில்லை. आत्मेति விஷ்ணு தத்துவம். स्वभावम्—இயற்கை யாகவுள்ள आत्मदास्यं—ஜீவாத்மா அடிமையாம் தன்மையையும் हरेः स्वाम्यं च—பகவான் ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் எப்போதும் நினைத்திரு. வேறு செய்யவேண்டியதில்லை யென்றது என்று பூர்வபக்ஷியின் கருத்து. பராமர்சியாதே இதி. இந்த வசநங்களில் ஸம்பந்த ஜ்ஞாநத்தைவிட வேறு உபாயமில்லையென்று சொல்லவில்லை. ஸம்பந்த ஜ்ஞானமெப்போதும் வேண்டுமென்றது; அது பக்த ப்ரபந்நர்களுக்கு உபாயபூர்த்திவரையிலும், கைங்கர்ய மாக ஏதேனும் செய்யும்போதும் அவச்யமாமென்பதினாலேயாம். பூர்வபக்ஷியின் கருத்துக்கு दोषம் கூறுகிறார் இது இதி. ஆதிபதத்தால் கர்மயோக ஜ்ஞாந யோக க்ரஹணம். 'अधिकोपदेशात्तु बादरायणस्यैवं तद्दर्शनात्' என்று शास्त्रजन्यज्ञानத்திற்கு மேம்பட்டது உபாய பூத ஜ்ஞாநமென்றும், नाना शब्दादिभेदात् என்று அது சப்தாந்தராதிப்ரமாணங்களாலே பலவிதமாகப் பிரிக்கப்பட்டதென்றும் ஸூத்ரபாஷ்யாதிகளில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. शास्त्रजन्यज्ञानத்தையே விதிக்கலாமே யென்னலாகாதென்கிறார் रागेति, ஸாங்கவேதாத்யயநம் செய்தவனுக்கு அங்கங்கு வாக்யார்த்த ஸந்தேஹம் வருவது ஸஹஜமாகையாலே அதை விலக்கப் பிறரிடம் ச்ரவணமும் மநநமும் தானே வரும். இப்படி रागप्राप्तமாகையால் அது விதேயமாகாதென்று ஸ்ரீபாஷ்யஸித்தம். विधेयமாகா மற்போனாலும் அதே மோக்ஷஸாதநமாகலாமென்றால் அதுவும் பாஷ்யத்திலே போக்கப்பட்டதென்கிறார் अविधेयेति. साधित्तது= ஸ்ரீபாஷ்யகாரர் ஸாதித்தருளினபடி प्रापिக்கைக்கு= அடைவதற்கு, இங்கே=गीतादिகளிலுள்ள விதிவாக்யங்களிலே. ज्ञानान्तरங்கள்-अविधेय ज्ञानத்தைவிட வேறானவை. ப்ரபத்தியானது ஆத்ம ஸமர்பணந்தானே, அது சேஷத்வ ஜ்ஞாநமே, அதற்கு ஆவ்ருத்தியுமில்லை, ஆக அவிதேய ஜ்ஞாநமே யாகுமென்பதைப் பரிஹரிக்

ஸாதநங்கள் भक्तिप्रपत्तिகள். அவற்றில் ப்ரபத்தியாவது–'यद् संरक्षणतयाऽर्प्यते' इत्यादि களிற் படியே ஸபரிகரமான ஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம். இது संबन्ध-अनुसन्धानगर्भமாக வேண்டுமென்கைக்காக ஸம்பந்தஜ்ஞானம் ப்ரபத்தியென்று சொன்னார்களத்தனை. இப் ஸாங்கப்ரபத்தியின் ஸ்வரூப-பரிகர-அதிகாராதிகளை முன்பே பரக்கச் சொன்னோம்.

சாதனமும் நற்பயனும் நானே யாவன்.
 சாதகனு மென்வயமா யென்னைப் பற்றும்.
சாதனமுஞ் சரணநெறி யன்றுனக்குச்
 சாதனங்க ளிந்நிலைக்கோ ரிடையி னில்லா.
வேதனைசேர் வேறங்க மிதனில் வேண்டா.
 வேறெல்லாம் நிற்குநிலை நானே நிற்பன்
தூதனுமா நாதனுமா மென்னைப் பற்றிச்
 சோகந்தீ ரெனவுரைத்தான் சூழ்கின்றானே. 48.

---

கிறார் அவற்றில் இதி–यदिति. அஹிர்ஸம்ஹிதை 52 36. नीचीभूतो भवानस्मै यद् संरक्ष्यतयाऽर्प्यते । तद् कस्मा इत्यपेक्षायां विष्णवे स दृतीर्यते' என்ற ச்லோகத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் கடைசி விபக்தி வ்யாக்யாநத்தில் சொல்லப்பட்டபடி ப்ரபத்தி ஆத்ம ஸ்வரூப ஸமர்பணம் மட்டுமன்று; ரக்ஷ்யவஸ்துவாக அடைக்கலமாக ஸமர்ப்பணமாகும், ஆக ரக்ஷாபரஸமர்ப்பணமும் சேர்வதால் அதற்குப் பரிகரங்களும் சேர்ந்திருப்பதால் விதேயமான ஜ்ஞாநமே யாகும். முமுக்ஷு வின் ப்ரபத்தியில் ஸம்பந்தஜ்ஞாநம் அவச்யமென்பதற்காக உபாயம் ஆத்ம நிக்ஷேபம் ஆத்மஸமர்ப்பணமென்றெல்லாம் சொல்லுகிறதென்றதாயிற்று. இரண்டாவது பாதத்தின் உரை முற்றும்.

ஏகசப்தத்தால் குறித்த ஆறு பொருள்களைச் சேர்த்துப் பாட்டருளுகிறார் சாதனமும் இதி. உபாயமும் நல்ல உபேயமும் நானே யாவேன், प्राप्यस्यैव प्रापकत्वम्, ஸாதகனும்= அநுஷ்டிக்கிற ஜீவனும் என் வசம்ஆய்—எனக்கதீனனாயிருந்து என்னைப் பற்றும்—சரணமடைகிறான் அவனுக்கு ப்ராதாந்யமில்லை; स्वप्राधान्यनिवारणम्. சரணம் நெறி உம்—சரணாகதியும் உனக்கு ஸாதநமன்று—ஸாக்ஷாத் உபாயமாகாது. प्रपत्तेर्व्याजमात्रत्वम्, இந் நிலைக்கு—ஸ்வதந்த்ர ப்ரபத்தியாம் உபாயத்திற்கு, ஓர் இடையில் ப்ரபத்திக்கும் பலனுக்கும் இடையில் ஓரிடத்திலும் ஸாதனங்கள் இல்லா=வேறு உபாயம் இல்லை. த்வாரமாக ஸாத்யோபாயமிராமலேயே நான் உபாயமாகிறேன்: अन्योपायैरनन्वयः. வேதனைசேர்—சரியாகச் செய்யாமற் போனால் பலன் போய்விடுமே யென்ற வேதனைக்குக் காரணமான அங்கம் வேறு= ஐந்தங்களுக்கு மேலானது இதற்கு வேண்டா; तदङ्गेष्वप्यसंभवः.வேறு எல்லாம்-மற்ற ஸுருபாயங்கள் நிற்கும்நிலை=ஸாதிக்கும் கார்யத்திலே நானே நிற்பன் நான் ஒருவனே நிற்பேன்; सर्वावस्थासु अभिज्ञता-எல்லா நிலையிலும் நிற்பது தெரியும்படி தூதனும்ஆம் நாதனும் ஆம்-தூது செல்பவனும் ஸ்வாமியுமான; எம்பெருமான் ஸாரத்யத்திலிருப்பதால் அந்நிலை தோற்ற தூதனுமா மென்

இப்படிப் पूर्वार्धத்தாலே ஓர் अधिकारिविशेषத்துக்கு द्वयத்தில் पूर्वखण्डத்திலே अनुसन्धेयமாய், सर्वधर्मங்களுக்குமுள்ள प्रभावத்தையும் அவற்றுக்கு இல்லாத स्व-असाधारणप्रभावத்தையும் உடைத்தான सकृत्कर्तव्य- उपायविशेषத்தை अधि- कारिनैरपेक्ष्यादिविवरणपूर्वकமாக विधिத்து—उत्तरार्धத்தாலே द्वयத்தில் उत्तरखण्डத்தில் फलத்தை नमश्शब्दसंक्षिप्त- अनिष्टनिवृत्तिविवरणमुखத்தாலே அருளிச்செய்கிறான்.

இங்குப் पूर्वार्धத்தாலே अधिकारिकृत्यத்தை அருளிச்செய்தான்;. उत्तरार्धத்தாலே शरण्यனாய் स्वीकृतभरனான தன் कृत्यத்தை அருளிச்செய்து कृतकृत्यனான இவனைத் தேற்றுகிறான்.

இவ்விடத்தில் 'मोक्षयिष्यामि' என்கிற उत्तमனாலே 'நான்' என்று தோற்றுநிற்க, மிகுதியான 'अहं' என்கிற பதம் अर्थस्वभावத்தாலே सर्वपापविमोचनத்துக்கு உறுப்பான अघटितघटनाशक्त्यादिகளை விவக்ஷித்து सप्रयोजनமாகிறது.

---

பதற்கு सूतனுமாமென்ற பொருளுமாம், ஸகரம் தகரமாகும். என்னைப் பற்றி-என்னையாச்ரயித்து சோகம்தீர்-ஸம்ஸாரபந்தசோகத்தைத் தீர்த்துக் கொள் என உரைத்தான்=என்று உபதேசித்தவன் சூழ்கின்றான்=நம்மிடம் ப்ரபத்தியை எதிர்பார்த்து எப்போதும் விடாமலிருக்கிறானென்றபடி.

இனி மூன்றும்பாதம். 'पूर्वार्धத்தாலே ஓர் அதிகாரிவிசேஷத்திற்கு' என்றதற்கு விதித்து என்றவிடத்தில் அந்வயம். पूर्वार्धம் த்வயத்தில் पूर्व- खण्ड விவரணம். उत्तरार्धம் உத்தரखण्ड விவரணம். பூர்வார்த்தத்தில் சொன்னது முமுக்ஷு கார்யம். उत्तरार्धத்தில் ஈச்வர கார்யம். 'अहं என்ற சொல் எதற்கு? உத்தமபுருஷனாலேயே அக் கர்த்தா தெரியுமே. மேலும் बन्धमोक्षसर्वकार्यकारणமானவன் அஸாதாரண காரணமாகமாட்டான். ஆக அவன் ஒருவனே எப்படி கர்த்தாவாவான்' என்பதற்கு உத்தரம் இவ்விடத்தில் இதி. உறுப்பான— ஸாதகமான, எந்த ஆகாரங்களோடு சேர்ந்து அவன் மோக்ஷகாரணமாமாகிறானோ அந்த ஆகாரங்களை விசேஷணமாகக் கொள்வதற்காக अहं என்ற சொல்லென்றபடி. शक्त्यादि என்கிற ஆதிபதத்தால் ஸர்வஜ்ஞத்வாதிகளைக் கொள்வது. अघटितघटनाசக்தியால் மோக்ஷமளிக்கிறானென்றால் विरुद्धधर्मங்களையும் சேர்க்கிறானென்றதாகிறதே; அப்போது ஜைநமத ப்ரவேசமாமே யென்ன அதை விவரிக்கிறார் अपराधमिति. அநாதிகர்மமாகிற அபராதத்தையும் மோக்ஷத்தையும் சேர்த்தால்தான் ஜைநமதமாகும். அபராதத்தை விலக்குகிறபடியால் அதில்லை. अघटितघटनமென்பதற்கு இதுவரையில் சேர்க்கப்படாததைச் சேர்ப்பித்தல், ஒருவராலும் சேர்க்கப்படமாட்டாததைச் சேர்ப்பித்தல் என்று பொருள். ஸம்ஸாரத்தில் உச்சநீச நிலைகள் மாறிமாறி வந்து கொண்டிருக்கும். அவற்றில் ஒவ்வொன்றும் முன்னமே பலகால் இருந்து மீண்டும் வருவதாகும். அதுபோல் ஸஞ்சித ஸர்வகர்ம நாசமாகிற தர்மம் ஆகாது; யுக்திக்கும் ஸர்வகர்ம க்ஷயம் எளிதில் பொருந்தாது. न भुक्तं क्षीयते कर्म. 'अनुभवितुमघौघं नालमागामिकालः' என்று சிந்திக்கிற போது ஸர்வகர்மக்ஷயம் வராதென்றே சொல்லவாம். ஆக அது अघटितम्. அதை ஈச்வரன்

'अपराधம் பண்ணினவனை விலங்கிட்டுவைத்த समाधिकदरिद्रனை நான் ஒரு வ்யாஜத்தாலே उल्लसितकारुण्यனாய் अपराधத்தைப் பொறுத்துவிடும்போது விலக்கவல்லாரில்லை; வேறொருவனாலே இவனை मुक्तனாக்கவுமொண்ணாது' என்று இங்குத் தாத்பர்யம். இவ்வர்த்தம் 'मोक्षदो भगवान् विष्णुः'.

'पशवः पाशिताः पूर्वं परमेण स्वलीलया । तेनैव मोचनीयास्ते नान्यैर्मोचयितुं क्षमाः ॥'

इत्यादिகளிலே प्रसिद्धம். இவ் अहं என்கிற पदத்தில் सहजकारुण्यादिகள் பேரணியாய்ப் ப்ரபத்திபடியாக வந்த प्रसादविशेषம் இளவணியாய் निरंकुशமான स्वातन्त्र्यம் सर्वविरोधिनिरसनार्थமாக முன்னே நிற்கிறது. அதெங்ஙனே யென்னில்—सहजकारुण्यம் अल्पव्याजத்தைக் கொண்டு अनन्त-अपराधங்களை अनादरिக்கும்படியான प्रसादத்தை உண்டாக்குகிறது. இப் प्रसादविशेषம் कारुण्य-उपश्लिष्टமாய்க்கொண்டு निरंकुश-स्वातन्त्र्यத்தை आश्रितருடைய सर्वविरोधिनिरसनத்துக்கு

---

घटनம் செய்கிறான் தனது ஸ்வாதந்த்ர்யத்தாலே யென்றபடி. விலங்கிட்டு வைத்த ஸமாதிகதரித்ரன் என்றதால் ஸ்வதந்த்ரனென்று சொன்னதாம். பொறுத்துவிடும்போது—பொறுக்கிறபோது. விலக்கவல்லாரில்லை யென்றதால் ஸ்வாதந்த்ர்ய காருண்யங்களுடைய स्थैर्यம் சொன்னபடி. வேறொருவனாலே இத்யாதியால் அந்த ஸ்வாதந்த்ர்யாதி अहं மென்ற ஈச்வரனுக்கே யென்றதாம். मोक्षद இதி. 'सर्वेषां च परो विष्णुः समोऽनेन कश्चन । मोक्षदोऽप्येक एवासौ भृत्य(कृत?) कृत्यस्य मोक्षदः ॥" என்ற வசநம் ஸாரதீபிகையிலுள்ளது. पशव இதி விஷ்ணுதத்வம் 1-2-10. परमेण ஸர்வேச்வரனால் தன் லீலையாக அநாதியாகப் பசுக்கள் (ஜீவர்கள்) கர்மமாகிற கயிற்றால் கட்டப்பட்டன. அப் பசுக்கள் அவனாலேயே விடுவிக்கப்பட வேண்டியவை, பிறரால் விடுவிக்கப்படா என்றபடி. ஸித்தோபாயசோதநாதிகாரத்தில் ஸ்வாதந்த்ர்யம் मोक्षத்திற்கு ப்ரதாநஹேதுவென்றும் காருண்யம் மோக்ஷத்திற்கு ப்ரதாநஹேதுவென்றும் சொல்லியிருக்க, இங்கே சக்தியாகிற ஸ்வாதந்த்ர்யத்திற்கு ப்ராதாந்யம் கொண்டதெங்ஙனே; காருண்யம் நிர்ஹேதுகமாகில் ப்ரபத்தியெதற்காக; ப்ரபத்தியினாலாம் ப்ரஸாதம் வேண்டுமாகில் காருண்யமெதற்காக என்ற சங்கைகளைப் பரிஹரிக்கிறார் இவ்விஷயாதியால். अहं என்று கர்த்ருத்வம் சொல்லப்பட்டதால் அது ஸ்வாதந்த்ர்யமாகையால், நிரங்குசஸ்வாதந்த்ர்யத்திற்கு இங்கே ப்ராதாந்ய விவக்ஷை, நிர்ஹேதுககாருண்ய மிராவிட்டால் பக்தி-ப்ரபத்திகளாகிற வ்யாஜங்களேற்படா. அப்போது ஸ்வாதந்த்ர்யத்தால் ஸம்ஸாரமே முடிவற்றதாகும். அதனால் शरणवरणव्याजसापेक्षமான मोक्ष என்ற விடத்தில் காருண்யம் கருதப்பெறும். ஸஹஜகாருண்யாதிகள் பேரணி மூலபலமாகும். போர்புரிவதற்கு மூலபலத்தினின்று பிரித்து அனுப்பப்படும் சிறு ஸேனை இளவணி; அது வெற்றி பெறுவிக்கும். அது போல் காருண்ய மூலமாக வந்த ப்ரபத்தியாலான பகவத்ப்ரீதியை ப்ரதானமாகக்கொண்டு ஸ்வாதந்த்ர்யமானது விரோதிகளை யழிக்கிறது. காருண்யமில்லையாகில் வ்யாஜம் சிறிதாயிருப்பதால் ஸர்வகர்மக்ஷயம் செய்யுமளவுக்கு ஈச்வரன் ப்ரீதி பெறான்.

உறுப்பாக்குகிறது. இப்படி सर्वपापविमोचनத்துக்கு अपेक्षितமான सर्वशक्तித்தாலும் विशिष्टனான ஈச்வரனுடைய निरपेक्षकर्तृत्वतत्परமான अहंशब्दத்திலே अवधारणம் फलितம்.

'त्वा' என்றது 'न त्वेवाहं' முதலான उपदेशपरम्परैயாலே चिदचिदीश्वर-तत्त्वत्रय-विवेகம் பிறந்து ऐश्वर्यादि पुरुषार्थங்களினுடைய अल्पत्व-अस्थिरत्वादिदोषங்களைத் தெளிந்து मत्प्राप्तिरूपமான परम-पुरुषार्थத்தைப் பெறவேண்டுமென்று अभिनिविष्टனாய் இதுக்கு उपदिष्टமான दुष्कर-उपायान्तरத்தில் துவக்கற்று. प्राप्यனாய் सर्व-विरोधि निराकरणक्षमனான என் பக்கலிலே भरन्यासம் பண்ணிக் कृतकृत्यனாய், கோரி(வி)ன फललाभத்தைப் பற்ற இனி ஒரு कर्तव्यान्तरத்தில் प्राप्तिயில்லாத உன்னை' என்றபடி.

இப்படி बन्ध-मोक्षहेतुவான मोक्षप्रदனையும், अशक्तனாய் அவன்பக்கலிலே न्यस्तभरனான முமுக்ஷுவையும் சொல்லி, மேல் 'सर्वपापेभ्यः' என்று बन्धकங்களைச்

---

ப்ரபத்தியினால் வந்த ப்ரீதியான "परदुःखनिराकरणेच्छै" யென்கிற காருண்யத்தோடு சேர்ந்து விரோதி நாசத்திற்குக் காரணமாகிறது. நாசம் செய்வதற்கு சக்த்யாதிரூபமான ஸ்வாதந்த்ர்யம் அவச்யம் வேண்டும். ஆக प्रधानहेतुः स्वातन्त्र्यविशिष्टा करुणा विभोः என்றபடி காருண்யம் असाधारणமாகையால் ப்ரதானம்; पापमोक्षणத்திற்கு முக்கியமாவதால் स्वातन्त्र्यம் ப்ரதானமென்றது. साधारणकारणமாகிலும், गुणादिसापेक्षனாகிலும் நிரபேக்ஷகர்த்தாவாவானென்கிறார் இப்படி இதி. 'व्रीहिभिर्यजेत' இத்யாதிகளில் நிரபேக்ஷகரணத்வம் போலே இங்கு நிரபேக்ஷகர்த்ருத்வம் ஸித்திக்கும். स्वर्गकामः என்றவிடத்திற் போல் விசேஷணமாகவே பிராட்டியும் சேர்வதால் இதனால் அவளை விலக்கியதாகாதென்றபடி. பக்தர்விஷயத்திலும் ஈச்வரன் இப்படி நிரபேக்ஷ கர்த்தாவாகையால் இது ப்ரபந்ந விஷயமாகையால் நிரபேக்ஷ ரக்ஷகத்வம் இங்கு முக்ய தர்மமானதால் அந்த ரக்ஷகத்வம் நிரபேக்ஷமாயிருக்கிறதென்பதை अहं சப்தத்தாலே குறிக்கிறாரென்றதும் இந்த ஸ்ரீஸூக்திக்கு அர்த்தமாயிருக்கலாம்.

त्वा என்பதற்கு ப்ரபந்நனான உன்னை யென்று பொருள். இது गीताசரம ச்லோகமாகையால் गीतैயில் உபதேசாரம்ப ச்லோகமான न त्वेवाहं என்று தொடங்கிச் செய்த உபதேசங்கள் மூலமாக இந்நிலைக்கு வந்த உன்னை யென்று பொருள் கூறுகிறார். 'न त्वेवाहं जातु नाऽऽसं न त्वं नेमे जनाधिपाः । न चैव न भविष्यामः सर्वे वयं अतः परम् ॥' என்பதற்கு நானோ நீயோ மற்றவரோ இதற்கு முன் ஒரு ஸமயமும் இல்லையென்பதில்லை, இனி இருக்கப் போவதில்லை யென்பதுமில்லை என்று பரமாத்மாவைப் போல் ஜீவாத்மாக்களையும் நித்யமாக உபதேசித்தார். கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களை யுபதேசிக்கிறவர் அதற்கு சேஷமாகத் தத்த்வத்ரய விவேசநம் செய்து எட்டாம் அத்யாயத்தில் ஐச்வர்ய கைவல்யங்களைக் கூறி அதன்மேல் பக்தி யோகத்திற்கு தோஷமற்ற மோக்ஷபுருஷார்த்தத்தைப் பலனாக உபதேசித்து பக்தி செய்ய வாகாதே யென்று வாட்டத்துடன் அர்ஜுநன் இருப்பதைக்

சொல்லுகிறது. पापமாவது—शास्त्रवेद्यமான अनर्थसाधनம். अनर्थமாவது—प्रतिकूल प्राप्तियும் अनुकूलनिवृत्तियும். இங்குப் पापशब्दம் முமுக்ஷுவைப்பற்ற अनिष्टफलங்களான सांसारिकपुण्यங்களையும் சொல்லுகிறது.'एते वै निरयास्तात स्थानस्य परमात्मनः' என்கையாலே स्वर्गादिகளும் முமுக்ஷுவுக்கு நரகமாகையால் இவனுக்கு स्वर्गहेतुவோடு नरकहेतुவோடு வாசியில்லை. ஆகையாலேயிறே முமுக்ஷுவுக்குப் பாபங்களை விடச்சொல்லுகிறாப் போலே 'त्रैवर्गिकांस्त्यजेत् धर्मान्' என்று विधिக்கிறது. 'இரு வல்வினைகளுஞ் சரித்து' என்கிறபடியே सुकृत-दुष्कृतங்கள் இரண்டும் முமுக்ஷுவுக்கு निराकरणीयங்களாகவிறே श्रुतिस्मृतिகள் சொல்லுகிறன.

இப்படிப் புண்யபாபரூபமான बन्धकारणத்தைப் पापशब्दத்தாலே சொல்லி बहुवचनத்தாலே पुण्यपापங்களினுடைய आनन्त्यத்தை விவக்ஷிக்கிறது. இனி सर्वशब्दத்தாலே விசேஷிக்கிறதென் என்னில், प्राप्तिविरोधियान கர்மத்துக்குக்

---

கண்டு இதில் ப்ரபத்தியை உபதேசித்தார் ஆக இதைச் செய்தே க்ருத க்ருத்யனாகும் உன்னை யென்று அதன் பொருளைக் கொள்வதென்றபடி.

सर्वपापेभ्यः என்றதால் புண்யத்தினின்று விடுபடமாட்டா என்ன, புண்யத்தையும் பாபத்தில் சேர்ப்பதற்காக அதற்கு லக்ஷணம் கூறுகிறார் பாபமாவது இதி. சாஸ்த்ரவேத்யமான இதி. அக்நி அநிஷ்டமான दाहத்திற்கு ஸாதநமாயிருப்பது உலகத்திலேயே தெரியும். அதற்கு சாஸ்த்ரம் வேண்டா. சாஸ்த்ரத்தினால் அநிஷ்ட ஸாதநமாக உபதேசிக்கப்பட்டதே பாபமாகும். अनिष्टமாவது—துக்க ப்ராப்தியும் ஸுகநிவ்ருத்தியும். தான் தர்மம் செய்ததை வெளியில் கூறினால் धर्मः क्षरति कीर्तनात् என்றபடி தர்ம பலன் போயிடும். துக்கபதத்தினாலே துக்கம் துக்க ஹேது இரண்டையும் கொள்க. அதற்காக ப்ரதிகூல என்றது. ஸுகம் ஸுகஹேது இரண்டையும் கொள்வதற்காக अनुकूल என்றது. ஸ்வர்கம் எப்படி துக்கமாகுமென நிரூபிக்கிறார் एते இதி. பாரதம் சாந்தி 196-6. கீழே உரைக்கப்பட்டது. ஸ்வர்கஹேது வோடு நரகஹேதுவோடு = ஸ்வர்கஹேதுவானபுண்யத்திற்கும் நரகஹேதுவான பாபத்திற்கும். त्रैवर्गिकान् தர்மம் அர்த்தம் காமம் என்கிற புருஷார்த்தங்களுக்காகவான. இரு இதி. திருவாய் 1.5 10. சார்ந்த= அநாதியாகஜீவனிடம் விடாமற்சேர்ந்திருக்கிற புண்யம் பாபமென்கிற வலிய வினைகளை அழித்து விஷயங்களிலே பற்றை யறுத்துத் தன் விஷயத்திலேயே மனத்தைவைக்கும்படி திருத்தி நமக்காக மோக்ஷத்தையும் பரிஷ்கரிப்பதற்காக ஜ்ஞாந ஸ்வரூபனாய் அநந்தனாய் சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியுமாகிறான் நீண்ட வ்யாமோஹமுடைய பெருமான் என்றதாகும் பாட்டின் பொருள். மற்றது ப்ரபந்தரக்ஷையில்- ஆநந்த்யந்தை இதி. பஹுவசநத்திற்கு பஹுத்வம் அர்த்தமாகையால் எண்ணிறந்தவற்றிலும் அதிருப்பதால் ஸர்வசப்தமில்லாமலே எல்லாவற்றையும் கொள்ளலாமே ஸர்வ சப்தம் வீணென்ன உரைக்கிறார் இனி இதி. सर्वधर्मान् என்ற விடத்திற் போல் ஸபரிகரமாகக் கொள்வதற்காக ஸர்வசப்தம். அவித்யை கர்மம்

காரணமாயும் கார்யமாயும் வருகிற அவித்யையையும் விபரீதவாஸனையையும் விபரீத ருசியையும் ஸ்தூல-ஸூக்ஷ்மரூபப்ரக்ருதிஸம்பந்தத்தையும் பாபராஶியிலே சேர்க்கைக்காக.

இப்படி 'ஸர்வபாபேப்ய:' என்கிற விரோதிவர்க்கத்தையெல்லாம் 'மநோவாக்காயை:' என்று தொடங்கி மூன்று சூர்ணிகையாலே ஶப்தமாகவும் ஆர்த்தமாகவும் அருளிச்செய்தார்.

'क्षपयित्वाऽधिकारान् स्वान् शश्वत् कालेन भूयसा । वेधसो यत्र मोदन्ते शङ्कराः सपुरन्दराः ॥' என்றும், 'यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम्' என்றும் சொல்லுகிறபடியே

---

வாஸனை, ருசி, (ஆசை) ப்ரக்ருதிஸம்பந்தம் என்கிற சக்ரத்தில் கர்மத்தை பாபசப்தத்தாலே க்ரஹித்து ஸர்வ சப்தத்தாலே மற்ற அவித்யாதிகளைக் கொள்வது. அவித்யையாவது—விபரீதஜ்ஞாநம். அது கர்மத்திற்கு மூலமுமாகும்; கார்யமுமாகும். இவற்றைக் கொள்வது கத்யத்தினின்றும் தெரிகிறதென்கிறார் மேலே. சூர்ணிகையாவது-சூர்ணம்; வாக்யகண்டம் 'மநோவாக்காயை: என்றாரம்பித்து அநந்தாபசாரான் ஆரப்தகார்யாந் அநாரப்தகார்யாந் க்ருதாந் க்ரியமாணான் கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வான் அஶேஷத: க்ஷமஸ்வ' என்று கர்மங்களையும், அநாதி காலப்ரவ்ருத்த விபரீதஜ்ஞாநம் என்று 2வது சூர்ணிகையில் அவித்யையையும், 'மதீய—அநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம் மாயாம் தாரய' என்று ஸ்த்தூல ஸூக்ஷ்ம ப்ரக்ருதி ஸம்பந்தத்தையும் ஸ்பஷ்டமாக அருளினார். வாஸனையும் ருசியும் அர்த்தாத் ஸித்திக்குமென்றபடி இந்த கத்யத்தில் ஆரப்தகார்யாந் என்று கர்மங்களுக்கு விசேஷணமிருக்கிறது. இது சேராதென்று கேள்வி க்ஷபயித்வா என்று தொடங்கி என்னில் என்றவரையில். ஶஶ்வத்-அடிக்கடி வரும் வேதஸ: ப்ரஹ்மாக்களும் ஶங்கரா:-ருத்ரர்களும். ஸபுரந்தரா:-இந்த்ரர்களும் கூட பூயஸா காலேந—வெகு நீண்டகாலம் ஸ்வாந் அதிகாராந் தம் தம் பதவியில் அதிகாரங்களை க்ஷபயித்வா—அநுபவித்துப் போக்கிய பிறகு யத்ர—எந்த வைகுண்டத்தில் மோதந்தே—பூர்ணாநந்தாநுபவம் பண்ணுகிறார்களோ என்று இந்த லக்ஷ்மீ தந்த்ர 17-18 ச்லோகார்த்தம் யாவதிதி ப்ரஹ்மஸூத்ரம் 3-3-31 யாவததிகாரம்—அவரவர்கள் பதவியில் அதிகாரமுள்ள வரையில் ஆதிகாரிகாணாம்—அதிகாரம் பெற்றிருப்பவர்களுக்கு அவஸ்திதி: இங்கு இருப்பாகும்; பிறகே மோக்ஷம். ஸஞ்சிதம் ப்ராரப்தமென்று கர்மம் இருவிதம். ப்ராரப்தகார்யமென்பதையே ப்ராரப்தமென்கிறது. கர்மஸமுதாயத்தினின்று ஒரு பாகத்தை யெடுத்து இதனை யநுபவியென்று எந்த பாகம் ஜீவனுக்களிக்கப்பட்டதோ அதன் கார்யம் ஆரம்பிக்கப்பட்டபடியால் அது ப்ராரப்த கார்யமாகும். மற்றது ஸஞ்சிதமெனப்படும். பக்தியோகமானது ஸஞ்சிதகர்மத்தை மட்டும்போக்கும். ப்ராரப்த கார்யமான கர்மம் அநுபவிக்கப்பட்ட பிறகே மோக்ஷமாகையால் பக்தியோக நிஷ்டன் அதன் முடிவு வரையில் பக்தியுடன் காத்திருக்க வேண்டும். மரணகாலத்திலா அர்ச்சிராதிமார்க்க மத்தியிலா புண்யபாபங்கள் விடப்படுகிறன என்ற விசாரத்தில் மரணகாலத்திலென்று ஸாதிக்கும் ஸாம்பராயாதிகரணத்திலே, வஸிஷ்டாதிகளுக்கு ஒரு தேஹம் போய் வேறு தேஹம் வருவது தெரிவதால் புண்யபாப ஹாநியில்லையே யென்று கேட்டு, வஸிஷ்டாதி ரிஷிகளும் ப்ரஹ்மருத்ர இந்த்ராதிகளும் ஒவ்வோர் அதிகாரம் பெற்

சிலர்க்கு अधिकार-अवसानத்திலே மோக்ஷமாயிருந்தது. अधिकारिகளல்லாதார்க்கும் 'अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः' என்கிறபடியே प्रारब्धकर्मभोगावसानத்திலேயாயிருந்தது. இப்படியிருக்க இவ்விடத்தில் आरब्धकार्यத்தை க்ஷமிக்கையாவது என்? என்னில்,—

फलप्रदानप्रवृत्तமான கர்மத்திலும் जन्मान्तर—दिवसान्तरस्थित्यादिகளுக்கு आरम्भகமான அம்சமும் இஸ் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கு अनिष्टமாய் அத்தையும் பற்ற இவன் शोकिக்கில் அவ்வம்சத்தையும் ஈச்வரன் க்ஷமிக்கும். அப்போதே मोक्षம்

---

திருப்பதால் அவ் அதிகார முடிவுவரையில் அவர்கள் புண்யபாபங்கள் விடப்படா; மற்றவருக்கே விலகுமென்று यावदधिकारமென்ற ஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. अनारब्धकार्याधिकरणத்தில், புண்யபாபங்களெல்லாம் பக்தி யோகனித்தர்களுக்கு லேபிக்கிறதில்லை அவர்கள் ஜீவிப்பதெப்படி யென்னில்—குயவன் குடம் செய்ய சக்ரம் சுழற்றுகிறவன் சுழற்றுவதை விட்ட பிறகும் சக்ரம் சுழல்வதுபோல் கர்மங்கள்கழிந்தபிறகும் ஸம்ஸ்கார बलத்தாலே देह யாத்ரை நடக்கிறதென்று பூர்வபக்ஷம் வர—புண்யம்பாபமென்கிற கர்மம் தவிர வேறொன்றால் ஸர்வதேஹயாத்ரா நிர்வாஹம் கூடாமையால் எல்லா வினைகளும் லேபியா என்பதில்லை என்று கூறப்பெற்றது. ஸூத்ரார்த்தமாவது—पूर्वे—பக்தியோகம் உண்டாவதற்கு முன்னே யிருந்த புண்யபாபங்கள் अनारब्धकार्ये एव—ப்ராரப்த கார்யமென்ற கர்மம் நீங்கலாக ஸஞ்சிதமானவை மட்டுமே பக்தனுக்கு ஸம்பந்தப்படாமலிருக்கும். तदवधेः—ப்ராரப்த கார்யமென்கிற अवधि= எல்லை இருப்பதால்; तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये अथ संपत्स्ये என்று சரீரத்திலிருந்து விடுபடும் வரையில் எனக்கு இங்கே தாமதமுண்டு என்று பக்தனுடைய अनुसंधानம் தெரிவதால் என்றபடி. இதனால் பக்தியோகத்தால் ப்ராரப்தம் நசியாதென்று தெரிகிறது. அதிகாரிகளல்லாதார்க்கும் = சில அதிகாரஸ்தானங்களைப்பெற்ற வஸிஷ்டாதிகள்போக மற்ற பக்தி யோக நிஷ்டருக்கும்; भोगाव-सानத்திலே என்ற भोगபதத்தினால் இந்த 4-1-15 ஸூத்ரம் போல் 4-1-19 भोगेन त्वितरे क्षपयित्वा अथ संपद्यते என்ற इतरक्षपणाधिकरणஸூத்ரமும் குறித்ததாகும். முன்னே ப்ராரப்த கார்யம் பக்தியால் நசியாதென்றார். இங்கே அந்த ப்ரராரப்த க்ார்யமான கர்மம் பல சரீரங்களிலும் தொடரும்; அப் புண்ய பாபங்களைக் கழித்த பிறகே மோக்ஷம் பெறுவானென்றதால் ப்ராரப்தகர்மபலனாகப் பல பிறவிகளுமுண்டென்றது. ஆதிபரதர் பக்தி யோக நிஷ்டர்பிறகு மானாகவும் ப்ராஹ்மணனாகவும்பிறந்தே மோக்ஷம் பெற்றாரென்று ப்ரஸித்தம் இவ்வளவு வசனங்களைக் கொண்டு, 'உபாயு' மாஹாத்ம்யத்தால் ப்ராரப்த கார்யமான கர்மம் கழியாதென்று ப்ரமாண ஸித்தமாக இருக்க, गद्यத்திலே ஸ்ரீபாஷ்யகாரர் आरब्धकार्यान् क्षमस्व என்று ப்ரார்த்தித்தது தகுமோ என்று கேள்வியாம்.

ஸமாதாநவாக்யம் फलेत्यादि பக்தியால் ப்ராரப்த கர்மம் நசியாதென்பது திண்ணம். இங்கு आरब्धकार्यान् क्षमस्व என்று ப்ரார்த்தித்ததிலிருந்தும்

பெற்றன்றி தரிக்கமாட்டாத आर्ति—अतिशयமுடையார்க்கு அக்கணத்திலே प्रारब्धकार्यமான கர்மத்தை विशेषமாக க்ஷமிக்கும். ஆகையால் आरब्धकार्यத்தை க்ஷமிக்கவேண்டுமென்று அபேக்ஷிக்கக் குறையில்லை.

'இவ்விடத்தில் ப்ரபத்திகாலத்துக்கு முன்புள்ளவற்றை 'कृतान्' என்றெடுத்துப் பின்புள்ளவற்றை 'करिष्यमाणान्' என்று சொல்லாநின்றது; ப்ரபத்திகாலத்தில் பண்ணுவன சில பாபங்கள் காண்கிறிலோம்; இப்படியிருக்கக் க்ரியமாணங்களை க்ஷமிக்கையாவது என் என்னில்—'प्रारब्धोऽपरिसमाप्तश्च वर्तमानः' என்கிற प्रक्रियैயாலே प्रपत्तिக்கு முன்பே தொடங்கிப் பின்பே தலைக்கட்டவேண்டும்படி चिरकालसाध्यமாயிருக்குமவற்றையும் तत्क्षणத்தில் प्राणादिप ங்களையும் இங்குக் க்ரியமாணங்களென்கிறது. करिष्यमाणங்களாவன—பின்பு தொடங்குமவை இப்படிக் क्रियमाण—एकदेशங்களாயும் करिष्यमाणங்களாயுமுள்ள उत्तराघத்தில் बुद्धिपूर्वகமல்லாதவை ஈச்வரன் க்ஷமிக்க ஆஷியாதே போம்.

---

பக்திநிரபேக்ஷமான ஸ்வதந்த்ர ப்ரபத்தியே பாஷ்யகாரர் அநுஷ்டித்ததென்று தெளியலாம். साध्यभक्तिस्तु सा हन्त्री प्रारब्धस्यापि भूयसी என்றதால் ப்ரபத்தியானது ப்ராரப்த கர்மத்தையும் நசிப்பிக்குமென்பது ஸ்பஷ்டம். இப்படியானல் ப்ரபத்திக்கு உத்தரக்ஷணத்திலேயே மோக்ஷம் வரவேண்டாவோ. अत्रैव श्रीरङ्गे सुखमास्स्व என்று எம்பெருமான் அருளியது சேருமோ என்னில்—ஸஞ்சிதம் முழுமையும் நசிப்பிக்கும் ப்ரபத்தி ப்ராரப்தகர்மத்தில் இவன் வெருக்கும் பாபத்தை மட்டும் நசிப்பிப்பதே ப்ரமாண ஸித்தமானதால் ஆர்த்தனுக்கு உத்தரக்ஷணத்தி லென்றும், दृप्तனுக்கு தேஹாவஸானத்தில் வேண்டுகிறவனுக்கு ஜந்மாந்தரம் பெருதபடி என்றவாறும் கொள்ள வேண்டும். அந்தந்த அம்சமே आरब्धकार्यान् क्षमस्व என்பதற்குப் பொருள். आर्त्यतिशयமாவது—ஸம்ஸாரத்தில் அடிச்சூடு அடியோடு பொறுக்கமாட்டாமை.

இனி அங்கே क्रियमाणान् என்று கூறியது கூடாதென்று சங்கித்துப் பரிஹரிக்கிருர் இவ்விடத்தில் இதி प्रारब्ध இதி. अपाक्षीत् पक्ष्यति पचति என்று भूतभविष्यद्वर्तमाननिर्देशங்களிலே पचति என்ற வர்த்தமாந ப்ரயோகமெப்போதென்ற விமர்சத்தில்—பாகமாவது, அடுப்பில் பாத்திரம் வைப்பது முதல் அந்நம் செய்து முடிக்கிற வரையிலுள்ள பல்வகை வ்யாபார ஸமுதாயமாய் அவை முழுமையுமானபிறகு भूतप्रयोगமாய் அடுப்பில் வைப்பதையே தொடங்காதபோது भविष्यत्प्रयोगமாய் இடையில் நடக்கும் வ்யாபாரங்கள் எவ்வளவு காலத்தில் ஸாத்யமோ அவ்வளவு காலத்திலும் வர்த்தமாந ப்ரயோகமாம். அதைச் சொல்லுகிருர்—प्रारब्धः ஆரம்பிக்கப்பட்டதும் अपरिसमाप्तश्च—முடிவு பெருததுமான வ்யாபார ஸமுதாயம் வர்த்தமாநமெனப்படுமென்று. இதுபோல் ப்ரபத்தி செய்கிறவன் வெகுநாளில் செய்துமுடிக்கக்கூடிய ஒரு நிஷித்த கார்யத்தை யாரம்பித்து நடுவில் ப்ரபத்தியையும் அநுஷ்டித்து, பிறகே அதைப் பூர்த்தி செய்யும்படி யிருந்தால் அதை क्रियमाणपापமென்கிறது. அதில் ப்ரபத்திக்கு முன்னான அம்சம் ப்ரபத்தியால் போகும், பின்னான அம்சம் விவேகத்தால்

बुद्धिपूर्वங்களானவை ப்ரபந்நனுக்கு
'प्रायश्चित्तिरियं सात्र यत् पुनः शरणं व्रजेत्' என்கையாலே पुनःप्रपत्तियாலே फलिக்கும்
'ஸர்வேச்வரன் தான் மோக்ஷம் தர நினைக்கும்போது पातकங்களும் விலக்காகா' என்றும் வார்த்தையும் बुद्धिपूर्व-उत्तराघத்தில் निग्रहமும் வாராது; प्रायश्चित्तமும் வேண்டா என்றபடி யன்று, प्रसादनத்தாலே அவன் प्रसन्नனால் மோக்ஷம் पर्यवसायि யென்றபடி. இதுக்கு இப்படி ஈச்வரன் पुनःप्रपत्तिயாகிற प्रायश्चित्तத்திலே மூட்டுகிறதுவும் क्षमाफलம்.
प्रियतमैயுடம்பிலழுக்கும், வத்ஸத்திநுடைய வழு(ழு)ம்பும் போலே ப்ரபந்நனுடைய दोषமென்கிற வார்த்தையும் दुष्टரும் शरणागतராநால் ஈச்வரன் கைவிடாதே திருத்துமென்றபடி. இங்ஙனன்றிக்கே बुद्धिपूर्व-उत्तराघமும் ஈச்வரனுக்கு भोग्यமென்று விவக்ஷிதமாகில் ப்ரபந்நனுக்கு இதுவே यथाशक्तिसंपाद्यமாம்.
प्रकृतिविशेषस्वभावத்தாலே अपराधங்கள் बुद्धिपूर्वकமாக வந்தாலும் पुनःप्रपत्ति

---

விடப்பட்டால் விசாரமே யில்லை. புத்திபூர்வக மாகில் ப்ராயச்சித்தத்தாலே போம், முழு அம்சமும் ப்ராமாதிகமாகில் முன்ப்ரபத்தியினாலேயே போம்.

சிலர் புத்திபூர்வ உத்தராகமும் மோக்ஷார்த்த ப்ரபத்தியாலே போமென்று நினைத்துச் சொன்ன வார்த்தை சாஸ்த்ர விருத்தமாகையால் அதற்கு வேறு கருத்துக் கூறுகிறார் ஸர்வேச்வரன் இதி. 'चितः परमचिद्धासे प्रपत्तिरपि नोपधिः। विपर्यये तु नैवास्य प्रतिषेधाय पातकम्'' என்று கூறி, ஸர்வேச்வரனைப் பெறத் தான் முயலுகிறானாகில் இவன் செய்யும் ப்ரபத்தியும் மோக்ஷஸாதநமாகாது; ஈச்வரனே இவனை ஸ்வீகரிப்பதாகில் இவன் செய்யும் மஹாபாதகங்கூட அதற்கு விலக்காகாதென்று உரைப்பர். இந்த ச்லோகத்தினால் புத்திபூர்வ உத்தரபாபம் லேபிக்காதென்று ஸித்திக்காது. ஸாத்விக த்யாகமின்றி, தன்னையே கர்த்தாவாகக் கொண்டு ப்ரபத்தி செய்தால் அது மோக்ஷஸாதநமாகாதென்றும் அவ்வாறின்றி यथावत्தாகச் செய்தால் பின்னால் செய்யும் பாபமும் லகுசிக்ஷையாலோ புந: ப்ரபத்தியாலோ போமாகையால் மோக்ஷார்த்த ப்ரபத்திக்கு விலக்காகாதென்றும் கருத்தாம். இதுக்கு= புத்திபூர்வகபாபத்திற்குப் பலனிருந்தாலும் க்ஷமிக்கிறானென்னலாம்; இவனிடம் பரிவினால் ப்ராயச்சித்தத்தில் மூட்டுவதும்: லகுசிக்ஷையே செய்வதும் க்ஷமையின்பலனென்னலாமே.

சிலர் புத்திபூர்வ பாபமும் ஈச்வரனுக்கு போக்யமாகுமென்று அதியாகச் சொல்வர். அதை நிரஸிக்கிறார் மேலே. அதற்கு அவர் சொல்லும் த்ருஷ்டாந்தம் ப்ரியதமை இத்யாதி. அழுக்கு போக்யமாகை ஸ்பஷ்டமாவதற்காக வேறு த்ருஷ்டாந்தம் வத்ஸத்தினுடைய இதி. கன்றினுடைய வளும்பாவது— வழும்பு. அழுக்கு. கன்றை ஈனறவுடன் அதின் உடம்பிலுள்ள வழுவலை பசு நாக்கால எடுத்துப் புசிக்கும். दोषமென்றதாலேயே, தோஷமாயினும் ப்ரபந்ந ஸ்வீகாரத்திற்கு बाधकமாகாதென்றறிவித்ததாம். இது भोग्यत्वपर மன்று; यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः என்றாற் போலே பசித்தவன் விரைவாக உண்பது போல் விரைவில் ஸம்ஹரிப்பானென்று அறிவிப்பதற்காகச்

பண்ணுதார் பக்கலிலும்

'देवं शार्ङ्गधरं विष्णुं ये प्रपन्नाः परायणम् । न तेषां यमसालोक्यं न च ते नरकौकसः ॥',

'यस्मिन् कस्मिन् कुले जाता यत्रकुत्रनिवासिनः । वासुदेवरता नित्यं यमलोकं न यान्ति ते॥'

इत्यादिகளிற்படியே नरकादिகள் வாராதபடி பண்ணி राजपुत्रापराधத்திற் போலே लघुप्रत्यवायத்தாலே கண்ணழிக்கிறதுவும் क्षमाविशेषம். பாபங்களுக்கு दृष्टप्रत्यवायங்களும் नरकादिप्रत्यवायங்களும் உண்டாயிருக்க नरकादिகள் இவனுக்கில்லையென்று विशेषवचनங்கள் சொன்னால் दृष्टप्रत्यवायங்களுக்கு बाधकமில்லை. वचनविरोधத்தில் ந்யாயம் प्रवर्त्तியாது.

सापराधருமாய் अनुतापமுமின்றிக்கே पुनःप्रपत्तियும் பண்ணாதே யிருப்பார் சில ப்ரபந்நர்க்கு उपक्लेशங்களாகச் சொன்ன काणत्वादि—दृष्टप्रत्यवायங்கள் காணாதிராநின்றோமென்கை मन्दचोद्यம். அவர்களுக்கும் अपराधादितारतम्यத்துக்கு ஈடாக नानाप्रकार—साध्वस—अनुभवம், उपयुक्तज्ञानमान्द्यம், இங்குள்ள भगवदनुभवरस—सङ्कोच—विच्छेदங்கள், भगवद्भागवतकैङ्कर्यविच्छेदம், भगवदपचार—भागवतापचाराதிகள், शिष्टगर्हा—परिष्कारादिகள், सुकृतविशेषनाशம், सात्त्विकानादरம், मनोरथभङ्गक्लेशம் என்றிப்புடைகளில் ஏதேனுமோர் उपक्लेशरूपமான प्रत्यवायம் காணலாம். अलसकरण—कृत्याकरणादिरूपங்களான नानाविधपापங்களுக்கு இப்படி नानाविध—दृष्टप्रत्यवायफलत्वமும் श्रुतिகளிலும் मन्वादिधर्मशास्त्रங்களிலும் इतिहास—पुराण-भगवच्छास्त्रादिகளிலும் प्रसिद्धம். ஆகையால் काणत्वादि—उपक्लेशविशेष—उदाहरणம் उपलक्षण மென்னுமிடம் वाक्योपक्रमத்தில் समुदायनिर्देशादिகளாலே सिद्धம்.

वचनबलसिद्धமாய் बुद्धिपूर्व-उत्तराघफलமான उपक्लेशवर्गத்தைப் प्रारब्ध-दुर्विपाक फलமென்று निष्कर्षिக்க விரகில்லை. இவை यथासंभवம் उभयविधकर्मத்தாலும்

---

சொல்லும் வார்த்தையாகும். प्रकृतिविशेष-என்பதற்கு தன்னோடு ஸம்பந்தப் பட்ட ப்ராக்ருத தேஹாதி விசேஷ என்று பொருள் देवमित्यादि ச்லோகங்கள் முன்னமே உரைக்கப்பட்டன. லகு ப்ரத்யவாயத்தாலே=லகுவான அநிஷ்ட பலத்தாலே; கண்ணழிக்கிறது=அஸாரமாக்குகிறது. दृष्ट ப்ரத்யவாயங்கள்= இங்கே காணக்கூடிய கேடுகள். तापत्रयं—आध्यात्मिक-आधिभौतिक, आधिदैविकங் கள், रस—सङ्कोचविच्छेदங்கள்—அநுபவத்தில் நசைக்குக் குறைவும் அடியோடு லோபமும்; शिष्टगर्हा. ஶிஷ்டர்களால் நிந்திக்கப்படுகையும், தங்களோடு சேர்க் காமல் விலக்கப் படுகையும். புடை—ப்ரகாரம். समुदायनिर्देशः. इहैव केचिदुपप्लवा भवन्ति என்கிற வாக்யம் விசேஷமாகச் சொன்ன काणत्वादिகளைவிட வேறு அநிஷ்டங்களையும் காட்டுவதாகும்; இல்லையேல் அது வீணாகுமென்று கருத்து. ப்ரபந்நனிடம் உத்தராகம் போல் ப்ராரப்தபாபமுமிருக்குமாகையால் இந்த काणत्वादिகள் அதன்பலனே யாகட்டுமே என்பதற்கு உத்தரம் அருளிச் செய்கிறார் वचनेति. इहैव என்பதற்கு இவ்வுலகிலேயே என்பதுபோல் இப்பிற வியிலேயே என்றும் பொருளாவதால் பாபமும் இப்பிறவியிலுண்டான தென்னல் தகும். लंघयन् शूलमारोहेत् இத்யாதி वचनबलமுமாம்.

வரும். ஆகையாலேயிறே बुद्धिपूर्व-उत्तराघத்துக்கு सात्त्विकर् அஞ்சிப்போரு(று)கிறது. இங்ஙனல்லாதபோது पुनःप्रपत्ति-विधायक-शास्त्रமும் அப்படிக்கு शिष्टानुष्ठानமும் पूर्वसंप्रदायமும் விரோதிக்கும்.

'अपचारानन्तरम् अनुतापம் பிறந்ததில்லையாகில் ज्ञानம் பிறந்ததில்லையாகக் கடவது' என்று(ற?) நஞ்ஜீயர் வார்த்தைக்கும் அனுதாபம் பிறவாதாருடைய ज्ञानशून्यத்திலே தாத்பர்யம். सोपाधिकங்களான भगवदभिप्रायभेदங்களுக்கு ஈடாக வரும் बुद्धिपूर्वापचारம் சிலர்க்குப் பிறவாது; சிலர்க்குப் பிறந்தவை अनुतापादिகளாலே கழியும் कठिनप्रकृतिகளுக்கு अनुतापமும் பிறவாது. ஆகையால் बुद्धिपूर्व-उत्तराघம் பிறந்தால் अनुतापத்தைப் पुनःप्रपत्ति பண்ணுதபோது उपक्रमம் சொல்லுகிற सुदर्शनादिகளின் கட்டளையிலே लघुव्यवायத்தாலே தீரும்.

विवेकिनां प्रपन्नानां धीपूर्वागस्यनुद्यमः । मध्यानामनुतापादिः शिक्षा कठिनचेतसाम् ॥

ஆனபின்பு ஒருபடியாலும் भगवन्निग्रहம் வாராமைக்காக बुद्धिपूर्वापराधம் परिहरणीयம்

---

சிலர் ज्ञानत्वादि வாக்யங்கள் प्रारब्ध கர்மவிஷயமே யாகும். உத்தராகத்தில் ப்ராயச்சித்தமில்லாத போது பூர்வ ப்ரபத்தி யில்லை யென்றே சொல்ல வேண்டும்; அவ்வாறு நஞ்சீயர்வார்த்தை யிருப்பதாலென்பர் उभयविध மும் என்பதற்காக அதை நிரஸிக்கிறார் अपचारेति—இது நஞ்ஜீயர் வார்த்தை. ஜ்ஞானம் பிறந்ததில்லை—உபாய பூதமான ஜ்ஞானம் முன்னமே யுண்டாகவில்லை யென்று பூர்வபக்ஷி சொல்லும் பொருள். भगवच्छेषत्वज्ञानम् दृढமாக விராமை அதன் பொருளென்று ஸித்தாந்தியின் அபிப்ராயம் ஜ்ஞானம் பிறந்ததில்லை யென்பதற்கு—ஜ்ஞானம் பிறக்கவில்லை யென்ற பொருளல்ல ஜ்ஞானம் பிறந்தது பின்னே திடமாயில்லை யென்றதாம்; ஜ்ஞானம் பிறந்தது பிறந்ததே. எல்லோரும் ப்ரபந்நராயிருக்கச் சிலருக்கே அநுதாபம் ஏன் என்பதற்கு உத்தரமாக இதை நஞ்ஜீயர் சொன்னது. இதை விரித்துரைக்கிறார் सोपाधिकங்களான இத்யாதியால். उपाधि யானை—பூர்வகர்மங்கள். ப்ரபந்நரில் சிலருக்கு அபராதமே வாராமையும் சிலருக்கு வந்து அநுதாபம் வருகையுமிருப்பது போல் சிலருக்கு அது வாராமையும் கூடுமென்றறிவிக்க மூன்று பிரிவுகளையும் சொன்னது. நரகம் போகாமை பக்ஷ ப்ரபந்ந ஸாதாரணமாவது போல் அதற்கு ப்ரதியாக இங்குக் க்லேசங்களை யநுபவிக்கையும் இருவருக்கும் உத்தராகத்திலுண்டென்கை உசிதம் அபராதப் புகாமை அநுதாபம், அதன் இன்மை என்ற மூன்று பிரிவுக்குக் காரணத்தைக் காரிகையால் விளக்குகிறார் विवेकिनामिति. प्रपन्नानां—ப்ரபந்நருக்குள் विवेकिनां—விவேகமுள்ளவர்களுக்கு धीपूर्वे आगसि—புத்தி பூர்வகபாபத்தில் अनुद्यमः ப்ரவ்ருத்தியே யில்லையாம்; मध्यानां—விவேகமில்லாதவராயினும் நெஞ்சுரப்பில்லாதவருக்கு अनुतापादिः—அநுதாபமும் ப்ராயச்சித்தமும்; कठिनचेतसां விவேகமில்லாமையோடு நெஞ்சிலும் உரப்புள்ளவர்களுக்கு शिक्षा தண்டனையாகும். ஆனபின்பு=உத்தராகம் தோஷமாகாதென்பதும் உத்தராகம் ப்ரபத்தியையழிக்குமென்பதும் இல்லை யென்றும் இலகுசிக்ஷையுண்டென்றும்

प्रीतिमेव समुद्दिश्य स्वतन्त्राज्ञानुपालने । निग्रहानुदयोऽप्यस्य नान्तरीयक एव वा ॥

இப்படி यथाशक्ति अपराधங்களைப் परिहरித்துக்கொண்டு போகா(ரா) நின்றால் भागवतापचारமும் அதுடையாரோடு संसर्गமும் போரப் परिहरणीयம்.

ब्रह्मवित्पापवर्गाणामनन्तानां महीयसाम् । तद्द्वेषिसंक्रमं जानन् त्रस्येत् तदपराधतः ॥

---

தீர்ந்தபிறகு : ஒருபடியாலும்-சிறிதுகூட ; புத்திபூர்வ அபராதமாவது-க்ருத்யகரணமும் க்ருத்ய அகரணமுமாகும். இரண்டையும் பரிஹரிப்பது நிக்ரஹம் தன்னிடம் வாராமைக்காக என்று இவ்வாக்யத்தின் பொருள். இதனால் க்ருத்ய கரணமென்கிற நித்யகர்மாநுஷ்டாநத்திற்கு நிக்ரஹ-அநுதயம் பலமென்று தெரிகிறது. இங்கே பகவத்ப்ரீதிக்காக நித்யகர்மாநுஷ்டாநமென்று ப்ரஸித்தமன்றோ அதற்காக ப்ரீதியும் பலனென்றால் இரண்டையும் உத்தேசித்து அநுஷ்டாநமென்றதாகும். अनेकोद्देशे वाक्यभेदः என்று மீமாம்ஸகர் சொல்லுவர். ஆகையால் நித்யகர்மாநுஷ்டாநத்தில் நிக்ரஹ அநுதயம் பலனாகுமா என்று கேள்வி எழும். இதற்காக ப்ரீதியே உத்தேச்யமென்றால் நித்யகர்மாநுஷ்டாநகாலத்தில் வேறு பாராயணாதிகளாலும் ப்ரீதியைப் பெறலாமே யென்று சங்கையாம். அதனால் நிக்ரஹம் வரும்; நித்யகர்மத்யாகத்தில் ப்ரத்யவாயமுண்டு என்றே உத்தரம் சொல்ல வேண்டும். ஆக நிக்ரஹ அநுதயம் உத்தேச்யம். ப்ரீதி ஆநுஷங்கிகமென்னலாமென்று இவ்வாக்யக் கருத்து. நிக்ரஹ அநுதயமென்பது அநிஷ்ட அபாவமாய் ப்ரீதி இஷ்டப்ராப்தியாயிருப்பதாலே அவற்றில் இஷ்டப்ராப்திக்கே முக்யபலத்வம் தகும். அப்போதுதான் கைங்கர்யத்வமும் ஸித்திக்குமென்கிற கருத்தாலே நிக்ரஹ அநுதயத்தை ஆநுஷங்கிகமாக்கி நித்யகர்மாநுஷ்டாநஸ்தலத்திலே ப்ரீதியே முக்யபலனென்று பக்ஷாந்தரம் கூறுகிறார் प्रीतिमेव இதி. பகவத் ப்ரீதியையே உத்தேசித்து ஸ்வதந்த்ரனான எம்பெருமானின் ஆஜ்ஞையை அநுஷ்டித்தால் ஈச்வரனுக்கு இவனிடம் நிக்ரஹம் உண்டாகாமையும் नान्तरीयक एव = இன்றியமையாததாய்த் தானே ஸித்திக்கிறது. க்ருத்யத்தையநுஷ்டித்தால் நிக்ரஹத்திற்குக் காரணமிராமையாலே நிக்ரஹ-அநுதயம் தானே ஸித்திக்குமே. இதனால் வரும்ப்ரீதி வேறொன்றால்வாராது. இங்கு वाकार மானது. ச்லோகத்திற்கு முன்னுள்ள வாக்யத்தில் கருதப்பெற்ற பக்ஷத்தோடு இதற்கு விகல்பத்தைக் குறிக்கும் இனி वाकारத்தாலே மூன்றாவது பக்ஷக்குறிப்புமாம் அதனால் ப்ரீதி என்கிற भावபதார்த்தமே நிக்ரஹ அநுதயமென்ற अभावபதார்த்தமாகு மென்று உத்தேச்ய மொன்றுதானென்றும் கூறலாமென்றதாயிற்று.

அபராதங்களில் பாகவதாபசாரம் கொடியதென்கிறார் இப்படி இதி. போரா நின்றால் = போகிறவர்களுக்கு என்றபடி. போரப் பரிஹரணீயம் = முக்யமாய் முழுமையும் பரிஹரிக்க வேண்டியது; அதற்குக் காரணம் கூறுகிறார் ब्रह्मेति अनन्तानां-ஸஞ்சிதங்களும் உபாயத்திற்குப் பிற்பட்டவைகளுமாய் எண்ணற்ற महीयसां மிகப்பெரிய பாகவதாபராதராசிகளுக்கு அவருடைய

सापराधेषु संसर्गेऽप्यपराधान् वहत्यसौ । वोढुमीश्वरकृत्यानि तद्विरोधादभीप्स(च्छ?)ति ॥

தன்னினைவில் விலக்கின்றித் தன்னை நண்ணார்
நினைவனைத்துந் தான்விளைத்தும் விலக்கு நாதன்
என்(ந்)நினைவை யிப்பவத்தி லின்று மாற்றி
யிணையடிக்கீ ழடைக்கலமென் றென்னை(ம்மை) வைத்து
முன்னினைவால் யான்(ம்)முயன்ற வினையால் வந்த
முனிவயர்ந்து முத்தி தர முன்னே தோன்றி

மரணகாலத்தில் அவரிடத்தில் த்வேஷமுள்ளவர்களிடத்தில் சேர்க்கையை யறிகின்றவனைப் त्रस्येत् அஞ்சவேண்டும். அதுபோல் सापराधेषु–பாகவதாபசாரப் படுகிறவர்களிடம் संसर्गेऽपि சேர்க்கையுண்டானாலும் असौ = இப்படிச்சேருகிற வன் அபராதங்களுக்கு ஆளாகிறான், ஆகையால் ஸம்ஸர்கமும் தகாது பாகவத ப்ரீதி பெறுகைக்காக அபராதிகளை விரோதிப்பதுமாகாதென்கிறார் वोढुमिति. तद्विरोधात्–அபராதிகளை இவன் விரோதிப்பானாகில்—அவர்களை சிக்ஷிக்க முன்வருவானாகில் ईश्वरकृत्यानि—ஸர்வேச்வரனுடைய செயல்களை वोढुं தான் சுமக்க விரும்புகிறவனாவான். அவர்களை தண்டிப்பது ஈச்வர னுடைய கார்யம். அதைத் தான் செய்ய முயன்றால் தன்னை ஸ்வதந்த்ரனாகவும் அவர்களுக்கு மேலதிகாரியாகவும் நினைத்ததாகிறது. அதுவும் தவறென்ற படி. अभीप्सेति என்பதற்கு அடைய விரும்புகிறானென்றே பொருளா கையால் அது பொருந்தாமையால் अभीच्छति என்றே சுத்தபாட மிருக்கலாம். अभीष्टे दुस्साधे இத்யாதி ப்ரயோகமும் உண்டே.

மூன்றும் பாதத்தின் பொருளைப் பாசுரத்தால் ஒருபடி அறிவிக்கிறார் தன் இதி. நாதன் என்ற வரையில் अर्ध சப்தார்த்தம். என்னை யென்ற வரையில் त्वा சப்தார்த்தம். இப் பாதத்தில் வாக்யம் முடியாமையால் மோக்ஷம் போகிறே னென்கிறார் என்று சொல்ல வாகாமல் வேறுவிதம் வாக்யத்தை முடிக்கிறார் முன் இத்யாதியால். எம்பெருமான் சொல்வதாக ச்லோகத்தின் இருப்பு அதைக் கேட்கும் அர்ஜுனனைப் போன்றவனுக்கு மூன்றும் பாதம் கேட்கும் போது நடமாடும் சிந்தைப்படி பாட்டின் அமைப்பு. தன்னினைவில்-- தன்னுடைய ஸங்கல்பத்தில், விலக்கு இன்றி--தடையிராமல்; ஸத்ய ஸங்கல்பனென்றபடி; தன்னை நண்ணார்--தன்னைக்கிட்டாதவர்களுடைய நினைவு அனைத்து உம்--மநோரதங்களை யெல்லாம் தான்விளைத்து உம்--கர் மாநுகுணமாக உண்டுபண்ணுவனாயிருந்தும். விலக்கும்-अन्यो हि अन्यत् चिन्तयति स्वच्छन्दं विदधाम्यहम् என்றபடி விலக்குகின்றவனாய நாதன்-ஸ்வாமியுமானவன், எல்லோரையும் அஸத்ய ஸங்கல்பராக்கித் தான் ஸத்ய ஸங்கல்பனாய் ரக்ஷிக்க உரிமையுடையவன், இ பவத்தில்--இந்த ஸம்ஸார விஷயமான என் நினைவை--எனது ஆசையை, இன்று--அஜ்ஞாதஸுக்ருதாதிகள் பலிக்க வான இப் பிறவியிலே மாற்றி--தன்விஷயமாகச்செய்து, இணை அடிகீழ் ஒன்றுக் கொன்றொத்த தன்திருவடிகளின்கீழே, அடைக்கலம்--ரக்ஷ்யவஸ்து

நற்னினைவால் நாவி(மி)சையுங் கால மின்றோ
நாளையோ வென்றுநகை செய்கின்றானே.

'मोक्षयिष्यामि' என்றது உனக்கு இஷ்டமானபோது முக்தனாக்குவன் என்ற படி. 'சில பாபங்களை 'न क्षमामि' என்கையும் இங்கே 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि என்கையும் விருத்தமன்றோ? ஆகையால் இது उपच्छन्दनமாமத்தனையன்றோ?' என்னில்–இவை இரண்டும் भिन्नविषयமாகையாலே विरोधமில்லை, 'न क्षमामि' என்றது

---

வாக, என்னை வைத்து பரந்யாஸம்செய்வித்து என்றபடி. இதற்கு முத்திதர என்ற விடத்தில் அந்வயம். முன் நினைவால்—முன் இருந்த க்ஷுத்ர ஃபல விஷயமான என் நோக்கினால் அல்லது தேஹாத்ம ப்ரமாதிகளால் யான் முயன்ற—நான் பண்ணின வினையால்—பாபம் மூலமாக, வந்த முனிவு—என்னிடம் அவனுக்குண்டான கோபததை, அயர்ந்து—மறந்து; விட்டு என்றபடி; முத்தி தர—மோக்ஷமளிப்பதற்காக அதில் என்னிஷ்டம் அறிவதற் காக. முன்னே தோன்றி--என்னோடு பேசுபவனாகி நல் நினைவால்--நன்மை பெறுதற்கான நல்ல எண்ணத்தினால்--நாம் இசையுங்காலம்=மோக்ஷம் பெற நான் அபேக்ஷிக்கும் காலம். இன்றோ நாளையோ--இன்றையதினமா மறுநாளா, இந்த ஜந்மத்தில் சேர்ந்தநாளா, பிற்பட்ட நாளா என்று நகை செய்கின்றான்=என்று கேட்பவனாகிச் சிரிக்கின்றான். இவ்வாறு மூன்றும் பாதம் கேட்கும்போது சிஷ்யருக்குத் தோன்றுமென்றபடி. ஸத்யஸங்கல் பனை பிரான் ஸம்ஸாரவைராக்யம் உண்டுபண்ணித் தன்னை யாச்ரயிக்கும் படி செய்து மோக்ஷமளிக்க முன்வந்து सर्वपापेभ्यः என்று சொல்லுகிறானாய் "நீ இங்கு எவ்வளவுகால மிருக்க விரும்புகிறாய்; எக்காலத்திற்கு மேலான காலத்தில் அநுபவிக்க வேண்டிய பாபங்களை விலக்க வேண்டுகிறாய், சொல்; சொன்னால் सर्व என்பதால் கழிக்க வேண்டிய அப் பாபங்களையெல்லாம் நான் கொள்ளவாகும்" என்று ஆச்ரிதன் இஷ்டம் கேட்பவனாகிறான். இது வரையில் என் நினைவை மாற்றியவன் இப்போது என்னிச்சைக்கு இணங்கி வருகிறான். என் நினைவு எப்படியும் நல்லதாயிருப்பதே அதற்குக் காரணம் சிரிப்பது ஏனென்னில், இந்நிலையிலும் நாமறிக்கிறானே யென்று பரிஹ ஸித்ததாம், விரைவில் இவன் நமக்குக் கிடைப்பானென்று ஸந்தோஷமுமாம், இப்பாட்டில் என் நினைவை இத்யாதிகளில் என்நினைவை என்ற வாறு பன்மைப்பாடமும் கொண்டுளர்.

பாட்டில் கூறியதற்கு தக்கவாறு மேற்பாதம் முதற்பதத்திற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார் मोक्षयिष्यामि இதி. உனக்கு இஷ்டமானபோது முக்தனாக்கு வன் அடுத்த க்ஷணமே யென்பதில்லை. பவிஷ்யத்காலத்தில் உனக்கிஷ்டமான எந்த ஸமயத்திலும் என்றபடி. उपच्छन्दन மாகும்=எம்பெருமானுடைய உக்தி களுக்கு இது விருத்த மாயிருப்பதால் இது இல்லாததையேறிட்டு ஏமாற்றிச் சொன்னதாகும். அப்படி சொல்வது ப்ரபத்தியில் ருசியையுண்டுபண்ணு வதற்காகவென்று சங்கை. न क्षमामि என்ற உக்திகளில் पञ्चपदाशेन= நாறு

पद्मपत्रशतेनापि न क्षमामि वसुन्धरे' 'उपचारशतेनापि न क्षमामि वसुन्धरे' என்றுப்போலே சொல்லுகிற போலியான प्रायश्चित्तान्तरங்களால் क्षमिப்பேனென்றபடி. இங்கு सर्वपापप्रायश्चित्तமாயிருப்பதோர் उपायविशेषத்தாலே எல்லாவற்றையும் क्षमिப்பேனென்கிறது. 'यदि वा रावणः स्वयम्' என்றிறே शरण्य—अभिप्रायமிருப்பது? இப்படி व्यवस्थितविषयமாக वचनங்கள்தாமே காட்டுகையாலே विरोधமில்லாமையால் இது उपलक्षणमात्रமன்று. இங்ஙனல்லாதபோது भक्तिप्रपत्तिरूप—मोक्षोपायங்களை विधिக்கிற शास्त्रங்களெல்லாம் अत्यन्तव्याकुलங்களாம்.

இங்குப் பாபங்களினின்றும் விடுவிக்கையாவது—अनादियான विपरीतानुष्ठानத்தாலே பிறந்த निग्रहाभिप्रायத்தை ஈச்வரன்தான் விடுகை. இந் निग्रहनिवृत्तियாலே निग्रहकार्यங்களான अविद्यादिகளெல்லாம் निवृत्तங்களாம். ஈச்வரனுடைய निग्रह-निवृत्तिயாவது—'मत्प्रसादात्' என்கிற अभिप्रायविशेषம். ஜீவனுக்கு

---

தாமரை இதழ்களால், उपचारशतेन= நூறு ஸத்காரங்களால் என்று விசேஷக்குறிப்பு இருப்பதால் அவற்றால் பொறுக்கவாகாத பாபமும் ப்ரபத்தியால் போக்கப்படும் பத்மபத்ராதிகளால் பொறுக்க வாகாத பாபத்தைவிட மிகக் கொடிய பாபம் செய்த ராவணனுக்கே சரணாகதி போதுமென்றானே. ப்ரமாணம் சொன்னதைப் பொய்யென்றால் சாஸ்த்ரம் அப்ரமாணமாகும்

இங்கு இதி. பாபங்களிலிருந்து விடுவிக்கை யென்றால் என்ன? இவன் செய்த பாபகர்மங்கள் செய்த போதே போயினவே அவை மூலமான அதர்மம் ஜீவாத்மாவிலிருப்பதை விடுவிக்கிறானென்னலாகாது; நமது ஸித்தாந்த, ததில் ஜீவாத்மாவில் அத்ருஷ்டமில்லையே என்று கேள்வியில் இவ்வாறு ஸமாதாநம். தன்னிடமுள்ள நிக்ரஹ ஸங்கல்பத்தை ஈச்வரன் விட்டுவிடுகிறான். அதனின்று நிக்ரஹவிஷயமான ஜீவனை நிக்ரஹவிஷயமாகையிலிருந்து விடுவிக்கிறானென்று சொல்வதாகின்றவாறு. अविद्यादिகள் அவித்யா வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்பந்தங்கள். நிக்ரஹ நிவ்ருத்தியும் கர்மநிவ்ருத்தியும் ஒன்று. நிவ்ருத்தியென்கிற अभावம் ஸித்தாந்தத்தில் ஒரு பாவபதார்த்தமாக வேண்டும். निग्रहनिवृत्ति ஈச்வரனிடமிருப்பதால் அங்குள்ள भावபதார்த்தமெது, अविद्यादि நிவ்ருத்தி ஜீவனிடமிருப்பதால் அங்குள்ளது எது என்ன உரைக்கிறார் ஈச்வரனுடைய இதி 'मत्प्रसादात् இதி सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः। मत्प्रसादात् अवाप्नोति शाश्वतं पदमव्ययम्।' (गी. '-56) मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात् तरिष्यसि। मत्प्रसादात् परां शान्तिं अचिरेणाधिगच्छति। 'शान्ति பதத்திற்கு அவித்யாதி நிவ்ருத்தி பொருள்) (58) என்று சொல்லப்பட்ட ப்ரீதிவிசேஷம் நித்யம் காம்யம் என்ற எல்லாக் கர்மங்களையும் என்விஷயமான ஸாத்விகத்யாகத்துடன் செய்பவன் எனது ப்ரஸாதத்தால் சாச்வதமான ஸ்தாநத்தை (என்னை) அடைவான். என்னிடம் மனம்செலுத்தி எல்லாம் செய்தால் எனது ப்ரஸாதத்தினால் எல்லா ப்ரதிபந்தகங்களையும் கடப்பாய் எனதுப்ரஸாதத்தால் விரைவில் சிறந்த சாந்தியைப் பெறுவான் என்று ச்லோகார்த்தம் அங்கே ப்ரஸாதமாவது ப்ரீதியும் அது மூலமான ஸங்

अविद्यादिகளுடைய निवृत्तियாவது—ज्ञानविकासादिகள்.

இவனுக்கு இப்படிப் புண்யபாபரூபமான संसारकारणம் கழியும் க்ரமம் எதென்னில்—उपायविरोधिகள் முன்பே सहेतुக்களாலே கழிந்தால் प्रारब्धेतरங்களாய்ப் प्राप्तिविरोधिகளாகவல்ல पूर्वपुण्यपापங்கள் उपायारम्भத்திலே निश्शेषமாகக் கழியும். उत्तरங்களான பாபங்களில் बुद्धिपूर्वமல்லாதவையும் देशकाल-वैगुण्यादिகளால் வருமவையும் ஒன்றும் லேபியா(து). अनापத்தில் बुद्धिपूर्व-उत्तराघங்கள் स्वाधिकार—अनुगुण—प्रायश्चित्तविशेषத்தாலே யாதல் शिक्षार्थமான लघुफल-विशेषத்தாலே யாதல் தீரும். ப்ரபந்நனுக்குப் प्रारब्धத்தில் இசைந்த காலத்துக்

---

கல்ப்பமும். அது ஈச்வரனிடமுள்ளது. ஜ்ஞாநவிகாஸாதிகள் இதி. ஜ்ஞாந விகாஸமே அவித்யா நிவ்ருத்தி. ஆதிபதத்தால் விபரீதருசிக்கு மாறுன பகவத் விஷயருசியையும் ப்ரக்ருதிஸம்பந்தத்திற்கு மாறுன பரமபதஸம்பந்தத்தையும் ஸங்கல்பாதிகளையும் கொள்வது. பக்தனைவிட ப்ரபந்நனுக்குப் புண்யபாப ரூப கர்ம நிவ்ருத்தியிலே உள்ள வாசியைத் தெரிவிப்பதற்காக விரிவாக அருளுகிறார் இவனுக்கு இதி. க்ரமமாவது நிவ்ருத்திகாலமுள்பட அதன் ரீதி. நிர்யாணாதிகாரத்திலும் இவ்விஷயத்தைக் காண்க. सर्वपापेभ्यः என்றவிடத்தில் सर्व பதத்தாலே ப்ரபத்தியநுஷ்டாநகாலத்திலுள்ள எல்லாவற்றையும் க்ரஹிப்பதாலும் இங்கிருக்க இசைந்த காலத்தில் அநுபவிக்க வேண்டிய கர்மங்களிலிருந்து விடுவிக்கமுடியாதாகையால் மற்றவையென்று கொள்ள வேண்டும் பின்னால் செய்யும் பாபங்களில் ப்ராமாதிகங்களையும் கொள்ளலாம்; அங்கே விடுவிப்பதாவது நிக்ரஹஸங்கல்ப்பம் கொள்ளாமை. புத்திபூர்வமான உத்தரபாபங்களைக் கொண்டால் அவற்றின் மோக்ஷணமாவது பூர்ணபலன் பெறுமளவுக்கு நிக்ரஹம் செய்யாமலிருக்கை. பக்தியோகநிஷ்டன் யோக ஸித்திக்காகப் பல காம்யகர்மங்களையும் செய்ய நேரும்; அவை பலனளித்து யோகததை வளரச் செய்யும். அதிகமான சில காம்யங்கள் பலனளிக்கா மல் மிகுந்தால் அவற்றினின்றும் பக்தனை விடுவிப்பான். ப்ரபந்நனுக்கு ப்ரபத்தி யென்கிற உபாயம் ஒரு க்ஷணத்திலே முடிந்துவிடுவதால் அதற் காகக் காம்யாநுஷ்டாநப்ரஸக்தி யில்லை, அதற்காக இராமற்போனாலும் வேறு ஐஹிகபலனுக்காகக் காம்யங்களை ப்ரபந்நன் அவிவேகத்தாலே செய்தால் இவன் ஆயுஷ்காலத்திற்குள் அநுபவிக்கக் கூடியவற்றிற்கு அளித்து மற்றவற்றைக் கழிப்பான். सहेतु=नाशहेतु; ப்ராப்திவிரோதிகளாகவல்ல= மோக்ஷப்ராப்தியை விரோதிக்க ஸமர்த்தமான; உபாயாரம்பத்திலே=दर्शन ஸமாநாகாரமான பக்தியின் உத்பத்திக்ஷணத்திலே; ப்ரபந்நனுக்கு ப்ரபத்திக்ஷணத்திலே. ஒன்றும்—சிறிதும், அநாபத்தில்—தேசகாலவைகுண்யாதிகளிராத காலத்தில். स्वाधिकारानुगुणेति. முக்யாதிகாரிக்கு गुरु ப்ராயச்சித்தம்; மற்றவனுக்கு लघु ப்ராயச்சித்தம். पापसमुदायமாகில் प्रपत्तिயே.

ஸஞ்சிதம்போலே अनभ्युपगतप्रारब्धமும் வித்யையினாலே கழியுமென்கிற விசேஷம் ப்ரபந்நனுக்கு உண்டு. அதைச் சொல்லத் தொடங்குகிறார் ப்ரபந்ந

குள்ளே विपक्वமாம் कर्मशेषம் अनुभवத்தாலும் अवान्तरप्रायश्चित्तத்தாலும் नाश्यம். மேலுள்ளதும் उपायमाहात्म्यத்தாலே கழியும். उभयभावनाक्रमத்தாலே வந்த बुद्धिपूर्व—उत्तरपुण्यங்களில் प्रतिबन्धமில்லாதவையும் उपासकனுக்கு विद्या-अनुगुण-पूर्वोत्तरपुण्यங்களும் फलप्रदानத்தாலே கழியும். विद्यैக்கு अनुपयुक्त—बुद्धिपूर्व-उत्त.-पुण्यங்களில் प्रतिबद्धफलங்களும், विद्योपयुक्त—पूर्वोत्तर—पुण्यங்களில் अनुकूल-प्रतिकूल-प्रबलफलान्तरफलங்களாலே निरुद्ध—अवसरங்களாய்ப் फलம் கொடுக்கப்பெறுதே மிகுதியாய் நின்றவையும் अन्तिमकालத்திலே கழியும். இவ்வர்த்தம் 'इतरस्याप्ये-वमसंश्लेषः पाते तु' என்கிற सूत्रத்திலே अभिप्रेतம்.

भगवत्प्रीतिमात्रமே फलமாக अनुष्ठித்த केवलकैङ्कर्यरूपसुकृतங்கள் அப்போதே प्राप्तफलங்களாகையாலே அவற்றுக்கு अश्लेषம் சொல்லவேண்டா. लोकसंग्रहार्थ-विधियாலே अनुष्ठिக்குமவையும் தனக்கு அப்படியே भगवदाज्ञासिद्धங்களாகை

---

ஷக்கு. இதி. ப்ராரப்தத்தில் இசைந்த காலம் இசையாத காலம் என்கிற பிரிவு பக்தனுக்கில்லையாகையால் ப்ரபந்நனுக்கு என்றது. विपक्वமாம்=முடிகின்ற; उभयभावनेति. कर्मभावना ब्रह्मभावना उभयभावना என்று மூன்று உண்டு. கேவலஸம்ஸாரிகளுக்குக் காம்ய கர்மத்திலேயே நோக்கு; ஸநகாதிகளுக்கு ப்ரஹ்மத்திலேயே நோக்கு; ப்ரஹ்மருத்ராதி அதிகாரி புருஷர்களுக்கு இரண்டிலும் நோக்கு. ப்ரபந்நன் சுத்தபரமைகாந்தியானால் ப்ரஹ்மபாவனைமட்டும். மற்ற ப்ரபந்நனுக்கு உபயபாவனை. இந்த ரீதியிலே ப்ரபத்திக்குப் பிறகும் புத்தி பூர்வமாகப் புண்யம் ப்ரபந்நனுக்கு நேரும். அவை பெரும்பாலும் பலித்து விடும். பலியாதவை கடையில் விலக்கப்படும். प्रतिबद्धफलங்கள்=பலனுக்குத் தடையேற்பட்டவை. பாபவிஷயமாகக் கீழ்க் கூறியதெல்லாம் उत्तरपूर्वाघयोरश्लेष विनाशौ என்கிற ஸூத்ரத்திற்கு விஷயம்; புண்யவிஷயமாகச் சொன்னவற்றுக்கு ஸூத்ரம் காட்டுகிறார் इतरस्येति. इतरस्यापि—வித்யாநிஷ்டனுடைய புண்யத்திற்கும் एवं=பாபத்திற்குக்கூறியபடி असंश्लेषः-அச்லேஷவிநாசங்கள் உண்டு. புத்தி பூர்வமான உத்தரபுண்யம் பலிக்காமலிருந்தால் அதற்கு पाते-சரீராவஸாந காலத்திலேயே கழிவாம்; முன்னே அச்லேஷம் சொல்லவாகாதென ஸூத்ரார்த்தமாம். புத்திபூர்வமான புண்யத்திற்கு அச்லேஷமென்றால் இவன் பின்னே செய்யும் நித்யநைமித்திக கர்மங்களுக்கும் அச்லேஷமேயாகையால் அவற்றை அவச்யம் அநுஷ்டிப்பது எதற்காக என்ற கேள்வியில் अग्निहो त्राद्यधिकरणம் பிறந்திருக்கிறது. அதற்கு ப்ரபந்நவிஷயத்திலே ஸமந்வயம் செய்கிறார் பகவத்ப்ரீதிதி. பக்தன் நித்யநைமித்திககர்மங்களை பகவத்ப்ரீதிக்காகச் செய்தாலும் பக்திக்கு அங்கமாகச் செய்கிறான்; ஆகையால் பக்திக்கு உதவியாயிருப்பதால் பலத்திற்கு அச்லேஷமில்லை. ப்ரபந்நனுக்கு ப்ரபத்திக்காகச் செய்கை யிராமற்போனாலும் கேவலகைங்கர்யமாகச் செய்வதால் அதற்கு பகவத்ப்ரீதி யென்ற பலம் ஸித்திப்பதால் அச்லேஷமில்லை. ஆகை யால் அவரவர் அப் பலனுக்காகச் செய்வது அவச்யம். लोकसङ्ग्रहेति. பாபத்திற்கு குருப்ராயச்சித்தம் பண்ண வல்லான் அதனால் பாபம் நீங்கக் கால

யாலே அவையும் இவனுக்குக் स्वकैङ्कर्यங்களாய் स्वफलங்கள். இவற்றில் अनवधानத்தாலே शास्त्रफलत्यागरहितமாக अनुष्ठितங்கள் உண்டாகில் அவையுமெல்லாம் 'तान्येव भावोपहतानि कल्कः' என்கிறபடியே पापतुल्यங்களாய் मोक्षयिष्यामिக்கு விஷயமாம். फलान्तरार्थமாகப் பண்ணின प्रपदनान्तरங்களும் स्वफलங்களாய்ப் போம். पूर्वप्रपत्तिக்குக் கோரி(வி)ன फलத்தைப் பற்றப் पुनःप्रपत्ति பண்ணுகை महाविश्वासத்தோடே கூட अनुष्ठित्त पूर्वप्रपत्तिप्रतिसन्धानத்தாலே கூடாது. अवेध-प्रपत्तिகள் கூட पदफलसाधनமென்று நினைத்தனுஷ்டித்தாலும் उपायान्तरच्छायैயாம்.

---

விளம்பமாகுமென்று ப்ரபத்தியினால் பாபத்தைப் போக்கினாலும் முக்யாதிகாரியானைப்போலே லோகஸங்க்ரஹத்திற்காக குருப்ராயச்சித்தமும் செய்தால் அதற்கு அச்லேஷந்தானே சொல்லவேண்டுமென்று கேள்வி. அவன் भगवदाज्ञैக்கு அஞ்சி அதைச் செய்கிறபடியால் அவன்விஷயத்தில் நிக்ரஹம் வாராமையும் ப்ரீதியுமாகிற பலன் ஸித்திப்பதால் அச்லேஷம் சொல்ல வொண்ணாதென்று மறுமொழி. ஒருவன் ஸாத்விகத்யாகம்செய்ய மறந்து அநுஷ்டித்தால் सुकृतादिகள் பகவத்ப்ரீதியாகிற பலனை யளிக்குமோ என்ன அருளிச்செய்கிறார் இவற்றில் இதி, तान्येवेति. तपो न कल्कोऽध्ययनं न कल्कः स्वाभाविको वेदविधिर्न कल्कः। प्रसह्यवित्ताहरणं न कल्कः तान्येव भावोपहतानि कल्कः॥ भा. आदि. 297. முன்னமே உரைக்கப்பெற்றது. வேறு பலனைக் கோராமையால் அது மூலமாக இது भावोपहतமென்னவொண்ணாது. இவற்றை यद्दोसुकृतादिகளைப் போலாக்கி साधिக்க வேண்டிய உபாயமொன்றுமில்லை. இங்குச் செய்ய வேண்டிய ஸாத்விகத்யாகத்திற்கு पहरणமானது अनवधानத்தாலாகையால் प्रामादिकமாயிற்று. ஆகையால் அக் கர்மங்களும் प्रामादिकपापतुल्यங்களே யென்றபடி, மீண்டும் ப்ரபத்தி செய்தானுனால் அது எதிலே சேருமென்ன அருளுகிறார் फलान्तरेति. வேறு பலத்திற்காக ப்ரப்த்தியானால் அது பின்னால் பண்ணும் காம்யகர்மத்தைப் போலாகும். அதற்குச் சொன்ன ரீதியே யிதற்குமாம். மோக்ஷத்திற்காகவே மீண்டும் செய்ய மாட்டான். முன்செய்த ப்ரபத்தியும் மஹாவிச்வாஸமும் நினைவிலிருக்க, கூட = மீண்டும் செய்யும் ப்ரபத்தியுடன் கூடியே பலனளிக்குமென்று நினைத்தானுகில் இதையும் உபாயமாக நினைத்தானாகிறதே, அப்போது उपायान्तर-च्छायैயாம் = பகத்யாதி உபாயத்தையும் கூடச் செய்வதற்கு ஸமானமாகும். 'उपायानां उपायत्वस्वीकारेऽप्येतदेव हि என்றதால் ப்ராயச்சித்த ப்ரபதனம் செய்ய வேண்டும். இந்த வாக்யத்தால் விச்வாஸம் மந்தமாயிருந்து உபாயாந்தரம் செய்து பிறகு அது தவறென்று ப்ராயச்சித்த ப்ரபத்தி செய்தால் பூர்வப்ரபத்தியே பலனளிக்குமென்று ஸித்திப்பதால் இதற்கும் பொருந்தும்படி மஹாவிச்வாஸத்தைப் பரிஷ்கரிக்கவேண்டுமென்று தெரிகிறது. இதை த்வயாதிகாரத்தில் உரையிற் காண்க.

கீழே मोक्षयिष्यामि யென்ற மோசநமாவது விடுவிக்கை, அதாவது நிக்ரஹாபிஸந்தியை விடுகை என்று சொன்னதால் பூர்வபாப புண்ய கர்மவிநாசம் நிக்ரஹாதிநிவ்ருத்தி யென்று தெரிந்தாலும். பிறகு அச்லேஷட்ரஸ்

निग्रहानुग्रहத்தாலே இக் कर्मங்களுக்கு विनाशமாவது—ईश्वरன் இவற்று க்குப் प्राप्तமான फलप्रदान—अभिसन्धियை விடுகை. अश्लेषமாவது—இவ் आश्रित திறத்தில் இக் कर्मफलप्रदान—अभिसन्धि उदियாதொழிகை. இப்படி सर्वकर्मங் களும் கழியாநிற்க ஸுஹ்ருத்துக்களும் த்விஷத்துக்களும் கூறிட்டுகொள்ளுமவை

---

தியும் வந்தபடியால் இரண்டிற்குமுள்ள வாசியைக் காட்டுகிறார் இக் கர்மங்களுக்கு இதி. இதனால் கர்மங்கள் க்ஷணிகங்களாகையாலே அவ்வப் போதே நாசம் ஸித்தித்துவிடுகிறது. அதனால் கர்மமூலமான நிக்ரஹஸங்கல்ப த்திற்கும் அநுக்ரஹஸங்கல்ப பத்திற்கும் விநாசத்தையே சொல்ல வேண்டும். அங்கு ஸங்கல்பமும் க்ஷணிகமாகில் தானே நாசம் வரும்; ப்ரபத்தியினு லென்ன ஸாதிக்க வேண்டுமென்னில்—அந்தந்த ஸங்கல்பத்திற்கு अनुवृत्ति யிராமையே ஸாத்யம்; பலனளிப்பதில்லை யென்ற ஸங்கல்பமென்றும் சொல்லலா மென்றதாயிற்று. இது போல் கர்மம் இவனிடத்தில் உண்டா கிறதே. உண்டானதற்கு அச்லேஷமெப்படி என்று சங்கிக்க வேண்டா; கர்மத்திற்குப் பலத்தையுண்டுபண்ணும் சக்தி உண்டாகாதபடி ப்ரபத்தி செய் கிறது. அதாவது फलप्रदान ஸங்கல்பம் உண்டாகாதபடி செய்கிறது. ஆக விநாசம் ஸங்கல்ப அநநுவ்ருத்தி; அச்லேஷம் ஸங்கல்ப்ப அநுத்பத்தி என்று வாசி சொன்னதாகிறது. இவ்வாச்ரிதர் திறத்தில் என்ற பதத்தை முன்வா க்யத்திலும் கொள்க. விநாசாச்லேஷங்களைச் சொன்னதால் கர்மத்திற்குப் பலனேயில்லை யென்று நினைக்க வேண்டா. இக் கர்மமூலமான பலன் ஆச்ரிதருக்கில்லை, வேறிடம் போம் என்று ஸூசித்ததாகும். அதனின்று तत्र प्रिया ज्ञातयः सुकृतमुपयन्ति, अप्रिया दुष्कृतम् என்கிற வாக்யம் நினைப்பித்ததாம். அதுவிஷயத்தில் சங்கிக்கிறார் இப்படி இதி. கூறிட்டுக்கொள்ளுமவை—பங்காகப் பிரித்துக் கொள்ளும் புண்ய பாபங்கள். இதன் கருத்தாவது—ஆச்ரி தருடைய மரணகாலத்தில் அவருடைய புண்ய பாபங்கள் மித்ர–சத்ருக்களு க்குச் சேருமென்று அவ் வாக்யத்தின் பொருள். இவை இருந்தால் தானே சேரும். எல்லாம் கழிந்தனவே. எந்தப் புண்ய பாபங்கள் ஆச்ரிதனுக்கே பலனளித்தனவோ அவை யில்லையாகையால் சேரா. எவற்றுக்கு அவ்வப் போது ப்ராயச்சித்தத்தால் பலனளிக்கும் சக்தி யழிக்கப்பட்டதோ அவை சேர்ந்து பலனில்லை. ஆச்ரிதனால் அநுபவிக்கப்படாமல் சக்தியோடிருக்கும் கர்மங்களே சேருமென்ன வேணடும். பக்தியும் ப்ரபத்தியும் ஸர்வப்ராய ச்சித்தமென்று சாஸ்த்ர ப்ரஸித்தமாகையால் வேறு ப்ராயச்சித்தங்களாற் போல் இவற்றாலும் சக்தி போய்விடுகிறபடியால் இவை பிறரிடம் எதற் காகச் சேருவது. விநாசத்திற்குச் சொன்ன ந்யாயமாய் அச்லேஷமும் சக்தி யுண்டாகாமையாதலால் சக்தியில்லாக் கர்மம் எதற்குச் சேரவேண்டும். மற்றும் சில மிகுந்தவற்றிற்கும் 'याते तु' என்று சரீரபாத காலத்தில் அச் லேஷம் சொன்னபடியால் அவற்றிற்கும் சக்தியில்லை யென்றதாம். இக் கேள் விக்குப் பரிஹாரமாவது—அநுபவிக்கப்பட்ட கர்மங்களும் ப்ராயச்சித்தத்

எவையென்னில், अश्लेषविनाशविषयங்களும் बुद्धिपूर्वोत्तरपुण्यங்களில் कर्मान्तरप्रतिबद्ध-फलங்களும். இவற்றை ஈச்வரன் उपायारम्भத்திலே सुहृत्துக்கள் பக்கலிலும் द्विषத்துக்கள் பக்கலிலும் संक्रमिப்பியாதே अन्तिमदेहத்தளவும் பார்த்திருக்க வேண்டுவானேன் என்னில், இவ் आश्रितர்பக்கல் பண்ணின आनुकूल्यத்துக்கு மேல் விபரீதம்செய்யில் இஸ்ஸுக்ருதங்களை संक्रमिப்பியாதொழிகைக்காகவும் आश्रितர்பக்கலில் பண்ணின प्रातिकूल्यத்துக்கு மேல் க்ஷமை கொள்ள अवसरம் கொடுக்கைக்காகவும் இவ் आश्रितருடைய अन्तिमशरीरविश्लेषத்தளவும் இவர்களுடைய புண்யபாபங்களை அசல்பிளந்தேறிடாதொழிகிறான். सर्वार्थसुकृतम् முமுக்ஷுவுக்குப் பாபமாகையாலே அது முமுக்ஷுவான सुहृत्தின் பக்கல் संक्रमियாது.

ஆரேனும் பண்ணின कर्मங்கள் வேறே சிலர் பக்கலிலே संक्रमिக்கையாவது என் என்னில், இக் कर्तावைப்பற்ற ஈச்வரனுக்கு வரும் निग्रह-अनुग्रहங்களோடு समानமாக இவனுடைய शत्रु-मित्रர்கள்பக்கலிலே निग्रह-अनुग्रहங்கள் उदिக்கை.

---

தாலே யழிந்த கர்மங்களும் சேரா என்பது உண்மை. வித்யையை யநுஷ்டித்தவனுடைய புண்ய பாபங்கள் அவனுடைய மித்ர—சத்ருக்களுக்குச் சேருமென்று வசநங்களிருப்பதால் அவற்றின் விநாச—அச்லேஷங்களென்பதற்கு அவை வித்யாநிஷ்டன்விஷயத்திலே பலனளிப்பதில்லையென்றே பொருளாம். வித்யைகள் ப்ராயச்சித்தமென்று சொன்னதற்கும் இவ்வளவே கருத்தாகும், ஆக வித்யாநிஷ்டனல்லாதவன் செய்த ப்ராயச்சித்தத்தாற்போல் வித்யாநிஷ்டன் செய்யும் வேறு ப்ராயச்சித்தத்தால் எக் கர்மங்கள் அழிக்கப்பட்டனவோ, எவை அநுபவிக்கப்பட்டனவோ அவை யெல்லாம் நீங்கலாக மற்றவை யெல்லாம் பிறரிடம் சேரும். அவை எவை யென்பதைக் குறிக்கிறார் அச்லேஷ இத்யாதியால். வித்யையுண்டானவுடனேயே கர்மங்களுக்கு விநாசம் சொன்னதால் அப்போதே மித்ர—சத்ருக்களிடம் போமென்னுமல் இவனுடைய தேஹாவஸாநத்திலே போமென்று எதற்காகச் சொல்வதென்று கேட்டுப் பரிஹரிக்கிறார் இவற்றை இதி. த்விஷத்துக்கள் = சத்ருக்கள். வித்யை யுண்டாகும் காலத்தில் மித்ரனாயிருப்பவன் முடிவில் சத்ருவாகலாம்; முன்சத்ருவும் பிறகு மித்ரனாகலாம். ஆகையால் அதுவரையில் பார்ப்பதாம். அசல்பிளந்தேறிடாதொழிகிறான் என்பதன் பொருளை நிர்யாணாதிகாரத்தில் காண்க. ப்ரபந்நனுக்கு மித்ரனான ப்ரபந்நனிடம் இவனிடமுள்ள ஸ்வர்க்காதிக்ஷுத்ரபலனுக்கான புண்யத்தைச் சேர்த்தால் அவன் ப்ரக்ருதி மண்டலத்தில் வேறு சரீரமெடுக்க வேண்டியதாகுமே; அப்போது தேஹாவஸாநத்தில் மோக்ஷமெப்படி யென்ற கேள்வியில் அத்தகைய புண்யங்களை ப்ரபந்நனான மித்ரனிடம் சேர்க்கமாட்டானென்கிறார் सर्वेति.

ஒருவருடைய புண்ய பாபங்கள் மற்றவரிடம் எப்படி ஸங்க்ரமிக்கும்? த்ரவ்யமாயிருந்தால் தானே ஒருவரிடமிருந்து மற்றவரிடம் சேருமென்று கேட்டு அருளிச் செய்கிறார் ஆரேனுமிதி. இக் கர்ம மூலமான நிக்ரஹாநுக்ரஹ ஸங்கல்பங்கள் இவன்விஷயமானவை போய் வேறுவிஷயமாக

ஆரேனும் अनुष्ठित्த கர்மங்களுக்கு ஆரேனும் [சிலர்?]பக்கலிலே निग्रह-अनुग्रहங் கள் பிறந்தால் अतिप्रसङ्गம் வாராதோவென்னில், இதுவும் முமுக்ஷு विषयத்தில் अनुकूल—प्रतिकूलர்க்கு उपचार—अपचाररूपமான கர்மமடியாக வருகிறதாகையாலே अतिप्रसङ्गமில்லை. ஆகையாலேயிறே उदासीनர்பக்கல் सुकृत-दुष्कृतங்கள் இரண்டும் संक्रमிக்கு மென்று தொழிகிறது. फलसादृश्यमात्रத்தாலே இங்கு संक्रमणोपचारம்

இஸ் सुकृत—दुष्कृतसंक्रान्ति சொல்லுகிற श्रुतिயாலே ஈச்வரனுக்கு अत्यर्थ-प्रियனான ज्ञानिविषयத்திற் பண்ணின उपचार—अपचारங்களால் வரும் प्रीति—कोपங் களினுடைய तीव्रतमत्वம் सूचितமாயிற்று.

---

உண்டாகின்றன என்பதே ஸங்க்ரமணமென்றதாயிற்று. शास्त्रफलं प्रयोक्तरि என்கிற ந்யாயமாக, செய்தவனுக்குதானே பலனளிக்க வேண்டும்: ஒருவன் செய்ய மற்றொருவனை நிக்ரஹிப்பதும் அநுக்ரஹிப்பதும் தகுமோ என்று கேட்கிறார் மீண்டும் ஆரேனுமிதி. வித்யாநிஷ்டர்களுடைய புண்யபாபங் களின் பலன்கள் வேறிடத்திலுண்டாவதற்கு அவர்களுக்குள்ள ப்ரீதியும் த்வேஷமும் காரணமென்றதால் பிதாவின் द्रव्यம் புத்ரனுக்கே போல் கர்மபலன் இவருக்கே என்று வசநபலத்தாலே கொள்ளலாம், அல்லது பாபங்கள் மற்ற ப்ராயச்சித்தாற்போல் பக்தி—ப்ரபத்திகளால் கர்மங்கள் கழிந்தன கழிந்தனவே. அவற்றிற்குப் பலனில்லை. ஸங்க்ரமணச்ருதிக்குக் கருத்தாவது— ஒருவன் கர்மத்திற்கு மற்றொருவனிடம் பலனளிப்பதென்பதல்ல; அவனிடம் விரோதம் செய்தவனுக்கு அந்த விரோதத்திற்கும் சிநேகிதனுக்கு சிநேக த்திற்கும் தகுந்த பலனாகும். ஈச்வரன் அளிக்கும் அந்தந்தப் பலனென்ன அளவிலெனில்- இவன் செய்த பாபங்களுக்கு இவனுக்குப் பலன் எவ்வளவோ அவ்வளவு பலன் விரோதத்திற்கும், ஸ்நேஹத்திற்கு இவன் செய்த புண்ய ராசிக்குப் பலன் எவ்வளவோ அவ்வளவுமென்றதாம். விரோதம் ஸ்நேஹம் இவற்றின் ஏற்றத்தாழ்வுக் கேற்பப் பாப—புண்யங்களைக் கூட்ட ஈச்வரனே வல்லன். ஆகையாலேயிறே—ஸ்நேஹ விரோதங்களுக்குப்பட்டதுகை வளிப் பதாலே யன்றோ என்றபடி. உதாஸீநர்=மித்ரனும் சத்ருவுமாகாதவர். சிறிய உபசார அபசாரங்களுக்கும் பெரிய புண்யபாபராசியினளவுக்குப் பலன் சொல்லக் கூடுமோ வென்னில்—ஸர்வோத்க்ருஷ்ட பகவத் ஸம்பந்த ப்ரயுக் தமாக அது கூடுமென்கிறார் இஸ் இதி. பக்திப்ரபத்திகளைக் காரணமாக்கி இப்படி பலனளிப்பதால் பக்தி ப்ரபத்திகளால் கழியும் புண்யபாபங்களின் அளவையே கொள்வதாம்.

மோக்ஷார்த்தமாக ப்ரபத்தி பண்ணும்போது ப்ராப்திவிரோதிபாபங்களி லிருந்து விடுவிக்கிறேனென்று பொருளாகிறது. அந்தந்த உத்தராயத்திற்கு ப்ராயச்சித்தமாகச் செய்யும்போது பாபசப்தத்தாலே அதனைமட்டும் கொள்ள வேண்டும். பக்தியோகநிஷ்டன் பக்தியோகாதியுபாயங்களுக்கு விரோதிகளைக் கண்டு அவற்றுக்காக ப்ரபத்தியநுஷ்டிக்கும்போது வெவ்வேறு பாபங்களைக் கொள்ளவேண்டும். இப்படி ஒரே வாக்யத்திற்கு எத்தனை அர்

'सुदुस्तरेण शोच्य यः' என்கிற ஶ்லோகத்திற் சொன்ன योजनैயிற் 'स्वैपायेस:' என்றது अधिकारियுடைய अपेक्षैக்கு ஈடாகப் प्राप्तिविरोधिகளையும் उपायविरोधि

த்தம் சொல்லமுடியுமென்ன, அருளிச்செய்கிறார் सुदुस्तरेणेति. இக் காரிகை இவ்வதிகாரத்திலே முன் உள்ளதே. तात्पर्यचन्द्रिकै யிலே गीताभाष्यத்திலுள்ள இரண்டாவது யோஜனைக்கு முடிவு செய்யும் போது இக் காரிகை வரைபட் பட்டுளது. ஆக गीताभाष्यத்திலுள்ள முதல் யோஜனை வேறு. பிறகங்கே உபாய விரோதிபாபவிஷயமாயும். இங்கே ப்ராப்திவிரோதிபாபவிஷயமாயும் சொன்ன அர்த்தங்களெல்லாம் சேர்த்து ஒரே யோஜனையாகக் கொள்ள வேண்டும். இதே यद्वा येन पापकालेन இத்யாதிவாக்யங்களை யநுஸரித்து இந்தக் காரிகையில் காட்டியதாகும். गुरूपायसाध्यமான இஷ்டப்ராப்தி அநிஷ்ட நிவ்ருத்தி யென்ற பலன்களில் எதற்காகவும் லகுவான ப்ரபத்தி பண்ணலாமென்று ஒரே யோஜனை. இதில் அநிஷ்ட நிவ்ருத்தியில் அந்தந்தப் பாபநிவ்ருத்தி யடங்கியிருக்குமென்றதாயிற்று. ப்ராப்திவிரோதி யென்பதற்கு फलப்ராப்திவிரோதி யென்று பொருள். உபாயவிரோதி யென்பதற்கு அந்த फलப்ராப்திக்கு எது உபாயமோ அதற்கு விரோதி யென்று பொருள். ஒருவன் ஸ்வர்கத்திற்காகவும் பர்பத்தி செய்யலாம், ஸ்வர்க்கப்ராப்திஹேதுவான ஜ்யோதிஷ்டோமாதிகளைச் செய்ய விழிந்து அவற்றுக்கு விரோதிகளைப் போக்கவும் ப்ரபத்தி செய்யலாம். ப்ரதிகூலாநுபவஹேதுஎன்றதாலே நரகாதிஹேதுவான நிஷித்தகர்மாதிகளைக் கொள்வது. முமுக்ஷுவிஷயத்திலே பாடசப்தத்தாலே கொள்ள வேண்டுமவற்றை ஸாபராதரூபத்தாலே ஸங்க்ரஹிக்கிறார் நிங்கு இதி. ஸாபராதனான என்பதற்கு ஸஞ்சித ப்ராரப்த கர்மங்கள் உள்ள என்று பொருள். இது பொதுவான ஸங்கல்ட்டம். அந்தந்த அபராதத்திற்கான தனித்தனி ஸங்கல்ப்பமுமுண்டு. இப்படி நிக்ரஹங்களின்று விடுவிக்கிறேனென்று ஸங்கல்ப்பம் செய்தால் போதுமோ? ப்ரக்ருதிஸம்பந்தாதிகளிலிருந்து விடுவிக்க வேண்டாவோ என்பதற்கு உத்தரம் मुमुक्षुவை இத்யாதி. இந்த ப்ரக்ருதிஸம்பந்தநிவ்ருத்தியைச் சொன்ன ஸூத்ரத்தை யெடுக்கிறார் இது இதி. அங்கே न च पुनरावर्त्तते என்றதால் ப்ரக்ருதிஸம்பந்தமில்லை யென்று தெரிகிறது. கர்மாதீநமாகாவிட்டாலும் பகவானோடு அவதாரகாலத்தில் முக்தன் இங்கு வரலாமே; ப்ரக்ருதிஸம்பந்தமில்லை யென்னவாகுமோ வென்னில்— கர்மாதீநப்ரக்ருதி ஸம்பந்தமில்லை யென்றே தாத்பர்யம். அல்லது அணுவான ஜீவன் அர்ச்சிராதிமார்கத்தாலே விரஜையைக் கடந்தவன் மீண்டும் ப்ரக்ருதிக்கு வருவதில்லைதான். அவதாரகாலத்தில் धर्मभूत ஜ்ஞாநவிகாஸமிருப்பதாலே அதைக் கொண்டே அப்ராக்ருதசரீரங்கள் பல கொள்ளவல்லனாகையால் ஆத்மா எதற்கு வரவேண்டும்? "ஸம்ஸாரகாரணம் கழியும் க்ரமம் எதென்னில்" என்ற க்ரமம் தொடங்கி செய்த பல நிஷ்கர்ஷங்கள் भाष्यத்திலே स्फुटமாயும் தாத்பர்யார்த்தமாயும் உள்ளவையாம். இங்கே, 'ஸஞ்சிதம் ப்ராரப்தமென்று பிரித்து வித்யையினால்

களையும் प्रतिकूलानुभव हेतुக்களையும் संग्रहिக்கிறது. இங்குப் प्राप्तिविरोधियாவது—'नारायणன இவன் நம்மை अनुभविக்கக்கடவனல்லன்' என்கிற भगवत्सङ्कल्पம். उपायविरोधियாவது—நம்மை இவன் தெளிந்து स्वीकरिக்கக்கடவனல்லன் என்கிற सङ्कल्पம். प्रतिकूलानुभवहेतुவாவது—அவ்வோ प्रतिकूल-कर्मानुष्ठानங்களாலே வந்த அவ்வோ फलप्रदानसङ्कल्पம். முமுக்ஷுவைப்பற்ற सर्वनिग्रहங்களும் निवृत्तங்களானால் निग्रहकार्यங்களான अचित्संबन्धादिகள் निग्रह-निवृत्तिरूपप्रसादத்தாலே निवृत्तங்களாம். பின்பு कारणाभावத்தாலே कार्यமான प्रतिकूलங்களில்(ள்) ஒன்றும் வாராது. இது 'अनावृत्तिः शब्दात्' என்கிற सूत्रத்திலே விவக்ஷிதம். இந்த निष्कर्षங்களெல்லாம் भाष्यத்திலே सत्संप्रदायத்தோடேகூடச் चिरपरिचयம் பண்ணின महाप्राज्ञருக்கு நிலமாயிருக்கும்.

இப்படி 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்று कार्यकारणरूपसमस्तप्रतिबन्धप्रवाहनिवृत्तिயைச் சொல்ல स्वतःप्राप्तமான परिपूर्णभगवदनुभव-आविर्भावம் சொல்லிற்றாயிற்று.

---

ப்ராரப்தநாசமில்லையென்று ஏன் சொல்ல வேண்டும்? ஸூத்ரத்தில் வித்யையுண்டான போதே பாபம் நசிக்கிறதென்றும் புண்யம் சரீராவஸாநத்தில் போகிறதென்றும் குறித்திருக்க ஸஞ்சித புண்ய பாபங்களெல்லாம் வித்யையுண்டாகும் போதே அழியுமென்று எப்படி சொல்வது? பொதுவாக உத்தராகம் போகவேண்டியிருக்க புத்தி பூர்வபாபம் போகாதென்று அதைப் பரிஹரிக்க வேறு வழி சொல்வதென்? புண்யத்தில் प्रतिबद्धம் अप्रतिबद्धம் என்ற பிரிவு ஸூத்ரத்திலில்லையே. விநாசம் அச்லேஷமென்கிற பதங்களுக்கு यथा-श्रुतार्थம் பொருந்தவில்லையே. பகவானுடைய நிக்ரஹ அநுக்ரஹங்கள் புண்ய பாபங்கள் என்கிற நிஷ்கர்ஷங்கள் ஸூத்ரத்திலில்லையே' இத்யாதி சங்கைகள் भाष्य பரிசயம் செய்யாதவர்களுக்கே வரும். ஸத்ஸம்ப்ரதாயம் அறியாதபோது தான் புத்தி பூர்வ உத்தராகமும் போமென்பதாமென்று கருத்து.

இச் சரமச்லோகம் ஸ்வதந்த்ர ப்ரபத்தி பரமானால் ஸர்வபாபநிவ்ருத்தியைப் போல் பகவத்ப்ராப்தியாகிற பலனையும் சொல்ல வேண்டுமே; கீழே मन्मना भव என்கிற ச்லோகத்தில் मामेवैष्यसि என்றும் சொல்லபபட்டதே. அதனால் இந்த ச்லோகம் பூர்வச்லோகத்தற்கு சேஷமாய் அங்கமான ப்ரபத்தியினால் உபாயவிரோதிபாபநிவ்ருத்தி வந்த பிறகு பக்தியால் பகவத்ப்ராப்தியென்றே சொல்ல வேண்டுமென்கிற சங்கையைப் பரிஹரிப்பதற்காக இந்த ச்லோகத்திலேயே பகவத்ப்ராப்தியும் சொன்னதாகுமென்கிறார் இப்படி ஸர்வேதி. இவ்வாறு அவதாரிகை மேலே, ஆஜபின்பு இத்யாதி வாக்யத்தால் தெரியவரும். समस्तप्रतिबन्धेति. சில அநிஷ்ட நிவருத்தியை மட்டும் சொன்னால் இஷ்டப்ராப்தி ஸித்தியாது; ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தியைச் சொன்னால் அது ஸித்திக்குமென்றதாம். மூலமந்த்ராधिகாரத்தில் வாக்யார்த்த யோஜனையில் இதன் விரிவுகாண்க. पक्षமென்பதற்கு ஆறுவிதமான பொருளில் உபாயோபேயஐக்யம் பொருளான போதும் பகவத்ப்ராப்தி இந்த ச்லோகத்திலே ஸித்திக்கும், ஆகையால் ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமாகைக்குக்

'यथा न क्रियते ज्योत्स्ना मलप्रक्षालनान्मणेः । दोषप्रहाणान्न ज्ञानमात्मनः क्रियते तथा ॥

यथोदपानकरणात् क्रियते न जलाम्बरम् । सदेव नीयते व्यक्तिमसतः संभवः कुतः ॥

तथा हेयगुणध्वंसादवबोधादयो गुणाः । प्रकाश्यन्ते न जन्यन्ते नित्या एवात्मनो हि ते[1]॥'

என்று श्रीशौनकभगवान் அருளிச்செய்தான். ज्ञानद्वयமும் இதிலுடைய सङ्कोचविकासத்துக்கு स्वरूपयोग्यतारूपையான शक्तियும் नित्यங்களாகையாலே அவற்றில் आविर्भावशब्दம் मुख्यம். सर्वविषयविकासமும் दुःखनिवृत्त्यादिகளும் सङ्कल्पादिகளும் कैङ्कर्यங்களும் आगन्तुकங்களாயிருக்க இவை निवृत्तप्रतिबन्ध[क]स्वरूपोपाधिकங்களாகையாலே மேல் முழுக்க நடக்கும்படி தோற்றுகைக்காக இவற்றில் 'आविरस्युर्मम सहजकैङ्कर्यविधयः' इत्यादिகளாலே आविर्भावशब्दம் प्रयुक्तமாகிறது. स्वरूपयोग्यत्वத்தாலே-धर्मोपाधिकமாக बहुविधமான आनुकूल्य—प्रातिकूल्यங்கள் நடந்த भगवद्विभूतियான வஸ்துக்களுக்கு மேலெல்லாம் मोक्षदशையில் आनुकूल्यமே स्वरूपप्राप्तமாகையாலே அதிலும் आविर्भावशब्दத்துக்கு विरोधமில்லை. ஆகையால் 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்ன, இவ் अनुकूल—अवस्थान्तरம் सिद्धமாயிற்று.

पदशब्दத்துக்கு उपायफलैक्यம் பொருளானபோது இவ் इष्टप्राप्तियும் இச் श्लोकத்திலே सुव्यक्तமாகச் சொல்லிற்றும். ஆகையால் 'मामेवैष्यसि' என்று கீழில் श्लोकத்திலே विशदமாகச் சொன்ன अर्थம் இங்கு प्राप्तिविरोधियைக் கழிக்கையாலும் पदशब्दத்தில் विवक्षाविशेषத்தாலும் சொல்லிற்றும்.

ஆனபின்பு இது सापेक्षமாய்க்கொண்டு கீழில் श्लोकத்துக்கு शेषமாகிறதன்று.

"सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்ற இவ்வளவால் 'मामेवैष्यसि' என்று சொன்ன भगवत्प्राप्ति सिद्धिக்குமோ? सर्वपापनिवृत्ति உண்டாயே भगवत्प्राप्तियன்றிக்கே स्वात्मानु-

---

குறையில்லை யென்றதாயிற்று. முன்னமேயிருக்குமதற்குப் பின்னே தோற்றம் வரும்போது आविर्भावசப்தம் ப்ரயோகிக்கப்படும். परिपूर्णभगवदनुभवाविर्भाव மென்றும் अवबोधादयो गुणाः प्रकाश्यन्ते என்றும் சொல்லக்கூடுமோ என்ன, आविर्भावசப்தப்ரயோகம் எங்கு முக்கியம், எங்கு அமுக்கியமென்பதை விளக்குகிறார் ज्ञानद्वयமுமித்யாதியால். आगन्तुकங்கள் = பிறகுவந்தவை; निवृत्तेत्यादि: प्रतिबन्धமற்ற स्वरूपமூலகங்களென்றபடி. स्वरूपयोग्यत्वத்தாலே என்பதற்கு स्वरूपप्राप्तமாகையாலே என்பதில் அந்வயம். அதிலும் = வஸ்துக்களின் ஆநுகூல்யத்திலும். गुणादिபதங்களாலே த்ரவ்யம் சக்தி யோக்யதை இவற்றைக் கொள்வதில் आविर्भावசப்தம் முக்கியம் மற்றவற்றில் अमुख्यம்.

பகவத்ப்ராப்தியிற் போல் ஆத்மாநுபவமாகிற கைவல்யத்திலும் ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தி யிருப்பதால் அநிஷ்ட நிவ்ருத்தி சொன்னமாத்திரத்தால் பகவத்ப்ராப்தி ஸித்திக்காதென்று சங்கிக்கிறார் सर्वेत्यादियால், ஜீவாத்மாவை ஸ்வதந்த்ரமாகக் கொண்ட ஸாங்க்ய தார்க்கிகாதிமதங்களில் கைவல்யமென்கிற புருஷார்த்தமிருந்தாலும் ஜீவாத்மாவை எம்பெருமானுக்கு நித்யசேஷமாகக் கொண்ட நம் மதரீதியில் ஜீவாத்ம தத்துவஜ்ஞாநமுள்ள

அநுபவரூபமான கைவல்யம் பெறுவாருமில்லையோ! भगवत्प्राप्तियிற்காட்டில் வேறுபட்ட கைவல்யம் ऐहलौकिकमैश्वर्यं स्वर्गाद्यं पारलौकिकम्। कैवल्यं भगवन्तं च मन्त्रोऽयं साधयिष्यति என்று நாரதாதிகளாலே சொல்லப்பட்டதிறே. ஆளவந்தாரும் 'ऐश्वर्याक्षरयाथात्म्यभगवच्चरणार्थिनाम्' என்றும், 'संसृत्यक्षरवैष्णवाध्वसु' என்றும் அருளிச்செய்தார். கீதையிலும் 'ये चाक्षरमव्यक्तम्' என்கிற வாக்யமும் உபாஸநமாயிற்று. गीताभाष्यादिகளிலும் இவ் அர்த்தம் ப்ரஸித்தம். ஆகையால் 'सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்ற ஸர்வபாபவிமுக்தி கைவல்யத்துக்கும் பகவத்ப்ராப்திக்கும் பொதுவன்றோ?"

என்கை मन्दचोद्यम्. எங்ஙனேயென்னில்—ஸர்வபாபங்களும் கழிந்தால் ஸ்வதःப்ராப்தமான भगवदनुभवத்தை இழந்துகிடக்கைக்குக் காரணமில்லாமையாலே அப்போது भगवदनुभवरहितமான आत्ममात्रानुभवம் கடியாது. ஆகையால் அவ்வஸ்தையில் ஐச்வர்யமும் ஜராமரணாதிதுःக்கங்களும் வருகைக்கு ஈடான கர்மங்கள் கழிந்து, परिपूर्णभगवदनुभवத்துக்குப் ப்ரதிபந்தகமான கர்மம் கழியாதே கிடக்கிறவளவிலே 'यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः' என்னும்படியிருப்பது ஒரு आत्मानुभवाऽऽनन्दविशेषம்.

'आत्मार्थी चेत् त्रयोऽप्येते तत्कैवल्यस्य साधकाः' என்று சொல்லுகிறபடியே தனக்கு ஸாத்யமாயிருப்பதோர் உபாயவிசேஷத்தாலே ஸித்திக்கிற இவ் வநுபவத்தை அசித்தநுபவத்தோடும் भगवदनुभवத்தோடும் துவக்கில்லாதபடியாலே கைவல்யமென்று பேரிட்டார்கள். भगवत्प्राप्तियில் கைவல்யமும் ஸர்வபாபவிநிர்முக்தியை நினைக்கிறது.

---

வருக்குத் தனிக் கைவல்யம் ப்ரமாணிகமென்று கொள்ளக் கூடுமா என்கிற சங்கையில், நம் ஸம்ப்ரதாயத்தில் இது இசையப்பெற்றதேயென்று பூர்வபக்ஷி முகத்தாலேயே ஸ்தாபிக்கிறார் भगवत्प्राप्ति—இதி. मन्त्रोऽयं என்று அஷ்டாக்ஷர மந்த்ரம் சொல்லப்பெற்றது. ऐश्वर्य இதி கீதார்த்த ஸங்க்ரஹம். அக்ஷரயாதாத்ம்யமாவது ஜீவஸ்வரூபமாத்ராநுபவமாகிற கைவல்யம். இதனால் கீதையும் கைவல்யத்திற்கு ப்ரமாணமென்றதாயிற்று. சதுச்ச்லோகியில் அக்ஷரபதத்தால் கைவல்யமும் वैष्णवपदத்தால் பகவத்ப்ராப்தியும் சொல்லப்பட்டன. ஜிதந்தாச்லோகத்தைத் தம் வாக்யமாக்கி साक्षरान् என்று கைவல்யத்தை பாஷ்யகாரரும் கத்யத்தில் இசைந்தார். गीताभाष्यத்தில் எட்டாம் அத்யாயாதிகளில் இதற்கு விரிவு. 'கைவல்யத்தை யிசைவோம்; ஆனால் அங்கு ஸர்வாநிஷ்டநிவ்ருத்தி யில்லை. ஸஞ்சிதஸர்வகர்ம நிவ்ருத்தி அப்போது சொல்ல வொண்ணாது' என்று ஸமாதாநம் அருளுகிறார் எங்ஙனே இத்யாதியால். கர்மங்கள்கழிந்து=கர்மங்கள் பலனளிக்காமல்; கழியாதே=தம் கார்யம் செய்வதாய்; यं இதி கீதை (6-22) यं-எந்த ஜீவாத்மயோகத்தை लब्ध्वा-அடைந்து வேறு லாபத்தை அதைவிட அதிகமாக நினைக்கமாட்டானோ என்று ஆத்மத்யானம் பண்ணுகிறவனுக்கும் அவ்வாத்மாநுபவம் ஆகர்ஷகமென்று சொல்லப்பெற்றது. आत्मार्थी இதி. கீதார்த்தஸங்க்ரஹம் 27. ஆத்மாநுபவமாகிற கைவல்யத்தை யபேக்ஷிக்கிறானாகில் அந்த அநுபவமாகிற கைவல்யத்துக்கு एते—கீழ்ச் சொன்ன கர்மயோக. ஜ்ஞாநயோக. பக்தியோகங்கள் ஸாத

आत्ममात्रानुभवविषयமாக, 'स्वात्मानुभूतिरिति या किल मुक्तिरुक्ता' इत्यादिகளில் प्रयुक्तமான मुक्तिशब्दமும் 'विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः' इत्यादिகளிற்போலே निर्वाह्यம். जरामरणमोक्षाय' என்றதுவும் देवர்களுடைய अमरत्वव्यपदेशம் போலே आपेक्षिकம்; क्रमेण मुक्तिपर्यन्तமாம் விஷயத்தைப் பற்றச் சொல்லுகிறதாகவுமாம். இப்படி विभव-व्यूह सालोक्यादिमात्रத்தில் मुक्तिशब्दமும் निर्वाह्यம். 'लोकेषु विष्णोर्निवसन्ति केचित् समीपमृच्छन्ति च केचिदन्ये । अन्ये तु रूपं सदृशं भजन्ते सायुज्यमन्ये स तु मोक्ष उक्तः ॥' என்று नियमिக்கப்பட்டதிறே. இதிற் சொன்ன सायुज्यம் परमपदத்திற் சென்ற

---

கமாகும்; அவற்றில் ஏதேனுமொன்று செய்து கைவல்யத்தைப் பெறலாம்; மோக்ஷம் பக்தியோகமொன்றாலேயே என்ற வாசியாம். இரண்டும் कैवल्यपदार्थ மாவதெங்ஙனே என்பதற்கு உத்தரம் இவ்வாக்யம். கைவல்யத்திலும் மோக்ஷ சப்தம் ப்ரயோகிப்பதால் அங்கும் எல்லா உபாதிக்கும் நிவ்ருத்தி வேண்டாவோ என்ன அருளிச்செய்கிறார் आत्ममात्रेति. स्वात्मेति. வரதராஜஸ்தவம் 81; முன்னமே கருத்து உக்தம். विगतेति. கீதை 5-28. இங்கு ஏவகாரம் ஸ்தோத்திரத்திறகாக வந்ததாம்; சரீரத்துடனிருக்கும் போதே முக்தனு கானே. जरामरणेति கீதை 7—29. मामाश्रित्य यतन्ति ये ते ब्रह्म तद्विदुः कृत्स्नं अध्यात्मं कर्म चाखिलम्; என்னையுபாஸித்து மூப்பும் இறப்பும் விட்டிருக்கைவாகிற கைவல் யத்திற்கு முயற்சிசெய்பெறவர் ब्रह्म अध्यात्मम् कर्म என்ற மூன்றையும் அறிவா ரென்றது. இந்த उत्तरार्धத்திற்கு 8ல் 3ம் ச்லோகம் விவரணமாகும். आपेक्षिक-मिति. மர்த்யரென்கிற மனிதரை யபேக்ஷித்து=மனிதரைவிட தேவர்களுக்கு மரணம் தீர்க்ககாலம் கழித்துவருவதால்—குறைவாயிருப்பதால் அவர்களை அமரர் என்பதுபோல் கைவல்யாநுபவத்தால் முழுமுக்தியிராமற் போனாலும் ஐச்வர்யாநுபவம் பண்ணுபவர்களைவிட ஜராமரணக் குறைவால் அவ்வாறு மோக்ஷமென்கிறது. அல்லது—मरणमोक्षाय என்னாமல் जरामरणमोक्षाय என்ற தால் கைவல்யானுபவகாலத்தில் ஸ்த்தூலதேஹ மிராமையால் அவனுக்கு கைவல்யமுடிவில் ஜரையுடன் சேரும் மரணமான ஸத்தூல தேஹவியோக மில்லை; முக்தனுக்கு ஸர்வமரணமோக்ஷம் என்ற வாசியும ஆபேக்ஷிகமென் பதில் கருதப்பெறலாம். மற்ற கைவல்யம் போலன்றி जरामरणमोक्षाय என்றது முழுமுக்தியுமாமென்கிறார் क्रमेण இதி. கைவல்யமென்கிற மோக்ஷம்பெற்ற இவன் முக்யமோக்ஷத்தையும் மேலே பெறுவானே. பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுகிறானே என்றபடி. मोक्ष सालोक्यसारूप्यமென்று முக்ய மோக்ஷமாகாத ஸாலோக்யாதிகளிலும் மோக்ஷசப்த ப்ரயோகமிருப்பதால் அது போல பொதுவாகக் கைவல்யத்தில் அமுக்ய ப்ரயோகம தகு மெனகிறார் இப்படி இதி. இந்த ச்லோகம் விபவஸாலோக்யாதிகளை மோக்ஷமல்லவென்று கழித்து விபவஸாயுஜ்யத்தை மோக்ஷமென்கிறதே. அது கூடுமோ. அது பரமஸாம்ய மன்றோ. நித்யமுமன்றோ வென்ன அருளிச்செய்கிறார் இதில் இதி. सः என்பதற்கு सायुज्यशब्दमुख्यार्थः என்றுபொருள். விபவாதி மூர்த்தி ஸாலோக்யம் போலே கைவல்யமும் அநித்யம் என்பதற்கு ப்ரமாணம் கூறுகிறார்

வருடைய भोगसाम्यम्. कैवल्यात्मानुभवं नित्यமன்றென்றுமிடமும் साक्षान्मोक्षமன்றென்றுமிடமும்

'चतुर्विधा मम जना भक्ता एव हि ते श्रुताः । तेषामेकान्तिनः श्रेष्ठास्ते चैवानन्यदेवताः ॥
अहमेव गतिस्तेषां निराशीःकर्मकारिणाम् । ये तु शिष्टास्त्रयो भक्ताः फलकामा हि ते मताः ॥
सर्वे च्यवनधर्माणः प्रतिबुद्धस्तु मोक्षभाक् ॥' என்கிற வசநத்தாலே सिद्धम्.

---

कैवल्येति. இங்கே கைவல்யத்திற்கும் அழிவைச் சொன்னதால் நித்யமன்றென்பதும் 'प्रतिबुद्धस्तु मोक्षभाक्' என்று பகவத்ப்ராப்தியை விரும்பும் ஜ்ஞாநியே மோக்ஷமடைவானென்றதால் கைவல்யம் மோக்ஷமன்றென்பதும் ஸித்தம். चतुरिति. பா-சா. 350-33. நாலுவகையான ஜநங்கள் என்னைச் சார்ந்தவர்கள். அவர்கள் பக்தர்களாவர். அவர்களுக்குள் என்னை யுபாயமாகவும் உபேயமாகவும் கொண்டவர்கள் ச்ரேஷ்டர்களாவர். அவர்கள் தேவதாந்தரஸம்பந்தமற்றவர்களுமாவர். பலத்தில் நசையற்று ஸாத்விகத்யாகத்தோடு கர்மாநுஷ்டாநம் செய்கிற அவர்களுக்கு நானே ப்ராப்யனாவேன். शिष्टाः மற்றவரான மூன்று பக்தரும் வேறு பலனை விரும்புகின்றவர்கள். அவர்களெல்லோரும் च्यवनधर्माणः பெற்ற பலனைவிட்டிருப்பை தர்மமாகவுடையவர்கள். நழுவுகின்றவரென்றபடி. ஜ்ஞாநியே அழியாத மோக்ஷம் பெறுகின்றவன். च्यवनधर्माणः என்பதற்கு நஷ்டமான धर्म = உபாயபலத்தையுள்ளவர்களென்றே பலத்தினின்று நழுவுதலே தர்மமாக = அவச்யமாகவுடையவர்களென்றே பொருளாம். கீதையில் चतुर्विधा भजन्ते माமென்றவிடத்தில் आर्तः अर्थार्थी என்ற ஐச்வர்யார்த்திகள் அமுமுக்ஷுக்கள். मधुविद्यादिनिष्ठரான முமுக்ஷுக்களைக் கொள்ளவில்லை. மேலே இவர்களுக்கு धूमादिमार्गமே சொல்லப்பட்டது. அந்த முமுக்ஷுக்கள் தற்சமயம் ஐச்வர்யாபேக்ஷிகளாயிருந்தாலும் वस्वादिपदம் பெற்றவிடத்தில் पूर्वोपासनத்திற்பிணங்க ज्ञानी तु परमैकान्ती என்றநிலைபெறுவாராகையாலே அப்போது ज्ञानिயாகக் கருதப்படுவர் அவ்வகுப்பிற்சேரலாம். கைவல்யார்த்திகளில் அப் பலனை யிழந்தபிறகே भगवदुपासनம் செய்பேறவரும் ज्ञानि வகுப்பினராவர். पञ्चाग्निविद्याநிஷ்டனை கைவல்யார்த்தியோ ஜீவோபாஸனா காலத்தில் முமுக்ஷுவானாலும் मधुविद्यादि நிஷ்டர்போலே விரக்தஜ்ஞானியாகான். கைவல்யானுபவகாலத்தில் அதிலே மண்டியிருப்பதால் भगवद्ध्यान-वन्दनस्तुतिकीर्तनादिपरனான ज्ञानिயாகான். அதனால் அர்ச்சிராதிகதி பெறும் அவனை ஒன்றிலும் சேர்க்காமல் தனியே जिज्ञासु என்று குறித்தார். ஆக அமுமுக்ஷுக்களான ஐச்வர்யார்த்திகளும் மற்ற முமுக்ஷுக்களும் கீதையில் கூறப்பட்டனர். அவர்களில் இங்கே பரமைகாந்திகளை 'एकान्तिनः' 'निराशीःकर्मकारिणाम्' என்றெடுத்து, பஞ்சாக்நி வித்யாநிஷ்டரையும் मुमुक्षु-अमुमुक्षु ஐச்வயார்த்தி பக்தரையும் क्षुद्रफलकामர்களென்று கூட்டி सर्वे च्यवनधर्माणः என்றார். வேறு பலன் வேண்டுகின்ற இவர்கள் निराशीःकर्मकारित्वமேயுள்ள प्रतिबुद्धராகமாட்டார். இவர்கள் பெறுவதெல்லாம் மோக்ஷமாகாது; प्रतिबुद्धன் பெறுவதே மோக்ஷ

'मुच्येतार्तस्तथा रोगाच्छ्रुत्वेमामादितः कथाम् । जिज्ञासुर्लभते भक्तिं भक्तो भक्तगतिं लभेत् ॥'

என்கையாலே ஸ்ரீகீதையில் 'जिज्ञासुः' என்கிற आत्मनिष्ठனும் क्रमेण ज्ञानियாமென்று उक्तமாயிற்று. 'மன்னுறில்' என்று भगवदनुभवத்தை नित्यமென்கையாலும் இதுக்கு व्यवच्छेद्यமாகச் சொல்லும் आत्ममात्रानुभवம் नित्यமன்றென்னுமிடம் व्यञ्जितம் இதுக்கு 'இறுகிகூடா' इत्यादिகளில் நாசமில்லை என்கிற பாசுரமும்

---

மென்றதாயிற்று. இங்கே मोक्षभाक् என்பதற்கு मोक्षमात्रभाक् என்ற பொருளானதாலும் கைவல்யாதிகள் மோக்ஷமல்ல என்பது ஸ்பஷ்டம். आर्त-अर्थार्थि களிலே विष्णुलोकादि कामர்களும் சேர்ந்திருப்பதால் அவைகளும் அமோக்ஷங்களென்றதாம். वासुदेवलोकम् மட்டும் அபேக்ஷித்தால் அது மோக்ஷமா அன்றோ என்னில்—அது மட்டும் தனியாக ஸாதிக்க உபாயமில்லை யென்க. கைவல்யாநுபவபரனுக்கு பக்தியைச் சொன்னதாலும் கைவல்யம் மோக்ஷமன்றென்கிறார் मुच्येतेति. பா சா. 348—810. ச்வேதத்வீபத்தில் எம்பெருமான் நாரதருக்கு தான் தசாவதாரம் செய்வது வரையிலான கதையை முதலினின்று கேட்டால் ரோகத்தினால் பீடிக்கப்படுகிறவன் அதினின்று விடுபடுவான்; जिज्ञासुः ஆத்மாநுப வத்தை விரும்புகிறவன் பகவானுடைய பாரம்யம் சொல்வதான இக் கதையைக கேட்பதால் பக்தியும் பெறுவான்; பக்தனாயிருந்து கேட்பவன் மோக்ஷத்தையடைவான் என்றான். கீதையில் जिज्ञासुः என்ற பதத்தினால் கைவல்யபவன் விரும்புமவன் சொல்லப்பட்டிருக்கிறானென்பது நிர்விவாதம். இந்த ச்லோகத்தில் अर्थार्थियைச் சொல்லாமற்போனாலும் மற்றவர்களைச் சொல்லியிருப்பதால் जिज्ञासु பதத்தாலே அக்கைவல்யபலகாமனைக் கூறுவது ஸ்வரஸமாகும். முதலில் கைவல்யத்தை விரும்பினவன் இதனால் கைவல்யத்தை உபேக்ஷித்து விட்டு பக்தியைப் பெறுகிறானென்பது ஸ்வரஸமாகாது. கைவல்யம் பெற்றுப்பிறகு பக்தியையும் அடைகிறானென்றும் கைவல்யத்திற்கு உபாயம் அநுஷ்டிக்கும் போதே பஞ்சாக்நிவித்யை போன்ற மோக்ஷோபயத்தைச் செய்கிறானென்றும் பொருளே ஸ்வரஸமாகும்.

ஆழ்வார்பாசுரத்தாலும் கைவல்யம் அநித்யமென்று தெரிகின்றதென்கிறார் மன் இதி. திருவாய் 1-2-5. "அற்றது பற்றெனில் உற்றது வீடு உயிர் செற்றது மன் உறில் அற்றிறை பற்றே". விஷயப்பற்று ஒழிந்ததாகில் ஆத்மா பகவத்பக்தியின்றியும் வீடு—மோக்ஷத்தை (கைவல்யத்தை) பெறவாகும். அக் கைவல்யத்தைச் செற்று—அழித்து (அதிலகப்படாமல்) மன்—ஸ்த்திரமான புருஷார்த்தத்தை விரும்புவதாகில் அற்று—அதற்கென்றே अनन्यप्रयोजनத்துடன் இறை=ஈச்வரனை பற்று—ஆச்ரயி. இங்கே கைவல்யத்திலகப்படாமல் பக்தி செய் என்றதால் கைவல்யம் பெற்றால் மீளவாகாதென்று தெரிகிறதே; அதனால் அது நித்யமென்ற கல்பனை தவறு. பரமாத்மலாபத்தை மன் என்று நித்ய புருஷார்த்தமாகச்சொன்னதால் கைவல்யத்திற்கும் ச்யவநமுண்டென்றே தெரியும். இதுக்கு व्यवच्छेद्यமாக=भगवदनुभवத்தால் விலக்கப்பட; 6-9.10-குறுகா என்கிற பாசுரத்தில் இறுகிகூடா

चातुर्मास्यादिकर्मफलविशेषங்களில் अक्षय्यत्वोक्ति போலே 'எனையூழி' என்கிற अचिरकाल-स्थायित्व-अभिप्रायம். 'योगिनाममृतं स्थानं स्वात्मसन्तोषकारिणाम्' என்று இவ்

---

என்கிற பதத்தினுல் கைவல்யம் முடிவற்றதென்று சொல்லி அதற்கு நித்ய த்வம் அருளப்பட்டதே யென்ன அருளிச்செய்கிருர் இநக்கு இதி. இதுக்கு= கைவல்யத்துக்கு; ''குறுகா நீளா இறுதி கூடா எனையூழி. சிறுகாபெருகா அளவிலின்பம் சேர்ந்தாலும், மறுகாலின்றி மாயோன்! உனக்கேயாளாகும், சிறுகாலத்தை யுறுமோ அந்தோ தெரியிலே'' குறுகல் நீளல் சிறுகல்—பெருகல்என்ற பரிமாணங்களற்றதும்இறுதி கூடா= அழிவற்றதும்அளவில்= பரிச்சேதமற்றது மான கைவல்ய மென்கிற இன்பம் எத்தனையோ கல்பகாலம் சேர்ந்திருப்பதானுலும் மீண்டும் இராதபடியே உனக்கு ஆளாகுகைக்கான சிறிய காலத்திற்கு(க்கூட) அது ஈடாகாது. நீண்ட ஆத்மாநுபவமும் அத்யல்ப்பகாலம் பெறும் பகவதநுபவத்திற்குமீடாகா தென்று பொருள். अक्षय्यं ह वै चातुर्मास्ययाजिनः सुकृतं भवति என்று சாதுர்மாஸ்ய ஸுக்ருதத்தை அக்ஷய்யமென்ருலும் விரைவில் க்ஷயமில்லை என்றே கருத்தைக் கொள்ளுவது போல் ஐச்வர்ய பலத்தைவிட அதிககாலம் அநுபவிக்கக் கூடியதாயிருப்ப தால் விஷ்ணுபுராணத்தில் अमृतं என்கிற சொல்லுக்குப்போல் இறுதி கூடா என்பதற்கும் விரைவில் அழிவில்லை யென்பதிலேயே நோக்கு. இங்கு அளவில் என்ற சொல் இருந்தாலும் ஆத்மாநுபவத்தை அபரிச்சிந்நம் என்று இசைவதில்லை. பகவதநுபவத்தை விடத் தாழ்ந்த தென்றே எங்கும் சொல்லப்படுகிறதே. அதனுல் ஐச்வர்யாநுபவ ஆநந்தத்திற்கு மேம்பட்ட தென்றதே அளவிலென்னப்படும். அது போல் ப்ரமாண விரோதமிராதபடி இறுதி கூடா என்பதற்கும் முன் சொன்ன பொருளாம். இங்கேயே எல்லாக் காலமும் என்னுமல் எனையூழி என்று அதிக கல்ப்பகாலத்தையே குறித்த தால் பிறகு அழிவுண்டென்று தெரிகிறது. மேலும். மேலடிகளில் भगवदनुभव காலத்தைச் சிறுகாலமாகச் சொன்னது கல்பநாமாத்ரம். அது போல் இறுதி கூடா என்பதும் கல்பனையாகும். சேர்ந்தாலும் என்கிற உம்மையினுலும் அதிக கல்ப்பகாலங் கூட அது சேர்ந்திருப்பதில்லை யென்று தெரிவதால் அதற்கும் இறுதியுண்டு.மற்ற விரிவு நமது ப்ரபந்தரக்ஷையில். இத்யாதிகளில் என்கிற ஆதிபதத்தால் ''கண்டுகேட்டு'' என்ற பாசுரத்தில் அளவில்லாச் சிற்றின்பம் என்ற விடத்தில் அழிவில்லாத கைவல்ய மென்று பொருள் கூறினுலும் சிரகாலமிருப்பதைக் கொண்டே என்று அறிவித்தநாம். ஆழ் வாருடைய4-1-10, 'குறுகமிக உணர்வத்தொடு நோக்கி' என்ற பாசுரத்தில் வீடஃதே என்று பரமாத்மாநுபவமே மோக்ஷமென்றும் கைவல்யம் மோக்ஷ மன்றென்றும் அநித்ய மென்றும் தெரிவித்ததையும் காண்க. அப் பாசுர த்தின் ப்ரபந்தரக்ஷையில் இது விஷயமான விசேஷவிரிவாம்.

ஆத்மாநுபவம் பெற ஏற்பட்ட இடமே அஸ்த்திரமாயிருப்பதால் இது அநித்ய மென்பது ஸ்பஷ்ட மென்கிருர் योगिनामिति. வி. பு, 1-6-38, ஸநகாதி'

आत्मानुभवस्थानविशेषமும் சொல்லப்பட்டது. இஸ் स्थानविशेषம் परमपदமென்றென்னுமிடம் இப் प्रकरणத்தன்னிலே

'एकान्तिनः सदा ब्रह्मध्यायिनो योगिनो हि ये । तेषां तत् परमं स्थानं यद्वै पश्यन्ति सूरयः ॥'

என்று भगवत्प्राप्तिकामனான பரமைகாந்திக்கு सूरिदृश्यமான स्थानान्तरம் சொல்லுகையாலே सिद्धம்.

पञ्चाग्निविद्यादिகளிற் சொன்ன प्रकृतिवियुक्तात्मानुसन्धानம் பண்ணுவார்க்கு, भाष्यादिகளிலே अर्चिरादिगतियும் ब्रह्मप्राप्तியும் சொல்லப்பட்டது. ஆகையால், இப் पञ्चाग्निविद्यानिष्ठர்க்கு आत्ममात्रानुभवरूपமான अवान्तरफलம் வந்தாலும் मधुविद्यान्यायத்தாலே ब्रह्मप्राप्ति—पर्यन्तமாய்விடும். प्रकृति—संसृष्टமாயாதல் प्रकृति—वियुक्तமாயாதல் இருக்கும் आत्मस्वरूपத்தை स्वरूपेणவாதல் ब्रह्मशरीरமாகவேயாதல்

---

*யோகிகள் தங்கியிருக்கும் அம்ருதமான ஸ்தாநமே தன் ஆத்மஸ்வரூபாநுபவம் செய்கிறவர்களுக்கு இடமாகும். 'आभूतसंप्लवं स्थानं अमृतत्वं हि भाष्यते' என்று ப்ரளயகாலம் வரையில் இருப்பு அம்ருதத்வமென்று அங்கேயே வேறிடத்தில் சொல்லப்பட்டது. ஆகையால் அம்ருதமென்பதற்கு அழியாத பரமபதமென்று பொருளாகாது. அவ்வாறு பொருள் கொள்ளத்தகாதென்பதை மேல்ச்லோகத்தை உதாஹரித்தும் விளக்குகிறார் இவ் இடு. ப்ரஹ்மத்யாநம் செய்கிற பரமைகாந்திகளுக்கு நித்யஸூரிகளும் காணும் பரமபதம் ஸ்தாநமாகுமென்றதால் அதன் கீழான அம்ருதமென்ற ஸ்தாநம் பரமபதமன்றென்று சிடமாயிற்று. இது ஸூர்யஸ்தானத்திற்குமேலுள்ள இடமென்பர். இங்கே 'विरजा परमव्योम्नोः अन्तरा' இத்யாதியாகச் சிலரெடுக்கும் வாக்யத்தில் பாடவிசாரமும் 'मुक्तानां परमा गतिः' என்றவிடத்தில் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் உள்ளதைக் கொண்டு अमृतस्थान விசாரமும் மற்ற விசேஷங்களும் நமது न्यायसिद्धाञ्जनसूक्तिवर्द्धिनीயில் காணத்தகும். ஜீவாத்மத்யாநம் செய்கிறவனுக்குப் பரமபத ப்ராப்தியில்லை யென்றால் பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு புநராவ்ருத்தியில்லை யென்றது சேருமோ? அவன் கைவல்யார்த்தி தானே யென்ன அருளிச் செய்கிறார் पञ्चाग्नि. அவனுக்கு அங்கே अर्चिरादिगतियும் ப்ரஹ்மப்ராப்தியும் கூட சொல்லப்பட்டது. அதனால் அவன் ஜீவாத்மத்யாநம் மட்டும் செய்கிறவனல்லன்; ப்ரஹ்ம சரீரமாக ஸ்வாத்மத்யாநம் செய்கிறவன். இதில் ஸ்வாத்மாவை விசேஷ்யமாக்கி த்யாநம் செய்ததால் கைவல்யம் முதலில் பெற்றாலும், அதனின்றே मधुविद्यानिष्ठன் வஸ்வாதிஸாயுஜ்யம் பெற்ற பிறகுபோல் பரமபதம் செல்லுகிறபடியால் புநராவ்ருத்தியில்லை. ஆனாலும் கைவல்யபலம் முடிந்தே அங்குச் செல்வதால் கைவல்யம் அநித்யமே. பஞ்சாக்நிவித்யையன்றி ஜ்ஞாநயோகாதிகளாலும் கைவல்யஸ்தாநம் செல்லலாம். அவனுக்குப் புநராவ்ருத்தியே. இப்படியும் சில அதிகாரிகள் உண்டென்பது ச்ரீபாஷ்யத்திலேயே ஸ்பஷ்டமென்கிறார் प्रकृति. ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டனான ஜீவனையுபாஸிப்பது ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்ட உபாஸநம். சுத்த ஜீவனையுபாஸிப்பது ப்ரக்ருதிவியுக்தோபாஸநம். ஸ்வரூபேணவாதல் என்*

பண்ணும் अनुसन्धानங்கள் நாலுக்கும் नामादि–उपासनங்களுக்குப்போலே अर्चि-
रादिगतियும் ब्रह्मप्राप्तियுமில்லை என்னுமிடத்தை 'अप्रतीकालम्बनान् नयतीति बादरायण
उभयथा च दोषात् तत्क्रतुश्च' என்கிற ஸூத்ரத்திலே அருளிச்செய்தார்.

---

பதற்கு ப்ரஹ்மமாக நினைக்காமல் உபாஸிப்பதென்று பொருள். ப்ரஹ்ம
த்ருஷ்டியாவது அப்ரஹ்மமான ஜீவனை ப்ரஹ்மமாக நினைத்தல். அர்த்தபஞ்சகா
திகாரத்தில் இது विशदம். भूमवित्தையில் நாரதர் ஸநத்குமாரரிடம் तरति शोक
मात्मवित् என்று சோகம்தீர உபதேசம் செய்ய வேண்டுமென்று கேட்டபோது
नाम ब्रह्मेत्युपासीत; वाचं ब्रह्मेत्युपासीत இத்யாதியால் சப்தராசியை ப்ரஹ்ம மாகவும்
वागिन्द्रियத்தை ப்ரஹ்ம மாகவும் மற்றும் பல வஸ்துக்களையும் இப்படி ப்ரஹ்
மமாகவும் உபாஸனைகளைச் சொல்லி அவற்றிற்கு க்ஷுத்ரபலன்களைக் கூறிப்
பிறகு ப்ராணோபாஸநத்தை விதித்து ச்லாகித்தார். அங்கே ப்ராணனாவது
ஜீவாத்மா. நாரதர் இதைக் கேட்டு இதே ஆத்மா, இதன் உபாஸநத்தால்
சோகம் போகுமென்று வாளாவிருந்து விட்டார். இதன்மேல் உபதேசிக்கா
மற் போனால் சிஷ்யனை வஞ்சித்ததாகுமென்று நினைத்து க்ருபையினாலே ஸத்ய
மென்கிற அபரிச்சிந்நமான ஸ்வரூபமான ஆத்மவஸ்துவையே உபாஸிக்க
வேண்டுமென்றார் குரு. இதனின்று சுத்த ஜீவோபாஸனத்தால் சோகம்
தீராதென்று தெரிவதால் கைவல்யம் அநித்யமென்று ஸித்திக்கிறதென்று
மறிக. அந்த ஜீவோபாஸநத்திற்கு அங்கு உபநிஷத்தில் பலன் ஸ்பஷ்ட
மாகச் சொல்லவில்லையானாலும் ततोऽन्यदार्तम् என்று सत्यब्रह्मोपासनம் நீங்கலாக
எல்லாவற்றிற்கும் அழிவும் சோகமும் சொல்லப்பட்டது.

अप्रतीकेति. अर्चिरादिமார்க்கத்தாலே சதுர்முகனையடைவதாக बादरि சொன்
னார். அதனால் சதுர்முகனையுபாஸிப்பவருக்கு அந்த கதி யென்றதாகிறது.
परब्रह्मத்தையேயடைவதாகக் கூறி பரப்ரஹ்மத்தையுபாஸிப்பவருக்கே அந்த
கதியென்றார் ஜைமிநி. बादरायणரென்ற வ்யாஸர் उभयथा च दोषात्= அவ்விருவ
கையிலும் தோஷமிருப்பதால் अप्रतीकालम्बनान्=ப்ரதீகோபாஸகரல்லாதாரை
ப்ரப்ரஹ்மத்தைப் பெறுவிக்கும் அர்ச்சிராதிகதி யென்றார். प्रतीकமாவது சரீரம்;
சேதநா சேதநங்கள் பரப்ரஹ்மத்திற்கு உடல், உயிரைவிட்டு உடலைமட்டும்
உபாஸிப்பவர் प्रतीकालम्बनர். பரமாத்மாவையுபாஸித்தாலும் பரமாத்மாவின்
உடலாக ஜீவனையுபாஸித்தாலும் இக்கதியுண்டு. பஞ்சாக்நிவித்யையில்
ப்ரஹ்மத்தையுபாஸிப்பவருக்குப்போல் तद्य इत्थं विदुः ये चेमे अरण्ये श्रद्धां सत्यमुपासते
என்று ஜீவோபாஸகருக்கும் அது சொல்லப்பட்டதே. அதுவும் ஜீவாந்தர்யா
மியாகப் பரமாத்மோபாஸநமே யாகட்டுமே யென்னில்—அப்படியாகில்
ஜைமிநி பக்ஷமும் बादरायणपक्षமும் ஒன்றாகும்: अप्रतीकालम्बनान् என்கிறஸூத்ரம்
இடம் பெறாது. அப்படி யிசைந்தால் உபநிஷத்தில் तद्य इत्थं विदुः என்றும்
ये चेमे என்றும் இரண்டாகப்பிரித்தது வீணாகும். ये चेमे என்கிறவாக்யமும்
வ்யர்த்தமாகும். அப்படியானால் ச்ருதிபலத்தாலே ஜீவமாத்ரோபாஸநமா
னாலும் ப்ரஹ்மப்ராப்தியிருக்கட்டுமே என்னில்—அது नान्यः पन्थाः இத்யாதி

க்கும் நாராயணாநுவாகத்திற்கும் விருத்தமாகும். அசரீரமாக ஜீவோபாஸநம் கொள்வதற்குப் பதமில்லையே யென்னில்—ஜீவோபாஸநமாவது ஜீவனையுள்ள படி யுபாஸிப்பதே; जीवोपासनத்தில் மற்ற ஆகாரங்கள் போலே பரமாத்ம சரீரத்வத்தையும் சேர்ப்பதாம். ஆகில் உபாஸித்தபடிதானே பெறவாகும்; ப்ரதானமாக ப்ரஹ்மத்தைப் பெறவாகுமோ என்னில்—விரோதமில்லை யென் கிறார் सक्रतुं என்று [இதுவும் सदेव सोम्य என்கிற ஶ்ருதியிற் கருதப் பெறும்.] தத்க்ரதுந்யாயமும் சேரும். உபாஸித்தபடியுங்கூட மோக்ஷத்தில் भासिக் கலாம்; அல்லது மோக்ஷத்தில் ப்ரத்யக்ஷமே யானபடியாலே தர்மியானது ப்ரதானமாகவும் ஜீவாதிகள் அப்ரதானமாகவுமே புலனாகும். உபாஸனத்தில் ஜீவனை விசேஷ்யமாக்கினாலும் சேஷசேஷிபாவத்தை க்ரஹிப்பதால் आश्रया- ஸும் பரமாத்மாவினிடம் அனுபவிக்கப்படுவதேயாகும். ஸமானவிஷயத்வமே தத்க்ரதுப் பொருள். क्रतु என்பதாலே यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति என்கிற வாக்யம் கருதப்பெறும். அதன் பொருளாவது இவ்வுலகில் ஒருவன் எந்த வஸ்துவை எவ்வாறு உபாஸிக்கிறானோ, அது மறுமையில் அனு பவிக்கப்பட்டு அவ்வாறேயாகிறதெனவாம். तं यथायथोपासते तदेव भवति என்கிற வாக்யத்திற்கிணங்கவாம் இப்பொருள், அல்லது எதன் ப்ராப்திவிஷயமாக உபாஸனமோ, அதன் ப்ராப்தியுள்ளதாகிறதென்னலாம். இதன் விரிவை தமதுச்சாந்தோக்யபரிஷ்காரத்திலும் अधिकरणसारावलि (3-3-1) ३१८ निरयोमा- नस् என்கிற ச்லோகவ்யாக்யானத்திலும் காண்க. பஞ்சாக்நிவித்யையிலும் ஜீவாந்தர்யாமியாகவே பரமாத்மோபாஸநத்தை உபநிஷத்து ஏன் கொள்ள வில்லை யெனில்—ஜீவப்ரதானமான கைவல்யமென்கிற பலனையும் இதற்குச் சேர்ப்பதற்காகவென்க. मधुविद्यையில் वस्वाद्यन्तर्यामियாக உபாஸித்தாலும் வஸ்வாதிபதப்ராப்தி யுண்டே, அது போலாகட்டுமே யென்னில்—அப்படி யானால் எல்லா பக்தி மார்க்கத்திலும் य आत्मनि என்று அந்தந்த ஆத்மாவுக்கு அந்தர்யாமியாக உபாஸனமிருப்பதால் எங்குமே கைவல்யம் பலனாக ப்ரஸங் கிக்கும். மோக்ஷத்தில் சுத்த ஜீவனுக்கும் ப்ராப்தியிருப்பதால் அவ்வளவே அதற்குப் போது மானதென்னில்—பஞ்சாக்நிவித்யையிலும் அவ்வளவேயாய்க் கைவல்யம் ஸித்தியாது. அதனைச் ச்ருதி பிரித்தோதிற்று.

सूत्रத்திலே இதி. ஸூத்ர பலத்துக்கு நான்முகிற ஜீவோபாஸனமென்பது ச்ரீபாஷ்யத்திலே विशेषं च दर्शयति என்ற ஸூத்ரத்திற்குப் பிறகேயிருப்பதால் अप्रतीकसूत्रத்திலே என்னவாகுமோ என்னில்—அது अप्रतीकसूत्रத்திற்கு गुणसूत्रமாய் இதுவே ப்ரதானஸூத்ரமாகையாலும் அந்த सूत्रार्த்தம் முடிந்தபிறகு ஸித்தாந்தनिर्णयभाष्यத்திலேயே இவ்விசாரவிஷயமிருப்பதாலும் இந்த ஸூத்ர விஷயமே இதுவுமாகுமென்க.

अर्चिरादिगतिपूर्वकप्राप्तியானது ब्रह्मोपासकனுக்கேயென்றாலும் கைவல் யம்மட்டும் பலமான ஜீவோபாஸனத்திற்கும் अर्चिरादिगति இருக்கட்டுமே; धूमादिमार्गம் ஐச்வர்யார்த்திக்கே யாகையால் இவ்வுபாஸனத்திற்கு அது கதி

'श्रुतोपनिषत्कगत्यभिधानाच्च' என்கிற ஸூத்ரத்திலும் ஒரு विद्याविशेषத்தில் उपास्यன் परमात्मा என்கைக்கு अर्चिरादिगதி சொன்னதை हेतुவாகக் கொண்டு साधिக்கையாலே जीवमात्र-उपासकனுக்கு अर्चिरादिगति யில்லையென்னுமிடம் सिद्धமாயிற்று. ஆகையால் ब्रह्मप्राप्तिயில்லாதார்க்கு இச் श्लोकத்திற் சொல்லுகிற सर्वपापनिवृत्ति இல்லை. सर्वपापनिवृत्तियுடையார்க்கு ब्रह्मानुभवसङ्कोचமில்லை.

இப்படி இங்கு सर्वपापनिवृत्तिயைச் சொல்லுகையாலே केवलात्मानुभवத்துக்குக் காரணமாய், परिपूर्ण-ब्रह्म-अनुभवத்துக்குப் प्रतिबन्धकமான कर्मविशेषமும் கழிகையாலே 'मामेवैष्यसि' என்று கீழ் श्लोकத்திற் சொன்ன अर्थம் இங்கும் सिद्धமாயிற்று. 'मामेवैष्यसि' என்கிற प्राप्तिயாவது—परिपूर्णानुभवம். இப் परिपूर्ण-अनुभवसिद्धिக்காக अर्चिरादिगतिயும் देशविशेषप्राप्तियுமுண்டாகிறது. இக் क्रमத்திலே இவ் अनुभवம் கொடுப்பதாக सर्वज्ञன் अनादियாக நியமித்து வைத்தா

---

யாகாதே யென்ன அது ஸூத்ரவிருத்த மென்கிறார் ஶ்ருதேதி. ब्रह्मण्युपनिषच्छब्दात् उपनिषद् என்றபடி उपनिषத்து ब्रह्मप्रतिपादकभागமாகும். श्रुतोपनिषत्कனாவான் ப்ரஹ்மவித்து. அவனுக்கே யாகிற अर्चिरादिगतिயை உபகோஸலவித்யையில் ஓதியிருப்பதால் அது ஜீவமாத்ரோபாஸனமாகா தென்று ஸூத்ரகாரர் அருளியதால் கேவலகைவல்யத்திற்கு அர்ச்சிராதிகதி யில்லையென்று வ்யக்தம். अनावृत्तिमार्गமென்றும் देवपथமென்றும் ब्रह्मपथமென்றும் ப்ரஸித்தமாய் सञ्चित सर्वकर्मनिवृत्तिरूपமுமான अर्चिरादिगति ஜீவமாத்ரோபாஸனத்தில் வாராதென்று அங்கே भाष्यத்தில் தெளியலாமென்றபடி. ஸங்கோசமில்லை இதி. मोक्ष சப்தத்திற்கு முக்கியமான பொருள் ஸர்வப்ரதிபந்தகநிவ்ருத்தி. அந்த अभावத்தோடு ஒருமாறும் परवासुदेवसायुज्य மொன்றே. அதனுல் அதே स तु मोक्ष उक्तः என்னப்பட்டது. அநுபவத்தில் ஸங்கோசமிருந்தால் அது அந்த மோக்ஷமாகாதென்ற படி

பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுக்கு தேஹாவஸாநத்தில் ஸர்வபாபநிவ்ருத்தி வந்தும் சில காலம் கேவலாத்மாநுபவமே யிருக்கிறதே யென்ன, அவனுக்கு ஜீவவிசேஷ்யக உபாஸநம் காரணமாகக் கேவலாத்மாநுபவத்தை ஸங்கல்பித்திருக்கிறபடியால் அதனுல் அர்ச்சிராதிகதியின் முடிவு கிடைக்காமையால் ப்ரஹ்ம ப்ராப்தி விளம்பிக்கிறது. அது முடிந்தபிறகு ப்ரஹ்ம ப்ராப்தியே என்றறிவிப்பதற்காக, 'கர்மவிசேஷமும் கழிகையாலே' என்ற வரையில் கூறியதாம். மற்ற கைவல்யார்த்திகளுக்கு ஸஞ்சிதஸர்வகர்மநிவ்ருத்தியாகிற ஸர்வபாப நிவ்ருத்தி சொல்லவொண்ணுது. அது மோக்ஷார்த்தவித்யையில் தானே ஓதபட்டிருக்கிறது. சரீரத்தினின்று பிரியுங் காலத்திலேயே பூர்ண ப்ரஹ்மாநுபவம் ஏன் இல்லை யென்பதற்கு உத்தரம் இப்பரிபூர்ணேதி. ப்ரஹ்மநாடிவாயிலாகப் புறப்பட்டு அர்ச்சிராதி மார்க்கமாய்ப் பரமபதத்திலே 'परंज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते' எனவாகிருனென்று ஒருவித க்ரமத்திலே பூர்ணநுபவம் சொல்லப்பட்டிருப்பதால் ஸஞ்சிதஸர்வகர்மநிவ்ருத்தி வந்தவனுக்கு பரஞ்சோதிப்ராப்தி பெறும் வரையில் அநுபவ

னென்னுமிடம் இக் गतिविशेषादिகளைப் प्रतिपादिக்கிற शास्त्रங்களாலே सिद्धम्.

இக் गतिविशेषத்துக்கு முன்பு शास्त्रத்தாலே ब्रह्मस्वरूपத்தை அறிகிறபோதும் योगத்தாலே साक्षात्करिக்கிறபோதும் ब्रह्मलोकादिகளில் प्रापिக்கும்போதும் பிறக்கும் प्रकाशம் सुकृताधीनமாய் कारणायत्तமாய் வருகிறதாகையாலே परिमितமுமாய் विच्छेदवत्तுமாயிருக்கும். मुक्तदशैயில் பிறக்கிற प्रकाशம் सङ्कोचविच्छेदங்களுக்குக் காரணம் ஒன்றுமில்லாமையாலே परिपूर्णविषयமுமாய்ப் पुनर्विच्छेदरहितமுமாயிருக்கும். இவ்வனுभवपरीवाहமாய் 'क्रियतामिति मां वद' என்கிறபடியே சேஷி உகந்த परिपूर्णकैङ्कर्यம் வருகிறது. 'पारमार्थिक' என்கிற गद्यवाक्यத்திற் சொன்ன फलपर्वपरम्परैயெல்லாம் இங்கே यथाप्रमाणம் விவக்ஷிக்கப்படுகிறன. —o—o—

இனிமேல் 'मा शुचः' என்கிறவித்தாலே கீழருளிச் செய்த अर्थத்தில் தீர்வு प्रकाशितமாகிறது. சிலர் 'मा शुचः' என்கிறவிது विधियாகையாலே प्रपन्नனை பின்பு शोकिக்கை विध्यतिलङ्घनமாய் இவனை उपायशून्यனை शरण्यன் நெகிழ்ந்து தன் कार्यத்துக்குத் தானே கடவனாகையாகிற प्रत्यवायமுண்டாமென்று சொன்னவிடம் बुद्धिपूर्व-उपरागத்தையும் 'सर्वपापेभ्यः' என்கிறவிடத்திலே கூட்டித் தாங்களே பண்ணின व्याख्यानத்துக்கும் 'ப்ரபந்நனை शरण्यன் ஒரு படியாலும் கைவிடான்' என்கிற வாக்யங்களுக்கும் विरुद्धமாம். ஆகையால் இவ்வுபாயத்தில்

---

ப்ரதிபந்தகமிருக்கிற தென்று கொள்ள வேண்டு மென்றபடி.

பரிபூர்ணாநுபவம் ஸ்வதஃ ப்ராப்தமென்றார் கீழ். அதனால் அபூர்ணமான அநுபவம் புண்யகார்யமென்றதாயிற்று. அதை விளக்குகிறார் இக் गतिविशेषத்துக்கு இதி. प्रापिக்கும்போதும் = அடையும் போதும். सर्वं ह पश्यः पश्यति सर्वमाप्नोति सर्वशः என்று அநுபவந்தானே சொல்லப்பட்டதென்ன—கைங்கர்யமும் புருஷார்த்த மென்பதற்கு ப்ரமாணம் அருளுகிறார் இவ் வநுபவேதி. அது அநுபவத்தின் பரிவாஹமாகையாலே अविभागेन दृष्टवान् என்றபடி சேஷசேஷி பாவ-அநுபவம் சொன்னதாலேயே ஸித்திக்கும். ஆக ப்ரபந்நனுக்கும் मोक्ष-यिष्यामि என்றதிலிருந்தே எல்லாம் ஸித்த மென்றதாயிற்று. ஆனாலும் गद्यத்தில் சொன்ன பரபக்தி.பரஜ்ஞாந. பரமபக்தி. விசததமாநுபவ,ஸர்வவித கைங்கர்ய ஸித்திக்ரமம் இங்கே தெரியவில்லையே என்ன—எல்லாம் அர்த்த ஸித்தமென்கிறார் पारमार्थिकेति. यथाप्रमाणமிதி. 'इमाँल्लोकान् कामान्नी कामरूप्यनुसञ्चरन्,' இத்யாதியும் கைங்கர்யத்திற்கு ப்ரமாணம். ஸர்வவிதகைங்கர்ய ஸித்தி யென்பதற்குத் தாத்பர்யம் तदुपायचिन्तनाधिकारத்தில் விவரிக்கப்பட்டது.

ச்லோகத்தில் கடைசிवाक्यத்திற்கு வ்யாக்யாநம் தொடங்குகிறார் இனிமேல் இதி. தீர்வு = சரணாகதியாலேயே மோக்ஷமென்பதில் உறுதி.

मा शुचः என்பதற்கு 'नानृतं वदेत्' என்ற விடத்திற் போல் நிஷேதவிதியே யாம்; இல்லையேல் வாக்யம் व्यर्थமாம். பொய் சொல்வதிற்போல் சோகிப்பதில் சிக்ஷையுண்டு' என்று சிலர் உரைத்தனர். அவரே ப்ரபந்நனுக்கு உத்தராகமும் லேபியாதென்று உரைத்திருக்கின்றனர்: இது பரஸ்பரவிருத்த மென்கிறார் சிலர் இதி. இதுவரையில் சோகித்திருந்த நீ சோகிக்க வேண்டா

இழியுமவனுக்கு சோகஹேதுக்களெல்லாம் கழிகையாலே சோகிக்கவேண்டா என்னு மிடத்தைச் சொல்லிக்கொண்டு விச்வாஸத்தை த்ருடீகரிக்கையிலே தாத்பர்யம்

बन्धुनाशादयः पूर्वं बहवः शोकहेतवः । तत्तत्समुचितैः सम्यगुपदेशैरपोदिताः ॥

सुदुष्करत्वात् धर्माणामपारत्वाद्विरोधिनाम् । सिद्धः फलविलम्बाच्च शोकोऽद्य विनिवार्यते ॥

'அபிமத-பலத்துக்கு துஷ்கர-ஸாதநமுமன்றிக்கே, ஸர்வவிரோதிநிவர்த்தநக்ஷம[மு]மாய்ப் பலவிளம்பமுமின்றிக்கேயிருக்கிற இவ்வுபாயவிசேஷம் உபதிஷ்டமானபின்பு உபாய-தௌஷ்கர்யாதிகளடியாக உனக்கு சோகிக்கப் ப்ராப்தியில்லை. இவ்வுபாயம் அநுஷ்டித்தால் உன் கார்யம் எனக்கு பரமாய் நானே பலியுமாய், உன்னை ரக்ஷியாத போது எனக்கு ஸாவத்யமாம்படியிருக்கும் தசையிலும் ஸநாதிஸுஹ்ருதநான உனக்கு சோகிக்கப் ப்ராப்தியுண்டோ' என்று திருவுள்ளம்.

இங்குக் கழிக்கிற சோகம் யதாவஸ்தித-ஆத்மோபதேசாதிகளாலே கழிந்த பந்துவதாதி-நிமித்தமான பழைய சோகமன்று; ப்ரகரண-அநுகுணமான சோகாந்தரம் எங்ஙனே யென்னில், 'दैवी संपदं विमोक्षाय निबन्धायाऽऽसुरी मता' என்று பிரித்துச் சொன்னவாறே

---

என்னுடைய பலஸாதநமான உபாயம் ஸித்தித்தபடியால் சோகத்திற்கிடமில்லை யென்றே சொன்னதாகும். ஒரு கார்யஸித்திக்காக அநுஷ்டாநாதி நிஷித்த கார்யம் போல் சோகம் இவனுக்கு ப்ராப்தமன்றே. ஆகையால் நிஷேதவிதி சொல்ல வேண்டுவது. विश्वासदृढीकरणமே பலமாகையால் வாக்யம் வ்யர்த்தமாகாது. ப்ரபன்னனை சரணடைந்தால் ஒரு படியாலும் கைவிடான் என்றது संसारयाम् என்கிற ச்ருதியில் दैवं जगल्लक्षणञ्च पूर्वैः என்பதின் பொருள். கீழே சோகம் பந்துநாசம் குலக்கேடு முதலானவற்றைச் சிந்தித்ததால் வந்ததென்று கீதையின் முதலத்யாயத்தில் ஸ்பஷ்டம். இது அந்த சோகமன்றென்கிறார் பந்துநாசேதி. சோகத்திற்குக் காரணமான அவைகள்—தேஹம் அநித்யம் ஆத்மா நித்யம், இந்த தேஹம் போனாலும் மேல் நல்ல தேஹத்திற்கு ப்ராப்தியுண்டு. யுத்தம் செய்யாமற் போனால்தான் அதர்மம் இத்யாதிகளைக் கொண்டு—पूर्वमेव अपोदिताः—முன்னமே நிவர்த்திக்கப்பட்டன. அவ்விந்த ச்லோகத்தில் धर्माणां—கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்கள் सुदुष्करत्वात् அடியோடு செய்ய முடியாதவைகளாயிருப்பதாலும், அவற்றுக்கு விரோதிகள் अपारत्वात्—முடிவற்றவையாகையாலும், அவை ஸித்தித்தாலும் फलविलम्बात् च-மோக்ஷம் தாமதிக்குமென்ற காரணத்தினாலும் सिद्धः-ஏற்பட்ட शोकः—சோகமானது ஸுகரமாயும் சீக்கிரம் பலஹேதுவாயுமிருக்கிற ப்ரபத்தியையுபதேசித்ததால் विनिवार्यते—விலக்கப்படுகிறது. இது भरन्यास-फलन्यासமாவதைக் கொண்டும் இதை விவரிக்கிறார் இவ்வுபாயமிதி. இந்த சோகம் இங்கே ஏற்பட்டிருக்கிறதென்பதை ஸந்தர்ப்பத்தைக் கொண்டு விளக்குகிறாராய் க்ரந்தாரம்பத்திலேயே க்ரஹிக்கப்பட்டதான சோகத்தை விட்டு வேறு சோகம் கொள்வது யுக்தமோ வென்பதற்கும் ஸமாதாநம் கூறுகிறார் எங்ஙனே இதி. दैवीति. கீதை 16-5. दैवासुरसंपद्विभागस्थलத்திலேயிருக்கிற

நாம் आसुर-प्रकृतिகளாகில் செய்வது என்?' என்று शोकिக்க அர்ஜுநனைப் பற்ற 'मा शुचः संपदं दैवीमभिजातोऽसि पाण्डव' என்றாற்போலே, இங்குச் சிறிய फलத்தில் तीव्रसङ்கம் நடவாநிற்கச் चिरकालसेव्यமாய் अन्तरायबहुलமாய் अत्यन्तावहितர்க்கும் कृच्छ्र-साध्यமான उपायத்தையும் தன் அளவையும் கண்டு 'நமக்கு இவ் उपायம் தலைக்கட்டி எங்கே இப் फलसिद्धि உண்டாகப் போகிறது?' என்று शोकिக்கிற அர்ஜுநனுக்கு स्वल्पकालसाध्यமாய் सर्व-अन्तराय-रहितமாய் सुकरமான उपायத்தைக் காட்டிக்கொடுத்து அம் मुखத்தாலே फलसिद्धियில் निर्भरனுமாய் निस्संशयனுமாம்படி பண்ணி 'मा शुचः' என்று சொன்னவ் இது उपायान्तर—दौष्कर्यविवशனடியாகப் பிறந்த शोकத்தைக் கழிக்கிறதாமித்தனையிறே.

இப் भगवद्गीतैயில் முற்பட प्रकृति-आत्म-विवेकத்தை உண்டாக்கிப் பின்பு परम्परया मोक्षकारणங்களான कर्मयोग-ज्ञानयोगங்களையும் साक्षात्—मोक्षसाधनமாக वेदान्तविहितமான भक्तियोगத்தையும் सपरिकरமாக उपदेशित्து,

'इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया । विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥'

---

मा शुचः என்ற சொல்லால் முதலத்யாயத்திற் சொன்ன சோகத்தைக் கொள்வதில்லையே; அந்த ஸந்தர்ப்பத்திலேற்பட்ட சோகத்தைதானே கொள்வது. அதைப்போல் இங்கு மென்று கருத்து. ஸம்பத்தாவது முன் இராமல் பிறகு வந்தேறியான தர்மம். இது என்ன வென்பது அங்கே விளக்கப்பட்டிருக்கிறது. இருவித ஸம்பத்துக்களில் दैवसंपत्தானது மோக்ஷமென்ற பலத்திற்காகவும் ஆஸுரஸம்பத்து अत्यन्त बन्धத்திற்குக் காரணமாகவும் கொள்ளப்படும். पाण्डव—அர்ஜுநா! நீ ஸத்புருஷனின் புதல்வனாதலால் दैवसंपत्தோடு பிறந்திருக்கிறாய். मा शुचः= ஆஸுரஸம்பத்தே தனக்குளதோவென்று கவலைப் படாதே யென்றான் கண்ணன். சிறிய பலம்=மிகச்சிறந்த பலமான மோக்ஷம். चिरकालसेव्यம்=பஹுஜந்மங்கள் அநுஷ்டிக்க வேண்டியது. अन्तरायबहुलம்= பல இடையூறுகள் கொண்டது. अत्यन्त अवहितர் =அநுஷ்டிப்பதிலேயே மிக்க கவனம் செலுத்தியிருப்பவர். कृच्छ्रसाध्यம்=வெகு ச்ரமப்பட்டு ஸாதிக்க வேண்டியது. தன் அளவு=தனக்குள்ள ஜ்ஞாநசக்திக் குறைவு. தலைக்கட்டி—முடிந்து; காட்டிக்கொடுத்து—உபதேசித்து அநுஷ்டிக்கச் ப்ரேரித்து, முன் உபதேசித்த பக்தி யோகத்தையே सर्वधर्मान् என்கிற ச்லோகத்திற்கு முன்ச்லோகத்தால் மீண்டும் உபதேசித்திருப்பதால் அந்த உபாயத்தை விடவில்லை யென்று தெரிகிறதே; அதற்கு விரோதமாக ஸ்வதந்த்ர ப்ரபத்தி விஷயகமாக்கலாமோ வென்ன—ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமாகும்படி முழுமையும் நிர்வஹிக்கிறார் இப் இதி. प्रकृत्यात्मविवेकமாவது—ப்ரக்ருதிபரிணாமமான தேஹாதிகளைவிட ஆத்மா வேறென்ற தெளிவு. इति இதி. கீதை 18-63. इति—இவ்வாறு गुह्यात् गुह्यतरं—கர்ம काण्डोक्तமான ஸாம்ஸாரிக फल- உபாயமான கர்மாதி ரஹஸ்யார்த்தத்தைக்காட்டிலும் மோக்ஷார்த்தமாகையால் அதிரஹஸ்யமான ஜீவாத்மபரமாத்மவிஷய ஜ்ஞாநமானது என்னால் அரசுவிரும்பாத உனக்கு உபதேசிக்கப்பட்டது, एतत्—இந்த ஜ்ஞாநவிஷயமான கர்மயோகம் ஜ்ஞா

என்று அருளிச் செய்தவாறே அர்ஜுநனுடைய முகத்தில் உருவுதலைக் கண்டருளியிருக்கச் செய்தே கடுக லகூபாயத்தை அருளிச் செய்யாதே 'பரீக்ஷா

---

நயோகம் பக்தியோகம் என்பவற்றைபாராய்ந்து यथा इच्छसि-எப்படி விரும்புகிருயோ तथा कुरु—அவ்வாறு செய் என்ருர். உருவுதலை=சோகத்தினுல் வந்த வாட்டத்தைக் கண்டு உபாயம் गुरुவாயிருப்பதால் வருந்துகிருனென்று அறிந்தாரே; உடனே சரமச்லோகத்தைதானே உபதேசிக்கவேண்டும் அதை விட்டு பக்தியோகத்தையே மீண்டும் சொன்னுல் வருத்தந்தானே மிகுமென்ற கேள்வியில்—அதேதான் ஸத்யம்: அதைத்தான் உபதேசிக்க வேண்டும்; ஆனுலும் தாம் यथेच्छसि तथा कुरु என்று சொன்னதாலே அதன் கருத்தை நன்கு அறியாமல் ஏதோ பொருள் கொண்டு வருந்துகிருன் போலுமென்று கருதி மீண்டும் பக்தி யோகத்தை உபதேசித்தார்; இதை யருளிச் செய்கிருர் கடுக இத்யாதியால்-கடுக—விரைவில். இங்கே அர்ஜுநன் நினைப்பது இவ்வாறு கும்—கீழே கர்மயோக ஜ்ஞாநயோகங்களை ஜீவாத்மஸாக்ஷாத்காரத்திற்காக உபதேசித்து பக்தி யோகத்தை தானே மோக்ஷத்திற்காக உபதேசித்தார். இவற்றில் ஏதேனு மொன்று செய்தால் போதுமோ? கர்மயோக ஜ்ஞாந யோகங்களில் ஏதேனும் செய் என்று பக்தியோகத்தை விட்டுச் சொல்லத் தானுகுமோ? என் இஷ்டப்படி நான் செய்தால் மோக்ஷம் வருமோ? ஓர் ஊருக்கு இரண்டு வழிகளிருந்தால் உன் இஷ்டப்படி போகலா மென்னலாம்; இங்கே கர்மயோகமும் பக்தியோகமும் ஒரு பலத்திற்கான வைகல்பிக உபாயமன்றே. நளமஹாராஜன் சனியின் பீடையில் எல்லாம் விட்டுச் சென்ற போது தமயந்தியும் தொடர்ந்துவர. இவளை வழியில் விட்டால் எங்கே எப்படி போகிறதென்று திகைப்பாளென்று, அவளைத் தான் விடப்போவதைத் தெரிவிக்காமல், அவளைப் பார்த்து போ என்றும் சொல்லாமல் இரு மார்க்கங்கள் ஸந்திக்கும் இடத்திலே நின்று, एष पन्थाः—இந்த வழியானது विदर्भाणाम्—உன் பிறந்தகமான விதர்ப்ப தேசத்திற்குப் போகிறது. एषः மற்ருெரு வழியானது कोसलान् गच्छति=நாம் அரசாண்ட கோஸலதேசத்திற்குப் போகிற தென்ருன். இதனுல் தான் சொல்லாமல் விட்டுப்போனபிறகு இவள் தனக்கு இஷ்டமான வழியிலிழிந்து ஏதேனு மொரு நாட்டுக்குப் போய்ச்சேரலா மென்று நினைத்தான். அது போல் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கான உபாயத்தையாவது செய்யலாம்; அல்லது மோக்ஷத்திற்கான உபாயத்தையாவது செய்யலாமென்ருே चतुर्विधा भजन्ते माम् என்றபடி ஏதற்கேனும் ஒரு பக்தியோகம் செய்யலாமென்ருே சொல்லலாகுமோ என்றவாறு. இப்படி முகத்தில் உருவுதல் என்று கல்பனை செய்து மீண்டும் பக்தி யோகத்தையே உபதேசித்தார். மோக்ஷத்திற்கான ஏதேனு மொன்றென்று நினைக்காதே; பக்தி யோகம் செய்தேயாகவேண்டு மென்ற தாகிறது. அப்படியானுல் यथेच्छसि तथा कुरु என்னத்தகுமோ வென்னில்—கர்மயோகங்கள், दैवमेवापरे यज्ञं இத்யாதி ப்ரமாணத்தாலே பலவகையாயிருக்கும்; பக்தியோக,

च जगन्नाथः परोत्यवदेतसाम्' என்கிற கட்டளையைக் கண்டருளி, நாம் 'இன்னது உனக்கு साक्षात्—मोक्षसाधनமான परमहितம், இத்தைப் प्रधानமாகக் கணிசித்து இதுக்கு अनुरूपமாக वर्ति' என்று निगमिயாதே 'एष पन्था विदर्भाणामेष गच्छति(यास्यति) कोसलान्' என்னுமாப்போலே उपेक्षकरवाक्ये பண்ணலாம்படி यथेच्छसि तथा कुरु என்று சொல்லித் தலைகட்டினேனென்று இது व्याजமாக शोकिக்கானென்று भावित्तு, இன்னுமொரு நிலை प्रधानமான भक्तियोगத்தை निष्कर्षिத்து उपदेशित्तுப் பார்ப்போமென்றிதொரு विनोदத்தைக் கணிசித்தருளிப் பண்டு उपदेशिத்த भक्तियोगந்தன்னையே 'सर्वगुह्यतमं भूयः' என்று தொடங்கி இரண்டு श्लोकத்தாலே अनादरம் தோற்ற सप्रत्यभिज्ञமாம்படி निष्कर्षिத்து निगमिக்க, அவ்வளவிலும் இவன் शोकம் இரட்டித்துத் தோற்றின படியைக் கண்டருளின सारथिरूपனான ஸர்வேச்வரன் 'இனி இவன் परमरहस्यமாய் अतिलघुவான மோக்ஷோபாயத்தை उपदेशिக்கைக்குப் पूर्णपात्रமானான்' என்று திருவுள்ளம்பற்றி, அருளிச்செய்யப்போகிற சிறிய लघूपायத்துக்குப் प्रशंसारूपமாக ஒரு காலக்ஷேபம் பண்ணாதே கடுக सकल-फल-साधनமான सविषयशरणागतिயை उपदेशित्तு இவனுடைய मनोरथத்துக்கும் सारथिயாய் सर्वशोकத்தையும் கழிக்கிறானை

---

மும் ஸத்வித்யா—दहरविद्यादिரூபத்தாலே பலவகை. அவற்றில் எந்தக் கர்மயோகத்தையும் எந்த பக்தியோகத்தையும் விரும்புகிறாயோ அதனைச் செய் என்றதாகும். இதை யறிந்தபிறகும் அவனுக்கு உருவதனுண்டா என்று மீண்டும் பரீக்ஷிப்பது இதனாலாகிறது. பக்தனை இப்படி பரீக்ஷிக்கலாமோ வென்னில்—மனத்தில் திடமேற்படுவதற்காக ஈச்வரன் பரீக்ஷிப்பதுண்டென்கிறார் परीक्षांचेति விஷ்ணுதர்மம் 74—79. नराणां अर्थविध्वंसनिकषेषु जनार्दनः என்பது உத்தரார்த்தம், यस्यानुग्रहमिच्छामि धनं तस्य हराम्यहम् என்ற வாறு திடமற்றமன முடைய பக்தர்களைப் பணத்தையழிப்பது போன்ற பல கார்யங்களாகிற உறைக்கல்லில் உறைத்து மனத்தைப் பரீக்ஷிக்கிறானென்றது. அது போல் அர்ஜுநனைப் பரீக்ஷிப்பதற்காக இவ்வாறு உபதேசித்தான். கட்டளையைக் கண்டருளி=ரீதியை யனுஸரித்து; இரண்டு ச்லோகங்களாவன 'सर्वगुह्यतमं, मन्मना भव என்பவை सप्रत्यभिज्ञமாம்படி=प्रत्यभिज्ञैயாவது—முன்பு நாம் அறிந்ததே இது என்கிற ஜ்ஞாநம். ஒன்பதாவது அத்யாயத்தின் முடிவிலுள்ள मन्मना भव என்கிற ச்லோகமே சிறிது வேறாக விருப்பதால் அந்த பக்தியோகமே இதென்ற ப்ரத்யபிஜ்ஞை வரும்படி என்று பொருள். இரட்டித்து இதி. இந்த மூன்று யோகங்களுக்கும் ப்ரதியாக வேறொன்று சொல்லுவாரோ என்றெதிர்பார்த்த நமக்கு இவ்வுபதேசத்தால் வேறொன்றில்லை யென்றே தெரிந்ததென்று சோகம் வளர்ந்தது. பக்தியோகத்துக்கு இவ்வளவு ப்ரசம்ஸை செய்தாரே; लघूपायத்தைச் சொல்லுகிறவர் அதற்கு ப்ரசம்ஸை செய்துதானே சொல்ல வேண்டும்; ஏன் அவ்வாறு சொல்லவில்லை யென்ன அதற்கு உத்தரம்—ஒருகாலக்ஷேபம் பண்ணாதே=சிறிதும் காலதாமதம் செய்யாமல். வருத்தத்தைக் கண்டு வருந்தி விரைவில் உபதேசித்தா

யாலே இங்கு निवारिக்கிற शोकம் பழைய शोकங்களில் வேறுபட்டதென்று மிடம் प्रकरणपरामर्शத்தாலே सुव्यक्तம்.

उपायान्तरविधिसனான இவனைக் குறித்து 'मामेकं शरणं व्रज' என்று विधित्त கட்டளையிலே अशक्तனானவன் शक्तன் கையிலே भरसमर्पणம் பண்ணுகையாலும் स्वतन्त्र-कारुणिकனான சேஷி भरस्वीकारம் பண்ணுகையாலும் இப் ப்ரபந்நனுக்கு இச் श्लोकத்தில் पूर्वार्धத்திலே निर्भरत्वமும், सर्वशक्तियாய் स्वीकृतभरனாய் आश्रित[ர்] விஷயத்தில் सत्यवादियான சேஷி, 'अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि' என்றருளிச்செய்கையாலே न्यस्तभरனான இவனுக்கு இனி आगामि-नरकादि-प्रत्यवाय शङ्काप्रसङ्गமில்லாமையாலே निर्भयत्वமும், இச் श्लोकம் "செம்மையுடைய திருவரங்கர்தாம் பணித்த மெய்ம்மைப் பெரு வார்த்தை" யாகையாலே निस्संशयत्वமும் फलितம் ஆகையால் இங்கு उपायविशेषश्रवण-अनुष्ठानங்கள் வந்தால் उपाय-अनुबन्धियாயும் फल-अनुबन्धियாயும் வரும் शोकத்தில் प्राप्तियில்லை என்கிறது.

இத்தாலே शोकविशेष-आविष्टன் ப்ரபத்திக்கு அதிகாரி என்று தோற்றுகிற 'अहं भीतोऽस्मि' என்றும்' 'பாவீ தழுவென மொழிவதற்கஞ்சி நம்பனே வந்துன்

---

ரென்றபடி. மநோரதத்துக்குமிதி. सारथिरूपனான என்றது இதற்பாக. பழைய சோகங்களில் = அத்யாயம் 1.லும் 16.லும் கண்ட சோகங்களைக்காட்டிலும்.

माशुचः என்றவிது நிர்பரத்வாதிகளுக்கும் உபலக்ஷணமென்கிற கருத்தாலே कृतकृत्याधिकारத்தில் கூறிய நிர்பரத்வ—நிர்பயத்வ— நிஸ்ஸம்சயத்வ. दृष्टान्तस्फुटपங்க்களை விரிவாகக் கூறுகிறார் उपायान्तरेति. செம்மை இதி. நாச். திரு. 11—10 आर्जव (ஆர்ஜவ)குணமுடையவரான ரங்கநாதர் க்ருஷ்ணனாயிருந்த போது சொன்ன ஸத்யமான பெருமை பொருந்திய இந்தச் சரமச்லோகமான ஸூக்தியைத் தந்தையரான விஷ்ணுசித்தர்கேட்டிருப்பர். प्रियो हि ज्ञानिनोऽत्यर्थं अहं स च मम प्रियः என்ற அவர் சொல்லுக்கு முரணாக அவரே நடந்தால் யார் தாம் அதை ஸ்தாபிக்கமுடியுமென்றது. இப் பாசுரத்திலுள்ள விசேஷத்தை நமது ப்ரபந்தரக்ஷையிற் காண்க. ஆகையால் = பகவத்வாக்யமானபடியால். उपायानुबन्धियாயுமென்ற உம்மையிலிருந்து फलानुबन्धियாயுமென்கிற அம்சம் தோற்றுகிறதென்பர். அதையும் சேர்த்தே பாடம் உளது.

இந்தச் சரமச்லோகத்தில் சோகமுள்ளவன் ப்ரபத்த்யதிகாரியென்றிருக்கச் சிலவிடத்தில் அச்சமுள்ளவன் அதிகாரியென்று தெரிகிறதே யென்று கேட்டுப் பரிஹரிக்கிறார் இத்தாலே இதி. अहं भीतोऽस्मि देवेश संसारेऽस्मिन् भयावहे। पाहि मां पुण्डरीकाक्ष न जाने शरणं परम्॥ ஜிதந்தை 1—8. பாவீ இதி. பெரியதிரு மொழி 1-6-4. வம்புலாம் என்று பாட்டாரம்பம். சிறந்த சொந்த மனைவியை விட்டுப் परदारத்தைப் பரிக்ரஹித்ததால் யமலோகம் இழுத்துச்சென்று அங்கே செம்பினால் செய்யப்பட்ட ஸ்த்ரீயுருவை நெருப்பினால் எரித்து, அடே பாவீ! அன்று परदारத்தைத் தழுவினாயே; அதனால் இதைத் தழுவென்று யமபடர்கள் மொழிவதை எங்கே கேட்கவாகுமோ என்று அச்சம் கொண்டு அந்த நரக ப்ராப்தியை நீக்குவதற்காக அப்பனே! உன்னைச் சரணமடைந்தேன் [என்று

திருவடி யடைந்தேன்' என்றும் भीतனானவன் ப்ரபத்திக்கு अधिकारि என்று சொல்லுகிறபடி என் என்னில்—கீழ் अभिमतம் सिद्धियாதே நின்ற நிலையைப் பார்த்து शोकமும், மேல் अभिमतத்துக்குப் प्रतिबन्धकங்களான प्रबल-विरोधिகளைப் பார்த்து भयமும் நடை யாடுகிறதாகையாலே मुमुक्षुவுக்கு अनिष्ट-निवृत्तियிலும் इष्ट-प्राप्तियிலும் ஒன்றைச் சொல்ல இரண்டும் வருமாப்போலே अधिकारத்திலும் भयशोकங்களில் ஒன்றைச் சொல்ல இரண்டும் सिद्धिக்கும். अनन्य-अकिञ्चनனுக்கு இப் भयशोकங்கள் இரண்டும் விஞ்சியிருக்கும். ஆகையால் இங்கு अतिशयित-शोक—व्याविष्टனான अधिकारिविशेषத்துக்கு अनुगुणமான उपायविशेषத்தைக் காட்டி இவனை निस्संशयனுமாய், निर्भरனுமாய், निर्भयனுமாய், हृष्टमनाவுமாக்கித் தலைக் கட்டுகிறது. இவ் अतिशयित-भयத்தைப் பற்ற, "அஞ்சின நீ என்னை அடையென்றார் வந்தார்' என்றும் சொன்னோம்.

இப்படிக் कृतकृत्यனான இவனுக்கு 'तत्तु कर्म समाचरेत्' என்று विहितமான कर्तव्यान्तरம் कैङ्कर्य—अनुप्रविष्ट—सदाचारविशेषமென்னுமிடம் पूर्वापरसन्दर्भங்களாலும் இச் श्लोकந்தன்னில் 'अक्रियावदनर्थाय' என்கையாலும் सिद्धம். ஆகையால் மேல் फलसिद्धियில் संशयம் இல்லாமையாலும், मोक्षोपायமாக ஒரு कर्तव्यशेषமில்லாமையாலும், இவனுக்கு உள்ள कर्तव्यம் आज्ञा—अनुपालनरूपமான स्वयंप्रयोजनமாகையாலும், अपराधம் प्रसक्तமானால் अधिकारान्तरத்திற் சொன்ன கட்டளையிலே अनुतापादिகளாலே सुपरिहरமாகையாலும் இவன் हृष्टमनाவாகக் குறையில்லை.

---

பாசுரத்தின் பொருள். சோகமாவது இது வரையில் பலன் பெறாமையால் வந்த துக்கம். भयமாவது—பலனுக்கு விரோதிகள் மேலே யிருப்பதைப் பற்ற துக்கம். இரண்டு மிருப்பதால் ஒன்று மற்றொன்றுக்கு உபலக்ஷணமாகு மென்ற கருத்தால் அருளுகிறார் கீழ் இதி. அஞ்சின இதி. திருச்சின்னமாலை 8வது பாட்டு. தருமம் விட என்று ஆரம்பம். அதில் எம்பெருமான் ஜீவனைப் பார்த்துச் சொல்வது. ஸம்ஸாரத்திலிருக்க மிக அஞ்சின நீ அது தீர என்னை அடைவாயாக என்று அருளினவர் வந்தாரென்று இதன் பொருள். இதில் அடைவதற்கு அச்சம் அதிகாரமென்று சொன்னதாகிறது. हृष्टमनस्त्वं எப்படி ஸித்திக்கு மென்ன விளக்கி யறிவிக்கிறார் இப்படி க்ருதக்ருத்யனான இதி तत्तु இதி. 'क्रियमाणं न कस्मैचित् यदर्थाय प्रकल्पते । अक्रियावदनर्थाय तत्तु कर्म समाचरेत्' லக்ஷ்மீதந்த்ரம் 17-88. ப்ரபந்நன் பலத்திற்காகச் செய்யும் காம்ய கர்மத்தை விடவேண்டும். எந்தக் கர்மமானது क्रियमाणं செய்யப்பட்டதாய் अर्थाय-பலத்திற்காக न... ஆகவில்லையோ; அப்படி நிஷ்பலமானால் ஏன் செய்கிறோ மென்னில்—अक्रियावत् செய்யப்படாததாகில் अनर्थाय—அநிஷ்டபலத்திற்கு ஆகிறதோ. तत् कर्म அக் கர்மத்தை அதாவது நித்யநைமித்திக கர்மங்களை समाचरेत् செய்ய வேண்டும். இந்த ச்லோகத்தில் நித்யநைமித்திகங்களைச் செய்யாமற் போனால் இங்கே சில அநர்த்தங்கள் வருமென்று தெரிகிறதே யல்லது ப்ரபத்தி பலிக்காதென்று தெரியவில்லை. ஆகையால் இது உபாய கோடியிற் சேராது. இப்படி ஹ்ருஷ்ட—மநாவாயிருக்கிறானென்றால் நிர்

இந்த ஹர்ஷம் விவேகியாய் हेयமான शरीरादिகளோடே துவக்குண்டிருக்கிற இவனுக்கு निर्वेदमिश्रமாய் நடந்ததேயாகிலும் இந் निर्वेदமும் இச் शोकनिवृत्तियும் भिन्नविषयங்களாகையாலே विरोधமில்லை.

'मा शुचः' என்கிற இதுவே शोकनिमित्तமானவை யெல்லாம் मोचनीयமாகைக்கு नियामकமாகையாலே प्रारब्धकर्मத்திலும் शोकनिमित्तांशமெல்லாம் கழிகையால் आर्ति-अतिशयமுடையவனுக்கு அப்போதே मोक्षம் सिद्धिக்கும். 'மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்' इत्यादिகளிற்படியே प्रारब्धकर्मத்திலும் மேலுள்ளதெல்லாம் கழிந்து இச் शरीरावसानத்திலே மோக்ஷமென்று இசையவேண்டியதால், இச் शरीरந்தன்னிலும் आयुश्शेषம் अनिष्टமானபோது இதுவும் प्रपत्ति-वशीकृत-सर्वशक्ति-सङ्कल्पத்தாலே கழியக் குறையில்லையிறே.

प्रायश्चित्तविशेषेषु सर्वस्वारादिकेषु च । नात्महिंसनदोषोऽस्ति तथाऽऽर्तशरणागतौ ॥

---

வேதம் சொல்வது விரோதியாதோ என்ன அருளிச் செய்கிறார் இந்த இதி. சரீராதிகள் ஸ்வாதீநமாயிராமையால் கைங்கர்யம் செய்ய முடியவில்லையே யென்கிற நிர்வேதமுமிருக்கலாம்; உபாயஸித்தியால் மோக்ஷம் பெறப் போகிறோமென்று சோகமற்றுமிருக்கலாம்.

मा शुचः என்று, ப்ரபத்தியநுஷ்டாநத்திற்குப்பிறகு சோகமற்றிரு என்றதால் ஆர்த்த ப்ரபத்தியில்லை யென்று தெரிகிறதே என்ன, உத்தரம் मा शुचः இத்யாதி. ஜந்மாந்தராதிகளைப் போலே देहान्तरादिகளும் சோகத்திற்குக் காரணமாகலா மாகையாலே இந்த ஜந்மத்தின் இடையிலேயும் மோக்ஷம் பெறலாம். அவ்வார்த்தி விஞ்சினால் அப்போதும் மோக்ஷமென்றபடி. மரணமானால் இதி. இது சரணமாகு மென்ற(திருவா. 9-10-5) பாசுரத்திலுள்ளது. சரணமாகின்ற தன் திருவடி யடைந்தார்களுக்கெல்லாம் மரணம் வந்தபோது வைகுந்தம் கொடுப்பவனாகிறான் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கு மெம்பெருமான் என்றபடி. ஆத்மஹத்தியைப் பெரும் தோஷமாக சாஸ்த்ரம் சொல்லியிருக்க, ஆர்த்தப்ரபத்தி செய்யலாமோ வென்பதற்கு உத்தரம் प्रायश्चित्त இதி. சாஸ்த்ரவிதிமூலமான ஆத்மஹத்தி தோஷமாகாது. क्रोधात् प्रायं विषं वह्निं शस्त्रं उद्बन्धनं जलम् । गिरिवृक्षप्रपातं वा ये कुर्वन्ति नराधमाः என்றபடி கோபாதிகளுக்கு வசப்பட்டுச் செய்யும் மரணம் நிஷித்தம். அவ்வாறின்றி. செய்த பாபத்திற்கு ப்ராயச்சித்தமாக, 'यः कामतो महापापं नरः कुर्यात् कथञ्चन । न तस्य निष्कृतिर्दृष्टा भृग्वग्निपतनादृते என்கிற விதியினால் गिरिपतनादि प्रायश्चित्तம் செய்வது தோஷமாகாது. सर्वस्वारமென்கிற யாகம் செய்து மரிப்பதிலும் தோஷமில்லை. அதாவது पूर्वमीमांसै 10-2-56, ஸூத்ரத்தில் शुनःपुच्छ-स्तोमोऽग्निष्टोमः । मरणकामो ह्येतेन यजेत; यः कामयेत अनामयः स्वर्गं लोकं इयामिति என்று ஸ்வர்க்கம் பெறுதற்காக மரிக்க விரும்பினால் அக்நிஷ்டோமத்தை शुनःपुच्छ மென்ற स्तोत्रவகையுடன் செய்ய வேண்டும். யாகத்தின் இடையில் आर्भवे प्रस्तूयमाने औदुम्बरीं परितः अहतेन वाससा परिवेष्ट्य, ब्राह्मणाः / परिसमापयत मे यज्ञमिति संप्रेष्य अग्निं विशति. என்று அக்நிப்ரவேசம் விதிக்கப்பட்டது. இராமாயணத்தில் शरभङ्गादि

दृप्तस्य तु यथाशास्त्रं चिरं जीवितुमिच्छतः । प्राणरक्षणशास्त्रार्थलङ्घनं त्वपराधनम् ॥'

योगिகள் योगविशेषத்தாலே देहत्यागम् பண்ணுமாப்போலே आर्ति अतिशय முடையவன் ப்ரபத்தியாலே देहत्यागம் பண்ணுகைக்குத் तीर्थप्रवेशादिகளிற் போலே युगविशेषनियमமுமில்லை. இவ் आर्तप्रपन्नனே எல்லாரிலும் கடுக आत्मरक्षणம் பண்ணுகிறவன்.

---

மஹர்ஷிகள் அக்நிப்ரவேசம் செய்த ப்ரகாரத்தையும் கொள்க. அங்கு எப்படி ஆத்மஹிம்ஸை தோஷமாகாதோ அது போல் ஆர்த்தியினால் உடனே மரணம் வரும்படி சரணாகதி செய்வதும் दोषமன்று சரணாகதியும் விஹிதகர்மமன்றோ? மேலும் அக்நிப்ரவேசாதிகள் போல சரணாகதி மரணகாரணமாக உலகிலெங்கும் ப்ரஸித்தமுமன்றெனக தृप्तனாயிருந்து சரணாகதி பண்ணினவன் மரணமானால் மோக்ஷம் வருமென்று நடுவில் ஆத்மஹத்யாதிகள் செய்தானால் அது சரணாகதியின் பலனல்லாமையாலே दोषமாகுமென்கிறார் दृप्तस्येति. வெகுகாலம் ஜீவித்திருக்க வேண்டுமென்று விரும்பி देहावसानத்திலேயே மோக்ஷம் கேட்ட दृप्तன் सर्वत एव आत्मानं गोपायेत् என்று गौतमधर्मसूत्रத்தில் ப்ராணாபாயகரமான दुर्गम ஸஞ்சாராதிகளான அபாயங்களுக்கு இடம் தரக்கூடாதென்பதை மீறுதல் அபராதமாகும். அதுபோல் यथाशास्त्रं = ज्योतिश्शास्त्रத்தை யநுஸரித்துத் தனக்கிருக்கும் உபாதி விலகினால் ஜாதகப்படி चिरकालம் வாழலாமென்று தெளிந்தவன் அவ்வுபாதிநிவ்ருத்திக்காக ஏற்பட்ட உபாயத்தை சாஸ்த்ரத்தை யநுஸரித்து தேசகாலாநுகுணமாகச் செய்துகொள்ளாமையும் அபராதமாகலாம். இப்படியிருக்கும் போது தானே ஆத்மஹத்தியை ஒரு ப்ரபந்நன் செய்கிறானென்றால் அது ஸாதுவாகாது. ஆனாலும் स्वर्गार्थं तपस्तप्त्वा सुकृत् पूर्णमानसः । तीर्थादिषु त्यजेद् देहं नैवं कलियुगे भवेत् என்று சாஸ்த்ரவிஹிதமான ஜலப்ரவேச—அக்நிப்ரவேசாதி கலியுகத்தில் நிஷித்தமாகையால் आर्तप्रपत्तियும் அவ்வாறே யாகாதோ வென்ன அருளிச்செய்கிறார் योगिகள் இதி. ஜலப்ரவேசாதிகள் நிஷித்தமானாலும் योगबलத்தினாலே தேஹத்யாகம் கலியுகத்திலும் இசையப்பட்டிருப்பது போல் ஆர்த்தப்ரபத்தியுமாகும். ஆகையால் யுகவ்யவஸ்த்தை இதற்கில்லை. மேலும் सर्वत एव आत्मानं गोपायेत् என்கிற வசநம் தேஹரக்ஷணத்தை மட்டும் சொல்வதன்று; ஆத்மரக்ஷணத்திற்காக தேஹரக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மரக்ஷணத்தில் உயர்ந்தது பரமபுருஷார்த்த ப்ராப்தி. அதற்காக ஆர்த்தப்ரபத்தி செய்கிறவன் सर्वत एव-ஸர்வவிதமான ஆபத்தினின்றும் ஆத்மாவைக் காக்கின்றவனாகையால் அந்த சாஸ்த்ரத்தோடு விரோதமில்லை; அநுகூலமேயென்கிறார் இவ் இதி.

இனி दृप्तனானவான் உத்க்ருஷ்டஜநங்களை அவமதிப்பதற்கான கர்வமுடையவன்தானே. அவனுக்கு சோகமேது? அவன்விஷயத்தில் मा शुचः என்பது பொருந்தாது. அது போலவே ஆர்த்தனானவன் ஐச்வர்யம் நஷ்டமாய் வருந்தியிருப்பவன்; அவன்விஷயத்தில் மோக்ஷமளிப்பது எங்ஙனே என்ற சங்

இபப்டி ஆர்தன் த்ருப்தன் என்கிற பிரிவும் இவனுக்குப் பிறந்த ஶோகத்தில் வைஷம்யமடியாகச் சொல்லுகிறதத்தனை; ஒருவனுக்கு ஶோகமில்லாமை யன்று. ஜன்மாந்தராதிஸாத்யம் ஶோகநிமித்தமாய் ஏதேனு மொரு நாள் மோக்ஷம் பெறுவோ மென்று தேறியிருக்குமவன் இங்கு த்ருப்தன் அல்லது உத்க்ருஷ்ட-ஜந்ம—அஸ்மாநாதிஹேது வான கர்வரூபமான அநாத்மகுணத்தையுடையவனல்லன். இச் ஶரீரத்தில் சதுர்முக-ஐஶ்வர்யம் பெற்றாலும் இது பரிபூர்ண—ப்ரஹ்மாநுபவவிரோதி யானபடியாலே த்ருவ் வர்தமாநதேஹஸம்பந்தமுங்கூட மஹாக்நி போலே துஸ்ஸஹமாய் "உடலுமுயிரும் மங்க வொட்டு" என்னும்படி ப்ரபத்த்யநுஷ்டாநாநந்தரம் க்ஷணமாத்ரவிலம்பக்ஷமனல்லாதவன் ஆர்தப்ரபந்நன் அல்லது 'आर्तो जिज्ञासुरर्थार्थी' என்கிறவிடத்தில் சொல்லப்பட்ட வனல்லன். 'आर्तो वा यदि वा दृप्तः' என்கிறவிடம் அதிவாதமென்பார்க்கும் இங்கு இவ் அதிஸ்திதியில் விவாதம் பண்ணவொண்ணாது உபாய. அநுஷ்டானத்துக்குப் பின்பு ஃபலமாகையாலும் இது உபதேஶவேளை யாகையாலும் இவ் ஆர்தன்திறத் திலும் 'मोक्षयिष्यामि' என்ற भविष्यन्निर्देशத்துக்குக் குறையில்லை.

---

கனைப் பரிஹரிக்க ஆர்த- த்ருப்தபதங்களுக்கு இந்த ப்ரகரணத்தில் கொண்ட பொருள் வேறென்கிறார் இப்படி இதி: உடலும் இதி. திருவாய் 10-7-9, ஊழிமுதல்வன் என்ற பாசுரம். திருமாலிருஞ்சோலையில் வாழும் கடல்வண்ணா! எனது உடம்பும் ப்ராணனும் கெடும்படி செய்; அதில் வெறுப்புக் கொள்; என்னை விடாமல் அழைத்துப் போகவேண்டு மென்று ஆழ்வார் வேண்டு கிறார். இது ஆர்த்த ப்ரபத்தியாகும். आर्तो वेति. 'आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणागतः । अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना' என்கிற (ராமா.) ச்லோகத்தில் த்ருப்தனை = கர்விஷ்டனை சத்ருவையும் சரணாகதனையில் ரக்ஷிக்க வேண்டு மென்றது அதிவாதமாகும்; அதில் நோக்கில்லை; ஆர்த்தனைக் காக்க வேண்டு மென்பதிலே நோக்கு என்பரே; அதுபோல் மோக்ஷார்த்தமான சரணாகதியும் ஆர்த்த விஷயமேயன்றி த்ருப்த விஷயமாகாது என்ற கேள்விக்குப் பரிஹார மாகும் இவ்வாக்யம். கர்விஷ்டனென்று பொருள் கொண்டால்தானே பொரு ந்தாது. 'आर्तानां आशुफलदा सकृदेव कृता ह्यसौ । दृप्तानामपि जन्तूनां देहान्तर निवारणी ॥ यस्य देहान्तरकृते शोको दृप्तः स उच्यते । यस्तु प्रारब्धदेहेऽपि शोचत्यार्तः स उच्यते என்றபடி ஆர்த்தத்ருப்தபதங்களுக்குப் பொருள் கொண்டதால் ஒரு விரோதமு மில்லை. இராமாயாணச்லோகத்திலும் கர்விஷ்ட னென்ற பொருளை விட்டு, आर्तः விரைவில் பலனைக்கோருபவன். दृप्तः—தாமதித்தாவது பலன் பெற்றால் போது மென்றிருப்பவன் என்று பொருள் கொண்டால் அதிவாதமில்லை யென்றபடி. சரமச்லோகம் ஆர்த்தன்விஷயமாகில் அப்போதே மோக்ஷமாகையால் मोक्षयिष्यामि என்று எதிர்காலக் குறிப்பு கூடுமோ என்பதற்கு உத்தரம் उपायेति. இது உபாய உபதேசகாலந்தானே. இதற்குப் பிறகு எப்போது அநுஷ்டிக்கப் போகிறானோ அதன்பிறகே மோக்ஷமாகையால் எதிர்காலத்திற்குக் குறையில்லை யென்றதாம். விரைவில் மோக்ஷம் ஈச்வரன் கொடுக்கும் போது ஜீவன் அதை விட்டு என் த்ருப்தனாக வேண்டு மென்ன; அருளிச்செய்கிறார்

இவ் आर्त—दृप्तादिविभागங்களெல்லாம் सुकृततारतम्य மூலமான भगवदनुग्रहतारतम्यத்தாலே வரும். प्रारब्धस्यान्ते भुक्त्वा ततः सर्ववित् सुखमाप्नुयात् इत्यादिवचनங்கள் आर्तप्रपन्नविषयத்தில் निरवकाशங்கள். दृप्तप्रपन्नன் திறத்தில் उत्तरार्धांशத்தைப் பற்ற 'मा शुचः' என்கிற வாக்யத்தின் கருத்தை 'आध्यात्मिक—आधिभौतिक' என்று தொடங்கி 'अनन्तरं तव तत्त्वतो मद्ज्ञान—दर्शन—प्राप्तिषु निस्संशयः सुखमास्स्व' என்று அருளிச்செய்தார். இங்குச் சொல்லுகிற शोकानुवृत्तिக்கு ஒரு படியாலும் सङ्कोचकரில்லாமையாலே இவ் उपायविशेषज्ञानத்தாலும் अनुष्ठानத்தாலுமாக सर्वप्रकारशोकहेतुக்களெல்லாம் கழியும்படி சொல்லிற்றாகிறது. अनुष्ठानपर्यन्तமல்லாத ज्ञानमात्रம் இவ் उपदेशத்தாலே பிறந்தாலும்

"न गाथा गाथिनं शास्ति बहु चेदपि गायति । प्रकृतिं यान्ति भूतानि कुलिङ्गशकुनिर्यथा ॥"

என்கிற கணக்காய் निष्प्रयोजनமாகையாலே ज्ञान—अनुष्ठानங்கள் இரண்டினு

---

இவ் இதி. எவ்வளவு சொல்லியும் மோக்ஷமே விரும்பாதவர்கள் இருக்கின்றனரே ஆகையால் உபதேசம் கேட்டாலும் நடப்பது பூர்வகர்மாதீநமென்றபடி. प्रारब्धेति. தத்துவமறிந்தவன் तत्र—உபாயமநுஷ்டித்தபிறகு ப்ராரப்தத்தை மட்டும் அநுபவித்துப் பிறகு மோக்ஷஸுகம் பெறுகிறானென்ற வசனமிருப்பதால் ஆர்த்த ப்ரபந்நன் இல்லை யென்ன வேண்டா. அது ஆர்த்த ப்ரபந்நன்தவிர மற்றவர்விஷயமாமென்றபடி. எம்பெருமானார் கத்யத்தில், "ஆகையாலே நீ உள்ளபடி அறிவதிலும் காண்பதிலும் அடைவதிலும் ஐயமற்று ஸுகமாயிரு" என்று அருளியதால் ஆர்த்த ப்ரபந்நன் இல்லை யென்ன, அதுவும் दृप्तविषयமென்கிறார் मा शुचः इति. கீழே सुदुष्करत्वात् धर्माणां என்று குருபாயங்களைச் செய்யமாட்டாமையால் வந்த சோகம் मा शुचः என்று நிவர்த்திக்கப்படுகிறதென்று சொல்லப்பட்டது லघूपायஜ்ஞானத்தினாலேயே இந்த சோகம் தீரும்; இப்படியிருக்க இங்கே आध्यात्मिकेत्यादिग्रन्थத்தை உதாஹரித்து உபாயாநுஷ்டானத்தின் பலனான சோகநிவ்ருத்தியைச் சொல்வதெங்ஙனே என்ன, எல்லாம் விவக்ஷிதமென்கிறார் இங்கு இதி. ஸங்கோசகர்=ஒன்றை விட்டு ஒன்றை மட்டும் கொள்வதற்கு ப்ரமாணம்; ஞானம் அனுஷ்டானத்திற்காகையால் அநுஷ்டானபர்யந்தம் கொள்ள வேண்டுமென்று கருத்து. नेति.भा. सभा. 42—21. गाथा=உபதேசவாக்யம் बहु गायति चेदपि=பல கால் சொல்லப்பட்டாலும் गाथिनं சொல்லுகிறவனை न शास्ति—சிக்ஷிப்பதாகாது. உபதேசித்தபடி செய்தால் தான் பலனுண்டு. भूतानि—ப்ராணிகள் உபதேசம் செய்யும் நிலைமையிலிருந்தாலும். कुलिङ्गशकुनिर्यथा—குலிங்கமென்கிற பக்ஷியைப்போல் உபதேசத்திற்கு மாறாக प्रकृतिं—பழைய இயற்கைச் செயலையே यान्ति—அடைகின்றனர். வேறுவிதமே நடக்கின்றனர். அவர்களுக்கு அவ்வறிவு வீண் என்றபடி. कुलिङ्गशकुनिर्नाम दन्तैः दारितदन्तिनः । मुखाद्यामिषं आदत्ते वक्ति मा साहसं कुरु ॥ என்றதே. கத்தும் ஒலியைக் கேட்டால் मा साहसं कुरु என்கிற வாறிருக்கும் ஸாஹஸகார்யம் செய்யாதே யென்று அதன் பொருள். அது செய்வதோ அதற்கு நேர்மாறாகும். யானையைப் பிளந்து மாம்ஸம் உண்ட

றடையவும் फलமான शोकनिवृत्तिயையெல்லாம் இங்கு விவக்ஷிக்கிறது. ஆகையால் उपायानुष्ठानத்தில் पूर्व—अपर—मध्यदशैகளைப் பற்ற संभावितமான शोकமெல்லாம் இங்கே கழிக்கப்படுகிறன. எங்ஙனே யென்னில்;

अधिकारविशेषத்தையும் उपायविशेषத்தையும் उत्तरकृत्यविशेषத்தையும் परि-पूर्णकैङ्कर्यपर्यन्तफलसिद्धியையும் பற்றப் பல படியாக शोकம் संभावितம். அதில் (1) अनुष्ठिக்கப்புகுகிற शरणागतिधर्मம் जाति—वर्ण—आश्रमादिविशेषनियत மல்லாமையாலே प्राप्यरुचियும் प्रापकविश्वासமும் आकिञ्चन्यज्ञानादिகளும் உண்டானபோது ஒருவர்க்கும் 'நாம் இதுக்கு अधिकारिகளல்லோம்' என்று शोकिக்க வேண்டா.

(2) இவ் उपायविशेषம் सकृत्करமாக क्षणकालसाध्यமாய் सुकरமாய் आवृत्ति—निरपेक्षமாய் उपायान्तरव्यवधानமும் दुष्करपरिकरान्तरமு மின்றிக்கே யிருப்பதாய்க் கோரி(வி)ன காலத்திலே अपेक्षितफलங்கள் எல்லாவற்றையும் தரவற்றாயிருக்கையால், आकिञ्चन्यமும் फलविलम्बासहत्वமு முடைய நமக்கு अपरिकरமாக चिर-काल—अनुवर्तनीयமாய் अशक्त—अनधिकृतர்க்கும் दुरनुष्ठानமாய்த் यथाविध—परिकरान्तर सापेक्ष[மு]மாய்ப் फलविलम्बமுமுடைத்தான उपायान्तरத்திலே அலையவேண்டுகிற தோவென்று शोकिக்கவேண்டா.

(3) இப்படி लघूपायमात्रத்தாலே वशीकार्यனாய்ப் फलप्रदानம் பண்ணவிருக்கிற शरण्यன் सर्वसुलभனாய் विश्वसनीयतमனாய்ப் परमकारुणिकனாய் निरङ्कुश—स्वातन्त्र्यனாயிருக்கையாலே सिद्धोपायத்தைப் பற்ற शोकिக்கவேண்டா.

(4) இவ் उपायानुष्ठानத்துக்குப் பின்பு आज्ञा—अनुज्ञैகளால் பண்ணும் सत्कर्मங்களெல்லாம் இப் ப்ரபத்திக்கு अङ्गமல்லாமையாலே அவற்றுக்கு देश-कालादिवैगुण्यத்தாலே சில वैकल्यம் உண்டானாலும் उपासनத்துக்குப்போல் இதுக்குப் परिकरवैकल्यம் பிறக்கிறதோவென்று शोकिக்க வேண்டா.

(5) भगवत्कैङ्कर्यादिகளுக்கு अनर्हतैயையுண்டாக்கும் बुद्धिपूर्वभागवत—

---

சிங்கம் கொட்டாய்விடும் ஸமயத்திலே விரைவில் அதன் வாயிலினுட் புகுந்து பற்களிலிடுக்கிய மாம்ஸத்தைப் பிடுங்கிக் கொண்டு வெளிவரும். पूर्वापरमध्यदशैகளை=ஸுகரமான உபாய ஜ்ஞானத்திற்கு முன்தசை பூர்வதசை. உபாயம் அநுஷ்டித்த பிறகான தசை அபரதசை; அநுஷ்டாநதசை மத்யதசை இவற்றைப் பத்து விதமாகப்பிரித்து விளக்கத் தொடங்குகிறார் அதிகாரேதி. முதலாவதைச் சொல்லுகிறார் अनुष्ठिक्क இதி. ப்ரபத்தியநுஷ்டாநத்திற்குப் பலத்தில் ருசியும் விச்வாஸமும் ஆகிஞ்சந்யாதி ஜ்ஞாநமும் வேண்டும். அவையிருந்தால் ஜாத்யாதி வ்யவஸ்தையும் உண்டோ என்று சோகிக்க வேண்டா என்றபடி. இரண்டாவது இவ்வுபாய விசேஷமித்யாதி. தரவற்றாயிருக்கையால்=தரக்கூடியதாகையால். உபாயம் ஸாத்யோபாயம் ஸித்தோபாயமென இரண்டு. ஸாத்யோபாய ஜ்ஞாநத்தினால் சோகநிவ்ருத்தி சொல்லப்பட்டது; ஸித்தோபாய ஜ்ஞாநத்தால் வரும் சோகநிவ்ருத்தியைச் சொல்லுகிறார் இப்படி இதி. உத்தரக்ருத்யங்கள் ப்ரபத்திக்கு அங்கமல்ல என்கிற வித்தால் வரும் சோகநிவ்ருத்தி இவ்விதி. भागवदि த்யாதியால் புத்திபூர்வ அபராதம்

अपचारादिகளை விளை(வி)த்து दग्धपटம்போலேயாக்கவல்ல प्रारब्धफலமான पापविशेष-த்துக்கு அஞ்சி प्रथमप्रपत्तिकालத்திலேயாதல் பின்பு ஒரு கால் அதுக்காகப் प्रपत्ति பண்ணியாதல் निरपराधமான उत्तरकृत्यத்தை अपेक्षिத்தால் மேல் अपराध-प्रसङ्गத்தையும் பற்ற शोकिக்க வேண்டா.

(6) இப்படி निरपराधமான उत्तरकृत्यத்தை अपेक्षिயாதார்க்கும் மேல் बुद्धिपूर्व—अपराधம் வந்தாலும் 'न त्यजेयं कथञ्चन' என்று இருக்கக் கடவ (अशरण्य)शरण्यன் இவனுக்கு अनुतापத்தை உண்டாக்கிப் पुनःप्रपत्तिயாகிற प्रायश्चित्त-विशेषத்திலே மூட்டியும், அதுவும் கைதப்பும்படியான कठिनप्रकृतिகளுக்கு शिक्षारूपங்களான उपक्रोशमात्रங்களைக் காட்டி மேல் अपराधம் பண்ணாதபடி விலக்கியும் फलங் கோரி(வி)ன காலத்துக்கு முன்பே கண்ணழிக்கையாலே प्रपन्नனுக்கு மின்மினிபோலே தோற்றி நிலைநில்லாதே போகிற बुद्धिपूर्व—अपराधलेशங்களாலே नरकादिमहाक्लेशங்கள் வரில் செய்வதென் என்று சங்கித்து शोकिக்கவேண்டா.

(7) आर्तप्रपन्नனுக்கு அப்போதே फलसिद्धिயுண்டாம்படியிருக்கையாலே 'देहे चेत् प्रीतिमान् मूढो भविता नरकेऽपि सः' என்னும்படி नरकतुल्यமான இச் शरीरம் अनुवर्तिக்கிறதே என்று शोकिக்கவேண்டா.

(8) कर्मयोगம் முதலான निवृत्तिधर्मங்களெல்லாம் ''नेहाभिक्रमनाशोऽस्ति' इत्यादिகளிற்படியே இட்ட படை கற்படையாகையாலும் இச் शरणागतिயைப் பற்ற विशेषित्து 'न त्यजेयं कथञ्चन' என்கையாலும் दृप्तप्रपन्नனுக்கும் கோரி(வி)ன காலத்தளவு விளம்பித்தாலும் फलसिद्धिயில் ஸம்சயமில்லாமையாலே

'यज्ञोऽनृतेन क्षरति तपः क्षरति विस्मयात् । आयुर्विप्रपरीवादात् दानं च परिकीर्तनात् ॥'

---

நேர்ந்தால் ப்ரபத்தி பலியாதோ வென்கிற சோகத்திற்கு நிவ்ருத்தி. दग्धपटம் போல் இதி. வஸ்த்ரம் மடித்தது மடிப்பாகவே யிருந்து வெந்து போனால் குறுக்கிழையும் நெட்டிழையும் கலையாமல் உருமாறாமல் காணப்பட்டாலும் காற்றுச் சிறிது வீசும் போதே கலந்து மறைந்து போவது போல் பாகவதாபராதப்பட்டவர்கள் உருமாறாமலிருந்தாலும் ஒரு கார்யத்திற்கும் உதவார். நிலை நில்லாதேபோகிற இதி; போகிறபடியாலென்றபடி. இங்கே நிலைநிற்கும் மஹாபாகவதாபசாராதி அபராதம் ப்ரபந்நனுக்கு வாராது; வந்தால் ப்ரபந்நனாகான்; நரகாதிக்லேசமுமுண்டு என்று தெரிகிறதா வென்னில்—இது விஷயமாக நிக்ஷேபரக்ஷாஸூக்தியையும் உன்னித்து நிஷ்கர்ஷம் செய்க. देहे चेत् இதி. मांसासृक्पूयविण्मूत्रस्नायुमज्जाऽस्थिसंहतौ என்றது பூர்வார்த்தம். வி.பு. 1-17.63. மாம்ஸம் இரத்தம் சீய் மலம் நீர் நரம்பு பசை எலும்பு இவற்றின் குவியலாய் மிகவும் அபாஸமான தேஹத்தில் அபிமாநமுள்ளவனாகில் அந்த மூடன் நரகத்திலும் அபிமாநம் வைப்பானென்று பொருள். नेहा-भिक्रमनाशोऽस्ति என்பதற்கு விசேஷக்கருத்துரைக்கிறார் यज्ञ இதி. யாகமானது பொய் சொல்வதால் அழியும்—வீணாகும். தவம் विस्मयात् நாம் இவ்வளவு செய்தோமென்று ஆச்சர்யமூலமான அஹங்காரத்தால் வீணாகும். विप्रपरीवा

த்யாதிகளிற்படியே ஸுக்ருதங்களாயிருப்பன சில துஷ்க்ருதங்களாலே இப் ப்ரபத்தி-ரூபமான ஸுக்ருதம் நசித்துப் பலம் கிடையா தொழியில் செய்வதென் என்று ஶோகிக்கவேண்டா.

(9) இச் சரீராவஸானத்தில் மோக்ஷம் பெறவேண்டுமென்று காலம் குறிக்கையாலே ஜந்மாந்தராதிஹேதுக்களான ப்ராரப்தகர்மவிசேஷங்களாலே நமக்கு ஜந்மாந்தரங்கள் வரில் செய்வதென் என்று ஶோகிக்கவேண்டா.

(10) அநந்யப்ரயோஜநனாய் ப்ரபந்நனான இவனுக்குப் ப்ரதிபந்தகங்களான ஸர்வபாபங்களும் கழிகையாலே தேஶகாலாநுபவாதிகளான அந்தராயங்களாலே பரமபலத்துக்கு விலம்பம் வருகிறதோ வென்று ஶோகிக்கவேண்டா.

இப்படி ஸர்வப்ரகாரஶோகஹேதுக்களும் கழியும்படி எனக்கு அநுக்ரஹவிஷயபூதனான நீ இனி ஶோகிக்கையாவது முன்பு நிக்ரஹவிஷயபூதனாய் நின்ற தஶையில் ஶோகியாதாப்போலே அநிபுணக்ருத்யமாய் இவ் உபாயவிஶேஷவைலக்ஷண்யத்துக்கும்; க்ஷணமாத்ரமே நீட்டுக்கொள்ளுகிற ஸித்தோபாயபூதனான என் ப்ரபாவத்துக்கும், என் பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணிக் க்ருதக்ருத்யனாயிருக்கிற உன் நிலைக்கும் தகுதியன்றென்று திருவுள்ளம்.

இப்படிச் சரமஶ்லோகத்தில் ஸாரதமமான 'மா ஶுச:' என்கிற சரமவாக்யத்தின் தாத்பர்யத்தைத் தங்கள் சரமதஶையிலே ஆசார்யர்கள் ஶிஷ்யர்களுக்கு உபதேஶிப்பார்கள்.

—o—o—

இச் ஶ்லோகத்தில் பதங்களில் அடைவே அதிகாரவிஶேஷம், ஆகிஞ்சந்யபுரஸ்காரம். दुष्कर-परिकरान्तर-नैरपेक्ष्यं अशक्य–प्रवृत्ति–अनौचित्यं दुष्कर-अभिनिवेश-वैयर्थ्यं உபாயவிஶேஷத்தின் சுணையுடைமை—முமுக்ஷுவுக்கு ஶரண்யவிஶேஷம். ஶரண்யனுடைய ஸௌலப்ய-ஸுஶீல-त्वादि-गुणपूर्णत्वं हिततमोपदेशित्वं—प्राप्यனே प्रापकனானமை, निरपेक्ष-सर्वविषय-निष्प्रत्यूह-कर्तृत्वं व्याजमात्र-प्रतीक्षत्वं उपायान्तर-व्यवधान-निरपेक्षत्वं परिकरान्तर-निरपेक्ष-प्रसाद्यत्वं सर्वफलार्थिशरण्यत्वं शरण्यान्तर-परिग्रह–असहत्वं शरण्यवैशिष्ट्यम्—उपायान्तरस्थाननिवेश्यत्वं भरस्वीकर्तृत्वं भरन्यासरूप-

---

தாந்-அந்தணர்களை தூஷிப்பதால் ஆயுள் அழியும். परिकीर्तनात् தாம் செய்தைத் தானே புகழ்வதால் தானம் அழியுமென்றது. அவைபோல் ப்ரபத்தியழியா தென்றபடி. சரமச்லோகசரமவாக்யதாத்பர்யார்த்த ஜ்ஞானம் சரம தசாபர்யந்த மநுவர்த்திக்கக்கடவதென்பதை ஒருவாறு விளக்குகிறார் இப்படி சரமேதி.

மற்ற ரஹஸ்யங்களுக்குப்போல் இந்த ரஹஸ்யத்திலும் பதந்தோறும் கிடைக்கும் விசேஷங்களை க்ரமமாகக் கூட்டி யறிவிக்கிறார் இச் ச்லோகத்தில் இதி. முதல்பாதத்திலுள்ள ஆறு அர்த்தங்கள் அதிகாரவிசேஷம் இத்யாதி. अतोऽशक्ताधिकारत्वम् என்கிற காரிகைகளை நினைக்க. உபாயவிசேஷத்தின் சுணையுடைமை; ப்ரஹ்மாஸ்த்ரம் போன்ற ப்ரபத்திக்கு வெறொன்றைச்சேர்த்தால் ரோஷம் உண்டாகுமே முமுக்ஷுவுக்கு என்று ஆரம்பித்து மூன்று என்பதின் பொருள். சரண்ய விசேஷம் = திருமால். ப்ராபகனே என்று

साध्योपायविशेषம், அதின் பரிகரங்கள். सर्वाधिकारत्वं सकृत्कर्तव्यत्वं सुकरत्वं अविलम्बितफलप्रदत्वं प्रारब्धनिवर्तनक्षमत्वம்.—अधिकारियினுடைய पराधीनत्वம், पारतन्त्र्यம்,—रक्षकனுடைய परमकारुणिकत्वம், सुलभत्वம், निरङ्कुश-स्वातन्त्र्यம். दुर्निवारत्वம், परानपेक्षत्वம், अवसरप्रतीक्षत्वம்—शरणागतனுடைய कृतकृत्यत्वம், परिगृहीत-उपाय-तत्फलங்களைப் பற்றக் कर्तव्यान्तरத்தில் प्राप्तियில்லாமை, अनवद्यार्थप्रियत्वம்—त्रैकालिकविरोधिभूयस्त्वம், विरोधिवर्गवैचित्र्यம்—அவற்றினுடைய ईश्वरसङ्कल्पमात्रनिवर्त्यत्वம், प्रपत्त्यनन्तरமான विरोधिनिवृत्तिकालம் विरोधिनिवृत्तिस्वरूपं आत्मकैवल्यव्यावृत्त—यथावस्थितस्वरूपाविर्भावம் परिपूर्ण-ब्रह्मानुभवம், सर्वविधकैङ्कर्यம், अपुनरावृत्ति—முன்பு शोकहेतुप्राचुर्यம், பின்பு शोचिக்கப் प्राप्तियில்லாமை, विमर्शकालமெல்லாம் निस्संशयत्वம், शोकनिवृत्ति, निर्भयत्वம், हर्षविशेषம், शरीरपातकालप्रतीक्षत्वம், निरपराधकैङ्कर्यरसज्ञत्वம் என்றிவை प्रधान-மாய் மற்றும் இவற்றுக்கு अपेक्षितங்களெல்லாம் शब्दशक्तियாலும் अर्थस्वभाव-த்தாலும் अनुसन्धेयங்கள்.

“अल्पज्ञனாய் अशक्तियாய் परिमितकालवर्तियாய், विलम्बाक्षमனுமன்றிக்கேயிருக்கிற உன்னாலே அறியவும் अनुष्ठिக்கவும் அரிதாய்ப் फलविलम्बமுமுண்டாயிருக்கிற उपायान्तरங்களில் அலையாதே, सर्वज्ञனாய், सर्वलोकशरण्यனாய், सत्य-सङ्कल्प—सर्वशक्तिविशिष्टனான என்னையொருவனையுமே उपायமாக अध्यवसिத்துக் கொண்டு अङ्गसम्पूर्णமான आत्मरक्षाभरसमर्पणத்தைப் பண்ணு. இப்படி अनुष्ठि-तोपायனாய், कृतकृत्यனாய், எனக்கு அடைக்கலமாய், अत्यर्थप्रिय(तम)னான உன்னை, परमकारुणिकனாய், सुलभனாய், निरङ्कुशस्वातन्त्र्यனாய், सर्वज्ञனான நானே என் सङ्कल्पமாத்ரமே துணையாகக்கொண்டு, बहुप्रकारமாய், अनन्तமாய், दुस्तरமான सर्व-विरोधिवर्गத்தோடும் பின் தொடர்ச்சியில்லாதபடி துவக்கறுத்து, என்னோடொக்க என்னுடைய आत्मात्मीयங்களையெல்லாம் अनुभविக்கையாலே तुल्यभोगனாக்கிப் परिपूर्ण-अनुभव-परीवाहरूपமான सर्वदेश-सर्वकाल-सर्वावस्थोचित-सर्वविधकैङ्कर्य-த்தையும் தந்து உகப்பன். நீ ஒன்றுக்கும் शोचिக்கவேண்டா” என்று चरम-श्लोकத்தில் திரண்ட பொருள்.

---

தொடங்கி எட்டு ஏகசப்தார்த்தம்—சரண்யவைசிஷ்ட்யமாவது உபாயமானலக்ஷ்மியையும் தன்னோடு கொண்டிருக்கை. शरण சப்தார்த்தம் இரண்டு उपायान्तरस्थानेத்யாதி. व्रजधात्वर्थம் अनन्यासेत्यादि ஏழு. व्रज என்கிற तिङ्वि-भक्त्यर्थம் இரண்டு अधिकारीत्यादि; रक्षकेत्यादि ஆறு அஹம்சப்தார்த்தம். शरणा-गतेत्यादि மூன்று त्वाசப்தார்த்தம். त्रैकालिकेत्यादि இரண்டு सर्वपापசப்தார்த்தம். அவற்றினுடைய இத்யாதி ஏழு मोक्षयिष्यामिपदतात्पर्यार्थம். மேலே मा शुचः என்பதின் அர்த்தம்.

ச்லோகத்திற்குப் பிண்டிதார்த்தம் அருளிச் செய்கிறார் அல்பஜ்ஞனாய் இத்யாதியால். அலையாதே இத்யந்தம் ப்ரதம பாதார்த்தம். பண்ணு இத்யந்தம் த்விதீயபாதார்த்தம்; மேலே உத்தரார்த்தத்தின் பொருள். க்ஷமனு மன்றிக்கே=க்ஷமனன்றிக்கேயும். वर्गத்தோடும் என்பது துவக்கு என்பதோடு இயையும்.

एकं सर्वप्रदं धर्मं श्रिया जुष्टं समाश्रितैः । अपेतशोकैराचार्यैरयं पन्थाः प्रदर्शितः ॥

குறிப்புடன் மேவுந் தருமங்க ளின்றி யக் கோவலனார்
வெறித் துளவக் கழல் மெய்யரணென்று விரைந்தடைந்து
பிரிந்த வினைத்திரள் பின்தொடராவகை யப் பெரியோர்
மறிப்புடை மன்னருள்வாசகத்தால் மருளற்றனமே. 23.

---

இவ் வதிகாரத்திற் சொன்ன பொருள்களெல்லாம் ஆசார்யோபதிஷ்டங்கள் ஸாம்ப்ரதாயிகங்களென்கிறார் ஏகமிதி. ஏகம்—ஸர்வதர்மஸ்தாநத்தில் நிற்பவனும் ஸர்வப்ரதம்—எல்லாப் பலனையும் அளிப்பவனும், ச்ரியா ஜுஷ்டம்—பிராட்டியோடு சேர்ந்தவனும் தர்மம்—ஸநாதநதர்மமுமான எம்பெருமானை ஸமாச்ரிதை:—ஆச்ரயித்தவர்களாய் அபேதசோகை:—சோகமற்றவர்களுமான ஆசார்யர்களாலே அயம் பந்தா:—இந்தச் சரமச்லோகார்த்தரீதியானது ப்ரதர்சித:—காண்பிக்கப்பட்டது. கீதையில் முதலில் உபதிஷ்டங்களான கர்மயோக-ஜ்ஞாநயோக-பக்தியோகங்கள் இக் காலத்தில் இவ்வாறு அநுஷ்டிக்கப்பட வேண்டுமென்று தெளிவாக அறியப்படாமல் அநுஷ்டாநஸம்ப்ரதாயமின்றி ஸ்தூலமாகவே அறிவிக்கப்படுகின்றன. அவ்வாறின்றி விசதமான அறிவுடன் அநுஷ்டாநஸம்ப்ரதாயமும் வந்துள்ளது இப் ப்ரபத்திக்கே யென்பது இதற்கு விசேஷம். ஸ்வதந்த்ர ப்ரபத்தியினுடைய ப்ரபாவமும் அதற்கிணங்க ச்லோகார்த்தமும் மற்றவருக்குந் தெரியாதென்றபடி.

அதிகாரார்த்தச் சுருக்கமான பாசுரம் குறிப்புடன் இதி. குறிப்புடன்=மிக்க கவனத்துடன் மேவும்—ஆதரித்து அநுஷ்டிக்க வேண்டும் தருமங்களின்றி=கர்மயோக-ஜ்ஞாநயோக. பக்தியோகங்களைச் செய்யமாட்டாமல் அக் கோவலனார்=அவற்றை உபதேசித்தவரும் வேதரக்ஷகருமான கோபாலனுடைய வெறி—பரிமளம் மிக்க துளவ—திருத்துழாய்கள் அணியப்பெற்ற கழல்—திருவடிகளை (இதற்கு அடைந்து என்பதில் அந்வயம்) மெய் அரண்—ஸ்திரமான உபாயமென்றறிந்து. விரைந்து-மஹாவிச்வாஸத்தினால் த்வரித்து, அடைந்து-ஆச்ரயித்து, அதனுல் பிரிந்த-நம்மை விட்டு விலக்கப்பட்ட வினைத்திரள்=புண்யபாபராசி, பின்தொடராவகை=மீண்டும் நம்மிடம் அண்டாதவரையிலாக ஏற்பட்ட அ பெரியோர் அப்படிப்பட்ட ஸர்வோத்க்ருஷ்டனை கண்ணனின் மறிப்பு உடை தம்மை விலகாதபடி வளைத்துக் கொள்ளும் மன்=நிலைத்த அருள்—கிருபையாலான வாசகத்தால்—சரமச்லோகத்தால் மருள் அற்றனம்—அஜ்ஞானம் போனவர்களானோம். பரமபுருஷார்த்தத்திற்காக வேறு உபாயங்களைப் பலவால் உபதேசித்திருந்த அம் மஹாபுருஷனே வேதஸம்ரக்ஷகனென்பதை யறிவிக்க கீதாசார்யனும் பசுப்ராயர்களான நம்மையும் ரக்ஷிப்பதற்கு—துஷ்கரங்களான உபாயங்களை உபதேசிப்பதோடு நிற்காமல் திருத்துழாய்மட்டாலே ப்ரஸந்நனுகிற தன் ஸ்வபாவத்திற்கிணங்கத் தன் திருவடிகளில் சரணாகதியே போதும்; ஸர்வபாப விமோக்ஷணம் பண்ணமென்று நிர்ஹேதுககிருபையாலான, இதற்கு மேலான லகூபாயமிராமையாலே நிலை

व्यासाम्नायपयोधिकौस्तुभनिभं हृद्यं हरेरुत्तमं श्लोकं केचन लोकवेदपदवीविश्वासितार्थं विदुः ।
येषामुक्तिषु मुक्तिसौधविशिखासोपानपङ्क्तिष्वमी वैशम्पायनशौनकप्रभृतयः श्रेष्ठाः शिरःकम्पिनः॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे चरमश्लोकाधिकारः एकोनत्रिंशः ॥ 29

—०—०—

इति पदवाक्ययोजनाभागस्तृतीयः ॥
श्रीमते निगमान्तमहागुरवे नमः

---

த்ருமான உபதேசத்தால் நம் அஜ்ஞாநங்களெல்லாம் போயின.

भारते भगवद्गीता என்று கொண்டாடப்பட்ட கீதையின் உத்தமமான இந்த ச்லோகத்திற்கு நமது ஸாம்ப்ரதாயிகமான அர்த்தம் வ்யாஸக்ரந்தங்களிலீடுபட்ட மஹான்களால் கொண்டாடப்படுமென்கிறார் व्यासेति. வேத வ்யாஸரால் அருளப்பட்ட வேதமாகிற पयोधि—பாற்கடல் போன்ற மஹாபாரதத்தில் எழுந்த, கௌஸ்துபத்திற்கு ஸமமாய் हरेः—பகவானுக்கு हृद्यं—ப்ரியமாய் ஹ்ருதயத்திலிருப்பதுமான उत्तमं श्लोकं—முடிவான ச்லோகத்தை केचन—நம் பூர்வாசார்யர்களே लोकपदवी—உலகவழிமைக் கொண்டும் वेदपदवी—வேதத்தில் காட்டிய வழியைக் கொண்டும் विश्वासित—நம்பிக்கைக்கு விஷயமாக்கப்பட்ட अर्थं மோக்ஷார்த்த ஸ்வதந்த்ர ப்ரபத்தியாகிற விசேஷார்த்தமுடையதாயிருக்கும்படி विदुः—அறிகின்றனர்; येषां—எந்த பூர்வாசார்யர்களுடைய, उक्ति மோக்ஷமாகிற सौध—மாடிக்கு-ஏறுவதற்கு विशिखा—வீதியிலே யிருக்கும் सोपानपङ्क्तिषु படிவரிசைகள் போன்ற उक्तिषु—வ்யாக்யாநங்களிலே நோக்குள்ள वैशम्पायनशौनकप्रभृतयः—பாரத ப்ரவசநாதிகளிலீடுபட்ட வைசம்பாயநர் சௌநகர் போன்ற श्रेष्ठाः—ஜ்ஞாந வ்ருத்தர்கள் (விக்ரமார்க்கஸிம்ஹாஸநத்தில் வீற்றிருந்த பதுமைகள் போல்) शिरःकम्पिनः—தலை அசைத்துக் கொண்டாடுகின்றவராவரோ என்றபடி. कौस्तुभ என்றதாலே மற்ற ச்லோகங்கள் ஐராவத பாரிஜாதாதிகளான பாற்கடலிலுண்டான மற்ற வஸ்துக்களுக்கு ஸமாநங்கள், இது ஒன்றே பகவானுக்கு ப்ரியமாமளவுக்குப் பெருமை பெற்றதென்றதாம். உத்தம சப்தம் 'त्रिः प्रथमामन्वाह त्रिरुत्तमाम्' என்ற விடத்திற்போல் கடைசியான என்ற பொருளதுமாம்; உயர்ந்த என்றதுமாம். அரசனிடத்தில் வெகுகாலம் உழைத்தும் அற்பமான பலனையே சிலர் பெறுகிறார்கள்; ஓரிரண்டு பழங்கள் கொண்டுபார்த்து க்ராமமும் சிலர் பெறுகின்றனர். இது லோகபதவீ; शुनश्शेफन् தேவதைகளுக்குப் புருஷமேதயாகத்தால் வரும் ப்ரீதியை விச்வாமித்ரமுனிவர் உபதேசித்த மந்த்ரத்தைச் சொன்ன மாத்ரத்திலே உண்டுபண்ணினான். இத்தகையது வேதபதவீ அதனால் பக்தியை விட ப்ரபத்தி சிறியதானாலும் ப்ரபாவம் உடையதாகும். विशिखा सोपान என்றதால் எம்பெருமானைப் பெற பக்திமார்க்கம் வீட்டுக்குள்ளிருக்கும் மாடிப்படிக்கு ஸமாநம்; உள்ளே போகக் கூடிய சில அதிகாரிகளுக்கே அது கிடைக்கும். ப்ர

श्रीमते निगमान्तमहागुरवे नमः

अथ संप्रदायप्रक्रियाभागश्चतुर्थः (4)

आचार्यकृत्याधिकारः 30

ஆசார்யக்ருத்யாதிகாரம்-30

अधिजिगमिषुराद्यं धाम दिव्यं त्रिधाम्नः श्रुतविविधपरीक्षाशोधिते क्वापि पात्रे ।
अनघगुणदशायामाहितस्नेहमा(ह आ?)र्यः प्रदिशति निरपायं संप्रदायप्रदीपम् ॥

---

பக்தி ஸர்வாதிகார மாகையாலே தெருவிற் போகின்றவர்களெல்லோரும் ஏறும்படி வாசலில் வைத்த படிக்கட்டுப் போலாகுமென்றதாம். உக்திகளை லோபாந பங்க்திகளென்றதால் सर्वधर्मान् परित्यज्य என்பதற்குச் சொன்ன ஆறு பொருள்களும், मामेकम् என்பதற்கான ஆறும், शरणं व्रज என்பதற்குள்ள பல யோஜனைகளும் ஸந்தர்ப்பாநுஸாரமான ஸர்வபாபசப்தத்தின் பல பொருளும் माशुचः என்பதில் பத்துவித சோகநிவ்ருத்தியும் எல்லாம் படிகள் போல் கருதப் பெறும். वैशम्पायनர் மஹாபாரதப்ரவசநம் செய்பவர். சௌநகர் ஸத்ரயாகம் (भागवதம்) அநுஷ்டித்தவர் ऋषिप्रवर் விஷ்ணுதர்மம் முதலான க்ரந்தங்களெழுதிய வைஷ்ணவோத்தமர். புராண ப்ரவசநம் செய்ய ப்ரார்த்திப்பவரான ரிஷிகளில் ப்ரதாநமாய்; कुलपतियுமாவர்; प्रभृतिபதத்தாலே रोमहर्षणि முதலான ப்ரவசநகர்த்தர்களையும் ச்ரோதாக்களையும் கொள்வது. பலகால் பாரதம் சொன்னவர்களும் கேட்டவர்களும் இவ்வர்த்தங்களைக் கேட்டு வியந்து இதே நம் வ்யாஸரின் திருவுள்ளத்திலிருப்ப தென்று மெச்சி மகிழ்வர்களென்றபடி.

अभिनवदेशिकवीरराघवाचार्यரின் सारविस्तरத்தில்
சரமச்லோகாதிகாரம் முற்றும். 29; பதவாக்யயோஜநாபாகம் முற்றும்(3)
ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

—o—o—

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

सारविस्तरे ஸம்ப்ரதாய ப்ரக்ரியாபாகம் (4)

உபோத்காதாதிகாரம் தொடங்கி இது வரையில் சொல்லப்பட்ட அர்த்தங்களெல்லாம் ஆசார்யன் உபதேசிக்க சிஷ்யன் முறைப்படி கேட்டுப் பெற வேண்டும். அப்போதே ஸம்ப்ரதாயஸித்தமாகும். அதில் ஸம்பந்தப்பட்ட இருவரில் ஆசார்யன் எவ்வாறிருந்து உபதேசிக்க வேண்டு மென்பதற்கு ஓர் அதிகாரம்; சிஷ்யன் எப்படி கேட்டு நடந்து கொள்ள வேண்டு மென்பதற்கு மற்றோர் அதிகாரம். முதலாவது ஆசார்யக்ருத்யாதிகாரம்.

அதின் அர்த்தம் அருளிச் செய்கிறார் अधिजिगमिषुः இதி. आर्यः = ஆசார்யனாயிருப்பவன் एतत्कृत्याः प्रतीक्षन्ते मृत्युं प्रियमिवातिथिम् என்றபடி त्रिधाम्नः—'अस्मत्परे भुवनस्य मध्ये नाकस्य पृष्ठे என்றபடி பாற்கடல் ஸூர்யமண்டலம் வைகுந்தமென்ற மூன்று ஸ்த்தலங்களையுடைய விஷ்ணுவின் आद्यम्—முதலாயும் दिव्यं अप्राकृतமுமான धाम வைகுந்தஸ்த்தாநத்தை अधिजिगमिषुः அடையவிரும்புகிறவனாய்

இப்படி 'गुरुर्गरीयान्' என்றும், 'इमिमं सर्वसंपन्नमाचार्यं पितरं गुरुम्' என்றும் சொல்லுகிறபடியே பரமாசார்யரை ஸர்வேஶ்வரன் முதலாக सदाचार्यसंप्रदायसमागत ங்களாய் सिंहीस्तन्यம்போலே विजातीयர்க்கு ரஸம் தெரியாத ரஹஸ்யார்த்தங்களை

---

श्रुतविविधपरीक्षाशोधिते—ஓதப் பெற்ற பல வகையான பரீக்ஷைகளால் சுத்தனாய் அறியப்பெற்ற काचि-கிடைக்கவரிய, கேட்கநெருங்கிய நல்ல அதிகாரியான अनघगुणदशायां–கோதற்ற குணங்கள் பெற்றிருக்கும் போது आहितस्नेहे வைக்க ப்பட்ட அன்பையுமுடைய—மிக்க அன்புக்கு விஷயமான पात्रे ஸிஷ்யனிடம் निरपायं அழிவற்ற संप्रदायप्रदीपम् உபதேசமூலமாய்வந்த அர்த்தமாம் விளக்கை प्रदिशति நன்றாக அளிக்கிறான். ஸம்ப்ரதாயத்தை தீபமாகச் சொன்னபடியால் அதற்கிணங்கவும் சில பதங்களுக்குப் பொருள் கொள்ளவேண்டும். தீபம் வைத்துக்கொண்டிருப்பவன் தான் வேறிடம் செல்லப்போகிறவனாகில் அபாய மில்லாதபடி தீபத்தை வைத்துச் செல்வானென ஸிஷ்யக்ருத்யாதிகாரத் திலே—"விளக்குப் பிடிக்குமவன் கொடுத்துப் போமாபோலே" என்பது காண்க: அந்த தீபமானது பலவித பரீக்ஷைகளால் சோதிக்கப்பட்டுச் செவ்வையான, சாஸ்த்ரப்படி अनघ குற்றமற்ற गुणदशायां நால்வெத்திகளிரு க்கச் சேர்க்கப்பட்ட स्नेह—எண்ணெயை யுடைய பெரிய பாத்ரத்தில் ஏற்றப் படும்போது அபாயமற்று விளங்கும். प्रदिशति என்ற वर्तमानकालநிர்தேசத் தாலே आशरीरात् शारीरकप्रवचनव्रतमाद्रियेथाः என்றபடி ஸம்ப்ரதாயத்தை அளி த்தவண்ணமிருப்பானென்றதாம். प्रयियासु: என்ற விடத்தில் 'प्राप्तं आत्मप्राणं तु हुत्वा पिण्डं समुत्सृजेत्' என்கிற வசநம் கருதப்பெறும். இதனால் மரணத்திற்குச் சிறிது முன்மட்டுமே உபதேசிக்க வேண்டுமென்றதாகாது. ஆசார்யர் எப்போது தேஹாவஸாநமானாலும் நன்மையே யென்று அதை எதிர்பார்த்த வண்ணமிருப்பவர், தாம் செய்ய வேண்டும் கைங்கர்யத்தில் லோகக்ஷேமார்த்தமான தத்துவஹித புருஷார்த்த ஜ்ஞானம் ப்ரக்ருதி மண்ட லத்தில் எங்கும் தொடர்ந்துவரவேண்டுமென்று संप्रदायத்துடன் தம்மா லானதைச் செய்த வண்ணமிருக்க வேண்டுமென்றதாம். आप्य धाम दिव्यं என்ற விடத்தில் दिव्यं स्थानं अजरं चाप्रमेयं दुर्विज्ञेयं चाऽऽगमैर्गम्यमाद्यम् । गच्छ प्रभो रक्ष चास्मान् प्रपन्नान् कल्पे कल्पे जायमानः स्वमूर्त्या என்பதை நினைப்பது. आहितस्नेहे என்றது க்ரியா விசேஷணமென்பர். ஸிஷ்யனிடத்தில் வைக்கப்பட்ட ஸ்நேஹத்திற்கு விஷய மான ஸம்ப்ரதாயத்தை யென்னலுமாம். आहितस्नेहे என்றுபாத்ரவிசேஷண மானபாடமிருக்கலாமென்று அவ்வாறு உரைத்தனம். आहितस्नेह: என்னலுமாம்.

ஆசார்யன் செய்ய வேண்டியது ஸத்பாத்ரங்களுக்கு ரஹஸ்யமாய்வெளி யிடுவதும் பிறருக்கு மறைப்பதும். இவ்விரண்டுக்கும் ப்ரமாணங்களை உதா ஹரிக்கிறார் இப்படி இத்யாதியால். गुरु இத்யாதி வாக்யங்கள் குருபரம் பராஸாரத்தில் உதாஹரித்தவை. ஸம்ப்ரதாயஸமாகதங்களாய் = यथाव त்தாகக் கொடுக்கப்பட்டதால் வந்தவைகளாய்: विजातीयருக்கு:[பெண்]சிங்கத் தின் பால் வேறு ஜாதிகளுக்குத் தெரியாது दार्ष्टान्तिकத்தில் असदृशसंप्र-

संग्रहेण சேர்த்துத் தாங்களும் अनुसन्धित्तु—

'यो गोपायत्ययोग्यानां योग्यानां संप्रयच्छति। इममर्थं स मान्यो मे स्वस्ति वोऽस्तु व्रजाम्यहम् ॥',

'इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन । न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥'

य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति । भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥'—

"नावेदनिष्ठस्य जनस्य राजन् प्रदेयमेतत् परमं त्वया भवेत् ।

विवित्समानस्य विबोधकारकं प्रबोधहेतोः प्रणतस्य शासनम् ॥

न देयमेतच्च तथाऽनृतात्मने शठाय क्लीबाय न जिह्मबुद्धये ।

न पण्डितज्ञाय परोपतापिने; देयं त्वयेदं विनिबोध यादृशे ॥

श्रद्धान्विताायाथ गुणान्विताय परापवादाद्विरताय नित्यम् ।

---

दायद्वितांகளை விஜாதியர்; संग्रहेण சேர்த்து =पुष्पेभ्य इव षट्पदः என்ற ப்ரமத்திலே பலவிடங்களில் உள்ள அம்சங்களை சுருக்கி க்ரஹித்து ஒன்றாக்கி; य इति ஸாத்வத. 25-375 எவன் इममर्थम्-இவ் வர்த்தத்தை अयोग्यानां. தகாதவர்களுக்கு गोपायति. மறைக்கிறானோ; யோக்யர்களுக்கு அளிக்கிறானோ; सः—அவன் எனக்கு மதிக்கத்தக்கவன். वः = உங்களுக்கு மங்களமிருக்கட்டும்; நான் போகிறேன். इदमिति. கீதை 1· 67. இந்த கீதார்த்தமானது कदाचन-ஒரு பொழுதும் தவம் புரியாதவனுக்கு ते न वाच्यम्—நீ சொல்லவாகாது—அபக்தனுக்கும் சொல்லவாகாது. கேட்பதில் ச்ரத்தையில்லாதவனுக்கும் சொல்லவாகாது. இதெல்லாம் நிற்க; यः-எவனொருவன் मां—விலக்ஷணமான ஸ்வரூப. ரூப குண விபூதி விசிஷ்டனை என் விஷயத்திலே अभ्यसूयति—பொறாமையுள்ளவனோ-அவனுக்கு न च वाच्यं அடியோடு சொல்லத் தக்கதன்று; यः= எவனொருவன் இந்த மஹாரஹஸ்யார்த்தத்தை என்னிடம் பக்தியுள்ளவர்களுக்குச் சொல்லப் போகிறானோ, அவன் என்னிடம் பரபக்தி பர்யந்தம் பெற்று என்னையே யடைவான்; ஐயமில்லை. नावेद—இத்யாதிச்லோகங்கள் ஏழு-भा.சா.313-32 முதலாம். வஸிஷ்ட கராளஸம்வாதம். வஸிஷ்டர் கராள ராஜனுக்குக் கூறுவது. राजन्-அரசனே! एतत् परमं शासनं இந்த யாந்த உபதேசமானது त्वया—உன்னால் வேதத்தில் நிஷ்டை பெருமலிருக்குமவனுக்கு न प्रदेयं भवेत्—கொடுக்கத்தகாது विवित्समानस्य பலன் பெற விரும்புகிறவனாய் प्रबोधहेतोः ஜ்ஞாநம் காரணமாக प्रणतस्य—வணங்கியிருப்பவனுக்கு विबोधकारकं-அறிவை யுண்டுபண்ணுவதான; இது சாஸநத்திற்கு விசேஷணம். न "देयमिति. तथा-அப்படியே एतत् இது अनृतात्मने--பொய்யே உருவானவனுக்கும் शठाय-வஞ்சகனுக்கும். क्लीबाय-நபும்ஸகனுக்கும் கொடுக்கத்தகாது. जिह्मबुद्धये-வக்ரமான புத்தியுள்ளவனுக்கும் தகாது. पण्डितज्ञाय தன்னைப்பண்டிதனாக நினைக்கிறவனுக்கும் परोपतापिने-பிறருக்குத் துன்பம் விளைவிப்பவனுக்கும் தகாது; त्वया-உன்னால் இது यादृशे देयं-எப்படிப் பட்டவனிடம் கொடுக்கத் தகுமோ அதையும் विनिबोध=கேள்—अवेहि. சொல்லுமர்த்தத்

विशुद्धयोगाय बुधाय चैव क्रियावतेऽथ क्षमिणे हिताय ॥

विविक्तशीलाय विधिप्रियाय विवादभीताय बहुश्रुताय ।

विजानते चैव तथा हितक्षमादमाय नित्यात्मसमाय देहिनाम् ॥

एतैर्गुणैर्हीनतमे न देयमेतत् परं ब्रह्म विशुद्धमाहुः ।

न श्रेयसा योक्ष्यति तादृशे कृतं धर्मप्रवक्तारमपात्रदानात् ॥

पृथ्वीमिमां यद्यपि रत्नपूर्णां दद्यात्, न देयं त्विदमव्रताय ।

जितेन्द्रियायैतदसंशयं ते भवेत् प्रदेयं परमं नरेन्द्र ॥

कराल! मा ते भयमस्तु किञ्चिदेतत् परं ब्रह्म श्रुतं त्वयाऽद्य ।

यथावदुक्तं परमं पवित्रं विशोकमत्यन्तमनादिमध्यम् ॥',

'विद्ययैव समं कामं मर्तव्यं ब्रह्मवादिना । आपद्यपि च घोरायां न त्वेनामिरिणे वपेत् ॥'

---

தில் ச்ரத்தையுடையவன்; குணமுடையவன்; பிறரை தூஷிப்பதிலிருந்து எப்போதும் விலகியவன். குற்றமற்ற யுக்திகளை—ஸத்தர்க்கங்களையுடைய (योगமாவது யுக்தி) பண்டிதன், நித்ய கர்மாநுஷ்டானம் செய்கிறவன் பொறுமையுள்ளவன் எல்லோருக்கும் ஹிதமானவன்; विविक्तशीलाय—ஏகாந்தவாஸத்திலே நோக்குடையவன் சாஸ்த்ர விதிகளை ப்ரியமாகக் கொண்டவன் பிறரோடு விவாதத்திற்கஞ்சியவன்; வெகு சாஸ்த்ரங்கள் அறிந்தவன் विजानते க்ருதஜ்ஞனாயிருப்பவன் हित क्षमादमाय—பொறுமை அடக்கம் இரண்டையும் ஹிதமாகக் கொண்டவன். देहिनां—ப்ராணிகளுக்கு எப்போதும் அததன் ஆத்மாவுக்கு ஸமமாய் இஷ்டமானவன் என இப்படிப்பட்டவனுக்கு இது உபதேசிக்கத்தக்கது. एतैरिति. இந்த குணங்களிராதவனிடம் உபதேசிக்கத்தக்கதன்று இந்த சுத்தமான பரப்ரஹ்மமென்பர். तादृशे அப்படிப்பட்டவனிடம் कृतं உபதேசிக்கப்பட்டால் அபாத்ரத்தில் கொடுப்பதால் தர்மத்தை யுபதேசிப்பவனை நன்மையோடு சேர்க்காது. पृथ्वी विद्या என்பதுபோல் शुश्रूषेण धनेन वा என்றிருக்கிறதே யென்ன அருளிச் செய்கிறார் पृथ्वीमिति. இம்முழு பூமியை ரத்நங்களால் நிறைந்ததாக (க்கி)க் கொடுப்பவனாயிருந்தாலும் अव्रताय-சிஷ்யனுக் கேற்பட்ட நியமமற்றவனுக்கு இது கொடுக்கத்தகாது; नरेन्द्र ஓ அரசனே! இந்த்ரியங்களை வென்றிருப்பவனுக்கு இச் சிறந்த வஸ்து ஐயமற்று உன்னால் அளிக்கத்தகும்; ஏ கராளா! உனக்கினி அச்சம் வேண்டா; இப்போது विशोकं—சோக மற்றதும் अत्यन्तं-அழிவற்றதும் अनादिमध्यं-ஆதிமத்யங்களில்லாததும். परमं पवित्रं மிக்க பரிசுத்தமுமாய் உள்ளபடி சொல்லப்பட்டதுமான இந்த ப்ரஹ்மம் உன்னால் கேட்கப்பட்டதே. विद्ययेति. மநுஸ்ம 2-113 ப்ரஹ்மத்தை உபதேசிக்க வல்லவன் ஒருவருக்கும் உபதேசிக்காமல் வித்யையோடுகூடவே மரணமடைவது கூட இஷ்டம்; பயங்கரமான ஆபத்திலும் एनां இந்த வித்யையை (விதையை) इरिणे—களர்பூமியில் (அபாத்ரத்தில்) வ

"मूर्खाश्च पण्डितंमन्या अधर्मा धार्मिका इव । धर्मयुक्तान् प्रबाधन्ते साधूनां लिङ्गमास्थिताः ॥
एकतस्त्वपवर्गार्थमनुष्ठानादिकौशलम् । लोकानुसारस्त्वेकत्र गुरुः पश्चादुदीरितः ॥
भवन्ति बहवो मूर्खाः क्वचिदेको विशुद्धधीः त्रासितोऽपि सदा मूर्खैरचलो यः स बुद्धिमान् ॥
न विश्वासः क्वचित् कार्यो विशेषात्तु कलौ युगे । पापिष्ठा वादवर्षेण मोहयन्त्यविचक्षणान् ॥
गोपयन् आचरेत् धर्मं नापृष्ट किञ्चिदुच्चरेत् । पृष्टोऽपि न वदेदर्थं गुह्यं सिद्धान्तमेव च ॥
आश्रितायातिभक्ताय शास्त्रश्रद्धापराय च । न्यायेन पृच्छते सर्वं वक्तव्यं शौचयोगिने ॥
आत्मपूजार्थमर्थार्थं डम्भार्थमपि खिन्नधीः । अयोग्येषु वदन् शास्त्रं सन्मार्गात् प्रच्युतो भवेत् ॥
ऊषरे निवपेद्बीजं षण्डे कन्यां प्रयोजयेत् । सृजेद्वा वानरे मालां नापात्रे शास्त्रमुत्सृजेत् ॥"

---

वपेत् விதைக்கலாகாது. मूर्खाः இதி 8 ச்லோகங்கள் சாண்டில்யஸ்ம்ருதி 4-241 (1)முட்டாள்களும் தங்களைப் பண்டிதர்களாக எண்ணியவர்களாய் தர்மமற்றவர்களாகியே ஸாதுக்களின் வேஷம் பூண்டு धार्मिகர்கள் போலிருந்து தார்மிகர்களை வதைக்கின்றனர். (2) எவனுக்கு ஒரு புறம் மோக்ஷார்த்தமாக அநுஷ்டாந ஸாமர்த்யமும் உபதேச ஸாமர்த்யமும் (டம்பமாக) இருக்கிறதோ, மற்றொரு புறம் உலகைப் பின் பற்றியிருக்கையோ, அந்த குரு पश्चात् उदीरितः= அதமனுகச் சொல்லப்பட்டான். (3) லோகாநுஸாரமென்பதே வேஷமாகிலென் என்னில்—மூடர்களாகவிருப்பவரே பலராவர்; சுத்தமான புத்தியுடையவன் எங்கோ ஒருவனே. மூடர்களாலே எப்போதும் பயமுறுத்தப்பட்டவனுயினும் எவன் தன்நிலையில் நிற்கிருனே—அவனே புத்திமானுவான். (4) அப்படி யொருவன் தன்னைச் சொல்வானுகிலும் ஒருவரிடமும் விச்வாஸம் வைக்கலாகாது; கலியுகத்தில் இது முக்கியமாகும், மஹாபாபிகள் ஸாமர்த்தியமற்றவரை வாதங்களைப் பொழிந்து மயக்குகிறுர்கள். (5) டாம்பிகனுயிருக்கைக்கு மாருக गोपयन्-யாருக்கும் தெரியாதபடி மறைத்துக் கொண்டு धर्मं आचरेत् தர்மத்தைச் செய்ய வேண்டும்; अपृष्टः—கேட்கப்படாதவன் சிறிதும் சொல்லவாகாது. पृष्टोऽपि=கேட்கப்பட்டவனுனும் गुह्यमर्थम् ரஹஸ்யார்த்தத்தையும் ஸித்தாந்தத்தையுங் கூட சொல்லாமலிருக்க வேண்டும்; (6) தன்னையாச்ரயித்தவனும் அதிகபக்தியுடையனும் சாஸ்த்ரத்தில் ச்ரத்தை கொண்டவனும் முறைப்படி கேட்கின்றவனும் ஆசாரமுடையவனுமானவனுக்கு எல்லாம் உபதேசிக்கத்தகும். (7) आत्मेति. தம்மைப் பிறர் பூஜிப்பதற்காகவும் பணத்திற்காகவும் டம்பத்திற்காகவும்=இவர் ஒன்றையும் விரும்பாமல் உபதேசிக்கும் மஹான் என்று தன்னை விரக்தனுக எண்பிப்பதற்காகவும் அபாத்ரங்களில் சாஸ்த்ரத்தைச் சொல்பவன் अपात्रदानात्=தகாதவிடத்தில் கொடுப்பதால், खिन्नधीः—ஜீவநத்திற்கு வழியில்லாமல் வருந்துகிற புத்தியுடையவனுகிலும் நல்வழியினின்று நழுவினவனுவான். (8) ऊषर இதி. களர்பூமியில் விதையை விதைக்கலாம்; பேடனுக்குப் பெண்ணைக் கொடுக்கலாம், குரங்கினிடம் மாலையைத்

"न नास्तिकायानृजवे नाभक्ताय कदाचन । नैव हिंसाभिरुचये न लुब्धाय विशेषतः ॥

दातव्यो मन्त्रराजोऽयं मन्त्रोऽयं न हि तादृशः । ऋजवे गुरुभक्ताय वैष्णवाय विशेषतः ॥

सर्वप्राण्यनुकूलाय दातव्यो देशिकेन तु ।", 'தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்', 'அந்தாதி மேலிட்டறிவித்தேனாழ் பொருளைச் சிந்தாமற் கொள்மினீர் தேர்ந்து' என்று श्री सात्वत-भगवद्गीता—वसिष्ठकरालसंवाद—मनुस्मृति—शाण्डिल्यस्मृति-सात्वतसंहितादिகளிற் சொல்லுகிறபடியே शरण्यन् अनुमति பண்ணும் படிக்கு ஈடான शास्त्रज्ञता-आस्तिक्यादिगुणங்களையுடையராய்,

'अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः । दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥

---

தொடுக்க விடலாம்; அபாத்ரத்தில் சாஸ்த்ரத்தை விடலாகாது. इति ஸாத்யகிதந்த்ரம். இச் சிறந்த மந்த்ரமானது (द्वयाधिकारத்தின் முதலில் சொல்லப்பட்டது) நாஸ்திகனுக்கு, மநோவாக்காயங்கள் ஒன்றுயிராதவனுக்கு அபக்தனுக்கு ஹிம்ஸையில் நோக்குள்ளவனுக்கு மிகவும் லோபியானவனுக்குக் கொடுக்கத்தகாது. அப்படி கொடுக்கத்தக்க மந்த்ரமன்று இது ருஜுவாய் गुरुभक्तனாய் விசேஷமாக விஷ்ணுபக்தனாய் ஸகலப்ராணிகளுக்கும் அநுகூலனாயிருப்பவனுக்கு இதை सदाचार्यனாயிருந்து கொடுப்பதாம். இனி திவ்யப்ரபந்தங்களை உதாஹரிக்கிறார் தொண்டர்க்கு இதி திருவாய் 9-4-9 கண்டு கொண்டுஎன் கண் இணை ஆரக் களித்து, பண்டைவினையாயின பற்றோடறுத்து என முன்னடிகள். அண்டத்தமரர் பெருமானடியேனே=வைகுண்டத்திலிருக்கும் நித்ய ஸூரிகளின் நாதனுக்கு தாஸனான நான் என் இருகண்கள் த்ருப்தி பெறும்படி கண்டு களித்துப் பழைய கர்மங்களை ஸவாஸநமாக அழித்து பாகவதர்களுக்கு அவர்கள் அமுதம் போல் குணங்களையனுபவிப்பதற்காக மாலை போன்ற ஸூக்திகளைச் சொல்லித் தொடுத்தேனென்றது. இங்கு தொண்டர்க்கு என்றதாலே பிறருக்கு உபதேசிக்கலாகாதென்றதாம். அந்தாதி இதி-நான்முகன் திரு-1. நான்முகனை யென்றுபாட்டாரம்பம். சாஸ்த்ரங்களில் ஆழ்ந்திருக்கிற=அறியவாகாத பொருள்களை அந்தாதிமேல்இட்டு=பாசுரத்தின் முடிவில் உள்ள சொல் மேற்பாசுரத்தின் முதலாம்படி அமைத்த பாசுரங்களில் வைத்து அறிவித்தேன்; நீர் தேர்ந்து=இதன் அருமையைத் தெளிந்து சிந்தாமல்=கண்டவிடம் இறைக்காமல் கொள்மின்=கொள்ளுங்கள், ஸாத்யகிதந்த்ராதி என்கிற ஆதிபதத்தால் இத் திருவாய்மொழிதிருவந்தாதிகளைக் கொள்வது. சொல்லுகிற படியே யென்பதற்கு வெளியிட்டு மறைத்து என்கிற சொற்களில் அந்வயம். இந்த வாக்யங்களில் சில குணங்களும் சில தோஷங்களும் கூறப்பட்டன; இது மற்றவற்றுக்கும் உபலக்ஷணமாம். கீதையிலிருந்து சரண்ய ஸம்மதமான குணங்களை உதாஹரிக்கிறார் अभय மிதி. 16. 1. துக்கத்திற்குக் காரணம் கண்டும் அச்சமின்மை. 2. மனத்தில் ரஜஸ்ஸூம் தமஸ்ஸூம் கலசாமை, 3. ப்ரக்ருதியைவிட வேறான ஆத்மாவின் அறிவில் நிலையுறுகை. 4. கொடை 5. மனத்தையடக்குகை. 6. நிஷ்காம

अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् । दया भूतेष्वलोलुत्वं मार्दवं ह्रीरचापलम् ॥

तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता । भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत ॥"

என்றும் 'द्विविधो भूतसर्गोऽयं दैव आसुर एव च । विष्णुभक्तिपरो दैवः' என்றும் சொல்லப்பட்ட दैवप्रकृतिகளுக்கு

"संवत्सरं तदर्धं वा मासत्रयमथापि वा । परीक्ष्य विविधोपायैः कृपया निःस्पृहो वदेत् ॥",

'यदृच्छयोपसन्नानां देशान्तरनिवासिनाम् । इष्टोपदेशः कर्तव्यो नारायणरतात्मनाम् ॥'

இத்யாதிகளிற் சொன்ன परीक्षादिमूलगुणनिश्चयपूर्वकமாக, 'श्रुतादन्यत्र संतुष्टस्तत्रैव च कुतूहली' என்னலாம் अवस्थैயிலே अपर्यन्तமாக வெளியிட்டு,

'दम्भो दर्पोऽतिमानश्च क्रोधः पारुष्यमेव च । अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥'

---

தர்மம் 7. பரமாத்ம பரமாக வேதமோதல் 8. தவம் புரிதல், 9. மநோவாக் காயங்களின் ஒத்திருப்பு 10. நலியாமை, 11. உண்மை பேசல் 12. மனக் கொதிப்பின்மை. 13. ஹிதமாகாததை விடுகை. 14. வெளியிந்த்ரியங்களை யடக்குகை 15. கோட்சொல்வதில்லாமை 16. ப்ராணிகளின் துக்கத்தைப் பொறுக்க மாட்டாமை. 17. விஷயப்பற்றற்றமை. 18. நெஞ்சுரப் பின்மை 19. தவறு செய்வதில் வெட்கம், 20. விஷயம் அருகிலிருக்கிலும் பற்றின்மை, 21. துர்ஜநரால் பாதிக்கப்படாத சக்தி. 22. பொறுமை, 23 [illegible] வேண்டியதில் நிலைத்திருக்கை. 24. உள்வெளிக் கருவிகளைக் கார்யத்திற்குத் தக்கன வாக்குகை; 25. த்ரோஹம் செய்யாமை. 26. கர்வப்பட்டிராமை என்ற குணங்கள் भारत-அர்ஜுநா! தைவஸம்பத்தை க்குறித்துப் பிறந்தவனுக்குண்டாகும். द्विविध இதி. விஷ்ணுதர்மம் 108-74. ப்ராணிகளின் படைப்பு தைவம் ஆஸுர மென்று இருவிதமாகும். விஷ்ணு பக்தியுள்ளது தெய்வப்பிறவி; विपरीतस्तथाऽऽसुरः விஷ்ணுபக்தியற்றது அஸு ரப்பிறவி. संवत्सरमिति. சாண்டில்யஸ்ம்ருதி. 1.116. ஒராண்டு காலமோ ஆறு மாதமோ மூன்று மாதமோ பல உபாயங்களாலே சிஷ்யனைப் பரீக்ஷித்து முடிவில் க்ருபையினால் தனக்கு லாபத்தில் ஆசையின்றி உபதேசிக்க வேண்டும். இப்பரீக்ஷா நிர்பந்தம் சில விடம் வேண்டா மென்கிறார் यदृच्छेति ஸாத்வதஸம்ஹிதை 21—45 வேறு தேசத்தில் வஸிப்பவர் தற்செயலாக அணுகினால் அவர் நாராயணனிடத்தில் ஈடுபட்ட மனமுடையரேல், கோரியதை உபதேசிக்க வேண்டும். நீண்ட பரிசை வேண்டா மென்றபடி. வைராக்ய முள்ளவ னென்றால், ஜ்ஞாநவிஷயத்திலன்றென்கிறார் श्रुतादिति. படிப்புத் தவிர வேறு விஷயத்தில் संतुष्टः—உள்ளது போது மென்று த்ருப்தியுடையனாய் तत्रैव—படிப்பிலேயே कुतूहली ஆவலுள்ளவன் பாத்ரமாவா னென்றபடி. अपर्यन्तமாக-ஆறு செவிகளில் சொல் விழாதபடி; மூன்றுவது மனிதனிராதபடி பார்த்து என்றதாம். दम्भ இதி. கீ-16-4. தன்னை தார்மிகனாக எண்பிக்கை. விஷயபோகத்தால் வந்த मदம், வித்யா-குல-धनविषयமான அஹ

என்றும். विपरीतस्तथाऽऽसुरः' என்றும் சொல்லப்பட்ட आसुरप्रकृतिகளுக்கு மறைத்து, சீரிய நிதியுடையார் சேமித்து வாழுமாப்போலே चरितार्थராய் वर्तिப்பார்கள் பூர்வாசார்யர்கள்.

இவர்கள்-'देह-इन्द्रियादिव्यतिरिक्तனாய் நித்யனாயிருப்பான் ஓர் (ஒரு) ஆத்மா உண்டு. இச் चेतनाचेतनங்கள் இரண்டுமொழிய இவற்றுக்கு அந்தர்யாமியாய் शेषியாயிருப்பான் ஒரு பரமாத்மா உண்டு. இப் பரமாத்மாவை யொழிய இவ்வாத்மாவுக்குத் தானும் பிறரும் ரக்ஷகராகமாட்டார்' என்று हितத்தையும்.

'अनादिकालம் அந்தாதியாக ஸம்ஸரித்துப் போந்த அடியேனுக்கு இனி ஒரு गर्भवासादि—क्लेशம் வாராதபடி திருவடிகளைத் தந்து रक्षித்தருளவேண்டுமென்று, आचार्यன் प्रसादित्त गुरुपरम्परापूर्वकद्वयத்தாலே ச்ரீமானான நாராயணன் திருவடிகளை शरणமாகப் பற்றி आत्मात्मीयங்களையும் அவற்றைப் பற்ற வரும்

---

ங்காரம் कोपம் கடுமை பராவரதத்த்வஜ்ஞாநமின்மை—இது அஸுரப் பிறவியினருக்கிருக்கும். प्रकृति=ஸ்வபாவம். சீரிய இதி. உயர்ந்தவஸ்துக் கள் உள்ளவர் கள்ளன் கொள்ளையிடாத படி காத்து यथा श्रेष्ठी स्वैर्भुङ्क्ते என்ற வாறு தம் பந்துக்களோடு அநுபவித்து வாழ்க்கை நடத்துமாப்போலே फलसिद्धियுடையராய் என்றதாம்.

இப்படி சிலருக்கு மறைப்பதும் சிலருக்கு வெளியிடுவதும் ஆசார்ய க்ருத்ய மென்றார்; श्रद्धयोपसन्नानां என்று கீழ்க் கூறியபடி. சிலருக்கு ஸங்க்ரஹமாக உபதேசிக்கும் வகையைக் குறிக்கிறார். இவர்கள் இதி. ஓர் ஆத்மா என்றது. ஜீவாத்மா ஒருவனே என்ற கருத்தாலல்ல; ஒவ்வொரு ஜீவனுக்கும் பிறவிதோறும் எடுக்கும் தேஹம் வெவ்வேறாயிருக்க ஸ்ருஷ்டிதோறும் பெறும் ப்ராணேந்த்ரியங்களும் வெவ்வேறாயிருக்க அவற்றில் எல்லாம் தொடர்ந்து வருகிறவன் ஒருவனென்றறிவிக்கவாம். ஹிதத்தைச் சொல்லுகிறார் अनादीति. ஹிதமாவது புருஷார்த்தத்திற்கு ஹேதுவானது. அதனால் புருஷார்த்தமும் இதிலே சொல்லிற்றாம். அந்தாதியாக=முன் தேஹத்தினுடைய முடிவு மேல் தேஹத்திற்கு ஆதியாம்படி; அதாவது முன் தேஹத்தின் முடிவில் நின்ற ஸூக்ஷ்ம தேஹமும் கர்மமும் மேல் தேஹத்திற்குக் காரணமாகும்படி. ஸூக்ஷ்மதேஹம் ஒவ்வொரு கல்பத்தின் முடிவு வரையில் கூடுமாகிலும் மஹாப்ரளயத்தின் பின்னே வரும் ஸ்ருஷ்டியின் முதலிற் சொலல் வாகாது என்று கருதி அந்தம்=மரணம், ஆதி=ஜநநம் என்று உரைப்பர். இப்போது प्रेत्यभावः संसारः—என்கிற தார்க்கிகவசநமும் நினைவுறும். திருவடிகளைத் தந்து என்றதாலே फलप्रदानம் சொல்லப்பட்டது. ரக்ஷித்து என்ற பதப்ரயோகத்தால் गोप्तृत्व வரணம் குறித்ததாம். प्रसादित्त-அநுக்ரஹித்த= குருபரம்பரையையும் அருளி द्वयத்தையும் அருளியதால் பெற்ற; சரணமாகப்பற்றி என்பதற்கு—ப்ராப்யமாகக் கொண்டு என்றும் பொருள் உரைப் பர். ரக்ஷித்தருளவேண்டுமென்று என்ற வினையெச்சம் ஸமர்ப்பிப்பது என்ற விடத்தில் அந்வயிப்பதாகையால் சரணமாகப்பற்றி என்பதற்கு शरणं प्रपद्ये

சமைகளையும் அங்கே ஸமர்ப்பிப்பது' என்று இதரத்தையும்.
'ஆசார்யன் காட்டிக்கொடுக்கக் கைக்கொண்ட எம்பெருமான் இனி நம்மை ஒருபடிக்கும் கைவிடான் என்கிற தேற்றத்தோடே இங்கு இருந்த காலம் अपवर्गपूर्वरङ्गமான निरपराध— अनुकूलवृत्तिயோடே நடப்பது' என்று उत्तरकृत्यத்தையும் संग्रहिச்சருளிச் செய்வர்கள்.

प्रत्येयस्तु(?)विलक्षणः प्रकृतितस्त्राता पतिस्तत्परः तस्मिन् आत्मभरार्पणं हिततमं तच्छेषवृत्तिः फलम् ।

---

என்பதின் வாச்யார்த்தமான மஹாவிச்வாஸம் நிரபேக்ஷரக்ஷகத்வாத்யவஸாயம் பொருளென்றும் அதிலிருந்து கிடைத்த ஸரளபர்ப்பணைப் ஸமர்ப்பிப்பது என்னப்பட்டதென்றும் கொள்ளலாம். காட்டிக்கொடுக்க=எம்பெருமானுக்கு நம்மைக் காட்டி ஸமர்ப்பிக்க; அல்லது எம்பெருமானை நமக்குக் காட்டி நம்மை அவனிடம் ஸமர்ப்பிக்க. ஒருபடிக்கும் கைவிடான் இதி. "कौटिल्ये सति शिक्षयाऽपनयन् क्रोडीकरोति" என்றாரே. தேற்றம்=விச்வாஸம்; அபவர்க பூர்வரங்கமான=மோக்ஷத்திற்கு முன் தேஹாவஸாநம் வரை வரக்கூடிய.

இந்த ஸங்க்ரஹத்தை ச்லோகமூலமாகவும் அறிவிக்கிறார். प्रत्येयस्तु இதி. இது அதிகாரத்தின் முடிவான ச்லோகமன்று; வடமொழியில் ஆசார்யன் செய்யும் ஸங்க்ரஹோபதேசம். ச்லோகத்தில் ददुः— என்னுமல்ல; अदुः என்றதால்—ஸங்க்ரஹருசிகளுக்கு உபதேசமென்றாலும் பூர்வர்கள் दत्तात्माக்களான சிஷ்யர்களுக்கே உபதேசம் செய்தார்களாகையால் दत्तात्माக்களுக்கே உபதேசிக்க வேண்டுமென்றறிவித்ததாம். जीवात्मा என்ற பதத்தைச் சேர்க்க; प्रत्येयः—அறியப்பட வேண்டும் ஜீவாத்மா ப்ரக்ருதியைவிட வேறுவான்; இப்படியே எல்லோரும் பாடம் கொண்டிருந்தும் प्रत्येयस्तु என்றவிடத்தில் प्रत्यग्वस्तु என்ற பாடம் தகுமென்பர். அப்போது. विलक्षणम् என்று நபும்ஸகப் பாடகல்பநமாம். इदं என்று அறியப்படுகிறது पराक् ஆகும்; அதற்கு प्रतीपமாக—எதிராக अहं என்று அறியப்படுகிறது प्रत्यक्; அந்த प्रतिशப்தமே इण्धातुவுடன் சேர்ந்து प्रत्येयः எனவாவதால் प्रत्येयः என்ற பதத்திற்கே इदமென்பதற்கு प्रतीपமாக अहமென்று அறியப்பட வேண்டியவன் என்று பொருளாகலாம். இவ்வளவால் "நித்யனாயிருப்பான் ஒரு ஆத்மா உண்டு" என்றது சொல்லப்பட்டதாம். प्रत्यक् என்றபாடம் கல்பிக்கில் प्रत्येयःसः என்றே கல்பிக்கலாம்; இப்போது நபும்ஸகநிர்தேசக்லேசமில்லை. प्रत्येयस्तु என்றவிடத்தில் वस्तु என்பதை விடாமல்—யகாரத்தை வகாரமாக்காமல் प्रत्ये என்பதை மட்டும் प्रत्यक् என்று மாற்றி प्रत्यक् वस्तु विलक्षणः என்றும் படிக்கலாம். यच्छब्दத்திற்கு வேண்டும் तच्छब्दம் तत्परः என்றவிடத்திலுள்ளது. ப்ரத்யக்காய் தேஹாதி விலக்ஷணமாக இதரமதங்களிலும் ஸம்மதமான ஜீவன் எவனோ அவனுக்கும் மேம்பட்டவனுவான் अकारार्थமான ரக்ஷகனும் ஸ்வாமியுமாகிறவனென்று முதற்பாதத்தின் பொருளாம். तस्मिन्—அந்த ஸ்வாமியினிடத்தில் आत्मभरार्पणं தனது மோக்ஷார்த்த भरத்தை ஸமர்ப்பித்தல் हिततमं—சிறந்த ஹிதமாகும். மோக்ஷார்த்த ப்ரவ்ருத்தியெல்லாம் ஹிதம். ஸாக்ஷாத் மோக்ஷ

इत्थं तत्त्वहिते पुमर्थ इति नस्त्रेधा विभक्तं धनं दायत्वेन दयाधनाः स्वयमदुर्दत्तात्मनां देशिकाः ॥

இப்படி ரஹஸ்யத்ரயத்தைப் பற்றின கீழும் மேலுமுள்ள பாசுரங்களெல்லாம் वेदान्तोदयनसंप्रदायமான மடைப்பள்ளிவார்த்தையை ஆசார்யன் பக்கலிலே தாம் கேட்டருளினபடியே கிடாம்பியப்புள்ளார் அடியேனைக்

---

ஹேதுவாகையால் பக்தியானது ஹிததரம். லகுவாயிருந்து விரைவில் மோக்ஷஸாதநமாகையால் ப்ரபத்தி ஹிததமம். तच्छेषवृत्तिः—அவன் விஷயமாக சேஷத்வாநுரூபமான தேஹாவஸாநம் வரையில் இங்குள்ள செயலும் பிறகு அங்குள்ளதும் புருஷார்த்தமாகும். तत्त्वहिते என்று த்விவசநம். पुमर्थः=புருஷார்த்தம்; தத்துவமும் ஹிதமும் புருஷார்த்தமும் என மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்ட தனத்தை देशिकाः-ஆசார்யர்கள் தயையென்கிற தனமுடையவர்களாய் दत्तात्मनां—தம்மிடத்தில் ஆத்மாவை அர்ப்பணம் செய்த नः=நமக்கு स्वयं தாமாகவே दायत्वेन—நமக்காக ஏற்பட்ட த்ரவ்யமாகவே इत्थम् இப்படி अदुः—கொடுத்தார்கள்—தத்துவஹித புருஷார்த்த ஜ்ஞாநமே धनம், அது தமக்குப் போல் சிஷ்யர்களுக்கும் दायமாகுமென்று அவர்களுக்கும் அருளினர்கள்.

संग्रहरुचिகளுக்கான गुरूपदेशம் கூறப்பெற்றது. विस्तररुचियान தமக்கான गुरूपदेशமான ஸூக்திக்கு ஸ்ரீ ஹயக்ரீவன் அருளிய விரிவாகும் இந்த ரஹஸ்யத்ரயஸாரமென்கிறார் இப்படி இதி. பாசுரங்கள்=வாக்யங்கள். वेदान्तोदयनसंप्रदायेति. ந்யாய சாஸ்த்ரக்ரந்தகர்த்தர்களுள் முக்யராய் ந்யாயாசார்யரென்று வ்யவஹரிக்கப்பட்டவர் உதயநாசார்யர். அவர் ந்யாயசாஸ்த்ரத்திற்கு ப்ரமாணபூதர். ந்யாயத்திற்கு உதயநர் போல் வேதாந்தத்திற்கு இவர் முக்ய ப்ரமாணபூதரென்று மடைப்பள்ளியாச்சானை ப்ரணதார்த்திஹரரென்ற கிடாம்பியாச்சானுக்கு வேதாந்தோதயநரென்ற बिरुदத்தை ச்ரீபாஷ்யகாரர் அருளினர். தென்கலை குருபரம்பராப்ரபாவக்ரந்தத்தில் (டன்முயபதிப்பு 463பக்கம்) श्रीभाष्यं दर्शयित्वा यतिपतिकथितं सांप्रदाये नियुक्तो मह्यं श्रीवेङ्कटेशे पथि परमपदं दत्तवान् गोपिकायै। आख्यां वेदोत्तमाङ्गोदयन इति दधत् भाष्यकारेण दत्तामात्रेयाचार्य......இத்யாதி உள்ளது. वेदान्तोदयन संप्रदायமே அவருக்கு எம்பெருமானாரிடமிருந்த भक्तिविशेषமும் அவரிடம் सर्वार्थोपदेशமும் தோற்ற மடைப்பள்ளிவார்த்தையென அப்போது வழங்கப் பெற்றது அம் மஹானுக்கு ச்ரீபாஷ்யகாரரிடமிருந்து ஸம்ப்ரதாயமாக வந்த இவ்வார்த்தையானது—சிஷ்யர்களுக்கு சாஸ்த்ரோபதேசத்தைப் போல் ச்ரீபாஷ்யகாரருக்குத் திருமேனியிற் டரியாலே மடைப்பள்ளியில் (சமையலறையில்) பாகாதிகளையும் கைங்கர்யமாக அவர் நடத்திவந்ததால் அங்கே தம் குமாரரான கிடாம்பி ராமாநுஜாசார்யர் முதலானோர்க்கு உபதேசம் செய்து வந்ததாலும் மடைப்பள்ளி வார்த்தையாயிற்று. அங்கு ஸத்ஸம்ப்ரதாயவார்த்தையே. அந்த ராமாநுஜாசார்யர் தம் குமாரரான முழுமையும் ரங்கராஜாசார்யருக்கு உபதேசிக்க அவர் தம் குமாரரான கிடாம்பி அப்புள்ளாரென்கிற वादिहंसाम्बुदाचार्यருக்கு உபதேசித்தருளினர் இப்படி பரம்பரையாக வரக் கேட்ட வார்த்தைகளை அப்படியே அவர் சிஷ்யரான தமக்கு

கிளியைப் பழக்கு(குவிக்கு)மாப் போலே பழக்கிவைக்க அவர் திருவுள்ளத்தில் இரக்கமடியாகப் பெருமாள் தெளியப் ப்ரகாசிப்பித்து மறவாமற் காத்துப் பிழையறப் பேசுவித்த பாசுரங்கள்.

பாட்டுக்குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால்
மாட்டுக்கருள்தரு மாயன் மலிந்து வருத்துதலால்
நாட்டுக்கிருள்செக நான்மறை யந்தி நடைவிளங்க
வீட்டுக்கிடைகழிக்கே வெளிகாட்டுமம் மெய்விளக்கே.

---

அருளினரென்ன, இங்கே கிளியைப் பழக்குவிக்குமாப்போலே என்றது. இக் க்ரந்தத்தில் ஆசார்யர்களின் சொற்கள் கேட்டவண்ணமிருக்கின்றன என்று இதனால் குறித்ததாம். அவர் திருவுள்ளத்தில் இரக்கமடியாக = அப்புள்ளாரின் திருவுள்ளத்திலேயிருந்த இரக்கம் காரணமாக. இப்படி ஸம்ப்ரதாயப்ராப்தங்களான அர்த்தங்களாவன—பிராட்டியும் பெருமாளும் சேர்ந்து ஈச்வரதத்துவம். பிராட்டிக்கு विभुत्व उपायत्वங்களுண்டு. பரந்யாஸமே ப்ரபத்தி. ஐந்து அங்கங்களும் அவச்யமாகும், அதற்குத் தக்கவாறு பதார்த்த வாக்யார்த்தங்கள் இத்யாதிகள். அவற்றை விட்டு வெவ்வேறு கூறுகின்றனரே யென்று அவருக்குள்ள இரக்கத்தைப் பெருமாள் ச்ரீஹயக்ரீவன் கண்டு அது விஷயத்தைத் தெளிய ப்ரகாசிப்பித்து அது முதல் இது வரையில் மறவாதபடி காத்துப் பிழை யொன்று மிராதபடி இப்படி விரிவாகப் பேசுவித்தான். இதற்குக் காரணம் यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ என்றதாம். இப்படி வந்த பாசுரங்களாகையாலே எல்லாம் ஸம்ப்ரதாயோக்திகளேயாகும். பட்டர் நஞ்சீயர் முதலானோரும் தத்த்வ ஹித புருஷார்த்தங்களிலே பாஷ்யகாரரின் திருவுள்ளத்தைத் தெளிவதற்காக மடைப்பள்ளியாச்சானை அணுகி அறிந்து க்ருதார்த்தராவரென்று ஈடுமுதலானவற்றிலுள்ளது ஸர்வப்ரஸித்தம். கீழேயும் இது தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வாறு பெருமாள் தெளிய ப்ரகாசிப்பித்துப் பிழையறப் பேசிவைத்தது—தான் இந்த ஸம்ப்ரதாயத்திற்கு மூலமான உபயவேதாந்தங்களில் ஒன்றான द्रमिड வேதாந்தத்தில் முதன் மூன்றான திருவந்தாதிகளை ப்ரகாசப்படுத்துவதற்காகப் பட்ட ப்ரயாஸை முதலான தன் ப்ரயத்னம் பூர்ணமாகப் பலன் பெறுதற்காகவாமென்ற கருத்தாலே பாட்டருளிச்செய்கிறார் பாட்டுக்கு இதி. பாட்டுக்கு = ஸாம்ப்ரதாயிகார்த்தத்தை வெளியிட திவ்ய ப்ரபந்தங்களில் முதன்மையான மூன்று திருவந்தாதிகளை இசையுடன் அருள்வதற்கு உரிய—தகுந்த பழையவர் திவ்ய ஸூரிகளிலே முதல்வரும் एतत् साम गायन् आस्ते என்ற सामगानरत நித்யஸூரிகளின் அவதாரமுமான பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் என்ற மூவரை, பண்டு—மற்றவருக்கு முன் ஒருகால்—திருக்கோவலூரில் தனித்தனியே எழுந்தருளி இரவில் மழையில் यदृच्छैயாகச் சேர்ந்த போது. வீட்டுக்கு = ஒரு गृहத்தின் இடைகழிக்கு = देहलिயில் மாட்டுக்கு = மாடு-धनம் சொத்து; அல்லது மாடு = பசுப்ராயர்;

மருளற்ற தேசிகர் வானுகப்பாலிந்த வையமெல்லாம்
இருளற்றிறையவனிணையடி பூண்டிட(டுய) வெண்ணுதலால்

---

அப்படிப்பட்ட ஜீவர்களுக்கு அருள்தரும்-அநுக்ரஹம் செய்யும் மாயன் = ஆச்சர்ய பூதனான, பசுமாடுகளுக்கும் அருள் தரும் ஆயன்—கோவலன்—மலிந்து = அதிகமாக வருத்துதலால்—நெருக்கியதால் தோன்றிய இமேய் விளக்கே—இந்தப்பாட்டாகிற சாச்வதமான விளக்கே வெளிகாட்டும்—தத்துவார்த்தங்களை வெளியிடும் நாட்டுக்கு = உலகு முழுமைக்குமே இருள்—செக = அஜ்ஞாநம் போம்படி நால்மறை _ நான்கு வேதங்களின் அந்தி = முடிவான உபநிஷத்துக்களிலுள்ள நடை = மோக்ஷோபாயங்கள் விளங்க நன்கு ப்ரகாசிக்கும்படி; ஒருவர் படுக்கலாம், இருவர் உட்காரலாம் மூவர் நிற்கலாம் என்று ஒன்று சேர்ந்து நின்ற மூவரை, இதுவே தன் இஷ்ட பூர்த்திக்குத் தருணமென்று ஸம்ப்ரதாய ப்ரதம ப்ரவர்த்தகனான கீதாசார்யன் நடுவிலிவரொருவரென்றறியாவண்ணம் நெருக்கினான். இவ்வளவு நெருக்கு ஏதனுலென்று வியந்து இருட்டில்விளக்கை வேண்டுகிறாராய் இவன் நெடுமாலே யென்று பாட்டாகிற விளக்கைக் கொண்டு அநுபவித்தறிவித்தனர். இந்த மூன்று திருவந்தாதிகளாகிற விளக்குத் திருவுடன் சேர்ந்த மாலென்னும் தத்துவ ஹித புருஷார்த்த விஷயமாய் நாடெங்கும் இருள் செகவும் நான்மறையந்திகள் நடமாடவும் ஆனதோடு இடைகழிக்கே ப்ரகாசம் காட்டியதுமாயிற்று. விளக்கு உள்ள விடம் நிழலாய் மற்ற விடங்களில் ப்ரகாசமிருக்கும் இவ்விளக்கு நாடெங்குமே யன்றி இடைகழிக்கே ப்ரகாசம் அளித்தது அங்கிருப்பவன் கோவலனென நன்கறிவித்தது. எனவே இடைகழிக்கு என்பது நாலும் வேற்றுமையாகவே வெளிகாட்டு மென்ற அடுத்த சொல்லிலேயே சேரக்கூடும். வருத்துதலால் என்பதற்குமேல் தோன்றிய என்ற சொல் சேர்த்து விளக்கு என்றதோடு இயைக்க; அல்லது வெளிகாட்டு மென்பதை வினைமுற்றாக்காமல் விளக்குக்கு விசேஷணமாக்கி வெளிகாட்டுகிற விளக்கு வருத்துதலால் தோன்றின என்னலாம். வருத்துதலால் வெளிகாட்டு மென்ற அந்வயம் ஸ்வரஸமாகாதென்று தோன்றுகிறது வழிகாட்டு மென்ற பாடம் காண்கிறது உண்டாகில் வேதாந்தங்கள் நடமாடும்படி பக்திப்ரபத்யாதிகளைக் காட்டு மென்றதாம். இப்படி தோன்றிய தமிழ்வேதம் மூலமான நமது ஸத்ஸம்ப்ரதாயம் அப்போது போல் இப்போதும் இவ்வாறு ஹயக்ரீவன் பிழை யறப்பேசுவித்தபாசுரங்களால் ப்ரகாசம் பெற்றதென்றபடி.

அதிகாரார்த்தம் முடிந்தது. அதன் ஸங்க்ரஹப்பாசுரம் மருளற்ற இதி. மருள் = அஜ்ஞாநம், அற்ற = இல்லாதவரான தேசிகர் = ஆசார்யர்கள் வான் உகப்பால் = பரமபதத்தில் ஆசையினால் இந்த வையமெல்லாம் இந்த லீலாவிபூதி முழுமையும் இருள் அற்று—அஜ்ஞாநம் நீங்கி இறையவர்—ஸ்வாமியான திருமாலின் இணை அடி—ஒன்றுக்கொன்று ஈடான

தெருளுற்ற செந்தொழிற் செல்வம் பெருகிச் சிறந்தவர்பால்
அருளுற்ற சிந்தையினா லழியாவிளக்கேற்றினரே.

निरवधिदयादिव्योदन्वत्तरङ्गनिरङ्कुशैः नियमयति यः शिष्यान् शिक्षाक्रमैर्गुणसंक्रमैः ।
अचरमगुरोराज्ञापारम्परीपरवान् असौ न परमिह तांस्तल्लक्षेण क्षमप्यभिरक्षति ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे आचार्यकृत्याधिकारः त्रिंशः ॥ 30

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

திருவடிகளை பூண்டிட=உபாய உபேயங்களாகக் கொள்ள அல்லது பூண்டு உய=உஜ்ஜீவிக்க எண்ணுதலால்=எண்ணி, தெருள் உற்ற—விவேக முள்ள வரும் செம் தொழில்=செம்மையான கைங்கர்யமாகிற செல்வம்-ஸம்பத்து பெருகி—மேலிட்டு சிறந்தவர்பால்=உத்க்ருஷ்டருமான சிஷ்யர் களிடத்தில் அருள் உற்ற சிந்தையினால்=க்ருபை கூர்ந்த திருவுள்ளத்தினால் அழியாத விளக்கை ஏற்றினர்—ஏற்றிவைத்தனர். நாம் பெறுகிற பரமபதம் பின்னோருக்கும் பெறவாக வேண்டு மென்று பாத்ரங்களிலே உபதேசம் செய்தருளினர். இதே ஆசார்யக்ருத்ய மென்றபடி.

இப்படி சிஷ்யருக்குச் செய்யும் உபதேசம் அவர்களுடைய நன்மைக்காக மட்டு மல்ல; எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறிய குற்றம் நமக்கு வாராமைக்குமாகு மென்கிறார் **निरवधीति**. **यः**=எந்த ஆசார்யன் **निरवधिदया**—எல்லையற்ற அருளாகிற **दिव्य उदन्वत्**—ஆச்சர்யமான கடலின் **तरंग**—அலைகள் போலே **निरङ्कुशैः** தடையற்றனவும் **गुणसंक्रमैः** நல்ல குணங்களைத் தம்மிடமிருந்து சேர்ப்பிக்கின்றனவுமான **शिक्षाक्रमैः**—படிப்படியான உபதேசங்களாலே சிஷ்யர்களை **नियमयति**—அடக்குகிறாரோ, **असौ** அந்த ஆசார்யன் **अचरमगुरोः**—முதலாசார்யனான எம்பெருமானின் **आज्ञा**—ஆஜ்ஞையின் **पारम्परी**-தம் ஆசார்யன்வரையில் வந்த முறைக்கு **परवान्**—பரதந்த்ரனாய் **इह**-இவ்விஷயத்தில் **तान् न परं**—அந்த சிஷ்யர்களை மட்டு மன்றி **तल्लक्षेण**—அவ்வுபதேசவ்யாஜத்தாலே **स्वं**-தம்மையும் **दानवैशद्य**த்தால் **अभिरक्षति** காத்துக் கொள்கிறார். பாத்ரங்கள் கிடைத்த போது **य इमं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति । भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥**, **नान्तर्धाय स्वयं याति जगद्बीजं अबीजकृत्** என்றபடி உபதேசித்தால் நன்மையும் உபதேசியாத போது தோஷமும் தெரிவதால் உபதேசிப்பது ஸ்வரக்ஷணமுமாகு மென்றபடி.

ஸாரவிஸ்தரத்தில் ஆசார்யக்ருத்யாதிகாரம் முற்றும்-30

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

शिष्यकृत्याधिकारः

சிஷ்யக்ருத்யாதிகாரம்-31

अशिथिलगुरुभक्तिस्तत्प्रशंसादिशीलः प्रचुरबहुमतिस्तद्वस्तु-त्रास्त्वादिकेऽपि ।

गुणवति विनियोक्तुं गोपयन् संप्रदायं कृतवित् अनघवृत्तिः किं न विन्देन्निधानम् ॥

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

சிஷ்யக்ருத்யாதிகாரம். 31.

ஸம்ப்ரதாயமென்பது ஆசார்யன் சிஷ்யன் என்ற இருவராலும் ஸாத்ய மாகும். அவரில் ஆசார்யக்ருத்யம் நிரூபிக்கப்பெற்றது சிஷ்யனுடைய க்ருத்யம் சொல்லப்படுகிறது. गुरुं प्रसादयेत् என்றதை பூர்வார்த்தால் விரித்து ரைத்து मन्त्रं यत्नेन गोपयेत् என்றதை மூன்றாம் பாதத்தால் குறித்து மற்ற அநுஷ்டாநாதிகளை ஸங்க்ரஹித்து ச்லோகம் அருளிச்செய்கிறார் अशिथिलेति. சிஷ்யபதம் இராமற் போனாலும் अर्थात् ஸித்தமாகும். अशिथिल गुरुभक्तिः— எம்பெருமானிடமுள்ள பக்தியளவான ஆசார்ய விஷயமான பக்தி என்றும் குறையா திருக்கப் பெற்றவனாய், அதன் பரிவாஹமான—तत्प्रशंसादिशीलः-அவ் வாசார்யனுடைய குணங்கள் செயல் இவற்றைப் புகழ்வது, மனதினால் அவரை த்யானம் செய்வது, காயத்தினால் ப்ரணாம சுச்ருஷாதிகளைச் செய்வது என்பவற்றை சீலமாக=ஸ்வபாவமாகவுடையனுமாய் तद्वस्तु- त्रास्त्वादिकेऽपि ஆசார்யனோடு ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தமுள்ள க்ஷேத்ராதிகளென்ன, वस्तु— அவருடைய ச்ரீக்ராமமென்ன, ஆதிபதத்தால் புத்ர. दार. பந்துக்களைக் கொள் வது. அவை யெல்லாவற்றிலும் प्रचुरबहुमतिः—அதிக மதிப்புடையனுமாய் संप्रदायं—அவர் உபதேசித்த அர்த்தத்தை गुणवति-ஸத்பாத்ரத்தில் विनियोक्तुं- பிழை யறப் பூர்ண மாக வுபதேசிப்பதற்காக गोपयन्-பிறருக்குத் தெரியாத படி ரக்ஷிக்கின்றவனுமாய் कृतवित्-ஆசார்ய-தத்ஸம்பந்திகளால் ஏற்பட்ட உபகாரங்களில் நன்றியை யுடையனுமாய் अनघवृत्तिः ஏதேனுமபகாரம் நேர்ந் திருந்தால் மறந்தவனாய் तेन त्यक्तेन भुञ्जीथाः मा गृधः कस्यस्विद्धनम् என்றபடி குற்றமற்ற வைராக்ய பூஷிதமான வ்ருத்தியை யுடையனுமான சிஷ்யன் निधानं—நிதியான எம்பெருமானை किं न विन्देत्—ஏன் அடையமாட்டான்? அல்லது किं निधानं பகவத் பாகவத ஆசார்யகைங்கர்ய-ஸம்ப்ரதாய ப்ரசார-பரி பூர்ண ப்ரஹ்மாநுபவாதி நிதிகளில் எந்த நிதியைத் தான் அடையமாட்டான்; எல்லாம் அடைவானென்றபடி.

(1) ஆசார்யன் कृपया निःस्पृहो वदेत् என்றபடி கேவலக்ருபையினாலே உப தேசிக்க வேண்டும்; சிஷ்யனுடைய दक्षिणा-परिचरणादிகளுக்குத் தக்க வாறு

(1) இவ் அர்த்தங்களையெல்லாம் மிடியனுக்கு அகத்துக்குள்ளே மஹாநிதியைக் காட்டிக்கொடுக்குமாப் போலே வெளியிடுகையாலே மஹோபகாரகனான ஆசார்யன்பக்கல் சிஷ்யன்(ஞ) க்ருதஜ்ஞனாயிருக்கவேண்டுமென்றும், த்ரோஹம் பண்ணாதொழியவேண்டுமென்றும் சாஸ்த்ரங்கள் சொன்னவிடம்—இரண்டு விபூதியும் விபூதிமானும் இவனைச் சீசீ யென்னும் படியுமாய், ஹிதம் சொன்ன ப்ரஹ்லாத-விபீஷணாதிகளுக்குப் ப்ரதிகூலரான ஹிரண்ய-ராவணாதிகளோடு துல்யனுமாய், ' ' विद्याचोरो गुरुद्रोही वेदेश्वरविदूषकः । त एते बहुपाप्मानः सद्यो दण्ड्या इति श्रुतिः ॥' என்கிறபடியே

---

உபதேதிப்பது தகாதென்பது போல் ஆசார்யன் க்ருபையினால் அருளிய தால் தக்ஷிணாதிகள் தகா வென்று நினைக்கலாகாது; ஆசார்யனிடம் க்ருதஜ்ஞனாய் தன்னாலான குருதக்ஷிணையை ஸமர்ப்பித்தாலும் ஆசார்யன் செய்த உபகாரத்திற்கு ப்ரத்யுபகாரம் செய்துவிட்டதாக நினைக்கலுமாகாது என்று விரித்து உரைக்கிறார் இவ்வர்த்தங்களை இதி. ஆசார்யன் செய்த ப்ரஹ்ம வித்யாப்ரதானத்திற்கு நீ என்ன ப்ரத்யுபகாரம் செய்கிறாயென்று கேட்டால் நான் க்ருதஜ்ஞனாய் த்ரோஹ புத்தி யற்றவனாய் ப்ராணசரீராதிகளையும் அவருக்கு அதீனமாக்கி மநோவாக்காயங்களை அவரிடம் செலுத்தியிருக்கிறேன் யதாசக்தி குருதக்ஷிணையும் ஸமர்ப்பிப்பவனாவேன் இது நான் செய்யும் ப்ரத்யுபகார மென்பானாகில்—இது தவறு; க்ருதஜ்ஞனாயிராமலும் த்ரோஹிப்பவனாயுமிருந்தால் உலகம் நிந்திக்கும். சாஸ்த்ரப்படி ராஜதண்டனையுமாம். உடலையும் உயிரையும் தனத்தையும் அவனுக்கு அதீனமாக்குவது தாஸனான இவனுக்கு விதிக்கப்பட்ட கார்யமாம். அதை மீறினால் இவனுக்கே அநர்த்தமாம் ஆசார்ய உபாஸநத்தை விடுவது கண் பெற்றும் குருடனாகைக்கு ஸமமாகும். அவ் வநுபவ-கைங்கர்யங்களை இழப்பதே பெருங்கேடாகும். ஆகையால் ஆசார்ய விஷயமான இவைகள் ப்ரத்யுபகாரமாகா. குருதக்ஷிணை ஸமர்ப்பிப்பது ப்ரத்யுகாரமென்னலாம்; உண்மையில் அதுவும் உபகாரமாகாது. ஸம்ஸார துக்கத்தினின்று மீட்டுப் பரி பூர்ணப்ரஹ்மாநுபவத்தை யளிக்கும் மஹாநிதியை யருளியவருக்கு இவன் செய்யும் ஸ்வல்ப்ப த்ரவ்யஸமர்ப்பணம் ப்ரத்யுபகார மென்னக் கூடுமோ என்று இவ்வாக்யங்களின் பொருள். மிடியனுக்கு=மஹா தரித்ரனுக்கு; அகத்துக்குள்ளே அவன் வீட்டினுள்ளேயே; வெளியிடுகை யாலே—அவன் கற்ற ரஹஸ்யங்களிலேயே காண்பிப்பதாலே சாஸ்த்ரங்கள் ருபயேவ யஶதாரம் ஆசார்யம் ஸம்மரேத் ஸதா' ஆசினோதி ஹி......பாபாயஸ்தஸ்ய த்ருஹ்யேத் கதாசந ந இத்யாதிகள். இரண்டு விபூதியும்=ப்ரக்ருதிமண்டலத்திள்ளவர்களும் பரம பதத்திலுள்ளவர்களும் விபூதிமானும்—ஸர்வேச்வரனும்; சீச்சீ என்பது நிந்தையின் மிகுதியைக் காட்டும் சொல். வித்யாசோர இதி. ஒருவர் பிறருக்கு உபதேசம் செய்யும் போது அதை அவனுக்குத் தெரியாமல் கேட்டுப் பெறுகிறவன் வித்யையைத் திருடுகின்றவனாவான்; அவனும் குருத்ரோஹியும் வேதங்களையும் ஈச்வரனையும் தூஷிப்பவனும் மஹாபாபிகள்; உடனே அரசனால்

பூர்ணனுமாகாமைக்காக வத்தனை; प्रत्युपकारம் சொன்னபடியன்று.

(ख) शरीरमर्थं प्राणं च सद्गुरुभ्यो निवेदयेत्' என்றும்,
'सर्वस्वं वा तदर्धं वा तदर्धार्धमेव वा । गुरवे दक्षिणां दद्यात् यथाशक्त्यपि वा पुनः ॥' என்றுமிப்புடைகளிற் சொல்லுகிறவையும் प्रणिपात-अभिवादनादिகளைப் போலே இவனுக்குச் சில कर्तव्यங்களைச் சொல்லிற்றத்தனை போக்கி. 'कृपया निःस्पृहो वदेत्' என்னும்படியிருக்கிற अनन्यप्रयोजनனை आचार्यனுக்குப் प्रत्युपकारம் சொன்னபடி யன்று.

(ग) भगवान்பக்கலில்போலே ஆசார்யன்பக்கலிலே वर्तिப்பானென்றும், அவனுக்கு நல்லனாற்போலே ஆசார்யனுக்கும் நல்லனாயிருப்பானென்றும் वेदान्तங்களிற் சொன்னதுவும்,

'न प्रमाद्येद् गुरौ शिष्यो वाङ्मनःकायकर्मभिः । अविभज्यात्मनाऽऽचार्यं वर्तेतास्मिन् यथाऽच्युते ॥'

'देववदाचार्यमुपासीत' என்று शाण्डिल्य-आपस्तम्बादिகள் சொன்னதுவும் ஆசார்யனுக்குப் प्रत्युपकारம் சொன்னபடியன்று; शास्त्रचक्षुஸ்ஸான இவன் விழிகண்குருடனாகாமைக்கும் भगवदनुभवம் போலே विलक्षणமான இவ் अनुभवத்தை जन्मभिक्षुவான இவன் இழவாமைக்கும் சொல்லிற்றத்தனை.

இப்படி இவ்விஷயத்தில் प्रत्युपकारமில்லையென்னுமிடத்தை

'ब्रह्मविद्याप्रदानस्य देवैरपि न शक्यते । प्रतिप्रदानमपि वा दद्यात् शक्तित आदरात् ॥'

என்று श्रीशाण्डिल्यभगवान் அருளிச்செய்தான். இதில் यथाशक्तिदानம் சொன்னதுவும் தன் आदरத்துக்குப் போக்குவீடாகச் சொன்னதத்தனை; இவ்வளவைக் கொண்டு प्रत्युपकारம் பண்ணினானாகத் தன்னை நினைத்திருக்கப் பெறான்.

---

தண்டிக்கப்பட வேண்டியவர்களென்கிறது வேதமென்கிறது ஸம்ருதி.
(ख) शरीरमिति. விஹகேச்வரஸம்ஹிதை. உடலையும் பணத்தையும் உயிரையும் நல்ல ஆசார்யருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். सर्वस्वमिति. தன்னுடைய சொத்து முழுமையுமோ அதில் பாதியிற்பாதியிற்பாதியோ यथाशक्तिயோ குருவுக்கு தக்ஷிணையாக ஸமர்ப்பிக்க வேண்டும். அவர் இந்த ப்ரயோஜநத்தை யபேக்ஷியாமையாலே இது ப்ரத்யுபகாரமாகாது. புடைகள் = ப்ரகாரங்கள்.
(ग) भगवान् इति. यथा भगवति एवं वक्तरि वृत्तिः என்ற ரஹஸ்யாம்நாயவாக்யார்த்தம் இது. அவனுக்கு நல்லன் இதி. यथा देवे तथा गुरौ என்கிற ச்ருத்யர்த்தம் இது. न इति. சாண்டில்யஸ்ம்ருதி. சிஷ்யன் ஆசார்யன்விஷயத்தில் மநோவாக்காயங்களின செயல்கள்விஷயத்தில் கவனமற்றிருக்கலாகாது. பகவானிடத்திற் போல் இவ்வாசார்யனிடத்திலும் தான் வேறு அவர் வேறு என்ற எண்ணமின்றியிருக்கவேண்டும். देवमिति. ஆபஸ்தம்பதர்மஸூத்ரம் 1-2-6-13. விழிக்கண்குருடன் = கண்வந்தும் குருடனாவது போல் சாஸ்த்ரஜ்ஞாநம் பெற்றும் அதை யிழந்தவன்.
இதற்கு ப்ரமாணம் கூறுகிறார்-ब्रह्मेति. சாண்டில்யஸ்ம்ருதி 1-117. ப்ரஹ்மவித்யை யளித்ததற்கு ஈடான गुरुदक्षिणाஸமர்ப்பணம் தேவர்களாலுமாகாது; ஆனாலும் சக்திக்குத் தக்கவாறு தக்ஷிணை ஸமர்ப்பிக்க வேண்டும்,

(2) இப்படிப் प्रत्युपकाररहितனை இவனுக்குச் செய்ய அடுப்பது என் என்னில்—இவன் उपदेशिக்க अर्थங்களை

'कपालस्थं यथा तोयं श्वदृतौ च यथा पयः । दुष्टं स्यात् स्थानदोषेण वृत्तहीने तथा श्रुतम् ॥'

என்கிறபடியே தன் विपरीतानुष्ठानங்களாலே कपालस्थतोयादिகளைப்போலே अनुपजीव्यமாக்காதொழியவும்,

'यच्छ्रुतं न विरागाय न धर्माय न शान्तये । सुबद्धमपि शब्देन काकवाशितमेव तत् ॥'

என்கிறபடியே கற்றதே प्रयोजनமாக்காதொழியவும், இவற்றைக்கொண்டு वान्ताशीயாகாதொழியவும், இவற்றை யெல்லாம்

'पण्डितैरर्थकार्पण्यात् पण्यस्त्रीभिरिव स्वयम् । आत्मा संस्कृत्य संस्कृत्य परोपकरणीकृतः ॥'

---

அவரிடம் ஆதராதிசயமிருந்தால் அது அப்படி செய்யாமலிருக்க வொட்டாது.

(2) இப்படி गुरुவிஷயத்தில் நடப்பதெல்லாம் ப்ரத்யுபகாரமாகா தென்றார்; வித்யாவிஷயத்தில் இவன் நடந்துகொள்ளவேண்டும் வகையை வெளியிடுகிறார் இப்படி ப்ரத்யுபகாரரஹித. ஒழியவும் என்ற மூன்று சொற்களுக்கும் கொள்ளவும் இருப்பவு மென்பதற்கும் ப்ராப்த மென்பதோடு அந்வயம். இவன் க்ரஹித்த வித்யை பிறருக்கு உபயோகப்படும்படியிருக்க வேண்டும் அதற்காகத் தக்க ஆசாரத்தை விடாமலிருப்பது. எதற்காக வித்யையை க்ரஹித்தானோ அதுவிஷயத்தில் அதைப் பயன்படுத்த வேண்டும். ஜீவனத்துக்காக அதை உபயோகிக்கவாகாது. அபாத்ரத்தில் சேர்க்கலாகாது வைஷ்ணவ னென்கிற பேருக்கும் மேலாக நான் இவ்வாசார்யன் திருவடி யென்று சொல்பவனாக வேண்டு மென்று तात्पर्यம். कपालेति. भा. शां 35-42—மண்டையோட்டிலுள்ள ஜலம் போலும், நாய்த்தோலாலான துருத்தியிலுள்ள பால் போலும் அநுஷ்டானமில்லாதவனிடத்திலுள்ள வித்யை இடம் दुष्टமானதால் दुष्टமாகும். அதனால் பிறருக்கு அநுபஜீவ்யம்=கொள்ளத்தகாததாம். यदिति. இதிஹா- ஸமு. 22-38 எந்தக் கல்வி வைராக்யத்துக்கும் தர்மத்துக்கும் அடக்கத்திற்கும் ஆகவில்லையோ—அது சப்தஸௌஷ்டவமுள்ளதாயிருந்தாலும். ஸ்பஷ்டமான காக்கையின் சத்தம் போலாகும். கற்றதே ப்ரயோஜநம் இதி. வைராக்யாதி ப்ரயோஜநத்திற்காகக் கற்க வேண்டியிருக்கக்.கற்றமாத்ரத்தாலேயே ப்ரயோஜநம் பெற்றதாக வெண்ணுவது பிசகென்றபடி. वान्ताशी=கக்கியதை உண்பவன். बालன் இவ்வாறு செய்வான்; நாயும் கக்கியதை உண்ணும். அதுபோல் தேஹதாரணத்திற்காக ஒருவர் பிறரிடம் தான் அறிந்த விஷயத்தைக் கக்க அவர்கள் அதன் பலனைப் பெறுமல் ஆஹாரத்திற்காக ஏதேனும் அளித்தால் அதை, தான் சப்த ரூபமாகக் கக்கியதே வஸ்துவாக வந்திருப்பதாக நினைக்கவேண்டும் அதையுண்பவன் वान्ताशी. ये यथा (यथा श्वा)वान्तमश्नन्ति बालाः(श्नाति श्वा वै) नित्यमभुक्तये(भूतये) । एवं ते वान्तमश्नन्ति स्ववीर्यस्योपभोज(सेव)नात् ॥" सनत्सु 2.32. नित्यमभुक्तये स्थितम्—ஆபத்திலும் भोजनार्थமான वान्तத்தை; இவற்றை=உபதேசித்த अर्थங்களை. पण्डितैरिति.

इत्यादिகளில் परिहसिக்கிறபடியே मणिप्रालङ्कारமாக்குதல்-விலைச் சாந்தாக்குதல்-அம்பலத்தில் அவற்பொதியாக்குதல்—குரங்கின் கையிற்பூமாலையாக்குதல் செய்யாதொழியவும், அடியிலே विद्या தான் 'शेवधिष्टेऽस्मि रक्ष माम्' என்று ப்ராஹ்மணனை அபேக்ஷித்தபடியிலே முன்பே असूयादिகளைக் கைப்பிடித்துவைப்பார் கையிற் காட்டிக்கொடாதே रक्षित्துக்கொள்ளவும், பிறவிக் குருடனான தன்னை அயர்வறுமமரர்கள் परिषत्துக்கு अर्हமம்படி திருத்தின महोपकारகனுக்குச் செய்யலாம் प्रत्युपकारம் இல்லையென்னுமிடத்தைத் தெளிந்து

'एकान्ती व्यपदेष्टव्यो नैव ग्रामकुलादिभिः । विष्णुना व्यपदेष्टव्यस्तस्य सव स एव हि ॥'

---

படித்தவர்களால் விலைமாதர்களென்கிற வேச்யாஸ்த்ரீகளைப் போல் ஏழ்மையாலும் வரும் பொருளை விட மனம் வராமையாலும் 'எவனுக்கு வேண்டுமானாலும் ஆவோம்; பணமே நமக்கு வேண்டுவது' என்று தன்னை ஆடையாபரணங்களாற் போல் வித்யையாலும் பாஷையாலும் அழகுபடுத்திப் பிறரின் போகத்துக்குக் கருவியாக்குவதால் வேச்யாஸ்த்ரீக்கு ஸமமாகப் பரிஹஸித்தார்கள். விலைச்சாந்து=விலைக்காக வுள்ள சந்தனம். இவ்வளவு சந்தனத்திற்கு இவ்வளவு விலை யென்கிற வ்யவஸ்த்தை போலே இவ்வளவு பேச்சுக்கு இவ்வளவு பணமென்கிற வ்யவஸ்த்தை செய்து, பணம் கொடுப்பவனுக்கெல்லாம் அளிப்பது தகாதென்றபடி-அம்பலத்தில் அவல் பொதி=அம்பலமாவது. ஸபை; பொதுவிடம், ஸர்வ ப்ராணிகளுக்கும் பொதுவாக அவல்குவியலை இறைப்பதுபோல் அம்பலத்தில் சொல்லுவது தகாதென்றபடி. குரங்கின் கையில் இதி. அது தன் கையில் பூமாலை யகப்பட்டால் அதைச் छिन्नभिन्नமாக்கிக் கசக்கி அழிக்கும்: அது போல் கல்வியின் உருவைக் கெடுக்கலாகா தென்றபடி. शेवधिरिति शेवधिः ते अस्मि என்ற பதப்பிரிவாம். மநுஸ்ம்ருதி 2-114. 'विद्या ब्राह्मणमेत्याऽऽह शेवधिष्टेऽस्मि रक्ष माम् । असूयकाय मां मा दाः तथा स्यां वीर्यवत्तमा' என்ற ச்லோகம் இங்கே ப்ராஹ்மணனை யபேக்ஷித்தபடியிலே என்பதற்கிணங்கியதாம். ஸாரப்ரகாசிகையில் नास्तिकाय शठायापि मन्त्रविच्छेदिताय वा । असूयकाय मां मा दाः शेवधिष्टेऽस्मि रक्ष माम् ॥ என்று வரையப்பட்டுள்ளது அபேக்ஷித்தபடியிலே என்பதற்கு ரக்ஷித்து என்பதில் அந்வயம். முன்பே=வித்யாக்ரஹணத்திற்கு முன்னமே; அஸூயாதிகளைக் கைப்பிடித்து வைப்பார்=துஷ்டஸ்த்ரீகளைப் பாணிக்ரஹணம் செய்து கொள்வது போல் அஸூயாதிகளை உறுதியாகக் கொண்டுபயோகிப்பவரின். அயர்வு அறும் அமரர்கள்=அஜ்ஞானத்திற்கிடமாகாத நித்யஸூரிகளின். பரிஷத்து=गोष्ठी; செய்யலாம்=செய்யத்தக்க; एकान्ती இதி. விஷ்வக்ஸேந ஸம்ஹிதை; விஷ்ணுவைத் தவிர வேறு தேவதையைத் தொழாதவன். அவனுடைய ஊர், குலம், கோத்ரம், ஜாதி வ்ருத்திமுதலானவற்றைக் கொண்டு 'இவ்வூரான், இக்குலத்தான் எனறெல்லாம் வ்யவஹரிக்கத்தக்கவனல்லன். விஷ்ணுவைக் கொண்டே வ்யபதேசிக்கத் தக்கவன். அதாவது=வைஷ்ணவனென்றும் பகவத்பக்தனென்றும் திருமலைநம்பி காஞ்சீபூர்ணன் என்றவாறும் வ்யபதே

என்கிற நிலையிலுங்காட்டில் 'वसिष्ठव्यपदेशिनः' என்கிறபடியே ஸர்வேச்வரனை பெருமாள் [illegible]மாகப் பிறந்து படைத்துக் கைக்கொண்ட நிலை இந்நிலையென்று परिग्रहित्து, 'என்னைத் தீமனங்கெடுத்தா யுனக்கென் செய்கேன்' என்று இருக்கவும் प्राप्तम्.

(3) தான் இப்படிப் பெற்ற रहस्यत्रयसारार्थமான महार्थத்தை முன்னில்

---

சிக்கத்தக்கவன். तस्य—அவனுக்கு स एव—அந்த விஷ்ணுவே सर्वं हि எல்லாமாவானே, மாநாவமாநங்களுக்கிடமான மற்றவையெல்லாம் உபேக்ஷிக்கப் படுபவை என்றதாம். என்கிற நிலையிலும்காட்டில் = வைஷ்ணவத்வாதிவ்யபதேசத்தைவிட; இதற்கு பரிக்ரஹித்து என்பதில் அந்வயம். விசேஷமாக ஆதரித்து என்று அதன் பொருள். **वसिष्ठेति. रा. बाल 1-7. सदृशं राजशार्दूल तवैतद् भुवि नान्यथा । महावंशप्रसूतस्य वसिष्ठव्यपदेशिनः** " என்று விச்வாமித்ரர் தசரதற்குச் சொல்லும் வார்த்தை. எந்தக் கார்யமானாலும் தயங்காமல் சொல்லலாம்; செய்கிறேன்; தேவரீர் எனக்கு தெய்வம் என்று தசரதர் சொன்னதைக் கேட்டு அவரைப் புகழ்கிறார்—பெரிய வம்சத்திலே பிறந்து முன்னோரைப்போல வஸிஷ்டரைத் தமக்கு ஆசார்யராகச் சொல்லும் உமக்கே பொருந்தும் இவவுலகில் இவ்வார்த்தை என்றவாறு. இக்ஷ்வாகுவம்சத்தில் எல்லோரும் பிரமனால் அளிக்கப்பட்ட பெருமாளை அயோத்தியில் ஆராதித்துக் கொண்டிருந்த போதிலும் தங்களை அவரைக் கொண்டு சொல்விக்கொள்ளாமல் ஆசார்யரான வஸிஷ்டரைக் கொண்டே சொல்லிக் கொண்டது இதனால் தெரிகிறது இந்நிலை வம்சக்ரமமாக தயரதர்வரையில் வந்திருக்க பெருமாள் தானும் அங்கே பிறந்து அதனால் வஸிஷ்டரை யாச்ரயித்தலைத் தனக்கும் படைத்து = உண்டுபண்ணி கைக்கொண்ட = ஸ்வீகரித்த; இந்நிலை = ஆசார்ய ஸம்பந்தத்தைபிட்டுக்கூறிக் கொள்வது; ச்ரீராமன் வஸிஷ்ட வ்யபதேசியாயிருந்ததால் தான் வாலி அவரைப் பார்த்து க்ஷேபிக்கும் போது **किं पश्यसि सतां मध्ये कर्म कृत्वा जुगुप्सितम्** என்றான். அவன் கருத்தை யுணர்ந்துதான் ராமனும் **आर्येण मम मान्धात्रा** என்று வஸிஷ்டவ்யபதேசியான தம் பூர்வரின் ஆசாரத்தைக் காண்பித்தார். **अभयप्रदान**த்தில் **सतामेतद्विगर्हितम्** என்ற விடத்திலும் இதே கருத்திலுள்ளது. தன் ஆசார்யன்மேன்மையை யறியாத இடமாகில் விஷ்ணுவைக் கொண்டே **व्यपदेश**மாம் என்னை இதி. திருவாய் 27. 8. வாமனன் என்று பாட்டாரம்பம். ச்ரீதரனே என்க்குச் செட்டமனத்தை யழித்தருளினாய்; உன்னிடம் பதிந்த்து; உனக்கு நான் செய்யும் உபகாரம் எது? இது எம்பெருமானிடம் செய்யும் விஜ்ஞாபநமானாலும், இப்படியே ஆசார்யனிடமும் இருக்க வேண்டுமென்று அறிவிப்பதற்காக இங்கே கூட்டியது. இவ்வளவால் வித்யையை துர்விநியோகப்படுத்தாமல் ஆசார்யன்பெயரை ப்ரகாசப்படுத்திக் கொண்டிருக்க வேண்டுமென்றதாயிற்று.

இவ்வளவு ஸர்வசிஷ்யஸாதாரணமாம். தான் க்ரஹித்த வித்யையைப் பிறருக்கு உபதேசிக்க வல்ல சிஷ்யர்களுக்கு வேண்டிய தர்மங்களை வெளியிடு

அதிகாரத்திற் சொன்னபடியே உசிதஸ்தாநம் அறிந்து ஸமர்ப்பிக்கும்போது

'कथयामि यथापूर्वं दक्षाद्यैर्मुनिसत्तमैः । पृष्टः प्रोवाच भगवान् अब्जयोनिः पितामहः ॥

तैश्चोक्तं पुरुकुत्साय भूभुजे नर्मदातटे । सारस्वताय तेनापि मम सारस्वतेन च ॥'

என்று ஸ்ரீபராசரப்ரஹ்மர்ஷி மைத்ரேயனுக்கு அருளிச்செய்தாற்போலே குருபரம்பரையைப் ப்ரகாசிப்பித்துக்கொண்டு தன் க்ருதஜ்ஞதையும் வித்யையின் சீர்மையும் தோற்ற உபதேசிக்கவேண்டும்.

---

கிறார் தான் இடு. முன்னில் அதிகாரத்தில் = ஆசார்யக்ருத்யாதிகாரத்தில். உசிதஸ்தாநம் = தகுந்த பாத்ரம். குரும் ப்ரகாசயேத் என்பதால் சிஷ்யருக்கு உபதேசகாலத்தில் குருபரம்பராப்ரகாசநம் அவச்யமாகும். பூர்வாநுஷ்டாநமும் அவ்வாறே யென்றறிவிக்கிறார் கதயாமீதி. கதயாமி = சொல்லுகிறேன். எப்படி பிரமன் சொன்னாரோ, பின்வந்த ஆசார்யர்களாலும் எப்படி சொல்லப்பட்டதோ, அப்படியே சொல்லுகிறேனென்றபடி. தக்ஷர் முதலானமுனிவர்களால் வினவப்பட்டுப் பிரமன் ப்ரவசநம் செய்தார்: பிறகு அவர்களால் புருகுத்ஸனென்ற பூபுஜே—அரசனின்பொருட்டு, நர்மதையின் கரையில் உபதேசிக்கப்பட்டது; புருகுத்ஸனாலே ஸாரஸ்வதருக்கு; ஸாரஸ்வதராலே எனக்கு என்று ஸம்ப்ரதாயம் வந்த க்ரமத்தைப் பராசரர் மைத்ரேயருக்கு அருளினார்; குருபரம்பராஸாரத்தில் ஸ்வாசார்யரைத் தொடங்கி ப்ரதமாசார்யன்வரையில் மேன்மேலாக குருபரம்பராநுஸந்தாநம் விரித்துரைக்கப் பெற்றது. அதோடு இது விரோதிக்குமோ வென்னில்—ஸாராஸ்வாதிநியில் விளக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீஸந்நிதிஸம்ப்ரதாயத்தில் ப்ரதமாசார்யன்தொடங்கி ஸ்வாசார்யபர்யந்தம் அநுஸந்தாநமே எங்கும் கொள்ளப்பட்டிருக்கிறது. அப்பக்ஷத்தில் குருபரம்பராஸ்வகுருபரம்பரா,–'अस्मद्देशिकमस्मदीय.'எனுயிர்தந்து' இத்யாதியை நிர்வஹிக்கும் விதம் ஆராய வேண்டும். மற்ற ஸம்ப்ரதாயத்தில் கதயாமீத்யாதி-ப்ரக்ருதவாக்யத்தை நிர்வஹிக்கவேண்டும். நித்யம் ஆசார்யனும் சிஷ்யனும் குருபரம்பராநுஸந்தாநம் செய்த பிறகு ஆசார்யன் உபதேசிப்பதும் சிஷ்யன்கேட்பதுமாகிறது; உபதேசம் முடிந்தவுடன் மீண்டும் இருவரும் குருபரம்பராநுஸந்தாநம் செய்வது. இது ஸர்வஸம்மதம். இப்படி ஆஹ்நிகங்களில் செய்யும் குருபரம்பராநுஸந்தாநம் ஸ்வாசார்யனைத் தொடங்கி பரமாசார்யன்வரையிலென்று குருபரம் பராஸாரத்தில் அருளிய அம்சமாகும். இந்த அதிகாரத்தில் ஸ்ரீபராசரர் பரமாத்மாவை விட்டுப் பிரமன் முதற்கொண்டே சொல்லியிருக்கிறார்; முழு பரம்பரையில்லை.ஆக இது வேறு:ஆசார்யன் சிஷ்யனுக்கு முதனுள் உபதேசாரம்பத்தில் தமக்கு உபதேசித்த பரம்பரையைத் தெரிவித்தால் தானே இன்னார் இன்னாரென்று தெரிந்து ஸ்வாசார்யன் தொடங்கி பரமாத்மாவரையில் சிஷ்யன் பிறகு அநுஸந்தாநம் செய்ய வாகும். அத்துடன் தன் குருபரம்பரைக்கு வந்த மேன்மையைச் சொல்வதும் அவச்யமாகிறது. அவர்கள் உபதேசித்தபடியே நான் உபதேசிக்கப் போகிறேனென்று ஸாம்ப்ரதா

अध्यात्म-रहस्यங்களைச் சொல்லுமவன் संप्रदायமின்றிக்கே யிருக்க ஏடு பார்த்தாதல் சுவரேறிக் கேட்டாதல் சொல்லுமாகில், களவுகொண்டு आभरणம் பூண்டாற்போலே கண்டார்க்கெல்லாம் தான் அஞ்சவேண்டும்படியாம்: 'यदृच्छया श्रुतो मन्त्रश्छन्नेनाथ च्छलेन वा । परेक्षितो वा व्यर्थः स्यात् प्रत्युतानर्थदो भवेत् ॥' इत्यादिகளிற்படியே प्रत्यवायपर्यन्तமுமாம்.

---

யிகத்வத்தை உறுதிப்படுத்தவுமிப்படி தானே சொல்லவேண்டும்; ஆகையால் ப்ரதிதினம் செய்யும் அநுஸந்தாநம் முன் சொன்னது: அவ்வநுஸந்தானத்திற்காகவும் குருபரம்பரையின் விசேஷஜ்ஞாநத்திற்காகவும் விஷயம் அதே என்பதற்காகவும் முன்னம் ஆசார்யன் சிறிது சிஷ்யனுக்கு அறிவிப்பது அவச்யமென்பது இப் பராசரவாக்யத்தால் விளங்குகிறது. இதுகூட ஸ்வாசார்யனை ஆரம்பித்துப் பரமத்மாவரையிலே யிருக்க வேண்டுமென்பதற்கு ப்ரமாணமில்லையாகையால் அவரவர்களுக்கு ருசித்தபடியாகலாமென்றிவ்வளவு தான் இங்கே தேறும். இதே ஸாராஸ்வாதிநிக்கு அபிமதமாகும். பகவான்முதல் ஸ்வாசார்யன்வரையிலநுஸந்தானபக்ஷத்திற்கு ஸாராஸ்வாதிநி அநுகூலமென்பது அஸ்பஷ்டமாகும்: संनिधिயில் வேறுபாடு एतद्गुरु अर्चामूर्तिसंनिधानமதிப்பால் போலும்.

गुरुपरम्परासंप्रदायமின்றி உபதேசித்தால் பல அநர்த்தங்களென்னப் போகிறாராய் அதற்கு த்ருஷ்டாந்தமாக அஸாம்ப்ரதாயிகமாகச் சொன்னால் உள்ள தோஷங்களையும் கூறுகிறார் अध्यात्मेति. ஸம்ப்ரதாயமின்றிக்கே = गुरूपदिष्टமாகாமல். உபதிஷ்டமாகாமற் போனால் இவனுக்கு எப்படி தெரியுமென்ன உத்தரம் ஏடு இத்யாதி. ஏடுபார்த்தல்—தானே கோசத்தைப் படிப்பது. சுவரேறக் கேட்பதாவது ஒருவர் தன் சிஷ்யனுக்கு உபதேசம் செய்யும்போது நடுவிலே சுவரிருக்க அவருக்குத் தெரியாமல் அவர் சொல்வதைத் தான் கேட்டுத் தெரிந்துகொள்ளல். அஞ்சவேண்டுமிறே. களவு கொண்டவன் இதைப் பூண்டு வெளியில் சென்றால் தன்னைக் காணும் எவரைக் கண்டாலும் இவர்களில் யாராவது இதை முன் அறிந்தவராயிருந்து தான் களவு கொண்டதாகக் கண்டுவிட்டால் என்னவாமோ என்றஞ்சுவான்; ஏடு பார்த்துச் சொல்வதில், நான் க்ரஹித்தது வேறாயிருக்குமோவென்று அச்சம். சுவரேறக் கேட்டவிடத்தில், யார்மூலம் இது அறியப்பட்டதென்று கேட்டால் இன்னாரிடமென்று சொல்லமாட்டாமையால் அச்சம் தான் கூறியதற்கு ப்ரமாணம் கூறுகிறாராய் வேறுவிதம் அறிவது பாபமுமாகுமென்று காட்டுகிறார் यदृच्छयेति. यदृच्छया—தான் எதிர்பாராமலிருக்கும்போதே அதுவாக நேர்ந்ததால். मन्त्रः என்பது ரஹஸ்யமாய் அறியவேண்டியவற்றிற்கெல்லாம் உபலக்ஷணம். छन्नेन—மறைந்திருப்பவனாய்; छलेन—பரீக்ஷாதிவ்யாஜத்தாலே; परेक्षितः—ஏட்டில் காணப்பட்டதாகில்; प्रत्युत—இதற்கும் மேலாக; இஷ்டஹாநியோடு அநிஷ்ட ப்ராப்தியுமென்றபடி.

முன் ப்ரகரணத்தாலேயே சிற்சில வகையில் கேட்பது அநுசிதமென்று தெரிந்தது; எந்த முறையில் கேட்க வேண்டுமென்பதை விவரிக்கிறார்

கேட்டுச்சொல்லச்செய்தே 'तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया।', 'प्रणिपत्याभिवाद्य च' इत्यादिகளிற் சொல்லுகிற முறை யொழியக் கேட்டுச் சொல்லுமாகில் காலன் கொண்டு आभरणம் பூண்டாற் போலே கண்டாரெல்லாரும் தன்னை அருவருக்கும் படியாம்.

'यश्चाधर्मेण विब्रूते यश्चाधर्मेण पृच्छति । तयोरन्यतरः प्रैति विद्वेषं वाऽधिगच्छति ॥'

என்கிறபடியே अनर्थपरமுமாம்.

यथान्यायம் கேட்டுச் சொல்லச் செய்தே சொல்லும்போது गुरुவைப் प्रकाशिப்பியாதொழியுமாகில், இவன் சொல்லுகிற अर्थங்கள் வேரில்லாக் கொற்றான்போலே அடியற்றவையோ என்று शिष्यனுக்கும் अतिशङ्कै பிறக்கும்

---

கேட்டு இதி. अनर्थ... என்பதற்கு दृष्टरीதியிலும் अदृष्टरीதியிலும் தோஷம் வருமென்று பொருள். அதை விவரிக்கிறார் காலன் இதி கால புருஷனை दानமாக வாங்கி அந்த த்ரவ்யம் மூலமாக ஆபரணம் பண்ணி அணிந்தாற் போல் என்றபடி; அருவருக்கை = நிந்தை-ஜுகுப்ஸை. இதையே, காலன் கொண்டு மோதிர மிடுமா போலே (5 8-3). காலன் கொண்டு மோதிரமிடுவாரைப் போலே (10-3-6), காலன் கொண்டு மோதிரமிடுமோபாதியாக (நாச் திரு10-5) என்றெல்லாம் கூறியுளர். காலபுருஷதானமென்றே பொருள் பெரும்பாலும் உரைகளிலுள்ளது. காலன் என்ற சொல் யமனைச் சொல்வது; யமனின் ப்ரீதிக்காகச் செய்யும் தானம் காலனென்ற சொல்லின் பொருளாக அகராதி கூறும். எருமைக்கடா தானம்வாங்கி அதை விற்றுப் பெற்ற த்ரவ்யத்தால் மோதிரம் செய்தணிவதே இதன் பொருளென்பராய் சிலர், ஆபரணமென்று பொதுவாகப் பணித்தல் பிசகென்பர். அப்போது கடா என்று கூறாமல் காலனென்று பொதுவாக எல்லோரும் சொன்னதும் பிசகாகும்; 'கண்டார் அருவருப்பதென்று சொன்னது தவறு: தானே வருத்தப்பட்டழியவேண்டும்; அதற்காகவே தான் கண்ட வண்ணமிருக்க மோதிரமாக அணிவது' என்றும் வாதிப்பர். அந்த எண்ணமுள்ளவனாகில் மோதிரத்தையே விட்டெறிவானே. தகாத தானமும் வாங்கிப் பெற்றதால் அதைப் பற்றினால் அழியாமைக்காக, மோதிரமாக்கி அணியாமல் அதிக த்ரவ்யம் பெற்றதற்குத் தக்கவாறு, வேறு ஆபரணம் செய்வதில் என்ன குற்றமோ? காலன் வாங்கிப் பெற்ற த்ரவ்யமென்று சிலர் மூலம் அறிந்துள்ள கண்டோரெல்லோரும் அருவருப்பது நேராதென்றுதான் சொல்லவாகுமோ? எல்லாம் அஸூயையின் கனத்தாலேற்பட்ட ஆபாஸ தூஷணங்கள். यश्चेति.मा.शां.335–5, எவனொருவன் अधर्मेण-முறை தப்பி विब्रूते-ப்ரவசநம் செய்கிறானோ: यः पृच्छति—எவன் ப்ரவசநம் செய்யக்கேட்கிறானோ: तयोः अन्यतरः அவர்களில் ஒருவன் प्रैति மரணமடைகிறான் அல்லது த்வேஷிப்பவனாகிறான். இதுபோல் ப்ரக்ருதமான गुरुप्रकाशनமில்லாமைக்கும் दोषம் கூறுகிறார் यथान्यायமிதி. வேரில்லாக் கொற்றான் = பூமியில் வேரின்றி அந்தரத்தில் வாழைமுதலானவற்றில் இலையுமின்றி படரும் ஒருவகைக் கொடியை கொற்றான் என்பது. அடியற்றவை = ஆதாரமில்லாதவை. एवेति. தன் ஆசார்ய

படியாய் अनादरविषयமாம். 'स्वगुरूणां स्वशिष्येभ्यः यथापर्न स्वाकृतं तथा' என்று द्वात्रिंशदप चारவர்க்கத்திலே गुरुவைப் प्रकाशிப்பியாதொழிகையும் படிக்கப்பட்டது. அப்போது

'गुरुं प्रकाशयेत् धीमान् मन्त्रं यत्नेन गोपयेत् । अप्रकाशप्रकाशाभ्यां क्षीयेते संपदायुषी ॥'

என்கிறபடியே ज्ञानवैशद्यपूर्वकமான भगवदनुभवसंपத்தும், ஆத்மாவுக்கு स्वरूपानु-वृत्तिहेतुவான शेषत्वानुसन्धानपूर्वकस्वनिष्ठैயும் குலையும் படியாம்.

गुरुவைப் प्रकाशिப்பியாதிறக்கச்செய்தே அவன் பண்ணின शास्त्रीय-उपदेश த்துக்கு विरुद्धம் சொல்லுமாகில்—विप्रलम्भकனென்று பேருமாய்

'ज्यौतिषं व्यवहारं च प्रायश्चित्तं चिकित्सनम् । विना शास्त्रेण यो ब्रूयात् तमाहुर्ब्रह्मघातकम् ॥'

என்கிறபடியே पापिष्ठனுமாம்.

सच्छिष्यனுக்கு प्राप्तदशैயில் उपदेशத்தைத் தவிருமாகில் लुब्धனென்று பேரு மாய் 'पात्रस्थमात्मज्ञानं च कृत्वा पिण्डं समुत्सृजेत् । नान्तर्धाय (नं)स्वयं (यथा)याति जगद्बीजमबीजकृत् ॥'

---

களைப் பற்றித் தன் சிஷ்யர்களுக்குச் சொல்லாமை முப்பத்திரண்டு அபசாரங் களில் ஒன்றான அபசாரமாகும். மூன்றாவது தோஷம் கூறுகிறார் அப்போது இதி. குருபரம்பராஸாரத்திலெடுத்த இச்லோகத்தில் संपत् आयुः என்ற சொற்களுக்கு அர்த்தத்தை யருளுகிறார் ज्ञानेति. आयुस्ஸாவது स्वरूपानुवृत्तिः அதன் காரணமான நிஷ்டை இங்கு आयुस्ஸாகும்.

गुरुप्रकाशनம் அசாஸத்ரீயமான அர்த்தம் சொல்வதற்காகக்கூடாதென்றறி விக்கிறார் குருவை இதி. சாஸ்த்ரீய உபதேசத்துக்கு இதி. சில ஸமயம் गुरुவே प्रौढिவாதமாய் சாஸ்த்ரீயத்தைச் சரியாகச் சொல்லாமலிருந்தால் அந்த விட த்தில் गुरूक्तिவிருத்த மானாலும் சாஸ்த்ர விரோதமில்லையாகில் குற்றமில்லை. विप्रलम्भकன்= வஞ்சகன். ज्यौतिषमिति. ஜ்யோதிச்சாஸ்த்ரவிஷயம். ராஜநீதிஸ்த்த லங்களில் விசாரிக்கப்படுமது, பாபத்துக்குச் செய்யும் ப்ராயச்சித்தம், வைத் யம் இவற்றை சாஸ்த்ரம் மீறிச் சொல்பவன் ப்ரஹ்மஹத்யை பண்ணியவனு வான். அப்படியிருக்கும்போது ஸர்வதோஷபரிஹாரமான ब्रह्मविद्यैயை சாஸ்த்ர விருத்தமாகச் சொல்வது மஹாதோஷமாகும். இது போல் தகுந்த பாத்ரம் கிடைத்த போது உபதேசியாமையில் लुब्ध னென்பது एष दोषः; अदृष्टदोषम् पात्रेति. பௌஷ்கரம் (1-44). தன்னிடத்திலுள்ள ஆத்மவிஷயமான அறிவை அல்லது சாஸ்த்ரத்தை ஸத்பாத்ரத்தில் விதைத்துவிட்டு சரீரத்தை விட வேண்டும் अबीजकृत्-முளையை யுண்டுபண்ணாதவனாய்; உலகுக்கு உதவும் விதை யான ஞானத்தைத் தன்னுள்ளே மறைத்துக் கொண்டு போகலாகாது. नान्त-र्धाय यथा याति என்ற பாடத்தில் எப்படி மறைத்துக் கொண்டு போகாதோ அப்படி பாத்ரஸ்த்தமாக்கி சரீரத்தை விட வேண்டுமென்று பொருள்; नान्तर्धायं यथा याति என்ற பாடத்தில் बीज மென்றது प्रथमाविभक्ति अबीजकृत् என்பதற்கு விசேஷ்யம் உலகுக்கு விதையான ஞானமானது முளையை யுண்டுபண்ணமல் எப்படி மறைதலையடையாதோ அப்படி யென்று பொருள்.

ஆசார்யன் உபதேசிக்காத சிலவற்றைத் தான் भाग्य வசத்தால் அறிந்த

என்கிற भगवन्नियोगத்தையும் கடந்தானும்.

ஆகையால் விளக்குப் பிடிக்குமவன், தன்னை ராஜா ஒரு கார்யத்துக்குப் போகச் சொன்னால் தன் கையில்விளக்கை அதுக்குப் प्रधानர்கையிலே கொடுத்துப் போமாப்போலே स्वप्रधानர்க்குத் தான் சொல்லும்போது தனக்கு उपदेशिக்க ஆசார்யனை முற்பட வெளியிட்டுப் பின்பு தனக்கு उपदिष्टமான अर्थங்களையே சொல்லவும், சில कारणங்களாலே दिव्यचक्षुःश्रोत्रங்கள் பெற்றுத் தான் இவற்றாலே அறிந்து சொல்லுமவற்றையும்

'व्यासप्रसादात् श्रुतवान् एतत् गुह्यमहं परम्। योगं योगेश्वरात् कृष्णात् साक्षात् कथयतः स्वयम्॥'

என்கிறபடியே "सदाचार्यप्रसादமடியாக இவ் अर्थமறிந்தேன்; என் கைமிடுக்காலே அறிந்து சொல்லுகிறேனல்லேன்" என்ற இவ்வுண்மையை வெளியிட்டுக்கொண்டு சொல்லவும் பெறில்— இவன் சொல்லும் अर्थங்களெல்லாம் सर्वர்க்கும் आदरणीयங்களுமாய், இவன் कृतज्ञனாயிருந்தானென்று सात्त्विकரும் प्रशंसिத்துப் प्रवादिக்கும் படியுமாய், सत्यवादियायிருந்தானென்று उपनिषत्துக்களும் औपनिषदपरमपुरुषனும் தங்களோடொக்க இவனைப் प्रमाणभूतனென்று आदरिக்கும் படியுமாம். இப்படிக் कृतज्ञனாய் अनुहितனான शिष्यனைப் பற்ற நாம் செய்த க்ருஷி फलित्ததென்று ஆசார்யனும் कृतार्थனாயிருக்கும்.

---

சிஷ்யன் அங்கே ஆசார்யப்ரகாசநம் செய்வதெங்ஙனேயென்ன, அவையும் ஆசார்ய प्रसादத்தாலே வந்தவையென்ன வேண்டுமென்கிறார் ஆகையாலிதி. இங்கு மற்றது उक्तांशानुवादமாகும். விளக்கு இதி. प्रदिशति निरपायं संप्रदायप्रदीपम् என்றதற்கு இது விவரணமாகும், அர்த்தங்களையே சொல்லவும் என்பதற்கு பெறில் என்பதோடு அந்வயம் பெறில் = ஆனால்; दिव्यचक्षुःश्रोत्रங்கள் இதி. दिव्यं ददामि ते चक्षुः என்று அர்ஜுநனுக்குக் கண்ணன் திவ்ய சக்ஷுஸ்ஸை யளித்தார். ஸஞ்ஜயருக்கு வ்யாஸர் திவ்யசக்ஷுஸ்ஸையும் दिव्यமான செவியையும் அளித்தார். அதனால் तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः என்றபடி விச்வரூபதர்சநமும் அவர் செய்த உபதேசத்தின் ச்ரவணமும் கிடைத்தது. அதற்கு ஆசார்ய ப்ரஸாதமே காரணம். அது போல் சிஷ்யர்களிடம் ஆசார்யர் சொல்லாமற் போனாலும் தமக்குச் சில விசேஷங்கள் வந்தபோது ஆசார்ய அநுக்ரஹமே காரணமென்று விச்வஸிக்க வேண்டும். சிஷ்யனுக்கு குணமிருப்பதால் வரும் பலனைக் கூறுகிறார் இவன் சொல்லும் இதி. கைமிடுக்கு' மிடுக்கு = வலிமை. கையென்பது உபஸர்க்கம்; பொருளில்லை. औपनिषद = உபநிஷத்ப்ரமாணஸித்தனான; ப்ரமாணभूतன் = 'सद्योगव्यवच्छेदः प्रामाण्यम्' என்றபடி ஈச்வரன் போல் திடமான ஜ்ஞாநமுடையவன்; விச்வஸிக்கத் தகுந்தவன்; உபநிஷத்துப்போல் ப்ரமையையுண்டு பண்ணுகிறவனுமாம். உபநிஷத்து ஆதரிப்பதாவது—आचार्यद्धैव विद्या இத்யாதியில் आचार्य பதத்தால் இவனையும் கொள்கை.

ஆசார்யபதத்திற்கு उपनीय तु यः शिष्यम् இத்யாதி விசேஷமுள்ளவனென்ற பொருள் ஸர்வஸம்மதம். பரந்யாஸம் ஒருவனுக்காகச் செய்தால் அவரையும்

साक्षान्मुक्तेरुपायान् यो विद्याभेदान् उपादिशत्। कथ्यते मोक्षशास्त्रेषु स तु श्रेष्ठतमो गुरुः ॥
आचार्यवत्तया मोक्षमामनन्ति स्मरन्ति च। इहामुत्र च तत्पादौ शरणं देशिका विदुः ॥

ஏற்றி மனத்தெழிள் ஞான விளக்கை யிருளனைத்தும்
மாற்றினவர்க்கொரு கைம்மாறு மாயனுங் காணகில்லான்.
போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ்
சாற்றி வளர்ப்பதுஞ் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே.

---

ஆசார்ய னென்று வழங்குவர் இங்கு முக்யமாக ஆசார்யசப்தத்தால் கொள்ளக் கூடியவர் யா ரென்பதையும் அவருக்கே உத்கர்ஷத்தையும் அருளுகிறார் साक्षात् இதி. மந்த்ரம் அங்கம்; பக்தி ப்ரபத்திகள் அங்கி; மோக்ஷத்திற்கு ப்ரதானகா ரணமான பக்தி, ப்ரபத்தி யென்கிற வித்யாவிசேஷங்களை முறையுடன் முதன் முதல் உபதேசிப்பவர் மோக்ஷத்தைச் சொல்லும் சாஸ்த்ரங்களிலே எல்லோ ருக்கும் மேலான குருவெனப்படுகிறார். ஆசார்யஸம்பந்தத்தாலேயே ஜீவனு க்கு மோக்ஷத்தைச் சொல்லும் आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत् இத்யாதி ச்ருதிகள். आचार्यवत्तया मुक्तौ तस्मादाचार्यवान् भवेत् இத்யாதி ஸ்ம்ருதிகள். ஒரு வித்யையினால் மோக்ஷம் பெறுகிறவனும் வேறு ப்ரஹ்மவித்யைகளையும் அறி வது உபநிஷத் ப்ரஸித்தம். அதை உபதேசிப்பவரும் ஆசார்யரே. பக்தியை யநுஷ்டிக்கும் வ்யாஸர் ப்ரபத்திக்கும் ஆசார்யரே. பரந்யாஸம் ஓரிடத் திலாகி, வேறிடத்தில் विद्याग्रहणம் செய்தாலும் विद्यै உபதேசிப்பவர் ஆசார் யரே. ग्रन्थचतुष्टयத்தில் ஒவ்வொரு க்ரந்தம் போதிப்பவரும் ஆசார்யரே எல்லாம் ப்ரஹ்மவித்யாவிஷயமே. அவர்களில் தாரதம்யம் அவரவர்மனஸ்ஸாக்ஷிக்கே அறிய வேண்டியதாகும். तत्पादौ—இவ்வாசார்யன் திருவடிகளை. எங்கும்— பரமபதத்திலும், சரணம்—உபாயமும் உபேயமுமாக देशिकाः—ஆசார்யர்கள் 'नाथाय नाथमुनयेऽत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयम् என்றெல்லாம் அறி விக்கின்றனர். ஆக ப்ராசார்யாதிகளும் ஆசார்யச் ரேஷ்டரேயாவர்.

முக் கரணங்களாலும் ஆசார்யனைப் பெருமை படுத்துவது சிஷ்யக்ருத்யம்; ஆனால் அதை ப்ரத்யுபகாரமாக நினைக்கக் கூடாதென்கிறார் பாசுரத்தால். ஏற்றி இதி. மனத்து—சிஷ்யனுடைய மனதில் எழில் ப்ரகாசமான ஞானம் விளக்கை— ஜ்ஞானமாகிற தீபத்தை ஏற்றி அஜ்ஞானவிருளை யெல்லாம் மாற்றின ஆசார் யருக்கு—ஒரு கைம்மாறு=ஏதேனும் ப்ரத்யுபகாரத்தை மாயனும்=ஸர்வஜ் ஞனாய் ஸர்வஸ்ரஷ்டாவான பரமாத்மாவும் காணமாட்டான். இருந்தால் தானே எல்லோரும் காண்பது. போற்றி உகப்பதும்=प्रत्यक्षे गुरवः स्तुत्याः என்ற படி जय विजयी भव என்று புகழ்ந்து அதனால் உள் மகிழ்வதும், புந்தியில்—தன் புத்தியில் கொள்வதும்=த்யானம் செய்வதும் பொங்கு=மேன் மேல் வளரும் புகழ்=குணப்ரசஸ்திகளை சாற்றி—உலகே யறியும் படி உத்கோஷித்து வளர் ப்பதும்=வ்ருத்தி செய்வதும்; இது कायिक प्रणामपूजनादिகளுக்கு உபலக்ஷண மாகும். இவைகளெல்லாம் முன்னம் பெற்றதற்கே=இதற்கு முன்னுகவே சிஷ்யன் பெற்றிருக்கிற परिपूर्णब्रह्मानुभवहेतुविद्यैக்கு. சற்று அல்லவோ—

अध्यासीनतुरङ्गवक्त्रविलसज्जिह्वाग्रसिंहासनात् आचार्यादिह देवतां समधिकामन्यां न मन्यामहे
यस्यासौ भजते कदाचित् अजहद्भूमा स्वयं भूमिकां मग्नानां भविनां भवार्णवसमुत्ताराय नारायणः ॥

इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारे शिष्यकृत्याधिकारः एकत्रिंशः ॥ 31
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

—o—o—

---

மிகவும் அல்பமானவைகளாமே. ஆக ப்ரத்யுபகாரமாகமாட்டா. இவ்வளவு செய்வதும் இவன் நிஷ்டை குலையாமைக்காகவே யென்றபடி. சிஷ்யக்ருத்யாதிகாரமாகையாலே சற்றல்லவோ என்றதால் இவ் அநுஸந்தாநமுமொரு சிஷ்யக்ருத்யமென்றதாம்.

**यथा देवे तथा गुरौ**', '**देवमिवाचार्यमुपासीत**' என்கிற வாக்யங்களில் **देवन्** உபமாநமாக ஆசார்யன் உபமேயமாகத் தோற்றுவதால் உபமாநத்துக்கு உத்கர்ஷம் ஸஹஜமாகையால் ஆசார்யனை தேவனை விடக் குறைவாக நினைக்க வாகுமென நினைத்து அது நகாதென்கிறார் **अध्यासीनेति**. உலகில் தேவதையை உபாஸிப்பதே ப்ரஸித்தமாகையால் அதைக் காட்டி அதற்குக் குறையாமல் ஆசார்யோபாஸனம் வேண்டுமென்றது அதனால் சேஷனான ஆசார்யனுக்கு ஒருவிதத்திலுள்ள ஏற்றமும் ஸத்யமாகும். முதற்பதத்தில் **अध्यासीन विलसत्** என்கிற பதங்களில் ஏதேனுமொன்று போதுமே யென்ன வேண்டா; **अध्यासीन तुरङ्गवक्त्र** என்பது பஹுவ்ரீஹிஸமாஸமாய் ஸிம்ஹாஸநவிசேஷணம். ஹயக்ரீவன் எழுந்தருள்வதற்கு முன்னமே நாக்குக்கு ஸ்வபாவமாய் வ்யவஹாரஸாமர்த்யரூபவிலாஸமுள்ளமை **विलसत्** என்பதால் அறிவிக்கப் பெறும். ஆக **अध्यासीन**—இதன் மேல் வீற்றிருக்கிற **तुरङ्गवक्त्र**—ஹயக்ரீவனை யுடையதான **विलसत् जिह्वा अग्र**—இயற்கையாய் வ்யவஹார நிர்வாஹஸாமர்த்ய முள்ள நாக்கின் நுனியாகிற **सिंहासनात्**—சிங்காசனத்தை யுடைய **आचार्यात्**—ஆசார்யனைக்காட்டிலும் **इह**—இவ்வுலகில் **अन्यां देवतां** வேறான ச்ரிய:பதியான தேவதையை **समधिकां**—மேம்பட்டதாக **न मन्यामहे**—நாம் நினையோம். அதற்குக் காரணம் கூறுகிறார் **यस्येति**. **स्वयं**-தான் **अजहद्भूमा** = தன்னை யெப்போதும் விடாததான பெருமை பொருந்திய **असौ** = அந்த தேவதையான **नारायणः** = நாராயணன் **मग्नानां**-மூழ்கியிருக்கும் **भविनां** = ஸம்ஸாரிகளை **भव अर्णव समुत्ताराय**-ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேற்றுவதற்கு **यस्य भूमिकां**—எந்த ஆசார்யனுடைய வேஷத்தை (உருவத்தை) **कदाचित्**—வேண்டும்போது **भजते**-அடைகிறானோ—ஆசார்யனுடைய நாக்கின் நுனியானது விசேஷ விலாஸமுள்ளதாயிருப்பதைக் கண்டு இது நமக்குச் சிங்காசன மாகத் தகுமென்று ஹயக்ரீவன் அங்கே வீற்றிருக்கிறான். இதனால் ஹயக்ரீவன் வேறு, ஆசார்யன் வேறென்று தெரிகிறது—ஆசார்யனும் அவனும் ஒன்று என்ற பக்ஷமாகில் உபமாந உபமேய பாவம் கூடாதென்று நீங்கள் நினைத்த படியே யாகட்டும். அதனால் அந்த தேவதையை உத்க்ரு

श्रीः

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

निगमनाधिकारः 32

நிகமநாதிகாரம்-32

करबदरितविश्वः कश्चिदाचार्यदृष्ट्या मुषितनिखिलमोहो मूलमन्त्रादिभोगः ।
सगुणविषयसिद्धौ संप्रदायं प्रयच्छन् सुचरितसिलहारी सूरिबृन्दाभिनन्द्यः ॥

---

ஷ்டமாக நினைக்க வேண்டா. வாக்தேவதையான ஹயக்ரீவனைத் தம் வாய்க்கு உட்படுத்தி யிருக்கும் ஆசார்யனே உத்க்ருஷ்டனாவான். இதை வேறு வித மாகவும் விவரிப்போம்-ராமக்ருஷ்ணாதி ரூபமாகப் பல அவதாரங்கள் செய்கிற வனும் எவ்வித அவதாரத்திலும் எவ்வித குறைவு மற்றவனுமான அந்த நாரா யணனே ஸம்ஸாரிகளை உஜ்ஜீவிப்பிக்க நேராக மோக்ஷவித்யாப்ரதாநம் பண் ணமாட்டாதவனாய் साक्षान्नारायणो देवः कृत्वा मर्त्यमयीं तनूम् என்கிறபடி ஆப்த ஆசார்ய வேஷத்தைக் கொண்டு அக் கார்யம் செய்து முடிக்கிறான் அவன் ஆசார்யவேஷத்தைக் கொண்டே அக் கார்யம் செய்ய முடிவதால் ஆசார் யனுக்கு உத்கர்ஷம் தேறும். ஜாயமாந கடாக்ஷம், கரண-कलेबरங்களைக் கொடுப்பது முதலானவற்றை விட மிகச் சிறந்ததாகும் मोक्षविद्याप्रदानம்; இது ஆசார்ய மாத்ரஸாத்யமென்றபடி. देवमिव என்ற इवकारம் முன்னமே யுள்ள தேவோபாஸநத்திற்குக் குறைபாதபடி அத்துடனே ஆசார்யோபாஸனம் வேண்டு மென்பதற்காகவே யாகும்.

சிஷ்யக்ருத்யாதிகாரம் முற்றும். (31)

ஸ்ரீமதே நிகமாந்தகுரவே நம:

நிகமநாதிகாரம் 32

உபோத்காதாதிகாரம் தொடங்கி இதுவரை உபதேசித்தவற்றைத்திரட்டி யொன்றாக்கி அதின் பலனை (நிகமநம் முடிவு) இதில் காண்பிக்கிறார் அத னைச் சுருக்கி ச்லோகத்தில் அருளுகிறார் करेति. कश्चित्-விசேஷஜாயமாநகடாக்ஷம் பெற்ற ஒருவன் आचार्यदृष्ट्या—குருபரம்பராஸாரத்திற் கூறியபடி ஸம் ப்ரதாயமாக உபதேசிக்கும் ஆசார்யனை அணுகியதால் அவருடைய கடாக்ஷத் தினால் முதலில் करबदरितविश्वः—அர்த்தாநுசாஸநபாகத்தில் சொல்லப்பட்ட எல்லாம் உள்ளங்கையிலந்தைக்கனியாக்கப்பட்டிருப்பவனாய்—உள்ளங்கை யில் வைக்கப் பட்ட இலந்தைக்கனி நன்குக் காணப் படவும் கைக்குள் அடக் கப்படவு மாவது போல் ஸர்வார்த்தங்களையும் தன்னுடைய புத்திக்குட் படுத்தி விசதமாகப் பெறவானவனா யென்றபடி. அதன்பிறகு मुषितनिखिलमोहः- ஆசார்யத்ருஷ்ட்யா என்கிற பதம் எல்லா விசேஷணங்களிலும் அந்வயிக்கும். ஸத்திரீகரணமாகார்த்தம் அறிந்ததாலே உபாயவிஷயமாய் குதர்க்க மூல மான மோஹங்களெல்லாம் போக்கடிக்கப்பட்டு, பிறகு पद्वाप्यप्रयोजनाभाव मூலமாக मूलमन्त्रादिभोगः—மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தாநுபவமாகிற

1. இப்படி—இஜ் ஜீவாத்மா ஸூரிகளோடொக்க भगवदनुभवरसத்துக்கு स्वरूपयोग्यனாய்வைத்து अनादिकालம் இழந்து ஒரளவிலே புரிந்து सदाचार्यसंबन्धமுண்டாய்த் तत्त्वहितங்களை அறியத் தொடங்கின படியும்—

2 இவற்றை அறிவிக்கும் प्रमाणங்களில் ரஹஸ்யத்ரயம் सारतमமான படியும்,

3 இவற்றைக்கொண்டு அறியும் अर्थங்களில் ईश-ईशितव्यங்களினுடைய शरीरात्मभावसंबन्धादिகள் प्रधानप्रतितन्त्रமாய் ज्ञातव्यங்களான படியும்.

4. இஸ் संबन्धத்தோடேகூட ज्ञातव्यமாகப் पूर्वाचार्यसंगृहीतமான अर्थपञ्चकம் रहस्यत्रयத்தில் கிடக்கும் படியும், 5 இவ் अर्थपञ्चकத்துக்குள்ளே तत्त्वत्रयादि—विभागचिन्तै பண்ணுவார்க்குத் தாத்பர்யமும், 6 இத் तत्त्वत्रयத்தில் ईश्वरனை सात्विकशास्त्रங்களிற் சொல்லப்பட்டவன் श्रियःपतियென்னுமிடமும், 7 இவ் अर्थங்களெல்லாம் தெளிந்தவன் முமுக்ஷுவாய் मोक्षोपायोन्मुखனும் படியும். 8 अधिकारिविभागமும்—9 இவ் अधिकारिகளுக்கு अनुरूपமான उपायविभागமும்— 10, இவ்வுபாயங்களில் स्वतन्त्रप्रपत्तिनिष्ठனுக்கு अधिकारविशेषம் இருக்கும் கட்டளையும்—11 सकृत्कर्तव्यமான இவ்வுபாயத்துக்கு अनुरूपமாக विहितமான

---

போகத்தை யுடையனாய் सुगुणविषयसिद्धौ-நல்ல குணங்களை யுடைய-ஸத்பாத்ர மான சிஷ்யன் கிடைத்த போது संप्रदायं =குருபரம்பராமூலமாக ஆசார்ய க்ருத்யத்தால் கிடைத்த அர்த்தத்தை प्रवचन्—தன் வாழ்நாளில் உபதேசம் செய்கின்றவனாய், அவ்வளவில் த்ருப்தியடையாமல் இந்த நிகமநாதிகாரத் திற் சொல்லப்போகிற படி सुचरितशिलहारी—உலகிலுள்ள பல பெரியோர் களின் ஸதாசாரங்களாகிற शिल—தனித்தனியே சிந்தியிருக்கும் தானியங் களை हारी-பகவதாராதநத்திற்காகக் கொள்ளுகின்றவனாய் सूरिवृन्द अभिनन्द्यः- இங்கே மஹான்களாற்போல் நித்யஸூரிகளுடைய திரளாலும் கொண் டாடத் தகுந்தவனாவான். உபதிஷ்டமான அர்த்தங்களை யெல்லாம் தன் அநுஷ்டாநத்திற்குக் கொண்டுவருகிறவன் தனக்குமுன் தெளிந்து அநு ஷ்டித்துவரும் பெரியோர்களுடன் பழகி விசேஷங்களை யறிந்து தெளிவு பெற்று முடிவுவரையில் பெரியோர்களால் கொண்டாடப்பட்டு நித்ய ஸூரிகளும் எதிர்கொண்டழைக்கும் படியாகி எம்பெருமான் திருவடிகளில் சேர்ந்து எம்பெருமானுக்கு போக்யனாவா னென்றபடி.

இப்படி யென்ற முதற்சொல்லுக்கு முடிவில், எல்லாம் உபபாதித்தோம் என்ற விடத்தில் அந்வயம். நடுவில் அடைவாக 31 அதிகாரங்களின் அர்த்தச் சுருக்கம். ஒக்க=ஸமாநமாக. யோக்யனாய்வைத்து=யோக்யனாயிருந்து; ஒரள விலே புரிந்து='நீ சொன்னது புரிந்தது' என்ற விடத்திற்போல் புரிதல்— விளங்கல். புரிந்து—விளங்கி; தேஹாத்மாபிமானம் நீங்கி வெளிச்சிறப் புற்று. தொடங்கின படியும் என்ற வரையில் உபோத்காதாதிகாரார்த் தம். படி=ப்ரகாரம்; ஒவ்வொரு உம்மையில ஒவ்வொரு அதிகாரார்த்தம் முடியும். எல்லா உம்மைக்கும் எல்லாம் என்பதோடு அந்வயம். கிடக்கும் படியும்= எந்தெந்த சொற்களில் குறிக்கப்படுமென்பதையும். என்னுமிட

परिकरविभागமும்—12 முமுக்ஷுவுக்கு अनुरूपமான अन्यासङ्गप्रधानकर्तव्यத்தினுடைய सन्निवेशம் இருக்கும் படியும்—13 இப்படி साङ्गप्रपदनानुष्ठानம் பண்ணினவன் सर्वेश्वराधिकृतன் பக்கலிலே न्यस्तभरனாகையாலே कृतकृत्यனும் படியும், 14 இந் निष्ठै தனக்குப் பிறந்தமை கண்டு தான் தேறியிருக்கைக்கு அடையாளங்களும், 15 இவனுக்கு प्रारब्धशेषத்தாலே சரீரம் अनुवर्तिத்தாகில் இங்கிருந்த காலத்துக்கு ஸ்வயம்ப்ரயோஜனமாய் स्वरूपप्राप्त—शेषवृत्तिரூபமான கைங்கர்யம் இருக்கும் படியும், 16 भगवत्कैङ्कर्यத்துக்கு எல்லைநிலம் भागवतकैङ्कर्यமான படியும், 17 शासिताவான स्वामिக்கு अभिमतமல்லாதது कैङ्कर्यமல்லாமையாலே यथाशास्त्रம் கைங்கர்யம் अनुष्ठिக்கவேண்டின படியும், 18 இச் शास्त्रीय—कैङ्कर्य—प्रवृत्तனுக்கு अपराधங்கள் புகாமைக்கும் புகுந்தவை கழிக்கும் விரகுகளும், 19 இந் निरपराध—कैङ्कर्यத்துக்கு स्थानமாக अनापத்தில் उचितமாவது भागवत—आश्रितமான भगवत्क्षेत्रமென்றுமிடமும், 20 இப்படி இருந்த இவ் अधिकारिக்கு शरीरसम्बन्धविशेषத்தாலே प्रशस्तदेश-कालादि—नियति निरपेक्षமாக स्थूलशरीरத்தினின்றும் निर्गम மிருக்கும் படியும், 21 இப்படிப் புறப்பட்டால், पिता यौवराज्यத்துக்கு முடிசூட்ட அழைத்துவரவிட்ட ராஜகுமாரன் போமாப்போலே பெரிய மேன்மையோடே परमपदपर्यन्तமான अर्चिरादिमार्गத்தாலே போம்படியும், 22 இப்படிப் போனால் அங்குப் பிறக்கும் स्वच्छन्दकैङ्कर्यपर्यन्त—परिपूर्णानुभवरूपமான मुक्तैश्वर्यமிருக்கும்படியும்—

23 இப்படி उक्तமான उपायங்களில் प्रधानமான सिद्धोपायத்தையும் 24 कर्तव्यங்களில் प्रधानமான साध्योपायத்தையும் இவ் उपायनिष्ठனுடைய प्रभावத்தில் शास्त्रங்களிசையாத 25 ஏற்றச் 26 சுருக்கங்களையும் பற்றி आहारदोष—हैतुकसंसर्ग—युगस्वभावादिகளாலே வரும் கலக்கங்களுக்குப் பண்ணும் परिहार-प्रकारங்களும்—27. 28. 29 இவையெல்லாம் अनुसन्धिக்கைக்கு मुख्यமான रहस्यत्रयத்தில் पदवाक्ययोजनैகளும், 30 இவ்வர்த்தங்களுக்கெல்லாம் यथाशास्त्रம் संप्रदायप्रवर्तनம் பண்ணும் ஆசார்யனுக்கு उपदेशादिप्रवृत्तिनिवृत्तिविषयங்கள் இருக்கும் படியும்.

---

மும்=என்பதும் இருக்கும் கட்டளையும்—அவச்யமாயிருப்பதும். அநுரூபமாக=உலகரீதியில் பொருந்திய; सन्निवेशமிருக்கும்படியுமென்றதால் இங்குக் கூறுதலைக் கூட்டுவதும் கூறியதைக் குறைப்பதும் தகா என்றதாம்; न्यासविद्यादर्पणादिகளில் இதன் விரிவு. कृतकृत्यன்—மோக்ஷத்திற்காக வேறொன்றும் செய்ய வேண்டாதவன், இந்நிஷ்டை=ஸ்வரூப உபாய புருஷார்த்தநிஷ்டை. அடையாளங்கள்=अभिज्ञानங்கள். நியதிநிரபேக்ஷமாக=வ்யவஸ்தை வேண்டாதபடி. விட்ட=சிறையினின்று விடுவிக்கப்பட்ட (அல்லது வர இட்ட).

ஸித்தோபாயத்தைப் பற்றி வரும்=ஸித்தோபாயத்தில் இசையாத விஷயமான; சாஸ்த்ரங்களிசையாத ஏற்றச் சுருக்கங்களைப் பற்றி வரும் என்பதற்கு, ப்ரமாணங்கள் காட்டு மளவுக்கு ஏற நினைத்தும் குறைய நினைத்தும் வருமென்றது பொருள் ப்ரமாண ஸம்மதத்திற்கு மேல்=அதிகத்தை விஷயமாகக் கொண்டதாலான; =இப்படி குறைவாகக் கொண்டதாலான என்றபடி.

31 இப்படிப் பரமோபகாரகனான ஆசார்யன்திறத்தில் தகுதியான प्रत्युप-कारமில்லாமையாலே नित्यऋणியான சிஷ்யனுக்குச் செய்ய அடுக்குமவையும் எல்லாம் श्रुति-स्मृति सदा-संप्रदायங்களாலும், இவற்றுக்கநுகூலங்களான समीचीन न्यायங்களாலும் अज्ञान-संशय-विपर्ययங்களற यथाश्रुतं यथाहृदयमुपपादितித்தோம்.

இவ்வர்த்தங்களையெல்லாம் முற்பட सत्संप्रदायமுடைய सदाचार्यன்பக்கலிலே शरण्य् उपसन्नனாய் 'शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्' என்று விண்ணப்பம் செய்து सादरனாய் विशदமாக श्रवणம் பண்ணி, இவற்றுக்கு उपयुक्तங்களான நல்வார்த்தைகளையும் 'सुव्याहृतानि महतां सुकृतानि ततस्ततः । संचिन्वन् धीर आसीत शिलहारी शिलं यथा ॥' என்கிற படியே ஆய்ந்தெடுத்து अभ्यासपूर्वकैயாலே தெளிந்து கொள்வது.

---

நித்ய ருணியான = கடன் தீர்க்கமாட்டாத; ஸூத்ர பதத்தாலே — 'साक्षादप्यविरोधं जैमिनिः. नाना शब्दादिभेदात्.' 'विकल्पोऽविशिष्टफलत्वात्'. 'विहितत्वाच्चाऽऽश्रमकर्मापि' இத்யாதிகளையும் நான்காம் அத்யாயஸூத்ரங்களையும் கொள்க. यथाश्रुतं — ஸம்ப்ரதாயமாகக் கேட்டபடி. यथाहृदयं = மநநம் செய்து அதையே நிச்சயித்தபடி.

இனி இவ்வதிகாரத்தில் சொல்ல வேண்டியதாக सुव्याहृतशिलहारी என்று ச்லோகத்திற் சுருக்கியதை விரித்துரைக்கிறார் இவ்வர்த்தங்களை இத்யாதியால். நல்வார்த்தைகள் = பெரியோர்கள் இவ்வாறு சொன்னார்களென்று ஸம்ப்ரதாயமாகவும் ஸம்வாதமாகவும் விவரிப்பதற்குமான வார்த்தைகள்; नित्यं ब्रूते निशमयति च स्वादु सुव्याहृतानि என்றவிடத்திலும் இதைக் கொள்க. सुव्या. இதி. பா. உத். 34-34. மஹான்களின் நல வார்த்தைகளையும் சிறந்த அநுஷ்டானங்களையும் ततस्ततः संचिन्वन् — அங்கங்குக் கண்டு ஆய்ந்தெடுப்பவனாய்; ஶிலம் = வயல் முதலான விடங்களில் உதிர்ந்து விடப்பட்ட தானியம். அதை शिलहारी यथा = ஶிலவ்ருத்தியிலிருப்பவன் ஒவ்வொன்றாக எடுத்துச் சேர்ப்பது போல் धीरः செய்வது சிறந்ததென்ற துணிவுள்ளவனாய் आसीत இருப்பான். अभ्यासपूर्वकैயாலே = நல்வார்த்தைகளுடை (நல்ல அநுஷ்டானங்களும்) அடிக்கடி ஆதரிக்கப்பட்டிருப்பது காரணமாக. வார்த்தைகளுக்குத் தாத்பர்யத்தை उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम् என்ற अभ्यासादिகளால் நிச்சயிக்க வேண்டும்; [அநுஷ்டானத்தை ஓரேவிதமாக அடிக்கடி பார்ப்பதிலிருந்து தெளிய வேண்டும்.] இந்த க்ரந்தத்திலும் அவை யடங்கியிருக்கும்; अभ्यासத்தால் ஊன்றித் தெளிவதாம் அநுமடா நவிஷயம் अप्रकृतமென்று விடப்பட்டது.

இப்படி இந்த க்ரந்தத்தில் சொன்ன அர்த்தங்களை யெல்லாம் ஆசார்யனை யாச்ரயித்துக் கேட்கவேண்டும்; இதற்கநுகூலமாக மற்றவற்றையும் கொள்ளவேண்டுமென்றதென்? வேதப்ராமாண்யமிசைந்தவர்களிலும் த்வாதசாக்ஷராதிகளான வேறு மந்த்ரங்களையும் வேறு பக்தி. நாமஸங்கீர்த்தநாதி உபாயங்களையும் கொண்டவர்களுமிருக்கின்றனரே; திருமால் ஈச்வரனென்பதிலும் விவாதமுளதே. சில பரிகரத்தை விட்டவரும் பரிகரங்களின்றியே ப்ரபத்தி மட்டும் போதுமென்பார்களு முண்டே. சேஷத்வஜ்ஞானமே போது

'सूक्ष्मः परमदुर्ज्ञेयः सतां धर्मः प्लवङ्गम' என்றும்' 'धर्मस्य तत्त्वं निहितं गुहायाम्' என்றும்' 'अणीयान् क्षुरधारायाः को धर्मं वक्तुमर्हति' என்றும் ருஷிகளுக்குங்கூட வருந்திப் பதவிந்யாஸம் பண்ணவேண்டி யிருக்கிற நிலங்களில் ''महाजनो येन गतः स पन्थाः' என்றும், 'धर्मशास्त्ररथारूढा वेदखड्गधरा द्विजाः । क्रीडार्थमपि यद् ब्रूयुः स धर्मः परमो मतः ॥' என்றும்

---

மென்பாருமுளர். த்வயோச்சாரணமே போது மென்பர் பிறர். பரமைகாந்தி தேவதாந்தரஸம்பந்த முள்ள கர்மங்களைச் செய்வது தவறென்கின்றனர் சிலர். இப்படிச் சர்ச்சா விஷயமாகப் பல அம்சங்களிருக்கின்றனவே யென்ன-

இங்குச் சொல்லப்பட்ட அம்சங்களில் ஸந்தேஹப்ரஸக்தியொன்று மில்லை. பெரியோர்கள் சென்ற வழியே செல்லவேண்டும். ப்ரமாணங்களுக்கு அநுகூலமான தர்க்கங்களைக் கொள்ளாமல் விபரீதார்த்தம் கொண்டு தத்துவங்களை மறைப்பவர்களுக்கு ஸ்வர்க்க,நரகாதிப்ரமணமே ஃபலமாகும். நித்யநைமித்திக கர்மங்களை விடுவதென்றாலும் நிஷித்தமானவற்றைச் செய்தால் குற்றமில்லையென்றாலும் நரகாதிகள் வருமே. த்வாதசாக்ஷராதிகள் ச்லாகியமானாலும் ஸம்ப்ரதாயமாக வந்ததையே கொள்ளவேண்டும். சாஸ்த்ரப்படி உபாயாநுஷ்டானம் செய்யாமற் போனால் ஸம்ஸாரத்தில் உழல்வதே யாகும். காம்யங்களைச் செய்தாலும் குற்றமில்லை யென்றால் ஸ்வர்க்காதிகளுக்குச் செல்வதாம். ஆகையால் தோன்றினபடி நடக்காமல் வ்யாஸ. பராசர. பராங்குச.யதிவராதிகள் ஆதரித்த வழியே இங்குச் சொல்லப் பட்டிருப்பதால் இதை யநுஸரித்தவர்களுக்கே மோக்ஷபலமென்கிறார் सूक्ष्मः இத்யாதியால்.

धर्मस्येति भा. சா. 268. 121. तर्कोऽप्रतिष्ठः श्रुतयो विभिन्नाः नैको ऋषिर्यस्य मतं प्रमाणम् । ......महाजनो येन गतः स पन्थाः; अणीयानिति-भा. உத். 34—30. தர்மமானது கத்தியின் கூரான முனையைக்காட்டிலும் अणीयान् மிக ஸூக்ஷ்மமானது. அதைத் தெரிந்து சொல்லத்தக்கவர் யார்? கத்தியின் கூர்மைக்கும் தர்மத்திற்கும் எந்த விதத்தில் ஸாம்யமென்னில், ஒருவிதம் அதை யறிவிக்கவே மேலே ''வருந்திப் பதவிந்யா ஸம்பண்ண வேண்டி யிருக்கிற'' என்றருளினர். கத்திமுனையில் பதவிந்யாஸம்பண்ணுவது ஸாத்யமாகாது. அது போல் தர்மத்தில் அடி வைப்பதும் அறிந்து அநுஷ்டிப்பதும் அஸாத்யம்; அதைவிட இங்கு வருத்தம் அதிகமென்பதற்காக अणीयान् என்றது. ஆகையால் நாம் ஸ்வதந்த்ரமாக நிர்ணயிக்காமல் பெரியோர்கள் நடந்து தேய்ந்த வழியில் நடப்பது உசிதம். धर्मेति. தர்மசாஸ்த்ர மென்கிற தேர் ஏறி-வேதமென்கிற கத்தியைக் கையில் கொண்டிருக்கும் அந்தணர்கள் விளையாட்டாக ஏதேனும் சொன்னாலும் அது சிறந்த தர்மமாகும். இங்கு தர்மசாஸ்த்ரங்களையேறியவரென்றதால் எல்லா தர்மங்களையும் நன்கறிந்தவரென்றதாம். வெட்டு ஒன்று துண்டு இரண்டு எனறவாறு ஸ்பஷ்டமாக்குவதால் தர்மசாஸ்த்ரத்தில் வைக்கப்பட்ட வேதவிதிகள் கத்தியாகும். இந்த ச்ருதிஸம்ருதிகளுக்கு விருத்தமாயிருப்பது எதுவும் தர்மமாகாது. இவற்றை மீறி, ப்ரபந்நருக்கு

சொல்லுகிறபடியே ஶ்ருதி ஸ்ம்ருதி ஶரணரான பூர்வாசார்யர்கள் கண்டகஶோதனம் பண்ணி நடந்த வழியிலே நடக்கையாலே நமக்கு வருவதொரு தப்பில்லை. இவ் வழி நடந்தவர்களுக்கு 'अविश्रान्तमनालम्बमपाथेयमदेशिकम् । तमःकान्तारमध्वानं कथमेको गमिष्यसि ॥' என்றும், 'निष्पानीये निरालम्बे निश्छाये निरपाश्रये । द्राघीयस्यशुभे मार्गे यमस्य सदनं प्रति ॥' என்றும் மஹர்ஷிகள் நெஞ்சாறல்படும் வழிகள் காண வேண்டா. பஞ்சாக்நிவித்யையிற் சொன்னபடியே பருத்தி பட்ட பன்னிரண்டும்

---

அக்ருத்யகரணம் க்ருத்யாகரணம் தோஷமாகா வென்றும் தேவதாந்தரஸம்பந்தமிருப்பதால் நித்யகர்மத்தையும் விட வேண்டுமென்றும் சொல்லுகிறவர்களிடமே தப்புண்டு. நமக்கில்லை; இது ஆச்சான்பிள்ளை போன்ற மஹான்களால் தெரிவிக்கப்பட்டதென்றறிவிக்க பூர்வாசார்யர்கள் கண்டகசோதநம் பண்ணி என்றார். கண்டகங்களாவன முட்களும் விரோதிகளும். வழியில் நடப்பது முட்களை விலக்கியபிறகு; அதுபோல் அவர்கள் விரோதிகளை விலக்கி தர்மத்தில் நடமாடச்செய்தனர். சோதநமாவது இங்கு விலக்கல். விடுவது தப்பு என்பதை பலனைக்காட்டி விளக்குகிறார். இவ்வழி இதி. சாஸ்த்ரீயங்களை விட்டால் நரகம் வரையிலான துக்கங்களுண்டென்றபடி. இவ்வழி = பூர்வாசார்யர்கள் நடந்த வழி. அவிஶ்ராந்தமிதி பா.ஶா. 337.34. விச்ராந்தமாவது—இளைப்பாறல். தங்கவிடமிராமையால் ஏது இராததும், நடக்கும் போது ஊன்றி நடக்கப் பிடிப்பிராததும், வழியிலுண்ண உணவிராததும், திகைக்காமல் செல்ல வழிகாட்டுபவரில்லாததுமான. இருளடர்ந்த காடேயான வழியிலெப்படி நீ தனியே செல்லப்போகிறு யென்று நரகமார்க்க வர்ணனம். இதை விளக்குவது வங்கிபுரத்துநம்பிகளின் நித்யம் 24. निष्पानीये குடிநீரில்லாததும், பிடிப்பற்றதும், நிழலற்றதும், தங்க இடமற்றதும், மிக நீண்டதும், துன்பமே தருவதுமான வழியில் எமனில்லத்திற்குச் செல்லுமெனக்கு என்று மேலே சேரும். நம்பியும் ஒரு மஹர்ஷியே அல்லது இது மஹர்ஷிவசனமாய் நித்யக்ரந்தத்தில் அநுவாதமாகலாம். நெஞ்சாறல்படும் =நெஞ்சு அலைந்து சொல்லவான: விதிநிஷேதங்களைக் விட்டவர்களுக்குக் கேடுகளைக் கூறினர்; இப்படியானால் தேவதாந்தர ஸம்பந்தத்தை விடலாகாதென்று முடிவதால் ப்ரபத்தி செய்தது வீணாகுமேயென்று கொண்டு இப் ப்ரபந்தத்தின் படி நடப்பதை உபேக்ஷித்தால் ஸம்ஸாரத் தொல்லை விடாதென்கிறார் பஞ்சாக்நீதி. ப்ரபந்நனுக்கு தேவதாந்தரச் சொற்களைச் சொல்வதால் தேவதாந்தர ஸம்பந்தம் வந்துவிடா தென்று கீழே கூறினம். பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்டு இதி. ஜீவன் ஸ்வர்க்காதிலோகம் ஏறி இறங்குவதற்கு இது த்ருஷ்டாந்தம், பெரியதிருமொழி 1-8.5 வண்கையான் என்கிற பாசுரத்திலே பெரியவாச்சான்பிள்ளையுரையில் "தன்கையிலே பருத்திப்பட்ட பன்னிரண்டும் பட்டபூமியை இரந்தானையிற்று" எனவுளது. படைத்து இடந்து கிடந்து நடந்து, பருக்கேமாக்கியதால் தனக்கு ஸர்வ

பட்டுப் பூட்டைக்குண்டிகைபோலே ஏறுவது இழிவதாக धूमादिमार्गத்திலே परिभ्रमிக்கவும் வேண்டா.

---

ஸ்வாதீநமான பூமியை வாமனன் அவனிடம் இரந்தானென்றிதன் கருத்து. பருத்தி பன்னிரண்டும் படுவதை வருத்தப்படுவதாகச் சொல்ல வேண்டுமானால் அங்கது दार्ष्टान्तिकத்தில் பொருந்தாது. இங்கே (ரஹஸ்யத்ரயஸாரத்தில்) சொல்லிய दार्ष्टान्तिकம் பொருந்தும்—அங்கே மாவலியின்கையிலே பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்ட பூமி யென்றால் ஒருவாறு பொருந்தலாம்; அவ்வாறு அங்கில்லை—இது நிற்க. இங்கு அரும்பதவுரையில் பருத்தி பட்ட பன்னிரண்டைச் சொல்லும் போது—கொட்டைவாங்கி பன்னி சுருளாக்கி நூலாக்கி பாவோட்டி......மடித்து விற்று......தோய்த்து உலர்த்தி, கிழித்து இத்யாதி உளது. இப்படி பருத்தி சேதநனுக்கு வச்யமாவது போல் பூமி பெருமானுக்கு வச்யமென்றபடி. ஸாராஸ்வாதிநியில் கொட்டைவாங்குவது उत्कर्षणம் अपकर्षणं आकुञ्चनं प्रसारणं ग्रन्थिश्लथनं संघटनं समीकरणं पुञ्जीभवनं विभजनं विमलीकरणं चतुष्कोणकरणं இத்யாதி உளது. பொதுவாக—சுத்தமாய் நூற்பதற்குப் பருத்தியை அழுக்கற அலம்பி உலர்த்தி கொட்டை யெடுத்துப் பன்னி விரளமாகப் பல திட்டமாக மடித்துத் துண்டுசெய்து சேர்த்துச் சுருளாக்கி நூலாக்கி முறுக்கி சிக்கெடுத்து. வேண்டும் உருவாக்கி—என்ற வரையில் பார்த்தால் பன்னிரண்டு பூணூலுக்கு முன் தெரியும். ஸாராஸ்வாதிநியில் சதுஷ்கோணகரண மென்றது வஸ்த்ரமாக்குவதைக் கருதி யாகலாம், பன்னிரண்டே யென்பதில்லை; தக்கவாறு மேலும் பல அவஸ்த்தைகளையும் கொள்ளலா மென்ன आदिபதம். ஜீவனுக்கும் பல தசைகள் சுவர்கத்தினின்றிறங்கும்போது உள: அந்நிலைகளில் பருத்திக்குப் போல் இவனுக்கும் துக்க உணர்ச்சியிராமற் போனாலும் அதற்குமுன் ஸ்வர்காதிகளில் तांस्तत्र देवा भक्षयन्ति என்றபடி தேவதாதிகளுக்கு மாடாக உழைப்பையும் य एतौ पन्थानौ न विदुः, ते कीटाः पतङ्गाः என்ற துர்தசையையும் டஞ்சாக்நிவித்யை கூறியது. पञ्चम्यामाहुतौ என்றபடி ஸ்த்ரீகர்ப்பத்தில் ப்ரவேசித்தபிறகு एकरात्रोषितं कललं भवति सप्तरात्रोषितं बुद्बुदं अर्धमासाभ्यन्तरेण पिण्डम्; मासाभ्यन्तरेण कठिनो भवति, मासद्वयेन शिरः कुरुते मासत्रयेण पादप्रदेशः पञ्चमे पृष्ठवंशः षष्ठे नासाक्षि. श्रोत्राणि सप्तमे चैतन्यं अष्टमे सर्वसंपूर्णो भवति नवमे सर्वलक्षणसंपन्नः என்று ஸாரப்ரகாசிகையில் குறித்த அவஸ்த்தைகளையும் गर्भनिष्क्रमणक्लेशத்தையும் மேலே बाल्ययौवनादि नानाविधतापங்களையும் கொள்வது. பூட்டைக் குண்டிகை; பூட்டை = ஏற்றமரம்; அங்கு இணைக்கப் பட்ட குடம் சால் போன்றது குண்டிகை. அது—நீர் எடுத்து ஏறி நீர் விழும் வரையில் மேலே இருந்து பிறகுக் கீழே இழிகிறது. அது போல் ஜீவன் வினைகளைச் சேர்த்துக் கொண்டு மேலுலகமேறி 'यावत्संपातं उषित्वा' என்றபடி வினைகள் விழுமளவு நின்று பிறகு இழிந்து மீண்டும் வினைகளைக் கொண்டேறுகிறான். धूमादिमार्गமாவது ஸ்வர்கலோகம் செல்லும் பாதை; धूमத்திற்குப் பிறகு இரவுக் க்ருஷ்ணபக்ஷம் தக்ஷிணாயநம் பித்ருலோகம், ஆகாசம்,

'त्वं न्यञ्चद्भिरुदञ्चद्भिः कर्मसूत्रोपपादितैः । हरे विहरसि क्रीडाकन्दुकैरिव जन्तुभिः ॥' என்கிற भगवल्लीलोपकरणமான दशै கழிந்து, மற்றுமுள்ள अतिशयितफलங்கள் பெறப்போம் अधिकारिகளுடைய வழிகளிற் காட்டில் पुरुषार्थभूयस्त्वैயாலும், पुनरावृत्तियिல்லா மையாலும் 'तेभ्यो विशिष्टां जानामि गतिमैकान्तिनां नृणाम्', 'उत्क्रामति च मार्गस्थः........शीतीभूतो निरामयः', 'देवयानः परः पन्था योगिनां क्लेशसंक्षये' इत्यादिகளிற்படியே अत्यन्तविलक्षणமாய் 'आत्मा केवलतां प्राप्तो यत्र गत्वा न शोचति', 'अत्यर्कानलदीप्तं तत् स्थानं विष्णोर्महात्मनः । स्वयैव प्रभया राजन् दुष्प्रेक्षं देवदानवैः ॥', 'तत्र गत्वा पुनर्नेमं लोकमायान्ति भारत', 'एते वै निरयास्तात स्थानस्य

---

சந்திரன் என்பவை சொல்லப்பட்டன. இப்படிப்பட்ட துர்தசைகள் இப் பிரபந்தத்தில் சொன்னபடி நடந்தவர்களுக்கில்லை.

இதற்கு மாறாக இவர்களுக்கு வரும் பரமபுருஷார்த்தத்தை முடிவாக நிரூ பிக்கிறார் त्वमित्यாதியால். இங்கே இவ்வழி நடந்தவர்களுக்கு என்று முன் சொன்ன பதத்தை प्रथमान्तமாக மாற்றிக் கொள்ளவேண்டும். அதற்கு முடிவில் வாழ்வர்கள் என்ற க்ரியையில் அந்வயம். கீழ்க்கூறியதற்கும் இதற்கும் வாசி தெளிவதற்காக விபக்தியை மாற்றியது. முன்தசைகள் ஜீவனுக்கு வேண் டாத போதே வருகிறன; சொல்லப் போகிற வாழ்க்கையில் தான் ப்ரீதிபூர் வமாகக் கர்த்தாவாகிறானென்ற வாசி प्रथमान्तத்தினின்று தெரியவரும். त्वमित्यादि விஷ்ணுதர்மம். हरे—எம்பெருமானே! கர்மமாகிற கயிற்றால் கட்டப்பட்டுக் கீழே விழுகின்றனவும் மேலே எழுகின்றனவுமான விளையாட்டுப் பந்துகளாற் போல் ஜந்துக்களால் நீ லீலாரஸம் அனுபவிக்கிறாய். பந்துகள்—புருஷனால் செய்த ஸூத்ரங்களாலானவை. ஜந்துக்கள் ஸூத்ரங்கள்போன்ற புண்ய பாபங்களாகிற கர்மங்களால் அமைக்கப்பட்டவை. दशै—ஸம்ஸாரதசை. பெறப் போம்=பெறுதற்கு அங்கங்கே போகின்ற; வழிகளிற்காட்டில் என்பதற்கு அத்யந்தவிலக்ஷணமாய் என்ற விடத்தில் அந்வயம். அது அர்ச்சிராதிமார்கத்தாலே என்பதற்கு விசேஷணம். तेभ्य இதி பா.சா 358— तेभ्यः—கீழ்க்கூறிய வழிகளைவிட. பரமைகாந்திகள் போகும் வழியை विशि ष्टां=மேம்பட்டதாக அறிகிறேன். उत्क्रामतीதி. இது ஜாபக—உபாக்யானத் திலுள்ளது अर्थपञ्चकाधिकारத்தில் परमपदप्राप्तिप्रस्तावத்தில் உரையில் காண்க. देवेதி. யோகிகளுக்கு क्लेशसंक्षये=अविद्या-अस्मिता-राग-द्वेष—अभिनिवेशाः क्लेशाः என்னப்பட்ட அவித்யாதிகள் போனபிறகு வரும் சிறந்த மார்க்கம் தேவயா நம். பரமபதத்தை வர்ணிக்கிறார் आत्मेதி. பா. शांதி. 19-6-11. புண்யபாபங்களி னின்று விடுபடுகையைப் பெற்ற ஜீவாத்மா எங்குச் சென்று சோகமற் றிருக்கிறானோ; अत्यर्केதி பா. ஆரண்ய. 13-6-18. ஸூர்யனுக்கும் அக்நிக்கும் மேலாக ப்ரகாசிக்கும் பரமாத்மாவின் ஸ்த்தாநம் தன்னுடைய ஒளியாலேயே தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காணவாகாது. तत्रेதி. பா. आर. 136—23 அங்குச் சென்று மீண்டும் இவ்வுலகிற்கு வருகிறாரல்லர். एते இதி. பா.

परमात्मन:' इत्यादिகளிலும், संसार-अध्वாவுக்குப் पारமென்று श्रुतिகளிலும் ஓதப்படுகிற परमपदத்தைப் पर्यन्तமாகவுடைத்தாய், भगवत्प्रसादावलम्बनமாய், பரிபூர்ணமான परमपुरुषार्थத்தைப் பெறப் புக(போ)கிறோமென்கிற ஸந்தோஷத்தைப் पाथेयமாகவுடைத்தாய். 'तत्प्रकाशितद्वार:' என்கிறபடியே हार्दனை ஈச்வரனுடைய सौहार्दத்தாலே காட்டப்படுகிற अर्चिरादिमार्गத்தாலே அவ்வோ தேவதைகள் தந்தம் எல்லைகள்தோறும் मङ्गलप्रदीप-पूर्णकुम्भादिகளை முன்னிட்டு सपरिकररாய் எதிர்கொண்டு सार्वभौमोपचारங்களைப் பண்ணி வழி நடத்த, கர்மலோகத்தில் இருந்த நாள் இறைகொண்ட தேவதைகளெல்லாம் காணிக்கை யிட்டுக் கண்டு अनुवर्तिக்க. அவர்களுக்கும் எட்டவொண்ணாத எல்லைகளெல்லாம் கடந்து நித்யஸூரிகள் திரளிற் புக்கால் வாசி தெரியாதபடியான निरतिशयपूर्तिயைப் பெற்று—

---

शा. 196–6 ஸ்வர்க்கலோகத்திலுள்ளவை யெல்லாம் பரமாத்மாவின் இடத்தைக் காணும்போது நரகங்களாகும். अध्वாவுக்குப் पारமிதி. सोऽध्वन: पारमाप्नोति तद्विष्णो: परमं पदम् என்றது கடச்ருதி. இங்கே अध्वा என்பதற்கு அர்ச்சிராதிமார்கமென்பதை விட ஸம்ஸாராத்வா என்பதே சிறந்தது; ச்ரீபாஷ்ய ஸம்மதமுமிதே. பர்யந்தமாக—முடிவிடமாக. உடைத்தாய் என்பது அர்ச்சிராதிமார்கவிசேஷணம். கீழே ஒருவழியை अनालम्बं अपाथेयं अदेशिकं तम:कान्तारं என்றார். அதற்கு நேர்மாறான ஆகாரங்கள் இவ் வழிக்கென்கிறார் भगवत्प्रसादेति. அந்த மார்கத்தில் ச்ரமமே யிராமையால் விச்ரம உபாயம் தேட வேண்டியதில்லை அதனால் விச்ராந்தியைச் சொல்லவில்லை. तत्प्रकाशितद्वारेति. तदोक: என்கிற ஸூத்ரத்திலுள்ள இப் பதத்திற்கு ஹ்ருதயஸ்தானத்தில் வந்த ப்ரகாசத்தாலே காட்டப்பட்ட வழியை யுடையனாய் என்று பொருள் தோன்றும்; பாஷ்யத்தில் परमपुरुषप्रसादात् என்று हार्दानुग्रहத்தை முன்னம் சேர்த்திருப்பதாலும் இங்கே அர்ச்சிராதிமார்க்கம் காட்டப்பட வேண்டியதற்கு हार्दसौहार्दத்தையே காரணமாகக் குறிக்க வேண்டியிருப்பதாலும் ஈச்வரனுடைய ஸௌஹார்தத்தாலே யென்றார். இதனால் अदेशिकत्वமில்லை யென்று சொன்னதாகும். இதனாலும் மேலே प्रदीपादिகளைச் சொல்வதாலும் तम:कान्तारं என்பதற்கு எதிர்நிலை சொன்னதாகும். பலர் கூடவிருப்பதால் एको गमिष्यसि என்பதுமில்லை. सपरिकररாய் இதி. सर्वार्थसिद्धियில்(2 60) எட்டு அக்னிகள் பதினொரு வாயுக்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள் என்றது போல் அவர்களின்பரிஜனங்களையும் கொள்க. திருவாய்மொழிமுடிவிலும் காண்க. இறை கொண்ட = காம்யகர்மங்களாலே ஆராதித்து ஸமர்பிக்கப்பட்ட வஸ்துக்களை ஸ்வீகரித்த; தேவதைகளென்று ஆதிவாஹிகர் நீங்கலாக மற்றவர்களையும் சொன்னது எட்டவொண்ணாத எல்லைகள் = ப்ரஹ்மாண்டத்துக்கு மேலுள்ள ப்ராக்ருத भागமும் அதற்கு மேலுள்ளதும். புக்கால் = புகுந்ததும்; निरतिशयपूर्ति अप्राकृतरूपादियால்; वाचामगोचरமானமையால் வேறு உவமையிராமையால் பரமபதத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலையின்

'ततो महति पर्यङ्के मणिकाञ्चनचित्रिते । ददर्श कृष्णमासीनं नीलं मेराविवाम्बुदम् ॥
जाज्वल्यमानं वपुषा दिव्याभरणभूषितम् । पीतकौशेयसंवीतं हेम्नीवोपचितं मणिम् ॥
कौस्तुभेन उरःस्थेन मणिनाऽभिविराजितम् । उद्यन्तेवोदयं शैलं सूर्येणा(णो)प्तं किरीटिनम् ॥
नौपम्यं विद्यते तस्य त्रिषु लोकेषु किञ्चन ॥'—
'तं वैश्रवणसङ्काशमुपविष्टं स्वलङ्कृतम् । ददर्श सूतः पर्यङ्के सौवर्णे सोत्तरच्छदे ॥
वराहरुधिराभेण शुचिना च सुगन्धिना । अनुलिप्तं परार्ध्येन चन्दनेन परन्तपम् ॥
स्थितया पार्श्वतश्चापि वालव्यजनहस्तया । उपेतं सीतया भूयः चित्रया शशिनं यथा ॥
तं तपन्तमिवाऽऽदित्यमुपपन्नं स्वतेजसा । ववन्दे वरदं वन्दी विनयज्ञो विनीतवत् ॥'

என்று भारत-रामायणங்களில் சொல்லப்பட்ட अवतार-आसिकைபாலே सदृशமான परमपद-पर्यङ्कத்திலே எழுந்தருளியிருக்கிற सपत्नीकனான ஸர்வேச்வரன் தாளிணைக்

---

*பெருமையை ராமக்ருஷ்ணாவதாரங்களில் வர்ணிக்கப்பட்ட நிலைகளைக் காட்டி நிரூபிக்கிறார் ततः இதி भा. उ. 44-13. பலவித ரத்நங்களாலும் பொன்னாலும் விசித்ரமாக அமைக்கப்பட்ட பெரிய கட்டிலில் வீற்றிருப்பவனும் மேருமலை மேலிருக்கும் நீலமேகம் போன்றவனும் பூஷணங்களுக்கு மேலாகத் திருமேனியாலே ப்ரகாச முள்ளவனும் திவ்யமான ஆபரணங்களணிந்தவனும் பீதாம்பரமணிந்து பொன்னிற் பதிய வைத்த மணி போன்றவனும் திருமார்பிலிருக்கும் கௌஸ்துபமணியால் விசேஷமாக விளங்குகிறவனும் கிரீடம் அணிந்ததால் उद्यन्त = உதயமாகின்ற ஸூர்யனோடு சேர்ந்த உதயமலை போன்றவனுமான கண்ணனைப் பிறகுக் கண்டார், மூவுலகிலும் அவ்விருப்புக்கு உவமையில்லை. उत्तरच्छदம் = மேல் வஸ்த்ரம் தோற்ற तमित्यादि रा. அ. 16-8. பொற்கட்டிலில் மேல் விரிப்புள்ள படுக்கையில் நன்கு அலங்கரிக்கப்பட்டுக் குபேரனுக்கு ஸமமாக வீற்றிருந்த அந்த ராமனை ஸுமந்த்ரரென்ற ஸாரதி கண்டார். பன்றியின் உதிரம்போன்ற நிறமுடைதாய் பரிசுத்தமாய் நன்மணமும் நிறைந்த சிறந்த சந்தனம் கொண்டும் (ஸீதையினால்) பூசப்பட்டு சத்ருஸம்ஹாரஸாமர்த்தியம் தோற்றவுமிருப்பவனும் சாமரத்தைக் கையில் கொண்டு பக்கத்தில் நின்று வீசும் ஸீதையுடன் சேர்ந்து சித்ராநக்ஷத்ரம் சேர்ந்த சந்தரன் போலிருப்பவனுமாய்க் கோடையில் எரிக்கும் ஸூர்யனைப் போன்றவனும் தனக்கேயான தேசுபொருந்தியவனும் வரன்களை யளித்துக்கொண்டிருப்பவனுமான அந்த ராமனை துதிப்பதில ஸமர்த்தராய் விநயவகைகளை யறிந்தவருமான முக்தர் போன்ற ஸுமந்த்ரர் வணங்கினர். अवतार = ஆஸிகை-அவதாரகாலங்களில் எம்பெருமான் வீற்றிருந்த வகை; எழுந்தருளியிருக்கிற—वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः । आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह என்றும், கௌஷீதகிப்ராஹ்மணத்தில் கீழ் स आगच्छति अमितौजसं पर्यङ्कम् என்று கூறி तस्मिन् ब्रह्म आस्ते என்றுமுள்ளபடி என்க. தாள் இணை = ஒன்றுக்கொன்றே*

கீழ் 'ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்கிற मनोरथத்தின்படியே सर्वदेश-सर्वकाल-सर्वावस्थोचित-सर्वविध-कैङ्कर्य ங்களையும் பெற்று வாழ்வர்கள்.

இப்படி श्रियःपतियान नारायणன் திருவடிகளே उपायदशैயிலும் फलदशै யிலும் उपजीव्यங்கள்.

உறுசகட முடைய வொரு காலுற் றுணர்ந்தன
உடன்மருதமொடிய வொரு போதில் தவழ்ந்தன

---

ஸமமான இரு திருவடிகளில். ஒழிவில் இதி. திருவாய் 3-3-1. திருமலையில் ஒரு நொடியும் விடாமல் எல்லாக் காலமும் நாமெல்லோரும் சேர்ந்து பரிவுடன் குற்ற மற்ற கைங்கர்யங்களைச் செய்ய வேண்டுமென்று மநோரதித்தார் ஆழ்வார். கைங்கர்யங்களையும் இதி. கீழே நிரதிசய பூர்த்தியைப் பெற்று என்று அநுபவ பூர்த்திவரையிற் கூறியுள்ளார். அதனால் உம்மை. வாழ்வர்கள் இதி. பதியோடு சேர்ந்தபிறகே பார்யைக்கு வாழ்க்கை.

இவ் வாறு இப் பிரபந்தத்தில் பணித்த படி நடந்தவர்கள் பெறும் நல் வாழ்க்கை சொல்லப் பெற்றது. இப் பிரபந்தத்தின் ஸாரமான பரமார்த்தத்தைக் கடைசிவாக்யத்தால் அருள்கிறார் இப்படி இதி. उपजीव्यங்கள்— யாரை அண்டி ஜீவிப்பதோ. அவரை உபஜீவ்யர் என்கிறது: அண்டி ஜீவிப்பவர் உபஜீவகர். ப்ராப்யதசையிற் போல் பூர்வதசையிலும் திரு, மால் இருவரின் திருவடிகளுக்கு அதீனமாகவே தன் ஸ்திதியைக் கொண்டிருக்க வேண்டு மென்றதாயிற்று இதற்காகத் திருவடிக்குள்ள ப்ரபாவத்தை ஒரு பாட்டால் விளக்குகிறார், கண்ணபிரான் மூன்றுவது ரஹஸ்யத்திற்கு வக்தாவாகையாலும், "கண்ணுலம் கோடித்து......ஆங்கு அவனைக் கைபிடித்த பெண்ணாளன் பேணும் ஊர் பேரும் அரங்கமே" (11-2), என்றும் 11-10 "செம்மையுடைய திருவரங்கர்தாம் பணித்த மெய்ம்மைப் பெரு வார்த்தை" என்றும் கண்ணனைத் திருவரங்கனாக நாச்சியார் அருளியதாலும், அர்ச்சையில் அரங்கனே பெரியபெருமாளாகையாலும் அரங்கன் திருவடிகளை உபாயதசையிலும் फल தசையிலும் உபஜீவ்யங்களாக எம்பெருமானார் गद्यத்திலருளிச்செய்ததாலும் (ஸ்ரீரங்கத்தில் இது பூர்த்தி பெறுவது தோற்றவும்) பெரியபெருமாளின் திருவடிவிஷயமாக அருளிச்செய்கிறார் உறு இதி.

இப் பாட்டில் விடலரிய பெரியபெருமாள்மென்(ய்ப்)பதங்கள் என்பது எழுவாய்; உணர்ந்தன இத்யாதிகள் பதினைந்து வினைச்சொற்கள். ஒரு கால்=ஒரு ஸமயத்தில் (யசோதையார் வண்டியின் கீழே தொட்டிலில் விட்டிட்டு யமுனைக்குப் போயிருந்தவளவிலே) உறு=வலிய, சகடம்=அஸுராவேசமுள்ள சகடத்தை உற்று=தன்மேல் விழ வருகிறதாகக் கவனித்து. உடைய=அது சுக்கலாம் படி, உணர்ந்தன—அறிவு கொண்டன, நாள்கள் ஓர் நாலைந்து திங்களளவிலே சகடாஸுரவதம் செய்து உலகுக்கு உதவின என்றபடி; ஒரு போதில்—மற்றொரு ஸமயத்தில் உடன்=ஒன்றோடொன்று

உறிதடவு மளவிலுர லூடுற்று (டொத்து) நின்றன
உறுநெறியோர் தருமன்விடு தூதுக் குகந்தன
மறநெறியர் முறிய பிரதானத்து வந்தன
மலர்மகள் கைவருட மலர்போதிற் சிவந்தன

---

கூடியிருந்த மருதம்—இரு மருதமரங்கள் ஒடிய—முறிந்து விழும்படி தவழ்ந்தன=தவழ்நடை நடப்பனவாயின. உறிதடவும் அளவில் =நெய்தயிர் வெண்ணெய்க்காக உறிகளை இருளில் தடவும்போது உரல் ஊடு—உரலின் நடுவில் உற்றுநின்றன =ஸம் பந்தப்பட்டிருந்தன—உறிகளைத் தடவியதற்காக உரலோடு சேர்த்து யசோதை கட்டிய வரலாற்றை யிங்குச் சொல்வதானாலும் ஒடு என்கிற பாடம் புரிதாகும்; ஊடு என்றே பழைய உரைகளிலுள்ளது. உரலில் கட்டியபிறகுதானே மருதமரங்களை முறித்தது, அதை முன்னே சொல்வானேனென்னில்-இப் பாட்டில் எல்லாம் க்ரமப்படி சொல்வதில்லை; அநுபவத்துக்கு வந்த க்ரமத்திலே அருளியதாகும். அல்லது இதற்கு யசோதை கட்டியது விஷயமன்று, உரலைக் கவிழ்த்து மேற்புறத்தில் உரலின் இடையில் உற்று நின்று உறியை யெட்டினானென்றதே சொல்லப்பெறும். கட்டுவது விஷயமாகில் காலைக் கட்ட வில்லையாகையாலே உரலூடுற்று என்பதும் பொருந்தாது. ஒத்து என்ற பாடத்தில் ஒன்றோடொன்று ஸமமாகவிணைந்து நின்ற வழகையநுபவித்ததாம். உறுநெறி=தனக்கு ஸம்பந்தப்பட்ட நல்வழியுடையரான, ஓர்—ஒப்பற்ற அல்லது நெறி ஓர்—நல்வழியாராய்ந்த தருமன்—தர்மபுத்ரரால், விடுதூதுக்கு=நியமிக்கப்பட்ட தூதக்ருத்யத்திற்காக உகந்தன—மகிழ்ச்சியுற்றன.

மறநெறியர்—மறம்=கோபம்; கோபத்தையே வழியாக உடைய சத்ருக்கள், முறிய—அழியும்படி பிரதானத்து-பிருந்தாவனத்திலே வந்தன = ஸஞ்சாரம் செய்தன. பிரதானத்து என்றே பழைய பாடம். பிருந்தாவனத்து என்பதில் ரு இருப்பதால் பிருதானத்து என்று மாற்றினர். இதைவிட பிரதானத்து என்பது ப்ரதநம் ப்ரதநம்—(போர்) என்பதின் திரிபு, நீட்டல் விகாரமென்று கொண்டு போரில் வந்தன என்று பொருள் கொள்ளலாம். ஆக தூதுக்கு உகந்த பிறகு பிருந்தாவநத்துக்கு வ்ந்ததைச் சொல் வதென் என்ன வேண்டா. இங்கே போரில் வந்தது துஷ்ட மனிதர்களை யழிப்பதற்காக; கடையடியில், விறலசுரர்படை யென்ற விடத்திலே தேவாஸுரயுத்தாதிகள் விஷயம். ஸாரப்ரகாசிகையில் கம்ஸ. ஜராஸந்த. சிசுபாலாதிகள் முறிய ப்ரதாநஸ்தாநமான பூமியிலே வந்தன என்றே பொருள் உளது முதலடியில் முதலில் உகரம்: இரண்டாமடியில் மகரம்; மேலடியில் அகரம். ப்ரணவாகாரவிமானப் பெருமான்விஷயமான இது உயர்வற என்ற பாட்டிற் போல் ப்ரணவாக்ஷரங்களைக் காட்டும். மலர்மகள்-அலர்மேல்மங்கை-கைவருட =மலருக்குமேல் மெல்லிய தன் கையினால் தடவும் போது மலர்போதின் =மலர்ந்த புஷ்பத்துக்கு மேலாக பாதிரவர்களில் சிவந்தன=சிவப்பாயின. கீழ்க்கூறிய

மறுபிறவி யறுமுனிவர் மாலுக்கிசைந்தன
மநுமுறையில் வருவதோர்விமானத்துறைந்தன
அறமுடைய விசயனமர் தேரில் திகழ்ந்தன
அடலுரக பட மடிய ஆடிக் கடிந்தன
அறுசமய மறிவரிய தானத்தமர்ந்தன
அணி குருகைநகர்முனிவர் நாவுக்கமைந்தன

---

முரட்டுச்செயல்களைச் செய்வதாயினும் மென்மைக்குக் குறையில்லை யென்ற படி. மறுபிறவி—புநர்ஜந்மத்தை அறு—அறுக்கிற=முமுக்ஷுக்களான முனிவர்—மஹர்ஷிகளுடைய. மாலுக்கு—வ்யாமோஹத்திற்கு இசைந்தன= பொருந்தி நின்றன இது ப்ரஹ்மலோகத்தில் பிரமனால் ஆராதிக்கப்படும் போது ஸநகாதிமுனிவர்கள் அநுபவித்த படியைக் குறிக்கவாம். ஸநகாதிகளுக்கு இப்பிறவி நீடிப்பதானாலும் மறுபிறவி யில்லை யென்க. பிறகு பிரமனால் அளிக்கப்பட்டு அயோத்தியில் மநுமுறையில்—மநு அதன் பிறகு இக்ஷ்வாகு என்கிற க்ரமத்தில் ஒவ்வோரரசனாலும் ஆராத்யமாய் வருவது-வருவதற்காகவான ஓர்-ஒப்பற்ற விமாநத்து-ச்ரீரங்கவிமாநத்திலே, உறைந்தன-நிலையாகச் சேர்ந்தன. இதனால் ராமபிரானையே சொன்னதாகாது; பொதுவாக அயோத்தியில் இருப்பைச் சொல்லும். இப்படி பரவ்யூஹங்களிலும் அர்ச்சையிலும் ஸேவ்யமானவையே ஸௌலப்யத்திலிழிந்தன என்கிறார் அறமிதி. இதற்போல் அறமுடைய-தர்மத்தையே உடையவனான—கீதோபதேசப்படி நடப்பவனும், என்றுமே அதர்மயுத்தத்திலிழியாதவனுமான விஜயன்=அர்ஜுநன் 'அமர்—அமர்ந்திருந்த தேரில் ஸாரதியாயிருந்தபோது திகழ்ந்தன= விளங்கின. இனி விஷ்ணுத்வப்ரதர்சநம்--அடல்—பராக்ரமமுடைய உரகம்= காளியத்தின் படம்மடிய=படங்களெல்லாம் மடிந்துவிழும்படி, ஆடி—அற்புதமான நாட்யத்தைப் படங்களின்மேல் செய்து, கடிந்தன=கர்வத்தைப் போக்கி சிக்ஷித்தன அல்லது பொய்கையினின்று நீக்கின. காளியன் இத்திருவடிகளின் இலச்சினையைப் பெற்று வைஷ்ணவத்வம் தோற்ற கருடன் மூலமான அச்சம் நீங்கி வெளியேறிய தைக்கருதி அவைஷ்ணவ மதங்களைக் காட்டி அருளுகிறார் அறு இதி. ஸாங்க்யம், யோகம் காணாதம் பௌத்தம் ஜைநம் பாசுபதமென்ற வ்யாஸர் கண்டித்த ஆறு ஸித்தாந்தங்களுக் கெட்டாத. தானத்து—ஸ்தானத்தில் அமர்ந்தன—ஸ்திரமாயின. அந்த சமயங்கள் கொண்ட பூம்யாதிகளில் ஈச்வர ஸம்பந்தம் அறிய அரிதாயிருக்குமென்றதாயிற்று. அல்லது வேதபஞ்சராத்ரங்களிலமர்ந்தன என்னலாம் இங்கும் எல்லோருக்கும் எளிதில் அறிவுக்கு வசமாகும் இடம் அறிவிக்கிறார் அணி இதி அணி=உலகுக்கே அலங்காரமான குருகைநகர்—திருக்குருகூரில் அவதரித்த முனிவர்—பராங்குசமுனிவரென்ற சடாரியான நம்மாழ்வாரின் நாவுக்கு=நாவிலுண்டான சொற்களுக்கு அமைந்தன—பொருந்திநின்றன. உயரறு சுடரடி, பரனடிமேல் குருகூர், திண்கழல் சேரே, திருநாரணன் தாள்;

வெறியுடைய துளவமலர் வீறுக்கணிந்தன
விழுகரி யோர் குமரனென மேவிச் சிறந்தன
விறலசுரர் படை யடைய வீயத் துர(டர்)ந்தன
விடலரிய பெரியபெருமாள்மெற்(ய்ப்) பதங்களே. 49

इति यतिराजमहानसपरिमलपरिवाहवासितां पिबत । त्रिबुधपरिषन्निषेव्यां वेदान्तोदयनसंप्रदायसुधाम् ॥

---

காலம் பெற, அடிக்கீழமர்ந்து புகுந்தேனே, தாளிணைக்கீழ் கொள்ளுமப்பன்' என்றவாறு सन्तस्तपरण यथा என்றபடி அவர் திருவடியையே ப்ரதாநமாகக் கருதினரே. வெறி உடைய—பரிமளங்கொண்ட துளவம் மலர்—துளஸீபுஷ்பங்களை வீறுக்கு ஈச்வரத்வப் பெருமை தோற்ற க்ருஷ்ணவதாரத்திலும் அணிந்தன—அலங்காரமாகக் கொண்டன; விழுகரி—உத்தரையின் கர்ப்பத்தினின்று விழுந்த கரிக்கட்டை போன்றதை குமரன் என=ஒப்பற்ற ராஜகுமாரன் என்றெல்லோரும் தெளியும்படி, மேவி—பக்தர்களிடம் அபிமானம் கொண்டு சிறந்தன=சிறப்புற்றன இது கடைசியில் செய்த தன்மை. விறல்—சூரத்வமுடைய அஸுரர் மாலி ஸுமாலி முதலானோரின் படை—ஸேனை அடைய=முழுமையும். வீய—நசிக்கும் படி துரந்தன=துரத்திக்கொண்டு சென்றனவான, விடல் அரிய=எப்போதும் விடவாகாமல் सेवाहृधानं सपदि शृणुयां पादुकासेवकेति என்று பேரவாவிற்கு விஷயமான; பெரியபெருமாளின் திருவடிகளே. பெருமானுன ராமன் ஆராதித்ததால் பெரியபெருமாளென்பர். வால்மீகியின் அயோத்யாகாண்டத்தில "महते दैवतायाऽऽज्यं जुहाव ज्वलितेऽनले ॥" என்றதால் இப் பெயர் முன்னமே உள்ளதுமாம். மெய்ப்பதங்களானவே படித்து ம்ருதுவான திருவடிகளென்று உரைக்கின்றனர்; உரைக்குத் தக்கவாறு மென்பதங்கள் என்றும் கொண்டனர். மொய்ப்பதங்களே என்றிருக்குமாகில் மொய்த்த—நிபிடமான—சதை பருத்து மென்மையான என்னலாம். பிம்பத்தில் திருமேனிப்ரவேசம் ஸத்யம். நதஸத்யனின் பதமும் ஸத்யம், திண்கழலென்றதுபோல் ஸ்திரமாயும் ஸத்யமென மெய்யென்னலுமாம்.

இப் பாட்டில் க்ருஷ்ணசரிதம் ப்ரதானம். அதனுல் மலர்மகளித்யாதி அறமுடைய என்ற வாக்யத்திற்கு சேஷம்; அறுசமயமித்யாதி விழுகரி என்ற வாக்யத்திற்கு சேஷம். இப்படியான திருவடி விஷ்ணுவாய் அஸுரரைத் துரத்திய அரங்கன்திருவடி யென்றபடி. பாட்டின்பாதியில் மறுமுறையில் என்று இயைந்தது முழுமையும் அரங்கன்விஷயமென்று கொள்வதற்காக. இந்த க்ரியைகளால் பரத்வஸௌலப்யாதிகுணங்களைத் தக்கவாறு அநுஸந்தித்ததாம்.

இந்த ரஹஸ்யத்ரயஸாரம் எம்பெருமானுருக்கு மிகவும் போக்யமாயிருந்து அமுதாகவே யிருப்பதால் எல்லோரும் அநுபவியுங்கோளென்று, தொண்டீர் எல்லீரும் வாரீர் என்றாற்போல் அழைக்க முன்வந்து கூறுகிறார் इति இதி அமுதானது மணம் மிககதாய் தேவத்திரளாலே எப்போதும் அநுபவிக்கப்பட்டிருக்கும். அதற்கான அடைமொழிகள் வடமொழியில் இதற்கும்

कलकण्ठगणास्वाद्ये कामस्यास्त्रे निजाङ्कुरे । निम्बवृत्तिभिरुद्गीर्णे न चूतः परितप्यते ॥

---

பொருந்தும். கிடாம்பியாச்சானை மடைப்பள்ளியாச்சான் என்று வ்யவஹரிப்பர். அதற்கு மடைப்பள்ளியில் கைங்கர்யத்தில் ஈடுபட்ட ஆச்சான் என்று போல் गृहिणी गृहमुच्यते என்கிற ந்யாயமாய் மடைப்பள்ளி முழுமையும் இவருக்கதீன மென்பதற்காக மடைப்பள்ளியாகிற வாச்சான் என்றும் பொருள் கொள்வர். ஆக இங்கு மடைப்பள்ளியில் போக்யவஸ்துக்களில் திருமணமாறும் போது உண்டாகும் பரிமளத்தின் மேல்வழியும் வெள்ளமென்றவை—மஹாநஸமென்கிற இவ் ஆச்சான் விஷயத்தில் எம்பெருமானாருக்கு உண்டான கரைபுரண்ட க்ருபையாகிற பரிமளத்தின் மேல்வழியும் வெள்ளமான யதிராஜ—ச்ரீபாஷ்யகாரருடைய அமுதமொழியர்த்தங்களாம். ராஜமஹாநஸபரிமளத்திற்குச்சிறப் புண்டு. அவை நிறைந்ததால் இதை यतिराज...वासितै யென்றது. இப்படி விசேஷார்த்தங்கள் இவ் ஆச்சானிடமே அடங்கியிருப்பதைக் கண்டு ச்ரீபாஷ்யகாரரின் சிஷ்ய ப்ரசிஷ்யர்கள் அனைவரும் அவர் அமுது செய்த வஸ்துக்களின் சேஷத்தைப் போல் இவற்றையும் பெற்று க்ருதார்த்தரானதால் பின்னுள்ளோரெல்லோரும் பரிஷத்தாகச் சேர்ந்து இதை யனுபவித்து வருகின்றனரென்ன विद्वत्परिषदि पेयं என்றருளினார். वेदान्तोदयन என்ற சொல்லால் யதிராஜஸூக்திபரிவாஹத்தை ப்ரமாணதர்க்கங்களால் ஸ்த்தாபிக்கும் திறமை இவருக்கென்றறிவித்ததாம்.

श्रीभाष्यकारोपदिष्ट மான விசேஷார்த்தபரிமளங்களடங்கிய வேதாந்தோதயந ஸம்ப்ரதாயமான அமுதமென்று கூறி எல்லோரையும் அழைத்தால் விரும்பாதவர்களும் வந்து கேட்பதும் வெறுப்பதுமாகுமே யென்ன—அவர்களை யழைக்கவுமில்லை அவர்கள் வெறுப்பதால் வருத்தமுமில்லை யென்று அந்யாபதேசத்தாலே யறிவிக்கிறார். कलेति चूतः—மாமரமானது कलकण्ठ—அவ்யக்தமாயிருக்கும்போதும் மதுரமான ஸ்வரத்தைக் கழுத்தில் கொண்டிருப்பதால் कलकण्ठமெனப்படும் குயில்களுடைய गण—கூட்டத்தால் आस्वाद्ये—இனிதாக அநுபவிக்கக்கூடியதும் कामस्य—மன்மதனுக்கு अस्त्रे—ஸ்த்ரீபுருஷஜீவர்களை வசப்படுத்தக் கொண்ட ஐந்து அம்புகளில் ஓர் அம்புமான, निज தன்னுடையதான अंकुरे—முளை தளிர் निम्बवृत्तिभिः—வேம்பைக்கொண்டு ஜீவநத்தைப் பெற்றிருக்குமவைகளால் (அவை காகமும் ஒட்டகமும்) उद्गीर्णे—(கொண்டது) உட்கொள்ளவிரும்பாமையால் கக்கப்பட்ட போது न परितप्यते-வருத்தப்படாது. இது அந்யாபதேசம். போக்யமான சப்தராசிகளை வ்யவஹரிக்க ஸமர்த்தரான வித்வான்களின் திரளாலே அநுபவித்துக் கொண்டாடப் படுகின்றதும் कामस्या-स्त्रे—'कामः कामप्रदः प्रभुः' என்றபடி கமநீயனான தன்னுடைய அநுபவத்திலேயே இழியும்படி விவேகிகளை வசப்படுத்துவதற்கு ஸர்வேச்வரன் அஸ்த்ரமாகக் கொண்டதுமான இந்த ரஹஸ்யத்ரயஸாரக்ரந்தம் வேறு கைப்பானதையே போஜ்யமாகக் கொண்டவர்களான சிலரால் வேண்டாமென்று விடப்பட்டால்

முன்பெற்ற ஞானமு மோகந் துறக்கலு மூன்றுரையில்
தன்பெ(ன்ப)ற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க் கீயுந் தனித்தகவும்
மன்பற்றி நின்ற வகையுரைக்கின்ற மறையவர்பால்
சின்பற்றி யென் பயன் சேரறிவோர்க்கிவை செப்பினமே. 52

---

அதனால் க்ரந்தம் செய்த தமக்கு வருத்தமில்லை யென்றதாம். ஸூக்தி: என்ற பதத்தினால் ஹம்ஸமானது வேப்பிலைகளோடு கலந்திருந்த மாந்தளிரை மட்டும் தொண்டையினின்று பக்குகிறதென்று யச்ச கதஞ்சித் என்னும் யாச ச்லோகத்தை நினைப்பூட்டியதாம். 'காமயாஸ: = விஷயப்பற்றை விலக்குகிற; நிவ்ருத்தி = முமுக்ஷு என்னலுமாம்

முதலில் குருபரம்பராஸாரத்தில் ச்ரீபாஷ்யகாரர்வரையில் குருபரம்பரையைச் சொல்லி அதற்குப் பின்னேயுள்ள தம் ஆசார்யபரம்பரையைச் சொல்லாமையால் ச்ரீபாஷ்யகாரரின் சிஷ்யர்களெல்லோருக்கும் இந்த க்ரந்தமென்று தோன்றினாலும், இவ்வதிகாரத்திலே "இவ்வர்த்தங்களை யெல்லாம்" என்று தொடங்கி ஸதாசார்யன்பக்கலிலே ஸம்யகுபஸந்நனைக் கேட்கவேண்டுமென்றதால் இங்கே ஸுசிர் விநீத என்றதும் நல்ல அதிகாரிகளைக் குறித்தே யாகும். மற்றவர் கேட்டுத் தெளியாமல் ஏடு பார்த்து ஏதேனும் சொன்னால் அதனாலென் என்று, எல்லா பாசங்களின் அர்த்தத்தையும் இவ்வதிகாரார்த்தத்தையும் கூட்டிக் கொண்டு அருளிச்செய்கிறார் முன்னிரி. இப் பாசுரமானது திருவுடன் வந்த என்ற பாசுரம் தொடங்கி அந்தாதிகளான பாசுரங்களில் முப்பத்திரண்டாவதாவதால், இவ்வதிகாரத்திற்கும் பாசுரம் வேண்டியிருப்பதால் இது இவ் வதிகார நிகமநப் பாசுரமாகும். அதனால் இவ்வதிகாரத் தொடக்கத்திலுள்ள ச்லோகார்த்தம் இங்குச் சொல்லத் தகும். அதனால், ஸாரதீபிகையிலுள்ள அர்த்தம் ஸாராஸ்வாதிநியில் கடைசியாகக் கூறப்பட்டிருந்தாலும் முதலில் ஸாராஸ்வாதிநியில் சொல்லப்பட்ட அர்த்தமே கொள்ளத் தகும். எனவே மூன்றும் அடியில் மன்பற்றி இத்யாதியால் ப்ரவர்த்திதஸலிலஹாரீ என்று முன் சொன்ன இவ்வதிகாரார்த்தம் சொன்னால் பொருந்தும். அதனால் மோஹம் துறக்கலும் என்றவிடத்தில் மோஹத்து உறக்கலும் என்கிற பாடமும் விடப்படும். தன்பற்ற என்றும் தன் பெற்ற என்றும்பாடம். பாசுரத்தின்பொருளாவது— முன் அர்த்தாநுசாஸநக்ரமப்படி பெற்ற— ஜ்ஞாநமும், மோஹம் துறக்கலும்— ஸ்த்திரீகரணபாகப்படி கலக்கத்தை நீக்கலும், மூன்று உரையில்— பதவாக்ய யோஜநாக்ரமப்படி மூன்று ரஹஸ்யங்களில் பெற்ற தன் தன்மையும். ஜீவஸ்வரூபத்தின் தேஹாதிரேக-பரமாத்ம சேஷத்வாதி நிலையும்; பற்ற என்ற பாடமாகில் அதற்கு பூர்த்தியாக என்கிற பொருளும் உண்டு; அதைக் கொள்ளலாம். தன் பற்ற என்று மிருக்கலாம்; உரையால் துன்பம் நீங்குமே. தாழ்ந்தவர்க்கு = வணங்கிய சிஷ்யர்களுக்கு ஈயும்—ஸம்ப்ரதாயத்தைக் கொடுப்பதற்கான— தனித்தகவும் = ஒப்பற்ற ஆசார்யக்ருபையும், மன்பற்றி நின்ற வகை = ராஜாதிராஜனைய் ஸ்த்திர புருஷார்த்தமுமான பரமாத்மாவையே

निर्विष्टं यतिसार्वभौमवचसामावृत्तिभिर्यौवनं निर्धूतेतरपारतन्त्र्यनिरया नीताः सुखं वासराः ।
अङ्गीकृत्य सतां प्रसत्तिमसतां गर्वोऽपि निर्वापितः शेषायुष्यपि शेषिदम्पतिदयादीक्षामुदीक्षामहे ॥

---

விஷயீகரித்த, மஹான்களுடைய ஸௌவ்யாஹ்ருதங்களோடும் ஸௌசரிதங்களோடும் உரைக்கின்ற, மறையவர்பால்=வேதாந்தார்த்தம் அறிந்தவர்களிடமுள்ள சீர் அறிவோர்க்கு—சீர்மையில் ஈடுபட்டவர்களுக்கு இவை-இத்தனை அதிகாரார்த்தங்களை செப்பினம்—சொன்னோம்; 'மறையவர்பால்—மறையவரிடம்—அறிவோர்க்கு—அறியவிரும்புகிறவர்களுக்கு' என்றுமுரைப்பர். சின் பற்றி—சிறுமையானவற்றில் ஆதரம் வைத்துப் பெறும் பயன்-ப்ரயோஜநம் என்—என்ன? இவ்வாறாகாத உபதேசம் धूमादिमार्ग धूमादिमार्गங்களுக்கே யாவதால் க்ஷுத்ரமாகும். இப் பிரபந்தத்திற் கூறிய நான்குவிதமான அர்த்தங்களையும் மற்ற மஹான்களின் ஸௌவ்யாஹ்ருதங்களையும் ஸௌசரிதங்களையும் நமக்கு முன்னமே கூறிய நம் பூர்வாசார்யர்களிடமும் இப்போதுள்ள மஹான்களிடமுமுள்ள சீர்மையிலீடுபட்டிருப்பவருக்கே நாமும் சொன்னோம்; अनधिकारिக்கல்ல. இவற்றை விட்டால் சின்மை பற்றியதாகு மென்றபடி.

தன் பெற்ற என்பது ஸாரதீபிகாபாடம். தன்பற்ற என்ற பாடத்தில் தன்பு-அபகர்ஷம்; அது இல்லாத என்று உரை காண்கிறது. தன்பு என்ற சொல் உண்டாகில் அது சுத்தபாடமே. தன் பற்று அது அன்மை யெனப் பிரித்து அன்மை யென்பதற்கு இன்மை யென்று பொருள்கூறி தனக்கு ஸ்வாதந்த்ர்யமிராமை மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தமென்பர் ஸாராஸ்வாதினியில் தன் பற்ற தன்மை—மூன்று உரைகளில் மூலமந்த்ரார்த்தம்; தனித்தகவாவது உபாயாந்தரஸ்த்தாநநிவேசமாம் க்ருபை த்வயார்த்தம்; மன் பற்றி நின்றவகை—சரமச்லோகார்த்தம் என்ற யோஜனையும் உளது. ஸாரதீபிகை முதலிலிருந்து ஜீவர்களுக்கு ஸ்ருஷ்டிகாலத்தில் வரும் ஜ்ஞாநவிகாஸமும் விஷயமோஹத்தால் வரும் உறக்கலும்=அஜ்ஞாநமாம் நித்ரையும், பகவத்க்ருபையினாலே பிறகேற்பட்ட மந்த்ரங்கள் மூலமான தன் தன்மையும் முக்யோபாயமான பகவத்க்ருபையும் நிர்யாணத்திற்குப் பிறகு மன்னனான பகவானைப் பற்றிய பெருங்கைங்கர்யமு மென்று உரைத்தது. முன்மொழிந்ததே ஸ்வரஸமாகும்.

தம் காலமெல்லாம் சின் பற்றாமலே கழிந்தது; மன் பற்றி நின்ற நாமினி அபேக்ஷிப்பதும் शेषिदम्पतिदयादीक्षैயே யென்கிறார் निर्विष्टमिति. यतिसार्वभौम-எதிராஜரான எம்பெருமானாரின் वचसां—ஸ்ரீஸூக்திகளின் आवृत्तिभिः பாராயணங்களுடனேயே யௌவநமானது निर्विष्टम् அநுபவிக்கப்பட்டது. யௌவநம் ஸ்த்ரீகளோடு சேர்ந்தபோது போக்யமாகும். நமது யௌவநத்துக்கு ஆவ்ருத்திகளே ஸ்த்ரீகளென்றபடி. वासराः—தமது நாட்களெல்லாம் निर्धूतेतरपारतन्त्र्यनिरयाः பிறருக்கு அடிமையாயிருக்கை யென்கிற நரகம் விலக்கப்பட்டு नीताः-கழிக்கப் பெற்றன. सतां—நல்லோர்களுடைய प्रसत्ति—அநுக்ரஹத்தை अंगीकृत्य—பலனாகக் கொண்டு असतां—பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய गर्वोऽपि நிர்

செப்பச் செவிக்கமுதென்னத் திகழுஞ் செழுங்குணத்துத்
தப்பற்றவருக்குத் தாமே யுகந்து தருந்தகவால்
ஒப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தி லுறைத்துரைத்த
முப்பத்திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித்திருவே. 51

---

வாத கர்வமும் निबद्धाः—அணைக்கப்பட்டது. நல்லோர்களுக்கு ஸந்தோஷ கரமாய் பாஹ்ய குத்ருஷ்டி நிராஸகமுமான க்ரந்தங்களுமியற்றப்பெற்றன. शेष-वायुषि अपि--மிகுதியான ஆயுள்காலத்திலும் சின்பற்றுமல் शेषिदम्पति-.சேஷியான திவ்யதம்பதிகளின் (ச்ரீநாராயணர்களின் दया மூலமான ஸங்கல்பத்தை उदीक्षामहे—நிமிர்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறோம். இவ்வளவு நாளும் ஒருவாறு அவர்களின் தயாதிலையாலேயே எல்லாம் நன்கு நடந்தேறின; இதனால் இந்த க்ரநதம் முடிந்த வார்த்தைத்தில் அருளியதாகும்.

அந்தாதித்தொடைப்பிணங்க முன்பெற்ற என்ற பாசுரம் நிகமநாதிகாரமுடிவுப்பாசுரமாயிற்று. அதிகாரஸங்க்ரஹப்பாசுரங்களுக்குள்ள விசேஷத்தை அந்தாதியின் முடிவான ஒரு பாசுரத்தால் கூறுகிறார் செப்ப இதி. இதில் முப்பத்திரண்டிவை யென்பது எழுவாயாகும். திகழுமென்பது வினைமுற்று. இதை முப்பத்திரண்டுக்கு விசேஷணமாக்கினால் மொழித்திரு என்பதை மொழித்திருவாகும் என்று க்ரியாபதமாக்க வேண்டும். இந்தப் பாட்டு அந்தாதியாயிருப்பதால் முப்பத்திரண்டுஎன்பதற்குஇதன் முன்னுள்ள அந்தாதிப் பாட்டுக்களென்ற பொருள் தரும். செழும் குணத்து=ச்லாக்யமான குணங்களை யுடையவரும். தப்பற்றவர்க்கு—தோஷமில்லாதவருமான புருஷர்களுக்கு; பகவத்பாகவதர்களென்று சேர்க்க வேண்டும். உகந்து=ஸந்தோஷித்து. தாமே தரும்=தாமே அர்த்தங்களை யளிக்கவான தகவால்—தயையினாலே, ஒப்பு அற்ற=ஸத்ருசமில்லாத, நால்மறை=நான்கு வேதங்களின் உள்ளம் கருத்தில்=தாத்பர்யார்த்தம் கொண்ட மனத்தில் உறைத்து=பொன்னை உறை கல்லில் உறைத்தாற் போலே உறைத்து. உரைத்த—சொல்லப்பட்டவையும், மு தமிழ்—இயல் இசை நாடகம் என்கிற மூன்று வித தமிழ்களோடு சேர்ந்த, மொழி=பாஷைக்கு அல்லது இந்த க்ரந்தத்திற்கு திரு—அலங்காரமாயுமுள்ள, முப்பத்திரண்டு இவை=இவ் அந்தாதிப்பாட்டுக்கள், செப்ப=தக்கவாறு சொல்லும் போது செவிக்கு=கேட்போரின் காதுகளுக்கு அமுது என்ன திகழும்—அம்ருதமென்னும்படி விளங்கும்.

ஸத்துக்களிடத்திலே=பகவானும் பாகவதர்களும் உகந்து க்ருபைகூறும் போது நான்மறை முதலான ப்ரமாணங்களின் பொருள் நன்கு விளங்கும். அதிலே உறைத்துப் பார்த்து செவ்வையான விசேஷார்த்தங்களை யெடுத்து இவ்வந்தாதிப்பாட்டுக்கள் இயற்றப் பெற்றன. இனிமையான சொற்களும் இசையும் உசிதமான அபிநயமும் சேர்ந்துள்ள பாஷைக்கே இவை அலங்காரமாகும்; ஆதலால் செவிக்கு அமுதாகும்.

இங்கு தாமே என்ற சொல்லுக்கு பகவத்பாகவதர்கள் என்ற பொருள்

आस्तिक्यवान् निशितबुद्धिरनभ्यसूयुः सत्संप्रदायपरिशुद्धमनाः सदर्थी ।
स तभीतिरहितः सतृणेष्वसक्तः सद्वर्तनीमनुविधास्यति शाश्वतीं नः ॥

மறையுரைக்கும் பொருளெல்லாம் மெய்யென்றோர்வார்
மன்னிய கூர்மதியுடையார் வண்குணத்திற்
குறையுரைக்க நினைவில்லார் குருக்கள்தம்பால் (மாற்?)

---

அவ்வாறு அத்யாஹாரத்தைக் கொள்வதால் வந்ததாகும். இனி, தாமே யென்று மறைகளைச் சொன்னதாய், தாமே=ஒப்பற்ற நான்மறைகள்தாமே ஸத்பாத்ரங்களை உகந்து தயவால் தரும்=தம்மையே தாம் தெளிவாகத் தருகின்ற நான்மறைகளின் உள்ளக்கருத்தில் என்று உரைக்க. தவம்புரி கின்றவர்போன்றார்க்கு வேதங்கள் தாமே தோன்றுமே; வித்யாதேவியார் தாமே தயையால் தம்மை யாவிஷ்கரிக்கிறாரென்னலாமே. முப்பத்திரண்டிவை என்பதற்கு இம்முழு க்ரந்தமான முப்பத்திரண்டு அதிகாரங்கள்பொருளானால் முத்தமிழ் இத்யாதிக்கு மூன்றுவிதமான தமிழ்—வசனநடையான தமிழ்,பாட்டான தமிழ், அருளிச்செயல்போன்ற உதாஹரிக்கப்பட்ட தமிழ் என்ற முத்தமிழ்சேர்ந்த, மொழித்திரு=வடமொழியாம் ஸம்பத்தையுடைய வையென்க.

தக்க அதிகாரிகள் பிற்காலமெல்லாம் இந்த க்ரந்தத்தில் சொன்ன வழியிலீடுபடப்போவது நிச்சயமென்கிறார் आस्तिक्येति. आस्तिक्यवान्=வேதம் எந்தெந்த பதார்த்தத்தை எவ்வெவ்விதமாகச் சொல்லுகிறதோ அதனை அவ்வவ்விதமே நம்பியிருப்பவராய் निशितबुद्धिः—குதர்க்கங்களைக் கழிக்கக் கூர்மையான புத்தியுடையராய் अनभ्यसूयुः=பிறர் குணத்தை தோஷமாகக் கொள்ளும் பொறாமையிராதவராய் सत्संप्रदाय परिशुद्धमनाः—நல்ல ஸம்ப்ரதாயப்ராப்தியாலே நிர்மலமான மனமுடையராய் सदर्थी-நல்லதையே விரும்புகின்றவராய் संप्रेतभीतिरहितः—அப்ராமாணிகரின் கட்டுப்பாட்டினின்று அஞ்சாதவராய்—அடங்காமற்போனால்என் செய்வரோஎன்று பயப்பட்டு ப்ராமாணிகத்தை விடுவது தகாதென்பராய் सतृणेषु-த்ருணத்திற்குஸமமான அவர்கள் காட்டும் அற்ப புருஷார்த்தங்களில் असक्तः-பற்றற்றவருமானவர் शाश्वतीं-எப்போதுமிருக்கிற नः=सद्वर्तनीं-நம் நல்லோர் காட்டிய நல்வழியை. अनुविधास्यति—அநுஸரிப்பர்.

இந்த ச்லோகார்த்தத்தையே பாசுரத்தாலும் விளக்குகிறார். மறை இதி. எங்கள் என்றும் புகுதுவாரே என்றுமிருப்பதால் இதுவும் ச்லோகம் போல் ஸத்ஸம்ப்ரதாயவம்சப்பிறவியிராதவர்களும் இதில்தாமே சேருவார்களென்றறிவிக்க வந்ததவை யெனத் தெரிகிறது. வேதத்தினால் உரைக்கப்பட்ட அபூர்வமான அர்த்தங்களெல்லாம் ஸத்ய மென்று நிச்சயித்திருப்பவராய்-ஆஸ்திக்ய வான்களென்றபடி. மன்னிய—நிலையான=குதர்க்கத்தால் அசையாத, கூர்மையான புத்தி யுடையவராய் வண்குணத்தில்=பிறரின் சிறந்த குணத்தில்—குறை உரைக்க—தோஷம் கூற நினைவு இல்லார்=எண்ணமிராதவராய், பிறர்குணத்தையே தோஷமாக நினைப்பது அஸூயை. அதில்

கோதற்ற மனம்பெற்ருர் கொள்வார் நன்மை
சிறைவளர்க்குஞ் சில மாந்தர் சங்கேதத்தாற்
சிதையாத திண்மதியோர் தெரிந்தவோரார்
பொறைநிலத்தின் மிகும் புனிதர் காட்டு மெங்கள்
பொன்ருத நன்னெறியிற் புகுருவாரே. 52

லாதவரென்றபடி—பிறருடைய குணங்களைப் பொறுக்காமையும் அஸூயையாகும். அதற்கு மேற்பட்டதாய் இரு அஸூயை. குருக்கள் தம்பால்—ஸதாசார்யர்களிடம்; ஸத்ஸம்ப்ரதாயபரிஶுத்தமநா என்றது இங்குக் கூறவேண்டியிருப்பதால் ஆசார்யர்களிடமிருந்து—அவர்கள் மூலமான என்று இதற்குப் பொருள். குருக்கள் தம்மால் என்றே பாடமிருக்கலாம். கோது அற்ற—தோஷமில்லாத சுத்தமான மனத்தைப் பெற்றவராய், நன்மைகொள்வார்=நல்லவற்றைத் தேடிக் கொள்பவராய்; இது ஸதர்த்தீ என்பதன் பொருள். ஸங்கேதபீதிரஹித: என்றதை விவரிக்கிருர் சிறை இதி. சிறை வளர்க்கும்=க்ஷுத்ர பல காராக்ருஹ ஸ்திதியை வ்ருத்தி செய்கின்ற சில=மந்தரான மாந்தர்=மனிதர்களின் ஸங்கேதத்தால்=கட்டுப்பாடு காரணமாக சிதையாத-கெடாத திண்-திடமான, புத்தியுடையராய்—அவ்வித கட்டுப்பாட்டிற்கிணங்கினுல் ஸம்ஸாரமே வளரு மென்றபடி. தெரிந்தது ஒரார் என்பது ஜ்ஞாதக்ஷுத்ரலக்ஷ: என்றதை யாதலால் க்ஷுத்ரமென்று தெரிந்ததான புருஷார்த்தத்திலே மனம் வைக்காதவரென்றதாம். அல்லது தெரிந்து அது ஓரார். கட்டுப்பாட்டுக்குட்பட்டால் அது=சிறை யென்று தெரிந்து அந்த க்ஷுத்ரபலத்தில் மனம் அற்றவர்; இதற்குப் புகுருவாரே யென்பதில் அந்வயம். தெரிந்தோர்வார் என்று பாடமாகில்—தெரிந்து நல்லதை விவேகித்து அதை ஓர்வார் ஆதரிப்பவர் என்று ஒருவாறு பொருளாகும்; ஜ்ஞாதக்ஷுத்ரலக்ஷ: என்பதின் பொருள் விளங்காது. பொறை—பொறுமையில் நிலத்தின்—பூமியைக்காட்டிலும் மிகும் மிக்கரான புனிதர்—சுத்தரான ஆசார்யர்களால்; பூமியைக்காட்டிலும் மிகும் பொறை=அதிகமான பொறுமையுடையரென்றுமுரைப்பர். பொறைநிலத்தில்—பொறுமையின் கடையெல்லையில் மிக்கரான புனிதரென்றன பழைய உரைகள். காட்டும்=காட்டப்பட்ட பொன்ருத அழியாத நல்=நல்லதான எங்கள் நெறியில்-இந்த ரஹஸ்யத்ரயஸாரமார்க்கத்தில் புகுருவாரே=புகுவது நிச்சயமென்றபடி—புகாதவர்களுக்குக் கீழ்க்கூறிய ஆகாரங்களில் சில இல்லையென்று கொள்க. இந்த ஸம்ப்ரதாயவம்சத்திலேயன்றி வேறிடத்தில் பிறந்தவர்களும் இந்தக் குணங்கள் பெற்ற பிறகு இதிலே [புகுந்து கோபாயதி ஸத: என்றபடி தம்மைக் காத்துக்கொள்வரென்றபடி. பொறுமையை எதற்காகச் சொல்ல வேண்டுமென்னில்—சிறை வளர்க்கும் சில மந்தர்களுடைய ஸங்கேதமே பூமியில் ப்ரபலமானுலும் அநுவிஷயத்தில் நமக்குப் பொறுமை முக்யம். பொறுத்தவன் பூமியாள்வான். அது விவேகம் வந்து அவரவர்தாமே சேரும்படி செய்யுமென்றதாம்.

இதுவழி யின்னமு தென்றவ ரின்புலன் வேறிடுவார்
இதுவழி யாமல வென்றறிவா ரெங்கள் தேசிகரே
இதுவழி யெய்துக வென்றுகப்பாலெம் பிழைபொறுப்பார்
இதுவழியா மறையோரருளால் யாமிசைந்தனமே. 53

---

இந்த க்ரந்தத்தில் எல்லா விஷயங்களையும் விவேசனம் செய்து விரிவாக உரைத்திருப்பதால் பரிசீலனம் செய்கிறவர்கள் நன்குத் தெளிந்து புகுந்து ஸம்ஸாரச்சிறையினின்று விடுபட்டு விளங்குவரென்கிறீர்: ஆனாலும் பூர்வாசார்யர்கள் ரஹஸ்யார்த்தங்களை மறைத்துக் காத்திருந்தது தெரிகிறதே; எம்பெருமானாரும், ச்ரீகீதாபாஷ்யத்தில் சரமச்லோகவுரையில் வெளிப்படுத்தாமை மட்டுமின்றி गद्यத்திலும் शरणं प्रपद्ये என்று शरणागतिயை யநுஷ்டிக்கும் போதும் अङ्गपञ्चकादिகளை விரித்தருளவில்லை. ஆகையால் இப்படி நீர் வ்யக்த மாக்குவது பிழையா மென்ன உத்தரம் அருளிச்செய்கிறார் இது இதி. இதுவழி—வேதத்தில் விதிக்கப்பெற்ற ப்ரஹ்மஜ்ஞாநாதியே இன் அமுது=மோக்ஷஸாதநமாகையாலும் போக்யமாயிருப்பதாலும் ஆத்மாவை அழியாதபடி செய்வதாலும் இனிய அமுதாகும் என்றவர்=என்றருளியவரும். இன் புலன் வேறு இடுவார்=இனிதாகத் தோன்றும் விஷயங்களை வேறாக வைப்பவரும்; அமுதுக்கு ஸாதநமாகாவென்றும் அமுதை விடவேறான விஷமாகுமென்றும் அல்லது विषस्य विषयाणां च दूरमत्यन्तमन्तरम् என்றபடி விஷம் உண்பவனை அழிக்கும், விஷயம் நினைத்தவனையும் அழிக்கும்; விஷத்தால் தேஹநாசம்; விஷயத்தால் ஆத்மநாசமென்று விலக்குபவருமென்றபடி இங்குக் கைவல்யத்தையும் கூட்டுக. இன்னமுது—இனிய மோக்ஷஸாதன மென்பதால் இனிதாகாத கைவல்யம் அமுக்யமான மோக்ஷமென்றதாம். இதுவழி ஆம்=ப்ரமாணங்களில் மோக்ஷஸாதநமாகத் தோன்றும் பலவற்றில் பக்தி ப்ரபத்திகளே நேர் வழியாகும்; இது வழி அல=இவை தவிர கர்மயோகம் ஜ்ஞாநயோகம், ச்ரவணம் மநநம் நாமஸங்கீர்த்தநம் க்ஷேத்ரவாஸம். புருஷோத்தமத்வஜ்ஞாநம், द्वयोच्चारणமாத்திரம் ஆத்மஸமர்ப்பணமாத்ரம் மஹாவிச்வாஸமே அநிவாரணமாத்ரமே ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தியே என்றும் போன்றவை யெல்லாம் நேர் வழியல்ல. என்று அறிவார்—என்று தெளிந்தவர்களான எங்கள் தேசிகரே—எங்கள் ஆசார்யபரம்பரையிலுள்ளவரே. இங்கே வாக்ய முடிவாக்காமல் பொறுப்பார் என்ற வினையோடு அந்வயிப்பதாம். இது வழி=सपरिकराङ्गभरन्यास அநுஷ்டாநமாகிற வழியானது, எய்துக=உண்மையான ஹிதம் தெளிந்து உய்ய வேண்டுமென்ற ஊக்கமுள்ளவரெல்லோரும் கொள்ள நீடித்திருக்க வேணும் என்று உகப்பால்=என்று நினைத்து நாம் செய்ததை உகந்திருப்பதால், எம் பிழை—ரஹஸ்யார்த்த ஸ்பஷ்ட ப்ரகாசநமென்கிற தோஷத்தைப் பொறுப்பார்=பொறுத்தருள்வர். எம்பெருமானார் ரஹஸ்யமேயான ஸித்தாந்தார்த்தத்தை வேதாந்தஸூத்ரகீதாதிகளுக்கு வ்யாக்யாநம் செய்து பிறர்பார்க்குமாறு ஸ்பஷ்டமாக்கியருளினார். தாம் அநுஷ்டித்த

ப்ரபத்தியை அனைவரும் அறியும்படி ப்ரகாசப்படுத்த கத்யம் அருளினார். ரஹஸ்யமானது சிஷ்யர்கள் அனைவரும் அறியும் படி எங்கும் பரவி ஸதஸ்யமாயிற்று. ஆனாலும் உபதேசிப்பவர் இது ரஹஸ்யமென்றும் எண்ணமும் கூட நடமாடிய படியால் சில அம்சம் சொல்வதும் சில அம்சம் மறைப்பதுமாய் அரைகுறையாக்கினர். அதனால் வைச்வாநரவித்யையை யறியக் கேகயராஜனிடம் சென்ற பல ரிஷிகளைப் போலாயினர் இப்படி சாஸ்த்ரார்த்தவிச்வாஸமுள்ளவரும் கெடுகின்றனரே யென்று விஷ்ணுசித்த.வரதாசார்ய. வாதிஹம்ஸாம்புவாஹாசார்யர்கள் ஸங்க்ரஹித்து வெளியிட்டனர், அதனால் இதை ப்ரபஞ்சித்தோம்; நாம்மட்டும் இழிபவில்லை யென்று நாலாம் அடியால் அறிவிக்கிறார். மறையவர் அருளால் = வேதவித்துக்களான ஆசார்யர்களின் அநுக்ரஹத்தை முன்னிட்டுக்கொண்டு இது வழி ஆ = இந்த ஸாங்கப்ரபத்யநுஷ்டாநமே உலகம் ஆதரிக்கும் வழியாவதற்காக, संगृहीतं रहस्यैर्विपुलमलमतीनां स्थाने; पशापयिष्यन् என்றபடி இந்த க்ரந்தமியற்றுவதும் ஒரு வழியாக யாம் இசைந்தனம் = அங்கீகரித்தோம். பெரியோர்கள் நடந்து தேய்ந்த வழியில் விழுந்த கண்டகங்களை அப்புறப்படுத்தி ஸந்மார்கசோதநம் செய்வது ஏதுபதேசம் பெற்று நடப்பவருக்கு நன்மைக்காமாகையால் குற்றமாகக் கொள்ளலாகாதென்றபடி.

இந்த க்ரந்தம் ரஹஸ்யத்ரயத்தின் பொருளை விளக்குவதற்கே யாதலால் அதற்காக ரஹஸ்யத்ரயம் ஸாரதம மென்பதைத் தொடக்கத்தில் அருளிச்செய்ததற்கிணங்க முடிவிலும் இவ்வளவு ஸாரத்துடன் இந்த ரஹஸ்யத்ரயத்தையநுஸந்திப்பது முக்யமென்பதற்காக ரஹஸ்யத்ரயவிஷயமாகவும் ஒரு பாட்டு அருளிச்செய்கிறார் எட்டும் இதி. தத்துவஜ்ஞாநத்திற்காம் மூலமந்த்ரமும் அநுஷ்டாநகாலத்தில் த்வயமும் வேண்டியிருப்பதால் அவ்விரண்டே போதுமே; சரமச்லோகம் அவச்யமன்றென்னுமைக்காக அது மஹோபகாரக மென்பதையும் இங்குத் தெளிவிக்கிறார். எட்டும்—எட்டக்ஷரமான மூலமந்திரத்தையும் = இரண்டும் த்வயத்தையும் அறியாத—தெரிந்துகொள்ளாமலிருந்த எம்மை—ஸம்ஸாரிகளான நம்மை இவை = இவற்றை அறிவித்து अथर्वनारायणम् முதலானவற்றை ஆதியில் உபதேசித்ததால் அறிவிததருளி; இதற்குப் பலன் அருளுகிறார் எட்ட இதி எட்ட வொண்ணாத = உபாயாநுஷ்டாநம் செய்யாதவர்க்குக் கிட்டமுடியாத,இடம் = பரமபதத்தை தரும் = தந்து கொண்டிருக்கிற எங்கள் மாதவனார் = நமது ச்ரிய; பதியாகிய இது வரையில் ஸ்தோபதேசத்திற்கு முன்னமே அவன் செய்துள்ள உபகாரம்;

எட்டு மிரண்டு மென்றவிடத்தில் இரண்டுமென்பதால் द्वयम् चरमश्लोक மென்கிற இரண்டைக் கொள்வது வேண்டா: சரமச்லோகத்தை மேலே அருளுகிறாரே, எட்டுமிரண்டும் பத்தாய் பத்து பக்தியாமென்று (திருமழிசையாழ்வார்பாசுரத்தில் கொள்ளுகிறபடி கொண்டு) பக்தியையநுஷ்டிக்கவறியாத எம்மையென்றுரைக்கலாம். எட்டும் அஷ்டாங்கயோக மென்கிற பரபக்தியையும் இரண்டும் = பரஜ்ஞாந பரமபக்திகளையும் அறியாத என்னலு

எட்டு மிரண்டு மறியாத வெம்மை யிவை யறிவித்து
எட்டவொண்ணாத இடந்தரு மெங்கள்(ளம்) மாதவனார்
முட்ட வினைத்திரள் மாள முயன்றிடும் அஞ்சலென்றார்
கட்டெழில் வாசகத்தாற் கலங்காநிலை பெற்றனமே 54.

---

மாம். எட்டு = अपहतपाप्मत्वம் முதலான எட்டு ஆத்மகுணங்கள்; இரண்டு ஜ்ஞாநம் சக்தி என்கிற இரண்டு; எம்பெருமானுக்கு அஸாதாரணமான ஸ்வாதந்த்ர்யம், காருண்யம் என்கிற இரண்டு; ஸித்தோபாயமும் ஸாத்யோபாயமும் ஸித்தப்ராப்யமும் ஸாத்ய ப்ராப்யமுமென்றெல்லாமாம். இப்படியே எட்டுமா மூர்த்தி யென்றாற் போன்ற பொருந்தும் பல எட்டுக்களையும் கொள்க. எட்டு மிரண்டும் = எட்டுவதற்கு ஸுலபமான மூலமந்த்ரத்தையும் த்வயத்தையும் அறியாத என்றும், மேலே 'எட்ட வொண்ணாத' என்பதற்கிணங்க உரைக்கலாம். எட்டுமிரண்டும் பத்து என்ற சிறிய கூட்டலையும் அறியாத நம்மை என்றும் சாதுர்வாகப் பொருள். இவை யென்பதற்கு முன்பாசுரத்தில் சொன்னவை பொருள். இப்படியருளும் மாதவனார் = சரிய; பதியாய், 'நீங்கள் முட்ட = ஸஞ்சிதப்ராரப்த புண்யபாபவர்க்கங்கள் முழுமையும் மாள = என் ப்ரஸாதத்தால் அழிவதற்காக முயன்றிடும்-ப்ரபத்தியைச் செய்ய முயல வேண்டும்; அஞ்சல் = அஞ்சவேண்டா' என்றார் = என்றருளிய மாதவனார்-மதுவம்சமென்கிற யதுவம்சத்தில் தோன்றிய கண்ணபிரானாரின் கட்டு எழில் வாசகத்தால் = அர்த்த புஷ்டியும் சப்தஸௌஷ்டவமும் உடையதாய்த் திகழ்கின்ற சரமச்லோகத்தினால், கலங்காநிலை—मा शुचः என்றதால் கலக்கமற்ற நிலையை பெற்றனம்—அடைந்துளோம். அநாதியான அஷ்டாக்ஷரத்தையும் த்வயத்தையுங்கொண்டு மோக்ஷமளித்து வரும் திருமால் गुरूपाय உபதேசங்களைக் கேட்டுத் திகைத்து வருந்தும் அர்ஜுநனைக் குறித்து ஸஞ்சிதத்தோடு ப்ராரப்தத்தையும் சேர்த்துப் போக்கும் ப்ரபத்தி யென்கிற लघूपायத்தை உபதேசிப்பதற்காகச் சொன்ன ச்லோகம் गुरूपायங்களையெல்லாம் விடலாமென்று ஸ்பஷ்டமாகச் சொன்னதாலும் ப்ரபத்தியைக் கர்த்தவ்யமாக விதித்ததாலும் இதனால் எல்லா பாபங்களும் போமென்று நன்கு பலனை விளக்கி मा शुचः என்று முடித்ததாலும் அஷ்டாக்ஷரத்தால் தத்துவஜ்ஞாநமுள்ளவனுக்கு த்வயத்தினால் ப்ரபத்தியை யநுஷ்டிப்பதில் தீவ்ரமான ருசியை உண்டுபண்ணியதால் இந்த ச்லோகம் மஹோபகாரகமாயிற்றென்ற படி.

எங்கள் மாதவனாரென்றவிடத்தில் எங்கள் அம்மாதவனார் என்றும் படிப்பர். அப்போது. க்ருஷ்ணாவதாரத்திற்கு முன் இருந்த மாதவனாரே என்றதாம். மாதவனாராகிய அஞ்சலென்றாருடைய வாசகத்தால் என்று ஒரே வாக்யமாக்கலாம். இவ்வளவால் மேற்கூறிய ஸாரங்களோடு ரஹஸ்ய த்ரயத்தைத் தெளிகை இந்த க்ரந்தத்தின் கார்யமென்றதாயிற்று

இனி இரண்டு பாசுரங்களால் எம்பெருமான் ப்ரீதியும் அதற்கான நிலைகளைப் பெறுவதுமே இதன் பரமோத்தேச்யமென்று உபஸம்ஹாரம் செய்

**வானுளமர்ந்தவ ருக்கும் வருந்த வருநிலைகள்**
**தானுளனு யுகக்குந்தர மிங்கு நமக்குளதே**
**கூனுள நெஞ்சுகளாற் குற்றமெண்ணி யிகழ்ந்திடினும்**
**தேனுள பாதமலர்த் திருமாலுக்குத் தித்திக்குமே. 55.**

---

கிறார் வானுள் இதி. வான் உள் = ஸ்வர்கத்தில் அமர்ந்தவர்க்கும்— நிலைத் திருக்கும் ப்ரஹ்ம.ருத்ர இந்த்ராதிகளுக்கும் (பரமபதத்திலிருக்கும் நித்ய ஸூரிகளுக்கும்) வருந்த = மிக்க ப்ரயாஸை பட்டபிறகே வரும்—கிடைக்கக் கூடிய நிலைகள். தானுளனாய் = நம்மில் ஒவ்வொருவனும் இங்குக் கூறிய பரமைகாந்தி நிஷ்டைகள் தன்னிடமுள்ளவனாய். உகக்கும் தரம்—பிறரிடமும் அவற்றைக் கண்டு அஸூயையின்றி ஸந்தோஷப்படுவதாகிற ஏற்றம் இங்கு- இந்தப்ரக்ருதிமண்டலத்திலும் நமக்கு உளது = நமக்கு உண்டாயிருக்கிறது; அதற்குத் தக்கவாறு க்ரந்தம் அமைந்திருக்கிறது. ஏ—வியப்புக்குறி இங்கே வானுள் என்ற எதுகையின்பத்திற்காக தானுளனாய் என்று ப்ரயோகம்; அதனால் தாமுளராய் என்னவில்லை. அவரவர் ப்ரத்யேகமாகக் காண்பதேயன்றித் தனக்குள்ளதைப் பிறருக்குச் சொல்லித் தற்புகழ்ச்சி கொள்வதில்லையென்பதும் இதனால் ஸித்திக்கும். உளதே என்பதற்கு உளதோ என்று கவனியுங்களென்று முரையாம். கார்பண்யமும், அநந்யகதிகத்வமும் தீவ்ரமான முமுக்ஷையும் ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரத்திற்சொன்ன நிஷ்டைகளும் விவேகிகளான ஸநகாதிகளுக்கும் கூடுவதரிதாயிருக்க நமக்குக் கிடைப்பது எளிதன்று. இக்க்ரந்தத்தில் சொன்னபடி நடப்பவர்களில் ஒவ்வொருவருக்கும் இந் நிலையுண்டாவது முதற்பலன். கூன் உள = கோணலான நெஞ்சுகளால் = தங்கள் நெஞ்சுகளைக்கொண்டு இங்கே ஆல் என்பதை அசையாகப் பிரித்தால் நெஞ்சுகள் என்பது இகழ்வதற்குக் கர்த்தாவாகலாம். குற்றம் எண்ணி = நம்மிடத்திலும் நமது க்ரந்தத்திலும் குற்றத்தைத் தாங்களாக நினைத்துக்கொண்டு இகழ்ந்திடினும் = நிந்தித்தாலும்; உளதே என்று தனிவாக்யமாம்; அல்லது முன்னடி இத்துடன் एकवाक्यமாய் நமக்குத் தரமுள்ளதையே குற்றமாக எண்ணி இகழ்ந்தாலும் என்று உரைக்கலாம். கூன் உளநெஞ்சுகளுக்குத் தித்திக்க ப்ரஸக்தியிராமற் போனாலும் என்றதாயிற்று. தேன் உள = स्वामृत-स्यन्दिनि पादपङ्कजे என்றபடி மோக்ஷாநந்தமாகிற தேனைப் பெருக்கும் திருவடித் தாமரையுடையனான. திருமாலுக்கு—ச்ரிய: பதிக்கு தித்திக்குமே—கீழ்ச் சொன்ன தரமும் அதற்குக் காரணமான இக்கிரந்தமும் திருவுக்கும் மாலுக்கும் போக்யமாயிருக்குமென்றபடி. திருமாலின் திருவடியினின்று தேனைப் பருக பக்தப்ரபந்நர்கள் அவா கொண்டிருப்பர். எம்பெருமானும் அதினுடைய போக்யதையைத் தானறிவதற்காகவே வடபத்ரசயனாய் ஏகாந்தத்தில் पदार-विन्दத்தை मुखारविन्दத்தில் வைத்துக்கொள்ளுகிறானென்று சமத்காரமாகச் சொல்வர். அப்படிப்பட்ட தேன்பெருக்கில் ஈடுபடும்படி செய்யும் இக்ரந்தமென்கிற காரணத்தினால் இது அவனுக்கு மிகவும் போக்யமாய் நிற்கிறது.

வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் விரகாலடியோம்
உள்ளத் தெழுதியதோலையி லிட்டனம் யாமிதற்கென்?
கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீர்
எள்ளத்தனை யுகவா திகழாதெம் மெழில்மதியே. 56.

---

இந்த க்ரந்தம் நமது முயற்சியால் ஆனதாகில் குணங்களைப் பிறர் கூறும் போது உகப்பும் குற்றங்களைக் கூறும்போது கலக்கமு முண்டாகலாம்; எம்பெருமானே स्वस्मै स्वप्रीतये स्वयमेव कारयति என்று செய்திருப்பதால் நமக்கு இதில் யாதொரு ஸம்பந்தமுமில்லை யென்று ஸாத்விகத்யாகம் செய்கிறார் வெள்ளை இதி. வெள்ளை=வெண்ணிறமான பரிமுகர்=ஹயக்ரீவனார், பரி யாவது குதிரை. தேசிகராய் அப்புள்ளாரென்ற ஆசார்யராக அவதரித்து விரகால்=உபதேசமாகிற எழுதுகோலால் அடியோம்=ஆச்ரிதரான நமது; நம் ஸம்ப்ரதாயபூர்வாசார்யரும் அப்படியே என்பதற்காகப் பன்மை. உள்ளத்து=மனத்தில் எழுதியது—பதியச் செய்ததை. ஓலையில்=ஏட்டில் இட்டனம்—வைத்தோம். ஒருவர் பேசுவதை யந்த்ரத்தில் பிடிக்கிறார்கள். அந்த யந்த்ரத்தில் முள் வைத்து அது மூலமாக அவ்வொலியையே வெளிவரச் செய்கிறார்கள். அது போல் ஆசார்யர் உபதேசித்தபோது நம் மனமாகிற யந்த்ரத்தில் அது மூலம் ரேகைகள் ஏற்பட்டன. அந்த ரேகைகளில் நம் சிந்தையாகிற முள் பட்டு அதன் வாயிலாகவான அவ்வொலிகள் எழுத்தாணியாம் நம்மால் ஏட்டிலேற்றப்பெற்றன. ஆகையால் இச் சொற்களெல்லாம் ஆசார்யர் கூறியவை. யாம் இதற்கென்=நாம் எப்படி கர்த்தராவோம், நமக்கென்ன ஸம்பந்தம்? அல்லது ஓலையில் யாம் எழுதினம். இதற்கு என்=இதில் குற்றமெங்ஙனே வருமென்னலாம். ஆகில் ஆசார்யர்களிடம் கோதிருக்கட்டுமே யென்னில்—பரிமுகரே தேசிகராயிருப்பதால் அதற்கிடமில்லை. புத்தாத்யவதாரம் போல் ஆகாது பரிமுகரென்ற அவதாரம். அது வெள்ளையானது; சுத்தஸத்துவமயம். கூர்மதியீர்=கூர்மையான புத்தியுடைய நம் ஸம்ப்ரதாயஸ்த்தர்களே! இந்த க்ரந்தத்தை வேறு சிலரும் ஆதரித்து, கொள்ள இதன் படி நடக்க, துணியினும்=துணித்தாலும் எம்=எமது எழில் மதி=எம்பெருமானே இதற்குக் கர்த்தாவென்கிற உண்மையறிவால் ப்ரகாசிக்கிற புத்தியானது, எள் அத்தனை=எள்ளளவு கூட உகவாது=மகிழ்ச்சி பெறாது, நாம் செய்த க்ரந்தத்தைக் கொண்டார்களென்று நினைத்து ஸந்தோஷிக்காது, மற்ற மதாந்தர ஸம்ப்ரதாயாந்தரஸ்த்தர்கள் கோது என்று=ஸாரத்தை அஸாரமென்று இகழினும்=வெறுத்தாலும்—நிந்தித்தாலும், என் எழில்மதி எள்ளத்தனையும் இகழாது=வெறுப்புக் கொள்ளாது, எமது க்ரந்தமென்கிற மமத்வ புத்தியில்லையே பிறருடைய க்ரந்தத்தில் குண தோஷங்களைக் கூறுமிடத்திற் போல் மனம் ஒரே விதமாயிருக்கும். அப்படித் துணிவதாலும் இகழ்வதாலும் அவர்களுக்குத் தக்க பலனென்பது வேறு விஷயம். அது க்ரந்தகர்த்தாவான ஈச்வரனுக்கு அதீனம்; அவன் தானே ஆதியில் 'यो ब्रह्माणं

रहस्यत्रयसारोऽयं वेङ्कटेशविपश्चिता । शरण्यदम्पतिविदां संमतः समगृह्यत ॥
इति श्रीमद्रहस्यत्रयसारे निगमनाधिकारो द्वात्रिंशः
इति संप्रदायप्रक्रियाभागश्चतुर्थः
इति कवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य
कृतिषु श्रीमद्रहस्यत्रयसारः संपूर्णः

—०—०—

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने । श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥
श्रीमते निगमान्तमहादेशिकाय नमः । श्रीमते लक्ष्मीहयवदनपरब्रह्मणे नमः ॥
श्रीरस्तु

---

विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै । तं ह देवं आत्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये என்ற ச்வேதாச்வதர உபநிஷத்தின்படி பிரமனையுண்டாக்கி வேதங்களையளித்து ச்வேதாச்வமுகனாய் मधुकैटभसूदनனாய் பரமாத்ம ஜீவாத்ம ஜ்ஞாநத்தையும் விளைவித்து மோக்ஷத்திற்காக சரணாகதி எல்லோரும் அநுஷ்டிப்பதை எதிர்பார்த்தவனானான். அவனே இப்போது அந்த ப்ரபத்திசாஸ்த்ரார்த்தத்தையே உள்ளத்திலெழுதி ஓலையிலிடுவதிலும் தான் ப்ரதாநகர்த்தாவாய் என்னை நிமித்தமாத்ரமாக்கினான். அவனுக்கு வரும் ரஸாநுபவமே நமக்கு உத்தேச்யம்.

க்ரந்தமெழுதுகிறவர் தாம் அறிந்தவற்றை யெல்லாம் விடாமலெழுதிடுவாரென்று சொல்ல வியலாது, பல விஷயங்கள் தக்க ப்ரஸக்தியிராமையால் விடப்படும். இந்த க்ரந்தத்திற்குப் பிறகும் விரோதபரிஹாரம் முதலான க்ரந்தங்களில் வேறு விசேஷார்த்தங்களும் காண்பீர் ஆகையால் இது பெரிய ரஹஸ்ய மென்று பேர்பெற்றவாயிருந்தாலும் இதிலும் ஸாரார்த்தங்கள் ஸங்க்ரஹிக்கப்பட்டதுமாத்திரம்; விவரிக்க வேண்டிய அம்சங்கள் பல உள என்றறிவிப்பவராய் தாம் இன்னாரென்றறிவித்துக்கொண்டு இது திருமாலுக்குத் தித்திக்கிறாப் போலே அந்த திவ்யதம்பதிகளின் தத்துவம் உணர்ந்த மஹான்களெல்லோருக்கும் இவ்வர்த்தமே ஸம்மதமென்றறிவிக்கும் ச்லோகம் அருளிச்செய்கிறார் रहस्येति. वेङ्कटेशविपश्चिता—(ब्रह्मणा विपश्चिता என்றாற் போலாம் இது.) விசேஷஜ்ஞாநமுடைய தூப்புல் திருவேங்கட முடையானால் शरण्यदम्पतिविदां—உபாய பூதர்களான திவ்யதம்பதிகளை நன்கறிந்த மஹான்களுக்கு संमतः—இஷ்டமாயிருக்கிற रहस्यत्रयसारः=மூன்று ரஹஸ்யங்களின் மஹிமையும் ஸாரார்த்தமும் अयं=இவ்வாறானது இந்த க்ரந்தம் மூலமாக समगृह्यत=சுருக்கப்பெற்றது. रघुवंशादि சப்தங்களுக்குப் போலே ரஹஸ்யத்ரய ஸாரசப்தத்திற்கும் பொருளாம். மூன்று ரஹஸ்யத்தின் ஸாரமென்றது முக்யமான பொருள். समगृह्यत என்ற க்ரியாபதத்திற்கிணங்க இங்கும் அதையே கொள்வது. अधिकृत्य कृते ग्रन्थे என்ற வ்யாகரணப்படி அதே க்ரந்தத்திற்கும் பெயராகும். இதற்கு உரை செய்கிறவர்கள் மற்றும் பல க்ரந்தங்களையும் இந்த க்ரந்தத்தில் சப்தஸந்தர்ப்ப ரீதியையும் கண்டு மற்ற விசேஷார்த்தங்களையும் சரண்யதம்பதிவித்துக்களின் ஸம்மதிப்படி விரித்துரைக்கலாமென்றபடி.

1 व्याख्याश्च दीपिका प्राक् प्रकाशिकाऽऽस्वादिनी विवरणी च ।
संग्रह.कौमुद्युभयं द्रमिडगतिश्चाथ बोधनी सप्त ॥

2 श्रेष्ठा तत्र तु सर्वसूक्तिहृदयग्राहिस्फुरद्धीबलाः श्रीमद्वेदवतंसलक्ष्मणमुनिप्रष्ठास्तथा तान् श्रिताः ॥
प्रख्यातस्य मुनित्रयस्य गुरवो गोपालसूरीश्वराः सर्वस्वाद्यमदर्शयन् निखिलमप्यर्थं यया सा कृतिः ॥

3 व्यक्तश्चैतत् प्रकृतविषयव्याकृतीः प्रेक्ष्य कृत्स्ना सारास्वादिन्यनुसृतिरुचिर्लक्ष्यते बोधनी यत् ।
कामं सन्तु प्रतिपुरुषमप्याशया भिन्नभिन्नाः एकैकस्यां तदपि बहवः सन्ति संग्राह्यसाराः ॥

4 आभ्यस्त्वशेषग्रहणासमर्थैरभीष्टतत्तद्विशदावबोधैः ।
अभ्यर्थितो विस्तरमेवमाधां आदत्य भूरिद्रमिडोक्तिभंगीम् ॥

5 एकदेशिभिरुक्तानामर्थानां यत् असौष्ठवम् । तत्त्वं च यत् तत्र तत्र निष्कृष्टव्यमदर्शि तत् ॥

6 प्राप्तश्रीपदपुर्युपाख्य महित श्रुत्यन्तरामानुज श्रीयोगीशकृपाकटाक्षकलितश्रीमद्रहस्यत्रयः ।
तत्पादश्रित रंगलक्ष्मणमुनिप्रेक्षात्तवेदान्तधीः वात्स्यो व्याकृत वीरराघवसुधीः सारं सतां प्रीतये ॥

7 निर्दिष्टमिति यत् पद्यं गाथा वानुत् इतीह या । अनयोरनुसंधानं प्राप्तावसरमद्य मे ॥

8 श्रीमद्देशिकसंस्कृताखिलकृतिप्राकाश्यपूर्तौ मयि
प्रागेवास्य समन्ततः प्रचरणं संप्रेक्ष्य जोषं स्थिते ।
पार्थं प्रागिव सारथिर्हयमुखः श्रीमान् यतः प्रेरयन्
भक्तं मां निरवर्तयत् कृतिमिमां तत् स स्वयं प्रीयताम् ॥

श्रीमते रंगरामानुजमहादेशिकाय नमः । श्रीमते वेदान्तरामानुजमहादेशिकाय नमः ।
श्रीमते निगमान्तगुरवे नमः । श्रीमते भगवद्रामानुजाय नमः ।
श्रीपद्मावतीसमेत श्रीनिवासपरब्रह्मणे नमः ॥

इति श्रीमद्वेदान्तरामानुजयतीन्द्रमहादेशिकचरणारविन्दचञ्चरीकस्य श्रीमद्रङ्गरामानुजमुनीन्द्र-
महादेशिकपदपद्मसेवासमधिगतसर्ववेदान्तरहस्यार्थस्य तर्कार्णव-पूर्वोत्तरमीमांसाप्रदीपादि-
बहुविरुदभाजः प्रौढानेकतर्कमीमांसावेदान्तादिग्रन्थनिर्माणालङ्कर्मीणस्य पवित्रहृदयाचार-
पद्माधिवासिनीश्रीचक्रवर्त्याचार्यपुत्रस्यवात्स्यश्रीशैलसचक्रवर्तिनः वीरराघवाचार्यस्य
अभिनवदेशिकस्य कृतिषु श्रीमद्रहस्यत्रयसारव्याख्यारूपः

## सारविस्तरः संपूर्णः

शुभमस्तु

—•—•—

## उत्तरभागविषयसूची

உபயோகப்படும் படி இருக்கவேண்டுகை. अशास्त्रीयவழியில் சிந்தலாகா தென்கை **1193** गुरुपरम्परानुसंधानம் உபதேச காலத்தில் முக்கியமென்கை முறை தவறுமலும், उपदिष्टமாகாமல் புத்தியில் பட்டவையும் குருவின் அனுக்ரஹஸித்த மென்று உணர்ந்தும் உபதேசிக்கவேண்டுமெனல்.

நிகமநம்—அதிகாரங்களின் ஸங்க்ரஹத்துடன் முடித்தல்

**1194** இவ்வழி நடக்காதவர்க்குக் கேடும், நடப்பவர்க்கு உள்ளநன்மையும் இக்ரந்தம் பின்னுள்ள விவேகிகளுக்கும் பூர்வாசார்யர்களுக்கும் பிராட்டிக்கும் பெருமாளுக்கும் போக்யமென்கை

—o—o—

## 2 வதுபாகப்பிழைதிருத்தம்

629. 27. பர்வ. 161—56. 633. 4 नेति. मा. अनु. 132—13.
646. 1. டியாகவாயிரு 646. 34. இதிஹாஸ 17—6.
650. 11. தாருலற்ற 657. 16. வி. பு.. 9—120.
673. 6. கர்ணபர்வ. 77—52. 673. 20. 31. 113.
689. 33. षड्विधा. அஹிர்—37—29 35. स्नानं..பாத்மஸம்.சர்யா 33.
696. 11. विधेयान्तरமின்றிக்கே. 711. 13. कलौ......वि.पु 6.2.75
711. 20. பாகவதம். 12. 3. 51. 719. 28. உத்யோ. 31—3.
729. 7. भा. अनु. 142. இதிஹாஸ 920. 5 प्रथमपदம் ஸவரூபபரமாய்.

—•—•—

## முக்கிய संग्रहश्लोकங்களுக்கும் பாட்டுக்களுக்கும் குறிப்பு.

गुरुपरम्परा— गुरुभ्यः, பொய்கை, இன்பத்தில், என்னுயிர், एतेमह्यं, दया, ஆரண, நீளவந்து, காளம் வலம்புரி

1.उपो— आभगवत्तः, कर्मब्रह्म, ஆளும், मणिवर, திருவுடன். कर्मविधा.

2.सार— श्रुतिपथ, அமையாவிவை, शाखानाम्

3.प्रधान— आधेयत्व, நிலைதந்த, यद्येवं यति.

4.अर्थपञ्चक— मादौप्राप्यं, பொருளொன்றென, प्राप्यं ब्रह्म

5.तत्त्व— प्रकृत्यात्म. புருடன், தேறவியம்பினர். आवापो

6.परदेवता— आनैक्यं, வாதியர், जनपद

7.मुमुक्षुत्व— कालावतनि, நின்றபுராணன், विषमधु

8.अधिकारि— मुमुक्षुत्वे, வேண்டும்பெரும். प्रपन्नात्

9.उपाय— उपायः. நின்ற நிலைக்கு. कर्म ज्ञानम्

10.प्रपत्तियोग्य— अर्थित्वेन. அந்தணர், भक्त्यादौ

11.परिकर— दयानः அறிவித்தனர். प्रपात:

12.सांगप्रपदन— अभीष्टे. அறவேபரம் पुष्यत्स्यन्दन
13.कृतकृत्य— समर्थं. மன்னவர். भगवतिहरौ
14.स्वनिष्ठाभि— स्वरूपो. முக்கிய, स्वापोद्बोध
15.उत्तरकृत्य— संतोषार्थं, விண்ணவர், प्रणयिनमिव
16.पुरुषार्थ— स्वतन्त्र, வேதமறிந்த. नाथे नः
17.शास्त्रीय— मुकुन्दे, நின்றனம். श्रुतिस्मृत्या
18.अपराध — स्वच्छस्वादु, உளதான, प्रारब्धेतर
19.स्थान— यद्वैका. ஆராத, கண்ணன், உத்தம, தேனூர். सा काशीति
20.निर्याण— मनसि. நன்னிலம், दहरकुहरे
21.परिपूर्ण— गतिविशेष—ज्वलन. நடைபெற, पितृपथ
22.परिपूर्ण— वितमसि. எறியெழிற். अविश्रान्त, संदष्टः
23.सिद्धोपाय— युगपद्—மன்னுமனைத்து—विश्राम्यद्भिः
24.साध्योपाय— यथाधिकरणं. வரிக்கின்றனன்-तत्त्वहेतुक
25.प्रभावव्यव— स्वरूपं, தகவால், चातर्वर्ण्यं
26 प्रभावरक्षा— शिलादेः. உண்மையுரைக்கும். रागद्वेष
27.मूलमन्त्र— तारंपूर्वं. कल्याणं. इहमूल इहसंग्रहतः पदत्रये -எட்டுமாமூர்த்தி.
अविद्या. உயர்ந்த. इत्थंसंघटित्तः
28.द्वय— आकर्णितो अप्रार्थितः वैराग्य इदमष्ट एकं द्वयं ஒதுமிரண்டை, नवेदान्तात्
29.चरम— य उपनिषदाम् दुर्विज्ञानैः ஒண்டொடியாள். மூண்டாலும், சாதன
மும், தன்றினைவில், एकं सर्वे. குறிப்புடன். व्यासाम्नाय
30 आचार्य — अधिजिगमिषु, प्रत्येयस्तु பாட்டுக்குரிய, மருளற்ற. निरवधिदया.
31.शिष्य— अशिथिल—எற்றிமனத்து. अध्यासीन
32.निगमन— करबदरित உறுசகடம் इतियति, कलकण्ठ முன்பெற்ற निर्विष्ट
செப்பச் आस्तिक्यवान् மறையுரைக்கும் இதுவழி யின்—
எட்டுமிரண்டும் வானுளமர்ந்த வெள்ளைப்பரிமுகர் रहस्यत्रय

—०—०—

இவை நீங்கலாக இதில் ஆங்காங்குக் கூறிய காரிகைகளையும் கூட்டுக.

சுபமஸ்து.

## Sri U.Ve. Abhinava Desika Uttamur Vatsya Viraraghavacharya
## One of the all time great Ubhaya Vedanta Scholars

### Some of the titles and awards

| | |
|---|---|
| 1. President's Award | - Scholarship in Samskrt - First recipient after the institution of this award during 1960 |
| 2. Abhinava Desika | - By sri Vedanta Desika Sampradaya Sudhasvadini Sabha - 1957 |
| 3. Ubhaya Mimamsa Vallabha | - By his Acharya Sri Kozhiyalam Swami - 1942 |
| 4. Pandita Martanda | - By Sri Abhinava Ranganatha Parakala Yatindra Mahadesika of Parakala Mutt |
| 5. Pandita Bhushana | - By Sri Madhva Swamiji, Mantralaya Raghavendra Math |
| 6. Desika Darsana Durandhara | - By Sri Vaishnava Scholars |
| 7. Ubhaya Vedanta Vijaya Dhvaja | - By Sri Vaishnava Scholars - 1977 |
| 8. Sarvatma Rakshamani | - By Sri Vaishnava Scholars - 1977 |
| 9. Purva - Uttara Mimamsa Pradipa | - By Sri Desika Sabha, Tirupati |
| 10. Prakasika Prakasaka | - By Sri Vaishnava Scholars |
| 11. Tarkarnava | - By Ayodhya Parisad |
| 12. Pandita Ratna | - By Samskrt Sahitya Parisad, North India. |